# பரமஹம்ஸ யோகானந்தர்



Complete Edition with over 80 archival photos.

# ஒரு யோகியின் சுயசரிதம்






Yogoda Satsanga Society of India
FOUNDED 1917
Paramahansa Yogananda



பரமஹம்ஸ யோகானந்தர்
(ஜனவரி 5, 1893–மார்ச் 7, 1952)
பிரேமாவதாரம், "பேரன்பின் அவதாரம்"

# ஒரு யோகியின் சுயசரிதம்

எழுதியருளியவர்
பரமஹம்ஸ யோகானந்தர்

டபிள்யூ. ஒய். இவான்ஸ்-வென்ட்ஸ், எம்.ஏ., டிலிட்.
டிஎஸ்ஸி. அவர்களின் முன்னுரையுடன் கூடியது.

"உடலை வருத்தித் தவம் செய்பவர்களை விட யோகி சிறந்தவன். ஞான மார்க்கம் அல்லது கர்ம மார்க்கத்தைப் பின்பற்றுபவர்களை விடவும் அவன் சிறந்தவன். எனவே, ஓ அர்ஜுனா, நீ யோகி ஆகுக!"

—பகவத் கீதை VI: 46

Yogoda Satsanga Society of India
FOUNDED 1917
Paramahansa Yogananda

# Copyright



*Autobiography of a Yogi* has been published in English, Hindi, Bengali, Gujarati, Kannada, Malayalam, Marathi, Nepali, Odia, Punjabi, Sanskrit, Tamil, Telugu, Urdu, Bulgarian, Chinese (Simplified and Traditional), Croatian, Arabic, Danish, Dutch, Estonian, Filipino, Finnish, French, German, Greek, Hebrew, Hungarian, Icelandic, Italian, Japanese, Kazakh, Norwegian, Polish, Portuguese, Romanian, Russian, Spanish, Swedish, Thai, Turkish, Ukrainian, and Vietnamese.

An audiobook edition is available in Tamil.



Published in India by
YOGODA SATSANGA SOCIETY OF INDIA
Yogoda Satsanga Math
21, U.N. Mukherjee Road
Dakshineswar, Kolkata 700 076

ISBN 978-81-902562-7-8 (quality paperback)
ISBN 978-93-83203-56-7 (Kindle edition)



யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ஃப் இந்தியா/ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்-ன் அதிகாரம் பெற்ற வெளியீடு

# வாசகருக்கான குறிப்பு

இந்தியாவிலும் அண்டை நாடுகளிலும் உள்ள தனிப்பட்ட வாசகர்களின் சொந்த உபயோகத்திற்காக ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தருடைய சுயசரிதத்தின் முழுமையான, வரையறுக்கப்பட்ட பதிப்பை இங்கு மின்னணு சார்ந்த வடிவ அமைப்பில் வழங்குவதை யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா ஒரு விசேஷ உரிமையாகக் கருதுகிறது.

ஒரு யோகியின் சுயசரிதத்தின் இந்த டிஜிடல் பதிப்பினுடைய தயாரிப்பில் ஒவ்வொரு விவரமும் எமது பணியாளர் குழுவினால் சிறப்பு கவனம் செலுத்தப்பட்டுள்ளது, மேலும் இந்த முயற்சிகள் நமது வாசகர்களுக்கு ஒரு பயனளிக்கும் அனுபவத்தை விளைவிக்கும் என நம்புகிறோம், இந்த நூலை நீங்கள் எந்த வினியோக நிறுவனத்திடமிருந்து பெற்றிருந்தாலும் அது அறிவித்துள்ள நிபந்தனைகளுக்கு மட்டுமே உட்பட்டு, உங்களுக்குப் பொருந்தும் வகையில் உங்களுடைய தனிப்பட்ட, வியாபார நோக்கமற்ற

பயன்பாட்டிற்காக எவ்வளவு எண்ணிக்கையிலேனும் உங்களுடைய சொந்த டிஜிடல் சாதனங்களில் பதிவிறக்கம் செய்து கொள்வதற்கும் (மற்றும் உங்களுடைய தனிப்பட்ட தேவைகளை பூர்த்தி செய்யும் பகுதிகள் எதுவாயினும் அதை உங்களுடைய குறிப்பிற்காக அச்சடித்துக் கொள்வதற்கும்) உங்களை வரவேற்கிறோம்.

இருப்பினும், இந்தப் பதிப்பை பெற்றதும் வாசகர், பொருத்தமான தேசிய மற்றும் சர்வதேச பதிப்புரிமை விதிமுறைகளின்படி நடப்பதற்கும், மற்றும் பொருளடக்கத்தை பிற தனிமனிதர்களுக்கோ அல்லது அமைப்புகளுக்கோ, எந்த உபாயத்தின் மூலமாகவும் (மின்னணு சார்ந்த, இயந்திர நுட்பம் சார்ந்த அல்லது வேறுவகையானவை) பிரசுரதாரரின் அனுமதியை முதலிலில் பெறாமல் பிரதிகளை எடுப்பதை மற்றும்/ அல்லது அனுப்புவதை தவிர்ப்பதற்கும் உடன்படுகிறார் என்பதை நீங்கள் தயவுசெய்து குறித்துக் கொள்ளவேண்டும் என நாங்கள் கேட்டுக்கொள்கிறோம். இந்தக் கொள்கைகளை உறுதியாகக் கடைப்பிடிப்பதன் மூலம் ஆசிரியருடைய படைப்பின் முழுமையை பாதுகாக்க உதவுவதில் உங்களுடைய ஆழ்ந்த சிந்தனையை நாங்கள் பாராட்டுகிறோம்.

எமது நிறுவனர் ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தருடைய ஆன்மீகப் பரம்பரைச் செல்வத்துடன் தொடர்புள்ள எங்களுடைய வெளியீடு முயற்சிகளுக்கு ஆதரவளிப்பதற்காக உங்களுக்கு நன்றியுடையவர்களாக

இருக்கிறோம்.

நீங்கள் மிகச் சிறந்த வாசிக்கும் அனுபவத்தைப் பெற வாழ்த்துக்களுடன்.

– யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா



# ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தரின் தெய்வீகப் பரம்பரைச் செல்வம்

## அவரது அனைத்து நூல்கள், சொற்பொழிவுகள் மற்றும் தனிமுறையான உரையாடல்கள்

பரமஹம்ஸ யோகானந்தர் தனது போதனைகளை உலகம் முழுதும் பரப்பவும், எதிர்கால சந்ததிகளுக்காக அவற்றின் பரிசுத்தத்தையும் முழுமையையும் பாதுகாக்கவும் 1917-ல் யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ஃப் இந்தியா (YSS)வையும் 1920-ல் ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப் (SRF)பையும் நிறுவினார். அமெரிக்காவில் வந்த ஆரம்ப ஆண்டுகள் முதலே ஏராளமாகப் படைத்தளிக்கும் எழுத்தாளராகவும் சொற்பொழிவாளராகவும் விளங்கிய அவர், யோக விஞ்ஞானமான தியானம், சமநிலையாக வாழும் கலை மற்றும் அனைத்து சமயங்களின் உள்ளார்ந்த ஒற்றுமை இவற்றைப் பற்றி கீரத்திமிகு மற்றும் விரிவான படைப்புகளின் திரட்டை அளித்தார். இன்று இந்த ஒப்பற்ற மற்றும் பரந்த செயல் விளைவுடைய ஆன்மீகப் பரம்பரைச் செல்வம், உலகம் முழுவதும் லட்சக்கணக்கான உண்மை நாடுபவர்களுக்கு மனவெழுச்சியை அளித்துக் கொண்டு தொடர்கின்றது.

மகா குருதேவரின் தெளிவான விருப்பங்களுக்கு ஏற்ப, யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ப் இந்தியா/ ஸெல்்ப்-ரியலைசேஷன் ்பெலோஷிப் பரமஹம்ஸ யோகானந்தரின் படைப்புகள் முழுவதும் பிரசுரிக்கும் மற்றும் அச்சு வடிவில் நிரந்தரமாக வைத்துக்கொள்ளும், தற்பொழுதும் நடக்கும் பணியைத் தொடர்ந்து வருகின்றது. இவைகளுள் அவர் தனது வாழ்நாளில் பிரசுரித்த அனைத்துப் புத்தகங்களின் இறுதிப் பதிப்புகள் மட்டுமன்றி, பல புதிய நூல்களும் அடங்கும்அவர் 1952-ல் மகாசமாதி அடைந்த போது பிரசுரிக்கப் படாமல் இருந்த படைப்புகள், அல்லது யோகதா சத்சங்க சொசைடி ஆப் இந்தியா/ஸெல்்ப்-ரியலைசேஷன் ்பெலோஷிப்-இன் பத்திரிகையில் முழுமைபெறா வடிவில் பல வருடங்களாகத் தொடர்ந்தவை, அத்துடன் அவர் மகாசமாதியடையுமுன் அச்சில் ஏறாத நூற்றுக்கணக்கான ஆழ்ந்த மனவெழுச்சியளிக்கும் சொற்பொழிவுகள் மற்றும் தனிமுறையான உரையாடல்கள்.

யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ப் இந்தியா/ ஸெல்்ப்-ரியலைசேஷன் ்பெலோஷிப் வெளியீடுகள் குழுவிற்குத் தலைமை வகிக்கும் நெருங்கிய சீடர்களைத் தனிப்பட்ட முறையில் தேர்ந்தெடுத்து பயிற்சியளித்தார், மேலும் அவர்களுக்குத் தனது போதனைகளைத் தயார் செய்யவும் பிரசுரிக்கவும் திட்டவட்டமான வழிமுறைகளை வகுத்துக் கொடுத்தார். இந்த அன்பிற்குரிய உலக ஆசிரியரின் அனைவருக்கும் ஏற்ற

உபதேசங்கள், மூல சக்தியுடனும் உண்மையுடனும் இருக்க வநந/நதஊ வெளியீடுகள் குழுவின் அங்கத்தினர்கள் (வாழ்நாள் முழுதும் சன்னியாசம் மற்றும் தன்னலமற்ற சேவைக்கு சங்கல்பம் எடுத்துக்கொண்ட சன்யாசிகள் மற்றும் சன்யாசினிகள்) இவ்வழிமுறைகளைப் புனிதப் பொறுப்பாக மதிக்கின்றனர்.

யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ஃப் இந்தியா/ ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப் சின்னம் (முந்தைய பக்கத்தில் காண்பிக்கப்பட்டுள்ளது), அவர் நிறுவிய இலாப நோக்கமற்ற ஸ்தாபனமே அவரது போதனைகளின் அங்கீகாரம் பெற்ற இடம் என்று அடையாளம் காட்ட பரமஹம்ஸ யோகானந்தரால் வடிவமைக்கப்பட்டது. YSS/SRF பெயரும் சின்னமும், ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தரால் நிறுவப்பட்ட ஸ்தாபனத்தில் இப்பணி ஆரம்பிக்கின்றது என்பதையும் அவரது போதனைகள்

அவர் எண்ணியபடி சரியாகக் கொடுக்கப்படுகின்றன என்பதையும் வாசகர்களுக்கு உறுதி செய்யும் வண்ணம் YSS/SRF-ன் அனைத்து வெளியீடுகள் மற்றும் பதிவுகளின் மீது காணப்படுகின்றன.

– யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ஃப் இந்தியா/
ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்

அருட்பேறு பெற்றவரும் போற்றப்படுபவரும்
பூஜிக்கத்தக்கவருமான எனது குருதேவர்
ஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வர் கிரிஜி மகராஜ்
அவர்களின் தெய்வீகத் திருக்கரங்களில்
சமர்ப்பிக்கப்படுகிறது.

# ஆசிரியரின் நன்றியுரை

இப்புத்தகத்தின் கையெழுத்துப் பிரதியினை தொகுத்து அமைப்பதற்கான நீண்ட கடின உழைப்பை நல்கிய செல்வி எல்.வி. ப்ராட் (தாரா மாதா) அவர்களுக்கு நான் ஆழ்ந்த நன்றிக்கடன் பட்டுள்ளேன். திரு. சி. ரிச்சர்ட் ரைட் அவர்களின் இந்தியப் பயண நாட்குறிப்பேட்டிலிருந்து சில பகுதிகளை பயன்படுத்திக் கொள்ள அனுமதி தந்த அவருக்கும் என்னுடைய நன்றி உரித்தாகுக. டாக்டர் டபிள்யு. ஒய். இவான்ஸ்-வெண்ட்ஸ் அவர்களின் முன்னுரைக்கு மட்டுமன்றி அவர் அளித்த ஆலோசனைகளுக்கும் ஊக்கத்திற்கும் நன்றியுடையவன் ஆகிறேன்.

பரமஹம்ஸ யோகானந்தர்

அக்டோபர் 28, 1945

# பொருளடக்கம்

# விளக்கப் படங்கள்

ஸ்ரீ யோகானந்தர், 1952, மார்ச் 7ல் அவருடைய மகாசமாதிக்கு ஒரு மணி நேரத்திற்க்கு முன்பு

இந்திய அரசு பரமஹம்ஸ யோகானந்தரைக் கௌரவிக்கும் வண்ணம் இந்த நினைவுத் தபால் தலையை வெளியிட்டது

# முன்னுரை

டபிள்யூ. ஒய். இவான்ஸ்-வெண்ட்ஸ், எம்.ஏ., டி.லிட்., டி.எஸ்ஸி.
ஜீஸஸ் கல்லூரி, ஆக்ஸ்ஃபோர்டு
இறந்தவர்களைப் பற்றிய திபெத்திய புத்தகம்,
திபெத்தின் புகழ்பெற்ற யோகி மிலாரேப்பா,
திபெத்திய யோகமும் இரகசிய சித்தாந்தங்களும்
ஆகியன உள்ளடங்கிய, யோகம் மற்றும் கிழக்கத்திய ஞானப்
பாரம்பரியம் பற்றிய பல சிறந்த புத்தகங்களின் ஆசிரியரும்
மொழி பெயர்ப்பாளரும் ஆவார்.

இது இந்திய மகான்களைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதப்பட்ட அபூர்வமான புத்தகங்களில் ஒன்று என்பதாலும், பத்திரிகையாளர் அல்லது வெளிநாட்டவர்களால் எழுதப்படாமல் இந்திய யோகியர் இனத்தைச் சார்ந்து, பயிற்சியும் பெற்ற ஒருவராலேயே எழுதப்பட்டிருப்பதாலும்சுருங்கக்கூறின், ஒரு யோகியால் யோகியரைப் பற்றி எழுதப்பட்ட ஒரு புத்தகம்சுயசரிதத்தின் பெருமை மிக உயர்ந்ததாகிறது. நவீன இந்து மகான்களின் அசாதாரணமான வாழ்க்கைகள் மற்றும் அவர்களுடைய அபூர்வமான சித்திகளை நேரில் கண்டறிந்த விவரங்களைப் பற்றிக் குறிப்பிடுவதால் இப்புத்தகம் இன்றும், காலவரையன்றி என்றுமே முக்கியத்துவம் பெறுகிறது. இப்புத்தகத்தின்

புகழ்பெற்ற ஆசிரியரை இந்தியாவிலும் அமெரிக்காவிலும் நேரில் அறியும் பேறு பெற்றிருந்தேன். அவ்வாசிரியருக்கு இப்புத்தகத்தை படிக்கும் ஒவ்வொருவரும் தங்கள் பாராட்டையும் நன்றியையும் தெரிவிக்கட்டும். நிச்சயமாக, அவருடைய அபூர்வமான வாழ்க்கைச் சித்திரம், இந்து மனம் மற்றும் இதயத்தின் ஆழத்தை மிகத் தெளிவாகக் காட்டுவதுடன் பாரதத்தின் ஆன்மீகச் செல்வத்தைப் பற்றி இதுவரை மேல் நாட்டில் பிரசுரிக்கப்பட்ட நூல்களுள் சிறந்த ஒன்றாகும்.

இப்புத்தகத்தில் சித்தரிக்கப்பட்டிருக்கும் ஞானிகளில் ஒருவரான ஸ்ரீ யுக்தேஸ்வர் கிரியை தரிசிக்கும் பேறு எனக்கும் கிட்டியிருக்கிறது. அவருடைய வாழ்க்கை வரலாறு இதில் கூறப்பட்டுள்ளது. திபெத்திய யோகமும் இரகசிய சித்தாந்தங்களும் என்ற என் நூலின் முகப்புப் படத்தில் இந்தப் போற்றத்தக்க மகானின் உருவப்படம் வெளிவந்திருக்கிறது. நான் ஸ்ரீ யுக்தேஸ்வரை ஒரிஸாவில் வங்காள விரிகுடாக் கரையிலுள்ள பூரியில் சந்தித்தேன். அப்பொழுது அவர் கடற்கரையின் அருகிலுள்ள ஓர் அமைதியான ஆசிரமத்தின் தலைவராக இருந்தார். முக்கியமாக, அவர் இளம் சீடர்களின் குழு ஒன்றிற்கு ஆன்மீகப் பயிற்சி அளித்துக் கொண்டிருந்தார். அவர் அமெரிக்க ஐக்கிய நாடுகள், அமெரிக்காவின் மற்ற எல்லா பாகங்கள் மற்றும் இங்கிலாந்திலுள்ள மக்களின் நலன்களில் தீவிர அக்கறை காண்பித்ததுடன், 1920ல் தன் பிரதிநிதியாக மேற்கத்திய நாடுகளுக்கு அனுப்பப்பட்ட தனது முக்கிய சீடரும் அன்புக்கு உரியவருமான

பரமஹம்ஸ யோகானந்தரின் தொலை தூரச் செயல்களைப் பற்றியும் குறிப்பாக கலிஃபோர்னியாவில் நடைபெறுபவை பற்றியும் விசேஷமாக விசாரித்தார்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் மிக அமைதியான முகபாவமும் குரலும் உடையவர். அவர் அருகிலிருப்பது இனிய அனுபவமாகும். மற்றும் அவரைப் பின்பற்றுபவர்கள் அவர்களாகவே முன்வந்து அளிக்கும் பக்தி கலந்த மரியாதைக்குத் தகுதி வாய்ந்தவர். அவரைத் தெரிந்தவர்கள், அவரது சமூகத்தைச் சேர்ந்தவர்களாயினும் சரி, மற்றவர்களாயினும் சரி அவர் மீது எல்லையற்ற மதிப்பு வைத்திருந்தனர்.

உலக இச்சைகளைத் துறந்தவர்கள் அணியும் காவி உடையைத் தரிந்து உயரமாக, நிமிர்ந்த துறவி உருவத்தில் என்னை வரவேற்க அவர் ஆசிரம வாயிற்படியில் நின்றது எனக்குப் பசுமையாக நினைவிருக்கிறது. அவருடைய முடி நீண்டும் கொஞ்சம் சுருண்டும் இருந்தது. முகம் தாடியுடன் காட்சியளித்தது. அவரது உடல்வாகு தசைப்பிடிப்புடன் உறுதியாக, ஆனால் ஒல்லியாகவும் கட்டமைப்புடன் கூடியதாகவும் இருந்தது. அவர் நடை கம்பீரமாக இருந்தது. இந்தியாவின் எல்லா மாநிலங்களிலிருந்தும் எண்ணற்ற பக்தியுள்ள இந்துக்கள் தினந்

தோறும் புனிதப் பயணமாக வருகை தரும் புகழ்பெற்ற ஜகன்னாதர், உலகத்தின் நாதர் கோவில் அமைந்த புண்ணிய நகரமான பூரியை அவர் பூலோகத்தில் தன்னிருப்பிடமாகத் தேர்ந்தெடுத்திருந்தார்.

அப்பூமியில்தான் ஸ்ரீ யுக்தேஸ்வர் தன் அவதார நோக்கம் வெற்றியுடன் நிறைவேறிவிட்டதை அறிந்து நிலையற்ற இவ்வுலகக் காட்சிகளைத் துறந்து 1936ல் தன் பூத உடலை உகுத்தார்.

ஸ்ரீ யுக்தேஸ்வரின் உயர்ந்த குணநலன்களையும் புனிதத் தன்மையையும் பற்றிய இந்தச் சான்றைக் குறிப்பிட முடிந்ததைக் குறித்து நான் உண்மையில் மகிழ்ச்சி அடைகிறேன். மக்கள் கூட்டத்தினின்று விலகியிருப்பதில் திருப்தியடைந்து தயக்கமின்றி மிக அமைதியாக அவர் தன்னைத்தானே அர்ப்பணித்துக் கொண்ட இலட்சிய வாழ்க்கையை, அவருடைய சீடரான பரமஹம்ஸ

யோகானந்தர் தற்பொழுது பல யுகங்களுக்கு விவரித்துள்ளார்.

# மதிப்பாய்வுரைகள் ஒரு யோகியின் சுயசரிதத்திற்கு உலகெங்கும் சூட்டப்பட்டுள்ள புகழாரம்

"ஒரு யோகியின் சுயசரிதம் நவீன யுகத்தின் உபநிஷதமாகக் கருதப்படுகிறது... இது உலகெங்கிலும் சத்தியத்தைத் தேடும் பல்லாயிரக்கணக்கானவர்களின் ஆன்மீகத் தாகத்தைத் தணித்துள்ளது... பாரதத்தின் என்றும் அழியா அறநெறியான சனாதன தர்மம் என்னும் அமரத்துவம் வாய்ந்த அமிர்தம், ஒரு யோகியின் சுயசரிதம் என்ற பொற்கிண்ணத்தில் சேமித்து வைக்கப்பட்டிருக்கிறது."

– பேராசிரியர் ஆஷுதோஷ் தாஸ், பி.எச்.டி., டி.லிட், கல்கத்தா பல்கலைக்கழகம்

"ஓர் அரிய தொகுப்பு." – நியூ யார்க் டைம்ஸ்

"ஒவ்வொரு வருடமும் பிரசுரிக்கப்படும் பல்லாயிரக்கணக்கான புத்தகங்களில் மகிழ்விக்க கூடியனவும், அறிவுறுத்தக் கூடியனவும், ஆன்மீக நெறி புகட்டுவனவும் உள்ளன. இம்மூன்றையும் கொண்டுள்ள ஒரு புத்தகத்தை ஒரு வாசகர் கண்டால் அவர் தன்னைத்தானே அதிர்ஷ்டசாலியாகக் கருத வேண்டும். ஒரு யோகியின் சுயசரிதம் இன்னும் அரியது இது, மனம் மற்றும் ஆன்மாவின் ஜன்னல்களைத் திறக்கும் புத்தகமாகும். இந்தியா ஜர்னல் என்றும் கேட்டறியாத மேன்மை தங்கிய ஒருவரின் கவர்ந்திழுக்கும் வாழ்க்கையை இப்பக்கங்கள் ஒப்புயர்வற்ற சக்தியுடனும்,

தெளிவுடனும் வெளிப்படுத்துவது கண்டு வாசகர் தொடக்கத்திலிருந்து கடைசிவரை மூச்சற்றவராகி விடுகிறார்... ஒருவரின் மன மற்றும் ஆன்மீக முயற்சியே நிரந்தரத்துவம் உடையவை; உள் வலிமையினால் அனைத்து உலகத் தடைகளையும் வெற்றி கொள்ள முடியும் என்பதற்கான மறுக்க முடியாத சாட்சி இதன் பக்கங்களில் காணப்படுகிறது... இந்த முக்கியமான சரிதத்திற்கு, ஆன்மீகப் புரட்சியை உண்டு பண்ணக்கூடிய சக்தி படைத்தது என்ற புகழாரத்தை நாம் சூட்ட வேண்டும்."

– ஷ்லீஷ்விக் ஹோல்ஸ்ட்னிஸ்சே டாகேஸ்போஸ்ட், ஜெர்மனி உள்ளத்தைக் கவர்கின்ற தெளிவான குறிப்புரைகள் கூடிய புத்தகம். –நியூஸ்வீக்

"ஒரு யோகியின் சுயசரிதம் போன்ற இத்தனை அழகிய, ஆழ்ந்த, உண்மையான ஒரு புத்தகத்தை, தற்காலத்து வாசகர் காண்பது அரிது... ஞானமும் சொந்த அனுபவங்களும் நிறைந்துள்ளன... மரணத்திற்குப் பின் உள்ள வாழ்க்கையின் புதிர்களைப் பற்றிய அத்தியாயம், இப்புத்தகத்தில் உள்ள பல திகைப்புறச் செய்யும் அத்தியாயங்களுள் ஒன்றாகும்."

– லப்பாஸ், பொலிவியா

"ஆன்மீக நிலையின் இரகசியங்களுக்குள் பலரைவிட மிக அதிகமாக ஆழ்ந்து சென்றிருக்கும் ஓர் அரிய மேதை... அவற்றின் அதிசயங்களைத் தெளிவுடனும் ஆணித்தரத்துடனும் அழகுடனும் நம் வழிகாட்டி விவரித்துள்ளார்."

– பேராசிரியர் ரேமாண்ட் எஃப்.பைபர், ஸிரக்யூஸ்பல்கலைக்கழகம், நியூ யார்க்

"யோகானந்தர், மரணமற்ற மகான்களையும் அதிசயமான குணப்படுத்தும் முறைகளையும் பற்றிக் கூறினாலும் அல்லது பாரத ஞானம் மற்றும் விஞ்ஞானம் பற்றி உணர்த்தினாலும் வாசகர் வசியப்பட்டுவிடுகிறார்."

– டி வெல்ட்ஒஹே, சூரிக், ஸ்விட்சர்லாந்து

"வாசகரைக் கவர்ந்திழுக்கும் பக்கங்கள். ஏனெனில் அவை ஒவ்வொரு மனிதனின் இதயத்திலும் உறங்கிக் கிடக்கும் உயர்ந்த நோக்கத்திற்கும் ஏக்கத்திற்கும் அழைப்பு விடுக்கின்றன."

– ஐஜ டெம்போடில் லுனடி, ரோம்

"உள்ளத்தை மிக ஈர்க்கும் எளிமையும் சுயவெளிப்பாடும் கூடிய வாழ்க்கைக் கதைகளுள் ஒன்றாகும்... உண்மையான அறிவுப் புதையல்... இதன் பக்கங்களில் ஒருவர் சந்திக்கும் சிறந்த தனித்தன்மை வாய்ந்தவர்கள்... செழுமிய ஆத்ம ஞானம் கைவரப் பெற்ற நண்பர்களாக நினைவிற்கு திரும்பி வருகின்றனர். இவர்களில் மிகச் சிறந்தவர் இறை-போதை கொண்ட ஆசிரியர் அவரே ஆவார்... குறிப்பிடத்தக்கது... ஓர் உயர்ந்த ஆன்மாவின் உன்னதக் காட்சி."

– டாக்டர் அன்னா ஃபோன் ஹெல்ம்ஹோல்ட்ஷ் ஃபெலன், மினசோட்டா பல்கலைக்கழகம், யுஎஸ்ஏ

"... இத்தனை ஆழ்ந்த ஞானம் ஒருவரைத் தன்வசம் இழக்கச் செய்கிறது, நிரந்தரமாகத் தொட்டு விடுகிறது."

– ஹாக்ஷேப்போஸ்ட், ஹாலந்து

"(யோகானந்தரின்) புகழ்பெற்ற ஒரு யோகியின் சுயசரிதத்தில் அவர் யோகப் பயிற்சியின் உயர் நிலைகளில் அடையப்பெறும் பரவெளி உணர்வு பற்றிய திகைக்கச் செய்யும் தகவலைத் தருகிறார். மேலும் யோக மற்றும் வேதாந்த நோக்கில் மனித இயல்பு பற்றிய எண்ணற்ற ஆர்வமூட்டும் காட்சிகளையும் காட்டுகிறார்."

– ராபர்ட் எஸ். எல்வுட், பிஎச்.டி., ஸ்கூல் ஆ்ஃப் ரிலிஜன், தென் கலி்ஃபேர்னியா பல்கலைக்கழகம்

"யோகி உலகுடன் தொடர்பு, சட உலக உண்மையை விட இவ்வுலகின் உட் பெருமை மற்றும் ஆன்மீக ஒழுக்கம் இவை எனக்கு மிக அறிவுறுத்தின. இக்கவர்ச்சியூட்டும் உலகினுள் சிறிது உள்நோக்கு எனக்கு அளித்ததற்கு நான் மிகவும் நன்றியுடையவனாகிறேன்."

– தாமஸ் மான், நோபல் பரிசு வென்றவர்

"பரமஹம்ஸ யோகானந்தர்... இப்புவியின் அனைத்து மூலைகளிலும் வணக்கத்துடன் வரவேற்கப்படும் அருட் கிளர்ச்சியைப் பெற்ற மனிதர்."

– ரைடர்ஸ் ரிவ்யூ, லண்டன்

"பரமஹம்ஸ யோகானந்தரைச் சந்தித்த அனுபவம் என் வாழ்க்கையில் மறக்க முடியாத நிகழ்ச்சியாக என் நினைவில் செதுக்கப்பட்டிருக்கிறது... அவரைப் பார்த்ததினால் ஏற்பட்ட விளைவு மதிப்பிட முடியாததாகும்... நான் அவருடைய முகத்தினூடே

பார்த்த பொழுது, ஒளி வெள்ளமானது – அந்த ஆன்மீக ஒளி உண்மையில் அவரிடமிருந்தே வீசியது – என் கண்களை முற்றிலுமாகக் கூசச்செய்தது. அவருடைய அளவற்ற மென்மையும், அவருடைய கனிவான கருணையும் இதமான சூரிய ஒளி போல் என்னைச் சூழ்ந்தன... அவர் ஓர் ஆன்மீகவாதியாக இருந்தாலும் கூட அவருடைய புரிந்து கொள்ளும் தன்மையும் உள்நோக்கும் இவ்வுலக வாழ்க்கையின் தொல்லைகள் வரை கூட நீண்டிருந்ததை நான் பார்க்க முடிந்தது. பாரதத்தின் பழமையான ஞான ஒளியினை ஏந்தி உலகெங்கும் பரப்பிவரும் ஓர் உண்மையான இந்தியத் தூதுவரை நான் அவரில் கண்டேன்."

– டாக்டர் பினய் ஆர்.சென், அமெரிக்காவின் முன்னாள் இந்தியத் தூதுவர்

# அறிமுகம்

"பரமஹம்ஸ யோகானந்தரை சந்தித்த அனுபவம் மறக்க முடியாத நிகழ்வுகளில் ஒன்றாக என் நினைவில் செதுக்கப்பட்டிருக்கிறது..... அவருடைய முகத்தை நான் பார்த்தபொழுது, ஆன்மீக ஒளியின் பிரகாசத்தினால் எனது கண்கள் கூசின – அவரிடமிருந்து உண்மையிலேயே ஒளிர்ந்த அவருடைய எல்லையற்ற மென்பண்பு, அவருடைய கனிவார்ந்த இரக்கம், கதகதப்பான கதிரொளி போன்று என்னை சூழ்ந்தது..... அவர் ஓர் இறை-மனிதராக இருந்த போதிலும், அவருடைய புரிதலும் அகநோக்கும் இவ்வுலகைச் சார்ந்த பிரச்சனைகள்வரை விரிவடைந்ததை நான் காண முடிந்தது. இந்தியாவின் தொன்றுதொட்ட ஞானத்தை உலகிற்கு ஏந்தி, பரப்பிக்கொண்டிருந்த ஓர் உண்மையான இந்தியத் தூதுவரை அவரில் நான் கண்டேன்."

– டாக்டர் பினய் ஆர். சென், அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கான முன்னாள் இந்திய தூதுவர்

பரமஹம்ஸ யோகனந்தருடன் தனிப்பட்ட முறையில் பரிச்சயமுடையவர்களுக்கு, அவருடைய சொந்த வாழ்க்கையும் இருப்புமே, அவர் உலகிற்களித்த புராதன ஞானத்தின் சக்தி மற்றும் நம்பத்தக்க நிலைக்கு நம்பிக்கையூட்டக்கூடிய சான்றாக விளங்குகின்றன. அவரது சுயசரிதத்தை வாசித்த எண்ணற்ற வாசகர்கள், அதன் பக்கங்களில் அவரிடமிருந்து ஒளி வீசிய ஆன்மீக உரிமையின் அதே ஒளியின் இருப்பிற்கு

சான்றளித்துள்ளனர். அறுபது வருடங்களுக்கு முன்பு இது முதன் முறையாக அச்சிடப்பட்ட பொழுதே, ஒரு தலைசிறந்த படைப்பாக வரவேற்கப்பட்டது. இப்புத்தகம் தவறாக எண்ண இடமளிக்காத மேன்மையுடைய ஒரு வாழ்க்கையின் கதையை மட்டுமல்லாமல், கிழக்கின் ஆன்மீக சிந்தனைக்கு கவர்ந்திழுக்கும் ஓர் அறிமுகத்தையும் – முக்கியமாக இறைவனுடன் நேரடியான தனிப்பட்ட தொடர்பைப் பற்றிய அதனுடைய ஈடிணையற்ற விஞ்ஞானம் – தெரியச் செய்தது. இவ்வாறு மேற்கத்திய மக்களுக்கு, இதுவரை சிலர் மட்டுமே அணுகக் கூடியவாறிருந்த அறிவெல்லையைத் திறந்து வைத்தார்.

இன்று ஒரு யோகியின் சுயசரிதம் உலகம் முழுவதும் ஓர் ஆன்மீக இலக்கிய நூலாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இந்த அறிமுகத்தில் இந்நூலினுடைய சில அசாதாரணமான வரலாற்று நிகழ்வுகளை பகிர்ந்துகொள்ள விரும்புகின்றோம்.

நீண்ட காலத்திற்கு முன்பே இந்நூல் எழுதப்படுவதைப் பற்றி தீர்க்கதரிசனமாகக் கூறப்பட்டிருந்தது. நவீன காலத்தில் யோகத்தின் மறுமலர்ச்சியில் அதிக தாக்கத்தை ஏற்படுத்தியவர்களில் ஒருவரான, பத்தொன்பதாவது நூற்றாண்டின் வணக்கத்திற்குரிய மகான் லாஹிரி மகாசாயர் முன்கூட்டியே அறிவித்தார்: "நான் மறைந்து ஏறக்குறைய ஐம்பது வருடங்களுக்குப் பிறகு மேற்கில்

எழப்பாகும் ஆழ்ந்த ஆர்வத்தின் காரணமாக, என் வாழ்க்கையின் விவரம் எழுதப்படும். யோகம் பற்றிய செய்தி இக்கோளத்தை சூழும். அது மனித சகோதரத்துவத்தை நிலைநாட்டுவதற்கு உதவி புரியும்: ஒரே பரமபிதாவைப் பற்றிய மனித இனத்தின் நேரடியான அறியும் சக்தியின் அடிப்படையிலான ஒற்றுமை.""

பல வருடங்களுக்குப் பின்னர் லாஹிரி மகாசயரின் உயர்ந்த சீடரான ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வரர், ஸ்ரீ யோகனந்தருக்கு இந்த தீர்க்க தரிசனத்தை எடுத்துரைத்தார். "அந்தச் செய்தியைப் பரப்புவதில் நீ உனது பங்கை ஆற்ற வேண்டும்," அவர் அறிவித்தார், "அத்துடன் அந்தப் புனித வாழ்க்கையைப் பற்றி எழுதுவதையும்."

1945-ல், லாஹிரி மகாசயர் மறைந்து மிகச் சரியாக ஐம்பது வருடங்கள் கழித்து, பரமஹம்ஸ யோகானந்தர் தனது ஒரு யோகியின் சுயசரிதம் எழுதி முடித்தார். இது அவருடைய குருதேவரின் கட்டளைகள் இரண்டையும் தாராளமாகப் பூர்த்தி செய்தது: லாஹிரி மகாசயருடைய குறிப்பிடத்தக்க வாழ்க்கையை ஆங்கிலத்தில் முதல் விரிவான அறிமுகமாக அளித்து, மற்றும் உலக அவையினருக்கு இந்தியாவின் பழமைவாய்ந்த ஆன்ம விஞ்ஞானத்தை அறிமுகப்படுத்தியது.

ஒரு யோகியின் சுயசரிதத்தை உருவாக்கும் திட்டத்தில் பரமஹம்ஸ யோகானந்தர் பல வருட

காலமாக செயல்பட்டார். ஸ்ரீ தயா மாதா, அவருடைய நெருங்கிய சீடர்களில்1 ஒருவர் நினைவுகூர்கிறார்:

நான் 1931-ல் மௌண்ட் வாஷிங்டனுக்கு வந்த போது, பரமஹம்ஸர் சுயசரிதத்திற்கான பணியை ஏற்கனவே துவங்கி விட்டிருந்தார். ஒரு முறை நான் அவருடைய வாசிப்பு அறையில் செயலாளருக்குரிய சில கடமைகளில் கவனம் செலுத்திக் கொண்டிருந்த பொழுது, அவர் எழுதிய முதல் அத்தியாயங்களில் ஒன்றை பார்க்கும் பேறு பெற்றேன்–அது 'புலிச்சாமியார்' பற்றியது. அதைப் பாதுகாக்கும்படி அவர் என்னிடம் கூறினார், மேலும் அவர் எழுதிக் கொண்டிருக்கும் புத்தகத்தில் அது சேர்க்கப்படப் போகிறது என்று விளக்கினார். பின்னால் 1937 மற்றும் 1945- க்கிடையில் புத்தகத்தின் பெரும் பகுதி தொகுக்கப்பட்டுவிட்டது."

ஜீன் 1935-லிருந்து அக்டோபர் 1936-ன் இறுதிவரை ஸ்ரீ யோகானந்தர், தனது குருதேவர் ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்ரரிடம் இறுதி வருகை புரிவதற்காக இந்தியாவிற்குத் திரும்பும் பயணத்தை (ஐரோப்பா மற்றும் பாலஸ்தீனம் வழியாக) மேற்கொண்டார். அங்கிருக்கும் பொழுது சுயசரிதத்திற்காக அதிக உண்மையான விவரங்களையும், அவர் அறிந்திருந்த மகான்கள் மற்றும் ஞானிகளைப் பற்றிய கதைகளையும் தொகுத்தார்; அவர்களுடைய வாழ்க்கை வரலாறு இப்புத்தகத்தில் நினைவில் வைக்கத்தக்கவாறு விவரிக்கப்பட்டு இருந்தன. நான் லாஹிரி மகாசயருடைய வாழ்க்கையை எழுதுவதைப் பற்றிய ஸ்ரீ

யுக்தேஸ்வரரின் கோரிக்கையை ஒரு போதும் மறக்கவில்லை," அவர் பின்னாளில் எழுதினார். நான் இந்தியாவில் தங்கியிருந்த பொழுது யோகாவதாரரின் நேரடியான சீடர்களையும் உறவினர்களையும் தொடர்பு கொள்ள நான் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் பயன்படுத்தினேன். பல தொகுதிகள் கொண்ட குறிப்புகளில் அவர்களுடைய உரையாடல்களைப் பதிவுசெய்து செய்திகளையும், தேதிகளையும் சரி பார்த்தேன். புகைப்படங்கள், பழைய கடிதங்கள் மற்றும் ஆவணங்களைச் சேகரித்தேன்."

1936-ன் இறுதியில் அவர் அமெரிக்காவிற்கு திரும்பியதும், அவர் இல்லாத சமயத்தில் தென் கலிஃபோர்னியா கடற்கரை ஓரம், என்ஸினிடஸ்-ல் அவருக்காகக் கட்டப்பட்டிருந்த ஆசிரமத்தில் அதிகமான நேரத்தைக் கழிக்கத் துவங்கினார். பல வருடங்களுக்கு முன்பு அவர் துவங்கிய புத்தகத்தை முடிப்பதற்காக கவனத்தை செலுத்துவதற்கு அது ஓர் இலட்சிய இடமாக இருந்தது.

"அந்த அமைதியான கடற்கரையோர ஆசிரமத்தில் கழித்த நாட்கள் இன்னும் தெளிவாக என் நினைவில் இருக்கின்றன," ஸ்ரீ தயா மாதா நினைவுகூர்கிறார். "ஒவ்வொரு நாளும் சுயசரிதத்தை எழுதும் பணியை செய்ய முடியாத அளவுக்கு அவருக்குப் பல கடமைகளும் பொறுப்புகளும் இருந்தன: ஆனால் பொதுவாக மாலை நேரங்களையும், அவரால் தர முடிந்த எந்த சாவகாசமான சமயத்தையும் அவர் அப்பணிக்காக

ஒதுக்கினார். ஏறத்தாழ 1939 அல்லது 40-ல் துவங்கி, அவரால் அப்புத்தகத்தின் மீது முழுநேரமும் கவனம் செலுத்த முடிந்தது. முழுநேரமும் என்றால் – அதிகாலையிலிருந்து அதிகாலை வரை! சீடர்களாகிய எங்களுடைய ஒரு சிறு குழு – தாரா மாதா: எனது சகோதரி ஆனந்த மாதா; ஸ்ரத்தா மாதா; மற்றும் நான் – அவருக்கு உதவி செய்ய இருந்தோம். ஒவ்வொரு பதிவும் தட்டச்சு ஆன பிறகு, அவர் அதை பதிப்பாசிரியராக சேவையாற்றிய தாரா மாதாவிடம் கொடுத்தார்.

"எத்தகைய பொக்கிஷம் போன்ற நினைவுகள்! அவர் எழுதும்பொழுது, அவர் பதிவு செய்து கொண்டிருந்த புனித அனுபவங்களை அகமுகமாக மீண்டும் வாழ்ந்தார். அவருடைய தெய்வீக உள்நோக்கமானது, மகான்கள் மற்றும் மகா குருமார்களின் தோழமையிலும், ஒருவரது சொந்த தனிப்பட்ட இறை அனுபூதியிலும் எதிர்ப்பட்ட ஆனந்தத்தையும் அருள்வெளிப்பாடுகளையும் பகிர்ந்து கொள்வதாகும், பல தடவைகள் ஒரு சிறிது நேரத்திற்கு நிறுத்துவார், அவரது பார்வை மேல்நோக்கி இருக்கும், அவரது தேகம் அசைவற்று, இறைவனுடனான ஆழ்ந்த தோழமையின் சமாதி நிலையில் தன்வசமற்றிருக்கும். முழு அறையும் இறையன்பின் பேராற்றல்வாய்ந்த சக்திமிகு ஒளிவட்டத்தினால் நிறைந்திருக்கும். சீடர்களாகிய எங்களுக்கு அத்தகைய சமயங்களில் அங்கு இருப்பதே, உணர்வுநிலையின் ஓர் உயர்ந்த நிலைக்கு உயர்த்தப்படுவதாகும்."

"இறுதியாக, 1945-ல் அப்புத்தகம் முடிவடைகின்ற மகிழ்ச்சி ஆரவாரமிக்க நாள் வந்தது. பரமஹம்ஸர் இறுதியான சொற்களை எழுதினார், 'இறைவா, நீ இந்த சன்னியாசிக்கு பெரிய குடும்பத்தை அளித்திருக்கிறாய்'; பின்னர் தனது பேனாவை கீழே வைத்துவிட்டு, ஆனந்தமாகக் கூவினார்:

"'எல்லாம் முடிந்தது; அது நிறைவு பெற்றுவிட்டது. இப்புத்தகம் இலட்சக்கணக்கானவர்களின் வாழ்க்கைகளை மாற்றும் நான் மறைந்துவிட்ட பிறகு, இதுவே எனது தூதுவனாக இருக்கும்.'"

பின்னர் ஒரு புத்தக வெளியீட்டாளரைக் கண்டுபிடிக்கும் பொறுப்பு தாரா மாதாவிடம் வந்தது. 1924-ல் ஸான் ஃபிரான்ஸிஸ்கோ நகரில் பரமஹம்ஸ யோகானந்தர் தொடர் சொற்பொழிவுகள் மற்றும் வகுப்புகள் நடத்திக் கொண்டிருந்த போது தாரா மாதாவைச் சந்தித்திருந்தார். அரிய ஆன்மீக நுண்ணறிவு பெற்றிருந்ததால் அவர் மிக அதிக முன்னேற்றமடைந்த சீடர்களின் சிறிய குழுவில் ஒருவரானார். பரமஹம்ஸர் அவரது புத்தக வெளியீட்டுத் திறன் மீது மிக உயர்ந்த மதிப்பு வைத்திருந்தார் மற்றும் தான் இதுவரை சந்தித்தவர்களை விட அவர் மிகச் சிறந்த புத்திக்கூர்மையுள்ளவர் என்று கூறுவது வழக்கம். பரமஹம்ஸர் அவரது இந்திய ஆன்மீக ஞானத்தைப் பற்றிய பரந்த அறிவு மற்றும் புரிதலைப் பாராட்டி ஒரு சமயம் குறிப்பிட்டார்: "எனது மகாகுரு, ஸ்ரீ

யுக்தேஷ்வர்ஜியைத் தவிர, வேறு எவரிடமும் இந்தியத் தத்துவத்தைப் பற்றிப் பேசி அதிகம் மகிழ்ந்தது இல்லை."

தாரா மாதா கையெழுத்துப் பிரதிகளை நியூ யார்க் நகருக்கு எடுத்துச் சென்றார். ஆனால் வெளியீட்டாளரைக் கண்டுபிடிப்பது ஒரு எளிதான செயலாக இல்லை. அடிக்கடி பார்த்திருப்பது போல, அதிகம் வழக்கத்தில் ஊறிய மனதுடையவர்களால் ஒரு சிறந்த படைப்பின் உண்மையான மதிப்பை முதலில் அடையாளம் காண இயலாது. பொருள், சக்தி மற்றும் சிந்தனை இவற்றின் நுட்பமான ஒற்றுமையின் வளர்ந்து வரும் புரிதலுடன் புதிதாகத் தோன்றியுள்ள அணுயுகத்தால் மனித குலத்தின் கூட்டு உணர்வு விரிவாக்கப் பட்டிருந்த போதிலும், அன்றைய வெளியீட்டாளர்கள் "இமயத்தில் ஒரு மாளிகையைத் தோற்றுவித்தல்" மற்றும் "இரு உடல்கள் கொண்ட மஹான்" போன்ற அத்தியாயங்களுக்குச் சிறிதும் தயாராக இல்லை!

ஒரு வருடமாக, ஒவ்வொரு வெளியீட்டளராக அலைந்து கொண்டிருந்த போது, தாரா மாதா குறைந்த அறைக்கலன்கள், வெப்பமூட்டப்படாத குளிர்நீர் மட்டுமே கொண்ட அடுக்குமாடி வீட்டில் வாழ்ந்தார். இறுதியாக அவரால் வெற்றிச் செய்தியுடன் தந்தி அனுப்ப முடிந்தது. தத்துவ நூலகம் (The Philosophical Library) என்ற ஒரு மரியாதைக்குரிய வெளியீட்டாளர், சுயசரிதத்தை வெளியிட ஒப்புக்கொண்டிருந்தனர். "இப்புத்தகத்திற்கென (அவர்) செய்திருப்பதை விளக்கத் துவங்க என்னால் இயலாது...," ஸ்ரீ யோகானந்தர் சொன்னார். "அவரன்றி

இப்புத்தகம் வெளி வந்திருக்காது."

1946 ம் வருடம் கிறிஸ்துமக்குச் சற்றே முன்பு, நீண்ட நாட்களாக எதிர்பார்க்கப்பட்ட புத்தகங்கள் மவுண்ட் வாஷிங்டன் சென்றடைந்தது.

புத்தகம் வாசகர்களாலும், உலகப் பத்திரிக்கையாளர்களாலும் பாராட்டு மழையுடன் வரவேற்கப்பட்டது. "இதற்கு முன் ஆங்கிலத்திலோ அல்லது வேறு எந்த மொழியிலோ இது போன்று யோகாவின் அறிமுகம் இருந்ததில்லை," என்று கொலம்பிய பல்பகலைக்கழக வெளியீடு தனது சமயங்களின் விமர்சனத்தில் எழுதியது. தி நியூ யார்க் டைம்ஸ் "ஓர் அரிய விளக்கம்" என்று பறைசாற்றியது. "யோகனந்தரின் புத்தகம் உடலின் சுயசரிதம் என்பதைவிட ஓர் ஆத்மாவின் சுயசரிதம் என்பதே சரி... இது நுண்மதியுடன் வளமை ததும்பும் கிழக்கத்திய நடையில் விளக்கப்பட்ட, சமய நெறி வாழ்வு பற்றிய ஆர்வத்தைத் தூண்டும் மற்றும் தெளிவான விளக்கங்களுடன் கூடிய ஆய்வு." என்று நியூஸ்வீக் அறிவித்தது.

புத்தகம் மற்ற மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டவுடன், உலகம் முழுதும் தினசரிகளிலும், பத்திரிக்கைகளிலும் இன்னும் பல விமர்சனங்கள் வரத்துவங்கின.

இரண்டாம் பதிப்பு விரைவாகத் தயார் செய்யப்பட்டது, மேலும் 1951 -ல் மூன்றாம் பதிப்பு.

உரையின் பகுதிகளைத் திருத்தியமைத்தல் மற்றும் மேம்படுத்தல், மேலும் அமைப்பின் பழைய செயல்பாடுகள் மற்றும் திட்டங்களை விளக்கும் சில பகுதிகளை நீக்குதல் இவற்றுடன், பரமஹம்ச யோகானந்தர் 1940 – 1951 ஆண்டுகளை உள்ளடக்கிய ஓர் இறுதி அத்தியாயத்தைச் சேர்த்தார்- புத்தகத்தின் நீண்ட அத்தியாயங்களுள் ஒன்று. புதிய அத்தியாயத்தின் அடிக்குறிப்பில் அவர் எழுதினார், "இப்புத்தகத்தின் மூன்றாம் பதிப்புடன் (1951) 49-ம் அத்தியாயத்தில் மிகப் புதிய விஷயம் சேர்க்கப்பட்டுள்ளது. முதல் இரு பதிப்புகளின் பல வாசகர்கள் விடுத்த வேண்டுகோள்களுக்கு மறுமொழி கூறும் வகையில், இந்த அத்தியாயத்தில் இந்தியா, யோகா மற்றும் வேதத் தத்துவத்தைப் பற்றிய வெவ்வேறு கேள்விகளுக்குப் பதிலளித்திருக்கின்றேன்."[2]

ஸ்ரீ யோகானந்தர் 1951-ம் வருட பதிப்பின் ஆசிரியர் குறிப்பில் எழுதினார், "ஆயிரக்கணக்கான வாசகர்களிடமிருந்து கடிதங்களைப் பெற்றதைக் குறித்து நான் தீவிரமாக உணர்ச்சிவயப்பட்டேன். அவர்களது கருத்துக்களும், அப்புத்தகம் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்ட விஷயமும், பழமை வாய்ந்த யோக விஞ்ஞானம், 'நவீன மனிதனின் வாழ்க்கையில், பயனுள்ள ஒரு இடத்தைப் பெற்றுள்ளதா?' என்ற இக்கேள்விக்கான ஒரு நேர்மறை பதிலை மேலை நாட்டினர் இப்பக்கங்களில் கண்டுவிட்டனர் என்ற

நம்பிக்கையை எனக்கு ஊட்டுகின்றன."

வருடங்கள் செல்லச் செல்ல "ஆயிரக்கணக்கான வாசகர்கள் "இலட்சக்கணக்கானவராக மாறி, (ஒரு யோகியின் சுயசரிதத்தின்) நீடித்த மற்றும் உலகளாவிய ஈர்ப்பு மிக வெளிப்படையாகத் தெரிய வந்தது. இப்புத்தகம் வெளியிடப்பட்டு 60 ஆண்டுகள் கழிந்த பின்னரும் கூட, மனோதத்துவம் மற்றும் அகத்தூண்டுதல் புத்தகங்களின் சிறப்பு விற்பனைப் பட்டியலில் உள்ளது. ஒரு அரிய நிகழ்வு! பல்வேறு மொழிகளிலும் கிடைக்கப் பெறும் இந்தப் புத்தகம், உலகெங்கிலும் உள்ள கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும், கிழக்கிந்திய தத்துவ ஞான சாஸ்திரம் மற்றும் மதம், ஆங்கில இலக்கியம், மனோதத்துவம், சமூகவியல், மானிடவியல், வரலாறு மற்றும் வணிக மேலாண்மை வரையிலான பாடப்பிரிவுகளில் தற்சமயம் பயன்படுத்தப்படுகிறது. நூறு ஆண்டுகளுக்கு முன்னமே, ஸ்ரீ லாஹிரி மகாசயர் கணித்துக் கூறியதைப் போல, யோகமும், அதன் பழமையான தியான மரபும் மெய்யாகவே உலகை சூழ்ந்து கொண்டு விட்டது.

நியூ ஃபிராண்ட்டியர் (அக்டோபர் 1986) என்ற மனோதத்துவ பத்திரிக்கை எழுதுகிறது: "இலட்சக்கணக்கானவர்களுக்கு ஊக்கமளித்த தனது ஒரு யோகியின் சுய சரிதத்தால் அனைவராலும் அறியப்பட்ட ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர், காந்திஜியைப் போல, சமுதாயத்தின் ஒரு முக்கிய பாகமாக ஆன்மீகத்தைக்

கொணர்ந்தார். நமது சொல்லகராதியில் 'யோகம்' என்ற சொல்லை சேர்த்ததற்கு வேறு எவரொருவரைக் காட்டிலும், யோகானந்தர் அதிகமாகவே செய்துள்ளார் என்று குறிப்பிடுவது நியாயமானதே".

மதிப்பிற்குரிய அறிஞர் டாக்டர். டேவிட் ஃபிராலே, இயக்குனர், அமெரிக்கன் இன்ஸ்டியூட் ஆஃப் வேதிக் ஸ்டடீஸ், யோகா இன்டர்நெஷனல் என்ற மாதமிரு முறை (அக்டோபர்/நவம்பர் 1996) வெளிவரும் பத்திரிக்கையில் எழுதுகிறார், "பிரபலமாகிக் கொண்டு இருக்கும் உடல் சார்ந்த யோகத்திற்காக மட்டுமன்றி – ஆன்மீக யோகம், யோகத்தின் உண்மையான பொருளாகிய ஆன்ம அனுபூதி என்ற விஞ்ஞானத்திற்காகவும், ஸ்ரீ யோகனந்தரை, "மேலை நாட்டின் யோகத் தந்தை என அழைக்கலாம்" என்று குறிப்பிடுகிறார்.

பேராசிரியர் ஆஷுதோஷ் தாஸ், பி.எச்.டி., டி.லிட், கல்கத்தா பல்கலைக்கழகம், அறிவித்தார், "ஒரு யோகியின் சுயசரிதம் நவீன யுகத்தின் உபநிஷதமாகக் கருதப்படுகிறது. இது உலகெங்கிலும் சத்தியத்தைத் தேடும் பல்லாயிரக்கணக்கானவர்களின் ஆன்மீக தாகத்தைத் தணித்துள்ளது. இந்தியாவில் உள்ள நாங்கள், இந்தியாவின் ஞானிகள் மற்றும் தத்துவத்தைப் பற்றிய இப்புத்தகத்தின் நன்மதிப்பு தனிச்சிறப்புடன் பரவுவதை வியப்புடனும் ஆர்வத்துடனும் கவனிக்கிறோம். பாரதத்தின் என்றும் அழியா அறநெறியான சனாதன தர்மம் என்னும் அமரத்துவம் வாய்ந்த அமிர்தம், ஒரு

யோகியின் சுய சரிதம் என்ற பொற்கிண்ணத்தில் சேமித்து வைக்கப்பட்டுள்ளதைக் குறித்து நாங்கள் மிகுந்த திருப்தியும், பெருமையும் கொள்கிறோம்."

முன்னாள் சோவியத் யூனியனிலும் கூட, கம்யூனிஸ ஆட்சியின் கீழ், ஒப்பிட்டளவில் அதை அணுகிய சிலருக்கு, ஒரு ஆழமான தாக்கத்தை வெளிப்படையாகவே ஏற்படுத்தியுள்ளது. நீதி அரசர் கிருஷ்ண ஐயர் (முன்னாள் நீதிபதி, இந்திய உச்ச நீதிமன்றம்) செயின்ட் பீட்டர்ஸ்பர்க் (முன்னாள் லெனின்கிராடு) என்ற நகரத்திற்கு சென்றிருந்தபோது அங்கு பேராசிரியர்கள் குழுவிடம் கேட்டார், "மனிதன் இறக்கும் தருவாயில் என்ன நேருகிறது என்று அவர்கள் எப்போதாவது நினைத்ததுண்டா?.... பேராசிரியர்களில் ஒருவர் அமைதியாக உள்ளே சென்று ஒரு புத்தகத்துடன் – ஒரு யோகியின் சுயசரிதம் – வெளியே வந்தார். நான் வியந்தேன். மார்க்ஸ் மற்றும் லெனின் ஆகியோரின் பொருள் முதல்வாதத் தத்துவம் ஆட்சி புரியும் நாட்டில், அரசு நிர்வாக/நிறுவன அதிகாரி ஒருவர் ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர் எழுதிய புத்தகத்தை காண்பிக்கிறார். 'அவர் இந்தியாவின் ஆன்மா எங்களுக்கு அந்நியமானது அல்ல' என்பதை தயை கூர்ந்து புரிந்து கொள்ளுங்கள். 'இப்புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ள ஒவ்வொன்றின் நம்பகத்தன்மையையும் நாங்கள் ஒப்புக் கொள்கிறோம்'" என்றார்.

சமீபத்திய ஆண்டுகளில், நவீன காலத்தின் ஆன்மீக புத்தகங்களுள் அதிக தாக்கத்தை ஏற்படுத்திய ஒரு

புத்தகம் என்று, புத்தக விற்பனையாளர்கள், மதிப்பாய்வுரையாளர்கள் மற்றும் வாசகர்கள் அனைவரையும் ஒரு சேர பாராட்டப்பட்டது. 1999ம் ஆண்டின் ஹார்ப்பர் காலின்ஸ் என்ற எழுத்தாளர்கள் மற்றும் அறிஞர்கள் அடங்கிய குழுவினரால், ஒரு யோகியின் சுயசரிதம் "நூற்றாண்டின் மிகச் சிறந்து 100 புத்தகங்களில்" ஒன்றாக தேர்வு செய்யப்பட்டது. மேலும் 2005 ம் ஆண்டு வெளியிட்ட தனது 50 ஆன்மீக இலக்கியங்கள் என்ற புத்தகத்தில் டாம் பட்லர் – பௌடன் என்பவர் "இதுவரை எழுதப்பட்ட ஆன்மீகப் புத்தகங்களிலேயே அதிகமாக மகிழ்விக்கக் கூடிய, ஆன்மீக அறிவை ஊட்டக்கூடியதென நியாமாகக் கொண்டாடப்படுகின்ற ஒரு புத்தகம்" என்று எழுதுகிறார்.

இந்தப் புத்தகத்தின் இறுதி அத்தியாயத்தில், ஸ்ரீ பரஹம்ஸ யோகானந்தர், காலங்காலமாக உலகில் அனைத்து மதங்களின் துறவிகள் மற்றும் முனிவர்களால் வலியுறுத்தப்பட்ட ஆழ்ந்த உறுதியைப் பற்றி எழுதுகிறார்:

"இறைவன் அன்புமயமானவன்; படைப்பிற்கான அவனுடைய திட்டம், அன்பில் மட்டுமே வேரூன்றி இருக்க முடியும். இந்த எளிய உண்மை, அறிவாளிகளின் பகுத்தறிவை விட இதயத்திற்கு அளிக்கவில்லையா? மெய்ப்பொருளின் ஆழத்தைத் துளைத்தறிந்த முனிவர்கள் அனைவரும் கூறுவது: உலக முழுவதிற்கும் ஒரு தெய்வீகத் திட்டம் இருக்கிறது. அது

மிக அழகானது, ஆனந்த மயமானது."

இரண்டாம் அரை நூற்றாண்டிலும் ஒரு யோகியின் சுயசரிதம் தொடர்வதால், முதன் முறையாக இதை வாசிப்பவர்கள், மற்றும் வாழ்க்கைப் பயணத்தில் மிகவும் நேசிக்கப்படும் ஒரு துணையாக இதைக் கொணடிருப்பவர்கள் என இப்புத்தகத்தின் வாசகர்கள் அனைவரும், இதயத்தில் காணும், வாழ்க்கையின் போலியான புதிர்களைக் கடந்த, சத்தியத்தின் மீது அவர்களுடைய ஆன்மாக்கள் ஆழ்ந்த நம்பிக்கைக் கொள்ளத் தொடங்குவதைக் காண்பார்கள் என்று நாங்கள் நம்புகிறோம்.

யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ப் இந்தியா/
ஸெல்்ப்-ரியலைசேஷன் ்பெலோஷிப்

லாஸ் ஏஞ்சல்ஸ், கலி்போர்னியா

ஜீலை 2007

---

1 பரமஹம்ஸ யோகானந்தர் 1931-ல் லாஸ் ஏஞ்ஜலீஸ் நகரத்தை நோக்கியவாறு மௌண்ட் வாஷிங்டனின் உச்சியில் ஸ்தாபித்திருந்த சன்னியாச சமூகத்தில் ஸ்ரீ தயா மாதா சேர்ந்தார். அவர் 1955 முதல் 2010-ல் அவர் மறையும் வரை யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ப் இந்தியா/ ஸெல்்ப்-ரியலைசேஷன் ்பெலோஷிப்-ன் தலைவியாக சேவையாற்றினார்.

2 இந்தப் பதிப்பிற்கான வெளியீட்டாளரின் குறிப்பில் விளக்கப்பட்டுள்ள படி, பரமஹம்ஸ யோகானந்தரால் செய்யப்பட்ட கூடுதல் திருத்தங்கள் ஏழாம் பதிப்பில் (1956) இணைக்கப்பட்டுள்ளன:

"இந்த 1956 அமெரிக்கப் பதிப்பு பரமஹம்ஸ யோகானந்தர் லண்டன், இங்கிலாந்து பதிப்பிற்காகக் செய்த திருத்தங்கள்; மேலும் 1951-ல், ஆசிரியர் செய்த கூடுதல் திருத்தங்களையும் உள்ளடக்கியது. 1949, அக்டோபர் 25 தேதியிட்ட லண்டன் 'பதிப்பிற்கான குறிப்பில்', பரமஹம்ஸ யோகானந்தர் எழுதினார்: 'இப்புத்தக லண்டன் பதிப்பிற்கான ஏற்பாடு உரையைத் திருத்தவும், விரிவாக்கவும் எனக்கு ஒரு வாய்ப்பை அளித்திருக்கின்றது. இறுதி அத்தியாயத்தில் புதிய விஷயம் தவிர, நான் பல அடிக்குறிப்புகளைச் சேர்த்துள்ளேன், அவற்றில் அமெரிக்கப் பதிப்பின் வாசகர்கள் எனக்கு அனுப்பிய கேள்விகளுக்குப் பதிலளித்திருக்கின்றேன்.'

"1951-ல் ஆசிரியர் செய்த பிந்தைய மாற்றங்கள் நான்காவது (1952) அமெரிக்கப் பதிப்பில் வெளிவரத் திட்டமிடப்பட்டவை. அச்சமயத்தில் ஒரு

யோகியின் சுயசரிதத்தின் உரிமைகள் ஒரு நியூயார்க் வெளியீட்டு நிறுவனத்திடம் இருந்தது. 1946-ல் நியூயார்க்கில் புத்தகத்தின் ஒவ்வொரு பக்கமும் மின் தட்டச்சுத் தகட்டில் செய்யப்பட்டிருந்தது. அதன் காரணமாக, ஓர் காற்புள்ளியைச் சேர்க்கக் கூட அந்த முழுப்பக்க உலோகத் தகட்டையும் வெட்டிப் பிறித்து விரும்பும் காற்புள்ளி அடங்கிய புதிய வரியை மீண்டும் பற்ற வைத்து இணைக்க வேண்டும். பல தகடுகளை மீண்டும் பற்ற வைத்து இணைப்பதில் ஏற்படும் செலவினத்தை முன்னிட்டு, நியூயார்க் வெளியீட்டாளர் ஆசிரியரின் 1951-ன் திருத்தங்களை நான்காம் பதிப்பில் சேர்த்துக் கொள்ளவில்லை.

"1953-ன் பிற்பகுதியில் ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெல்லோஷிப் (SRF) ஒரு யோகியின் சுயசரிதத்தின் அனைத்து உரிமைகளையும் நியூ யார்க் வெளியீட்டாளரிடமிருந்து வாங்கியது. 1954 மற்றும் 1955 (ஐந்தாம் மற்றும் ஆறாவது பதிப்புகள்); ஆண்டுகளில் புத்தகத்தை மறுபதிப்பாக அச்சிட்டது: ஆனால் அந்த இரு வருடங்களில் மற்ற கடமைகள் SRF-ன் பதிப்பகத் துறையை ஆசிரியரின் திருத்தங்களை மின்தட்டச்சுத் தகடுகளில் இணைக்கும் மிகக் கடினமான பணியை மேற்கொள்வதிலிருந்து தடுத்தன. ஆயினும் அந்த வேலை ஏழாம் பதிப்பிற்கு உரிய நேரத்தில் நிறைவேற்றப்பட்டது."

1956 க்குப் பின்னர் பரமஹம்ஸ யோகானந்தர் மஹாசமாதி அடையுமுன் தாரா மாதா பெற்றிருந்த வழிகாட்டலின் படி, சில கூடுதலான திருத்தங்கள் செய்யப்பட்டன.

ஒரு யோகியின் சுயசரிதத்தின் ஆரம்ப காலப் பதிப்புகள் ஆசிரியரின் பட்டம் பரமஹம்ஸ" என்று, பொதுவான வங்காள வழக்கத்தில் ஓசையின்றியோ அல்லது ஓசை மிகக் குறைந்தோ வரும் அ (a) -க்களை எழுதும் போது நீக்குவதைப் பிரதிபலிக்கும் வகையில் அளித்தன. இந்த வேத அடிப்படையிலான பட்டத்தின் புனிதனான முக்கியத்துவம் தெரிவிப்பதை உறுதி செய்ய, பிந்தைய பதிப்புகளில் நிலையான சமஸ்கிருத ஒலிபெயர்ப்பு பயன்படுத்தப்பட்டிருக்கின்றன: "பரமஹம்ஸ," என்பது பரம, "உச்ச அல்லது ஒப்புயர்வற்ற", மற்றும் ஹம்ஸ் "அன்னம்" இவற்றிலிருந்து வந்தது – ஒருவர் தனது உண்மையான தெய்வீக ஆன்மா, மற்றும் ஆத்மா பரமாத்வாவுடன் ஒன்றாவதின் உச்ச அனுபூதி அடைந்திருப்பதைக் குறிக்கும்.



# நன்னெறியின் சாசுவத விதிமுறை

புதிய சுதந்திர இந்தியாவின் (1947) கொடி காவி, வெண்மை மற்றும் கரும்பச்சை பட்டைகளைக் கொண்டுள்ளது. ஆழ்ந்த நீலநிற தர்ம சக்கரம், பேரரசர் அசோகர் கி.மு. மூன்றாவது நூற்றாண்டில் நிர்மாணித்த சாரநாத் கல்தூணில் காணப்படுகின்ற உருவ அமைப்பின் மறுபடிவமாகும்.

தர்ம சக்கரம், நன்னெறியின் சாசுவத விதிமுறையின் சின்னமாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது; அத்துடன், தற்செயலாக, உலகத்தின் மிகப் புகழ்பெற்ற பேரரசரின் நினைவுக்கு பெருமையூட்டுவதாக அமைந்துள்ளது. ஆங்கில வரலாற்றாசிரியர் ஏ.எ.தஹஜ்ப்ண்ய்ள்ர்ய் எழுதுகிறார், அவருடைய நாற்பது வருடகால ஆட்சி, சரித்திரத்தில் ஈடுஇணையற்றதாக விளங்குகிறது. அவர் பல்வேறு காலங்களில் மார்கஸ் அரீலியஸ், புனிதர் பவுல், மற்றும் கான்ஸ்டன்டைன் அகியோருடன் ஒப்பிடப்பட்டுள்ளார்....அசோகர், கிறிஸ்துவுக்கு 250 ஆண்டுகளுக்கு முன்னரே ஒரு வெற்றிகரமான போர் தாக்குதலின் விளைவுகளைப் பற்றிய தனது அதிர்ச்சியையும் கழிவிரக்கத்தையும் வெளிப்படுத்துவதற்கும் மற்றும் கொள்கைரீதியாக ஓர்

உபாயமான போரை வேண்டுமென்றே துறப்பதற்கும் துணிவைப் பெற்றிருந்தார்."

அசோகர் மரபுரிமையாகப் பெற்றிருந்த இராஜ்ஜியங்கள் இந்தியா, நேபாளம், ஆ்ப்கானிஸ்தானம் மற்றும் பலுசிஸ்தானம் ஆகியவற்றை உள்ளடக்கி இருந்தன. முதல் சர்வதேச ஆதரவாளராக, அவர் சமய மற்றும் கலாச்சார குழுக்களை பல பரிசுகளுடனும் ஆசிகளுடனும் பர்மா, சிலோன், எகிப்து, சிரியா மற்றும் மாசிடோனியாவிற்கு அனுப்பினர்ா.

அசோகர், மௌரிய வம்சத்தின் மூன்றாவது அரசர், சரித்திரத்தின்....தலைசிறந்த தத்துவ-அரசர்களில் ஒருவர்," என அறிஞர் ட.ஙஹள்ள்ர்ய்ளுன்ழ்ள்ங்ப் கரு;த்து தெரிவிக்கிறார். அவர் சக்தி மற்றும் இரக்கம், நீதி மற்றும் தொண்டு ஆகியவற்றை இணைத்து செயலாற்றியது போல் எவரும் செய்யவில்லை. அவர் தனது காலத்தின் வாழும் பண்புருவமாகத் திகழ்ந்தார். மேலும் நம் முன்னர் மிகவும் நவீன வடிவமாகத் தோன்றுகிறார். ஒரு நீண்ட ஆட்சிகாலத்தில் அவர், ஒரு கற்பனையாளரின் பேராவலாக மட்டுமே நமக்குத் தோன்றக்கூடியதை சாதித்துக் காட்டினார்: சாத்தியமாகக்கூடிய அளவு லோகாயத அதிகாரத்தை மகிழ்ந்து அனுபவித்துக் கொண்டு, அவர் அமைதியை நிறுவினார். அவரது சொந்த பரந்து விரிந்த இராஜ்ஜியங்களுக்கும் அப்பால், சில மதங்களினுடைய கனவாகிய – மனித இனத்தை அரவணைக்கின்ற ஓர் உலகளாவிய நியதியை மெய்ப்பித்தார்."

தர்மம் (பிரபஞ்ச விதிமுறை) எல்லா உயிரினங்களுடைய மகிழ்ச்சியை குறிக்கோளாகக் கொண்டுள்ளது." இன்றுவரை தொடர்ந்து நீடித்திருக்கும் அவருடைய கல்வெட்டுகளிலும், கல்தூண்களிலும் அசோகர், அறநெறியிலும் தெய்வத்தன்மையிலுமே மகிழ்ச்சி வேரூன்றியுள்ளது என வெகுதூரம் பரவியிருந்த தனது இராஜ்ஜியத்தின் குடிமக்களுக்கு அன்புடன் அறிவுறுத்தினார்.

பல்லாயிர ஆண்டுகளாக இத்தேசத்தை சூழ்ந்திருந்த மேம்பட்ட நிலையையும், செல்வச் செழிப்பையும் புதுப்பிக்க விழைகின்ற நவீன இந்தியா, தனது புதிய கொடியில் தெய்வங்களுக்குப் பிரியமானவரான" சக்ரவர்த்தி அசோகரின் நினைவுக்கு புகழஞ்சலி செலுத்துகிறது.




(1947-க்கு முந்தியது. இப்பொழுது வடமேற்குப் பகுதிகளில் பாகிஸ்தான், வடகிழக்கில் பங்களாதேஷ் அமைந்துள்ளது.)

அத்தியாயம் 1

# என் பெற்றோரும் பிள்ளைப் பருவமும்

அனாதியான மெய்ப்பொருளைத் தேடுவதும், அதனுடன் இணைந்த குரு[1]-சீடன் நல்லுறவும் தொன்று தொட்டே பாரதப் பண்பாட்டின் சிறப்பியல்புகளாக இருந்து வந்துள்ளன.

என் வழியும் தெய்வத்தன்மை உள்ளதொரு தவமுனிவரிடம் என்னைக் கொண்டு சென்றது; அழகு மிளிர்ந்த அவரது வாழ்க்கை, கால ஏடுகளில் பொறிக்கப்பட்டுள்ள ஒன்று. பாரதத்தின் உண்மையான செல்வங்களாகக் கருதப்படுகின்ற ஞானிகளில் அவரும் ஒருவராவார். புராதன எகிப்து, பாபிலோனியா ஆகிய நாடுகளுக்கு ஏற்பட்ட விதி தங்கள் நாட்டிற்கும் ஏற்பட்டு விடாமல் ஒவ்வொரு தலைமுறையிலும் இத்தகைய ஞானிகள் தோன்றிப் பாதுகாத்து வந்துள்ளனர்.

என் குழந்தைப் பருவத்தின் நினைவுகள், கால வரிசைக்கு அப்பாற்பட்ட முற்பிறப்பின் இயல்புகளைத் தழுவியனவாக இருக்கக் காண்கிறேன். இமயப் பனிச்சாரல்களிடையே ஒரு யோகியாக[2] நான் வாழ்ந்த தொல்கால வாழ்க்கையின் தெளிந்த நினைவுகள் என்னுள் எழுந்தன. கடந்த காலத்தின் இத்தோற்றங்கள் ஏதோவொரு வரையறை அற்ற தொடர்பின் மூலமாக வருங்காலத்தைக் கூட காண உதவின.

குழந்தைப் பருவத்தின் இயலாமையினால் எழுந்த அவமானங்கள் பற்றி இன்னும் எனக்கு ஞாபகம் இருக்கிறது. உணர்ச்சிகளைச் சுதந்திரமாக வெளிப்படுத்தும் திறமை இன்றி இருந்ததையும், நடமாட இயலாதிருந்ததையும் நான் மனக் கசப்புடன் உணர்ந்தேன். என் உடலின் பலவீனத்தை நான் உணர்ந்தபோது பிரார்த்தனைகள் என்னுள் பொங்கி எழுந்தன. தீவிர உணர்ச்சிகரமான என் வாழ்க்கை பன்மொழி வார்த்தைகளில் என் மனத்துள் வெளிப்பட்டது. என்னுள் ஏற்பட்ட பன்மொழிகளின் குழப்பத்திற்கிடையில் நான் படிப்படியாக என்னுடையவர்களின் வங்காளச் சொற்களை செவிமடுக்கப் பழகிக் கொண்டேன். பொம்மைகளுடனும் கால் விரல்களுடனுமான விளையாட்டிற்குள் அடங்கி விட்டதாகப் பெரியவர்களால் கருதப்படும் மழலையின் மனம்தான் எத்துணை ஏமாற்றவல்லது!

என் உள்மனக் கொந்தளிப்பும் அதற்கு ஈடுகொடுக்க முடியாத என் உடலும், அடிக்கடி பிடிவாதமான அழுகைகளை உண்டாக்கின. என் வேதனையைக் கண்டு எதுவும் செய்வதறியாத என் குடும்பத்தினரின் திகைப்பை நான் நினைவு கூர்கிறேன். மகிழ்ச்சி நிறைந்த நினைவுகளும் என்னுள் குவிகின்றன; என் தாயின் சீராட்டல்கள், மற்றும் மழலைச் சொற்களை உதிர்க்கவும் தளர்நடை பயிலவும் மேற்கொண்ட என் முதல் முயற்சிகள். உடனுக்குடனேயே மறக்கப்படும் இத்தொடக்க வெற்றிகள்தாம் தன்னம்பிக்கையின்

இயற்கையான அடிப்படையாகும்.

தொலை தூரம் ஊடுருவும் என் நினைவுகள் தனிப்பட்ட அனுபவம் இல்லை. வாழ்வுக்கும் சாவுக்கும் இடையே ஏற்படும் திடீர் மாறுதல்கள், தங்கள் உள் உணர்வுகளைத் தடை செய்யாவண்ணம் பாதுகாத்துக் கொள்ளும் யோகிகள் பலர் உண்டென அறிகிறோம். மனிதன் ஓர் உடல் மட்டுமேயானால் அதை இழக்கும்போது அவனே இல்லாதவனாகி விடுகிறான். ஆனால் காலங்காலமாக தீர்க்கதரிசிகள் கூறுவது உண்மையெனில் மனிதன் அடிப்படையில் உடல் சார்பில்லாத எங்கும் நிறைந்துள்ள ஆன்மாவேதான்.

வினோதமாகத் தோன்றிய போதிலும், குழந்தைப் பருவத்தின் தெள்ளிய நினைவுகள் மிகவும் அபூர்வமில்லை. பல நாடுகளில் பிரயாணம் செய்யும்பொழுது, உண்மையே பேசும் அனேகர் வாயிலாக அவர்களுடைய குழந்தைப் பருவத்தின் நினைவுகளைக் கூடக் கேட்டறிந்திருக்கிறேன்.

நான் வடகிழக்கு இந்தியாவில் இமயமலைக்கு அருகிலுள்ள கோரக்பூரில் 1893 ஆம் ஆண்டு ஜனவரி 5 ஆம் தேதி பிறந்தேன். என் முதல் எட்டு ஆண்டுகள் அங்கே கழிந்தன. நான்கு புதல்வர்களும் நான்கு புதல்விகளுமாக நாங்கள் எட்டுக் குழந்தைகள்; முகுந்த லால் கோஷ்[3] என்ற நான் இரண்டாவது மகனும் நான்காவது குழந்தையுமாவேன்.

என் தாய் தந்தையர் வங்காளியர், க்ஷத்ரிய வகுப்பைச் சேர்ந்த வர்கள். இருவரும் இறையருளால்

தெய்வத் தன்மையுடன் விளங்கினர். கண்ணியமானதும் சாத்வீகமானதுமாகிய அவர்களது பரஸ்பர அன்பு என்றுமே அற்பமான முறையில் வெளிப்பட்டதில்லை. பெற்றோர்களின் இதமான சூழ்நிலை துள்ளித் திரிந்த எட்டு இளம் ஜீவன்களுக்கு அமைதி நிறைந்ததொரு மையமாக விளங்கியது.

தகப்பனார் பகவதி சரண் கோஷ் அன்பும், ஆழ்ந்த சிந்தனையும், சில சமயங்களில் கண்டிப்பும் உடையவராக இருந்தார். அவரிடம் நாங்கள் மிகப் பிரியத்துடனிருந்த போதிலும், மரியாதை காரணமாக சற்று விலகியே இருந்தோம். ஒரு திறமை வாய்ந்த கணித மேதையும், தர்க்க சாஸ்திரத்தில் நிபுணருமான அவர் தன் அறிவினாலேயே பெரும்பாலும் வழிநடத்தப்பட்டார். ஆனால் தாயாரோ இதயங்களின் ஓர் அரசியாக இருந்து எங்களுக்கு அன்பின் மூலமாகவே கற்பித்தார். தாயாரின் மறைவுக்குப் பின் தகப்பனார் தன் உள்ளார்ந்த கனிவை அதிகம் வெளிப்படுத்தலானார். அச்சமயங்களில் அவருடைய பார்வை என் தாயின் பார்வையைப் போன்று மாறித் தோற்றமளிப்பதை நான் பல தடவை கண்டிருக்கிறேன்.

தாயின் முன்னிலையில் ஆரம்பகால நாட்களில் குழந்தைகளாகிய நாங்கள் மத சாத்திரங்களுடன் இனிப்பும் கசப்புமான தொடர்பு கொள்ளலானோம். தாய் மகாபாரதம், ராமாயணம் ஆகியவற்றிலிருந்து பொருத்தமான கதைகளை அவ்வப்போது சமயத்திற்கு ஏற்றவாறு எங்களைத் திருத்துவதற்குத் திறமையுடன்

கூறுவார். இச்சமயங்களில் கண்டிப்பதும் கற்றுக் கொடுப்பதும் சேர்ந்தே நடைபெறும்.

தகப்பனாருக்கு மரியாதை கொடுக்கும் வகையில், அவர் அலுவலகத்திலிருந்து வரும்போது அவரை வரவேற்க, அன்னை, குழந்தைகளாகிய எங்களுக்கு பிற்பகலில் அழகாக உடை உடுத்தி அலங்கரித்து விடுவார். பாரதத்தின் பெரிய கம்பெனிகளுள் ஒன்றான வங்காள-நாக்பூர் ரயில்வேயில் அவர் துணைத்தலைவருக்குச் சமமான ஒரு பதவியை வகித்தார். அவர் வேலையின் காரணமாக அடிக்கடி பயணம் செய்ய நேர்ந்தது. என் குழந்தைப் பருவத்தில் எங்கள் குடும்பம் பல நகரங்களில் வசித்தது.

தேவை உள்ளவர்களுக்குத் தாராளமாக அள்ளித் தருபவர் அன்னை. தந்தையும் கனிவான குணம் உடையவர் தாம்; எனினும் சட்ட ஒழுங்கு முறையில் அவருக்கிருந்த பற்றுதல் குடும்ப வரவு செலவு வரையிலும் பரவியிருந்தது. ஒரு தடவை அன்னை இரண்டே வாரங்களில், தந்தையின் ஒரு மாத வருமானத்திற்கும் அதிகமாகவே ஏழைகளுக்கு அன்னமிடுவதில் செலவழித்துவிட்டார்.

தகப்பனார், "நான் கேட்டுக் கொள்வதெல்லாம் நீ உன் தான தர்மங்களை தயவு செய்து சமாளிக்கக்கூடிய ஒரு வரையறைக்குள் வைத்துக் கொள் என்பது தான்," என்றார். தன் கணவரின் ஒரு சிறு குற்றச்சாட்டு கூட தாய்க்கு வேதனை தந்தது. குழந்தைகளிடம் தன் மனத்தாங்கலைப் பற்றி எந்தக் குறிப்பும் காட்டாமல்,

அவர் ஒரு குதிரை வண்டி கொண்டு வரும்படி கட்டளையிட்டார்.

"நல்லது, நான் என் அன்னையின் வீட்டிற்குச் செல்கிறேன்," என்றார். காலங்காலமாக கடைப்பிடிக்கப்படும் ஒரு கடைசி அஸ்திரம்!

நாங்கள் எல்லோரும் அதிர்ச்சியடைந்து அழுது புலம்பினோம். நல்ல வேளையாக எங்கள் தாய்மாமன் அச்சமயத்தில் வந்து சேர்ந்தார். அவர் சில அனுபவமிக்க அறிவுரைகளைத் தந்தையின் காதில் முணுமுணுத்தார். அவை பன்னெடுங்காலமாகவே வழக்கத்தில் இருந்து வருபவை என்பதில் ஐயமில்லை. தந்தை சில சமாதானச் சொற்களைக் கூறிய பின்னர், அன்னை மகிழ்ச்சியுடன் வண்டியைத் திருப்பி அனுப்பினார். என் தாய், தந்தையருக்கு இடையே நானறிந்த ஒரே பூசல் இவ்வாறு முடிந்தது. ஆனால் அவர்களுக்கே உரித்தான ஒரு வாக்குவாதம் என் நினைவிற்கு வருகிறது.

"கஷ்டத்தினால் நம் வீடு தேடி வந்திருக்கும் ஓர் அபாக்கியவதிக்கு தயவு செய்து ஒரு பத்து ரூபாய் கொடுங்களேன்." அன்னையின் முறுவலில் அதற்கே உரித்தான தூண்டுதல் இருந்தது.

"பத்து ரூபாய் எதற்கு? ஒரு ரூபாய் போதுமானது." தகப்பனார் ஒரு தகுந்த காரணத்தையும் சேர்த்துக் கொண்டார். "என் தந்தையும் அவருடைய பெற்றோர்களும் திடீரென இறந்ததும் எனக்கு முதன்முதலாக ஏழ்மையைப் பற்றிய அனுபவம் ஏற்பட்டது. பல மைல்கள் நடந்து பள்ளி செல்லும் முன்

என் ஒரே காலை உணவு ஒரு சிறிய வாழைப்பழம்தான். பிறகு நான் பல்கலைக்கழகத்தில் படிப்பைத் தொடரும் போது என் அத்தியாவசிய தேவையினால் உந்தப்பட்டு ஒரு செல்வந்தரான நீதிபதியிடம் மாதந்தோறும் எனக்கு ஒரு ரூபாய் உதவி செய்யுமாறு முறையிட்டேன். அவர் ஒரு ரூபாய் கூட பெரிய தொகைதான் என்று கூறி நிராகரித்து விட்டார்."

"பார்த்தீர்களா? அந்த ரூபாயின் மறுப்பை எவ்வளவு கசப்பாக நினைவு கூர்கிறீர்கள்." அன்னையின் இதயம் உடனடியாக வாதிட்டது. "அவசரமாகத் தேவைப்படும் பத்து ரூபாய் மறுக்கப்படுவதை, உங்களைப் போலவே இப்பெண்ணும் வேதனையுடன் பிற்காலத்தில் நினைவு கூர வேண்டுமென்றா நீங்கள் விரும்புகிறீர்கள்?"

"உனக்குத்தான் வெற்றி!" காலங்காலமாக வெல்லப்பட்டு வரும் கணவன்மார்களின் முகபாவத்துடன் அவர் தன் கைப்பையைத் திறந்தார். "இதோ ஒரு பத்து ரூபாய் நோட்டு. இதை என் நல்வாழ்த்துக்களுடன் அவளிடம் கொடு."

எந்த ஒரு புது யோசனைக்கும் என் தந்தை முதலில் "இல்லை "என்றே சொல்லும் சுபாவமுடையவர். என் அன்னையிடமிருந்து மிகச் சுலபமாக அனுதாபத்தைப் பெற முடிந்த அந்தப் பெண்ணிடம் என் தந்தை நடந்து கொண்ட முறை அவருடைய வழக்கமான எச்சரிக்கைக்கு ஓர் உதாரணம் எனலாம். எதையும் உடனே ஒப்புக் கொள்வதில் அவருக்கு இருந்த தயக்கம் உண்மையில் "சிந்தித்துச் செயல்பட வேண்டும்" என்ற

கொள்கையை மதிப்பதாகும். தந்தையினுடைய தீர்ப்புகள் நியாயமாகவும் சரிசமமாகவுமே இருந்தன என்பதை நான் எப்போதும் கண்டுள்ளேன். என்னுடைய பல வேண்டுகோள்களைஅது விடுமுறையில் சுற்றுலாப் பயணமாக இருந்தாலும் சரி அல்லது புது மோட்டார் சைக்கிள் வாங்குவதாக இருந்தாலும் சரிஓரிரு நியாயமான காரணங்களுடன் கூறினால் அவற்றை அவர் தவறாது பூர்த்தி செய்து விடுவார்.



ஞான பிரபா கோஷ் (1868-1904)
ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தரின் தாயார்;
ஸ்ரீ ஸ்ரீ லாஹரி மகாசயரின் சிஷ்யை

தந்தையார் தன் குழந்தைகள் சிறுவயதினராக இருந்த போது அவர்கள் மீது மிகக் கண்டிப்புடையவராக இருந்தார். ஆனால் தன்னைப்பற்றிய அவரது மனப்பாங்கு மிகமிகத் தீவிரமான தன்னல மறுப்பே. உதாரணமாக,

அவர் சினிமாவிற்கு சென்றதேயில்லை. பல ஆத்ம சாதனைகளில் ஈடுபடுவதும், பகவத் கீதையை படிப்பதும்தான் அவரது பொழுது போக்கு. எல்லா ஆடம்பரங்களையும் துறந்து, பழைய காலணிகளைக்கூட அவை அடியோடு உபயோகமற்றுப் போகிறவரை அணிவார். மோட்டார் கார்கள் பிரசித்தமான பிறகு அவருடைய புதல்வர்கள் கார்களை வாங்கினார்கள். ஆனால் அவரோ தினமும் அலுவலகத்திற்கு இழுவண்டியிலேயே சென்று வந்தார்.



பகவதி சரண் கோஷ் (1853-1942)
ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தரின் தந்தை;
ஸ்ரீ ஸ்ரீ லாஹரி மகாசயரின் சீடர்

அதிகாரத்துக்காகப் பணம் சேர்ப்பதில் தந்தைக்கு ஆர்வமில்லை. ஒரு தடவை அவர் கல்கத்தா நகர வங்கியைத் தொடங்கி, அதை முறையாகச் செயல்பட வைத்த பிறகு அதில் எந்தவிதமான பங்குகளையும் ஏற்று லாபமடைய மறுத்து விட்டார். தன் ஓய்வு

நேரங்களில் ஒரு பொதுக் கடமையைச் செய்ய விரும்பினார், அவ்வளவுதான்.

தந்தையார் வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பல வருடங்களுக்குப் பிறகு வங்காள-நாக்பூர் ரயில்வே கம்பெனியின் கணக்கு வழக்கு களை ஆய்வு செய்ய இங்கிலாந்திலிருந்து ஒரு கணக்கர் இந்தியா வுக்கு வந்தார். தந்தையார் வெகு நாட்களுக்கு முன்பே தனக்குச் சேர வேண்டிய போனஸ் தொகைகளைப் பெற விண்ணப்பிக்கவே இல்லை என்பதைக் கண்டு அந்த ஆய்வாளர் பெரும் வியப்புற்றார்.

"அவர் மூன்று மனிதர்களின் வேலையை செய்திருக்கிறார்!" என்று அந்தக் கணக்காளர் கம்பெனி அதிகாரிகளிடம் கூறினார். அவருக்கு கம்பெனியிலிருந்து ரூபாய் 1,25,000 ($41,250) ஈட்டுத் தொகையாகச் சேர வேண்டியிருந்தது. கம்பெனியின் பொருளாளர் அத்தொகைக்கு எங்கள் தந்தையாருக்கு ஒரு காசோலை அனுப்பினார். என் தந்தைக்கு இது ஒரு பெரிய விஷயமாகப் படவில்லையாதலால் அவர் அதைக் குடும்பத்தினரிடம் கூற மறந்து விட்டிருந்தார். வெகு நாட்களுக்கு பின் வங்கியிலிருந்து வந்த அறிவிப்பில் பெரும் வைப்புத் தொகை குறிக்கப்பட்டிருப்பதைப் பார்த்து என் தம்பி விஷ்ணு அவரிடம் இதை பற்றி விசாரித்தான்.

தந்தையார், "இந்த பொருளாதார லாபத்தைப் பற்றிப் பெருமைப்படுவானேன்? எதையும் சமநிலையில் பார்க்க வேண்டும் என்ற கொள்கை உடையவன் லாபத்தால்

மகிழ்வதுமில்லை. நஷ்டத்தால் கலங்குவதுமில்லை. இவ்வுலகில் மனிதன் வரும்போது ஒரு காசு கூட இல்லாமல்தான் வருகிறான். போகும் பொழுதும் ஒரு ரூபாய் கூட இல்லாமல் தான் போகிறான் என்பது அவனுக்குத் தெரியும்," என்றார்.

என் பெற்றோர்கள், அவர்கள் மணவாழ்வின் தொடக்க காலத்திலேயே காசியில் வசித்த லாஹிரி மகாசயர் என்ற பெரிய மகானின் சீடர்களாக ஆனார்கள். இந்தத் தொடர்பு இயல்பாகவே தந்தையிடம் காணப்பட்ட மனக் கட்டுப்பாட்டுணர்வை மேலும் உறுதி பெறச் செய்தது. ஒரு தடவை எனது மூத்த சகோதரி ரோமாவிடம் என் அன்னை "உன் தந்தையும் நானும் வருடம் ஒரு முறைதான் மக்கட்பேறு பெற வேண்டி கணவன், மனைவியாக இருப்போம்," என்று குறிப்பிடத்தக்க செய்தி ஒன்றைக் கூறினார்.

தந்தையார் லாஹிரி மகாசயரை வங்காள-நாக்பூர் ரெயில்வேயின் கிளை ஒன்றில் ஊழியராக இருந்த அவினாஷ் பாபுவின் மூலமாகச் சந்தித்தார். கோரக்பூரில், பாரத தேசத்தின் பல மகான்களைப் பற்றி என் இள மனதைக் கவரும் வண்ணம் அனேகக் கதைகளை அவினாஷ் பாபு எனக்குக் கூறினார். அவர் எப்பொழுதும் தன் குருவின் அருமை பெருமைகள் கூடிய புகழுரையோடுதான் தன் கதைகளை முடிப்பது வழக்கம்.

"உன் தந்தையார் எப்படிப்பட்ட அசாதாரணமான சூழ்நிலையில் லாஹிரி மகாசயரின் சீடர் ஆனார் என்பது பற்றி நீ எப்பொழுதாவது கேள்விப்பட்டிருக்கிறாயா?" ஒரு

சாவகாசமான கோடை மாலை வேளையில் நானும் அவினாஷ் பாபுவும் எங்கள் வீட்டு வளாகத்தில் உட்கார்ந்திருந்த பொழுது அவர் ஆவலைக் கிளறும் இந்தக் கேள்வியை என்னிடம் கேட்டார். நான் ஆர்வமுடன் ஒரு புன்முறுவலைச் சிந்தி இல்லை என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தேன்.

"பல வருடங்களுக்கு முன்பு, நீ பிறப்பதற்கு முன்னால், நான் என் மேலதிகாரியான உன் தந்தையிடம் காசியிலிருந்த என் குருதேவரைச் சந்திப்பதற்காக ஒரு வாரம் என் அலுவலகப் பணிகளிலிருந்து விடுப்புக் கேட்டேன். உன் தகப்பனார் என் திட்டத்தை ஏளனம் செய்தார்.

"அவர், 'நீ என்ன ஒரு மதவெறியனாகப் போகிறாயா?" என்று கேட்டுவிட்டு முன்னுக்கு வருவதில் உனக்கு விருப்பம் இருந்தால் உன் அலுவலகப் பணிகளில் கவனம் செலுத்து,' என்று கூறிவிட்டார்.

"அன்று நான் வருத்தத்துடன் ஒரு தோப்பு வழியாக வீட்டிற்கு நடந்து வந்தபோது, பல்லக்கில் வந்து கொண்டிருந்த உன் தந்தையைச் சந்தித்தேன். அவர் தன் பல்லக்கையும் வேலைக்காரர்களையும் அனுப்பிவிட்டு என்னுடன் நடக்கத் தொடங்கினார். என்னைச் சமாதானப்படுத்தும் முறையில் லோகாயதமான வெற்றிகளுக்கு முயற்சிப்பதில் உள்ள லாபத்தை எனக்குச் சுட்டிக் காட்டினார். நான் விருப்பமில்லாமல் அதைக் கேட்டுக் கொண்டு வந்தேன். ஆனால் என் இதயம் "லாஹிரி மகாசயா! தங்களைக் காணாமல்

என்னால் வாழ முடியாதே" என்று திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தது.

"மாலைக் கதிரவனின் கிரணங்கள், உயரமாக வளர்ந்து கிடந்த கோரைப் புற்களின் அலைவரிசைகளில் மகுடம் சூட்டிக் கொண்டிருந்த ஓர் அமைதி நிறைந்த வரப்புக்கு எங்கள் பாதை எங்களை இட்டுச் சென்றது. நாங்கள் அதை வியந்தவாறு நின்றோம். அங்கு அந்த வயலில் எங்களுக்கு மிக அருகில் என் மகாகுருவின் உருவம் திடீரென்று தோன்றியது![4]

"பகவதி, நீ உன்னிடம் வேலை செய்பவரிடம் மிகக் கடுமையாக இருக்கிறாய்! அவர் குரல், திகைத்து நின்ற எங்கள் காதில் கணீரென்று வந்து மோதியது. அவர் தோன்றியது போலவே மாயமாக மறைந்தும் விட்டார். நான் மண்டியிட்டு வணங்கியவாறு 'லாஹிரி மகாசயா, லாஹிரி மகாசயா' என்று வியப்புடன் கூறிக் கொண்டிருந்தேன். உன் தந்தையார் சில வினாடிகளுக்கு ஆடாது அசையாது திகைப்புற்று நின்று விட்டார்.

"'அவினாஷ், நான் உனக்கு விடுப்பு கொடுப்பதுமல்லாமல், நாளைக்குக் காசிக்கு புறப்பட நானும் விடுப்பு எடுத்துக் கொள்கிறேன். உனக்கு சிபாரிசு செய்வதற்காக, நினைத்த மாத்திரத்தில் தோன்றும் திறனுள்ள இந்த மகான் லாஹிரி மகாசயரை நான் அறிந்து கொள்ள வேண்டும். நான் என் மனைவியுடன் வந்து அவருடைய மெய்ஞ்ஞானப் பாதையில் எங்களுக்கும் வழிகாட்டி உபதேசம் செய்து அருளும்படி வேண்டப் போகிறேன். நீ எங்களை அவரிடம் அழைத்துப்

போவாயா?'

"'ஓ, தாராளமாக.' மிக்க அதிசயமான முறையில் என் பிரார்த்தனைக்கு விடை கிடைத்ததாலும் நிகழ்ச்சிகள் எல்லாம் சீக்கிரமாக எனக்குச் சாதகமாக அமைந்ததாலும் என் மனம் மகிழ்ச்சியால் நிறைந்தது.

"அடுத்த நாள் மாலை நானும் உன் பெற்றோர்களும் காசிக்கு ரயிலில் புறப்பட்டோம். மறுநாள் காசியை அடைந்ததும் கொஞ்ச தூரத்திற்கு ஒரு குதிரை வண்டியில் சென்றோம். பிறகு நாங்கள் குருதேவர் வசிக்கும் தனிமையான வீட்டிற்கு குறுகலான சந்துகளின் வழியாக நடந்தே செல்ல வேண்டி இருந்தது. அவருடைய சிறு கூடத்தை அடைந்த நாங்கள், தன் வழக்கப்படியே பத்மாசனமிட்டு அமர்ந்திருக்கும் அவரை வணங்கினோம். அவர் தன் கண்களைச் சிமிட்டியவாறு ஊடுருவும் பார்வையை உன் தந்தையை நோக்கித் திருப்பினார். 'பகவதி, நீ உன்னிடம் வேலை செய்பவரிடம் மிகக் கடுமையாக இருக்கிறாய்!' இரண்டு தினங்களுக்கு முன் அவர் புல்வெளியில் உச்சரித்த அதே சொற்கள். அவர் தொடர்ந்தார், 'என்னிடம் வருவதற்கு நீ அவினாஷுக்கு அனுமதி வழங்கியதைப் பற்றியும், அவனுடனேயே நீயும், உன் மனைவியும் வந்தது பற்றியும் மெத்த மகிழ்ச்சி.'

"அவர் மெய்ஞ்ஞானப் பயிற்சியான கிரியா யோகத்தை[5] உன் பெற்றோர்களுக்கு அவர்கள் மகிழ்வுறும்படி உபதேசித்தருளினார். குருவின் தரிசனம் கண்ட மறக்க முடியாத அந்த நாளிலிருந்து நானும் உன்

தந்தையும் சக சீடர்கள் என்ற முறையில் நெருங்கிய நண்பர்களானோம். லாஹிரி மகாசயர் உன் பிறப்பில் தீவிர அக்கறை காட்டினார். உன் வாழ்க்கை நிச்சயம் அவருடைய வாழ்வுடன் இணைக்கப் பெறும்; குருதேவரின் ஆசி என்றும் பொய்க்காது."

நான் இவ்வுலகையடைந்த கொஞ்ச காலத்திற்குள்ளேயே லாஹிரி மகாசயர் இவ்வுலகை நீத்தார். ஓர் அழகான சட்டத்திற்குள் வைக்கப்பட்டிருந்த அவர் படம் தந்தை மாற்றலாகிச் சென்ற எல்லா ஊர்களிலும் எங்கள் குடும்ப பூஜை அறையை அலங்கரித்தது. நானும் என் அன்னையும் பல காலை மாலைகளில் நாங்களாகவே ஏற்படுத்திக் கொண்ட பூஜை அறையில் மலர்களை மணமிக்க சந்தனக் குழம்பில் தோய்த்து அர்ப்பணம் செய்து தியானித்தோம். நாங்கள் சாம்பிராணி முதலான நறுமணப் பொருட்களுடன் எங்கள் இறையுணர்வையும் இணைத்து லாஹிரி மகாசயரிடம் முழுமையாக வெளிப்பட்ட தெய்வீகத் தன்மையை வணங்கினோம்.

அவர் படம் என் வாழ்க்கையில் மாபெரும் விளைவை ஏற்படுத்தியது. நான் வளர வளர லாஹிரி மகாசயரைப் பற்றிய எண்ணமும் என்னுள் வளர்ந்து வந்தது. நான் தியானத்திலிருக்கும் பொழுது புகைப்படத்திலிருந்த அவர் உருவம் வெளிவந்து மனித உருவில் என் முன் அமர்வதை அடிக்கடி கண்டிருக்கிறேன். ஒளிபடைத்த அவர் உடலின் பாதங்களை நான் தொட முயலும்பொழுது அவ்வுருமாறி,

மீண்டும் படமாகிவிடும். என் குழந்தைப் பருவம், குமரப் பருவமாக மாறிய தருணத்தில் லாஹிரி மகாசயரின் உருவம் சிறு படச்சட்டத்துக்குள்ளிருந்து வெளிப்பட்டு உருமாறி என் மனத்தில் உயிருடன் தங்கி ஒளியூட்டியதைக் கண்டேன். எனக்கு சோதனையோ குழப்பமோ ஏற்பட்ட நேரங்களிலெல்லாம் நான் அடிக்கடி அவரிடம் பிரார்த்தனை செய்வேன். அச்சமயங்களில் எனக்குள் அவர் காட்டிய ஆறுதலான வழிமுறையைக் கண்டேன்.

முதலிலெல்லாம் அவர் உயிருடன் இல்லையே என்று நான் வருந்தியதுண்டு. அவர் மறைபொருளாய் எங்குமிருப்பதை அறியத் தொடங்கியபோது நான் வருந்தவில்லை. அவரைக் கண்ணால் காண்பதற்கு மிக்க விருப்பப்பட்ட பல சீடர்களுக்கு, "நான் எப்பொழுதும் உங்கள் கூடஸ்த வரம்பிற்குள் (ஆன்மீகப் பார்வை) உள்ள பொழுது, என் எலும்புகளையும் சதையையும் காண நீங்கள் ஏன் வரவேண்டும்?" என்று அவர் பலமுறை எழுதியிருந்தார்.

எனக்கு எட்டு வயதாயிருக்கும் பொழுது லாஹிரி மகாசயரின் புகைப்படத்தின் மூலம் அவரது அருளால் ஆச்சரியமான விதத்தில் நான் உடல் நலமுற்றேன். இந்த அனுபவம் அவர்பாலுள்ள என் அன்பைத் தீவிரமாக்கியது. வங்காளத்தில் இச்சாபூரில் உள்ள எங்கள் குடும்பப் பண்ணையில் இருந்தபோது நான் ஆசியக் காலராவினால் தாக்கப்பட்டேன். உயிருக்கே ஆபத்தான நிலை. மருத்துவர்களால் எதுவும் செய்ய

முடியவில்லை. என் படுக்கையருகில் அமர்ந்திருந்த என் தாய் சுவரில் மாட்டப்பட்டிருந்த லாஹிரி மகாசயரின் படத்தைப் பார்க்கும்படி பரபரப்புடன் சைகை செய்தார்.

"மனத்தால் அவரை வணங்கு!" நான் கையைத் தூக்கிக் கும்பிடக்கூட சக்தியற்றிருந்தேன் என்பது என் அன்னைக்குத் தெரிந்திருந்தது. "நீ உண்மையான பக்தியுடன் உள்ளத்துள் அவரை மண்டியிட்டால் உன் உயிர் காப்பாற்றப்படும்!"

அவர் புகைப்படத்தை நான் உற்று நோக்கிய பொழுது அங்கே கண்களைக் கூசவைக்கும் ஓர் ஒளி என்னையும் அந்த அறை முழுவதையும் சூழ்ந்ததைக் கண்டேன். என்னுடைய குமட்டலும் கட்டுக்கடங்காத மற்ற அறிகுறிகளும் மறைந்தன. நான் நலமடைந்தேன். உடனே, தன் குருவின் மீது என் அன்னைக்குள்ள அளவற்ற நம்பிக்கையைப் போற்றும் வகையில் அவர் பாதங்களைத் தொட்டு குனிந்து வணங்குமளவிற்கு எனக்கு உடலில் தெம்பு உண்டாயிற்று. அன்னை திரும்பத் திரும்ப அச்சிறு படத்தைத் தன் தலையால் தொட்டு வணங்கினார்.

"எங்கும் நிறைந்திருக்கும் குருவே, தங்கள் ஒளி என் மகனை நலமடையச் செய்ததற்கு நான் நன்றி கூறுகிறேன்!"

வழக்கமாக உயிருக்கு ஆபத்தை விளைவிக்கும் அந்த வியாதியிலிருந்து என்னை உடனே மீட்ட அப்பேரொளியை என் அன்னையும் கண்டிருக்கிறார் என்பது எனக்குப் புரிந்தது.

அந்தப் புகைப்படம் விலைமதிக்க முடியாத என் அரிய பொக்கிஷங்களில் ஒன்று. லாஹிரி மகாசயர் தன் கையாலேயே என் தந்தைக்குக் கொடுத்ததாகையால் அது ஒரு புனித அதிர்வலையைப் பெற்றுள்ளது. முதன்முதலில் அந்தப் படம் எப்படிப் பிடிக்கப்பட்டது என்பது ஆச்சரியகரமானது. நான் அக்கதையை என் தந்தையின் சகோதர சீடர், காளி குமார் ராய் மூலமாக அறிந்தேன்.

அந்த மகானுக்கு யாரும் தன்னைப் புகைப்படம் எடுப்பதில் வெறுப்பு இருந்தது போலும். ஒரு சமயம் அவர் மறுத்தும் கேளாமல் அவரையும் காளி குமார் ராய் உள்ளிட்ட ஒரு பக்தர்கள் குழுவையும் சேர்த்துப் புகைப்படம் எடுக்கப்பட்டது. கழுவிய படத்தில் எல்லாச் சீடர்களுடைய உருவங்களும் தெளிவாகப் பதிந்திருக்கையில் நடுவில் லாஹிரி மகாசயர் உருவம் நியாயமாக இருக்க வேண்டிய இடம் மட்டும் காலியாக இருப்பதைக் கண்டு புகைப்படக்காரரர் பெரும் வியப்புற்றார். அவ்வதிசயத்தைப் பற்றிப் பலர் வெகுவாக விவாதித்தனர்.

கங்காதர் பாபு என்ற புகைப்பட நிபுணனான ஒரு மாணவன் மறைந்து கொள்ளும் அந்த உருவம் தன்னிடமிருந்து தப்ப முடியாது என்று பெருமை பேசினான். மறுநாள் காலை குரு ஒரு திரைக்கு முன்னால் மரக்கட்டிலில் பத்மாசனத்தில் அமர்ந்திருந்தார். கங்காதர் பாபு அவனுடைய உபகரணங்களுடன் வந்து சேர்ந்தான். வெற்றி

அடைவதற்கு வேண்டிய எல்லா முன்னெச்சரிக்கைகளுடன் அவன் பன்னிரண்டு படங்கள் பேராசையுடன் எடுத்தான். மீண்டும் அவருடைய ஒவ்வொருப் படத்திலும் திரை மற்றும் மரக்கட்டிலின் உருவம் மட்டுமே பதிந்திருக்க, அம்மகானின் உருவம் மட்டும் பதிவாகவில்லை.

செருக்கு அழிந்த கங்காதர் பாபு கண்ணீருடன் தன் குருவை நாடி வந்தான். பல மணி நேரம் கழித்தே ஆழ்ந்த பொருளுடைய குறிப்புடன் லாஹிரி மகாசயர் தன் மௌனத்தைக் கலைத்தார்.

"நான் ஆன்மா. கண்ணுக்குப் புலனாகாமல் எங்கும் வியாபித்துள்ளதை உன் கேமிரா பிரதிபலிக்க முடியுமா?"

"முடியாது என்பதை அறிந்தேன்! ஆயினும் புனித மகானே, தங்கள் உடற் கோவிலின் படம் ஒன்று வேண்டுமென்று நான் அன்புடன் விரும்புகிறேன். என் நோக்கு குறுகியது; உங்களுக்குள் பரம்பொருள் முழுமையாக வியாபித்திருக்கிறது என்பதை நான் இன்று வரை அறிந்தேனில்லை."

"சரி, நாளைக் காலை வா. நான் என்னைப் படம் பிடிப்பதற்கு உனக்கு வாய்ப்புத் தருகிறேன்."

மறுபடியும் அந்தப் புகைப்படக்காரர் தன் கேமிராவை இயக்கினார். இந்தத் தடவை, அத்தெய்வீக உருவம் காண முடியாதபடி அதிசயமாக உருமாற்றம் செய்து கொள்வதை விட்டுவிட்டுப் படத்தில் நன்கு பதிந்திருந்தது. அம்மகான் தன்னை இன்னொரு படம் பிடிக்க இசையவில்லை. நானும் அவருடைய வேறு

எந்தப் படத்தையும் பார்த்ததில்லை.

அந்தப் புகைப்படம்[6] இப்புத்தகத்தில் மீண்டும் வெளியிடப் பட்டிருக்கிறது. அவருடைய அழகிய முகச்சாயல் அவர் எந்த வகுப்பைச் சேர்ந்தவர் என்று கூற முடியாதபடி பொதுவான ஒன்றாக உள்ளது. அவருடைய மர்மப் புன்னகையில் இறைவனுடன் ஒன்றிய இணைவினால் பிறந்த ஆனந்தம் இலேசாக மிளிர்கிறது. அவரது அரைக்கண் திறந்த பார்வை இவ்வுலகில் அவருக்குப் பெயரளவில்தான் நாட்டம் உள்ளது என்பதையும், அரைக்கண் மூடியிருப்பது உள்ளானந்தத்தில் திளைத்திருப்பதையும் காட்டுவதற்கே ஆகும். இவ்வுலக ஆசைகளில் நாட்டமில்லா அவர், தன்னிடம் இருந்த மெய்ஞானச் செல்வத்தை நாடி வருவோருடைய ஆன்மீகப் பிரச்சனைகளை என்றுமே முழுவதுமாக அறிந்திருந்தார்.

இக்குருவின் படத்திலுள்ள சக்தியினால் நான் உடல் நலமுற்ற சில நாட்களுக்குள்ளேயே மகத்தான ஓர் ஆன்மீக தரிசனம் கண்டேன். ஒரு காலை வேளை என் படுக்கையில் உட்கார்ந்தபடியே நான் ஓர் ஆழ்ந்த தியானத்தில் ஈடுபட்டேன்.

"மூடிய கண்களின் இருளுக்குப் பின் யாதுளது?" என் உள்மனதில் இந்த ஆராய்ச்சி எண்ணம் வலுவாக எழுந்தது. உடனே என் அகக்கண்களின் உள் நோக்கில் ஒரு பேரொளி உருக்கொண்டது. என் நெற்றியினுள்ளே ஒளிர்ந்த ஒரு பெருந்திரையில் மலைக்குகைகளில் தியானக் கோலத்தில் வீற்றிருக்கும் தெய்வத்

தவமுனிவர்களின் உருவங்கள் சிறிய திரைப்படங்கள் போன்று தோன்றின.



ஆறு வயதில் யோகானந்தர்.

"நீங்கள் யார்?" நான் இரைந்து பேசினேன்.

"நாங்கள் இமாலயத்தில் உள்ள யோகிகள்." அத்தெய்வீக விடையை வர்ணிப்பது கடினம். என் மனம் மகிழ்ச்சியில் துள்ளியது.

"ஆகா, நானும் இமாலயத்துக்கு வந்து உங்களைப் போன்று ஆவதற்கு ஏங்குகிறேன்!"

அத்தோற்றம் மறைந்தது, ஆயினும் அவ்வெள்ளிக் கிரணங்களின் பேரொளி என்றும் விரிந்த வளையங்களாகி எல்லை இல்லாமல் பரந்தன.

"இந்த அதிசய ஒளி யாது?"

"நான் ஈஸ்வரன்[7]. நான் ஒளி." அக்குரல் மேகங்களின் முழக்கம் போல் இருந்தது.

"நான் உன்னுடன் இரண்டறக் கலக்க விரும்புகிறேன்!"

என் தெய்வீகப் பரவச நிலையிலிருந்து நான் மெல்ல விடுபட்ட போது, இறைவனைத் தேட வேண்டுமென்ற அவா, நிரந்தரமாக என்னுள் நிலைத்து விட்டது. "அவன் என்றும் புதிய, அழியாத பேரின்பம்!" இந்த நினைவு அத்தரிசனம் பெற்ற பின் நெடுங்காலத்திற்கு நீடித்தது.

இன்னொரு இளமைக்கால நினைவும் குறிப்பிடத்தக்கது. ஏனெனில் அந்நிகழ்ச்சியின் விளைவாய் என் உடலில் ஏற்பட்ட ஒரு வடு இன்றும் உள்ளது. நானும் என் அக்கா உமாவும் ஒரு நாள் அதிகாலையில் எங்கள் கோரக்பூர் வீட்டு வளாகத்தில் ஒரு வேப்ப மரத்தடியில் அமர்ந்திருந்தோம். வேப்பம் பழங்களைத் தின்னும் கிளிகளை வேடிக்கை பார்த்த நேரம் போக, மீதி நேரத்தில் வங்காளிப் பாட

புத்தகத்தைப் படிக்க எனக்கு அவள் உதவி செய்து கொண்டிருந்தாள்.

உமா தன் காலில் ஒரு கட்டி இருப்பதாக முறையிட்டு ஒரு களிம்பு ஜாடியைக் கொண்டு வந்தாள். நான் என் முன் கையில் கொஞ்சம் களிம்பைத் தடவிக் கொண்டேன்.

"நன்றாக இருக்கும் கையில் எதற்கு மருந்தைப் பூசுகிறாய்?"

"சரி, அக்கா, நாளைக்கு எனக்கும் கட்டி வரும் எனத் தோன்றுகிறது. கட்டி வரப்போகும் இடத்தில் தடவி உன் களிம்பை நான் பரிசோதிக்கிறேன்."

"போடா பொய்யனே!"

"அக்கா, நாளைக் காலை என்ன நடக்கப் போகிறது என்பதைப் பார்ப்பதற்கு முன்னால் என்னைப் பொய்யன் என கூறாதே," என்னுள் ஆத்திரம் மிகுந்தது.

உமா, நம்பாமல் மூன்று தடவைகள் திரும்பத் திரும்ப ஏளனம் செய்தாள். நான் அவளுக்கு மெதுவாக பதில் கூறுகையில் ஓர் அசையாத தீர்மானம் என் குரலில் ஒலித்தது.

"என் இச்சா சக்தியினால் நான் கூறுகிறேன். நாளைக்கு என் கையில் இதே இடத்தில் ஒரு பெரிய கட்டி தோன்றும்; உன் கட்டியும் இப்போது இருப்பது போல இருமடங்காக வீங்கி விடும்!"

மறுநாள் காலையில் நான் எழுந்தபோது நான் குறித்த இடத்தில் ஒரு பெரிய கட்டி இருந்தது. உமாவின் கட்டியும் இருமடங்காகி இருந்தது. ஒரு கூச்சலுடன் என்

தமக்கை அம்மாவிடம் ஓடினாள். "முகுந்தன் ஒரு சூனியவாதி ஆகிவிட்டான்!" சொற்களின் சக்தியை என்றும் தீங்கிழைக்க உபயோகிக்கலாகாது என்று என் அன்னை மனத்தில் பதியும்படி எனக்கு அறிவுரை கூறினார். நான் அந்தப் புத்திமதியை என்றும் நினைவில் வைத்து, அதன்படியே நடந்து வந்திருக்கிறேன்.

என் கட்டிக்கு அறுவை சிகிச்சை செய்யப்பட்டது. மருத்துவரின் அறுவையினால் ஏற்பட்ட அத்தழும்பு இன்றும் உள்ளது. என் வலது முன்னங்கை, மனிதனின் வெறும் வார்த்தைகளுக்கு உள்ள சக்தியை என்றென்றும் நினைவூட்டுகிறது.

உமாவிடம் பேசிய அந்த எளிய சொற்றொடர்கள் தீங்கற்றனவாகத் தோன்றினாலும் ஆழ்ந்த மனஒருமையுடன் உச்சரிக்கப்பட்டன. எனவே அவை வெடிகுண்டுகளைப் போன்று வெடித்துப் பாதகத்தை விளைவித்தாலும், பலனை உறுதியாகக் கொடுக்கவல்ல உள்ளார்ந்த திறனைப் பெற்றிருந்தன. சொற்களிலிருந்து வெடித்துக் கிளம்பும் அதிர்வலைகளின் ஆற்றலை நல்ல முறையில் பயன்படுத்தினால், ஒருவருடைய வாழ்க்கையைத் துன்பங்களிலிருந்து விடுவிக்க முடியும் என்பதையும், தழும்போ, கண்டனமோ ஏற்படுத்தாமல் இதனைச் செயல்படுத்த முடியும் என்பதையும் நான் பின்னர் புரிந்து கொண்டேன்.[8]

எங்கள் குடும்பம் பஞ்சாபிலுள்ள லாகூருக்கு மாறியது. அங்கு எனக்குக் காளியின்[9] வடிவத்தில் தெய்வத்தாயின் படம் ஒன்று கிடைத்தது. எங்கள் வீட்டு

மாடியின் பால்கனியிலிருந்த ஓர் எளிய பூஜை அறையை அது புனிதமாக்கியது. அந்த இடத்தில் செய்யப் பட்ட எனது எந்தப் பிரார்த்தனையும் பூர்த்தியாகுமென்று எனக்கு அசைக்க முடியாத ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. ஒரு நாள் உமாவுடன் அங்கு நின்று கொண்டு எங்கள் வீட்டை அடுத்து ஒரு சிறிய சந்திற்கு அப்பாலிருந்த இரு கட்டிடங்களின் கூரைகளிலிருந்து இரு சிறுவர்கள் பட்டம் பறக்க விடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

"ஏன் இவ்வளவு மௌனமாக இருக்கிறாய்?" உமா விளையாட்டாக என்னைப் பிடித்துத் தள்ளினாள்.

"தெய்வத்தாய் நான் கேட்பதை எல்லாம் கொடுப்பது எவ்வளவு அற்புதமானது என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்."

"அப்படியானால் அவ்விரு பட்டங்களையும் அவள் உனக்குத் தருவாள் என நினைக்கிறேன்!" உமா கேலியாகச் சிரித்தாள்.

"ஏன் தர மாட்டாள்?" நான் அவைகளை அடைய அமைதியாகப் பிரார்த்தனை செய்யலானேன்.

இந்தியாவில் பட்டங்களின் பந்தயங்கள் நடக்கும் பொழுது அவைகளுடைய நூல்களில், மாஞ்சா (கோந்து மற்றும் கண்ணாடிப் பொடி) பூசப்பட்டிருக்கும். ஒவ்வொரு ஆட்டக்காரனும் அவனுடைய எதிரியின் நூலை அறுப்பதற்கு முயற்சிப்பான். அறுபட்ட பட்டம் கூரைகளின் மேலாகப் பறந்தோடும். அதைப் பிடிப்பதில்தான் பெரும் வேடிக்கை. நானும் உமாவும்

கூரையின் கீழ் மாடி முகப்பில் நின்றிருந்ததினால் எங்கள் கையில் அறுந்த பட்டம் கிடைப்பதற்கு வாய்ப்பில்லை. பட்டத்தின் அறுந்துபோன நூல் இயல்பாகக் கூரையின் மேல்தான் தொங்கும்.

சந்தின் அப்பாலிருந்த ஆட்டக்காரர்கள் தங்கள் போட்டியைத் தொடங்கினர். ஒரு நூல் அறுந்தது. உடனே அப்பட்டம் நானிருந்த திசை நோக்கி மிதந்தது. திடீரென்று காற்றின் வேகம் குறைந்ததால் அப்பட்டம் அசையாமல் ஒரு நொடி நின்றது. அச்சமயத்தில் அதன் நூல் எதிர் வீட்டின் மேலிருந்த ஒரு கள்ளிச் செடியில் சிக்கியது. ஒரு நீளமான சுருக்கு, நான் பிடித்திழுக்க வசதியாக உருவானது. நான் பரிசை உமாவிடம் நீட்டினேன்.

"அது தற்செயலாக நடந்த ஒன்று; உன் பிரார்த்தனைக்குப் பதில் அல்ல. இன்னொரு பட்டமும் உன் கையில் கிடைத்தால்தான் நான் நம்புவேன்." என் அக்காவின் சொற்களில் காணப்பட்ட வியப்பைக் காட்டிலும் அவள் கருமையான கண்களில் அதிக வியப்புக் காணப்பட்டது. நான் என் பிரார்த்தனையைத் தீவிரமாகத் தொடர்ந்தேன். வேகமாக இழுத்ததினால் அந்த இன்னொரு ஆட்டக்காரனும் தன் பட்டத்தை திடீரென்று இழந்தான். அது காற்றில் ஆடி அசைந்தவாறு என்னை நோக்கி வந்தது. என் உதவியாளான அக்கள்ளிச்செடி, நான் அப்பட்டத்தைப் பிடிப்பதற்கேற்ப ஒரு சுருக்கை மறுபடியும் உண்டாக்கியது. என் இரண்டாவது வெற்றிப் பரிசையும் நான் உமாவிற்கு

அளித்தேன்.

"உண்மையாகவே தெய்வத்தாய் உனக்குச் செவிசாய்க்கிறாள்! இதெல்லாம் எனக்குப் புரியாத மர்மம்!" அக்கா திடீரென மிரண்ட மான்குட்டியைப் போன்று ஓடிவிட்டாள்



யோகானந்தர் (நிற்பவர்) உயர்நிலைப்பள்ளி இளைஞனாக, தன் மூத்த சகோதரர் அனந்தாவுடன்



யோகானந்தரின் மூத்த சகோதரி உமா, ஓர் இளம் பெண்ணாக, கோரக்பூர்



(வலது) எல்லாரிலும் மூத்த சகோதரி ரோமாவும் (இடது) இளைய சகோதரி நளினியும் யோகானந்தருடன், கல்கத்தா, 1935

1 ஆன்மீக ஆசான். குருவானவர் "இருளைப் போக்குபவர்" என குரு கீதை (செய்யுள் 17) பொருத்தமாக விளக்குகிறது. (கு-"இருள்" . ரு- "போக்கச் செய்வது.")

2 யோகத்தை பயில்பவர். யோகம்சேர்க்கை. இறைவனைத் தியானிப்பதற்கான பழமையான விஞ்ஞான முறை. (பார்க்க 26ஆம் அத்தியாயம்: கிரியா யோக விஞ்ஞானம்.)

3 நான் 1915ல் சன்னியாசம் பெற்றுப் புராதன "ஸ்வாமி" பிரிவைத் தழுவியபோது என் பெயர் யோகானந்தர் என மாற்றப்பட்டது. 1935ல் என் குரு பரமஹம்ஸர் என்ற மற்றுமொரு ஆன்மீகப் பட்டத்தை எனக்குச் சூட்டியருளினார். (பார்க்க: அத்தியாயங்கள் 24 மற்றும் 42.)

4 பெரிய மகான்களின் அற்புதத் திறன்களைப் பற்றி 30வது அத்தியாயம், "அதிசயங்களின் விதி" யில் விளக்கப்பட்டுள்ளது.

5 லாஹிரி மகாசயரால் கற்பிக்கப்பட்ட இந்த யோக சாதனையின் வழிமுறையினால் கொந்தளிக்கும் பொறிப் புலன்கள் அமைதியுற்று பிரபஞ்ச உணர்வு (cosmic consciousness) டன் ஒன்றிய, என்றும் பெருகும் இணைவை அடைய மனிதனுக்கு உதவுகிறது. (பார்க்க 26 வது அத்தியாயம்.)

6 பார்க்க: புகைப்படப் பிரிவு I பக்கம் 09. ஸ்ரீ ஸ்ரீ லாஹிரி மகாசயரின் ஓவியத்தையும் புகைப்படப் பிரிவு I-10ஆம் பக்கத்தில் காண்க. பரமஹம்ஸ யோகானந்தர் 1935-36ல் இந்தியாவில் இருந்தபொழுது ஒரு வங்காள ஓவியரிடம் மூலப் புகைப்படத்தைப் போன்ற இந்த ஓவியத்தைத் தீட்டுமாறு குறிப்பிட்டார். பின்னர் YSS/SRF வெளியீடுகளில் பயன்படுத்துவற்கான லாஹிரி மகாசயரின் முறையான படமாக அதை வழங்கினார். (இந்த ஓவியம் பரமஹம்ஸரின் மௌண்ட் வாஷிங்டனில் உள்ள அமரும் அறையில் மாட்டப்பட்டுள்ளது.)

7 சமஸ்கிருத மொழியில் அண்டப் பெருவெளிக்குத் தலைவன் என்ற முறையில் இறைவனுடைய ஒரு திருநாமம், ஈஸ்=ஆள்-ஆளுதல் என்னும் மூலத்திலிருந்து வந்தது. இந்து மறை நூல்களில் இறைவனுக்கு வெவ்வேறு தத்துவப் பொருள் கொண்ட 1000 திருநாமங்கள் உள்ளன. எவருடைய விருப்பதினால் எல்லா அண்ட கோசங்களும் அதனதன் சுழற்சி முறைப்படி உண்டாகி அழிகிறதோ அவரே ஈஸ்வரன்.

8 எதையும் உற்பத்தி செய்யக்கூடிய ஓம் என்ற சொல்லிலிருந்து ஒலியின் அபரிதமான சக்தி வெளிப்படுகிறது. அண்டகோசத்தின் அலைகளாகத் திரியும் இச்சக்திதான் எல்லா அணுக்களின் சக்தியாகவும் பரிணமிக்கிறது. எவ்வித வாக்கும் நன்கு அறிந்து ஆழ்ந்த உணர்வுடன் கூறப்படின் நடைமுறையில் பலிக்கத் தக்கதாகிறது. கூவேயிசம் (Coueism) மற்றும் அதையொத்த உளவியல் மருத்துவத்தின் பல பிரிவுகளில் மௌனமாகவோ அல்லது உரக்கவோ கூறப்பட்ட ஊக்குவிக்கும் சொற்கள் பலனைத் தருவதாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. அதன் ரகசியம், மனத்தின் எண்ண அலைகளின் வேகத்தைத் துரிதப்படுத்துவதிலுள்ளது.

9 காளி என்ற கடவுள் உருவம் அழிவில்லா இயற்கைத் தாயின் அடையாளமாகக் கொள்ளப்படுகிறது.

அத்தியாயம் 2

# என் அன்னையின் மறைவும் மாயத் தாயத்தும்

என் அண்ணனுக்குத் திருமணம் செய்து வைப்பதில் என் அன்னை அடங்கா ஆர்வம் கொண்டிருந்தார். "அனந்தாவின் மனைவி முகத்தை நான் கண்டு விட்டால் எனக்குப் பூலோக சுவர்க்கம் கிடைத்த மாதிரிதான். "குடும்பத்தின் வம்சவிருத்திக்காக, அவரது திடமான, பாரதப் பண்பாட்டு உணர்ச்சியினை இவ்வார்த்தைகளில் அன்னை வெளியிடுவதை நான் அடிக்கடி கேட்டிருக்கிறேன்.

அனந்தாவின் நிச்சயதார்த்தத்தின் பொழுது எனக்கு வயது கிட்டத்தட்ட பதினொன்று இருக்கலாம். அன்னை விவாக ஏற்பாடுகளை மகிழ்ச்சியுடன் மேற்பார்வையிட்டவாறு கல்கத்தாவில் இருந்தார். நானும் என் தந்தையும் மட்டும் வட இந்தியாவில் பரெய்லியில் எங்கள் வீட்டிலிருந்தோம். லாகூரில் இரண்டு வருடங்கள் வசித்த பிறகு என் தந்தைக்கு அங்கு மாற்றலாகியிருந்தது.

நான் முன்னமேயே என் இரு மூத்த சகோதரிகளான ரோமா, உமா ஆகியவர்களின் திருமண வைபவங்களைக் கண்டிருக்கிறேன். ஆனால் மூத்த மகனான அனந்தாவுக்கு விவாக ஏற்பாடுகள் உண்மையிலேயே மிக விரிவாக நடந்தன. தினந்தோறும் தொலைதூர

வீடுகளிலிருந்து கல்கத்தா வந்து சேரும் கணக்கற்ற உறவினர்களை அன்னை வரவேற்றுக் கொண்டிருந்தார். அவர்களை 50, ஆம்ஹெர்ஸ்ட் தெருவில் புதிதாக வாங்கி இருந்த பெரிய வீட்டில் சௌகரியமாகத் தங்கச் செய்தார். விருந்திற்கு வேண்டிய தின்பண்டங்கள், மணப்பெண் வீட்டிற்கு அனந்தாவை அழைத்துச் செல்வதற்கான ஆடம்பர ஆசனம், வண்ணத் தீப வரிசைகள், காகித அட்டைகளாலான பெரிய யானைகளும், ஒட்டகங்களும், ஆங்கில, ஸ்காட்ச் மற்றும் இந்திய வாத்திய இசைகள், வேடிக்கை காட்டுபவர்கள், புராதன விவாகச் சடங்குகளைச் செய்யப் புரோகிதர்கள்-எல்லாம் தயார்.

நானும் என் தந்தையும் சடங்கிற்குரிய நேரத்தில் குடும்பத்துடன் சேருவதற்கு உற்சாகத்துடன் ஆயத்தம் செய்து கொண்டிருந்தோம். ஆயினும் அந்த முக்கியமான நாளுக்கு முன் கெட்ட நிமித்தமான தோற்றம் ஒன்றைக் கண்டேன்.

பரெய்லியில் ஒரு நாள் நடுநிசி என் தந்தையின் அருகில் எங்கள் வீட்டு வெளிக்கூடத்தில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தபொழுது படுக்கையின்மேல் கொசுவலையின் விசித்திரமான படபடப்பால் நான் எழுப்பப் பட்டேன். அம்மெல்லிய திரைகள் அகன்றதும் என் அன்னையின் அன்பு உருவத்தைக் கண்டேன்.

"உன் தந்தையை எழுப்பு!" அவர் குரல் மெல்ல ஒலித்தது. "என்னைப் பார்க்க வேண்டுமெனில் இன்று காலை நான்கு மணிக்குப் புறப்படும் முதல் ரயிலைப் பிடியுங்கள்; கல்கத்தாவிற்கு உடனே வந்து சேருங்கள்!

"அந்த ஆவி உருவம் மறைந்தது.

"அப்பா, அப்பா! அம்மா இறந்து கொண்டிருக்கிறார்!" என் குரலிலிருந்த திகில் அவரை உடனே எழுப்பியது. நான் அந்த அவலச் செய்தியை விம்மியவாறே கூறி முடித்தேன்.

"உன் மனப் பிரமையைப் பற்றிக் கவலைப்படாதே." ஒரு புதிய சூழ்நிலைக்கு தந்தை வெளிப்படுத்தும் அவருக்கே உரிய மறுப்பை இப்பொழுதும் தெரிவித்தார். "உன் தாயார் நல்ல ஆரோக்கியத்துடனேயே இருக்கிறார். ஏதாவது கெட்ட செய்தி வந்தால் நாம் நாளை புறப்படுவோம்."

"இப்பொழுதே புறப்படாததற்கு நீங்கள் உங்களையே மன்னிக்கப் போவதில்லை." மிகுந்த வேதனை என்னை மேலும் கசப்புடன் பேச வைத்தது, "நானும் உங்களை என்றும் மன்னிக்க மாட்டேன்."

கவலை தோய்ந்த அந்தக் காலைப் பொழுது திட்ட வட்டமான சொற்களுடன் வந்தது. "அன்னையின் உடல்நிலை கவலைக்கிடம்; விவாகம் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது; உடனே வரவும்."

தந்தையும் நானும் கலக்கத்துடன் கிளம்பினோம். என் சித்தப்பா வழியில் வண்டி மாறும் இடத்தில் எங்களைச் சந்தித்தார். ஒரு ரயில்வண்டி எங்களை நோக்கிப் பேரிரைச்சலுடன் மிக வேகமாக அருகில் வருவது தெரிந்தது. என் உள் மனக் கொந்தளிப்பால் அந்த ரயில் பாதையில் குதித்து விடலாமா என ஒரு திடீர் எண்ணம் எழுந்தது. ஏற்கனவே அன்னையைப் பறி

கொடுத்து விட்டதாக நான் உணர்ந்ததால் திடீரென்று சூன்யமாகிவிட்ட உலகை பொறுத்துக்கொள்ள முடியாது என எனக்குத் தோன்றியது. இவ்வுலகிலேயே மிக சினேகமுடையவராக என் தாயை நான் நேசித்து வந்தேன். ஆறுதலான அவருடைய கரிய விழிகள்தாம் என் குழந்தைப் பருவத்தில் சிறு சிறு துன்பங்கள் ஏற்பட்ட போது எனக்கு அடைக்கலம் அளித்தவை.

"அவர் இன்னும் உயிருடன் இருக்கிறாரா?" என் சித்தப்பாவிடம் இந்தக் கடைசிக் கேள்விக்காக நான் நின்றேன்.

என் முகத்திலிருந்த நம்பிக்கை இழந்த நிலையைப் புரிந்து கொள்ள அவருக்கு வெகு நேரமாகவில்லை. "நிச்சயமாக உயிருடன் தான் இருக்கிறார்!" என்றார். ஆனால் நான் அவரைச் சிறிதும் நம்பவில்லை.

நாங்கள் கல்கத்தா வீட்டை அடைந்ததும் மரணமெனும் திடுக்கிடும் மர்மமே எதிர்ப்பட்டது. நான் அப்படியே உயிரற்றவன் போல் சரிந்தேன். என் இதயம் சமாதானமடைவதற்கு எவ்வளவோ ஆண்டுகளாயின. என் கதறல்கள் சுவர்க்கத்தின் கதவுகளைத் தாக்கிக் கடைசியில் தெய்வீக அன்னையை அழைத்து வந்துவிட்டன. அவளுடைய சொற்கள்தாம் புரையோடிக் கிடந்த என் மனப் புண்களை முழுவதுமாக ஆற்றின.

"உன்னை ஒவ்வொரு பிறப்பிலும் அனேகத் தாய்மார்களின் மென்மையான அன்பின் மூலம் பாதுகாத்து வந்தது நானே! நீ இழந்து தேடும் அந்த இரு அழகிய கருமையான விழிகளை என்னில் காண்பாய்!"

அன்புக்குரிய அன்னையின் தகனக் கிரியைகள் முடிந்த பிறகு நானும் என் தந்தையும் பரெய்லிக்குத் திரும்பினோம். ஒவ்வொரு நாளும் அதிகாலையில் எங்கள் பங்களாவின் முன்னிருந்த மென்மையான பசும்பொன் வண்ணப் புல்தரைக்கு நிழல் தந்து கொண்டிருந்த ஒரு பெரிய பவழ மல்லிகை (ஷிவோலி) மரத்தடிக்கு நான் சோக நினைவு யாத்திரை செல்வேன். மனத்தில் கவிதை உணர்வு ஊறும் பொழுது, அந்தப் புல்வெளிப் பீடத்தில் வெண்மையான ஷிவோலி மலர்கள் தாங்களாகவே பக்தியுடன் உதிர்வதாக நான் நினைத்தேன். காலைப் பனித்துளியில் என் கண்ணீர் கலக்கும்போது, வினோதமான வேற்றுலக ஒளி அங்கே வைகறைப் பொழுதில் வெளிப்படுவதை நான் அடிக்கடி கவனித்தேன். இறைவனுக்காகத் தீவிர ஏக்கம் என்னைப் பற்றியது. இமயத்திற்குப் பலமாக ஈர்க்கப்படுவதை நான் உணர்ந்தேன்.

என் ஒன்றுவிட்ட சகோதரர் ஒருவர் எங்களை பரெய்லியில் சந்தித்தார். அவர் அண்மையில்தான் அப்புனித மலைச்சிகரங்களுக்குச் சென்று திரும்பி இருந்தார். நான் ஆவலுடன் அம்மலைச் சிகரங்களில் வசிக்கும் யோகிகளைப் பற்றியும், ஸ்வாமி[1]களைப் பற்றியும் அவர் கூறுவதை எல்லாம் ஆவலுடன் கேட்டேன்.

"நாம் இமாலயத்திற்கு ஓடிவிடலாம்," என்று ஒரு நாள் பரெய்லியில் எங்கள் வீட்டு சொந்தக்காரரின் சிறிய மகனாகிய துவாரகா பிரசாதிடம் நான் கூறிய இந்த

யோசனைக்கு அவன் இணங்கவில்லை. அப்பொழுதுதான் தந்தையைக் காண வந்திருந்த என் தமையனிடம் அவன் இதை வெளிப்படுத்தி விட்டான். நடைமுறைக்கு ஒவ்வாத சிறுவனின் யோசனை என்று சிரிக்காமல், அனந்தா என்னை பரிகாசப் பொருளாக்குவதற்குக் கங்கணம் கட்டிக் கொண்டான்.

"எங்கே உன் காவியுடை? அது இல்லாமல் நீ சாமியாராக முடியாதே!"

ஆனால் அவனுடைய சொற்களால் நான் விவரித்துக் கூற முடியாத வகையில் மகிழ்ச்சியடைந்தேன். அவன் சொற்கள் நான் சன்னியாசி ஆகி, பாரதம் முழுவதும் சுற்றுவதைப் போன்றதொரு தெளிவான காட்சியை என் முன் கொண்டு வந்தன. ஒருகால் அவை என் முற்பிறப்பின் நினைவுகளை எழுப்பி இருக்கலாம். எப்படியாயினும் நெடுங்காலமாக வழக்கத்தில் இருந்துவரும் சன்னியாச ஆசிரமக் காவி உடைகளை மிக இயல்பான முறையில் அணிவேன் என்பதை நான் புரிந்து கொண்டேன்.

ஒரு நாள் காலை துவாரகாவுடன் அளவளாவிக் கொண்டிருந்தபொழுது என்னுள் எழுந்த இறையன்பு மடைதிறந்த வெள்ளம்போல் பெருகியது. என் பேச்சை அவன் ஓரளவே கவனித்தாலும், நான் முழு மனதுடன் என் ஒவ்வொரு சொல்லையும் கேட்டுக் கொண்டிருந்தேன்.

அன்று பிற்பகல் நான் இமயத்தின் அடிவாரத்திலிருக்கும் நைனிதாலை நோக்கி

ஓடிவிட்டேன். என்னை, அனந்தா தீர்மானமாகத் தொடர்ந்தான். நான் வருத்தத்துடன் பரெய்லி திரும்ப வேண்டியதாயிற்று. அதிகாலையில் நான் வழக்கமாகச் செல்லும் ஷிவோலி மரத்தடி யாத்திரை மட்டும்தான் எனக்கு அனுமதிக்கப்பட்டது. என் இதயம் நானிழந்த இரு தாய்களுக்காக அழுதது; ஒருவர் மனித உருவிலான அன்னை, இன்னொருவர் தெய்வீக அன்னை.

எங்கள் குடும்பப் பிணைப்பில் அன்னையின் மரணத்தால் ஏற்பட்ட இழப்பு ஈடு செய்ய முடியாததாகி விட்டது. தந்தை, எஞ்சிய அவர் வாழ்வின் நாற்பது வருடங்களில் மறுமணம் செய்து கொள்ளவேயில்லை. தன் குழந்தைகளுக்குத் தாயும் தந்தையுமாகச் செயல்பட வேண்டிய கடினமான பொறுப்பை ஏற்று எங்களுக்கு அவர் மிக்க அன்பானவராகவும் நெருக்கமானவராகவும் ஆனார். அமைதியுடனும் உள் நோக்குடனும் அவர் குடும்பச் சிக்கல்கள் பலவற்றைத் தீர்த்தார். அவரது அலுவலக நேரத்திற்குப் பின் ஒரு துறவியைப் போன்று அவர் தன் தனி அறைக்குள் சென்று இனிய அமைதியுடன் கிரியா யோக சாதனையில் ஈடுபட்டார். தாய் மறைந்த வெகு காலத்திற்குப் பின், என் தந்தையின் வாழ்க்கை முறையைக் கொஞ்சம் சுலபமாக்க ஓர் ஆங்கிலத் தாதியை வேலைக்கமர்த்த முயன்றேன். ஆனால் தந்தையார் சம்மதிக்கவில்லை.

"எனக்குப்பணிவிடை செய்வது உன் அன்னையுடன் முடிந்து விட்டது." வாழ்நாள் முழுதும் நிலைத்திருக்கும் அன்புடன் அவரது கண்கள் எங்கோ நோக்கிய

வண்ணமிருந்தன. "இன்னொரு பெண்ணிடமிருந்து வரும் பணிவிடைகளை என்னால் ஏற்க முடியாது."

அன்னையின் மறைவிற்குப் பதினான்கு மாதங்களுக்குப்பின், எனக்கு என் அன்னை மிக முக்கியமான செய்தி ஒன்றை விட்டுச் சென்றிருப்பதை அறிந்தேன். அவரது மரணப் படுக்கையின் அருகில் அனந்தா இருந்து அச்செய்தியைக் குறித்துக் கொண்டான். ஒரு வருடத்தில் அச்செய்தியை என்னிடம் வெளியிடும்படி என் தாய் கூறியிருந்தும் என் அண்ணன் காலங்கடத்தி விட்டான். என் தாய் அவனுக்காக பார்த்து வைத்திருந்த பெண்ணை மணம் செய்து கொள்ள, சீக்கிரமே அவன் பரெய்லியை விட்டு கல்கத்தாவிற்குப் புறப்படுவதாயிருந்தது. ஒரு நாள் மாலை அவன் என்னைத் தன்னருகில் அழைத்தான்.

"முகுந்தா, உன்னிடம் சில விசித்திரமான செய்திகளைக் கூற நான் தயங்கிக் கொண்டிருந்தேன்." அனந்தாவின் குரலில் ஆற்றாமைத் தொனி ஒலித்தது. "வீட்டைத் துறக்கும் உன் ஆவலை எங்கு நான் அதிகரிக்கச் செய்து விடுவேனோ என்று பயந்தேன். எப்படியும், நீ இறை ஆர்வத்தில் துடித்துக் கொண்டு இருக்கிறாய். சமீபத்தில் நீ இமயத்திற்குப்போகும் வழியில் உன்னை நான் பிடித்தபொழுது நான் ஒரு தீர்மானமான முடிவிற்கு வந்து விட்டேன். என் புனிதமான வாக்குறுதியை நிறைவேற்றுவதை நான் இனியும் தள்ளிப் போடக்கூடாது," எனக்கூறி என் அண்ணன் என்னிடம் ஒரு சிறு பேழையைக் கொடுத்து

அன்னை சொல்லிச் சென்ற பின்வரும் செய்தியைக் கூறினான்.

"என் அன்பார்ந்த மகனே, முகுந்தா, இந்தச் சொற்கள் என் கடைசி ஆசிகளாயிருக்கட்டும்! உன் பிறப்பை அடுத்து நிகழ்ந்த அனேக அற்புத சம்பவங்களைக் கூறவேண்டிய தருணம் வந்து விட்டது. நீ கைக்குழந்தையாக இருந்த பொழுதே உனக்கு விதித்திருந்த பாதையை நான் அறிந்து விட்டேன். அப்பொழுது உன்னைக் காசியில் வசித்த என் குருவிடம் கொண்டு சென்றேன். ஆழ்ந்த தியானத்தில் இருந்து, சீடர்களின் கூட்டத்தில் கிட்டத்தட்ட மறைந்தே விட்டிருந்த லாஹிரி மகாசயரை நான் சரியாகப் பார்க்கக்கூட முடியவில்லை.

"நான் உன்னைத் தட்டிக் கொடுத்தபடி, அந்த மகா குருவின் பார்வை உன் மீது விழுந்து உனக்கு ஆசியளிக்கப் பிரார்த்திக்கலா னேன். என் மௌனமான பக்தி நிரம்பிய கோரிக்கை தீவிரமான தருணத்தில், அவர் தம் கண்களைத் திறந்து என்னைத் தன் அருகில் வரும்படி சைகை செய்தார். மற்றவர்கள் எனக்கு வழிவிட்டார்கள். நான் அந்த புனிதத் திருவடிகளைப் பணிந்தேன். லாஹிரி மகாசயர் உன்னைத் தன் மடியில் இருத்திக் கொண்டு ஞானோபதேசம் செய்யும் வகையில் தன் கையை உன் நெற்றியின் மீது வைத்தார்.

"'இளந்தாயே, உன் மகன் ஒரு யோகியாவான். ஆன்மீக ஆற்றலால் அவன் அனேக ஆன்மாக்களை இறைவனின் சாம்ராஜ்யத்திற்குக் கொண்டு செல்வான்.'

"எல்லாமறிந்த குரு என் ரகசியப் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்ததைக் கண்டு என் இதயம் ஆனந்தத்தில் துள்ளியது. நீ பிறப்பதற்குச் சிறிது காலம் முன்பே அவருடைய வழியை நீ பின்பற்றுவாயென்று அவர் எனக்கு கூறி இருந்தார்.

"பிறகு, என் மகனே, அடுத்த அறையிலிருந்து நானும் உன் அக்கா ரோமாவும் நீ படுக்கையில் அசையாமலமர்ந்து 'இறைப் பேரொளி'யைத் தரிசித்ததைக் கண்டோம். உன் சிறு வதனம் ஒளிமயமாயிருந்தது; நீ இறைவனைத் தேடி இமயத்திற்குச் செல்வதாகக் கூறிய பொழுது உன் குரலில் இரும்பையொத்த உறுதியான தீர்மானம் ஒலித்தது.

"அன்பார்ந்த மகனே, இம்மாதிரியான நிமித்தங்களால் உன் பாதை உலக ஆசைகளிலிருந்து வெகு தூரம் விலகியே உள்ளது என்பதை அறிந்து கொண்டேன். என் வாழ்க்கையில் நடந்த குறிப்பிடத்தக்க ஒரு சம்பவம் எனக்கு இன்னும் உறுதி அளித்தது; இந்த மரணப்படுக்கைச் செய்தியை அளிக்கும்படி என்னைத் தூண்டியது.

"அச்சம்பவம் பஞ்சாபில் ஒரு மகானுடன் நிகழ்ந்த சந்திப்பு. நம் குடும்பம் லாகூரில் வசித்து வந்தபொழுது ஒரு நாள் காலை வேலைக்காரன் என் அறைக்கு வந்தான். 'அம்மா, ஒரு முன்பின் தெரியாத சாது[2] வந்திருக்கிறார். அவர் "முகுந்தனின் அன்னையைக் காண வேண்டும் "என்று வற்புறுத்துகிறார்,' என்றான்.

"இவ்வெளிய சொற்கள் என் ஆழ்மனத் தந்திகளைத் தொட்டன. நான் உடனே அந்த விருந்தாளியை வரவேற்கச் சென்றேன். அவர் அடிகளைப் பணியும் பொழுது என்முன் நிற்பவர் ஒரு மெய்யான தெய்வமனிதர் என்பதை உணர்ந்தேன்.

"'தாயே, பெரும் ஞானிகள் உன் பூலோக வாழ்க்கை முடிய இன்னும் அதிக காலமில்லை என்பதைத் தெரியப்படுத்த விரும்புகி றார்கள். தாங்கள் அடுத்த தடவை நோயுறும் போது, அதுவே உங்கள் ஆயுள் முடிவைக் குறிக்கும்[3].' அவருடைய சொற்களுக்குப் பிறகு அங்கு ஒரு மௌனம் நிலவியது. அப்போது எனக்கு எந்தவித அச்சமும் உண்டாகவில்லை. மாறாகப் பேரமைதியின் அதிர்வை உணர்ந்தேன். கடைசியில் அவர் மறுபடியும் என்னிடம் கூறினார்.

"'ஒரு வெள்ளித் தாயத்தைக் காப்பாற்றும் பொறுப்பை நீ ஏற்க வேண்டும். நான் அதை இன்று உன்னிடம் தருவதாக இல்லை. நான் கூறும் சொற்களில் உள்ள உண்மையை நிரூபிக்க நாளை நீ தியானம் செய்யும்போது அத்தாயத்து தானாக உன் கைக்குள் வந்து சேரும். உன் மரணப்படுக்கையில் நீ உன் மூத்த மகன் அனந்தாவிடம், அவன் ஒரு வருடம் அத்தாயத்தை வைத்திருந்த பின்னர், உன் இரண்டாவது மகனிடம் அதைக் கொடுக்கும்படி தெரிவிக்க வேண்டும். முகுந்தன் பெரிய ஞானிகளிடமிருந்து அந்தத் தாயத்தின் பொருளை அறிவான். அவன் உலக ஆசைகளை முற்றும் துறந்து கடவுளை நோக்கித் தீவிர நாட்டத்துடன் செல்லத்

தயாராகும் தருணத்தில் அது அவன் கையில் கிடைக்க வேண்டும். சில வருடங்கள் அவன் அந்த தாயத்தை வைத்திருந்து அதனுடைய பலன் அவனுக்குக் கிட்டியதும் அது மறைந்து விடும். எவ்வளவு ரகசியமான இடத்தில் வைக்கப்பட்டிருந்தாலும் அது எங்கிருந்து வந்ததோ அங்கு திரும்பிவிடும்.'

"நான் அவருக்கு காணிக்கை[4] அளித்து மிக்க மரியாதையுடன் அவரை வணங்கினேன். அவர் நான் அளித்தவைகளைப் பெற்றுக் கொள்ளாமல் ஆசி கூறிப் புறப்பட்டு விட்டார். மறுநாள் மாலை நான் கூப்பிய கரங்களுடன் தியானத்தில் அமர்ந்திருந்த பொழுது அந்தச் சாது வாக்களித்தது போலவே ஒரு வெள்ளித் தாயத்து என் உள்ளங்கைகளுக்கிடையில் தோன்றியது. அது என் கையுள் வந்துள்ளது என்பதை அதனால் ஏற்பட்ட மிருதுவான குளிர்ந்த உணர்ச்சியினால் தெரிந்து கொண்டேன். நான் அதை இரண்டு வருடங்களுக்கு மேலாக விழிப்புடன் காத்து வந்து இப்பொழுது அதை அனந்தாவின் பாதுகாப்பில் விட்டுச் செல்கிறேன். எனக்காக வருந்தாதே. ஏனெனில் நான் பரம்பொருளினிடம் என் குருதேவரால் அழைத்துச் செல்லப்பட்டிருப்பேன். குழந்தாய், நான் விடை பெறுகிறேன்; அன்னை பராசக்தி உன்னைக் காப்பாள்."

அந்தத் தாயத்து கிடைத்ததும் ஒரு ஞானப் பேரொளி என்னைப் பற்றியது; உறங்கிக் கிடந்த பல நினைவுகள் எழுச்சி பெற்றன. அத்தாயத்து ஒரு புராதன விந்தைப்பொருள்; வட்ட வடிவில் சமஸ்கிருத

எழுத்துக்களால் நிரம்பி இருந்தது. மறைமுகமாக என்னை வழி நடத்தி வந்த முற்பிறவிகளின் ஆசான்களிடமிருந்து அது வந்திருக்க வேண்டுமென நான் அறிந்தேன். அதில் இன்னொரு விசேஷமும் இருக்கவே செய்தது; ஆனால் ஒரு தாயத்தின் மகிமையை ஒருவர் முழுவதும் விண்டுரைக்க முடியாது.

அந்தத் தாயத்து என் வாழ்க்கையில் மிகவும் துன்பமான சூழ்நிலைகளில் எப்படி மாயமாக மறைந்தது என்பதையும் எப்படி அதன் இழப்பு என் குருவை நான் அடைவதற்கு வழிகாட்டியாக இருந்தது என்பதையும் இந்த அத்தியாயத்தில் சொல்வதற்கில்லை.

ஆனால், இமயத்தை அடைய வேண்டுமென்ற தன் முயற்சிகள் தடைப்பட்ட அந்தச் சிறுவன், நாள்தோறும் அவனுடைய தாயத்தின்[5] சிறகுகளில் வெகுதூரம் பிரயாணம் செய்த வண்ணம் இருந்தான்.

---

1 சமஸ்கிருத மொழி அடிச் சொல்லின்படி ஸ்வாமி என்பதன் பொருள், "தன் ஆத்மாவுடன் ஒன்றியிருப்பவர்," என்பதாம். (ஸ்வா.) (பார்க்க: அத்தியாயம் 24.)

2 ஒரு துறவி: சாதனை மார்க்கத்தில் செல்லுபவர் அல்லது ஆன்மீக நெறியைப் பின்பற்றுபவர்.

3 இச்சொற்களால் அன்னை தன் குறைந்த ஆயுளைப் பற்றி ரகசியமாக அறிந்திருந்தார் என நான் தெரிந்து கொண்டதும் அனந்தாவின் விவாக ஏற்பாடுகளில் அவர் ஏன் அவ்வளவு அவசரப்பட்டார் என்பதை முதல் தடவையாக உணர்ந்தேன். திருமணத்திற்கு முன்பே அவர் இறந்து விட்டாலும் திருமணச் சடங்குகளைக் காணவேண்டுமென்ற ஒரு தாய்க்கே உரிய ஆசை அவருக்கு இருந்திருக்கிறது.

4 சாதுக்களுக்குக் கொடுக்கப்படும் வழக்கமான மரியாதைகள்.

5 தாயத்து என்பது சூட்சும உலகில் படைக்கப்படும் பொருள்; நிலையற்ற அதுபோன்ற பொருட்கள் முடிவில் நம் உலகிலிருந்து மறைந்தே ஆக வேண்டும். (பார்க்க அத்தியாயம்: 43.)

ஒரு மந்திரம் அல்லது புனித உச்சரிப்புச் சொற்கள் தாயத்தில் பொறிக்கப்பட்டிருந்தன. ஒலி மற்றும் மனிதக் குரலிலிருந்து எழும் வாக்கின் சக்திகளைப் பற்றி இந்தியாவைப் போல் ஆழ்ந்த முறையில் வேறு எங்குமே ஆராயப்படவில்லை. பிரபஞ்சம் முழுவதும் எதிரொலிக்கும் "ஓம்" என்ற

நாதம் (பைபிளில் கூறப்படும் "சொல்" அல்லது "பல நீர்ப்பரப்புகளின் குரல்") மூன்று விதமாக அல்லது முக்குணங்களாக படைத்தல், காத்தல், அழித்தல் மூலமாக வெளிப்படுகிறது. (தைத்திரீய உபநிஷத்து 1:8). ஒரு மனிதன் ஒரு சொல்லை உச்சரிக்கும் ஒவ்வொரு தடவையும் ஓங்காரத்தின் முக்குணங்களில் ஒன்றைச் செயல்படுத்துகிறான். அதனால்தான் எல்லா சாத்திரங்களிலும் உண்மையே பேச வேண்டுமென்று கட்டளையிடப்பட்டிருக்கிறது.

தாயத்தில் உள்ள சமஸ்கிருத மந்திரம் சரியாக உச்சரிக்கப்பட்டால் அது மிகுந்த நன்மையளிக்கும் ஆன்மீக அதிர்வலைச் சக்தியை உண்டாக்கவல்லது. சமஸ்கிருதம் மிகச் சிறப்பாக உருவாக்கப்பட்ட ஐம்பது எழுத்துகளைக் கொண்டது. ஒவ்வொன்றும் தனித்தனியான மாறாத உச்சரிப்பைக் கொண்டது. லத்தீன் மொழியின் அடிப்படையில் இருபத்தியாறு எழுத்துக்களை மட்டுமே கொண்டு, உச்சரிப்பின் திண்டாட்டத்தை விளைவிக்கும் ஆங்கில மொழிக்கு ஒலிக்சுமையைத் தாங்க இயலாதது பற்றி ஜார்ஜ் பெர் னார்டு ஷா, அறிவுபூர்வமான, நகைச்சுவை நிறைந்த ஒரு கட்டுரையை எழுதி இருக்கிறார்.அவருக்கே உரித்தான கடுமையுடன் ("ஆங்கில மொழிக்கு ஒரு புது எழுத்துத் தொகுதியை அறிமுகப்படுத்தும்படி வேண்டி ஓர் உள்நாட்டுக் கலகம் ஏற்பட்டாலும்... நான் அதற்குக் கவலை படமாட்டேன்"). திரு ஷா, நாற்பத்தி இரண்டு எழுத்துக்களைக் கொண்ட ஒரு புது எழுத்துத் தொகுதியை மேற்கொள்ளும்படி, வலியுறுத்துகிறார். (வில்ஸன் எழுதிய மொழிப் பிறப்பின் அற்புதம்பட்ங் The Miraculous Birth of Language, Philosophical Library, New York என்ற புத்தகத்தில் அவரது முன்னுரையைப் பார்க்கவும்). இந்தப் புது எழுத்துத் தொகுதி சமஸ்கிருதத்தின் உச்சரிப்பு முழுமையை கிட்டத்தட்ட பெற்றிருக்கும். ஐம்பது எழுத்துக்களாலான சமஸ்கிருதம் தவறான உச்சரிப்பைத் தடுக்கிறது.

சிந்துநதிப் பள்ளத்தாக்கில் கண்டெடுக்கப்பட்ட பல முத்திரைகள், பாரதம் சமஸ்கிருத எழுத்துக்களை ஸெமெடிக் மக்களிடமிருந்து கடன் வாங்கிக் கொண்டதாகக் கூறுவதை நிராகரிக்க அறிஞர்களுக்கு உதவியுள்ளன. மொஹஞ்சதாரோ, ஹராப்பா என்னுமிடங்களில் சமீபத்தில் தோண்டி எடுக்கப்பட்ட சில பெரிய இந்து நகரங்கள் "நம்மை நினைவிற்கெட்டா தொல்காலத்திற்கு அழைத்துச் சென்று, இந்திய மண்ணில் சிறந்த பண்பாட்டிற்கு ஒரு பழமையான வரலாறு உண்டு என்பதை நிரூபித்துள்ளன." (ஸர் ஜான் மார்ஷல், மொஹஞ்சதாரோ மற்றும் சிந்து நாகரிகம், 1931).

இவ்வுலகில் நாகரிகமடைந்திருந்த மனிதனின் மிகத் தொன்மையான, பழமை பற்றிய இந்து மதக் கருத்து சரியென்றால், உலகத்தின் மிகமிகப் பழமையான மொழியாகிய சமஸ்கிருதம் கூட ஏன் மிகச் செம்மையாக இருக்கிறது என்பதை விளக்க முடியும். (பார்க்க பக்கம் 125 அடிக்குறிப்பு.) ஏஷியாடிக் சொஸைடியின் நிறுவனரான ஸர் வில்லியம் ஜோன்ஸ், "சமஸ்கிருத மொழியின் பழமை எப்படி இருந்தாலும் அதனுடைய அமைப்பு அற்புதமானது. கிரேக்க மொழியைவிட முழுமையாகவும், லத்தீன் மொழியைவிட விரிவானதாகவும், இரண்டையும் விட மிகப் பண்பட்டதாகவும் அமைந்துள்ளது," எனக் கூறுகிறார்.

"இலக்கிய மறுமலர்ச்சி தொடங்கியதிலிருந்து பண்பாட்டின் வரலாற்றில், மேல்நாட்டு அறிஞர்கள் சமஸ்கிருதத்தைக் கண்டறிந்தது போன்ற ஒரு முக்கியமான நிகழ்ச்சி (பதினெட்டாவது நூற்றாண்டின் இறுதிப் பகுதியில்) வேறு எதுவுமில்லை," என்று என்ஸைக்ளோபீடியா அமெரிக்கானா கூறுகிறது. மொழி விஞ்ஞானம், இலக்கண ஒப்பீடு, புராணங்களின் ஒப்பீடு, சமய விஞ்ஞானம் ஆகியவை இருப்பதே

சமஸ்கிருத மொழி கண்டு பிடிக்கப்பட்டதால்தான் அல்லது இவையெல்லாம் சமஸ்கிருத கல்வியினால் ஏற்பட்ட ஆழ்ந்த விளை பயனே.

## அத்தியாயம் 3

# ஈருடல் கொண்ட மகான்

"அப்பா, யாருடைய கட்டாயமுமின்றி தானாகவே வீட்டிற்குத் திரும்பி விடுவேன் என்று உறுதி கூறினால், நான் வாரணாசியைச் சுற்றிப் பார்த்து வரலாமா?"

பயணத்தில் எனக்கிருந்த ஆர்வத்தை என் தந்தை என்றுமே தடை செய்ததில்லை. நான் வெறும் சிறுவனாக இருந்தபொழுதே அவர் என்னைப் பல நகரங்களுக்கும் யாத்திரைத் தலங்களுக்கும் செல்ல அனுமதி அளித்திருந்தார். யாராவது ஒரு நண்பனோ அல்லது பல நண்பர்களோ என்னுடன் வருவது வழக்கம். என் தந்தையால் வழங்கப்பட்ட முதல் வகுப்பின் இலவசப் பயணச்சீட்டுகளுடன் நாங்கள் வசதியாகப் பிரயாணம் செய்வோம். அவர் ரயில்வேயில் ஓர் அதிகாரியின் பதவியில் இருந்தது, குடும்பத்தில் ஊர் சுற்றும் விருப்பம் உள்ளவர்களுக்கு முழுவதும் திருப்திகரமாக இருந்தது.

என் தந்தை என் கோரிக்கையைப் பற்றி யோசிப்பதாகக் கூறினார். மறுநாள் அவர் என்னை அழைத்து பரெய்லியில் இருந்து காசிக்குச் சென்று திரும்புவதற்கான இலவசப் பயணச்சீட்டும், போதுமான பணமும், இரு கடிதங்களும் கொடுத்தார்.

"காசியில் உள்ள என் நண்பர் கேதார்நாத் பாபுவிடம் தொழில் சம்பந்தப்பட்ட திட்டம் ஒன்றைப் பற்றிச்

சொல்ல விரும்புகிறேன். துரதிருஷ்டவசமாக அவரது முகவரியை நான் தொலைத்து விட்டேன். ஆனால் எங்களிருவருக்கும் பழக்கமான நண்பர் ஸ்வாமி பிரணவானந்தர் மூலம் நீ இந்தக் கடிதத்தை அவரிடம் சேர்ப்பித்து விட முடியும் என்று நம்புகிறேன். அந்த ஸ்வாமி என் சகோதர சீடர்; மிக உயர்ந்த ஆன்மீக நிலையை அடைந்தவர், அவருடைய சந்திப்பு உனக்குப் பயனளிக்கும். இந்த இரண்டாவது கடிதம் உன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளப் பயன்படும்."

அவர் மேலும் கண்களைச் சிமிட்டியவாறு தொடர்ந்தார். "கவனத்தில் வை, இனி வீட்டை விட்டு ஓடும் வேலையே வேண்டாம்!"

நான் என் பன்னிரண்டு வயதிற்கே உரித்தான ஆர்வத்துடன் புறப்பட்டேன். (எனினும் புதிய காட்சிகளைக் காண்பதிலும் புதுமுகங்களைச் சந்திப்பதிலும் எனக்கிருக்கும் மகிழ்ச்சியைக் காலம் ஒரு போதும் குறைத்து விடவில்லை). வாரணாசியை அடைந்ததுமே நான் அந்த ஸ்வாமியின் இல்லத்தை நாடிச் சென்றேன். முன் வாசற் கதவு திறந்திருந்தது. நான் இரண்டாவது தளத்திலுள்ள நீண்ட தாழ்வாரத்தைப் போன்ற அறையை நோக்கிச் சென்றேன். சிறிது உயரமான ஒரு மேடையில், சற்றுப் பருமனான ஒரு மனிதர் கோவணம் மட்டுமே அணிந்து பத்மாசனத்தில் அமர்ந்திருந்தார். அவரது தலையும், சுருக்கம் எதுவுமில்லாத முகமும் சுத்தமாக மழிக்கப்பட்டிருந்தன. அவரது உதடுகளில் ஒரு தெய்வீகப் புன்னகை தவழ்ந்து

கொண்டிருந்தது. நான் அவருக்கு இடைஞ்சலாக நுழைந்து விட்டேனோ என்ற என் தயக்கத்தைப் போக்கும் வகையில் ஒரு பழைய நண்பரைப் போன்று அவர் என்னை வரவேற்றார்.

"பாபா ஆனந்த்" (என் அன்பருக்கு ஆனந்தம் உண்டாகட்டும்). குழந்தை போன்ற குரலில் அவரது வரவேற்பு மனப்பூர்வமாக இருந்தது. நான் முழந்தாளிட்டு அவரது பாதங்களைத் தொட்டு வணங்கினேன்.

"தாங்கள் தான் ஸ்வாமி பிரணவானந்தர் அவர்களா?"

அவர் தலையை அசைத்தார். "நீதான் பகவதியின் மகனா?" நான் என் சட்டைப்பையிலிருந்து என் தந்தையின் கடிதத்தை எடுக்கும் முன்னரே அவரது சொற்கள் வெளிப்பட்டன. நான் ஆச்சரியத்துடன் அறிமுகக் கடிதத்தை அவரிடம் நீட்டினேன். கடிதம் இப்போது தேவை அற்றதாகி விட்டது.

"நான் கேதார்நாத் பாபுவை உனக்கு அவசியம் கண்டுபிடித்துத் தருகிறேன்." அந்த மகான் அவரது ஞானதிருஷ்டியால் என்னை மறுபடியும் ஆச்சரியத்தில் ஆழ்த்தினார். அவர் அக்கடிதத்தை மேற்போக்காகப் பார்த்து விட்டு, என் தந்தையைப் பற்றி சில அன்பான சொற்களைக் கூறினார்.

"உனக்குத் தெரியுமா? நான் இருவிதமான ஓய்வூதியங்களை அனுபவித்து வருகிறேன். நான் ரயில்வேயில் ஒரு காலத்தில் உன் தந்தையிடத்தில் வேலை பார்த்து வந்தேன்; அதற்காக அவரது சிபாரிசினால் கிடைக்கும் ஓய்வூதியம் ஒன்று;

இன்னொன்று என் விண்ணுலகத் தந்தையின் சிபாரிசினால் கிடைப்பது. அவருக்காக வாழ்வில் என் உலகக் கடமைகளை மனப் பூர்வமாகச் செய்து முடித்து விட்டேன்."

இந்தக் குறிப்பு எனக்குச் சற்றும் விளங்கவில்லை. "விண்ணுலகத் தந்தையிடமிருந்து தங்களுக்கு எந்த விதமான ஓய்வூதியம் கிடைக்கிறது, ஐயா? அவர் உங்கள் மடியில் பணத்தைப் போடுகிறாரா?"

அவர் சிரித்தார். "நான் குறிப்பிடுவது ஆழங்காண முடியாத பேரமைதி என்கின்ற ஓய்வூதியமாகும். அது பல ஆண்டுகள் செய்த ஆழ்ந்த தியானத்தின் பரிசு. இப்பொழுதெல்லாம் நான் பணத்திற்கு ஆசைப்படுவதில்லை. சிறிதேயான என் உலகத் தேவைகள் தாராளமாகவே பூர்த்தி செய்யப்படுகின்றன. இரண்டாவது ஓய்வூதியத்தின் முக்கியத்துவத்தை நீ பிறகு புரிந்து கொள்வாய்."

எங்கள் உரையாடலைத் திடீரென்று நிறுத்திவிட்டு அந்த யோகி ஆழ்ந்த அசைவற்ற நிலை எய்தினார். ஒரு மர்மம் அவரைச் சூழ்ந்துக் கொண்டது. முதலில் ஏதோ ஆர்வமானதொன்றைக் காண்பது போல் அவரது கண்கள் பளிச்சிட்டன, பிறகு அவை மந்தமாயின. அவர் திடீரென்று பேசாமலிருந்ததைக் கண்ட நான், குழம்பினேன். தந்தையின் நண்பரை எப்படிச் சந்திப்பதென்று அவர் இதுவரை எனக்கு கூறவில்லை. சிறிது அமைதி இழந்த நான், எங்கள் இருவரைத் தவிர வேறு யாருமே இல்லாத அந்த காலி அறையைச் சுற்றி

நோட்டம் விட்டேன். அவர் அமர்ந்திருந்த மேடையின் கீழே கிடந்த மரப் பாதக்குறடுகள் என் வெற்றுப் பார்வையில் பட்டன.

"சின்ன ஐயா,[1] கவலைப்பட வேண்டாம். நீ பார்க்க விரும்பும் மனிதர் இன்னும் அரைமணி நேரத்திற்குள் உன்னுடன் இருப்பார்." அந்த யோகி என் மனத்தை படித்து விட்டார்-அந்த வித்தை அச்சமயத்தில் கடினமானதே இல்லை.

அவர் மறுபடியும் புரிபடாத அமைதியில் மூழ்கி விட்டார். முப்பது நிமிடங்கள் கழிந்து விட்டதை என் கைக்கடிகாரம் எனக்கு காட்டிய பொழுது ஸ்வாமிகள் விழித்துக் கொண்டார்.

அவர், "கேதார் நாத் பாபு வாசலில் வந்து கொண்டிருக் கிறாரென நினைக்கிறேன்," என்றார். யாரோ ஒருவர் மாடியில் ஏறிவரும் ஓசையை நான் கேட்டேன். திடீரென்று எதுவுமே புரியாததொரு குழப்பம் என்னுள் எழுந்தது. என் எண்ணங்கள் தாறுமாறாக ஓடின. "செய்தி அனுப்புவதற்கு யாரும் இல்லாமல் எப்படி இந்த இடத்திற்கு தந்தையின் நண்பரை வரவழைப்பது சாத்தியமாயிற்று? நான் வந்ததிலிருந்து ஸ்வாமி என்னைத் தவிர வேறு யாரிடமும் பேசவேயில்லையே."

நான் மரியாதையின்றி அறையைவிட்டு வெளியேறி படிகளில் இறங்கினேன். பாதி வழியில் ஒல்லியான நடுத்தர உயரமும் சிவந்த நிறமும் கொண்ட ஒரு மனிதரை நான் சந்தித்தேன். அவர் மிகுந்த அவசரத்துடன் காணப்பட்டார்.

"தாங்கள்தான் கேதார் நாத் பாபுவா?" என் குரலில் பரபரப்புத் தெரிந்தது.

"ஆம். என்னைச் சந்திக்க வேண்டி இங்கு காத்திருக்கும் நீ, பகவதியின் மகன் அல்லவா?" அவர் நட்புடன் புன்னகைத்தார்.

"ஐயா, தாங்கள் இங்கு எப்படி வந்தீர்கள்?" விளக்க முடியாத அவரது வருகையால் திகைப்புடன் சிறிது பதற்றம் அடைந்தேன்.

"இன்று எல்லாமே மர்மமாகத்தான் இருக்கிறது. கிட்டத்தட்ட ஒரு மணி நேரத்திற்கு முன்னால் நான் கங்கையில் நீராடலை முடித்ததும் ஸ்வாமி பிரணவானந்தர் என்னை அணுகினார். அந்த நேரத்தில் நான் அங்கு இருப்பது அவருக்கு எப்படித் தெரியும் என்று எனக்குப் புரியவில்லை.

"'பகவதியின் மகன் என் அறையில் உனக்காகக் காத்திருக் கிறான். என்னுடன் வருகிறாயா?' என்றார். நான் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டேன். நாங்கள் கைகோர்த்துச் சென்ற பொழுது மரப் பாதக்குறடுகளை அணிந்திருந்த ஸ்வாமி, இத்திடமான காலணிகளை அணிந்திருந்த என்னை வினோதமாகக் கடந்து செல்ல முடிந்தது.

"'என்னிடத்தை அடைய உனக்கு எவ்வளவு நேரமாகும்?' என்ற வினாவைக் கேட்க பிரணவானந்தர் நின்றார்.

"'சுமார் அரைமணி நேரம்.'

"'எனக்கு இப்பொழுது கொஞ்சம் வேறு வேலை

இருக்கிறது. 'புரிந்து கொள்ள முடியாததொரு பார்வையை அவர் என் மீது வீசி னார். 'நான் உன்னை விட்டுச் செல்ல வேண்டும். நீ என்னை என் வீட்டில் வந்து சந்திக்கலாம். அங்கு நானும் பகவதியின் மகனும் உனக்காகக் காத்திருப்போம்.'"

"நான் அதை மறுத்துக் கூறும் முன்பே அவர் என்னைத் தாண்டி வேகமாக நடந்து கும்பலில் மறைந்து விட்டார். என்னால் முடிந்த அளவு வேகமாக நடந்து நான் இங்கு வந்தேன்."

இந்த விளக்கம் என் குழப்பத்தை மேலும் அதிகரிக்கவே செய்தது. அவருக்கு ஸ்வாமியை எவ்வளவு காலமாக தெரியும் என நான் விசாரித்தேன்.

"சென்ற ஆண்டு நாங்கள் சில தடவைகள் சந்தித்தோம். ஆனால் சமீபத்தில் இல்லை. இன்று நீராடுந்துறையில் அவரைக் கண்டதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி."

"என் காதுகளை என்னால் நம்ப முடியவில்லை! என் சித்தம் கலங்கி விட்டதா? நீங்கள் அவரை ஆவித் தோற்றத்தில் கண்டீர்களா அல்லது உண்மையாகவே அவரைக் கண்டீர்களா? அவரது கையைத் தொட்டீர்களா? அவரது காலடி ஓசையைக் கேட்டீர்களா?"

"நீ என்ன சொல்ல விரும்புகிறாயென்று எனக்கு புரியவில்லை! என்று அவர் கோபத்துடன் படபடத்தார். "நான் உன்னிடம் பொய் சொல்லவில்லை, நீ இங்கு எனக்காகக் காத்திருக்கிறாயென்று ஸ்வாமி மூலமாகத்தான் எனக்குத் தெரிந்திருக்க முடியும் என்பது

உனக்குப் புரியவில்லையா?"

"ஏன், அந்த மனிதர் ஸ்வாமி பிரணவானந்தர் நான் வந்ததிலிருந்து ஒரு மணி நேரமாக, ஒரு வினாடி கூட என் பார்வையை விட்டு அகலவேயில்லை." என்ற நான், அங்கு வந்ததிலிருந்து எனக்கும் ஸ்வாமிக்கும் நடந்த உரையாடலை திரும்பக் கூறி முழுக்கதையையும் அவரிடம் உளறிக் கொட்டினேன்.

அவர் கண்கள் அகல விரிந்தன. "நாம் இந்த லோகாயத யுகத்தில்தான் வாழ்கிறோமா அல்லது கனவு காண்கிறோமா? என் வாழ்வில் இம்மாதிரியான அற்புதத்தைக் காண்பேன் என்று நான் ஒரு போதும் எதிர்ப்பார்க்கவில்லை! நான் இந்த ஸ்வாமியை ஒரு சாதாரண மனிதர் என்றே நினைத்திருந்தேன். அவரால் இன்னொரு உடலும் எடுத்து அதன் மூலமும் செயலாற்ற முடியும் என்பதை இப்பொழுது கண்டு கொண்டேன்!" நாங்கள் இருவரும் சேர்ந்து அந்த யோகியின் அறையினுள் நுழைந்தோம். உட்காரும் மேடைக்கு கீழே இருந்த பாதக் குறடுகளை கேதார்நாத் பாபு சுட்டிக் காட்டினார்.

"பார், இதே பாதக் குறடுகளைத் தாம் அவர் படித்துறையில் அணிந்திருந்தார்," என்று அவர் கிசுகிசுத்தார். "நான் இப்பொழுது பார்ப்பது போலவே கோவணம் மட்டுமே அவர் அணிந்திருந்தார்."



ஸ்வாமி பிரணவானந்தர் வாரணாசி "ஈருடல் கொண்ட மகான்"

வந்தவர் அவரை வணங்கியதும், ஸ்வாமி என்னை வேடிக்கைப் புன்னகையுடன் நோக்கினார்.

"இவற்றையெல்லாம் கண்டு நீ ஏன் பிரமித்துப் போகிறாய்? புற உலகின் நுட்பமான இணைப்பு உண்மையான யோகிகளிடமிருந்து மறைக்கப்படவில்லை. தூரத்தில் கல்கத்தாவில் இருக்கும் என் சீடர்களை நான் நினைத்தவுடன்

காண்பதும் அவர்களுடன் பேசுவதும் உண்டு. அதே போல் அவர்களும் நினைத்தவுடன் புறப் பொருட்களாலான எந்தத் தடையையும் கடக்க முடியும்."

ஒருகால் என் இளம் உள்ளத்தில் ஆன்மீக உணர்வுகளை எழுப்பும் முயற்சியில் அவர் தன்னிடமுள்ள சூட்சும வானொலி மற்றும் தொலைக்காட்சி ஆற்றல்களை எனக்குச் சொல்ல திருவுளம் கொண்டிருக்க வேண்டும்.[2] ஆனால் ஊக்கத்திற்கு பதிலாக என்னுள் ஒரு மரியாதை கலந்த பயமே தோன்றியது. இறைவனைத் தேடுவதற்கு எனக்கென விதிக்கப்பட்டிருந்த ஒரே குரு ஸ்ரீ யுக்தேஸ்வர்; அவரை நான் இன்னும் சந்திக்கவில்லை என்பதால் பிரணவானந்தரைக் குருவாக ஏற்கும் உணர்ச்சி எனக்கு எற்படவில்லை. என் முன்னா லிருப்பது அவர்தானா அல்லது அவரைப் போன்ற மற்றொரு வடிவமா என்று ஆச்சரியம் கொண்டு சந்தேகத்துடன் அவரை நோக்கினேன்.

என் உள்ளத்தில் எழுந்த மன உளைச்சலை நீக்கும் விதத்தில், அந்த மகான் ஆன்மாவைத் தட்டி எழுப்பும் பார்வையை என் மீது வீசி, தன் குருவைப் பற்றிய சில ஊக்கமளிக்கும் சொற்களைக் கூறினார்.

"எனக்குத் தெரிந்த வரையில் லாஹிரி மகாசயர்தான் மிகத் தலைச்சிறந்த யோகி, மனித உடலில் தோன்றும் தெய்வமே அவர்."

ஒரு சீடரே நினைத்த மாத்திரத்தில் இன்னொரு உடல் எடுக்கும் திறன் படைத்திருந்தால், அவருடைய

குருதேவருக்குத் தெரியாத அற்புதத் திறன் ஏதாவது இருக்குமா என நான் நினைத்தேன்.

"குருவின் உதவி எவ்வளவு ஒப்புயர்வற்றதென்று உனக்குக் கூறுகிறேன், கேள். ஒவ்வோர் இரவிலும் இன்னொரு சீடருடன் நான் எட்டு மணிநேரம் தியானம் புரிவது வழக்கம். பகலில் நாங்கள் ரயில்வே அலுவலகத்தில் பணிபுரிய வேண்டியிருந்தது. என் எழுத்தர் பணியின் கடமைகளைத் தொடர்வதில் உள்ள இடர்பாடுகளைக் கண்டு என் முழுநேரத்தையும் இறைவனுக்கே அர்ப்பணிக்க விரும்பினேன். விடா முயற்சியுடன் எட்டு ஆண்டுகள் பாதி இரவுகளைத் தியானத் திலேயே கழித்தேன். எனக்குக் கிடைத்த பலன்கள் அற்புதமானவை. மிகப்பெரிய ஆன்மீக தரிசனங்கள் என் உள்ளத்தை ஒளிமயமாக்கின. ஆயினும் ஒரு சிறு திரை எனக்கும் பரமாத்மாவுக்கும் இடையே எப்பொழுதும் இருந்து கொண்டே இருந்தது. மனித சக்திக்கு அப்பாற்பட்ட தீவிரத்துடன் நான் முயன்றபோதும் முடிவான மாறுதலற்ற ஐக்கியம் எனக்கு மறுக்கப்பட்டு வந்ததை நான் கண்டேன். ஒரு நாள் மாலை நான் லாஹிரி மகாசயரிடம் சென்று அவருடைய தெய்வீகத் தலையீட்டை வேண்டினேன். என் விடாப்பிடியான மன்றாடல்கள் இரவு முழுதும் தொடர்ந்தன.

"குருதேவரே, அந்த பரமாத்மாவை நேருக்கு நேர் சந்திக்காவிடில் என்னால் உயிர் வாழ முடியாது என்று சொல்லுமளவிற்கு என் ஆன்மீக வேதனை இருக்கிறது!"

"'நான் என்ன செய்ய முடியும்? நீ இன்னும் ஆழ்ந்து தியானம் செய்ய வேண்டும்.'

"'நான் தங்களிடம்தான் முறையிடுகிறேன், இறைவனே, என் ஆசானே! தாங்கள் என் முன் மனித உடலில் உருக்கொண்டிருப்பதைக் காண்கிறேன்; நான் தங்களைத் தங்கள் விசுவ ரூபத்தில் காணுமாறு எனக்கு அருள் புரிய வேண்டுகிறேன்!'

"லாஹிரி மகாசயர் அனுக்கிரகிக்கும் வகையில் தன் கையை நீட்டினார். நீ இப்பொழுது சென்று தியானம் செய். உனக்காக நான் பிரம்மனிடம்[3] சிபாரிசு செய்திருக்கிருக்கிறேன்.'

"அளவிட்டுக் கூறமுடியாத வகையில் பரவசமடைந்த நான், என் வீட்டிற்குத் திரும்பினேன். அன்று இரவு தியானத்தில் என் வாழ்வின் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்த லட்சியத்தை நான் அடைந்தேன். இப்பொழுது நான் இடைவிடாது அந்த ஆன்மீக ஓய்வூதியத்தை அனுபவித்து வருகிறேன். அந்த நாள் முதல் ஆனந்தமய இறைவன் என் கண் முன்னாலிருந்து எந்த மாயத்திரைக்கும் பின்னால் ஒளியவே இல்லை."

பிரணவானந்தருடைய முகம் தெய்வீக ஒளியால் நிறைந்து விளங்கியது. மறு உலகத்தைச் சார்ந்த ஒரு பேரமைதி என் உள்ளத்தில் புகுந்தது; பயமெல்லாம் ஓடி மறைந்தது. அந்த யோகி இன்னொரு ரகசியச் செய்தியையும் எனக்குக் கூறினார்.

"சில மாதங்கள் கழித்து நான் லாஹிரி மகாசயரிடம் திரும்பிச் சென்று அளவற்றதொரு பரிசை எனக்கு

அருளியதற்காக நன்றி கூற முயன்றேன். பிறகு இன்னொரு செய்தியைக் குறிப்பிட்டேன்."

"'குருதேவா, என்னால் அலுவலகத்தில் இனி வேலை செய்ய முடியாது. தயை செய்து என்னை விடுவிக்க வேண்டுகிறேன். பிரம்மன் தொடர்ந்து என்னைப் பரவச நிலையிலேயே வைத்திருக்கிறார்.'

"'உன் கம்பெனியிலிருந்து ஓய்வூதியம் கேட்டு விண்ணப்பம் செய்.'

"'என் பணியிலிருந்து இவ்வளவு சீக்கிரம் ஓய்வு பெறுவதற்கு என்ன காரணம் நான் கொடுக்க முடியும்?'

"'உனக்குத் தோன்றுவதைச் சொல்.'

"மறுநாள் நான் என் விண்ணப்பத்தை அனுப்பினேன். உரிய காலத்திற்கு முன்பே நான் ஓய்வு கோரியதற்கான காரணங்களை மருத்துவர் விசாரித்தார்.

"'வேலை செய்யும் பொழுது என் முதுகுத் தண்டில் பேராற்றலுள்ள ஓர் உணர்வு எழுவதை உணர்கிறேன். அது என் உடல் முழுதும் பரவி, என் கடமைகளை இயற்ற என்னைத் தகுதி இல்லாதவனாக ஆக்கிவிடுகிறது.'[4]

"அடுத்த கேள்வி எதுவுமே இன்றி அந்த மருத்துவர் என் ஓய்வூதியத்திற்கு வெகுவாகப் பரிந்துரை செய்தார். விரைவிலேயே அது எனக்கு கிடைத்தது. லாஹிரி மகாசயரின் தெய்வீக விருப்பம், அம்மருத்துவர் மற்றும் உன் தந்தை உள்பட ரயில்வே அதிகாரிகள் மூலமாக இயங்கிற்று என்பதை நானறிவேன். தாமாகவே அவர்கள் அந்த மகா குருவின் ஆன்மீக உத்தரவிற்குக் கீழ்ப்படிந்து

என்னை இறைவனுடன் இடைவிடாது தொடர்பு கொள்ளக்கூடிய ஒரு வாழ்விற்காக விடுதலை செய்தார்கள்."

அசாதாரணமான இந்த நிகழ்ச்சியைக் கூறிய பிறகு ஸ்வாமி பிரணவானந்தர் மீண்டும் நீண்ட அமைதியில் ஆழ்ந்து விட்டார். நான் அவர் பாதங்களைத் தொட்டு மரியாதையுடன் வணங்கி விடைபெறும் பொழுது அவர் எனக்கு ஆசி கூறினார்.

"உன் வாழ்க்கை, துறவு மற்றும் யோக மார்க்கத்திற்கு உரியது, பின்னால் உன் தந்தையுடன் நான் உன்னை மறுபடியும் சந்திப்பேன். "வருடங்கள் செல்லச் செல்ல அவரது இரு ஆருடங்களும் நிறைவேறின.[5]

இருள் கவியத் தொடங்கும் பொழுது கேதார்நாத் பாபு என்னுடன் நடந்தார். நான் தந்தையின் கடிதத்தைக் கொடுத்ததும் அதை அவர் தெரு விளக்கின் வெளிச்சத்தில் படித்தார்.

"உன் தந்தை அவருடைய ரயில்வே கம்பெனியின் கல்கத்தா அலுவலகத்தில் நான் ஒரு பதவி ஏற்க வேண்டும் என்கிறார். ஸ்வாமி பிரணவானந்தர் அனுபவிக்கும் ஓய்வூதியங்களில் ஒன்றையாவது எதிர்பார்த்தல் எவ்வளவு மகிழ்ச்சி தரக்கூடியது! ஆனால் அது இயலாது! நான் காசியை விட்டுக் கிளம்ப முடியாது. அந்தோ, அந்த இரு உடல்களை அணியும் திறனை நான் இன்னும் பெறவில்லையே!"

---

1 பல இந்திய சாதுக்கள் என்னை "சோட்டா மகாசயர்" என்றே அழைப்பது

வழக்கம். அதற்கு "சின்ன ஐயா" என்று பொருள்.

2 மனோ விஞ்ஞானத்தின் மூலம் யோகிகள் கண்டறிந்த நியதிகளின் நியாயத்தை பௌதீக விஞ்ஞானம், தனக்கே உரிய முறையில் உறுதி செய்கிறது. உதாரணமாக, மனிதனுக்குத் தொலைக்காட்சித் திறன் உண்டென்பது 1934ஆம் வருடம், நவம்பர் 26ஆம் தேதி ரோம் ராயல் பல்கலைக் கழகத்தில் பரிசோதனை மூலம் நிரூபித்து காட்டப்பட்டது. நரம்பியல் மனோ தத்துவ நிபுணரான டாக்டர் கிஸப் காலிகாரிஸ் ஒருவருடைய உடல் பாகங்கள் சிலவற்றை அழுத்த, அவர் சுவருக்கு அப்பாலிருந்த மனிதர்களையும், பொருட்களையும் பற்றி நுட்பமாக விவரித்தார். டாக்டர் காலிகாரிஸ் மனிதனுடைய தோலின் சில பாகங்களை அதிரச் செய்தால் அது அவனுக்கு புலன்கடந்த உணர்வுகளைத் தந்து, பிறவழிகளில் பார்க்க முடியாத பொருட்களைப் பார்க்கும்படிச் செய்கிறது எனப் பேராசிரியர்களுக்குக் கூறினார். தான் தேர்ந்தெடுத்த மனிதனை சுவருக்கு அப்பாலுள்ள பொருட்களைப் பிரித்தறிய வைக்கப் பேராசிரியர் காலிகாரிஸ், மார்புக் கூட்டின் வலப்பக்கத்தில் சுமார் பதினைந்து நிமிடங்கள் வரை அழுத்திக் கொண்டிருந்தார். உடலின் சில குறிப்பிட்ட இடங்களை அதிர்வடையச் செய்யும்பொழுது மனிதர்கள் எவ்வளவு தூரத்தில் உள்ள பொருட்களையும்-அவர்கள் அப்பொருட்களை முன்னால் பார்த்திராவிடினும் கூட-காண முடியும் என்று பேராசிரியர் காலிகாரிஸ் கூறினார்.

3 படைப்புத் தொழிலில் ஈடுபடும் கடவுளின் ஒரு நிலை. சமஸ்கிருத மொழியின் மூலச் சொல்லான பிருஹ் என்பது விரிதல் என்று பொருள்படும்.

4 ஆழ்ந்த சமயுறு விலஜில், தல் ஆன்கிக அபவம் த் தண்ன் நீடத்றுல் தயுன் ஏற்பம். பிற ஹீளஜில் உண்டயும். பக்கக்ம் ஆனந்த வள்ளம் அளழீலடங்கயுத. ஆனயுல் யயுளி அ வப்படயுதப அடக்கக் கற்க்கயுள்ளிறயுன்.

நாங்கள் சந்தித்த பொழுது பிரணவானந்தர் உண்மையில் முழுமையான உள்ளொளி பெற்றவராயிருந்தார். ஆனால் அவரது அலுவலக வாழ்வின் கடைசி நாட்கள் பல ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தன. அப்பொழுது அவர் நிர்விகல்ப சமாதி யில் (பார்க்க பக்கம் 361, 610 அடிக்குறிப்பு.) மாற்ற முடியாத நிலை பெற்றிருக்கவில்லை. அந்த முழுமையான அசைக்க முடியாத உணர்வு நிலையில் ஒரு யோகி உலகின் எந்தக் கடமையையும் ஒரு தொல்லையாகக் காண்பதில்லை.

ஓய்வு பெற்ற பிறகு பிரணவானந்தர் பகவத் கீதைக்கு பிரணவ கீதை என்ற ஆழ்ந்த விளக்கவுரையை எழுதினார். இது இந்தியிலும் வங்காள மொழியிலும் கிடைக்கிறது.

ஒன்றிற்கு மேற்பட்ட பல உடல்களில் தோன்றுவது பதஞ்சலி யோக சூத்திரங்களில் (பார்க்க பக்கம் 345 அடிக்குறிப்பு.) ஒரு சித்தி (யோக சக்தி) யாக விவரிக்கப்பட்டிருக்கிறது. இது போல இரு இடங்களில் தோன்றக்கூடிய தன்மை, காலங்காலமாக பல மகான்களால் நிகழ்த்திக் காட்டப்பட்டு வருகிறது.

5 பார்க்க அத்தியாம் 27.

## அத்தியாயம் 4

# என் தடைப்பட்ட இமயப் பயணம்

"ஏதாவது ஒரு சிறு சாக்குச் சொல்லிவிட்டு உன் வகுப்பறையை விட்டு வெளியேறு. ஒரு குதிரை வண்டியை அமர்த்திக் கொள். என் வீட்டில் உள்ள யாரும் உன்னைப் பார்க்க முடியாதவாறு சந்தில் நின்று கொள்."

இமயமலைக்கு என்னுடன் வருவதற்குத் திட்டமிட்டிருந்த என் உயர்நிலைப் பள்ளி நண்பனான அமர் மித்தருக்கு நான் இறுதியாகக் கொடுத்திருந்த குறிப்புக்கள் இவை. நாங்கள் ஓடிப் போவதற்கு அடுத்த நாளை தேர்ந்தெடுத்திருந்தோம். என் தமையன் அனந்தா என் மீது எப்பொழுதும் ஒரு கண் வைத்திருந்தபடியால் முன்னெச் சரிக்கைகள் தேவையாக இருந்தன. என் மனதில் தப்பியோடும் எண்ணம் மேலோங்கியவாறு இருக்கிறது என்று சந்தேகித்து அத்திட்டங்களை முறியடிக்க அவன் தீர்மானித்திருந்தான். அந்தத் தாயத்து ஆன்மீகத்தை ஊக்குவிக்கும் ஒரு பொருளாக என்னுள் அமைதியாக வேலை செய்த வண்ணம் இருந்தது. அடிக்கடி என் மனத் திரையில் தோன்றிய என் குருதேவரின் முகத்தை, இமயப் பனிச் சாரலுக்கிடையே காண இயலும் என்று நம்பினேன்.

தந்தை நிரந்தரமாகக் கல்கத்தாவிற்கு

மாற்றப்பட்டதால் குடும்பம் இப்பொழுது கல்கத்தாவில் இருந்தது. இந்தியப் பரம்பரை குடும்ப வழக்கப்படி, அனந்தா தன் மனைவியை எங்கள் வீட்டில் வசிப்பதற்கு அழைத்து வந்திருந்தான். அங்கு ஒரு சிறு அறையில் நான் தினசரி தியானத்தில் ஈடுபட்டும், இறைவனைத் தேடுவதற்கு என் மனத்தைப் பக்குவப் படுத்திக் கொண்டும் இருந்தேன்.

நினைவில் என்றும் நிற்கக்கூடிய அந்த அடுத்த நாள் காலை, அபசகுனமான மழையுடன் தொடங்கியது. அமருடைய வண்டிச் சக்கரங்களின் சத்தத்தைத் தெருவில் கேட்டதுமே அவசர அவசரமாக நான் ஒரு கம்பளி, ஒரு ஜதை செருப்புகள், ஒன்றிரண்டு அரைக் கச்சைகள், ஒரு ஜப மாலை, லாஹிரி மகாசயரின் படம் மற்றும் பகவத் கீதையின் ஒரு பிரதி இவைகளை ஒரு மூட்டையாகக் கட்டி மூன்றாவது மாடியிலிருந்த என் அறையின் ஜன்னல் வழியாக வீசியெறிந்தேன். நான் வேகமாகப் படிகளில் இறங்கி வாசலில் மீன் வாங்கிக் கொண்டிருந்த என் சித்தப்பாவை தாண்டிச் சென்றேன்.

"என்ன பரபரப்பு?" அவரது பார்வை என் மீது சந்தேகத்துடன் சுழன்றது.

நான் அவரை நோக்கி எதையும் காட்டிக் கொள்ளாத புன்னகை ஒன்றை வீசிவிட்டு சந்தை நோக்கி நடந்தேன். என் மூட்டையைத் திரும்ப எடுத்துக் கொண்டு, சதித்திட்டத்திற்குரிய எச்சரிக்கையுடன் நான் அமருடன் சேர்ந்து கொண்டேன். நாங்கள் வியாபார மையமாகிய சாந்தினி செளக்கை நோக்கி வண்டியில் விரைந்தோம்.

ஆங்கில உடைகளை வாங்குவதற்காகப் பல மாதங்களாகவே சிற்றுண்டிக்காகக் கிடைத்த எங்கள் பணத்தை நாங்கள் சேமித்து வைத்திருந்தோம். சாமர்த்தியமான என் அண்ணன் சுலபமாகத் துப்பறியும் வேலையைச் செய்து விடுவான் எனத் தெரிந்து கொண்டு ஐரோப்பிய உடைகளை அணிந்து அவனை ஏமாற்றிவிட நினைத்தோம்.

ரயில் நிலையத்திற்குப் போகும் வழியில் ஜதீந்தா என நான் அழைக்கும் என் ஒன்றுவிட்ட சகோதரன் ஜோதின்கோஷிற்காக நின்றோம். இமயத்திற்குச் சென்று ஆர்வத்துடன் குருவைத் தேடுவதில் புதிதாக மனமாற்றம் பெற்றவன் இவன். நாங்கள் தயாராக வைத்திருந்த புதிய உடைகளை அவன் அணிந்துகொண்டான். நன்கு உருமாறி விட்டதாக நாங்கள் நம்பினோம். ஓர் ஆழ்ந்த வெற்றி உணர்வு எங்கள் இதயங்களை ஆட்கொண்டது.

"இப்பொழுது நமக்கு வேண்டுவதெல்லாம் கித்தான் காலணிகள்தான். " நான் ரப்பர் காலணிகள் விற்கும் கடையை நோக்கி என் தோழர்களை அழைத்துச் சென்றேன். இப்புனித பயணத்தில் மிருகங்களைக் கொல்வதால் மட்டுமே கிடைக்கும் தோலினால் செய்யப்பட்ட எந்தப் பொருளும் வேண்டாம். நான் பகவத் கீதையின் மேலிருந்த தோல் அட்டையையும் ஆங்கிலேய நாட்டில் செய்யப் பட்ட என் தொப்பியின் தோல் பட்டிகளையும் எடுத்தெறிய வழியில் நின்றேன்.

ரயில் நிலையத்தில் நாங்கள் பர்த்வானுக்கு பயணச் சீட்டு வாங்கினோம். அங்கிருந்து இமயத்தின்

அடிவாரத்திலுள்ள ஹரித்துவாருக்கு வண்டி மாறுவதாகத் திட்டமிட்டிருந்தோம். எங்களைப் போலவே புகைவண்டியும் ஓட ஆரம்பித்த பிறகு என் பிரமாதமான எதிர்பார்ப்புகள் சிலவற்றைப் பற்றி கூறினேன்.

"சற்றே நினைத்துப் பாருங்கள்!" நான் உணர்ச்சியுடன் கூறினேன். "குருமார்களால் நாம் உபதேசிக்கப்படுவோம். பேரண்ட உணர்வின் பரவச நிலையை நாம் அனுபவிப்போம். இமயமலையின் காட்டு விலங்குகள் நம் அருகில் சாதுவாக வந்து நிற்குமளவிற்கு நம் உடலின் காந்த சக்தி பெருகும். புலிகளெல்லாம் சாதுவான பூனைகளைப் போன்று நம் அன்பு வருடுதலுக்குக் காத்து நிற்கும்!"

நடக்கக் கூடிய ஒரு காட்சியை உருவகமாகவும் யதார்த்தமாகவும் சித்தரித்து, மெய்மறக்கச் செய்யும் என்று நினைத்து நான் கூறிய இக்குறிப்பு அமரிடமிருந்து உற்சாகமானதொரு புன்னகையை வருவித்தது. ஆனால் ஜதீந்தா தன் பார்வையைத் திருப்பி ஜன்னல் வழியாக ஓடிச் சென்று கொண்டிருக்கும் காட்சிகளைக் காண்பதில் செலுத்தினான்.

"பணத்தை மூன்று பாகங்களாகப் பிரித்துக் கொள்ளலாம்." ஜதீந்தா இந்த யோசனையுடன் தன் நீண்ட மௌனத்தைக் கலைத்தான். "பர்த்வானில் நாம் ஒவ்வொருவரும் தனித்தனியே நம் பயணச் சீட்டை வாங்க வேண்டும். அப்பொழுதுதான் நாம் மூவரும் ஒன்றாக வீட்டை விட்டு ஓடுகிறோம் என்பதை ரயில் நிலையத்தில் யாரும் ஊகிக்க முடியாது."

நான் சந்தேகப்படாமல் ஒப்புக் கொண்டேன். அந்திப் பொழுதில் எங்கள் ரயில் வண்டி பர்த்வானில் நின்றது. ஜதீந்தா பயணச்சீட்டு அலுவலகத்திற்குள் நுழைந்தான்; அமரும் நானும் பிளாட்ஃபாரத்தில் அமர்ந்திருந்தோம். நாங்கள் பதினைந்து நிமிடங்கள் காத்திருந்த பிறகு விசாரித்ததில் பயனொன்றுமில்லை. எல்லாப் பக்கங்களிலும் பயத்தின் அவசரத்துடன் அவன் பெயரைக் கூவி அழைத்தோம். ஆனால் அவனோ அச்சிறிய நிலையத்தைச் சுற்றியிருந்த முன்பின் தெரியாத இருண்ட சூழலில் மறைந்து விட்டிருந்தான்.

நான் முழுமையாகச் சோர்ந்து அதிர்ச்சியால் ஒருவிதமான உணர்வு மரத்துப் போன நிலையிலிருந்தேன். இந்த மனச்சோர்வு தரும் சம்பவத்திற்கு இறைவன் ஏன் சம்மதித்தார்? நான் மிகக் கவனத்துடன் ஏற்பாடு செய்த, இறைவனைத் தேடும் என் முதல் அன்புப் பயணம் கொடூரமாகப் பாழ்படுத்தப்பட்டது.

"அமர், நாம் வீடு திரும்ப வேண்டும்." நான் ஒரு குழந்தையைப் போல அழுது கொண்டிருந்தேன். "ஜதீந்தாவின் உணர்ச்சியற்ற பிரிவு ஓர் அபசகுனம்தான். இந்தப் பயணம் தோல்வியில்தான் முடியும்."

"இறைவனிடம் உனக்கு உள்ள அன்பு இவ்வளவு தானா? நம்பிக்கைத் துரோகியான நண்பன் மூலம் ஏற்பட்ட ஒரு சிறு சோதனையை உன்னால் தாங்க முடியாதா?"

தெய்வ சோதனை என்று அமர் குறிப்பிட்டதும் நான் என் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டேன். நாங்கள்

பெயர் பெற்ற பர்த்வான் இனிப்புப் பண்டங்களான தாபோக் (தெய்வத்தாய்க்குரிய உணவு), மோதி (இனிப்பு பூந்தி) ஆகியவைகளை உண்டு பசியாறினோம். சில மணி நேரங்களுக்குப் பிறகு பரெய்லி வழியாக ஹரித்துவாருக்கு ரயிலேறினோம். மறுநாள் முகல்சராயில் ரயில் மாறி நாங்கள் பிளாட்ஃபாரத்தில் காத்திருக்கும் பொழுது மிக முக்கியமானதொரு செய்தியைப் பற்றி விவாதித்தோம்.

"அமர், வெகு சீக்கிரத்தில் நாம் ரயில்வே அதிகாரிகளால் துருவி விசாரிக்கப்படுவோம். என் அண்ணனின் மதிநுட்பத்தை நான் குறைத்து மதிப்பிடவில்லை. விளைவு எதுவாயினும் சரி, நான் பொய் கூறமாட்டேன்."

"முகுந்தா, நான் உன்னைக் கேட்பதெல்லாம் நீ சும்மா இரு என்பதுதான். நான் பேசும் பொழுது பரிகசிக்கவோ சிரிக்கவோ கூடாது."

இந்தச் சமயத்தில் ஓர் ஐரோப்பிய நிலைய-அதிகாரி என்னிடம் வந்தார். அவர் தன் கையில் ஒரு தந்தியை வைத்துக் கொண்டு அசைத்ததும் நான் அதிலுள்ள செய்தியை உடனே கிரகித்துக் கொண்டேன்.

"நீ கோபித்துக் கொண்டு வீட்டை விட்டு ஓடிவந்து விட்டாயா?"

"இல்லையே!" அவருடைய கேள்வி அமைந்த விதத்தினால் தீர்மானமாகப் பதில் கூற வழி கிடைத்தது பற்றி எனக்கு மிக்க மகிழ்ச்சி. என்னுடைய முறையல்லாத நடத்தைக்கு என் கோபம் காரணமல்ல;

ஆன்மீக வேட்கை தான் காரணம் என்பதை நானறிவேன்.

பிறகு அந்த அதிகாரி அமர் பக்கம் திரும்பினார். அவ்விருவர்களுக்கிடையே தொடர்ந்த சாமர்த்தியமான உரையாடலைக் கேட்டு சிரிக்காமல், ஏற்கனவே செய்து கொண்ட ஆலோசனையின்படி என்னைக் கட்டுப்படுத்திக் கொள்வது மிகவும் கடினமாகிவிட்டது.

"மூன்றாவது பையன் எங்கே?" அவர் தன் குரலில் முழு அதிகாரத்தையும் செலுத்திப் பேசினார். "சொல், உண்மையைச் சொல்!"

"ஐயா, நீங்கள் மூக்குக் கண்ணாடி அணிந்திருப்பதைக் காண்கிறேன். இங்கே நாங்கள் இருவர்தான் என்பது உங்களுக்குத் தெரியவில்லையா? "அமர் துடுக்காய் புன்முறுவல் செய்தான். "மூன்றாவது பையனை வரவழைக்க நான் மந்திரவாதி இல்லையே!" என்றான் அமர்.

அந்த அதிகாரி இந்த அதிகப்பிரசங்கித்தனமான பதிலைக் கேட்டு கொஞ்சம் சங்கடமடைந்தது தெரிந்தது. அவர் வேறுவிதமாக தன் தாக்குதலைத் தொடுத்தார். "உன் பெயர் என்ன?"

"என்னை தாமஸ் என்று கூப்பிடுவார்கள். நான் ஓர் ஆங்கிலேய தாய்க்கும் கிறிஸ்துவராக மதம் மாறிய இந்திய தந்தைக்கும் மகனாகப் பிறந்தவன்."

"உன் நண்பனின் பெயர் என்ன?"

"நான் அவனை தாம்ஸன் என அழைப்பேன்."

இதற்குள் நான் உள்ளே அடக்கிக் கொண்டிருந்த சிரிப்பு அதன் உச்ச நிலையை எட்டி விட்டது.

தெய்வாதீனமாக அப்பொழுது புறப்படுவதற்குரிய வண்டியின் கூவலொலி கேட்கவே நான் சொல்லிக் கொள்ளாமல் ரயிலை நோக்கி ஓடினேன். அமர் அந்த அதிகாரியுடன் பின் தொடர்ந்து வந்தான். அவர் எங்களை நம்பியதுடன், எங்களை ஐரோப்பியர்கள் அமரும் பெட்டியில் ஏற்றிவிடும் அளவுக்கு உதவ முன்வந்தார். பாதி-ஆங்கிலேய பையன்கள் இருவர், இந்தியர்களுக்கான பெட்டியில் பயணம் செய்வது உண்மையில் அவருக்குச் சங்கடமாக இருந்தது போலும்! அவர் மரியாதையுடன் வெளியேறியதும், நான் இருக்கையில் சாய்ந்து விழுந்து விழுந்து சிரித்தேன். ஒரு முதிர்ந்த ஐரோப்பிய அதிகாரியை ஏமாற்றிச் சமாளித்த உவகை மிக்க திருப்தி அமரின் முகத்தில் தெரிந்தது.

பிளாட்ஃபாரத்தில், என் அண்ணன் அனந்தாவிடமிருந்து வந்திருந்த அந்தத் தந்தியை நான் சாமர்த்தியமாக அறிந்து கொண்டேன். அந்தத் தந்தி பின்வருமாறு: "ஐரோப்பிய உடையில் மூன்று வங்காளப் பையன்கள், வீட்டிலிருந்து ஓடி முகல்சராய் வழியாக ஹரித்துவாருக்குச் சென்று கொண்டிருக்கிறார்கள். நான் வரும்வரையில் தயவு செய்து அவர்களை நிறுத்தி வைக்கவும். உங்கள் உதவிக்கு நல்ல வெகுமதி கிடைக்கும்."

"அமர் உன் குறிப்புக்களுடன் கூடிய ரயில் அட்டவணையை வீட்டில் வைக்க வேண்டாம் என்று நான் உனக்குக் கூறியிருந்தேனே. "அவனைக் குற்றம் சாட்டும் வகையில் நான் நோக்கினேன். "என் தமையன்

அவைகளில் ஒன்றைப் பார்த்திருக்க வேண்டும்."

என் நண்பன் குற்ற உணர்வுடன் நான் கூறியதை ஆமோதித்தான். நாங்கள் பரெய்லியில் சற்று நின்றோம்; அங்கு துவாரகா பிரசாத்[1] அனந் தாவிடமிருந்து வந்த தந்தியுடன் எங்களுக்காகக் காத்திருந்தான். துவாரகா துணிவுடன் எங்களை நிறுத்த முற்பட்டான். நாங்கள் வெறுமனே வீட்டை விட்டு ஓடிவரவில்லை என்பதை அவன் நம்பும்படி எடுத்துரைத்தேன். சென்ற தடவையைப் போலவே, இமயத்திற்கு என்னுடன் வரும்படி நான் விடுத்த அழைப்பை ஏற்க துவாரகா மறுத்து விட்டான்.

அன்று இரவு ஒரு ரயில் நிலையத்தில் எங்கள் வண்டி நின்ற பொழுது நான் அரைத்தூக்கத்திலிருந்தேன். அமர் இன்னொரு அதிகாரியால் விசாரிப்பதற்காக எழுப்பப்பட்டான். அவர் கூட "தாமஸ்", "தாம்ஸன்" என்ற கலப்புப் பெயர்களின் கவர்ச்சியால் மயங்கிவிட்டார். ரயில் வண்டி வெற்றியுடன் எங்களை அதிகாலையில் ஹரித்துவாரில் கொண்டு சேர்த்தது. தூரத்தில் கம்பீரமாகத் தெரிந்த மலைச்சிகரங்கள் எங்களை அழைப்பதைப்போன்று உயர்ந்து நின்றன. நாங்கள் ரயில் நிலையத்தை விட்டு அவசரமாக வெளியேறி நகரத்தின் சுதந்திரமான கும்பலில் கலந்து விட்டோம். அனந்தா எப்படியோ எங்களது ஐரோப்பிய மாறுவேடத்தை ஊடுருவி விட்டதால் எங்கள் முதல் வேலையானது தேசிய உடைக்கு மாறியதுதான். எனினும் எங்களைப் பிடித்து விடுவார்களென்ற உள்ளுணர்வில் என் மனம் கனத்தது.

ஹரித்துவாரை விட்டு உடனே செல்வதுதான் நல்லது எனத் தோன்றியதால் வடக்கு நோக்கி, எண்ணற்ற மகான்களின் திருவடிகளால் புனிதமடைந்த ரிஷிகேசத்தை அடைவதற்குப் பயணச் சீட்டுகள் வாங்கினோம். நான் வண்டியில் ஏறிவிட்டேன். அமர் பிளாட்ஃபாரத்தில் சிறிது தாமதித்தான். ஒரு போலீஸ்காரரிடமிருந்து வந்த ஓர் அதட்டல் அவனைச் சட்டென்று நிறுத்தியது. அழையாத காப்பாளராக அந்த அதிகாரி, என்னையும் அமரையும் காவல்நிலையத்தின் கட்டடத்திற்குள் இட்டுச் சென்று எங்களிடம் இருந்த பணத்தை எடுத்து வைத்துக் கொண்டார். அவர், என் அண்ணன் வரும்வரை எங்களுக்கு மரியாதையுடன் விளக்கினார்.

வீட்டை விட்டு ஓடிவந்த இந்தப் பையன்களின் குறிக்கோள் இமயமலை என்று அறிந்ததும் அந்த அதிகாரி விதித்திரமான கதை ஒன்றைக் கூறினார்.

"நீங்கள் மகான்களைப் பற்றிப் பைத்தியமாக இருப்பதைக் காண்கிறேன்! நேற்று நான் கண்ட தெய்வீக மனிதரை விடப் பெரியவர் எவரையும் உங்களால் காணவே முடியாது. என்னுடன் பணியாற்றும் ஓர் அதிகாரியும் நானும் அவரை ஐந்து நாட்களுக்கு முன்னால் கண்டோம். நாங்கள் தீவிரமாக ஒரு கொலையாளியைத் தேடியவாறு கங்கைக் கரையில் ரோந்து வந்தோம். அவனை உயிருடனோ அல்லது பிணமாகவோ பிடிக்க வேண்டுமென்று எங்களுக்கு உத்திரவு. யாத்ரீகர்களை கொள்ளையடிப்பதற்காக அவன்

ஒரு சாது வேடத்தில் திரிவதாகத் தெரிந்தது. எங்களுக்குச் சிறிது முன்னால் சென்று கொண்டிருந்த ஓர் உருவம் அந்தக் குற்றவாளியின் அங்க அடையாளங்களைக் கொண்டு இருந்தாற்போல் தோன்றியது. நாங்கள் நிற்கும்படி விடுத்த கட்டளையை அவர் கண்டு கொள்ளவிலலை. அவரைப் பிடிப்பதற்கு நாங்கள் ஓடினோம். அவரது பின்புறத்தை நெருங்கியதும் நான் என் கோடாரியைப்பலமாக வீசினேன்; அம்மனிதரின் வலது கை வெட்டுப்பட்டு கிட்டத்தட்ட விழுந்து விடும் தருவாயிலிருந்தது. எவ்வித கூச்சலில்லாமலும் அந்தப் பயங்கரமான காயத்தைத் திரும்பிக் கூட பார்க்காமலும் அந்த அன்னியர் மிக ஆச்சரியமான வகையில் தன் வேகமான நடையைத் தொடர்ந்தபடி இருந்தார். நாங்கள் அவர் முன்பு சென்று குதித்ததும், அவர் நிதானமாகக் கூறினார்.

"'நீங்கள் தேடும் கொலையாளி நானல்ல.'

"தெய்வீகத் தோற்றம் கொண்ட ஒரு முனிவரை நான் படுகாயப்படுத்தி விட்டதைக் கண்டு வருந்தினேன். நெடுஞ்சாண்கிடையாக அவர் காலில் விழுந்து என்னை மன்னிக்கும்படி வேண்டினேன். ஏராளமாகக் கொட்டிக் கொண்டிருந்த ரத்தத்தைத் தடுத்து நிறுத்த என் தலைப்பாகைத் துணியைக் கொடுத்தேன்.

"'மகனே, நீ செய்த தவறு புரிந்து கொள்ளக் கூடியது தான்.' அந்த ஞானி என்னைக் கருணையுடன் நோக்கினார். 'நீ சென்று வா, உன்னை நிந்தித்துக் கொள்ளாதே. அன்பே உருவமான தெய்வத்தாய்

என்னைக் காத்து வருகிறாள்.' ஆடிக் கொண்டிருந்த அந்தக் கையை துண்டிக்கப்பட்ட இடத்தில் அவர் பொருத்தியதும், ஆகா! அது அப்படியே ஒட்டிக்கொண்டது; கொட்டிய ரத்தமும் விளக்க முடியாத வகையில், நின்றது.

"'இன்னும் மூன்று நாள் கழித்து அந்த மரத்தடியில் என்னை வந்து பார். நான் முழுவதும் குணமாகி விட்டத்தைக் காண்பாய். பின் உனக்குத் துக்கம் மறைந்துவிடும்,' என்றார்.

"நேற்று என் சகோதர அதிகாரியும் நானும் மிகுந்த ஆவலுடன் குறிப்பிட்ட அம்மரத்தடிக்கு சென்றோம். அங்கே இருந்த அந்தச் சாது அவரது கையைச் சோதித்துப் பார்க்க எங்களை அனுமதித்தார். அங்கு வடுவோ காயம் பட்ட அடையாளமோ இல்லை!

"'நான் ரிஷிகேசம் வழியாக இமயத்தின் தனிமையை நாடிச் செல்கிறேன்.' அந்தச் சாது எங்களுக்கு ஆசி கூறி உடனே புறப்பட்டார். அவருடைய புனிதத் தன்மையினால் என் வாழ்வு உயர்ந்ததாக உணர்கிறேன்."

அந்த அதிகாரி பக்தி கலந்த ஆச்சரியத்துடன் கதையை முடித்தார்; அவரது அனுபவம் அவரை வழக்கத்தைவிட அதிகமாக நெகிழ வைத்திருந்தது. ஒரு கம்பீரமான சைகையுடன் அவர் அச்செய்தி வெளியாகி இருந்த பத்திரிகைத் துண்டை என்னிடம் கொடுத்தார். பரபரப்பான செய்திகளைத் திரித்துக் கூறும் பத்திரிகைகளுக்குரிய பாணியில் (அந்தோ, இந்தியாவில் கூட இந்நிலை இல்லாமலில்லை!) அப்பத்திரிகையின்

நிருபர் அச்செய்தியை சற்று மிகைப்படுத்தியே இருந்தார். சாதுவின் தலையே துண்டிக்கப்பட்டது போல அந்தச் செய்தி வெளியாகி இருந்தது!

அமரும் நானும் தன்னைத் துன்புறுத்தியவனை, கிறிஸ்துவைப் போன்று, மன்னிக்கும் தன்மை படைத்த அப்பெரிய யோகியைப் பார்க்க முடியாமல் போய்விட்டதே என்று வருந்தினோம். இந்தியா, சென்ற இரண்டு நூற்றாண்டுகளாகப் பொருட் செல்வத்தில் ஏழையாக இருந்தாலும் அள்ள அள்ளக் குறையாத அருட் செல்வத்தை இன்றும் பெற்றுத்தான் உள்ளது; இந்தப் போலீஸ்காரரைப் போன்று சாதாரண உலக வாழ்க்கையில் ஈடுபட்ட மனிதர்கள் கூட எப்பொழுதாவது ஆன்மீகத்தின் சிகரங்களைச் சந்தித்து விட முடிகிறது.

அவருடைய அதிசயமான கதையினால் எங்கள் அலுப்பைப் போக்கியதற்கு அந்த அதிகாரிக்கு நன்றி கூறினோம். அவர் எங்களை விட அதிர்ஷ்டசாலி என்பதை அவர் குறிப்பிட்டிருக்கலாம்: எவ்வித முயற்சியும் இன்றியே தெய்வீக ஒளி பெற்ற ஒரு மகானை அவரால் சந்திக்க முடிந்தது; எங்களுடைய தீவிரமான நாட்டம் ஒரு குருவின் திருவடிகளை அடையாமல் வன்மையான ஒரு போலீஸ் நிலையத்தில் முடிந்தது!

இமயத்திற்கு மிக அருகில் இருந்தும், நாங்கள் பிடிபட்டு விட்டதால், எவ்வளவு தூரத்திலிருந்தோம்; சுதந்திரத்தை நாடும் எனது அவா இரு மடங்காகி

விட்டது என்று அமரிடம் கூறினேன்.

"சந்தர்ப்பம் கிடைத்ததும் நழுவிவிடலாம். நாம் புனிதமான ரிஷிகேசத்திற்கு நடந்தே செல்லலாம்." நான் ஊக்கமூட்டும் வகையில் புன்முறுவல் செய்தேன்.

ஆனால் பலமான ஆதாரமாயிருந்த எங்கள் பணம் எங்களிடமிருந்து பறிக்கப்பட்டதால் என் தோழன் நம்பிக்கை இழந்தவனாகிவிட்டான்.

"நாம் இந்த ஆபத்தான காட்டுப் பிரதேசங்களில் நடக்கத் தொடங்கினால் நாம் மகான்கள் வசிக்கும் இடத்திற்குப் பதிலாக புலிகளின் வயிற்றுக்குள்தான் சென்று முடிவோம்."

அனந்தாவும் அமரின் சகோதரனும் மூன்று நாட்கள் கழித்து வந்து சேர்ந்தனர். அமர் தன் சகோதரனை பாசம் கலந்த நிம்மதியுடன் வரவேற்றான். நான் சமாதானமடையவில்லை. அனந்தாவிற்கு என்னிடமிருந்து கடுமையான வசைச் சொற்களைத் தவிர வேறெதுவும் கிடைக்கவில்லை.

"உன் உணர்ச்சியை நான் புரிந்து கொள்கிறேன்," என் அண்ணன் ஆறுதலாக மொழிந்தான். "நான் உன்னிடம் கேட்பதெல்லாம், நீ என்னுடன் காசிக்கு வந்து ஒரு முனிவரைச் சந்திக்க வேண்டும். பிறகு கல்கத்தாவிற்கு வந்து மிகுந்த துக்கத்தோடு இருக்கும் நம் தந்தையுடன் சில நாட்கள் தங்க வேண்டும். பிறகு நீ இங்கே உன் குருவைத் தேடுவதை மறுபடி தொடங்கலாம்."

அமர் இச்சமயத்தில் எங்கள் உரையாடலில் குறுக்கிட்டு திரும்பவும் என்னுடன் ஹரித்துவாருக்குச்

செல்வதில் அவனுக்கு விருப்பம் இல்லை என்பதைத் தெரிவித்தான். அவன் இதமான குடும்பச் சூழ்நிலையை அனுபவித்துக் கொண்டிருந்தான். ஆனால் என் குருவைத் தேடுவதை என்றும் நான் விட மாட்டேன் என்பதை நான் அறிந்திருந்தேன்.

எங்கள் குழு வாரணாசிக்கு ரயில் ஏறியது. அங்கு எனது பிரார்த்தனைக்கு ஒப்பற்ற உடனடியான பதில் கிடைத்தது.

அனந்தா ஒரு சாமர்த்தியமான திட்டத்தை ஏற்கனவே தீட்டியிருந்தான். என்னை ஹரித்துவாரில் சந்திப்பதற்கு முன்பே அவன் வாரணாசியில் இறங்கி வேத சாஸ்திரங்களில் விற்பன்னரான ஒருவருடன் பேசி, அவரை நான் சந்திக்க ஏற்பாடு செய்திருந்தான். அந்தப் பண்டிதரும் அவர் மகனும் கூட சன்னியாசி[2] ஆகாமல் என்னைத் தடுக்க முயல்வதாக அனந்தாவிற்கு உறுதி கூறி இருந்தனர்.

அனந்தா என்னை அவர்கள் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். அவருடைய மகன், உணர்ச்சி பொங்கும் மன இயல்பு கொண்ட இளைஞன். என்னை முன் வாசலிலேயே வரவேற்றான். அவன் என்னை நீண்டதொரு தத்துவ விவாதத்தில் ஈடுபடுத்தினான். என் வருங்காலத்தைப் பற்றிக் கூறக்கூடிய ஆற்றல் தனக்கிருப்பதாகக் கூறிய அவன், சன்னியாசியாக வேண்டும் என்ற என் எண்ணத்தை புறக்கணித்தான்.

"நீ உன் சாதாரணப் பொறுப்புக்களைத் தட்டிக் கழிப்பதிலேயே உறுதியாக நின்றால் தொடர்ந்து

துரதிருஷ்டங்களையே சந்திப்பாய்; இறைவனை அடைய முடியாது. உலக அனுபவங்களில்லாமல் உன்னால் பழைய கர்ம வினைகளைக்[3] களைய முடியாது."

இதற்குப் பதிலாக பகவத் கீதையின்[4] அழிவற்ற சொற்கள் என் வாயிலிருந்து வெளிவந்தன: "'கேடு மிக உடையோனும் வேறு ஒன்றையும் எண்ணாது என்னைத் தியானிப்பானானால், அவன் கடந்தகாலத் தீயவினைகளின் விளைவுகளைச் சீக்கிரமே கழித்து விடுகிறான். விரைவில் அவன் அறவாளன் ஆகிறான்; நித்திய சாந்தியையும் அடைகிறான். குந்தியின் புதல்வா, என் பக்தன் நாசம் அடைவதில்லையென்று நிச்சயமாக அறிக!'"

ஆனால் அந்த இளைஞனின் ஆற்றல் வாய்ந்த முன்னறிவிப்புக்கள் என் நம்பிக்கையைச் சற்று அசைக்கவே செய்தன. என் இதயத்தின் முழு ஆர்வத்துடன் அமைதியாக இறைவனை வேண்டினேன்.

"என் குழப்பத்தை நீக்கி இங்கேயே, இப்பொழுதே எனக்குப் பதில் கூறுவாயாக, நான் துறவியாக வாழ்வதை நீ விரும்புகிறாயா அல்லது உலக வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமா!"

அந்தப் பண்டிதரின் வீட்டு வாசலின் வெளியே மிக உயர்ந்த தகைமையை வெளிப்படுத்தும் முகமுடைய ஒரு சாது நின்று கொண்டிருப்பதைக் கண்டேன். நிச்சயமாக எனக்கும் ஞானதிருஷ்டி உடையவன் என்று தன்னைக் கூறிக் கொண்டவனுக்கும் இடையே நடந்த தத்துவரீதியான உரையாடலை அவர் கேட்டிருக்க

வேண்டும். ஏனெனில் அந்த புதிய மனிதர் என்னைத் தன்னருகே அழைத்தார். அவருடைய சாந்தமான கண்களிலிருந்து மகத்தான சக்தி பாய்வதை நான் உணர்ந்தேன்.

"மகனே, அந்த அறிவிலியின் பேச்சைக் கேளாதே. உன் பிரார்த்தனைக் கிணங்கி, இறைவன் இப்பிறவியில் உன் வாழ்வு ஒரு துறவியின் வாழ்வாகத்தான் இருக்கும் என்பதை என் மூலமாக உனக்கு உறுதியாகக் கூறச் சொல்கிறார்."

ஆச்சரியத்துடனும் நன்றியுடனும் இந்த உறுதியான செய்தியைக் கேட்டு நான் மகிழ்ச்சியுடன் புன்னகைத்தேன்.

"அம்மனிதனிடமிருந்து விலகி வா!" அந்த "அறிவிலி" வெளி முற்றத்திலிருந்த என்னை அழைத்தபடி இருந்தான். எனக்கு வழி காட்டிய அச்சாது கையை உயர்த்தி என்னை ஆசீர்வதித்துவிட்டு மெதுவாக அவ்விடத்தைவிட்டு அகன்று விட்டார்.

"நீ எவ்வளவு பைத்தியமோ அச்சாதுவும் அந்த அளவிற்குப் பைத்தியம்தான்," இந்த அழகான சொற்களைத் திருவாய் மலர்ந்தருளியவர் தலை நரைத்த அந்த முதிய பண்டிதர். அவரும் அவரது மகனும் என்னை அழாக் குறையாக நோக்கினர். "அவரும் தெளிவற்ற வகையில் கடவுளைத் தேடி வீட்டை விட்டு ஒடிப்போனவர்தான் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்," என்றார்.

நான் வேறு பக்கம் திரும்பிக் கொண்டேன். நான்

இவர்களுடன் இனி எதுவும் பேசப் போவதில்லை என்று அனந்தாவிடம் குறிப்பிட்டேன். உற்சாகமிழந்த அண்ணனும் உடனே புறப்படு வதற்குச் சம்மதித்தான். நாங்கள் விரைவிலேயே கல்கத்தாவிற்கு ரயிலேறினோம்.

"ஐயா, துப்பறிபவரே, நான் இரண்டு நண்பர்களுடன் ஓடிவிட்டேன் என்பதை எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?" எங்கள் வீட்டை நோக்கித் திரும்புகையில் என்னுடைய துடிப்புள்ள ஆர்வத்தை நான் அனந்தாவிடம் வெளிப்படுத்தினேன். அவன் குறும்புப் புன்னகை புரிந்தான்.

"உன் பள்ளிக்கூடத்தில் வகுப்பைவிட்டு வெளியேறிய அமர் திரும்ப வரவில்லை என அறிந்தேன். நான் மறுநாள் அவன் வீட்டிற்குச் சென்று அடையாளம் இடப்பட்ட ஓர் அட்டவணையைக் கண்டுபிடித்தேன். அப்பொழுதுதான் வண்டியில் வெளியே செல்லவிருந்த அமரின் தகப்பனார் வண்டிக்காரனுடன் பேசிக் கொண்டிருந்தார்.

"'இன்று என் மகன் என்னுடன் பள்ளிக்கூடத்திற்கு வரமாட்டான். அவன் எங்கோ மறைந்து விட்டான்! என்று அவர் புலம்பினார்.

"'நான், மற்றொரு வண்டிக்காரனிடமிருந்து உங்கள் மகன் இரண்டு பையன்களுடன் ஐரோப்பிய உடையில் ஹௌரா ரயில் நிலையத்தில் வண்டி ஏறியதாகக் கேள்விப்பட்டேன்,' என்றான், அந்த வண்டிக்காரன். 'அவர்கள் தாங்கள் அணிந்திருந்த தோல் காலணிகளை

அவர்களது வண்டிக்காரனுக்குப் பரிசாகத் தந்து விட்டார்களாம்.'

"இப்படியாக எனக்கு மூன்று தடயங்கள் கிடைத்தன - அட்டவணை, மூன்று பையன்கள், ஐரோப்பிய உடை."

நான் அனந்தா கூறியவற்றைச் சிரிப்பும் எரிச்சலும் கலந்தவாறு கேட்டுக் கொண்டிருந்தேன். வண்டிக்காரனுக்கு காட்டிய எங்களது தாராள மனப்பான்மை சிறிது தகுதியற்றதே!

"அமர் அட்டவணையில் கீழ்க்கோடிட்டிருந்த எல்லா நகரங்களிலுமுள்ள ரயில் நிலைய அதிகாரிகளுக்கும் தந்தி கொடுக்க விரைந்தேன். அவன் பரெய்லியைக் குறித்து வைத்திருந்தான். ஆதலால் அங்கு உன் நண்பன் துவாரகாவிற்குத் தந்தி கொடுத்தேன். கல்கத்தாவில் நமது அக்கம் பக்கத்தில் விசாரித்ததில் நம் ஒன்று விட்ட சகோதரன் ஜதீந்தா ஒரு நாள் இரவு மட்டும் காணாமல் இருந்து மறுநாள் காலை ஐரோப்பிய உடையில் திரும்பியதை அறிந்தேன். நான் அவனைத் தேடிக் கண்டுபிடித்து வீட்டிற்கு இரவு உணவு சாப்பிட வருமாறு அழைத்தேன். என் நட்புணர்வை கண்டு எந்தத் தயக்கமுமின்றி அவன் வர ஒப்புக்கொண்டான். வழியில், எந்தச் சந்தேகமும் கொள்வதற்கு முன்னால், நான் அவனை ஒரு போலீஸ் நிலையத்திற்கு அழைத்துச் சென்றேன். அங்கு எனது முன்னேற் பாட்டின்படி பயங்கரத் தோற்றமுடைய பல அதிகாரிகள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்களுடைய கடுமையான பார்வையால் ஜதீந்தா அவனுடைய ரகசியமான

நடவடிக்கையை விளக்க ஒப்புக் கொண்டான்.

"'நான் இமயமலைக்கு, ஆன்மீக உணர்வின் கிளர்ச்சியுடன் புறப்பட்டேன். மகான்களைத் தரிசிக்கும் ஆவலான உற்சாகம் என்னுள் நிறைந்திருந்தது. ஆனால் முகுந்தன், நாம் இமயமலைக் குகைகளில் பரவசத்தில் ஆழ்ந்திருக்கும் பொழுது புலிகள் பழகிய பூனைகளைப் போல ஆடாமல் அசையாமல் நம்மைச் சுற்றி அமர்ந்திருக்கும்," என்று சொன்னதுதான் தாமதம், என் உணர்வுகள் உறைந்தன; என் நெற்றியில் வியர்வை துளிர்க்கத் தொடங்கியது. நான் எண்ணினேன். "பிறகு என்ன? கொடிய இயல்புடைய புலிகள் எங்களது ஆன்மீக பரவசத்தால் மாற்றப்படாவிட்டால், அவைகள் வீட்டுப் பூனைகளைப் போல் அன்பு செலுத்துமா?" நான் என் மனக் கண்ணில் என்னை ஏற்கனவே ஏதோ ஒரு புலியின் வயிற்றில் கட்டாயக் குடியிருப்பாளனாகக் காணத் தொடங்கினேன். அதுவும் என் முழு உடலுடன் உடனே உள்ளே போகாமல், தவணை முறையில் அங்கம் அங்கமாக!'"

ஜதீந்தா மறைந்ததில் எனக்கு இருந்த கோபம் இப்போது சிரிப்பில் மறைந்தது. ரயிலில் என் அண்ணன் தந்த விளக்கத்தினால் எனக்கு ஏற்பட்ட சிரிப்பும் வேடிக்கையும் அவன் எனக்குக் கொடுத்த வேதனைக்கெல்லாம் மருந்தாயிற்று. அத்துடன் எனக்கு ஏற்பட்ட ஒரு சிறு திருப்தியையும் நான் ஒப்புக் கொள்ள வேண்டும். ஜதீந்தாவும் போலீஸ் பிடியில் இருந்து தப்பவில்லை என்பதுதான் அது.

"அனந்தா,[5] நீ பிறவியிலேயே மோப்பம் பிடிக்கும் வேட்டை நாயைப் போன்றவன்," வேடிக்கையுடன் கூடிய என் பார்வையில் சிறிது எரிச்சல் இல்லாமல் போகவில்லை. "நான் முதலில் நினைத்தபடி அவன் துரோக எண்ணத்தினாலன்றி, தற்காப்பு உணர்ச்சியினால்தான் செயல்பட்டானென்பதில் எனக்கு மகிழ்ச்சி என்று ஜதீந்தாவிடம் சொல்லப் போகிறேன்," என்றேன்.

கல்கத்தா வீட்டில் என் தந்தை உருக்கமுடன் உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முடியும் வரையிலாவது இம்மாதிரி அலையும் என் கால்களுக்குத் தடையிட வேண்டிக் கொண்டார். நான் அங்கு இல்லாதிருந்தபொழுது அவர் மிகுந்த அன்புடன் ஒரு திட்டம் தீட்டியிருந்தார். சுவாமி கேவலானந்தர்[6] என்ற மகானான ஒரு பண்டிதரைத் தினமும் வீட்டிற்கு வரும்படி ஏற்பாடு செய்திருந்தார்.

"அந்த முனிவர் உனக்கு சமஸ்கிருத ஆசிரியராக இருப்பார்," என்று என் தந்தை நம்பிக்கையுடன் அறிவித்தார்.

என் தெய்வீக வேட்கையை ஓர் அறிவாளியான தத்துவ ஆசிரியரின் அறிவுரையினால் திருப்தி செய்யலாமென என் தந்தை நம்பினார். ஆனால் இந்த ஏற்பாடு நுட்பமாக வேறு திசையில் திரும்பியது. என் புது ஆசிரியர் அறிவுப் பூர்வமான வறண்ட தத்துவங்களை எனக்கு போதிப்பதில் இருந்து விலகி இறைவனை அடையும் சீரிய லட்சியமான தழலை

விசிறிவிட்டார். கேவலானந்தர், லாஹிரி மகாசயரின் ஓர் உயர்ந்த சீடர் என்பது தந்தைக்குத் தெரியாது. அந்த ஒப்புயர்வற்ற குருதேவருக்கு ஆயிரக்கணக்கான சீடர்கள் இருந்தார்கள். இச்சீடர்கள், அவருடைய தெய்வீகக் காந்த ஒளியினைத் தடுக்க முடியாமல், அமைதியாக ஈர்க்கப்பட்டவர்கள். லாஹிரி மகாசயர், கேவலானந்தரை ரிஷி அல்லது ஒளி பெற்ற முனிவர் என்றே குறிப்பிடுவார் என்பதைப் பின்னர் நான் அறிந்து கொண்டேன்.

என் ஆசிரியரின் அழகான முகத்தை அடர்ந்த குழற் கற்றைகள் அலங்கரித்தன. அவரது கருவிழிகள் கபடம் ஏதுமின்றி ஒரு குழந்தையினுடையதைப் போன்ற தெளிவுடன் இருந்தன. அவரது மெல்லிய உடலின் ஒவ்வொரு அசைவும் ஒரு தீர்மானமான நிதானத்துடன் கூடி இருந்தது. என்றும் அன்புடனும் கனிவுடனும் அவர் எல்லையற்ற உணர்வு நிலையில் உறுதியுடன் நிலைத்திருந்தார். நாங்கள் ஒன்றாக இருந்த பல மணி நேரங்கள் ஆழ்ந்த கிரியா தியானத்தில் கழிந்தன.



ஸ்வாமி கேவலானந்தர்
யோகானந்தருடைய அன்பிற்குரிய சமஸ்கிருதஆசிரியர்

கேவலானந்தர் புராதன சாத்திரங்கள் அல்லது புனிதமான நூல்களில் விற்பன்னர். அவரது ஆழ்ந்த ஞானம் அவருக்கு சாஸ்திரி மகாசயர் என்ற பட்டத்தை அளித்து இருந்தது. எல்லோரும் அவரை அப்படியே அழைத்து வந்தார்கள். ஆனால் என் சமஸ்கிருத அறிவின் முன்னேற்றம் குறிப்பிடத்தக்கதாக இல்லை. நான் வறண்ட இலக்கணத்தை விட்டு யோக

முறையைப் பற்றியும் லாஹிரி மகாசயரைப் பற்றியும் பேச ஒவ்வொரு வாய்ப்பையும் தேடியவாறு இருந்தேன். ஒரு நாள் என் ஆசிரியர் அவரது குருவுடன் கழித்த தன் சொந்த வாழ்க்கையைப் பற்றிக் கூறியருளினார்.

"நான் பத்து வருடங்கள் லாஹிரி மகாசயருடன் இருக்கும் அபூர்வமான பேறு பெற்றேன். வாரணாசியில் இருந்த அவரது வீடுதான் நான் இரவு நேரங்களில் யாத்திரை செய்யும் புனித ஸ்தலமாகும். குரு எப்பொழுதும் முதல் மாடியில், முன்னால் உள்ள சிறு தாழ்வாரத்திலேயே இருப்பார். பின் சாய்வு இல்லாத ஒரு மர ஆசனத் தில் அவர் பத்மாசனத்தில் அமர்ந்திருக்க, அவருடைய சீடர்கள் அவரைச் சுற்றி மாலையிட்டது போல் அரைவட்டமாக அமர்ந்து இருப்பார்கள். அவரது கண்கள் இறை ஆனந்தத்தில் நர்த்தனம் ஆடியவாறு மின்னும். அவை எப்பொழுதுமே பாதி மூடியவாறு நிரந்தர ஆனந்த நிலையை தன் உள் மனத்தின் தூரதிருஷ்டியால் ஊடுருவி நோக்கியவாறு இருக்கும். அவர் அதிக நேரம் பேசுவது மிகக்குறைவு. எப்பொழுதாவது அவரது பார்வை உதவி வேண்டி நிற்கும் சீடன் மீது நிலைக்கும். அப்பொழுது ஒளிவெள்ளம் போன்று அவரது ஆறுதல் அளிக்கும் சொற்கள் பொழியத் தொடங்கும்.

"குருதேவரின் பார்வையினால் விவரிக்க முடியாததொரு அமைதி என்னுள் மலரும். ஒரு தெய்வீகத் தாமரையிலிருந்து வெளிப்படுவதுபோல் அவரிடமிருந்து பரவும் நறுமணத்தில் நான் மூழ்கி

விடுவேன். நாட்கணக்கில் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் அவருடன் இருந்த அனுபவம் என்னை முழுதுமே மாற்றியது. மனதை ஒருமுகப்படுத்துவதில் கட்புலனாகாத தடையேதும் ஏற்பட்டால் நான் குருதேவரின் திருவடிகளில் தியானம் செய்வேன். அப்பொழுது மிகுந்த நுட்பமான நிலைகள் என் பிடிக்குள் சுலபமாக அடங்கிவிடும். அம்மாதிரியான அனுபவங்கள் மேல்நிலை அடையாத ஆசிரியர்கள் முன்னிலையில் கிடைத்ததில்லை. குருதேவர் ஒரு நடமாடும் தேவாலயமாகவே விளங்கினார். அதன் ரகசியக் கதவுகள் பக்தியின் மூலமாக எல்லாச் சீடர்களுக்கும் திறந்தே இருக்கும்.

"லாஹிரி மகாசயர் சாஸ்திரங்களை, வெறும் நூலறிவால் விளக்கிக் கூறுபவர் அல்லர். எவ்வித முயற்சியும் இன்றி அவர் தெய்வீக நூலகத்தில் ஆழ்ந்து விடுவார். அவருடைய எல்லாம் அறியும் ஞான ஊற்றிலிருந்து சொற்குமிழிகளும் எண்ணத் தூறல்களும் பொங்கி வழியும். பன்னெடுங்காலமாக வேதங்களில்[7] மறைந்து கிடந்த ஆழ்ந்த தத்துவ விஞ்ஞானத்தைத் திறந்து வெளிக் கொணரக்கூடிய ஆச்சரியமான திறவு கோல் அவரிடம் இருந்தது. புராதன நூல்களில் குறிப்பிடப்பட்ட பலவித உணர்வு நிலைகளை விளக்குமாறு அவரிடம் வேண்டினால் அவர் புன்முறுவலுடன் சம்மதிப்பார்.

"'நான் அந்த நிலைகளை அனுபவித்து அங்கு என்ன உணர்கிறேன் என்பதை உனக்கு உடனே கூறுகிறேன்.'

எனவே வெறும் நூல்களை மட்டும் உருப்போட்டுச் சொந்த அனுபவம் ஏதுமின்றிப் போதிக்கும் ஆசிரியர்களிடமிருந்து அவர் முற்றிலும் வேறுபட்டவராவார்.

"'அப்புனிதப் பாக்களின் பொருள் உன் மனத்தில் எப்படித் தோன்றுகிறதோ அப்படியே விளக்கிக் கூறு,' என்று தன்னருகில் அமர்ந்திருக்கும் சீடரிடம் என்றும் அதிகம் பேசாத குருநாதர் கூறுவார். 'நீ சரியான விளக்கம் தருமாறு நான் உன் எண்ணங்களுக்கு வழிகாட்டுகிறேன்.' இவ்வாறு லாஹிரி மகாசயரின் அனுபூதிகள் பல சீடர்களால் விரிவான விளக்கங்களுடன் குறிக்கப்பட்டுள்ளன.

குருதேவர் என்றும் எதையும் குருட்டுத்தனமாக நம்பும்படி உபதேசித்ததில்லை. 'வார்த்தைகள் வெறும் மேலுறைகள்தாம். தியானத்தில் கிடைக்கும் ஆனந்தமான தொடர்பு மூலம் கடவுளின் இருப்பை நீ மெய்யாக அறிவாய்', என்பார் அவர்.

"சீடரின் சிக்கல் எதுவாயிருந்தாலும் சரி, குருதேவர் அதனுடைய தீர்விற்கு கிரியா யோகத்தையே சிபாரிசு செய்வார்.

"'இவ்வுடலில் நான் இல்லாதபோதும் இந்த யோகத் திறவு கோல் அதன் மகத்துவத்தை இழக்காமல் உன்னை வழி நடத்தும். ஆர்வமூட்டும் கருத்துக்களைப் போன்று இம்முறையை வெறும் எழுத்திலும் புத்தக அமைப்பிலும் வரையறை செய்து மறந்துவிட முடியாது. கிரியாவின் மூலம் விடுதலைப் பாதையில் தொடர்ந்து

இடைவிடாமல் செல், அதன் சக்தி பயிற்சியில்தான் உள்ளது.

"மனிதனின் எல்லையற்ற பரம் பொருளைத் தேடுதலில் தன் சொந்த முயற்சியின் மூலம் அடையக்கூடிய ஆற்றல் மிக்க உபாயங்களில் கிரியா தான் மேன்மையானது என நானும் கருதுகிறேன். கிரியாவின் மூலமாக எல்லா மனிதர்களிலும் மறைந் திருக்கும் சர்வவல்லமை பெற்ற இறைவன், லாஹிரி மகாசயர் உருவத்திலும் அவருடைய பல சீடர்கள் உருவத்திலும் எல்லோருக்கும் புலப்படும்படி அவதரித்திருக்கிறார்," என்று கேவலானந்தர் மனப்பூர்வமான சான்றிதழ் கொடுத்தார்.

கேவலானந்தருக்கு எதிரிலேயே ஒரு தெய்வீக அற்புதம் லாஹிரி மகாசயரால் நடத்தப்பட்டது. மகானான என் ஆசிரியர் ஒரு நாள் அதை நினைவு கூர்ந்தார். அவரது கண்கள் எங்கள் முன்னால் மேஜை மீது இருந்த சமஸ்கிருத புத்தகங்களிலிருந்து விலகி, எங்கோ தொலைவில் நிலைத்திருந்தன.

"கண் பார்வை அற்ற ராமு என்ற ஒரு சீடன் மீது, எனக்கு தீவிரமான இரக்கம் உண்டாயிற்று. தன்னுள் தெய்வீகம் முழுமையாகப் பிரகாசிக்கும் நம் குருவிற்கு விசுவாசத்துடன் தொண்டு செய்து வரும் அவனுடைய கண்கள் ஒளியிழந்தவைகளாகவா இருக்க வேண்டும்? ஒரு நாள் காலை நான் ராமுவுடன் பேச விழைந்தேன். ஆனால் அவன் பொறுமையுடன் மணிக்கணக்காகக் குருதேவருக்குப் பனை ஓலை விசிறியால் விசிறியபடி

இருந்தான். கடைசியில் அந்தப் பக்தன் அவ்வறையை விட்டு அகன்றதும் நான் அவனைத் தொடர்ந்தேன்.

"'ராமு, நீ பார்வையிழந்து எவ்வளவு காலமாயிற்று?'

"'ஐயா, பிறப்பிலிருந்தே என் கண்கள் சூரிய ஒளியின் ஒரு கீற்றைக்கூட காணும் பேறு பெறவில்லை!

"'சர்வ சக்தி வாய்ந்த நமது குரு உனக்கு உதவ முடியும். தயவு செய்து அவரிடம் வேண்டிக் கொள்.'

"மறுநாள் ராமு மிகுந்த தயக்கத்துடன் லாஹிரி மகாசயரை அணுகினான். அச்சீடன் தன்னுள் நிறைந்த ஆன்மீகச் செல்வத்துடன் உடற் செல்வமும் வேண்டுமெனக் கேட்பதற்கு வெட்கமடைந்தான்.

"'குருதேவா, பிரபஞ்சத்தை ஒளி பெறச் செய்பவன் உங்களுக்குள் இருக்கிறான். அவனது பேரொளியை என் கண்களுக்குள் கொணர்ந்து சூரியனின் சிற்றொளியை நான் காணுமாறு அருள வேண்டும்.'

"'ராமு, என்னைச் சங்கடத்தில் ஆழ்த்துவதற்காக யாரோ உன்னைத் தூண்டிவிட்டிருக்கிறார்கள். என்னிடம் குணப்படுத்தும் சக்தி இல்லையே!'

"'ஐயா, உங்களுக்குள் உள்ள எல்லையற்ற பரம்பொருளால் நிச்சயம் குணப்படுத்த முடியும்.'

"'அது உண்மையில் வேறானது, ராமு. இறைவனுக்கு எல்லையே இல்லை! மர்மமான உயிரொளியின் மூலம் விண் மீன்களுக்கும் தசையின் உயிர் செல்களுக்கும் எவர் ஒளியூட்டுகிறாரோ அவர் உன் கண்களில் பார்வையை கட்டாயம் தர முடியும்.' குருதேவர் ராமுவின் நெற்றியில் இரு புருவங்களுக்கு மத்தியில்[8]

தொட்டார்.

"உன் மனத்தை அவ்விடத்தில் ஒரு முனைப்படுத்தி நிறுத்து. ராம நாமத்தை ஏழு நாட்களுக்கு அடிக்கடி உச்சரித்து வா, கதிரவனின் பேரொளி உனக்காகச் சிறப்பாக உதயமாகும்."

"ஆகா! ஒரு வாரத்தில் அப்படியே ஆயிற்று. முதன் முதலாக ராமு இயற்கையின் அழகிய முகத்தைக் கண்டான். அந்த எல்லாமறிந்த குரு, தன் சீடன் மற்ற எல்லா மகான்களுக்கும் மேலாக அவன் பூஜித்த ராமனின் நாமத்தை ஜபிக்கும்படி அவனுக்கு சரியாக வழிகாட்டினார். ராமுவின் தெய்வ நம்பிக்கை எனும் நிலம் பக்தியால் நன்கு உழப்பட்டிருந்தது. எனவே, நிரந்தர நலம் என்னும் குருவின் சக்தி வாய்ந்த விதை, துளிர்விட்டு முளைத்தது. கேவலானந்தர் ஒரு நொடி மௌனமாக இருந்த பின்னர், தன் குருவின் மகிமையைப் பற்றி மேலும் ஒரு புகழுரை கூறினார்.

"அவர் நிகழ்த்திய அற்புதங்கள் எதிலுமே லாஹிரி மகாசயர் தன்னாற்றலினால் செய்ததாக எண்ணும் அகங்கார[9] உணர்விற்கு இடம் கொடுத்ததே இல்லை என்பது மிகத் தெளிவு. குணப்படுத்தவல்ல முதன்மை ஆற்றலிடம் அவர் முழுமையாகச் சரணடைந்திருந்ததால் அவர் வழியாகப் பிறர்க்கு அவ்வாற்றலை எளிதில் பாய்ந்தோடச் செய்தார்.

"லாஹிரி மகாசயரால் அதிசயிக்கத்தக்க வகையில் குணமாகிய கணக்கற்ற உடல்கள் இறுதியில் தகன நெருப்பிற்கு இரையாகின. ஆனால் மௌனமாக அவர்

எழுப்பிய ஆன்மீக உணர்வுகளும், அவர் உருவாக்கிய தெய்வத்தன்மை பெற்ற சீடர்களுமே அவரது என்றும் அழியாத அற்புதங்கள்."

நான் சமஸ்கிருத மொழியில் பண்டிதனாகவே இல்லை. ஆனால் எனக்குக் கேவலானந்தர் அதைவிட மேலான தெய்வீகச் சொற்றொடரியலைக் கற்பித்தார்!

---

1 23வது பக்கத்தில் கூறப்பட்டுள்ளது.

2 ஒரு சமயத் துறவி; சமஸ்கிருத வினை மூலங்களில்: துறந்து விடுதல்எனப் பொருள்படும்.

3 இப்பிறவியில் அல்லது முற்பிறவியில் செய்த கருமங்களின் விளைவுகள். சமஸ்கிருத வினைச் சொல் க்ரிசெய்தல்.

4 அத்தியாயம் ஐல, பாடல்கள் 3031.

5 நான் அவரை எப்பொழுதும் அனந்தா-தா என்றே அழைப்பேன். "தா" என்பது வங்காள மொழியில் சகோதர, சகோதரிகள், தங்களது மூத்த சகோதரரின் பெயருடன் சேர்க்கும் சொல்.

6 நாங்கள் சந்தித்தபொழுது கேவலானந்தர் துறவியாக இருக்கவில்லை. அவர் சாதாரணமாக "சாஸ்திரி மகாசயர்" என்று அழைக்கப்பட்டார். லாஹிரி மகாசயர், மாஸ்டர் மகாசயர் என்பதில் (அத்தியாயம்: 9) குழப்பம் ஏற்படக்கூடாது என்று தான் நான் என் சமஸ்கிருத ஆசிரியரை அவருடைய துறவறப் பெயரான கேவலானந்தர் என்று குறிப்பிட்டிருக்கிறேன். வங்காள மொழியில் அவருடைய சரிதம் சமீபத்தில்தான்

வெளியாகியுள்ளது. வங்காளத்தில் உள்ள குல்னா மாவட்டத்தில் 1863ல் பிறந்த கேவலானந்தர் அறுபத்தெட்டாம் வயதில் வாரணாசியில் தனது உடலை நீத்தார். அவருடைய குடும்பப் பெயர் ஆசுதோஷ் சாட்டர்ஜி ஆகும்.

7 பழமையான நான்கு வேதங்களில் கிட்டத்தட்ட 100 திருமுறைப் புத்தகங்கள் உள்ளன. எமர்ஸன் தமது சஞ்சிகையில் வேதக் கருத்துக்கு இந்த புகழுரையை அளித்திருக்கிறார்: அது உஷ்ணம், இரவு, அசைவற்ற மகா சமுத்திரம் இவைகளைப் போன்று உயர்வானது. அது ஒவ்வொரு மத உணர்வையும் தன்னுள்ளடக்கியுள்ளது. மகத்தான கவியார்வம் உள்ள ஒவ்வொரு மனதிலும் தோன்றும் மேன்மையான நன்னெறிகளையும் தன்னுள் அடக்கி இருக்கிறது.... அப்புத்தகத்தை ஒதுக்கி வைப்பதில் எந்தப் பயனும் இல்லை. நான் காடுகளில் திரியும் பொழுதோ அல்லது சிறு ஏரிகளில் படகில் செல்லும் பொழுதோ, அக்கணமே இயற்கை என்னை பிராமணனாக்கிவிடுகிறது.என்றுமே தேவையான ஒன்று, என்றுமே பிராயச்சித்தம் போன்றது, ஆழங்காண முடியாத சக்தி, இடையறாத மௌனம்... இதுதான் அவள் இனம். அவள் எனக்குக் கூறுவதுஅமைதி, புனிதம், முழுமையான துறவுஇம்மருந்துகள், எல்லா பாவங்களையும் போக்கி அஷ்ட தேவதைகளின் விண்ணின்பத்திற்கு உன்னைக் கொண்டு செல்லும்.

8 "ஒற்றை "அல்லது ஞானக்கண்ணின் பீடம். பெரும்பாலும் மரணத் தருவாயில் மனிதனின் உணர்வு இந்தப் புனித இடத்திற்குக் கொண்டு

செல்லப்படுகிறது. அதனால் மரணமுற்றவர்களின் பார்வை மேல் நோக்கி உள்ளது.

9 நான் என்ற பாவனை, அகங்காரம் (பொருள்: நான் செய்கிறேன்) இருமைக்கு

மூலகாரணம் – அதாவது தன்னைப் படைத்தவனும் தானும் வேறு என்ற தோற்றம். அகங்காரம் மனிதர்களை மாயையில் (பேரண்டப் பொய்த்தோற்றம்) ஆழ்த்துகிறது. ஆகவே தனிநிலைப்பொருள் (அகந்தை) புறப்பொருளாகத் தோன்றுகிறது. படைக்கப்பட்டவை தம்மையே படைப்பவர்களாகக் கற்பனை செய்து கொள்கின்றன. (பார்க்க பக்கங்கள் 62 அடிக்குறிப்பு. 400-401, 416 அடிக்குறிப்பு.)

சத்தியம் பற்றுவோன் "நான் தானாக செய்வதில்லை!"
என்றே எண்ணுவான்.... "புலன்களால் ஆன உலகம்
புலன்களின் வழியே செல்லும் என என்றும் உணர்வான். (V:89)
செயல்கள் இயற்கையின் நியதி; ஆத்மா
செயல் மட்டுமே ஆற்றும், கர்த்தா அன்று என
உணர்வோனே உண்மையில் கண்டும் காண்கிறான். (XIII:29)
பிறப்பதில்லை, இறப்பதில்லை, அழிவதில்லை,
எல்லாவற்றின் ஈசன் நானே-எனினும்
மாயையினால் இயற்கையை என் வசமாக்கி
நான் பிறப்பெய்துகிறேன், மறைகிறேன்,
வெளிப்படுகிறேன். (IV:6)
என்னை மறைக்கும்
பற்பல காட்சியெனும் மாயத்திரையை
கடத்தல் கடினம்; எனினும்
என்னை வணங்குபவர் எவரோ
அவரே, அதைக் கடந்து கரையேறுவர். (VII:14)
– பகவத் கீதை (ஆர்னால்டின் மொழிபெயர்ப்பிலிருந்து)

அத்தியாயம் 5

# ஒரு நறுமணச் சித்தர் தன் அற்புதங்களைக் காண்பிக்கிறார்

"ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு காலமுண்டு, வானத்தின் கீழிருக்கிற ஒவ்வொரு காரியத்துக்கும் ஒவ்வொரு சமயமுண்டு."[1]

என்னைச் சமாதானப்படுத்த, சாலமனின்[2] இந்த ஞானம் எனக்கில்லாது போய்விட்டது. எங்கு வெளியில் சென்றாலும் எனக்கென்று விதித்துள்ள என் குருவின் திருமுகத்தை, தேடியவாறு இருந்தேன். ஆனால் என் உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முடியும்வரை அவரை நான் சந்திக்கும் வாய்ப்பு ஏற்படவில்லை.

அமருடன் நான் இமயச் சாரலுக்கு ஓடிச் சென்று இரண்டாண்டுகள் கழிந்த பின்பே என் குரு ஸ்ரீ யுக்தேஸ்வர் என் வாழ்வில் அடியெடுத்து வைக்கும் மகத்தான நாள் வந்தது. இதற்கிடையில் நான் பல மகான்களைச் சந்தித்தேன். இவர்கள் நறுமணச் சித்தர், புலிச்சாமியார், நாகேந்திரநாத் பாதுரி, மாஸ்டர் மகாசயர் மற்றும் புகழ்பெற்ற வங்காள விஞ்ஞானி ஜகதீஸ் சந்திர போஸ் முதலியவர்கள்.

நறுமணச் சித்தரைச் சந்திப்பதற்கு முன் இருவகைப் பட்ட அனுபவங்களைப் பெற்றேன். ஒன்று இணக்கமானது, மற்றொன்று வேடிக்கையானது.

"கடவுள் எளிமையானவர். மற்றவை எல்லாம் சிக்கலானவை. இயற்கையெனும் சார்புலகில் தனி முதற் பொருளைத் தேடாதே."

ஒரு கோயிலிலுள்ள காளியின்[3] சிலைக்கு முன்னால் மௌனமாக நின்று கொண்டிருந்த பொழுது இந்தத் தத்துவ முடிவுகள் மிருதுவாக என் செவிகளில் விழுந்தன. நான் திரும்பியதும் அவருடைய உடையிலிருந்து அல்ல, உடை அதிகம் இல்லாததிலிருந்து சுற்றித் திரியும் சாதுவாகத் தோன்றிய ஓர் உயரமான மனிதரைக் கண்டேன்.

"என் குழப்பமான எண்ணங்களை உண்மையாகவே நீங்கள் ஊடுருவிக் கண்டுவிட்டீர்கள்! நான் நன்றியுடன் புன்னகைத்தேன். காளியைப் போல மென்மையும் வன்மையும் கலந்திருக்கும் இயற்கையின் குழப்பநிலை என்னைவிட அதிக ஞானம் படைத்தவர்களைக் குழம்பச் செய்திருக்கிறது!"

"அவளுடைய மர்மத்தை யாரே கண்டறிவார்! ஒவ்வோர் அறிவாற்றலின் முன்னேயும் நன்மையும் தீமையும் கலந்த வாழ்க்கை விடுக்கும் சவால் ஸ்பிங்க்ஸ்[4] போன்றதொரு புதிர். இவைகளுக்கு, விடை காணமுயலாமல், பலர் தீப்ஸ் நகரக் காலத்தைப் போல இப்பொழுதும் தண்டிக்கப் பெற்றுத் தங்கள் உயிரை இழக்கிறார்கள். ஆனால் எங்காவது ஓர் உயர்ந்த மனிதர் தோல்வியை ஏற்பதில்லை. மாயை[5] யின் இருமையில் இருந்து பிரிக்க முடியாத ஒருமையின் உண்மையை அவர் கண்டுணர்கிறார்.

"ஐயா, நீங்கள் உறுதியான நம்பிக்கையுடன் பேசுகிறீர்கள்."

"ஞானத்தை அடைய மிகக் கடினமான வழியாகிய நேர்மையான ஆன்ம விசாரணையில் நான் வெகுகாலமாக ஈடுபட்டு வந்திருக்கிறேன். தன் மனத்துள் எழும் எண்ணங்களை இரக்கமின்றிக் கவனித்துத் தன்னைத் தானே ஆராய்ச்சி செய்வது, ஒருவரை நிலை குலையச் செய்யக்கூடிய அனுபவம். அது வலுவான அகங்காரத்தைப் பொடிப் பொடியாக்கி விடுகிறது. ஆனால் உண்மையான ஆத்ம பரிசீலனை கணித விதிகளைப் போன்று மகான்களை உருவாக்குகிறது. சுய வெளிப்பாடு, அதாவது அவரவர் கண்டறிந்தவற்றையே ஒப்புக் கொள்ளுதல் என்ற முறையினால் அகங்காரம் உடையவர்கள் உருவாகுகிறார்கள். அவர்கள், கடவுள் மற்றும் பிரபஞ்சத்தைப் பற்றிய சொந்த விளக்கங்களில் உரிமை கொண்டாடுகிறார்கள்."

"இம்மாதிரியான அகங்காரச் சொந்தக் கருத்துக்களின் முன் சத்தியம் சந்தேகமின்றிப் பணிவுடன் ஒதுங்கிப் போய்விடுகிறது." இந்த உரையாடலை நான் ரசித்துக் கொண்டிருந்தேன்.

"போலித்தனங்களைக் களைந்தெறியும் வரை மனிதன் நிலையான மெய்ப்பொருளைக் கண்டறியவே முடியாது. மனித மனம், பல நூற்றாண்டுகளாகத் தன்னுள் ஏற்றுக் கொண்டுள்ள சேற்றுடன், எண்ணற்ற உலக மாயைகளால் குழப்பப்பட்டு வெறுக்கத்தக்க வாழ்வுடன் உறவு கொண்டு உள்ளது. மனிதன்

தன்னுள்ளே வாழும் எதிரிகளை முதலில் எதிர்த்துப் போரிடும் போது, இங்கே போர்களத்துச் சண்டைகள் அற்பமானவை ஆகிவிடுகின்றன! நம் உடல் வலிமையால் தாக்கி வெற்றி பெறுவதற்கு இந்த எதிரிகள் மானிட உருவில் வருபவை அல்ல. எங்கும் உள்ளவையாய், இடைவிடாமல் தூக்கத்தில் கூட மனிதனைத் துரத்தியவாறு நச்சுக் காற்று போன்ற ஆயுதங்களுடன் சூட்சுமமாக ஆயத்தமாகி நம் எல்லோரையும் வீழ்த்த வரும் படைவீரர்கள், அஞ்ஞான இச்சைகளே! தன் குறிக்கோள்களை எல்லாம் குழி தோண்டிப் புதைத்து விட்டுச் சாதாரணத் தலைவிதிக்குச் சரணடைபவன் சிந்தனை அற்றவன். அவன் வீரியமற்றவன், கட்டையைப் போன்றவன், இழிவானவன் அல்லது வேறு என்ன?"

"மதிப்பிற்குரிய ஐயா, குழம்பித் தவிக்கும் ஏராளமான பாமர மக்களிடம் தங்களுக்கு அனுதாபம் இல்லையா?"

அந்த ஞானி ஒரு நொடி மௌனம் சாதித்துவிட்டு, பிறகு கோடிகாட்டும் விடை கூறினார்.

"எல்லா நற்குணங்களுக்கும் களஞ்சியமான கண்ணால் காண முடியாத" இறைவன் மற்றும் எந்தக் குணநலன்களும் அற்ற கண்ணால் காணக்கூடிய மனிதன் ஆகிய இருவரையும் நேசிப்பதென்பது ஒரு பெரிய புதிர். ஆனால் மனித அறிவு, எந்தப் புதிருக்கும் ஈடுகொடுக்க வல்லது. ஆன்மப் பரிசோதனையினால் எல்லா மனித மனங்களிலுமுள்ள ஓர் ஒற்றுமை வெளிப்படுகிறது. அது எல்லா மனிதர்களையும் இறுக்கிப் பிணைக்கும்

சுயநலமே! இந்த ஒரு விதத்திலாவது மனிதர்களின் சகோதரத்துவம் வெளிப்படுகிறது. இப்பொதுப்படையான தன்மையைக் கண்டறிந்த மாத்திரத்திலேயே அதிகமான பணிவு ஏற்பட்டு விடுகிறது. இந்தப் பணிவு, ஆன்மாவின் நிவாரணத் திறனை அறியாத தன்னையொத்தவரிடம் கருணையாக முதிர்கிறது."

"ஐயா, ஒவ்வொரு யுகத்திலும் வாழ்ந்த மகான்கள் உலகத்தின் துயரங்களைப் பற்றி, நீங்கள் உணர்வது போலத்தான் உணர்ந்தி ருக்கிறார்கள்."

"மேம்போக்கான மனிதர்கள்தான் தம் குறுகிய சொந்தத் துயரங்களில் மூழ்கி மற்றவர்களின் துயரைப் பற்றிக் கவலைப் படாமல் இருப்பவர்கள். "அந்தச் சாதுவின் வைராக்கியமான முகம் கவனிக்கும்படியாகக் கனிவடைந்தது. "எவனொருவன் தன்னைத் தானே கூறுபோட்டுப் பார்க்கப் பயில்கிறானோ அவனே பிரபஞ்சம் முழுவதும் விரிந்த கருணையை அறிவான். செவிடாக்கும் அகந்தையின் கோரிக்கைகளிலிருந்து அவனுக்கு விடுதலை கிடைக்கிறது. இப்படிப்பட்ட மனநிலத்தில் இறையன்பு மலர்கிறது. அந்த உயிர் கடைசியில் தன்னைப் படைத்தவனை நோக்கித் திரும்புகிறது. வேறு எதற்கும் இல்லாவிட்டாலும் ஏன், இறைவா, ஏன்? என்று வேதனையுடன் கதறுவதற்கு வேண்டியாவது அது அங்ஙனம் திரும்புகிறது. துன்பமெனும் இழிவான சவுக்கடியால் கடைசியில் மனிதன் முடிவற்ற முழுமுதற் கடவுளிடம் துரத்தப் படுகிறான். எல்லையின்றி நிறைந்திருக்கும் இறையழகே

அவனைக் கவர வேண்டும்."

கல்கத்தா காளிகாட் கோயிலின் புகழ் பெற்ற அற்புதத்தைக் காண நான் சென்றிருந்துபோது, அந்த ஞானியும் நானும் அங்கிருந்தோம். தற்செயலாய் நான் சந்தித்த அந்தத் துறவி அதன் அலங்காரப் பெருமையை மிக எளிதாக ஒதுக்கித் தள்ளிவிட்டார்.

"கல்லும் சுண்ணாம்பும் நாம் கேட்கக்கூடிய கீதம் எதையும் இசைப்பதில்லை. மனித ஜீவனிலிருந்து வெளிப்படும் இசைக்கு மட்டுமே இதயம் திறக்கும்."

நுழைவாசலில் ஒளி வீசிக்கொண்டிருந்த கதிரவனொளி எங்களை அழைத்தது. நாங்கள் மெதுவாக வாசற்படியை அடைந்தோம். அங்கே பக்தர் கூட்டம் இங்கு மங்கும் சென்று கொண்டிருந்தது.

"நீ இளைஞன். அந்த ஞானி சிந்தனையுடன் என்னை ஊடுருவி நோக்கினார். "பாரதமும் இளமையானது தான். புராதன கால ரிஷிகள்[6] ஆன்மீக வாழ்விற்கான வழி முறைகளை அழிக்க முடியாத வகையில் வரையறுத்து வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய மூதுரை இந்த நாட்டிற்கு இன்றும் பொருந்தும். காலத்திற்கு ஒவ்வாது போகாமலும் லோகாயத வாதங்களின் சூதுவாதுகளுக்கு மத்தியில் கௌரவத்தை இழக்காமலும் அவ்வொழுக்க விதிமுறைகள் இன்றும் இந்தியாவை உருவாக்கி வருகின்றன. யுகயுகாந்திரங்களாகநிபுணர்கள் அளவிட முடியாது தவிக்கும் அளவிற்கு அவ நம்பிக்கையே உருவான காலமே, வேதங்களின் மதிப்பை அங்கீகரித்து விட்டது. அதுதான் உன் பரம்பரைச் சொத்து என்று

கொள்வாயாக."

நான் சொல்திறம் வாய்ந்த அந்தச் சாதுவிடம் இருந்து மிக்க மரியாதையுடன் விடைபெறுகையில் அவர் முன்னோடியான தீர்க்கதரிசனம் ஒன்றை வெளியிட்டார்.

"நீ இங்கிருந்து சென்றதும் இன்று புதுமையான அனுபவம் ஒன்றை அடைவாய்."

நான் கோயிலிலிருந்து வெளியேறி குறிக்கோள் எதுவுமின்றிச் சென்று கொண்டிருந்தேன். ஒரு மூலையில் திரும்பியதும் எனக்கு முன்பே அறிமுகமாகி இருந்த ஒருவனிடம் சிக்கினேன். அவன் பேச ஆரம்பித்தால் அது காலத்திற்குக் கட்டுப்படாது. நிறுத்தாமல் பேசிக் கொண்டே போவான்.

அவன் உறுதி அளித்தான், நாம் பிரிந்திருந்த வருடங்களில் நிகழ்ந்த எல்லாவற்றையும் கூறினால் உன்னை வெகு சீக்கிரத்தில் போக விட்டுவிடுகிறேன்.

"என்ன முரண்பாடான பேச்சு! நான் இப்பொழுதே உன்னை விட்டுக் கிளம்ப வேண்டுமே."

ஆனால் அவன் என் கையைப் பிடித்துக் கொண்டு பல சிறு சிறு செய்திகளைக் கேட்டறிந்தான். அவன் பசியுடன் கூடிய ஓர் ஓநாயைப் போல இருக்கிறானென எனக்கு வேடிக்கையாகத் தோன்றியது. நான் பேசப் பேச அவன் திருப்தி இல்லாமல் இன்னும் ஏதேதோ கேட்டுக் கொண்டே இருந்தான். அவனிடமிருந்து தப்பிக்க ஒரு நல்ல வழியைக் காட்டும்படி நான் காளிமாதாவை மனத்திற்குள் வேண்டினேன்.

என் நண்பன் திடீரென்று என்னை விட்டகன்றான். நான் நிம்மதிப் பெருமூச்சு விட்டு, எங்கேயாவது அந்த வாயாடிக் காய்ச்சல் திரும்பி வந்துவிடப் போகிறதே என்ற பயத்தில் என் நடையின் வேகத்தை இருமடங்காக்கினேன். என் பின்னால் வேகமாகத் தொடரும் காலடிச் சத்தம் கேட்டு என் நடையை விரைவு படுத்தினேன்; திரும்பிப் பார்க்கும் தைரியம் எனக்கில்லை. ஆனால் ஒரே துள்ளலில், அந்த நண்பன் என்னிடம் வந்து வேடிக்கையாக என் தோள்களைப் பிடித்துக் கொண்டான்.

"நான் கந்த பாபா (நறுமணச் சித்தர்) வைப் பற்றி உன்னிடம் சொல்ல மறந்துவிட்டேன். அதோ அந்த வீட்டில் அவர் வசிக்கிறார். அவன் கொஞ்ச தூரத்திலிருந்த ஒரு வீட்டைச் சுட்டிக் காட்டினான். அவசியம் அவரை சந்திக்கவும், அவர் சுவாரஸ்யமானவர். உனக்கு ஒரு புதுமையான அனுபவம் உண்டாகும். சரி வருகிறேன், என்று கூறிவிட்டு அவன் உண்மையிலேயே என்னை விட்டு அகன்றான்.

காளிகாட் கோயிலில், சாது முன்னறிவிப்பாகக் கூறிய இதே மாதிரியான சொற்கள் என் நினைவில் பளிச்சிட்டன. ஆவலால் தூண்டப்பட்டு நான் அந்த வீட்டை அடைந்ததும், ஒரு விசாலமான கூடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டேன். ஒரு கனமான ஆரஞ்சு வண்ணக் கம்பளத்தில் ஒரு கும்பல் அங்குமிங்குமாகச் சப்பணமிட்டு உட்கார்ந்திருந்தது. திகைப்பு கலந்த

கிசுகிசுப்பு என் செவியில் விழுந்தது.

"சிறுத்தைப்புலித் தோலின் மீது அமர்ந்திருக்கும் கந்த பாபாவைப் பார், அவரால் மணமில்லாத எந்த மலருக்கும் இயற்கையான நறுமணத்தை அளிக்க முடியும். அல்லது வாடிய மலரைப் புதுப்பிக்க முடியும் அல்லது ஒரு மனிதனின் தோலிருந்து நறுமணம் வீசச் செய்யவும் அவரால் முடியும்."

நான் அந்தச் சித்தரை நேராக நோக்கினேன். அவரது பார்வை உடனடியாக என் பார்வையில் நிலைத்தது. அவர் பருமனாகவும் தாடியுடனும் கருத்த உடலும் ஒளிவீசும் பெரிய கண்களும் கொண்டு விளங்கினார்.

"மகனே, உன்னைக் கண்டதில் எனக்கு மெத்த மகிழ்ச்சி. உனக்கு என்ன வேண்டுமென்று கூறு. உனக்கு ஏதாவது வாசனைப் பொருள் வேண்டுமா?"

"எதற்காக?" அவருடைய பேச்சு எனக்கு சிறு பிள்ளைத் தனமாகத் தோன்றியது.

"அதிசயமான முறையில் நறுமணத்தை அனுபவிப்பதற்கு."

"நறுமணத்தை உண்டாக்குவதற்கு கடவுளை ஏவுவதா?"

"அதனாலென்ன? எப்படியும் இறைவன் வாசனைகளைப் படைக்கத்தானே செய்கிறான்?"

"ஆம், ஆனால் மென்மையான புது மலர்களைப் படைத்து, பயன்பட்டபின் களைந்து எறிவதுதான் இறைவனின் நோக்கம். உங்களால் மலர்களைப் படைக்க முடியுமா?"

"முடியும். ஆனால் நான் சாதாரணமாக வாசனைப் பொருள்களைத்தான் படைப்பது வழக்கம், இளம் நண்பனே."

"அப்படியாயின் வாசனைப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளை மூடிவிடவேண்டியதுதான்."

"நான் அவர்கள் வியாபாரம் செய்வதை அனுமதிப்பேன். என் குறிக்கோள், இறைவனின் சக்தியை நிரூபிப்பதுதான்."

"ஐயா, இறைவனை நிரூபிக்க வேண்டியது அவசியந்தானா? அவன் எல்லா இடங்களிலும் எல்லாவற்றிலும் அற்புதங்களை நிகழ்த்தியவாறு இல்லையா?"

"ஆம், ஆனால் நாமும் அவனுடைய எல்லையில்லாதப் படைப்பு வகைகளில் சிலவற்றை வெளிப்படுத்த வேண்டும்."

"நீங்கள் இந்தக் கலையில் வல்லவராவதற்கு எத்தனை காலம் பிடித்தது?"

"பன்னிரெண்டு ஆண்டுகள்."

"சூட்சும முறையில் நறுமணத்தை உற்பத்தி செய்வதற்கா! என் மதிப்பிற்குரிய மகானே, நீங்கள் ஒரு பூக்கடையில் இருந்து சில ரூபாய்கள் கொடுத்துப் பெறக் கூடிய வாசனைகளை அடைய பன்னிரெண்டு ஆண்டுகள் வீணடித்து விட்டீர்களெனத் தோன்றுகிறது."

"நறுமணம் மலர்களுடனேயே மறைந்துவிடுகிறதே."

"நறுமணம் மரணத்துடன் மறைகிறது. உடலுக்கு மட்டும் இன்பம் தரக்கூடியதை நான் ஏன்

விரும்பவேண்டும்?"

"ஐயா, தத்துவ நிபுணரே, நீங்கள் என்னை மகிழ்விக்கிறீர்கள். சரி, இப்பொழுது தங்கள் வலக்கையை நீட்டுங்கள். அவர் ஆசி கூறுவது போன்று கையை அசைத்தார்.

நான் கந்த பாபாவிடமிருந்து சில அடிகள் தள்ளி இருந்தேன். என் உடலைத் தீண்டக்கூடிய அளவிற்கு யாரும் என் அருகிலில்லை. நான் என் கையை நீட்டினேன். ஆனால் அந்த யோகி என் கையைத் தொடவில்லை.

"உனக்கு எந்த மணம் வேண்டும்?"

"ரோஜா."

"அப்படியே ஆகட்டும்."

என் உள்ளங்கையிலிருந்து ரோஜாவின் இனிய நறுமணம் கமழ்ந்ததைக் கண்டு எனக்கு ஒரே வியப்பு. நான் பக்கத்திலிருந்த பூச்சாடியிலிருந்து பெரிய வாசனையற்ற வெள்ளை நிறப் பூவொன்றைப் புன்முறுவலுடன் கையில் எடுத்தேன்.

"இந்த வாசனையற்ற மலரிலிருந்து மல்லிகை மணம் கமழச் செய்யமுடியுமா?"

"அப்படியே ஆகட்டும்."

அந்த இதழ்களிலிருந்து உடனே மல்லிகை மணம் கமழத் தொடங்கியது. நான் அந்த அதிசய சித்தருக்கு நன்றி கூறி அவருடைய மாணவர்களில் ஒருவனுக்கருகில் சென்று அமர்ந்து கொண்டேன். அவன், கந்த பாபாவின் சரியான பெயர் ஸ்வாமி

விஷுத்தானந்தர் என்றும் அவர் வியக்கத்தக்க பல யோக ரகசியங்களை ஒரு திபெத்தியக் குருவிடமிருந்து கற்றறிந்தாரெனவும் கூறினான். அந்தத் திபெத்திய யோகிக்குக் கிட்டத்தட்ட ஆயிரம் வயதிற்கு மேல் ஆகியிருக்குமென்று அவன் உறுதியுடன் கூறினான்.

"அவருடைய சீடரான கந்த பாபா, நீங்கள் இப்பொழுது பார்த்த மாதிரி எளிய நேரடியான முறையில் எப்பொழுதும் நறுமண அற்புதங்களை நிகழ்த்துவதில்லை. அந்த மாணவரின் பேச்சில் அவர் குருவைப் பற்றிய பெருமை தொனித்தது. அவருடைய முறைகள் மனிதர்களின் மன நிலைக்குத் தக்கபடி மாறும். அவர் அதிசயமானவர். கல்கத்தாவிலுள்ள அறிவாளிகளில் பெரும்பாலோர் அவரைப் பின்பற்றுகிறார்கள்."

நான் அவர்களுடன் சேரப் போவதில்லை என்று மனத்திற்குள் தீர்மானித்துக் கொண்டேன். வெளிப்படையாக அதிசயங்களை நிகழ்த்தும் ஒரு குரு எனக்கு உகந்தவராயில்லை. நான் கந்த பாபாவிற்குப் பணிவுடன் நன்றி கூறிவிட்டு அங்கிருந்து கிளம்பினேன். அன்று ஏற்பட்ட மூன்று வெவ்வேறு விதமான சந்திப்புக்களைப் பற்றி எண்ணமிட்டவாறே மெதுவாக நடந்து வீட்டைச் சென்றடைந்தேன்.

என் சகோதரி உமா வாசற்படியிலேயே என்னைச் சந்தித்தாள்.

"வாசனைத் திரவமெல்லாம் உபயோகப்படுத்தி மிகவும் நவநாகரிகமாகி வருகிறாயே!"

நான் எதுவும் பேசாமல் என் கையை அவள் முகர்வதற்கு நீட்டினேன்.

"என்ன கவர்ச்சியான ரோஜா மணம்! வழக்கத்திற்கு மாறாக மிக அதிகமாக இருக்கிறதே!"

அது "வழக்கத்திற்கு மிக அதிகம் மாறானது", என்று நினைத்தவாறு, நான் மௌனமாக அதிசயமான வகையில் நறுமணம் பெற்ற மலரை அவள் மூக்கினருகில் பிடித்தேன்.

"ஓ, எனக்கு மல்லிகை ரொம்பப் பிடிக்குமே!" அவள் அம்மலரைப் பிடுங்கினாள். வாசனையற்றது என்று அவள் நன்கு அறிந்திருந்த ஒருவித மலரிலிருந்து அவள் திரும்பத் திரும்ப மல்லிகையின் மணத்தை நுகர்ந்தபொழுது ஒரு வினோதமான குழப்பம் அவள் முகத்தில் பரவியது. அவளுடைய முக பாவங்களைக் கண்டதும், என் மனத்தை கந்த பாபா வசியப்படுத்தி நான் மட்டும் அம்மணத்தை உணரும்படி செய்திருப்பாரோ என்ற சந்தேகம் நீங்கியது.

பின்னால் நான் அலகானந்தன் என்ற என் நண்பன் ஒருவன் மூலம் அந்த நறுமணச் சித்தரிடம் ஒரு சக்தி இருக்கிறது என்று கேள்விப்பட்டேன். உலகில் பசியால் தவிக்கும் கோடிக்கணக்கான மக்களிடம் அந்தச் சக்தி இருந்தால் நன்றாக இருந்திருக்குமே என்று நினைத்துக் கொண்டேன்.

அலகானந்தன், ஒரு சமயம் நான் நூறு விருந்தாளிகளுடன் பர்த்வானில் கந்த பாபாவின் வீட்டில் இருந்தேன். அது ஒரு பெரிய விழாச் சமயம். அந்த

யோகி வெறும் காற்றிலிருந்து பொருட்களை வரவழைக்கும் திறனில் புகழ் பெற்றிருந்ததால் நான் சிரித்தபடி அவரிடம் அப்பருவத்தில் கிடைக்காததொரு ஆரஞ்சுப் பழவகையை வரவழைக்கும்படி கேட்டுக் கொண்டேன். அக்கணமே எல்லா வாழை இலைகளிலும் பரிமாறப்பட்டிருந்த பூரிகள் (லுச்சி) உப்பிவிட்டன. ஒவ்வொரு பூரிக்குள்ளும் உரிக்கப்பட்ட ஆரஞ்சு இருந்தது. நான் சற்றுத் தயக்கத்துடன் என் பழத்தைச் சுவைத்தேன். ஆனால் அது மிக அருமையான சுவையுடன் இருந்ததைக் கண்டேன், என்று கூறினான்.

பல ஆண்டுகளுக்குப்பின் என் ஆத்ம ஞானத்தின் மூலம் கந்த பாபா எப்படிப் பொருட்களைத் தோற்றுவித்தார் என்று புரிந்து கொண்டேன். ஆனால் பாவம், அந்த வழி, பசியால் பரிதவிக்கும் உலக மக்களுக்கு எட்டாததாயிருந்தது.

ஊறு, ஒளி,சுவை,ஓசை,நாற்றம் முதலிய உணர்வுகளுக்கு வேண்டிய தூண்டல்கள் எலக்ட்ரான், புரோட்டான் ஆகியவற்றின் அதிர்வு வேறுபாட்டால் உண்டாக்கப்படுகின்றன. அந்த அதிர்வுகள் பிராணனால் முறைப்படி ஒழுங்குபடுத்தப்படுகின்றன. பிராணன், ஐந்து தனித்தனி புலன்நுகர் எண்ணப் பொருட்களால் அறிவுப்பூர்வமாக ஆற்றலூட்டம் பெற்ற உயிர்துகள்கள் அல்லது சூட்சுமமான உயிர்ச்சக்திகள் (அணு சக்திகளை விட நுட்பமானவை) ஆகும்.

கந்த பாபா சில யோகப் பயிற்சிகளினால் பிராண சக்தியுடன் தன்னை இசைவித்துக் கொண்டு

உயிர்த்துகள்களின் அதிர்வலை அமைப்பில் மாறுதலை ஏற்படுத்தித் தனக்கு வேண்டியதைத் தருவித்துக் கொள்கிறார். அவருடைய நறுமணம், பழம், மற்ற அற்புதங்கள் எல்லாம் வசிய முறைப்படி உண்டாக்கப்பட்ட உள்ளுணர்வுகளில்லை. ஆனால், இவ்வுலகத்திற்குரிய அலையதிர்வுகளின் மூலம் வரவழைக்கப்பட்டவையே.

மயக்க மருந்தினால் ஆபத்து வரலாம் என்ற நிலையிலுள்ள நோயாளிகளுக்கு மனோவசியத்தை மன மயக்க மருந்தாகப் பயன்படுத்தி மருத்துவர்கள் சிறு அறுவை சிகிச்சைகளைச் செய்து வருகிறார்கள். வசியப்படுவது என்பது அடிக்கடி அந்த நிலைக்கு உட்படுபவர்களுக்குக் கேடு விளைவிப்பதாகும். காலக்கிரமத்தில் மூளை உயிரணுக்களின் அமைப்பையே குலைத்து எதிர்மறையான மனப்போக்கைத் தூண்டிவிட ஏதுவாகிறது. மனோவசியம் என்பது மற்றவரின் உணர்வு நிலையில் அத்துமீறி நுழைவதாகும்.[7] அதன் தற்காலிக நிலைக்கும் தெய்வீக அருள் பெற்ற மனிதர்கள் செய்யும் அற்புதங்களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இறைவனிடத்தில் விழிப்பு உணர்ச்சியுள்ள உண்மையான மகான்கள், படைக்கும் பிரபஞ்சக் கனவு காண்பவனுடன்[8] இச்சா சக்தியை இணக்கமாகப் பொருத்தி, இக்கனவுலகில் மாறுதல்களைச் செய்கிறார்கள்.

நறுமணச் சித்தர் போன்றவர்களின் அற்புதச் செயல்கள் பிரமிப்பூட்டுபவை என்றாலும் ஆன்ம சாதனையில் உபயோகம் அற்றவை. வெறும் பொழுது

போக்கைத் தவிர வேறு எந்தக் குறிக்கோளும் அற்ற அவைகள் இறைவனைத் தீவிரமாகத் தேடுவதிலிருந்து திசை திருப்பிவிடக் கூடியவையாகும்.

பெரிய மகான்கள், ஆடம்பர அற்புதங்கள் நடத்துவதைக் கண்டிக்கிறார்கள். அபு சையத் என்னும் பாரசீக ஞானி தண்ணீரிலும், தரையிலும், ஆகாயத்திலும் செல்லக்கூடிய அபூர்வத் திறமைகளில் கர்வம் கொண்டிருந்த சில பக்கிரி (முஸ்லிம் துறவி) களைப் பார்த்துக் கேலி செய்தார்.

"ஏன், தவளை கூடத்தான் தண்ணீரில் இயல்பாக இருக்கிறது". அபு சையத் பரிகாசமாகச் சுட்டிக் காட்டினார். "காகமும் கழுகும் சுலபமாக ஆகாயத்தில் பறக்கின்றன. சைத்தான் ஒரே சமயத்தில் கீழை நாட்டிலும் மேலை நாட்டிலும் காணப்படுகிறான். உண்மையான மனிதன் தன் சக மனிதர்களிடையே நேர்மையுடன் வாழ் கிறான். அவன் வியாபாரியாகவும் இருக்கலாம். ஆயினும் ஒரு வினாடிகூட இறைவனை மறவாமல் இருப்பவன்."[9] மற்றொரு சமயத்தில் அப்பாரசீகப் பெருந்தகை மத வாழ்க்கையைப் பற்றிய தன் கருத்தைப் பின்வருமாறு கூறுகிறார்: "உன் தலையிலுள்ளதை (சுயநல இச்சைகளையும் பேராசைகளையும்) ஒதுக்கித் தள்ளிவிட்டு உன் கையிலுள்ளதைத் தாராளமாக அள்ளிக் கொடுக்க வேண்டும். துன்பங்களைக் கண்டு ஒருபோதும் கலங்கக்கூடாது!"

காளிகாட் கோயிலில் கண்ட பாரபட்சமற்ற

ஞானியோ அல்லது திபெத்தில் பயிற்சிபெற்ற யோகியோ, குருவை அடைய வேண்டுமென்ற என் ஏக்கத்தைத் தணிக்கவில்லை. என் இதயத்திற்கு இனங்கண்டு கொள்ள பயிற்றுநர் எவரும் தேவைப்படவில்லை; மிக அபூர்வமாகவே மௌனத்திலிருந்து எழுப்பப்படும் அது 'ஆகா!' என்று உடனே கூவியது. கடைசியாக நான் என் குருதேவரைச் சந்தித்தபொழுது மேன்மையான உதாரணத்தினால் மட்டுமே அவர் ஓர் உண்மையான மனிதனின் தன்மையை எனக்கு உணர்த்தினார்.

---

1 பிரசங்கி 3:1 (பைபிள், யாக்கோபு ராஜா மொழிபெயர்ப்பு)

2 இஸ்ரேல் நாட்டின் ஒரு வீர அரசன் (கி.மு. 10வது நூற்றாண்டு) இன்றுகூட அவன் பெயரை மதிநுட்பம் வாய்ந்த மனிதனுக்கு எடுத்துக்காட்டாகக் கூறிப் பேசுமளவிற்கு, நியாயத்துடனும் அறிவுடனும் அரசு செலுத்தி வந்தான்.

3 இயற்கஜில் விரந்தரமயுனதயு தத்வத்தக் றிப்ப கயு. அவள் வழக்கமயுக நயுன் ககள் உடய பண் உவத்றுல், பத்றுக்ம் சிவன் (அல்ல எல்லயற்ற) மல் வின்றிப்பதயுகச் சித்தநிக்கப்பட்ப்பயுள்.

ஏனெனில் இயற்கையின் செயல்கள் அல்லது இந்த வெளி உலகம், உள்ளுறையும் ஆன்மத்திலிருந்து எழுந்துள்ளது. நான்கு கைகளும் முக்கிய குணங்களைஇரண்டு நன்மையையும், இரண்டு அழிவையும்குறிக்கின்றன; படைப்பு அல்லது பொருட்களின் இருமையைக் குறிக்கின்றன.

4 கிரேக்கப் புராணங்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் பூதாகரமானதொரு கற்பனைப்

பிராணி. ஸ்பிங்க்ஸ் சாதாரணமாக ஒரு பெண்ணின் தலையுடனும், சிங்கம் அல்லது நாயின் உடலுடனும், இறக்கைகளுடன் சித்தரிக்கப்படுகிறது. இந்தப் பிராணி புராதனக் கிரேக்க நகரமாகிய தீப்ஸ் நகரத்திற்கு வருவோருக்கெல்லாம் ஒரு புதிரைக் கூறி அதற்கு விடை கொடுக்க முடியாதவரை விழுங்கிவிடும்.

5 பேரண்டத்தின் பொய்த் தோற்றம். பொருள்: அளப்பவர். மாயை என்பது படைப்பில் ஒரு விந்தையான சக்தி. இதன் மூலம் அளவிடமுடியாத மற்றும் பிரிக்க முடியாதவற்றில் வரையறைகளும் பாகுபாடுகளும் தோன்றும்படி அமைக்கப் பட்டுள்ளன.

எமர்ஸன் மாயையைக் குறித்துப் பின்வரும் பொருள்படும் கவிதையை எழுதியிருக்கிறார் (மாயை என்பதை ஙஹண்ஹ என்று எழுதியிருக்கிறார்): மாயை ஊடுருவ முடியாதவள்; எண்ணற்ற சிலந்தி வலைகளை நெய்தளிக்கும் அவளின்

அழகுச் சித்திரங்கள் என்றும் தோல்வி அடையாதவை;

ஒன்றின் மேலொன்றாய், திரைமேல் திரையாய், மயக்குபவள்;
ஏமாளியாக இருக்க விரும்பும் மனிதனைநம்ப வைக்கவேச் செய்வாள்,

6 ரிஷிகள்: காண்பவர்கள்: நிர்ணயிக்க முடியாத பழங்காலத்தைச் சேர்ந்த வேதங்களின் ஆசிரியர்கள்.

7 மேலை நாட்டு மனோதத்துவ நிபுணர்கள், பெரும்பாலும், உணர்வு நிலைகளைப் பற்றி ஆராயும் பொழுது தங்கள் ஆராய்ச்சிகளை அடிமனத்தை ஆராய்வதுடனும் மன வியாதியுடனும் (உள நோய் மருத்துவம் மற்றும் உளவியல் ஆராய்ச்சி மூலமாக குணப்படுத்தப்படுபவை) நிறுத்திக் கொள்கிறார்கள். சாதாரண உள நிலைகள் மற்றும் அவற்றின் உணர்ச்சிகள், விருப்பத்தை வெளியிடும் தன்மைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்யப்படவில்லை. உண்மையான இந்த அடிப்படை விஷயம் இந்தியத் தத்துவ விசாரத்தில் அலட்சியம் செய்யப்படவில்லை. சாதாரண மன மாறுபாடுகளின் பல்வேறு தொடர்புகளைப் பற்றியும் புத்தி (பகுத்தறிவு), அகங்காரம் (நான் என்னும் உணர்வு), மனம் (மனது அல்லது இந்திரியங்களின் உணர்வு)இவைகளின் விசேஷமான செயல்களைப் பற்றியும், சாங்கியம் மற்றும் யோக முறைகளில் துல்லியமாக வகைப்படுத்தப்பட்டுள்ளது.

8 பிரபஞ்சம் அதன் ஒவ்வொரு துகளிலும் அமைந்திருப்பதைக் காணலாம். ஒவ்வொரு பொருளும் ஒரு மறை பொருளால் ஆனது. ஒரு பனித்துளியில் உலகக் கோளம் தன்னைத்தானே கொண்டுள்ளது... எங்கும் வியாபித்துள்ளதின் உண்மையான கருத்து என்னவெனில் இறைவன் தன்னுடைய அனைத்து பாகங்களுடனும் ஒவ்வொரு புல்லிலும் பூண்டிலும் தோற்றமளிக்கிறான் என்பதாகும். Emerson, in "Compensation".

9 வியாபாரம் செய்வது, ஆயினும் இறைவனை மறவாமல் இருப்பது! இதன் கருத்தாவது, மனமும் செயலும் ஒன்றுக்கொன்று இணைந்து செயல்படுகின்றன என்பதாம். சில மேலை நாட்டு எழுத்தாளர்கள் இந்துக்களின் குறிக்கோள் பயந்து தப்பிக்கும் செயலின்மை மற்றும் சமூக விரோதமாக ஒதுங்கிக் கொள்ளுதல் என்று கூறுகிறார்கள். ஆயினும் வேதங்களில் மனித வாழ்க்கைக்கென வகுக்கப் பட்டிருக்கும் நான்கு கட்டங்கள் மக்களுக்கு மிகச் சரியாக வழிகாட்டுகின்றன. வாழ்க்கையில் முதல் அரைப்பாகம், கல்விக்கும் இல்லறக் கடமைகளுக்கும், இரண்டாவது அரைப்பாகம், தியானம் மற்றும் இறைப் பயிற்சிகளுக்கும் ஒதுக்கப்பட்டுள்ளது. (பார்க்க பக்கம் 373 அடிக்குறிப்பு.)

ஆத்மாவில் முழுவதும் லயிப்பதற்கு தனிமை அவசியந்தான். ஆனால் மகான்கள் பிறகு மக்கள் சேவைக்காக உலகிற்குத் திரும்பி விடுகிறார்கள். வெளிக்காட்டக்கூடிய எந்த வேலையிலும் ஈடுபடாத மகான்கள் கூட, அவர்கள் எண்ணங்கள் மற்றும் புனித அதிர்வலைகள் மூலமாக இவ்வுலகிற்கு உயர்ந்த நன்மைகளை அருளுகிறார்கள். ஞானஒளி பெறாத மனிதர்களின் மிகுந்த கடினமான சமூக சேவைகளைவிட அவை மிக உயர்ந்தவை. பெரிய மகான்கள், அவரவர்களுக்கே உரிய தனிப்பட்ட முறையில் பெரும்பாலும் கடும் எதிர்ப்புகளிடையே மக்களை எழுப்பி ஊக்குவிப்பதற்கு சுயநலம் ஏதுமின்றிப் பாடுபடுகிறார்கள். அஹிம்சை, துன்பங் கொடாமை என்பது முழுமையான சீல குணமாக (ஸகலோ தர்ம) மகாபாரதத்தில் கூறப்படுகிறது. ஒருவர் யாருக்கும் உதவி செய்யாமல் இருப்பது ஏதோ ஒரு வகையில் அவர்களைத் துன்புறுத்துவதாகும் என்று அக்கருத்திற்கேற்ற காரணத்தின்படி கூறப்பட்டுள்ள நேரிடை உத்தரவாகும்.

பகவத் கீதை (III:48): செயல்படுவது என்பது மனிதனின் இயல்பே என்பதை சுட்டிக் காட்டுகிறது. சோம்பேறித்தனம் என்பது "தவறாகச் செயல்படுவதாகும்."

"வினையைத் துறந்த எவரும்
வினையிலிருந்து தப்பிக்க இயலாது;
வெறும் துறத்தலினாலே எவரும்
பரிபூரணம் அடைய இயலாது
ஒரு கண நேரமெனும், எக்காலத்திலும்,
எவரும் வினையற்று இருக்க இயலாது;
இச்சை இல்லை எனினும், இயற்கை நியதி
எவரையும் வினையாற்ற வைக்கும்.
(மனத்தின் எண்ணம்கூட வினையின் வடிவமே).
புலன்களை வென்ற மனதும் உடலும் இயைந்து,
பலன் எதிர்நோக்கா நற்செயலாற்றும்
ஒருவன் எவனோ, அவனே அர்ஜுனா!
போற்றத்தக்கவன். உனக்கென
விதிக்கப்பட்ட வினையைச் செய்க!"

(ஆர்னால்டின் மொழிபெயர்ப்பிலிருந்து)

## அத்தியாயம் 6

# புலிச்சாமியார்

"நான் புலிச் சாமியாரின் விலாசத்தைக் கண்டு பிடித்துள்ளேன். நாளைக்கு அவரிடம் செல்லலாம்."

வரவேற்கத்தக்க இந்த யோசனை என் உயர்நிலைப் பள்ளி நண்பர்களில் ஒருவனாகிய சண்டியினிடமிருந்து வந்தது. சன்னியாசி ஆவதற்குமுன் புலிகளைத் தன் வெறும் கைகளினால் பிடித்துச் சண்டையிட்டவரான இந்த மகானை சந்திக்க நான் மிக ஆவலுடன் இருந்தேன். இம்மாதிரியான சாதனைகளைப் பற்றி அறிய சிறுவர்களுக்கே ஏற்படும் ஆர்வம் என்னுள் பலமாக இருந்தது.

மறுநாள் பொழுது விடியும்போது நல்ல குளிராக இருந்தது. ஆனாலும், நானும் சண்டியும் மிக உற்சாகத்துடன் வெளியே கிளம்பினோம். கல்கத்தாவிற்கு வெளியே உள்ள பவானிபூரில் வீணாக நிறைய அலைந்த பிறகு சரியான வீட்டிற்கு வந்து சேர்ந்தோம். கதவில் இரு இரும்பு வளையங்கள் போடப் பட்டிருந்தன. நான் அவைகளைப் பலமாகத் தட்டினேன். இச்சத்தத்தைப் பொருட்படுத்தாது வேலைக்காரன் ஒருவன் நிதானமாக வந்தான். அவனுடைய ஏளனமான புன்முறுவல், ஓசை செய்யும் விருந்தினர்கள் ஒரு மகானின் வீட்டின் அமைதியைக் குலைக்க முடியாது என்று கூறுவதுபோல் தோன்றியது.

அந்த மௌனமான கண்டனத்தை உணர்ந்தவாறு நாங்கள் உள்ளே அழைக்கப்பட்டதும் நன்றியுடன் நுழைந்தோம். வெகுநேரம் காத்திருந்தது எங்களைச் சந்தேகம் கொள்ளச் செய்தது. சத்தியத்தைத் தேடுபவர்களுக்கு இந்தியாவின் எழுதப்படாத விதிமுறை பொறுமை தான்; குருவானவர் வேண்டுமென்றே அவரைச் சந்திப்பதில் ஒருவருடைய ஆர்வத்தைச் சோதிக்கலாம். உளவியல் பூர்வமான இந்தத் தந்திரம் மேலை நாடுகளில் மருத்துவர்களாலும் பல் வைத்தியர்களாலும் சாதாரணமாகக் கடைப்பிடிக்கப்படுகிறது.

கடைசியில் சண்டியும் நானும் வேலைக்காரனால் அழைக்கப்பட்டு ஒரு படுக்கை அறைக்குள் சென்றோம். அந்தப் புகழ்பெற்ற ஸோஹம்[1] ஸ்வாமிகள் அவருடைய படுக்கையின் மேல் அமர்ந்திருந்தார், அவருடைய மிகப் பெரிய சரீரத்தைக் கண்டு வியப்புக்குள்ளானோம். விரிந்த கண்களுடன் நாங்கள் பேச்சற்று நின்றோம். நாங்கள் இதற்குமுன் இது போன்ற மார்பையோ, கால்பந்து அளவு பெரிதான புஜங்களையோ கண்டதில்லை. மிகப் பெரிய கழுத்தின் மேல் அச்சந்தரும், ஆனால் அமைதியான முகம் அடர்ந்த கேசக் குழல்கள், தாடி, மீசை இவைகளால் அலங்கரிக்கப்பட்டு விளங்கியது. அவருடைய கருத்த கண்களில் புறா மற்றும் புலியை ஒத்த குணங்களின் சாயல்கள் ஒளிர்ந்தன. தசைப் பிடிப்பான அவருடைய இடுப்பில் புலித்தோல் ஒன்றைத் தவிர வேறு ஆடைகள் ஏதுமில்லை.

நாங்கள் பேசும் திறமையை அடைந்ததும் நானும் என் நண்பனும் அவருக்கு வாழ்த்துக் கூறினோம். புலிகளின் மத்தியில் அவருடைய அசாதாரணமான வீரத்தைப் பற்றி எங்கள் வியப்பை எடுத்துரைத்தோம்.

"காட்டு மிருகங்களிலே மிகப் பயங்கரமான வங்காள அரசர்களை (Royal Bengals) வெறும் கைகளினால் மட்டும் எப்படி அடக்க முடியும் என்பதைப் பற்றித் தயவு செய்து நீங்கள் எங்களுக்கு எடுத்துக் கூறுங்களேன்!"

"என் குழந்தைகளே, புலிகளுடன் சண்டையிடுவது எனக்கு ஒரு பிரமாதமல்ல. தேவையானால் இன்று கூட அதை என்னால் செய்ய முடியும். அவர் ஒரு குழந்தை போலச் சிரித்தார். நீங்கள் புலிகளைப் புலிகளாகக் காண்கிறீர்கள். நான் அவைகளைப் பூனைகளாக அறிகிறேன்."

"ஸ்வாமிகளே, புலிகள் பூனைகள்தாம் என்று என் உள்மனத்தை வேண்டுமானால் என்னால் நம்பச் செய்ய முடியும், ஆனால் அதைப் புலிகளால் நம்ப வைக்க என்னால் முடியுமா?"

"நிச்சயம் பலமும் கூட வேண்டியதுதான்! புலியைப் பூனைதானென்று நம்பும் ஒரு குழந்தை அப்புலியை வெற்றிக் கொள்ளும் என எதிர்பார்க்க முடியாது. சக்தி வாய்ந்த கைகளே எனக்குப் போதுமான ஆயுதங்கள்."

அவர் எங்களைத் தாழ்வாரத்திற்கு அழைத்துச் சென்றார். அங்குள்ள சுவரின் ஓரத்தைக் கையால் குத்தினார். ஒரு செங்கல் பெயர்ந்து தரையில் விழுந்தது. பல் விழுந்த இடம் போன்ற இடைவெளி தோன்றி

அதனூடே வானம் தெளிவாக எட்டிப் பார்த்தது. நான் ஆச்சரியத்தினால் தடுமாறினேன். திடமான கற்சுவரில் புதைக்கப்பட்ட செங்கல்லை ஒரே குத்தில் வீழ்த்தும் ஒருவரால் நிச்சயம் புலிகளின் பற்களைப் பேர்த்தெடுக்க முடியும் என்று எனக்குத் தோன்றியது.

"பலருக்கு என்னைப் போல உடல் பலம் இருந்தாலும் அசையாத தன்னம்பிக்கை இருப்பதில்லை. உடல் பலம் மிக்க பயில்வானாக இருந்தாலும் மன உறுதியற்று இருப்பவர்கள் காட்டில் தன்னிச்சையாகத் திரியும் வன விலங்கினைப் பார்த்த மாத்திரத்திலேயே மயங்கி விழுவார்கள். இயற்கையான உக்கிரத்துடன் காட்டில் வாழும் புலி, சர்க்கஸ் கம்பெனியில் உள்ள அபினி ஊட்டப்பட்ட புலியிலிருந்து மிகவும் வேறுபட்டதாகும்!

"ஹெர்குலிஸைப் போன்ற உடல் வலிவு கொண்டவர்கள் கூட வங்காள வேங்கைப் புலியின் தாக்குதலுக்கு முன் நடுநடுங்கி நின்றதுண்டு. இவ்வாறு புலி, மனிதனை, பூனை போல் அஞ்சும் மனமுள்ளவனாக மாற்றி இருக்கிறது. வலிமையான உடலுடனும் பெருந்திடமான தீர்மானத்துடனும் கூடிய மனிதனால் இந்த நிலையை மாற்றி, புலிக்குப் பூனையைப் போன்று தற்காத்துக் கொள்ள முடியாத உணர்வினைக் கொடுக்க இயலும். நான் இதையே எத்தனை தடவை செய்திருக்கிறேன்!"

என் முன்னால் நின்ற இந்த பிரமாண்டமான மனிதரால் புலியைப் பூனையாக்கும் மாய வித்தையை

நடத்திக்காட்ட முடியும் என்பதை நான் முழுதும் நம்பத் தயாராக இருந்தேன். அவர் அறிவுறுத்தும் மன நிலையில் இருந்தார்; நானும் சண்டியும் மரியாதையுடன் கேட்டுக் கொண்டிருந்தோம்.

"தசைகளை ஆட்டுவிப்பது மனம். சுத்தியின் தாக்கும் திறன் அதற்குக் கொடுக்கப்படும் ஆற்றலைப் பொறுத்தே இருக்கிறது. மனித உடற் கருவியின் சக்தி அவனுடைய தாக்கவல்ல மனவிருப்பையும் துணிவையும் பொறுத்திருக்கிறது. உடல், உள்ளபடியே மனத்தால் படைக்கப்பட்டு செயல்படுத்தப்படுகிறது. முற்பிறப்புகளிலிருந்து வரும் இயல்பான மன எழுச்சியினால் பலங்கள் அல்லது பலவீனங்கள் படிப்படியாக மனித உணர்வில் கலக்கின்றன. அவை பழக்கங்களாகத் தோன்றிப் பிறகு விரும்பத்தக்க அல்லது விரும்பத்தகாத சரீரமாக வெளிப்படும். சரீரத்தில் தோன்றும் பலவீனத்தின் பிறப்பிடம் மனத் தினுள்தான் உள்ளது. எனவே ஒரு தீய சுழற்சி (மாயவட்டம்) உண்டாகி பழக்கத்திற்கு அடிமையான உடல் மறுபடியும் மனத்தை நிலை குலையச் செய்கிறது. எஜமானன் தன்னை அதிகாரம் செய்ய வேலைக்காரனுக்கு இடங்கொடுத்து விட்டால், சீக்கிரத்தில் அவ்வேலைக்காரன் எதேச்சாதிகாரி ஆகிவிடுவான்; அதே போல மனமும் உடலின் ஆளுகைக்கு அடங்கி அடிமையாகிவிடுகிறது."

எங்களது வேண்டுகோளுக்கிணங்கி, அந்த ஸ்வாமிகள் அவருடைய சொந்த வாழ்க்கையைப் பற்றிச்

சில செய்திகளைக் கூற ஒப்புக் கொண்டார்.

"நான் தொடக்கத்தில் புலிகளுடன் சண்டையிட வேண்டுமென்றுதான் விரும்பினேன். என் தீர்மானம் மிகப் பலமானதாக இருந்தது. ஆனால் என் உடல் பலவீனமாக இருந்தது."

என்னிடமிருந்து பெருவியப்பு வெளிப்பட்டது. மலையைப் போன்ற தோள்களுடன் எதையும் தாங்கக்கூடிய இந்த மனிதர், முன்பு பலவீனமாக இருந்தவர் என்பது நம்ப முடியாததாகத் தோன்றியது.

"நான் வெல்ல முடியாத விடாப்பிடியுடன் மன நலனையும் உடல் வலிவையும் தரக்கூடிய எண்ணங்களால் என் குறையை நிறைவு செய்து கொண்டேன். உண்மையில் வங்காளப் புலிகளை அடக்கியது திடமான மனவலிமைதான் என்று கூறினால் அது மிகையாகாது."

"வணக்கத்திற்குரிய ஸ்வாமிகளே, நான் எப்பொழுதாவது புலியுடன் சண்டையிட முடியும் என நீங்கள் நினைக்கிறீர்களா?" விசித்திரமான இந்த அவா என்னுள் எழுந்தது இதுதான் முதல் தடவையும் கடைசித் தடவையும் ஆகும்.

"ஆம்." அவர் புன்னகை செய்தார். "ஆனால் புலிகளில் பலவகை உண்டு. மனித ஆசைகள் என்ற காடுகளில் சில அலைகின்றன. மிருகங்களை அடித்து மயங்கி விழச் செய்வதால் எந்த ஆன்மீக லாபமும் உண்டாவதில்லை. அதைவிட உன் மனத்தில் அலைந்து திரியும் விலங்குகளை வெற்றி கொள்ளலாமே."

"கொடிய புலிகளை அடக்குவதிலிருந்து தாங்கள் எப்படிக் கொடிய விருப்பங்களை அடக்குபவராக மாறினீர்கள் என்பதை நாங்கள் தெரிந்துக் கொள்ளலாமா, ஐயா?"

புலிச்சாமியார் அமைதியானார். அவர் பார்வை எங்கோ நிலைக்க, கடந்த காலக் காட்சிகளை நினைவு கூர்ந்தார். என் வேண்டுகோளை அனுமதிக்கலாமா எனத் தீர்மானிப்பதில் அவருடைய சிறு மனப் போராட்டத்தை நான் உணர்ந்தேன். கடைசியில் ஒரு புன்னகையுடன் ஒப்புக் கொண்டார்.

"என் புகழ் உச்சக் கட்டத்தை அடைந்தபொழுது அது கர்வத்தின் மயக்கத்தை விளைவித்தது. நான் புலிகளுடன் சண்டையிடுவது மட்டுமல்லாமல் பல வித்தைகளைச் செய்ய வைத்து அவைகளைக் காட்சிப் பொருளாக்க வேண்டுமென்று நினைத்தேன். என் விருப்பம், காட்டு விலங்குகளை அடக்கி வீட்டு மிருகங்களைப் போல் பழக்கப்படுத்த வேண்டும் என்பதே. நான் என் வித்தைகளைத் திருப்திகரமான வெற்றியுடன் மக்கள் முன்னிலையில் செய்து காட்டத் தொடங்கினேன்.

"ஒரு நாள் மாலை என் தந்தை ஆழ்ந்த கவலையுடன் என் அறைக்கு வந்தார்.

"'மகனே, நான் உன்னை எச்சரிக்கிறேன். காரண காரியங்கள் என்னும் சுழற்சி சக்கரங்களினால் வர இருக்கும் இன்னல்களிலிருந்து உன்னைக் காப்பாற்ற விரும்புகிறேன்.'

"'அப்பா, நீங்கள் விதியை நம்புபவரா? என்

செயல்களினால் நான் பெற்றுள்ள புகழைக் குருட்டு நம்பிக்கைகள் குறைப்படுத்த வேண்டுமா?'

"'மகனே, நான் விதியை நம்புபவனல்ல. ஆனால் நம் புனித சாத்திரங்களில் கூறப்பட்டுள்ளபடி, தவறுகளுக்குத் தண்டனை உண்டு என்ற நியாயமான விதியை நம்புகிறேன். வன விலங்குகளின் கூட்டம் உன் மேல் ஆத்திரம் கொண்டுள்ளது. எப்பொழுதாவது அதனால் ஊறு விளையலாம்.'

"'அப்பா, நீங்கள் சொல்வது வியப்பாயிருக்கிறது! புலிகள் எப்படிப்பட்டவை என்று உங்களுக்கு நன்கு தெரியும்அழகானவை ஆனால் இரக்கமற்றவை! யாருக்குத் தெரியும்? அவைகளுடைய மர மண்டையில் என் அடிகள் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்கும் புத்தியைக் கொடுக்கலாம். காடு எனும் இறுதிப் பள்ளிக்கூடத்தில் அவைகளுக்கு நற்பண்புகளைக் கற்றுக் கொடுக்கும் தலைமையாசிரியர் நான்!

"'அப்பா, தயவு செய்து என்னைப் புலியைக் கொல்பவ னென்று எண்ணாமல் பழக்குபவனென்றே எண்ணுங்கள். என் நல்ல செயல்கள் எப்படி எனக்குக் கெடுதல்களைக் கொண்டு வர முடியும்? என் வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்ளும்படியான எந்த உத்தரவையும் விதிக்காதீர்கள் என நான் வேண்டுகிறேன்.'"

சண்டியும் நானும் அவருடைய கடந்த காலச் சிக்கலான நிலையை உணர்ந்தபடி மிகக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தோம். பாரதத்தில், ஒரு குழந்தை தன் பெற்றோர்களின் விருப்பத்தை எளிதில் புறக்கணிக்க

முடியாது. புலிச்சாமியார் தொடர்ந்தார்.

"விருப்பு, வெறுப்பற்ற மௌனத்துடன் என் தந்தை என் விளக்கத்தைக் கேட்டார். பிறகு அவர் ஆழ்ந்த உணர்ச்சியுடன் ஒரு செய்தியை வெளியிடத் தொடங்கினார்.

"'மகனே, ஒரு முனிவர் தீங்கு நிகழப் போகிறது எனக் கூறிய முன்னறிவிப்பை நான் கூற வேண்டி கட்டாயப்படுத்துகிறாய். நான் நேற்று, தினமும் போல் தியானத்திற்காக முற்றத்தில் அமர்ந்த பொழுது அந்த முனிவர் என்னை அணுகினார்.

"'அன்புள்ள நண்பனே, சண்டையில் ஆர்வமுள்ள உன் மகனுக்கு நான் ஒரு செய்தி கொண்டு வந்திருக்கிறேன். அவனுடைய காட்டு மிராண்டித்தனமான செயல்களை அவன் நிறுத்த வேண்டும். இல்லாவிடில் புலியுடன் அவன் போடும் அடுத்த சண்டை அவனைத் தீவிரமாகக் காயப்படுத்துவதுடன் ஆறு மாதங்கள் படுக்கையில் உயிருக்குப் போராட வைக்கும். பிறகு அவன் தன் பழைய வழக்கத்தை மாற்றிக் கொண்டு சன்னியாசியாக ஆவான்.'"

"இந்தக் கதையை நான் நம்பவில்லை. யாரோ ஒரு விவேகமற்ற மதவாதியின் கூற்றுக்கு என் தந்தை எளிதில் பலியாகி விட்டார் என எனக்குத் தோன்றியது."

புலிச்சாமியார் ஓர் அமைதியற்ற பாவனையுடன் இதை ஒப்புக் கொண்டது அவர் ஏதோ முட்டாள்தனமாக இருந்து விட்டதைக் குறிப்பிட்டது. வெகுநேரம் ஆழ்ந்த அமைதியில் மூழ்கிய அவர் நாங்கள் அங்கு

இருப்பதையே மறந்து விட்டதாகத் தோன்றியது. அவர் திரும்பவும் விட்ட கதையின் இழைகளை எடுத்துத் தொடர்ந்த பொழுது திடீரென்று அவர் குரல் மிக அடங்கி ஒலித்தது.

"தந்தையின் எச்சரிக்கைக்குப் பிறகு சீக்கிரத்திலேயே கூச் பிஹாரின் தலைநகருக்குச் சென்றேன். கண்ணுக்கினிய அழகு நிறைந்த அப்பகுதி எனக்குப் புதிது; அங்கு ஒரு மாறுதலான அமைதியை எதிர்பார்த்தேன். வழக்கம்போல் நான் தெருக்களில் சென்றபொழுதெல்லாம் ஆவலுடன் கூடிய ஒரு கூட்டம் என்னைத் தொடர்ந்தது. மெல்லிய குரலில் அவர்கள் என்னைப் பற்றிப் பேசுவது காதில் விழுந்தது; "'கொடிய புலிகளுடன் சண்டையிடுபவர் இவர்தாம்!'

"'அவருக்கு இருப்பது கால்களா அல்லது அடிமரங்களா?'

"'அவர் முகத்தைப் பார்! அவரே, புலிகளின் அரசர் அவதாரமாக இருக்க வேண்டும்!'

"கிராமத்துச் சிறு பையன்கள் செய்தித்தாளின் கடைசிப் பதிப்பாக எப்படிச் செயல்படுகிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியும். இதற்கும் பின்னர் பெண்களின் வாய்வழி, செய்தி வீடு வீடாக எவ்வளவு சீக்கிரத்தில் பரவுகிறது! சில மணி நேரங்களுக்குள்ளேயே நான் வந்திருப்பது குறித்து அந்த நகரம் முழுவதிலும் ஒரு பரபரப்பு காணப்பட்டது.

"மாலையில் நான் அமைதியாக இளைப்பாறிக் கொண்டிருந்த பொழுது குதிரைகள் ஓடிவரும் குளம்படிச்

சத்தத்தைக் கேட்டேன். அவை நான் இருந்த வீட்டு வாசலில் நின்றன. தலைப்பாகை அணிந்த உயரமான போலீஸ்காரர்கள் பலர் உள்ளே நுழைந்தனர்.

"எனக்குத் திகைப்பேற்பட்டது. சமுதாயச் சட்டக் காவலர்களான இவர்களால் எதையும் செய்ய இயலும்,' நான் எண்ணினேன். எனக்கு ஒன்றுமே தெரியாத எதைப் பற்றியாவது இவர்கள் என்னைத் தொந்தரவு செய்யப் போகிறார்களா?' ஆனால் அந்த அதிகாரிகள் அபூர்வமான பணிவுடன் வணங்கினார்கள்.

"மதிப்பிற்குரிய ஐயா, தங்களை வரவேற்பதற்காக கூச் பிஹாரின் அரசகுமாரர் சார்பில் நாங்கள் அனுப்பப்பட்டிருக்கிறோம். நாளைக் காலை தங்களை அவருடைய அரண்மனையில் வரவேற்பதற்கு அவர் மகிழ்ச்சி அடைகிறார்.'

"நான் அந்த அழைப்பைப் பற்றிக் கொஞ்சம் சிந்தித்தேன். இனம் புரியாத காரணத்தினால் என் அமைதியான பயணத்தில் ஏற்பட்ட இந்தக் குறுக்கீடு எனக்குப் பிடிக்கவில்லை. ஆனால் அந்தப் போலீஸ்காரர்களின் அடக்கமான முறை என்னை ஈர்த்தது. நான் போவதற்கு ஒப்புக் கொண்டேன்.

"மறுநாள் என் வீட்டு வாசலிலிருந்து என்னைப் பணிவுடன் அழைத்துச் செல்ல நான்கு குதிரைகள் பூட்டிய ஆடம்பரமான குதிரைவண்டி காத்திருந்ததைக் கண்டு நான் திகைப்படைந்தேன். ஒரு வேலைக்காரன் தகிக்கும் வெயிலில் இருந்து என்னைக் காப்பதற்கு அலங்காரமான குடை ஒன்றைப் பிடித்தான். நான்

நகர்க்குள்ளும், புறநகர் காட்டு வழிகளிலும் ஆனந்தமான சவாரியை அனுபவித்தேன். அரசகுமாரர், தானே அரண்மனை வாயிலில் நின்று என்னை வரவேற்றார். அவர் பொன்னால் பூவேலை செய்யப்பட்டிருந்த தன்னுடைய அரச அரியணையை எனக்குக் கொடுத்து, தான் சாதாரணமாக அலங்கரிக்கப்பட்ட ஒரு நாற்காலியில் புன்முறுவலுடன் அமர்ந்தார்.

"'இந்த வரவேற்பெல்லாம் நிச்சயமாக எனக்கு எதுவோ நிகழப் போவதற்கு அடிப்படை!' என்று நான் அதிகமாகிக் கொண்டே வரும் ஆச்சரியத்துடன் எண்ணினேன். பொதுவான சில பேச்சுகளுக்குப் பிறகு அரசகுமாரரின் எண்ணம் வெளிப்பட்டது.

"'என் நகரம் முழுவதிலும் நீங்கள் கொடிய புலிகளுடன் உங்கள் வெறுங்கைகளைத் தவிர வேறு எதுவுமே இல்லாமல் சண்டை இடுவீர்களென்று வதந்தி பரவியுள்ளது. அது உண்மையா?'

"'ஆம். உண்மையே.'

"'என்னால் நம்பவே முடியவில்லையே! நீங்கள் நகரவாசிகளின் வெள்ளை அரிசியில் வளர்ந்த ஒரு கல்கத்தா வங்காளி! தயவு செய்து மறைவு வேண்டாம். நீங்கள் அபினி ஊட்டப்பட்டு தங்கள் சுபாவத்தை இழந்த மிருகங்களுடன் தான் சண்டை இட்டிருக்கிறீர்கள், இல்லையா? 'அவரது உரத்த குரலில் கேலி நிறைந்திருந்தது. பேசும் விதம் அந்த மாகாணத்திற்குரிய உச்சரிப்பைக் கொண்டதாக இருந்தது.

"அவமானப்படுத்தும் அவருடைய கேள்விக்கு நான்

எந்தப் பதிலும் கூறவில்லை.

"'புதிதாக நாங்கள் பிடித்து வந்திருக்கும் என் புலியான ராஜா பேகத்துடன்[2] உங்களால் சண்டையிட முடியுமா என்று நான் சவால் விடுகிறேன். நீங்கள் அப்புலியை வெற்றிகரமாக அடக்கி, அதைச் சங்கிலியால் கட்டி, அந்தக் கூண்டிலிருந்து நினைவுடன் வெளிப்பட்டால், நீங்களே இந்த வங்காளப் புலியை வைத்துக் கொள்ளலாம்! பல ஆயிரம் ரூபாய்களும் மற்றும் பல பரிசுகளும் கூட வழங்கப்படும். நீங்கள் அதனுடன் சண்டையிட மறுத்தால் இந்த மாகாணம் முழுவதும் நீங்கள் ஒரு மோசக்காரரென பறைசாற்றி விடுவேன்!'

"அவருடைய அவமரியாதையான சொற்கள் என்னைக் குண்டுகளைப் போலத் துளைத்தன. நான் கோபத்துடன் ஒப்புக் கொண்டேன். ஆரவாரத்தில் தன் ஆசனத்திலிருந்து பாதி எழுந்த அரசகுமாரர் ஒரு குரூரப் புன்னையுடன் திரும்ப அமர்ந்தார்.திறந்தவெளி அரங்கங்களில் கிறிஸ்துவர்களை மிருகங்களுடன் சண்டையிடச் செய்து மகிழ்ந்த ரோமானியச் சக்கரவர்த்திகளின் நினைவு எனக்கு வந்தது. அவர் கூறினார்:

"'இப்பந்தயம் இன்னும் ஒரு வாரத்தில் நடக்கும். நீங்கள் அதற்கு முன்னால் இந்தப் புலியைக் காண உங்களுக்கு நான் அனுமதி கொடுக்க முடியாததற்கு வருந்துகிறேன்.'

"அரச குமாரர் அப்புலியை நான் கண்டால்

வசியமாக்கி விடுவேனோ அல்லது அபினியைக் கொடுத்து விடுவேனோ என்று பயந்தாரோ என்னவோ, எனக்குத் தெரியாது!

"அலங்கரிக்கப்பட்ட குதிரை வண்டியும் அரசக் குடையும் இப்பொழுது மறைந்து விட்டதை வேடிக்கையாகக் கண்டு நான் அரண்மனையிலிருந்து வெளியேறினேன்.

"அடுத்த வாரத்தில் நான் முறைப்படி என் மனத்தையும், உடலையும் நிகழப்போகும் கடினமான தேர்வுக்காகத் தயார் செய்து கொண்டேன். என் வேலைக்காரன் மூலமாக நான் அதிசயமான கதைகளைக் கேள்விப்பட்டேன். என் தகப்பனாரிடம் அந்த முனிவர் கூறிய பேரிடர் செய்யவல்ல முன்னறிவிப்பு எப்படியோ பரவிபெருகியது. பல எளிய கிராம மக்கள் ஒரு கொடிய ஆவி, தெய்வங்களால் சபிக்கப்பட்டு புலியாக உருவெடுத்திருப்பதாகவும், இரவு வேளைகளில் பல்வேறு அசுர உருவங்களில் உலவி, பகலில் மட்டும் வேங்கைப் புலியாகத் தோன்றுவதாகவும் நம்பினார்கள். இந்த அசுரப்புலி என்னை அடக்குவதற்காகவே அனுப்பப்பட்டதாகவும் பேச்சு அடிபட்டது.

"இன்னுமொரு கற்பனை நிறைந்த வதந்தி, புலிகளின் சுவர்க்கத்தை நோக்கி மிருகங்கள் செய்த பிரார்த்தனைகளுக்கு ராஜா பேக உருவத்தில் பதில் கொடுக்கப்பட்டுள்ளது என்பதாம். புலிகளின் இனம் முழுவதையுமே அவமானப்படுத்திய இரு கால்களுள்ளதுணிச்சலான என்னைத் தண்டிக்க ராஜா

பேகம் தான் கருவியாகப் பயன்படப் போகிறதாம்! உடலில் உரோமப் போர்வையும் நச்சுப் பற்களுமற்ற மனிதன், பலமானதும் நகங்களை ஆயுதமாக உடையதுமான புலியுடன் சவால் விடத் துணிவதாவது! அடக்கப்பட்ட எல்லா புலிகளுடைய கொடிய விஷம் ஒன்றாய்த் திரண்டு மறைந்திருந்த விதிகளை செயல்பட வைத்துள்ளதுஅது கர்வமுள்ள புலி அடக்குபவனின் வீழ்ச்சிக்குக் காரணமாகப் போகிறதுஎன்று கிராம மக்களிடையே பேச்சு அடிபட்டது.

"மனிதனுக்கும் மிருகத்திற்கும் நடக்கப் போகும் போட்டியின் நிர்வாகப் பொறுப்பினை வெகு ஆர்வத்துடன் அரசகுமாரரே ஏற்றிருப்பதாக என் வேலையாள் கூறினான். ஆயிரக்கணக்கான மக்கள் அமர்ந்து காணக்கூடிய, புயலையே தாங்கக்கூடிய ஒரு கூடாரம் அமைக்கப்படுவதை அரசகுமாரர் மேற்பார்வையிட்டு வந்ததாகத் தெரிந்தது. அதன் மத்தியில் ஒரு பிரமாண்டமான இரும்புக் கூண்டில் ராஜா பேகம் இருந்தது. அதனைச் சுற்றி பாதுகாப்பிற்காக ஓர் அறையும் இருந்தது. அடைப்பட்ட புலி இடைவிடாது ரத்தத்தை உறைய வைக்கும் கர்ஜனைகளை வெளியிட்டது. அதனுடைய கோப மான பசியைக் கிளறி விடுவதற்கென அதற்கு உணவு குறைவாகவே அளிக்கப்பட்டு வந்ததாம். ஒருகால் அரசகுமாரர் நானே அதற்கு உணவுப் பரிசாக ஆகிவிடுவேன் என நினைத்தாரோ என்னவோ!

"ஈடு இணையற்ற இந்தப் போட்டியைப் பறையறை

வித்ததன் பலனாக மக்கள் நகரங்களிலிருந்தும் அருகிலுள்ள கிராமங்களிலிருந்தும் திரளாக வந்து அனுமதிச் சீட்டுகளை வாங்கி னார்கள். போட்டி நாளன்று நூற்றுக்கணக்கான மக்கள் இடம் இல்லாத காரணத்தினால் திருப்பி அனுப்பப்பட்டார்கள். பலர் போட்டிருந்த கூடாரத் திறப்புக்களை உடைத்து உள்ளே இடத்தைப் பிடித்துக் கொண்டார்கள் அல்லது காலரிகளுக்குக் கீழே கிடைத்த இடத்தில் குழுமினர்."

புலிச்சாமியாரின் கதை உச்சக்கட்டத்தை எட்ட எட்ட என் ஆர்வமும் அதனுடன் அதிகரித்தது. சண்டியும் கதையில் ஒன்றி மௌனமாயிருந்தான்.

"ராஜா பேகத்தின் துளைக்கும் கர்ஜனையினூடேயும், பயந்திருந்த கூட்டத்தின் கூச்சலுக்கிடையேயும் நான் அமைதியுடன் தோன்றினேன். இடுப்பைச் சுற்றி இருந்த துணி ஒன்றைத் தவிர வேறு ஆடையினால் நான் பாதுகாக்கப்படவில்லை. நான் பாதுகாப்பு அறையின் தாழ்ப்பாளைத் திறந்து, அமைதியாகக் கதவை என் பின்னால் தாழிட்டேன். புலி ரத்த வாடையை உணர்ந்தது. இடி முழக்க சத்தத்துடன் கம்பிகளின் மீது பாய்ந்து மூர்க்கமான கர்ஜனையுடன் வரவேற்றது. பார்வையாளர்கள் இரக்கமான திகிலுடன் பேச்சற்றிருந்தனர். ஆங்காரத்துடன் பாய்ந்த அந்தக் கொடிய மிருகத்தின் முன்னால் நான் ஒரு சாதுவான ஆட்டுக் குட்டியைப் போல் தோன்றியிருப்பேன்.

"ஒரு வினாடியில் நான் கூண்டிற்குள் சென்றேன். நான் கதவைத் தடாலென சாத்திக் கொண்டிருக்கும்

பொழுது ராஜா பேகம் என் மீது முழுவேகத்துடன் பாய்ந்தது. என் வலது கை மோசமாகக் கிழிக்கப்பட்டது. மனித இரத்தம், ஒரு புலிக்குப் பெரிய விருந்து, கீழே பயங்கரமாக ஒழுகலாயிற்று. அந்த முனிவரின் முன்னறிவிப்பு பலித்து விடும் போலிருந்தது.

"நான் இதுவரை அடைந்திராத, அந்தக் கடுமையான முதல் காயத்தின் அதிர்ச்சியிலிருந்து மீண்டு உடனே இழந்த பலத்தை மறுபடி ஒன்று திரட்டினேன். என் காயமடைந்த விரல்களை இடுப்புத் துணியில் மறைத்தவாறு நான் என் இடக் கையினால் எலும்பை முறிக்கும் அடியை வீசினேன். அம்மிருகம் பின்வாங்கியது, கூண்டின் பின்பக்கம் சுற்றிச் சென்று வேகமாக வெறியுடன் முன்னே பாய்ந்தது. என்னுடைய புகழ்பெற்ற முட்டித் தண்டனை அதன் தலையில் சரமாரியாக விழுந்தது.

"ஆனால் ராஜா பேகத்திற்குக் கிடைத்த ரத்தத்தின் ருசி, வெகு நாட்களுக்குப் பிறகு மதுவைச் சுவைக்கும் குடிகாரனுடையதைப் போன்றிருந்தது. காது செவிடுபடும் கர்ஜனைகளுடன் ராஜா பேகத்தின் தாக்குதல்கள் ஆங்காரத்துடன் தொடர்ந்தன. நகங்களுக்கும் விஷப் பற்களுக்கும் முன்னால் என் ஒற்றைக்கைத் தாக்குதல் போதுமான பாதுகாப்பாக இல்லை. நான் பதிலடி கொடுத்தவாறிருந்தேன். இரத்தக்கறை படிந்து ஒருவருக்கொருவர் மரண வெறியுடன் சண்டையிட்டோம். கூண்டில் ஒரே களேவரம். எல்லாப் பக்கங்களிலும் ரத்தம் தெறித்தவாறு இருந்தது.

மிருகத்தின் தொண்டையில் இருந்து வலியினாலும் கொலை வெறியாலும் கர்ஜனைகள் வெளிப்பட்டவாறிருந்தன.

"'சுட்டு விடுங்கள்!' 'புலியைக் கொன்றுவிடுங்கள்! 'பார்வையாளர்களிடமிருந்து கூச்சல்கள் வெளிப்பட்டன. மனிதனும் மிருகமும் சண்டையிடும் வேகத்தில் காவலாளியின் துப்பாக்கிக் குண்டு ஒன்று குறிதவறியது. என் மன உறுதியின் வேகம் முழுவதையும் ஒன்று திரட்டி மூர்க்கமாக இரைந்து கூவியவாறு மண்டையை உடைக்கும் முடிவான குத்து ஒன்று விட்டேன். புலி கீழே விழுந்து அசைவற்றுக் கிடந்தது."

"ஒரு பூனையைப் போல! என்றேன் நான், இடைமறித்து.

அந்த ஸ்வாமி அதை ரசித்துப் பலமாகச் சிரித்தார். பிறகு ஆர்வமூட்டும் கதையைத் தொடர்ந்தார்.

"ராஜா பேகம் கடைசியில் அடக்கப்பட்டது. அதன் அரச கர்வம் மேலும் ஒடுக்கப்பட்டது: என் காயம்பட்ட கையினால் அதன் வாயைத் துணிவுடன் பலவந்தமாகப் பிளந்தேன். சட்டென ஒரு நொடி நேரம் அதன் திறந்த வாயில்சாவின் பிடியில்என் தலையை நுழைத்தேன். நான் சங்கிலிக்காகச் சுற்று முற்றும் நோக்கினேன். தரையில் குவியலாகக் கிடந்த சங்கிலி ஒன்றை எடுத்து அதன் கழுத்தைக் கூண்டுக் கம்பியுடன் பிடித்துக் கட்டினேன். நான் வெற்றியுடன் கதவை நோக்கிச் சென்றேன்.

"ஆனால் கொடூரத்தின் அவதாரமான அந்த

ராஜாபேகம், அசுர மூலத்திலிருந்து அது வந்ததாகச் சொல்லப்படுவதற்கேற்ப பலம் படைத்ததாக இருந்தது. நம்ப முடியாத வேகத்தில் சங்கிலியை அறுத்துக் கொண்டு அது என் முதுகில் பாய்ந்துவிட்டது. அதன் வாயில் என் தோள் பலமாகச் சிக்க நான் வேகமாக விழுந்தேன். ஆனால் நொடியில் சமாளித்து நான் அதை என் கீழ் வைத்து அழுத்தினேன். இரக்கமற்ற பல குத்துக்களினால் அந்தக் கபட மிருகம் அரைமயக்க நிலையை அடைந்தது. இந்தத் தடவை அதை இன்னும் ஜாக்கிரதையாகக் கட்டினேன். பிறகு மெதுவாகக் கூண்டை விட்டு வெளியேறினேன்.

"இப்பொழுது நான் புது முழக்கத்தைமகிழ்ச்சிக் குரல் முழக்கத்தைக்கேட்க வேண்டியிருந்தது. கூட்டத்தின் மகிழ்ச்சி, பூதாகரமான ஒரே தொண்டையில் இருந்து எழுவது போன்று ஒலித்தது. பயங்கரமாகக் காயம் அடைந்திருந்தாலும் நான் அந்தச் சண்டையின் மூலம் நிபந்தனைகளையும் பூர்த்தி செய்துவிட்டேன். ஒன்றுபுலியை அதிர்ச்சியில் வீழ்த்துவது, இரண்டுசங்கலியால் அதைப் பிணைப்பது, மூன்றுஎனக்கு எந்த உதவியும் தேவையின்றி அதனை விட்டு வெளியேறுவது. அத்துடன் அதன் வாயில் சந்தர்ப்பவச பரிசான என் தலை இருந்ததைக் கூட அது கவனிக்காமல் இருக்கும்படி, அந்த மூர்க்க மிருகத்தைக் கடுமையாகக் காயப்படுத்தித் திகிலடையச் செய்திருந்தேன்.

"என் காயங்களுக்கு மருந்திடப்பட்ட பிறகு எனக்கு

மாலை மரியாதைகள் கிடைத்தன. ஏராளமான தங்க நாணயங்கள் என் காலடியில் கொட்டப்பட்டன. நகரம் எங்கும் விடுமுறை கொண்டாடப்பட்டது. அளவில் மிகப் பெரியதும் மிக முரட்டுத் தனமும் கொண்ட எப்போதும் பார்த்திராத ராஜா பேகத்தை நான் வென்றதைக் குறித்த முடிவற்ற விவாதங்கள் எல்லா பக்கங்களிலும் நடந்தன. வாக்குறுதியின்படி, ராஜா பேகம் எனக்குப் பரிசாக அளிக்கப்பட்டது. ஆனால் எனக்குப் பெருமை உண்டாகவில்லை. என் இதயத்தினுள் ஓர் ஆன்மீக மாறுதல் ஏற்பட்டது. நான் கூண்டிலிருந்து முடிவாக வெளிப்பட்டபொழுது என் உலக ஆசைகளின் கதவையும் நான் மூடிவிட்டதாகத் தோன்றியது.

"ஒரு வேதனையான காலம் தொடர்ந்தது. ரத்தத்தில் நஞ்சு ஏறியதால் நான் ஆறு மாதங்கள் மரணப் படுக்கையில் இருந்தேன். வெளியே கிளம்பும் அளவிற்குக் குணமடைந்ததும் நான் கூச்பிஹாரிலிருந்து என் சொந்த ஊருக்குச் சென்றேன்.

"எனக்கு அறிவுப்பூர்வமான எச்சரிக்கை விடுத்த தெய்வீக மனிதர்தான் என் குருவென்று அறிந்தேன். பணிவுடன் நான் என் தந்தையிடம் இதை ஒப்புக் கொண்டேன். ஓ, எப்படியாவது அவரைக் கண்டுபிடிக்க முடிந்தால்! என் ஏக்கம் மிக உண்மையாக இருந்தது. ஏனென்றால் ஏதும் முன்னறிவிப்பில்லாமல் அந்த முனிவர் ஒரு நாள் வந்து சேர்ந்தார்.

"'புலிகளைப் பழக்கியது போதும், அவர் அமைதியான தீர்மானத்துடன் மொழிந்தார். என்னுடன் வா; மனித

மனமென்ற காட்டில் அலையும் அஞ்ஞான மிருகங்களை அடக்க உனக்கு நான் போதிக்கிறேன். நீ பார்வையாளர்களின் கூட்டத்திற்குப் பழக்கப் பட்டவன். உன் சிலிர்ப்பூட்டும் யோக சாதனையினால் மகிழ்விக்கப் பெறும் தேவர்களின் கும்பலாக அது இருக்கட்டும்!'

"என் தெய்வீகக் குருவினால் ஆன்மீகப் பாதையில் தீட்சை செய்து வைக்கப்பட்டேன். அவர் வெகு காலமாக உபயோகிக்கப் படாமல் துருப்பிடித்தும் தடைபட்டும் கிடந்த என் ஆன்மாவின் கதவுகளைத் திறந்தார். கை கோர்த்துக் கொண்டு நாங்கள் இமயமலைச் சாரலுக்கு என் பயிற்சிக்காகச் சென்றோம்."

சண்டியும் நானும் அந்த ஸ்வாமியின் பாதங்களில் வீழ்ந்து வணங்கினோம். அவருடைய புயல் போன்ற வாழ்க்கைக் கதையைக் கூறியதற்கு நன்றி செலுத்தினோம். நீண்ட நேரம் குளிரான தாழ்வாரத்தில் காத்திருந்ததற்காகப் போதுமான அளவு பயனடைந்ததாக என் நண்பனும் நானும் உணர்ந்தோம்!

---

1 ஸோஹம் என்பது அவருடைய துறவறப்பெயர்; அவரைப் புலிச்சாமியார் என்றே பலரும் அழைத்தனர்.

2 அரசன், அரசிஇப்பெயர் அந்தப் புலி பெண்புலி, ஆண்புலி ஆகிய இரண்டின் குரூரத்தையும் ஒருங்கே பெற்றிருந்ததைக் குறிக்கிறது.

அத்தியாயம் 7

# அந்தரத்தில் மிதக்கும் மகான்

என் நண்பன் உபேந்திர மோகன் சௌத்ரி, நேற்றிரவு நான் ஒரு கூட்டத்தில் யோகி ஒருவர் தரையிலிருந்து பல அடி உயரத்தில் காற்றில் மிதந்தவாறு இருந்ததைக் கண்டேன், என்று மனத்தில் பதியும்படி கூறினான்.

நான் உற்சாகப் புன்னகை புரிந்தேன். அவனிடம் கூறினேன், அவர் பெயரை என்னால் ஊகிக்க முடியும். அப்பர் சர்குலர் சாலையில் (Upper Circular Road) வசிக்கும் பாதுரி மகாசயர்தானே அவர்?

புதுச் செய்தி எதனையும் கொண்டு வரவில்லையாதலால் சோர்வுடன் உபேந்திரா தலையை அசைத்தான். மகான்களைப் பற்றிய எனது ஆர்வத்தை என் நண்பர்கள் நன்கு அறிந்திருந்தனர். புது வழிகளில் என்னைச் செலுத்துவதில் அவர்கள் மகிழ்ச்சி கொள்வார்கள்.

"அந்த யோகி என் வீட்டினருகில்தான் வசிக்கிறார். அடிக்கடி நான் அவரை பார்ப்பதுண்டு. என் சொற்கள் உபேந்திராவின் முகத்தில் மிகுந்த ஆர்வத்தைத் தோற்றுவித்தன. நான் மேலும் நம்பிக்கையுடன் கூறலானேன்.

"அவர் பல அருஞ்செயல்கள் புரிவதை நான் கண்டு இருக்கிறேன். பதஞ்சலி[1] முனிவரால் வகுக்கப்பட்ட புராதன எட்டு அங்கங்களுடன் கூடிய யோக முறையில்

குறிப்பிட்டுள்ள பல பிராணாயாமங்களில்[2] அவர் மிகவும் தேர்ச்சி பெற்றவர். ஒருமுறை பாதுரி மகாசயர் பஸ்திரிகா பிராணாயாமத்தை என் முன்னால் வியப்படையும் வேகத்துடன் செய்து காண்பித்தபொழுது அந்த அறையில் உண்மையான ஒரு புயலே உருவாகிவிட்டதைப் போலிருந்தது. பிறகு அவர் இடி முழக்க மூச்சை நிறுத்தி மிக மேம்பட்ட உயர் உணர்வு[3] நிலையில் அசைவேதுமின்றி இருந்தார். புயலுக்குப்பின் உண்டாகிய அந்த அமைதிச்சூழல் தெளிவாக மறக்க முடியாதபடி நினைவில் இருக்கிறது.

"அந்த மகான் தன் வீட்டை விட்டு வெளியில் செல்வதேயில்லை எனக் கூறுகிறார்களே. உபேந்திராவின் குரலில் சிறிது அவநம்பிக்கை தொனித்தது.

"ஆம். அது உண்மைதான்! கடந்த இருபது ஆண்டுகளாக அவர் வீட்டிற்குள்தான் வசித்து வருகிறார். ஏதாவது நமது புனிதத்திருவிழாக் காலங்களில் தனக்குத்தானே விதித்துக்கொண்டுள்ள கட்டுப்பாட்டைச் சிறிது தளர்த்திவிட்டு, அவர் வீட்டு வாசற்படி நடைபாதை வரையில் செல்வது உண்டு! பாதுரி மகான் கருணை உள்ளம் கொண்டவரென்று புகழ் பெற்றிருந்ததை நன்றாகவே அறிந்த பல பிச்சைக்காரர்கள் அங்கு குழுமியிருப்பார்கள்."

"புவி ஈர்ப்பு விசையை எதிர்த்து அவரால் எப்படி அந்தரத்தில் இருக்க முடிகிறது?"

"சில பிராணாயாமங்களைப் பயிற்சி செய்த பிறகு

ஒரு யோகியின் உடல் அதன் கனத்தை இழந்து விடுகிறது. அப்பொழுது அது அந்தரத்தில் மிதக்கவோ அல்லது தவளையைப்போல் தாவவோ முடியும். முறையான யோகப் பயிற்சி செய்யாத மகான்கள்கூட கடவுளிடம் தீவிர பக்தி செலுத்தும்போது அந்தரத்தில் மிதந்ததாக அறிகிறோம்."

"நான் இந்த மகானைப்பற்றி இன்னும் கொஞ்சம் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். நீ அவருடைய மாலை நேரக் கூட்டங்களுக்குச் செல்வதுண்டா? உபேந்திராவின் கண்கள் ஆர்வத்தில் மின்னின.

"ஆம், நான் அடிக்கடி செல்வதுண்டு. அவருடைய ஞான உரையில் தோன்றும் நகைச்சுவை என்னைப் பெரிதும் மகிழ்விக்கிறது. சில சமயங்களில் என் நீண்ட சிரிப்பு அவரது கூட்டங்களின் தீவிரத்தைக் கெடுத்துவிடும். அந்த மகான் அதற்காக மனம் கோணுவதில்லை. ஆனால் அவரது சீடர்கள் கூரிய கத்தி போன்ற பார்வையைச் செலுத்துவார்கள்!"

அன்று மாலை நான் பள்ளியிலிருந்து வீடு திரும்புகையில் பாதுரி மகாசயரின் மடத்தைக் கடந்து செல்லும்பொழுது உள்ளே செல்ல முடிவு செய்தேன். பொது மக்கள் அவரை அணுக முடியாது. ஒரே ஒரு சீடர் கீழ்த்தளத்தில் வசித்துக் கொண்டு தன் குருதேவரின் தனிமையைப் பாதுகாத்து வந்தார். அந்த சீடர் ஒரு தீவிரக் கண்டிப்பாளர் போன்றவர். நான் மகானைச் சந்திக்க முன் அனுமதி ஏதும் பெற்றிருக்கிறேனா என்று அவர் முறைப்படி விசாரித்தார். அவருடைய குருதேவர்

சரியான சமயத்தில், முழுவதுமாக விரட்டப்படுவதிலிருந்து என்னைக் காப்பாற்ற அங்கு தோன்றினார்.

"முகுந்தன் எப்பொழுது விரும்பினாலும் வரட்டும். அந்த ஞானியின் கண்கள் பளிச்சிட்டன. எனது தனிமையை நாடும் விதிமுறை என் வசதிக்காக அல்ல. ஆனால் மற்றவர்களுக்காகத்தான். தங்கள் மருள் மயக்கத்தைத் தகர்த்தெரியும் நேர்மையை உலக மக்கள் விரும்புவது இல்லை. மகான்கள் அபூர்வமானவர்கள் மட்டுமல்ல, சங்கடமானவர்களுமாவர். சாத்திரங்களிலும் கூட அடிக்கடி அவர்கள் தர்மசங்கடம் ஏற்படுத்துபவர்களாகக் காணப்படுகிறார்கள்!'

நான் பாதுரி மகாசாயரைப் பின்தொடர்ந்து, அவர் வசிக்கும் மிக்க எளிமையான அவரது மேல் மாடி அறைக்குச் சென்றேன். சாதாரணமாக அவர் அங்கிருந்து எங்கும் செல்வதில்லை. உலக ஆரவாரக் காட்சிகள் காலங்களால் முக்கியத்துவம் பெறும்வரை, மகான்கள் அவற்றைப் பெரும்பாலும் பொருட்படுத்துவதில்லை; ஒரு முனிவரின் சமகாலத்தவர்கள், குறுகிய நிகழ்காலத்தவர்கள் மட்டுமே அல்லர்.

"மகரிஷியே, எனக்குத் தெரிந்த யோகிகளில் எப்பொழுதும் வீட்டுக்குள்ளேயே தங்கி இருக்கும் முதல் யோகி நீங்கள் தான்,"

"இறைவனை ஒரு சட்டதிட்டத்திற்கு உட்பட்டவன் என்று நாம் நினைத்துவிடக்கூடாது என்பதற்காகவே அவன் சில சமயங்களில் எதிர்பாராத மண்ணில் தன்

முனிவர்களைப் பயிரிடுகிறான்."

அந்த முனிவர் வலுவான தன் உடலைப் பத்மாசனத்திலிட்டு அமர்ந்தார். அவர் எழுபதைவிட அதிக வயதினராய் இருந்தாலும் அவர் உடலில் வயதுத் தளர்ச்சியோ அல்லது ஒரே இடத்தில் வசிப்பதினால் ஏற்படும் அழகற்ற அறிகுறிகளோ இல்லை. திடமானவராக நிமிர்ந்து காணப்பட்ட அவர் ஒவ்வொரு விதத்திலும் முன்மாதிரியாகத் திகழ்ந்தார். அவர் முகம் புராண நூல்களில் வர்ணிக்கப்பட்ட ரிஷியின் முகத்தை ஒத்திருந்தது. கம்பீரமான முகத்துடனும் பெருந் தாடியுடனும் நிமிர்ந்து உறுதியாக, அவரது அமைதியான கண்கள் எங்கும் நிறை பிரம்மத்தில் நிலைத்திருக்க அமர்ந்திருப்பார்.

அந்த மகானும் நானும் தியான நிலையை அடைந்தோம். ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அவருடைய மிருதுவான குரல் என்னை எழுப்பியது.

"நீ அடிக்கடி மௌனத்தில் ஆழ்ந்துவிடுகிறாய். ஆனால் நீ அனுபவ[4] நிலையை வளரச் செய்திருக்கிறாயா? அவர் தியானத் தைவிட அதிகமாக இறைவனிடம் அன்பு செலுத்தவேண்டும் என்பதை நினைவுபடுத்தினார். வழிமுறையைக் குறிக்கோள் எனத் தவறாக நினைத்துவிடாதே."

அவர் எனக்குச் சில மாங்கனிகளைக் கொடுத்தார். அவருடைய ஆழ்ந்த சுபாவத்தினூடே சிதறித்தெறிக்கும் துடிப்பான நகைச்சுவை எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும். அவர், மக்களுக்கு சாதாரணமாக தியான

யோகத்தைவிட (இறைவனுடன் ஒன்றுவது) ஜல யோகம் (ஆகாரத்துடன் ஒன்றுவது) தான் அதிகமாகப் பிடித்திருக்கிறது, என்று குறிப்பிட்டார்.

யோகம் சார்ந்த சிலேடையைக் கேட்டு நான் பலமாகச் சிரித்தேன்.

"ஆ, என்ன சிரிப்பு! அவர் பார்வையில் அன்பு மிளிர்ந்தது. அவர் முகம் என்றும் தீவிரமாக இருந்தாலும் ஒரு நுட்பமான ஆனந்த முறுவல் நிலைத்திருக்கும். அவருடைய பெரிய கமலக்கண்கள் ஒரு தெய்வீகச் சிரிப்பை உள்ளடக்கி இருந்தன.

"அக்கடிதங்கள் தொலை தூரத்திலுள்ள அமெரிக்காவில் இருந்து வந்துள்ளன. அந்த ஞானி அங்கு மேசை மீதிருந்த தடித்த பல காகித உறைகளைச் சுட்டிக் காண்பித்தார். நான் அங்குள்ள சில சங்கங்களுடன் தொடர்பு வைத்திருக்கிறேன். அவைகளின் உறுப்பினர்கள் யோக முறையில் ஈடுபாடு உள்ளவர்கள். கொலம்பஸைவிட இன்னும் அதிக திசை அறிவு உடையவர்களாக அவர்கள் இந்தியாவை புதிய முறையில் கண்டுபிடிக்கிறார்கள். அவர்களுக்கு உதவி செய்ய எனக்கு மகிழ்ச்சி. யோக ஞானம் பகலவனின் ஒளி போன்று அதைப் பெறுபவர்களுக்கெல்லாம் இலவசமாகக் கிடைக்கும்.

"மனிதனுடைய ஆன்ம விடுதலைக்கு முக்கியமானது என்று ரிஷிகள் கண்டறிந்தவைகளை மேல் நாட்டவருக்காக நாம் மிக எளிமைப்படுத்திக் கொடுக்கவேண்டியதில்லை. வெளி அனுபவங்கள்

வேறுபட்டிருந்தாலும் ஒரே விதமான ஆன்மாவையுடையவர்கள் மேல் நாட்டவராயினும் சரி, கீழ் நாட்டவராயினும் சரிஓர் ஒழுங்கான யோக முறையைப் பின்பற்றாவிட்டால் முன்னேற முடியாது."

அந்த மகான் தன் சாந்தமான கண்களால் என்னை உற்று நோக்கினார். அவருடைய சொற்கள் மறைமுகமாக எனக்கு வழிகாட்டவேண்டி முன்னோடியாகக் கூறப்பட்டவை என்பதை நான் அப்பொழுது அறிந்து கொள்ளவில்லை. எனக்கு அவர் அடிக்கடி தற்செயலாகக் கொடுத்து வந்த குறிப்புகளின் முழு அர்த்தத்தை பாரதத்தின் உபதேசங்களை அமெரிக்காவிற்கு என்னோடு ஒரு நாள் எடுத்துச் செல்வேன் என்பதற்காகக் கொடுக்கப்பட்டவை தாம் என்பதை நான் இப்பொழுது, இதை எழுதும்பொழுதுதான் உணர்கிறேன்.

"மகரிஷியே, நீங்கள் உலகத்தின் நன்மைக்காக யோகத்தைப் பற்றி ஒரு புத்தகம் எழுதவேண்டும் என விரும்புகிறேன்."

"நான் சீடர்களுக்குப் பயிற்சி அளித்து வருகிறேன். அவர்களும் அவர்களது சிஷ்யபரம்பரையும் உயிர் உள்ள புத்தகங்களாகத் திகழ்ந்து காலத்தின் இயற்கையான அழிவுகளுக்கும் விமரிசகர்களின் செயற்கையான விளக்கங்களுக்கும் எதிரான நிரூபணங்களாகச் செயல்படுவார்கள்."

மாலையில் அவரது சீடர்கள் வரும் வரையில் நான் அந்த யோகியுடன் தனிமையில் இருந்தேன். பாதுரி

மகாசயர் அவருடைய ஈடற்ற சொற்பொழிவு ஒன்றைத் தொடங்கினார். அமைதியான வெள்ளமென, அவரது சொற்பொழிவைக் கேட்க வந்தவர்களின் மனக் குப்பைகளை ஒதுக்கித் தள்ளி அவர்களை இறைவனை நோக்கித் திருப்பினார். அவருடைய குறிப்பிடத்தக்க உவமைக் கதைகள் மொழித் தவறுகளின்றி வங்காள மொழியில் வெளிப்பட்டன.

அந்த மாலையில் பாதுரி, மீராபாயின் வாழ்க்கையுடன் சம்பந் தப்பட்ட பல தத்துவக் கருத்துக்களை விவரமாக எடுத்துரைத்தார். மத்திய காலத்தவரான மீராபாய், ராஜபுதனத்தின் இளவரசி, தன் அரச வாழ்வைத் துறந்து மகான்களின் சங்கத்தை விரும்பினார். ஓர் உயர்ந்த சன்னியாசியான சனாதன கோஸ்வாமி, அவள் ஒரு பெண் என்பதற்காக அவளை வரவேற்க மறுத்தார். அதற்கு மீராபாய் அளித்த பதில், அவரைக் கொணர்ந்து அவள் திருவடிகளில் பணியவைத்தது.

மீராபாய் கூறினாள், உங்கள் குருவிடம் கூறுங்கள்: எனக்கு இந்தப் பிரபஞ்சத்தில் இறைவனைத் தவிர எந்த ஆண்மகனும் இருப்பது தெரியாது. நாம் எல்லோருமே அவன் முன் பெண்கள் தாமே? (இறைவன் மட்டுமே முழுமையான சிருஷ்டி தத்துவம் என்றும், அவனது படைப்பு சக்தியற்ற மாயையே என்றும் கூறும் சாத்திரத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது.)

மீராபாய் பக்தியின் சாறு ததும்பி வழியும் பல கவிதைகளை இயற்றி உள்ளார். அவை பாரதத்தின்

செல்வங்களாக இன்றும் போற் றப்படுகின்றன. அவற்றில் ஒரு பாடலின் மொழிபெயர்ப்பைக் கீழே கொடுத்திருக்கிறேன்:

நித்தம் நீராடி அவனைக் காணலாம் எனில்
விரைவில் நான் நீரினமாவேன்;
கிழங்கும் கனியும் உண்டால் கிடைப்பானெனில்
மகிழ்ந்து நான் வெள்ளாடாக விரும்புவேன்;
மணி உருட்டி செபித்துக் காணலாமெனில்
பெரும்பெரும் மணிகளை உருட்டி வேண்டுவேன்;
கற்சிலைமுன் வணங்கிக் காணபோமெனில்
கற்பாறை மலையை உகந்து வணங்குவேன்;
ஆவின் பாலருந்தி அவனைக் காணலாமெனில்
சிசுவும் கன்றும் அவனைக் காண்பரே;
கொண்டவளைத் தள்ளி விண்ணவனை நாடலாமெனில்
ஆயிரமாயிரம் மக்கள் அலியாகாரோ?
திண்ணமாகச் சொல்வாள் பக்த மீரா
அன்பின்றி வாரான் நந்தலாலா.

பாதுரி யோகாசனத்தில் அமர்ந்திருக்கையில் பல மாணவர்கள் அவருடைய அருகில் கிடக்கும் அவரது பாதுகைகளில் ரூபாய்களைப் போடுவர். பாரதத்தில் பழக்கத்திலுள்ள இந்த மரியாதையான காணிக்கை, சீடர்கள் தங்கள் உலகச் சொத்துக்களைக் குருதேவரின் பாதங்களில் சமர்ப்பித்து விடுவதைக் குறிக்கிறது. நன்றியுள்ள நண்பர்கள், பக்தர்களின் நன்மையை விரும்பும் கடவுளின் மாற்று உருவங்களே.

"குருதேவரே, நீங்கள் ஆச்சரியகரமானவர்! ஒரு மாணவன் விடைபெற்றவாறு பிதாமகரைப் போன்ற அந்த ஞானியைப் பக்தியுடன் நோக்கினான். நீங்கள் இறைவனைத் தேடுவதற்காகவும் எங்களுக்கு ஞானத்தைப் போதிப்பதற்காகவும் செல்வங்களையும் நலன்களையும் தியாகம் செய்திருக்கிறீர்கள்! அவர் சிறு வயதில் ஒருமுகமான யோக சாதனையில்

இறங்கியபொழுது அவரது மிகப் பெரிய குடும்பச் சொத்து அவ்வளவையும் துறந்தாரென்பது எல்லோருக்கும் தெரிந்த செய்தி.

"நீ கதையையே மாற்றுகிறாயே! அந்த மகானின் முகம் சிறு கண்டனத்தைத் தெரிவித்தது. நான் மிக அற்பமான சில ரூபாய்களையும், சிற்சில வசதிகளையும் இந்த முழுப் பிரபஞ்சத்தின் முடிவில்லாத ஆனந்தத்திற்காகத் துறந்தேன். அப்படியிருக்கும் பொழுது நான் எதைத் தியாகம் செய்தேன்? செல்வத்தைப் பகிர்ந்து கொள்வதிலுள்ள ஆனந்தத்தை நான் அறிவேன். அது ஒரு தியாகமாகுமா? குறுகிய நோக்குடைய உலக மனிதர்கள்தாம் உண்மையிலேயே நிஜமான துறவிகளாவார்கள். கையளவு எளிய உலக விளையாட்டுப் பொருட்களுக்காக ஈடு இணையற்ற தெய்வீகச் சொத்தைத் துறக்கிறார்களே!"

துறவின் மாறுபட்ட இந்தக் கருத்தைக் கேட்டு நான் உள்ளூறச் சிரித்துக் கொண்டேன். இக்கருத்து ஒரு ஏழை சாதுவின் தலையில் குபேரனின் கிரீடத்தை ஏற்றுகிறது; பணத்திமிர் படைத்த பெருஞ்செல்வர்களை அவர்கள் உணராமலேயே உயிர்த்தியாகிகளாக்கி விடுகிறது.

"ஒரு தெய்வீகத் திட்டம் எந்த ஆயுள் காப்பு நிறுவனத் தையும்விட விவேகத்துடன் நம் எதிர்காலத்தைப் பாதுகாக்கிறது. இந்த மகானின் முடிவுரையான இச்சொற்கள் தாம், அவர் நம்பிக்கையின் மூலம் கண்ட உண்மை. இவ்வுலகம் முழுவதும் புறக்காப்பீட்டில் கவலையுடன் நம்பிக்கை வைத்து

இருப்பவர்கள் நிறைந்திருக்கிறார்கள். அவர்களுடைய கசப்பான எண்ணங்கள் அவர்களின் நெற்றியிலுள்ள வடுக்களைப் போலுள்ளன. நம் முதல் சுவாசத்திலிருந்தே நமக்குக் காற்று, பால் இவைகளைக் கொடுத்தவனுக்குத் தன் பக்தர்களின் அன்றாட வாழ்விற்கு எப்படி வழி செய்வது என்பது தெரியும்."

பள்ளிக்கூடம் விட்டதும் அந்த ரிஷியின் வீட்டிற்குச் செல்லும் இந்த யாத்திரைகளை நான் தொடர்ந்து செய்து வந்தேன். ஓர் அமைதியான ஆர்வத்துடன் அனுபவ நிலையை அடைய அவர் எனக்கு உதவினார். ஒரு நாள் அவர் என் வீட்டின் அருகிலிருந்த இடத்தை விட்டு தூரத்திலுள்ள ராம்மோகன் ராய் சாலையிலுள்ள இடத்திற்குக் குடியேறினார். அங்கு, அவருடைய அன்புச் சீடர்கள் அவருக்கு நாகேந்திர மடம் என்ற ஒரு புதிய மடத்தைக் கட்டிக் கொடுத்திருந்தனர்.[5]

இது என் வாழ்க்கைச் சரிதத்தைப் பல ஆண்டுகளுக்குப் பின்னால் கொண்டு சென்றாலும், பாதுரி மகாசயர் எனக்குக் கூறிய கடைசிச் சொற்களை இங்குக் குறிப்பிடுகிறேன். அமெரிக்காவிற்குச் செல்வதற்கு முன்னால் நான் அவரைத் தேடிச் சென்று, அவரது ஆசியை வேண்டிப் பணிந்தேன்.

"மகனே, அமெரிக்காவிற்குச் செல், பழமையான பாரதத்தின் பெருமையைக் கேடயமாகக் கொள். உன் நெற்றியில் வெற்றி எழுதப்பட்டிருக்கிறது. நெடுந் தொலைவிலுள்ள அந்தப் பெருந்தன்மை வாய்ந்த மக்கள் உன்னை நன்கு வரவேற்பார்கள்."



நாகேந்திர நாத் பாதுரி
"அந்தரத்தில் மிதக்கும் மகான்"

1 முதன் முதலில் யோகத்தை விவரித்துக்கூறியவர்.

2 மூச்சை ஒழுங்குபடுத்துவதின் மூலம் பிராண சக்தியைக் கட்டுப்பாட்டில் கொண்டுவரும் வழிமுறைகள். பஸ்திரிகா (துருத்திகள்) பிராணாயாமம் மனத்தை நிலைப்படுத்தும்.

3 1928ல் ஸார்பான் பேராசிரியர் ஜுல்ஸ்போய்ஸ் என்பவர், ஃபிரெஞ்சு உளவியல் அறிஞர்கள் உயர்உணர்வு நிலையைப்பற்றி ஆய்வு செய்து அதை ஏற்றுக்கொண் டுள்ளார்கள் என்று கூறினார். அதனுடைய உயர்ந்த நிலையில், ஃபிராய்ட் என்பவர் கண்டுபிடித்த உள் மனத்திற்கு நேர் எதிரிடையானதாகும்; மேலும் மனிதனை வெறும் மேன்மையானதொரு மிருகமாக அல்லாமல் உண்மையான மனிதனாக்கும் சக்தி அதனுள் அடங்கி

உள்ளது. அந்த பிரஞ்சு அறிஞர் விளக்குகிறார்: மனத்தில் உயர் உணர்வுநிலை எழுவதை மங்கிய நிலை (Coueism) என்றோ, மனோவசியப்பட்ட நிலை (hypnotism) என்றோ குழப்பக்கூடாது. மனத்தின் உயர் உணர்வு நிலை என்பது உண்மையில் எமர்சன் கூறிய அந்தராத்மா ஆகும். அது வெகு காலமாகத் தத்துவார்த்தமாக அங்கீகரிக்கப்பட்ட ஒன்று. ஆனால், சமீபகாலத்தில் தான் விஞ்ஞான பூர்வமாக அங்கீகரிக்கப்பட்டது. (பார்க்க பக்கம் 187 அடிக்குறிப்பு.)

அந்தராத்மா என்ற புத்தகத்தில் எமர்ஸன் எழுதியுள்ளார்: எல்லா ஞானத்தையும் எல்லா நன்மைகளையும் உள்ளடக்கிய ஒரு கோயிலின் வெளித்தோற்றம் தான் மனிதன். நாம் சாதாரணமாகக் காணும்உண்ணுவதும், பருகுவதும், நடுவதும், எண்ணுவதும் ஆகியவற்றை செய்யும் மனிதன் நமக்குத் தெரிந்த வரையில் தன்னை வெளிப்படுத்துவதில்லை, ஆனால் தவறாகவே தன்னை வெளிப்படுத்துகிறான். அவனை நாம் மதிப்பதில்லை; ஆனால் ஆத்மாவினுடைய அங்கமாக உள்ள மனிதன், தன் செயல்களின் மூலம் அதனை வெளிப்படுத்தும்பொழுது அவ்வாத்மா நம்மை மண்டியிட்டுப் பணியவைக்கிறது... கடவுளின் எல்லாக் குணநலன்களையும் ஆன்மீகத்தின் ஆழங்களையும் ஏற்க நாம் ஒரு பக்கத்தில் ஆயத்தமாகிறோம்.

4 கடவுளை உண்மையில் உணர்ந்தறிதல்.

5 அவர் முழுப்பெயர் நாகேந்திர நாத் பாதுரி.

கிறிஸ்துவ உலகத்தில் மிதக்கும் சித்தர்களில் 17 ஆவது நூற்றாண்டின் கூபர்டினோ வின் புனித ஜோஸப்பும் ஒருவர் ஆவார். அவருடைய விந்தைகளைப் பார்த்த பலர் சாட்சி கூறியுள்ளார்கள். புனித ஜோஸப் இவ்வுலக நிகழ்ச்சிகளில் காட்டிய ஞாபகமறதி உண்மையில் அவர் தெய்வ நினைவில் லயித்திருந்ததால்தான். அவருடைய மடத்தில் வசிக்கும் சகோதர சன்னியாசிகள் அவரைப் பொது உணவு மேஜையில் பரிமாறவே விடுவதில்லை. ஏனெனில் அவர் கையில் உள்ள பீங்கான் பாத்திரத்துடன் கூரைக்குச் சென்று விடுவாராம்! அந்த சாது, நீண்ட நேரத்திற்குத் தொடர்ச்சியாகப் பூமியில் நிலைக்க முடியாத காரணத்தினால் சாதாரண வேலைகளுக்கு விசித்திரமான முறையில் தகுதியற்றவராயிருந்தார். அடிக்கடி ஒரு புனிதச்சிலையின் காட்சி அவரை ஆனந்தத்தில் செங்குத்தாகப் பறக்க வைக்கப் போதுமானதாயிருந்தது. இரு சாதுக்களும்கல்லாலான ஒன்றும் மனித உருவத்தினாலான ஒன்றுமாக மேலே காற்றில் சுற்றிவருவதைக் காணலாம்.

மிக உயர்ந்த ஆத்மாவான அவிலாவின் புனித தெரஸாவிற்கு சரீரத்துடன் மேலே எழும்புவது மிகுந்த தொல்லை கொடுப்பதாக இருந்தது. அதிகமான நிர்வாகக் கடமைகளில் கட்டுண்டிருந்த அவர், மேலெழும்பும் அனுபவங்களை வீணாகத் தடுக்க முயன்றார்.

ஆனால் இறைவன் வேறுவிதமாக எண்ணும் பொழுது சிறு முன்னெச்சரிக்கைகள் வீணே, என்று அவர் எழுதியுள்ளார். ஸ்பெயினில் ஆல்பா என்னுமிடத்திலுள்ள மாதா கோயிலில் இருக்கும் சமாதியிலுள்ள அவர் உடல் நானூறு ஆண்டுகளாகக் கெடாமல் இருந்து வந்ததுடன் அவ்விடத்தில் மலர்களின் மணமும் வீசிக் கொண்டிருக்கிறது. அவ்விடம், எண்ணிலடங்கா அதிசயங்களைக் கண்டுள்ளது.

## அத்தியாயம் 8

# பாரதத்தின் தலைசிறந்த விஞ்ஞானி, ஜகதீஸ் சந்திர போஸ்

"ஜகதீஸ்சந்திர போஸ் அவர்களின் கண்டுபிடிப்பாகிய கம்பியில்லாத் தந்தி மார்க்கோனிக்கு முந்தையது."

சிந்தனையைத் தூண்டும் இக்கருத்தைத் தற்செயலாகக் கேட்டதும், நான் நடைபாதை ஓரமாக அறிவியல் விவாதம் செய்து கொண்டு சென்ற பேராசிரியர்கள் குழுவின் சமீபத்தில் சென்றேன். அவர்களுடன் சேர்ந்து கொண்டதின் காரணம் என் இனப்பெருமையாக இருந்தால் அதற்காக நான் வருந்துகிறேன். பாரதம் ஆன்மீகத்தில் மட்டும் அல்லாது, இயற்பியலிலும் பெரும் பங்கு வகிக்க முடியும் என்ற உண்மையில் எனக்கு இருந்த ஆர்வம் மிகுந்த அக்கறையை என்னால் மறுக்க முடியாது.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள், ஐயா?"

அப்பேராசிரியர் விளக்கி உதவினார்: "முதன்முதலாக ஒரு கம்பியில்லா இணைப்பையும், மின் அலைச்சிதறலை எடுத்துக் காட்டுவதற்கான கருவியையும் கண்டுபிடித்தவர் போஸ்தான். ஆனால் இந்த பாரத விஞ்ஞானி தன் கண்டு பிடிப்புகளை வியாபாரமாக்கி லாபமடையவில்லை. அவர் சீக்கிரத்திலேயே உயிரற்ற ஜடப்பொருட்களிடமிருந்து

உயிருள்ள பொருட்களிடம் தன் கவனத்தைத் திருப்பினார். தாவர இயல் நிபுணராக அவருடைய புரட்சிகரமான கண்டுபிடிப்புகள், இயல்பியல் நிபுணராக அவர் கண்டு பிடித்த முக்கியமான சாதனைகளையும் மிஞ்சி விட்டன."

இதை எனக்கு அறிவுறுத்தியவருக்கு நான் மரியாதை யுடன் நன்றி செலுத்தினேன். அவர் மேலும் கூறினார், "அந்த உயர்ந்த விஞ்ஞானி, மாநிலக் கல்லூரியில் என் சகோதர பேராசிரியர்களில் ஒருவர்."

நான் அடுத்த நாள் அந்த ஞானியை, என் வீட்டிற்கு அருகிலேயே இருந்த அவர் வீட்டில் சந்தித்தேன். வெகு நாட்களாகவே ஒரு மரியாதையான தூரத்திலிருந்து அவரைப் பாராட்டி வந்தேன். தனிமையை நாடும் ஆழ்ந்த சுபாவமுடைய அத்தாவரவியல் நிபுணர் என்னை அன்புடன் வரவேற்றார். அவர் அழகாக, திடகாத்திரமாக, சுமார் ஐம்பதுக்கு மேல் வயதுடையவராகவும் அகன்ற நெற்றி, அடர்த்தியான கேசம், எங்கோ கனவுலகத்தில் நிலைத்திருப்பதைப் போன்ற கண்கள் உடையவராகவும் இருந்தார். அவரின் குரலிலிருந்த தெளிவு வாழ்நாள் முழுவதும் விஞ்ஞானத்திலேயே ஊறி நின்ற வழக்கத்தைக் காட்டியது.

"நான் மேலை நாடுகளில் உள்ள அறிவியல் சங்கங்களுக்குப் பயணம் செய்து விட்டு சமீபத்தில் தான் திரும்பி வந்தேன். எல்லா உயிரினங்களிலும் உள்ள பிரிக்க முடியாத ஒற்றுமையை[1] எடுத்துக் காட்டும் என்னுடைய கண்டுபிடிப்பான நுட்பமான கருவிகளில்,

அவற்றின் அங்கத்தினர்கள் ஆழ்ந்த அக்கறை காட்டினார்கள். போஸ் தாவர உருப்பெருக்கி (Crescograph), ஒரு கோடி மடங்கு பெரிதாக்கிக் காட்டும் தன்மையுடையது. சாதாரண உருப்பெருக்கி சில ஆயிரம் மடங்கு மட்டுமே பெரிதாக்கிக் காட்டவல்ல தாயிருந்தாலும் அது உயிரியல் விஞ்ஞானத்தில் மிகப் பெரிய முன்னேற்றத்தைக் கொண்டு வந்தது. இந்தத் தாவர உருப்பெருக்கி எண்ணிறைந்த தோற்றங்களைக் காண வழி செய்கிறது."

"விஞ்ஞானத்தின் பொதுவான கரங்களினால் கிழக்கு, மேற்கு ஆகிய இரண்டின் இணைப்பை விரைவுபடுத்த நீங்கள் நிறைய செய்திருக்கிறீர்கள், ஐயா."

"நான் கேம்பிரிட்ஜில் கல்வி கற்றேன். எல்லாக் கோட்பாடுகளையும் தவறுதலற்ற பரிசோதனைகளின் மூலமே ஒப்பிட்டுப் பார்த்து ஒப்புக் கொள்வது என்ற மேல் நாட்டவரின் முறை எவ்வளவு பாராட்டத்தக்கது! அந்த அனுபவச் செயல் முறை என் கீழை நாட்டுப் பரம்பரைச் சொத்தான ஆன்ம சோதனை என்ற பரிசுடன் கைகோர்த்துச் சென்றுள்ளது. இந்த இரண்டும் சேர்ந்து வெகு காலமாகத் தன்னை மறைத்து வந்த இயற்கையின் மௌனங்களைக் கலைத்தெறிய எனக்கு உதவின. எதையும் எளிதில் நம்பாதவர்களுக்கு என் தாவர உருப்பெருக்கி[2] (Crescograph) யின் வரைபடங்கள் சொல்லும் கதைகளின் மூலம் தாவர இனங்களுக்கும் உணர்வுமிக்க நரம்பு மண்டலங்களும், பலதரப்பட்ட உணர்ச்சிகளுடன் கூடிய வாழ்க்கையும் உண்டு என்பது

நிரூபிக்கப்படுகிறது. தூண்டப்படும் பொழுது அன்பு, வெறுப்பு, ஆனந்தம், பயம், இன்பம், வலி, உணர்ச்சியின் மிகுதி, மயக்கம் இன்னும் கணக்கற்ற பல தகுந்த எதிர் விளைவுகள் மிருகங்களுக்கு ஏற்படுவதைப் போன்று தாவர இனங்களுக்கும் உண்டாகின்றன."

"பேராசிரியரே, இந்தத் தாவர இனங்களின் தனித் தன்மை பொருந்திய உயிர்த்துடிப்பு எல்லாப்படைப்புகளிடமும் காணப்படுவதென்பது நீங்கள் கண்டுபிடிப்பதற்கு முன்பு வெறும் கற்பனைக் கவிதைகளில்தான் காணப்படும். எனக்குத் தெரிந்த ஒரு மகான் மலர்களைப் பறிக்கவே மாட்டார். அந்த ரோஜாப் புதருடைய அழகின் பெருமையை நான் கொள்ளையிடலாமா? நான் முரட்டுத்தனமாகப் பறித்து அதன் பெருமையைக் குலைக்கலாமா? என்பார். அவருடைய இரக்கமான வார்த்தைகள் உங்கள் கண்டு பிடிப்புகளின் மூலம் உண்மையென நிரூபிக்கப்படுகின்றன."

"ஒரு கவிஞனுக்கு உண்மையுடன் உள்ள உறவு நெருக்கமானது. ஆனால் விஞ்ஞானியோ தடுமாற்றத்துடன் உண்மையை அணுகுகி றான். ஒரு நாள் என் ஆய்வுக் கூடத்திற்கு வந்து ஒப்புவமையற்ற என் உருப்பெருக்கியைப் பார்க்கவும்."

நான் அந்த அழைப்பை நன்றியுடன் ஏற்றுக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டேன். பின்னர் அந்தத் தாவர இயல் நிபுணர் மாநிலக் கல்லூரியை விட்டுவிட்டு கல்கத்தாவில் ஆராய்ச்சிக் கூடம் ஒன்றை நிறுவ

ஏற்பாடு செய்து கொண்டிருந்ததாகக் கேள்விப்பட்டேன்.

போஸ் நிறுவனம் திறக்கப்பட்ட பொழுது நான் அதன் துவக்க விழாவிற்குச் சென்றிருந்தேன். இதில் அக்கறை கொண்ட நூற்றுக் கணக்கான மக்கள் அந்தக் கட்டிடத்தைச் சுற்றிப் பார்த்தார்கள். விஞ்ஞானத்தின் நவீன இல்லமாகிய அந்த இடத்தில் கலையழகையும் ஆன்மீகச் சின்னங்களையும் கண்டு நான் மயங்கினேன். அதன் முன் வாயில், பழமையான ஒரு கோயிலில் நூற்றாண்டுகளாக இருந்துவரும் ஞாபகச் சின்னம் போன்றிருந்தது. ஒரு தாமரைக்[3] குளத்தின் பின்னால் கையில் ஒளி சிந்தும் விளக்குடன் நிற்கும் பெண்ணுருவம், பெண்ணை அழிவற்ற ஒளியை ஏந்துபவராக மதித்துப் போற்றும் பாரதத்தின் இயல்பைக் குறிப்பதாயிருந்தது. தோட்டத்திலுள்ள ஒரு சிறிய கோயில் புலன்களுக்கு அப்பாற்பட்ட அருவ நிலைக்கு அர்ப்பணிக்கப் பட்டதாக இருந்தது. பீடத்தில் எந்த உருவச் சிலையும் இல்லாதது எங்கும் நிறைந்துள்ள தெய்வத்தின் அழிவின்மையைக் குறித்தது.

இந்த மகத்தான சமயத்தில் போஸின் சொற்பொழிவு அருள் பெற்ற பழங்காலத்திய ரிஷிகளில் ஒருவர் வாய் மூலமாக வந்தது போல் தோன்றியது.

"நான் இந்த நிறுவனத்தை வெறும் ஆய்வுக்கூடமாக மட்டுமின்றி ஒரு கோயிலாக அர்ப்பணம் செய்கிறேன். மக்கள் குழுமியிருந்த அந்தச் சபையின் மீது அவருடைய வணக்கமான கம்பீரம், கண்ணுக்குப் புலப்படாத ஒரு மேற்போர்வையைப் போல் கவிந்திருந்தது. நான்

ஆராய்ச்சியை மேற்கொள்கையில் இயற்பியல் மற்றும் உடற்கூறு இயல் ஆகியவற்றின் எல்லைக்கு என்னையறியாமல் இட்டுச் செல்லப்பட்டேன். உயிருள்ளவைகளுக்கும் உயிரற்றவைகளுக்கும் இடையே எல்லைக் கோடுகள் மறைவதையும் தொடர்புப் புள்ளிகள் தென்படுவதையும் நான் மிகுந்த வியப்புடன் கண்டேன். உயிரற்ற பொருட்கள் வெறும் ஜடப் பொருட்களாகவே கருதப்பட்டன; ஆனால் கணக்கற்ற சக்திகளின் செயலுக்கு உட்படுத்தப்பட்ட பொழுது அவை விதிர்விதித்தன.

"எல்லாவற்றிற்கும் பொருந்துகிற ஓர் எதிர் செயல் உலோகம், தாவரங்கள் மற்றும் பிராணிகள் இவற்றை ஒரு பொதுவான விதியின் கீழ்க் கொண்டு வந்திருப்பதாகத் தோன்றுகிறது. அவையனைத்தும் களைப்பு, சோர்வு, திரும்பவும் குணமடைதல், அதிக மகிழ்ச்சி, எந்த பிரதிபலிப்பையும் தோற்றுவிக்காத நிரந்தரமான மரணம் ஆகிய குணங்களை வெளிப்படுத்தின. இந்த மாபெரும் பொதுவான அம்சத்தைக் கண்டு பயபக்தி நிறைந்த நான், மகத்தான நம்பிக்கையுடன் ராயல் சொஸைடிக்கு என் முடிவுகளை அறிவித்தேன். இம்முடிவுகள், சோதனைகள் மூலம் நிரூபிக்கப்பட்டன. ஆனால் உடற்கூறு இயல் நிபுணர்கள், இயற்பியலில் என் கண்டுபிடிப்புகளின் வெற்றி நிச்சயமாகி இருப்பதால் அதனுடன் நிறுத்திக் கொள்ளும் படியும், அவர்களுடைய துறைகளில் தலையிட வேண்டாமென்றும் எனக்கு அறிவுரை கூறினார்கள். நான்

தெரியாத்தனமாக பழக்கமில்லாத இன வேறுபாடு துறையில் புகுந்து அதன் ஆசாரத்தை அவமதித்துவிட்டேன்.

"உணர முடியாத, ஒரு சார்புடைய சமயச் சாய்வும் அங்கிருந்தது; அது நம்பிக்கையிலிருந்து அறியாமையை பிரித்துணர முடியாதபடி மயக்கமூட்டுவதாகும். என்றும் முன்னேறி வரும் படைப்பின் மர்மத்தை நம்மைச் சூழ்ந்து அமைத்துள்ள அந்த ஆண்டவன், நமக்குள் எதையும் சோதித்துப் புரிந்து கொள்ளும் விருப்பத்தையும் புகுத்தி இருப்பானென்ற உண்மையைப் பெரும்பாலும் மறந்து விடுகிறோம். பல ஆண்டுகளுக்கு மற்றவர்களால் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டதால் விஞ்ஞானத்தின் பக்தனுடைய வாழ்க்கை, தவிர்க்க முடியாதபடி முடிவற்ற போராட்டங்களினால் நிரப்பப்பட்டு இருக்கிறது என்று நான் தெரிந்து கொண்டேன். அவன் லாப, நஷ்டம், வெற்றி, தோல்வி எல்லாவற்றயும் ஒன்றாகப் பாவித்து தன் வாழ்க்கையை மனப்பூர்வமான ஒரு காணிக்கையாக அளிக்க வேண்டும்.

"காலக்கிரமத்தில் உலகத்தில் முன்னோடியாக விளங்கும் விஞ்ஞான சங்கங்கள் என் கோட்பாடுகளையும் முடிவுகளையும் ஒப்புக்கொண்டு விஞ்ஞானத்திற்கு பாரதத்தினுடைய பங்கின் முக்கியத்துவத்தை அங்கீகரித்தன. சிறிய அல்லது வரையறைக் குட்பட்ட ஏதாவது பாரதத்தின் மனத்தை என்றாவது திருப்திபடுத்த முடியுமா? இந்த நாடு, ஒரு தொடர்ச்சியான உயிருள்ள பாரம்பரியத்தின்

மூலமாகவும் புத்துணர்ச்சி அளிக்கும் உயிராற்றலாலும் கணக்கற்ற மாற்றங்களினூடேயும் தன்னைத் திரும்பவும் சரி செய்து கொண்டு வந்திருக்கிறது. இந்தியர்கள், உடனுக்குடன் கிடைக்கக்கூடிய கவர்ச்சியான பரிசுகளை நிராகரித்து, செயலற்ற தியாகத்தின் மூலமாக அல்லாமல் செயலுடனான போராட்டங்களின் மூலமாகவே வாழ்க்கையில் உயர்ந்த குறிக்கோள்களை அடைவதை நாடி இருக்கிறார்கள். போராட்டத்தை மறுக்கும் ஒரு பலவீனன், எதையும் சாதிக்காததுடன் தியாகம் செய்யவும் எதுவும் இல்லாதவன். முயற்சி செய்து வென்றவனாலேயே, அவனுடைய வெற்றிகரமான அனுபவத்தின் பலன்களை அளிப்பதன் மூலம் உலகத்தை மேன்மையடையச் செய்ய முடியும்.

"பொருளின் எதிர்வினை பற்றியும், தாவர வாழ்வின் எதிர்பாராத வெளிப்பாடுகளைப் பற்றியும் போஸ் ஆய்வுக்கூடத்தில் ஏற்கனவே செய்யப்பட்ட பணி இயற்பியல், உடற்கூறு, மருத்துவம், விவசாயம் மேலும் உளவியலிலும் கூட விரிவான ஆராய்ச்சிகளுக்கு வழிவகுத்துள்ளது. இது வரையிலும் விடை காண முடியாதவை என்று ஒதுக்கப்பட்ட சிக்கல்களைக் கூட சோதனை மூலம் ஆராய்ந்து பார்க்கலாம் என்ற நிலை ஏற்பட்டு உள்ளது.

"ஆனால் உயர்தரமான வெற்றிகளைக் கண்டிப்பான விதிமுறைகளின்றி அடைய முடியாது. ஆதலால் நான் திட்டமிட்டுச் செய்த அதிஉணர்வு நுட்பங்களையுடைய மின்கலக் கருவிகளும் மற்றக் கருவிகளும் நுழைவுக்

கூடத்தில் பெட்டியில் உங்கள் முன்னே வைக்கப்பட்டிருக்கின்றன. ஏமாற்றும் வெளித்தோற்றங்களைப் புறக்கணித்து விட்டு, காணப்படாது கிடக்கும் உண்மையைக் கண்டறிய, மேற்கொள்ளப்பட்ட நெடுங்கால முயற்சிகளை அவை எடுத்துக்காட்டும். அத்தகைய முயற்சிகள் விடாமுயற்சியுடன் கூடிய அயராத உழைப்பினாலும் சமாளிக்கும் திறனாலும் மனித வரம்பை வெல்லத் தக்கனவாகின்றன. படைப்பாற்றலுடன் செயல்படும் எல்லா விஞ்ஞானிகளுக்கும் உண்மையான ஆய்வுக்கூடம் மனம்தான் என்பதும் அங்கேதான் பொய்த் தோற்றத்தின் பின்னே உள்ள உண்மை விதிகளை கண்டறியலாம் என்பதும் தெரியும்.

"இங்கு நிகழ்த்தப்பெறும் சொற்பொழிவுகள் ஏற்கனவே கூறப்பட்ட கருத்துக்களை திரும்பத் திரும்பக் கூறுபவையல்ல. இந்தக் கூடங்களில் முதன் முதலாக நிரூபிக்கப்பட்ட புதுக் கண்டுபிடிப்புகளை அவை அறிவிக்கும். இங்கிருந்து முறையாக வெளிவரும் வெளியீடுகள் மூலமாக, இந்த நிறுவனத்தின் கண்டுபிடிப்புகள் உலக நாடுகளுக்கு பாரதத்தின் கொடையாக எங்கும் பரவும். அவை பொதுச் சொத்தாக இருக்கும். தனிச் சொத்து என்பதற்கான அங்கீகாரங்கள் கேட்கப்படப் போவதில்லை. அறிவைச் சொந்த லாபத்திற்கு உபயோகிக்கும் களங்கத்திலிருந்து நாம் என்றும் விலகியிருக்க வேண்டுமென நமது தேசியப் பண்பாடு கோருகிறது.

"இந்த நிறுவனத்தின் மூலம் கிடைக்கும் வசதிகள் எல்லா நாடுகளிலிருந்து வருபவர்களுக்கும் கிடைக்க வேண்டும் என்பதும் என்னுடைய விருப்பம். இதில் நான் எனது நாட்டின் பண்பாட்டைக் கடைப்பிடிக்க முயற்சி செய்கிறேன். இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே பாரதம் தன்னுடைய பழம் பல்கலைக் கழகங்களான நாளந்தா, தக்ஷசீலம் ஆகியவற்றிற்கு உலகம் முழுவதிலிருந்தும் அறிஞர்களை வரவேற்றது.

"விஞ்ஞானம் என்பது கீழை நாட்டிற்கோ மேலை நாட்டிற்கோ மட்டும் சொந்தமானதன்று. அது எல்லோருக்கும் பொதுவான உலகச் சொத்து. இருந்தாலும் பாரதம் விஞ்ஞானத்தில் சிறந்த பங்காற்ற தனித் தகுதி பெற்றுள்ளது.[4] ஒன்றுக்கொன்று முரண்பட்டுத் தோன்றும் விபரீதமான உண்மைகளின் குவியலிலிருந்து ஒரு புது விதிமுறையைப் புரிந்து எடுத்துவிடக்கூடிய அதீத இந்தியக் கற்பனையை, ஒருமுனைப் படுத்தப்பட்ட எண்ணம் என்னும் பழக்கம் கட்டுப்படுத்துகிறது. இந்தக் கட்டுப்பாடு உண்மையை எல்லையற்ற பொறுமையுடன் தேட மனத்தை நிலைநிறுத்த உதவுகிறது.




ஜகதீஸ் சந்திர போஸ்

அந்த விஞ்ஞானியின் முடிவுரையில் கூறப்பட்ட சொற்கள் என் கண்களில் நீரை வருவித்தது.

உண்மையில் பொறுமை என்பது காலத்தையும் சரித்திர ஆசிரியர்களையும் ஒருங்கே திகைப்படையச் செய்யும் பாரதத்தின் மறு பெயரல்லவா?

அந்த ஆய்வுக்கூடம் தொடங்கிய சிறிது நாட்களுக்குப் பிறகு நான் அங்கு மறுபடியும் சென்றேன். அச்சிறந்த தாவர இயல் நிபுணர் அவருடைய வாக்குறுதியை மறக்காமல் என்னை அவருடைய அமைதியான ஆய்வுக் கூடத்திற்கு அழைத்துச் சென்றார்.

"நான் இந்தப் பெரணிச் செடியுடன் தாவர உருப்பெருக்கியை இணைக்கிறேன். அதன் பெரிதாக்கும் தன்மை பிரமாண்டமானது. ஒரு நத்தை ஊர்வது இதன் மூலம் பெரிது படுத்தப்படுமானால் அது ஒரு துரித ரயில் வண்டி போவதைப் போலத் தோற்றமளிக்கும்!"

என் பார்வை ஆவலுடன் அந்தப் பெரணி, திரையில் பிரதிபலிப்பதை நோக்கியது. நுட்பமான உயிர்ச்சலனங்கள் இப்பொழுது நன்கு தென்பட்டன; அந்தச் செடி, வசீகரிக் கப்பட்ட என் கண்களின் முன்னால் மெதுவாக வளரலாயிற்று. அந்த விஞ்ஞானி பெரணியின் முனையை ஒரு சிறு உலோகத் தண்டினால் தொட்டார். ஊமை நாடகம் போன்று விரிவடைந்து வந்த அந்தச் செடியின் அசைவு திடீரென்று நின்றது. அந்தத் தண்டை அகற்றியவுடன் மறுபடி அதன் சலனம் சுறுசுறுப்பாகத் தொடங்கியது.

"எந்தவொரு மிகச் சிறிய வெளித்தடையும் அதனுடைய உணர்ச்சிமிக்க திசுக்களுக்கு எவ்வளவு ஊறு விளைவிப்பதாயுள்ளது என்பதை இப்போது கண்டீர்கள்,

போஸ் குறிப்பிட்டார். இப்பொழுது கவனியுங்கள்; நான் மயக்க மருந்து கொடுக்கிறேன். பிறகு அதை முறிக்கவும் மருந்து கொடுக்கிறேன்."

மயக்க மருந்தின் பலனாக எல்லா வளர்ச்சியும் நின்று விட்டது; முறிவு மருந்து புத்துணர்ச்சி தருவதாக அமைந்தது. திரையில் தெரிந்த அந்த வளர்ச்சியின் குறிகள் ஒரு திரைக்கதையை விட என்னை அதிகம் கவர்ந்தது. எனது தோழர் (இங்கு ஒரு வில்லனாகப் பங்கேற்பவர்) ஒரு கூரான கருவியைப் பெரணியின் ஒரு பாகத்தினுள்ளே செலுத்தினார்; விட்டு விட்டுத் துடித்ததில் அதன் வலி தெரிந்தது. ஒரு கத்தியை அதன் தண்டில் பாதியளவு செலுத்திய பொழுது அந்தப் பிம்பம் மிகத் தீவிரமாகத் தவித்து, கடைசியில் மரணத்தின் அறிகுறியாக நின்றுவிட்டது.

"முதன்முதலில் ஒரு பெரிய மரத்திற்கு மயக்கமருந்து கொடுத்து நான் ஒரு வெற்றிகரமான இடப்பெயர்ச்சியைச் செய்து முடித்தேன். சாதாரணமாக இம்மாதிரியான காட்டு அரசர்கள் இடம் பெயர்ந்த வெகு சீக்கிரத்தில் மடிந்து விடுவார்கள். அந்த உயிர் காத்த ஏற்பாட்டை நினைத்த பொழுது ஜகதீஸ் மகிழ்ச்சியுடன் சிரித்தார். என் நுட்பமான கருவியின் வரைபடங்கள், மரங்களுக்கு இரத்த ஓட்ட முறை இருப்பதை நிரூபித்தன. அவைகளுடைய தாவர உயிர்ச் சாற்றின் ஓட்டம் மிருகங்களின் இரத்த அழுத்தத்திற்கு ஒப்பாகச் செயல்படுகிறது. இந்த உயிர்ச்சாற்றின் ஏறும் ஓட்டம், தந்துகிக் (Capillary) கவர்ச்சியைப் போன்றது என்று

சாதாரணமாகக் கூறப்படும் வாதங்களினால் விளக்க முடியாது. தாவர உருப்பெருக்கி மூலம் உயிருள்ள செல்களின் செயலாக இந்நிகழ்ச்சி வெளிப்படுத்தப்படுகிறது. மரத்தின் அடிவரை செல்லும் ஓர் உருளைக் குழாயிலிருந்து வெளிவருகின்ற சுருங்கி விரியும் அலைபோன்ற இயக்கத்தினால் உண்மையில் இக்குழாய் ஓர் இதயமாகவே இயங்குகிறது எனலாம்! நாம் ஊன்றிப் பார்க்கப் பார்க்க இயற்கையின் பலதரப்பட்ட உருவங்களை ஒரே மாதிரியான திட்டம் இணைப்பது கண் கூடாகத் தெரிகிறது."

அந்த மகா விஞ்ஞானி இன்னுமொரு போஸ் கருவியைக் காண்பித்தார்.

"நான் உங்களுக்கு ஒரு தகரத் துண்டில் சில பரிசோதனைகளைச் செய்து காண்பிக்கிறேன். உலோகங்களிலுள்ள உயிர்ச் சக்தி, வெளியிலிருந்து கொடுக்கப்படும் தூண்டல்களுக்குச் சாதகமாகவோ அல்லது பாதகமாகவோ இயங்குகின்றன. மை அடையாளங்கள் இவற்றின் பலவித எதிர்ச் செயல்களை எடுத்துக்காட்டும்."

நான் மிகுந்த ஈடுபாட்டுடன் அணு அமைப்பின் தனித்தன்மை பொருந்திய அலைகளைப் பதிவு செய்யும் அந்த வரைபடத்தைக் கவனித்தேன். அந்தப் பேராசிரியர் மயக்க மருந்தை அந்தத் தகரத்தின் மீது தடவியதும் அலையதிர்வுகளின் பதிவு நின்றுவிட்டது. அந்த உலோகம் மெதுவாகச் சுயநிலை அடைந்ததும் அவ்வதிர்வுகள் மறுபடியும் பதியலாயின. என் நண்பர்

ஒரு நச்சு மருந்தை அதில் தடவினார். உடனே அத்தகரத் துண்டு துடித்தது. அவ்வரை படத்தின் ஊசி, திடீரென்று மரண அறிக்கையை விடுத்தது. அந்த விஞ்ஞானி கூறினார்:

"கத்தரிக்கோல், இயந்திரங்கள் போன்றவற்றில் உள்ள உலோகங்கள் களைப்படையக்கூடும். சில காலம் அவற்றிற்கு இளைப்பாற வாய்ப்பளித்தால் பிறகு அவை நன்கு செயல் படுகின்றன என்பதை போஸ் கருவிகள் நிரூபித்துக் காண்பித்துள்ளன. உலோகங்களிலுள்ள உயிர்நாடிகள் மின்சார ஓட்டத்தைப் பாய்ச்சும் பொழுதோ அல்லது மிகுந்த அழுத்தத்தைக் கொடுக்கும் பொழுதோ பெரிதும் பாதிப்படைகின்றன; அல்லது முழுவதுமாக நின்று விடுகின்றன."

அயராத திறமைக்கு மிகச் சிறந்த சான்றுகளாக இருக்கும் பலவிதக் கண்டுபிடிப்புகள் உள்ள அவ்வறையைச் சுற்றிக் கண்ணோட்டம் விட்டேன்.

"ஐயா, மிகப் பிரமாதமான உங்களுடைய இயந்திர அமைப்பு களை முழுதும் உபயோகத்திற்குக் கொண்டு வந்து பெருத்த அளவில் விவசாய முன்னேற்றத்தை விரைவு படுத்தாதது வருந்தத்தக்கதாகும். பலதரப்பட்ட உரங்களினால் தாவர வளர்ச்சிக்கு உண்டாகும் விளைவுகளை, ஆய்வுக் கூடத்தில் விரைவாகப் பரிசோதித்து எடுத்துக் காட்ட அவைகளில் சிலவற்றை எளிதில் கையாள முடியாதா?"

"நீங்கள் சொல்வது சரியே. வரும் தலைமுறைகள் போஸ் கருவி களைக் கணக்கற்ற வழிகளில்

உபயோகப்படுத்தும். ஒரு விஞ்ஞானி அவர் வாழும் காலத்திலேயே புகழை அடைவது மிக அரிது; ஆக்கப்பூர்வமான சேவையினால் கிடைக்கும் மகிழ்ச்சியே போதும்."

அந்த அயர்வற்ற விஞ்ஞானிக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துவிட்டு நான் விடை பெற்றேன். அந்த அறிஞரின் வியக்கத்தக்க அறிவுவளம் என்றாவது குறைய முடியுமா? என்று நான் எண்ணினேன்.

ஆண்டுகள் நகர்ந்தாலும் அவரது கண்டுபிடிப்புகள் குறையவில்லை. மிக மிக நுட்பமான இசைவொலி வரை கோட்டுக் கருவி (Resonant Cardiograph) யைக் கண்டுபிடித்த பின் போஸ் கணக்கற்ற இந்தியத் தாவர வகைகளில் விரிவான ஆராய்ச்சிகளைத் தொடர்ந்தார். நம்பமுடியாதபடி பெருமளவில் பயனளிக்கும் மருந்துகளை விவரிக்கும் நூல் ஒன்று வெளியிடப்பட்டது. அந்த வரைகோட்டுக் கருவி, ஒரு வினாடியின் நூற்றில் ஒரு பாகத்தைத் தவறின்றி அப்படியே படமாகக் காட்டும் வகையில் அமைக்கப்பட்டிருந்தது. தாவர, மிருக மற்றும் மனித அமைப்பில் உள்ள கணக்கற்ற நாடித் துடிப்புகள் இசைவொலிப் பதிவுகளின் மூலம் அளக்கப்படுகின்றன. அத்தலைசிறந்த தாவர இயல் நிபுணர் அவருடைய வரை கோட்டுக் கருவி, பிராணிகளைக் கூறு போடுவதற்குப் பதிலாக தாவர வகைகளைக் கூறு போட்டுப் பார்க்க உபயோகப்படும் என்று முன் கூட்டியே கூறினார்.

"ஒரே சமயத்தில் ஒரு தாவரத்திற்கும் ஒரு

பிராணிக்கும் கொடுக்கப்படும் மருந்து, ஆச்சரியப்படும் வகையில் ஒரே விதமான பலனை ஏற்படுத்துகின்றது, என்று அவர் சுட்டிக் காட்டினார். மனிதனிடம் உள்ள ஒவ்வொரு இயல்பும் தாவரத்தில் ஏற்கனவே அமைந்துள்ளது. தாவர வகைகளைப் பரிசோதிப்பது பிராணி மற்றும் மனித இனங்களின் துன்பங்களைக் குறைக்க உதவும்."

பல ஆண்டுகளுக்குப் பிறகு போஸினுடைய முன் னோடியான தாவரக் கண்டுபிடிப்புகள் மற்ற விஞ்ஞானிகளால் உறுதிப்படுத்தப்பட்டன. 1938ல் கொலம்பியா பல்கலைக் கழகத்தில் செய்யப்பட்ட பணியைப் பற்றி நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை பின்வறுமாறு குறிப்பிட்டிருக்கிறது:

> நரம்புகள், மூளைக்கும் உடலின் மற்ற உறுப்புகளுக்கும் இடையே செய்திகளை எடுத்துச் செல்லுகையில் மிகச் சிறு மின் தூண்டுதல்கள் ஏற்படுகின்றன என்பது சில ஆண்டுகளுக்கு முன்பு கண்டுபிடிக்கப்பட்டது. இத் தூண்டுதல்கள் நுட்பமான கால்வனா மீட்டர்களால் அளக்கப்பட்டு நவீன உருப்பெருக்கிகளால் லட்சக்கணக்கான மடங்கு பெரிது செய்யப்படுகின்றன. இது வரையில் மனிதனின் அல்லது உயிருள்ள மிருகங்களின் நரம்பிழைகளின் வழியாகப் பாயும் இத்தூண்டுதல்களின் பாதையை ஆராய்வதற்கு திருப்திகரமான எந்த வழியும் கண்டு பிடிக்கப்படவில்லை. ஏனெனில் இத்தூண்டுதல்கள் செல்லும் வேகம் மிக அதிகமானது.
>
> டாக்டர் கே.எஸ்.கோல் என்பவரும் எச்.ஜே.கர்டிசும் நன்னீரில் வளரும் நீளமான ஒற்றை செல்கள் கொண்ட நிடெல்லா என்னும் செடி (தங்கமீன் வளர்க்கும் கிண்ணங்களில் அடிக்கடி உபயோகப்படுவது), ஒன்றை நரம்பிழைகள் உள்ள மற்ற இனங்களுடன் அப்படியே ஒன்றுபடுகின்றது எனக் கண்டுபிடித்ததை அறிவித்தனர். மேலும் நிடெல்லா இழைகள் உணரவூட்டம் பெறும்பொழுது ஏற்படுத்தும் மின் அலைகள், வேகம் ஒன்றைத் தவிர மிருகங்கள் மற்றும் மனித நரம்பிழைகளில் ஏற்படுவதைப் போன்று ஒவ்வொரு வகையிலும் ஒத்துள்ளன எனக் கண்டனர். ஒரு செடியில் உண்டாகும் மின் நரம்பு தூண்டுதல்கள், மிருகங்களில் ஏற்படுவதை விட மிக மெதுவாக உள்ளன எனக் காணப்பட்டது. இந்தக் கண்டுபிடிப்பை கொலம்பியா விஞ்ஞானிகள் பின்பற்றி நரம்புகளில் மின் தூண்டுதல்களின் பாதையை மெதுவான சலனப் படங்களாக எடுக்க வழி வகுத்தனர்.

இப்படி நிடெல்லா செடி, ரொஸட்டா[5] கல்லைப் போன்று மனம் மற்றும் பொருளின் எல்லைப் பகுதிக்கு அருகில் நன்கு பாதுகாக்கப்பட்டுவரும் ரகசியங்களை ஊகிக்க உதவலாம்.

கவி ரவீந்திரநாத் தாகூர் இந்தியாவின் இந்த லட்சிய விஞ்ஞானியின் உயர்ந்த நண்பராவார். அவருக்காக அந்த இனிமையான வங்காளக் கவிஞர் பின்வரும் வரிகளை எழுதியுள்ளார்:6

அழைத்திடு, துறவி! அழைத்திடு!
விழிமின்! எழுமின்! என்ற தொல்லிசை சாமத்தை7
உன் சத்தியச் சொற்களில் கூவி அழைத்திடு! வீண்
சாத்திரம் பேசிப் பெருமை கொண்டுவெறும்
ஆத்திரச் சொற்களின் அடிமை மனிதனை அழைத்திடு!
வீம்பான மூர்க்கனை முன்னுக்கு அழைத்திடு!
அன்னை இயற்கையின் அருள் முகமான அகன்ற மண்ணில்
உன் வித்தகரைக் குறித்து இவ்வழைப்பை நீ விடுத்திடு!
தியாகத் தீயின் சுடரின் வெம்மையில் ஒன்றாய்
யாவரும் இயங்கட்டும்! நம் பாரதமும் தான்,
தொன்றுதொட்டே நிற்கும் நம் அன்னையவள் திரும்பத்
தன் உறுதியான பணி ஆற்றத் தொடங்கட்டும்,
கடமைக்கும் இறையன்பிற்கும் தொண்டாற்றவே
ஆழ்நிலைத் தியானத்தில் அமரட்டும்,
திரும்பச் சலனமின்றி கலக்கமின்றி பெருவிருப்பின்றி
புனிதவதியாகி, உலகெலாம் அருள் போதிக்கும்
அன்னையாகி அரியாசனத்தில் அமரட்டும்.

1 "எல்லா விஞ்ஞானமும் மேம்பட்டதுதான். இல்லாவிடில் அது அழிந்துவிடும். தாவரவியல் தற்சமயம் சரியான சித்தாந்தத்தை அடைந்தவாறு உள்ளது. பிரம்மாவின் அவதாரங்கள் சீக்கிரத்தில் இயற்கை வரலாற்றின் பாடப் புத்தகங்களாகிவிடும்". -எமர்ஸன்.

2 லத்தின் மூலச் சொல்: கிரிஸெரி (Crescere) – அதிகப்படுத்து, அவருடைய கிரெஸோகிரா:ஃபிற்கும் மற்ற கண்டுபிடிப்புகளுக்கும் 1917ல் போஸுக்கு வீரப்பட்டம் (Knighthood) கிடைத்தது.

3 தாமரை மலர் பாரதத்தின் புராதனமான தெய்வீகச்சின்னம்; அதன் இதழ்கள் விரிவது ஆன்மாவின் விரிவைக்குறிக்கும். சேற்றிலிருந்து பிறந்து வளரும் அதன் புனிதமான அழகு நலமளிக்கும் ஓர் ஆன்மீக வாக்குறுதியாகும்.

4 புராதன இந்துக்களுக்குப் பொருட்களின் அணு அமைப்புப் பற்றி நன்கு தெரிந்திருந்தது. இந்திய தத்துவ சாத்திரத்தில் ஆறு முறைகளில் ஒன்றானது வைசேஷிகம். சமஸ்கிருத மூலச்சொல்: விசேஷஸ், அணுவின் தனித்தன்மை. வைசேஷிகத்தை விளக்கியவர்களில் முதன்மையானவர்களில் ஒருவரான ஆலுக்யர் என்பவர் கணாதர் (அணுவைப் புசிப்பவர்) எனவும் அழைக்கப்பட்டு வந்தார். இவர் சுமார் 2,800 ஆண்டுகளுக்கு முன் பிறந்தவர்.

ஏப்ரல் 1934, ஈஸ்ட் - வெஸ்ட் பத்திரிகையில் வெளிவந்த தாரா மாதா எழுதிய கட்டுரையில் வைசேஷிகத்தின் விஞ்ஞானக் கருத்துச் சுருக்கம்

பின்வருமாறு கொடுக்கப்பட்டிருந்தது: அணுவைப் பற்றிய புதிய கொள்கை பொதுவாக விஞ்ஞானத்தின் நவீன முன்னேற்றம் என்று கொள்ளப்பட்டாலும் வெகுகாலத்திற்கு முன்பே கணாதர் (அணுவைப் புசிப்பவர்) என்பவரால் அதற்கு மிக அற்புதமான விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது. சமஸ்கிருத அணுஸ் என்பதை அணு (Atom) என மொழி பெயர்க்கலாம். அது கிரேக்க மொழிப்படி வெட்ட முடியாதது அல்லது பகுக்க முடியாதது என்பதாகும். கிறிஸ்துவிற்கு முந்தைய கால இலக்கியமான வைசேஷிகத்தில் காணக்கிடைக்கும் மற்ற விஞ்ஞான உண்மைகள்: (1) காந்தத்தை நோக்கி ஊசிகளின் அசைவு (2) தாவரங்களில் நீரின் சுழற்சி (3) ஆகாயம் அல்லது ஈதர், நுட்பமான சக்திகளின் போக்குவரத்துக்கு ஆதாரமாக ஜடப் பொருளாகவும், எந்தக் கட்டமைப்பும் கொண்டிராமலும் இருப்பது. (4) மற்ற எல்லா வெம்மைக்கும் காரணமாக சூரியனுடைய வெப்பம் இருப்பது (5) மூலக்கூறுகளின் மாற்றத்திற்கு வெப்பம் காரணமாக இருப்பது (6) பூமியின் அணுக்களுக்குள் அடங்கியிருக்கும் சுய சக்தியினால் கீழ் நோக்கி இழுக்கும் திறனான புவிஈர்ப்பு சக்தியின் விதிமுறை (7) அனைத்து சக்திகளின் இயங்கும் இயல்பு-இதன் செயல்பாடானது சக்தியைச் செலவழிப்பதையும் அல்லது இயக்கத்தின் மறு வினியோகத்தையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது. (8) அணுப்பிளவினால் பேரண்டத்தின் அழிவு (9) ஒளி மற்றும் வெப்பத்தின் கதிர் வீச்சுகள் மிக மிக நுண்ணிய சிறு துகள்களாக நினைக்க முடியாத வேகத்தில் எல்லாப் பக்கங்களிலும் சிதறுவது (நவீன பிரபஞ்சக் கதிர்கள் கோட்பாடு) (10) காலம், இடம் இவைகளின் சார்பு தத்துவம்.

வைசேஷிகம், உலகத்தின் மூல காரணமாக என்றும் அழியா இயல்பைக் கொண்ட அணுக்களையே குறிப்பிடுகிறது, அதாவது அணுக்களின் முடிவான விசேஷத் தன்மையைக் குறிப்பிடுகிறது. இந்த அணுக்கள் இடையறாத அதிர்வசைவுகளைக் கொண்டதாகக் கருதப்பட்டன... பழங்காலத்து வைசேஷிக தத்துவ ஞானிகளுக்கு அணு ஒரு மிகச் சிறு சூரிய மண்டலம் என்ற நவீன கண்டுபிடிப்புப் புதியதில்லை; அவர்கள் கணக்கியலின் கருத்துப்படி காலத்தின் மிகக் குறைந்த அளவைக் கூட, அணு தன் வட்டத்தைச் சுற்றுவதற்கு எடுத்துக் கொள்ளும் நேரமாகக் கணக்கிட்டிருந்தார்கள்.

5 நெப்போலியனின் சேனைத்தலைவனான ரொஸட்டாவின் குழுவிற்கு, மூன்று லிபிகள் பொறிக்கப்பட்டிருந்த கல்வெட்டு ஒன்று கிடைத்தது. அதன் உதவியால் புராதன தூதுக்குழுக்களின் எழுத்துக்களை படித்தறிந்தனர்.

6 இந்தியாவிலுள்ள சாந்திநிகேதனின் விஸ்வ பாரதி காலாண்டு சஞ்சிகையில் ரவீந்திரநாத் தாகூரால் வங்காளியில் வெளியிடப்பட்டு, மன்மோகன் கோஷ் என்பவரால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டது.

7 தாகூரின் கவிதையில் கூறப்படும் சாமம் என்னும் தோத்திரம் நான்கு வேதங்களில் ஒன்றாகும். மற்ற மூன்று வேதங்கள் ரிக், யஜுர், அதர்வணம் எனப்படும். அப்புனித நூல்கள் படைப்பவனான ஆண்டவன் என்ற பிரம்மத்தின் இயல்பைப் பற்றி விளக்குகின்றன. தனி மனிதனில் பிரம்மத்தின் வெளிப்பாடு ஆத்மா ஆகும். பிரம்மத்தின் மூல வினைச்சொல் ப்ருஹ் விரிவுபடுதல் எனப் பொருள்படும். இது, இயல்பான வளர்ச்சியின் தெய்வீக சக்தியானது ஆக்க பூர்வச் செயலாகப் பரிமளிக்கும் என்ற வேதத்தின் உட்கருத்தைக் குறிக்கிறது. பிரம்மத்தின் இருப்பிலிருந்து சிலந்தி வலையைப் போன்று பிரபஞ்சம் விரிந்து பரந்து (விகுருதே) எழுவதாகக் கூறப்படுகிறது. ஆத்மா, பிரம்மத்துடனும் ஜீவன், பரமாத்மாவுடனும் உணர்வுடன் ஒன்றுவதுதான் வேதங்களின் முழுமையான தத்துவம் எனலாம்.

வேதங்களுடைய சுருக்கமான வேதாந்தம் பல சிறந்த மேற்கத்திய சிந்தனையாளர்களை ஊக்குவித்திருக்கிறது. ஃபிரான்ஸ் தேசத்து சரித்திர ஆசிரியர் விக்டர் கஸின் கூறுகிறார்: கிழக்கத்திய நாடுகளின்முக்கியமாக இந்தியாவின் தத்துவார்த்தப் படைப்புகளைக் கவனமாகப் படித்தால்... கிழக்கு தேச தத்துவ ஞானத்திற்கு முன் நாம் மண்டியிட வேண்டிய அளவு ஆழ்ந்த உண்மைகளையும், மனித இனத்தின் இத்தொட்டிலில்தான் தலைசிறந்த தத்துவ ஞானத்தின் பிறப்பிடம் உள்ளது என்றும் தெரிந்துகொள்கிறோம். ஸ்லேகல் சொல்கிறார்: ஐரோப்பியர்களுடைய உயர்ந்த தத்துவமும் கிரேக்க தேசத்து தத்துவ அறிஞர்கள் கூறும் பகுத்தறிவு கொள்கையும் கூட, உயிர்வளமும், உரமுமுள்ள கீழை நாட்டுத் தத்துவத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் கதிரவனுக்கு முன்னால் புரோமிதியஸ் என்பவன் கொண்டு வந்த சிறு சுடருக்கு ஒப்பாகும். (கிரேக்க புராணத்தில் புரோமிதியஸ் என்பவன் சூரியனிடமிருந்து நெருப்பை பூமியிலிருக்கும் மனித குலத்திற்கு உதவக்கவர்ந்து கொண்டு வந்தான் என்று சொல்லப்படுகிறது.)

இந்தியாவிலுள்ள ஏராளமான இலக்கியங்களில் வேதங்களுக்கு (மூலம்: வித் அறிந்துகொள்ள) மட்டுமே எழுதியவர்கள் பெயர் கிடையாது. ரிக் வேதம் (X:90,9), வழிப்பாட்டுப் பாடல்களுக்கு பிறப்பிடம் தெய்வீகம் என்று கூறுகிறது; மேலும் (III:39,2) அவை ஆதிகால முதலே புதிய மொழி என்னும் மறு ஆடை உடுத்தி வந்திருப்பவை என நமக்குக் கூறுகிறது. காலங்காலமாக தீர்க்கதரிசிகளான ரிஷிகளுக்கு தெய்வீகமாக உணர்த்தப்பட்ட இந்த வேதங்கள் நித்தியத்துவம் அதாவது காலவரம்பற்ற முடிவைப் பெற்றிருப்பவை எனக் கூறப்படுகிறது.

இந்த வேதங்கள் ஒலி மூலமாக ரிஷிகளால் நேரடியாகக் கேட்கப்பட்டவை (ஸ்ருதி), அவை முக்கியமாக உச்சரிக்கப்பட்டு பாராயணம் செய்து படிக்கப்பட்ட இலக்கியம். ஆகையால் பன்னெடுங்காலமாக 1,00,000 ஈரடி வேதச் செய்யுட்கள் எழுத்தால் எழுதப்பட்டவை அல்ல. ஆனால் பிராமண புரோகிதர்களால் வாய்மூலமாகவே ஓதப்பட்டு வந்ததாகும், காகிதமும் கல்லும் காலப்போக்கில் மறைந்து போகும் தன்மையுடையன. வேதங்கள் காலங்காலமாகத் தழைத்து வந்திருக்கின்றன. ஏனென்றால் ரிஷிகள், ஜடப்பொருளைவிட மனத்திற்கு மேலான சக்தி இருக்கிறதென்பதை அறிந்தே அவர்கள் ஓதுவிப்பதே சரியான வழி என்று தெரிந்திருந்தார்கள். இதயக் கல்வெட்டுக்களை மிஞ்சக்கூடியது என்ன இருக்கிறது?

வேதங்களிலுள்ள வார்த்தைகள் அமைந்துள்ள முறையை (அனுபூர்வி) கூர்ந்து கவனித்தும், சப்தங்களைச் சேர்க்கும் (சந்தி) விதிமுறைகளின் உதவியாலும், எழுத்துக்களின் சம்பந்தத்தாலும் (சனாதனா), மனப்பாடம் செய்த சூத்திரங்களின் பிழையற்றத் தன்மையை கணக்கியலின் சில முறைகளின்படி நிரூபித்தும் பிராமணர்கள் சிறப்பான விதத்தில் ஆதிகாலத்திலிருந்தே வேதங்களைப் பரிசுத்தமாகக் காப்பாற்றி வந்திருக்கிறார்கள். வேதத்தின் ஒவ்வொரு சொல்லின் அசையும் (அக்ஷரம்) சிறப்பும் திறனும் பெற்றுள்ளது. (பார்க்க பக்கம் 495.)

அத்தியாயம் 9

# ஆனந்தமயமான பக்தரும் அவரது பிரபஞ்சப் பிரேமையும்

"சின்னையா, தயவு செய்து அமருங்கள். நான் என் தெய்வீக அன்னையுடன் பேசிக் கொண்டிருக்கிறேன்."

மௌனமாக மிகுந்த பயபக்தியுடன் அறைக்குள் நுழைந்தேன். மாஸ்டர் மகாசயரின் தெய்வீகத் தோற்றம் என்னை மிகவும் வசீகரித்தது. பட்டுப் போன்ற வெண் தாடியுடனும் ஒளி வீசும் பெரிய கண்களுடனும் அவர் புனிதத்தின் அவதாரமாகத் திகழ்ந்தார். என் முதல் வருகை அவருடைய தெய்வீக வழிபாட்டிற்கு இடையூறாகிவிட்டதென்று அவரது நிமிர்ந்த மோவாயும் குவிந்த கைகளும் எனக்கு எடுத்துக் கூறின.

என்னை வரவேற்ற அவருடைய எளிய சொற்கள் நான் இதுவரை அனுபவித்திராத மிகத் தீவிரமான உணர்ச்சிகளை ஏற்படுத்தின. என் தாயைப் பிரிந்த வேதனைதான் எல்லாவற்றிலும் பெரிய வேதனையாக நான் நினைத்திருந்தேன். இப்பொழுதோ என்னுடைய அன்னை பராசக்தியினிடமிருந்து பிரிந்திருப்பதான உணர்வு என் ஆன்மாவிற்கு விவரிக்க முடியாத சித்திரவதையாக இருந்தது. நான் முனகியபடி தரையில் விழுந்தேன்.

"சின்னையா, அமைதியாக இருக்கவும்!" அந்த யோகி அனுதாபத்துடன் கலங்கினார்.

எங்கோ ஒரு மகா சமுத்திரத்தில் மூழ்கி, திசை தெரியாது தத்தளிப்பவனாக உணர்ந்த நான், அவரது பாதங்களையே என்னைக் கரையேற்றும் தெப்பமாகப் பற்றிக் கொண்டேன்.

"தெய்வீகப் பெருமானே, நீங்கள்தான் எனக்காக வேண்டிக் கொள்ள வேண்டும்! அவளது திருநோக்கின் அருள் எனக்கு உண்டா என்று தெய்வீக அன்னையை கேளுங்களேன்."

பிறருக்கு அருள் புரிய வேண்டிக் கொள்ளும் புனித வாக்குறுதி எளிதில் கிடைத்துவிடக்கூடிய ஒன்றல்ல; அந்த மகான் மௌனத்தைக் கடைப்பிடிக்க வேண்டியதாயிற்று.

மாஸ்டர் மகாசயர் பிரபஞ்சத்திற்கே அன்னையாகிய பராசக்தியிடம் அந்தரங்கமாக அளவளாவுவது உண்டு என்பதை எந்த சந்தேகமும் இன்றி நான் உறுதிப்படுத்திக் கொண்டு விட்டேன். அந்த யோகியின் குற்றமற்ற கண்களுக்கு அப்போது கூடக் காட்சியளிக்கும் அன்னை என் குருட்டுக் கண்களுக்குப் புலப்படவில்லை என்று உணர்ந்து நான் மிகவும் மனம் குன்றினேன். அவருடைய மென்மையான மறுப்புகளுக்குச் செவி சாய்க்காமல் அவரது பாதங்களை வெட்கமின்றிப் பற்றிக் கொண்டு அவர் தலையிட்டு அருள் செய்யுமாறு மேலும் மேலும் வேண்டினேன்.

"நான் உன் கோரிக்கையை அன்புத்தாயிடம் எடுத்துக் கூறுவேன். அந்த மகானின் ஒப்புதல் மெதுவாக, கருணைப் புன்சிரிப்புடன் வெளிவந்தது.

எங்கோ கண்காணாத புயல்வீசும் காட்டில் தத்தளித்த என் உயிருக்கு விடுதலையைத் தந்த அந்தச் சில சொற்களுக்குத்தான் என்ன சக்தி!

"ஐயா, உங்கள் வாக்குறுதியை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நான் அவள் செய்தியை அறிவதற்குச் சீக்கிரமே திரும்பி வருவேன்! சற்று முன் துயரத்தில் விசும்பித் திணறிய என் குரலில் இப்பொழுது ஆனந்தமான எதிர்பார்ப்பு ஒலித்தது.

அந்த நீண்ட படிக்கட்டுகளில் இறங்கும்பொழுது நான் பழைய நினைவுகளில் மூழ்கினேன். தற்சமயம் மாஸ்டர் மகாசயர் வசிக்கும் 50, ஆம்ஹெர்ஸ்ட் தெரு, கல்கத்தாவில் உள்ள இந்த வீடு ஒரு காலத்தில் என் குடும்பத்தினரின் இல்லமாகவும் என் தாயின் மரணத்தைக் கண்ட இடமாகவும் இருந்தது. இங்குதான் மறைந்த என் தாயை நினைத்து என் இதயம் உடைந்தது; இன்றோ, என் அன்னை பராசக்தியைக் காணாமல் என் ஆத்மா சிலுவையில் அறையப்பட்டது போல் உணர்ந்தது. என் பெருந்துன்பங்களுக்கும், முடிவாகக் குணப்படுத்தப்பட்டதற்கும் சாட்சி இந்தப் புனிதச் சுவர்களே!

நான் வீட்டிற்குத் திரும்பும்பொழுது என் நடையில் ஆர்வம் நிறைந்திருந்தது. தனிமையை நாடி என் சிறிய அறைக்குள் நுழைந்து நான் பத்து மணி வரையில் தியானத்தில் ஆழ்ந்தேன். இந்திய வெப்ப இரவின் இருளானது திடீரென்று ஆச்சரியகரமான ஒரு தரிசனத்தால் ஒளியூட்டப்பட்டது.

மிகுந்த ஒளிவீசும் பிரகாசத்துடன் தெய்வீக அன்னை என் முன் நின்றாள். அவளது திருமுகம் இதமாகப் புன்னகை செய்தபடி அழகே உருவாக இருந்தது.

"என்றுமே நான் உன்னை நேசித்துள்ளேன்! என்றென்றும் நான் உன்னை நேசிப்பேன்!"

அந்தத் தெய்வீகக் குரல் இன்னும் காற்றில் ஒலித்துக் கொண்டிருந்த பொழுதே அவள் மறைந்தாள்.

மறுநாள் காலை பொழுது விடிந்ததும் விடியாததுமாக மாஸ்டர் மகாசயரின் வீட்டிற்கு இரண்டாவது தடவையாகச் சென்றேன். கசப்பான நினைவுகளையுடைய அவ்வீட்டின் மாடிப்படிகளில் ஏறி நான்காவது மாடியிலுள்ள அவரது அறையை அடைந்தேன். மூடிய கதவின் கைப்பிடி ஒரு துணியால் சுற்றப்பட்டிருந்தது. அந்த யோகிக்குத் தனிமை வேண்டும் என்பதற்கு அது அடையாளமென்று நான் உணர்ந்தேன். நான் செய்வதறியாமல் நின்று கொண்டிருக்கும் பொழுது, அந்த மகானின் வரவேற்கும் கரத்தால் கதவு திறக்கப்பட்டது. நான் அவருடைய புனிதப் பாதங்களில் பணிந்தேன். நான் விளையாட்டாக, என் தெய்வீகப் பேரானந்த உணர்ச்சியை மறைத்தவாறு ஒரு தீவிர முகபாவத்தை வருவித்துக் கொண்டேன்.

"ஐயா, நான் உங்களுடைய செய்திக்காக வந்துள்ளேன் மிகவும் சீக்கிரமாகவே என்பதை ஒப்புக் கொள்கிறேன். அன்புத்தாய் என்னைப் பற்றி ஏதாவது கூறினாளா?"

"போக்கிரி சின்னையா!"

அவர் வேறு ஒன்றுமே சொல்லவில்லை. நான் வேண்டுமென்றே மேற்கொண்ட தீவிர முகபாவம் எந்தப் பலனும் அளிக்கவில்லை என்பது நன்றாகத் தெரிந்தது.

"ஏன் இவ்வளவு மர்மமாகத் தட்டிக் கழிக்க வேண்டும்? மகான்கள் நேரடியாகப் பேசவே மாட்டார்களா? ஒருவேளை நான் சிறிது படப்படப்பாகக் காணப்பட்டிருக்கலாம்.

"நீ என்னைச் சோதிக்க வேண்டுமா? அவருடைய அமைதியான கண்கள் எல்லாவற்றையும் புரிந்து கொண்டதை நன்கு எடுத்துக் காட்டின. நேற்று இரவு பத்து மணிக்கு உனக்கு அழகான அன்னையிடமே இருந்து கிடைத்த உறுதி மொழிக்கு மேல் இக்காலை வேளையில் இன்னும் நான் சொல்ல என்ன இருக்கிறது?"

என் ஆத்மாவின் மடைகளைக் கட்டுப்படுத்தக்கூடிய திறன் மாஸ்டர் மகாசயரிடம் இருந்தது: மறுபடியும் நான் அவர் திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினேன். ஆனால் சென்ற தடவையைப் போல் வேதனையால் அன்று; இப்பொழுது பெருகிய என் கண்ணீர், ஆனந்தக் கண்ணீர்!

"உன் பக்தி எல்லை இல்லாக் கருணையைத் தொடவில்லை என்றா நினைக்கிறாய்? மனித உருவிலும் தெய்வீக உருவிலும் நீ தொழுது வந்த தெய்வத்தின் தாய்மைத் தன்மை, பரிதவிக்கும் உன் கதறலுக்குச் செவி சாய்க்காமல் ஒரு பொழுதும் இருக்க முடியாது."

இவருடைய சிறு கோரிக்கை கூட பரம்பொருளால் மிக்க இனிமையான முறையில் நிறைவேற்றி

வைக்கப்படுகிறது. இந்த எளிய மகான் யார்? எனக்குத் தெரிந்த மகான்களில் மிக அடக்கமான மனிதரான இவரது பணி, இவருக்கேற்றபடி இந்த உலகில் அடக்கமானதாகவே அமைந்திருந்தது. ஆம்ஹெர்ஸ்ட் சாலையில் உள்ள இந்த வீட்டில் மாஸ்டர் மகாசயர்[1] சிறுவர்களுக்காக ஒரு சிறு உயர்நிலைப் பள்ளிக்கூடம் நடத்தி வந்தார். கண்டிக்கும் சொற்கள் அவரிடமிருந்து வெளிப்படா. எந்தச் சட்டதிட்டமும் பிரம்பும் இவரது ஒழுங்கு முறையைப் பேணுவதற்கு உபயோகப்படுத்தப்படவில்லை. உண்மையில் அடக்கமான முறையில் நடத்தப்பட்டு வந்த இந்த வகுப்பறைகளில் உயர் கணிதமும் பாடப் புத்தகங்களில் காணப்படாத அன்பெனும் வேதியியலும் போதிக்கப்பட்டு வந்தன.

பலனளிக்காத போதனைகளைவிட ஆன்மீகத் தொடர்பால் அவர் தன் ஞானத்தைப் பரப்பினார். தெய்வீக அன்னையிடம் கொண்ட பேரன்பினால் ஆட்கொள்ளப்பட்ட அவர், ஒரு குழந்தையைப் போல எந்த வெளி மரியாதையையும் எதிர்பார்க்கவில்லை.

"நான் உன் குருவல்ல. அவர் இன்னும் சிறிது காலம் கழித்து வருவார். அவருடைய வழிகாட்டுதல் மூலம் உன் அன்பு, பக்தி இவைகளின் தெய்வீக அனுபவங்கள் அவரது ஆழங்காண முடியாத ஞானமாக உருவெடுக்கும், என்று கூறினார்.

ஒவ்வொரு மாலையும் மாஸ்டர் மகாசயரின் தெய்வீகக் கிண்ணத்தை நாடி நான் ஆம்ஹெர்ஸ்ட்

தெருவிற்குச் சென்றேன். அதன் துளிகள் தினந்தோறும் என் மீது வழிந்தோடுமளவிற்கு அது நிரம்பியிருந்தது. இதற்கு முன் நான் முழு பயபக்தியுடன் எவரையுமே வணங்கியதில்லை. இப்பொழுது நான் மாஸ்டர் மகாசயரின் திருவடிகள் பட்டுப் புனிதமடைந்த இடங்களில் நடப்பதைக் கூட என் பாக்கியமாகக் கருதலானேன்.

"ஐயா, உங்களுக்காகவென்றே நான் தொடுத்த இந்த சண்பக மாலையைத் தயவு செய்து அணிய வேண்டும். ஒரு நாள் மாலை அம்மலர் மாலையை எடுத்துக் கொண்டு அவரை அணுகினேன். ஆனால் அவர் கூச்சத்துடன் பின் வாங்கி, அவருக்குக் கொடுக்கப்பட்ட மரியாதையைத் திரும்பத் திரும்ப மறுத்தார். அதனால் நான் வருத்தமடைவதைக் கண்டு கடைசியில் புன்முறுவலுடன் ஒப்புக் கொண்டார்.

"நாம் இருவருமே அன்னையினுடைய பக்தர்கள். ஆதலால் நீ இந்த உடற்கோயிலில் குடியிருக்கும் அவளுக்கு அர்ப்பணிப்பதாக மாலையைப் போடு. எந்த அகங்கார சிந்தனையும் குடிகொள்ள முடியாதபடி அவரது இயல்பு மிகவும் பரந்திருந்தது.

"நாளை நாம் என் குருதேவரால் புனிதமடைந்த தக்ஷிணேஸ்வரம் காளி கோயிலுக்குச் செல்வோம். அந்த யோகி தெய்வத் தன்மை வாய்ந்த மகானாகிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடராவார்.

மறுநாள் காலை, நான்கு மைல் தூரமுடைய அந்தப் பயணத்தை நாங்கள் கங்கை நதியில் படகின் மூலம்

மேற்கொண்டோம். நுணுக்கமாகச் செதுக்கப்பட்டு ஆயிரம் இதழ்களுடன், மெருகூட்டப்பட்ட வெள்ளித் தாமரையில் தெய்வீக அன்னையும் சிவனும் வீற்றிருக்கும் ஒன்பது விதானங்களை உடைய காளி கோயிலினுள் நாங்கள் நுழைந்தோம். மாஸ்டர் மகாசயர் ஆனந்தப் பரவசத்தில் ஒளிர்ந்தார். அன்புத் தாயுடன் அள்ள அள்ளக் குறையாத ஆனந்தத் துள்ளலுடன் இழைந்தார். அவர், அவள் நாமத்தை உச்சரித்த பொழுது பரவசமடைந்த என் இதயம் அத்தாமரையின் ஆயிரம் இதழ்கள் போன்று சிதறியது.

பிறகு நாங்கள் அதைச் சுற்றியுள்ள புனிதமான இடங்களில் மெதுவாக நடந்து தமரிஸ்க் மரங்களடர்ந்த ஒரு தோப்பில் நின்றோம். இம்மரத்திற்கே தனிச் சிறப்பான அதனின்று கசியும் இனிய சாறு, மாஸ்டர் மகாசயர் வழங்கிக் கொண்டிருந்த தெய்வீக உணவிற்கு அடையாளமாக இருந்தது. அவருடைய பிரார்த்தனைகள் தொடர்ந்தன. இளஞ்சிவப்பு இறகுகளைப் போன்ற தமரிஸ்க் மலர்கள் இடையே புல்தரை மேல் நான் அசைவற்று அமர்ந்தேன். தற்காலிகமாக என் உடலை மறந்த நான் எங்கோ விண்ணுலகில் பறந்தேன்.

இப்புனித ஆசிரியருடன் பலமுறை தக்ஷிணேஸ்வரத்திற்குச் சென்ற புண்ணிய யாத்திரைகளில் இதுவே முதல் தடவையாகும். அவரிடமிருந்து அன்னை அல்லது தெய்வீகக் கருணை ஆகிய தன்மைகளில் கடவுளின் இனிமையை அறிந்து கொண்டேன். குழந்தையைப் போன்ற அந்த யோகிக்கு

கடவுளைத் தந்தையாகவோ அல்லது தெய்வீக நீதியாகவோ காண்பதில் நாட்டமில்லை. அவருடைய மிருதுவான சுபாவத்திற்குக் கண்டிப்பான, கடினமான, கணக்கான கருத்துக்கள் உகந்ததாயில்லை.

"விண்ணுலகத் தேவதைகளின் பிரதிநிதியாக இவர் மண்ணுலகில் சேவை புரிய முடியும்! என்று நான் ஒரு நாள் அவர் பிரார்த்தனைச் செய்யும் பொழுது அன்புடன் நினைத்தேன். ஒரு கண்டனமோ, குற்றமோ இன்றி வெகு காலமாக தெய்வீகப் புனிதத் தன்மையை உணர்ந்த கண்களுடன் அவர் உலகை நோக்கினார். அவரது உடல், மனம், பேச்சு, செயல் எல்லாமே அவருடைய ஆத்மாவின் எளிமையுடன் எந்த முயற்சியும் இல்லாமல் இயல்பாக ஒன்றி இருந்தன.

அவரது பக்குவமான ஆலோசனையை தன்னுடையது என வலியுறுத்தாமல் என் குருதேவர் இவ்வாறு கூறினார் என்ற புகழ்மாலையுடன் இந்த மகான் முடிப்பது வழக்கம். தன் சிந்தனைகள் எதுவுமே தன்னுடையதல்ல என்னும் அளவிற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் மாஸ்டர் மகாசயர் மிக ஆழ்ந்து ஒன்றியிருந்தார்.

ஒரு நாள் மாலை நானும் அந்த மகானும் அவருடைய பாடசாலைக் கட்டிடத்தில் கைகோர்த்தபடி நடந்து கொண்டு இருந்தோம். எங்களுக்குத் தெரிந்த கர்வம் பிடித்த ஒருவரின் வருகையினால் என் மகிழ்ச்சி சற்றுக் குறைந்தது. அவர் தனது நீண்ட பிரசங்கத்தால் எங்களுக்குத் தொல்லை கொடுத்தார்.

"இந்த மனிதரை உனக்குப் பிடிக்கவில்லை என்று தோன்றுகிறது. அந்த மகான் என்னிடம் மெல்லிய குரலில் கூறியது தன் பேச்சில் தானே மூழ்கியிருந்த அந்தத் தற்பெருமையாளருக்குக் கேட்கவில்லை. நான் ஜகன் மாதாவிடம் இதைப் பற்றி பேசினேன். அவளுக்கு நம் தொல்லை புரிந்திருக்கிறது. அதோ இருக்கும் சிவப்பு வீட்டினருகில் நாம் சென்றவுடன் அந்த மனிதருக்கு இதைவிட அவசரமான வேலையை நினைவுபடுத்துவதாக அவள் கூறியுள்ளாள்."

என் கண்கள் விடுதலை தரும் இடத்தில் பதிந்தன. அந்த வீட்டின் சிவப்பு வாயிலை அடைந்ததும் அம்மனிதர் தன் வாக்கியத்தையும் முடிக்காமல் எங்களிடம் விடையும் பெறாமல் ஏனென்றும் தெரியாமலேயே அவ்விடத்தை விட்டகன்றார். அமைதி குலைக்கப்பட்ட இடத்தில் மீண்டும் அமைதி நிறைந்தது.

இன்னொரு நாள் ஹௌரா புகைவண்டி நிலையத்தருகில் தனியாக நடந்து கொண்டிருந்தேன். நான் ஒரு கோயிலின் அருகில் சிலர் கைத்தாளங்களுடனும் மத்தளத்துடனும் முரட்டுத்தனமாக வழிபாட்டுப் பாடலை பாடுவதைக் கேட்டு மௌனமாகக் கண்டனம் செய்தபடி ஒரு வினாடி நின்றேன்.

"பக்தி இல்லாமல் இறைவனின் நாமத்தை இயந்திரம் போன்று திரும்பத் திரும்ப எப்படித்தான் உச்சரிக்கிறார்களோ, என்று நான் நினைத்தேன். திடீரென்று மாஸ்டர் மகாசயர் வேகமாக என்னை

நெருங்கி வருவதைக் கண்டு ஆச்சரியமடைந்தேன்.

"ஐயா, தாங்கள் எப்படி இங்கே?"

அந்த மகான் என் கேள்வியைப் புறக்கணித்துவிட்டு என் எண்ணத்திற்குப் பதிலளித்தார். சின்னையா, ஞானியோ, அஞ்ஞானியோ, அன்புக்குரியவரின் பெயர் யார் வாயிலிருந்து வந்தாலும் இனிமையாகத்தான் ஒலிக்கிறது, இல்லையா? அன்புடன் அவர் தன் கையால் என்னைச் சுற்றி அணைத்தார்; நான் அவருடைய மந்திர விரிப்பின் மேல் அமர்ந்து கருணையின் முன்னிலைக்கு அழைத்துச் செல்லப்படுவதாக உணர்ந்தேன்.



மாஸ்டர் மகாசயர்
"ஆனந்தமயமான பக்தர்"

"நீ பயாஸ்கோப் பார்க்க விரும்புகிறாயா? ஒரு நாள் மத்தியானம் தனிமையை விரும்பும் மாஸ்டர் மகாசயரிடம் இருந்து வந்த இக்கேள்வி எனக்குப் புதிராகத் தோன்றியது. பயாஸ்கோப் என்பது அந்த நாளில் இந்தியாவின் சலனத் திரைப்படத்தைக் குறித்தது. எந்தச் சூழ்நிலைகளிலும் அவருடன் ஆனந்தமாக இருக்கலாமே என்று நான் ஒப்புக் கொண்டேன். ஒரு துரித நடை எங்களை கல்கத்தா பல்கலைக்கழகத்தின் எதிரிலுள்ள தோட்டத்திற்குக் கொண்டு சேர்த்தது. என் தோழர் அங்கு கோல்டிகி அல்லது சிறு குளத்தினருகிலிருந்த ஒரு நீண்ட பெஞ்சைச் சுட்டிக் காண்பித்தார்.

"இங்கு சில நிமிடங்கள் அமரலாம். நான் எங்கு நீர்ப்பரப்பைக் கண்டாலும் அங்கு சற்று நேரம் தியானம் செய்யும்படி என் குருதேவர் என்னிடம் கூறியிருக்கிறார். இங்கு இதனுடைய கலங்காத தன்மை இறைவனின் மகத்தான அமைதியை நமக்கு நினைவூட்டுகிறது. எல்லாப் பொருட்களும் நீரில் பிரதிபலிப்பது போன்று பிரபஞ்ச மனமெனும் ஏரியில் உலகமே பிரதிபலிக்கிறது. இவ்வாறு என் குருதேவர்[2] அடிக்கடி கூறுவார்."

சீக்கிரமே நாங்கள் பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவு நடந்து கொண்டிருந்த ஒரு கூடத்தை அடைந்தோம். அந்தச் சொற்பொழிவு மிகவும் சுவாரஸ்யமற்றதாயிருந்தது. அதனுடன் சேர்ந்த, அவ்வப்போது காண்பிக்கப்பட்ட ஒளிப்படங்களும் அதைப் போலவே சுவையற்றதாக இருந்தன.

"இத்தகைய பயாஸ்கோப்பையா நான் காண வேண்டுமென்று அம்மகான் விரும்பினார்! நான் பொறுமை இழந்தாலும் என் முகத்தில் சலிப்பைக் காண்பித்து அவரது மனத்தைப் புண்படுத்த விரும்பவில்லை. ஆனால் அவர் ரகசியமாக என் பக்கம் சாய்ந்தார்.

"சின்னையா, உனக்கு இந்த பயாஸ்கோப் பிடிக்கவில்லை என்பதைக் காண்கிறேன். நான் அதை தெய்வீக அன்னையிடம் கூறியுள்ளேன். நம் இருவரிடமும் அவள் மிக்க இரக்கம் கொண்டுள்ளாள். இங்குள்ள மின்சார விளக்குகள் இப்பொழுது அணைந்து விடுமென்றும் நாம் இவ்வறையை விட்டு வெளியே சென்று விடும் வரை அவை திரும்ப எரியாதென்றும் அவள் கூறுகிறாள்."

அவர் கிசுகிசுப்பு நின்றவுடனேயே அந்தக்கூடம் முழுதும் இருளில் மூழ்கியது. பேராசிரியரின் உரத்த குரல் ஆச்சரியத்தினால் ஒரு வினாடி நின்ற பிறகு அவர், இந்தக் கூடத்தில் உள்ள மின்சார இணைப்புகளில் ஏதோ குறை இருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது, என்றார். இதற்குள் நானும் மாஸ்டர் மகாசயரும் வாசற்படியைக் கடந்து விட்டோம். தாழ்வாரத்திலிருந்து பின்னோக் கிப்பார்த்த போது, அந்தக் கூடத்தில் விளக்குகள் மறுபடியும் எரிவதை நான் கண்டேன்.

"சின்னையா, அந்த பயாஸ்கோப்பில் உனக்கு ஏமாற்றம் உண்டாயிற்று, ஆனால் இதைவிட வேறொன்று உனக்குப் பிடிக்குமென நினைக்கிறேன்.

பல்கலைக் கழகக் கட்டிடத்தின் முன்னால் நடைபாதையில் அந்த மகானும் நானும் நின்று கொண்டிருந்தோம். அவர் என் மார்பில் இதயத்தின் மேல் மிருதுவாகத் தட்டினார்.

மாற்றம் ஏற்படுத்தும் ஒரு மௌனம் பரவலாயிற்று. எப்படி நவீன பேசும் படங்களில் ஒலி பெருக்கி பழுதுபட்டால் அவை வெறும் சலனப்படங்களாக மாறுமோ அப்படி தெய்வீகக் கரமானது, ஒரு விசித்திரமான அதிசயத்தால் என்னைச் சுற்றியுள்ள உலகத்தின் ஒலியை அடக்கியது. பாதசாரிகள், அங்கு சென்று கொண்டிருக்கும் டிராலி வண்டிகள், கார்கள், மாட்டு வண்டிகள் மற்றும் இரும்புச் சக்கரம் பூண்ட குதிரை வண்டிகள் யாவுமே எவ்வித சத்தமும் இன்றி கடந்து சென்றன. எங்கும் காணக்கூடிய சக்தியுள்ள கண்களைப் பெற்றிருந்தது போல், நான் என் முன்னே காணும் காட்சிகளைப் போலவே எளிதாக என் பின்னாலும், ஒவ்வொரு பக்கத்திலும் உள்ள காட்சிகளைக் கண்டேன். கல்கத்தாவின் அந்தச் சிறு பாகத்தின் அத்தனை காட்சிகளும் செயல்களும் சத்தமின்றி என் முன்னே விரிந்தன. நீறுபூத்த நெருப்பின் ஒளி போன்று ஓர் இதமான பிரகாசம் அங்கு தெரிந்த அனைத்துக் காட்சிகளினூடேயும் பரவி நின்றது.

என்னுடல் பல நிழல் உருவங்களினிடையில் ஒரு நிழலுருவமாகத் தோன்றினாலும், மற்றவை முன்னும் பின்னும் சென்று வந்து கொண்டிருக்கையில் என் உருவம் அசையாது இருந்தது. பல சிறுவர்கள், என்

நண்பர்கள் அருகில் நெருங்கி என்னைக் கடந்து சென்றனர். அவர்கள் என்னை நேராகப் பார்த்தாலும் என்னை அடையாளம் கண்டுகொள்ளவில்லை.

அந்த ஒப்பற்ற ஊமைக் காட்சி என்னுள் விவரிக்க முடியாததோர் ஆனந்தத்தைக் கொணர்ந்தது. நான் ஓர் ஆனந்தமயமான ஊற்றிலிருந்து ஆழ்ந்து பருகினேன். திடீரென்று மாஸ்டர் மகாசயரிடமிருந்து என் மார்பு இன்னொரு மெல்லிய தட்டுதலைப் பெற்றது. உலகத்தின் குழம்பிய ஒலிகளெல்லாம் விருப்பமற்ற என் காதுகளில் ஒலிக்கத் தொடங்கின. நான் ஒரு மென்மையான கனவி லிருந்து திடீரென்று எழுப்பப்பட்டது போல் தள்ளாடினேன். தெய்வீகப் பழச்சாறு என் பிடிகளிலிருந்து விலக்கப்பட்டது.

"சின்னையா, இந்த இரண்டாவது பயாஸ்கோப்[3] உனக்குப் பிடித்திருந்ததைக் காண்கிறேன். அந்த மகான் முறுவலித்தார். நான் அவர் முன்னே தரையில் நன்றியுடன் மண்டியிடத் தொடங்கினேன். நீ இப்பொழுது எனக்கு அப்படிச் செய்யக்கூடாது. தெய்வம் உனது கோயிலிலும் இருக்கிறதென்பது உனக்குத் தெரியும். உனது கைகளின் மூலம் தெய்வீக அன்னை என் பாதங்களைத் தொடுவதை நான் அனுமதிக்க மாட்டேன், என அவர் கூறினார்.

எந்த வித ஆடம்பரமுமில்லாது அந்த மகானும் நானும் கும்பலான நடைபாதையிலிருந்து சற்று விலகி மெல்ல நடந்து சென்ற போது, எங்களைப் பார்த்தவர்கள் நாங்கள் ஏதோ போதையில் இருப்பதாக நிச்சயம்

சந்தேகப்பட்டிருப்பார்கள். அந்திமாலையும் பரிவுடன் இறை போதையில் இருந்ததாக நான் உணர்ந்தேன்.

அவருடைய கருணைக்கு வெறும் சொற்களால் நியாயம் கற்பிக்க முயன்று கொண்டிருக்கும் இத்தருணத்தில் மாஸ்டர் மகாசயருக்கோ மேலும் என் பாதையில் குறுக்கிட்ட மற்ற மகான்களுக்கோ, இறை பக்தர்களாக அவர்களின் தெய்வீக வாழ்க்கையைப் பற்றி நான் பல ஆண்டுகளுக்குப் பின்னர் மேலை நாட்டில் இருந்துக் கொண்டு எழுதுவேன் எனத் தெரிந்திருக்குமா என்று அதிசயிக்கிறேன். அவர்களுடைய முன்னறிவு என்னை வியப்படையச் செய்யாததுடன் என்னுடன் இவ்வளவு தூரம் வந்துள்ள வாசகர்களையும் வியப்படையச் செய்யாது என நம்புகிறேன்.

எல்லா மதத்தைச் சேர்ந்த மகான்களும் அன்பின் உருவமாகக் கடவுளைக் கருதி இறை அனுபூதி அடைந்துள்ளனர்.பிரம்மம் நிர்க்குணமாகவும், - எவ்வித குணமும் அற்றது, அசிந்த்யாவாகவும், - சிந்தனைக்கு அப்பாற்பட்டது, உள்ளதால் மனிதனின் எண்ணமும் தீவிர ஆவலும் அதனை பிரபஞ்ச அன்னையாகவே உருவகப்படுத்தியுள்ளன. இறைவனை ரூபமாகவும் ரூபமற்ற தத்துவமாகவும் ஒன்று சேர்த்துச் சாதனை படைத்த பழம்பெரும் இந்து சிந்தனை தான், வேதங்களிலும் பகவத் கீதையிலும் விளக்கப்பட்டுள்ளது. இந்த எதிர்நிலைகள் ஒத்துப் போதல் இதயத்தையும் புத்தியையும் திருப்திபடுத்துகிறது. பக்தியும் ஞானமும் அடிப்படையில் ஒன்றேதான். பிரபத்தி, இறைவனிடம்

அடைக்கலம் புகுதல் மற்றும் சரணாகதி, இறைவனின் கருணையை எதிர்பார்த்து கிடப்பது ஆகியவை உண்மையிலேயே மிக உயர்ந்த ஞானத்தின் வழிகளாகும்.

மாஸ்டர் மகாசயர் மற்றும் எல்லா மகான்களுடைய பணிவு, இறைவன் ஒருவனையே உயிராகவும் நீதிபதியாகவும் பாவித்து, முழுதும் அவனையே சார்ந்திருப்பதால் (சேஷத்துவம்) ஏற்பட்டதாகும். இறைவனின் இயல்பே ஆனந்தம்தான் என்பதால் இறைவனுடன் ஒன்றும் மனிதன் இயற்கையாகவே முடிவற்ற ஆனந்தத்தை அடைகிறான். ஆத்மா, இச்சைஆகியவற்றின் தீவிர ஆசைகளில் முதன்மையானது ஆனந்தம்தான்.[4]

எல்லா யுகங்களின் பக்தர்களும், ஒரு குழந்தையைப் போன்ற பாவத்துடன் பராசக்தியை நெருங்கும்பொழுது அவள் என்றும் அவர்களுடன் விளையாடுகிறாள் என்பதற்குச் சான்று கூறுகிறார் கள். மாஸ்டர் மகாசயரின் வாழ்க்கையில் தெய்வீக விளையாட்டின் வெளிப்பாடு முக்கியமான சமயங்களிலும் சாதாரண சமயங்களிலும் நிகழ்ந்திருக்கிறது. தெய்வத்தின் பார்வையில் பெரிது, சிறிது என்பது கிடையாது. படைப்பில் மிக நுண்ணிய அணுவையும் முழு நுட்பமான வகையில் அவன் படைத்த காரணத்தால்தானே வீகா, ஆக்டுயரஸ் போன்ற நட்சத்திரக் கூட்டங்களை வானங்கள் பெருமையுடன் அணிந்துள்ளன? முக்கியம் மற்றும் முக்கியமல்லாதது

என்னும் பாகுபாடுகள் நிச்சயமாக இறைவன் அறியாதவை. இல்லாவிடில் ஓர் ஊசிக்காக வேண்டி பிரபஞ்சம் நிலை குலையுமே!

1 இவை அவரை மரியாதையாகக் குறிப்பிட்டு வழக்கமாக அழைத்து வந்த சிறப்புப் பெயர்கள். அவர் பெயர் மகேந்திரநாத் குப்தா; அவர் தன்னுடைய இலக்கியப் படைப்புகளில் வெறும் ம என்று கையெழுத்திட்டு வந்தார்.

2 தெய்வீக ஆசான், ஒருவருடைய ஆன்மீக ஆசானைக் குறிப்பிடும் வழக்கமான சமஸ்கிருத பதம். தேவ (இறைவன்), குரு (உள்ளொளிப் பெற்றவர்) வுடன் இணைந்து ஆழ்ந்த வணக்கத்தையும் மரியாதையையும் குறிக்கிறது. இதை நான் ஆங்கிலத்தில் வெறுமனே மாஸ்டர் என்று குறிப்பிட்டுள்ளேன்.

3 வெப்ஸ்டரின் புதிய அனைத்துலக அகராதி (1934) இந்த அரிய விளக்கம் தருகிறது: வாழ்க்கையின் ஓர் உருக்காட்சி; அது போன்ற உருக்காட்சியைத் தோற்றுவிப்பது. இதன்படி மாஸ்டர் மகாசயர் தேர்ந்தெடுத்த சொல் விசித்திரமாக நன்கு பொருந்தியது.

4 யோவான் சிலுவையின் புனிதர். 1591-ல் இறந்த இந்த அன்புக்குகந்த கிறிஸ்துவ மகானின் உடல் 1859ல் திரும்ப எடுக்கப்பட்டபொழுது எந்த அழிவும் இல்லாமல் இருந்தது.

ஸர். ஃபிரான்சிஸ் யங்ஹஸ்பன்ட் (அட்லாண்டிக் மாத சஞ்சிகை, டிசம்பர் 1936) பிரம்மானந்தத்தைப் பற்றிய தன் அனுபவத்தை எடுத்துக் கூறுகிறார். எனக்கு ஏற்பட்டது மகிழ்ச்சி அல்லது பூரிப்பு இவைகளை விட மிக மிக மேம்பட்டதாயிருந்தது. பெரும் ஆனந்தத்தில் நான் என்னையே இழந்தேன். வர்ணிக்க முடியாத, அனேகமாகத் தாங்கக்கூட முடியாத இந்த ஆனந்தத்துடன் உலகம் அடிப்படையில் நல்ல தன்மை வாய்ந்தது என்ற ஞான தரிசனம் ஏற்பட்டது. மனிதர்கள் உள்ளத்தளவில் நல்லவர்கள்தாம், அவர்களிடம் தென்படும் கேடு வெறும் மேலெழுந்தவாரியானது, என்று நான் எல்லா வாதங்களையும் கடந்து உறுதியாக நம்பினேன்.

அத்தியாயம் 10

# நான் என் குரு, ஸ்ரீ யுக்தேஸ்வரைச் சந்திக்கிறேன்

"கடவுள் நம்பிக்கை எந்த அதிசயத்தையும் ஏற்படுத்தும்; ஒன்றைத் தவிரஅது படிக்காமல் தேர்வில் வெற்றி அடைவது. பொழுது போகாமல் நான் படிப்பதற்கென்று எடுத்த ஊக்கமளிக்கக்கூடிய" அந்தப் புத்தகத்தை மேலும் படிக்கப் பிடிக்காமல் மூடினேன்.

"அந்த ஆசிரியர் கூறிய விதிவிலக்கு, அவருக்கு நம்பிக்கை என்பது சிறிதும் இல்லாததையே குறிக்கிறது, என்று எண்ணினேன். பாவம், அந்த மனிதர் இரவு கண் விழித்துப் படிப்பதை மிகவும் மதிக்கிறார்!"

என் தந்தைக்கு நான் கொடுத்த வாக்குறுதி, நான் என் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடிப்பேன் என்பது. நான் கடினமாக உழைப்பதாக என்னால் பாசாங்கு செய்ய முடியாது. கடந்த மாதங்களில் நான் வகுப்பறையில் இருந்த நேரத்தை விட கல்கத்தா குளியல் படித்துறைகளில் உள்ள தனிமையான இடங்களில் இருந்த நேரமே அதிகம். அவைகளை அடுத்திருக்கும், குறிப்பாக மயான பூமிகள், இரவு வேளைகளில் மிகவும் பயங்கரமாகக் காட்சி அளிக்கும். அவை ஒரு யோகியைக் கவர்ந்திழுக்க வல்லவை. சாவற்ற சாரத்தைப் பற்றி அறிய விரும்புபவன், அலங்காரமற்ற சில மண்டையோடுகளைக் கண்டு கலங்கக்கூடாது. பல

விதமான எலும்புகள் நிறைந்திருக்கும் இருண்ட மயானத்தில் மனிதனது பலவீனம் தெள்ளத் தெளிவாகின்றது. இம்மாதிரியான என்னுடைய நடுநிசிக் கண்விழிப்பு அறிவாளியினுடையப் போக்கிலிருந்து வேறுபட்டதாக இருந்தது.

இந்து உயர்நிலைப் பள்ளியின் ஆண்டுத் தேர்வுகள் நடக்கும் வாரம் வேகமாக நெருங்கிக் கொண்டிருந்தது. இத்தேர்வு காலம் மயான பூமிகள் எழுப்பும் பயத்தைப் போலவே எல்லோருமறிந்த பயத்தைக் கிளப்பும். ஆயினும் என் மனம் அமைதியாக இருந்தது. பிசாசுகளைப் பற்றிப் பயப்படாமல் நான் விரிவுரைக் கூடங்களில் கிடைக்க முடியாத அறிவைத் தோண்டி எடுத்துக் கொண்டிருந்தேன். ஆனால் ஸ்வாமி பிரணவானந்தரைப் போன்று ஒரே சமயத்தில் இரு இடங்களில் தென்படக்கூடிய கலையை நான் கற்றிருக்கவில்லை. என் வாதம் (அந்தோ! பலருக்கு இது வாதத்திற்குப் பொருந்தாததாகப் பட்டாலும்) என்னவெனில் இறைவன் என் குழப்பத்தைக் கவனித்து அதிலிருந்து என்னை விடுவிப்பான் என்பதாகும். பக்தனின் பகுத்தறிவிற்கு ஒவ்வாத நம்பிக்கை இறைவன், விளக்கம் கூற முடியாத வகையில் துயர் துடைக்க நடத்திக் காட்டிய ஆயிரக்கணக்கான அற்புதங்களிலிருந்தே உண்டாகிறது.

"அட, முகுந்தா, இப்பொழுதெல்லாம் நான் உன்னைக் காண்பதே இல்லையே! என் வகுப்புத் தோழன் ஒருவன் கர்பார் சாலையில் ஒரு நாள் பிற்பகல் என்னை

எதிர்கொண்டான்.

"ஓ, நந்து! நான் பள்ளிக்கூடம் வராமலேயிருந்ததினால் இப்பொழுது அது என்னை ஒரு கட்டாயமான சங்கட நிலையில் கொண்டு வந்துவிட்டிருக்கிறது. அவனுடைய நட்பு நிறைந்த பார்வையில் நான் என் மனப் பாரத்தை இறக்கி வைத்தேன்.

மிகவும் புத்திசாலி மாணவனான நந்து மனம்விட்டுச் சிரித்தான். என்னுடைய சங்கடமான நிலைமையில் ஒரு நகைச்சுவை இல்லாமல் இல்லை.

"ஆண்டுத் தேர்வுகளுக்கு நீ கொஞ்சங்கூட உன்னைத் தயார் செய்து கொள்ளவில்லை. உனக்கு உதவி செய்யும் பொறுப்பு என்னுடையதுதான் போலும்! என்றான் அவன்.

இந்த எளிய சொற்கள் தெய்வீக வாக்குறுதியாக என் செவிகளில் ஒலித்தன. நான் ஊக்கத்துடன் என் நண்பனின் வீட்டிற்குச் சென்றேன். ஆசிரியர்கள் கேட்கக்கூடும் என்று அவனாக நினைத்த பல கேள்விகளுக்கு அவன் அன்புடன் விடைகளைக் கூறினான்.

"இந்தக் கேள்விகள் நம்பிவந்த பல பையன்களைத் தேர்வு வலையில் சிக்க வைக்கும் தூண்டில்கள். என் விடைகளை நினைவு வைத்துக் கொண்டால் நீ எந்த சிரமமும் இன்றித் தப்பிவிடலாம்."

நான் வீட்டிற்குத் திரும்பும் பொழுது இரவு வெகுநேரம் ஆகிவிட்டிருந்தது. பக்குவப்படாத அறிவால் நிரம்பப்பெற்ற நான், வரவிருக்கும் முக்கியமான சில

நாட்கள் வரை என்னுடன் இவ்வறிவு தங்க வேண்டுமென்று பக்தியுடன் பிரார்த்தித்தேன். நந்து எனக்குப் பல பாடங்களைச் சொல்லிக் கொடுத்தான். ஆனால் நேரமின்மை காரணமாக என் சமஸ்கிருத பாடங்களை மறந்துவிட்டான். நான் தீவிரமாக இந்தத் தவறுதலைக் கடவுளுக்கு நினைவூட்டினேன்.

நான் மறுநாள் காலை எனக்குப் புதிதாகக் கிடைத்த பாட அறிவை என் நடையின் காலடி ஓசைக்கேற்றபடி அசை போட்டவாறு சென்று கொண்டிருந்தேன். நான் குறுக்கு வழியாக களைச்செடிகள் உள்ள ஒரு மூலையைக் கடந்து செல்லும் பொழுது தனித்தனியாகக் கிடந்த அச்சடித்த சில தாள்களின் மேல் என் பார்வை விழுந்தது. ஒரு வெற்றிகரமானத் தாவல்; என் கையில் சமஸ்கிருத செய்யுட்கள் அடங்கிய தாள்! நான் ஒரு சமஸ்கிருத பண்டிதரைத் தேடி, விளங்கிக் கொள்ளத் தடுமாறும் எனக்கு உதவி செய்யும்படி வேண்டினேன். அவருடைய கணீரென்ற குரல், பழமையான அம்மொழியின்[1] எல்லையற்ற தேனினிமையால் காற்றை நிறைத்தது.

"இந்தத் தனிச்சிறப்பு வாய்ந்த பாக்கள் உன் சமஸ்கிருதத் தேர்வுக்கு உதவ மாட்டா." அப்பண்டிதர் அவநம்பிக்கையுடன் அவற்றை விலக்கி விட்டார்.

ஆனால் அந்தக் குறிப்பிட்ட கவிதையை நான் படித்து அறிந்ததால்தான் மறுநாள் நடந்த சமஸ்கிருதத் தேர்வில் என்னால் தேற முடிந்தது. நந்து கொடுத்த சிறப்பான உதவியினால் நான் மற்றத் தேர்வுகளிலும்

தேறுவதற்குத் தேவையானக் குறைந்த அளவு மதிப்பெண்களைப் பெற்று விட்டேன்.

நான் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடிக்கிறேன் என்ற என் வாக்குறுதியை நிறைவேற்றியது பற்றி என் தந்தைக்கு மிக்க மகிழ்ச்சி. நான் நந்து வீட்டிற்குச் சென்றதிலும், குப்பைக் கூளம் நிறைந்த வழக்கமற்ற பாதை வழியாக நடந்து சென்றதிலும் இறைவனின் முழுமையான வழிகாட்டுதலை நான் உணர்ந்து என்னுடைய நன்றியை அவனுக்குச் செலுத்தினேன். விளையாட்டாகவே என்னைத் தக்க சமயத்தில் காப்பாற்றுவதற்கு அவர் செய்த ஏற்பாட்டை இருவிதங்களில் வெளிப்படுத்திவிட்டார்.

தேர்வு எழுதுவதற்குக் கடவுள் உதவமாட்டார் என்று மறுத்த ஆசிரியரின், ஒதுக்கித் தள்ளப்பட்ட அந்தப் புத்தகத்தை நான் கண்டேன். என்னுடைய சொந்த மௌன விமர்சனத்தை நினைத்ததும் என்னால் உள்ளூறச் சிரிப்பை அடக்க முடியவில்லை:

"உயர்நிலைப் பள்ளித் தேர்வில் தேறிச் சான்றிதழ் பெறுவதற்கு பிணங்களுக்கிடையில் செய்யும் தெய்வீகத் தியானம் ஒரு குறுக்கு வழி, என்று அந்த ஆசிரியரிடம் நான் எடுத்துரைத்தால், அது அவருடைய குழப்பத்தை அதிகப்படுத்தவேச் செய்யும்!"

எனக்குக் கிடைத்த புது மரியாதையுடன் நான் வீட்டை விட்டுக் கிளம்ப வெளிப்படையாகவே ஏற்பாடு செய்யத் தொடங்கினேன். என் இளமைக்கால நண்பனான ஜிதேந்திர மஜும்தாருடன்[2] நான் காசியிலுள்ள, ஸ்ரீ பாரத்

தர்ம மகாமண்டல் என்ற ஆசிரமத்தில் சேர்ந்து அதனுடைய ஆன்மீகப் பயிற்சிப் பெறுவதென்று தீர்மானித்தேன்.

என் குடும்பத்திலிருந்து பிரிந்திருக்க வேண்டுமே என்ற ஓர் ஆற்றாமை எனக்கு ஒரு நாள் ஏற்பட்டது. என் அன்னையின் மறைவிற்குப் பிறகு என் பாசம் குறிப்பாக சனந்தா, விஷ்ணு என்ற இரு தம்பிகளிடமும், என் கடைசித் தங்கை தாமுவிடமும் மிகுந்திருந்தது. கொந்தளிப்பான என் சாதனை[3]யில் எத்தனையோ காட்சிகளைக் கண்ட என் புகலிடமான சிறு அறைக்கு விரைந்தேன். இரண்டுமணி நேரம் கண்ணீருடன் மன்றாடிய பிறகு ஏதோ இரசவாத வித்தையால் வியக்கத்தக்க முறையில் தூய்மைப்படுத்தப் பட்டதுபோல் நான் மாறி விட்டதை உணர்ந்தேன். எல்லாப் பாசங்களும்[4] மறைந்தன. நண்பர்களுக்கெல்லாம் நண்பனான கடவுளைத் தேடும் என் தீர்மானம் வைரத்தைப் போல உறுதிப்பட்டது.

நான் என் தந்தையின் ஆசிகளை வேண்டி அவர் முன் நின்றபோது அவர் மிகவும் துயருற்றார். நான் கடைசியாக உன்னை வேண்டுகிறேன். என்னையும், வருந்தும் உன் சகோதர சகோதரிகளையும் கைவிடாதே.

"மதிப்பிற்குரிய தந்தையே, தங்களிடம் எனக்குள்ள அன்பை நான் எப்படிச் சொல்லுவேன்? ஆனால் இவ்வுலகத்தில் எனக்கு ஓர் அருமையான தந்தையை அருளிய அத்தெய்வத் தந்தையிடம் என் அன்பு இன்னும் அதிகம். என்னைப் போக விடுங்கள், என்றாவது ஒரு

நாள் இறைவனை இன்னும் நன்றாக அறிந்தப்பிறகு நான் திரும்புகிறேன்."

தந்தையின் தயக்கத்துடன் கூடிய அனுமதியுடன், எனக்கு முன்னே ஏற்கனவே காசிக்குச் சென்று அங்கு ஆசிரமத்தில் தங்கியுள்ள ஜிதேந்திராவுடன் சேர்ந்துக் கொள்வதற்குக் கிளம்பினேன். அங்குச் சென்றதும் இளம் தலைமை ஸ்வாமி தயானந்தர் என்னை அன்புடன் வரவேற்றார். மெலிந்து, உயரமாக, ஆழ்ந்த சிந்தனை உடையவராகத் தோன்றிய அவரை எனக்குப் பிடித்திருந்தது. அவருடைய அழகிய முகம் புத்தரின் முகம் போன்று சாந்தமான இயல்புடன் விளங்கியது.

என்னுடைய புதிய வீட்டின் மேல்மாடியில் ஒரு தனியான சிறு அறை இருந்ததைக் கண்டு, எனக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. அங்கு வைகறை நேரங்களையும் காலை நேரங்களையும் என்னால் கழிக்க முடிந்தது. அந்த ஆசிரம அங்கத்தினர்கள் தியான சாதனைகளைப் பற்றி எதுவுமே அறியாததால் நான் என் முழுநேரத்தையும் ஆசிரம நிர்வாக வேலைகளில் செலவிட வேண்டுமென்று நினைத்தார்கள். பிற்பகல் வேளைகளில் நான் அவர்களது அலுவலக வேலைகளில் ஈடுபட்டதை அவர்கள் புகழ்ந்தார்கள்.

"இறைவனை அவ்வளவு சீக்கிரமாகப் பிடிக்க முயல வேண்டாம்! இந்த கேலிப் பேச்சு ஒரு நாள், முன்னதாகவே நான் என் அறையை நோக்கிச் சென்று கொண்டிருந்த பொழுது, அங்கு என்னுடன் வசிக்கும் ஒருவனிடமிருந்து வெளிப்பட்டது. கங்கை நதியை

நோக்கி அமைந்த தனது சிறிய அறையில் ஏதோ வேலையாயிருந்த தயானந்தரிடம் சென்றேன்.

"ஸ்வாமிஜி! இங்கு நான் என்ன செய்ய வேண்டுமென்று எனக்குப் புரியவில்லை. நான் இறைவனை நேரிலேயே சந்திக்க விரும்புகிறேன். அவனில்லாமல், எந்தச் சங்கத்தின் தொடர்பாலும் மதக் கோட்பாடுகளாலும் அல்லது உயர்ந்த சேவைகளாலும் என்னால் திருப்தி அடைய முடியாது.

காவி உடையணிந்த அந்தச் சாது என்னை அன்புடன் தட்டிக் கொடுத்தார். பக்கத்திலிருந்த சீடர்கள் சிலரைக் கண்டிப்பது போன்ற பாவனையில், முகுந்தனைத் தொந்திரவு செய்யாதீர்கள். நமது வழிகளை அவன் கற்றுக் கொள்வான், என்று எச்சரித்தார்.

நான் மரியாதையுடன் என் சந்தேகத்தை அடக்கிக் கொண்டேன். இவர் கண்டித்த மாணவர்கள் அதற்காகப் பெரிதும் வருத்தப்பட்டதாகத் தெரியவில்லை. அவர்கள் அறையை விட்டகன்றதும் தயானந்தர் என்னிடம் மேலும் பேசினார்.

"முகுந்தா, உன் தந்தை வழக்கமாக உனக்குப் பணம் அனுப்பிக் கொண்டிருப்பதைக் காண்கிறேன். இங்கு உனக்குப் பணம் வேண்டியதில்லை. தயவு செய்து அதைத் திருப்பி அனுப்பிவிடு. உன்னுடைய ஒழுங்குமுறைக்கு இன்னொரு விதி, உன் ஆகாரத்தைப் பற்றியது. உனக்கு பசியாயிருந்தால் கூட அதைப் பற்றி பேசாதே."

பட்டினி என் கண்களில் பளிச்சிட்டதோ என்னவோ,

எனக்குத் தெரியாது. பசி என்பது எனக்கு நன்றாகவே தெரிந்தது. ஆசிரமத்தில் முதல் ஆகாரத்தின் நேரம் எந்த மாற்றமும் இல்லாமல் பகல் பன்னிரெண்டு மணிதான். நான் என் வீட்டில் ஒன்பது மணிக்கு முழுக் காலை ஆகாரம் சாப்பிட்டுப் பழகியிருந்தேன்.

அந்த மூன்று மணி நேர இடைவெளி தினமும் முடிவில்லாது நீண்டு கொண்டே போயிற்று. பத்து நிமிட நேரம் தாமதமானால் கூட சமையற்காரரைக் கண்டிக்கும் கல்கத்தா ஆண்டுகள் சென்று மறைந்து விட்டன. இப்பொழுதெல்லாம் நான் என் பசியைக் கட்டுப்படுத்த முயன்று கொண்டிருந்தேன்; நான் ஓர் இருபத்திநான்கு மணி நேர உண்ணா நோன்பை முடித்திருந்தேன். அதனால் இரு மடங்கு ஆவலுடன் மறுநாள் மதிய உணவை எதிர்பார்த்து இருந்தேன்.

"தயானந்தரின் ரயில் வண்டி தாமதமாக வருகிறதாம்; அவர் வரும் வரையில் நமக்குச் சாப்பாடு கிடையாது. ஜிதேந்திரா இந்தத் திகிலைத் தரும் செய்தியைக் கொண்டு வந்தான். இரண்டு வாரங்கள் வெளியூர் சென்றிருந்த ஸ்வாமியை வரவேற்கும் முறையில் பல சுவையான பண்டங்கள் தயாரிக்கப்பட்டிருந்தன. பசியைத் தூண்டும் சமையலின் நறுமணம் எங்கும் கமழ்ந்தது. எதுவும் கிடைக்காத பொழுது முதல் நாள் பட்டினிக் கிடந்ததாலான என் கர்வத்தை அல்லாமல் நான் வேறு எதை விழுங்குவது?

"கடவுளே, வண்டியை துரிதப்படுத்துங்கள்! தயானந்தர் எந்தத் தடையைக் கூறி என்னை மௌனமாக்கினாரோ

அத்தடையைப் படி அளக்கும் இறைவன்" பொருட்படுத்த மாட்டானோ என்று நினைத்தேன். இறைவனின் கவனம் வேறு எங்கோ இருந்தது; நிதானமாகச் சென்ற கடிகாரம் நேரங்களைக் கடத்தியது. எங்கள் தலைவர் உள்ளே நுழையும்பொழுது இருட்டத் தொடங்கி இருந்தது. நான் ஒரே மகிழ்ச்சியுடன் அவரை வரவேற்றேன்.

"தயானந்தர் நீராடி, தியானம் செய்த பிறகுதான் நமக்கு உணவு கிடைக்கும்." ஜிதேந்திரா மறுபடியும் ஓர் அபசகுனப் பறவைபோல் இந்தச் செய்தியைக் கொண்டு வந்தான்.

நான் விழுந்துவிடும் நிலையில் இருந்தேன். பட்டினி இருந்து பழக்கப்படாத என் இளம் வயிறு தீவிரமாகத் துளைத்தெடுத்தது. நான் பார்த்த பட்டினிக்குப் பலியானவர்களின் படங்கள் ஆவி உருவம் போல் என் முன் தோன்றியது.

"காசியில் பட்டினியால் ஏற்படக்கூடிய அடுத்த சாவு இப்பொழுதே இந்த ஆசிரமத்தில் ஏற்படப் போகிறது, என்று நான் எண்ணினேன். வரவிருந்த ஆபத்து சுமார் ஒன்பது மணிக்குத் தவிர்க்கப்பட்டது. அமிர்தமான அழைப்புக்கள்! என் நினைவில் அந்த இரவின் உணவு வாழ்வின் முழுமையான நேரங்களில் ஒன்றாகத் தெளிவாக இருக்கிறது.



ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர் மற்றும் ஸ்வாமி ஞானானந்தர், ஸ்வாமி தயானந்தரின் குருநாதர் மஹாமண்டல் ஆசிரமம், வாரணாசி, 1936ல். மடத்தின் ஆன்மீகத் தலைவருக்கு, பாரம்பரிய முறையில், மரியாதை தரும்வகையில் ஸ்ரீ யோகானந்தர் ஸ்ரீ ஞானானந்தரின் பாதங்களருகில் கீழே அமர்ந்திருக் கிறார். சிறு வயதில், 1910ல், தமது குரு ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வரைச் சந்திப்பதற்கு முன் இம்மடத்தில், ஸ்ரீ யோகானந்தர் ஆன்மீகப் பயிற்சி மேற்கொண்டார்.

உணவில் தீவிரமாக லயித்திருந்தாலும் தயானந்தர் அவர்கள் எங்கோ நினைவாக ஆகாரம் உண்டது என் கண்களுக்குத் தப்பவில்லை. அவர் என்னுடைய சிறிய இச்சைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவர் என்று தோன்றிற்று.

"ஸ்வாமிகளே, தங்களுக்குப் பசி இல்லையா?

ஆனந்தமாக வயிறார உணவு உண்ட பிறகு நான் அந்தத் தலைவருடன் அவரது படிப்பறையில் தனித்திருந்தேன்.

"ஆமாம்! அவர் கூறினார். நான் கடந்த நான்கு நாட்களாக உணவோ, பானமோ இல்லாமல் தான் கழித்தேன். சாதாரண உலக மனிதர்களின் பலவித அதிர்வலைகளினால், நிரம்பியுள்ள ரயில் வண்டிகளில் நான் உணவு உண்பதே இல்லை. நான் பின்பற்றும் சன்னியாசப் பிரிவின் சம்பிரதாயப் படியான சாத்திர[5] விதிமுறைகளைக் கண்டிப்பாகப் பின்பற்றுகிறேன்.

"என் மனத்தில் நம் நிர்வாகத்தைப் பற்றிய சில சிக்கல்கள் உள்ளன. இன்றிரவு இங்கு சரியாக சாப்பிடவில்லை. என்ன அவசரம்? நாளைக்குக் கவனமாக சரியான உணவு உட்கொள்கிறேன், என்று ஆனந்தமாகச் சிரித்தார், அவர்.

வெட்கம் மூச்சுத் திணறுவது போல் என்னுள் பரவியது. ஆனால் வேதனையுடன் கழித்த அந்த நாளை நான் எளிதாக மறக்க முடியவில்லை. மேலும் கூறத் துணிந்தேன்:

"ஸ்வாமிகளே, உங்கள் அறிவுரைகளைப் பின்பற்றுவதில் எனக்குக் கொஞ்சம் குழப்பம், நான் உணவு வேண்டும் என்று கேட்கவே இல்லை என்று வைத்துக் கொள்வோம்; யாரும் எனக்கு உணவு கொடுக்கவில்லையெனில் நான் பசியால் இறந்து விடுவேன்."

"அப்படியானால் இறந்து விடு! இந்தத் திகில் தரும் புத்திமதி காற்றைக் கிழித்துக் கொண்டு வந்தது. இறந்து

தான் ஆகவேண்டுமெனில் இறந்து போ, முகுந்தா! கடவுளின் அருளால் அல்லாமல் உணவின் சக்தியினால் உயிர் வாழ்வதாக என்றுமே எண்ணாதே. அவன்தான் எல்லா விதமான உணவுகளையும் படைத்துள்ளான். அவனே பசியையும் கொடுத்து அவனுடைய பக்தன் அவசியம் பராமரிக்கப்படுவதையும் காண்கிறான். அன்னம்தான் உன்னைக் காப்பாற்றுகிறது என்றோ பணமோ அல்லது மனிதர்களோ உன்னைப் பராமரிக்கின்றனர் என்றோ எண்ணாதே. ஆண்டவன் உன் உயிர் மூச்சை அகற்றிவிட்டால் அவை உனக்கு உதவ முடியுமா? அவை கடவுளின் கருவிகள் மட்டுமே. உன் வயிற்றில் உன் எந்தத் திறமையினாலாவது, உணவு செரிக்கிறதா? முகுந்தா! உன் விவேகம் என்னும் வாளைப் பயன்படுத்து. வெளிக்கருவிகளின் சங்கிலிகளை அறுத்து உள்ளே உள்ள ஒரே காரணத்தைக் காண்!"

அவருடைய கூரானச் சொற்கள் எலும்புகளையும் ஊடுருவி ஆழ்ந்து பதிந்ததைக் கண்டேன். உடல் சம்பந்தப்பட்ட முக்கியத் தேவைகளின் பொருட்டு ஆத்மாவை அலட்சியம் செய்யும் பழமையான மாயத்திரை விலகியது. அந்த நிமிடத்திலேயே அங்கேயே ஆத்மாவின் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளக்கூடிய திறமையை அறிந்தேன். என் பிற்கால வாழ்க்கையில், அறிமுகமில்லாத நகரங்களில் என் இடைவிடாத பயணத்தின் பொழுதெல்லாம், வாரணாசியின் இந்த ஆசிரமத்தில் கற்ற இப்பாடம் எவ்வளவு உபயோகமானது என்பதை நிரூபித்த

சந்தர்ப்பங்கள்தாம் எத்தனை!

கல்கத்தாவிலிருந்து என்னுடன் வந்த ஒரே செல்வம் என் அன்னையின் மூலம் அந்த சாது எனக்குக் கொடுத்திருந்த வெள்ளித் தாயத்துதான். ஆண்டுக்கணக்காக அதைக் காப்பாற்றி இப்பொழுது என் ஆசிரம அறையில் பத்திரமாக மறைத்து வைத்திருந்தேன். ஒரு நாள் காலை அதைக் கண்ணால் கண்டு என் மகிழ்ச்சியைப் புதுப்பித்துக் கொள்வதற்காக நான் பூட்டியிருந்த அந்தப் பெட்டியைத் திறந்தேன். ஐயோ! பூட்டிய பெட்டி பூட்டியபடி இருக்க அத்தாயத்து மறைந்து விட்டிருந்தது! மிகுந்த கவலையுடன் நான் அந்த உறையைக் கிழித்து உறுதி செய்து கொண்டேன். அந்த சாது கூறியபடியே எந்த சூனியத்திலிருந்து அவர் அதை வரவழைத்தாரோ அதே சூனியத்தில் அது மறைந்து விட்டிருந்தது.

தயானந்தரின் சீடர்களுடன் என் உறவுப் படிப்படியாக மோசமாகிக் கொண்டே வந்தது. என் தீர்மானமான தனிமையினால் வருந்தி அங்கு இருந்தவர்கள் என்னிடமிருந்து விலகியே நின்றார்கள். நான் வீட்டையும் எல்லா உலக ஆசைகளையும் துறந்தது, என் தியானத்தில் முழுக் கவனம் செலுத்த வேண்டும் என்ற லட்சியத்திற்காகத்தான். அதைக் கண்டிப்பாகப் பின்பற்றியது எல்லா பக்கங்களில் இருந்தும் அற்பமான கண்டனத்தை வரவழைத்தது.

ஆன்மீக வேதனை மிகவடைந்த நான் ஒரு நாள் அதிகாலை, எனக்கு விடை கிடைக்கும் மட்டும்

பிரார்த்தனைச் செய்வது என்ற தீர்மானத்துடன் என் அறையில் நுழைந்தேன்.

"இரக்கமுள்ள பிரபஞ்ச அன்னையே! நீயே எனக்கு தரிசனங்களின் மூலமோ அல்லது உன்னால் அனுப்பப்படும் குருவின் மூலமோ எனக்குப் போதித்தருள்வாய்!"

விசும்பலுடன் கூடிய என் வேண்டுதல்களுக்கு எந்த பதிலுமே இல்லாமல் நேரம் சென்று கொண்டே இருந்தது. திடீரென்று நான் என் உடலுடன் எல்லையில்லா வெளியில் எழுப்பப்பட்டது போல் உணர்ந்தேன்.

"உன் குரு இன்று வருகிறார்! ஒரு தெய்வீகப் பெண் குரல் எல்லா இடங்களிலிருந்தும் மற்றும் எங்குமின்றியும் ஒலித்தது.

அந்தத் தெய்வீக அனுபவம், குறிப்பிட்ட ஓர் இடத்தில் இருந்து வந்த கூப்பாடு காரணமாகச் சிதறிற்று. ஹாபு என்ற மறு பெயருடைய ஓர் இளம் புரோகிதன் என்னைக் கீழே இருந்த சமையலறையிலிருந்து கூப்பிட்டுக் கொண்டு இருந்தான்.

"முகுந்தா, தியானம் செய்தது போதும்! உனக்கு ஒரு வேலை இருக்கிறது."

இன்னொரு நாளாக இருந்தால் நான் பொறுமை இழந்து பதிலளித்திருப்பேன். இப்பொழுது கண்ணீரால் வீங்கிய என் முகத்தைத் துடைத்துக் கொண்டு பணிவாக அந்த அழைப்பிற்குக் கீழ்ப்படிந்தேன். வாரணாசியில் தொலைவில் இருந்த, வங்காளப்பகுதிக்

கடைத்தெருவிற்கு நானும் ஹாபுவும் ஒன்றாகக் கிளம்பினோம். நாங்கள் கடைகளில் சாமான்கள் வாங்கியபொழுது மென்மையற்ற இந்தியக் கதிரவன் உச்சிக்கு வந்திருக்கவில்லை. நாங்கள் வண்ண வண்ண ஆடைகள் அணிந்த குடும்பப் பெண்கள், வழிகாட்டிகள், புரோகிதர்கள், எளிமையான ஆடையணிந்த விதவைகள், கௌரவமான பிராமணர்கள், எங்கும் திரியும் கோயில் காளைகள் ஆகிய கூட்டத்தினூடே முட்டிமோதிச் சென்றோம். நானும் ஹாபுவும் சென்றுக் கொண்டிருந்த பொழுது ஒரு குறுகிய, ஒதுக்கமான சந்தைப் பார்வையிடும் நோக்கில் என் தலையைத் திருப்பினேன்.

அந்த சந்தின் கோடியில் துறவிகளின் காவியுடை அணிந்த தெய்வத்தன்மை பொருந்திய மனிதர் ஒருவர் அசையாமல் நின்று கொண்டிருந்தார். உடனே அவர் எனக்கு வெகு நாட்களாகப் பழக்கம் ஆனவர் போலத் தோன்றினார். ஒரு வினாடி என் பார்வை ஆர்வத்துடன் நின்றது. பிறகு என்னைச் சந்தேகம் பீடித்தது.

"திரிந்தலையும் இந்தத் துறவியை யாரோ உனக்குத் தெரிந்தவராக நினைத்துக் குழம்புகிறாய். வெறும் கனவு காண்பவனே, நட! என்று என் மனம் கூறியது.

பத்து நிமிடங்களுக்குப் பிறகு என் பாதங்களில் மரத்துப் போனது போல் ஒரு பாரமான உணர்ச்சி ஏற்பட்டது. ஏதோ கல்லாக ஆனது போல் என்னை மேலும் சுமக்க அவை சக்தி அற்றவையாகி விட்டன. மிகுந்த சிரமத்துடன் நான் திரும்பினேன்; என் கால்கள் சாதாரண நிலைக்கு வந்தன. நான் எதிர்ப்பக்கம்

திரும்பினேன்; மறுபடி அந்த வினோதச் சுமை என்னை அழுத்திற்று.

"அந்த யோகி காந்த சக்தியால் என்னை அவரிடம் இழுக்கிறார்!" இந்த எண்ணத்துடன் என் கையிலிருந்த சாமான்களை ஹாபுவின் கைகளில் குவித்தேன். சற்று நேரமாக என் விசித்திரமான கால் அசைவுகளைக் கவனித்து வந்த அவனுக்குச் சிரிப்பு தாங்க முடியவில்லை.

"என்ன ஆயிற்று உனக்கு? பைத்தியமா, என்ன?"

கொந்தளிக்கும் என் உணர்ச்சி நான் திரும்பப் பதிலளிப்பதைத் தடுத்தது. நான் பேசாமல் வேகமாக அங்கிருந்து நடந்தேன்.

ஏதோ காற்றினால் உந்தப்பட்டது போல் நான் திரும்பி நடந்து அந்தக் குறுகிய சந்தை அடைந்தேன். துரிதமான என் பார்வை அந்த அமைதியான உருவம் தீர்க்கமாக என் திசையையே நோக்கிக் கொண்டிருப்பதைக் கண்டது. ஆவலுடன் சில அடித்தூரம் நடந்ததும் நான் அவர் திருவடிகளை அடைந்தேன்.

"குருதேவா! நான் ஆயிர தரிசனங்களில் கண்ட தெய்வீக முகம்! இந்த சாந்தக் கண்கள், சிங்கத்தைப் போன்ற தலை, கூரான தாடி, புரளும் குழற்கற்றைகள் இவை அடிக்கடி இரவு வேளையில் நான் வேதனையுடன் தியானம் செய்யும் பொழுது என்னால் முழுவதும் புரிந்து கொள்ளப்படாத ஒரு வாக்குறுதியுடன் தோன்றியதைக் கண்டிருக்கிறேன்.

"ஓ, எனக்கே உரியவனே, நீ என்னிடம் வந்து

விட்டாய்! என் குரு இந்த வாக்கியத்தை வங்காளியில் ஆனந்தத்தினால் நடுங்கியக் குரலுடன் திரும்பத் திரும்பக் கூறினார். உனக்காக எத்தனை ஆண்டுகளாகக் காத்து இருக்கிறேன்!"

நாங்கள் ஒன்றிய மௌனத்தில் நிலையானோம்! சொற்கள் வெறும் மேற்பூச்சாகத் தோன்றின. குருவின் இதயத்திலிருந்து சீடனை நோக்கி நிசப்த கீதமாகத் தடங்கலின்றி கருத்துக்கள் பாய்ந்தன. எடுத்துக் கூறமுடியாத ஓர் உள்ளுணர்வின் மூலம் என் குரு இறைவனைக் கண்டவரென்றும் என்னையும் இறைவனிடம் அழைத்துச் செல்வாரென்றும் நான் உணர்ந்து கொண்டேன். இப்பிறப்பின் மங்கிய நினைவுகள் மறைந்து முந்தைய பிறவியின் நினைவுகள் மென்மையாக உதயம் ஆயின. காலத்தின் கோலம்தான் என்னே! கடந்தகால, நிகழ்கால, எதிர்கால நிகழ்வுகள் யாவும் அதனுடையச் சுழன்றுவரும் காட்சிகள்! அந்தப் புனிதமான திருவடிகளில் அன்று நான் பணிந்தது இதுதான் முதல் முறை அல்ல!

என் குரு என் கையைப் பிடித்து அந்நகரின் ராணா மஹால் பகுதியில் அவர் தற்காலிகமாகத் தங்கும் வீட்டிற்கு என்னை அழைத்துச் சென்றார். அவர் விளையாட்டு வீரர் போன்ற உருவத்தையும் உறுதியான நடையையும் கொண்டு இருந்தார். கிட்டத்தட்ட ஐம்பத்தைந்து வயதான அச்சமயத்தில் உயரமான நிமிர்ந்த உருவத்துடன் திகழ்ந்த அவர், ஓர் இளைஞரைப் போன்று சுறுசுறுப்புடனும் துடிப்புடனும் இருந்தார்.

அவருடைய கரிய கண்கள் பெரியதாக, ஆழ்ந்த ஞானத்துடன் அழகாக விளங்கின. கொஞ்சம் சுருண்ட கேசம் அதீத சக்தியுடன் கூடிய முகத்தை மிருதுவாக்கியது. வலிமை, மென்மையுடன் நுட்பமாகக் கலந்திருந்தது.

கங்கையை நோக்கியவாறு இருந்த ஒரு வீட்டின் கல்லால் கட்டப்பட்ட மாடி முகப்பிற்கு நாங்கள் செல்லும் பொழுது அவர் அன்புடன் கூறினார்.

"என் ஆசிரமங்கள், அத்துடன் என்னிடம் உள்ள எல்லாவற்றையும் நான் உனக்குக் கொடுக்கிறேன்."

"ஐயா, நான் ஞானத்தை அடைய வேண்டியும் கடவுளை அறிய வேண்டியும் வந்திருக்கிறேன். உங்களுடைய அந்தச் செல்வப் புதையல்தான் எனக்கு வேண்டும்!"

இந்தியாவின் வேகமான மாலை நேரம் தன் பாதித் திரையை இறக்கத் தொடங்கியபின், அவர் மறுபடி பேசினார். அவருடைய கண்கள் அளப்பரிய மென்மையைத் தோற்றுவித்தன.

"நான் உனக்கு என் நிபந்தனையற்ற அன்பை அளிக்கிறேன்."

எவ்வளவு விலை மதிப்பற்ற சொற்கள்! மறுமுறை அவரது அன்பு எனக்கு செவிவழியாக நிரூபணமாவதற்கு முன், கால் நூற்றாண்டு கழிந்துவிட்டது. அவர் தீவிர உணர்ச்சிகளை வாயால் கூறுவது அபூர்வம்; கடலைப் போன்ற அவர் இதயத்திற்கு மௌனம் தான் ஏற்றது.

"அதே போன்றே நிபந்தனையற்ற உன் அன்பை நீ

எனக்குத் தருவாயா?" அவர் குழந்தையைப் போன்றதொரு நம்பிக்கையுடன் என்னை நோக்கினார்.

"குருதேவா! நான் என்றுமே உங்களை நேசிப்பேன்!"

"சாதாரண அன்பு, சுயநலமுடையது; இச்சைகளிலும் திருப்திகளிலும் வேரூன்றியது; தெய்வீக அன்பு நிபந்தனை அற்றது; எல்லையற்றது; மாறுதல் இல்லாதது. தூய அன்பின் நிலைத்த தொடர்பு ஏற்பட்ட அக்கணத்திலேயே மனித நெஞ்சத்தின் மாசுகள் நிரந்தரமாக மறைந்து விடும். அவர் பணிவுடன் தொடர்ந்தார். எப்பொழுதாவது நான் இறை உணர்விலிருந்து நழுவுவதை நீ கண்டால், என் தலையை உன் மடி மீது இருத்தி, நாம் இருவரும் பணியும் பேரண்ட அன்பனிடம் என்னைத் திரும்பக் கொணர முயல்வதாக எனக்குத் தயவு செய்து வாக்குறுதி கொடு."

சூழும் இருளின் நடுவே அவர் எழுந்திருந்து என்னை ஓர் உள் அறைக்கு இட்டுச் சென்றார். நாங்கள் பாதாம் பருப்பினாலான இனிப்புகளையும் மாம்பழங்களையும் உண்ட பொழுது, என் இயல்பை பற்றி அவர் நன்கு அறிந்திருந்தார் என தன் உரையாடலின் மூலம் சூசகமாக வெளிப்படுத்தினார். அவருடைய அளவற்ற ஞானம், உள்ளார்ந்த பணிவுடன் மிக அழகாகக் கலந்திருந்ததைக் கண்டு எனக்கு அவரிடம் மிகுந்த பயபக்தி ஏற்பட்டது.

"உன் தாயத்தைப் பற்றிக் கவலைப்படாதே. அது வந்த வேலை முடிந்துவிட்டது. ஒரு தெய்வீகக்

கண்ணாடியைப் போல என் முழு வாழ்வின் பிரதிபலிப்பையும் என் குரு கண்டுவிட்டாரென்பது தெரிந்தது.

"குருவே, தாங்கள் என் முன்னால் உண்மையில் எழுந்தருளியிருப்பதே மற்ற எந்தச் சின்னத்தை விடவும் மகிழ்ச்சி தரக்கூடியது."

"நீ ஆசிரமத்தில் மகிழ்ச்சியாக இல்லாததினால் ஒரு மாறுதல் ஏற்படும் காலம் நெருங்கி விட்டது."

நான் என் வாழ்க்கையைப் பற்றி எதையுமே கூறவில்லை; இப்பொழுது அது தேவையற்றதாகத் தோன்றியது! அவருடைய இயற்கையான மென்மையானப் போக்கிலிருந்து, அவர் முன் கூட்டியேத் தெரிந்து கூறுவதைப் பற்றி எந்த வியப்பையும் காட்டுவதை விரும்பவில்லை எனத் தோன்றிற்று.

"நீ கல்கத்தாவிற்குத் திரும்பிப் போக வேண்டும். மனித இனத்திற்கு நீ அளிக்கும் அன்பிலிருந்து உறவினர்களை ஏன் விலக்க வேண்டும்?"

அவருடைய கருத்து என்னைத் திகைப்பூட்டியது. கடிதம் மூலமான பல வேண்டுதல்களுக்கு நான் பதில் எழுதா விட்டாலும் என் வீட்டார் நான் திரும்பி வந்துவிடுவேன் என்று எதிர்பார்த்தனர். அனந்தா குறிப்பிட்டிருந்தான், அந்த இளம் பறவை ஆன்மீக வானங்களில் பறக்கட்டும்; அந்த வான அழுத்தத்தின் பாரத்தில் அதன் இறக்கைகள் சோர்ந்து விடும். நாம், அவன் கீழ்நோக்கிய பாய்ச்சலுடன் வீட்டை நோக்கி வந்து, அவனது சிறகுகளை மடக்கிக் கொண்டு

பணிவுடன் நமது குடும்பக் கூட்டில் தங்கப்போவதைக் காண்போம். உற்சாகம் இழக்கச் செய்யும் இவ்வுவமை என் மனத்தில் இன்னும் பசுமையாக இருக்கவே, நான் கல்கத்தாவின் திசை நோக்கிப் பாயமாட்டேன் என்று தீர்மானம் செய்திருந்தேன்.

"ஐயா, நான் வீட்டிற்குத் திரும்ப மாட்டேன். ஆனால் தங்களைப் பின்பற்றி எங்கு வேண்டுமானாலும் செல்லத் தயார். தயவு செய்து தங்கள் பெயரையும் விலாசத்தையும் தாருங்கள்."

"ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வர் கிரி. என் முக்கிய ஆசிரமம் செராம்பூர் ராய்காட் சந்தில் உள்ளது. நான் இங்கு என் தாயாரைக் காண்பதற்காக சில நாட்களுக்கு மட்டும் வந்திருக்கிறேன்."

தன் பக்தர்களிடம் கடவுளின் சிக்கலான விளையாட்டைப் பற்றி நான் வியந்தேன். செராம்பூர், கல்கத்தாவிலிருந்து பன்னிரெண்டு மைல் தொலைவில்தான் உள்ளது. இருந்தும் எனக்கு என் குருவின் தரிசனம் அந்தப் பக்கங்களில் கிடைக்கவில்லை. நாங்கள் எங்கள் சந்திப்பிற்காக புராதன நகரமாகிய, லாஹிரி மகாசயரின் நினைவுகளினால் புனிதமாக்கப்பட்ட காசிக்கு வந்துசேர வேண்டியிருந்தது. மேலும் புத்தர், சங்கராசாரியார்[6] மற்றும் தெய்வத் தன்மையுள்ள பல யோகிகளின் திருவடிகள் கூட இம்மண்ணைப் புனிதமடையச் செய்திருந்தன.

"நீ நான்கு வாரங்களில் என்னிடம் வருவாய். முதல் தடவையாக அவருடைய குரல் கடுமையாயிருந்தது. நான் என்னுடைய நிரந்தரமான அன்பை உனக்குத் தெரிவித்து உன்னைக் கண்டதில் என் மகிழ்ச்சியைக் காண்பித்ததால் என் வேண்டுகோளைப் புறக்கணிக்க உனக்கு சுதந்திரம் இருப்பதாக நினைக்கிறாய். அடுத்த

தடவை நாம் சந்திக்கும் பொழுது நீ என் ஆர்வத்தைத் திரும்பவும் எழுப்ப வேண்டியிருக்கும். நான் உன்னை எளிதில் சீடனாக ஏற்றுக் கொள்ள மாட்டேன். என் கண்டிப்பான பயிற்சிக்கு கீழ்ப்படிதல் மூலம் முழுமையாக சரணடைய வேண்டும்!"

நான் பிடிவாதமான மௌனத்துடன் நின்றேன். என் குரு என் சிரமத்தை சீக்கிரமே ஊடுருவிப் புரிந்து கொண்டு விட்டார்.

"உன் உறவினர்கள் உன்னைக் கேலி செய்வார்கள் என எண்ணுகிறாயா?"

"நான் திரும்ப மாட்டேன்."

"நீ இன்னும் முப்பது நாட்களில் திரும்புவாய்."

"ஒரு பொழுதும் இல்லை."

இந்த விவாதத்தின் இறுக்கம் தீராமலேயே நான் அவர் பாதங்களில் பணிவுடன் வணங்கிப் புறப்பட்டேன். நடுநிசியில் ஆசிரமத்தை நோக்கி நடக்கும்பொழுது அந்த ஆச்சரியகரமான சந்திப்பு ஏன் இப்படி ஒரு சுமுகமற்ற விதத்தில் முடிந்தது என்று யோசித்தேன். மாயை என்னும் தராசின் இரு தட்டுக்கள், எந்த மகிழ்ச்சியையும் ஒரு துயரத்துடன் ஈடுகட்டும். என் இளம் இதயம் என் குருவினால் மாற்றி அமைக்கத்தக்க அளவிற்கு இன்னும் நெகிழ்வடையவில்லை.

அடுத்த நாள் காலை ஆசிரமத்து அங்கத்தினர்களின் போக்கில் இன்னும் அதிக விரோதம் தென்படுவதைக் கண்டேன். அவர்கள் நாள்தோறும் என்னை மாற்றமில்லாதக் கொடூரத்துடன் துளைத்தெடுத்தார்கள்.

மூன்று வாரங்கள் கழிந்தன. தயானந்தர் மும்பையில் ஒரு மாநாட்டில் கலந்து கொள்வதற்காக ஆசிரமத்தை விட்டகன்றார்! அவ்வளவு தான்! துரதிருஷ்டம் பிடித்த என் தலையில் எல்லாத் தொல்லைகளும் வந்து விழுந்தன.

"முகுந்தன் ஒரு புல்லுருவி. ஆசிரமத்தின் எல்லா வசதிகளையும், அதற்கான வேலை எதுவும் செய்யாமல் ஏற்றுக் கொள்கிறான். "இக்குற்றச்சாட்டைத் தற்செயலாகக் கேட்டுவிட்டு, தந்தைக்கு என் பணத்தைத் திருப்பி அனுப்பச் சொல்லிய வேண்டுகோளை ஏற்றுக் கொண்டதை நினைத்து முதல் தடவையாக வருந்தினேன். பெரு வேதனைப்பட்ட இதயத்துடன் நான் என் ஒரே நண்பனான ஜிதேந்திராவை அணுகினேன்.

"நான் இங்கிருந்து கிளம்புகிறேன். தயவு செய்து தயானந்தர் வந்ததும் என் மரியாதை கலந்த வருத்தத்தை அவரிடம் தெரிவி, என்றேன்.

"நானும் கிளம்பிவிடுகிறேன்! இங்கு தியானம் செய்ய வேண்டுமென்ற என் முயற்சிகளும் உன்னுடையதை விட அதிகமாக வெற்றி அடையவில்லை. ஜிதேந்திரா தீர்மானத்துடன் பேசினான்.

"நான் தெய்வீகத் தன்மையுடைய ஒரு யோகியைச் சந்தித்தேன். நாம் செராம்பூரில் உள்ள அவரிடம் செல்லலாம்."

எனவே அந்தப் பறவை அபாயகரமாக கல்கத்தாவிற்கு அருகாமையில் பாயத்தயாராயிற்று!



யோகானந்தர் 1915ல், அவருடைய தந்தையார் அளித்த மோட்டார் சைக்கிளின் பின்புற இருக்கையில். அவர் கூறியது, "நான் அவ்வண்டியில் எல்லா இடங்களுக்கும் சென்றேன், முக்கியமாக என் குருதேவர் ஸ்ரீ யுக்தேஸ்வரை, அவருடைய செராம்பூர் ஆசிரமத்தில் சந்திப்பதற்காக."

---

1 சமஸ்கிருதம், பண்படுத்தப்பட்டது, முழுமையானது. சமஸ்கிருத மொழி எல்லா இந்திய-ஐரோப்பிய மொழிகளுக்கும் மூத்த சகோதரி. அதனுடைய அகரவரிசை எழுத்துக்கள் தேவநாகரி எனப்படும்; நேர்ப்பொருள், தெய்வத்தின் இருப்பிடம் என்பதாம். என் இலக்கணத்தை அறிந்தவன் இறைவனை அறிகிறான்! - பண்டைய பாரதத்தின் மிகச் சிறந்த மொழிநூல் வல்லுநராகிய பாணினி என்பவர் சமஸ்கிருத மொழியின் கணக்கியல் மற்றும் உளவியல் பூரணத்துவத்திற்கு அந்தப் புகழுரையை அளித்தார். மொழியின் அடிப்படையை அறிய மூலம் வரை செல்பவன் உண்மையில் எல்லா மறிந்தவனாக முடிவான்.

2 இவன், இமாலயப் பயணத்தின்போது புலிகளுக்கு அஞ்சி ஓடிச் சென்று விட்ட ஜதீந்தா (ஜோதின் கோஷ்) அல்ல.

3 இறைவனை அடையப் பூர்வாங்கமான மார்க்கம் அல்லது பாதை.

4 இந்து சமய நூல்கள், அன்பான உறவுமுறைகள் உட்பட - நம் உயிரைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை - எல்லா வரங்களையும் அளிப்பவரைத் தேடுவதிலிருந்து தடுக்கும் குடும்பப் பற்றை மாயை என உபதேசிக்கிறது. இதுபோல் இயேசுவும் உபதேசித்திருக்கிறார்: தகப்பனையாவது தாயையாவது என்னிலும் அதிகமாய் நேசிக்கிறவன் எனக்குப் பாத்திரன் அல்ல. - மத்தேயு 10:37 (பைபிள்).

5 சாத்திர சம்பந்தப்பட்டவை, புனித நூல்கள் எனப் பொருள்படும். நான்கு வகையான மத நூல்களான ஸ்ருதி, ஸ்மிருதி, புராணம் மற்றும் தந்த்ரா. இவைகளே அவை. இந்த விளக்கமான நூல்கள் மதம் மற்றும் சமுக வாழ்க்கையைப் பற்றிய எல்லா அம்சங்களையும், நீதி, மருத்துவம், கட்டிடநிர்மாணம், கலை முதலிய துறைகளையும் உள்ளடக்கி இருக்கின்றன. ஸ்ருதி என்பது நேராகக் கேட்கப்பட்ட அல்லது வெளிப்படுத்தப்பட்ட வேத நூல்கள்; ஸ்மிருதி அல்லது ஞாபகத்தில் வைக்கப்பட்ட அறிவுச் செல்வம், உலகின் மிக நீண்ட இதிகாசங்களான மகாபாரதம் மற்றும் ராமாயணமாக பழமையான காலத்தில் முடிவாக எழுத்தில் வழங்கப்பட்டது. பதினெட்டு புராணங்கள், பழமையான உருவகக் கதைகளாகும். தந்திரங்கள், "சடங்குகள்" என்று பொருள்படும். இந்த நூல்கள் ஆழ்ந்த உண்மைகளை விவரமான உருவகங்களில் மறைத்துப் போதிக்கின்றன.

6 சங்கராசாரியார் (சங்கரர்) இந்தியாவின் மிகப் பெரிய தத்துவஞானி. கோவிந்த ஜதியின் சீடர். கோவிந்த ஜதியின் குரு, கௌடபாதர். கௌடபாதருடைய மாண்டுக்ய காரிகை என்னும் நூலுக்கு சங்கரர் புகழ்பெற்ற விளக்கவுரை ஒன்று இயற்றியுள்ளார். பதில் கூற முடியாத வாதத்திறமையுடன் நளினமும் அழகும் மிளிரும் நடையில் சங்கரர் வேதாந்த தத்துவத்தை சரியான அத்வைத (இருமையற்றது, ஒரு பொருண்மை வாதம்) வழியில் விளக்கியுள்ளார். அத்தலைசிறந்த அத்வைதி தெய்வீகமான அன்பைப் பற்றி கவிதைகள் இயற்றியுள்ளார். அவர் தெய்வீக அன்னையை வேண்டி இயற்றிய, பாபங்களை மன்னிக்கக் கோரும் கவிதைகளில் திரும்பத் திரும்ப வரும் அடிப்பதங்கள், பொல்லாத பிள்ளைகள் பலர் இருந்தாலும் ஒரு பொல்லாத அன்னை இல்லவே இல்லை என்பது. (தேவி அபராத க்ஷமாபண ஸ்தோத்திரம்)

சங்கரரின் சீடர்களில் ஒருவரான சனந்தனர் என்பவர் பிரம்ம சூத்திரங்களுக்கு (வேதாந்த தத்துவம்) பாஷ்யம் எழுதினார். அதன் கைப்பிரதி நெருப்பில் அழிந்துவிட்டது. ஆனால் சங்கரர் (ஒரே தடவை அதை மேலோட்டமாகப் பார்த்திருந்தவர்) தன் சீடருக்கு அதனை அவ்வாறே ஒப்புவித்தார். பஞ்ச பதிகா எனப் பெயர் பெற்ற அந்த நூல் இன்றும் அறிஞர்களால் கற்கப்படுகிறது.

சனந்தனர் என்ற அந்த சீடன் ஓர் அருமையான நிகழ்ச்சிக்குப் பிறகு ஒரு புதிய பெயரை அடைந்தார். ஒரு நாள் நதிக்கரையில் அமர்ந்திருந்த பொழுது அவர் எதிர்க் கரையிலிருந்து சங்கரர் தன்னைக் கூப்பிடுவதைக் கேட்டார். சனந்தனர் உடனே நீரில் இறங்கி விட்டார். அவர் நம்பிக்கை, அவர் பாதங்கள் இரண்டிற்குமே ஆதரவு தரும் வகையில் சங்கரர் சுழன்றோடும் ஆற்றில் வரிசையாகத் தாமரை மலர்களைத் தோற்றுவித்தார். அதன் பிறகு அந்த சீடர் பத்மபாதர் (தாமரை அடியுடையவர்) என்றே அழைக்கப்பட்டார்.

பஞ்ச பதிகத்தில் பத்மபாதர் தன் குருவைப் பற்றி பல புகழ் மொழிகளைக் கூறியிருக்கிறார். சங்கரரே பின்வரும் அழகிய வரிகளை எழுதியுள்ளார். உண்மையான குருவிற்கு உவமையாகக் கூறக்கூடியது இம்மூவுலகிலும் இல்லை. சித்துமணிக் கல்லினால் (அப்படியொன்று இருப்பதாக வைத்துக் கொள்வோம்) இரும்பைப் பொன்னாகத்தான் மாற்ற முடியுமே தவிர, அந்த இரும்பை இன்னொரு சித்துமணிக்கல்லாக மாற்ற முடியாது. வணங்கத்தக்க ஆசாரியரோ தன் திருவடிகளில் சரணடையும் சீடனைத் தனக்குச் சமமானவனாகச் செய்து விடுகிறார். ஆகையினாலே குரு ஒப்புமை அற்றவர்இல்லைஎல்லாவற்றையும் கடந்தவர். (சதகம் I)

சங்கர பகவத்பாதர் மகான், அறிஞர், செயல் வீரர் ஆகிய மூவரின்

குணங்களையும் அரிதாக ஒருங்கே பெற்ற ஒரு மகா புருஷர். அவர் முப்பத்திரண்டே ஆண்டுகள் வாழ்ந்திருந்தாலும், அவர் வாழ்க்கையின் பெரும்பாலான ஆண்டுகள், இந்தியாவின் ஒவ்வொரு பாகத்திலும் கடினமான பிரயாணம் செய்து அவரது அத்வைதக் கொள்கையைப் பரப்புவதில் கழிந்தன. வெறுங்காலுடன் நடந்த இந்த இளந்துறவியின் வாயிலிருந்து வரும் மன அமைதி அளிக்கும் ஞானத்தைக் கேட்பதற்காக, லட்சக்கணக்கானவர் ஆவலோடு கூடுவர்.

சங்கரரின் சீர்திருத்த ஆர்வத்தில் மிகப் பழைய சன்னியாச ஸ்வாமி பரம்பரையை சீர்திருத்தி அமைத்ததும் அடங்கும். (பார்க்க பக்கங்கள் 337, 338), அவர் தெற்கில் சிருங்கேரியிலும், கிழக்கில் பூரியிலும், மேற்கே துவாரகையிலும், வடக்கில் பத்ரிநாத்திலுமாக நான்கு இடங்களில் மடங்களை ஸ்தாபித்தார்.

இளவரசர்களாலும், பொதுமக்களாலும் தாராளமாகக் கொடுக்கப் பட்ட நிதியைக் கொண்டு உருவாக்கப்பட்ட அப்பெரிய அத்வைத ஞானியின் நான்கு மடங்களும், சமஸ்கிருத இலக்கணம், தர்க்க சாஸ்திரம், மற்றும் வேதாந்த ஞானம் ஆகியவைகளை இலவசமாகப் போதித்தன. சங்கரர் இந்தியாவின் நான்கு மூலைகளிலும் அவரது மடங்களை நிறுவியதின் நோக்கம், இப்பரந்த நாட்டில் மதம் மற்றும் தேசிய ஒருமைப்பாட்டை ஊக்குவிப்பதே ஆகும்.

## அத்தியாயம் 11

# பிருந்தாவனில் காசில்லாத இரு சிறுவர்கள்

"முகுந்தா, அப்பா உனக்கு எந்த சொத்தும் கிடையாது என்று சொன்னால்தான் உனக்குச் சரியாக இருக்கும்! உன் வாழ்க்கையை எப்படி முட்டாள்தனமாக நீ வீணடித்துக் கொண்டிருக்கிறாய்?" மூத்த சகோதர உபதேசம் என் காதுகளை தாக்கிற்று.

ஜிதேந்திராவும் நானும் அப்பொழுதுதான் ரயிலில் இருந்து புத்தம் புதியவர்களாக (புத்தம் புதியவர்களாக என்பது ஒரு பேச்சுக்குத்தான்! எங்கள் உடல் முழுதும் தூசி படிந்திருந்தது), சமீபத்தில் கல்கத்தாவிலிருந்து புராதன நகரமாகிய ஆக்ராவிற்கு மாற்றலாகி வந்திருந்த அனந்தாவின் வீட்டிற்கு வந்தோம். அண்ணன், அரசுப் பொதுப்பணித் துறையில் மேற்பார்வை செய்யும் கணக்கராக இருந்தான்.

"அனந்தா, உனக்கு நன்றாகவே தெரியும். நான் பரலோகத் தந்தையிடமிருந்துதான் என் பரம்பரைச் சொத்தை எதிர்பார்க்கிறேன்.

"பணம் முதலில், கடவுள் பின்னர், யாருக்குத் தெரியும்? நம் ஆயுள் மிக நீண்டதாக இருக்கலாம்."

"இறைவன் முதலில், பணம் அவன் அடிமை! யார்சொல்லமுடியும்? ஆயுள் மிகக் குறுகியதாக இருக்கலாம்."

என் பதிலடி அச்சமயத்திற்கு பொருத்தமாக கொடுக்கப்பட்டதே தவிர, நான் எந்த முன்னோடியான உள்ளுணர்வாலும் பேசவில்லை. (பாவம், அனந்தாவினுடைய ஆயுள் சீக்கிரத்தில் தான் முடிந்தது.)[1]

"ஆசிரமத்திலிருந்து கிடைத்த ஞானம் போலும்! ஆனால் நீ வாரணாசியை விட்டுவிட்டாய் எனத் தெரிகிறது." அனந்தாவினுடைய கண்கள் திருப்தியுடன் பளிச்சிட்டன. அவன் என் சிறகுகள் குடும்பக்கூட்டில் அடைந்துவிடும் என்ற நம்பிக்கையை இன்னும் கொண்டிருந்தான்.

"வாரணாசியில் நான் தங்கியது வீணாகவில்லை! என் இதயம் விரும்பிய எல்லாவற்றையும் நான் அங்கு அடைந்தேன். ஆனால் அது உன் பண்டிதரோ அல்லது அவர் மகனோ அல்ல என்று நீ நிச்சயமாக இருக்கலாம்!"

நான் பழைய நினைவில் சிரிக்கும்பொழுது அனந்தாவும் என்னுடன் சேர்ந்து கொண்டான். அவன் தேர்ந்தெடுத்த காசி தூரதரிசி குறுகிய நோக்குடையவர் என்று நிரூபணம் ஆனதை அவன் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டியிருந்தது.

"ஊர் சுற்றும் என் தம்பியே, உன் திட்டங்கள் என்னவோ?"

"ஜிதேந்திரா ஆக்ராவிற்குப் போக வேண்டுமென்று என்னைத் தூண்டினான். நாங்கள் இங்கு தாஜ்மஹாலின் அழகைப் பார்க்கப் போகிறோம், நான் விவரித்தேன். பிறகு நாங்கள், புதிதாகக் கண்ட எனது குருவிடம்செராம்பூரில் உள்ள அவருடைய

ஆசிரமத்திற்குச் செல்லப் போகிறோம்."

அனந்தா அன்புடன் எங்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தான். அன்று மாலை பல தடவை அவன் கண்கள் ஆலோசித்தபடி என் மீது பதிந்ததை நான் கண்டேன்.

"அந்தப் பார்வையை நான் அறிவேன். ஒரு சதித்திட்டம் உருவாகிக் கொண்டிருக்கிறது," என நான் எண்ணினேன்.

அதன் விளைவு சீக்கிரமான எங்கள் காலை உணவின் போது வெளியாயிற்று.

"ஆதலால் அப்பாவின் சொத்தை முற்றிலும் சாராமலிருக்கிறாய் என நினைக்கிறாயா?" அனந்தா நேற்றைய உரையாடலின் இழைகளைத் தொடரும்பொழுது அவன் பார்வை களங்கமற்றிருந்தது.

"நான் கடவுளை நம்பியிருப்பதை நன்கு உணர்கிறேன்."

"பேசுவது எளிது! இதுவரை உன் வாழ்க்கைக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்கப்பட்டுவிட்டது. உன் உணவுக்கும் இருப்பிடத்திற்கும், கண்ணுக்குத் தெரியாத கடவுளை நம்ப வேண்டும் என்று நீ நிர்ப்பந்திக்கப்பட்டால் உன் நிலைமை என்னவாகும்? நீ வெகு சீக்கிரத்தில் தெருக்களில் பிச்சை எடுக்க நேரிடும்!"

"ஒரு பொழுதும் இல்லை! கடவுளை விட்டுவிட்டு தெருவில் போய்க் கொண்டிருப்பவர்களை நான் நம்ப மாட்டேன். திருவோட்டையும் தவிர தன் பக்தனைக் காப்பாற்ற ஆயிரம் வழிகள் அவனுக்குத் தெரியும்!"

"மேலும் மேலும் பேச்சுத்தான்! உன் வீறாப்பு தத்துவத்தை நடைமுறை உலகத்தில் சோதித்துப் பார்க்கலாம் என்று யோசனை கூறுகிறேன் என்று வைத்துக் கொள்! அப்பொழுது?"

"நான் ஏற்கத் தயார். நீ கடவுளைக் கற்பனை உலகிற்குள் அடக்கப் பார்க்கிறாயா?"

"பார்த்துவிடலாம். என் சொந்தக் கருத்துக்களை விரிவாக்கவோ அல்லது உறுதிப்படுத்தவோ இன்று உனக்கு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. "அனந்தா நாடக பாணியில் ஒரு வினாடி மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு நிதானமாகவும் தீவிரமாகவும் பேசினான்.

"இன்று காலை உன்னையும் உன் சகோதர சீடனான ஜிதேந்திராவையும் அருகில் உள்ள நகரான பிருந்தாவனுக்கு அனுப்பலாமென்று நினைக்கிறேன். நீ ஒரு ரூபாய்கூட எடுத்துச் செல்லக்கூடாது. பணத்திற்கோ உணவிற்கோ நீ பிச்சை எடுக்கக் கூடாது. உன்னுடைய சிக்கலான நிலைமையை யாரிடமும் நீ எடுத்துச் சொல்லக்கூடாது. நீ சாப்பாடு இல்லாமல் பட்டினி கிடக்கவும் கூடாது. மற்றும் நீ பிருந்தாவனில் சென்று மாட்டிக் கொண்டு தவிக்கக் கூடாது. இந்த சோதனையின் எந்த விதிகளையும் மீறாமல் இன்றிரவு பன்னிரண்டு மணிக்குள் நீங்கள் என் வீட்டிற்குத் திரும்பி விட்டால் இந்த ஆக்ராவிலேயே மிக்க ஆச்சரியமடையும் மனிதன் நானாகத் தானிருக்க முடியும்!"

"நான் சவாலை ஏற்றுக் கொள்ளுகிறேன்," என் சொற்களிலோ என் இதயத்திலோ எந்தத் தயக்கமும்

இல்லை. உடனடியாக அருள் கிடைத்த நன்றிகலந்த நினைவுகளெல்லாம் மனத்தில் பளிச்சிட்டன. உயிரைக் குடிக்கும் காலராவிலிருந்து லாஹிரி மகாசயரின் படத்தை நோக்கிச் செய்த பிரார்த்தனையினால் நான் நலமடைந்தது; லாகூர் கூரையில் கிடைத்த விளையாட்டுப் பரிசுகளான இரு பட்டங்கள்; பரெய்லியில் நான் மனச்சோர்வடைந்த பொழுது கிடைத்த தாயத்து; வாரணாசிப் பண்டிதரின் வீட்டு வாசலில் ஒரு சாது மூலம் கிடைத்த தீர்மானமான செய்தி; தெய்வீக அன்னையின் தரிசனமும் அவள் அன்பைப் பற்றிக் கூறிய கம்பீரமான சொற்களும்; மாஸ்டர் மகாசயர் மூலமாக அவள் என் சிறு சிறு சங்கடங்களுக்குத் துரிதமாக செவிசாய்த்தது; உயர்நிலைப் பள்ளிப் படிப்பில் தேறுவதற்குக் கடைசி நிமிடத்தில் கிடைத்த உதவி; எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போல் என் வாழ்நாளைய கனவுகளின் பனித் திரையிலிருந்து கிடைத்த என் குருவின் தரிசனம். கடுமையான நிரூபிக்குமிடமான இவ்வுலகில் ஏற்படும் எந்தச் சிக்கலுக்கும் என் சித்தாந்தம் சரிப்படாது என்று நான் என்றுமே ஒப்புக் கொள்ளமாட்டேன்!

"நீ விருப்பத்துடன் ஒப்புக்கொண்டது உனக்குப் பெருமைதான். நான் இப்பொழுதே உன்னை ரயிலடிக்கு அழைத்துச் செல்கிறேன், என்றான் அனந்தா.

அவன் திறந்தவாய் மூடாது கேட்டுக் கொண்டிருந்த ஜிதேந்திராவின் பக்கம் திரும்பினான். "நீ ஒரு சாட்சியாக உடன் செல்ல வேண்டும். பெரும்பாலும் அவனுடன்

சங்கடத்திலும் மாட்டிக் கொள்ள நேரிடலாம்."

ஓர் அரைமணி நேரங்கழித்து ஜிதேந்திராவும் நானும் அந்தப் பயணத்திற்கான ஒரு வழிப் பயணச் சீட்டுகளைப் பெற்றோம். ரயில் நிலையத்தில் தனியான ஒரு பக்கமாகச் சென்று எங்களைச் சோதித்துப் பார்க்க ஒப்புக் கொண்டோம். எங்களிடம் ஒளித்து வைத்த புதைபொருள் ஏதும் இல்லை என்று சீக்கிரம் அனந்தா திருப்திபட்டுக் கொண்டான். எங்கள் எளிய வேஷ்டிகள், அவசியமானவற்றைத் தவிர வேறு எதையும் மறைக்கவில்லை.

தெய்வ நம்பிக்கை, பண விஷயத்தில் குறுக்கிடுவதைக் கண்ட என் நண்பன் மறுத்துப் பேசினான். "அனந்தா, பாதுகாப்பிற்காக எனக்கு ஓரிரண்டு ரூபாயாவது கொடு. ஆபத்து என்றால் உனக்கு ஒரு தந்தியாவது கொடுக்கலாம் அல்லவா?"

"ஜிதேந்திரா! என் ஆச்சரியக் கூவல் மிகத் தீவிரமாகக் கண்டிப்பதாயிருந்தது. கடைசிப் பாதுகாப்பாக நீ ஏதாவது பணம் எடுத்துக் கொண்டால் நான் இந்தச் சோதனைக்கு உட்பட மாட்டேன்."

"நாணயச் சத்தம் ஒரு விதமான நம்பிக்கையைத் தருகிறது," என்று சொன்ன ஜிதேந்திரா, அவனை நான் முறைத்துப் பார்த்ததும் மேலே ஒன்றும் பேசவில்லை.

"முகுந்தா, நான் இதயமற்றவனில்லை, அனந்தாவின் குரலில் பணிவின் சாடை படர்ந்திருந்தது. அவன் மனச்சாட்சி அவனை உறுத்தி இருக்கலாம்; அது ஒருவேளை இரு சிறுவர்களைக் காசு இல்லாமல்

அறிமுகம் இல்லாத ஒரு நகரத்திற்கு அனுப்பி வைப்பதாலோ அல்லது தனக்குத் தெய்வ நம்பிக்கை குறைவாக இருப்பதினாலோ இருந்திருக்கலாம். ஏதாவது, சந்தர்ப்பவசத்தாலோ அல்லது அருளாலோ நீ பிருந்தாவனத்துச் சோதனையில் வெற்றிகரமாகத் தேறிவிட்டால், உன் சீடனாக ஏற்று எனக்கு உபதேசம் செய்யும்படி நான் உன்னைக் கேட்கப் போகிறேன்."

இந்த வாக்குறுதி, புதுமையான இச்சூழ்நிலையில் சற்று விதிக்குப் புறம்பானதாக இருந்தது. இந்தியக் குடும்பத்தில் மூத்த சகோதரர் தன் இளையவர்களுக்கு பணிவது அபூர்வமே. தந்தைக்கு அடுத்தபடியாக அவருக்கு மரியாதையும் பணிவும் கிடைக்கும்.ஆனால் ஏதும் சொல்வதற்கு நேரம் இல்லை. எங்கள் ரயில் கிளம்பும் தறுவாயிலிருந்தது.

ஜிதேந்திரா வண்டி செல்லச் செல்ல ஒரு கவலையான மௌனத்தைக் கடைப்பிடித்தான். கடைசியில் மெல்ல அசைந்தான். என் பக்கம் குனிந்து ஒரு மென்மையான இடத்தில் நன்கு வலிக்கும்படிக் கிள்ளினான்.

"இறைவன் நம் அடுத்த வேளைச் சாப்பாட்டைக் கொடுப்பதற்கு நான் எந்த அறிகுறியையும் காணவில்லையே!"

"சும்மாயிரு, சந்தேகப் பிராணியே, கடவுள் நம்முடன்தான் வேலை செய்து கொண்டிருக்கிறார்."

"அவரை உன்னால் கொஞ்சம் விரைவுபடுத்தவும் முடியுமா? நம்முன் உள்ள நிலைமையைக் கண்டே

எனக்கு அதிகமான பசி எடுக்கிறது. நான் காசியை விட்டு தாஜ்சமாதியைக் காண வந்தேனே தவிர என்னுடைய சமாதிக்குள் நுழைய அல்ல!"

"உற்சாகமாயிரு, ஜிதேந்திரா! நாம் முதன்முதலாக பிருந்தாவனத்தின் தெய்வீக அதிசயங்களைப் பார்க்கப் போகிறோமில்லையா? பகவான் கிருஷ்ணரின் காலடி பட்டுப் புனிதமடைந்த நிலத்தில் நடக்கப் போகிறோமென்பதில் எனக்கு ஆழ்ந்த மகிழ்ச்சி ஏற்படுகிறது."

எங்கள் பகுதியின் கதவு திறந்தது. இரண்டு மனிதர்கள் உள்ளே வந்து உட்கார்ந்தார்கள். அடுத்த ரயில் நிறுத்தம் தான் கடைசி.

"சிறுவர்களே, பிருந்தாவனில் உங்களுக்கு நண்பர்கள் இருக்கிறார்களா?" என் எதிரில் அமர்ந்திருந்த அறிமுகமில்லாத அந்த மனிதர் வியப்பூட்டும் அக்கறையைக் காட்டினார்.

"அதைப் பற்றி உங்களுக்கென்ன?" நான் முரட்டுத்தனமாக என் பார்வையைத் திருப்பிக் கொண்டேன்.

"நீங்கள் ஒருக்கால் இதயங்களைத் திருடும் ஹறி[2]யின் மயக்கத்தில் உங்கள் குடும்பங்களை விட்டுவிட்டு ஓடி வருகிறீர்கள் போலிருக்கிறது. எனக்கும் கொஞ்சம் பக்தி சிரத்தை உண்டு. தாங்க முடியாத இந்த வெயிலில் உங்களுக்கு உணவும் இருப்பிடமும் கிடைக்கச் செய்வதை என் முக்கிய கடமையாகக் கொள்வேன்."

"இல்லை ஐயா, எங்களைத் தனியாக விடுங்கள். நீங்கள் மிக நல்லவராக இருக்கிறீர்கள். ஆனால் எங்களை வீட்டிலிருந்து ஓடிவந்தவர்களாக நீங்கள் நினைப்பது சரியல்ல."

மேலே எந்தப் பேச்சும் நடைபெறவில்லை. ரயில் நின்றது. ஜிதேந்திராவும் நானும் இறங்கியதும், எங்களுடைய சந்தர்ப்பத் தோழர்கள் எங்கள் கைகளைப் பிடித்துக் கொண்டு ஒரு குதிரை வண்டியைக் கூப்பிட்டார்கள்.

நாங்கள் நன்கு பராமரிக்கப்பட்ட பசுமையான மரங்களடர்ந்த ஒரு கம்பீரமான ஆசிரமத்தில் இறங்கினோம். எங்களுக்கு உதவி செய்து அழைத்து வந்தவர்கள் இங்கு எல்லோருக்கும் தெரிந்தவர்களாக இருந்தார்கள். சிரித்த முகத்துடன் கூடிய ஒரு சிறுவன் எதுவுமே கூறாமல் எங்களை ஒரு கூடத்திற்கு அழைத்துச் சென்றான். சீக்கிரமே கௌரவமான தோற்றத்தைக் கொண்ட ஒரு முதிய மாது எங்களை எதிர்கொண்டார்.

"கௌரி அம்மா, அரசகுமாரர்கள் வரமுடியவில்லை," என்று அம்மனிதர்களுள் ஒருவர், ஆசிரம விருந்தளிப்பவரிடம் கூறினார். "கடைசி நிமிடத்தில் அவர்களது திட்டங்கள் மாறிவிட்டன. அவர்கள் தங்கள் மனமார்ந்த வருத்தத்தைத் தெரிவித்துள்ளார்கள். ஆனால் நாங்கள் வேறு இரண்டு விருந்தினர்களை அழைத்து வந்திருக்கிறோம். நாங்கள் ரயிலில் அவர்களை சந்தித்த உடனேயே, நான் அவர்கள் பகவான் கிருஷ்ணனுடைய

பக்தர்கள் என உணர்ந்து அவர்கள்பால் ஈர்க்கப்பட்டேன்."

"இளம் நண்பர்களே, நாங்கள் போய்வருகிறோம். எங்களுக்கு அறிமுகமான அவ்விருவரும் வாசலை நோக்கி நடந்தார்கள். கடவுள் விருப்பம் இருந்தால் மறுபடி சந்திப்போம்."

"உங்களுக்கு இங்கு நல்வரவு. கௌரி அம்மாள் ஒரு தாய்க்குரிய பாவனையோடு புன்னகைத்தார். இதைவிட நல்ல நாளில் நீங்கள் வந்திருக்க முடியாது. இந்த ஆசிரமத்தின் இரு அரச ஆதரவாளர்களை நான் எதிர்பார்த்துக் கொண்டு இருந்தேன். என் சமையலை உண்பதற்கு யாருமே இல்லை எனில் எத்தனை அவமானம்?"

இந்த இனிமையான சொற்கள் ஜிதேந்திராவிடம் ஆச்சரியமான விளைவை உண்டாக்கியது. அவன் அழ ஆரம்பித்துவிட்டான். பிருந்தாவனில் அவன் அச்சத்துடன் எதிர்பார்த்திருந்த நிலைமை அரச வரவேற்பாக மாறிவிட்டது. திடீரென்று அவனது மனத்தை சரி செய்து கொள்வது அவனுக்குக் கடினமாகப் போய்விட்டது. எங்களுக்கு விருந்தளித்தவர் ஒரு கேள்விக் குறியுடன் அவனைப் பார்த்தார். ஆனால் எதுவும் பேசவில்லை. ஒருவேளை இளைஞர்களின் கிறுக்குத்தனத்தைப் பற்றி அவருக்கு நன்றாகத் தெரிந்திருக்கக் கூடும்.

பகல் சாப்பாடு தயாராயிற்று. கௌரி அம்மாள், சமையலின் நறுமணம் சூழ்ந்திருந்த சாப்பாட்டுக் கூடத்திற்கு எங்களை அழைத்துச் சென்றார். அடுத்தாற் போலிருந்த சமையலறைக்குள் மறைந்தார், அவர்.

நான் இந்தச் சமயத்தை எதிர்பார்த்திருந்தேன். ஜிதேந்திராவின் உடலில் சரியான பாகத்தைத் தேர்ந்தெடுத்து ரயிலில் அவன் என்னை எப்படிக் கிள்ளினானோ அதேபோல் நானும் அவனை வலிக்கும்படிக் கிள்ளினேன்.

"சந்தேகப் பிராணியே, கடவுள் வேலைச் செய்கிறார்அதுவும் விரைவாக!"

வீட்டுக்கார அம்மாள் விசிறியுடன் திரும்பி வந்தார். நன்கு அலங்கரிக்கப்பட்ட கம்பளி ஆசனங்களில் நாங்கள் அமர்ந்ததும், கீழை நாட்டுப் பாணியில் அவர் எங்களுக்கு ஒரே சீராக விசிறத் தொடங்கினார். ஆசிரமத்துச் சீடர்கள் கிட்டத்தட்ட முப்பது விதமான உணவு வகைகளை எடுத்துக் கொண்டு உள்ளேயும் வெளியேயும் நடந்தார்கள். அதை உணவு என்று கூறுவதைவிட பிரமாதமான விருந்து என்று கூறுவதே பொருந்தும். இந்தப் பூமியில் பிறந்ததிலிருந்து நானும் ஜிதேந்திராவும் அம்மாதிரியான உணவுப் பண்டங்களைச் சுவைத்ததே இல்லை.

"மாண்புமிகு அன்னையே, உண்மையிலேயே அரச குமாரர்களுக்குகந்த உணவு வகைகள்தாம்! இந்த விருந்தை உண்பதைவிட உங்கள் அரச ஆதரவாளர்களுக்கு அவசர வேலை வேறு ஏதும் இருக்கக்கூடும் என்பதை என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. வாழ்நாள் முழுதும் இதை நினைவில் வைத்துக் கொள்ளும்படி செய்து விட்டீர்கள்!"

அனந்தாவினுடைய நிபந்தனையால் கட்டுப்பட்டிருந்த

நாங்கள் எங்களது நன்றியில் இரண்டு பங்கு முக்கியத்துவம் இருந்ததை அந்த கருணையுள்ள அம்மையாருக்கு எடுத்துக் கூறமுடியவில்லை.ஆனாலும் நாங்கள் மனமாரக் கூறியது உண்மை என்பது வெளிப்படை. நாங்கள் அவருடைய ஆசியுடனும் அந்த ஆசிரமத்திற்கு மறுபடி வருகைத்தர வேண்டுமென்ற மனங்கவரும் அழைப்புடனும் புறப்பட்டோம்.

வெளியே வெயில் இரக்கமற்றதாயிருந்தது. நானும் என் நண்பனும் ஆசிரம வாயிலில் உள்ள கம்பீரமான கடம்ப மரத்தடியில் நிழலுக்காக ஒதுங்கினோம். குறை கூறும் சொற்கள் தொடர்ந்தன. திரும்பவும் ஜிதேந்திராவைச் சந்தேகங்கள் சூழ்ந்தன.

"நீ என்னைப் பெரிய ஆபத்தில் சிக்கவைத்து விட்டாய். நம் மதிய உணவு ஏதோ சந்தர்ப்ப வசத்தால் கிடைத்த குருட்டு அதிர்ஷ்டம்! நம்மிடையே ஒரு காசு கூட இல்லாமல் இந்த நகரத்தில் நாம் எல்லாவற்றையும் எப்படி சுற்றிப் பார்ப்பது? மேலும் நீ எப்படித்தான் என்னை அனந்தாவின் வீட்டிற்குத் திரும்ப அழைத்துப் போகப் போகிறாயோ?"

"உன் வயிறு இப்போது நிறைந்துவிட்டது; எனவே கடவுளை வெகு சீக்கிரம் மறந்து விடுகிறாய்." என் சொற்கள் கசப்புடன் இல்லாவிடினும் குற்றம் சாட்டுவதாக இருந்தன. தெய்வீக அருளைப் பற்றி மனித நினைவு எவ்வளவு குறுகியது! தன்னுடைய பிரார்த்தனைகளில் சிலதாவது நிறைவேற்றப்படாத மனிதனே இல்லை எனலாம்.

"உன்னைப் போல் ஒரு பைத்தியத்துடன் வெளியே வந்த என் முட்டாள்தனத்தை நான் மறக்கவே மாட்டேன்!"

"அமைதியாயிரு, ஜிதேந்திரா! நமக்கு உணவு அளித்த அதே கடவுள் நமக்குப் பிருந்தாவனத்தைச் சுற்றிக்காட்டி நம்மை ஆக்ரா விற்குத் திருப்பி அனுப்பவும் செய்வார்."

அழகிய முகத்துடன் இளவயதுடைய மனிதன் ஒருவன் வேகமாக அணுகினான். எங்கள் மரத்தடியில் நின்று அவன் என்னை வணங்கினான்.

"அன்புள்ள நண்பரே, நீங்களும் உங்களுடன் வந்து இருப்பவரும் இந்தப் பக்கத்திற்குப் புதிதானவர்களாக இருக்க வேண்டும். தயவு செய்து என்னை உங்களுக்கு விருந்தளிப்பவ னாகவும் வழிகாட்டியாகவும் இருக்க அனுமதியுங்கள்."

சாதாரணமாக ஓர் இந்தியனின் முகம் வெளுப்பது என்பது அபூர்வம். ஆனால் ஜிதேந்திராவின் முகம் திடீரென்று வெளுத்தது. நான் மரியாதையுடன் அந்த அழைப்பை மறுத்தேன்.

"நீங்கள் என்னை உண்மையிலேயே துரத்திவிட வில்லையே? "அப்புதிய மனிதனின் பயம், வேறு எந்தச் சூழ்நிலைகளிலும் நகைப்பிற்கிடமானதாக இருந்திருக்கும்.

"ஏன் கூடாது?"

"நீங்கள் என் குரு," அவன் கண்கள் என்னுடைய கண்களை நம்பிக்கையுடன் தேடின," என் மதிய தியான வேளையில் பகவான் கிருஷ்ணன், எனக்குத் தரிசனம்

தந்தார். இதே மரத்தின் கீழ் அவர் எனக்கு கைவிடப்பட்ட இரு உருவங்களைக் காண்பித்தார். என் குருவே! ஒரு முகம் உங்களுடையது. அதை நான் அடிக்கடி என் தியானத்தின் பொழுது கண்டிருக்கிறேன். என் பணிவான சேவையை நீங்கள் ஏற்றுக் கொண்டால் எவ்வளவு ஆனந்தம் தெரியுமா?"

"நீ என்னைக் கண்டுபிடித்தது பற்றி எனக்கும் மகிழ்ச்சி. கடவுளோ, மனிதனோ நம்மைக் கைவிடவில்லை?" நான் என் முன் ஆர்வமுடன் நின்ற முகத்தை நோக்கிப் புன்சிரிப்புடன் அசையாமல் நின்றாலும் மனத்துள் இறைவனது திருவடிகளை விழுந்து வணங்கினேன்.

"அன்புள்ள நண்பர்களே, என் வீட்டிற்கு வருகை தந்து பெருமைப்படுத்த மாட்டீர்களா?"

"நீ அன்பானவன், ஆனால் இந்த ஏற்பாட்டை செயல்படுத்த முடியாது. நாங்கள் ஏற்கனவே ஆக்ராவில் என் அண்ணனின் விருந்தாளிகள்."

"குறைந்த பட்சம் பிருந்தாவனத்தை உங்களுடன் சுற்றிப் பார்க்கும் நினைவுகளையாவது எனக்கு அளியுங்கள்."

நான் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டேன். அந்த இளைஞன் தன் பெயர் பிரதாப் சட்டர்ஜி என்று கூறிவிட்டு ஒரு குதிரைவண்டியைக் கூவி அழைத்தான். நாங்கள் மதன் மோகன் கோயிலுக்கும் மற்ற கிருஷ்ணன் கோயில்களுக்கும் சென்றோம். நாங்கள் எங்கள் கோயில் பிரார்த்தனைகளை முடிக்கும்போது இருட்டிவிட்டது.

"மன்னிக்க வேண்டும். நான் போய் ஸந்தேஷ் (இனிப்புப் பண்டம்) வாங்கி வருகிறேன்." பிரதாப் ரயில் நிலையத்திற்கு அருகே உள்ள கடை ஒன்றில் நுழைந்தான். ஜிதேந்திராவும் நானும், இப்பொழுது சற்று குளிர்ந்து விட்டதால், கூட்டம் கொஞ்சம் அதிகமாயிருந்த அந்த அகன்ற தெருவில் மெதுவாக நடந்தவாறிருந்தோம். எங்கள் நண்பன் வருவதற்குச் சற்று நேரம் பிடித்தது. ஆனால் வரும்பொழுது பலவித இனிப்புப் பண்டங்களை பரிசாகக் கொண்டு வந்தான்.

"தயவு செய்து எனக்கு இந்தத் திருப்பணியைச் செய்ய அனுமதிக்க வேண்டும்." பிரதாப் கெஞ்சுதலுடன் புன்னகை செய்தவாறே ஒரு கட்டு ரூபாய் நோட்டுக்களையும், ஆக்ராவிற்கு அப்போதுதான் வாங்கி இருந்த இரு பயணச் சீட்டுக்களையும் கொடுத்தான்.

நான் அதை இறைவனின் மறைமுகமான அருளாக நினைத்து மரியாதையுடன் பெற்றுக் கொண்டேன். அனந்தாவினுடைய கேலிப் பேச்சுக்கிடமான இறைவனுடைய அருள்வளம் தேவையை விட எவ்வளவோ அதிகமாகி விட வில்லையா?

ரயில் நிலையத்திற்கு அருகில் நாங்கள் ஒரு தனிமையான இடத்தை அடைந்தோம். "பிரதாப், இந்த நவீன காலத்திய மிகப் பெரிய யோகியான லாஹிரி மகாசயரின் கிரியா யோகத்தை நான்

உனக்கு உபதேசம் செய்கிறேன். அவருடைய உத்தி உனக்குக் குருவாக இருக்கட்டும்."

உபதேசம் அரைமணியில் முடிந்தது. "கிரியா தான்

உன் சிந்தாமணி,"[3] நான் என் புதிய மாணவனிடம் கூறினேன். "நீ இப்பொழுது அறிந்த இந்த எளிய உத்தி மனிதனின் ஆன்மீக முன்னேற்றத்தை விரைவுபடுத்தும் கலையை உள்ளடக்கியது. மாயையிலிருந்து விடுபட, அகங்காரம் உருவெடுத்த பிறவிக்கு பத்து இலட்சம் ஆண்டுகளாகும் என்று இந்துசமய நூல்கள் போதிக்கின்றன. இந்த இயற்கையான காலம் கிரியா யோகத்தினால் வெகுவாகக் குறைக்கப்படுகிறது. தாவரங்களின் வளர்ச்சியை அதன் சாதாரண வேகத்தைவிட அதிகமாக விரைவுபடுத்த முடியும் என்று ஜகதீஸ் சந்திரபோஸ் காண்பித்திருப்பது போல் மனிதனின் மன வளர்ச்சியையும் விஞ்ஞான ரீதியில் விரைவுபடுத்த முடியும். உன் பயிற்சியில் விசுவாசமாய் இரு. குருவிற்கெல்லாம் குருவானவரை நீ அடைவாய்."

"வெகு காலமாகத் தேடிக் கொண்டிருந்த இந்த யோகத் திறவுகோல் எனக்குக் கிடைத்தது குறித்து பெருங்களிப் படைகிறேன்." பிரதாப் ஆழ்ந்த சிந்தனையுடன் பேசினான். "எனது இந்திரியத் தளைகளை அறுக்கும் அதன் பலனே என்னை உயர்ந்த நிலைகளுக்குச் செல்ல விடுதலை அளிக்கும். இன்று கிடைத்த பகவான் கிருஷ்ணனின் தரிசனம் எனக்கு உயர்ந்த நன்மையையே பயக்கும் என்பதில் ஐயமில்லை."

நாங்கள் சற்று நேரம் ஒருவரையொருவர் புரிந்துக் கொண்டு மௌனமாக அமர்ந்திருந்தோம். பின்னர் ரயில் நிலையத்திற்கு மெதுவாக நடந்தோம். நான் ரயிலில்

ஏறிய பொழுது என்னுள் மகிழ்ச்சி நிரம்பி இருந்தது. ஆனால் இன்று ஜிதேந்திராவிற்கு கண்ணீர்விடும் நாளாகத்தான் இருந்தது. நான் பிரதாப்பிடம் அன்புடன் விடைபெறும் பொழுது என் இரு தோழர்களும் விம்மலை அடக்கிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பயணத்தில் மறுபடியும் ஜிதேந்திரா மிகுந்த துக்கத்துடன் தென்பட்டான். இந்தத் தடவை அவனுக்காக இல்லாமல் அவனுக்கு எதிராகவே அவனுக்கு வருத்தம் உண்டாயிற்று.

"என் நம்பிக்கை எவ்வளவு ஆழமற்றது. என் இதயம் கல்லாயிருந்திருக்கிறது! இறைவன் காப்பாற்றுவான் என்பதில் இனி என்றுமே எனக்குச் சந்தேகம் இருக்காது."

நடுநிசி நெருங்கிக் கொண்டிருந்தது. கையில் ஒரு காசு கூட இல்லாமல் அனுப்பப்பட்ட இரண்டு சிண்டரெல்லாக்களும், அனந்தாவின் படுக்கை அறையை அடைந்தனர். அவன் வெகு சாதாரணமாக ஏற்கனவே கூறி இருந்தபடி அவன் முகம் ஆச்சரியத்தை வெளிப்படுத்தியது. நான் மௌனமாக ரூபாய் நோட்டுக்களை ஒரு மேஜைமேல் கொட்டினேன்.

"ஜிதேந்திரா, நிஜத்தைச் சொல்! அனந்தாவின் குரலில் நகைச்சுவை இருந்தது. இந்தப் பையன் கொள்ளை ஏதும் அடிக்கவில்லையே?"

ஆனால் நடந்ததைக் கூறக்கூற என் அண்ணன் அமைதி அடைந்து பிறகு மிக ஆழ்ந்த சிந்தனைக்கு உள்ளானான்.

"தேவையும் பூர்த்தியும் என்ற விதி நான்

நினைத்ததை விட இன்னும் நுட்பமான இடங்களுக்குள்ளும் செல்கிறது." அனந்தா இதுவரையில் கண்டறியாத ஓர் ஆன்மீக உற்சாகத்துடன் பேசினான். "நான் முதல் தடவையாக இழிவான உலகப் பொருள்களிலும் சொத்து சேர்ப்பதிலும் உனக்குள்ள அக்கறையின்மையைப் புரிந்துக் கொண்டேன்."

மிக நேரமாகிவிட்டிருந்தாலும் அவனுக்கு கிரியா தீட்சை[4] அளிக்க வேண்டுமென்று என் அண்ணன் வற்புறுத்தினான். குரு முகுந்தன் ஒரே இரவில் தன்னால் தேடப்படாத இரு சீடர்களின் பொறுப்பை ஏற்க வேண்டி வந்தது.

மறுநாள் காலை உணவை முதல் நாளைப் போல் அல்லாமல் மிக இணக்கமான நிலையில் உண்டோம்.

நான் ஜிதேந்திராவைப் பார்த்து புன்னகை செய்தேன். நீ ஏமாற்றம் அடையாமல், தாஜ்மஹாலைக் கட்டாயம் காண்பாய். செராம்பூருக்குக் கிளம்புவதற்கு முன்னால் அதைச் சென்று பார்த்து விடுவோம்.

அனந்தாவிடம் விடைப்பெற்றுக் கொண்டு எனது நண்பனும் நானும் ஆக்ராவின் பெருமையான தாஜ்மஹாலின் முன் இருந்தோம். வெண் சலவைக்கல் சூரிய ஒளியில் பளிச்சிட அது முழுதும் ஒத்தத் தன்மையின் புனிதமான உருவமாக நின்றது. கருத்த சைப்ரஸ் மரங்களின் செப்பமான வரிசை, பளபளக்கும் புல்தரை, அமைதியான நீர்நிலைகள்! உட்பக்கம் பலவிதக் கற்கள் பதிக்கப்பெற்ற சித்திர வேலைப்பாடுகள், ஜரிகைகள் போல் மிக அற்புதமாயிருந்தன. மிக

நுட்பமான தோரணங்களும் கடிதச் சுருள்களும் சிக்கலாக வேலை செய்யப்பட்ட சலவை கற்களில் பழுப்பு மற்றும் ஊதா நிறங்களில் வெளிப்பட்டன. மேலேயுள்ள குவிந்த கூரையிலிருந்து வெளிச்சம் சக்கரவர்த்தி ஷாஜஹானின் சமாதியிலும் அவர் ராஜ்யத்திற்கும் இதயத்திற்கும் அரசியான மும்தாஜ் மஹாலின் சமாதியின் மேலும் விழுந்தது.

சுற்றிப் பார்த்தது போதும்! நான் என் குருவிற்காக ஏங்கிக் கொண்டிருந்தேன். சீக்கிரத்தில் ஜிதேந்திராவும் நானும் தெற்காக வங்காளத்தை நோக்கிச் சென்ற ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்தோம்.

"முகுந்தா, நான் என் மனத்தை மாற்றிக் கொண்டு விட்டேன். நான் என் குடும்பத்தினரை மாதக் கணக்காகப் பார்க்கவில்லை. ஆகவே செராம்பூரிலுள்ள உன் குருவைப் பிறகு எப்போதாவது வந்து பார்க்கிறேன்."

என் நண்பன், மென்மையாகச் சொல்லப் போனால், கொஞ்சம் சபல சுபாவமுடையவன் எனலாம். அவன் கல்கத்தாவில் என்னை விட்டகன்றான். உள்ளூர் ரயில் மூலம் பன்னிரண்டு மைல் வடக்கிலுள்ள செராம்பூரை சீக்கிரமே அடைந்தேன்.

நான் காசியில் என் குருவை விட்டுவந்து சரியாக இருபத்தெட்டு நாட்கள் ஆகிவிட்டன என்று தெரிந்ததும் என்னுள் வியப்பின் துடிப்பு பரவியது. நீ இன்னும் நான்கு வாரங்களில் என்னிடம் வருவாய்! நான் அமைதியான ராய்காட் சந்திலுள்ள அவருடைய ஆசிரம முற்றத்தினுள் இதயம் படபடக்க நின்று கொண்டிருந்தேன். இந்தியாவின்

ஞானாவதாரமாகிய குருதேவருடன், என் வாழ்வின் அடுத்த பத்து ஆண்டுகளின் முக்கியமான காலத்தைக் கழிக்க போகும் ஆசிரமத்திற்குள் முதல் தடவையாக நுழைந்தேன்.



ஜிதேந்திர மஜும்தார், பிருந்தாவனில் "காசில்லாத சோதனையில்" யோகானந்தரின் தோழன் (அத்தியாயம் 11).

1 25 ஆம் அத்தியாயத்தைப் பார்க்கவும்.

2 ஹரி: ஸ்ரீ கிருஷ்ணனை அவனுடைய பக்தர்கள் அன்புடன் அழைக்கும் பெயர்.

3 விரும்பிய பொருட்களை உடனே அளிக்கவல்லதாகப் புராணங்களில் கூறப்பட்டுள்ள ஒரு விலையுயர்ந்த இரத்தினம்; மற்றும் கடவுளின் ஒரு பெயரும் கூட.

4 ஆன்மீக வழியில் உபதேசம்; சமஸ்கிருத மூல வினைச் சொல்; திக்ஷ்தன்னை அர்ப்பணித்துக் கொள்.

அத்தியாயம் 12

# என் குருவின் ஆசிரமத்தில் கழித்த வருடங்கள்

"நீ வந்து விட்டாய்," ஒரு மாடி அறையில் தரையின் மீது புலித்தோல் ஆசனத்தில் வீற்றிருந்த ஸ்ரீ யுக்தேஸ்வர் என்னை வரவேற்றார். அவருடைய குரல் மென்மையற்றும், தோரணை உணர்ச்சியற்றும் இருந்தது.

"ஆம், அன்புள்ள குருவே, நான் உங்களைப் பின்பற்ற வந்துள்ளேன். "நான் மண்டியிட்டு அவர் பாதங்களில் வணங்கி னேன்.

"அது எப்படி முடியும்? நீதான் என் விருப்பங்களைப் புறக்கணிக்கிறாயே."

"இனிமேல் இல்லை, குருஜி! தங்கள் விருப்பமே எனக்கு இடப்படும் ஆணை!"

"அப்படியானால் பரவாயில்லை. இப்பொழுது நான் உன் வாழ்விற்குப் பொறுப்பேற்றுக் கொள்ள முடியும்."

"நான் மகிழ்வுடன் அந்தச் சுமையைத் தருகிறேன் குருதேவா."

"அப்படியெனில், என் முதல் விருப்பம், நீ உன் வீட்டிற்குத் திரும்பிச் சென்று குடும்பத்தாருடன் இரு. நீ கல்கத்தாவிலுள்ள கல்லூரியில் சேர வேண்டுமென நான் விரும்புகிறேன். உன் படிப்புத் தொடர வேண்டும்."

"மிக நல்லது ஐயா." நான் என் திகிலை மறைத்துக் கொண்டேன். தொந்தரவு தரும் புத்தகங்கள்

வருடக்கணக்கில் என்னைத் தொடர வேண்டுமா? முதலில் அப்பா, இப்பொழுது ஸ்ரீ யுக்தேஸ்வர்!

"ஒரு நாள் நீ மேலைநாடு செல்வாய். அப்போது அங்குள்ள மக்களுக்கு வினோதமான இந்து ஆசிரியராகத் தோன்றும் நீ, ஒரு பல்கலைக் கழகப் பட்டதாரியாக இருந்தால், இந்தியாவின் புராதன ஞானத்தை இன்னும் அதிக ஆவலுடன் கேட்பார்கள்."

"குருஜி, உங்களுக்குத் தெரியாதா எது நல்லது என்று?" என் துயரம் விலகியது. மேல்நாட்டைப் பற்றிய குறிப்பு எங்கோ தொலைவில் குழப்பமாகத் தோன்றுவதைக் கண்டேன். ஆனால் குருவின் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து அவரை மகிழ்விப்பது அப்போதைய என் முக்கிய நோக்கமாயிருந்தது.

"நீ கல்கத்தாவில், அருகில்தான் இருப்பாய்; உனக்கு நேரம் கிடைத்த பொழுதெல்லாம் இங்கு வா."

"முடிந்தால் தினமும் வருகிறேன், குருதேவா! என் வாழ்வின் ஒவ்வொரு விஷயத்திலும் உங்கள் அதிகாரத்தை நன்றியுடன் நான் ஒப்புக் கொள்கிறேன்ஆனால் ஒரே ஒரு நிபந்தனையின் பேரில்."

"சொல்."

"அதாவது தாங்கள் எனக்குக் கடவுளைக் காட்டுவதாக வாக்குறுதி அளிக்க வேண்டும்!"

ஒரு மணி நேரம் வாதப் பிரதிவாதம் நடந்தது. ஒரு குருவின் வாக்குறுதி பொய்யாக முடியாது. அது எளிதாகக் கொடுக்க முடியாத ஒன்று. விரிந்த ஆன்மீகப் பரப்பைத் திறக்கும் சக்தி அவ்வாக்குறுதியில் அடங்கி

உள்ளது. ஒரு குரு படைப்பவனுடன் அந்தரங்கமான உறவை உண்மையில் வைத்திருந்தால்தான் அவனைக் காட்சி அளிக்கும்படி வேண்டுவதற்கு இயலும். நான் ஸ்ரீ யுக்தேஸ்வர் இறைவனுடன் ஒன்றியுள்ளதை உணர்ந்தேன். அவருடைய சீடன் என்ற முறையில் எனக்கு உள்ள வாய்ப்பை நான் பயன்படுத்துவதில் உறுதியாக இருந்தேன்.

"நீ விடாப்பிடியான மன இயல்பை உடையவன்!" பிறகு சம்மதம் கருணையான முடிவுடன் வெளிப்பட்டது.

"உன் விருப்பம் என் விருப்பமாகட்டும்."

என் வாழ்நாள் முழுதும் என்னைச் சூழ்ந்திருந்த இருள் என் இதயத்திலிருந்து விலகியது. இங்குமங்குமாக ஒரு தெளிவற்ற தேடும் படலம் முடிந்தது. ஓர் உண்மையான குருவிடம் எனக்கு நிரந்தரமான அடைக்கலம் கிடைத்து விட்டது.

"வா, நான் உனக்கு ஆசிரமத்தைச் சுற்றிக் காண்பிக்கிறேன். "குருதேவர் அவருடைய புலித்தோல் ஆசனத்திலிருந்து எழுந்தார். இங்குமங்குமாகப் பார்த்துக் கொண்டு வந்த பொழுது ஒரு சுவரில் மல்லிகை மலர் மாலையால் அலங்கரிக்கப்பட்டிருந்த ஒரு படத்தைக் கண்டேன்.

"லாஹிரி மகாசயர்!" நான் வியப்புடன் கூறினேன்.

"ஆம், என் தெய்வீகக் குரு." ஸ்ரீ யுக்தேஸ்வரின் குரல் பயபக்தியுடன் ஒலித்தது. "நான் ஆராய்ந்த வரையில், எல்லா ஆசிரியர்களையும் விட, மனிதனாகவும் யோகியாகவும் அவர் மிக உயர்ந்தவர்."

எனக்கு நன்கு பழக்கமான அந்தப் படத்தின் முன்னால் நான் மௌனமாக வணங்கினேன். என் குழந்தைப் பருவத்திலேயே எனக்கு ஆசி அளித்து, இந்த நிமிடம் வரை எனக்கு வழிகாட்டி வந்த ஒப்புயர்வற்ற அந்த குருவின் முன் என் ஆத்மா விரைந்து வணங்கியது.

குரு முன்னின்று அழைத்துச் செல்ல, நான் வீட்டினுள்ளும் அதைச் சார்ந்துள்ள இடங்களிலும் நடந்து சென்றேன். பெரியதாகவும், பழமையானதாகவும் பெரிய தூண்களுடன் நன்றாகக் கட்டப்பட்டதுமான அந்த ஆசிரமம் ஒரு நடு முற்றத்தைச் சுற்றி விரிந்திருந்தது. வெளிச் சுவர்களில் பாசி படர்ந்திருந்தது. புறாக்கள் ஆசிரமத்தின் இடங்களை சடங்குகள் ஏதுமின்றி பகிர்ந்துக் கொண்டு சாம்பல் நிறமுள்ள தட்டையான கூரையின் மேல் சிறகடித்துப் பறந்து கொண்டிருந்தன. பின்னாலிருந்த தோட்டம் மா, பலா, வாழை மரங்களுடன் அழகாகக் காட்சியளித்தது. அந்த இரண்டு மாடிக் கட்டிடத்தில் மாடியிலிருந்த அறைகள் கைப்பிடிச் சுவர்களுடன் கூடிய பால்கனிகளுடன் மூன்று பக்கங்களில் நடு முற்றத்தை நோக்கியவாறு இருந்தன. கீழ்த்தளத்திலிருந்த விசாலமான கூடம் கூரையைத் தாங்கும் உயரமான தூண்களுடன் அமைந்திருந்தது. அது முக்கியமாக ஆண்டுதோறும் நடக்கும் துர்கா பூஜை உற்சவ காலங்களில் உபயோகப்படுத்தப்படும் என்று குருதேவர் கூறினார். ஒரு குறுகிய மாடிப்படி, ஸ்ரீ யுக்தேஸ்வர் அமரும் அறையை நோக்கிச் சென்றது.

அதன் சிறிய பால்கனி தெருவை நோக்கியவாறு இருந்தது. அந்த ஆசிரமம் சாதாரணமான சாமான்களைக் கொண்டிருந்தது. ஒவ்வொரு பொருளும் எளிமையாகவும் தூய்மையாகவும் உபயோகத்திற்குத் தேவையானதாகவும் இருந்தது. மேல்நாட்டுப் பாணியில் பல நாற்காலிகள், உட்காருவதற்கான நீண்ட பெஞ்சுகள், மேஜைகள் ஆகியவை தென்பட்டன.

குருதேவர் என்னை இரவு அங்கேயே தங்கும்படி அழைப்பு விடுத்தார். காய்கறிகளுடனான இரவு சாப்பாடு ஆசிரமத்தில் ஆசிரமப் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த இரு சீடர்களால் பரிமாறப் பட்டது.

"குருதேவரே, தயவு செய்து தங்கள் வாழ்க்கையைப் பற்றிக் கொஞ்சம் கூறுங்களேன்," அவருடைய புலித்தோலுக்கு அருகில் இருந்த ஒரு கோரைப் பாயில் அமர்ந்து இருந்தேன். தோழமையான விண்மீன்கள் பால்கனியைத் தாண்டி மிகவும் அருகில் உள்ளனவாகத் தென்பட்டன.

"என் குடும்பப் பெயர் ப்ரியநாத் கரார். நான் இங்கே செராம்பூரில் பிறந்தேன்.[1] என் தந்தை இங்கே ஒரு பணக்காரத் தொழிலதிபராக இருந்தார். இப்போது என் ஆசிரமமாக இருக்கும் இந்தப் பூர்வீகமான மாளிகையை அவர் எனக்கு விட்டுச் சென்றார். என் முறையான பள்ளிக்கூட படிப்பு மிகக் குறைவு. அது மெதுவானதாகவும் சாரமற்றதாகவும் இருப்பதைக் கண்டேன். இளைஞனாக இருந்தபோது நான் ஓர் இல்லறத்தானாகப் பொறுப்பேற்றுக் கொண்டேன். எனக்கு

ஒரு மகள் இருக்கிறாள்; இப்பொழுது மணமானவள். என் நடுத்தர வயது, லாஹிரி மகாசயரின் வழிகாட்டுதலினால் புனித மடைந்தது. என் மனைவி இறந்ததும், நான் சன்னியாசம் ஏற்று ஸ்ரீ யுக்தேஸ்வர் கிரி[2] என்ற புதிய பெயரைப் பெற்றேன். இவ்வளவுதான் என் எளிய வரலாறு."

என் ஆர்வமுள்ள முகத்தைக் கண்டு குருதேவர் புன்னகைத்தார். அவருடைய சொற்கள் எல்லா வாழ்க்கைச் சரித நூல்களைப் போல உள் மனிதனை வெளிப்படுத்தாமல் வெளி உண்மைகளை மட்டுமே குறிப்பிட்டன.

"குருஜி, உங்கள் குழந்தைப் பருவத்தைப் பற்றிய சில கதைகளைக் கேட்க விரும்புகிறேன்."

"நான் உனக்குச் சிலவற்றைக் கூறுகிறேன். ஒவ்வொன்றும் ஒரு படிப்பினையுடன்!" ஸ்ரீ யுக்தேஸ்வரின் கண்கள் எச்சரிக்கையுடன் மின்னின. என் அன்னை ஒரு தடவை இருட்டறையில் இருப்பதாக ஒரு பிசாசின் பயங்கரமான கதையைக் கூறி என்னைப் பயமுறுத்த முயன்றார். நான் உடனேயே அங்கு சென்று அந்தப் பிசாசை காணாததால் என் ஏமாற்றத்தை வெளியிட்டேன். பிறகு எனக்கு பயங்கரக் கதை கூறுவதையே என் அன்னை விட்டு விட்டார். படிப்பினை: பயத்தை நேருக்கு நேர் எதிர்கொள், அது உன்னைத் தொந்தரவு செய்வதை நிறுத்திவிடும்.

"இன்னொரு சிறு வயது நினைவு: பக்கத்து வீட்டுக் காரருக்குச் சொந்தமான ஓர் அழகில்லாத நாயிடம்

எனக்கு விருப்பம் ஏற்பட்டது. அந்த நாயைப் பெற நான் பல வாரங்கள் என் வீட்டையே கலக்கிக் கொண்டிருந்தேன். இன்னும் நன்றாயிருக்கும் நாய்க் குட்டிகளைக் கொடுப்பதாகச் சொல்லிய போது கூட நான் அவ்வேண்டுகோள்களுக்கு செவி சாய்க்கவே இல்லை. படிப்பினை: ஒன்றின் மேல் வைக்கும் பற்று குருடானது; அது தனக்குப் பிடித்தமான அப்பொருளில் இல்லாத ஒரு கவர்ச்சியைத் தோற்றுவிக்கிறது.

"மூன்றாவது கதை, இளமனத்தின், எளிதில் வளையும் தன்மையைப் பற்றியது. ஒருவரிடம் வேலைக்கு அமர்பவன் அடிமைதான் என்று என் தாயார் எப்போதாவது குறிப்பிடுவதைக் கேட்டிருக்கிறேன். அது என் மனத்தில் அழிக்க முடியாமல் மிக ஆழமாகப் பதிந்து விடவே திருமணமான பிறகு கூட நான் எந்த வேலையையும் ஏற்க மறுத்துவிட்டேன். நான் என் செலவிற்கு வேண்டியதை என் குடும்பச் சொத்தை நிலத்தில் முதலீடு செய்து பெற்று வந்தேன். படிப்பினை: நல்லவையும் ஆக்கபூர்வமானதுமான அறிவுரைகள் தாம் சிறுவர்களின் உணர்ச்சிமிக்க செவிகளில் விழ வேண்டும். சிறு வயதில் உண்டாகும் கருத்துக்கள் பசுமரத்தாணிபோல பதிந்துவிடும்."

குருதேவர் அமைதியான மௌனத்தில் மூழ்கினார். கிட்டத்தட்ட நடுநிசியான பொழுது அவர் என்னை ஒரு குறுகிய கட்டிலுக்கு இட்டுச் சென்றார். என் குருவின் கூரையின் கீழ், முதல் இரவில், தூக்கம் ஆழ்ந்து இனிமையாக இருந்தது.

ஸ்ரீ யுக்தேஸ்வர், எனக்கு கிரியா யோக உபதேசம் செய்வதற்கு மறுநாளைத் தேர்ந்தெடுத்திருந்தார். அந்த உத்தியை நான் ஏற்கனவே லாஹிரி மகாசயரின் இரண்டு சீடர்களான என் தந்தை மற்றும் என் ஆசிரியர் ஸ்வாமி கேவலானந்தர் ஆகியோரிடமிருந்து பெற்றிருந்தேன். ஆனால் குருதேவர் என்னை மாற்றத்துக்குள்ளாக்கி விடும் சக்தியைப் பெற்றிருந்தார். என் உடலை அவர் தொட்டதும் ஒரு பேரொளி கிளர்ந்தெழுந்தது. எண்ணற்ற சூரியர்கள் ஒன்று கூடி பிரகாசிக்கும் மகிமையைப் போல் தோன்றியது. விவரிக்க இயலாத ஒரு பேரானந்த வெள்ளம் என் இதயத்தின் ஆழம் வரை ஆட்கொண்டது.

நான் ஆசிரமத்தை விட்டு கிளம்புவதற்கு மறுநாள் மதியத்திற்கு மேலாகிவிட்டது.

"நீ இன்னும் முப்பது நாட்களில் திரும்புவாய்," என்ற குருதேவரின் முன்னறிவிப்பு பலித்ததை நினைத்துக் கொண்டே நான் கல்கத்தாவிலுள்ள என் வீட்டை அடைந்தேன். என் உறவினர் கள் எவருமே நான் பயந்தபடி உயரப் பறக்கும் பறவை திரும்பி வருவதைப் பற்றிய குத்தலானச் சொற்கள் எதையும் கூறவில்லை.

நான் என் சிறிய பூஜை அறைக்குள் சென்று, ஒருவர் அங்கு இருப்பது போன்று அன்பான பார்வையை அதனிடம் செலுத்தி னேன். "நீ என் தியானங்களுக்கும். கண்ணீருக்கும் என் சாதனைப் புயல்களுக்கும் சாட்சியாக நின்றாய்! இப்பொழுது நான் என் தெய்வீகக் குருவின் பாதுகாப்பிற்குள் வந்து விட்டேன்."

ஒரு நாள் அமைதியான மாலையில் நானும் என் தந்தையும் ஒன்றாக அமர்ந்திருந்தோம். "மகனே, நம் இருவரைப் பற்றியுமே எனக்கு மகிழ்ச்சிதான். நான் என் குருவை எப்படி ஓர் அற்புத முறையில் சந்தித்தேனோ அப்படியேதான் நீயும் உன் குருவை அடைந்திருக்கிறாய். நம் வாழ்க்கையை லாஹிரி மகாசயரின் தெய்வீகக் கரம் காத்து வருகிறது. உன் குரு, எங்கோ சென்றடைய முடியாத இமயத்தில் இல்லை; அருகிலேயே இருக்கிறார் என்பதை நிரூபித்துள்ளார். என் பிரார்த்தனைகளுக்குப் பதில் கிடைத்து விட்டது: நீ கடவுளைத் தேடுவதற்காக, நிரந்தரமாக என் கண் பார்வையில் இருந்து நீக்கப்படவில்லை."

எனது கல்வி மறுபடியும் முறை சார்ந்து தொடரப் போவது பற்றி தந்தைக்கும் மிக்க மகிழ்ச்சி; அவர் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். நான் மறுநாளே கல்கத்தாவில் அருகாமையில் இருந்த ஸ்காட்டிஷ் சர்ச் கல்லூரியில் சேர்க்கப் பட்டேன்.

மகிழ்ச்சிகரமான மாதங்கள் உருண்டோடின. நான் கல்லூரி வகுப்பறைகளில் அதிகமாக இருந்திருக்க மாட்டேன் என்பதை இதைப் படிக்கும் என் வாசகர்கள் கூர்ந்து ஊகித்திருப்பார்கள். செராம்பூர் ஆசிரமம் தடுக்க முடியாத கவர்ச்சியைக் கொண்டு இருந்தது. எனது குருதேவர் நான் எப்பொழுதும் அங்கேயே இருப்பதைப் பற்றி எதுவும் சொல்லாமல் ஒத்துக் கொண்டார். அவர் என் கல்லூரியைப் பற்றி எதுவும் கூறாமலிருந்தது எனக்கு நிம்மதியாயிருந்தது. நான் படிப்பில் மேதாவி

ஆகப் போவது இல்லை என்பது எல்லோருக்கும் நன்கு தெரிந்திருந்த போதிலும் அவ்வப் பொழுது தேறுவதற்கு வேண்டிய குறைந்த அளவு மதிப்பெண்களை எப்படியோ எடுத்துக் கொண்டிருந்தேன்.

ஆசிரமத்து தினசரி வாழ்க்கை மாறுதல் எதுவுமின்றி சுமுகமாக நடந்து வந்தது. என் குருதேவர் விடிவதற்கு முன்பே எழுந்து விடுவார். படுக்கையில் அமர்ந்தபடியே அவர் ஒரு சமாதி[3] நிலையை அடைவார். அவர் எப்போது எழுந்திருந்தார் என்பதைக் கண்டு பிடிப்பது மிக எளிதானது, மிகப் பெரிய குறட்டைகள்[4] திடீரென்று நின்று விடும். ஓரிரண்டு பெரு மூச்சுகள், சில சமயம் ஓர் உடலசைவு; பிறகு சத்தமில்லாத மூச்சற்ற நிலை. அவர் ஆழ்ந்த யோகானந்தத்தில் இருப்பார்.

உடனே காலை உணவு என்பதில்லை. முதலில், கங்கைக் கரையோரமாக வெகுதூரம் நடந்து போதல், காலை வேளையில் குருதேவருடன் சென்ற நடைப்பயிற்சிகள், எவ்வளவு உண்மையாகவும் தெளிவாகவும் இன்னும் தோன்றுகின்றன! கொஞ்சம் நினைத்துப் பார்த்தாலே போதும், நான் அடிக்கடி அவர் பக்கத்தில் நடந்து போய்க் கொண்டிருப்பது போலத் தோன்றும், காலைக் கதிரவன் நதியை சூடு பெறச் செய்து கொண்டிருப்பான்: அவரது குரல் சத்திய ஞானத்தில் ஒலித்து எழும்பும்.

குளியல்; பிறகு மதிய உணவு. குருதேவரின் அன்றாட உத்திரவுப்படி ஆசிரமத்து இளஞ்சீடர்களால் கவனமாகத் தயாரிக்கப்படும். என் குரு, சைவ உணவு

உட்கொள்ளுபவர். ஆனால் சன்னியாசி ஆவதற்கு முன்னர் அவர் மீன், முட்டை இரண்டையும் சாப்பிட்டு வந்தார். எந்த எளிமையான உணவையும், தன் உடல் தன்மைக்கு ஏற்ப உண்ணலாம் என்று தனது மாணவர்களுக்கு அறிவுறுத்தியிருந்தார்.

குருதேவர் மிகக் குறைந்த அளவில்தான் உண்பார். பெரும்பாலும், மஞ்சள் அல்லது பீட்ரூட் சாறு அல்லது கீரையுடன் கலந்த சோறுடன் சிறிதளவு எருமை நெய் அல்லது உருக்கிய வெண்ணெய்யை சேர்த்துக் கொள்வார். மற்றொரு நாள் பருப்புதால் (உடைத்த பட்டாணி அல்லது மற்ற பருப்பு வகைகளால் செய்யப்படும் கெட்டியான குழம்பு) அல்லது காய்கறிகளுடன் கூடிய சன்னாகறி (புதிய பாலைத் திரித்து உண்டாக்கப்பட்டது, பெரும்பாலும் கட்டிகளாக்கப்பட்டு உருளைக்கிழங்கு கறியுடன் சேர்ந்தது.) சாப்பிடுவார். மாம்பழம் அல்லது ஆரஞ்சுப் பழத்தை அரிசிப் பாயசத் தோடோ அல்லது பலாப்பழச் சாற்றோடோ கடைசியாக உண்பார்.

காணவருபவர்கள் பிற்பகலில் வருவார்கள். இந்த அமைதியான ஆசிரமத்திற்கு உலகத்திலிருந்து பலர் தொடர்ந்து வந்தவண்ணம் இருப்பர். என் குரு, வருபவர்கள் எல்லோரையும் மரியாதையுடனும் அன்புடனும் நடத்துவார். ஒரு குரு, தனது உடலையோ அல்லது நான் என்ற முனைப்பையோ அல்லாமல், தன்னையே எங்கும் நிறைந்த ஆத்மாவாக உணர்ந்து கொண்டவர், எல்லா மனிதரிடத்திலும் தெளிவான

சமத்தன்மையையே காண்கிறார்.

யோகிகளின் பாரபட்சமற்ற தன்மை ஞானத்தில் வேரூன்றி இருக்கிறது. அவர்கள் மாயையின் மாறுபடும் தன்மையினால் பாதிக்கப்படுவதுமில்லை. அஞ்ஞானிகளின் கருத்துக்களைக் குழப்பும் விருப்பு, வெறுப்பிற்கு என்றும் ஆட்படுவதுமில்லை. ஸ்ரீ யுக்தேஸ்வர், அதிகாரத்தில் உள்ளவர்களுக்கோ, பணக்காரர்களுக்கோ அல்லது விசேஷத்தன்மை உடையவர்களுக்கோ எந்த ஒரு தனிப்பட்ட சலுகையும் காண்பித்ததில்லை. அது போலவே, ஏழைகளையோ அல்லது படிப்பில்லாதவர்களையோ அலட்சியப் படுத்தியதுமில்லை. அவர் ஒரு குழந்தையிடமிருந்து கூட மிக மரியாதையுடன் அது கூறும் உண்மை வார்த்தைகளைக் கேட்பார். சில சமயங்களில் கர்வம் நிறைந்த பண்டிதர்களை கவனிக்காமல் இருந்ததும் உண்டு.

எட்டு மணி இரவுச் சாப்பாட்டு நேரம். சில சமயங்களில் அந்நேரம் வரை வந்தவர்களில் சிலர் தாமதிப்பதுண்டு. என் குரு என்றும் தான் மட்டும் தனியே உண்ண விரும்ப மாட்டார். யாருமே அவருடைய ஆசிரமத்திலிருந்து பசியுடனோ அல்லது அதிருப்தியுடனோ சென்றதில்லை. ஸ்ரீ யுக்தேஸ்வர் எதிர்பாராத விருந்தினர்களைக் கண்டு என்ன செய்வது என்று புரியாமலோ அல்லது குழம்பி நின்றதோ இல்லை. அவருடைய சாமர்த்தியமான மேற்பார்வையில், குறைவான உணவு கூட சீடர்களால் ஒரு விருந்தாகவே

உருவெடுக்கும். இருந்தாலும் அவர் மிகுந்த சிக்கனம் உடையவர். அவருடைய சாதாரண பண வசதியை வைத்துக் கொண்டு நன்றாகவே சமாளிப்பார். உன் நிதி நிலைமைக்குத் தகுந்தபடி வசதியாக இரு, என்று அவர் அடிக்கடி கூறுவார். ஆசிரமத்தின் விருந்தோம்பும் பணிகளிலும் சரி, கட்டிட நிர்மாணம் அல்லது பழுது பார்க்கும் வேலையிலும் சரி அல்லது வேறு எந்த நடைமுறைக் காரியமாக இருந்தாலும் சரி, அவருடைய சுயமான படைப்புத்திறன் வெளிப்படவே செய்யும்.

அமைதியான மாலை நேரங்களில் பெரும்பாலும் குருதேவர் சொற்பொழிவு செய்வார். காலத்தால் அழியாத செல்வங்கள் அவை! அவரது ஒவ்வொரு சொல்லும் ஞானத்தால் செதுக்கப்பட்டது. ஓர் உன்னதமான தன்னம்பிக்கை அவரது பேச்சில் மிளிரும்: அது ஒப்பற்றது. என் அனுபவத்தில், அவர் பேசியது போல் யாருமே எப்பொழுதுமே பேசியதில்லை. அவரது எண்ணங்கள், பகுத்தறிவு என்ற நுட்பமான தராசில் எடை போட்ட பின்னர்தான் பேச்சாக உருவெடுக்கும். உண்மையின் சாரமானது, உடற்கூற்றின் கோணம் உட்பட எல்லாவற்றையும் தன்னுள்ளடக்கியதாய், ஆத்மாவிலிருந்தே கசியும் நறுமணத்தைப் போன்று அவரிடமிருந்து வெளிவரும். உயிருடன் தோற்றமளிக்கும் ஒரு தெய்வத்தின் முன்னிலையில் இருப்பதாகவே நான் எப்பொழுதும் உணர்ந்திருந்தேன். அவருடைய தெய்வீகத்தின் மகிமை, என்னைத் தானாகவே அவர் முன் தலைவணங்க வைத்தது.

விருந்தினர்கள், ஸ்ரீ யுக்தேஸ்வர் இறைவனிடம் லயித்திருப்பதைக் கண்டுபிடித்துவிட்டால், அவர் உடனே, அவர்களை உரையாடலில் ஈடுபடுத்தி விடுவார். அவரால், தான் பெரிய மனிதன் என்பதாகக் காண்பித்துக் கொள்ளவே முடியாது. மேலும் தான் தனக்குள்ளே லயித்து விடுவதையும் பகட்டாகக் காண்பித்துக் கொள்ளமாட்டார். எப்பொழுதுமே இறைவனுடன் ஒன்றியிருப்பதால் இறைவனுடன் தொடர்பு கொள்ள அவருக்குத் தனியான நேரமே தேவைப்பட்டதில்லை. தன்னையே அறிந்து கொண்டுவிட்ட குருவானவர், தியானம் என்கிற படிக்கல்லை விட்டுவிடுகிறார். பழம் தோன்றும் பொழுது மலர் தானாக விழுந்து விடுகிறது. ஆனால் மகான்கள் சீடர்களுக்கு முன் மாதிரியாக இருக்க வேண்டி, ஆன்மீக வழிமுறைகளை விடாமல் பின்பற்றி வருகிறார்கள்.

நடுநிசியாகும் பொழுது என் குரு ஒரு குழந்தைக்குரிய இயல்புடன் தூக்கத்தில் ஆழ்ந்து விடுவார். படுக்கையைப் பற்றி எந்த அமளியும் கிடையாது. சில சமயங்களில் ஒரு தலையணை கூட இன்றி, அவருடைய வழக்கமான புலித்தோல் ஆசனத்தின் கீழிருக்கும் ஒரு குறுகிய பலகையில் படுத்து விடுவார்.

இரவு முழுதுமே நடக்கும் தத்துவ விவாதங்களும் அங்கு அபூர்வமானவை அல்ல! எந்தச் சீடன் வேண்டு மானாலும் அவனுடைய தீவிரமான ஆர்வத்தினால் விவாதத்தைத் தொடங்கலாம். அம்மாதிரி சமயங்களில்

எனக்குக் களைப்போ அல்லது தூங்குவதில் ஆர்வமோ இருந்ததில்லை: குருதேவரின் ஜீவன் ததும்பும் சொற்களே போதும். ஓ, பொழுது விடிந்து விட்டதே! கங்கைக்கரைப் பக்கம் நடந்து செல்லலாம். பல சமயங்களில் என் நடுநிசிப் போதனைகள் இவ்வாறு முடிந்ததுண்டு.

ஸ்ரீ யுக்தேஸ்வருடன் நான் இருந்த ஆரம்ப மாதங்கள் ஒரு பயனுள்ள படிப்பினையுடன் முடிந்தன. அது ஒரு கொசுவை எப்படித் தந்திரமாக வெல்வது என்பது. வீட்டில் என் குடும்பத்தினர் இரவில் எப்பொழுதுமே பாதுகாப்பான கொசு வலைகளை உபயோகப்படுத்தினர். செராம்பூர் ஆசிரமத்தில் இந்த முன்னெச் சரிக்கையான வழக்கம் பின்பற்றப் படாததைக் கண்டு நான் திகில் அடைந்தேன். ஆனால் கொசுக்களோ ஆசிரமத்தில் முழுவதுமாகக் குடி கொண்டிருந்தன. என்னை அவைகள் தலையிலிருந்து கால்வரை கடித்தன. குருதேவர் என்னிடம் இரக்கமடைந்தார்.

"நீ ஒரு கொசுவலை வாங்கிக்கொள். அத்துடன் எனக்கும் ஒன்று வாங்கி விடு, அவர் சிரித்தபடி தொடர்ந்தார். நீ உனக்கு மட்டும் ஒன்று வாங்கிக் கொண்டுவிட்டால், எல்லா கொசுக்களும் என் மீதே திரும்பிவிடும்!"

நான் மிக்க நன்றியுடன் அப்படியே செய்தேன். நான் செராம்பூரில் தங்கிய இரவுப் பொழுதெல்லாம் என் குரு என்னைப் படுக்கை நேர கொசுவலைகளைக் கட்டச் சொல்வது வழக்கம்.

ஓர் இரவு கொசுக்களின் ஒரு கும்பலே எங்களைச் சூழ்ந்தது. குருதேவர் வழக்கமான உத்திரவுகளைப் பிறப்பிக்கவில்லை. நான் கலவரத்துடன் கொசுக்களின் எதிர்பார்ப்புடன் கூடிய ரீங்காரத்தை கேட்டேன். படுக்கையில் படுத்து நான் அவைகளைப் பொதுவாக நோக்கி, அமைதியாயிருக்கும்படி பிரார்த்தனை செய்தேன். ஓர் அரை மணி நேரம் கழித்து குருவின் கவனத்தை ஈர்ப்பதற்காக வேண்டி மெதுவாக இருமுவது போல் பாசாங்கு செய்தேன். கொசுக்கள் அவைகளின் இரத்தப் பசிக்கான சடங்கை கொண்டாடிக் கொண்டிருந்த அச்சமயத்தில் அவற்றின் கடியினாலும், முக்கியமாக ரீங்காரத்தி னாலும் நான் பைத்தியம் ஆகிவிடுவேன் என நினைத்தேன்.

குருதேவரிடமிருந்து பதிலுக்கு எந்த அசைவுமில்லை. நான் ஜாக்கிரதையாக அவரருகில் சென்றேன். அவர் மூச்சு விடவில்லை. அவர் யோக நிஷ்டையில் இருக்கும் பொழுது நான் மிக அருகில் சென்று பார்ப்பது இது தான் முதல் தடவை. எனக்கு ஒரே பயமாகிவிட்டது.

"அவர் இதயம் நின்றுவிட்டிருக்க வேண்டும்!" நான் ஒரு கண்ணாடியை அவர் மூக்கினருகில் பிடித்தேன். அதில் மூச்சின் ஆவி படியவில்லை. என்னை இன்னும் நிச்சயப்படுத்திக் கொள்வதற்காக நான் அவர் மூக்கையும் வாயையும் என் விரல்களினால் மூடினேன். அவர் உடல் சில்லிட்டும் அசைவற்றும் இருந்தது. ஒரே குழப்பத்தில் நான் உதவிக்கு யாரையாவது அழைக்கக் கதவின் பக்கம்

திரும்பினேன்.

"அப்படியா! புதிதாக அரும்பும் ஆராய்ச்சியாளரே! பாவம் என் மூக்கு! குருதேவரின் குரல் சிரிப்பினால் குலுங்கிற்று. நீ ஏன் தூங்கச் செல்லக்கூடாது? உனக்காக முழு உலகமே மாறுமோ? உன்னை மாற்றிக் கொள். கொசுக்களின் நினைவை விட்டொழி."

நான் பணிவுடன் என் படுக்கைக்குத் திரும்பினேன். என் அருகில் ஒரு கொசு கூட வரத் துணியவில்லை. முதலில் குருதேவர் கொசுவலைக்கு ஒப்புக் கொண்டது வெறுமனே என்னை மகிழ்விக்கத்தான் என்பதைப் புரிந்து கொண்டேன். அவருக்கு கொசுக் களிடத்தில் எந்த பயமும் இல்லை. யோக சக்தியினால் கொசுக்கள் அவரைக் கடிப்பதை தடுக்க முடிந்தது. அல்லது அவர் நினைத்தால், அவர் இதிலிருந்து தப்பி, தாக்கப்பட முடியாத தன் உள்ளுக்குள் ஒன்றிவிடவும் முடியும்.

"அவர் எனக்காக நிரூபித்துக் காட்டி இருக்கிறார்," நான் நினைத்தேன். "நான் அவ்விதமான யோக நிலையை அடைய முயல வேண்டும்." கவனத்தைத் திசை திருப்பும் கணக்கற்றத் தொல்லைகள் இவ்வுலகில் அவைகளுக்குப் பஞ்சமே இல்லைவண்டுகளின் ரீங்காரத்தைப் போல! சூழும் பகல் வெளிச்சம் போல! எதையுமே கண்டு கொள்ளாமல் ஓர் உண்மையான யோகி உயர் உணர்வு நிலையை அடைந்து அதில் லயித்துவிட முடியும். சமாதியின் முதல் (சவிகல்ப) நிலையில் ஒரு பக்தன் வெளி உலகத்துடன் தொடர்பு கொள்ளும் இந்திரிய உணர்வுகளை அடைத்து

விடுகிறான். பிறகு அவனுக்கு, பண்டைய ஏடன்[5] நகரத்தை விடத் தெளிவான உள்வெளியின் ஒலிகளும் காட்சிகளும் பரிசாகக் கிடைக்கின்றன.

படிப்பினை அளிக்கக்கூடிய இக்கொசுக்கள் ஆசிரமத்தில் சீக்கிரத்திலேயே இன்னொரு பாடத்தையும் கற்பித்தன. அது மாலையின் இதமான அந்தி நேரம். குருதேவர் புராதனமான நூல்களை ஒப்புவமை இல்லாது விளக்கிக் கொண்டிருந்தார். அவரது காலடியில் நான் முழு அமைதியுடன் அமர்ந்திருந்தேன். ஒரு முரட்டுத்தனமான கொசு அந்தச் சொற்பொழிவின் போது என் கவனத்தைச் சிதைக்கப் போட்டியிட்டது. அது என் தொடை மேல் தன் விஷத் தன்மையுள்ள தோலைத் துளைக்கும் ஊசியை செலுத்தவே, என் கை பதிலடி கொடுக்கத் தானாகவே எழும்பியது. கொல்லப் போவதை நிறுத்து! சரியான சமயத்தில் எனக்குப் பதஞ்சலியின் அஹிம்சையைப் பற்றிய சூத்திரம் நினைவிற்கு வந்தது.[6]

"நீ ஏன் அந்த வேலையை முடிக்கவில்லை?"

"குருதேவா, கொல்வதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?"

"இல்லை, ஆனால் உன் மனத்தில் நீ ஏற்கனவே மரண அடியைக் கொடுத்துவிட்டாயே."

"எனக்குப் புரியவில்லை."

"அஹிம்சை என்பதன் மூலம் பதஞ்சலி கூறியிருப்பது கொல்வதற்குள்ள விருப்பத்தை நீக்க வேண்டும் என்பது தான். என் மன ஓட்டத்தை ஸ்ரீ யுக்தேஸ்வர் ஒரு திறந்த புத்தகத்தைப் போலப் படித்தறிந்து விட்டார். இந்த உலகம் அஹிம்சையை

உள்ளபடியே செயல்முறைக்குக் கொண்டு வர முடியாதபடி ஓர் அசௌகரியமான நிலையில் வைக்கப்பட்டிருக்கிறது. மனிதன் தீமை தரக்கூடிய ஜந்துக்களை முழுவதும் அழிக்கக் கட்டாயப் படுத்தப்படலாம். ஆனால் அவனுக்குக் கோபமோ விரோதமோ ஏற்பட வேண்டிய கட்டாயம் ஏதுமில்லை. மாயையின் சூழ்நிலையில் எல்லா ஜீவன்களுக்கும் சமமான அதிகாரம் உண்டு. படைப்பின் ரகசியத்தைக் கண்டறியும் ஞானிக்கு இயற்கையின் எண்ணற்ற குழப்பத்தைத் தரும் படைப்புகளுடன் சுமுகமாக வாழ முடியும். அழிவின் மேலுள்ள விருப்பத்தை வெற்றி கொள்வதனால் எல்லா மனிதர்களும் இந்த உண்மையை அறிய முடியும்."

"குருதேவா, ஒரு கொடிய மிருகத்தைக் கொல்லாமல் மனிதன் தன்னை பலியாகக் கொடுத்துவிடலாமா?"

"கூடாது, மனித உடல் விலைமதிப்பற்றது. அதன் தனித்தன்மை பொருந்திய மூளையினாலும் முதுகுத் தண்டின் மையங்களினாலும் - அது மிக உயர்ந்த பரிணாம வளர்ச்சியைப் பெற்றுள்ளது. இவைகள் மூலமாக ஒரு முன்னேறிய பக்தனால் தெய்வீகத்தின் உன்னதமான தன்மைகளை முழுமையாகப் புரிந்து கொள்ளவும் வெளிப்படுத்தவும் முடிகிறது. கீழ் நிலையிலுள்ள எந்த உயிரினத்திற்கும் அந்த வசதி இல்லை. மனிதன் ஒரு பிராணியையோ அல்லது உயிரையோ அவசியம் கொல்ல நேரும் பொழுது அவனுக்கு ஒரு சிறு பாபக்கடன் ஏற்படவே செய்கிறது

என்பது உண்மை. ஆனால் புனித சாத்திரங்கள் மனித உயிரை அவசியமற்ற முறையில் இழப்பது கர்ம விதியைக் கடுமையாக மீறுவதாகும் என்று போதிக்கின்றன."

நான் நிம்மதியுடன் பெருமூச்செறிந்தேன். ஒருவருடைய இயற்கையான உணர்வுகளுக்கு சமய நூல்களிலிருந்து பரிந்துரை இந்த மாதிரி கிடைப்பது என்பது எப்பொழுதும் ஏற்படுவதில்லை!

குருதேவர் எனக்குத் தெரிந்தவரை, ஒரு புலியின் அருகிலோ சிறுத்தையின் அருகிலோ இருந்ததில்லை. ஆனால் ஒரு தடவை ஒரு பயங்கரமான நல்ல பாம்பை அவர் எதிர் கொண்ட பொழுது அவர் அன்பினால் அதை வென்று விட்டார். இந்தச் சந்திப்பு குருதேவரின் கடற்கரையில் உள்ள பூரி ஆசிரமத்தில் நடந்தது. குருதேவரின் கடைசிக் காலத்தில் இளம் சீடனாயிருந்த பிரஃபுல்லா இந்தச் சமயத்தில் குருதேவருடன் இருந்தான்.

பிரஃபுல்லா என்னிடம் கூறியது: ஆசிரமத்திற்கு அருகில் நாங்கள் வெளியில் அமர்ந்திருந்தோம். நான்கடி நீளமுள்ள ஒரு மிகப் பயங்கரமான நல்ல பாம்பு அருகில் தோன்றிற்று. எங்களை நோக்கிக் கோபத்துடன், விரிந்த படத்துடன் அது வேகமாக ஓடி வந்தது. குருதேவர் ஏதோ ஒரு குழந்தையை வரவேற்பது போல் ஒரு சிறு சிரிப்பு சிரித்தார். ஸ்ரீ யுக்தேஸ்வர் தாளலயத்துடன்[7] கைகளைத் தட்டுவதைக் கண்டதும் நான் மிகத் திகிலடைந்துவிட்டேன். அந்த பயங்கரமான

விருந்தாளிக்கு அவர் விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தார்! நான் அப்படியே அமைதியுடன் அசையாமல் இருந்தேன். உள்ளுக்குள் மிகத் தீவிரமாக பிரார்த்தனைச் செய்து கொண்டிருந்தேன். அந்தப் பாம்பு குருதேவரின் அன்பால் கவரப்பட்டு, அவருக்கு வெகு அருகில் அசைவின்றி இருந்தது. அந்தப் பயங்கரமான படம் படிப்படியாக சுருங்கியது. அந்த நாகம் ஸ்ரீ யுக்தேஸ்வரின் பாதங்களுக்கிடையே நெளிந்து சென்று புதர்களில் மறைந்து போயிற்று.

"ஏன் குருதேவர் கையசைத்துத் தாளமிட வேண்டும்? ஏன் பாம்பு அவரைக் கொத்தவில்லை என்பதெல்லாம் எனக்கு அப்பொழுது புரியவில்லை. நமது தெய்வீக குரு, எந்த உயிரி னத்திடமிருந்தும் தொல்லை ஏற்படக் கூடும் என்கிற பயப்படும் நிலையைத் தாண்டிவிட்டார் என்று இப்பொழுது அறிகிறேன்," என்று பிர ஃபுல்லா முடித்தான்.

என் ஆசிரம வாழ்க்கையின் ஆரம்ப மாதங்களில், ஒரு நாள் பிற்பகலில், குருதேவரின் கண்கள் என்னை உற்றுப் பார்ப்பதை உணர்ந்தேன்.

"முகுந்தா, நீ மிக மெலிந்திருக்கிறாய்."

அவரது சொற்கள் என் உணர்வைத் தொட்டன. எனது குழிந்திருந்த கண்களும் மிக மெலிந்த தோற்றமும் எனக்கே பிடித்தமானவை அல்ல. என் சிறிய வயதிலிருந்தே இடைவிடாத அஜீரணப் பிரச்சனைகள் என்னைப் பீடித்து வந்தன. வீட்டில் என் அறையின் ஓர் அலமாரியில் பல டானிக்குகள் நிறைந்த புட்டிகள் இருந்தன. எதுவுமே எனக்கு உதவியதில்லை. சில

சமயங்களில் இம்மாதிரியான பலவீனமான உடலை வைத்துக் கொண்டு வாழும் வாழ்க்கையில் அர்த்தமிருக்கிறதா என்ற வருத்தத்துடன் என்னை நானே கேட்டுக் கொள்வேன்.

"மருந்துகளுக்கு எல்லை உண்டு. தெய்வீகப் படைப்பாற்றல் பெற்ற உயிர்ச் சக்திக்கு எல்லையே இல்லை. அதை நம்பு; நீ நன்றா கவும் திடமாகவும் ஆவாய்."

குருதேவரின் சொற்கள் என்னை உடனே அந்த உண்மையை வெற்றிகரமாக என் வாழ்வில் நடத்திப் பார்க்கலாம் என்று நம்ப வைத்தன. வேறு எந்த வைத்தியரும் (நான் பலரை முயற்சித்திருக்கிறேன்) என்னிடம் அந்த மாதிரியான ஆழ்ந்த நம்பிக்கையை தோற்றுவித்ததில்லை.

நாளுக்கு நாள் நான் ஆரோக்கியமாகவும் திடமாகவும் மாறினேன். ஸ்ரீ யுக்தேஸ்வரின் மறைமுகமான ஆசியினால், இரண்டே வாரங்களில் இதுவரை நான் முயற்சி செய்தும் கிடைக்காத எடையை அடைந்தேன். என் வயிற்றுக் கோளாறுகள் நிரந்தரமாகவே மறைந்து விட்டன.

பின்னால், பல சமயங்களில் நீரிழிவு நோய், வலிப்பு, காச நோய் அல்லது பாரிசவாயு போன்ற நோய்களை தெய்வீக சக்தியினால், என் குரு குணப்படுத்துவதைக் காணும் பேறு எனக்குக் கிட்டி இருக்கிறது.

"பல ஆண்டுகளுக்கு முன்னால் என் உடலிலும் கொஞ்சம் எடை கூடினால் நன்றாயிருக்கும் என்று

நானும் கூட கவலைப்பட்டதுண்டு, "என்னைக் குணப்படுத்திய சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் குருதேவர் என்னிடம் கூறினார். ஒரு தீவிர நோய்க்குப் பிறகு குணமடைந்து கொண்டு இருக்கையில், நான் காசிக்குச் சென்று லாஹிரி மகாசயரைப் பார்த்தேன்.

"'ஐயா, நான் மிகவும் தீவிரமாக நோய்வாய்ப் பட்டிருந்தேன். நிறைய எடை குறைந்து விட்டிருக்கிறது என்றேன்.

"'அப்படியா, யுக்தேஸ்வர்,[8] நீயே உன்னை நலம் இல்லாமல் ஆக்கிக் கொண்டாய். இப்பொழுது நீ மெலிந்திருப்பதாக நினைக்கிறாய்.'

இந்தப் பதில், நான் எதிர்பார்த்ததிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாக இருந்தது. இருந்தாலும் என் குருதேவர் கொஞ்சம் தைரியப்படுத்தும் வகையில் மேலும் கூறினார்.

"'பார்க்கலாம். நாளைக்கு நீ குணமடைந்து விட்டதாக உணர்வாய் என்பது நிச்சயம்.'

"ஏற்கும் திறமுடைய எனது மனம், அவர் சொற்களை, அவர் என்னை ரகசியமாகக் குணப்படுத்துகிறார் என்று ஜாடையாகக் குறிப்பிடுவதாக ஒப்புக் கொண்டது. மறுநாள் காலை நான் அவரைத் தேடிச் சென்று மகிழ்ச்சியுடன் கூவினேன். ஐயா, இன்று நான் நலத்துடன் இருக்கிறேன்.'

"உண்மையாகவா! நீ இன்று உன்னை சக்தி உள்ளவனாக ஆக்கி கொண்டிருக்கிறாய்!'

"'இல்லை, குருதேவா!' என்று நான் மறுத்தேன்.

எனக்கு உதவி செய்தவர் நீங்கள்தான். வாரக்கணக்கில் இன்று தான் முதல் தடவையாக எனக்குக் கொஞ்சம் தெம்பு வந்துள்ளது.'

"'ஆம்! உன் வியாதி கடுமையாகத்தான் இருந்திருக்கிறது. உன் உடல் இன்னும் பலவீனமாகத்தான் உள்ளது. நாளைக்கு அது எப்படி இருக்குமென்று யாரால் கூறமுடியும்?'

"என் பலவீனம் மறுபடியும் திரும்பி விடலாமென்ற எண்ணமே என்னுள் பயத்துடன் கூடிய நடுக்கத்தைத் தோற்றுவித்தது. அடுத்த நாள் காலை மிகுந்த சிரமத்துடன் தான் லாஹிரி மகாசயரின் வீட்டிற்குப் போக முடிந்தது."

"ஐயா, நான் மறுபடியும் நோயால் துன்பப்படுகிறேன்."

"என் குருவின் பார்வை கேள்விக்குறியுடனிருந்தது. அப்படியா! நீ மறுபடியும் நோயை வரவழைத்துக் கொண்டு விட்டாய்!"

"நான் பொறுமை இழந்து கூறினேன். குருதேவா, நாளுக்கு நாள் நீங்கள் என்னைக் கேலி செய்திருக்கிறீர்கள் என்று எனக்கு இப்போது புரிகிறது. நான் உண்மையாகக் கூறும் செய்திகளை நீங்கள் ஏன் நம்ப மறுக்கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை.'

"உண்மையில் உன் எண்ணங்கள்தான் உன்னை மாறி மாறி நலமுறவும் நோயுறவும் செய்கின்றன.' என் குரு என்னை அன்புடன் நோக்கினார். உன் உள்மனத்தில் நீ என்ன எதிர்பார்க்கிறாயோ அதற்கு தகுந்தாற்போல் உன் ஆரோக்கியம் அமைகிறது என்பதை நீயே பார்த்தாய்!

மின்சாரம் அல்லது புவிஈர்ப்பு இவைகளைப் போல், எண்ணமும் ஒரு சக்திதான். மனிதனின் மனம் என்பது, எல்லாம் வல்ல இறைவனின் உணர்வின் ஒரு சிறு பொறிதான். உன் சக்தி வாய்ந்த மனம் எதைத் தீவிரமாக நம்புகிறதோ அது உடனே நடக்கவே செய்யும் என்பதை நான் உனக்கு காட்ட முடிந்தது.'

"லாஹிரி மகாசயர் வெறுமனே பயனின்றி எதையும் பேச மாட்டார் என்பதை நான் அறிந்திருந்ததினால் நான் மிகுந்த பயபக்தியுடனும் நன்றியுடனும் அவரிடம் கூறினேன். குருதேவா, நான் ஆரோக்கியத்துடன்தான் இருப்பதாகவும் என் பழைய எடையை அடைந்து விட்டதாகவும் எண்ணினால் அது நடந்து விடும் என்கிறீர்களா?'

"'ஆம். அப்படியேதான், இந்த க்ஷணத்தில் கூட!' அவர் சிந்தனையுடன் பேசினார். என் குருவின் பார்வை என் கண்களில் லயித்திருந்தது.

"நான் உடனே என் உடலில் சக்தி மட்டுமல்லாமல் எடையும் கூடுவதை உணர்ந்தேன். லாஹிரி மகாசயர் மௌனத்தில் ஆழ்ந்து விட்டார். அவர் காலடியில் சில மணி நேரம் அமர்ந்திருந்த பிறகு நான் என் அன்னையின் இல்லத்திற்குச் சென்றேன். நான் காசிக்கு வரும் பொழுதெல்லாம் அங்கு தான் தங்குவது வழக்கம்.

"'என் மகனே! என்ன ஆயிற்று? நீர் கட்டிக் கொண்டதால் உன் உடல் வீங்கிவிட்டதா?' அம்மாவினால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. என் உடல் தற்சமயம் என் வியாதிக்கு முன்னால்

இருந்ததைப் போன்று நன்றாகவும் ஆரோக்கியத்துடனும் தென்பட்டது.

என் எடை ஒரே நாளில் ஐம்பது பவுண்டு கூடியிருப்பதைக் கண்டேன். அந்த எடை பிறகு நிரந்தரமாக நிலைத்து விட்டது. என்னுடைய ஒல்லியான உருவத்தைக் கண்டிருந்த நண்பர்களும் தெரிந்தவர்களும், இப்போது ஆச்சரியத்தில் ஆழ்ந்தார்கள். இந்த அதிசயத்தின் காரணமாக பல பேர்கள் தங்கள் வாழ்க்கை முறைகளை மாற்றிக் கொண்டு லாஹிரி மகாசயரின் சீடர்களாக ஆனார்கள்.

"எனது குரு கடவுளின் விழிப்புணர்வோடு இருந்தமையால் இந்த உலகமானது, படைப்பவனின் கனவு ஒரு வடிவம் எடுத்துள்ள இடந்தானன்றி வேறல்ல என்பதை அறிந்திருந்தார். லாஹிரி மகாசயர் தன்னை முழுவதும் தெய்வீகக் கனவு காண்பவனோடு ஐக்கியப்படுத்திக் கொண்டதன் காரணமாக, நடைமுறை உலகின் கனவணுக்கள் எதையும் அவர் விரும்பியபடி தோற்றுவிக்கவோ, அல்லது அழிக்கவோ அல்லது மாற்றி அமைக்கவோ முடிந்தது.[9]

"எல்லாப் படைப்புகளும் ஒரு விதிமுறையினால் ஆளப்படுகின்றன, என்று ஸ்ரீ யுக்தேஸ்வர் சொல்லி முடித்தார். வெளிப் பிரபஞ்சத்தில் செயல்பட்டு, விஞ்ஞானிகளால் கண்டறியக்கூடிய சித்தாந்தங்கள்தான் இயற்கை விதிகள் என்று கூறப்ட்டுகின்றன. ஆனால் இதைவிட நுட்பமான விதிகள், மறைந்திருக்கும் தெய்வீகத் தளங்களையும் உணர்வு நிலையின்

உட்பரப்புகளையும் ஆளுகின்றன. இந்த விதிமுறைகள் யோக விஞ்ஞானத்தின் மூலம் அறியப்படக் கூடியவை. பொருட்களின் உண்மையான இயல்பைப் புரிந்து கொள்ளக் கூடியவர் பௌதீக விஞ்ஞானிகள் அல்லர்; தன்னையே உணர்ந்து கொண்ட ஞானிகளால்தான் அது முடியும். அதைப் போன்ற ஞானத்தினால்தான் தன் சீடன் ஒருவனால் துண்டிக்கப்பட்ட வேலைக்காரனின் காதை கிறிஸ்துவினால் திரும்பவும் பழைய நிலைக்குக் கொண்டுவர முடிந்தது."[10]

என் குரு சமய நூல்களை விளக்குவதில் ஒப்புவமை அற்றவர். என் பல ஆனந்தமான நினைவுகள் அவரது சொற் பொழிவுகளின் போது ஏற்பட்டவையாகும். ஆனால் அவருடைய மணியான கருத்துக்கள் கவனிக்கப்படாமலோ அறிந்து கொள்ளப்படாமலோ போனதில்லை. என் உடலின் நிலை கொள்ளாத ஓர் அசைவோ அல்லது என்னுடைய கவனக் குறைவு என்ற ஒரு சிறு தவறோ குருதேவருடைய பிரசங்கத்தைத் திடீரென நிறுத்துவதற்குப் போனதுமானது.

"நீ இங்கு இல்லை." ஸ்ரீ யுக்தேஸ்வர் ஒரு நாள் மாலை அவர் பேச்சை நிறுத்திவிட்டு இதைக் கூறினார். எப்பொழுதும் போல் அவர் என் கவனத்தின் பாதையை விடாமல் கவனித்து வந்திருக்கிறார்.

"குருஜி!" என் குரல் எதிர்ப்பைத் தெரிவித்தது. "நான் அசையவே இல்லை; என் கண்ணிமைகள் இமைக்கவில்லை. நீங்கள் கூறிய ஒவ்வொரு சொல்லையும் நான் திரும்பக் கூற முடியும்!"

"இருந்தாலும் நீ முழுமையான கவனத்தோடு என்னுடன் இல்லை. நீ மறுப்புத் தெரிவித்ததால் நான் கூற வேண்டி இருக்கிறது. உன் மனத்தின் பின்னணியில் நீ மூன்று ஸ்தாபனங்களைப் படைத்துக் கொண்டிருந்தாய்! ஒன்று சமவெளியில் இயற்கை வனப்புள்ள ஏகாந்தமான இடம், மற்றொன்று மலை உச்சியில், இன்னுமொன்று கடற்கரைப் பக்கமாக."

மங்கலாகத் தோன்றிய இவ்வெண்ணங்கள் உண்மையில் அனேகமாக என் உள்மனத்தில்தான் இருந்திருக்கின்றன. நான் அவரை மன்னிப்புக் கோரும் வகையில் நோக்கினேன்.

"என் உள்ளத்தில் தற்செயலாகத் தோன்றும் எண்ணங்களைக் கூட ஊடுருவிவிடும் குருவை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது?"

"நீ அந்த உரிமையை எனக்கு அளித்திருக்கிறாய். நான் விளக்கிக் கூறும் நுட்பமான கருத்துக்களை முழுக் கவனமும் இல்லாமல் உன்னால் கிரகித்துக் கொள்ள முடியாது. அவசியமில்லாமல் நான் மற்றவர்களின் மனத்தின் தனிமையை ஊடுருவிப் பார்ப்பதில்லை. தன் எண்ணங்களினூடே ரகசியமாகத் திரிவதற்கு மனிதனுக்கு இயற்கையான சலுகை உண்டு. அழையாமல் இறைவனும் அங்கு நுழைவதில்லை; நானும் அங்கு தலையிட முயற்சிப்பதில்லை."

"நீங்கள் எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம், குருதேவா!"

"உனது கட்டிடக் கனவுகளெல்லாம் வருங்காலத்தில்

மெய்யாகும். இப்பொழுது படிக்க வேண்டிய காலம்!"

இப்படித் தற்செயலாக, என் குருதேவர் அவருக்கே உரித்தான எளிய முறையில், என் வாழ்க்கையில் நடக்கப் போகும் மூன்று சம்பவங்களைப் பற்றி அவர் அறிந்திருந்ததைக் குறிப்பிட்டார். எனது சிறு வயதிலிருந்தே மூன்று கட்டிடங்களின் உருவங்கள், ஒவ்வொன்றும் வெவ்வேறு இடங்களில் இருப்பது போன்ற காட்சிகள் புதிர் போலத் தோன்றி வந்ததைக் கண்டிருக்கிறேன். ஸ்ரீ யுக்தேஸ்வர் கூறிய வரிசைக் கிரமப்படி இந்தக் காட்சிகள் இறுதியில் உருப்பெற்றன. முதலில் வந்தது நான் ராஞ்சியில் சமவெளியில் நிறுவிய சிறுவர்களுக்கான ஒரு யோக பாடசாலை. பிறகு லாஸ் ஏஞ்ஜிலீஸ் மலை உச்சியில் அமெரிக்கத் தலைமைச் செயலகம், மற்றும் கலிஃபோர்னியாவில் என்ஸினிடஸ் என்னுமிடத்தில் பரந்த பசிஃபிக் மகா சமுத்திரத்தை எதிர் நோக்கி அமைந்த ஓர் ஆசிரமம்.

குருதேவர் என்றுமே இறுமாப்புடன் இந்த சம்பவம் இம்மாதிரி நடக்கும் என நான் முன்னரே கூறுகிறேன்! என்று கூறியதில்லை. அதற்குப் பதிலாக அவர், அப்படி நடக்கலாமென்று உனக்குத் தோன்றவில்லையா? என்று ஜாடையாகச் சொல்வார். ஆனால் அவருடைய எளிய பேச்சில் பின் வருவதை முன்பே கூறும் சக்தி இருந்தது. சொல்லியவற்றிலிருந்து பின்வாங்குவதென்பதே இல்லை. சற்று மறைத்துக் கூறப்படும் அவருடைய முன்னறிவிப்புகள் என்றுமே பொய்த்ததில்லை.

ஸ்ரீ யுக்தேஸ்வர் அதிகம் பேசாத இயல்புடையவர்.

நடத்தையில் உள்ளது உள்ளபடியான வழக்கத்தையே கடைப்பிடிப்பவர். ஏதோ ஒருவருக்கும் புரியாத அல்லது புதிரான வேதாந்தி போன்ற தோற்றம் அவரிடம் இருந்ததில்லை. அவர் கால்கள் திடமான மண்ணில் ஊன்றி நிற்கையில் அவரது சிரம், சுவர்க்கத்தின் புகலிடத்தில் இருந்தது. நடைமுறைக்குகந்தபடி செயல்படுபவர்களை அவர் பாராட்டுவார். தெய்வத் தன்மை என்பது ஊமைத்தனமல்ல! தெய்வீக உணர்வுகள் திறனைக் குறைப்பவையல்ல, என்பார் அவர். நல்லொழுக்கத்தின் ஊக்கமான வெளிப்பாடு மிகக் கூர்ந்த புத்தியை எழுப்ப உதவுகிறது.

என் குரு இயற்கையின் எல்லைகளுக்கு அப்பாற் பட்டவை பற்றி விவாதிக்கத் தயங்குவார். அவருடைய அதிசயிக்கத்தக்க தனிச்சிறப்பு எதுவென்றால் அது அவரின் முழுமையான எளிமைதான். சாதாரண உரையாடலில் அவர் திடுக்கிடக்கூடிய அற்புதங்களைப் பற்றிப் பேச மாட்டார். செயல்களில் அவர் எளிதாக அதை வெளிப்படுத்துவார். பல ஆசிரியர்கள் அற்புதங்களைப் பற்றிப் பேசுவார்கள். ஆனால் எதையும் செய்து காண்பிக்க முடியாது; ஸ்ரீ யுக்தேஸ்வர் சூட்சுமமான விதிகளைப் பற்றிப் பேசுவது அரிது. ஆனால் ரகசியமான எல்லாவற்றையும் செயல்படுத்தி வந்தார்.

"எல்லாவற்றையும் உணர்ந்த ஒரு ஞானி, தன் உள்ளே இருந்து அனுமதி கிடைத்தாலொழிய எந்த அற்புதத்தையும் நடத்த மாட்டார், "என குருதேவர் விளக்கினார். கடவுள் தன் சிருஷ்டியின் ரகசியங்கள்

ஒழுங்கற்ற முறையில் வெளிப் படுத்தப்படுவதை விரும்புவதில்லை.[11] அத்துடன் ஒவ்வொரு மனிதனும் உலகத்தில் அவனுடைய சுதந்திரமான எண்ணத்திற்கு இயல்பான உரிமை பெற்றிருக்கிறான். ஒரு ஞானி அந்தச் சுதந்திரத்தில் தலையிடமாட்டார்."

ஸ்ரீ யுக்தேஸ்வரின் வழக்கமான மௌனம், அவருடைய ஆழ்ந்த இறை தரிசனங்களினால் ஏற்பட்டதாகும். ஆத்ம ஞானத்தை அடையாத ஆசிரியர்கள், இடைவிடாது தீர்க்கதரிசனங்கள் வெளியிடுவதில் தங்கள் காலத்தைச் செலவிடுவது போன்று அவர் செய்வதில்லை. இந்து சாத்திரங்களில், ஆழமற்ற மனிதர்களிடம் சிறு எண்ணங்களாகிய மீன்கள் அதிக ஆரவாரத்தை ஏற்படுத்துகின்றன. மகா சமுத்திரத்தைப் போன்ற மனங்களில் தெய்வீக அருட்கிளர்ச்சிகளான திமிங்கிலங்கள் ஒரு சிறு சலனத்தைக் கூட ஏற்படுத்துவதில்லை, என்று கூறப்பட்டிருக்கிறது.

வெளிப்பகட்டு எதுவுமற்ற என் குருவின் சுபாவத்தினால் அவருடைய சம காலத்தவர்களில் வெகு சிலரே அவரை ஒரு மாமனிதர் என்று அறிந்திருந்தனர். தன் ஞானத்தை மறைக்க முடியாதவன் ஒரு முட்டாள், என்ற முதுமொழி ஆழ்ந்த ஞானமும் அமைதியும் கொண்ட என் குருதேவருக்குப் பொருந்தாது.

ஸ்ரீ யுக்தேஸ்வர் மற்ற எல்லோரையும் போலவே இறந்து போகும் மனிதராகப் பிறந்தாலும் அவர் காலம், இடம் இவைகளை ஆள்பவருடன் ஒன்றிவிட்டார்.

தெய்வத்தோடு மனிதன் தன்னை இணைத்துக் கொள்வதற்கு எவ்வித கடக்க முடியாத தடையும் இல்லை என எனது குருதேவர் கண்டிருந்தார். ஆன்மீகப் பாதையில் துணிவுடன் ஈடுபடாததைத் தவிர வேறு எந்தத் தடையும் மனிதனுக்கு இல்லை என்பதை நான் புரிந்து கொண்டேன்.

ஸ்ரீ யுக்தேஸ்வரின் புனிதத் திருவடிகளைத் தொடுவது எப்பொழுதுமே எனக்கு எழுச்சியூட்டும். ஒரு சீடன், குருவுடனிருக்கும் பக்திமயமானத் தொடர்பினால் ஆன்மீக காந்தமயமாக்கப் படுகிறான்; ஒரு சூட்சுமமான மின்னோட்டம் உண்டாக்கப்படுகிறது. பக்தனுடைய மூளையில் இருக்கும் வேண்டாத பழக்கஅமைப்புக்கள் அடிக்கடி பொசுக்கப் பட்டாற்போல் ஆகிவிடுகின்றன; உலக வாசனைகளால் உண்டான பள்ளப்பதிவுகள் அவனுக்குப் பயன்படும் வகையில் கலைக்கப்படுகின்றன. ஏதோ ஒரு சில க்ஷணங்களுக்காவது மாயையின் இரகசியத்திரை விலக, அவன் பிரம்மானந்த உண்மையைக் காண்கிறான். நான் என் குருவின் பாதங்களில் இந்திய முறைப்படி, மண்டியிட்டு வணங்கும் பொழுதெல்லாம் என் உடலெங்கும் ஒளிமயமான முக்தி தரவல்ல புல்லரிப்புத் தோன்றும்.

குருதேவர் என்னிடம் கூறினார்; "லாஹிரி மகாசயர் மௌனமாக இருக்கும் பொழுதும் அல்லது ஆன்மீக சம்பந்தமில்லாத விஷயங்கள் பற்றிய உரையாடலில் இருந்தாலும் அது எனக்கு அளவிட முடியாத ஞானத்தை அளிப்பதாகவே இருக்கும் என்பதை நான் கண்டு

கொண்டேன்."

ஸ்ரீ யுக்தேஸ்வரும் அதுபோலவேதான் என்னையும் எண்ணச் செய்தார். நான் கவலையுடனோ அல்லது அசிரத்தையுடனோ ஆசிரமத்தில் நுழைந்தால் வெளிக்குத் தென்படாத வகையில் என் மனோநிலை மாறும். என் குருவைக் கண்ணால் கண்டதுமே ஒரு நோய் குணமானதைப் போன்ற இதமான அமைதி என் மீது இறங்கும்.அவருடன் இருந்த ஒவ்வொரு தினமும் ஆனந்தம், அமைதி, ஞானம் ஆகியவற்றில் ஒரு புது அனுபவத்தைக் கொடுக்கக்கூடியதாக இருக்கும். என்றுமே அவர் மாயையின் வசப்பட்டதையோ அல்லது பேராசை, கோபம், மனிதப் பற்று ஆகியவற்றின் போதையினால் உணர்ச்சி வசப்பட்டதையோ நான் கண்டதே இல்லை.

"மாயையின் இருள் மௌனமாகக் கவிந்து கொண்டு இருக்கிறது. நாம் சீக்கிரமாக நம் உள்ளுக்குள்ளே போய் விடலாம்." இந்த எச்சரிக்கையுடன் குருதேவர் அவருடைய சீடர்களுக்குக் கிரியாயோகத்தின் தேவையை, எப்பொழுதும் ஞாபகப்படுத்தியபடி இருப்பார். எப்பொழுதாவது ஒரு புது மாணவன், யோகப் பயிற்சிக்கு தன் தகுதியைப் பற்றி சந்தேகப்பட்டுக் கேட்பான்.

"கடந்ததை மறந்து விடு," ஸ்ரீ யுக்தேஸ்வர் அவனைச் சமாதானப் படுத்துவார். எல்லா மனிதர்களின் கடந்த கால வாழ்க்கைகளும் பல அவமானங்களால் இருள் படர்ந்தவைதான். மனிதன் தெய்வீகத்தில் நங்கூரம் பாய்ச்சி நின்றால் அல்லாது மனித நடத்தையை

நம்புவதற்கில்லை. இப்பொழுது நீ ஆன்மீக முயற்சியில் ஈடுபட்டால் எதிர்காலத்தில் எல்லா விதத்திலும் முன்னேற்றம் அடைவாய்."

குருதேவர் அவரது ஆசிரமத்தில் எப்பொழுதுமே இளவயதுடைய சீடர்களை வைத்திருந்தார். அவர்களுடைய அறிவு மற்றும் ஆன்மீகக் கல்விதான் அவரது வாழ்நாளைய விருப்பமாக இருந்தது. அவர் மறைவதற்கு சிறிது நாட்கள் முன்பு கூட அவர், ஆசிரமத்தில் வசித்துப் பயிற்சிப் பெற இரு ஆறு வயது சிறுவர்களையும் ஒரு பதினாறு வயது இளைஞனையும் ஏற்றுக் கொண்டார். அவருடைய பொறுப்பில் இருந்தவர்கள் யாவரும் மிகக் கவனத்துடன் பயிற்சி அளிக்கப்பட்டார்கள். சீடன் (disciple) என்பதும் சீலம் (discipline) என்பதும் சொல்லடிப்படையிலும் செயலமைப்பிலும் தொடர்பு கொண்டுள்ளன.

ஆசிரமவாசிகள் தங்கள் குருவிடம் அன்புடனும் பயபக்தி உடனும் இருந்தனர். அவருடைய ஒரு சிறு கைதட்டல் கூட அவர்களை ஆர்வத்துடன் அவர் அருகில் வருவிக்கப் போதுமானதாயிருந்தது. அவருடைய மனோநிலை அமைதி யானதாகவும் உள்ளார்ந்ததாகவும் இருக்கும்போது யாரும் அவருடன் பேசத் துணிய மாட்டார்கள்; அவர் வேடிக்கையாகச் சிரிக்கும் சத்தத்தைக் கேட்டால் குழந்தைகளும் அவரைத் தங்களுடையவராக எண்ணுவர்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் யாரையும் தனக்காக எந்த சேவையும் செய்யச் சொல்லிக் கேட்டதில்லை; மேலும்

ஒரு சீடன் மனமுவந்து தராத உதவியை அவர் ஏற்றுக் கொண்டதும் இல்லை. குருதேவருடைய துணிகளைத் துவைக்கின்ற பாக்கியம் நிறைந்த பணியை சீடர்கள் மறந்துவிடும் பொழுது கூட, அவரே அவரது துணிகளைத் துவைத்துக் கொள்வார்.

அவருடைய வழக்கமான உடை, பாரம்பரியமாக சன்னியாசிகள் அணியும் காவி உடைதான். வீட்டுக்குள் அணிவதற்கு, யோகியரின் வழக்கப்படி புலி அல்லது மான் தோலால் செய்யப்பட்ட வார் இல்லாத பாதக் குறடுகளையே அணிந்து வந்தார்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் சரளமாக ஆங்கிலம், பிரெஞ்சு, வங்காளம், இந்தி ஆகிய மொழிகள் பேசுவார். சமஸ்கிருதத்தில் ஞானம் உண்டு. ஆங்கிலம், சமஸ்கிருதம் ஆகியவற்றைப் பயில்வதற்கு அவர் தானாக யூகித்து உருவாக்கிய சில சுலப வழிகள் மூலம் தன் இளம் சீடர்களுக்குப் பொறுமையுடன் போதித்தார்.

குருதேவர் தன் உடலின் மீது மிக அக்கறையான பற்றை வைக்கவில்லை. ஆயினும் அதனைப்பற்றி எச்சரிக்கையுடன் தான் இருந்தார். மனம் மற்றும் உடல் ஆரோக்கியத்தின் மூலம் தெய்வீகம் சரியாக வெளிப்படுகிறது என்று அவர் குறிப்பிடுவார். அவர் எதிலும் மிகையை வெறுப்பார். நீண்டகாலம் உண்ணாவிரதம் இருக்க விரும்பிய ஒரு சீடனிடம் என் குருதேவர் சிரித்தப்படி, அந்த நாய்க்கு ஓர் எலும்புத் துண்டை எறிந்தால் என்ன? என்று கூறினார்.[12]

ஸ்ரீ யுக்தேஸ்வர் நல்ல ஆரோக்கியத்துடன் இருந்தார்.

அவர் நோய்வாய்ப்பட்டு நான் கண்டதில்லை.[13] உலக வழக்கத்திற்கு மரியாதை அளிக்க வேண்டி அவர், தன் மாணவர்கள் விரும்பினால், வைத்தியர்களைக் கலந்து ஆலோசிக்க அவர்களை அனுமதிப்பார். வைத்தியர்கள் இறைவனின் விதிக்குட்பட்டு சுகப்படுத்தும் தங்கள் பணிகளைத் தொடர்ந்து செய்ய வேண்டும் என்பார். ஆனால் மனோசக்தியால் குணப்படுத்தும் மேம்பட்ட முறையை மிகவும் பாராட்டுவார். மேலும் ஞானம் எல்லாவற்றையும் சுத்தப்படுத்த வல்லது, என்று அடிக்கடி உரைப்பார். அவர் தன் சீடர்களுக்கு சொல்வார்:

"உடல் ஒரு குழிபறிக்கும் நண்பன். அதற்கு எவ்வளவு தேவையோ அதை மட்டுமே கொடுக்க வேண்டும். அதைவிட அதிகமாக எதுவும் தரத் தேவையில்லை. துன்பமும் இன்பமும் தற்காலிகமானவை. எல்லா இருமைகளையும் அமைதியுடன் பொறுத்துக் கொண்டு அதே சமயத்தில் அவைகளின் பிடியில் இருந்து விலக முயற்சிக்க வேண்டும். கற்பனை என்கிற கதவின் மூலமாகத்தான் வியாதியும் குணமடைதலும் உள்ளே வருகின்றன. நீ நோய்வாய்ப்பட்டிருக்கும் பொழுதுகூட உனது நோயைப் பற்றிய உண்மையை கண்டுகொள்ளாமல் இரு. கண்டு கொள்ளாத விருந்தாளி ஓடியே போய்விடுவான்!"

குருதேவருடைய சீடர்களில் பல மருத்துவர்கள் இருந்தனர். "உடற் கூறு சாத்திரம் பயின்றவர்கள் இன்னும் மேலே சென்று ஆத்மாவின் விஞ்ஞானத்தைப் பற்றி ஆராய வேண்டும், என்று அவர்களிடம் அவர்

கூறுவார். உடல் அமைப்பிற்குப் பின்னேதான் சூட்சுமமான ஆன்மீக உருவம் மறைந்திருக்கிறது."[14]

ஸ்ரீ யுக்தேஸ்வர் தம் மாணவர்களுக்கு, கீழை மற்றும் மேலை நாடுகளின் நற்குணங்களுக்கு இடையே உயிருள்ள தொடர்புகளாகச் செயலாற்றுமாறு அறிவுரை கூறுவார். அவரே வெளிப் பழக்கவழக்கங்களில் மேலை நாட்டைப் பின்பற்றியும், உள் ஆத்மானுபவத்தில் கீழை நாட்டவராகவும் திகழ்ந்தார். அவர் மேல் நாட்டின் முன்னேற்றமான கருத்துக்களையும் திறமைகளையும் சுகாதாரமான முறைகளையும் மற்றும் பல நூற்றாண்டுகளாக கீழை நாட்டிற்குக் கீர்த்தி சேர்த்து வரும் மதக் கொள்கைகளையும் புகழ்வார்.

ஒழுக்க முறைகள் எனக்குப் புதிதல்ல; வீட்டில் தந்தை கண்டிப்பானவர். அனந்தாவோ, அடிக்கடி கடுமையாக நடந்து கொள்வான். ஆனால் ஸ்ரீ யுக்தேஸ்வரின் பயிற்சியோ மிகத் தீவிரமானது என்றே கூற வேண்டும். பரிபூரணவாதியான எனது குருதேவர் தனது சீடர்களின் சிறு விஷயங்களாகட்டும் அல்லது சாதாரண நடத்தையிலுள்ள நுட்பமான மிகச் சிறிய குற்றங்களாகட்டும்அவற்றை வன்மையாக விமர்சனம் செய்வார்.

"உண்மையற்ற நன்னடத்தை, உயிரில்லாத அழகிக்கு ஒப்பாகும், "என்று அவர் தக்கதொரு சமயத்தில் கூறினார். எதையும் நேராக ஆனால் வினயமின்றி பேசுவது, ஒரு ரண வைத்தியரின் கத்தி போன்று பலனளிப்பதாயிருந்தாலும் மனத்திற்குகந்ததாய்

இருக்காது. பண்புடன் கூடிய பாரபட்சம் அற்ற நேர்மை பயனுள்ளதாகவும் போற்றக் கூடியதாகவும் இருக்கும்.

குருதேவர் என் ஆன்மீக முன்னேற்றத்தில் திருப்தி அடைந் திருக்க வேண்டும். ஏனெனில் அவர் அதைப்பற்றி கூறியதே அரிது. மற்றவற்றில் அவரது கண்டிப்பு என் செவிகளில் விழாமலில்லை. என் முக்கியமான குற்றங்கள் என்பவை ஞாபகமறதி, அடிக்கடி தோன்றும் வருத்தமான மனநிலையில் ஆழ்ந்திருப்பது, மரியாதைப் பண்புகளில் சிலவற்றைப் பின்பற்றாமலிருப்பது, எப்பொழுதாவது முறையற்ற வகையில் செயல்படுவது போன்றவைகள்தாம்.

"உன் தந்தை பகவதியின் செயல்கள் எப்படித் திட்டப் படியும் சீர்தூக்கிப் பார்த்து செய்யப்படுவதாகவும் இருக்கின்றன என்பதைக் கவனி," என்று என் குரு சுட்டிக் காட்டினார். லாஹிரி மகாசயரின் அந்த இரு சீடர்களும் செராம்பூருக்கு நான் முதல் தடவை வந்த சில தினங்களுக்குள்ளேயே சந்தித்தார்கள். என் தந்தையும் குருதேவரும் ஒருவரையொருவர் ஆழ்ந்து நேசித்தார்கள். இருவருமே ஆன்மீகமென்ற கருங் கல்லினாலான அடித்தளத்தின் மீது அழகான ஓர் உள் வாழ்க்கையை காலத்தினால் அழிக்க முடியாதபடி அமைத்திருந்தனர்.

தற்காலிகமான ஆசிரியர் ஒருவரிடமிருந்து நான் என் சிறுவயதில் சில தவறான பாடங்களைக் கிரகித்துக் கொண்டு இருந்தேன். ஒரு சீடன் தன் உலகக் கடமைகளைப் பற்றி அதிகம் கவலைப்பட வேண்டியதில்லை என்பது தான் அது. நான் என்

வேலைகளைச் செய்யாமலிருந்த போதோ அல்லது அசிரத்தையுடன் செய்த பொழுதோ நான் கண்டிக்கப்பட வில்லை. அம்மாதிரியான போதனைகளை மனித மனம் வெகு சீக்கிரத்தில் கிரகித்துக் கொண்டு விடுகிறது. குருதேவரின் உறுதியான கண்டிப்பினால் நான் சீக்கிரமே பொறுப்பின்மை என்கிற வசதியான அறியாமையில் இருந்து விடுபட்டேன்.

ஒரு நாள் குருதேவர் குறிப்பிட்டார்: இவ்வுலகத்தின் தேவைக்கு அதிகமான தகுதி உடையவர்கள் வேறு உலகங்களை அலங்கரிக் கிறார்கள். இந்த மண்ணின் இலவசக் காற்றை சுவாசிக்கும்வரை நீ அதற்கு நன்றியுடன் சேவை செய்வதற்குக் கடமைப்பட்டிருக் கிறாய். எவனொருவன் மூச்சற்ற நிலையில் கைதேர்ந்து விட்டானோ அவன் மட்டும்தான் உலகத்தின் கடமைகளைக் கைவிடலாம். அவர் உணர்ச்சியற்ற குரலில் மேலும் கூறினார். அந்த இறுதியான பரிபூரணத்தை நீ அடையும்பொழுது நான் அதை அப்போது உனக்கு சொல்லத் தவற மாட்டேன்.[15]

அன்பினால் கூட என் குருவிடம் சலுகையை எதிர்பார்க்க முடியாது. என்னைப் போல், தன் விருப்பத்துடன் சீடனாக வந்த எவருக்கும் அவர் எந்தத் தயவும் காட்டமாட்டார். குருதேவரும் நானும், மாணவர்களாலோ அல்லது அறிமுகமில்லாதவர்களாலோ சூழப்பட்டிருந்தாலும் சரி அல்லது தனியாக இருந்தாலும் சரி, அவர் எப்பொழுதும் வெளிப்படையாகப் பேசுவார்; தீவிரமாகக் கண்டிப்பார்.

ஒரு சிறிது மேம்போக்கான தன்மையுடனோ அல்லது முரண்பாடாகவோ நடந்தால் அவருடைய வசைக்குத் தப்ப முடியாது. நம் அகந்தையைத் தகர்த்துவிடும் இக்கண்டிப்பு முறையைத் தாங்குவது சிரமம்தான். ஆனால் நானோ என்னுள்ளே உள்ள மன விகாரங்கள் அனைத்தும் ஸ்ரீ யுக்தேஸ்வரால் தகர்த்தெறியப்பட வேண்டும் என, மாற்றிக் கொள்ள முடியாத தீர்மானத்துடன் இருந்தேன். அவர் இந்த மிகப் பெரிய மாறுதலுக்குப் பாடுபட்டுக் கொண்டிருந்த பொழுது அவருடைய ஒழுங்கு முறை என்ற சம்மட்டி அடிகளின் பாரத்தால் பலமுறை நான் ஆடிப் போனதுண்டு.

குருதேவர் கூறினார்: "உனக்கு என் சொற்கள் பிடிக்க வில்லையெனில் நீ எப்பொழுது வேண்டுமானாலும் இங்கு இருந்து போக உனக்குச் சுதந்திரம் உண்டு. உன்னுடைய சொந்த முன்னேற்றத் தைத் தவிர எனக்கு உன்னிடமிருந்து வேறு எதுவும் தேவையில்லை. நீ இதனால் நன்மை அடைகிறாய் என்று உனக்குத் தோன்றினால் மட்டும் இங்கு இரு," என்று உறுதி கூறினார்.

என் அகம்பாவத்தைப் போக்கி என்னைத் தன் கண்டனங்களால் பணிய வைத்ததற்கு நான் அளவில்லாத நன்றி செலுத்துகிறேன். நான் சிலசமயம், அவர், என் தாடையிலுள்ள ஒவ்வொரு சொத்தையான பல்லையும் கண்டுபிடித்து பிடுங்கி விடுவது போல் என் மன விகாரங்களைக் களைகிறார் என நினைத்ததுண்டு. அகந்தையின் கடினமான உள்பாகத்தைக் கடுமையாக

அல்லாமல் வேறு எப்படியும் பிடுங்கி எறிய முடியாது. அகந்தை அழிந்த பிறகு, தெய்வீகம், தடையற்ற ஒரு வழியை முடிவில் கண்டு கொள்கிறது. அதுவரை அது சுயநலம் என்ற கல் இதயங்களினூடே வீணே கசிய முயல்கின்றது.

ஸ்ரீ யுக்தேஸ்வரின் உள்ளுணர்வு எதையும் ஊடுருவ வல்லது. யாருடைய கருத்துக்களைப் பற்றியும் கவலைப் படாமல் அவர் அடிக்கடி ஒருவருடைய உள் மனத்தில் இருக்கும் வெளியிடப்படாத எண்ணங்களுக்கும் பதில் கூறியிருக்கிறார். ஒரு மனிதன் உபயோகிக்கும் சொற்களுக்கும் அதன் பின்னால் இருக்கும் உண்மையான எண்ணங்களுக்கும் இடையிலுள்ள தூரம் இரு துருவங்களுக்கிடையே உள்ள தூரம் போன்று இருக்கலாம். மிக அமைதியுடன் மனிதனுடைய சொற்களின் குழப்பத்திற்குப் பின்னால் உள்ள அவனுடைய எண்ணங்களை அறிய முயற்சி செய், என்பார் என் குருதேவர்.

தெய்வீக உள்நோக்குத் திறனால் வெளிப்படுபவை சாதாரண மனிதனின் காதுகளுக்கு அனேகமாகத் துன்பம் தருவதாகத்தான் இருக்கும். மேலோட்டமாக இருந்த மாணவர்களிடையே குருதேவர் பிரபலமாக இருக்கவில்லை. புத்திசாலி மாணவர்கள் என்றுமே எண்ணிக்கையில் குறைந்தவர்களானாலும் அவரிடம் ஆழமான மதிப்பு வைத்திருந்தனர்.

அவருடைய பேச்சு மட்டும் அவ்வளவு வெளிப்படையாகவும் குற்றம் கண்டுபிடிப்பவையாகவும்

இல்லாமல் இருந்திருந்தால் இந்தியாவில் அவர் எல்லோராலும் அதிகமாக தேடப்படும் குருவாக இருந்திருப்பாரென்று நான் துணிவுடன் கூறுவேன்.

"என்னிடம் பயிற்சிக்கு வருபவர்களிடம் நான் கடுமையாகத்தான் இருக்கிறேன்," அவர் என்னிடம் ஒப்புக் கொண்டார். அதுதான் என் வழி. ஒத்துக் கொண்டாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி; என்னால் விட்டுக் கொடுக்க முடியாது. ஆனால் உன் சீடர்களிடம் நீ அதிகக் கருணையுடன் நடந்து கொள்வாய். அது உன் வழி. நான் கடுமை என்கிற தீயினால் மட்டுமே புனிதமாக்க முயற்சிக்கிறேன். இவை சாதாரணமாகப் பொறுத்துக் கொள்ள முடியாத அளவிற்கு சுடுபவைதான். அன்பு என்னும் மென்மையான முறையும் ஒருவரை மாற்றக் கூடியதுதான். தளர்த்த முடியாத கண்டிப்பான முறைகள், விட்டுக் கொடுக்கும் முறைகள் ஆகிய இரண்டுமே விவேகத்துடன் செயல்படுத்தப்பட்டால் பலன் தருபவைதான். அவர் தொடர்ந்தார்: "நீ வெளிநாடுகளுக்குச் செல்வாய். அங்கெல்லாம் அகந்தையின் மீது வெளிப்படையான தாக்குதலை விரும்பமாட்டார்கள். ஓர் ஆசிரியருக்கு ஒத்துப் போகும் பொறுமையும் எதையும் தாங்கும் சக்தியும் அதிகமாக இருந்தாலொழிய மேலை நாட்டில், இந்தியாவின் உபதேசங்களைப் பரப்ப முடியாது." (எவ்வளவு தடவை அமெரிக்காவில் நான் குருதேவரின் இச்சொற்களை நினைவு கூர்ந்திருப்பேனென்பதை நான் சொல்ல விரும்பவில்லை!)

இப்பூமியில் அவரது ஆயுட் காலத்தில் அவருடைய மனம் திறந்த பேச்சு அவருடைய சீடர்களின் எண்ணிக்கை அதிகமாவதைத் தடுத்தாலும் அவரது உபதேசங்களைப் பின்பற்றும் உண்மையான சீடர்களின் எண்ணிக்கை எப்போதும் வளர்ந்து கொண்டே வருவதன் மூலம், அவருடைய ஆத்மா இன்னும் உலகில் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. மகா அலெக்ஸாண்டர் போன்ற வீரர்கள் மண்ணின் மீது ஆதிக்கம் செலுத்த விரும்பினர்; ஸ்ரீ யுக்தேஸ்வர் போன்ற ஞானிகள் இன்னும் மேலே சென்று மனிதர்களின் ஆன்மாக்களை வெற்றி கொள்கிறார்கள்.

சீடர்களின் சாதாரணமான, அதிகம் கவனிக்க வேண்டியதில்லை எனப்படும் தவறுகளைக் கூட மிகப் பெரியதாக எடுத்துக் கொண்டு சுட்டிக்காட்டுவது குருதேவரின் வழக்கம். ஒரு நாள் என் தந்தை ஸ்ரீ யுக்தேஸ்வரைப் பார்த்து தமது வணக்கத்தைச் செலுத்தும் நோக்கத்தில் செராம்பூருக்கு வந்திருந்தார். என் தந்தை அனேகமாக என்னைப் பற்றி ஏதாவது புகழ்ச்சியைக் கேட்கலாமென்று நினைத் திருப்பார். என் குறைபாடுகளைப் பற்றிய ஒரு நீண்ட பட்டியல் அவரிடம் சொல்லப்பட்டதைக் கேட்டு அவர் அதிர்ச்சி அடைந்து என்னைக் காண ஓடி வந்தார்.

"உன் குருவின் புகார்களைக் கேட்டு உன்னை முழுதும் பாழாகி விட்ட நிலையில்தான் காண்பேன் என நினைத்தேன்!" என் தந்தை கண்ணீருக்கும் சிரிப்பிற்கும் இடையே கூறினார்.

அந்தச் சமயத்தில் ஸ்ரீ யுக்தேஸ்வரின் கோபத்திற்கு ஒரே காரணம், அவருடைய நாசூக்கான மறுப்பிற்குப் பிறகும் நான் ஒரு மனிதனை ஆன்மீக வழிக்குத் திருப்ப முயற்சித்துக் கொண்டிருந்ததுதான்.

கோபமான வேகத்துடன் நான் என் குருவைத் தேடிச் சென்றேன். அவர், கீழ்நோக்கிய பார்வையுடன், தன் குற்றத்தை உணர்ந்தவர் போல என்னைப் பார்த்தார். அந்த ஆன்மீக சிங்கம் அந்த ஒரே தடவைதான், என் முன் சாதுபோல் இருப்பதை நான் கண்டேன். தனித்தன்மை பொருந்திய அக்கணத்தை நான் முழுமையாக அனுபவித்தேன்.

"ஐயா, திகைப்புற்ற என் தந்தையின் முன், ஏன் என்னைப் பற்றி இரக்கமற்று கருத்துரைத்தீர்கள்? அது நியாயமா?"

"நான் இனிமேல் அப்படிச் செய்ய மாட்டேன்," ஸ்ரீ யுக்தேஸ்வரின் குரல் தன் குற்றத்தை ஒப்புக் கொள்வதாக இருந்தது.

நான் அக்கணத்திலேயே வாயடைத்து நின்றுவிட்டேன். அந்த மகான் எவ்வளவு சுலபமாக தன் தவற்றை ஒப்புக் கொண்டார்! அதன் பிறகு அவர் என்றும் என் தந்தையின் மன அமைதியைக் குலைக்காவிட்டாலும் கூட, தான் நினைத்தபடி எங்கு வேண்டு மானாலும் எப்பொழுது வேண்டுமானாலும் என் போக்குகளைக் குறை சொல்லிக் கூறு போடுவதை இரக்கமின்றித் தொடர்ந்தார்.

புது சீடர்கள், ஸ்ரீ யுக்தேஸ்வர் இதர சீடர்களை நன்கு

கண்டிக்கும் பொழுது அடிக்கடி அவருடன் கூடச் சேர்ந்து கொள்வார்கள். அவர்கள் குருவைப் போன்ற ஞானிகள் போலும்! குறைகளற்ற விவேகத்தின் முன்மாதிரிகள் போலும்! ஆனால் தாக்குபவர்களுக்குத் தாக்குதலை சமாளிக்கவும் தெரிய வேண்டும். குற்றம் காணும் அம்மாணவர்கள் மீது குருதேவர் தன் ஆராய்ந்தறியும் அம்பறாத் தூணியிலிருந்து சில அம்புகளை எல்லோருக்கும் எதிரில் எடுத்து எய்ததும் வேகமாக ஓடிவிடுவார்கள்.

"உள்மனத்தின் மென்மையான பலவீனங்கள், ஒரு சிறு கண்டனத்தைக் கூடத் தாங்க முடியாமல் புரட்சி செய்யும்; நோய்வாய்ப்பட்டிருக்கும் உடலின் பாகங்களைப் போன்றவை அவை. மென்மையாகத் தொடுவதற்கு முன்னரே சுருண்டு கொள்கின்றன!" ஓடிப்போகும் மாணவர்களைப் பற்றி ஸ்ரீ யுக்தேஸ்வர் வேடிக்கையாகக் குறிப்பிடுவது இப்படித்தான்.

அனேக சீடர்கள் ஒரு குருவைப் பற்றி தாமாக ஏற்கனவே நினைத்தபடி அவருடைய சொற்களையும் செயல்களையும் எடை போடுவார்கள். அம்மாதிரியானவர்கள் ஸ்ரீ யுக்தேஸ்வரைத் தங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை என்று பெரும்பாலும் குறை கூறி னார்கள்.

"நீங்கள் கடவுளையும் தான் புரிந்து கொள்ளவில்லை! ஒரு சமயத்தில் நான் பதிலடி கொடுத்தேன். "ஒரு மகானை நீ நன்கு உள்ளபடி புரிந்து கொண்டு விட்டால் நீயே ஒரு மகானாக ஆகி விடலாமே; கோடிக்கணக்கான

புதிர்களுக்கு நடுவில், ஒவ்வொரு கணமும் விவரிக்க முடியாத காற்றினைச் சுவாசித்துக் கொண்டிருக்கும் ஒருவர் ஆழங்காண முடியாத இயல்புடைய குருவைப் பற்றி உடனே எப்படிப் புரிந்து கொள்ள முடியும்?"

மாணவர்கள் வந்தனர், பொதுவாக திரும்பிச் சென்றனர். மிகச் சுலபமான மார்க்கத்தை விரும்பியவர்களுக்கு - உடனுக்கு உடன் கூடிய அனுதாபத்தையும் அவர்களுடைய யோக்யதைகளைப் பற்றிய ஆதரவான அங்கீகாரத்தையும் எதிர்பார்த்து வந்தவர்களுக்கு ஆசிரமத்தில் அவை கிடைக்கவில்லை. குருதேவர் தன் சீடர்களுக்கு அடைக்கலமும் பாதுகாப்பும் கணக்கிட முடியாத காலங்களுக்கு அளித்தார். ஆனால் பல மாணவர்கள் அவர்களுடைய அகந்தைக்கு தீனி போடுவதையும் அற்பத்தனமாக எதிர்பார்த்தனர். அவர்கள் குருவிடம் பணிவதற்குப் பதிலாக வாழ்வின் எண்ணற்ற அவமானங்களைச் சுமப்பதே மேல் எனக் கிளம்பி விட்டார்கள்! வெளிப்படையாகவே ஊடுருவி விடக் கூடிய சூரிய ஒளி போன்ற ஸ்ரீ யுக்தேஸ்வருடைய ஞானத்தின் தகிக்கும் கதிர்கள், ஆன்மீக நோயால் அவதிப்படுபவர்களால் பொறுக்க முடியாத அளவு சக்தி வாய்ந்ததாயிருந்தது. தங்களைப் புகழ்ச்சியின் நிழலில் இருத்தி, அஞ்ஞானத்தின் நித்திரையை அனுமதிக்கும் குறை ஞானமுடைய ஆசிரியர்களை அவர்கள் தேடிச் சென்றனர்.

என் தொடக்க கால மாதங்களில் அவருடைய கண்டனங் களுக்குக் கொஞ்சம் ரோஷத்துடன் கூடிய

பயத்தை உணர்ந்தேன். பிறகு யாரெல்லாம் தன்னை ஒழுங்குபடுத்தச் சொல்லி அவரிடம், என்னைப் போன்று கேட்டுக் கொண்டார்களோ, அவர்களைத்தான் அவர் சொற்களால் கூறுபோடுகிறார் என்பதைச் சீக்கிரத்திலேயே புரிந்து கொண்டேன். அவரது கண்டனத்தினால் தவிக்கும் எந்த மாணவனாவது மறுத்துப் பேசினால் ஸ்ரீ யுக்தேஸ்வர் அதனால் பாதிப்படையாமல் மௌனமாகி விடுவார். அவரது சொற்கள் என்றுமே கோபத்துடன் இருந்ததில்லை. ஆனால் யாரையும் தனிப்பட்ட முறையில் குறிப்பிடாத வகையில் விவேகத்துடன் இருந்தன.

ஆசிரமத்திற்கு எப்பொழுதாவது வருபவர்களிடம் குருதேவர் குற்றம் கண்டுபிடித்ததில்லை. நன்றாகத் தெரிந்து இருந்தால்கூட அவர், அவர்களுடைய தவறுகளைப் பற்றிக் குறிப்பிடமாட்டார். ஆனால் அவரது ஆலோசனைக்காக அவரைத் தேடிவரும் மாணவர்களிடம் தனக்கு மிக முக்கிய பொறுப்பு இருப்பதாக ஸ்ரீ யுக்தேஸ்வர் உணர்ந்தார். அகந்தை பரவிக் கிடக்கும் பக்குவப்படுத்தப்படாத தாதுவான மானிடர்களை மாற்றும் பொறுப்பை ஏற்கும் குரு உண்மையிலேயே தைரியமானவர்! ஒரு மகானின் தைரியம், மாயை என்னும் குழப்பத்தில் சிக்கி, கண் இல்லாமல் தடுக்கி விழுகிற உலக மனிதர்களிடம் உள்ள கருணையில்தான் வேரூன்றியுள்ளது.

நான் என் மன அடித்தளத்திலிருந்த வெறுப்பை அகற்றியவுடன் நான் கண்டிக்கப்படுவது குறிப்பாகக்

குறைந்து விட்டதைக் கண்டேன். ஒரு நுட்பமான வகையில் குருதேவர் முன்னைவிட என்னிடம் கருணைக் காட்டினார். நியாயம் கற்பித்தல், ஆழ்மனக்கூச்சம்[16] ஆகிய சுவர்களுக்குப் பின் பொதுவான மனித ஆளுமை (Personality) தன்னை மறைத்துக் கொள்கிறது. நான் இந்த ஒவ்வொரு சுவரையும் காலக் கிரமத்தில் தகர்த்தெறிந்தேன். அதன் பரிசாக எனக்கு எந்த முயற்சியும் இல்லாமல் குருவிடம் மிக இணக்கமான நல்லுறவு ஏற்பட்டது. அதன் பிறகுதான் அவர் நம்பக்கூடியவராகவும், என் மீது அக்கறை உள்ளவராகவும் மௌனமாக என்னிடம் அன்பு கொண்டிருப்பவராகவும் இருப்பதைக் கண்டேன். இருந்த போதிலும் எதையும் வெளிக்காட்டாத அவர், தன் அன்பைச் சொற்களால் வெளியிடவில்லை.

என் சுபாவம் முக்கியமாக பக்தி பாவனையைக் கொண்டது. முதலிலெல்லாம் என் குரு ஞானத்தில் ஊறியவராகவும் ஆனால் பக்தி[17]யில் வறண்டவராகவும் தோற்றமளித்தார். வறண்ட ஆன்மீகக் கணிதரீதியில் தன்னை வெளிப்படுத்திக் கொள்வது கண்டு, எனக்கும் கொஞ்சம் கவலை ஏற்பட்டது. ஆனால் அவருடைய இயல்புடன் என்னைப் பொருத்திக் கொண்டபிறகு இறைவனிடம் என் பக்திபூர்வ நெருக்கம் குறைவதற்குப் பதிலாக மேலும் அதிகரிப்பதைக் கண்டேன். ஆத்மஞானியான ஒரு குரு, பலவிதமான சீடர்களையும் அவரவர்களுக்குத் தகுந்த இயல்பான முறைகளில் முழுவதும் வழி காட்ட முடியும்.

ஸ்ரீ யுக்தேஸ்வருடன் என் உறவு, வெளிப்படையான உரையாடல்கள் அதிகமின்றி இருந்தாலும், உள்ளுக்குள்ளே ஒரு சொல்லாற்றல் பெற்றதாக இருந்தது. அடிக்கடி என் எண்ணங்கள் அவருடைய மௌன அங்கீகரிப்பை, பேச்சின் அவசியமே இன்றிப் பெற்றுவிட்டதைக் கண்டிருக்கிறேன். அவரருகில் மௌனமாக அமர்ந்து அவருடைய கருணை என் மீது அமைதியாகப் பொழிவதை நான் உணர்ந்திருக்கின்றேன்.

குருதேவரின் பாரபட்சமற்ற நியாயம், கல்லூரியில் என் முதல் வருடக்கோடை விடுமுறையின் போது குறிப்பிடும் வகையில் காட்டப்பட்டது. செராம்பூரில் என் குருவுடன் தடை ஏதுமின்றி வசிக்கக்கூடிய மாதங்களை எதிர்நோக்கி இருந்தேன்.

"நீ ஆசிரமத்தின் மேற்பார்வையை ஏற்றுக் கொள்ளலாம், நான் ஆர்வத்துடன் வந்து சேர்ந்ததைக் கண்டு ஸ்ரீ யுக்தேஸ்வர் மகிழ்ச்சி அடைந்து கூறினார். உன் கடமை, விருந்தினர்களை வரவேற்பதும் மற்ற சீடர்களின் வேலையை மேற்பார்வை செய்வதுமாக இருக்கும்," என்றார்.

பதினைந்து நாட்களுக்குப் பிறகு கிழக்கு வங்காளப் பகுதியிலிருந்து வந்த குமார் என்ற ஓர் இளம் கிராமவாசி, ஆசிரமத்தில் பயிற்சிக்காக ஏற்றுக் கொள்ளப்பட்டான். மிகப் புத்திசாலியான அவன் சீக்கிரத்திலேயே குருதேவரின் அன்பைப் பெற்று விட்டான். ஏனென்று தெரியாத ஒரு காரணத்தினால் இந்தப் புது மாணவனை ஸ்ரீ யுக்தேஸ்வர் ஏதும்

கண்டிப்பதில்லை.

"முகுந்தா, குமார் உன் வேலைகளைச் செய்யட்டும். நீ சமையல் வேலையையும் பெருக்குவதையும் ஏற்றுக் கொள்," அந்தப் புதுப் பையன் எங்களுடன் ஒரு மாதம் இருந்த பிறகு குருதேவர் இந்தக் கட்டளையை இட்டார்.

தலைமைப் பதவி கிடைத்ததும் குமார் ஓர் அற்பமான கொடுங்கோலாட்சியை நடத்தினான். இதற்கு மௌன எதிர்ப்புடன், மற்ற சீடர்கள் தினசரி எனது ஆலோசனையை நாடி தொடர்ந்து வந்து கொண்டிருந்தனர். மூன்று வாரங்களுக்கு இந்த நிலை நீடித்தது. பிறகு குமாருக்கும் குருதேவருக்குமிடையே நடந்த ஓர் உரையாடலை நான் தற்செயலாகக் கேட்டேன்.

"முகுந்தனைச் சமாளிக்கவே முடியாது. நீங்கள் மேற்பார்வை பார்க்கும்படி என்னை நியமித்திருக்கிறீர்கள். ஆயினும் எல்லோரும் அவனிடமே போய் அவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறார்கள்," என்றான்.

"தகுதியான தலைவருக்கு, சேவை செய்வதில்தான் விருப்பம் இருக்க வேண்டுமேயொழிய அதிகாரம் செய்வதில் இருக்கக் கூடாது என்பதை நீ புரிந்து கொள்வாய் என்றுதான் அவனை அடுப்பங்கரைக்கும் உன்னை வெளிக் கூடத்திற்கும் நியமித்தேன். ஸ்ரீ யுக்தேஸ்வரின் வறண்ட குரல் குமாருக்குப் புதிதாய் இருந்திருக்க வேண்டும். நீ முகுந்தனின் பதவியை விரும்பினாய். ஆனால் அதற்குரிய தகுதியுடன் அதை நிலைநிறுத்திக் கொள்ள உன்னால் முடியவில்லை. நீ

சமையல்காரனின் உதவியாளனாக, உன் பழைய வேலைக்கே திரும்பிப் போ," என்றார்.

பணிய வைக்கும் இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு குருதேவர் குமாரிடம் மீண்டும் பழைய சலுகைகளையே காட்டி வந்தார். கவர்ச்சியின் மர்மத்தை யார்தான் விடுவிக்க முடியும்? குமாரிடம் குருதேவர் ஓர் அழகிய ஊற்றைக் கண்டார். ஆயினும் மற்ற சீடர்களிடம் இந்த ஊற்று பெருகவில்லை. இந்தப் புதுப் பையன் குருதேவருக்கு மிகப் பிரியமானவனாக இருந்தாலும் நான் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. தனி மனிதர்களின் வினோதமான சுபாவங்கள் மகான்களிடம் கூடக் காணப்பட்டு வாழ்க்கை கோலத்தில் விதவிதமான சிக்கல்களைத் தோற்றுவிக்கின்றன. என் இயல்பு ஒரு சிறு விஷயத்தால் மாறாது. ஸ்ரீ யுக்தேஸ்வரிடமிருந்து நான் வெளிப்புகழ்ச்சியை விட இன்னும் உயர்ந்த லாபத்தையே தேடிக் கொண்டிருந்தேன்.

ஒரு நாள் குமார் என்னிடம் காரணமின்றி மிகவும் கொடுமையாகப் பேசினான். எனக்கு ஆழ்ந்த வருத்தம் ஏற்பட்டது.

"உன் தலை வெடித்துவிடும் அளவிற்கு வீங்கி வருகிறது! என் உள்ளுணர்வில் நான் உண்மையென உணர்ந்த ஓர் எச்சரிக்கையை மேலும் விடுத்தேன்: நீ உன் வழிகளைத் திருத்திக் கொண்டாலொழிய, ஒரு நாள் நீ இந்த ஆசிரமத்தை விட்டுப் போகும்படி கேட்டுக் கொள்ளப்படுவாய்."

கேலியாகச் சிரித்துக் கொண்டே குமார்,

அப்பொழுதுதான் அறைக்குள் நுழைந்த குருதேவரிடம் அதைத் திருப்பிக் கூறினான். என்னைக் கட்டாயமாகத் திட்டத்தான் போகிறார் என்கிற முழு எதிர்பார்ப்புடன் நான் பணிவுடன் அறையின் மூலையில் ஒதுங்கினேன்.

"முகுந்தன் சொல்வது சரியாகவே இருக்கலாம்," அந்தப் பையனுக்கு குருதேவரின் பதில் என்றுமில்லாத உணர்ச்சியற்ற குரலில் வந்தது.

ஒரு வருடம் கழித்து குமார் சிறுவயதில் தான் வசித்த வீட்டிற்குச் செல்வதற்காகக் கிளம்பினான். ஸ்ரீ யுக்தேஸ்வரின் மௌனமான ஆட்சேபணையை அவன் கண்டு கொள்ளவில்லை. அவர் என்றும் சீடர்களை அடக்குவதற்கு அதிகார தோரணையைக் கைக்கொண்டது இல்லை. சில மாதங்கள் கழித்து செராம்பூருக்குத் திரும்பி வந்த அந்தப் பையனின் முகத்தில் ஏற்பட்டிருந்த விரும்பத்தகாத மாறுதல் நன்றாகவே தெரிந்தது. அந்த அமைதியான ஒளி பொருந்திய முகமும் நிமிர்ந்த நடையும் எங்கோ போய் விட்டிருந்தன! எங்கள் முன்பு ஏதோ ஒரு சாதாரணக் குடியானவன், பல கெட்ட வழக்கங்களை அண்மையில் மேற்கொண்டவன்தான் நின்று கொண்டிருந்தான்.

குருதேவர் என்னை அழைத்து இனிமேல் அந்தப் பையன் சன்னியாச ஆசிரம வாழ்க்கைக்குத் தகுதியானவன் இல்லை என்பதைப் பற்றி உடைந்த மனத்துடன் எடுத்து உரைத்தார்.

"முகுந்தா, ஆசிரமத்தை விட்டு நாளையே கிளம்பிப் போய்விடும்படி குமாருக்குச் சொல்ல வேண்டிய

பொறுப்பை நான் உன்னிடமே விட்டு விடுகிறேன். என்னால் அது முடியாது! ஸ்ரீ யுக்தேஸ்வர் கண்களில் கண்ணீர் மல்கியது. ஆனாலும் உடனே அவர் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டார். என் பேச்சைக் கேட்டு வேண்டாத சகவாசங்களைத் தேடிப் போகாமலிருந்திருந்தால், இவ்வளவு கீழே விழுந்திருக்க மாட்டான். அவன் என் பாதுகாப்பை நிராகரித்து விட்டான். இனி இந்தக் கொடூரமான உலகம் தான் அவனுக்குக் குருவாக இருக்க வேண்டும்."

குமார் புறப்பட்டது எனக்கு எந்தவித மகிழ்ச்சியையும் கொடுக்கவில்லை. குருதேவருடைய அன்பைப் பெறும் திறமை படைத்த ஒருவன் எப்படி உலக இச்சைகளுக்கு இடம் கொடுத்தான் என்பதைப் பற்றி வருத்தத்துடன் சிந்தித்தேன். மது, மற்றும் காமத்தை துய்க்கும் நாட்டம் சாதாரண மனிதனிடம் வேரூன்றி உள்ளது. அவைகளை ரசிப்பதற்கு எந்தப் பிரமாதமான நுட்ப உணர்ச்சியும் தேவையில்லை. இந்திரியத்தின் தீய உணர்ச்சிகளை மணமுடைய ரோஜா நிறப் பூக்களுடன் கூடிய, என்றும்பசுமையான அரளிச் செடியுடன் ஒப்பிடலாம்; அச்செடியின் ஒவ்வொரு பாகமும் விஷத் தன்மையுடையது.[18] ஆயிரக்கணக்கான வெளிக் கவர்ச்சிகளில் குருட்டுத்தனமாகத் தேடப்படுகிற நலம்தரும் இடம் ஆனந்தமான பிரகாசத்துடன் உள்ளுக்குள்ளேயே இருக்கிறது.

"கூர்மையான புத்தி, இரு விளிம்புகளைக் கொண்டது," குருதேவர், குமாருடைய புத்தி கூர்மையைப்

பற்றி பேசும் பொழுது கூறினார். "அதை உருவாக்கவும் உபயோகிக்கலாம்; அழிக்கவும் உபயோகிக்கலாம். கத்தியைப் போன்றது அது; அதைக் கொண்டு அஞ்ஞானம் என்ற கட்டியை அறுக்கவும் செய்யலாம் அல்லது தன் தலையை வெட்டிக் கொள்ளவும் செய்யலாம். தப்பித்துக் கொள்ள முடியாத தெய்வீக விதியை மனம் ஒப்புக் கொண்ட பிறகுதான் புத்திசாலித்தனம் சரியான பாதையில் செலுத்தப்படுகிறது,"என்றார்.

என் குருதேவர் ஆண், பெண் சீடர்கள் எல்லோருடனும் தாராளமாகப் பழகி எல்லோரையும் தன் குழந்தைகளாகப் பாவித்து வந்தார். அவர்களுடைய ஆத்மாவின் சமநிலையை மட்டும் காணும் அவர் எந்தப் பிரிவோ பாகுபாடோ செய்ததில்லை.

"தூக்கத்தில் நீ ஆணா, பெண்ணா என்பது உனக்குத் தெரிவதில்லை. ஓர் ஆண், ஒரு பெண்ணைப் போல் நடிப்பதால் அவன் பெண்ணாகி விடுவதில்லை. அதைப்போல் ஆத்மாவும் ஆணாகவும், பெண்ணாகவும் நடித்தாலும், எவ்வித மாற்றமும் இல்லாதிருக்கிறது. ஆத்மா என்பது மாறாத, நிர்க்குணமான கடவுளின் பிரதிபிம்பம்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் பெண்களைத் தவிர்த்ததோ அல்லது மனிதனின் வீழ்ச்சிக்குப் பெண்கள்தான் காரணம் என்று குறை கூறியதோ இல்லை. அவர், பெண்கள் கூட ஆண்களைப் பற்றிய சபலத்தைக் கடந்துதானே ஆக வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டினார். நான் ஒரு

தடவை குருதேவரை, பண்டைய பெரிய மகான் ஒருவர் பெண்களை நரகத்தின் வாயில் என்று ஏன் கூறினார் என்று கேட்டேன்.

"அவருடைய ஆரம்ப காலத்தில் ஒரு பெண் அவருக்கு மிகவும் தொந்தரவு கொடுத்து அமைதியைக் குலைத்திருக்க வேண்டும், "என் குரு சற்று எரிச்சலுடன் பதிலளித்தார். இல்லா விட்டால் அவர் பெண்ணைக் கண்டனம் செய்யாமல் தன் சுய-கட்டுப்பாட்டில் உள்ள சில குறைகளைத்தான் கண்டித்திருப்பார்."

ஆசிரமத்திற்கு வருபவர்கள் தவறான கருத்துடைய கதையை கூறுவதற்குத் துணிந்தால் குருதேவர் அதற்குச் செவி சாய்க்காமல் மௌனத்தைக் கடைப்பிடிப்பார். "அழகிய முகத்தால் தூண்டப்படும் கவர்ச்சிக்கு ஆளாகாதே, என்று தன் சீடர்களிடம் சொல்வார். இந்திரியங்களுக்கு அடிமை யானவர்கள் எவ்வாறு உலகத்தை ரசிக்க முடியும்? புலனின்ப சகதியில் உழலும்போது உலகத்தின் நுட்பமான நறுமணங்களை அவர்கள் இழக்கிறார்கள். காமத்தில் ஈடுபடுபவன் பகுத்தறிவின் எல்லா நுட்பங்களையும் இழந்தே விடுகிறான்."

பாலுணர்ச்சியின் மாயையிலிருந்து தப்ப முயலும் மாணவர்களுக்கு ஸ்ரீ யுக்தேஸ்வரிடமிருந்து, பொறுமையாக பிரச்சனைகளைப் புரிந்து கொண்டு அதற்கேற்றவாறு அவர் கூறும் புத்திமதிகள் கிடைக்கும்.

"பேராசை இல்லாத பசி நியாயமானது போல் பாலுணர்ச்சியும் இயற்கையால் வம்சவிருத்திக்காகத்தான்

உண்டாக்கப்பட்டிருக்கிறது. ஆனால் என்றுமே திருப்தியுறாத உடலுணர்ச்சியைத் தூண்டுவதற்காக உண்டாக்கப்படவில்லை," என்று அவர் கூறினார். "தவறான இச்சைகளை இப்பொழுதே அழித்து விடு. இல்லாவிடில் உன் சூட்சும சரீரம் பூத உடலை விட்டுப் பிரிந்த பிறகும் கூட அவ்விச்சைகள் உன்னுடன் தங்கி இருக்கும். உடல், பலவீனமாக இருந்தாலும் கூட மனது மட்டும் இடைவிடாமல் தடுத்துக் கொண்டிருக்க வேண்டும். இச்சையின் தூண்டுதல் கொடுமையான வேகத்துடன் தாக்கினாலும் கூட பாரபட்சமின்றி அதை ஆராய்வதாலும் எதனாலும் வெல்ல முடியாத மனவலிமையாலும் அதை வெற்றி கொண்டு விடு. ஒவ்வொரு இயற்கையான இச்சையையும் வென்றுவிட முடியும்."

"உன் சக்திகளை சேமித்து வைத்துக்கொள். ஒரு பெரிய மகா சமுத்திரத்தைப் போன்று இந்திரியங்கள் என்னும் உபநதிகளை யெல்லாம் உன்னுள் அமைதியாக அடக்கிக் கொள். தினசரி புதுப்பிக்கப்படும் புலன்களின் தீவிர ஆசைகள் உன் உள் அமைதியை உறிஞ்சி விடுகின்றன. ஒரு பெரிய நீர்த்தேக்கத்தில் திறந்த மடைகள் போன்று அவை ஜீவ சக்தியான தண்ணீரை உலக ஆசைகள் என்கிற பாலைவனத்தில் வீணடித்துவிடும்! தவறான இச்சைகளின் துடிப்புடனும் வேகத்துடனும் கூடிய உணர்ச்சிதான் மனிதனின் மகிழ்ச்சிக்கு மிகப் பெரிய எதிரியாகும். சுயக் கட்டுப்பாட்டின் சிங்கமாக உலகினில் உலவி வா!

பலவீன உணர்ச்சிகளான தவளைகள் உன்னை உதைத்து அங்குமிங்கும் தள்ள விடாதே!"

உண்மையான ஒரு பக்தன், முடிவில் எல்லா இயல்பான தூண்டுதலால் ஏற்படும் கட்டாயங்களிலிருந்தும் விடுவிக்கப் படுகிறான். மனித நேயத்திற்கான அவனுடைய தேவையை, கடவுளை மட்டும் தேடுவதற்கு உரிய நோக்கமாக மாற்றிக் கொள்கிறான். அந்த நேயம் தனித்தன்மை உடையது; ஏனெனில் அது எங்கும் நிறைந்தது.

ஸ்ரீ யுக்தேஸ்வரின் அன்னை வாரணாசியில் ராணா மஹால் மாவட்டத்தில் வசித்து வந்தார். அங்குதான் நான் முதன் முதலில் என் குருதேவரைத் தரிசித்தேன். கனிவு நிறைந்தவராகவும் அன்புடனும் திகழ்ந்தாலும் அவ்வம்மையார் மிகத் தீர்மானமான கருத்துக்கள் உடையவராக இருந்தார். ஒரு நாள் நான் அவரது வீட்டு பால்கனியில் நின்றுகொண்டு அன்னையும் மகனும் பேசிக் கொண்டு இருந்ததைக் கவனித்தேன். அவருடைய அமைதியான நியாயத்துடன் கூடிய முறையில், குருதேவர் எதைப் பற்றியோ தன் அன்னையை நம்பச் செய்ய முயன்று கொண்டிருந்தார். அதில் அவர் வெற்றியடையவில்லை என்பது அவரது அன்னை தன் தலையைப் பலமாக ஆட்டியதிலிருந்து தெரிந்தது.

"இல்லை, இல்லை, என் மகனே, இப்பொழுது போய் விடு. உன் புத்திசாலித்தனமான சொற்கள் எல்லாம் எனக்கு வேண்டாம்! நான் உன் சிஷ்யை அல்ல!"

திட்டு வாங்கிக்கொண்ட குழந்தையைப் போல ஸ்ரீ

யுக்தேஸ்வர் வேறெதுவும் பேசாமல் பின்வாங்கி விட்டார். அன்னையின் நியாயமற்ற மனோநிலையின் போது கூட, அன்னையின் மீது அவருக்கிருந்த மிகுந்த மரியாதை என் மனத்தைத் தொட்டது. அன்னை, அவரைத் தன் சிறிய பையனாகத்தான் கண்டாரேயொழிய ஒரு முனிவராகக் கண்டு கொள்ளவில்லை. இந்தச் சிறிய சம்பவத்தில் ஒரு சிறு அழகு இருந்தது. அது என் குருவின் அசாதாரணமான இயல்பின் ஒரு பக்கத்தைப் படம் பிடித்துக் காட்டியது. உள்ளூற அவர் மிகவும் வினயமுள்ளவரானாலும் வெளியே அவர், அசைக்க முடியாதவர்.

துறவற நியமங்களின்படி ஒரு சன்னியாசி முறைப்படி துறவறம் மேற்கொண்ட பிறகு உலக பந்தங்களை வைத்துக் கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. ஓர் இல்லறத்தான் அவசியம் செய்ய வேண்டிய சம்பிரதாய குடும்பச் சடங்குகளை அவர் செய்ய வேண்டியதில்லை. இருந்த போதிலும் பழமையான துறவற விதிகளைத் திரும்ப மாற்றி அமைத்த சங்கரர், இப்படிப்பட்ட விதிகளைப் புறக்கணித்தார். அவருடைய அன்பு அன்னை மறைந்த பிறகு அவர் தனது உயர்த்திய கையிலிருந்து கிளம்பிய தெய்வீக அக்கினி ஜுவாலையால் அவருக்கு தகனக் கிரியை செய்தார்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் கூட - ஒரு விதத்தில் அவ்வளவு பிரமிக்கத்தக்க வகையில் இல்லையென்றாலும் – அந்தத் தடைகளைப் புறக் கணித்தார். அவருடைய அன்னை

இறந்த பொழுது இல்லறத்தாரின் வழக்கங்களைப் போலவே அவர் வாரணாசியில் புனித கங்கைக் கரையின் அருகில் தகனக் கிரியைகளுக்கு ஏற்பாடு செய்து, பல பிராமணர்களுக்கு உணவளித்தார்.

துறவிகளுக்கு சாஸ்திரீயத் தடைகள் விதித்திருப்பதின் காரணம் அவைகளுடன் குறுகிய முறையில் தம்மை ஈடுபடுத்திக் கொள்வதைக் கடக்க வேண்டும் என்பதற்காகத்தான்! சங்கரரும் ஸ்ரீ யுக்தேஸ்வரும் எந்தவித பந்தமுமில்லாத பிரம்மத்துடன் தங்களை முழுவதுமாகவே ஐக்கியப்படுத்திக் கொண்டவர்கள். விதிகள், அவர்களைக் காப்பாற்ற வேண்டிய தேவை இல்லை. சில சமயங்களில் ஒரு மகான், விதிகளில் உள்ளடங்கிய கொள்கைதான் முக்கியமேயொழிய அந்த வெளி உருவமல்ல என்பதைத் தெளிவுபடுத்துவதற்காகவே விதிகளை மீறுவதுண்டு. அம்மாதிரிதான் இயேசு இளைப்பாற வேண்டிய நாளில் சோளக் கதிர்களை அறுத்தார். அவரைத் தடுக்க முடியாத கண்டனக்காரர்களை நோக்கி, மனிதனுக்காகத்தான் ஓய்வு நாளே ஒழிய, ஓய்வு நாளுக்காக மனிதனில்லை,[19] என்றார்.

சமய நூல்களைத் தவிர ஸ்ரீ யுக்தேஸ்வர் வேறு எதையும் படிப்பதில்லை. இருந்தாலும் அவர் சமீப காலத்தில் விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள், மற்ற அறிவு முன்னேற்றங்கள் எல்லாவற்றையும் தவறாமல் அறிந்திருந்தார்.[20] மிக அற்புதமாக உரையாடவல்ல அவர், தன்னுடைய விருந்தினர்களிடம் எண்ணற்ற

செய்திகளைப் பற்றி விவாதித்துக் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வதை விரும்பினார். எப்பொழுதும் என் குருவின் கைவசமிருக்கும் பேச்சுத் திறனும், குலுங்கும் சிரிப்பும் எந்த விவாதத்தையும் உயிருள்ளதாகச் செய்துவிடும். அடிக்கடி சிந்தனையோடு இருந்தாலும் அவர் என்றுமே மனச்சோர்வுடன் இருந்ததில்லை. இறைவனை நாடுவதற்கு மனிதர்கள் தங்கள் முகங்களை வாடப்பண்ண வேண்டியதில்லை," என்று அவர் பைபிளிலிருந்து[21] எடுத்துக் கூறுவார். "கடவுளைக் கண்டுபிடித்து விட்டால் நம்முடைய துக்கங்களுக்கெல்லாம் அதுதான் தகனமாகும் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்."

ஆசிரமத்திற்கு முதல் தடவையாக வரும் வேதாந்திகள், பேராசிரியர்கள், சட்ட நிபுணர்கள் மற்றும் விஞ்ஞானிகள் ஏதோ ஒரு புராதனமான மதவாதியை சந்திக்கப் போவதாகத்தான் எதிர்பார்த்திருப்பார்கள். அவ்வப்பொழுது ஒரு இறுமாப்பான சிரிப்பு, வேடிக்கையான சகிப்புடன் கூடிய பார்வை ஆகியவை, அவர்கள் ஏதோ சில பக்தியுடனான மிகச் சாதாரணச் சொற்களைத் தவிர வேறு எதையும் எதிர்பார்த்து வரவில்லை என்பதைக் காட்டிக் கொடுத்துவிடும். ஸ்ரீ யுக்தேஸ்வருடன் பேசிய பிறகு தங்களுடைய சிறப்பு அறிவுத் துறைகளையும் அவர் துல்லியமாக தெரிந்து வைத்திருக்கிறார் என்பதை உணர்ந்து கொண்டு வந்திருப்பவர்கள் மனமில்லாமல் தான் புறப்பட்டுச் செல்வார்கள்.

என் குரு சாதாரணமாக விருந்தினர்களுடன் இனிமையாகவும், எளிதாகவும் பழகுவார். அவர் அழகான உபசரிப்புடன் அவர்களை வரவேற்பார். இருந்தாலும் அகந்தையில் மூழ்கிய சிலர் சில சமயங்களில் உற்சாகமூட்டும் அதிர்ச்சிக்கு ஆளானதுண்டு. அவர்கள் குருதேவரிடம் உறைந்து போன அலட்சியத்திற்கோ அல்லது தாங்க முடியாத எதிர்ப்பிற்கோ ஆளாவதுண்டு; பனிக்கட்டி அல்லது இரும்புதான்!

ஒரு சமயம் பிரபலமான இரசாயன நிபுணர் ஒருவர் ஸ்ரீ யுக்தேஸ்வருடன் மோதினார். வந்தவர் விஞ்ஞானத்தினால் கண்டுபிடிக்க வழி இல்லாததால், இறைவன் இருப்பதை ஒப்புக் கொள்ள மறுத்தார்.

"ஆகையால் உங்கள் பரிசோதனைக் குழாய்களுக்குள் இறைவனைப் பிரித்தெடுப்பதில் விளக்க முடியாத வகையில் தோல்வியடைந்து விட்டீர்கள்!" குருதேவரின் பார்வை கடுமையாயிருந்தது. நான் ஒரு புது பரிசோதனையை சிபாரிசு செய்கிறேன். இருபத்து நான்கு மணி நேரம் இடைவிடாது உங்கள் எண்ணங்களைப் பரிசீலனை செய்து பாருங்கள். பிறகு கடவுள் காணப்படாததைப் பற்றி ஆச்சரியப்பட மாட்டீர்கள், என்றார்.

பிரபலமான வித்வான் ஒருவருக்கு இதேபோல் ஓர் அதிர்ச்சி கிடைத்தது. ஆசிரமத்திற்கு அவர் முதன் முறை வந்திருந்தபொழுது அது நடந்தது. அந்த விருந்தாளி மகாபாரதம், உபநிஷதங்கள்,[22] பாஷ்யங்கள் (சங்கரருடைய விரிவுரைகள்) இவைகளை ஒப்புவிக்கும்

பொழுது அவை கூரையின் உத்திரங்களில் பட்டு எதிரொலித்தன.

"நான், நீங்கள் கூறுவதைக் கேட்கக் காத்துக் கொண்டிருக்கிறேன், "ஸ்ரீ யுக்தேஸ்வரின் குரல், இவ்வளவு நேரம் மௌனம்தான் நிலவியது என்பது போலக் கேள்விக் குறியுடன் ஒலித்தது. அந்தப் பண்டிதருக்குக் குழப்பமாகி விட்டது.

"மேற்கோள்கள் ஏராளமாகவே உள்ளன," என்று கூறிய குருதேவரின் சொற்களைக் கேட்டுக் கொண்டிருந்த விருந்தினரிடமிருந்து மரியாதையான தூரத்தில், ஒரு மூலையில் அமர்ந்திருந்த எனக்கோ சிரிப்பு தாங்க முடியவில்லை. "ஆனால் உங்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையிலிருந்து சொந்தமாக எந்த வியாக்கியானம் உங்களால் கொடுக்க முடியும்? எந்த புனித சாத்திரத்தை நீங்கள் கிரகித்து உங்களுடையதாக்கிக் கொண்டிருக்கிறீர்கள்? காலத்தைக் கடந்து நிற்கும் இந்த உண்மைகள் உங்களை எப்படி மாற்றியிருக்கின்றன? நீங்கள் உள்ளே ஒன்றுமில் லாதவராக, மற்றவர்களின் சொற்களைக் கிளிப்பிள்ளை போல் திருப்பிக் கூறுவதுடன் திருப்தி அடைந்துவிட்டீர்களா?" என்றார்.

"நான் தோற்றுவிட்டேன்! என்ற அந்த வித்வானின் ஏமாற்றம் வேடிக்கையாயிருந்தது. நான், உள்ளனுபவம் பெறவில்லை," என்றார்.

முதல் தடவையாக அவர், வாக்கியத்தில் ஒரு கால்புள்ளி வைக்கத் தெரிந்துவிட்டால் மட்டுமே ஆத்ம

ஞானத்தில் பெரிய புள்ளியாக ஆகிவிட முடியாது அல்லது ஆத்ம அஞ்ஞானத்திற்கு அது நிவாரணம் இல்லை என்பதைப் புரிந்து கொண்டு விட்டார்.

"இரவுகளில் உருப்போட எரிக்கும் விளக்குகளின் வாசனையைத்தான் இந்த இரத்த சோகை பிடித்த பண்டிதர் களிடமிருந்து நுகர முடிகிறது," என்று நன்கு வாங்கிக் கட்டிக் கொண்ட அவர் சென்ற பிறகு என் குரு குறிப்பிட்டார். "அவர்கள் தத்துவ ஞானத்தைப் புத்திசாலித்தனத்துடன் கூடிய மென்மையான மனப் பயிற்சிகள் என்று எண்ணி விடுகிறார்கள். உயர்வானதாகத் தோற்றமளிக்கும் அவர்களுடைய எண்ணங்களுக்கும் வெளியே தெரியும் மட்டமான செயல்களுக்கும் அல்லது கடுமையான உள் ஒழுக்கத்திற்கும் கொஞ்சம் கூடத் தொடர்பு இருப்பதில்லை."

குருதேவர் மற்ற சமயங்களில் வெறும் ஏட்டுப் படிப்பின் பயனற்ற தன்மையைப் பற்றி அழுத்தமாகக் கூறியிருக்கிறார்.

"ஒன்றைப் பற்றி அதிகமான வார்த்தைகளால் தெரிந்து கொண்டிருப்பதும் அதைப் புரிந்து கொண்டிருப்பதும் வெவ் வேறானவை. அவற்றைக் குழப்பிக் கொள்ளக் கூடாது," என்று அவர் குறிப்பிட்டார். "ஒவ்வொரு பத்தியையும் ஒரு நேரத்தில் உணர்ந்து கற்றால்தான், புனிதமான நூல்கள் ஆத்ம ஞானத்தை அறியும் ஆர்வத்தை தூண்டுவிக்க உதவுகின்றன. இல்லை யென்றால்தொடர்ந்த அறிவு பூர்வமான

படிப்பானது அகந்தை, பொய்யான திருப்தி மற்றும் அரை வேக்காட்டு அறிவு ஆகியவை களைத்தான் உண்டாக்கும்."

சமய நூல்களைப் படிப்பதைப் பற்றி அவருடைய சொந்த அனுபவம் ஒன்றை ஸ்ரீ யுக்தேஸ்வர் எடுத்துக் கூறினார். கிழக்கு வங்காளக் காட்டின் ஓர் ஆசிரமத்தில் அது நடந்தது. அங்கு தாப்ரு பல்லவ் என்ற புகழ்பெற்ற குருவின் வழியை அவர் கவனித்தார். அவருடைய வழி எளியதாகவும் அதே சமயம் கடினமானதாகவும் இருந்தது. பண்டைய பாரதத்தில் பொதுவாக அனுசரிக்கப்பட்ட வழியாகவும் இருந்தது.

தாப்ரு பல்லவ் மரங்கள் அடர்ந்த தனிமையான பிரதேசத்தில் தன் சிஷ்யர்களைக் கூட்டினார். புனிதமான பகவத் கீதை அவர்களின் முன்னால் திறந்திருந்தது. அவர்கள் உன்னிப்பாக ஒரே பத்தியை அரைமணி நேரம் தொடர்ந்து பார்த்துக் கொண்டே இருந்தார்கள். பிறகு கண்களை மூடிக் கொண்டார்கள். இன்னும் ஓர் அரைமணி நேரம் கழிந்தது. பிறகு அக்குருதேவர் சுருக்கமாக ஒரு வியாக்கி யானம் செய்தார். அசையாமல் அவர்கள் இன்னும் ஒரு மணி நேரம் தியானத்தில் இருந்தனர். கடைசியில் அந்த குரு பேசினார்.

"இந்த பத்தி இப்போது உங்களுக்குப் புரிகிறதா?"

"ஆம் ஐயா," குழுவில் இருந்த ஒருவர் துணிந்து அதை நிச்சயித்தார்.

"இல்லை, முழுவதும் இன்னும் புரியவில்லை.

நூற்றாண்டு நூற்றாண்டாக பாரதத்தைப் புத்துணர்ச்சி பெறச் செய்வதற்கு இச்சொற்களுக்கு வலிமை அளித்த ஆன்மீக ஜீவசக்தியைத் தேடுங்கள்." இன்னொரு மணி நேரம் மௌனத்தில் கழிந்தது. அந்த குரு சீடர்களை அனுப்பிவிட்டு ஸ்ரீ யுக்தேஸ்வர் பக்கம் திரும்பினார்.

"உனக்கு பகவத் கீதை தெரியுமா?"

"இல்லை, ஐயா, அப்படிச் சொல்ல முடியாது; இருந்தாலும் என் கண்களும் மனமும் அவைகளின் ஏடுகளைப் பல தடவை பார்த்து உள்ளன."

"நூற்றுக்கணக்கானவர்கள் எனக்கு வேறு விதமாகப் பதில் கூறியுள்ளார்கள்!" என்று கூறி அம்மகா முனிவர் குருதேவருக்கு ஆசி கூறும் வகையில் புன்னகைத்தார். மேலும், "ஒருவன் சாத்திர - அறிவுச் செல்வத்தை வெளியே காட்டிக் கொள்வதில் நேரத்தைச் செலவிட்டால் விலை மதிப்பற்ற முத்துக்களை உள்ளே மூழ்கி எடுப்பதற்கு எங்கே நேரம் இருக்கப் போகிறது?" என்றார்.

ஸ்ரீ யுக்தேஸ்வரும் அதே ஒருமுனைப்பட்ட ஆழ்ந்த முறையில் படிப்பதையே தன் சீடர்களுக்குப் போதித்து வந்தார். "கண்களினால் ஞானம் அறியப்படுவதில்லை. ஆனால் அணுக்களினால் தான் கிரகிக்கப்படுகிறது. ஓர் உண்மையின் மீது நம்பிக்கை ஏற்படுவது உன் புத்தியினால் அல்ல. ஆனால் அது உன் இருப்பிலேயே உறைந்தால்தான் நீ தயக்கத்து டனாவது அதன் பொருளைப் பற்றிப் பேசலாம்," என்றார் அவர். ஒரு மாணவன், ஆத்ம ஞானத்திற்கு ஏட்டுக் கல்வி

அவசியமான ஒரு படி என்று நினைத்தால் அந்த எண்ணத்தை அவர் ஊக்குவிப்பதில்லை.

"ரிஷிகள் ஒரு வாக்கியத்தில் வெளிப்படுத்திய அபார ஞானத்தை, வியாக்கியானமாக எழுத வித்வான்கள் பல தலைமுறைகளாக முயன்று வருகிறார்கள். முடிவற்ற இலக்கிய வாதப்பிரதிவாதங்கள் மந்தமான புத்தியுடைய வர்களுக்குத்தான். கடவுள் இருக்கிறார்இல்லைகடவுள் என்ற எண்ணத்தை விட வேறு எது வெகு சீக்கிரமாக முக்தி அடைவதற்கு ஏற்றது?"

ஆனால் மனிதன் சுலபமாக எளிமைக்குத் திரும்புவதில்லை. புத்திமானுக்கு இறைவன் என்பது அரியது, ஆனால் அதை விட கற்றறிந்த ஆடம்பரங்கள் தான் எளியது, தன்னால் அவ்வளவு ஆழ்ந்த நூலறிவைக் கிரகிக்க முடிகிறதே என்பதுதான் அவனுடைய அகந்தைக்கு மகிழ்ச்சி.

தன் செல்வத்தையோ அல்லது உலகத்தில் தன் உயர்ந்த நிலையையோ பற்றி செருக்குடன் உணர்ந்து இருப்பவர்கள், குருதேவரின் முன்னிலையில் தம் மற்ற சொத்துக்களுடன் பணி வையும் பெற்றுவிடுவது உண்டு. ஒரு தடவை அந்தப் பக்கத்திலுள்ள நீதிபதி ஒருவர் கடற்கரையிலுள்ள பூரி ஆசிரமத்திற்கு வந்து குருதேவரைக் காண விரும்பினார். இரக்கமற்ற தன்மைக்கு பெயர் போன அந்த மனிதர் விரும்பினால், எங்களை ஆசிரமத்தை விட்டுக் கிளப்பி விட முடியும். நான் இந்த உண்மையை என் குருதேவரிடம் எடுத்துக் கூறினேன். ஆனால் அவர் சற்றுக்கூட விட்டுக்

கொடுக்காத முறையில், வந்த விருந்தினரை எழுந்து நின்று வரவேற்க வில்லை.

சற்று பயத்துடன் நான் கதவருகில் உட்கார்ந்தேன். ஸ்ரீ யுக்தேஸ்வர் என்னிடம் அந்த நீதிபதிக்காக ஒரு நாற்காலியை கொண்டு வரச் சொல்லவில்லை. எனவே வந்தவர் ஒரு மரப்பெட்டியின் மீது அமர்வதுடன் திருப்திப் பட்டுக் கொள்ள வேண்டியதாயிற்று. தன் முக்கியத்துவம் ஆடம்பரத்துடன் மதிக்கப்படுமென்ற அந்த மனிதரின் வெளிப்படையான விருப்பம் நிறைவேறவில்லை.

இயல்கடந்த ஆராய்வைப் பற்றிய ஒரு விவாதம் தொடங்கிற்று. அந்த விருந்தாளி சமயநூல்களைத் தப்பும் தவறுமாக வியாக்கி யானம் செய்தார். அவருடைய பேச்சில் பிழையற்ற சொற்கள் குறையக் குறைய அவரது கோபம் மேலோங்கியது.

"எம்.ஏ. பரீட்சையில் நான் முதலாவதாகத் தேறி இருக்கிறேனென்று தெரியுமா உங்களுக்கு?" அறிவு அவரைக் கைவிட்டு விட்டது. ஆனால் அவரால் இன்னும் சத்தமாகக் கத்த முடிந்தது.

"நீதிபதி ஐயா அவர்களே, இது உங்களுடைய நீதிமன்றம் அல்ல என்பதை நீங்கள் மறந்துவிட்டீர்கள்," குருதேவர் அமைதியாகக் கூறினார். உங்களுடைய குழந்தைத்தனமான பேச்சைக் கேட்ப வர்கள் உங்கள் கல்லூரிப் படிப்பில் குறிப்பிடத்தக்க சிறப்பான அம்சம் எதுவும் இல்லை என்றே நினைப்பார்கள். எப்படியும் பல்கலைக் கழகப் பட்டத்திற்கும் வேதாந்த

ஞானத்திற்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை. துறவிகள், ஒவ்வொரு அரை வருட செமெஸ்டர் முடிவிலும் கூட்டம் கூட்டமாகக் கணக்கர்களைப் போல் உற்பத்தி செய்யப் படுவதில்லை."

ஒரு திகைப்பூட்டும் மௌனத்திற்குப் பிறகு வந்தவர் மனம் விட்டுச் சிரித்தார்.

"ஒரு தெய்வீக நீதிபதியைச் சந்திப்பது எனக்கு இதுதான் முதல் தடவை," என்றார். பிறகு அவருக்கே உரிய சட்ட நுணுக்கங்கள் தோய்ந்த சொற்களுடன் முறைப்படி தன்னை ஒரு குறிப்பிட்ட காலம் வரை சீடனாகக் கருதிப் பயிற்சி அளிக்கும்படி வேண்டினார்.

பல சமயங்களில் லாஹிரி மகாசயரைப் போல் ஸ்ரீ யுக்தேஸ்வரும் சன்னியாசம் ஏற்க விரும்பிய இன்னும் பக்குவமடையாத மாணவர் களை உற்சாகப்படுத்தியதில்லை. ஆத்ம ஞானத்தை அடையாமல் காவி உடை அணிவது சமூகத்தில் தவறான எண்ணத்தை விளைவிக்கும். துறவின் வெளிச் சின்னங்களை மறந்து விடுங்கள். அவை உங்களை அனாவசியமாகக் கர்வம் அடையச் செய்யும். தினமும் உங்களுடைய தவறாத ஆன்மீக முன்னேற்றத்தைத் தவிர வேறு எதுவும் அவசியமில்லை. அதற்கு கிரியா யோகத்தை விடாது பழகி வாருங்கள், என்று அந்த இரண்டு மகான்களும் கூறியிருக்கிறார்கள்.

ஒரு மனிதனின் தகுதியைக் கணிப்பதற்கு ஒரு சாது, உலகத்தின் மாறும் அளவுகோல்களிலிருந்து முற்றிலும் வேறுபட்ட ஒரு மாறாத முறையைக் கையாளுகிறார்.

மனித இனம் – அதன் நோக்கிலேயே பல்வேறுபட்டதாய் உள்ளது – ஒரு குருவின் பார்வையில் இருவிதமாக மட்டுமே பிரிக்கப்படுகிறது; இறைவனைத் தேடாத அஞ்ஞானிகள் மற்றும் இறைவனைத் தேடும் ஞானிகள்.

அவருடைய சொத்துக்களைப் பராமரிக்கும் விஷயத்தில் என் குரு நேரிடையாகவே ஈடுபட்டார். மனச்சாட்சியற்ற நபர்கள் பல சமயங்களில் குருதேவருடைய பூர்வீக நிலத்தை அபகரிக்க முயன்றதுண்டு. தீர்மானத்துடனும், வழக்குகளைத் தொடுத்தும், ஸ்ரீ யுக்தேஸ்வர் ஒவ்வொரு எதிரியையும் முறியடித்தார். அவர், தான் ஒரு பிச்சையெடுக்கும் குருவாகவோ அல்லது சீடர்களுக்குப் பாரமாகவோ இல்லாமலிருக்கவே இந்த சிரமங்களை அனுபவித்தார்.

எல்லோரும் பயப்படும் வகையில் வெளிப்படையாகப் பேசும் என் குருதேவர், கபடவேடங்களைப் பற்றி ஏன் அறியாமல் இருந்தார் என்பதற்கு அவருடைய பொருளாதார சுதந்திரம் ஒரு காரணமாகும். தன்னை ஆதரிப்பவர்களைப் புகழ்ந்து பேச வேண்டிய அவசியத்திலிருக்கும் மற்ற ஆசிரியர்களைப் போல் அவரில்லை. மற்றவர்களுடைய செல்வத்தினால் மறைமுகமாகவோ வெளிப்படையாகவோ ஏற்படும் செல்வாக்குகள் என் குருதேவரைப் பாதிக்கவில்லை. எந்தச் சமயத்திலும் எந்தக் காரணத்திற்காகவும் அவர் சாடைமாடையாகக் கூடப் பணம் கோரியதை நான் கேட்டதில்லை. அவருடைய ஆசிரமப் பயிற்சி எல்லா மாணவர்களுக்கும் இலவசமாகவே அளிக்கப்பட்டு

வந்தது.

ஒரு தடவை வழக்குமன்ற அதிகாரி, ஒரு வழக்கு தொடர்பான "சம்மன்" ஒன்றைச் சமர்ப்பிக்க செராம்பூர் ஆசிரமத்திற்கு வந்திருந்தார். நானும் கனாய் என்ற சீடனும் அவரை குருதேவரிடம் அழைத்துச் சென்றோம்.

ஸ்ரீ யுக்தேஸ்வரிடம் அந்த அதிகாரியின் போக்கு மரியாதைக் குறைவாயிருந்தது. "உங்கள் ஆசிரமத்து நிழலை விட்டகன்று நீதிமன்றத்தின் நேர்மையான காற்றைச் சுவாசிப்பது உங்களுக்கு நல்லது, "என்று அவர் இறுமாப்புடன் கூறினார்.

என்னால் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. "இன்னும் ஒரு மரியாதையற்ற சொல் உம் வாயிலிருந்து வந்தால் நீர் தரையில் உருளுவீர்," என்று நான் அதட்டலுடன் நெருங்கினேன்.

கனாயும் அவரைக் கோபித்துக் கொண்டான். "பிச்சைக்காரப் பயலே, இந்தப் புனித ஆசிரமத்தில் உன் அபசாரத்தைக் கொண்டு வராதே," என்று கத்தினான்.

ஆனால் குருதேவர் தன்னை இழிவுபடுத்தியவனைக் காக்கும் விதத்தில் தடுத்துக் கொண்டு நின்றார். "ஒன்றுமில்லாததிற்குப் பிரமாதமாக அமர்க்களம் செய்யாதீர்கள். இந்த மனிதன் அவனுடைய சரியான கடமையைத்தான் செய்கிறான்."

அந்த அதிகாரி, இந்த வித்தியாசமான வரவேற்பைக் கண்டு, மரியாதையாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வேகமாக அவ்விடத்தை விட்டகன்றார்.

வெளியில் அவ்வளவு உத்வேகமான சுபாவத்தை

உடைய குருதேவர் உள்ளே அவ்வளவு அமைதியாயிருந்தது வியக்கத்தக்கது. தெய்வ மனிதன் என்று வேதம் கூறும் இலக்கணத்திற்குச் சான்றாக விளங்கினார் அவர்: "அன்புடன் இருக்க வேண்டிய விஷயங்களில் மலரை விட மென்மையாகவும் கொள்கைகள் தவறும் சமயங்களில் இடியை விட வலிமையாகவும்" இருந்தார்.

கவிஞர் ப்ரெளனிங்கின் சொற்களின்படி உலகத்தில், எப்பொழுதும், "இருட்டிலேயே இருந்து கொண்டு வெளிச்சத்தைத் தாங்க முடியாதவர்களும் "இருக்கத்தான் செய்கிறார்கள். எப்பொழுதாவது அயலார் ஒருவர் ஏதாவது ஒரு குறையைக் கற்பித்துக் கொண்டு ஸ்ரீ யுக்தேஸ்வரைக் கண்டிப்பார். மன அமைதி கலையாத என் குரு வினயமுடன் அவர் சொல்வது முழுவதையும் கேட்டு அவரது குற்றச்சாட்டில், உண்மையின் அடையாளம் ஏதாவது இருக்கிறதா என்று ஆராய்ந்து பார்ப்பார். இந்தக் காட்சிகள் என் மனத்தில் குருதேவரின் ஒப்புவமையற்ற கருத்து ஒன்றை நினைவுப் படுத்தும்: "சில மனிதர்கள் மற்றவர்கள் தலையை வெட்டுவதன் மூலம் தாங்கள் உயரமாகி விடலாம் என்று நினைக்கிறார்கள்!" என்பதுதான் அது.

ஒரு ஞானியின் என்றும் மாறாத தன்மையுடைய சாந்தம் எந்த பிரசங்கத்தையும் விட எளிதில் மனத்தில் பதியக் கூடியது. "பல வானைப் பார்க்கிலும் நீடிய சாந்தமுள்ளவன் உத்தமன்: பட்டணத்தைப் பிடிக்கிறவனைப் பார்க்கிலும் தன் மனத்தை

அடக்குகிறவன் உத்தமன்."[23]

ராஜகம்பீரமுடைய என் குருதேவரின் மனம், புகழ் அல்லது உலக சாதனையை நாடி இருந்தால் அவர் ஒரு சக்கரவர்த்தியாகவோ அல்லது உலகத்தை ஆட்டிப் படைக்கும் வீரனாகவோ எளிதில் ஆகி இருப்பார் என்று நான் அடிக்கடி நினைப்பதுண்டு. அதற்குப் பதிலாக, கோபம், அகந்தை ஆகிய அகக் கோட்டைகளின் வீழ்ச்சி, மனிதனை மேம்படச் செய்வதால், அவற்றைத் தாக்குவதையே அவர் தேர்ந்தெடுத்திருந்தார்.



ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வரின் சமாதிக் கோயில், பூரி

1 ஸ்ரீ யுக்தேஸ்வர் மே 10, 1855ல் பிறந்தார்.

2 யுக்தேஸ்வர் என்றால் ஈஸ்வர (கடவுளின் ஒரு பெயர்) னுடன் கூடியவர் என்று பொருள். பத்து ஸ்வாமி பிரிவுகளில் கிரி என்னும் குழுவும் ஒன்று.

3 பதவுரையின்படிஒன்றாக வழிநடக்கச் செய்தல், சமாதி என்ற ஆனந்த மயமான உயர்உணர்வு நிலையில் ஒரு யோகி ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒத்திருத்தலை உணர்கிறான்.

4 உடற்கூறுவல்லுனர்கள் கூற்றுப்படி குறட்டைவிடுதல் முழுமையான ஓய்வு நிலையின் அறிகுறியாகும்.

5 ஒரு யோகியின் சர்வ வல்லமை பொருந்திய சக்தி, வெளிப்புற இந்திரியங்களின் உதவியில்லாமலே பார்க்கவும், ருசிக்கவும், நுகரவும், ஸ்பரிசிக்கவும், கேட்கவும் திறன் பெற்றது என்பது தைத்திரீய ஆரண்யகத்தில் பின்வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது. குருடன் முத்தைத் துளைத்தான், விரலில்லாதவன் அதை நூலில் கோர்த்தான்; கழுத்தில்லாதவன் அதை அணிந்தான்; நாவில்லாதவன் அதைப் புகழ்ந்தான்.

6 அஹிம்சையில் ஊறிப் பக்குவப்பட்டவன் முன்னிலையில் எந்த உயிரிடமும் விரோதம் உண்டாகாது - யோக சூத்திரங்கள் 11:35.

7 நல்ல பாம்பு அதன் வரம்பிற்குள் அசையும் எந்தப் பொருளையும் வேகமாகக் கொத்திவிடும். அனேகமாக சிறிதும் ஆடாமல் அசையாமல் இருப்பது ஒன்றுதான் தப்பும் வழி.

8 லாஹிரி மகாசயர், ப்ரியா (குருதேவரின் முதல் பெயர்) என்றுதான் அழைத்தார். யுக்தேஸ்வர் என்பது, ஸ்வாமியாக மாறியபின் வந்த பெயர். லாஹிரி மகாசயர் உயிருடன் இருந்தவரை என் குரு சன்னியாசப் பெயரை ஏற்கவில்லை. (பார்க்க பக்கம் 158.) இரண்டு பெயர்களால் குழப்பம் உண்டாகக் கூடாது என்பதற்காக இப்புத்தகத்தில் இங்கும் இன்னும் சில இடங்களிலும் யுக்தேஸ்வர் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

9 ஆதலால் நீங்கள் ஜபம் பண்ணும்போது எவைகளைக் கேட்டுக் கொள்வீர்களோ, அவைகளைப் பெற்றுக்கொள்வோம் என்று விசுவாசியுங்கள். அப்பொழுது அவைகள் உங்களுக்கு உண்டாகும். - மாற்கு 11:24 (பைபிள்). தங்களுடைய தெய்வீக உணர்வுகளை மிகுந்த தேர்ச்சி பெற்ற சீடர்களுக்கு மாற்ற, கடவுளுடன் ஒன்றிய ஞானிகளால்தான் முழுமையாக முடியும் - லாஹிரி மகாசயரும் இச்சமயத்தில் ஸ்ரீ யுக்தேஸ்வருக்கு இதைத்தான் செய்தார்.

10 அவர்களில் ஒருவன் பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனை வலது காதற வெட்டினான். அப்பொழுது இயேசு, நீ இதுவரைக்கும் துன்பப்பட்டாய் என்று சொல்லி, அவனுடைய காதைத்தொட்டு, அவனை சொஸ்தப் படுத்தினார்-லூக்கா 22:50-51 (பைபிள்).

11 பரிசுத்தமானதை நாய்களுக்கு கொடாதேயுங்கள்; உங்கள் முத்துகளைப் பன்றிகள் முன் போடாதேயுங்கள்; போட்டால் தங்கள் கால்களால் அவைகளை மிதித்து, திரும்பிக் கொண்டு உங்களைப் பீறிப்போடும் - .மத்தேயு 7:6 (பைபிள்).

12 உபவாசம், இயற்கையான சிறந்த சுத்திகரிப்பு முறை என்ற கருத்தில் என் குரு உடன்பாடு கொண்டிருந்தார். ஆனால் இந்தக் குறிப்பிட்ட சீடன் தன் உடலைப் பற்றி அதிக அக்கறைக் கொண்டவன்.

13 ஒரு முறை அவரை விட்டு நான் பிரிந்திருந்தபொழுது காஷ்மீரத்தில் நோய்வாய்ப்பட்டார். (பார்க்க பக்கம் 307).

14 உடற்கூறு சாத்திரத்தில் நோபல் பரிசு பெற்ற சார்ல்ஸ் ராபர்ட் ரிஷே, ஒரு தீவிரமான சுபாவமுடைய மருத்துவர், அவர் இவ்வாறு எழுதினார். இயல் கடந்த ஆய்வு (Metaphysics) இன்னும் முறைப்படி விஞ்ஞானமாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஆனால் அது நடக்கப் போகிறது.... நூறு உடற்கூறு வல்லுநர்களின் முன்னிலையில் எடின்பரோவில் நான்

அறுதியிட்டுக் கூறினேன்: நமது பஞ்சேந்திரியங்கள் மட்டும் தான் அறிவை அடைவதற்கு வழி என்பதல்ல. மற்ற வழிகளின் மூலமாகவும் சில சமயம் உண்மையின் ஒரு சிறு கூறு நம் அறிவை அடைகிறது... ஏனெனில் ஓர் உண்மை அபூர்வமானது என்பதற்காக அது இல்லை என்று சொல்லிவிட முடியாது. ஒரு குறிப்பிட்ட அறிவு கடினமானது என்பது அதைப் புரிந்து கொள்ளாததற்குக் காரணமாக முடியுமா?... இயல் கடந்த ஆராய்வை ஒரு மர்ம விஞ்ஞானம் என்ற முறையில் கேலி செய்பவர்கள், சித்துமணிக்கல் (philosophers' stone) லைத் தொடர்வது மாயையானது என்று கூறி வேதியியலைக் கேலி செய்தவர்கள் அடைந்த அவமானத்தை அடைவர்... கொள்கைகளைப் பொறுத்தமட்டில் லவாய்சியர், கிளாட் பெர்னார்ட், பாஸ்டர் ஆகியோருடையவையே – எங்கும், எப்பொழுதும் பரிசோதனையை அடிப்படையாகக் கொண்டவை. எனவே, மனித எண்ணத்தின் திசையையே மாற்றிவிடப்போகும் புதிய விஞ்ஞானத்திற்கு நல்வாழ்த்துக்கள்.

15 சமாதி, உயர் உணர்வு நிலை.

16 நமது உணர்வும் ஆழ்மன உணர்வும், உயர் உணர்வால் மகுடம் சூட்டப்பட்டுள்ளது, என்று ரபி இஸ்ரேல் எச். லெவின்தல் என்பவர் தனது நியூ யார்க் சொற்பொழிவில் சுட்டிக்காட்டினார். பல வருடங்களுக்கு முன்னரே, எஃப். டபிள்யு. எச். மையாஸ் என்ற ஆங்கில மனோத்துவ அறிஞர், நமது ஆழ்ந்த அடித்தளத்திலே குப்பைக் கூளமும் பொக்கிஷ மாளிகையும் மறைந்திருக்கின்றன, என்று கருத்து தெரிவித்தார். மனித இயல்பின் ஆழ்மன உணர்வை மையமாக வைத்து எல்லா ஆராய்ச்சிகளையும் செய்யும் மனோதத்துவத்திற்கு எதிராக, உயர் உணர்வைப் பற்றிய புதிய மனோதத்துவம், பொக்கிஷ மாளிகை மீதுதான் தனது முழுக் கவனத்தையும் குவித்துள்ளது. அந்த மாளிகை மட்டுமே மனிதனின் மிக உயர்ந்த, சுயநலமற்ற, வீரச் செயல்களுக்கு விளக்கம் கூற முடியும்.

17 ஞானம் மற்றும் பக்தி: இறைவனை அடைய முக்கியமான இரு மார்க்கங்கள்.

18 மனிதன் தான் விழித்திருக்கும் நிலையில் இந்திரியங்கள் மூலமாக அடையும் இன்பங்களைப் பெற கணக்கற்ற முயற்சிகளைச் செய்கிறான். இந்திரியங்களின் தொகுதி அத்தனையும் களைத்துப் போன பிறகு கையிலிருக்கும் இன்பத்தைக் கூட மறந்து தன் இயற்கையான ஆத்மாவில் ஒடுங்கி இளைப்பாறுவதற்கு வேண்டி நித்திரை செய்யத் தொடங்கி விடுகிறான். மிகப் பெரிய வேதாந்தியாகிய சங்கரர், என்றுமே வெறுப்பில் முடிவுறும் இந்திரிய இன்பத்தைவிட பல மடங்கு மேம்பட்ட சிற்றின்பம் கடந்த பேரின்ப நிலை, அடைவதற்கு மிகச் சுலபமானது என்று எழுதியுள்ளார்.

19 மாற்கு 2:27 (பைபிள்).

20 தான் விரும்பிய கணமே குருதேவர் எந்த மனிதனின் மனத்துடனும் தன்னை இணைத்துக் கொள்ள முடியும் (பதஞ்சலியின் யோக சூத்திரங்களில் 111:19 குறிப்பிடப்பட்டிருக்கும் ஒரு யோக சக்தி). மனித வானொலியாக இயங்கும் அவருடைய சக்திகளும் எண்ணங்களின் இயல்பும் 15வது அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன. (பார்க்க பக்கங்கள் 232-233).

21 மத்தேயு 6:16 (பைபிள்)

22 நான்கு வேதங்களின் சில பகுதிகளில் காணப்படும் உபநிஷதங்கள் அல்லது வேதாந்தம் (பொருள்: வேதங்களின் அந்தம்). இந்து மதத்தின் சித்தாந்த அடிப்படையாக அமைந்துள்ளவற்றின் முக்கியமான தொகுப்புகளாகும். ஷோபனோவர், அவற்றின், ஆழ்ந்த, சுயமான, உன்னத

எண்ணங்களைப் புகழ்ந்து கூறியதாவது: வேதங்களை அணுகும் வழி (உபநிஷதங்களைப் பற்றிய மேற்கத்திய மொழிபெயர்ப்புகள் மூலம்), என்னுடைய நோக்கில், கடந்த எல்லா நூற்றாண்டுகளையும் விட இந்த நூற்றாண்டு பெற்றிருக்கும் சிறப்புச் சலுகையாகும்.

23 நீதிமொழிகள் 16:32 (பைபிள்).

## அத்தியாயம் 13

# தூக்கமற்ற மகான்

"தயவுசெய்து இமயத்திற்குச் செல்ல எனக்கு அனுமதி கொடுங்கள். தடையற்ற தனிமையில் தொடர்ச்சியாக தெய்வீகத் தொடர்பை அடைய எண்ணுகிறேன்."

நான் உண்மையில் என் குருதேவரிடம் இந்த நன்றி கெட்ட சொற்களை ஒரு சமயம் கூறினேன். அவ்வப்பொழுது சாதகர்களைத் தாக்கும் இனம் புரியாத மாயையினால் பீடிக்கப் பட்டு ஆசிரமக் கடமைகள், கல்லூரிப்படிப்பு இவைகளில் ஒரு பொறுமையற்ற நிலை வளர்வதை உணர்ந்தேன். இத்தவறை சற்றே குறைத்துக் காட்டக்கூடிய சூழ்நிலை என்னவெனில் என் திட்டத்தை வெளியிட்ட சமயத்தில் எனக்கு ஸ்ரீ யுக்தேஸ்வரைத் தெரிந்து ஆறு மாதங்களே ஆகி இருந்தன. நான் அவருடைய ஓங்கி உயர்ந்த பெருமையை முழுதாகப் புரிந்து கொண்டிருக்கவில்லை.

"இமயமலையில் பல மலைவாழ் மக்கள் வாழ்கிறார்கள். அவர்களுக்கு இன்னும் கடவுள் தரிசனம் கிட்டவில்லை, என்று என் குருவின் பதில் மெதுவாகவும் சாதாரணமாகவும் வந்தது. ஞானத்தை அசைவற்ற மலையிடம் இருந்து தெரிந்து கொள்வதை விட, ஓர் ஆத்ம ஞானியிடம் இருந்து தெரிந்து கொள்வது தான் மிகவும் நல்லது," என்றார்.

குருதேவர்தான் என் ஆசிரியரே தவிர ஒரு மலை அல்ல என்பதை அவர் தெளிவாகக் குறிப்பிட்டுக் காட்டியதையும் மறுத்து, எனது வேண்டுகோளை மறுபடியும் விடுத்தேன். ஸ்ரீ யுக்தேஸ்வர் பதில் ஏதும் கூறவில்லை. அவருடைய மௌனத்தை நான் சம்மதமாக எடுத்துக் கொண்டேன். இது ஓர் ஆபத்தான - ஆனால் வசதியான - விளக்கம்.

அன்று மாலை கல்கத்தாவில் உள்ள என் வீட்டில் நான் பயண ஏற்பாடுகள் செய்யத் தொடங்கினேன். ஒரு கம்பளிக்குள் சில பொருட்களை மூட்டையாகக் கட்டும் பொழுது, என் அறை ஜன்னல் வழியாக சில வருடங்களுக்கு முன்னால் ரகசியமாக எறியப்பட்ட அதே போன்ற ஒரு மூட்டையை நினைவு கூர்ந்தேன். இதுவும் கூட ஒரு துரதிருஷ்டமான இமயப் பயணமாக இருந்துவிடுமோ என்று நினைத்தேன். முதல் தடவை என் ஆன்மீக உணர்வு உயர்ந்த நிலையில் இருந்தது; இன்றிரவு என் குருவை விட்டுச் செல்கின்றேனே என்று என் மனச்சாட்சி என்னை உறுத்தியது.

அடுத்த நாள் காலை, ஸ்காட்டிஷ் சர்ச் கல்லூரியில் என் சமஸ்கிருத பேராசிரியரான பிஹாரி பண்டிதர் என்பவரை நாடிச் சென்றேன்.

"ஐயா, நீங்கள் லாஹிரி மகாசயரின் சிறப்பு மிகுந்த சீடர் ஒருவருடன் உங்கள் நட்பைப் பற்றி எனக்குக் கூறி இருக்கிறீர்கள். எனக்கு அவருடைய விலாசத்தை தயவு செய்து கொடுங்கள்."

"நீ ராம் கோபால் மஜும்தாரைப் பற்றிக் கூறுகிறாய்

என்று நினைக்கிறேன். நான் அவரை தூக்கமற்ற மகான் என்று அழைப்பேன். அவர் எப்பொழுதுமே ஓர் ஆனந்த விழிப்பு நிலையில் இருப்பார். அவர் வீடு தாரகேஷ்வர் அருகில் ரன்பாஜ்பூரில் உள்ளது."

நான் அந்த பண்டிதருக்கு நன்றி கூறிவிட்டு உடனே தாரகேஷ்வருக்கு ரயில் ஏறினேன். நான் அந்தத் தூக்கமற்ற மகானி டமிருந்து இமயமலைச் சாரலில் தனிமையில் தியானம் செய்ய அனுமதி வாங்கி என் ஐயங்களை அமைதிப்படுத்தி விடலாமென நம்பினேன். பிஹாரி பண்டிதர் என்னிடம் ராம் கோபால், வங்காளத்தில் தனிமையான குகைகளில் பல வருடங்கள் கிரியா யோகப் பயிற்சி செய்ததன் பலனாக ஞான ஒளி பெற்றிருப்பதாகக் கூறி இருந்தார்.

தாரகேஷ்வரில் உள்ள பிரசித்திப் பெற்ற கோயிலுக்கு நான் சென்றேன். கத்தோலிக்கர்களுக்கு ஃபிரெஞ்சு நாட்டில் உள்ள லூர்து திருக்கோயில் எப்படியோ அப்படியே இந்துக்களுக்குத் தாரகேஷ்வர் மிகப் புனிதமான க்ஷேத்திரமாகும். கணக்கற்றவர்களுக்குத் தாரகேஷ்வரில் எண்ணிக்கையில் அடங்காத வியாதிகள் தீர்க்கப்பட்டுள்ள அற்புதங்கள் நடந்திருக்கின்றன. என் குடும்பத்தில் ஒருவருக்குக்கூட அந்த அற்புதம் நடந்துள்ளது.

"நான் ஒரு வாரம் அங்கிருந்த கோயிலிலேயே உட்கார்ந்திருந்தேன், "என்று என் மூத்த சித்தி ஒரு சமயம் என்னிடம் கூறினார். "நான் முழுமையாகப் பட்டினி கிடந்து உன் சித்தப்பா சாரதாவின் தீராதப் பிணி

குணமாக வேண்டுமென வேண்டிக் கொண்டேன். ஏழாவது நாள், ஒரு பச்சிலை என் கையில் தோன்றி யதைக்கண்டேன்! அதிலிருந்து கஷாயம் இறக்கி நான் உன் சித்தப் பாவிற்குக் கொடுத்தேன். அவர் வியாதி உடனே மறைந்ததுடன் திரும்ப தலை காட்டவேயில்லை," என்றார்.

நான் புனித தாரகேஷ்வர் கோயிலில் நுழைந்தேன். அங்கு கர்ப்பகிருகத்தில் ஒரு வட்டமான கல்(லிங்கம்)லைத் தவிர வேறு எதுவுமில்லை. அதன் சுற்று, ஆதியும் அந்தமுமில்லாமல் இருப்பது, அளப்பரிய பரத்தை சுட்டிக் காட்டுவதற்கு ஏற்றதாக அமைந்திருந்தது. பாரதத்தில் எழுத்தறிவில்லாத குடியானவனால் கூட பிரபஞ்சத்தின் உயர்ந்த தத்துவங்களைப் புரிந்து கொள்ள முடியும்; உண்மையில், சில சமயங்களில், மேலை நாட்டவர்கள் அவனை தத்துவ எண்ணங்களில் மட்டுமே வாழ்ந்து வருவதாகக் குற்றம் சாட்டுவதும் உண்டு.

என் மனநிலை அப்பொழுது வைராக்கியமாக இருந்ததனால், அந்தக் கல் சின்னத்தின் முன்னால் எனக்கு வணங்கத் தோன்றவில்லை. இறைவனை ஆத்மாவுக்குள் மட்டுமே தேட வேண்டும் என்று நான் நினைத்துக் கொண்டேன்.

நான் மண்டியிட்டு வணங்காமலேயே கோயிலை விட்டுக் கிளம்பி அடுத்தாற் போலிருந்த ரன்பாஜ்பூர் கிராமத்தை நோக்கி வேகமாக நடந்தேன். எனக்குச் சரியான வழி தெரியவில்லை. நான் ஒரு வழிப்

போக்கனை விசாரித்ததும் அவன் நீண்ட யோசனையில் ஆழ்ந்தான்.

"நாற்சந்தியை அடைந்ததும் வலது பக்கம் திரும்பி போய்க் கொண்டே இருங்கள்," என்று தெய்வ வாக்குப் போல முடிவில் கூறினான்.

அவன் வழிகாட்டியபடி நான் ஒரு வாய்க்கால் கரையோரமாகப் போய்க் கொண்டிருந்தேன். இருள் கூடி விட்டது. காட்டின் எல்லையில் இருந்த கிராமத்தில் மின்மினிப் பூச்சிகள் நிரம்பியிருந்தன; அருகே இருந்த குள்ளநரிகளின் ஊளைகளும் கேட்டன. இரவு நிலா மிகவும் மங்கலாக இருந்ததினால் அதுவும் உதவிகரமாக இல்லை! நான் தட்டுத் தடுமாறி இரண்டு மணிநேரம் நடந்தவாறு இருந்தேன்.

அப்பாடா! ஒரு பசுவின் மணியோசை வரவேற்கும் வகையில் ஒலித்தது! நான் திரும்பத் திரும்பக் கூப்பிட்டதைக் கேட்டு ஒரு குடியானவன் என்னருகில் வந்தான்.

"நான் ராம்கோபால் பாபுவைத் தேடி வந்திருக்கிறேன்," என்றேன்.

"எங்கள் கிராமத்தில் அப்படிப்பட்ட ஒருவரும் கிடையாது," அந்த மனிதனின் குரல் சிடுசிடுப்புடன் இருந்தது. நீங்கள் பொய் கூறும் துப்பறிவாளன் போலும், என்றான்.

அரசியல் விஷயமாகக் கவலைக் கொண்டிருக்கும் அவன் மனத்திலுள்ள சந்தேகத்தைப் போக்கும் நம்பிக்கையில் நான் சங்கடமான என் நிலையை அவன்

இரக்கம் கொள்ளும் படி எடுத்துக் கூறினேன். அவன் என்னைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று உபசரித்தான்.

"ரன்பாஜ்பூர் இங்கிருந்து வெகு தூரத்தில் உள்ளது. அந்த நாற்சந்தியில் நீங்கள் இடதுபுறம் திரும்பி இருக்க வேண்டும், வலது புறம் திரும்பியிருக்கக்கூடாது," என்றான்.

எனக்கு முதலில் வழி சொன்னவன் பயணிகளுக்கு நிச்சயம் தொல்லை தருபவன் என்று வருத்தத்துடன் நினைத்துக் கொண்டேன். புழுங்கலரிசி, பருப்பு, மற்றும் உருளைக்கிழங்குடன் வாழைக்காய் சேர்த்த கறி இவற்றுடன் சுவையான சாப்பாட்டிற்குப் பிறகு நான் நடுமுற்றத்தை அடுத்திருந்த ஒரு சிறு குடிசையில் தூங்கினேன். தூரத்தில் கிராமத்தினர் மிருதங்கம்[1] மற்றும் தாளங்களின் இரைச்சலான சத்தத்துடன் பாடிக்கொண்டிருந்தனர். அந்த இரவு தூக்கம் சரியாகவே இல்லை. தனிமையிலிருக்கும் யோகி ராம் கோபாலை அடைய வழி காட்டப்பட வேண்டுமென்று ஆழ்ந்து பிரார்த்தனை செய்தேன்.



ராம் கோபால் மஜும்தார் "தூக்கமற்ற மகான்"

விடியற்காலையின் ஒளி என் குடிசையின்

கீற்றுக்களினூடே நுழையும் பொழுதே ரன்பாஜ்பூருக்குக் கிளம்பிவிட்டேன். நெல் வயல்களைத் தாண்டி அறுவடை செய்த நெற்பயிரின் குத்தும் அடித் தண்டுகளினூடேயும் உலர்ந்த களிமண் மேடுகளைச் சுற்றிக் கொண்டும் சிரமப்பட்டு வெகுதூரம் நடந்தேன். அவ்வப்பொழுது நான் சந்திக்கும் விவசாயிகள் அனைவரும் வித்தியாசமே இல்லாமல் ரன்பாஜ்பூருக்கு "ஒரு குரோஷா" (இரண்டு மைல்கள்) தூரந்தான் செல்ல வேண்டும் என்றார்கள். ஆறு மணி நேரத்தில் சூரியன் தொடு வானத்திலிருந்து உச்சிக்கு வெற்றிகரமாக பிரயாணம் செய்துவிட்டான். ஆனால் நான் ரன்பாஜ்பூரிலிருந்து எப்போதும் ஒரு குரோஷா தூரத்திலேயேதான் இருப்பேன் என்று நினைக்கத் தொடங்கினேன்.

மதியம் தாண்டிய பிறகும் என் உலகம், இன்னும் முடிவே இல்லாத நெல் வயல்களாகவே இருந்தது. வானத்தில் இருந்து தப்ப முடியாதபடி வெப்பம் வீச நான் கிட்டடத்தட்ட விழுந்துவிடும் நிலையில் இருந்தேன். அப்பொழுது ஒரு மனிதர் என்னை நோக்கி நிதானமாக நடந்து வருவதைக் கண்டேன். நான் என் வழக்கமான கேள்வியை எங்காவது கேட்டு, ஒரு குரோஷாதான் என்ற பதில் வந்துவிடுமே என்ற பயத்தில் கேட்கவே துணியவில்லை.

அந்தப் புது மனிதர் என்னருகில் நின்றார். குள்ளமாகவும் ஒல்லியாகவும் இருந்த அவர் அசாதாரணமாகத் துளைக்கும் கருத்த கண்களைத் தவிர பார்ப்பதற்கு மிகச் சாதாரணமாகவே தென்பட்டார்.

"நான் ரன்பாஜ்பூரை விட்டுக்கிளம்ப எண்ணி இருந்தேன். ஆனால் உனது குறிக்கோள் நல்லது என்பதால் உனக்காக காத்திருந்தேன், என்று வியப்புடன் கூடிய என் முகத்தினருகில் அவர் விரலை அசைத்துக் கூறினார். முன்னறிவிப்பில்லாமல் என்னைப் பிடித்துவிடலாமென்று மிகப் புத்திசாலித்தனமாகத் தீர்மானித்து விட்டாயோ? என் விலாசத்தை உன்னிடம் கொடுக்க அந்தப் பேராசிரியர் பிஹாரிக்கு அதிகாரமேயில்லை, "என்றார்.

இந்த மகானின் முன்னிலையில் என்னை அறிமுகப் படுத்திக் கொள்வது வெறும் பேச்சாகவே முடியும் என்று நினைத்து என்னை வரவேற்ற முறையைக் கண்டு கொஞ்சம் வருந்தி வாயடைத்து நின்றேன். அவருடைய அடுத்த கேள்வி பட்டென்று வந்தது.

"இறைவன் எங்கிருக்கிறான் என்று நீ நினைக்கிறாய்? சொல் என்னிடம்."

"ஏன், அவர் எனக்குள்ளேயும், எங்குமே இருக்கிறார்," என்றேன். நான் என் மனக்குழப்பத்தைப் போலவே குழப்பத்துடன்தான் தென்பட்டிருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை.

"எங்கும் நிறைந்திருக்கிறான் இல்லையா?" என்று கூறி அந்த யோகி சிரித்தார். "அப்படியெனில் இளைய ஐயாவே, தாரகேஷ்வர் கோயிலில் கல் சின்னத்திலிருந்த எங்கும் நிறைந்த பரம்பொருளின் முன், நேற்று நீ ஏன் வணங்கவில்லை?[2] உன்னுடைய கர்வம்தான் வலது, இடது என்ற நுணுக்கமான வித்தியாசத்தைப் பற்றிக்

கவலைப்படாத அந்த வழிப் போக்கனால் தவறான வழிகாட்டுதலான தண்டனை கிடைக்கக் காரணமானது. இன்றுகூட பயணத்தில் வேண்டிய அளவு சிரமப்பட்டுவிட்டாய், இல்லையா?"

அவர் கூறியதை நான் முழுமனதுடன் ஆமோதித்து, எங்கும் நிறைந்திருக்கும் ஒரு கண்ணானது, எனக்கு முன்னே இருந்த விசேஷமற்ற அந்த உடம்புக்குள் மறைந்துள்ளதைக் கண்டு ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்து நின்றேன். அந்த யோகியிடமிருந்து நலம் பயக்கும் சக்தி வெளிப்பட்டு கொதிக்கும் அந்த வயலில் அக்கணமே நான் புத்துணர்ச்சி பெற்றேன்.

"பக்தன், தன் வழி ஒன்றுதான் இறைவனிடம் செல்லும் வழி என்று எண்ணலாம். லாஹிரி மகாசயர் நமக்குக் கூறியது போல் யோகத்தின் மூலம் தெய்வீகத் தன்மையை நமக்குள்ளேயே காண்பதுதான் சந்தேகமின்றி மிக உயர்ந்த வழி. ஆனால் இறைவனை நமக்குள்ளே கண்டவுடன் நாம் சீக்கிரத்திலேயே அவனை வெளியேயும் காண்கிறோம். தாரகேஷ்வரிலும் அதைப் போன்ற பிற இடங்களிலுமுள்ள புனிதக் கோயில்கள் ஆன்மீக சக்தியின் அணு மையங்களாக, உரிய முறையில் வணங்கப்படுகின்றன," என்றார் அவர்.

அந்த யோகியின் கண்டிக்கும் மனப்பாங்கு மறைந்தது. அவரது கண்கள் இரக்கத்துடன் மென்மையாயின. அவர் என்னைத் தட்டிக் கொடுத்தார்.

"இளம் யோகியே, நீ உன் குருதேவரிடமிருந்து ஓடி வந்திருப்பதைக் காண்கிறேன். உனக்கு

வேண்டியதெல்லாம் அவரிடமே உள்ளன. நீ அவரிடமே திரும்ப வேண்டும்." அவர் தொடர்ந்தார், மலைகள் உன் குருவாக இருக்க முடியாது. இரண்டு நாட்களுக்கு முன்பு ஸ்ரீ யுக்தேஸ்வர் கூறிய அதே கருத்து!

"மகான்கள் மலைகளில் மட்டும்தான் வசித்தாக வேண்டுமென்ற பிரபஞ்சக் கட்டாயம் எதுவும் இல்லை." என் தோழர் என்னை ஒரு கேள்விக்குறியுடன் பார்த்தார். "இந்தியா மற்றும் திபெத்தில் உள்ள இமயமலைக்கு முனிவர்களின் மீது ஏகபோக உரிமை இல்லை. ஒருவன் தனக்குள்ளேயே உள்ளதை அறிவதற்கு சிரமப்படவில்லை எனில், உடலை அங்குமிங்குமாகக் கொண்டு செல்வதனால் அதைக் கண்டு பிடித்துவிட முடியாது. பக்தன் ஞானத்தை அடைய உலகின் எல்லைகளுக்குக் கூடச் செல்வதற்கு எப்பொழுது தயாராகிறானோ அப்பொழுது அவனுடைய குரு அருகிலேயே பிரசன்னமாகிறார்."

காசி ஆசிரமத்தில் என் பிரார்த்தனையைத் தொடர்ந்து நான் ஸ்ரீ யுக்தேஸ்வரை ஒரு நெரிசலான சந்தில், சந்தித்ததை ஞாபகப்படுத்திக் கொண்டு அவர் கூறியதை மௌனமாக ஒப்புக்கொண்டேன்.

"ஓர் இடத்தில் கதவை முடிக்கொண்டு தனிமையாக அமர்ந்து கொள்ள ஒரு சிறு அறை உனக்குள்ளதா?"

"ஆமாம்," என்றேன். இந்த யோகி பொது விஷயத்திலிருந்து வெகு வேகமாகத் தனி விஷயத்திற்கு வருகிறாரென்று எனக்குத் தோன்றியது.

"அதுதான் உன் குகை," என்று கூறி அந்த யோகி என்

மீது செலுத்திய ஒளி வீசும் பார்வையை நான் என்றுமே மறக்கவில்லை. "அதுதான் உன் புனிதமான மலை. அங்குதான் நீ இறைவனின் ராஜ்யத்தைக் காண்பாய்."

அவரது எளிய சொற்கள் காலங்காலமாய் என்னை ஆட்கொண்டிருந்த இமயமலை பற்றிய எண்ணத்தை அக்கணமே அழித்தது. கொதிக்கும் ஒரு நெல் வயலில் மலைகள் மற்றும் முடிவற்ற பனிச் சிகரங்கள் என்ற கனவில் இருந்து நான் விழித்துக் கொண்டேன்.

"சின்னையா, உன் தெய்வீகத் தாகம் புகழ்ச்சிக்குரியது. நான் உன்னை மிகவும் நேசிக்கிறேன்." ராம் கோபால் என் கையைப் பிடித்து அங்கேயே காட்டு இடைவெளியிலிருந்த அற்புதமான ஒரு குக்கிராமத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கு சூளையில் இடாமல் வெயிலில் உணக்கிய செங்கல்லால் ஆன வீடுகள், தென்னங்கீற் றினால் வேயப்பட்டு அவைகளின் வாயில்கள் புத்தம் புதிய மலர்களினால் அலங்கரிக்கப்பட்டு இருந்தன.

அந்த யோகி தனது சிறிய குடிலில் எளிமையான மூங்கில்களாலான ஒரு திண்ணையில் என்னை உட்கார வைத்தார். அவர் எனக்கு இனிப்பான எலுமிச்சம் பழச்சாறும், கல்கண்டும் கொடுத்த பிறகு நாங்கள் அவருடைய முற்றத்தில் நுழைந்து பத்மாசனத்தில் அமர்ந்தோம். தியானத்தில் நான்கு மணிநேரம் கழிந்தது. நான் கண்களைத் திறந்து பார்த்தப் பொழுது நிலவின் ஒளியில் திகழ்ந்த அந்த யோகியின் உருவம் இன்னும் அசையாமல் இருப்பதைக் கண்டேன். நான் என்

வயிற்றிடம், மனிதன் உணவினால் மட்டும் வாழ்வதில்லை என்பதைக் கடுமையாக நினைவுபடுத்திக் கொண்டிருந்த பொழுது ராம் கோபால் தன் ஆசனத்திலிருந்து எழுந்தார்.

"உனக்கு நல்ல பசி என்று தெரிகிறது. உணவு சீக்கிரமே தயாராகிவிடும்," என்றார்.

முற்றத்திலேயே இருந்த ஒரு மண் அடுப்பை அவர் மூட்டினார். வெகு சீக்கிரத்தில் நாங்கள் பெரிய வாழை இலைகளில் பரிமாறப்பட்ட பருப்பும் சாதமும் சாப்பிட்டோம். சமையல் வேலையில் என் உதவியை அவர் அன்புடன் மறுத்துவிட்டார். விருந்தினர் தெய்வத்திற்குச் சமம், (அதிதி தேவோ பவ) என்கிற ஓர் இந்துப் பழமொழி காலங்காலமாக இந்தியாவில் பக்தி சிரத்தையுடன் கடைபிடிக்கப்பட்டு வருகிறது. என் பிற்கால உலகப் பயணங்களில் விருந்தினர்களை உபசரிப்பதில் அதே மரியாதை பல நாடுகளின் கிராமப்புறங்களில் இருப்பது கண்டு எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. கணக்கற்ற புது விருந்தாளிகளின் வரவினால் ஒரு நகரவாசியின் விருந்தோம்பல் பண்பு வெகுவாகக் குறைந்து விடுகிறது.

மனிதர்களின் நடமாட்டம் அனேகமாகக் கற்பனைக்கு எட்டாத அளவு தூரத்தில் உள்ளதாக, அச்சிறு காட்டுக் கிராமத்தில் தனியாக நான் அந்த யோகியினருகில் அமர்ந்த பொழுது தோன்றியது. அந்தக் குடிலின் அறையில் புதிரான முறையில் ஒரு குளிர்ந்த வெளிச்சம் பரவி இருந்தது. ராம் கோபால் சில கிழிந்த

கம்பளங்களால் தரையில் என் படுக்கையைத் தயார் செய்தார். பிறகு அவர் ஒரு பாயில் அமர்ந்தார். அவருடைய ஆன்மீகக் காந்தத்தால் கவரப்பட்டு வேண்டுகோள் ஒன்றை விடுக்கத் துணிந்தேன்.

"ஐயா, எனக்கு ஏன் நீங்கள் சமாதி நிலை அருளக் கூடாது?"

"அன்பனே, உனக்குத் தெய்வீகத் தொடர்பு கொடுப்பதில் எனக்கு மிக்க மகிழ்ச்சியே. ஆனால் அதை அளிக்க எனக்கு உரிமை இல்லை. "அந்த யோகி அரைக் கண் மூடிய நிலையில் என்னைப் பார்த்தார். "உன் குருதேவர் சீக்கிரம் உனக்கு அந்த அனுபவத்தை அருளுவார். உன் உடல் இன்னும் அதற்குப் பக்குவப்படவில்லை. ஒரு சிறு மின்சார பல்பில் அதிக அளவு மின் அழுத்தத்தைச் செலுத்தினால் அது வெடித்துவிடும். அதைப்போல உன் நரம்புகள் பிரபஞ்ச மின் ஓட்டத்தைத் தாங்க தயாராயில்லை. நான் இப்போதே அந்தப் பேரானந்தத்தை வழங்கினால் உன் உடலிலுள்ள ஒவ்வொரு செல்லும் நெருப்பிற்பட்டது போல் நீ எரிந்து விடுவாய்," என்றார்.

"நீ என்னிடமிருந்து ஞான ஒளி பெற விரும்புகிறாய், அந்த யோகி சிந்தனையுடன் தொடர்ந்தார், நான் மிக அற்பமானவன்; நான் செய்திருக்கும் மிகச் சிறிய அளவு தியானத்தினால் நான் இறைவனைத் திருப்திப் படுத்துவதில் எந்த அளவிற்கு வெற்றி பெற்றிருக்கிறேன், முடிவில் என் கணக்குத் தீர்க்கப்படும் பொழுது அவன் கண்களில் நான் எந்த அளவு தகுதி உடையவனாக

இருப்பேன் என்றெல்லாம் நான் யோசித்துக்கொண்டு இருக்கிறேன்."

"ஐயா, நீங்கள் வெகு காலமாக ஒருமனதாக இறைவனை நாடி வருகிறீர்களில்லையா?"

"நான் அதிகம் செய்யவில்லை. பிஹாரி என் வாழ்க்கையைப் பற்றி உனக்குக் கூறி இருக்க வேண்டும். இருபது ஆண்டுகள் நான் ஒரு ரகசியமான குகையில் தங்கி ஒரு நாளைக்குப் பதினெட்டு மணி நேரம் தியானம் செய்தேன். பிறகு நான் எளிதில் அணுக முடியாத ஒரு குகைக்குப் போய், அங்கு இருபத்தைந்து வருடங்கள் தங்கி தினமும் இருபது மணிநேரம் யோகத்தில் ஐக்கியமாயிருந்தேன். நான் இறைவனுடன் என்றும் ஒன்றியிருந்ததால், எனக்குத் தூக்கம் தேவைப்படவில்லை. சாதாரண ஆழ்மன நிலையில் கிடைக்கும் முழுமை அற்ற அமைதியை விட உயர் உணர்வு நிலையின் முழு அமைதியில் என்னுடல் அதிகமாக ஓய்வுற்றிருந்தது.

"தூக்கத்தின் பொழுது நம் தசைநார்களுக்கு ஓய்வு கிடைக்கிறது. ஆனால் இதயம், சுவாச கோசம், இரத்த ஓட்டமண்டலம் எல்லாம் தொடர்ந்து வேலை செய்தபடிதான் இருக்கின்றன. அவைகளுக்கு ஓய்வு கிடைப்பதில்லை. உயர் உணர்வு நிலையில் எல்லா உள் உறுப்புகளும் உயிரோட்டத்தை நிறுத்தி வைத்துவிடுகின்றன. அந்நிலையில் அவைகளுக்கு பிரபஞ்சத்தின் சக்தியினால் மின்சக்தி ஊட்டப்படுகின்றது. அந்த முறையினால் வருடக் கணக்கில் தூங்க வேண்டிய

அவசியம் இல்லை என நான் கண்டேன். நீயும், நித்திரைத் தேவை இல்லை எனக் கூறும் காலம் வரப்போகிறது."

"அடே அப்பா! நீங்கள் இவ்வளவு காலம் தியானம் செய்த பிறகு கூட இறைவனின் அருளைப்பற்றி நிச்சயமாகச் சொல்ல முடியவில்லையா? என்று நான் மிகுந்த ஆச்சரியத்துடன் குறிப்பிட்டேன். பிறகு எங்களைப் போலுள்ள சாதாரண மனிதர்களின் கதி என்ன?"

"என் அன்புச் சிறுவனே, தெய்வம் எல்லையற்றது என்பதை நீ காணவில்லையா? அவனை நாற்பத்தைந்து வருடத் தியானத்தினால் முழுவதும் அறிந்து கொண்டுவிட முடியும் என்று எதிர்பார்ப்பது அபத்தமாகத் தோன்றவில்லையா? ஆனாலும் பாபாஜி[3] ஒரு சிறு அளவு தியானம் கூட நம்மை மரண நிலை மற்றும் மரணத்திற்குப் பின் ஏற்படும் நிலை ஆகியவற்றின் பயத்திலிருந்து காப்பாற்றும் என்று உறுதி கூறியிருக்கிறார். உன் ஆன்மீகக் குறிக்கோளை சிறு மலைகளின் மேல் நாட்டாதே. ஆனால் பூரணமான தெய்வீகப் பேறு என்னும் விண்மீனை அடைவதே உன் குறிக்கோளாகக் கொள். கடுமையாக உழைத்தால் நீயும் அதை அடைய முடியும்."

அந்நிலையைப் பற்றி நினைத்து மிக உற்சாகமடைந்த நான் ஆர்வமூட்டும் அவர் சொற்களை மேலும் கேட்க விரும்பினேன். அவர் லாஹிரி மகாசயரின் குரு பாபாஜி யை முதல் முறை சந்தித்த

ஓர் அதிசயமான கதையைப் பற்றி விவரித்தார். கிட்டத்தட்ட நடுநிசியில் ராம் கோபால் மௌனமானார். நான் என் கம்பளியில் படுத்தேன். என் கண்களை மூடியதும் நான் மின்னல் ஒளி வீசுவதைக் கண்டேன். எனக்குள்ளே ஒரு பெரிய இடம் உருக்கி வார்த்த ஒளியினால் நிரம்பியது. நான் கண்களைத் திறந்து பார்த்தேன். அதே ஜொலிக்கும் ஒளியைக் கண்டேன். நான் என் மனக் கண்ணால் பார்த்துக் கொண்டிருந்த எல்லையற்ற ஒளி வெள்ளத்தின் ஒரு பாகமாக அந்த அறை மாறியது.

அந்த யோகி, நீ ஏன் அப்பா தூங்கவில்லை? என்றார்.

"ஐயா, என் கண்களை, மூடினாலும் திறந்தாலும் என்னைச் சுற்றி ஒரு மின்னல் பளீரென்று ஒளிவீசிக் கொண்டிருக்கையில் நான் எப்படித் தூங்க முடியும்?"

"இந்த அனுபவத்தை அடைவதற்கு உனக்கு ஆசீர்வாதம் கிடைத்திருக்கிறது. ஆன்மீகக் கதிர்வீச்சுகள் சுலபமாகப் பார்க்க முடியாதவை." அந்த யோகி இன்னும் சில அன்பான வார்த்தைகளைப் பேசினார்.

காலை விடிந்ததும் ராம் கோபால் எனக்கு கல்கண்டு கட்டிகள் கொடுத்து என்னைக் கிளம்ப வேண்டும் என்று கூறினார். அவரிடம் விடை பெற்றுக் கிளம்புவதற்கு எனக்கு மனம் வரவில்லை. கண்ணீர் என் கன்னங்களில் வடிந்தது.

"நான் உன்னை வெறுங்கையுடன் அனுப்பமாட்டேன், அந்த யோகி மிருதுவாகக் கூறினார். உனக்காக ஒன்று செய்கிறேன்."

அவர் புன்சிரிப்புடன் என்னை உற்று நோக்கினார். நான் அந்த இடத்திலேயே வேரூன்றியது போல் அசைவற்று நின்று விட்டேன். சாந்தமான அலையதிர்வுகள் அந்த யோகியிடமிருந்து கிளம்பி என்னை அப்படியே சூழ்ந்தது. எனக்கு அவ்வப்பொழுது பல வருடங்களாக விட்டு விட்டு தொல்லை கொடுத்து வந்த முதுகுவலி, உடனே குணமாயிற்று.

ஒளியார்ந்த ஆனந்தக் கடலில் மூழ்கிப் புத்துணர்ச்சி பெற்ற நான் என் அழுகையை நிறுத்தினேன். ராம் கோபாலின் பாதங்களில் பணிந்த பிறகு நான் காட்டை அடைந்து அதன் சிக்கலான உஷ்ணப் பிரதேசங்களின் வழியே சென்று பல நெல் வயல்களையும் கடந்து தாரகேஷ்வரை அடைந்தேன்.

அங்கு நான் இரண்டாவது தடவையாக அந்தப் புகழ் பெற்ற புனித ஸ்தலத்திற்கு யாத்திரை செய்து கர்ப்பக் கிரகத்திற்கு முன்னால் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினேன். அந்த வட்டக்கல் (லிங்கம்) என் மனக் கண் முன்னால் அண்ட கோளங்களாக விரிந்து பரந்தது. வளையத்திற்குள் வளையமாக, பிரிவுக்கப்பால் பிரிவாக எல்லா இடங்களிலுமே தெய்வீகம் நிரம்பியது.

நான் ஒரு மணி நேரத்திற்குப் பிறகு கல்கத்தாவிற்கு மகிழ்ச்சியுடன் ரயிலேறினேன். என் பயணங்கள், உயர்ந்த மலைச் சிகரங்களில் முடியாமல், இமயமலைப் போன்று உயர்ந்த என் குருதேவரின் முன்னிலையில்தான் முற்றுப் பெற்றன.

---

1 பக்திப் பாடல்கள் (கீர்த்தனைகள்) சமயத்திலும் பூஜை மற்றும்

ஊர்வலத்தின் பொழுதும் கையினால் தட்டப்படும் மத்தளம் முதலிய வாத்தியங்கள் வாசிக்கப்படும்.

2 எதற்கும் வணங்காதவன், தன்னுடைய பாரத்தையே தாங்கிக் கொள்ள முடியாது- டஸ்டோயெவ்ஸ்கி, "தி பொஸஸ்ட்."

3 (பார்க்க பக்கங்கள் 456-459.)

## அத்தியாயம் 14

# பேரண்ட உணர்வின் ஓர் அனுபவம்

"குருஜி, நான் வந்து விட்டேன்," என்றபோது வெட்கிய என் முகம், என் மனோநிலையை வார்த்தைகளைவிட தெளிவாகக் காட்டியது.

"சமயலறைக்குச் சென்று உண்பதற்கு என்ன இருக்கிறதென்று பார்க்கலாம்." ஸ்ரீ யுக்தேஸ்வரின் பேச்சு ஏதோ நாங்கள் சில மணிநேரமே – நாட்கள் அல்ல – பிரிந்திருந்ததைபோன்று சர்வ சாதாரணமாக இருந்தது.

"குருதேவா, இங்கு எனது கடமைகளிலிருந்து திடீரெனச் சென்றதினால், நான் உங்களை ஏமாற்றத்திற்கு உள்ளாக்கி இருக்கவேண்டும்; நீங்கள் என்னிடம் கோபமாக இருப்பீர்களென்று நான் நினைத்தேன்."

"இல்லை, இல்லவே இல்லை! தடைசெய்யப்பட்ட ஆசைகளிலிருந்துதான் கோபம் பிறக்கும். நான் மற்றவர்களிடமிருந்து எதையும் எதிர்பார்ப்பதில்லை. ஆதலால் அவர்களுடைய செயல்கள் என் விருப்பத்திற்கு மாறுபட்டதாக இருக்கமுடியாது. நான் உன்னை என் சொந்த விஷயங்களுக்காக உபயோகப்படுத்திக்கொள்ள மாட்டேன். உனது உண்மையான மகிழ்ச்சியில்தான் என் மகிழ்ச்சி உள்ளது."

"ஐயா, தெய்வீக அன்பைப்பற்றி தெளிவற்ற

முறையில் கேள்விப்படுகிறோம். ஆனால் தெய்வகுணம் படைத்த தங்களி டமிருந்து அதற்கு கண்கூடான உதாரணத்தை உண்மையிலேயே இன்று காண்கிறேன். இந்த உலகத்தில் எந்த முன்னறிவிப்புமில்லாமல் தன் பெற்றோரின் தொழிலை விட்டுச்சென்றால் ஒரு தந்தைகூடத் தன் மகனை சுலபமாக மன்னிக்க மாட்டார். ஆனால் நான் அரைகுறையாக விட்டுச்சென்ற வேலைகளினால் மிகுந்த அசௌகரியம் ஏற்பட்டு இருக்கவேண்டும். எனினும் நீங்கள் ஒரு சிறு வெறுப்பைகூட காண்பிக்கவில்லையே."

நாங்கள் ஒருவரையொருவர் நீர் மல்கிய கண்களுடன் நோக்கினோம். ஒரு பேரானந்த அலை என்னைச் சூழ்ந்தது. இறைவன் குருவின் உருவத்தில் என் இதயத்தின் குறுகிய அன்பார்வத்தை பிரபஞ்சப் பேரன்பாக விரிவுபடுத்துவதை உணர்ந்தேன்.

சில நாட்களுக்குப் பிறகு நான் காலியாயிருந்த குருதேவரின் அமரும் அறையை அடைந்தேன். நான் தியானம் செய்ய திட்டமிட்டேன். ஆனால் என் உயர்ந்த நோக்கம் கட்டுக்கடங்காத எண்ணங்களால் நிறைவேறவில்லை. வேடன் முன்னால் பறவைகள் சிதறுவதுபோல் அவை சிதறின.

"முகுந்தா!" ஸ்ரீ யுக்தேஸ்வரின் குரல் தூரத்து பால்கனியிலிருந்து வந்தது. என் எண்ணங்களைப் போலவே கீழ்ப்படிய மறுக்கும் உணர்வு எனக்கும் ஏற்பட்டது. "குருதேவர் எப்பொழுதும் என்னைத் தியானம் செய்ய தூண்டுகிறார்." நான் எனக்குள்ளேயே

முணுமுணுத்துக்கொண்டேன்." நான் அவருடைய அறைக்கு ஏன் வந்தேனென்று அவருக்குத் தெரிந்திருக்கும் பொழுது என்னை ஏன் அவர் தொந்தரவு செய்யவேண்டும்?"

அவர் என்னை மறுபடியும் அழைத்தார். நான் பிடிவாதத்துடன் மௌனமாக இருந்தேன். மூன்றாவது தடவை அவர் குரலில் கண்டனம் இருந்தது.

"ஐயா, நான் தியானம் செய்து கொண்டிருக்கிறேன்," நான் ஆட்சேபத்துடன் இரைந்து கூறினேன்.

"நீ எப்படி தியானம் செய்கிறாயென்று எனக்குத் தெரியும்." என் குரு இரைந்தார். "புயலில் அகப்பட்ட இலைகள் போல் உனது மனம் பறந்துகொண்டிருக்கிறது! இங்கு என்னிடம் வா."

என் நிலை தடைசெய்யப்பட்டு அம்பலப்படுத்தப்பட்ட வருத்தத்துடன் நான் அவரருகில் சென்றேன்.

"ஐயோ பாவம், நீ விரும்பியதை மலைகள் கொடுக்கமுடியாது, "குருதேவர் ஆறுதலுடன் செல்லமாகப் பேசினார். அவரது அமைதியான பார்வை ஆழங்காண முடியாததாக இருந்தது. "உன் நெஞ்சார்ந்த ஆசை நிறைவேறும்," என்றார்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் புதிர்போட்டு பேசுவது அபூர்வம். நான் குழம்பினேன். அவர் மெதுவாக என் மார்பில் இதயத்தின் மேல்பகுதியில் தட்டினார்.

என் உடல் அசையாமல் வேரோடி நின்றது. மூச்சு, சுவாசகோசங்களிலிருந்து ஒரு பெரிய காந்தத்தினால் இழுக்கப்பட்டதைப்போல வெளியேற்றப்பட்டது.

ஆத்மாவும் மனமும் உடனே தங்கள் ஸ்தூல தளையை இழந்து என் உடலின் ஒவ்வொரு துவாரத்திலிருந்தும் துளைக்கும் ஒளி வெள்ளமாக வெளிப்பட்டு பாய்ந்தன. என் உடல் இறந்துவிட்டதைப்போல் தோன்றியது. ஆயினும் என்னுடைய அதீதமான உணர்வு நிலையில், இதைவிட முழுமையாக உயிருள்ளவனாக என்றுமே இருந்ததில்லை. என் உணர்வுநிலை ஓர் உடலுடன் மட்டும் ஒன்றியிராமல் எங்கும் சூழ்ந்துள்ள அணுக்களைத் தழுவியவாறு இருந்தது. தூரத்திலுள்ள தெருக்களில் நடமாடும் மனிதர்கள் விரிந்த என் சொந்த எல்லைக்குள்ளேயே மென்மையாக நடமாடுவதாகத்தோன்றியது. செடிகள் மற்றும் மரங்களின் வேர்கள் மண்ணில் ஊடுருவிச் செல்லும் ஒரு மங்கலான ஒளியின் வழியே தோன்றின. அவைகளுடைய சாற்றின் உள்ளோட்டத்தை நான் கண்டேன்.

அந்தச் சுற்றுப்புறம் முழுதும் என் முன்னால் தெளிவாகத் தெரிந்தது. என் சாதாரண முன்னோக்கிய பார்வை இப்போது பெரிய கோளவடிவப் பார்வையாகி ஒரே சமயத்தில் எல்லாவற்றையும் பார்க்கக்கூடியதாக மாறிற்று. என் தலையின் பின்பக்கம் மூலமாக ராய்காட் சந்தில் வெகு தூரத்தில் நடந்து கொண்டிருக்கும் மனிதர்களைக் கண்டேன்; மெதுவாக நடந்துவரும் ஒரு வெள்ளைப் பசுவையும் கண்டேன். அது ஆசிரமத்துத் திறந்த வாயிலை அடைந்ததும் நான் அதை என் இரு ஸ்தூல கண்களால் காண்பது போன்று கண்டேன். அது

முற்றத்து செங்கல் சுவருக்குப் பின்னால் சென்ற பிறகும் அதைத் தெளிவாகக் கண்டேன்.

விரிந்து பரந்து தோன்றிய என் பார்வையில் எல்லா பொருட்களும் நடுங்கி வேகமான சலனப் படங்களைப்போல் அதிர்ந்தன. என் உடல், குருதேவரின் உடல், தூண்களுடன் கூடிய முற்றம், மரச்சாமான்கள், தரை, மரங்கள் மற்றும் சூரிய ஒளி எல்லாம் அவ்வப்பொழுது மிகப்பலமாக அதிர்ந்து கடைசியில் எல்லாம் ஒரே ஒளிக்கடலில் உருகிக்கரைந்தன - தண்ணீர் பாத்திரத்தில் போடப்பட்ட சர்க்கரைக் கட்டிகள் குலுக்கப்பட்டவுடன் கரைவதுபோல. அனைத்தையும் ஒன்றிணைக்கும் அந்த ஒளி உருவ அருவமாக அடுத்தடுத்து மாறிய உருமாற்றமானது, படைப்பின் காரண காரிய விதியை வெளிப்படுத்தியது.

என் ஆத்மாவின் சாந்தமான முடிவற்ற கரைகளில் ஒரு மகா சமுத்திரத்திற்கொப்பான ஆனந்தம் பரவியது. இறைவனான பிரம்மம் அள்ள அள்ளக் குறையாத ஓர் ஆனந்தமென நான் அறிந்து கொண்டேன். இறைவனின் உடல் எண்ணற்ற ஒளித்திசுக் களால் ஆனது. என்னுள் பெருக்கெடுத்த ஒரு மகிமை பெருகி விரிந்து நகரங்கள், கண்டங்கள், இம்மண்ணுலகம், சூரிய மண்டலம், நட்சத்திர மண்டலம், மிதக்கும் பிரபஞ்சங்கள், ஆகிய அனைத் தையும் சூழத்தொடங்கியது. பிரம்மாண்டம் முழுவதும், இரவில் தூரத்தில் தெரியும் ஒரு நகரத்தைப்போல மென்மையான ஒளி பொருந்தியதாய் எல்லையற்ற என் உள்ளுக்குள்ளேயே ஜொலித்தது.

பளிச்சென்று கண்ணைக் கூசச்செய்யும் அந்த ஒளி நுட்பமாய் செதுக்கப்பட்ட இம்மண்ணுலக எல்லைக்கோடுகளைக் கடந்து வெகு தூரத்து வரம்புகளில் சற்று மங்கியது. அங்கு நான் என்றும் மங்காத மிருதுவான பிரகாசத்தைக் கண்டேன். அது விளக்கமுடியாத வகையில் சூட்சுமம் வாய்ந்ததாக இருந்தது; கிரகங்களின் காட்சிகள் இன்னும் சற்று திண்மையான ஒளியால் உருவாக்கப்பட்டிருந்தன.[1]

அத்தெய்வீகக் கிரணங்களின் சிதறல்கள் என்றும் அழியாத ஒரு மூலத்திலிருந்து பொழிந்தன. அவைகள் வர்ணிக்க முடியாததொரு ஒளிப்பிழம்பாக உருமாற்றப்பட்டு நட்சத்திர மண்டலங்களாக ஒளி வீசின. படைப்பாற்றல் வாய்ந்த அக்கதிர்கள் மீண்டும் மீண்டும் நட்சத்திர கூட்டங்களாக உறைவதைக் கண்டேன்; பிறகு துல்லிய ஜுவாலையின் தகடுகளாக மாறக் கண்டேன். ஒரு சீரான சுழற்சியாக கோடானுகோடி உலகங்கள் ஒளியூடுருவும் பிரகாசத்தில் நுழைந்து சென்றன; பிறகு அக்னியே ஆகாயமாகி விரிந்தது.

அந்த பெரிய இறை உலகத்தின் மையத்தை என் இதயத்தில் உள்ளுணர்வு நோக்கின் ஒரு புள்ளியாக அறிந்தேன். என் நடு மையத்திலிருந்து பிரபஞ்ச அமைப்பின் ஒவ்வொரு பாகத்திற்கும் பிரகாசமான ஒளி வீச்சு சென்றுப்படிந்தது. சிரஞ்சீவித் தன்மையின் தேனாகிய பேரின்ப அமிர்தம், பாதரச திரவம் போன்று என் மூலம் துடித்து ஓடியது. பேரண்ட இயக்க அதிர்வலையாகிய ஓம்[2] எனும் நாதம், இறைவனின்

படைப்புக் குரலாக ஒலிப்பதை நான் கேட்டேன்.

திடீரென்று மூச்சு என் சுவாச கோசத்திற்குத் திரும்பியது. கிட்டத்தட்ட தாங்கமுடியாத ஓர் ஏமாற்றத்துடன் என் எல்லையற்ற பேருருவம் மறைந்ததைக் கண்டேன். மறுபடியும் நான், சுலபத்தில் தெய்வீகத்திற்கு இடங்கொடாத சிறுமைப்படுத்தும் உடற்கூட்டினுள் அடைக்கப்பட்டேன். ஓர் ஊதாரிப் பிள்ளையைப்போன்று நான் என் பேரண்ட வீட்டிலிருந்து ஓடி குறுகிய சிற்றண்ட கூட்டிற்குள் என்னைச் சிறையிட்டுக் கொண்டேன்.

என் குருதேவர் என் முன்னால் அசைவற்று நின்று கொண்டிருந்தார்; நான் வெகுகாலமாக மிகுந்த ஆர்வத்துடன் தேடிக்கொண்டிருந்த பேரண்ட உணர்வின் அனுபவத்தை எனக்கு வழங்கியதற்காக நன்றி செலுத்தும் வகையில் அவருடைய புனித திருவடிகளில் விழுந்து வணங்க முற்பட்டேன். அவர் என்னை நேராக நிறுத்தி அமைதியாகக் கூறினார்.

"நீ அதிகமாகப் பரவச நிலையிலேயே இருக்கக்கூடாது. இந்த உலகில் நீ ஆற்றவேண்டிய பணிகள் இன்னும் ஏராளமாக உள்ளன. வா, நாம் பால்கனியின் தரையைப் பெருக்கிவிட்டுப் பிறகு கங்கைக் கரையோரமாக நடந்து செல்லலாம்."

நான் ஒரு துடைப்பத்தை எடுத்து வந்தேன். குருதேவர் எனக்கு சமநிலைபடுத்தப்பட்ட வாழ்க்கையின் ரகசியத்தைப் போதிக்கிறார் என நான் அறிந்தேன். உடல் தன் தினசரிக் கடமைகளை நிறைவேற்றும்போது ஆத்மா

மகாபிரபஞ்ச ஆழ்வெளிகளில் பறக்கவேண்டும்.

சற்றுநேரம் சென்றபிறகு ஸ்ரீ யுக்தேஸ்வரும் நானும் காலாற நடந்து சென்று கொண்டிருந்தபொழுதும்கூட, நான் இன்னும் எடுத்துக்கூற முடியாததொரு பரவசப்படுத்தும் நிலையிலேயே இருந்தேன். எங்கள் இருவரது உடல்களும் ஒரே ஒளிக்கற்றையாலான இரு சூட்சுமமான உருவங்களாகத் தெருவில் நதிக்கருகாமையில் நடந்து போவதைக் கண்டேன்.

"ஒவ்வொரு உருவத்தையும், ஒவ்வொரு சக்தியையும் இந்தப் பிரபஞ்சத்தில் காப்பவர் இறைவனே, ஆயினும் அவர் எல்லாவற் றையும் கடந்து, பற்றின்றி உலகங்களின் அதிர்வலைகள் இயல்பி[3]ற்கு அப்பால் படைக்கப்படாத பேரின்ப சூன்ய வெளியில் இருக்கிறார்," என்று குருதேவர் விளக்கினார். இவ்வுலகத்தில் ஆத்ம-ஞானத்தை அடைந்தவர்கள் அதே போல் இருவித வாழ்க்கையை மேற்கொள் கிறார்கள். உலகத்தில் தங்கள் கடமைகளைச் சரிவர செய்துகொண்டு இருந்தபோதும், அவர்கள் உள்ளுக்குள்ளேயே ஆனந்தத்தில் திளைத்தவாறு இருக்கிறார்கள்.

"இறைவன் எல்லோரையும் தன்னுடைய இருப்பான எல்லையற்ற ஆனந்தத்திலிருந்துதான் படைத்துள்ளான். அவர்கள் உடலினால் வேதனையுடன் நெருக்கப்பட்டாலும் தன்னுடைய பிரதிபிம்பமாகப் படைக்கப்பட்ட மனிதர்கள் உடலுணர்ச்சிகளுடன் தங்களை ஐக்கியப்படுத்திக் கொள்ளாமல் இறுதியாக அதற்கும் மேலே உயர்ந்து தன்னுடன் மறுபடியும் ஒன்றி

விடுவார்களென்றுதான் கடவுள் எதிர்பார்க்கிறார்," என்றார்.

அந்தப் பேரண்ட தரிசனம் எனக்குப் பல நிலையான பாடங்களைக் கற்பித்தது. தினந்தோறும் என் எண்ணங்களை அமைதிப்படுத்தி, என் உடல், திடமான மண்ணில் செயல்பட்டுக்கொண்டிருக்கும் வெறும் சதையும் எலும்பும் கொண்ட ஒரு தொகுதி, என்ற பொய்யான நம்பிக்கையில் இருந்து விடுதலை பெற முடிந்தது. மூச்சு மற்றும் அமைதியற்ற மனம் என்னும் புயல்களினால் ஒளிக் கடலில் பூமி, வானம், மனிதர்கள், விலங்குகள், பறவைகள், மரங்கள் எனப்படும் பல்வகை உலக வடிவங்களாகிய அலைகள் தோன்றுகின்றன. அந்த புயல்களை அமைதிப்படுத்தினால் ஒழிய முழுமுதற்பொருளை ஒளிமயமாக உணரமுடியாது."

எப்படி ஒரு மகா சமுத்திரத்தின் அலைகள், ஒரு பெரிய புயற்காற்றிற்குப் பிறகு சாந்தமாக கடலில் ஒன்றிவிடுமோ, அதேபோல் நான் இந்த இரண்டு இயற்கைப் புயல்களையும் எவ்வளவுக்கெவ்வளவு அடிக்கடி அமைதிப்படுத்தினேனோ அவ்வளவுக்கவ்வளவு படைப்பின் எல்லையற்ற அலைகள் உருகி ஒரே ஒளிக்கடலாயிற்று என்பதைப் பார்த்தேன்.

ஒரு சீடன் தன் தியானத்தின் மூலம் பரந்த காட்சிகளால் நிலைகுலையாத வண்ணம் தன் மனத்தை ஓர் அளவிற்கு திடப்படுத்திக்கொண்டதும் குரு அவனுக்கு பேரண்ட உணர்வின் தெய்வீக அனுபவத்தை அருளுகிறார். வெறும் அறிவின் விருப்பமோ அல்லது

திறந்த மனதோ போதாது! யோகப்பயிற்சியும் தெய்வீக பக்தியும் மட்டுமே உள்ளுணர்வை போதுமான அளவிற்கு விரிவடையச்செய்து சர்வ வியாபியின் முக்தி அளிக்கும் அதிர்ச்சியைத் தாங்க ஒருவரைத் தயார் செய்யும்.

உண்மையான ஒரு பக்தனுக்கு தெய்வீக அனுபவம் இயற்கையாக தவிர்க்க முடியாததாக ஏற்படுகிறது. அவனுடைய தீவிரமான ஏக்கம் இறைவனைத் தடுக்க முடியாத வேகத்துடன் இழுக்க ஆரம்பிக்கிறது. தேடுபவனின் உணர்வு வட்டத்திற்குள், இறைவன் பேரண்ட தரிசனமாக அக்காந்த சக்தியால் இழுக்கப்படுகிறார்.

பல வருடங்களுக்குப் பின்னர் அத்தரிசன மகிமையின் ஒரு சிறு தோற்றத்தை எடுத்துக்கூற முயன்று, "சமாதி," என்ற பின்வரும் கவிதையை எழுதினேன்:

ஒளியின், நிழலின் திரைகள் மறைந்தன,
துயரின் ஒவ்வோர் ஆவியும் துள்ளி விலகின,
நிலையற்ற இன்ப விடியல்கள் நில்லாது ஓடின,
மங்கும் இந்திரியக் கானல் மறைந்து சென்றதே.
விருப்பு, வெறுப்பு, சுகம், நோய், வாழ்வு, சாவு;
இப்பொய்மையின் நிழல்கள் இருமையின் திரையில் சிதைந்தன.
ஆழ்ந்த உள்ளுணர்வாம் மந்திரக்கோலால் மாயை என்னும்
புயல் மலைத்து நிலைத்தது.
இன்று, நேற்று, நாளை என்பன எனக்கில்லை, என்றும்,
எதிலும், எங்கும் நானே.
கோள்கள், விண்மீன்கள், நட்சத்திரத் துகள்கள், பூமி,
பிரளயகால எரிமலையின் வெடிப்பு,
படைப்பின் வார்ப்பு உலை,
மௌன எக்ஸ்-கதிரின் குளிர்பனிப்பாறை,
எரியும் மின்வெள்ளம்,
கடந்த, உள்ள, வரும் மனிதரின் எண்ணங்கள்,
ஒவ்வொரு புல்லும், மனித இனமும், நானும்,
பிரபஞ்சத் துகள் ஒவ்வொன்றும்வெகுளி,
பேராசை, நன்று, தீது, மோட்சம், காமம்,
யாவற்றையும் விழுங்கி என் ஒரே இருப்பின்
உதிரக் கடலில் உருமாற்றினேன்.
இன்பக்கனல், என் தியானத்தால் பெருகி

நீர் தோய்ந்த என் கண்களைக் குருடாக்கி,
அழிவற்ற ஆனந்தத் தழலில் வெடித்ததே,
என் கண்ணீர், என் உடற்கூடு, என்னைப் பூரணமாக விழுங்கியதே,
நீயே நான், நானே நீ,
அறிதல், அறிவோன், அறிந்தது அனைத்தும் ஒன்றே!
சாந்தமாய், இடையறா ஆனந்தத் துள்ளலாய்,
எப்போதும் உள்ளதாய், என்றும் புது அமைதியாய்.
கற்பனையின் எதிர்பார்ப்பிற் கெட்டாத இன்பம்,
சமாதிப் பேரின்பம்!
நினைவு தப்பிய நிலையல்ல
திரும்பச் சக்தியற்ற மன மயக்கமுமல்ல,
சமாதி என் எண்ண வெளிக்கப்பால் நின்றதுவே
அழியும் கூட்டின் எல்லைக்கப்பால்
நிரந்தரமான தொலை தூர எல்லைவரை
நானெனும் பிரபஞ்சக் கடலில் தானெனும் அற்ப அகந்தை,
என்னுள்ளே மிதப்பதைக் கண்ணுற்றேன்.
இயங்கும் அணுக்களின் சலன ஒலி கேட்டேன்,
இருண்ட உலகம், பருவதங்கள், பள்ளத்தாக்குகள்,
ஆகா! உருகி ஓடும் திரவமாயிற்றே!
திரை கடலுந்தான் ஒளி ஆவியின் மாயரூபம் கொண்டது!
ஓங்காரம் ஆவியைத் தகர்த்து அதன் திரையை அகற்றிய
அதிசயம் என்னே,
திரைகடல் திறந்தது, மின்னணுக்கள் ஒளிர்ந்தன,
பிரபஞ்ச முடிவின் கடை முழக்கம் வரை,[4]
சிற்றொளி மறைந்து, அனைத்தையும்
தழுவும் நிரந்தர ஆனந்தக்கதிராய் ஒளிர்ந்ததுவே.
ஆனந்தத்தில் பிறந்து, ஆனந்தத்தில் நிலைத்து.
தெய்வப் பேரின்பத்தில் கரைந்திடுவேனே.
மனமெனும் மாக்கடல் நான், படைப்பின்
அலைகள் அனைத்தையும் பருகுவேன் நான்.
திடம், திரவம், ஆவி, ஒளி எனும் திரைகள் தூக்கப்பட்டன.
எல்லாம் நானேயாக மகா நானில் நுழைந்தேன்.
மனித நினைவின் நிலையற்றுத்
திரியும் நிழல்கள் போயே போயின;
கீழும், முன்னும், மேலும் உயரே-என்
மனமெனும் வானம் மாசு மறுவற்றது;
நிரந்தரமும் நானும் கலந்து ஒன்றி ஒரே கதிரானோம்.
சிறு நகைப்பின் குமிழியாம் நான்
ஆனந்தக் கடலே ஆனேன்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் அந்த புனித அனுபவத்தை என் விருப்பப்படி எப்படி பெறுவது மேலும் அதை எவ்வாறு மற்றவர்களுக்கு அவர்கள் உள்ளுணர்வு பக்குவமடைந்ததும் அளிப்பது என்பதையும் எனக்கு போதித்தருளினார்.[5]

முதல் தடவைக்குப் பிறகு, பல மாதங்கள் நான்

அப்பரவச நிலையை அடைந்து தினந்தோறும் அதில் ஒன்றி, உபநிஷதங்கள் இறைவனை ரசம் மிகவும் ருசிக்கத்தக்கது என்று ஏன் குறிப்பிடுகின்றன என்று புரிந்துகொண்டேன். ஆயினும் ஒரு நாள் காலை என் பிரச்சனை ஒன்றைக் குருதேவரிடம் எடுத்துச்சென்றேன்.

"ஐயா, நான் இறைவனை எப்பொழுது காண்பேன் எனத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்."

"நீ அவனைக் கண்டாயிற்றே."

"ஓ, இல்லை, ஐயா, நான் அப்படி நினைக்கவில்லை!"

என் குரு புன்னகைத்தபடி கூறினார். "பிரபஞ்சத்தின் மாசுமறுவற்ற ஒரு மூலையில் அலங்காரமான ஒரு சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் போற்றத்தக்க ஒரு மாமனிதரை நீ எதிர்பார்க்கிறாயென்று நான் நினைக்கவில்லை! இருந்தாலும் அற்புத சக்திகள் படைத்திருப்பதுதான் கடவுளைக் கண்டதற்கு நிரூபணம் என்று நீ கற்பனை செய்கிறாய் என எனக்குத்தோன்றுகிறது. அப்படி இல்லை. ஒருவன் பிரபஞ்சம் முழுவதையும் கட்டுப்படுத்தும் சக்தியை பெற்றிருந்தும் இறைவன் நழுவி விடுவதைக் காணலாம். ஒருவருடைய ஆன்மீக முன்னேற்றத்தைத் தியானத்தில் அவருடைய ஆனந்தத்தின் ஆழத்தினால் மட்டுமே அறிய முடியுமே தவிர, அவருடைய வெளிப்புற சக்திகளை பறைசாற்றுவதால் அன்று.

"என்றும்புத்தம் புதிய ஆனந்தமே இறைவன். அவன் அள்ள அள்ளக் குறையாதவன். நீ உன் தியானத்தை பல ஆண்டுகள் தொடரும்பொழுது அவன் எண்ணற்ற

விதங்களில் உன்னை ஏமாற்றி விளையாடுவான். இறைவனை அடையும் வழியை அறிந்த உன்னைப் போன்ற பக்தர்கள் வேறு எந்த மகிழ்ச்சியையும் அவனுக்கு ஈடாகக் கொள்ள கனவில் கூட நினைக்க மாட்டார்கள். அவனது வசீகரிக்கும் தன்மை ஒப்பற்றது. அதற்கு இணை வேறேதும் இல்லை.

இவ்வுலக இன்பங்களிலிருந்து நாம் எவ்வளவு சீக்கிரம் அலுப்படைந்து விடுகிறோம்! பொருட்களின் மீதுள்ள இச்சைக்கு முடிவேயில்லை; முழுதும் திருப்தி அடைவதென்பதே மனிதனுக்கில்லை. ஒன்றன் பின் ஒன்றாக அவன் குறிக்கோளும் மாறும். அவன் தேடும் வேறு ஏதோ ஒன்று, இறைவன்தான். அவன் மட்டுமே மனிதனுக்கு நிரந்தரமான ஆனந்தத்தைத் தரமுடியும்.

"வெளியுலக ஆசைகள், நம்மை உள்ளுக்குள்ளிருக்கும் சுவர்க்கத்திலிருந்து துரத்தி விடுகின்றன. அவை ஆத்மானந்தத்தை பொய்யான இன்பங்களினால் மாற்றிக் காட்டுகின்றன. தெய்வீகத் தியானத்தினால், இழந்த சுவர்க்கம் சீக்கிரமே திரும்ப கிடைக்கிறது. இறைவன் எதிர்பார்த்தறிய முடியாதபடி என்றும்புதுமையாக இருப்பதால், நமக்கு அவனிடம் அலுப்பு தட்டுவதேயில்லை, என்றும் நிரந்தரமான, ரசிக்கும்படியான வேறுபாடுகளுடன் கிடைக்கும் பேரின்பம் தெவிட்டுமா? என்றார்.

"யோகிகள், இறைவனை ஆழங்காண முடியாதவன் என்று ஏன் கூறுகிறார்களென்று எனக்கு இப்பொழுது புரிகிறது, ஐயா. என்றும் அழியாத சிரஞ்சீவியான

வாழ்க்கைகூட அவனை எடைபோடுவதற்கு போதுமானதில்லை," என்றேன்.

"அது உண்மைதான்; ஆனால் அவன் நமக்கு மிகவும் நெருக்கமானவன்; அன்பானவன். நம் மனம் கிரியா யோகத்தினால் இந்திரியத் தடைகளிலிருந்து விடுபட்டவுடன் நம் ஆழ்நிலை தியானம் இறைவனை இரு விதங்களில் நிரூபிக்கிறது. என்றும்-புதுமையான ஆனந்தம் அவனிருப்பிற்கு சாட்சியாகி நம்மில் அணு அணுவாக ஊடுருவி நம்மை நம்ப வைக்கிறது. மேலும் தியானத்தில் ஒருவன் இறைவனுடைய உடனடியான வழிகாட்டுதலை, ஒவ்வொரு இடையூறுக்கும் அவனுடைய போதுமான விடையைக் காண்கிறான்."

"குருதேவரே, நீங்கள் என் பிரச்சனையை தீர்த்து விட்டீர்கள்," நான் நன்றியுடன் புன்முறுவல் செய்தேன். "நான் இறைவனைக் கண்டேன் என்பதை இப்பொழுது உணர்கிறேன், ஏனெனில் தியானத்தின் ஆனந்தம் நான் வேலை செய்யும் நேரங்களில் ஆழ்மனதில் திரும்பி வரும்போதெல்லாம், ஒவ்வொரு செயலிலும், மிகச் சிறிய விவரங்களில்கூட சரியான போக்கை மேற்கொள்ளுமாறு நான் சூட்சுமமாக இயக்கப்படுகிறேன்."

"மனித வாழ்வு, நாம் இறைவனுடைய விருப்பத்துடன் ஒன்றுபடும்வரை துன்பத்தினால் சூழப்பட்டுள்ளது. இறைவனின் சரியான பாதை அகந்தையுடன் கூடிய புத்திக்கு பெரும்பாலும் திகைப்பாகவே இருக்கிறது," என்று குருதேவர் கூறினார்.

"இறைவன் ஒருவன்தான் நமக்குத் தவறு இல்லாத

ஆலோசனையை அளிக்க முடியும். மகா பிரபஞ்சத்தின் பாரத்தை அவனன்றி யார் சுமக்க முடியும்?"



1 ஒளியே படைப்பின் சாரம் என்பது, 30வது அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது.

2 ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தை தேவனாயிருந்தது.யோவான் 1:1 (பைபிள்).

3 பிதாவானவர் தாமே ஒருவருக்கும் நியாயத் தீர்ப்புச் செய்யாமல், நியாயத் தீர்ப்பு செய்யும் அதிகாரம் முழுவதையும் குமாரனுக்கு ஒப்புக்கொடுத்திருக்கிறார். - யோவான் 5:22 (பைபிள்). தேவனை ஒருவனும் ஒருக்காலும் கண்டதில்லை. பிதாவின் மடியிலிருக்கிற ஒரே பேறான குமாரனே அவரை வெளிப்படுத்தினார். யோவான் 1:18 (பைபிள்). தேவன்...இயேசு கிறிஸ்துவைக்கொண்டு எல்லாவற்றையும் சிருஷ்டித்தான். - எபேசியர் 3:9 (பைபிள்). நான் என் பிதாவினிடத்திற்குப் போகிற படியால் என்னை விசுவாசிக்கிறவன் நான் செய்கிற கிரியைகளைத் தானும் செய்வான்; இவைகளைப் பார்க்கிலும் பெரிய கிரியைகளையும் செய்வான். - யோவான் 14:12 (பைபிள்). என் நாமத்தினாலே பிதா அனுப்பப்போகிற பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளனே எல்லாவற்றையும் உங்களுக்குப் போதித்து, நான் உங்களுக்குச் சொன்ன எல்லாவற்றையும் உங்களுக்கு நினைப்பூட்டுவார். - யோவான் 14:26 (பைபிள்).

பைபிளின் மேற்கூறிய சொற்கள் இறைவனின் மூவியல்பை - தந்தை, மகன், பரிசுத்தஆவி (சத், தத், ஓம் என்று இந்து சமய நூல்களில்) என்று குறிக்கின்றன. இறைவன் தந்தையாகபரிபூரணன், வெளிப்படுத்திக் காட்டப்படாதவன், அலையதிர்வின் படைப்புகளுக்கு அப்பாலே இருப்பவனுமாகிறான். இறைவன் மகனாக கிறிஸ்து உணர்வாக (பிரம்ம அல்லது கூடஸ்த சைதன்யம்) அலையதிர்வின் படைப்பிற்குள்ளேயே இருக்கிறான். இந்தக் கிறிஸ்து உணர்வுதான், ஒரே பேறான குமாரன் அல்லது படைக்கப்படாத எல்லையற்றதின் தனிப் பிரதி பிம்பம்; சர்வ வியாபகமான கிறிஸ்து உணர்வின் வெளியில் தெரியக்கூடிய அதன் சாட்சி (வெளிப்படுத்தின விசேஷம் 3:14 (பைபிள்) ஓம், வார்த்தை அல்லது பரிசுத்த ஆவி; மறைந்துள்ள இறை சக்தி, ஒரே கர்த்தா, எல்லா படைப்புகளையும் அலையதிர்வின் மூலம் நிலைநிறுத்தும் காரண காரியங்களின் ஒரே சக்தி. இன்பமாக இதமளிக்கும் ஓம், தியானத்தில் கேட்கப்படுகிறது; பக்தனுக்கு முடிவான சத்தியத்தைக் காட்டி; எல்லா விஷயங்களையும்.... நினைவிற்குக் கொணர்கிறது.

4 ஓம் என்னும் படைப்பின் அதிர்வலை, எல்லா படைப்பையும் வெளிமுகப்படுத்துகிறது.

5 நான் அந்த மகா பிரபஞ்ச தரிசனத்தை கீழை நாடுகளிலும் மேலை நாடுகளிலும் உள்ள அனேக கிரியா யோகி களுக்குக் கொடுத்திருக்கிறேன். அதில் ஒருவரான ஸ்ரீ ஜேம்ஸ் ஜே. லின் என்பவர் சமாதியிலிருக்கும் படம் இப்புத்தகத்தில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. (பார்க்க படப்பகுதி-III பக்கம் 10)

## அத்தியாயம் 15

# காலிஃபிளவர் திருட்டு

"குருதேவா, தங்களுக்கு ஒரு பரிசு! இந்த ஆறு பெரிய காலிஃபிளவர்களும் என் கைகளினாலேயே பயிர் செய்யப்பட்டவை. அவைகளின் வளர்ச்சியை ஒரு தாய் தன் குழந்தையை அன்பாகப் பராமரிப்பது போல நான் கண்காணித்து வந்திருக்கிறேன்," என்றவாறு காய்கறிகள் நிறைந்த கூடையை அலங்கார மரியாதையுடன் குருதேவர் இடம் சமர்ப்பித்தேன்.

"நன்றி! குருதேவரின் புன்னகையில் அன்பார்ந்த பாராட்டுதல் தெரிந்தது. இவைகளைத் தயவு செய்து உன் அறையிலேயே வை; நாளைய சிறப்பு விருந்திற்கு அவை எனக்கு வேண்டியிருக்கும்," என்றார்.

பூரியிலுள்ள குருதேவரின் கடற்கரை ஆசிரமத்திற்கு, என் கல்லூரிக் கோடை விடுமுறையைக் கழிக்க வேண்டி அப்பொழுதுதான் வந்திருந்தேன். குருதேவராலும் அவருடைய சீடர்களாலும் கட்டப்பட்ட இரண்டு மாடிகள் கொண்ட அந்த இனிய சிறு ஆசிரமம் வங்காள விரிகுடாக் கடலை நோக்கியிருந்தது.

நான் மறுநாள் அதிகாலையிலேயே ஆசிரமத்தின் அமைதி நிறைந்த கவர்ச்சியாலும், கடலிலிருந்து தவழும் உப்புக் காற்றினாலும் புத்துணர்ச்சி பெற்று எழுந்தேன். என் குருவின் இனிமையான குரல் ஒலித்தது; என்னுடைய அருமையான காலிஃபிளவர்களை ஒரு

முறை பார்வையிட்டவாறு அவற்றை அழகாகக் கட்டிலின் கீழ் அடுக்கி வைத்தேன்.

"வாருங்கள், கடற்கரைக்குச் செல்லலாம்." குருதேவர் வழிகாட்ட நானும் மற்ற இளம் சீடர்களும் ஓர் ஒழுங்கு முறை இல்லாமல் கலைந்த குழுவாக அவரைத் தொடர்ந்தோம். எங்கள் குருதேவர் எங்களை ஒரு சிறு கண்டனத்துடன் பார்த்தார்.

"நமது மேற்கத்திய சகோதரர்கள் நடந்து போகும் போது கூட ஓர் ஒழுங்கைக் கடைப்பிடிப்பதில் பெருமைப் படுகிறார்கள். எங்கே இப்பொழுது இரண்டு வரிசையாக நடந்து செல்லுங்கள் பார்க்கலாம்; காலடிகள் ஒருவருக்கொருவர் பிறழாமல் முறையாக இருக்கட்டும்." நாங்கள் அவர் சொன்னபடியே செய்ததை ஸ்ரீ யுக்தேஸ்வர் கண்காணித்தார்: சிறுவர்கள் சென்றனர் முன்னும் பின்னும், அழகிய சிறிய வரிசையிலே, என்று பாடவும் தொடங்கினார். அவருடைய இளஞ் சீடர்களின் வேகத்திற்கு ஈடுகொடுத்து மிகச் சுலபமாக அவர் நடப்பதைப் பார்த்து என்னால் வியக்காமலிருக்க முடியவில்லை.

"நில்!" குருவின் கண்கள் என்னைத் தேடின. ஆசிரமத்தின் பின்புறக் கதவை மறக்காமல் தாளிட்டாயா?"

"அப்படித்தான் நினைக்கிறேன், ஐயா!"

ஸ்ரீ யுக்தேஸ்வர் சில வினாடிகள் உதட்டில் தோன்றிய தன் புன்னகையைப் பாதி மறைத்தவாறு மௌனமாக இருந்தார். "இல்லை, நீ மறந்து விட்டாய்,"

என்றார் முடிவாக." தெய்வ தியானம் செய்வது அன்றாட உலக நடப்புகளில் கவனக் குறைவாக இருப்பதற்கு ஒரு காரணமாகி விடக் கூடாது. ஆசிரமத்தைப் பாதுகாக்கும் உன் கடமையிலிருந்து நீ தவறி விட்டாய்; நீ தண்டிக்கப்பட வேண்டும்."

மேலும் அவர் "உன் ஆறு காலிஃபிளவர்கள் சீக்கிரமே ஐந்தாகிவிடும், "என்று கூறியபொழுது, அவர் ஏதோ புரியாத முறையில் கேலி செய்கிறார் என்றே நினைத்தேன்.

குருதேவரின் கட்டளைப்படி நாங்கள் திரும்பி ஆசிரமம் அருகாமை வரை அணிவகுத்துத் திரும்பினோம்.

"கொஞ்சம் இளைப்பாறுங்கள்! நம் இடதுபக்கம் மதில் சுவரைத் தாண்டிப் பார், முகுந்தா; அதற்கப்பாலுள்ள தெருவை உற்று நோக்கு. இப்பொழுது ஒரு மனிதன் அங்கு வருவான். உன் தண்டனை அவன் மூலமாகத்தான் நடக்கப் போகின்றது."

புரிந்து கொள்ள முடியாத இந்தக் குறிப்புக்களினால் எனக்கு ஏற்பட்ட எரிச்சலை மறைத்துக் கொண்டேன். சீக்கிரமே ஒரு குடியானவன் அந்தத் தெருவில் தென்பட்டான். அர்த்தமற்ற சைகைகளுடன் கைகளை ஆட்டியபடி அவன் கோணல் மாணலாக ஆடியபடி சென்றான். ஆவலினால் தூண்டப்பட்டு நான் அசையாமல் அந்த வேடிக்கையான காட்சியில் என் கண்களைப் பதித்தபடி நின்றேன்.அம்மனிதன் தெருவில் எங்கள் கண்களிலிருந்து மறையும் தூரம் சென்ற பிறகு,

அவன் இப்பொழுது திரும்புவான், என்றார் ஸ்ரீ யுக்தேஸ்வர்.

அந்தக் குடியானவன் உடனே தன் திசையை மாற்றி ஆசிரமத்தின் பின்புறத்தை நோக்கி நடந்தான். அங்கிருந்த ஒரு மணல் பாதையைத் தாண்டி அவன் பின்புற வாயிலாக கட்டிடத்தினுள் நுழைந்தான். என் குருதேவர் சொல்லிய படியே நான் அதைப் பூட்டாமல்தான் விட்டிருந்தேன். என் அருமையான காலிஃபிளவர்களில் ஒன்றை ஏந்தியவாறு அவன் சீக்கிரமே வெளிவந்தான். இப்பொழுது அவன் ஒரு சொத்தை அடைந்த பெருமிதத்துடன் கௌரவமாக நடந்து சென்றான்.

நடந்தேறிய ஹாஸ்ய நாடகத்தில் எனது பங்கானது ஒரு குழப்பமடைந்த பலியாளாகத் தென்பட்டாலும் திருடனைத் தொடர்ந்து கோபத்துடன் நான் ஓடியதைத் தடுக்க முடியாத அளவிற்கு அது என்னைக் குலைத்துவிட்டது. பாதி வழி சென்றதும் குருதேவர் திரும்பி வரக் கூப்பிட்டார். அவர் தலை முதல் கால்வரை குலுங்க குலுங்கச் சிரித்துக் கொண்டிருந்தார்.

"பாவம், அந்தப் பைத்தியக்கார மனிதன் ஒரு காலிஃபிளவருக்காக ஏங்கிக்கொண்டு இருந்தான்," சிரிப்பினூடே அவர் விளக்கினார். "இவ்வளவு அஜாக்கிரதையாக வைக்கப்பட்டிருக்கும் உன் காலிஃபிளவர்களில் ஒன்றை அவன் அடையலாமே என்றுதான் எனக்கு ஒரு யோசனை தோன்றியது," என்றார்.

நான் என் அறைக்குள் விரைந்தேன். அத்திருடனுக்கு

நிச்சயமாக காய்கறியின் மேல்தான் கண் என்று அங்குப் போனதும் தெரிந்தது. கம்பளியின் மேலிருந்த என் தங்க மோதிரங்கள், கைக் கடியாரம், பணம் எல்லாம் திறந்தபடி கிடக்க அவன் அவை எதையும் தொடாமல் கட்டிலடியில் தவழ்ந்து, சாதாரணமாகக் கண்ணில் படாதவாறு மறைத்து வைத்திருந்த காலிஃபிளவர் ஒன்றை எடுத்து, தன் ஒருமுகமான ஆசையை நிறைவேற்றிக் கொண்டுவிட்டான்.

நான் அன்று மாலை ஸ்ரீ யுக்தேஸ்வரை அந்த சம்பவத்தை விளக்கும்படி கேட்டேன். (அதில் புரிந்து கொள்ள முடியாத சில அம்சங்கள் இருந்ததாக எனக்குத் தோன்றியது)

குருதேவர் மெதுவாகத் தலையை அசைத்தார். நீ அதை என்றாவது புரிந்து கொள்வாய். இம்மாதிரியான பல மறைந்துள்ள விதிகளை விஞ்ஞானம் சீக்கிரமே கண்டுபிடிக்கும், என்று கூறினார்.

சில வருடங்களுக்குப் பிறகு வானொலியின் விசித்திரங்கள் உலகத்தை ஆச்சரியத்தில் ஆழ்த்தியபொழுது நான் என் குருதேவர் முன்னே கூறியிருந்ததை நினைவு கூர்ந்தேன். இடம், காலம் பற்றிய புராதனமான கருத்துக்கள் அழிக்கப்பட்டுவிட்டன. எந்த மனிதனுடைய வீடும் லண்டன் அல்லது கல்கத்தா நுழைய முடியாதபடி அவ்வளவு குறுகலானது இல்லை என்றாகி விட்டது. மனிதனுடைய எங்கும் வியாபிக்கக்கூடிய ஒரு தன்மை, மிக மிக மந்தமான அறிவுக்குக் கூட எட்டும் வகையில் சந்தேகத்திற்கு

இடமின்றி நிரூபிக்கப்பட்டு விட்டது.

காலிஃபிளவர் ஹாஸ்ய நாடகத்தின் மையக் கருவை வானொலி[1] தத்துவத்தின் மூலம் நன்கு அறிந்து கொள்ள முடியும். என் குரு பரிபூரண மனித வானொலியாக இருந்தார். எண்ணங்கள், பரந்த வெளியில் அசைந்து கொண்டிருக்கும் சூட்சுமமான ஒலி அதிர்வுகளைத் தவிர வேறில்லை. எப்படிச் சரியாக பொருத்தப்பட்ட வானொலிப் பெட்டி ஒவ்வொரு திசையிலிருந்து வரும் ஆயிரக்கணக்கான மற்ற நிகழ்ச்சிகளிலிருந்து வேண்டிய சங்கீத நிகழ்ச்சியைப் பிரித்தெடுத்துத் தருகிறதோ அதைப் போல, ஸ்ரீ யுக்தேஸ்வரும் உலகில் ஒலிபரப்பாகும் எண்ணற்ற மனித எண்ண அலைகளிலிருந்து, சில குறிப்பிட்ட பொருத்தமான எண்ண அலைகளை மட்டும் (காலிஃபிளவருக்கு ஏங்கிய அந்த அரைப் பைத்திய மனிதனுடைய ஆசையைப் போன்று) உணர்ந்தறியும் திறன் படைத்தவர். கடற்கரைக்கு நடந்து கொண்டிருக்கையில் அம் மனிதனின் சாதாரண ஆசையைப் பற்றி அறிந்த குருதேவர் அதை நிறைவேற்றித் தர முடிவு செய்து விட்டார். ஸ்ரீ யுக்தேஸ்வரின் தெய்வீகக் கண் அவருடைய சீடர்கள் அந்த மனிதனைப் பார்ப்பதற்கு முன்பே அவன் சாலையில் கீழ்ப்பகுதியில் ஆடியபடி வருவதைக் கண்டன. ஆசிரமத்துக் கதவைப் பூட்டுவதில் எனக்கிருந்த மறதியைச் சாக்காக வைத்து அருமையான என் காலிஃபிளவர்களில் ஒன்றை நான் பறிகொடுக்கும்படிச் செய்ய குருதேவருக்கு

சௌகரியமாகப் போய்விட்டது.

இம்மாதிரி எண்ண அலைகளை கிரகிக்கும் கருவியாகச் செயலாற்றிய பிறகு ஸ்ரீ யுக்தேஸ்வர் தனது சக்திமிக்க எண்ணங் களினால் ஒலிபரப்பாளராக, அல்லது செய்திகளை அனுப்பும் கருவியாகச் செயல்பட்டார்.[2] இந்த முறையினால்தான் அந்தக் குடியானவனை திரும்பச் செய்து அவனை ஒரேவொரு காலி◌ஃபளவருக்காக குறிப்பிட்ட அறைக்குச் செல்ல வைப்பதை வெற்றிகரமாகச் செயல்பட வைக்க முடிந்தது.

மனம் அமைதியாக இருக்கும் வேளைகளில், உள்ளுணர்வு ஆன்மாவின் வழிகாட்டுதலாக, மனிதனுக்குள் இயற்கையாவே தோன்றுகிறது. அனேகமாக ஒவ்வொருவரும் விளக்க முடியாத வகையில், நிகழப் போவதைப் பற்றிய சரியான கணிப்பு ஏற்பட்ட அனுபவம் அல்லது தன் எண்ணங்களை அப்படியே மற்றவருக்கு மாற்றி விட்டிருக்கும் அனுபவம் அடைந்தே இருப்பர்.

தொந்தரவுகளிலிருந்து அல்லது அமைதியின்மை என்ற வானொலி இரைச்சலி (static) லிருந்து விடுபட்ட மனித மனம், சிக்கல் நிறைந்த வானொலி இயந்திர அமைப்புக்களின் எல்லா வேலைகளையும் செய்வதற்கு – எண்ணங்களை அனுப்புவதற்கும், பெறுவதற்கும், வேண்டாத எண்ணங்களை தவிர்ப்பதற்கும் ஆன திறன் கொண்டதாகிறது. ஒரு வானொலி நிலையத்தின் திறன் எப்படி அதில் உபயோகிக்கக் கூடிய மின்னோட்ட

அளவைப் பொறுத்துள்ளதோ, அது போலவே ஒவ்வொரு மனித வானொலியின் ஒலி பரப்புத் திறனும் அவரவருடைய இச்சா சக்தியின் அளவையே பொறுத்து இருக்கும்.

அண்ட வெளியில், எல்லா எண்ணங்களும் சாசுவதமாக அதிர்வடைந்தவாறே இருக்கின்றன. ஆழ்ந்த ஒருமுனைப் படுதலின் மூலம் ஒரு ஞானி எந்த ஒரு மனிதனுடைய எண்ணங்களையும், அவன் வாழ்கிறவனாக இருந்தாலும் சரி, இறந்தவனாயினும் சரி, அறிந்து கொள்ள முடியும். எண்ணங்கள் எங்கும் நிறைந்ததாகத்தான் உள்ளதே ஒழிய தனி மனிதனில் வேரூன்றி இல்லை. ஓர் உண்மையைப் படைக்க முடியாது; ஆனால் கண்டறிய மட்டுமே முடியும். மனிதனின் புரிந்து கொள்ளும் தன்மையின் குறைபாடுதான், பெரியதாயிருப்பினும், சிறியதாயிருப்பினும் எந்த ஒரு தவறான எண்ணத்திற்கும் காரணமாயிருக்கிறது. யோக விஞ்ஞானத்தின் குறிக்கோள், மனதை அமைதிப்படுத்தி நெறி பிறழாத வகையில் நம் உள்ளிருக்கும் தெய்வீகக் குரலின் தவறில்லாத ஆலோசனையைக் கேட்கச் செய்யலாம் என்பதுதான்.

வானொலியும் தொலைக்காட்சியும், உடனுக்குடன் வெகு தூரத்திலுள்ள மனிதர்களின் ஒலியையும் உருவையும் இலட்சக் கணக்கானவர்களின் அடுப்படிக்கே கொண்டுவந்து விட்டன: இது மனிதன் என்பவன், எங்கும் வியாபிக்கக் கூடிய தன்மை பொருந்திய ஆத்மாவே

என்பதற்கு விஞ்ஞான பூர்வமான முதன் முதலான ஒரு சிறு சான்று. அகந்தையானது மிகவும் காட்டுமிராண்டித் தனமான வழிகளில் அவனை அடிமைப் படுத்துவதற்கு சூழ்ச்சி செய்த போதிலும், மனிதன் தன் உடலால் ஓர் இடத்துள் கட்டுண்டு கிடப்பவன் அல்லன்; ஆனால் அடிப்படையில் அவன் எங்கும் நிறைந்திருக்கும் ஆத்மாவே ஆவான்.

"மிக விசித்திரமானது என்றும் மிக ஆச்சரியமானது என்றும், நடந்திருக்கவே முடியாது என்றும் தோன்றக் கூடியச் சம்பவங்கள், ஒரு முறை வெளிப்படையாக உறுதிப்படுத்தப்பட்ட பிறகு, சென்ற நூற் றாண்டின் விஞ்ஞான சாதனைகள் இப்பொழுது எப்படி நம்மை அதிக வியப்புக்குள்ளாக்குவது இல்லையோ அதே போல அச்சம்பவங்கள் நம்மை அதிக வியப்புக்குள்ளாக்காது." உடற் கூற்றியலில் நோபல் பரிசு பெற்ற சார்ல்ஸ் ராபர்ட் ரிஷே[3] என்பவர் கூறினார். வியப்பிற்குரிய விஞ்ஞான உண்மைகள் நம்மை வியப்பிலாழ்த்தவில்லையெனில் அவைகளை நாம் புரிந்து கொண்டுவிட்டோம் என்று நினைக் கிறோம். ஆனால் உண்மை அதுவல்ல; அவை நம்மை வியப்புக் குள்ளாக்கவில்லையெனில் அதன் காரணம் நாம் அவற்றை அறிந்து கொண்டதால் அல்ல, அவ்வுண்மைகள் நமக்கு நன்கு பழக்கமாகி விட்டதுதான் காரணம். எவைகளை நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லையோ அவை எல்லாம் நம்மை வியப்புறச் செய்யும் என்றால், நமக்கு எல்லாமே ஆச்சரியத்தைத் தருவதாகத்தான் இருக்க வேண்டி நேரும்! அதாவது ஒரு கல்லைக் காற்றில் எறிந்தால் மீண்டும் அது கீழே விழுவது, ஓக் மரத்தின் சிறிய விதை, ஓக் மரமாக மாறுவது, உஷ்ணப்படுத்தும் பொழுது பாதரஸம் விரிவடைவது, காந்தம் இரும்பினை இழுப்பது என்பன.

"இன்றைய விஞ்ஞானம் ஒரு சாதாரண விஷயம்...நம் சந்ததிகள் கண்டறியப் போகும் வியக்கத்தக்க உண்மைகள், சொல்லப் போனால் இப்பொழுதும் கூட நம்மை சுற்றி, நம்மைக் கூர்ந்து நோக்கியவாறுதான் இருக்கின்றன. ஆயினும் நாம் அவற்றைக் காண்பதில்லை. ஆனால் நாம் அவற்றைக் காண்பதில்லை என்று மட்டும் சொன்னால் போதாது; நாம் அவற்றைக் காண விருப்பப்படுவதில்லைஏனெனில், எதிர்பாராததும் நமக்குப் பழக்கமில்லாத்துமான உண்மை வெளிப்படும்பொழுது அதை நாம் ஒப்புக் கொண்டுள்ள சாதாரண அறிவின் சட்டத்திற்குள்ளேயே பொருத்த முயற்சிக்கின்றோம். யாரும் மேற்கொண்டு அதைப் பரிசீலனை செய்து பார்ப்பதைக்கூட கடுமையாக எதிர்க்கிறோம்."

என் மனதிற்குப் புரிபடாத வகையில், எனது காலிஃபிளவர் திருட்டுப் போன சில நாட்களுக்குப் பிறகு

ஒரு வேடிக்கையான சம்பவம் நடந்தது. ஒரு மண்ணெண்ணெய் விளக்கு காணாமல் போய்விட்டது. என் குருவின் எல்லா மறியும் திறமையைச் சமீபத்தில் கண்டிருந்ததால் அவ்விளக்கைக் கண்டுபிடிப்பது அவருக்கு ஒரு குழந்தை விளையாட்டுப் போன்றது என்று நான் நினைத்தேன்.

குருதேவர் நான் எதிர்பார்ப்பதைப் புரிந்து கொண்டார். அவர் மிகைப்பட்டக் கடுமையுடன் எல்லா ஆசிரம வாசிகளையும் விசாரித்தார். ஓர் இளஞ்சீடன் புழக்கடை கிணற்றடிக்குப் போவதற்கு அந்த விளக்கை உபயோகப் படுத்தியதை ஒப்புக் கொண்டான்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் தீவிர பாவனையுடன் அறிவுரை வழங்கினார். விளக்கை கிணற்றுக்கு அருகில் தேடுங்கள்.

நான் அங்கு விரைந்தேன். விளக்கு இல்லை. நான் மிகுந்த ஏமாற்றத்துடன் குருவை நாடினேன். அவர் நான் ஏமாந்ததைப் பற்றி சிறிதும் இரக்கமேயில்லாமல் மனம் திறந்து சிரித்தார்.

"மறைந்து போன விளக்கை என்னால் உனக்குக் கண்டு பிடித்துக் கொடுக்க முடியவில்லையே. நான் குறி சொல்பவனல்ல! ஒரு கண் சிமிட்டலுடன் அவர் தொடர்ந்தார். நான் ஒரு திருப்திகரமான ஷெர்லக் ஹோம்ஸ்[4] கூட இல்லையே."

குருதேவர் தன் சக்தியை சவாலுக்காகவோ அல்லது அற்ப காரியத்திற்காகவோ காட்டமாட்டாரென்று தெரிந்து கொண்டேன்.

ஆனந்தமாக வாரங்கள் ஓடின. ஸ்ரீ யுக்தேஸ்வர், ஓர்

ஆன்மீக ஊர்வலம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்து கொண்டு இருந்தார். சீடர்களை நகரத்தின் வழியாகப் பூரியின் கடற்கரைக்கு அழைத்துக் செல்லும்படி அவர் என்னைப் பணித்தார். அந்தப் பண்டிகை நாள் (வேனிற்காலத் தொடக்கம்) மிகுந்த வெப்பத்துடன் விடிந்தது.

"குருஜி, மாணவர்களை வெறும் கால்களுடன் நான் எப்படி கொதிக்கும் மணலில் அழைத்துச் செல்ல முடியும்?" என்று நான் கவலையுடன் கேட்டேன்.

"நான் ஒரு ரகசியம் சொல்கிறேன். கடவுள் மேகங்களால் ஆன குடை ஒன்றை அனுப்புவார்; நீங்கள் மிக சௌகரியமாக வழிநடந்து செல்வீர்கள்," என்று குரு கூறினார்.

நான் மகிழ்ச்சியுடன் ஊர்வலத்திற்கு ஏற்பாடு செய்தேன். எங்கள் குழு ஒரு சத்சங்கக்[5] கொடியுடன் ஆசிரமத்திலிருந்து புறப்பட்டது. ஸ்ரீ யுக்தேஸ்வரால் அமைக்கப்பட்ட அக்கொடி உள்ளுணர்வின் தூரதிருஷ்டி பார்வையைக் குறிக்கும் விதத்தில் ஒரே ஒரு கண்ணின்[6] அடையாளத்தைத் தாங்கியபடி இருந்தது.

நாங்கள் ஆசிரமத்திலிருந்து கிளம்பிய உடனேயே மாயாஜாலம் போன்று ஆகாயத்தில் மேகங்கள் சூழ்ந்தன. பார்த்துக்கொண்டிருந்த அனைவரிடமிருந்தும் ஆச்சரியக் கூச்சல்கள் எழுந்தன. கூடவே நகரத்தின் தெருக்களையும் கொதிக்கும் கடற்கரையையும் குளிரவைத்தவாறு ஒரு சிறு மழை பெய்தது.

இதமான மழைத்துளிகள் அந்த இரண்டு மணிநேர ஊர்வலம் செல்லும்வரை தொடர்ந்தது. நாங்கள்

ஆசிரமத்தில் நுழைந்த மாத்திரம் மேகங்களும், மழையும் மறைந்துவிட்டன.

"கடவுள் நமக்காக எவ்வளவு பரிவு கொள்கிறார் பார்," என்று குருதேவர், நான் என் நன்றியைத் தெரிவிக்கும் பொழுது பதிலளித்தார். கடவுள் எல்லாருக்கும் பதிலளிக்கிறார். எல்லாருக்காகவும் வேலை செய்கிறார். என் வேண்டு கோளுக்கு இணங்கி மழையை அனுப்பியது போல் எந்த பக்தனுடைய உண்மையான விருப்பத்தையும் பூர்த்தி செய்கிறார். எவ்வளவு தடவை கடவுள் அவர்களது பிரார்த் தனைகளுக்குச் செவி சாய்க்கிறார் என்பதை மனிதர்கள் புரிந்து கொள்வதரிது. அவர் ஒரு சிலருக்கு மட்டும் பாரபட்சமாக இல்லாமல் நம்பிக்கையுடன் அவரை அணுகும் ஒவ்வொருவருடைய பிரார்த்தனைக்கும் செவிசாய்க்கிறார். அவருடைய குழந்தைகள் எங்கும் நிறைந்த தங்கள் தந்தையின்[7] அன்பான கருணையின்மேல் முழுமையான நம்பிக்கை வைத்திருக்க வேண்டும், என்றார்.



ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வரின் கடற்கரையோர ஆசிரமம், பூரி

ஸ்ரீ யுக்தேஸ்வர் வருடத்தில் நான்கு பண்டிகைகளைப் (விஷுக்கள் எனப்படும், சூரியன் பூமத்திய ரேகையில் சஞ்சரிக்கும் நாட்கள் மற்றும் சங்கிராந்திகள் எனப்படும் கடக, மகர ரேகைகளில் சூரியன் சஞ்சரிக்கும் நாட்கள்) பொறுப்பேற்று நடத்துவார். அப்பொழுது அருகிலிருந்தும் தூரத்திலிருந்தும் சீடர்கள் வந்து சேர்வர். மகர சங்கிராந்தி விழா செராம்பூரில் கொண்டாடப்பட்டது; நான் கலந்து கொண்ட முதல் விழா, நிரந்தரமான ஆசீர்வாதம் பெற்றவனாக என்னை ஆக்கிவிட்டது.

உற்சவம், அனைவரும் வெறும் கால்களுடன் நடந்த வீதிவழி ஊர்வலத்துடன், காலையில் தொடங்கிற்று. நூற்றுக்கணக்கான மாணவர்களின் குரல்கள்

இனிமையான பக்திப் பாடல்களுடன் ஒலித்தன. சில இசைக் கலைஞர்கள் புல்லாங்குழல், மத்தளம், ஜாலரா போன்றவற்றை இசைத்தனர். உற்சாகமடைந்த நகர மக்கள் கடவுளின் புனிதமான நாமத்தின் பெருமையைக் கூறும் எங்களது பக்திப்பாடல்களைக்கேட்டு, சாதாரண அலுவல்களிலிருந்து அழைக்கப் படுவதற்காக மகிழ்ந்து வழிநெடுக மலர்களைத் தூவினார்கள். அந்த நீண்ட பயணம் ஆசிரமத்தின் முற்றத்தில் முடிவு அடைந்தது. அங்கு நாங்கள் எங்கள் குருதேவரைச் சூழ்ந்து கொண்ட போது, மாடி முகப்பிலிருந்த சீடர்கள் பொன் வண்ண சாமந்தி மலர்களை எங்கள் மீது பொழிந்தனர்.

அனேக விருந்தினர்கள் இனிப்புப் பொங்கல் மற்றும் ஆரஞ்சுப் பழப்பிரசாதத்தைப் பெற மாடிக்குச் சென்றார்கள். நான் அன்று சமையல் வேலைக்குப் பொறுப்பேற்றிருக்கும் சக சீடர்களை நோக்கிச் சென்றேன். அவ்வளவு பெரிய கூட்டத்திற்குச் சமையல், பெரிய கொப்பரைகளை வைத்து வெளியில் தான் சமைக்க வேண்டியிருந்தது. அச்சமயத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த விறகு - எரியும் செங்கல் அடுப்புகள் புகைந்து, கண்ணீரை வரவழைத்தன. ஆனால் நாங்களோ மகிழ்ச்சியுடன் சிரித்தபடியே வேலை செய்தோம். இந்தியாவில் உற்சவங்கள் தொல்லை கொடுப்பவையாக என்றுமே கருதப்படுவதில்லை. ஒவ்வொரு பக்தனும் தனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் வேலையை, அது பணம், அரிசி, காய்கறி முதலியவைகளைக் கொடுப்பதாகவோ அல்லது தனது உடல் உழைப்பைக்

கொடுப்பதாகவோ எதுவாயிருந்தாலும் அவற்றை மகிழ்ச்சியுடனேயே செய்வான்.

குருதேவர் சீக்கிரத்தில் விருந்தின் விவரங்களை மேற்பார்வையிட்டவாறு எங்களுடன் கலந்து கொண்டார். ஒவ்வொரு கணமும் சுறுசுறுப்பாக இயங்கியவாறு அவர், மிகவும் உற்சாகமான இளம் மாணவனுக்குச் சமமாக இயங்கினார்.

இரண்டாவது மாடியில் இசைக்குழு ஒன்றின் ஹார்மோனியம், மத்தளத்துடன் கூடிய சங்கீர்த்தனம் (கூட்டமாகப் பாடுதல்) நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஸ்ரீ யுக்தேஸ்வர் ரசித்துக் கேட்கலானார். அவருக்கு இசையைப் பற்றிய முழு ஞானம் இருந்தது.

"அவர்கள் சுருதி பிசகிவிட்டார்கள்!" குரு சமையல் செய்பவர்களை விட்டுவிட்டு பாடகர்களுடன் சேர்ந்து கொண்டார். கீதம் இனிமையாக மீண்டும் கேட்டது. இப்பொழுது சுருதி சுத்தமாகப் பாடப்பட்டது.

சங்கீத விஞ்ஞானத்தைப் பற்றி உலகத்திலேயே மிகப் பழமையான குறிப்புக்கள், சாம வேதத்தில் அடங்கியுள்ளன. பாரதத்தில் இசை, ஓவியம் மற்றும் நாடகம் ஆகியவைகள் தெய்வீகக் கலைகளாகக் கருதப்படுகின்றன. பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய சாசுவத மும்மூர்த்திகளுமே முதல் பாடகர்களாவர். சிவன், அண்ட வெளியில் ஆடும் நடராஜனாக சித்தரிக்கப்பட்டு படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவைகளில் ஏற்படும் எண்ணிக்கையிலடங்காத தாளலயங்களைக் கண்டுபிடித்தவராக சமய நூல்களில்

வர்ணிக்கப்பட்டிருக்கிறார். பிரம்மாவும் விஷ்ணுவும் அவருக்குக் காலக் கணக்கைக் காண்பிக்கும் வகையில் தாளமிடு கிறார்கள். பிரம்மா கைத் தாளத்தையும், விஷ்ணு புனிதமான மிருதங்கத்தையும் இசைக்கிறார்கள்.

ஞானத்தின் இறைவியான சரஸ்வதி எல்லா நரம்பிசைக் கருவிகளுக்கும் தாயான வீணையை மீட்டி இசைத்த வண்ணமிருப்பதாக உருவகப்படுத்தப் பட்டிருக்கிறார். விஷ்ணுவின் ஓர் அவதாரமான கிருஷ்ணன் இந்துமதக் கலைகளில் புல்லாங்குழலை இசைப்பதாக சித்தரிக்கப் பட்டிருக்கிறார். புல்லாங்குழலினால் பரவசம் மிக்க பாட்டை அவர் இசைத்து, மாயையின் பொய்த்தோற்றத்தினால் அலைக்கழிக்கப்படும் மனித ஆத்மாக்களை அவர்களது உண்மையான வீட்டிற்குத் திரும்ப அழைக்கிறார்.

இந்திய சங்கீதத்தின் அஸ்திவாரக் கற்கள், ராகங்கள் அல்லது நிர்ணயிக்கப்பட்ட சங்கீத ஸ்வரங்கள்தான். ஆறு மூல ராகங்கள் 126 ராகினி களாகவும் (மனைவிகள்) புத்திரர் களாகவும் கிளைகளாகப் பிரிகின்றன. ஒவ்வொரு ராகமும் குறைந்தது ஐந்து ஸ்வரங்களைப் பெற்று இருக்கிறது. வாதி அல்லது அரசன் என்பது முக்கியமான ஸ்வரமாகும். ஸமவாதி அல்லது பிரதம மந்திரிக்கு இரண்டாவது ஸ்தானம் அளிக்கப்பட்டிருக்கிறது. அனுவாதி அல்லது வேலையாட்கள் எனப்படுபவைதான் உதவி ஸ்வரங்களாகின்றன. விவாதி அல்லது பகைவன் என்பது மாறுபட்ட ஸ்வரமாகும்.

ஒவ்வொரு மூல ராகத்திற்கும் நாளின் ஒரு

குறிப்பிட்ட நேரத்துடனும் வருடத்தின் ஒரு பருவ காலத்துடனும் குறிப்பிட்ட சக்தியைக் கொடுக்கும் ஒரு ராக தேவதையுடனும் இயற்கையான தொடர்பு உண்டு. இவ்விதமாக (1) ஹிந்தோள் என்னும் ராகம் பிரபஞ்சம் முழுவதும் அன்பு என்ற உணர்வை உண்டாக்குவதற்காக வசந்த காலத்தின் வைகறையில் மட்டுமே கேட்கப்படுவதாகும்; (2) தீபக் என்னும் ராகம் கருணையை எழுப்ப கோடைக்கால மாலை நேரங்களில் பாடப்படுகிறது; (3) மேகராகம் தைரியத்தை வெளிக் கொணரவேண்டி மழைக்கால மதிய நேரங்களில் பாடப்படுகிறது; (4) பைரவ் ராகம் அமைதியைப் பெற வேண்டி ஆகஸ்ட், செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் காலை நேரங்களில் பாடப்படுகிறது; (5) தூய்மையான அன்பை அடைய வேண்டி ஸ்ரீராகம் இலையுதிர் காலத்தின் வைகறை, அந்திமாலை நேரங்களுக்காகவே ஏற்பட்டிருக்கிறது; (6) மால்கௌன்ஸ் ராகம் குளிர்கால அர்த்த ராத்திரிகளில் வீரத்தை வேண்டிப் பாடப்படும்.

பண்டைய காலத்து ரிஷிகள் மனிதனுக்கும் இயற்கைக்கும் உள்ள இந்த சம்பந்தத்தின் விதிமுறைகளைக் கண்டுபிடித்துள்ளார்கள். இயற்கை என்பது ஓம் என்னும் மூலநாதம் அல்லது ஒலியதிர்வின் ஸ்தூல உருவமே யாதலால் சில மந்திரங்கள் அல்லது உச்சாரணைகள்[8] மூலம், மனிதன் இயற்கையின் அனைத்துத் தோற்றங்களையும் வசப்படுத்த முடியும். பதினாறாவது நூற்றாண்டில் அக்பர் பாதுஷாவின் ஆஸ்தான கவி மியான் தான்ஸேன் பெற்றிருந்த

சிறப்பான சக்திகளைப் பற்றி சரித்திர சான்றுகள் கூறுகின்றன. சூரியன் உச்சியிலிருக்கும் பொழுது, இரவு நேரத்திற்குரிய ஒரு ராகத்தைப் பாடுமாறு சக்கரவர்த்தி கட்டளை இட்டதின் பேரில் தான்ஸேன் ஒரு மந்திரத்தை உச்சரித்தவுடன் அரண்மனையின் எல்லா பக்கங்களிலும் இருட்டு கவ்வியது.

பாரதீய சங்கீதம், அதன் ஸ்வர ஸ்தாயியை இருபத்திரண்டு சுருதிகள் அல்லது அரை ஸ்வரங்களாகப் பிரித்துள்ளது. இந்த நுண்ணிய ஸ்வர இடைவெளிகள், பன்னிரன்டு அரை ஸ்வரங் களை மட்டுமே வர்ண ஸ்வர வரிசையில் உடைய மேற்கத்திய சங்கீதத்தினால் வெளிப்படுத்த முடியாத மிக மிக நுண்ணிய, ஸ்வர பேதங்களை வெளியிட முடியும். ஸப்த ஸ்வரங்களின் ஒவ்வொரு ஸ்வரத்திற்கும் இந்து புராணங்களில் ஒரு நிறத்துடனும், ஒரு பறவை அல்லது மிருகத்தின் சப்தத்துடனும் தொடர்பு உண்டு. டோ பச்சை வண்ணத்துடனும், மயிலுடனும்; ரே சிகப்பு நிறத்துடனும், வானம் பாடியுடனும்; மி தங்க வண்ணம், வெள்ளாடுடனும்; ஃபா மஞ்சள் கலந்த வெண்ணிறம் மற்றும் நாரையுடனும்; ஸால் கருமை நிறம் மற்றும் குயிலுடனும்; லா மஞ்சள் நிறத்துடனும் குதிரையுடனும்; ஸி எல்லா வண்ணக் கலவையோடும் யானையுடனும் தொடர்பு கொண்டுள்ளன.

பாரதீய சங்கீதம் எழுபத்திரண்டு தாட்டுவரிசை அல்லது ஸ்வர வரிசைகளைக் கொண்டது. ஒரு குறிப்பிட்ட ராக எல்லைக்குள் தனது ஆற்றலைக்

காண்பிப்பதற்கு பாடகரின் கற்பனா சக்திக்கு ஏற்ற எண்ணற்ற வாய்ப்புகள் உண்டு. அவர் ராகத்தின் முக்கியமான ஸ்வரூபம் அல்லது கட்டமைப்பின் நிச்சய தன்மைக்கு ஏற்றார் போல ஒருமுகப்படுத்தி, அதிலேயே அவருடைய தனித் திறமையைப் பொறுத்து, மேலும் மேலும் அழகூட்டுகிறார். இந்து சங்கீத வித்வான் ஏற்கனவே நிர்மாணிக்கப்பட்ட ஒரே ஸ்வரங்களை உபயோகிப்பதில்லை. ஒவ்வொரு தடவையும் குறிப்பிட்ட ராகத்தின் ஆதார ஸ்வரங்களை வைத்துக் கொண்டு அதைப் புதிதாக அழகு செய்கிறார்; அனேகமாக ஒரே விதமான ஸ்வரக் கோவையைத் திரும்பத் திரும்ப அதிலுள்ள நுண்ணிய சில ஸ்வர தாள வித்தியாசங்கள் விளங்கும்படி அழுத்தம் கொடுத்துக் கையாளுகிறார்.

மேல்நாட்டு சாகித்ய கர்த்தாக்களில் பாக் (Bach) என்பவர் திரும்பத் திரும்ப சிறு வித்தியாசங்களுடன் நூறு வித சிக்கலான வகைகளில் கையாளக்கூடிய இசையின் அழகையும் சக்தியையும் புரிந்து கொண்டிருந்தார்.

சமஸ்கிருத இலக்கியம், நூற்றிருபது வகையான தாளங்கள் அல்லது கால நிர்ணயங்களைப் பற்றி விவரிக்கிறது. இந்து சங்கீதத்தின் சிருஷ்டி கர்த்தா பரதர், ஒரு வானம்பாடியின் இசையில் முப்பத்திரண்டு தாள வகைகளைப் பிரித்தெடுத்ததாகச் சொல்லப்படுகிறது. தாளம் அல்லது லயத்தின் உற்பத்தியானது மனித இயக்கங்களில்நடையின் இருமடங்கு நேரம், தூக்கத்தில் உள்மூச்சின் நீளம் வெளி மூச்சைவிட இருமடங்காக

இருக்கும்பொழுது மும்முறை சுவாசித்தலின் நேரம்வேரூன்றி இருக்கிறது.

நாதத்தின் மிகப் பரிபூரண இசைக்கருவி மனிதக்குரல் என்று பாரதம் வெகு காலத்திற்கு முன்பே அங்கீகரித்திருக்கிறது. ஆதலால் இந்து சங்கீதம் வெகுவாக மனிதக் குரலின் மூன்று ஸ்வர ஸ்தாயிகளில் அடங்கி விடுகிறது. அதே காரணத்தினால்தான் ஸ்வரங்களிலிருந்து எழும் இசைக்கு (அடுத்தடுத்து வரும் ஸ்வரங்களின் தொடர்பு), பல ஸ்வரங்களின் ஒத்திசைவை (ஒரே சமயத்தில் நிகழ்கிற ஸ்வரங்களின் தொடர்பு) விட அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது.

இந்து சங்கீதம் தன்மயமானது, ஆத்மீகமானது, மற்றும் தனித்துவம் வாய்ந்த கலை. அதன் குறிக்கோள் வாத்தியங்களின் இணைவினால் உண்டாகும் சிறப்பில் இல்லை. ஆனால், தான் பரமாத்மாவுடன் இணைவதில் உள்ளது. இந்தியாவின் பெயர் பெற்ற சாகித்தியங்கள் எல்லாமே இறை அன்பர்களால் இயற்றப்பட்டவையே; பாடகருக்கு சமஸ்கிருத வார்த்தை பாகவதர்அதாவது பகவானின் புகழைப் பாடுபவர்.

சங்கீர்த்தனம் அல்லது கோஷ்டி கானம் என்பது ஒரு பலன் தரும் யோக முறை அல்லது ஆத்மீகப் பயிற்சியாகும். ஏனெனில் இதற்குத் தீவிரமான ஒருமுகப்படுத்தும் தன்மையும் அடிப்படையான எண்ணத்திலும் ஒலியிலும் ஒன்றிவிடும் தன்மையும் அவசியமாகின்றன. மனிதன் என்பவன்

படைப்பாற்றலுடைய சொல்லின் வெளிப்பாடேயாதலால் நாதம் அல்லது ஒலி அவனிடத்தில் சக்தி மிகுந்த உடனடி விளைவை உண்டாக்குகிறது. கீழ்த்திசை மற்றும் மேற்கத்திய நாடுகளின் மகத்தான ஆன்மீக சங்கீதம் மனிதனை ஏன் மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறது என்றால் அது ஒரு தற்காலிகமான அதிர்வலை எழுச்சியை அவனுடைய முதுகுத்தண்டின் சூட்சும[9] மையங்கள் ஒன்றில் ஏற்படுத்துகிறது. அந்த ஆனந்தமயமான வினாடிகளில் அவனுக்குத் தன் ஆதி தெய்வீகத்தன்மையின் மங்கலான ஞாபகம் வருகிறது.

அந்த விழா நாளில் ஸ்ரீ யுக்தேஸ்வரின் இரண்டாவது மாடியின் அமரும் அறையிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த அந்த சங்கீர்த்தனம் கொதிக்கும் பாத்திரங்களின் நடுவில் இருந்த சமையல்காரர்களுக்கும் உற்சாகத்தை அளித்தது. நானும் என் சகோதர சிஷ்யர்களும் கையைத் தட்டித் தாளமிட்டவாறு கடைசி அடிகளைப் பாடினோம்.

மாலை நெருங்கியதும் நாங்கள் நூற்றுக்கணக்கான விருந்தாளிகளுக்கு கிச்சிடி (அரிசியும் பருப்பும் கலந்தது) பொங்கல் இவைகளைக் காய்கறிகளுடன் பரிமாறினோம். முற்றத்தில் ஜமக்காளங்களை விரித்தோம். விரைவில் நட்சத்திரப் பந்தலுக்குக் கீழே அமர்ந்துக் கொண்டு கூட்டத்தினர் ஸ்ரீ யுக்தேஸ்வரின் அறிவு செறிந்த உபன்யாசத்தை அமைதியாகக் கேட்டவாறு இருந்தனர். அவருடைய மேடைப் பேச்சுக்கள் கிரியா யோகத்தின் முக்கியத்துவத்தையும், சுயமரியாதையுடன் கூடிய

வாழ்க்கை, அமைதி, தீர்மானத்துடன் செயல்படுதல், எளிமையான ஆகாரம், முறையான தேகப் பயிற்சி இவைகளை வலியுறுத்துபவைகளாக இருந்தன.

பின்னர் சின்னச்சிறு சீடர்கள் குழு தெய்வீகத் தோத்திரங்களைப் பாடியது. உருக்கமான சங்கீர்த்தனத்துடன் கூட்டம் முடிவுற்றது. இரவு பத்து மணியிலிருந்து நள்ளிரவு வரை ஆசிரம வாசிகள் பாத்திரங்களைக் கழுவினர். என் குரு என்னைத் தன் அருகில் அழைத்தார்.

"நீ இன்முகத்துடன் இன்று செய்த சேவையும், சென்ற ஒரு வாரமாகவே இதற்கான தயாரிப்புகளில் ஈடுபட்டிருந்த முறையும் எனக்கு மகிழ்ச்சியைத் தருகின்றன. உன்னை என்னருகில் இருத்திக்கொள்ள விரும்புகிறேன். இன்று இரவு நீ என் படுக்கையிலேயே தூங்கலாம்."

எனக்கு இந்தச் சலுகை கிடைக்குமென நான் நினைத்ததே இல்லை. நாங்கள் சிறிதுநேரம் ஆழ்ந்த தெய்வீக அமைதி நிலையில் அமர்ந்திருந்தோம். நாங்கள் படுத்த பத்தே நிமிடங்களில் குருதேவர் எழுந்து உடைகளை அணியத் தொடங்கினார்.

"என்ன விஷயம், ஐயா?" என் குருவுடன் படுத்து உறங்கும் ஆனந்தம் திடீரென்று நிச்சயமற்றதாகத் தோன்றியது.

"சில மாணவர்கள் ரயிலைத் தவறவிட்டுவிட்டு இப்பொழுது வந்து கொண்டிருக்கிறார்கள் என நினைக்கிறேன். அவர்களுக்கு ஏதாவது உணவு தயார்

செய்வோம்."

"குருஜி, இரவு ஒரு மணிக்கு யாரும் வரமாட்டார்கள்."

"நீ படுத்துக்கொள், நீ மிக சிரமப்பட்டு வேலை செய்திருக் கிறாய். அதனால் நான் போய் சமைக்கிறேன்."

ஸ்ரீ யுக்தேஸ்வரின் தீர்மானமான குரலைக் கேட்டு நான் படுக்கையிலிருந்து குதித்து இரண்டாவது மாடியின் உள் முகப்பிலுள்ள அன்றாடம் உபயோகிக்கும் சிறு சமையலறைக்குள் அவரைத் தொடர்ந்து சென்றேன். அரிசியும் பருப்பும் விரைவில் வேகத் தொடங்கின.

என் குரு அன்புடன் புன்னகைத்தார். இன்றிரவு நீ களைப்பையும் கடும் உழைப்பின் பயத்தையும் வென்று விட்டாய். நீ வருங்காலத்தில் என்றுமே அவைகளால் பாதிக்கப் படமாட்டாய்.

அவர் என் ஆயுள் முழுவதற்குமான இந்த ஆசியை வழங்கிக் கொண்டிருக்கும் பொழுதே வெளி முற்றத்தில் காலடிச் சத்தம் கேட்டது. நான் கீழே ஓடி ஒரு மாணவர் குழுவை உள்ளே அனுமதித்தேன்.

"அன்பான சகோதரனே," ஒருவர் கூறினார். "குரு தேவரை இந்த நேரத்தில் தொந்தரவு செய்ய எங்களுக்கு எவ்வளவு தயக்கமாயிருக்கிறது! இரயில் நேரத்தை நாங்கள் தவறாகப் புரிந்து கொண்டுவிட்டோம். ஆனால் குருவைத் தரிசிக்காமல் வீட்டுக்குத் திரும்ப மனம் வரவில்லை."

"அவர் உங்களை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார். உங்களுக்காக இப்பொழுது சமையல் கூட செய்து

கொண்டிருக் கிறார்."

ஸ்ரீ யுக்தேஸ்வரின் வரவேற்புக் குரல் கேட்டது. வியப்பிற்குள்ளான விருந்தினர்களை நான் சமையல் அறைக்கு அழைத்துச் சென்றேன். குருதேவர் கண் சிமிட்டலுடன் என் பக்கம் திரும்பினார்.

"இப்பொழுது நீ விசாரித்துத் தெரிந்து கொண்ட பின்னர் நம் விருந்தினர்கள் உண்மையிலேயே ரயிலைத் தவறவிட்டு விட்டார்கள் என நீ திருப்தியுற்றாய் என்பதில் சந்தேகமில்லை அல்லவா?"

அரைமணி நேரத்திற்குப் பிறகு கடவுளைப் போன்ற குருதேவரின் பக்கத்தில் படுத்து நித்திரை செய்யும் பேற்றை மகிழ்ச்சியுடன் எதிர் நோக்கியபடி அவரைத் தொடர்ந்து படுக்கை அறைக்குள் சென்றேன்.

---

1 1939 இல் புதிதாக உருவாக்கப்பட்ட ஒரு வானொலி நுண்ணோக்கி இதுவரை யாருக்கும் தெரிந்திராத கதிர்களின் புது உலகத்தை தெரியச் செய்தது. மனிதனும் மற்றும் ஜடப் பொருட்கள் என்று கருதப்படும் எல்லா விதமானவையும் எப்போதும் வெளியிடும் கதிர்களை இந்தக் கருவி உண்மையில் காண்கிறது, என்று அசோசியேடட் பிரஸ் வெளியிட்டது. டெலிபதி (பேச்சின்றி மனதினால் கருத்தை உரைத்தல்), வருநிகழ்வுணர்வு, தொலைநிகழ்வுணர்வு ஆகியவற்றை நம்புகிறவர்களுக்கு இந்த அறிவிப்பின் மூலம் - ஒ ருவரிடமிருந்து இன்னொருவருக்கு உண்மையில் செல்கின்ற, கண்களுக்குப் புலப்படாத கதிர்கள் உண்டு என்பதற்கான முதல் விஞ்ஞான நிரூபணம் கிடைத்துள்ளது. அந்த வானொலிக் கருவி உண்மையில் வானொலி-அலைவரிசை நிறமாலை மானியாகும். நட்சத்திரங்களை உருவாக்கும் அணுக்களின் வகைகளை எப்படி நிறமாலைமானி பிரித்தெடுக்கிறதோ அதுபோலவே வானொலிக் கருவி குளிர்ந்த, ஒளிர்தலற்ற பொருள்களை பிரித்தறியச் செய்கிறது....பல வருடங்களாகவே, மனிதனிடமிருந்தும் மற்ற உயிரினங்களிடமிருந்தும் அம்மாதிரி கதிர்வீச்சுகள் வருவதாக விஞ்ஞானிகள் சந்தேகப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இன்று அவைகளின் உண்மை, முதன்முதலாக பரிசோதனையின் மூலம் நிரூபிக்கப்பட்டுவிட்டது. இந்தக் கண்டுபிடிப்பு இயற்கையிலுள்ள ஒவ்வொரு அணுவும் ஒவ்வொரு மூலக்கூறும் தொடர்ச்சியாகச் செயல்படும் வானொலிஒலிபரப்பு நிலையம் எனத் தெரிவிக்கிறது....இம்மாதிரி, இறந்த

பின்பு கூட மனிதனாக இருந்த பொருள் அதன் நுட்பமான கதிர்களைப் பாய்ச்சிய வண்ணம்தான் இருக்கிறது. இக்கதிர்களின் அலை நீளம் இப்பொழுது ஒலிபரப்புவதற்கு உபயோகப்படுத்தப்படும் வானொலி அலைகளின் மிகச் சிறு அலை நீளத்தை விடச் சிறியதாகவும் மிகப் பெரிய

அலை நீளத்தைவிடப் பெரியதாகவும் உள்ளது. இந்த அலைகளின் கலப்பு நினைத்தே பார்க்க முடியாதவை. அவைகள் கோடிக் கணக்கில் உள்ளன. ஒரே ஒரு பெரிய மூலக்கூறு 10,00,000 வகையான அலை நீளங்களை ஒரே சமயத்தில் வெளியிடுகிறது. இந்த அலை நீளங்களில் நீளமானவை வானொலி அலைகளைப் போன்று வேகமாகவும் சுலபமாகவும் செல்லுகின்றன....ஓர் ஆச்சரியமான வித்தியாசம் இப்புதிய வானொலிக் கதிர்களுக்கும் ஒளிக்கதிர்கள் போன்ற நன்கு பழக்கமான கதிர்களுக்கும் இடையே இருக்கிறது. அது என்னவெனில் இவ்விதமான வானொலி அலைகள் தடைப்படாத பொருட்களிலிருந்து மிக நீண்ட காலத்திற்கு, ஆயிரக் கணக்கான வருடங்களுக்கு வெளியானபடி இருக்கும்.

2 387ஆம் பக்கம் உள்ள அடிக்குறிப்பைப் பார்க்கவும்.

3 நம் ஆறாவது உணர்வு என்ற நூலின் ஆசிரியர். (லண்டன்: ரைடர் அண்ட் கம்பெனி)

4 ஸர் ஆர்தர் கானன் டாயல் எழுதும் துப்பறியும் நாவல்களின் பிரபல நாயகன்.

5 சத் என்பதன் பதவுரை இருப்பது; ஆதலால் சாரம், உண்மை, மெய். சங்கம் என்பது சேர்க்கை. ஸ்ரீ யுக்தேஸ்வர் அவருடைய ஆசிரம நிறுவனத்தை சத்சங்கம் (உண்மையுடன் சேர்க்கை) என அழைத்தார்.

6 ஆதலால் உன் கண் ஒன்றாக ஆனால் உன் முழு உடலும் ஒளிமயமாகும். மத்தேயு 6:22 (பைபிள்). மிக ஆழ்ந்த தியானத்தின் பொழுது ஒற்றை அல்லது ஞானக்கண், நெற்றியின் மத்திய பாகத்தில் தென்படும். எல்லாமறிந்த அந்தக் கண் சமய நூல்களில் மூன்றாவது கண், கிழக்கு நட்சத்திரம், உள்ளிருக்கும் கண், சுவர்க்கத்திலிருந்து கீழிறங்கி வரும் புறா, சிவனுடைய கண், உள்ளுணர்வின் கண் என்று பலவாறு அழைக்கப்படுகிறது.

7 கயுத நட்டவனயுல் கட்கவயு யயு? கண்ணைப் படத்தவன் பயுர்க்க

மாட்டானா? மனிதனுக்கு அறிவைப் புகட்டுபவன் அறிந்து கொள்ள மாட்டானா? - சங்கீதம் 94:910 (பைபிள்).

8 எல்லா மக்களின் நாடோடிக் கதைகளிலும் இயற்கையை வெற்றிக் கொள்வதற்கான உச்சாடனக் குறிப்புகள் உள்ளன. அமெரிக்கஇந்தியர்கள் மழைக்கும் காற்றுக்கும் பலனளிக்கும் ஒலிச் சடங்குகளை உருவாக்கி இருந்தனர். புகழ்பெற்ற இந்து, சங்கீத வித்வான் தான்ஸேன் அவருடைய பாட்டின் திறமையினால் நெருப்பை அணைக்க வல்லவராயிருந்தார்.

1926 இல் நியூ யார்க் நெருப்பு அணைப்பவர்களின் ஒரு குழுவிற்கு முன் கலிஃபோர்னியாவின் இயற்கை விஞ்ஞானியாகிய சார்ல்ஸ் கெல்லாக் என்பவர் நெருப்பை குரல் அலையதிர்வுகள் எப்படி பாதிக்கின்றன என்பதை செய்து காண்பித்தார். அவர் பெரிதாக்கப்பட்ட வயலின் வில்லைப் போன்ற ஒரு வில்லை அலுமினிய இசைக்கவை (Tuning Fork) ஒன்றில் வேகமாகச் செலுத்தி ஒரு தீவிரமான வானொலி இரைச்சல் போல் ஒரு கிறீச்சிடலை உண்டாக்கினார். உடனே குழிந்த ஒரு கண்ணாடிக் குப்பியின் உள்ளே இரண்டு அடி உயரத்தில் துள்ளிக் கொண்டிருந்த மஞ்சள் நிற வாயு சுவாலை, ஆறு அங்குலமாகக் குறைந்து, தெறிக்கும் நீலச் சுடராகப் பிரகாசித்தது. அதே வில்லுடன் இன்னொரு முயற்சி, இன்னொரு கிறீச்சிடலின் அதிர்வு அதை அணைத்துவிட்டது.

9 மூளைத்தண்டுவட ரகசிய மையங்களை (சக்கரங்கள், சூட்சும தாமரைகள்) எழுச்சி பெறச் செய்வது ஒரு யோகியின் புனிதமான குறிக்கோளாகும். புதிய ஏற்பாட்டில் வெளிப்படுத்தின விசேஷம் என்ற அத்தியாயத்தில் இயேசு பெருமானால் யோவான் மற்றும் நெருங்கிய சீடர்களுக்கு உபதேசிக்கப்பட்ட,

யோக விஞ்ஞான முறை, சூசகமாகக் கூறப்பட்டிருக்கிறது. இதன் முழுப் பொருளை மேலை நாட்டு விளக்க உரையாளர்கள் சரியாகப் புரிந்துக் கொள்ளவில்லை. யோவான் (வெளிப்படுத்தின விசேஷம் 1:20 பைபிள்) ஏழு நட்சத்திரங்களின் மர்மம், ஏழு கோயில்கள் என்பவைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். இந்தச் சின்னங்கள் யோக முறையில் கூறப்பட்டிருக்கும் ஏழு ஒளித் தாமரைகள், மூளை-முதுகுத் தண்டு அச்சில் உள்ள கண்ணி-கதவுகள் என்பவைகளையே குறிப்பிடுகின்றன. தெய்வீகமாக ஏற்படுத்தப்பட்ட இந்த வாசல்களினால் யோகி விஞ்ஞான முறையிலான தியானத்தின் மூலம் உடல் என்ற சிறையிலிருந்து தப்பி ஆத்மாவுடன் திரும்பவும் ஒன்றிவிடுகிறான். (26வது அத்தியாயத்தைப் பார்க்கவும்)

ஏழாவது மையம், மூளையில் உள்ள ஆயிரம் இதழ்களைக் கொண்ட தாமரை எல்லை கடந்த உணர்வின் சிம்மாசனமாகும். தெய்வீக ஒளிபெற்ற நிலையில் யோகி பிரம்மா அல்லது படைப்புக் கடவுளை பத்மஜா, தாமரையில் பிறந்தவனாகக் காண்கிறான்.

பத்மாசனம் என்பது யோகி அந்த சம்பிரதாய ஆசனத்தில் பல வண்ணப் பத்மங்களை (தாமரைகளை) மூளை – முதுகுத் தண்டு மையங்களில் காண்கிறான் என்பதால் ஏற்பட்ட பெயர். ஒவ்வொரு தாமரையும் பிராணத்தினால் (உயிர்சக்தி) ஆன அதன் இயல்புக்கேற்ற எண்ணிக்கையுள்ள இதழ்களை அல்லது கதிர்களைப் பெற்றிருக்கிறது. பத்மங்களைச் சக்கரங்கள் என்றும் சொல்வதுண்டு.

பத்மாசனம் முதுகுத்தண்டை நேராக நிறுத்தி உடலை பத்திரமான நிலையில் வைத்து, பரவச நிலையில் (சவிகல்ப சமாதி) முன்புறமோ அல்லது பின்புறமோ விழுந்துவிடும் அபாயத்திலிருந்து காக்கிறது; அதனால் யோகிக்கு மிகப் பிடித்தமான தியான நிலை. இருந்தாலும் தொடக்க நிலையிலிருப்பவருக்கு பத்மாசனம் சில தொல்லைகளைக் கொடுக்கலாம்; ஹதயோக நிபுணர் ஒருவரின் வழிகாட்டுதலின்றி அதை முயற்சி செய்யக்கூடாது.

அத்தியாயம் 16

# கோள்களைத் தந்திரத்தால் வெற்றி கொள்ளல்

"முகுந்தா, நீ ஏன் சோதிட வளையல் ஒன்றை வாங்கிக் கொள்ளக் கூடாது?"

"வாங்கியாக வேண்டுமா, குருதேவா? எனக்கு சோதிடத்தில் நம்பிக்கை இல்லையே."

"நம்பிக்கை உண்டா இல்லையா என்ற கேள்வி அல்ல; எந்த விஷயத்திலும் ஒருவர் கொள்ள வேண்டிய விஞ்ஞானப் பூர்வமான மனோபாவம், அது உண்மையா என்பதுதான். புவி ஈர்ப்பு சக்தியின் விதி நியூட்டனுக்கு பிறகு எப்படி இயங்கியதோ அதே திறத்துடன்தான் முன்னாலும் இயங்கி வந்தது. மனிதனுடைய நம்பிக்கையைப் பெற்றுத்தான் பிரபஞ்சத்தின் விதிகள் செயல்பட வேண்டுமெனில் பிரபஞ்சம் ஒரே குழப்பமாகதான் இருக்கும்.

"போலிகள் புராதன வானவியல் அறிவை இந்த இழிநிலைக்குக் கொண்டு வந்துள்ளார்கள். சோதிடம், கணக்கியலின்படியும்[1] தத்துவ சாத்திரத்தின்படியும் மிகக் கூரிய அறிவுடையவர்களால் மட்டுமே கிரகித்துக் கொள்ளக் கூடிய அளவு மிகப் பெரியது. மூடர்கள் கோள் நிலைகளை சரியாக ஆராயாமல் அங்கு உள்ள எழுத்திற்குப் பதிலாக கிறுக்கலைப் பார்ப்பது என்பது குறைபாடுள்ள இவ்வுலகத்தில் எதிர்பார்க்கப்பட

வேண்டியதே. ஞானிகளிடம் உள்ள ஞானத்தைப் புறக்கணிக்கக் கூடாது.

"படைப்பின் எல்லாப் பாகங்களும் ஒன்றாக இணைக்கப்பட்டு ஒன்றை ஒன்று பாதிப்பதாய் அமைந்துள்ளன. பிரபஞ்சத்தின் சமநிலைப்பட்ட சீரமைப்பு பரஸ்பர பரிமாற்றத்தில் தான் வேரூன்றியுள்ளது," என்று என் குருதேவர் தொடர்ந்தார். மனிதன், மனிதனுக்குரிய என்ற நிலையில் இருவித சக்திகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளதுமுதலாவது, அவனுள்ளே மண், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம் ஆகிய இவைகளின் சேர்க்கையினால் ஏற்படும் கொந்தளிப்புகள்; இரண்டாவது, வெளியிலுள்ள இயற்கையின் பிரிவுச் சக்திகள். மனிதன் தன் நிலையற்ற தன்மையினால் அவதிப்படும் காலம்வரை அவன் விண்ணுலக மற்றும் மண்ணுலகத்தின் எண்ணற்ற மாறுதல்களினால் பாதிக்கப் படுகிறான்.

"சோதிட சாத்திரம் மனிதன், கோள்களின் புறத் தூண்டுதல்களுக்கு எப்படி ஈடுகொடுக்கிறான் என்பதைப் பற்றிக் கூறுகிறது. கோள்கள் வேண்டுமென்று இரக்கமோ அல்லது வெறுப்போ கொள்வதில்லை; அவை வெறுமனே நேர்முக அல்லது எதிர்முகக் கதிரியக்கங்களை வீசுகின்றன. அவை தாமாகவே மனிதர்களுக்கு நன்மையோ தீமையோ செய்வதில்லை. ஆனால் ஒவ்வொரு மனிதனும் கடந்த காலத்தில் செயல்பட வைத்துள்ள காரணகாரிய சமநிலைகளின் வெளிப்படையான இயக்கத்திற்கு அந்த விண்மீன்கள்

ஒரு விதிமுறையான பாதையை அளிக்கின்றன.

"ஒரு குழந்தை, அதனுடைய கர்மவினைக்கேற்றபடி விண் கதிர்கள் கணக்காகப் பொருந்தியுள்ள அந்த நாளில் அந்த நேரத்தில் பிறக்கிறது. அதனுடைய ஜாதகம், அதனுடைய மாற்ற முடியாத கடந்த காலத்தையும் அதனுக்கு ஏற்படக்கூடிய வருங்கால விளைவுகளையும் வெளியிடும் ஒரு சவாலான சித்திரம். ஆனால் பிறந்த நேரத்தில் குறித்த ஜாதகத்தை உள்ளுணர்வுள்ள ஞானம் படைத்த சிலரால்தான் சரியாக விளக்க முடியும்; இவர்கள் மிகக் குறைவு.

"ஒரு மனிதன் பிறக்கும் நேரத்தில் வானவெளியில் வெளிப்படும் தெளிவான செய்தி, விதியைஅதாவது கடந்த காலத்தின் நன்மை தீமைகளின் விளைவைவலியுறுத்துவதற்கு ஏற்படுவது அன்று; அனைவருக்கும் பொதுவான அடிமைத் தனத்திலிருந்து தப்பித்துக் கொள்ள அவனுடைய மனோசக்தியை தூண்டவே அது ஏற்படுகிறது. அவன் செய்ததை அவனால் அழிக்க முடியும். அவனைத் தவிர வேறு எவரும் அவனுடைய வாழ்க்கையில் இப்பொழுது அனுபவித்து வரும் பாதிப்புகளின் காரணங்களைத் தூண்டி விடவில்லை. அவையனைத்தும், முதலாவதாக, அவனுடைய செயல்களினாலேயே உண்டாக்கப்பட்டவை என்பதனாலும், எந்த கிரகத்தின் பாதிப்புக்கும் உட்படாத ஆன்மீகச் செல்வங்கள் அவன் கைவசம் இருப்பதாலும் அவன் எந்த வரையறையையும் கடக்க முடியும்.

"சோதிடத்திடம் கொண்ட குருட்டு நம்பிக்கையுடன்

கூடிய பயம் ஒருவனை இயந்திரத்தனமான வழிகாட்டலுக்கு அடிமைப்பட்டு அதனையே சார்ந்திருக்கும் இயந்திரமாக்கி விடுகிறது. புத்திசாலியான மனிதன் தன் கோள்களைஅதாவது அவனது இறந்த காலத்தைதோற்கடித்து விடுகிறான். அவன் தன் விசுவாசத்தைப் படைப்புக்களிலிருந்து படைத்தவனுக்கு மாற்றி விடுகிறான். அவன் எவ்வளவுக்கெவ்வளவு ஆத்மாவுடன் உள்ள தன் ஐக்கியத்தை உணர்ந்து கொள்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு பொருள்களினால் அவன் மேல் ஆதிக்கம் செலுத்தப்படுவது குறைகிறது. ஆன்மா என்றுமே சுதந்திரமானது. அதற்கு பிறப்பு கிடையாதாகையால் இறப்பும் கிடையாது. அதைக் கோள்களால் கட்டுப்பாட்டிற்குட்படுத்த முடியாது.

"மனிதன் ஓர் ஆன்மா, மற்றும் உடலும் அவனுக்கு இருக்கிறது. தான் யார் என்பதை அவன் சரியான முறையில் உணர்கிறபோது, அவன் எல்லாக் கட்டாயத் தன்மைகளையும் பின் தள்ளி விடுகிறான். அவன் ஆன்மீக மறதியின் சாதாரண நிலையில் குழம்பி இருக்கும்வரை சூழ்நிலை விதியின் சூட்சுமமான தடைகள் தாம் அவனுக்குத் தெரியும்.

"இறைவன் இணக்கமானவன், தன்னை அவனுடன் இணைத்துக் கொள்ளும் பக்தன் ஒருபோதும் குழப்பமான காரியங்களைச் செய்யமாட்டான். அவனுடைய செயல்கள் சரியானவையாகவும் இயற்கையாகவும் சோதிட விதியுடன் ஒன்றிய நேரங்களில் அமையும். ஆழ்ந்த பிரார்த்தனை, தியானம் இவைகளுக்குப் பிறகு

அவன் தன் தெய்வீக உணர்வுடன் தொடர்பு கொள்கிறான்; உள்முகமான பாதுகாப்பை விட பெரிய சக்தி எதுவும் இல்லை.

"அப்படியானால், அன்பான குருதேவா, ஏன் என்னை ஒரு சோதிட வளையலை அணியும்படி கூறுகிறீர்கள்?" நான் வெகு நேர மௌனத்திற்குப் பிறகு இந்தக் கேள்வியைக் கேட்கத் துணிந்தேன். ஸ்ரீ யுக்தேஸ்வரின் மேன்மையான விளக்கத்தைஎனக்கு புதியதான கருத்துக்கள் கொண்டதைபுரிந்து கொண்டு கிரகித்துக் கொள்ள முயன்று கொண்டிருந்தேன்.

"ஒரு பயணி தான் சேரவேண்டிய இடத்திற்குச் சென்ற பிறகுதான் அவன் வரைபடத்தை எறிந்து விடுவதைச் சரி என்று சொல்லமுடியும். பயணத்தின் பொழுது வசதியான குறுக்கு வழிகளின் அனுகூலத்தை அவன் ஏற்கிறான். புராதன ரிஷிகள் மனிதன் மாயையில் உழலும் காலத்தைக் குறைப்பதற்கு அனேக வழிகளைக் கண்டுபிடித்தார்கள். கர்மவினையின் விதியில் சில இயந்திர கதியிலான அம்சங்களை ஞானத்தின் விரல்களால் சாமர்த்தியமாக சரி செய்து கொள்ள முடியும்.

"மனிதனின் எல்லாத் துன்பங்களும் பொதுவான சட்ட திட்டத்தை எப்படியோ மீறுவதால்தான் உண்டாகின்றன. சமய நூல்கள், மனிதன் இயற்கை விதிகளைப் பின்பற்றுவதோடு தெய்வீகத்தின் எல்லாம்வல்ல தன்மையை அலட்சியம் செய்யக் கூடாதெனப் போதிக்கின்றன. அவன் இறைவனே, நான் உன்னைத்

தான் நம்பி இருக்கிறேன். நீ என்னைக் காப்பாற்ற முடியும் என்பது எனக்குத் தெரியும். ஆனால் நானும் நான் செய்த தவற்றைத் திருத்த என்னால் முடிந்ததைச் செய்கிறேன், எனச் சொல்ல வேண்டும். அனேக வழிகளில்பிரார்த்தனை மூலம், மனவலிமை மூலம், யோக தியானத்தின் மூலம் ஞனிகளை கலந்து ஆலோசிப்பதின் மூலம், சோதிடக் கங்கணங்களை உபயோகிப்பதன் மூலம் சென்ற காலத்திய தவறுகளின் தீய விளைவுகள் குறைக்கப் படலாம் அல்லது நீக்கப்படலாம்.

"எப்படி ஒரு வீட்டில் மின்னலின் அதிர்ச்சியைத் தாங்குவதற்காகச் செப்புக் கட்டைகள் பொருத்தப்படுகின்றனவோ, அதேபோல் உடற் கோயிலும் சில முயற்சிகளினால் பாதுகாக்கப்பட முடியும்.

"மின்சாரம் மற்றும் காந்தக் கதிரியக்கங்கள் இடையறாது உலகத்தை வலம் வந்த வண்ணமிருக்கின்றன. அவை மனித உடலை நல்லவிதமாகவோ தீயவிதமாகவோ பாதிக்கின்றன. யுகங்களுக்கு முன்னே நமது ரிஷிகள் சூட்சுமமான பிரபஞ்சப் பாதிப்புகளின் விபரீத பலன்களுடன் எதிர்த்துப் போராடும் பிரச்சனையைப் பற்றி யோசித்தார்கள். ரிஷிகள், பரிசுத்தமான உலோகங்கள் ஒரு சூட்சும ஒளியை வெளியிடுவதாகவும் அந்த ஒளி, கிரகங்களின் தீய இழுப்புகளை அதிக சக்தியுடன் தடை செய்கிறதெனவும் கண்டனர். சில தாவர வகைகளின் சேர்க்கை கூட உதவுவதாகத் தெரிந்தது.

எல்லாவற்றையும் விட மிகுந்த பலனளிப்பவை குறைபாடற்ற, இரண்டு காரட்டு களுக்குக் குறையாத மணிக்கற்கள் ஆகும்.

"சோதிடத்தின் வருமுன் காக்கும் நடைமுறை உபயோகங்கள், இந்தியாவைத் தவிர வெளிநாடுகளில் தீவிரமாக பயிலப்படவில்லை. சிறிதளவே தெரிந்த ஒரு விஷயம் என்னவெனில் மணிக்கற்கள் பதித்த சரியான நகைகளோ, உலோகங்களோ மற்றும் தாவரத் தயாரிப்புக்களோ, வேண்டிய எடை பெறும்வரை தயார் செய்யப்பட்டு, அந்தக் குணப்படுத்தக் கூடிய பொருள், உடலின் மேல் படும்படியாக தோலுக்கு அடுத்து அணியப்பட்டாலொழிய அவைகளுக்கு மதிப்பு ஏதுமில்லை."

"ஐயா, நான் தங்கள் யோசனைப்படி வளையல் ஒன்றை வாங்கிவிடுகிறேன். ஒரு கோளைத் தோற்கடிக்க வேண்டும் என்ற எண்ணம் என் ஆவலைத் தூண்டுகிறது."

"சாதாரணமாக, தங்கம்,வெள்ளி, தாமிரம் கலந்த கங்கணம் ஒன்று பயன்படுத்த வேண்டும் என்பது என் யோசனை. ஒரு விசேஷ காரணத்திற்காக வெள்ளியும் ஈயமும் கலந்து செய்த ஒன்றை நீ வாங்கிக் கொள்ள வேண்டுமென நான் விரும்புகிறேன்," ஸ்ரீ யுக்தேஸ்வர் மேலும் ஜாக்கிரதையான குறிப்புக்களைக் கொடுத்தார்.

"குருஜி, விசேஷ காரணம் என்று எதைக் குறிப்பிடுகிறீர்கள்?"

"கோள்கள் தற்சமயம் உன் மீது விரோத பாவத்துடன் செயல்பட இருக்கின்றன, முகுந்தா. அஞ்சாதே; நீ

பாதுகாக்கப்படுவாய். இன்னும் ஒரு மாதத்தில் உன் கல்லீரல் உனக்கு மிகத் தொந்தரவு அளிக்கும். அந்த வியாதி ஆறு மாதத்திற்கு உன்னைத் தொடருமென நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் நீ உபயோகப்படுத்தவிருக்கும் சோதிட கங்கணத்தால் அது இருபத்தி நான்கு நாட்களாகக் குறைக்கப்படும்."

நான் மறுநாளே ஒரு நகை வியாபாரியை அணுகி சீக்கிரமே அந்த வளையலை அணிந்தேன். என் ஆரோக்கியம் மிக நன்றாகவே இருந்தது. குருதேவரின் முன்னறிவிப்பு என் மனத்திலிருந்து மறைந்து விட்டிருந்தது. அவர் செராம்பூரை விட்டு வாரணாசிக்குச் சென்றுவிட்டார். எங்களுடைய உரையாடல் நிகழ்ந்த முப்பது நாட்கள் கழித்துத் திடீரென்று என் கல்லீரலில் ஒரு வலி உண்டாயிற்று. தொடர்ந்த வாரங்கள் தாங்க முடியாத வலியுடன் கூடிய பயங்கரமான காலமாக இருந்தது. என் குருவைத் தொந்தரவு செய்ய மனமின்றி நான் தைரியமாக வலியைத் தனியாகவே சமாளித்துவிடலாமென எண்ணினேன்.

ஆனால் இருபத்து மூன்று நாட்களாகப் பட்ட வேதனை என் தீர்மானத்தைப் பலவீனப்படுத்தியது. நான் காசிக்கு ரயிலேறினேன். அங்கு ஶ்ரீ யுக்தேஸ்வர் என்னை விசேஷ அன்புடன் வரவேற்றார். ஆனால் என் துயரை அவரிடம் தனியாகக் கூறுவதற்கு அவர் எனக்கு சந்தர்ப்பம் கொடுக்கவில்லை. அனேக பக்தர்கள் குருதேவரின் தரிசனத்திற்காக [2]அன்று வந்த வண்ணம் இருந்தனர். வலியுடனும் கவனிக்கப்படாமலும் நான் ஒரு

மூலையில் அமர்ந்து கொண்டேன். இரவு சாப்பாடு முடிந்த பின்னர்தான் எல்லா விருந்தினர்களும் கிளம்பினர். அவர்கள் சென்ற பிறகு அந்த வீட்டில் எண்கோண வடிவமுள்ள பால்கனிக்கு என் குரு என்னை அழைத்தார்.

"நீ உன் கல்லீரல் தொந்தரவு சம்பந்தமாக வந்திருக்க வேண்டும். ஸ்ரீ யுக்தேஸ்வரின் பார்வை எங்கோ இருக்க, அவர் முன்னும் பின்னுமாக சில சமயம் நிலவொளியை மறைத்த வண்ணம் நடந்து கொண்டிருந்தார். சரி, நீ இருபத்தி நான்கு நாட்களாக நோயால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறாய், இல்லையா?"

"ஆம், ஐயா."

"தயவு செய்து உனக்கு நான் சொல்லிக் கொடுத்த வயிற்றுப் பயிற்சியை செய்."

"குருதேவா, என் வேதனையின் அளவை நீங்கள் அறிந்திருந்தால் என்னை பயிற்சி செய்யும்படிக் கூற மாட்டீர்கள்." இருந்தாலும் நான் அவர் கட்டளைக்குப் பணிவதற்குப் பலவீனமான முயற்சி செய்தேன்.

"நீ உனக்கு வலி இருக்கிறதென்கிறாய். நான் உனக்கு அப்படி ஏதுமில்லை என்கிறேன். இப்படிப்பட்ட முரண்பாடுகள் எப்படி இருக்க முடியும்?" என் குரு என்னை ஒரு கேள்விக் குறியுடன் நோக்கினார்.

நான் திகைத்து நின்றேன். பிறகு நோய் அகன்ற விடுதலையை உணர்ந்து மிகக் களிப்படைந்தேன். வாரக் கணக்காக என்னைத் தூங்கக்கூட விடாது தொடர்ந்த வேதனையை நான் அதற்கு மேல் உணரவில்லை. ஸ்ரீ

யுக்தேஸ்வரின் சொற்களினால், அந்த வேதனை இருந்ததே இல்லை என்றதுபோல் அகன்றது.

நான் நன்றியுடன் அவர் பாதங்களில் பணிய முனைந்த பொழுது அவர் உடனே என்னைத் தடுத்தார்.

"குழந்தைத்தனமாக இராதே. எழுந்து கங்கை நதியின் மேல் சந்திரன் பவனி வருவதை அனுபவி," என்றார். ஆனால் நான் அவர் பக்கத்தில் வந்து மௌனமாக நின்றபொழுது குருதேவரின் கண்கள் மகிழ்ச்சியால் மின்னின. அவருடைய நோக்கிலிருந்து, என்னைக் கடவுள் தான் காப்பாற்றினார், அவரில்லை என்று நான் உணர வேண்டுமென்று விரும்பியதாகத் தோன்றிற்று.

இன்று கூட நான், வெள்ளியும் ஈயமும் கலந்த அந்தக் கனமான வளையலை அந்த நாளின் நினைவுச் சின்னமாக அணிந்து கொண்டிருக்கிறேன். உண்மையிலேயே உயர்ந்த மாமனிதருடன் நான் வாழ்ந்து கொண்டிருந்தேன் என்பதைப் புதிதாக உணர்ந்து கொண்ட அந்தக் கடந்தகால நாள் என்றும் என் நினைவில் நிற்கவல்லது. பின்னால் பல சந்தர்ப்பங்களில் நான் என் நண்பர்களைக் குணப்படுத்துவதற்காக ஸ்ரீ யுக்தேஸ்வரிடம் அழைத்து வந்த போதெல்லாம் அவர் பெரும்பாலும் மணிக்கற்களையோ அல்லது வளையலையோ[3] அணியும்படி சிபாரிசு செய்திருக்கிறார். சோதிட ஞானத்திதன்படி அவைகளுடைய உபயோகத்திற்கு மதிப்புக் கொடுத்திருக்கிறார்.

என் சிறு வயதிலிருந்தே எனக்குச் சோதிடத்தைப் பற்றி தவறான எண்ணம் ஏற்பட்டிருந்தது. அனேகர்

அடிமைத் தனமாக அதைப் பற்றிக்கொண்டு இருப்பதைக் கண்டது ஒரு காரணம்; இன்னொன்று எங்கள் குடும்ப சோதிடர் பின்னாளில் நடக்கப் போவதாகக் கூறியது: நீ மூன்று தடவைகள் மணமுடிப்பாய், இருமுறை மனைவியை இழந்தவனாக. அதனால் மும்முறை, கல்யாணக் கோயிலில் பலியிட நிற்கும் ஆடுபோல் நானிருப்பதாக எண்ணிச் சிந்தனையில் ஆழ்ந்தேன்.

"நீ உன் விதியைப் பேசாமல் ஒப்புக் கொண்டுவிடு, என்று என் அண்ணன் அனந்தா குறிப்பிட்டான். உன் ஜாதகத்தில் சிறு வயதில் நீ வீட்டைவிட்டு இமயமலையை நோக்கி ஓடிவிடுவாயென்றும் ஆனால் பலவந்தமாக திருப்பி அழைத்து வரப்படுவாய் என்றும் சரியாக எழுதப்பட்டிருக்கிறது. உன் திருமணங்கள் பற்றிய சோதிடமும் பலித்துத்தான் ஆக வேண்டும்."

ஒரு நாள் இரவு அந்தச் சோதிடம் முற்றும் பொய்யென்று என் உள்ளுணர்வில் தெளிவாகத் தோன்றியது. நான் அந்த ஜாதகச் சுருளை நெருப்பில் பொசுக்கி, அந்தச் சாம்பலை ஒரு காகித உறையில் போட்டு அதன் மேல் பழைய கர்மவினையின் விதைகளைத் தெய்வீக ஞானத்தில் பொசுக்கி விட்டால் அவை முளைக்க முடியாது, என்று எழுதினேன். நான் அந்த உறையைக் கண்ணில்படும்படியான ஓர் இடத்தில் வைத்தேன்; அனந்தா உடனே நான் ஏற்க மறுத்த கருத்தைப் படித்தான்.

"நீ உண்மையை, இந்தக் காகிதச் சுருளை எரித்ததுபோல் அவ்வளவு சுலபமாக எரித்துவிட

முடியாது," என்று என் அண்ணன் இகழ்ச்சியுடன் சிரித்தான்.

நான் பெரியவனாவதற்கு முன்னாலேயே என் குடும்பத்தார் எனக்கு திருமணம் செய்ய உண்மையிலேயே மூன்று தடவைகள் முயன்றனர். இறைவனிடம் நான் கொண்டுள்ள அன்பு, பழவினை யினால் தோன்றும் சோதிடத் தூண்டுதலைவிட அதிகம் என்பதை அறிந்திருந்ததால் அவர்கள் திட்டத்திற்கு நான் ஒவ்வொரு தடவையும் உடன்படவில்லை.[4]

"ஒரு மனிதனின் ஆத்மஞானம் எவ்வளவு ஆழ்ந்திருக்கிறதோ, அவ்வளவு அதிகமாக அவன், தன்னுடைய சூட்சுமமான ஆன்மீக அலையதிர்வுகளால் முழு பிரபஞ்சத்தையும் வசப்படுத்துகிறான். மேலும் நிலையற்ற பிரபஞ்ச நிகழ்ச்சிகளால் அவன் குறைவாகப் பாதிக்கப் படுகிறான்." குருதேவரின் இந்த சொற்கள் அடிக்கடி என் மனத்தில் தோன்றி ஊக்குவிக்கும்.

அவ்வப்பொழுது நான் சோதிடர்களிடம் என் கிரகநிலைப்படி என் மிகப் பொல்லாத காலங்களைத் தேர்ந்தெடுக்கும்படி கூறி, அப்படியும் நான் செய்ய வேண்டுமென்று நினைத்த காரியங்களைச் செய்தே முடிப்பேன். அந்தச் சமயங்களில் என் வெற்றிக்கு முன்னால் அசாதாரணமான தடைகள் ஏற்பட்டன என்பது உண்மை தான், ஆனால் என் திட நம்பிக்கை என்றும் சரியாகத்தான் இருந்திருக்கிறது; தெய்வத்தின் பாதுகாப்பில் நம்பிக்கை, இறைவன் மனிதனுக்கு அளித்திருக்கும் இச்சாசக்தியின் சரியான உபயோகம்

ஆகியவை கோள்களின் பாதிப்பை விட ஆற்றல் வாய்ந்தவை.

ஒருவன் பிறக்கும்பொழுது இருக்கும் கோள்களின் நிலை, அவன் கடந்த காலத்தின் கைப்பாவை அல்ல என்பதைக் காட்டுவதாக நான் புரிந்து கொண்டேன். அதன் செய்தி, செருக்கிற்கு ஒரு தூண்டுகோல்; ஒவ்வொரு கட்டுப்பாட்டிலிருந்தும் விடுபட வேண்டி, மனிதனின் மன உறுதியைத் தூண்டிட அந்த விண்ணகமே முயல்கிறது. இறைவன் ஒவ்வொரு மனிதனையும் ஒரு தனித்தன்மை பொருந்திய ஆன்மாவாக படைத்துள்ளான். ஆதலால் அவன் தற்காலிகமாக ஏற்றுள்ள பாத்திரம் தூணாக இருந்தாலும், துரும்பாக இருந்தாலும் அது இப்பிரபஞ்சக் கட்டமைப்பிற்கு அவசியமே. அவனுடைய விடுதலை அவன் தீர்மானித்தால் உடனடியாகவும் முடிவாகவும் கிடைத்துவிடும். அது அவனது உள் வெற்றிகளைப் பொறுத்ததேயொழிய வெளி வெற்றிகளைப் பொறுத்ததில்லை.

ஸ்ரீ யுக்தேஸ்வர் நமது தற்கால யுகத்திற்குரிய 24,000 ஆண்டுப் பூமத்திய ரேகைச் சுழற்சி என்ற கணிதப் பயனீடு ஒன்றைக் கண்டுபிடித்தார்.[5] அந்தச் சுழற்சி ஏறு வில்வளைவு, இறங்கு வில்வளைவு என்று இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு வில் வளைவும் 12,000 ஆண்டுக் கால அளவு கொண்டது, ஒவ்வொரு வில்வளைவுக்குள்ளும் கலி, துவாபர, திரேதா, சத்ய என்ற நான்கு யுகங்கள் வருகின்றன. இது இரும்புயுகம்,

வெண்கலயுகம், வெள்ளியுகம் மற்றும் பொன்யுகம் என்ற கிரேக்கக் கருத்துக்களுக்கு உடன்பாடாக அமைந்துள்ளது.

என் குருதேவர் அனேக கணக்கீடுகளுக்குப் பிறகு ஏறும் வில்வளைவைச் சேர்ந்த கடைசிக் கலியுகம் அல்லது இரும்புயுகம் கி.பி. 500ல் தொடங்கிற்று என்று தீர்மானித்துள்ளார். இந்த இரும்பு யுகமான 1,200 வருடக் காலம், வெறும் லோகாயதத் தன்மையுடையது. அது கிட்டத்தட்ட கி.பி. 1,700ல் முடிந்தது. அதற்குப் பிறகு துவாபரயுகத்தின் காலம் 2,400 வருடங்களைக் கொண்டது. அந்தக் காலம் மின்சாரம், அணுசக்தியில் முன்னேற்றம், தந்தி, வானொலி, விமானங்கள் மற்றும் பல விண்வெளிப் புதிர்களை அவிழ்க்கும் காலம்.

3,600 வருடக் காலமாகிய திரேதாயுகம் கி.பி. 4,100ல் தொடங்கும். அந்தக் காலத்தில் ஒருவருக்கொருவர் மனத்தால் பேசிக் கொள்வது சாதாரணமாயிருக்கும். மேலும் அது மற்ற காலப் புதிர்களை அவிழ்க்கும் காலம். சத்யயுகம் 4,800 வருடங்கள் கொண்டது. ஏறு வில்வளைவின் முடிவான இக்காலத்தில் மனிதனின் அறிவு மிக உயர்ந்த நிலையிலிருக்கும். அவன் தெய்வீக ஏற்பாட்டுடன் இணங்கிச் செயல்படுவான்.

இறங்கு வில்வளைவின் 12,000 வருடங்கள் இறங்கும் பொற்காலமாகிய 4,800 வருடங்களுடன் தொடங்கி பிறகு கி.பி. 12,500ல் ஆரம்பிக்கிறது. மனிதன் படிப்படியாக அஞ்ஞானத்தில் மூழ்கத் தொடங்குவான், புலன்களால் உணரத்தக்க உலகின் மாறுபட்ட தன்மைகளுக்கும் சார்புத் தோற்றங்களுக்கும் காரணமான மாயையின்

இச்சுழற்சிகள் நிரந்தரமானவை.[6] இறைவனுடன் நீக்கமற ஒன்றுகிற விழிப்புணர்வை அடைகின்றபோது மனிதர்கள் ஒவ்வொருவராக படைப்பின் இருமைச் சிறையிலிருந்து தப்பித்துச் செல்லுகிறார்கள்.

குருதேவர் சோதிடத்தில் மட்டுமல்லாமல் உலக சமய நூல்களிலும் என் அறிவைப் பெருக்கினார். புனித நூல்களை மாசு மறுவற்ற அவருடைய மனமாகிய மேஜை மேல் வைத்து உள்ளுணர்வின் பகுத்தறிவு என்ற அறுவைக் கத்தியால் கூறுபோட்டு, தொடக்கத்தில் தீர்க்கதரிசிகளால் கூறப்பட்ட உண்மைகளிலிருந்து அறிஞர்களின் இடைச் செருகல்களையும் தவறுகளையும் பிரித்தெடுக்க அவரால் முடிந்தது.

"ஒருவருடைய பார்வையை மூக்கின் நுனியில் பொருத்து, "கீழைநாட்டுப் பண்டிதர்களாலும் மேலை நாட்டு மொழி பெயர்ப்பாளர்களாலும் பெரும்பாலும் ஒப்புக்கொள்ளப் பட்ட பகவத் கீதையில் ஒரு பத்தியின்[7] இந்தத் தவறான பொருள் விளக்கம் குருதேவரின் வேடிக்கையான விமரிசனத்தை எழுப்பும்.

"ஒரு யோகியின் பாதை உள்ளபடியே விசித்திரமானது," அவர் குறிப்பிட்டார். அவர் தன்னை மாறுகண் உடையவராகச் செய்து கொள்ளும்படி அவருக்கு ஏன் உபதேசிக்க வேண்டும்? நாசிகாக்ரம் என்ற சொல்லின் உண்மையான பொருள் மூக்கின் தொடக்கம் என்பது; மூக்கின் நுனி அல்ல. இரு புருவங்களுக்கு இடையேயுள்ள இடத்தில் மூக்கு ஆரம்பிக்கிறது. அந்த இடம்தான் ஆன்மீக தரிசனத்தின் இருப்பிடம்.[8]

ஒரு சாங்கிய[9] சூத்திரம் கூறுவது: ஈஷ்வர் அஸித்தே[10] (படைப்புக் கடவுளை ஊகித்தறிய முடியாது அல்லது கடவுள் நிரூபிக்கப்படவில்லை). இந்த வாக்கியத்தின் ஆதாரத்தை வைத்துக் கொண்டு அறிஞர்கள் இந்த முழுத் தத்துவமே நாத்திகவாதம் எனக் கூறுகிறார்கள்.

"அந்தச் செய்யுள் நாத்திகமானதல்ல," ஸ்ரீ யுக்தேஸ்வர் விளக்கினார். "அது கூறுவது இதுதான். ஓர் அஞ்ஞானியாகிய சாதாரண மனிதன் எல்லாவித இறுதியான தீர்ப்புகளுக்கும் தன் புலன்களையே சார்ந்து இருப்பதால் அவனுக்குக் கடவுளின் நிரூபணம் அவனறியாததாகவே இருக்கிறது. ஆதலால் அது இல்லாததே. சாங்கிய முறையை உண்மையாக அனுசரிப்பவர்கள், தியானத்தினால் உண்டாகும் அசைக்க முடியாத உள்ளார்ந்த ஞானத்துடன் இறைவன் இருக்கிறார் என்பதையும், அறியப்படுபவர்தான் என்பதையும் நன்கு புரிந்து கொள்கிறார்கள்."

குருதேவர் கிறிஸ்துவர்களின் பைபிளை மிகத் தெளிவுடன் விளக்கி உள்ளார். கிறிஸ்துவ மத அங்கத்தினராக இல்லாத என்னுடைய இந்து குருவினிடமிருந்து தான் பைபிளின் சிரஞ்சீவியான சாரத்தை நான் தெரிந்து கொண்டேன். கிறிஸ்துவினுடைய வலியுறுத்தலில் உள்ள சத்தியத்தையும் என்னால் புரிந்து கொள்ள முடிந்தது. உண்மையிலேயே சிலிர்க்கச் செய்யும் ஆணித்தரமான வகையில் கூறப்பட்ட இச்சொற்கள் இதுவரை என்றுமே

கூறப்படாதவை: "வானமும் பூமியும் ஒழிந்துபோம், என் வார்த்தைகளோ ஒழிந்து போவதில்லை."[11]

இந்தியாவின் பெரிய மகான்கள், கிறிஸ்துவை செயல்படுத்திய அதே தெய்வீகக் குறிக்கோள்களை கொண்டு தங்கள் வாழ்க்கையை உருவாக்கிக் கொள்கிறார்கள். அவர்கள் எல்லாம் பறைசாற்றப் பட்ட அவருடைய உறவினர்கள்: பரலோகத்திலிருக்கிற என் பிதாவின் சித்தத்தின்படி செய்கிறவன் எவனோ, அவனே எனக்குச் சகோதரனும், சகோதரியும் தாயுமாய் இருக்கிறான்,[12] நீங்கள் என் உபதேசத்தில் நிலைத்திருந்தால் மெய்யாகவே என் சீடராயிருப்பீர்கள்; சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும்,[13] என்று கிறிஸ்து சுட்டிக் காட்டினார். கிறிஸ்துவைப் போன்ற பாரத யோகியர்-முக்தி அடைந்தவர்கள், தங்களைத் தாங்களே ஆள்பவர்; நமது ஒரே தந்தையை அறியும் முக்தியளிக்கும் ஞானத்தை அடைந்த, என்றும் அழியாத சகோதரக் குழுவின் ஓர் அங்கமாவர்.

"ஆதாம் ஏவாளின் கதை எனக்குப் புரியாத ஒன்று! இவ்வுருவகக் கதையுடன் நான் போராடிக் கொண்டிருந்த ஆரம்ப காலத்தில் ஒரு நாள் நான் மிகச் சூட்டுடன் கூறினேன். இறைவன் ஏன் தவறு செய்த இருவரை மட்டுமல்லாமல் குற்றமற்ற, பிறந்திராத தலைமுறைகளைக் கூட தண்டிக்க வேண்டும்?"

குருதேவருக்கு என் அறியாமையை விட என் தீவிரம் அதிக வேடிக்கையாயிருந்தது. அவர்

விளக்கினார். ஆதியாகமம் ஆழமான அடையாளக் குறிப்புகளுடையது. பதிவுரைகளின் விளக்கப்படி கிரகித்துக் கொள்ள முடியாதது. அதன் "ஜீவ-மரம்" என்பது மனித உடல். முதுகுத் தண்டு ஒரு தலைகீழான மரத்தைப் போன்றது; மனிதனின் கேசம், அதன் வேர்கள். உட்செல் நரம்புகளும் வெளிச்செல் நரம்புகளும் அதன் கிளைகள். நரம்பு மண்டல மரம், அனுபவிக்கக்கூடிய பல பழங்களைப் பெற்றது. இவை புலன் உணர்வுகளான பார்வை, ஒலி, வாசனை, ருசி, தொடு உணர்வு. மனிதன் நியாயமான முறையில் இவைகளை அனுபவித்து மகிழலாம். ஆனால் அவன் பாலுணர்வின் அனுபவத்தை, அதாவது உடலின் மத்தியில் (தோட்டத்தின் நடுவில் இருக்கிற) அமைந்துள்ள ஆப்பிளை அடைவது தடுக்கப்பட்டிருந்தது.[14]

"அந்தப் பாம்பு என்பது பாலுணர்வு நரம்புகளை தூண்டி விடும், முதுகுத் தண்டில் சுருட்டி வைக்கப்பட்டிருக்கின்ற சக்தியைக் குறிக்கும். ஆதாம் என்பது விவேகம். ஏவாள் என்பது உணர்ச்சி. உணர்ச்சி அல்லது ஏவாள்-உணர்வு ஒரு மனிதனிடத்தில் பாலுணர்ச்சியால் ஆக்ரமிக்கப்படும் பொழுது அவனுடைய விவேகம் அல்லது ஆதாம் கூட அடிமையாகி விடுகிறான்."[15]

"இறைவன் மனித இனத்தை அவனுடைய இச்சா சக்தியால் ஆண், பெண் என்ற உடல்களை உண்டாக்கிப் படைத்தான். அப்புது இனத்திற்கும் அதேபோல் மாசற்ற அல்லது தெய்வீக முறையில் குழந்தைகளைப்

படைக்கும் திறனை அருளியிருந்தான்.[16] ஏனெனில் இதுவரை தனி ஆன்மாவில் இறைவனது வெளிப்பாடு, இயல்புணர்ச்சிக்குக் கட்டுப்பட்டு முழு விவேகத்தின் ஆற்றல்களை அடையாத வைகளாக மிருகங்களிடத்தில் மட்டுமே இருந்தது; ஆதாம் மற்றும் ஏவாள் என்ற பெயர்களால் அழைக்கப்பட்ட முதல் மனித சரீரங்களை இறைவன் உண்டாக்கினான். அனுகூலமான பரிணாம வளர்ச்சியின் பொருட்டு அவன் இரு மிருகங்களின் ஆன்மா அல்லது தெய்வீக சாரத்தை இவற்றிற்கு மாற்றினான்.[17] ஆதாம் அல்லது ஆணிடத்தில் விவேகம் மேலாங்கி இருந்தது. ஏவாள் அல்லது பெண்ணிடத்தில் உணர்ச்சி மேலோங்கி இருந்தது. இவ்வாறு வெளியுலகின் அடிப்படையான துருவ அமைப்பு அல்லது இருமை வெளிப்படுத்தப்பட்டது. மனித மனமானது பாம்பின் சக்தி போன்ற மிருக இச்சைகளினால் ஏமாற்றப்படாதவரை விவேகமும் உணர்ச்சியும் ஒருங்கிணைந்த ஆனந்த சுவர்க்கத்தில் இருக்கின்றன.

"ஆதலால் மனித உடல் மிருகங்களிலிருந்து பரிணாம வளர்ச்சியால் மட்டுமே ஏற்பட்டதன்று. ஆனால் இறைவனால் ஒரு விசேஷப் படைப்பு என்ற செயலின் மூலம் உண்டாக்கப் பட்டது. மிருகங்களின் உருவங்கள் தெய்வீகத்தை முழு அளவில் வெளியிடுவதற்கு பக்குவப் படாதவை; மூளையிலுள்ள ஆற்றல் வாய்ந்ததும், எல்லாம் அறிகிறதுமான ஆயிரம் இதழ்களுடைய தாமரையும் முதுகுத் தண்டில் முனைப்பாக விழிப்பூட்டப்பட்ட ரகசிய மையங்களும் மனிதனுக்கு

விசேஷமாகக் கொடுக்கப்பட்டிருந்தன.

"முதன்முதலில் படைக்கப்பட்ட இருவரின் உள்ளே இருந்த இறைவன் அல்லது தெய்வீக உணர்வு, அவர்களை எல்லா மனித உணர்வுகளையும் அனுபவிக்கபாலுணர்வுகளைத் தவிரயோசனை கூறியது.[18] மிருகங்களின் கீழ்ப்பட்ட இனப்பெருக்கத்திற்குரிய முறையில் மனித இனம் சிக்கிக் கொள்ளாமலிருக்க இவ்வுணர்வுகள் தடை செய்யப்பட்டன. அடி மனத்தில் குடி கொண்டிருக்கும் மிருக இச்சைகளின் நினைவுகளைத் திரும்பக் கொண்டுவர வேண்டாமென்று எச்சரிப்பு மதிக்கப்படவில்லை. ஆதாமும் ஏவாளும் மிருகங்களின் வழியைப் போன்றே இனப் பெருக்கத்தில் ஈடுபட்ட பொழுது, அவர்கள் இருவரும் தங்கள் ஆதி பரிபூரண மனிதனுக்கு உரியதாயிருந்த சுவர்க்க போகம் என்ற உயர்ந்த நிலையிலிருந்து விழுந்துவிட்டார்கள். அவர்களுக்குத் தாங்கள் நிர்வாணமாயிருப்பது தெரிந்தவுடன் அவர்களுடைய அமரத்துவ உணர்வை இழந்து விட்டார்கள். இது இறைவன் அவர்களுக்கு ஏற்கனவே செய்திருந்த எச்சரிக்கைதான். அவர்கள் தங்களை பூத உலகின் விதிமுறைக்குள், அதாவது உடலால் பிறப்பு என்பது ஏற்படும் பொழுது, உடலின் இறப்பும் தவிர்க்க இயலாதது என்ற விதிமுறைக்குள் உட்படுத்திக் கொண்டார்கள்.

"பாம்பினால் ஏவாளுக்கு உறுதியளிக்கப்பட்ட நன்மை, தீமை என்பவை பற்றிய அறிவு மனித இனம்

மாயையின் கீழ் அனுபவிக்க வேண்டிய எதிரிடையான இருமை அனுபவங் களைக் குறிக்கிறது. மனிதன் உணர்ச்சி, விவேகம் ஆகியவற்றை, அதாவது ஏவாள் மற்றும் ஆதாமின் உணர்வுகளைத் தவறாகப் பயன்படுத்துவதன் மூலம் மாயையில் வீழ்வதால் அவனுடைய தெய்வீக தன்னிறைவு என்ற சுவர்க்க சோலைக்குள் நுழையும் அதிகாரத்தைத் துறக்கிறான்.[19] ஒவ்வொரு மனிதனின் தனிப்பெருங்கடமை, தன் பெற்றோர்களை, ஏடனில் சேர்ப்பது அல்லது இருமையை வென்று ஒன்றிய இணக்கத்தைப் பெறுவதாகும்."

ஸ்ரீ யுக்தேஸ்வர் தன் பிரசங்கத்தை முடித்தவுடன் நான் ஆதியாகமத்தின் பக்கங்களை புதிய மதிப்புடன் நோக்கினேன்.

"அன்பான குருதேவா, நான் முதன் முதலாக ஆதாம், ஏவாள் [20]இருவரிடமும் பிதிருக்கள் என்ற முறையில் என் கடமையை உணர்கிறேன்!" என்று நான் கூறினேன்.

---

1 பழமையான இந்து இலக்கியங்களில் காணப்படும் வான சாஸ்திர குறிப்புகளிலிருந்து அந்நூலாசிரியர்களின் காலத்தை அறிஞர்களால் நிர்ணயிக்க முடிந்துள்ளது. ரிஷிகளின் விஞ்ஞான அறிவு மிக உயர்ந்தது. கௌசிதகி பிராமணத்தின் தெளிவான வான சாஸ்திர பகுதிகளில், கி.மு. 3100இல் இந்துக்கள் சோதிடக் கிரியைகளுக்கு உகந்த சுபமான காலத்தை தீர்மானம் செய்யும் நடைமுறை முக்கியத்துவம் வாய்ந்த வான சாஸ்திரத்தில் மிகவும் முன்னேற்றமடைந்திருந்தனர் எனக் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

1934, பிப்ரவரி, ஈஸ்ட்-வெஸ்ட் பத்திரிகையில் வெளிவந்த தாரா மாதாவினால் எழுதப்பட்ட கட்டுரையில் சோதிடம் அல்லது வேத வான சாஸ்திரம் பற்றிய விளக்கம்: அது இந்தியாவை புராதன நாடுகள் எல்லாவற்றிலும் முதன்மையானதாகச் செய்ததுடன் அறிவைத் தேடுபவர்களின் மெக்காவாகவும் கருத வைத்த அளவு விஞ்ஞான அறிவைக் கொண்டது. சோதிட நூல்களில் ஒன்றான பிரம்ம குப்தா என்பது ஒரு வான சாஸ்திர ஆராய்ச்சி நூல். அந்நூல் சூரிய மண்டலத்தில் கோள்கள் சூரியனை மையமாக வைத்து சுழல்தல், கிரகண மறைப்பு, சாய்வுக் கோணங்கள், பூமியின் கோள வடிவம், சந்திரனின் பிரதிபலிக்கும் ஒளி, பூமி தினசரி அதன் பாதையில் சுழல்வது, வான பால் வீதியில் நிலைத்து

நிற்கும் விண்மீன்கள், புவி ஈர்ப்பு விதி மற்றும் பல விஞ்ஞான உண்மைகளை,

மேற்கத்திய நாடுகளில் கோபர்னிகஸ், நியூட்டன் ஆகிய இருவரும் எடுத்துரைக்கும் வரை தெரிந்திராதவற்றைப் பற்றி, விளக்கமாகக் கூறுகின்றது.

மேல் நாட்டுக் கணித முறையின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாததாகக் கருதப்படும் அரேபிய எண்கள் என்னும் எண் குறிகள் ஒன்பதாவது நூற்றாண்டில், இந்தியாவிலிருந்து அரேபியர்கள் மூலமாக ஐரோப்பாவிற்குச் சென்றன. அந்த எண் முறை அமைப்பு இந்தியாவில் பன்னெடுங்காலத்திற்கு முன்பே உருவாக்கப்பட்டிருந்தது. இந்தியாவின் விரிந்து பரந்த விஞ்ஞான பாரம்பரியத்தைப் பின்வரும் நூல்களின் மூலம் அறியலாம்ஸர் பி.சி. ராய் அவர்களின் இந்து இரசாயன வரலாறு (History of Hindu Chemistry), பி.என்.ல் அவர்களின் புராதன இந்துக்களின் ஆக்க பூர்வ விஞ்ஞானம் (Positive Sciences of the Ancient Hindus), பி.கே. சர்க்கார் அவர்களின் திட்டவட்டமான விஞ்ஞானத்தில் இந்துக்களின் சாதனைகள் (Hindu Achievements in Exact Science), இந்து சமூக சித்தாந்தத்தின் ஆக்கபூர்வ பின்னணி (The Positive Background of Hindu Sociology) மற்றும் யு.ஸி. தத் அவர்களின் இந்துக்களின் மருத்துவக் கூறுகள் (Materia Medica of the Hindus).

2 பார்த்த மாத்திரத்திலேயே பெருகும் ஒரு மகானின் அருளாசிகள்.

3 பார்க்க பக்கம் 354 அடிக்குறிப்பு

4 எனக்காக என் குடும்பத்தினர் மணமகளாக தேர்ந்தெடுத்திருந்த பெண்களில் ஒருவரை பின்னாளில் என் ஒன்றுவிட்ட சகோதரன் பிரபாஸ் சந்திர கோஷ் மணந்து கொண்டான். (ஸ்ரீ கோஷ், 1936 முதல் அவர் காலமான 1975 வரை யோகதா சத்சங்க சொஸைடி ஆ:ப் இந்தியா-வின் உப தலைவராக இருந்தார்.) (பிரசுரதாரரின் குறிப்பு.)

5 இந்த சுழற்சிகளைப் பற்றிய செய்தி ஸ்ரீ யுக்தேஸ்வர் எழுதிய தி ஹோலி ஸயன்ஸ் (கைவல்ய தரிசனம்) என்னும் புத்தகத்தின் முதல் பாகத்தில் விளக்கப்பட்டுள்ளது. (யோகதா சத்சங்க சொஸைடி ஆ:ப் இந்தியா-வினால் பிரசுரிக்கப்பட்டது.)

6 இந்து சமயநூல்கள் தற்போதைய உலக ஆயுளை, ஸ்ரீ யுக்தேஸ்வர் குறிப்பிட்ட சாதாரண 24,000 வருடங்களைக் கொண்ட பூமத்தியரேகை சுழற்சியை விட மிக நீண்ட பிரபஞ்ச சுழற்சியில் கலியுகத்திற்குள் நிகழ்வதாகத்தான் குறிப்பிடுகின்றன. சமய நூல்களில் கூறப்பட்டிருக்கும் பிரபஞ்ச சுழற்சி 4,300,560,000 வருடங்களாகப் பரந்து படைப்பின் ஒரு நாளின் காலத்தை கணக்கிடுகிறது. ரிஷிகளால் கொடுக்கப்பட்ட இந்த மிகப்பெரிய எண்ணானது ஒரு சூரிய வருடத்தின் நீட்சிக்கும் மற்றும் பையின் (3.1416-ஒரு வட்டத்தின் சுற்றளவிற்கும் அதன் விட்டத்திற்கும் உள்ள விகிதம்) பெருக்கத்திற்கும் இடையேயுள்ள சம்பந்தத்தை ஆதாரமாகக் கொண்டது.

பிரமாண்டத்தின் ஆயுட்காலம் புராதன ரிஷிகள் கருத்துப்படி 34,159,000,000,000 சூரிய வருடங்கள் அல்லது பிரம்மாவின் ஒரு யுகம்.

நம்முடையதைப் போன்ற உலகம் அழிந்து போவதற்கு இந்து சமயநூல்களில் குறிப்பிடும் இரு காரணங்களில் ஒன்று, அதில் வசிப்பவர்கள் ஒட்டுமொத்தமாக முழுமையாக நல்லவர்களாகவோ அல்லது முழுமையாகக் கெட்டவர்களாகவோ ஆகிவிடுவது. உலக மனம் இவ்வாறான ஒரு சக்தியை உண்டு பண்ணி இப்புவியின் உருவில் கட்டுண்டு கிடக்கும் அணுக்களை விடுவிக்கிறது.

அவ்வப்பொழுது உலகம் முடியப் போகிறது என்ற பயங்கரமான அறிக்கைகள் வெளியாவதுண்டு. இருந்தாலும், கிரகச் சுழற்சிகள் ஒரு

முறையான தெய்வ நியதியின்படிதான் செயல்படுகின்றன. உலகத்தின் அழிவு கண்ணில் படவில்லை. இந்தத் தற்காலத்திய நிலையில் நம் கோளிற்கு ஏறும் மற்றும் இறங்கும் பூமண்டலச் சுழற்சிகள் இன்னும் சேமிப்பில் இருக்கின்றன.

7 அத்தியாயம் VI:13

8 கண்ணானது சரீரத்தின் விளக்காயிருக்கிறது; உன் கண் தெளிவாயிருந்தால், உன் சரீர முழுவதும் வெளிச்சமாயிருக்கும்; உன் கண் கெட்டதாயிருந்தால் உன் சரீர முழுவதும் இருளாயிருக்கும். ஆகையால் உன்னிலுள்ள வெளிச்சம் இருளாகாதபடிக்கு எச்சரிக்கையாயிரு. லூக்கா 11:34-35 (பைபிள்).

9 இந்து தத்துவ சாஸ்திரத்தின் ஆறுமுறைகளில் ஒன்று. சாங்கியம், பிரகிருதி அல்லது இயற்கையில் தொடங்கி புருஷன் அல்லது ஆத்மாவில் முடிவடைகிற இருபத்தைந்து அடிப்படைக் கொள்கைகள் மூலமாக இறுதி மோட்சம் அடைவதைக் கற்பிக்கிறது.

10 சாங்கிய சூத்திரங்கள், 1:92

11 மத்தேயு 24:35 (பைபிள்).

12 மத்தேயு 12:50 (பைபிள்).

13 யோவான் 8:31-32 (பைபிள்). புனித யோவான் உறுதியாகக் கூறியிருப்பது: அவருடைய நாமத்தின் மேல் விசுவாசமுள்ளவர்களால் அவரை ஏற்றுக் கொண்டவர்கள் எத்தனை பேர்களோ, அத்தனை பேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும் படி, அவர்களுக்கு அதிகாரங் கொடுத்தார் (எங்கும் நிறைந்துள்ள கிறிஸ்து உணர்வில் பொருந்தியுள்ளவர்களுக்கும் அப்படியே).யோவான் 1:12 (பைபிள்).

14 நீங்கள் தோட்டத்திலுள்ள விருட்சங்களின் கனிகளைப் புசிக்கலாம். ஆனால், தோட்டத்தின் நடுவில் இருக்கிற விருட்சத்தின் கனியைக் குறித்து, தேவன்: நீங்கள் சாகாதபடிக்கு அதைப் புசிக்கவும் அதைத் தொடவும் வேண்டாம் என்று சொன்னார். ஆதியாகமம் 3:23.

15 என்னுடனே இருக்கும்படி தேவரீர் தந்த ஸ்திரீயானவள் அவ்விருட்சத்தின் கனியை எனக்குக் கொடுத்தாள், நான் புசித்தேன். ஸ்திரீயானவள், சர்ப்பம் என்னை வஞ்சித்தது, நான் புசித்தேன், என்றாள்.ஆதியாகமம் 3:12-13 (பைபிள்).

16 தேவன் தம்முடைய சாயலாக மனுஷனைச் சிருஷ்டித்தார், அவனை தேவ சாயலாகவே சிருஷ்டித்தார். ஆணும் பெண்ணுமாக அவர்களைச் சிருஷ்டித்தார். பின்பு தேவன் அவர்களை நோக்கி, நீங்கள் பலுகிப் பெருகி, பூமியை நிரப்பி அதைக் கீழ்ப்படுத்தி ஆண்டு கொள்ளுங்கள் என்று சொல்லி, தேவன் அவர்களை ஆசீர்வதித்தார்.ஆதியாகமம் 1:27-28 (பைபிள்).

17 தேவனாகிய கர்த்தர் மனுஷனைப் பூமியின் மண்ணினாலே உருவாக்கி, ஜீவ சுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார், மனுஷன் ஜீவாத்துமாவானான்.ஆதியாகமம் 2:7 (பைபிள்).

18 சகல காட்டு ஜீவன்களை பார்க்கிலும் (உடலில் மற்ற உணர்வுகளை விட) சர்ப்பமானது (பால் உணர்ச்சி வேகம்) தந்திரமுள்ளதாயிருந்தது.ஆதியாகமம் 3:1 (பைபிள்).

19 தேவனாகிய கர்த்தர் கிழக்கே ஏதேன் என்னும் ஒரு தோட்டத்தை உண்டாக்கி தாம் உருவாக்கின மனுஷனை அதிலே வைத்தார்.ஆதியாகமம் 2:8 (பைபிள்).

அவன் எடுக்கப்பட்ட மண்ணைப் பண்படுத்த தேவனாகிய கர்த்தர்

ஏதேன் தோட்டத்திலிருந்து அவனை அனுப்பி விட்டார். – ஆதியாகமம் 3:23 (பைபிள்). இறைவனால் முதலில் படைக்கப்பட்ட தெய்வீக மனிதன் நெற்றியிலுள்ள (கிழக்ககில்) சர்வ வல்லமை பொருந்திய ஒரே கண்ணில் தன் உணர்வை மையமாக வைத்திருந்தான். அவனது விருப்பப்படி எல்லாவற்றையும் படைக்க கூடிய திறன் அந்த இடத்தில் மையமாக்கப்பட்டிருந்தது; அவன் சரீர இயல்பான மண்ணை உழத் தொடங்கியதும் அத்திறம் மறைந்து போனது.

20 இந்துக்களின் ஆதாம், ஏவாளின் கதை பழைய புராணமாகிய ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. முதல் ஆணும் பெண்ணும் (பூத உடல் வடிவத்தில்) ஸ்வயம்புவ மனு (படைப்பவனிலிருந்து பிறந்தவன்) மற்றும் அவனுடைய மனைவி சதரூபை (உண்மை ரூபம்) என்று அழைக்கப் படுகிறார்கள். அவர்களுடைய ஐந்து குழந்தைகளும் பிரஜாபதிகளுடன் (தங்கள் விருப்பப்படி மனித உருவம் எடுக்க வல்ல முழுமையான ஜீவன்கள்) கலப்புத் திருமணம் செய்து கொண்டனர். இந்த முதல் தெய்வீகக் குடும்பங்களிலிருந்து மனித இனம் பிறந்தது.

கீழை நாடுகளிலோ அல்லது மேலை நாடுகளிலோ ஸ்ரீ யுக்தேஸ்வரைப் போன்று கிறிஸ்துவப் புராணங்களுக்கு மிக ஆழ்ந்த முறையில் விளக்கம் கூறியவர்களை நான் கண்டதில்லை. மத சாத்திர விற்பன்னர்கள் கிறிஸ்து கூறியதைத் தவறான முறையில் விளக்கியிருக்கிறார்கள், குருதேவர் கூறினார்: நாமே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்; என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான் (யோவான் 14:6 பைபிள்) என்றெல்லாம் கூறும் பொழுது இயேசு, கடவுளின் ஒரே மகன் தானென்று குறிப்பிடவில்லை. எவரும் முதலில் படைப்பின் உள்ளே இருக்கும், செயல்திறன் கொண்ட கிறிஸ்து உணர்வு அல்லது மகனை வெளிக்கொண்டு வரும் வரை எல்லாவற்றிற்கும் அப்பாலுள்ள, பூரணமான விருப்பு, வெறுப்பற்ற தந்தையை அடைய முடியாது என்று அவர் கூறினார். இயேசு, தன் சொந்த அகங்காரம் என்றோ கரைந்துவிட்ட நிலையில் கிறிஸ்து உணர்வுடன்இறைவனுடன் முழுதும் ஒன்றேயாகிவிட்ட நிலையை அடைந்துவிட்டார். (பார்க்க பக்கம் 222 அடிக்குறிப்பு)

கடவுள்... இயேசு கிறிஸ்துவின் மூலமாக எல்லாவற்றையும் படைத்தார் என்று (எபேசியர் 3:9 பைபிள்) பவுல் எழுதியபோதும் மற்றும் இயேசு ஆபிரகாம் உண்டாகிறதற்கு முன்னமே நானிருக்கிறேன் (யோவான் 8:58 பைபிள்) என்று கூறியபோதும் இவ்வார்த்தைகளின் கலப்பற்ற கருத்து, தனியொருவரைச் சுட்டிக் கூறாததேயாகும்.

ஒருவிதமான ஆன்மீக கோழைத்தனம் பெரும்பாலான லௌகீக மக்களை ஒரே ஒரு மனிதன்தான் கடவுளின் புத்திரன் என்பதை சௌகரியமாக நம்புவதற்கு இட்டுச் செல்கிறது. அவர்கள், இயேசு, ஒப்பற்ற வகையிலே சிருஷ்டிக்கப்பட்டார், என்று காரணங்காட்டி, இறந்து போகும் தன்மையுள்ள நான் எப்படி அவரைப் போல் ஆக முடியும்? என்கின்றனர். ஆனால் எல்லா மனிதர்களும், தெய்வீகமாக சிருஷ்டிக்கப்பட்டதால், என்றாவது இயேசுவின் கட்டளையைக் கீழ்ப்படிந்துதான் ஆக வேண்டும். ஆகையால் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா பூரண சற்குணனாயிருக்கிறது போல, நீங்களும் பூரண சற்குணனாயிருக்கக் கடவீர்கள் (மத்தேயு 5:48 பைபிள்). நாம் தேவனுடைய பிள்ளைகளென்று அழைக்கப்படுவதினாலே பிதாவானவர் நமக்குப் பாராட்டின அன்பு எவ்வளவு பெரிதென்று பாருங்கள். (I யோவான் 3:1 பைபிள்).

கர்மவினையின் விதி மற்றும் அதன் தொடர்பான மறு பிறவி ஆகியவற்றை அறிந்திருப்பது (பார்க்க பக்கம் 389 அடிக்குறிப்பு, 481-482 மற்றும் அத்தியாமம் 43.) பைபிளின் அனேக பகுதிகளில் காட்டப்பட்டுள்ளது.

உதாரணமாக, மனுஷனுடைய இரத்தத்தை எவன் சிந்துகிறானோ, அவனுடைய இரத்தம் மனுஷனாலே சிந்தப்படக்கடவது (ஆதியாகமம் 9:6 பைபிள்). ஒவ்வொரு கொலையாளியும் மனிதனால் கொல்லப்பட்டேயாக வேண்டுமானால்இந்த எதிர்சொல் முறையின்படி அனேக இடங்களில் ஒரு வாழ்க்கை போதாது என்பது தெளிவாகிறது. இக்காலத்திய போலீஸ்காரர்களுக்கு இவ்வளவு வேகமில்லை!

பழைய கிறிஸ்துவ திருச்சபை மறுபிறப்பின் தத்துவத்தை ஒப்புக் கொண்டிருந்தது. அது ஆன்ம சாதகர்கள் (Gnostics), மற்றும் அனேக கிறிஸ்துவப் பாதிரிமார்களாலும்-அ லெக்ஸாண்ட்ரியாவின் க்ளிமென்ட், மிகப் புகழ்பெற்ற ஆரிஜென் (இருவரும் மூன்றாவது நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள்), மற்றும் புனித ஜெரோம் (ஐந்தாவது நூற்றாண்டு) உள்பட பலராலும் விளக்கப்பட்டது. கான்ஸ்டான்டிநோபிளின் இரண்டாவது சபை இந்தத் தத்துவத்தை கி.பி. 553ல் சமய வரைமுறையை மீறிய ஒன்று என்று தீர்மானித்துவிட்டது. அந்தச் சமயத்தில் இந்தத் தத்துவம் மனிதனுக்கு அதிக காலத்தையும் இடத்தையும் கொடுப்பதாகத் தோன்றியதால், அவன் ஒரே பிறவியில் மோட்சத்தை அடைய முயல்வது தடைப்படும் என்று எண்ணினார்கள். ஆனால் மறைக்கப்பட்ட உண்மைகள், வருந்தத்தக்க விதத்தில் பல தவறுகளை ஏற்படுத்தின. லட்சக்கணக்கான மனிதர்கள் ஒரு வாழ்க்கை காலத்தை இறைவனைத் தேடுவதற்குப் பதிலாக இந்த உலக விஷயங்களை அபூர்வமாகக் கிடைத்து சீக்கிரமாகவே என்றென்றும் மறைந்து விடக்கூடியவற்றைஅனுபவிப்பதற்கு உபயோகப்படுத்துகின்றனர். உண்மை என்னவெனில் மனிதன் இறைவனின் மகன் என்று உணர்ந்து அந்நிலையை மீண்டும் பெறும்வரை மண்ணில் மறுபிறவி எடுக்கிறான் என்பதுதான்.

## அத்தியாயம் 17

# சசியும் மூன்று நீலக் கற்களும்

"நீயும் என் மகனும் ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வரைப் பற்றி மிக உயர்வாக எண்ணுவதால் நான் ஒரு முறை வந்து அவரைப் பார்க்கிறேன்." டாக்டர் நாராயண் சந்தர் ராயின் குரலிலிருந்தே அவர் ஏதோ இரண்டுங்கெட்டான்களின் விருப்பத்திற்கு இசைகிறார் என ஊகிக்க முடிந்தது. நான் எனக்கு வந்த ஆத்திரத்தை ஆன்மீக வழிக்கு புதிதாக மாறியவனுக்குரிய வழக்கப்படி மறைத்துக் கொண்டேன்.

என் கூட இருந்தவர் ஒரு கால்நடை வைத்தியர். அவர் ஒரு முழு நாத்திகர். அவருடைய இளைய மகன் சந்தோஷ் அவன் தந்தை மீது கொஞ்சம் சிரத்தை எடுத்துக் கொள்ளும் படி என்னைக் கெஞ்சினான். இதுவரை எனது விலை மதிப்பற்ற உதவி கொஞ்சம் மறைமுகமாகவே இருந்து வந்தது.

மறுநாள் டாக்டர் ராய் செராம்பூர் ஆசிரமத்திற்கு என்னுடன் வந்தார். குருதேவர் அவருக்கு ஒரு சுருக்கமான பேட்டியை அளித்த பிறகு, இரு தரப்பிலும் அச்சமயம் அனேகமாகக் கடும் மௌனமே நிலவியது. வந்தவர் திடீரென கிளம்பிச் சென்று விட்டார்.

அந்த கல்கத்தா நாத்திகர் சென்ற உடனேயே ஸ்ரீ யுக்தேஸ்வர், ஓர் இறந்த மனிதனை ஆசிரமத்திற்கு ஏன் அழைத்து வர வேண்டும்? என்றவாறு என்னை உற்று

நோக்கினார்.

"ஐயா! டாக்டர் உயிருடன் நன்றாகவே இருக்கிறாரே!"

"ஆனால் கூடிய சீக்கிரமே அவர் மரணமடைவார்."

எனக்கு ஒரே அதிர்ச்சி. "ஐயா, அவருடைய மகனுக்கு இது பெரிய அடியாக இருக்கும். சந்தோஷ் இன்னும் அவனுடைய தந்தை தன் லௌகீக நோக்கங்களிலிருந்து மாறும் காலம் வரும் என நம்பிக்கை வைத்திருக்கிறான். குருதேவா, நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். அம்மனிதருக்கு உதவி செய்யுங்கள்."

"ஆகட்டும், உனக்காகத்தான்," என் குருதேவருடைய முகம் உணர்ச்சியற்றிருந்தது. கர்வம் பிடித்த அக்குதிரை வைத்தியர், அவர் அறியாதிருப்பினும் நீரிழிவு நோயால் கடுமையாகத் தாக்கப்பட்டிருக்கிறார். இன்னும் பதினைந்து நாட்களில் அவர் படுக்கையில் விழுந்து விடுவார். வைத்தியர்கள் அவரைக் கைவிட்டு விடுவார்கள். இயற்கையாக அவர் இன்றிலிருந்து இன்னும் ஆறு வாரங்களில் இவ்வுலகை விட்டுச் செல்ல வேண்டியவர். இருந்தாலும் உன் தலையீட்டினால் அவர் அன்று பிழைத்தெழுவார். ஆனால் ஒரு நிபந்தனை: அவர் சோதிட வளையல் ஒன்றை அணிய வேண்டும். அறுவை சிகிச்சைக்கு முன்பு முரண்டு பிடிக்கும் அவருடைய குதிரைகளில் ஒன்றைப் போலவே அவர் இதை வன்மையாக எதிர்ப்பார் என்பது மட்டும் நிச்சயம்! குருநாதர் சிரித்துக் கொண்டார்.

கொஞ்ச நேர மௌனத்திற்குப் பிறகு, சந்தோஷும்

நானும் சேர்ந்து அவரை எப்படி மெள்ள வழிக்குக் கொண்டு வரலாமென்று நான் யோசிக்கையில் ஸ்ரீ யுக்தேஸ்வர் மேலும் சில விளக்கங்களைக் கூறினார்.

"அவர் உடம்பு தேறியதும் அவரை மாமிசம் சாப்பிடவேண்டாமென்று சொல். ஆயினும் அவர் இந்த அறிவுரையைக் கேட்கப் போவதில்லை. இன்னும் ஆறு மாதங்களில், அவர் உடல்நிலை மிக நன்றாயிருக்கும் சமயத்திலேயே அவர் இறந்து விடுவார். என் குருநாதர் மேலும் சொன்னார், இந்த ஆறுமாத வாழ்க்கை நீடிப்பு அவருக்கு உன் வேண்டுதலால்தான் கொடுக்கப்பட்டுள்ளது."

மறுநாள் நகைக்கடையில் தாயத்து செய்ய ஏற்பாடு செய்யும்படி நான் சந்தோஷிடம் கூறினேன். ஒரு வாரத்தில் அது தயாராகி விட்டது. ஆனால் டாக்டர் ராய் அதை அணிய மறுத்துவிட்டார்.

"என் உடல்நிலை மிக நன்றாகவே உள்ளது. இந்த சோதிட மூட நம்பிக்கைகளினால் என்னை வசப்படுத்த முடியாது," என்றவாறு அந்த டாக்டர் என்னைச் சண்டை இடுவது போன்று உற்று நோக்கினார்.

குருதேவர் இவரை முரட்டுக் குதிரைக்கு நியாயமாக ஒப்பிட்டதை நான் வேடிக்கையாக நினைவு கூர்ந்தேன். இன்னும் ஏழு நாட்கள் கழிந்தன. அந்த டாக்டர் திடீரென்று நோய்வாய்ப்பட்டதும் வளையலை அணிவதற்குப் பணிவுடன் ஒப்புக் கொண்டார். இரு வாரங்கள் கழித்து அவருக்கு வைத்தியம் செய்த டாக்டர் அவர் பிழைப்பது சாத்தியமில்லை என்று என்னிடம்

கூறினார். அவர் நீரிழிவு நோயின் கடுமையான பாதிப்புகளைப் பற்றியும் அவற்றின் பயங்கரமான விளைவுகளைப் பற்றியும் விவரமாகக் கூறினார்.

நான் தலையை ஆட்டினேன். ஒரு மாதப் படுக்கைக்குப் பிறகு டாக்டர் ராய் தேறி விடுவார் என்று என் குரு கூறியிருக் கிறார், என்றேன் நான்.

அந்த டாக்டர் நம்பிக்கையில்லாமல் என்னை உற்று நோக்கி னார். ஆனால் இரண்டு வாரம் கழித்து மன்னிப்பு உணர்வுடன் என்னைத் தேடி வந்தார்.

"டாக்டர் ராய் முழுமையாக குணமாகி விட்டார்!" அவர் வியந்தவாறு கூறினார். "என் அனுபவத்தில் இது மிகவும் விசித்திரமான விஷயம். நான் இதுவரை மரணத்தின் வாயிலிலிருக்கும் எந்த மனிதனும் இவ்வாறு காரணத்தை விளக்க முடியாத வகையில் முழுமையாகப் பிழைத்து எழுந்ததைக் கண்டதே இல்லை. உன் குருநாதர் உண்மையாகவே நோயைக் குணப்படுத்தும் ஒரு தீர்க்கதரிசியாகவே இருக்க வேண்டும்!"

டாக்டர் ராயை ஒருமுறை சந்தித்து, மாமிச உணவை ஒதுக்கும்படி ஸ்ரீ யுக்தேஸ்வர் கூறிய அறிவுரையைக் கூறிய பிறகு, ஆறு மாதங்கள் வரை அம்மனிதரை நான் காணவில்லை. ஒரு நாள் மாலையில் என் (குடும்ப) வீட்டுத் திண்ணையில் நான் உட்கார்ந்திருக்கும் பொழுது அவர் கொஞ்ச நேரம் பேச வேண்டி நின்றார்.

"மாமிச உணவை அடிக்கடி சாப்பிடுவதன் மூலம்

நான் இழந்த சக்தியை மீண்டும் அடைந்து விட்டேனென்று உன் குருதேவரிடம் சொல். உணவு விஷயத்தில், விஞ்ஞானத்திற்குப் பொருந்தாத அவரது கருத்துக்கள் என்னை பாதிக்கவில்லை." உண்மையாகவே டாக்டர் ராய் ஆரோக்கியத்தின் சின்னமாகத் திகழ்ந்தார்.

ஆனால் மறுநாளே சந்தோஷ் அடுத்த கட்டிடத்தில் இருந்த அவர்கள் வீட்டிலிருந்து என்னிடம் ஓடி வந்தான். "இன்று காலை தந்தை திடீரென மரணமடைந்தார்!"

குருதேவருடன் என்னுடைய மிக்க விசித்திரமான அனுபவங்களில் இதுவும் ஒன்று. அவர், அந்த முசுடான கால்நடை வைத்தியரை அவருக்கு நம்பிக்கையில்லா விடினும், குணப்படுத்தியதும், அவருடைய உலக வாழ்வின் இயற்கையான காலத்தை ஆறு மாதங்களுக்கு நீட்டித்ததும், எனது உண்மையான வேண்டுகோளினால்தான். ஸ்ரீ யுக்தேஸ்வர் ஒரு பக்தனின் அவசரமான பிரார்த்தனைக்கு இணங்கும் பொழுது அவருடைய கருணை எல்லையற்றதாகிறது.

குருதேவரைக் காணுவதற்கு எனது கல்லூரி நண்பர்களை அழைத்து வருவது எனக்கு மிக்க பெருமை தரக்கூடிய சிறப்பு உரிமையாக இருந்தது. அவர்களில் பெரும்பாலோர் தங்களது கல்லூரி நாகரிகத்திற்கே உரித்தான நாத்திகப் போர்வையைக் குறைந்த பட்சம் ஆசிரமத்திற்குள்ளாவது ஒதுக்கி வைத்து விடுவார்கள்.

என் நண்பர்களில் ஒருவனான சசி அனேக வார விடுமுறைகளை ஆனந்தமாக செராம்பூரில் கழித்திருக்கிறான். குருதேவருக்கு அவனை மிகவும்

பிடித்துப் போயிற்று. அவனுடைய சொந்த வாழ்க்கை மிகுந்த ஒழுங்கீனத்துடனும் பண்படாமலும் இருப்பதைக் குறித்து அவர் வருந்துவார்.

"சசி, நீ திருந்தினாலொழிய இன்னும் ஒரு வருடத்தில் நீ பயங்கரமாக நோய்வாய்ப் படுவாய். ஸ்ரீ யுக்தேஸ்வர் பிரியமான தவிப்புடன் என் நண்பனை நோக்கினார். முகுந்தன் சாட்சி; நான் உன்னை எச்சரிக்கவில்லை என்று பிறகு சொல்லாதே."

சசி சிரித்தான். "குருதேவா, என் பரிதாபகரமான விஷயத்தில் இப்பிரபஞ்சத்தின் இனிய கருணையை எனக்கு உகந்ததாக மாற்றும் பொறுப்பை நான் உங்களிடமே ஒப்படைக்கிறேன். என் ஆத்மா விரும்பினாலும் என் மனோசக்தி பலவீனமாக இருக்கிறது. உலகத்தில் நீங்கள் ஒருவர் தான் என்னைக் காப்பாற்றக் கூடியவர். நான் வேறு எதிலும் நம்பிக்கை வைக்கவில்லை."

"நீ இரண்டு காரட் எடையுள்ள நீலக் கல்லையாவது அணிந்துக்கொள். அது உனக்கு உதவும்."

"அது என் நிதிநிலைக்கு அப்பாற்பட்டது. என் அன்புள்ள குருதேவா, சங்கடம் வரும்பொழுது நீங்கள் எப்படியும் என்னைக் காப்பாற்றி விடுவீர்கள் என்று முழுவதும் நம்புகிறேன்."

"ஒரு வருடத்தில் நீ மூன்று நீலக்கற்களைக் கொண்டு வருவாய். அப்பொழுது அவை உனக்கு உபயோகமில்லாமல் போய்விடும்," என்று ஸ்ரீ யுக்தேஸ்வர் பதிலளித்தார்.

இவ்வுரையாடல் வெவ்வேறு விதங்களில் வழக்கமாக நடைபெற்றது. என்னால் திருந்த முடியாது. என சசி கேலியான வருத்தத்துடன் கூறுவான். "குருதேவா, தங்களிடம் உள்ள என் நம்பிக்கை எந்தக் கல்லையும் விட எனக்கு அதிக மதிப்புள்ளது," என்பான்.

ஒரு வருடம் சென்றது. ஒரு நாள் அவருடைய சீடரான நரேன் பாபுவின் கல்கத்தா வீட்டில் நான் குருதேவரைச் சந்தித்தேன். காலை பத்துமணி வாக்கில் நானும் என் குருதேவரும் இரண்டாவது மாடி அறையில் அமர்ந்து இருக்கையில் முன் கதவு திறக்கப்படும் ஓசை எனக்குக் கேட்டது. குருதேவர் விறைப்பாக நிமிர்ந்தார்.

"அந்த சசிதான் அது," அவர் தீவிரத்துடன் குறிப்பிட்டார். "ஒரு வருடம் ஆகிவிட்டது. அவனது இரண்டு சுவாச கோசங்சளும் கெட்டு விட்டன. என் புத்திமதியை அவன் ஏற்கவில்லை; அவனை நான் பார்க்க விரும்பவில்லை என்று அவனிடம் சொல்."

ஸ்ரீ யுக்தேஸ்வரின் கடுமையினால் பாதி திக்பிரமை கொண்டு நான் வேகமாக மாடிப்படிகளைக் கடந்தேன். சசி ஏறிக்கொண்டிருந்தான்.

"ஓ, முகுந்தா! குருதேவர் இங்கு இருக்கிறாரென்று நம்புகிறேன்; அவர் இங்கு இருக்கலாமென்று என் உள் உணர்வு கூறுகிறது."

"ஆம், அவர் தன்னை யாரும் தொந்தரவு செய்வதை விரும்பவில்லை."

சசி அழத் தொடங்கி என்னைத் தள்ளிக் கொண்டு சென்றான். மூன்று அழகான நீலக் கற்களை

வைத்தவாறு அவன் ஸ்ரீ யுக்தேஸ்வரின் காலடியில் வீழ்ந்தான்.

"யாவுமறிந்த குருதேவா, டாக்டர்கள் எனக்கு சுவாசகோச எலும்புருக்கி நோய் இருப்பதாகக் கூறுகிறார்கள். அவர்கள், என் வாழ்வு இன்னும் மூன்று மாதமே என்கிறார்கள். நீங்கள் எனக்கு உதவி செய்யுமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் என்னை குணப்படுத்த முடியும் என்பதை நான் அறிவேன்!"

"உன் வாழ்வைப் பற்றி இப்போது கவலைப்படுவது கொஞ்சம் காலங்கடந்தது அல்லவா? உன் கற்களை எடுத்துக் கொண்டு நடையைக் கட்டு. அவைகளின் உபயோககரமான காலம் கடந்து விட்டது." இரங்கலை வேண்டிய சசியின் விசும்பல்களுக்கு நடுவே குருதேவர் ஆழ்ந்த மௌனத்தில் சிங்கமுகக் கற்சிலை போன்று அசையாது அமர்ந்திருந்தார்.

ஸ்ரீ யுக்தேஸ்வர், தெய்வ சக்தியால் குணப்படுத்துவதில் உள்ள சசியின் நம்பிக்கையின் ஆழத்தை வெறுமே சோதிக்கிறார் என்று என் உள் உணர்வில் தீர்மானமாகத் தோன்றியது. இறுக்கமான ஒரு மணி நேரத்திற்குப் பிறகு குருதேவருடைய கருணைப்பார்வை அவரது காலடியில் கிடக்கும் எனது நண்பன் மீது திரும்பியதும் நான் அதிசயிக்கவில்லை.

"எழுந்திரு சசி, இன்னொருவர் வீட்டில் நீ எவ்வளவு அமர்க்களம் செய்கிறாய்! அக்கற்களை நகைக் கடைக்காரருக்குத் திருப்பிக் கொடுத்து விடு. அவைகள்

இப்பொழுது வீண் செலவு. ஆனால் சோதிட வளை ஒன்று வாங்கி அணிந்துக் கொள். பயப்படாதே. இன்னும் சில வாரங்களில் நீ குணமாகிவிடுவாய்."

புற்கள் முளைத்த ஈர நிலப் பரப்பின் மீது திடீரென்று சூரியன் உதித்தாற்போல் சசியின் கண்ணீரடர்ந்த முகத்தில் புன்சிரிப்பு மலர்ந்தது. "அன்பார்ந்த குருதேவா, மருத்துவர்கள் கொடுக்கும் மருந்தை நான் எடுத்துக்கொள்ளலாமா?"

"உன் விருப்பம் போல் செய்-குடித்தாலும் சரி அல்லது கொட்டி னாலும் சரி; அதைப் பற்றிப் பரவாயில்லை. க்ஷயரோகத்தால நீ இறப்பது என்பது சூரிய சந்திரர்கள் ஒருவருக்கொருவர் இடம் மாற்றிக் கொள்வது எவ்வளவு அசாத்தியமோ அவ்வளவு அசாத்தியம். ஸ்ரீ யுக்தேஸ்வர் சட்டென்று தொடர்ந்தார், நான் என் மனத்தை மாற்றிக் கொள்வதற்கு முன் இங்கிருந்து போய்விடு!"

ஒரு கலங்கிய வணக்கத்துடன் என் நண்பன் அவசரமாகப் புறப்பட்டான். நான் அடுத்த வாரங்களில் பல தடவை அவனைச் சென்று பார்த்து அவனது நிலை மேலும் மேலும் மோசமானது குறித்து திகைப்படைந்தேன்.

"சசி இந்த இரவைத் தாண்ட மாட்டான்." அவனுடைய மருத்துவரின் இந்த வார்த்தைகளும் கிட்டத்தட்ட இப்பொழுது எலும்புக் கூடாகவே ஆகிவிட்ட என் நண்பனின் தோற்றமும் என்னை அவசர அவசரமாக செராம்பூருக்கு ஓடச் செய்தன. என் குருதேவர் நான்

கண்ணீருடன் கூறிய விவரங்களை அசிரத்தையுடன் கேட்டார்.

"நீ ஏன் இங்கு வந்து என்னைத் தொந்தரவு செய்கிறாய்? சசி குணமாகிவிடுவான் என்று நான் அவனுக்கு உறுதி கூறியதை நீ ஏற்கனவே கேட்டாயே."

நான் அதீத மரியாதையுடன் தலை வணங்கி திரும்பிச் சென்றேன். ஸ்ரீ யுக்தேஸ்வர் எனக்கு விடை கொடுக்காமல் மௌனத்தில் ஆழ்ந்து விட்டார். அவரது இமைக்காத கண்கள் பாதி திறந்தவாறு இருக்க, அவற்றின் பார்வை வேறொரு உலகிற்குப் பறந்து விட்டது.

நான் உடனே கல்கத்தாவில் சசியின் வீட்டிற்குத் திரும்பிச் சென்றேன். என் நண்பன் எழுந்து உட்கார்ந்து பால் அருந்திக் கொண்டிருப்பதை ஆச்சரியத்துடன் கண்டேன்.

"ஓ முகுந்தா! என்ன அதிசயம்! நான்கு மணி நேரத்திற்கு முன்னால் நான் இந்த அறையில் குருதேவரின் வருகையை உணர்ந்தேன். என் பயங்கரமான அறிகுறிகள் உடனே மறைந்தன. அவருடைய அருளினால் நான் முழுவதும் குணமாகி விட்டதாக உணர்கிறேன்."

சில வாரங்களிலேயே சசி நன்கு சதைப் பிடிப்புடன் எப்போதையும் விட ஆரோக்கியத்துடன் காணப்பட்டான்.[1] ஆனால் அவன் குணப்படுத்தப்பட்டதின் பின்விளைவு நன்றி கொன்றதாயிருந்தது. மறுபடியும் அவன் குருதேவரை நாடி வரவேயில்லை! ஒரு நாள் என்

நண்பன் தன் முற்கால வாழ்க்கை முறையைப் பற்றி மிகவும் வருந்தி, குருதேவரைக் காண வெட்கப்படுவதாகக் கூறினான்.

சசியின் வியாதி அவனுடைய மனத்தைக் கடுமையாக்கி அவனுடைய நடத்தையைக் கெடுத்து ஓர் எதிரிடையான விளைவை ஏற்படுத்திவிட்டது என்ற முடிவுக்கே என்னால் வர முடிந்தது.

ஸ்காட்டிஷ் சர்ச் கல்லூரியில் என் இரண்டு வருடப் படிப்பு முடியும் தருவாயிலிருந்தது. நான் வகுப்பிற்குச் செல்வது அரிதாகவே இருந்தது. நான் என் குடும்பத்தாருடன் அமைதியாயிருக்க வேண்டி ஏதோ கொஞ்சம் படித்தேன். எனது இரண்டு தனிப்பயிற்சி ஆசிரியர்களும் ஒழுங்காக என் வீட்டிற்கு வருவார்கள்; நான் ஒழுங்காக வீட்டிலிருக்க மாட்டேன். நான் கல்வி கற்ற காலத்தில் இது ஒன்று தான் ஒழுங்காக நடந்தது என்று நினைக்கிறேன்.

இந்தியாவில் இரண்டு வருடம் வெற்றிகரமாகக் கல்லூரியில் படித்தால் இண்டர்மீடியட் கலைக்கான சான்றிதழ் கிடைக்கும். பிறகு மாணவன் இன்னும் இரண்டு வருட காலத்தில் A.B. பட்டத்தை அடையலாம்.

இண்டர்மீடியட் கலைத் தேர்வுகள் பயங்கரமாக நெருங்கி வந்து கொண்டிருந்தன. என் குருதேவர் சில வாரங்கள் தங்குவதற்காக பூரி சென்றிருந்தார். நான் அங்கு ஓடினேன். நான் இறுதித் தேர்வுகளுக்குப் போக வேண்டாம் என்று கூறுவாரோ என்று நப்பாசையில், நான் சரியாக தயார் செய்யாததை எடுத்துக் கூறினேன்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் ஆறுதலாகப் புன்னகைத்தார். நீ முழு மனத்துடன் உன் ஆன்மீகக் கடமைகளை செய்து கொண்டிருந்தாய். எனவே உன் கல்லூரிப்படிப்பில் கவனம் செலுத்த முடியவில்லை. அடுத்த ஒரு வாரம் நன்றாக உழைத்து உன் புத்தகங்களைப் படி. நீ உன் கடும் சோதனையைத் தோல்வியுறாமல் கடந்து விடுவாய்.

அவ்வப்பொழுது எழுந்த நியாயமான சந்தேகங்களை உறுதியாக அடக்கியவாறு நான் கல்கத்தாவிற்குத் திரும்பினேன். என் மேஜையில் மலை போல் குவிந்திருந்த புத்தகங்களைக் கண்டு நான் எங்கோ கண் காணாத ஒரு வனாந்தரத்தில் வழி தவறிய பயணியைப் போல் உணர்ந்தேன்.

ஒரு நீண்ட நேர தியானம் எனக்கு வேலையைக் குறைக்கும், ஆர்வமூட்டுகின்ற வழி ஒன்றை உணர்த்தியது. ஒவ்வொரு புத்தகத்தையும் மனம் போன போக்கில் திறந்து, அங்கு தென்பட்டதை மட்டும் படித்தேன். நான் அந்த முறையை ஒரு நாளைக்குப் பதினெட்டு மணிநேரம் என்று ஒரு வாரம் தொடர்ந்த பிறகு உருப்போடும் கலையில் நான் கை தேர்ந்தவனாகி விட்டேன் என எண்ணிக் கொண்டேன்.

என்னுடைய ஒழுங்கற்ற முறையாகத் தோன்றும் இந்த வழி பரீட்சைக் கூடங்களில் பின் தொடர்ந்த நாட்களிலெல்லாம் சரியானதாகவே அமைந்தது. மயிரிழையில் என்றாலும் நான் எல்லாப் பரீட்சைகளிலும் தேறிவிட்டேன். என் நண்பர்கள் மற்றும்

குடும்பத்தினரின் நல்வாழ்த்துக்களில் ஆச்சரியத்தை வெளிப்படுத்தும் நகைப்புக்கிடமான கூச்சலும் கலந்தே இருந்தது.

பூரியிலிருந்து திரும்பி வந்த ஸ்ரீ யுக்தேஸ்வர் எனக்கு ஓர் இனிமையான வியப்பை அளித்தார்.

"உன் கல்கத்தா கல்வி இப்போது முடிந்துவிட்டது. நீ உன்னுடைய கடைசி இரண்டு வருட கல்லூரிப்படிப்பை, தொடர்ந்து இங்கு செராம்பூரிலேயே படிக்க ஏற்பாடு செய்கிறேன்."

நான் குழம்பினேன். ஐயா, இந்தப் பட்டணத்தில் இளங்கலை பட்டப்படிப்பு இல்லையே! உயர்கல்வி கற்க செராம்பூரில் இருந்த ஒரே கல்லூரியில் இரண்டு வருடப் படிப்பாக இண்டர்மீடியட் கலைப்பிரிவு மட்டுமே இருந்தது.

குருதேவர் குறும்பாகச் சிரித்தார். உனக்காக நன்கொடை வசூலித்து இங்கு பட்டப்படிப்பு ஏற்பாடு செய்வதற்கு எனக்கு வயதாகி விட்டது. வேறு யார் மூலமாகவாவதுதான் இதை ஏற்பாடு செய்ய வேண்டும் என நினைக்கிறேன்.

இரண்டு மாதங்கள் கழித்து செராம்பூர் கல்லூரியின் தலைவரான பேராசிரியர் ஹாவெல்ஸ் நான்கு வருடப்படிப்பை வழங்க வேண்டிய நிதியுதவி திரட்டுவதில் தான் வெற்றியடைந்து விட்டதாக வெளிப்படையாக அறிவித்தார். செராம்பூர் கல்லூரி கல்கத்தா பல்கலைக் கழகத்துடன் இணைக்கப்பட்ட கிளையாக ஆனது. செராம்பூரில் பட்டப்படிப்பிற்காக

முதன் முதலாகச் சேர்ந்த மாணவர்களில் நானும் ஒருவன்.

"குருஜி, நீங்கள் என்னிடம் எவ்வளவு கருணையுடன் இருக்கிறீர்கள்! நான் கல்கத்தாவை விட்டு செராம்பூரில் தினமும் உங்களுக்கு அருகிலேயே இருக்க ஏங்கிக் கொண்டிருந்தேன். உங்களுடைய மௌனமான உதவிக்காக, பேராசிரியர் ஹாவெல்ஸ் எவ்வளவு கடமைப்பட்டுள்ளார் என்பதை அவர் கனவு கூடக் கண்டிருக்க மாட்டார்!"

ஸ்ரீ யுக்தேஸ்வர் என்னைப் போலிக் கடுமையுடன் நோக்கினார். "இப்பொழுது நீ ரயில் வண்டிகளில் அதிக நேரம் செலவழிக்க வேண்டியதில்லை. உன் படிப்பிற்குத் தடை இல்லாமல் எவ்வளவு நேரம் கிடைக்கும்! ஒருகால் நீ கடைசி நிமிடத்தில் உருப்போடு பவனாக இல்லாமல் சிறந்த கல்விமானாக ஆகலாம்," என்றார்.

ஆனால் அவருடைய குரலில் திடமான நம்பிக்கை இருந்ததாகத் தோன்றவில்லை.[2]



ஸ்ரீ யோகானந்தர், பதினாறு வயதில்

1 1936 இல் எனது நண்பர் ஒருவர் மூலம், சசி இன்னும் நல்ல ஆரோக்கியத்துடன் இருப்பதாக அறிந்தேன்.

2 ஸ்ரீ யுக்தேஸ்வர், மற்ற பல மகான்களைப் போலவே தற்கால கல்வியின் லௌகீகமான போக்கைக் கண்டு வருந்தினார். மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடிய ஆத்மீக விதிகளையோ அல்லது தெய்வத்தினிடத்தில் பயம், அதாவது தன்னைச் சிருஷ்டித்தவனிடம் பயபக்தியாயிருக்க ஒருவரது வாழ்க்கைக்கு வழி காட்டுவதுதான் விவேகம் என்பதையோ விளக்கும் பள்ளிகள் மிகச் சிலவே.

உயர்நிலைப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் மனிதன் ஓர் உயர்ந்த மிருகம் மட்டுமே என்ற பொருள்படும் வாக்கியங்களைக் கேட்கும் இளவயதினர் பெரும்பாலும் நாத்திகர்களாகி விடுகிறார்கள். அவர்கள் எந்த விதமான ஆத்ம பரிசோதனைகளையும் செய்ய முயல்வதுமில்லை மற்றும் அவர்களின் அடிப்படைத் தன்மையான இறைவனின் பிரதிபிம்பங்களாக தங்களை அறிவதுமில்லை. எமர்ஸன் கூறினார்: நமது உள்ளே இருப்பதைத்தான் நாம் வெளியேயும் காணமுடியும். நாம் தெய்வங்களைக் காணவில்லையெனில் அதன் காரணம் நாம் அவைகளை உள்ளே இருத்தி வைக்கவில்லை. எவனொருவன் தன் மிருக இயல்பை மட்டுமே உண்மையென நம்புகிறானோ அவன் தெய்வீக நாட்டங்களிலிருந்து நீக்கப்படுகிறான்.

எந்த ஒரு கல்வி முறை ஆத்மாவை மனிதனின் இருப்புக்கே ஆதாரமென எடுத்துக் கூறவில்லையோ அந்த முறை அவித்யா அல்லது பொய்யறிவை வழங்குகிறது. நீ நிர்ப்பாக்கியமுள்ளவனும், பரிதபிக்கப்படத்தக்கவனும், தரித்திரனும், குருடனும், நிர்வாணியுமாயிருக்கிறதை அறியாமல், நான் ஐசுவரியவானென்றும், திரவிய சம்பன்னனென்றும், எனக்கு ஒரு குறைவுமில்லையென்றும், சொல்லுகிறபடியால், வெளிப்படுத்தின விசேஷம் 3:17 (பைபிள்).

புராதன பாரதத்தில் இளைஞர்களுக்கான கல்விமுறை முன்மாதிரியானதாக இருந்தது. ஒன்பது வயதாயிருக்கும் பொழுது மாணவன் ஒரு குருகுலத்தில் (குருவின் குடும்பம் வசிக்கும் வீடு, கல்விக் கூடம் என்ற முறையில்) மகனாக ஏற்றுக் கொள்ளப்படுவான். தற்கால மாணவன் ஒரு வருடத்தில் அவனுடைய நேரத்தில் எட்டில் ஒரு பங்குதான் பள்ளிக் கூடத்தில் செலவிடுகிறான். இந்தியன் அவனுடைய முழு நேரத்தையும் அங்கேயே கழித்தான், காலங்களினூடே இந்திய கலாசாரம் (Indian culture Through the Ages-Vol:I; Longmans, Green & Co.,) என்ற புத்தகத்தில் பேராசிரியர் எஸ்.வி.வெங்கடேஸ்வரா எழுதியது. ஓர் ஆரோக்கியமான ஸ்திர உணர்வும் பொறுப்புணர்ச்சியும் இருந்தது; தன் சுய சார்பிற்கும் தனித் தன்மைக்கும் நிறைய வாய்ப்புகள் இருந்தன. மிக உயர்ந்த பண்பும், தனக்குத் தானே விதித்துக் கொண்ட நியதிகளும், கடமை, சுயநலமற்ற செயல், தியாகம் ஆகியவற்றிற்கு தீவிரமான மதிப்பும் இவற்றுடன் சுயமரியாதையும் மற்றவர்களை வணங்கும் பண்பும் கலந்திருந்தன; கல்வியறிவின் மேன்மை பற்றிய ஓர் உயர்ந்த தரமும் ஓர் உன்னத உணர்வுடன்...மனித வாழ்க்கையின் உயரிய குறிக்கோளும் கூட இருந்தன.

## அத்தியாயம் 18

# விந்தை புரியும் ஒரு முஸ்லிம்

"பல வருடங்களுக்கு முன்பு நீ இருக்கும் இதே அறையில் ஒரு முஸ்லிம் என் முன் நான்கு அதிசயங்களை செய்து காண்பித்தான்!"

ஸ்ரீ யுக்தேஸ்வர், என் புது விடுதிக்கு அவர் முதன் முதலாக வந்ததுமே மேற்கண்டவாறு கூறினார். செராம்பூர் கல்லூரியில் சேர்ந்ததுமே நான் அருகிலுள்ள "பந்தி"[1] என்று அழைக்கப்படும் உணவு விடுதியில் ஓர் அறை எடுத்துக் கொண்டேன். அது கங்கையை நோக்கியிருந்த புராதனமான வடிவமைப்பைக் கொண்ட ஒரு செங்கல் கட்டிடம்.

"குருதேவா, என்ன நிகழ்ச்சிப் பொருத்தம்! புதிதாக அலங்கரிக்கப் பட்ட இந்தச் சுவர்கள், ஞாபகங்கள் நிறைந்த அளவு உண்மையாகவே பழமையானவையா?" எளிய முறையில் அலங்கரிக்கப்பட்ட என் அறையை ஆர்வத்துடன் சுற்றிலும் பார்த்தேன்.

"அது ஒரு பெரிய கதை." ஒரு புன்னகையுடன் பழைய ஞாபகத்திலாழ்ந்தார். "அந்தப் பக்கிரி[2] யின் பெயர் அஃப்சல் கான். அவன் தன் அசாதாரணமான சக்திகளைத் தற்செயலாகச் சந்திக்க நேர்ந்த ஓர் இந்து யோகியிடமிருந்து பெற்றிருந்தான்."

உடல் முழுவதும் தூசு படிந்திருந்த ஒரு சன்னியாசி, ஒரு நாள் கிழக்கு வங்காளத்தின் ஒரு கிராமத்தில்

வசித்து வந்த சிறுவன் அ்ஃப்சலைப் பார்த்து, "'மகனே தாகமாய் இருக்கிறது, எனக்குக் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா,' என்று கூறினார்.

"'ஐயா நான் ஒரு முஸ்லிம். ஓர் இந்துவாகிய நீங்கள் என் கைகளிலிருந்து எப்படி நீர் அருந்த முடியும்?'

"'என் குழந்தாய், நீ உண்மை பேசுவதைக் கேட்டு எனக்கு மகிழ்ச்சி உண்டாகிறது. தெய்வீகத் தன்மையற்ற பிரிவினைகளை உண்டாக்கும் சமூக பகிஷ்கரிப்பு விதி முறைகளை நான் பின்பற்றுவதில்லை. செல், சீக்கிரம் எனக்குத் தண்ணீர் கொண்டு வா.'

"அ்ஃப்சல் பக்தி கலந்த மரியாதையுடன் கீழ்ப்படிந்ததும், அந்த யோகியின் அன்பான பார்வை பரிசாகக் கிடைத்தது.

"'உன்னிடம் முற்பிறப்புக்களின் நல்வினை இருக்கிறது, அவர் கம்பீரமாகக் கூறினார். கண்ணுக்குப் புலப்படாத மண்டலங்களுள் ஒன்றின் மீது உன் அதிகாரத்தைச் செலுத்தக் கூடிய ஒரு யோக வழிமுறையை நான் உனக்குக் கற்பிக்கப்போகிறேன். உனக்குக் கிடைக்கும் மகத்தான சக்திகளை தகுதியான காரியங்களுக்கே பயன்படுத்த வேண்டும்; சுய நலத்திற்கு அவைகளை ஒருபோதும் பயன் படுத்தாதே! அந்தோ, பூர்வ ஜன்மங்களிலிருந்து கொண்டு வந்த சில அழிவுச் சக்திகளின் வித்துக்களையும் உன்னிடம் நான் காண்கிறேன். புதிதான தீய காரியங்கள் என்னும் தண்ணீரைப் பாய்ச்சி அவ்வழிவுச் சக்திகளை மேலும் முளைவிட்டு வளரச் செய்து விடாதே. உன் முந்தைய

கர்ம வினைகள் எவ்வளவு சிக்கலாக இருக்கிறதெனில் நீ இவ்வாழ்க்கையின் யோக சாதனைகள் அனைத் தையும் மிக உயர்ந்த மனித நோக்கங்களுடன் ஒத்துப் போகுமளவு பயன்படுத்தியே ஆக வேண்டும்.'

"ஆச்சரியத்தில் ஆழ்ந்திருந்த அச்சிறுவனுக்கு சிக்கலான யோக முறையைக் கற்பித்து விட்டு அந்த யோகி மறைந்து விட்டார்."

அ்ஃப்சல் தன் யோக முறைகளை இருபது ஆண்டுகள் உண்மையுடன் பின்பற்றி வந்தான். அவனுடைய அதிசய ஜாலங்கள் பரவலாக கவனத்தை ஈர்க்க ஆரம்பித்தன. 'ஹஜ்ரத்' என அவன் அழைக்கும் உடலற்ற ஆவி ஒன்று எப்பொழுதும் அவனுடன் கூடவே இருப்பதைப் போலிருந்தது. கண்ணுக்குப் புலப்படாத அது அந்தப் பக்கிரி யின் மிகச் சிறிய விருப்பத்தையும் கூட நிறைவேற்றி வைக்க வல்லதாயிருந்தது.

"தன் குருவின் எச்சரிக்கையை அலட்சியம் செய்து அ்ஃப்சல் தனது சக்தியைத் துஷ்பிரயோகம் செய்யத் தொடங்கினான். அவன் கையால் எந்தப் பொருளைத் தொட்டுத் திரும்ப வைத்தாலும் அது சுவடே இல்லாமல் மறையலாயிற்று.வேதனையளிக்கும் இந்தப் பின்விளைவுகள் அந்த முஸ்லிமை எங்கும் வேண்டாத விருந்தாளியாக்கி விட்டது!

"அவன் அவ்வப்பொழுது கல்கத்தாவிலுள்ள பெரிய நகைக் கடைகளுக்கு நகை வாங்குபவன் போலச் செல்வான். பிறகு அந்தக் கடையை விட்டு அவன் சென்றவுடன் அவன் தொட்டுப் பார்த்த

பொருட்களெல்லாம் மறைந்துவிடும்!

"அவன் ரகசியத்தைத் தெரிந்து கொள்ளலாமே என்ற நம்பிக்கையினால் கவரப்பட்ட நூற்றுக்கணக்கான மாணவர்களால் அஃப்சல் அடிக்கடி சூழப்பட்டிருந்தான். அந்தப் பக்கிரி எப்பொழுதாவது அவர்களை அவனுடன் பயணம் செய்ய அழைப்பான். ரயில் நிலையத்தில் எப்படியாவது சமாளித்து ஒரு கற்றை டிக்கட்டுகளைத் தொட்டுவிடுவான். பிறகு அவற்றை எழுத்தாளரிடம் தள்ளி, நான் என் மனதை மாற்றிக் கொண்டு விட்டேன். இப்பொழுது இவற்றை நான் வாங்கப்போவதில்லை, என்பான். ஆனால் அஃப்சல் தன் பட்டாளத்துடன் ரயிலில் ஏறும்பொழுது, வேண்டிய டிக்கட்டுகள் அவன் வசமிருக்கும்.[3]

"இம்மாதிரியான மோசடிகள் ஒரு தீவிரக் கண்டனக் குரலை எழுப்பியது. வங்காள நகை வியாபாரிகளும், டிக்கட் விற்பவர்களும் அதிர்ச்சியுற்று நிலை குலைந்தனர். அஃப்சலை சிறைப்படுத்த விரும்பிய போலீஸாரால் எதுவுமே செய்ய முடியவில்லை. அந்தப் பக்கிரி, அவனை குற்றம் சாட்டக்கூடிய தடயத்தை, ஹஜ்ரத், இதை அப்புறப்படுத்து என்று சும்மா சொல்லியே அழிக்க முடிந்தது."

ஸ்ரீ யுக்தேஸ்வர் தன் இருக்கையிலிருந்து எழுந்து கங்கை நதியின் பக்கமாக அமைந்திருக்கும் என் அறையின் முன் பால்கனியை நோக்கி நடந்தார். திகைப்பைத் தரும் அந்த முஸ்லிமின் திருவிளையாடல்களைப் பற்றி இன்னும் கேட்கும்

ஆவலில் நான் அவரைத் தொடர்ந்தேன்.

"இந்தப் பந்தி வீடு முன்பு என் நண்பர் ஒருவருக்குச் சொந்தமாயிருந்தது. அவர் அஃப்சல் கானுடன் பரிச்சயம் செய்து கொண்டதும் ஒரு நாள் அவனை இங்கு அழைத்து வந்தார். என் நண்பர் என்னையும் உட்பட அக்கம் பக்கத்தில் வசிக்கும் சுமார் இருபது பேர்களை அழைத்திருந்தார். அப்பொழுது எனக்குச் சிறுவயதுதான். இந்தக் கெட்ட பெயரெடுத்த பக்கிரியைப் பற்றி தெரிந்து கொள்ள துடிப்பான ஆர்வத்துடன் இருந்தேன். " குருதேவர் சிரித்தார். நான் முன் ஜாக்கிரத்தையுடன் விலை மதிப்புள்ள எதையும் அணிந்து கொள்ளாமல்தான் சென்றேன்! அஃப்சல் என்னை ஆராய்ந்து நோக்கினான். பிறகு கூறினான்:

"'உன் கைகள் வலுவுள்ளவைகளாக உள்ளன. கீழே தோட்டத்திற்குச் செல். ஒரு மழுமழுப்பான கல்லை எடுத்து, அதன் மேல் சாக்குக்கட்டியால் உன் பெயரை எழுது. பிறகு அதை உன்னால் முடிந்த தூரம் வரை கங்கையில் எறிந்து விடு.'

"நான் கீழ்ப்படிந்தேன். தொலை தூர அலைகளில் அந்தக் கல் மறைந்ததும், அந்த முஸ்லிம் மறுபடியும் என்னிடம் சொன்னான்.

"'ஒரு பானையைக் கங்கை நீரால் நிரப்பி வீட்டின் முன்னால் வை.'

"நான் தண்ணீர் பாத்திரத்துடன் திரும்பியதும், 'ஹஜ்ரத் அந்தக் கல்லை பானையில் போடு!' என்று அந்த பக்கிரி கத்தினான்.

"அந்தக் கல் உடனே தோன்றியது. நான் பானையில் இருந்து அதை எடுத்துப் பார்த்தால் என் கையெழுத்து நான் எழுதிய பொழுது இருந்தபடியே தெளிவாய் இருந்தது.

"அந்த அறையில் என்னுடன் இருந்த என் நண்பர்களில் ஒருவனான பாபு[4] ஒரு பழைய கனமான தங்கக் கடிகாரமும் சங்கிலியும் அணிந்திருந்தான். அந்தப் பக்கிரி அதை அபசகுனம் போல் கையில் எடுத்துப் பார்த்து ரசித்தான். விரைவிலேயே அவைகளைக் காணவில்லை!

"'அஃப்சல், நான் மிக மதிப்பு வைத்திருக்கும் குடும்பச் சொத்தை தயவு செய்து திருப்பிக் கொடுத்து விடுங்கள்! பாபு அழுது விடுவான் போலிருந்தது.

"அந்த முஸ்லிம் சிறிது நேரம் எதையும் பொருட்படுத்தாது மௌனமாயிருந்தான். பிறகு கூறினான். 'ஓர் இரும்புப் பெட்டியில் ஐநூறு ரூபாய் வைத்திருக்கிறாய். அதைக் கொண்டு வந்து என்னிடம் கொடு. உன் கடிகாரத்தை எங்கு கண்டெடுக்க முடியுமெனக் கூறுகிறேன்,' என்றான்.

"கலவரமடைந்திருந்த பாபு உடனே தன் வீட்டிற்குச் சென்றான். சீக்கிரமே திரும்பி வந்து அஃப்சல் கேட்ட பணத்தைக் கொடுத்தான்.

"'உன் வீட்டிற்கு அருகாமையிலுள்ள சிறு பாலத்தின் அருகில் செல். ஹஜ்ரத்தைக் கூப்பிட்டு உன் கடிகாரத்தையும் சங்கிலியையும் கொடுக்கச் சொல்லிக் கேள்,' என்று அந்தப் பக்கிரி பாபுவுக்கு அறிவித்தான்.

"பாபு உடனே வேகமாக வெளியே ஓடினான். திரும்பி வந்த பொழுது, அவன் நிம்மதி நிறைந்த புன்னகை அணிந்திருந்தான், நகை எதுவுமில்லை.

"'சொல்லியபடி, நான் ஹஜ்ரத்தை அழைத்ததும் என் கடிகாரம் காற்றில் உருண்டவாறு என் வலது கையில் வந்து விழுந்தது! இங்கு திரும்பி வந்து உங்களுடன் சேர்வதற்கு முன்னால் அந்தக் குடும்பச் சொத்தை இரும்புப்பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டே வந்தேன்!'

"பாபுவின் நண்பர்கள் இந்த வேடிக்கை கலந்த துக்க சம்பவத்தை - கடிகாரத்தைப் பெறுவதற்குக் கொடுக்க வேண்டிய மீட்புத் தொகையை நினைத்து - அஃப்சலை ஆத்திரத்துடன் நோக்கினர். அவன் சமாதானப்படுத்தும் முறையில் பேசினான்.

"'உங்களுக்கு எந்தப் பானம் வேண்டுமென்றாலும் தயவு செய்து கேளுங்கள். ஹஜ்ரத் அதைக் கொண்டு வருவான்.'

"ஒருவர் பால் வேண்டுமென்றார். மற்றவர்கள் பழரசத்தைக் கேட்டார்கள். பயம் நீங்கிய பாபு விஸ்கி வேண்டுமெனக் கேட்டதும் நான் மிகவும் அதிர்ச்சி அடையவில்லை! அந்த முஸ்லிம் ஆணை பிறப்பித்தான். கடமையாற்றும் ஹஜ்ரத் மூடியிருந்த கொள்கலங்களை தட்' டென்ற ஓசையுடன் தரையில் வைக்கச் செய்தான். ஒவ்வொருவரும் தமக்கு வேண்டிய பானம் கிடைக்கப் பெற்றனர்.

"அவன் அன்று செய்வதாகக் கூறிய நான்காவது பிரமிக்கத் தக்க அதிசயம் சந்தேகமின்றி அவ்வீட்டாருக்கு

மிக்க மகிழ்ச்சி அளிப்பதாயிருந்தது: அஃப்சல் திடீர் உணவு அளிப்பதாகக் கூறினான்!

"'நாம் மிக விலை உயர்ந்த உணவுகளையே வேண்டுவோமே,' பாபு வேதனையுடனே யோசனை கூறினான். என் ஐநூறு ரூபாய்க்கு எனக்கு மிகச் சிறப்பான சாப்பாடு வேண்டும். ஒவ்வொன்றும் தங்கத் தட்டுகளில் பரிமாறப்பட வேண்டும்!'

"ஒவ்வொருவரும் அவரவரது விருப்பங்களைத் தெரிவித்த பிறகு என்றும் வற்றாத ஹஜ்ரத்தை அந்தப் பக்கிரி அழைத்தான். ஒரு பெரிய சத்தம் உண்டாயிற்று. தங்கத் தட்டுகளில் நன்கு பக்குவமாகத் தயார் செய்யப்பட்ட காய்கறி வகைகளும் சூடான பூரிகளும் அப்பருவ காலத்தில் கிடைக்காத வித விதமான பழ வகைளும் எங்கிருந்தோ எங்கள் காலடிகளை வந்தடைந்தன. எல்லாப் பண்டங்களும் சுவை மிக்கதாயிருந்தன. ஒரு மணி நேரம் விருந்துண்ட பிறகு, நாங்கள் அறையை விட்டு வெளியேறத் தொடங்கினோம். பாத்திரங்களைக் குவிப்பது போன்றதொரு பயங்கர ஒலி எங்களைத் திரும்பிப் பார்க்கச் செய்தது. ஆகா! அங்கு ஜொலிக்கும் தங்கத் தாம்பாளங்களோ, மிஞ்சிய உணவுப் பண்டங்களோ இருந்த அடையாளமே இல்லை."

"'குருஜி,'" நான் இடை மறித்தேன். "தங்கத் தாம்பாளத்தைப் போன்ற பொருட்களை அஃப்சலால் சுலபமாகக் கொண்டுவர முடியுமெனில் மற்றவர் சொத்துக்கு அவர் ஏன் ஆசைப்பட வேண்டும்?"

"அந்தப் பக்கிரி ஆன்மீகத் துறையில் அதிகமாக

முன்னேறியிருக்கவில்லை. ஸ்ரீ யுக்தேஸ்வர் விளக்கினார். ஒரு குறிப்பிட்ட யோக முறையில் அவனுக்கு இருந்த திறமையானது, எந்த விருப்பத்தையும் உடனுக்குடன் நிறைவேற்றிக் கொள்ளக் கூடிய ஒரு சூட்சும வெளியில் அவனை பிரவேசிக்கச் செய்தது. ஹஜ்ரத் என்ற சூட்சும வாசியின் மூலமாக அண்ட வெளியிலுள்ள எந்தப் பொருட்களின் அணுக்களையும் தன் சக்தி வாய்ந்த மனவலிமையினால் அந்த முஸ்லிம் வரவழைக்க முடிந்தது. ஆனால் அவ்வாறு சூட்சுமமாக வரவழைக்கப்பட்ட அப்பொருட்கள் அவற்றின் அமைப்பு முறைப்படி நிரந்தரமானவை அல்ல. அவைகளை நாள்பட வைத்துக் கொள்ள முடியாது.[5] அஃப்சல் உலக செல்வத்தின் மீது இன்னும் மிகுந்த ஆசை வைத்திருந்தான். செல்வத்தை சம்பாதிப்பது மிகவும் கடினமாயிருந்தாலும், அது நம்பக் கூடிய ஸ்திரத்தன்மை உடையது."

நான் சிரித்தேன். "அது கூடத்தான் சில சமயம் காரணம் புரியாமல் மறைந்து விடுகிறதே!"

"அஃப்சல் கடவுளை அறிந்த மனிதனில்லை." குரு தேவர் தொடர்ந்தார். "உண்மையான முனிவர்களால் நிரந்தரமானதும் நன்மையைக் கொடுப்பதுமான அதிசயங்கள் நடத்தப் படுவதுண்டு. ஏனெனில் அவர்கள் எல்லாம்வல்ல இறைவனுடன் தங்களை ஐக்கியப் படுத்திக் கொண்டவர்கள். அஃப்சல், மரணத்திற்கு முன்னால் மனிதர்கள் நுழைய முடியாத சூட்சம பிரதேசத்திற்குள் ஊடுருவக்கூடிய அசாதாரணமான சக்தி

படைத்த வெறும் சாதாரண மனிதன்தான்."

"குருஜி, எனக்கு இப்பொழுது புரிகிறது. அந்த மறு உலகம் சில வசீகரமான விஷயங்களை உடையது போல் தோன்றுகிறதே!"

குருதேவர் ஒப்புக்கொண்டார். "அதற்குப்பிறகு நான் அஃப்சலைப் பார்க்கவே இல்லை. ஆனால் சில வருடங்கள் கழித்து பாபு, அந்த முஸ்லிம் தன் குற்றத்தை பகிரங்கமாக ஒப்புக் கொண்ட செய்தி பிரசுரமாயிருந்த ஒரு செய்தித் தாளை எடுத்துக் கொண்டு என் வீட்டிற்கு வந்தான். அதிலிருந்துதான் நான் உனக்கு இப்பொழுது கூறியபடி ஓர் இந்து குருவிடமிருந்து அஃப்சல் சிறு வயதில் தீட்சை பெற்றது பற்றிய விவரத்தைத் தெரிந்து கொண்டேன்."

அச்செய்தியின் பின் பாகத்தை ஸ்ரீ யுக்தேஸ்வர் ஞாபகப்படுத்திக் கொண்டு கூறியதின் சுருக்கம் வருமாறு: அஃப்சல் கானாகிய நான், ஒரு பிராயச்சித்தமாகவும் அதிசய சக்திகளை அடைய விரும்புகிறவர்களுக்கு ஓர் எச்சரிக்கையாகவும் இந்த வரிகளை எழுதுகிறேன். கடவுளின் அருளாலும் என் குரு மூலமாகவும் எனக்குக் கிடைத்து இருந்த அற்புதமான திறன்களை நான் வருடக் கணக்கில் தவறான வழியில் உபயோகப்படுத்தி வந்திருக்கிறேன். அகந்தையின் போதையிலிருந்து நான், மனிதனின் சாதாரண நல்லொழுக்க விதிகளுக்கு அப்பாற்பட்டவனாக என்னை எண்ணிக் கொண்டு விட்டேன். இறுதியில் என் கணக்குத் தீர்க்கப்பட வேண்டிய நாளும் வந்தது.

"சமீபத்தில் கல்கத்தாவிற்கு வெளியே ஒரு தெருவில் நான் ஒரு முதியவரைச் சந்தித்தேன். அவர் தங்கம் போன்ற ஒரு பொருளைக் கையில் வைத்துக் கொண்டு மிகுந்த வேதனையுடன் நொண்டியபடி நடந்து கொண்டிருந்தார். நான் பேராசையுடன் அவரிடம் பேசினேன்.

"நான்தான் பெயர் பெற்ற பக்கிரி, அ்ஃப்சல் கான். உன்னிடத்தில் என்ன வைத்திருக்கிறாய்?

"'எனக்கு உள்ள சொத்தெல்லாம் இந்தத் தங்கக் கட்டி ஒன்றுதான். அதனால் ஒரு பக்கிரிக்கு எந்த உபயோகமும் இல்லை. ஐயா, தயவு செய்து என் நொண்டிக் காலை, சரி செய்யும்படி நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்.

"நான் பதில் எதுவும் கூறாமல் அந்தத் தங்கக் கட்டியைத் தொட்டுவிட்டு என் வழியே சென்றேன். அவர் என் பின்னால் நொண்டி நொண்டி வந்தார். விரைவில் அவர், என் தங்கம் போய் விட்டதே!' என்று கூக்குரல் எழுப்பினார்.

"நான் காதில் வாங்காது போகவே அவர் திடீரென்று அவருடைய பலவீனமான உடலுக்குப் பொருத்தமில்லாத உரத்த குரலில் பேசினார்:

"'உனக்கு என்னை அடையாளம் தெரியவில்லையா?'

"நான் பேச்சற்று பிரமித்து நின்றேன். வெகு காலத்திற்கு முன்பு எனக்கு யோக முறையை உபதேசித்த முனிவர்தான் தற்சமயம் என் முன் சாதாரண நொண்டி போல தோற்ற மளிக்கும் முதியவர்

என்பது எனக்குக் கால தாமதமாகவே தெரிந்தது. அவர் நிமிர்ந்து நின்றார். அவர் உடல் திடமாகவும் இளமையாகவும் உடனே மாறிற்று.

"'அப்படியா!' என் குருவின் பார்வை அனலைக் கக்கியது. 'நீ உன் சக்திகளை துன்பப்படும் மனித குலத்திற்கு உதவுவதற்குப் பதிலாக சாதாரணத் திருடனைப் போல் அதை வேட்டையாடி இரையாக உபயோகிப்பதை என் கண்களாலேயே காண்கிறேன். நான் உன் அபூர்வ சக்திகளை திரும்ப எடுத்துக் கொள்கிறேன். ஹஜ்ரத் உன்னிடமிருந்து விடுவிக்கப்பட்டு விட்டான். நீ இனி வங்காளத்தில் பேரச்சம் விளைவிப்பவனாக இருக்க மாட்டாய்!'

"நான் வேதனைக் குரலுடன் ஹஜ்ரத்தை அழைத்தேன்! முதல் தடவையாக என் மனக் கண் முன் அவன் தென்படவில்லை. ஆனால் ஒரு கருந்திரை திடீரென விலகியது; நான் என் வாழ்க்கையின் தெய்வ நிந்தனையால் விளைந்த அவலத்தைத் தெளிவாகக் கண்டேன்.

"'என் குருதேவா, என் நீண்ட கால மாயையை விலக்க வந்தருளியதற்கு நான் தங்களுக்கு நன்றி கூறுகிறேன்.' நான் அவர் காலடியில் விழுந்து விசும்பினேன். நான் என் உலக ஆசைகளை விட்டொழிப்பேனென்று சத்தியம் செய்கிறேன். மலைச் சாரல்களுக்குச் சென்று தனிமையில் கடவுள் மீது தியானம் செய்து என் தீய கடந்த காலத்திற்காக பிராயச்சித்தம் தேட முயல்வேன்.'

"என் குரு என்னை மௌனமாகக் கருணையுடன் நோக்கினார். உன் உண்மையான மனத்தை நான் உணர்கிறேன், என இறுதியாகக் கூறினார். ஆரம்ப வருடங்களில் நீ கண்டிப்புடன் கீழ்ப் படிந்ததாலும், தற்சமயம் நீ செய்த குற்றத்தை அறிந்து வருந்துவதாலும் உனக்கு ஒரு வரமளிக்கிறேன். உனது மற்ற சக்திகள் இப்பொழுது போய் விட்டன. ஆனால் உணவோ, உடையோ தேவையெனில் இப்பொழுதும் ஹஜ்ரத்தை வெற்றிகரமாக அழைத்து அவைகளைக் கொண்டுவரச் செய்யலாம். தனிமையான மலைச்சாரல்களில் முழுமனத்துடன் கடவுளை அறிவதில் உன்னை ஈடுபடுத்திக்கொள்.'

"என் குரு பின்பு மறைந்து விட்டார். நான் கண்ணீருடனும் கடந்த காலத்தை நினைவூட்டும் எண்ணங்களுடனும் விடப்பட்டேன். உலகமே! நான் விடைபெறுகிறேன். அண்ட சராசரத்தின் அன்பனிடம் மன்னிப்பைத் தேடிச் செல்கிறேன்."

---

1 மாணவர்களுக்காக ஏற்பட்ட குடியிருப்பு, 'பந்தா' என்ற சொல்லிலிருந்து – அலைந்து திரிபவன், அறிவைத் தேடுபவன்.

2 ஒரு முஸ்லிம் யோகி; அரேபிய ஃபக்கீர் என்பதிலிருந்து, ஏழை: ஆரம்பத்தில் தானாக ஏழ்மை விரதம் எடுத்துக் கொண்ட முஸ்லிம் துறவிகளைக் குறிப்பதாயிருந்தது.

3 அஃப்சல் கானால் நஷ்டப்பட்ட கம்பெனிகளில் என் தந்தையின் கம்பெனியான வங்காள-நாக்பூர் ரயில்வேயும் ஒன்று என என் தந்தை பின்னால் கூறினார்

4 எனக்கு ஸ்ரீ யுக்தேஸ்வரின் நண்பரின் பெயர் ஞாபகம் இல்லாததினால் வெறுமனே பாபு என்று அவரைக் குறிப்பிடுகிறேன்.

5 என் வெள்ளித் தாயத்து சூட்சுமமாக உண்டாக்கப் பட்டதால் கடைசியில் இவ்வுலகிலிருந்து மறைந்துவிட்டது. (43வது அத்தியாயத்தில் சூட்சும உலகம் விவரிக்கப்பட்டுள்ளது)

அத்தியாயம் 19

# கல்கத்தாவில் உள்ள என் குரு, செராம்பூரில் தோன்றுகிறார்

"எனக்கு நாத்திகத்தனமான சந்தேகங்கள் அடிக்கடி ஏற்படுவதுண்டு. இருப்பினும் சித்திரவதைக்குள்ளாக்கும் ஓர் ஊகம் சில சமயங்களில் என்னை ஓயாது துளைக்கும்: இதுவரை கண்டுபிடிக்கப்படாத ஆன்மாவின் சாத்தியக் கூறுகள் இருக்க முடியாதா? மனிதன் அவைகளை தேடத் தவறிவிட்டால் அவன் தன் மெய்யான குறிக்கோளை இழக்கிறானல்லவா?"

மேற்கூறிய சொற்கள், பந்தி மாணவர் இல்லத்தில் எனது அறைத் தோழனான திஜேன் பாபுவை நான், என் குருவை தரிசிக்க அழைத்தபோது அவன் கூறியவை.

"ஸ்ரீ யுக்தேஸ்வர்ஜி உனக்கு கிரியா யோகத்தை உபதேசிப்பார். அது உள்ளூறும் நிச்சயமான தெய்வீகத் தன்மையினால் இருமைக் குழப்பங்களை நீக்கி அமைதிப் படுத்தும்," என நான் பதிலளித்தேன்.

அன்று மாலை திஜேன் என்னுடன் ஆசிரமத்திற்கு வந்தான். என் குருவின் முன்னிலையில் என் நண்பனுக்கு உண்டான ஆத்மீக அமைதி சீக்கிரமே அவனை அடிக்கடி அங்கு வருபவனாகச் செய்தது.

தினசரி வாழ்க்கையின் அற்பமான ஈடுபாடுகள் நமது ஆழ்ந்த தேவைகளைப் பூர்த்தி செய்வதில்லை; மனிதனுக்கு இயற்கையாகவே ஞானப் பசியும் உண்டு.

ஸ்ரீ யுக்தேஸ்வரின் சொற்களால் திஜேன் நிலையற்ற பிறவியின் ஆழமற்ற அகந்தையை விட்டு, தன்னுள் ஒளிரும் உண்மையான ஆத்மாவைத் தேடி கண்டுபிடிப்பதில் முனைந்து ஈடுபடுத்தப்பட்டான்.

திஜேனும் நானும் செராம்பூர் கல்லூரியில் A.B.பட்டப் படிப்பின்பொழுது வகுப்புகள் முடிந்ததும் ஆசிரமத்திற்கு நாங்கள் சேர்ந்து நடந்து செல்வதை வழக்கமாக்கிக் கொண்டோம். ஸ்ரீ யுக்தேஸ்வர் அவரது இரண்டாவது மாடி பால்கனியில் நின்று கொண்டு எங்களைப் புன்னகையுடன் வரவேற்பதை நாங்கள் அடிக்கடி பார்ப்போம்.

ஒரு நாள் மதியம், ஆசிரமத்தில் வசிக்கும் கனாய் என்ற சிறுவன் ஏமாற்றம் தரக்கூடிய செய்தியுடன் திஜேனையும் என்னையும் வாயிலில் சந்தித்தான்.

"குருநாதர் இங்கு இல்லை. ஓர் அவசரக் குறிப்பினால் அவர் கல்கத்தாவிற்குச் சென்றிருக்கிறார்."

மறுநாள் என் குருவிடமிருந்து ஓர் அஞ்சல் அட்டையை நான் பெற்றேன். நான் புதன்கிழமை காலை கல்கத்தாவிலிருந்து புறப்படுவேன். நீயும் திஜேனும் செராம்பூர் ரயில் நிலையத்தில் ஒன்பது மணி வண்டியில் சந்தியுங்கள், என எழுதியிருந்தார்.

புதன்கிழமை காலை சுமார் எட்டரை மணியளவில் ஸ்ரீ யுக்தேஸ்வரிடமிருந்து என் மனத்தில் ஒரு தொலையுணர்வு (ற்ங்ப்ங்ல்ஹற்ட்ஹ்) செய்தி ஆழ்ந்து பளிச்சிட்டது: "எனக்குத் தாமதமாகி விட்டது. ஒன்பது மணி வண்டியில் சந்திக்க வேண்டாம்."

புறப்படுவதற்கென்று ஏற்கனவே உடை அணிந்து கொண்டுவிட்ட திஜேனிடம் கடைசியாகக் கிடைத்த தகவல்களைச் சொன்னேன்.

"நீயும் உன் உள்ளுணர்வும்! என் தோழனின் குரலில் ஏளனம் தொனித்தது. நான் குருதேவர் எழுத்து மூலம் தெரிவித்தச் செய்தியையே நம்ப விரும்புகிறேன்."

நான் என் தோள்களைக் குலுக்கிவிட்டு மௌனமான தீர்மானத்துடன் உட்கார்ந்துவிட்டேன். ஆத்திரத்துடன் முணு முணுத்தபடி திஜேன் கதவை சத்தமுடன் சாத்திக் கொண்டு வெளியே சென்றான்.

அந்த அறை சற்று இருட்டாகி இருந்ததினால் தெருவை நோக்கியிருந்த ஜன்னலருகில் நகர்ந்தேன். மந்தமாயிருந்த சூரிய வெளிச்சம் திடீரென்று ஒரு மிகுந்த பிரகாசத்துடன் ஒளிர்ந்ததில் இரும்புக் கிராதியிட்ட ஜன்னல் முழுமையாக மறைந்துவிட்டது. இந்த ஜொலிக்கும் பின்னணியில் ஸ்ரீ யுக்தேஸ்வரின் வடிவம் துல்லியமாக உருப்பெற்றுத் தோன்றியது!

அதிர்ச்சியடையும் அளவிற்குக் குழப்பமடைந்த நான் என் நாற்காலியிலிருந்து எழுந்து அவரை மண்டியிட்டு வணங்கினேன். என் வழக்கப்படியே மரியாதைக்கு அடையாளமாக அவர் பாதங்களை வணங்கும் பொழுது அவரது காலணிகளைத் தொட்டேன். அவை எனக்கு நன்கு பழக்கப்பட்ட கயிற்றாலான அடிப்பகுதியுடனுள்ள காவிசாயம் ஏற்றப்பட்ட கித்தான் காலணி ஜோடிதான். அவருடைய காவி உடை என் மேல் உராய்ந்தது. அவருடைய உடையின் நெசவு நயத்தை மட்டுமின்றி

அவரது காலணிகளின் உறுதியான மேல் பாகத்தையும் மற்றும் அவைகளுக்குள் அவரது கால் விரல்களின் அழுத்தத்தையுங்கூட என்னால் தெளிவாக உணர முடிந்தது. ஒரு வார்த்தையும் கூற இயலாது ஆச்சரியத்தில் ஆழ்ந்த நான், எழுந்து நின்று கேள்விக் குறியுடன் அவரை நோக்கினேன்.

"என் தொலை உணர்வு செய்தியை நீ பெற்றது பற்றி மகிழ்ச்சி அடைந்தேன்." குருவினுடைய குரல் சாந்தமாக முற்றிலும் எப்பொழுதும் போலவே இருந்தது. "கல்கத்தாவில் என் வேலையை இப்பொழுது முடித்து விட்டேன். செராம்பூருக்குப் பத்து மணி வண்டியில் வந்து சேருவேன்."

நான் இன்னமும் ஊமையாக விழித்துக் கொண்டு நின்ற பொழுது ஸ்ரீ யுக்தேஸ்வர் தொடர்ந்தார். "இது ஒன்றும் மாய உருவமில்லை, இரத்தமும் சதையும் கூடிய என் உருவமே. பூமியில் அபூர்வமாகவே தெரிந்திருக்கும் இந்த அனுபவத்தை, உனக்குக் கொடுக்கும்படி எனக்குத் தெய்வீகக் கட்டளையிடப்பட்டது. என்னை ரயில் நிலையத்தில் சந்தி. நான் இப்போது உடுத்தியிருக்கும் உடையில் உங்களை நோக்கி வருவதை நீயும் திஜேனும் காண்பீர்கள். எனக்கு முன்னால் ஒரு சக பிரயாணியான சிறுவன் வெள்ளிக் கூஜாவைக் கொண்டு வருவான்."

என் குரு, இரு கைகளையும் என் சிரத்தின் மீது வைத்து மெல்லிய குரலில் ஆசிர்வதித்தருளினார். "அவர் தபே ஆஸி,"[1] என்று விடைபெற்றுக் கொள்ளும்

சொற்களுடன் முடித்த பொழுது நான், குமுறல் போன்ற விசித்திரமானதொரு ஒலியைக்[2] கேட்டேன். ஊடுருவும் ஒளியினுள் அவருடைய உடல் மெதுவாகக் கரையலாயிற்று. முதலில் அவருடைய பாதங்களும் கால்களும் மறைந்தன; பிறகு அவருடைய நடு உடலும் தலையும் காகிதச் சுருளை சுருட்டியது போல் மறைந்தன. கடைசிவரையில் என் கேசத்தின் மீது அவருடைய விரல்கள் இலேசாக இருந்ததை நான் உணர முடிந்தது. அந்தப் பேரொளி மங்கியது; கிராதியிட்ட ஜன்னலையும் ஒரு மங்கிய சூரிய ஒளிக் கற்றையையும் தவிர என் முன் வேறு எதுவுமில்லை.

நான் மனப் பிரமைக்கு இலக்காகி விட்டேனோ என்ற கேள்வியுடன் அரை மயக்க நிலையிலிருந்தேன். உற்சாகமிழந்த நிலையில் திஜேன் சீக்கிரமே அறைக்குள் நுழைந்தான்.

"குருதேவர் ஒன்பது மணி வண்டியில் இல்லை. ஒன்பதரை மணி வண்டியிலும் இல்லை." என் நண்பன் சிறிது மன்னிப்புக் கோரும் தோரணையில் அறிவித்தான்.

"வா, அவர் பத்து மணிக்கு வருவாரென்பதை நான் அறிவேன்." ா ன், திஜேனுடைய ஆட்சேபங்களை ஏற்காமல் அவனது கையைப் பிடித்து பலவந்தமாக என்னுடன் இழுத்துச் சென்றேன். ஏறக்குறைய பத்து நிமிடங்களில் நாங்கள் ரயில் நிலையத்தை அடைந்தோம். புகைவண்டி ஏற்கனவே புகைந்தபடி நிற்கத் தொடங்கி இருந்தது.

"இந்த வண்டி முழுவதுமே குருவினுடைய ஒளிச்

சூழலினால் நிறைந்துள்ளதே! அவர் அதோ இருக்கிறார்!" நான் ஆனந்தமாகக் கூவினேன்.

"நீ அப்படிக் கனவு காண்கிறாயா?" திஜேன் பரிகாசமாகச் சிரித்தான்.

"நாம் இங்கே காத்திருப்போம்." என் நண்பனுக்கு எந்த முறையில் எங்கள் குரு எங்களை அணுகுவாரென்ற விவரங்களைச் சொன்னேன். நான் என் விவரிப்பை முடித்தபின் ஸ்ரீ யுக்தேஸ்வர், நான் அவரை சற்று முன் பார்த்த அதே உடைகளில் தென்பட்டார். ஒரு சிறு பையன் வெள்ளிக் கூஜாவைத் தூக்கிவர அவர் பின் தொடர்ந்து மெதுவாக நடந்து வந்தார்.

நம்ப முடியாத விசித்திரமான என் அனுபவத்தை நினைத்த பொழுது ஒரு கணத்திற்கு பயத்தின் அலை என்னுள் ஊடுருவியது. லௌகீகத்தில் மூழ்கியுள்ள இருபதாவது நூற்றாண்டின் இவ்வுலகம் என்னிலிருந்து நழுவுவது போல் உணர்ந்தேன். இயேசு, பேதுரு முன் கடலின் மேல் தோன்றிய புராதன நாட்களுக்குத் திரும்பி விட்டேனா, என்ன?

நவீன யோகி - கிறிஸ்துவான ஸ்ரீ யுக்தேஸ்வர், நானும் திஜேனும் பேச்சற்று நின்ற இடத்தை நெருங்கிய போது புன்சிரிப்புடன் என் நண்பனை நோக்கிக் குறிப்பிட்டார்.

"உனக்கும் நான் ஒரு செய்தி அனுப்பினேன். ஆனால் உன்னால் அதை கிரகிக்க முடியவில்லை."

திஜேன் மௌனமாய் ஆனால் சந்தேகத்துடன் என்னை முறைத்துப் பார்த்தான். நாங்கள் எங்கள்

குருவிற்குத் துணையாக அவருடைய ஆசிரமத்தை அடைந்த பிறகு நானும் என் நண்பனும் செராம்பூர் கல்லூரியை நோக்கிச் சென்றோம். திஜேன் அவனது உடலின் ஒவ்வொரு மயிர்க்காலிலும் கோபம் பொங்க, வீதியில் நின்றான்.

"அப்படியானால் குருதேவர் எனக்குச் செய்தி அனுப்பி இருக்கிறார்! ஆனாலும் நீ அதை மறைத்து விட்டாய்! எனக்கு இதற்கான விளக்கம் தெரிந்தே ஆக வேண்டும்!"

"குருவினுடைய கட்டளைகளைப் பதித்துக் கொள்ள முடியாத அளவிற்கு உன் மனக்கண்ணாடி சஞ்சலத்துடன் ஊசலாடினால் நான் என்ன செய்ய முடியும்?" நான் எதிருரைத்தேன்.

திஜேன் முகத்திலிருந்த சினம் விலகியது. "நீ சொல்வது எனக்குப் புரிகிறது," என்றான் துயரத்துடன். ஆனால் கூஜாவுடன் வந்த சிறுவனைப் பற்றி நீ எப்படித் தெரிந்து கொண்டாய் என்பதை தயவு செய்து விளக்கு."

அன்று காலை எங்கள் விடுதியில் குருதேவருடைய அதிசயமான தோற்றத்தின் கதையைச் சொல்லி முடித்த தருணத்தில் நாங்கள் செராம்பூர் கல்லூரியை அடைந்து விட்டிருந்தோம்.

"நான் இப்பொழுது நம் குருவின் சக்திகளைப் பற்றிக் கேட்ட விவரம், உலகின் எந்தப் பல்கலைக்கழகமும் இளங் குழந்தைகளுக்கான ஒரு பாலர்பள்ளியே என்று எண்ண வைக்கிறது,"[3] என்றான் திஜேன்.

1 வங்காள மொழியில் விடைபெறும்சொல். இதன் பொருளின்படி, நம்பிக்கை ஊட்டும் ஒரு முரணான சொல்: அப்பொழுது நான் வருகிறேன்.

2 உடல் அணுக்கள் தனித்தனியே பிரியும் பொழுது ஏற்படும்

குறிப்பிடத்தக்கதொரு ஒலி.

3 நான் இப்போது எழுதியுள்ளவை எல்லாம் வெறும் துரும்புதான் என்று என் நோக்கில் தோன்றுமளவிற்கு மிகப் பெரிய விஷயங்கள் எனக்கு வெளிப்படுத்தப்பட்டன.

புலமையின் இளவரசன் என்று சொல்லப்படும் புனித தாமஸ் அக்வைனாஸ், தன் காரியதரிசி தன்னை சம்மா தியாலாஜியா (Summa Theologiae) என்ற அவர் எழுதிவரும் புத்தகத்தை முடிக்க வேண்டுமென ஆர்வமுடன் கேட்டுக்கொண்ட பொழுது மேற்கண்டவாறு கூறினார். 1273 ல், ஒரு நாள் நேபில்ஸ் நகர சர்ச்சில் பிரார்த்தனைக் கூட்டத்தின் பொழுது புனித தாமஸுக்கு ஓர் ஆழ்ந்த ஆத்மார்த்தமான உள்ளுணர்வு உண்டாயிற்று. தெய்வீக ஞானம் முழுமையாக அவரை ஆட்கொண்டு விட்டது. அது முதல் அறிவு ஜீவிதத்தில் அவர் ஈடுபாடு கொள்ளவில்லை.

ஒப்பிட்டுப் பார்க்கவும்: சாக்ரடீஸின் சொற்கள் (பிளேட்டோவின் ஃபாட்ரஸிலிருந்து) என்னைப் பற்றிய வரையில் நான், அறிந்ததெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது என்பதுதான்.

அத்தியாயம் 20

# நாங்கள் காஷ்மீருக்குச் செல்லவில்லை

"அப்பா, நான் குருதேவரையும் என் நான்கு நண்பர்களையும் என்னுடன் இமயமலை அடிவாரத்திற்கு என் கோடை விடுமுறையில் அழைத்துப் போகலாமென்று இருக்கிறேன். எனக்குக் காஷ்மீரத்திற்கு ஆறு ரயில்வே அனுமதிச்சீட்டு (பாஸ்) களும் எங்களது வழிச் செலவிற்கு போதுமான பணமும் கொடுக்கிறீர்களா?"

நான் எதிர்பார்த்தது போல் அவர் மனமாரச் சிரித்தார். "என்னிடம் இதைப் போல நீ சரடு விடுவது மூன்றாவது தடவை. நீ சென்ற கோடையிலும் அதற்கு முந்திய வருடமும் இதே வேண்டுகோளை விடுக்க வில்லையா? கடைசி வினாடியில் ஸ்ரீ யுக்தேஸ்வர் போவதற்கு மறுத்து விடுகிறார்."

"உண்மைதான் அப்பா, காஷ்மீரத்தைப் பற்றி என் குரு ஏன் நிச்சயமாக எதுவும் சொல்வதில்லை என எனக்கும் புரியவில்லை.[1] ஆனால் இந்தத் தடவை உங்களிடமிருந்து அனுமதிச்சீட்டுகளை ஏற்கனவே வாங்கியாயிற்று என்று நான் சொன்னால் எப்படியாவது அவர் பிரயாணத்திற்கு ஒத்துக் கொள்வாரென்று நினைக்கிறேன்."

என் தகப்பனாருக்கு அப்பொழுதும் நம்பிக்கை

வரவில்லை. எனினும் அடுத்த நாள் என்னைக் கொஞ்சம் வேடிக்கையாகக் கேலி செய்துவிட்டு ஆறு அனுமதிச் சீட்டுகளையும், ஒரு கட்டு பத்து ரூபாய் நோட்டுகளையும் என்னிடம் கொடுத்தார்.

"உனது கற்பனைப் பயணத்திற்கு இவ்விதமான நடைமுறை உதவிகள் அவசியமென எனக்குத் தோன்றவில்லை, இருந்தாலும் அவைகள் இங்கே இருக்கின்றன."

அன்று மாலை நான் ஸ்ரீ யுக்தேஸ்வருக்கு எனக்குக் கிடைத்த புதையலைக் காட்டினேன். அவர் என் உற்சாகத்தைக் கண்டு புன்னகைத்த போதிலும் எதையும் நிச்சயமாகச் சொல்லவில்லை. எனக்கும் போகவேண்டும் என்று விருப்பம்தான்; பார்க்கலாம், என்றார். அவருடைய ஆசிரமத்தில் வசிக்கும் சிறு சீடனாகிய கனாயை நான் எங்களுடன் வரும்படி அழைத்த பொழுதும் அவர் எதுவும் சொல்லவில்லை. இன்னும் மூன்று நண்பர்களானராஜேந்திரநாத் மித்ரா, ஜோதின் ஆடி, மற்றும் இன்னொரு சிறுவன்இவர்களை அழைத்திருந்தேன். நாங்கள் புறப்படும் நாள் அடுத்த திங்கட்கிழமை என்று நிச்சயிக்கப்பட்டது.

சனியும் ஞாயிறும் நான் கல்கத்தாவில் உள்ள எங்கள் குடும்ப வீட்டில் என் ஒன்றுவிட்ட சகோதரன் ஒருவனுடைய விவாகச் சடங்குகளையொட்டித் தங்கியிருந்தேன். என் பயணச் சாமான்களுடன் நான் திங்கட்கிழமை அதிகாலையில் செராம்பூர் வந்தடைந்தேன். ஆசிரம வாயிலில் ராஜேந்திரா

என்னைச் சந்தித்தான்.

"குருதேவர் வெளியே நடக்கச் சென்றிருக்கிறார். அவர் வருவதற்கு மறுத்துவிட்டார்."

எனக்கு வருத்தமாக இருந்தது. அதே சமயத்தில் ஒரு பிடிவாதமும் உண்டாயிற்று. "எனது காஷ்மீர் கற்பனைத் திட்டங்களை மூன்றாவது தடவையாக என் தந்தை கேலி செய்ய வாய்ப்பளிக்க மாட்டேன். மற்ற அனைவரும் செல்வோம்."

ராஜேந்திரா ஒப்புக் கொண்டான். ஒரு வேலையாளைத் தேடி நான் ஆசிரமத்தை விட்டு வெளியில் சென்றேன். குருதேவர் இல்லாமல் கனாய் கிளம்பமாட்டானென்று எனக்குத் தெரியும். ஆனால் சாமான்களைப் பார்த்துக் கொள்வதற்கு யாராவது வேண்டுமே. எனவே நான் பிஹாரியைப் பற்றி யோசித்தேன். முன்பு எங்கள் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த அவன் தற்சமயம் செராம்பூரில் பள்ளி ஆசிரியர் ஒருவர் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்தான். நான் வேகமாகப் போய்க் கொண்டிருந்த பொழுது செராம்பூர் நீதிமன்றத்தின் அருகில் கிறிஸ்துவச் சர்ச்சின் முன்னால் என் குருவைச் சந்தித்தேன்.

"எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?" ஸ்ரீ யுக்தேஸ்வரின் முகத்தில் சிரிப்பே இல்லை. "ஐயா, நாம் திட்டமிட்டிருந்த பயணத்திற்கு நீங்களும் கனாயும் வரப் போவதில்லை என அறிந்தேன். நான் பிஹாரியை தேடிப் போகிறேன். சென்ற வருடம் அவன் காஷ்மீரத்தைப்

பார்க்க வேண்டும் என்ற ஆவலில் சம்பளமே இல்லாமல்கூட வேலை செய்வதாக ஒப்புக்கொண்டது உங்களுக்கு நினைவு இருக்கலாம்."

"எனக்கு ஞாபகம் இருக்கிறது. ஆனாலும் பிஹாரி வருவதற்கு விரும்புவானென்று எனக்குத் தோன்றவில்லை."

நான் எரிச்சலுற்றேன், "அவன் இந்த வாய்ப்பிற்காகவே ஆவலுடன் காத்திருக்கிறான்!"

என் குரு மௌனமாகத் தன் நடையைத் தொடர்ந்தார். நான் சீக்கிரமே அந்த ஆசிரியரின் வீட்டை அடைந்தேன். முற்றத்தில் என்னை வரவேற்ற பிஹாரியின் முகத்தில் இருந்த சினேகபாவம் நான் காஷ்மீரத்தைப் பற்றி பேச்சு எடுத்தவுடனேயே மறைந்து விட்டது. என்னிடம் ஏதோ ஒரு சாக்குடன் முணுமுணுத்துவிட்டு மன்னிப்புக்கோரி அவன் நானிருந்த இடத்தை விட்டு தன் எஜமானரின் வீட்டிற்குள் நுழைந்தான். நான் அரை மணி நேரம் காத்திருந்தேன். அவனுடைய தாமதம் பயணத்திற்குச் செய்ய வேண்டிய ஏற்பாடுகளினால் இருக்கலாம் என்று சிறிது பயந்தபடி எனக்கு நானே சமாதானம் செய்து கொண்டேன். முடிவில் நான் முன் கதவைத் தட்டினேன்.

"பிஹாரி முப்பது நிமிடங்களுக்கு முன்பாக பின்புறப் படிகள் வழியாக வெளியே சென்றுவிட்டான்," என்று ஒருவன் எனக்கு அறிவித்தான். அவனுடைய உதடுகளில் ஒரு சிறு புன்னகை தவழ்ந்தது.

என் அழைப்பு, கொஞ்சம் பலவந்தமாகத்

தோன்றியதோ அல்லது குருதேவரின், கண்ணுக்குப் புலப்படாத சக்தி வேலை செய்கிறதோ என்று யோசனை செய்தபடி நான் வருத்தத்துடன் கிளம்பினேன். கிறிஸ்துவச் சர்ச்சைத் தாண்டியதும் மறுபடியும் என்னை நோக்கி மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்த என் குருவைக் கண்டேன். என்னுடைய செய்தியைக் கேட்கத் தாமதிக்காமல் அவர் இரைந்து சொன்னார்.

"பிஹாரி வரமாட்டான்! அப்படித்தானே! இப்பொழுது உனது திட்டங்கள் என்ன?"

நான், தன் அதிகாரத் தகப்பனாருக்குக் கண்டிப்பாக அடிபணியப் போவது இல்லை என்ற பிடிவாதக்காரக் குழந்தையைப் போன்ற நிலையில் இருந்தேன். "ஐயா, நான் தனது வேலைக்காரனாகிய லால்தாரியை கொஞ்சம் என்னுடன் அனுப்பி வைக்கும்படி என் சித்தப்பாவைக் கேட்கப் போகிறேன்."

"வேண்டுமானால் உன் சித்தப்பாவைப் போய்ப் பார்," என்று தனக்குள் சிரித்தபடி ஸ்ரீ யுக்தேஸ்வர் சொன்னார். "ஆனால் எனக்கு என்னவோ நீ அங்கு செல்வது உனக்கு மகிழ்ச்சி அளிக்கும் எனத் தோன்றவில்லை."

எனக்குப் பயத்துடன் கூடவே எதிர்ப்பும் தோன்றியது. நான் குருவை விட்டு செராம்பூர் நீதிமன்றத்தை அடைந்தேன். என் சித்தப்பா சாரதா கோஷ், ஓர் அரசு தரப்பு வக்கீல், என்னைப் பிரியமுடன் வரவேற்றார்.

"நான் சில நண்பர்களுடன் இன்று காஷ்மீருக்குச் செல்கிறேன். பல வருடங்களாக நான் இந்த இமாலயப் பயணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்," என்றேன்

அவரிடம்.

"மெத்த மகிழ்ச்சி, முகுந்தா. நான் உன் பயணம் சௌகரியமாயிருப்பதற்கு எந்த வகையிலாவது உதவ முடியுமா?"

இந்த அன்பான சொற்கள் என்னை மேலும் தைரியத்துடன் ஊக்குவித்தன. "அன்புள்ள சித்தப்பா, எனக்குக் கொஞ்சம் உங்கள் வேலைக்காரனாகிய லால்தாரியை கொடுத்து உதவ முடியுமா?"

எனது இந்த எளிய வேண்டுகோள் அங்கு ஒரு பூகம்பத்தின் விளைவை ஏற்படுத்தியது. சித்தப்பா தன் நாற்காலியே கவிழ்ந்து போகும்படி வேகமாக எகிறிக் குதித்தார். அவருடைய மேஜை மேலிருந்த காகிதங்கள் நாலா பக்கமும் பறந்தன. நீண்ட கொட்டாங்கச்சிப் பிடியாலான ஹுக்கா குழாய், பெரிய சத்தத்துடன் தரையில் விழுந்தது.

"சுயநலக்கார இளைஞனே!" அவர் கோபத்தில் நடுங்கியபடி கூச்சலிட்டார். "என்ன விபரீதமான எண்ணம்! நீ சந்தோஷமாக ஊர் சுற்றித் திரிவதற்கு என் வேலைக்காரனை அழைத்துப் போனால், யார் என்னைக் கவனிப்பார்கள்?"

நான் என் ஆச்சரியத்தை மறைத்துக் கொண்டேன். நினைத்துப் பார்த்தபோது, நடந்தது எதையுமே புரிந்து கொள்ள முடியாத அத்தினத்தில், என் அன்பான சித்தப்பாவின் போக்கில் ஏற்பட்ட திடீர் மாற்றம் இன்னொரு புதிராகவே தோன்றியது. நீதி மன்ற அலுவலகத்திலிருந்து கௌரவமாகத் திரும்பாமல் அவசர

அவசரமாகவே பின்வாங்கினேன்.

நான் ஆசிரமத்திற்குத் திரும்பினேன். அங்கே என் நண்பர்களெல்லாம் ஆவலுடன் காத்திருந்தார்கள். குருவுடைய நடவடிக்கைக்குப் பின்னணியில் ஏதோவொரு முக்கியமான, மிக ரகசியமான காரணம் இருக்குமென ஒரு திடமான நம்பிக்கை என்னுள் தோன்றியது. என் குருவின் விருப்பத்தைத் தடை செய்ய முயன்றதைக் குறித்து எனக்கு மன வருத்தம் உண்டாயிற்று.

"முகுந்தா, இன்னும் சிறிது நேரம் என்னுடன் இருக்க மாட்டாயா? ஸ்ரீ யுக்தேஸ்வர் வினவினார். ராஜேந்திராவும் மற்றவர்களும் இப்போது முன்னால் சென்று உனக்காகக் கல்கத்தாவில் காத்திருக்கட்டும். கல்கத்தாவிலிருந்து காஷ்மீருக்குப் புறப்படும் கடைசி மாலை ரயிலைப் பிடிக்க நிறைய நேரம் இருக்கிறது."

"ஐயா, உங்களை விட்டுவிட்டுப் போக எனக்கு மனமில்லை," நான் வருத்தத்துடன் கூறினேன்.

என் நண்பர்கள் என் வார்த்தையைக் கொஞ்சங்கூட கவனிக்கவில்லை. அவர்கள் ஒரு குதிரை வண்டியைக் கூப்பிட்டு எல்லாப் பயணச் சாமான்களுடன் புறப்பட்டார்கள். கனாயும் நானும் குருவின் திருவடிகளில் மௌனமாக உட்கார்ந்திருந்தோம். அரை மணி நேர மௌனத்திற்குப் பிறகு குருதேவர் எழுந்து இரண்டாவது மாடி முகப்பிலிருந்த உணவுக் கூடத்தை நோக்கிச் சென்றார்.

"கனாய், தயவு செய்து முகுந்தனுக்கு உணவளி.

அவனது ரயில் வண்டி சிறிது நேரத்தில் கிளம்புகிறது," என்றார்.

என் கம்பளி ஆசனத்திலிருந்து எழுந்ததும் எனக்குத் திடீரென்று வயிற்றுப் புரட்டலும் வாந்தி வருவது போன்ற உணர்வும் ஏற்பட்டதால் நான் தள்ளாடினேன். எனக்கிருந்த மிகத் தீவிரமான வயிற்று வலியில் ஏதோ ஒரு கொடுமையான நரகத்தினுள்ளே திடீரென்று தள்ளப்பட்டது போன்ற உணர்வு உண்டாயிற்று. என் குருவை நோக்கி பார்வை தெரியாமல் தடவியவாறு சென்று, பயங்கர ஆசியக் காலராவின் எல்லா அடையாளங்களையும் வெளிப்படுத்தியவாறு அவர் முன்னால் வீழ்ந்தேன். ஸ்ரீ யுக்தேஸ்வரும் கனாயும் என்னை உள்ளே தூக்கிச் சென்றார்கள்.

நான் வலியில் துடிதுடித்துக் கதறினேன். குருதேவா, நான் என் உயிரை உங்களிடம் ஒப்படைக்கிறேன். ஏனெனில் அது உண்மையில் வெகு வேகமாக என் உடம்பிலிருந்து விடுபட்டுக் கொண்டிருப்பதாக நான் நம்பினேன்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் தன் மடியில் என் தலையை கிடத்திக் கொண்டு தெய்வீகக் கருணையுடன் என் நெற்றியை வருடினார்.

"இச்சமயத்தில் நீ உன், நண்பர்களுடன் ரயில் நிலையத்தில் இருந்திருந்தால் என்ன ஆகியிருக்குமென்று எண்ணிப்பார், என்றார். நான் உன்னை இந்த அதிசயமான வழியில் காப்பாற்ற வேண்டியிருந்ததற்குக் காரணம், இந்தக் குறிப்பிட்ட

சமயத்தில் புறப் படும் பயணத்தைப் பற்றிய என் கருத்தை நீ சந்தேகித்ததுதான்."

நான் புரிந்து கொண்டேன். பெரிய மகான்கள் தங்கள் சக்தியை வெளிப்படையாக உபயோகிப்பது சரியல்ல என்று பெரும்பாலும் எண்ணுவதால் சாதாரணமாக அன்றைய நிகழ்ச்சிகளைக் கவனிப்பவர்க்கு அவை முழுவதும் இயற்கையாகத்தான் தோன்றியிருக்கும். என் குருவின் தலையீடு இதில் கண்டுபிடிக்க முடியாத அளவிற்கு சூட்சுமமானதே. அவர், தெளிவாகப் புலப்படாதவாறு அவரது இச்சா சக்தியை பிஹாரி, என் சித்தப்பா, ராஜேந்திரா இன்னும் மற்றவர்கள் மூலமாக செயல்படுத்தினார். அனேகமாக என்னைத் தவிர எல்லாருக்கும் இந்நிகழ்ச்சிகள் மிக நியாயமானவையாகவும் சாதாரணமானவையாகவுமே தோன்றியிருக்கும்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் என்றும் அவருடைய சமூகக் கடமைகளைப் புறக்கணிப்பது இல்லையாதலால், கனாயைக் கூப்பிட்டு ஒரு வைத்தியரை அழைக்குமாறு பணித்தார். என் சித்தப்பாவிற்கும் சொல்லி அனுப்பினார்.

"குருதேவா," நான் மறுத்தேன், நீங்கள் மட்டுமே என்னைக் குணப்படுத்த முடியும். என் வியாதி எந்த மருத்துவரும் குணப்படுத்தக் கூடிய நிலையைத் தாண்டி விட்டது."

"குழந்தாய், நீ தெய்வீகக் கருணையினால் காப்பாற்றப் படுகிறாய். மருத்துவரைப் பற்றிக் கவலைப் படாதே. அவர் உன்னை இந்த நிலையில் காணமாட்டார்.

நீ ஏற்கனவே குணப்படுத்தப்பட்டு விட்டாய்."

என் குரு இவ்வார்த்தைகளைக் கூறியதும் சகிக்க முடியாத துன்பம் என்னைவிட்டு நீங்கியது. நான் தளர்ச்சியுடன் எழுந்து உட்கார்ந்தேன். விரைவில் ஒரு மருத்துவர் வந்து என்னைக் கவனத்துடன் பரிசோதித்தார்.

"நீ ஒரு கண்டத்தைத் தாண்டி விட்டதாகத் தோன்றுகிறது. ஆய்வுக்கூடப் பரிசோதனை செய்வதற்கு நான் சில மாதிரிகளை எடுத்துச் செல்கிறேன்," அவர் கூறினார்.

மறு நாள் காலை மருத்துவர் வெகுவேகமாக வந்தார். நான் மிக உற்சாகத்துடன் எழுந்து அமர்ந்திருந்தேன்.

"நன்று, நன்று, நீ சாவின் பிடியில் இருந்தது தெரியாமல் பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் இருக்கிறாய்." அவர் என் கையை மிருதுவாகத் தட்டினார். "நான் எடுத்துச் சென்ற மாதிரிகளிலிருந்து உனது நோய் ஆசியக் காலரா என அறிந்த பின்னர் உன்னை உயிருடன் பார்ப்பேன் என எதிர்ப்பார்க்க வில்லை. குணப்படுத்தக்கூடிய தெய்வீக சக்தியைப் பெற்ற குருவை அடைந்தது உன் பாக்கியமே, இளைஞனே! இதை நான் முழுதும் நம்புகிறேன்!."

நானும் முழு மனத்துடன் ஒப்புக் கொண்டேன். மருத்துவர் கிளம்பிக் கொண்டிருந்த பொழுது ராஜேந்திராவும் ஆடியும் கதவருகில் தென்பட்டனர். அவர்களது முகங்களில் தென்பட்ட வெறுப்பு,

மருத்துவரையும் பின் என் வாடிய முகத்தையும் கண்டபின் அனுதாபமாக மாறியது.

"நீ ஒப்புக் கொண்டபடி கல்கத்தா ரயிலுக்கு வரவில்லை என்றதும் எங்களுக்கு மிகுந்த கோபம் வந்தது. உனக்கு உடம்பு சரி இல்லையா?"

"ஆம்." என் நண்பர்கள் தங்கள் பயணச் சாமான்களை அவை முன் தினம் வைக்கப்பட்டிருந்த அதே மூலையில் வைத்தபொழுது என்னால் சிரிக்காமலிருக்க முடியவில்லை. நான் பொழிப்புரையாகக் கூறினேன்:

"கப்பல் ஒன்று ஸ்பெயினுக்குப் புறப்பட்டது; அது போய்ச் சேருமுன்னரே திரும்பிவிட்டது!"

குருதேவர் அறைக்குள் நுழைந்தார். உடல் நிலை தேறிக் கொண்டிருக்கும் நோயாளி என்ற உரிமையில் அவர் கையை அன்புடன் பிடித்துக் கொண்டேன்.

நான் கூறினேன், "குருஜி, என் பன்னிரண்டாவது வயதிலிருந்து இமயத்தை அடைய நான் பலமுறை வீண் முயற்சிகள் செய்து விட்டேன். உங்களுடைய ஆசி இன்றி அன்னை பார்வதி[2] என்னை அழைக்க மாட்டாளென்பதில் எனக்கு இறுதியில் நம்பிக்கை வந்துவிட்டது!"

---

1 குருதேவர் எந்தவித விளக்கத்தையும் கூறவில்லையெனினும் அவர் அந்த இரண்டு கோடைகளிலும் காஷ்மீர் செல்ல தயங்கிய காரணம், அங்கு சென்று நோய்வாய்ப்பட வேண்டிய தருணம் இன்னும் வரவில்லையென்பதை முன் கூட்டியே அறிந்திருந்ததினால் இருக்கலாம். (பார்க்க பக்கம் 307.)

2 பருவதத்தின் என்பது பொருள். புராணத்தின்படி பார்வதி, ராஜா இமவானுடைய (பனிமலையின் இருப்பிடம்) புத்திரி. அவனுடைய இருப்பிடம் திபெத்தின் எல்லைக் கருகில் ஒரு சிகரத்தில் இருப்பதாக ஐதீகம். அந்த அடைய முடியாத சிகரத்தின் அடிவாரத்தைத் தாண்டிச் செல்லும் யாத்ரீகர்கள் எங்கோ தொலை தூரத்தில் பனிச்சிகரங்களால்

ஏற்பட்ட குவிந்த விதானங்களையும் சிகரங்களையும் கொண்ட ஒரு பெரிய அரண்மனையைப் போன்ற மாபெரும் பனித் தோற்றத்தை வியப்புடன் காண்கிறார்கள்.

பார்வதி, காளி, துர்கா, உமா போன்ற மற்ற அனேக தேவிகளும் அந்த ஜகன்மாதாவின் அம்சமே. உலகத்தின் அன்னை பராசக்திக்கு அந்தந்த சமயங்களில் செய்யும் காரியங்களுக்கேற்ப நாமங்கள் மாறுகின்றன. கடவுள் அல்லது சிவன், அவரது பரம் அல்லது எல்லாவற்றையும் கடந்த நிலையில் சிருஷ்டியில் செயலற்று இருக்கிறார்; அவருடைய சக்தி (ஆற்றல் அல்லது ஊக்குவிக்கும் சக்தி) அவருடைய தேவிகளுக்கு வழங்கப்படுகிறது. உற்பத்தி செய்யும் பெண்மையின் சக்திகளே பேரண்டத்தின் எண்ணிலாச் சாத்தியக் கூறுகளுக்கு ஏதுவாகின்றன.

புராணக்கதைகள் இமயம் சிவனுடைய இருப்பிடமென்று கூறுகின்றன. இமயத்திலிருந்து உருவாகும் நதிக்கு பிரதான தேவதையாக வேண்டி கங்காதேவி ஆகாயத்திலிருந்து இறங்கி வந்தாள். ஆதலால் கவித்துவத்துடன் கூறப்படும் பொழுது கங்கா, சுவர்க்கத்திலிருந்து யோகிகளின் அரசனும் முத்தொழில்களில் அழித்தல்/புதுப்பித்தலுக்கு உரியவனுமான சிவபெருமானின் ஜடை வழியாக பூமிக்குப் பாய்வதாகக் கூறப்படுகிறது. இந்திய ஷேக்ஸ்பியர் காளிதாஸன் இமயத்தை சிவனின் பெருநகை என வர்ணிக்கிறான். எ.ஃப்.டபிள்யூ. தாமஸ் என்பவர் எழுதியிருக்கும் இந்தியாவின் மரபுரிமை (The legacy of India) (ஆக்ஸ்ஃபோர்ட்) என்ற புத்தகத்தில் எழுதுகிறார்: வாசகர் அந்தப் பெரிய வெள்ளைப் பற்களின் வரிசையை வேண்டுமானால் கற்பனை செய்யலாம். ஆனால் சிவனை மிக உயர்ந்த மலை உலக சிம்மாசனத்திலமர்ந்து பிறைச் சந்திரனைச் சூடாமணியாக அணிந்து, சுவர்க்கத்திலிருந்து விழும் கங்கையை தனது ஜடை முடியின் வழியே பாயவிடும் ஒரு மாபெரும் முனிவராக உணர்ந்தாலன்றி அந்த முழுக் கருத்தை உணரமுடியாது.

இந்து கலையில் சிவபெருமான் வழவழப்பான கன்னங்கரிய மான் தோலை மட்டுமே, இருளையும் இரவின் மர்மத்தையும் உருவகப்படுத்தும் விதமாக, அணிவதாகச் சித்தரிக்கப் படுகிறார். அவன் திகம்பரன்ஆகாயத்தையே உடையாக உடையவன். சில சைவ வழிபாட்டு வகுப்பினர், திகம்பரனான சிவனை, எதுவுமே இல்லாதவன்எல்லாமே உடையவன், என்று போற்றும் முறையில் ஆடைகளை அணிவதில்லை.

பதினான்காவது நூற்றாண்டின் காஷ்மீர லல்லா யோகீஸ்வரி (யோகத்தின் உன்னத எஜமானி) ஒரு திகம்பர சிவபக்தை. அப்பொழுது வசித்த ஒருவர் இதை அவதூறாக நினைத்து அவள் ஏன் ஆடை அணிவதில்லை என்று விசாரித்தார். ஏன் கூடாது? லல்லா நறுக்கென பதிலளித்தாள். இங்கு பக்கத்தில் நான் ஆண்கள் எவரையும் காணவில்லையே. லல்லாவுடைய ஒரு மாதிரி வன்மையான கருத்துப்படி கடவுளை முழுமையாக அறியாதவனை ஆண் என்றே கூறமுடியாது. அவர் கிட்டத்தட்ட கிரியா யோகத்தைப்போன்றதொரு யோக முறையை அனுசரித்து வந்தார் அதனுடைய முக்தி தரும் சக்தியை அவர் அனேக நாலடிப் பாக்களில் புகழ்ந்திருக்கிறார், நான் ஒன்றை இங்கே மொழிபெயர்த்துக் கூறுகிறேன்:

துயரத்தின் எந்த திராவகம் நான் பருகவில்லை?<br>
என் பிறப்பு இறப்புகளின் சுழற்சிகளும் எண்ணற்றவைதான்.<br>
என் கோப்பையில் உள்ள ஒரே அமிழ்தத்தை<br>
என் சுவாசக்கலை உறிஞ்சிப் பருகியதே.

சாதாரண சரீர மரணம் எய்தாமல் அந்த யோகினி அக்கினியில் சரீரத்தின் அணுக்களைப் பிரித்து விட்டார். பிறகு அவர் துயருற்ற அந்நகர

மக்களிடையே தங்கமயமான உடைகள ணிந்து தோன்றினார்கடைசியில் முழுதும் உடையணிந்தே விட்டார்!

## அத்தியாயம் 21

# எங்கள் காஷ்மீரப் பயணம்

"இப்பொழுது நீ பயணம் மேற்கொள்ளும் அளவிற்கு பலமடைந்து விட்டாய். நான் உன்னுடன் காஷ்மீரத்திற்கு வருகிறேன்." ஆசியக் காலராவிலிருந்து நான் மிக அதிசயமான முறையில் குணமடைந்த இரண்டு நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ யுக்தேஸ்வர் என்னிடம் இவ்வாறு கூறினார்.

அன்று மாலை ஆறு பேர் அடங்கிய எங்கள் குழு வடக்கே செல்லும் ரயிலில் ஏறியது. நாங்கள் முதலில் சாவகாசமாகத் தங்கியது, இமயக் குன்றுகளின் அரியாசனத்தில் ராணி போல் வீற்றிருக்கும் சிம்லா நகரத்தில்தான். நாங்கள் அந்நகரத்தின் செங்குத்தான வீதிகளில் நடந்தவாறு அந்த அதியற்புதமான காட்சிகளை ரசித்தோம்.

ரம்மியமான திறந்த கடைவீதியில் உட்கார்ந்தபடி, சீமை இலந்தைப் பழம் (Strawberry) வாங்குங்கள், என்று ஒரு கிழவி கூவிக் கொண்டிருந்தாள்.

அந்த விசித்திரமான சிறு சிவப்புப் பழங்களைக் கண்டு குருதேவருக்கு ஓர் ஆவல் உண்டாயிற்று. அவர் ஒரு கூடை பழங்களை வாங்கி பக்கத்திலிருந்த கனாய்க்கும் எனக்கும் அதைக் கொடுத்தார். நான் ஒரு பழத்தை எடுத்து ருசித்தேன். ஆனால் உடனே அதைக் கீழே துப்பினேன்.

"ஐயா, என்ன புளிப்பு இந்தப் பழம்! இந்த இலந்தைப் பழங்களை என்னால் என்றும் விரும்பவே முடியாது!"

என் குரு சிரித்தார். "இவற்றை நீ விரும்பவே செய்வாய் அமெரிக்காவில். அங்கு ஓர் இரவு விருந்தின்போது உன்னை விருந்தோம்பும் மாது அவைகளை சர்க்கரையும் பாலேடும் கலந்து பரிமாறுவார். அவர் அதை முட்கரண்டியால் மசித்துக் கொடுக்கும் பொழுது நீ அதை உண்டுவிட்டு 'ஆகா, என்ன ருசியான இலந்தைப் பழங்கள்!' என்பாய். அப்பொழுது சிம்லாவின் இந்நாள் உன் நினைவிற்கு வரும்."

(ஸ்ரீ யுக்தேஸ்வர் முன்னோடியாகக் கூறியது என் மனத்திலிருந்து மறைந்தது, ஆனால் பல வருடங்களுக்குப் பிறகு நான் அமெரிக்கா சென்றடைந்த புதிதில் மறுபடி தோன்றிற்று. நான் மாசசூஸிட்ஸ் பகுதியைச் சேர்ந்த மேற்கு சமவிலில் திருமதி. ஆலிஸ் டி. ஹேஸி (சகோதரி யோக மாதா) என்பவர் வீட்டில் நான் இரவு விருந்தினராக இருந்தேன். அந்த இலந்தைப் பழங்கள் இனிப்புப் பண்டமாக மேஜைமேல் வைக்கப்பட்டபொழுது அவர் ஒரு முட்கரண்டியை எடுத்து பாலேட்டுடன் சர்க்கரையும் சேர்த்து என் பழங்களை மசித்தபடியே கூறினார். இந்தப் பழம் சற்று புளிப்பாக இருக்கும். அதை இந்த மாதிரி கலந்தால் உங்களுக்குப் பிடிக்குமென நினைக் கிறேன். நான் ஒரு வாய் சாப்பிட்டு விட்டு, ஆகா, என்ன ருசியான இலந்தைப் பழங்கள்! எனக் கூவினேன். உடனேயே

சிம்லாவில் எனது குரு முன்னோடியாகக் கூறியது, ஆழங்காண முடியாத நினைவுக் குகையிலிருந்து வெளிவந்தது. இறைவனோடு ஒன்றிய அவரது மனம், வெகு காலத்திற்கு முன்பே, வருங்கால வெளியில் சஞ்சரிக்கும் கர்மவினைகளின் சம்பவங்களைக் கண்டுபிடித்ததை உணர்ந்து நான் பிரமிப்படைந்தேன்).

எங்கள் குழு சீக்கிரமே சிம்லாவை விட்டு ராவல்பிண்டிக்கு ரயிலேறியது. அங்கு நாங்கள் இரண்டு குதிரைகளால் இழுக்கப்படும் மேல் பகுதி மூடப்பட்ட ஒரு பெரிய குதிரை வண்டியைக் காஷ்மீரத்தின் தலைநகரமாகிய ஸ்ரீநகர் செல்வதற்கு ஏழு நாள் பயணமாக வாடகைக்கு எடுத்துக் கொண்டோம். வடக்கு நோக்கிச் சென்ற எங்கள் இரண்டாவது நாள் பயணம் உண்மையான இமயத்தின் பரந்த தன்மையை எங்கள் பார்வைக்குக் கொண்டு வந்தது. எங்கள் வண்டியின் இரும்புச் சக்கரங்கள் வெப்பம் மிகுந்த மலைப் பாதைகளில் இரைச்சலிட்டுச் செல்லும்பொழுது மாறி மாறி வரும் இமயத்தின் கம்பீரமான காட்சிகளைக் கண்டு சொக்கி நின்றோம்.

ஆடி, குருதேவரிடம் கூறினான், ஐயா, இந்தப் பேரழகிய காட்சிகளைத் தெய்வத்தன்மை பொருந்திய உங்களுடன் சேர்ந்து அனுபவிப்பதில் நான் மிக மகிழ்ச்சி அடைகிறேன்.

நான் இப்பயணத்திற்கான ஏற்பாடுகளை செய்ததால் ஆடியின் ரசிப்பைக் கண்டு எனக்கு ஒரு மகிழ்ச்சித் துடிப்பு உண்டாயிற்று. ஸ்ரீ யுக்தேஸ்வர் என் எண்ணத்தை

அறிந்து கொண்டார்; என் பக்கம் திரும்பி என் காதில் கிசுகிசுத்தார்.

"ரொம்பவும் பெருமைப்படாதே. ஆடியின் மனம் தற்சமயம் நம்மை விட்டு நகர்ந்து ஒரு சிகரெட் பிடிக்கும் அவாவில் ஈடுபட்டிருக்கும் அளவு இயற்கைக் காட்சிகளில் ஒன்றவில்லை!"

எனக்கு ஒரே அதிர்ச்சி. ஐயா, தயவுசெய்து இம்மாதிரியான இனிமையற்ற வார்த்தைகளைக் கூறி நம் மகிழ்ச்சியைக் குலைக்காதீர்கள். ஆடி சிகரெட்டிற்கு அலைகிறானென்று நான் நம்பவே மாட்டேன், என்றேன் மெல்லிய குரலில். எப்பொழுதும் தோன்றியதைப் பேசிவிடும் என் குருவை நான் கலக்கத்துடன் நோக்கினேன்.

"நல்லது. நான் ஆடியிடம் எதுவும் கூறப்போவது இல்லை, குருதேவர் உள்ளூற நகைத்தவாறு கூறினார். ஆனால் வண்டி நின்றவுடனே அவன் இந்த வாய்ப்பைச் சீக்கிரமே பயன்படுத்திக் கொள்வதை நீயே காண்பாய்."

வண்டி ஒரு சிறு சத்திரத்திற்கு வந்து சேர்ந்தது. குதிரைகளுக்கு தண்ணீர் காட்டுவதற்கு அவைகளை நடத்திக் கொண்டிருந்த பொழுது ஆடி வினவினான். "ஐயா, நான் இந்த வண்டிக்காரனுடன் கொஞ்ச நேரம் சென்றால் பரவாயில்லையா? கொஞ்சம் வெளிக்காற்றை சுவாசிக்கலாமெனத் தோன்றுகிறது."

ஸ்ரீ யுக்தேஸ்வர் அனுமதி கொடுத்துவிட்டு என்னிடம் குறிப்பிட்டார். "அவனுக்குத் தற்சமயம் தேவையானது நல்ல காற்று இல்லை. நல்ல புகைதான்."

வண்டி தூசுபடிந்த தெருக்கள் வழியாக சத்தமிட்டுக் கொண்டு அதன் பயணத்தைத் தொடங்கியது. குருதேவர் சிமிட்டும் கண்களுடன் என்னிடம் கூறினார்: "வண்டியின் கதவு வழியாக உன் கழுத்தை வளைத்துப் பார்த்து ஆடி காற்றுடன் என்ன செய்கிறானென்று பார்."

நான் அப்படியே செய்தேன். அங்கு ஆடி சிகரெட் புகை வளையங்களை வெளியிட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்து எனக்கு ஒரே அதிர்ச்சி. நான் மன்னிப்புக் கோரும் பாவனையில் ஸ்ரீ யுக்தேஸ்வரை நோக்கினேன்.

"எப்பொழுதும் போலவே, நீங்கள் சொன்னது சரிதான். ஐயா, ஆடி புகையை ஊதி அனுபவித்துக் கொண்டே இயற்கைக் காட்சிகளை ரசிக்கிறான்." என் நண்பன் வண்டிக்காரனிடமிருந்து அதைப் பரிசாக பெற்றிருக்கிறான் என்றும் ஊகித்தேன். கல்கத்தாவிலிருந்து ஆடி சிகரெட் கொண்டு வரவில்லையென எனக்குத் தெரியும்.

நாங்கள் வளைந்து வளைந்து சென்ற அப்பாதையில் ஆறுகள், பள்ளத்தாக்குகள், செங்குத்தான பாறைகள் மற்றும் கணக்கில்லாத மலைப்பாளங்களின் அடுக்குகள் இவைகளைக் கண்டு களித்தவாறு எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம். ஒவ்வொரு இரவும் நாங்கள் ஒரு கிராமச் சத்திரத்தில் எங்கள் உணவை சமைத்துக் கொண்டோம். ஸ்ரீ யுக்தேஸ்வர் என் ஆகாரத்தில் தனி அக்கறை செலுத்தி நான் ஒவ்வொரு தடவையும் உணவு உட்கொள்ளும் பொழுது எலுமிச்சை சாற்றையும் அருந்த வேண்டுமென்று வற்புறுத்தினார். ஆட்டம் கண்ட வண்டி,

அசௌகரியத்திற்கென்றே அமைக்கப்பட்டிருந்த போதிலும் இன்னும் பலவீனமாக இருந்த நான் தினமும் தேறிக் கொண்டு தானிருந்தேன்.

மத்திய காஷ்மீரத்தை நெருங்க நெருங்க மகிழ்ச்சியுடன் கூடிய எதிர்பார்ப்புகள் எங்கள் இதயத்தை நிரப்பின: தாமரை ஏரிகள், மிதக்கும் தோட்டங்கள், மேல் விதானத்துடன் கூடிய அழகிய படகுகள், அனேக பாலங்களுடைய ஜீலம் நதி, பூக்களால் நிரம்பப் பெற்ற புல்வெளிகள் எல்லாமே இமயத்தால் சூழப்பட்ட சுவர்க்க பூமி.

உயர்ந்து வரவேற்கும் மரங்களால் சூழப்பட்ட ஒரு வீதியினூடே எங்கள் ஸ்ரீநகர் விஜயம் துவங்கியது. கம்பீரமான குன்றுகளை நோக்கியவாறு இருந்த இரண்டு அடுக்குகள் கொண்ட சத்திரத்தில் நாங்கள் அறைகள் எடுத்துக் கொண்டோம். நீரோட்டம் அங்கு தென்படாததால், அருகில் இருந்த ஒரு கிணற்றிலிருந்து எங்களுக்கு வேண்டிய தண்ணீரை இறைத்துக் கொண்டோம். கோடைப்பருவம் மிக சௌகரியமாயிருந்தது: மிதமான உஷ்ணமுடைய பகல்கள் மற்றும் கொஞ்சம் குளிரும் இரவுகள்.

ஸ்வாமி சங்கரருக்கென்று அர்ப்பணிக்கப்பட்ட ஸ்ரீநகரில் இருந்த ஒரு புராதனமான கோயிலுக்கு யாத்திரை செய்தோம். அம்மலைச் சிகரத்தில் வான்முகட்டைக் கம்பீரமாக எட்டும் அந்த ஆசிரமத்தைக் கண்டதும் நான் ஒரு பரவச நிலையை அடைந்தேன். ஒரு தூரதேசத்தில் மலையுச்சியிலிருக்கும் மாளிகை

ஒன்றின் காட்சி தோன்றியது: ஸ்ரீநகரிலுள்ள சங்கரரின் அவ்வுயர்ந்த கோயில், நான் பல வருடங்களுக்குப் பிறகு அமெரிக்காவில் நிறுவிய ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் (Self-Realization Fellowship) என்ற நிறுவனத்தின் தலைமை அலுவலகக் கட்டிடமாக மாறி இருந்தது. (நான் கலிஃபோர்னியாவிலுள்ள லாஸ் ஏஞ்ஜலீஸ் நகரத்திற்குச் சென்று மௌண்ட் வாஷிங்டனின் உச்சியிலுள்ள பெரிய கட்டிடத்தைப் பார்த்ததும் நான் உடனே அதைக் காஷ்மீரத்திலும் பிற இடங்களிலும் என் கடந்தகால மனத்தோற்றங்களில் கண்டிருந்ததை அறிந்து கொண்டேன்.)

ஸ்ரீநகரில் சில நாட்கள். பிறகு குல்மார்க் (மலர்களின் மலைவழி); 8,500 அடி உயரம். நான் அங்குதான் ஒரு பெரிய குதிரை மீது என் முதல் சவாரி செய்தேன். ராஜேந்திரா ஒரு சிறிய குதிரைமிக வேகமாக ஓடும் விருப்பத்தினால் உந்தப்பட்ட ஓட்டக்குதிரை மீது ஏறினான். நாங்கள் மரக்காளான்கள் மிகுந்த அடர்ந்த மரங்கள் நிறைந்த காட்டினூடே, பனி மூட்டத்தால் மறைக்கப்பட்டிருந்த அபாயகரமான தடங்கள் வழியாக, செங்குத்தான கிலன்மார்க் மலைப்பாதையில் செல்லலுற்றோம். ஆனால் ராஜேந்திராவின் சிறு குதிரை ஆபத்தான வளைவுகளில் கூட என் பெரிய குதிரைக்குச் சற்றும் அவகாசம் கொடுக்கவில்லை. ராஜேந்திராவினுடைய குதிரை, போட்டி போடுவதில் ஆர்வத்தைத் தவிர வேறு எதைப் பற்றியும் கவனிக்காமல் சோர்வின்றி மேலும் மேலும் தொடர்ந்து

வந்து கொண்டிருந்தது.

எங்கள் சிரமமான பந்தயத்திற்கு அங்கொரு கண்கொள்ளாக் காட்சி பரிசாகக் கிடைத்தது. இப்பிறப்பில் முதல் முறையாக, எல்லாப் பக்கங்களிலும் மிகப்பெரிய துருவக் கரடிகளின் நிழலுருவம் போன்று அடுக்கடுக்காகப் பனி மூட்டம் பெற்று, மகோன்னதமாக விளங்குகின்ற இமயத்தைக் கண்டேன். சூரிய ஒளியுடன் கூடிய நீல வானத்திற்கு எதிராக முடிவற்றுத் தொடர்ந்து பனி மலைகள் பேரானந்தமாக என் கண்களுக்கு விருந்தளித்தன.

நான் என் இளம் தோழர்களுடன்அனைவரும் மேலங்கி அணிந்திருந்தோம்ஜொலிக்கும் வெண்மலைச் சரிவுகளில் ஆனந்தமாகப் புரண்டேன். நாங்கள் இறங்கி வரும்பொழுது தூரத்தில் ஒரு பெரிய கம்பளம் விரித்தாற் போன்று மஞ்சள் பூக்கள் அக்குன்றுகளின் சூனியத்தையே முழுமையாக மாற்றியிருந்ததைக் கண்டோம்.

எங்கள் அடுத்த சுற்றுலா பெயர்பெற்ற இன்ப நந்தவனங்கள் எனப்படும் ஜஹாங்கீர் சக்கரவர்த்தியின் ஷாலிமாரும் நிஷாத் பூங்காவும் தான். நிஷாத் பூங்காவிலுள்ள புராதனமான அரண்மனை ஓர் இயற்கையான நீர் வீழ்ச்சியின் நேர் மேலே கட்டப்பட்டுள்ளது. மலைகளிலிருந்து புரண்டு வரும் அந்த அருவி நீர் மிக நுணுக்கமான முறைகளால் வண்ண வண்ணத் தளங்களின் வழியாக செலுத்தப்பட்டு கண்ணைப் பறிக்கும் மலர்ப்பாத்திகளிடையே நீருற்றைப்

போல் பொங்கி எழுகிறது. அந்த ஊற்று அரண்மனையின் பல அறைகளினூடேச் சென்று கடைசியில் கீழேயுள்ள ஏரியில் ஒரு தேவதை போல் விழுகிறது. மாபெரும் அம்மலர்த் தோட்டங்கள் ரோஜா, மல்லிகை, அல்லி, ஸ்னாப்ட்ராகன், பான்ஸி, லாவண்டர், கசகசா ஆகிய பல விதமான மலர்களினால் நிறைந்த ஒரு வண்ணக் குவியல்தான். இணை வரிசைகளில் அமைந்த சினார், சைப்ரஸ், செர்ரி மரங்கள் ஒரு மரகதச் சூழலையே உண்டாக்கியிருந்தன. அவற்றையும் கடந்து இமாலயத்தின் வெண்பனித் தூய்மை வானளாவி இருந்தது.

காஷ்மீரத் திராட்சை என்பது கல்கத்தாவில் அபூர்வமாகக் கருதப்படும் மிக்க ருசியுள்ள வகையாகும். எங்களுக்குக் காஷ்மீரத்தில் காத்திருக்கும் திராட்சை விருந்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த ராஜேந்திரா அங்கு பெரிய திராட்சைத் தோட்டம் எதுவும் இல்லாததைக் கண்டு ஏமாற்றம் அடைந்தான். நான் ஆதாரமற்ற அவனுடைய எதிர்பார்ப்பை அடிக்கடி கேலி செய்து கொண்டிருந்தேன்.

"ஓ, திராட்சை பழங்களினால் நிரம்பி என்னால் நடக்கக் கூட முடியவில்லை! என்பேன் நான். கண்ணிற்குத் தென்படாத அந்தத் திராட்சைப் பழங்கள் என்னுள் வடித்து இறக்கப்படுகின்றன!" பின்னர் இனிப்புத் திராட்சை காஷ்மீரத்திற்கு மேற்கேயுள்ள காபூலில் ஏராளமாகப் பயிராவதாக அறிந்தோம். பிறகு நாங்கள் முழு பிஸ்தாப் பருப்புகளால் மணமூட்டப் பெற்ற ரப்டி

(கோவா) யால் செய்த ஐஸ்கிரீமைச் சாப்பிட்டு எங்களைச் சமாதானப் படுத்திக் கொண்டோம்.

நாங்கள் ஷிகாரா எனப்படும், சிவப்பு நிறத்தில் சித்திரத் தையல் வேலைப்பாட்டுடனாகிய நிழல் கொடுக்கும் விதானத்தையுடைய சிறு படகுகளில், டால் ஏரியில் தண்ணீர்சிலந்தி வலை போன்ற சிக்கலான கால்வாய்கள் வழியாக பல தடவை சுற்றினோம். இங்கு செப்பமற்ற வகையில் கட்டைகளையும் மண்ணையும் சேர்த்து உண்டாக்கப்பட்ட மிதக்கும் தோட்டங்கள் வியப்பூட்டுகின்றன. காய்கறிகளும் பூசணி வகைகளும் பெரும் நீர்ப்பரப்புகளின் நடுவே வளர்வதை முதலில் பார்க்கும் பொழுது ஒத்துவராததாகத் தோன்றும். மண்ணில் வேரூன்றியவன் என்று அலட்சியப் படுத்தப்படும் குடியானவன் ஒருவன், தன் சதுர மனை நிலத்தை, அனேக விரல்கள் அமைப்புடைய அந்த ஏரியில் ஒரு புது இடத்திற்கு இழுத்துச் செல்வதைச் சில சமயங்களில் ஒருவர் காணலாம்.

இந்த அடுக்குப் பள்ளத்தாக்கில் ஒருவர் இப்புவியின் அழகையெல்லாம் சுருக்கமாகக் காணலாம். இந்தக் காஷ்மீரக் கன்னிகை மலைகளைக் கிரீடமாகத் தரித்து, ஏரியால் மாலையிடப் பெற்று, மலர்க் காலணிகளை அணிந்து விளங்குகிறாள். காஷ்மீர் உலகத்திலேயே மிக அழகான இயற்கை வனப்பை உடையதென்று ஏன் கூறுகிறார்கள் என்பது பின் வருடங்களில் நான் பல நாடுகளுக்குச் சென்று சுற்றிப் பார்த்த பின்னர் தெரிந்து கொண்டேன். அது ஸ்விட்சர்லாந்தின் ஆல்ப்ஸ் மலை,

ஸ்காட்லாந்தின் லாக்லோமண்ட், மிக நேர்த்தியான ஆங்கிலேய ஏரிகள் ஆகிய ஒவ்வொன்றின் வசீகரத்திலிருந்தும் சிறிதளவு தன்னிடத்தே பெற்றுள்ளது. ஓர் அமெரிக்கப் பயணிக்கு காஷ்மீரம், அலாஸ்கா மற்றும் டென்வர் அருகிலுள்ள பைக்ஸ் சிகரத்தின் வலிமை நிறைந்த கம்பீர அழகையும் நிறையவே ஞாபகப்படுத்தும்.

இயற்கை வனப்புக் காட்சிகளில் ஒரு போட்டி வைப்பதென்றால் நான் முதல் பரிசு கொடுப்பது மெக்ஸிகோவிலுள்ள ஸோகிமில்கோ எனுமிடத்தில் வானம், மலைகள் மற்றும் பாப்லர் மரங்கள்துள்ளிக் குதிக்கும் மீன்களினூடேஎண்ணற்ற நீர் வழிகளில் பிரதிபலிக்கும் பகட்டான காட்சிக்கோ அல்லது கடுமையான இமயப் பாதுகாப்புகிடையே அழகிய இளம் பெண்களைப் போலத் தோன்றும் காஷ்மீரத்து ஏரிகளுக்கோதான். இவ்விரண்டு இடங்களும் இப்புவியிலேயே மிக அழகிய இடங்களாக என் நினைவில் நிற்கின்றன.

இருப்பினும் அலாஸ்கா, கொலராடோவின் கிரான்ட் கேன்யான், எல்லோஸ்டோன் நேஷனல் பார்க் ஆகியவற்றின் அற்புதங்களையும் கண்டு பிரமிக்கவே செய்தேன். எல்லோஸ்டோன் பார்க்கில் எண்ணற்ற வெப்ப நீரூற்றுகள் கடிகாரத்தின் ஒழுங்கு முறை போன்று ஒரே சீராக மிக உயரமாகப் பொங்கி வருவது, உலகிலேயே இந்த ஓர் இடமாகத்தான் இருக்கும். இந்த எரிமலைப் பிரதேசத்தில் இயற்கை, பழங்கால

சிருஷ்டியின் ஒரு மாதிரியை விட்டு வைத்திருக்கிறது: வெப்பமான கந்தக ஊற்றுகள், நீலம் மற்றும் பல நிறங்கள் கலந்த குட்டைகள், உக்கிரமான வெப்ப நீரூற்றுகள், சுதந்திரமாகத் திரியும் கரடிகள், ஓநாய்கள், காட்டெருமைகள் மற்றும் பல காட்டு மிருகங்கள். வயோமிங் வீதிகளின் வழியாகக் காரில் சென்று சாத்தானின் வண்ணப் பானை (Devil's Paint Pot) என்னும் கொதிக்கும் வெப்பமான சேறு, களகள வென்று சப்தம் செய்யும் ஊற்றுகள், வழியும் வெப்ப நீரூற்றுகள், நீராவி எழும் ஊற்றுகள் ஆகியவற்றைப் பார்த்தபின் எல்லோஸ்டோன், அதனுடைய தனித்தன்மைக்கு ஒரு சிறப்புப் பரிசு பெறத் தகுதியானது என என்னைக் கூறச் செய்தது.

கலி ஃபோர்னியாவில் யௌசெமிடி பார்க்கில் உள்ள புராதனமான, மாட்சிமையுடன் விளங்கும் வான் முகட்டை எட்டும் பெரிய தூண்களைக் கொண்ட சிக்வாய (Sequoias) மரங்கள், தெய்வீகத் திறனால் திட்டமிடப்பட்ட இயற்கையின் பச்சைநிறக் கோயில்களாகும். கீழ் நாடுகளில் மிக அழகிய நீர்வீழ்ச்சிகள் இருந்தாலும் நியூயார்க்கில் கனடாவின் எல்லையிலுள்ள நயாகராவின் கொட்டும் அழகிற்கு எதுவுமே ஈடாகா. கென்டகியிலுள்ள பிரமாண்டமான குகை, நியூ மெக்ஸிகோவிலுள்ள கால்ஸ்பேட் பெருங்குகைகள் இவை எல்லாம் அதிசயமான தேவலோகம் போன்றவை. குகைகளின் உட்கூரைகளிலிருந்து நீளமாகத் தொங்கும் பனிக்கட்டிகள்

போன்ற சுண்ணாம்பு படிவங்கள், கீழேயுள்ள தண்ணீரில் பிரதிபலிக்கும் பொழுது மனிதனுக்குக் கற்பனை உலகங்களின் ஒரு காட்சியைத் தருகின்றன.

காஷ்மீரத்தில் பலர் அழகில் உலகக்கீர்த்தி பெற்றவர்கள். ஐரோப்பியர்களைப் போலவே வெண்ணிறத்தையும் உருவ அம்சங்களையும், அமைப்பையும் கொண்டவர்கள். பலர் நீலக் கண்களையும் செம்பட்டை முடியையும் உடையவர். மேற்கத்திய பாணியில் உடையை அணிந்தால் அவர்கள் அமெரிக்கர்களைப் போன்று தோன்றுவார்கள். இமாலயக் குளிர்ச்சி அவர்களை வியர்க்கும் வெயில் படாமல் காத்து அவர்களின் வெளிர் நிறத்தை பாதுகாக்கிறது. ஒருவர் இந்தியாவில் தெற்காக வெப்பமான அட்ச ரேகைகளை நோக்கி பிரயாணம் செய்ய செய்ய மக்களின் நிறம் மேலும் மேலும் கருத்திருப்பதைக் காணலாம்.

காஷ்மீரத்தில் ஆனந்தமான வாரங்களைக் கழித்த பிறகு நான் செராம்பூர் கல்லூரியில் அடுத்த பருவத்திற்காக, வங்காளம் திரும்ப தயார் செய்ய வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளானேன். ஸ்ரீ யுக்தேஸ்வர், கனாய், ஆடி இவர்கள் இன்னும் சிறிது நாட்கள் ஸ்ரீநகரில் தங்குவதாக இருந்தது. நான் கிளம்புவதற்குச் சற்று முன்னால் குருதேவர் தனக்கு காஷ்மீரத்தில் சுகவீனம் ஏற்படலாம் என்று ஜாடையாகத் தெரிவித்தார்.

"ஐயா, நீங்கள் ஆரோக்கியத்தின் வடிவமாகத்தான்

தோன்றுகிறீர்கள், " நான் மறுத்தேன்.

"நான் இந்த உலகை விட்டே போவதற்குக்கூட வாய்ப்பிருக்கிறது."

"குருஜி!" நான் மன்றாடும் முறையில் அவர் பாதங்களில் விழுந்தேன். "தயவுசெய்து உங்கள் சரீரத்தை இப்போது விடப்போவதில்லை என எனக்கு வாக்களியுங்கள். நீங்கள் இல்லாமல் சமாளிப்பதற்கு நான் கொஞ்சங்கூட என்னைத் தயார் செய்து கொள்ளவில்லை."

ஸ்ரீ யுக்தேஸ்வர் மௌனமாகவே இருந்தார். ஆனாலும் அவர் என்னை நோக்கி கருணையுடன் முறுவலித்ததைக் கண்டு எனக்குக் கொஞ்சம் தெம்பு உண்டாயிற்று. நான் மிகுந்த தயக்கத்துடனேயே அவரை விட்டு வந்தேன்.

நான் செராம்பூருக்குத் திரும்பியதுமே எனக்கு ஆடியிடமிருந்து தந்தி வந்தது. "குருதேவர் நோய்வாய்ப்பட்டு ஆபத்தான நிலையிலிருக்கிறார்."

நான் குருவிற்குப் பரபரப்பாக தந்தி கொடுத்தேன். "ஐயா, என்னை விட்டுத் தாங்கள் பிரியக் கூடாது என தங்களிடம் நான் வாக்குறுதி பெற்றிருக்கிறேன். தயவுசெய்து உங்கள் உடலை வைத்திருங்கள்; இல்லாவிடில் நானும் இறந்து விடுவேன்."

"உன் விருப்பப்படியே ஆகட்டும்." என்பதே காஷ்மீரத் திலிருந்து குருதேவர் தந்த பதில்.

பிறகு சில நாட்கள் கழித்து ஆடியிடமிருந்து குருதேவர் உடம்பு குணமடைந்ததாகக் கடிதம் வந்தது.

இரு வாரங்கள் கழித்து அவர் செராம்பூருக்குத் திரும்பியபொழுது என் குருவின் உடல் பாதியாக இளைத்திருந்ததைக் கண்டு எனக்கு வருத்தமாக இருந்தது.

ஸ்ரீ யுக்தேஸ்வர் அவரது சீடர்களின் அதிர்ஷ்டவசமாக, காஷ்மீரத்தில் அவருடைய கடுமையான ஜுரத்தின் நெருப்பில் அவர்களுடைய அனேக பாவங்களை எரித்திருந்தார். ஆன்மீகப் பாதையில் நன்கு முன்னேறிய யோகிகள், சரீரத்திலுண்டாகும் வியாதியை வேறு சரீரத்திற்கு மாற்றும் இயல் கடந்த முறையை அறிந்திருந்தனர். ஒரு பலமுள்ள மனிதன் பலவீனமானவனுக்கு ஒரு பாரமான சுமையைத் தாங்குவதற்கு உதவலாம். ஆன்மீகத்தில் உயர்ந்த ஒரு மகான் தன் சீடர்களுடைய கர்மவினைகளின் பாரங்களில் ஒரு பாகத்தைத் தான் ஏற்று, அவர்களுடைய உடல், மற்றும் மனத் துன்பங்களைக் குறைக்க முடியும். ஒரு பணக்காரன் கொஞ்சம் பணத்தைத் துறந்து தனது ஊதாரிப் பிள்ளையின் பெரிய கடனைத் தீர்த்து, அவனுடைய அசட்டுத்தனத்தின் கொடிய பலாபலன்களை அவன் அனுபவிக்காமல் காப்பாற்றுவது போன்று, ஒரு குருதேவர் மனமுவந்து தன் சிஷ்யர்களின் துக்கத்தைக் குறைப்பதற்கு தன் சரீரச் சொத்தில் கொஞ்சம் தியாகம் செய்கிறார்.

ஒரு ரகசியமான யோக முறையினால், அந்த மகான் தனது மனத்தையும் சூட்சும தேகத்தையும் துன்பப்படும்

ஒருவருடன் இணைக்கிறார். அந்த வியாதி முழுவதுமாகவோ அல்லது அதன் ஒரு பகுதியோ, யோகியின் சதைப்பற்றுள்ள உருவத்திற்குக் கொண்டு செல்லப்படுகிறது. உடலாகிய நிலத்தில் கடவுளையே அறுவடை செய்தபின், ஒரு மகானுக்குத் தன் உடலின் மீது அக்கறை இல்லை. மற்றவர்களைக் குணப்படுத்த வேண்டி அவர் தன் சரீரத்தை நோய்க்கு உட்படுத்தினாலும், களங்கப்படாத அவரது மனம், எந்தப் பாதிப்பையும் அடையாது. அம்மாதிரி உதவியைத் தன்னால் செய்ய முடிவதை அவர் தன் பாக்கியமாகக் கருதுவார். இறைவனிடத்தில் முக்தி அடைவது என்பது உண்மையில் மனித சரீரம் முழுமையாக அதன் குறிக்கோளை நிறைவேற்றி விட்டது என்று காண்பதுதான். பிறகு அந்த மகான் அதைத் தன்னிச்சைப்படி எப்படி வேண்டுமானாலும் உபயோகப்படுத்துகிறார்.

ஒரு குருவின் வேலை இந்த உலகத்தில் மனித வர்க்கத்தின் துன்பங்களைத் துடைப்பதுதான். அதை ஆத்மீக வழியிலோ, அறிவுரை மூலமாகவோ, இச்சாசக்தி மூலமாகவோ அல்லது நோயைத் தனது உடலில் மாற்றிக் கொண்டோ நிறைவேற்றலாம். நினைத்தபொழுது உயர்உணர்வு நிலையில் ஆழ்ந்து விடக் கூடிய ஒரு யோகி தன் உடல் நோயைப் பற்றி கவனிக்காமல் இருக்க முடியும். சில சமயங்களில் தன் சீடர்களுக்கு உதாரணமாக இருக்க வேண்டி அவர், தன் சரீர உபாதைகளைச் சகித்துத் தாங்கிக் கொள்வதைத்

தேர்ந்தெடுக்கிறார். மற்றவர்களின் நோயை ஏற்றுக் கொள்ளுவதன் மூலம் ஒரு யோகி, அவர்களுக்காக கர்மவினைகளின் காரண காரிய விதியை திருப்தி செய்ய முடியும். இந்த விதிமுறை இயந்திரகதியில் அல்லது கணக்குப் பிசகாமல் தானாகச் செயல்படுவது ஆகும். அதன் செயல்முறை தெய்வஅருள் பெற்ற ஞானிகளால் விஞ்ஞானப் பூர்வமாகச் சரிக்கட்டப்படலாம்.

மற்றவர்களைச் சுகப்படுத்தும் பொழுது ஒரு யோகி தான் சுகவீனமடைந்துதான் ஆகவேண்டுமென்று எந்த தெய்வ நியதியும் இல்லை. சாதாரணமாக அந்த மகானுக்கு எந்தத் துன்பமும் உண்டாகாமல் அவரறிந்த உடனடி நிவாரணத்திற்கான பல்வேறு முறைகளின் மூலம் குணமாக்குதல் நடைபெறுகிறது. இருந்தாலும் அரிய சந்தர்ப்பங்களில், தன் சீடர்களின் பரிணாம வளர்ச்சியைப் பெருமளவில் துரிதப்படுத்த விரும்பும் ஒரு குரு, அவர்களுடைய விரும்பத்தகாத கர்மவினைகளின் பெரும் பாகத்தைத் தன் உடலில் தாமாகவே ஏற்றுச் செயல்பட வைக்கலாம்.

இயேசு தன்னைப் பலருடைய பாவங்களின் மீட்சிப் பொருளாகக் கருதினார். அவர், சூட்சுமமான பேரண்டத்தின் காரண காரிய விதிகளுக்கு மனமுவந்து தன்னை உட்படுத்திக் கொண்டு ஒத்துழைத்திராவிடில் அவரிடம் இருந்த தெய்வீக சக்திகளினால் அவரை[1] ஒருகாலும் சிலுவையில் அறைந்து மரணத்தை உண்டாக்கி இருக்க முடியாது. இம்மாதிரி அவர் மற்றவர்களின், முக்கியமாக அவருடைய சீடர்களின்

கர்ம வினைகளின் பலாபலன்களைத் தன் மீதே ஏற்றுக் கொண்டார். இவ்வாறாக அவர்கள் நன்கு புனிதமாக்கப்பட்டு, எங்கும் நிறைந்த பரம்பொருள் அல்லது பரிசுத்த ஆவி, பின்னர் அவர்கள் மீது இறங்குவதற்கு தகுதியுடையவர்களாக ஆக்கப்பட்டார்கள்.[2]

ஆன்மஅனுபூதி அடைந்த ஒரு மகான் மட்டுமே அவருடைய உயிர்ச் சக்தியை மற்றவர்களுக்கு மாற்றவோ அல்லது தனது உடலில் மற்றவர்களின் வியாதிகளை ஏற்கவோ முடியும். ஒரு சாதாரண மனிதன் இந்த யோக முறையைப் பயன்படுத்தி நோயை குணமாக்க முடியாது; அம்மாதிரி செய்ய முயல்வதும் விரும்பத்தக்கதல்ல. ஏனெனில் ஆரோக்கியமற்ற சரீரம் ஆழ்ந்த தியானத்திற்கு இடைஞ்சலானது. இந்து சமய நூல்கள், ஒரு மனிதனுக்குத் தன் உடலைப் பேணிக்காப்பது தலையாய கடமை எனப் போதிக்கின்றன. இல்லாவிடில் பக்தி பூர்வமாக மனத்தை ஒருமுகப்படுத்துதல் சாத்தியமாகாது.

மிகத் திடமான ஒரு மனம் எல்லா உடல் உபாதைகளையும் தாண்டி கடவுளை உணர முடியும். அனேக மகான்கள் நோயை அலட்சியம் செய்து கடவுளை அடைவதில் வெற்றி பெற்றுள்ளார்கள். அஸிஸியின் புனித ஃபிரான்சிஸ் தன் உடல் நோயால் துன்புற்றிருந்த போதிலும் மற்றவர்களைக் குணப்படுத்தி இருக்கிறார். இறந்தவர்களைக் கூட உயிர்ப்பித்திருக்கிறார்.

இளமைக் காலத்தில் தன்னுடைய பாதி உடல் புண்களால் மூடப்பட்டிருந்த ஓர் இந்திய யோகியை ஒரு சமயம் எனக்குத் தெரியும். மிகவும் முற்றியிருந்த அவருடைய நீரிழிவு நோய் காரணமாக ஒரு சமயத்தில் பதினைந்து நிமிடங்களுக்கு மேல் அவரால் நிலையாக உட்கார முடியாது. ஆனால் ஆன்மீக சாதனையில் அவருக்கிருந்த ஆர்வத்தை எதுவும் தடை செய்ய முடியவில்லை. "ஆண்டவா, என்னுடைய இந்த சிதிலமடைந்த கோயிலுக்குள் நீ வருவாயா? என வேண்டினார். தன் இடையறாத மன வலிமையினால் அந்தத் துறவி காலக்கிரமத்தில் ஒரு நாளைக்கு பதினெட்டு மணி நேரம் பத்மாசனத்தில் உட்கார்ந்து பரவச நிலையில் ஆழ்ந்து விட முடிந்தது. பிறகு அவர் என்னிடம் கூறினார், மூன்று வருடங்களுக்குப் பிறகு எல்லையற்ற ஜோதி என்னுள் ஒளிரக் கண்டேன். இந்த ஒளிப் பிரகாசத்தில் தோய்ந்து நான் என் உடலை மறந்தேன். பிறகு தெய்வீகக் கருணையினால் என் உடல் சீராகி முழுமை பெற்றதைக் கண்டேன்."

இந்தியாவில் மொகலாய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த அரசர் பாபர் (1483-1530) சம்பந்தப்பட்ட சரித்திரப் பிரசித்த பெற்றநோயைக் குணப்படுத்திய நிகழ்ச்சியொன்றுண்டு. அவர் மகன் ஹுமாயூன் வெகு தீவிரமாக நோய்வாய்ப்பட்டிருந்தார். கடுந்துயருற்ற தந்தை தீர்மானத்துடன், தான் அந்த நோயை ஏற்றுக் கொள்வதாகவும் தன் மகன் பிழைக்க வேண்டுமெனவும் பிரார்த்தனை செய்தார். ஹுமாயூன்[3] பிழைத்தெழுந்தார்,

பாபர் உடனே அவர் மகனைப் பீடித்திருந்த அதே நோயால் தாக்கப்பட்டு உயிர் துறந்தார்.

ஒரு பெரிய மகான் என்றால் அவருக்கு சாண்டோவைப்[4] போன்ற ஆரோக்கியமும் பலமும் இருக்க வேண்டுமெனப் பலர் கருதுகின்றனர். அந்தக் கருத்து ஆதாரமற்றது. எப்படி வாழ்க்கை முழுதும் நல்ல ஆரோக்கியத்துடன் இருப்பவர், உள்ளொளி பெற்றே இருப்பார் என்ற நியதி எதுவும் இல்லையோ அது போலவே ஒரு குருவின் உடல் சுகவீனமுற்றிருந்தால் தெய்வீக சக்திகள் அற்றவர் என்று சொல்வதற்கில்லை. ஒரு குருவின் விசேஷத் தகுதிகள் ஆன்மீகத் தகுதிகளே அன்றி, உடல் தகுதிகள் இல்லை.

மேலை நாட்டில் உண்மையைத் தேடுதலில் தடுமாற்றமுறும் பலர், மெய்ஞ்ஞானத்தைப் பற்றி நன்றாகப் பேசுபவரோ அல்லது எழுதுபவரோ ஒரு மகானாகத்தான் இருக்க வேண்டும் எனத் தவறாக எண்ணுகின்றனர். ஆனால் ஒருவர் மகான் என்பதற்கு அடையாளம் அவர் நினைத்த மாத்திரத்தில் மூச்சற்ற நிலையை (சவிகல்ப சமாதி) எய்தும் திறனும் மற்றும் மாறா இயல்புள்ள ஆனந்தத்தை (நிர்விகல்ப சமாதி)[5] பெறும் திறனுமேயாகும். ரிஷிகள் இம்மாதிரியான சாதனைகளால் மட்டுமே ஒரு மனிதன் இருமைகளைத் தோற்றுவிக்கும் பிரபஞ்ச மாயையை அடக்கியவனாகிறான் எனச் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். அவன் மட்டுமே ஆழ்ந்த அனுபூதியின் மூலம் ஏகம் ஸத் (உள்ளது ஒன்றே ஒன்று) எனக் கூற முடியும்.

> "அஞ்ஞானத்தின் காரணமாக இருமைகளைக் காணும் பொழுது ஒருவன் தன்னிலிருந்து மற்ற வஸ்துக்களைப் பிரித்துக் காண்கிறான்," பெரும் அத்வைதியான சங்கரர் எழுதியுள்ளார்: "எல்லாமே ஆத்மா என்று அறியும் பொழுது ஓர் அணு கூட ஆத்மாவினின்று வேறுபட்டு காணப்படுவதில்லை... எப்படித் தூங்கி விழித்தவுடன் கனவுகள் இல்லாமலாகின்றனவோ அப்படியே மெய்ஞ்ஞானம் ஏற்படும் பொழுது சரீரத்தின் உண்மையற்ற தன்மையினால், கடந்த கால கர்மவினைகளின் பலன்கள் தொடருவதில்லை."

மிகப்பெரிய மகான்கள் மட்டுமே சீடர்களின் கர்மவினைகளை ஏற்றுக்கொள்ள முடியும். ஸ்ரீ யுக்தேஸ்வர் தன்சீடர்களுக்கு விசித்திரமான முறையில் உதவி புரிய வேண்டுமென அந்தராத்மாவின் அனுமதி பெற்றிருக்காவிடில் ஸ்ரீநகரில்[6] நோயுற்றிருக்க மாட்டார். இறைவனுடன் ஒன்றிய என் குருவை விட, தெய்வீகக் கட்டளைகளை நிறைவேற்றுவதற்கு வேண்டிய அதிகமான ஞான நுண்ணுர்ச்சிகளைப் பெற்ற மகான்கள் அபூர்வமே.

அவரது இளைத்த உருவத்தைப் பற்றி நான் பச்சாதாபத்தில் சில வார்த்தைகளைக் கூற முற்பட்டபொழுது என் குரு வேடிக்கையாகக் கூறினார்.

"அதிலும் சில நன்மைகள் உண்டு. நான் வருடக்கணக்காக அணியாமலிருந்த சில சிறிய பனியன்களை இப்போது என்னால் உடுத்த முடிகிறது!"

குருதேவரின் சந்தோஷமான சிரிப்பைக் கேட்ட பொழுது எனக்கு புனித ஃபிரான்சிஸ் டி சேல்ஸின் சொற்கள் நினைவிற்கு வந்தன: "வருந்தும் ஒரு மகான் ஒரு வருந்தத்தக்க மகான்!"



யோகானந்தரால் 1925ல் கலி்ஃபோர்னியா, லாஸ் ஏஞ்ஜிலீஸ், மௌண்ட் வாஷிங்டன் மீது நிறுவப்பட்ட ஸெல்்ஃப்ரியலைசேஷன் ்ஃபெலோஷிப்ன் சர்வதேசத் தலைமையகத்தில் உள்ள நிர்வாகக் கட்டிடம்

ஸ்ரீ ராஜரிஷி ஜனகானந்தர், ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்/யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா-வின் தலைவர் மற்றும் ஆன்மீக முதல்வர் 1952-1955.



ஸ்ரீ ஸ்ரீ தயா மாதா, 1955 பிப்ரவரியில் ராஜரிஷி ஜனகானந்தருக்குப் பின்னர் தலைமைப் பொறுப்பேற்று 2010-ல் தான் மறையும் வரை 55 ஆண்டுகளுக்கு மேலாகப் பணியாற்றினார்.



குருதேவரின் மறைவிற்குப் பின்னர், அவருடைய பணியைத் தலைமை வகித்து நடத்த அவரால் தேர்ந்தெடுக்கப்பட்டு, பயிற்சி

அளிக்கப்பட்டவர்களுள் ஒருவருமான ஸ்ரீ ஸ்ரீ மிருணாளினி மாதா, YSS/SRF – ன் தற்போதைய தலைவியும் ஆன்மீக முதல்வரும் ஆவார்.

1 கிறிஸ்து, தன்னைச் சிலுவையில் அறைய அழைத்துச் செல்வதற்கு சற்று முன்பு கூறினார், நான் இப்பொழுது என் பிதாவை வேண்டிக்கொண்டால் அவர் பன்னிரண்டு பெருஞ் சைன்யங்களுக்கு அதிகமான தூதரை என்னிடத்தில் அனுப்பமாட்டாரென்று நினைக்கிறாயா? அப்படிச் செய்வேனானால், இவ்விதமாய்ச் சம்பவிக்க வேண்டும் என்கிற வேத வாக்கியங்கள் எப்படி நிறைவேறும்? மத்தேயு 26:53-54 (பைபிள்).

2 அப்போஸ்தலருடைய நடபடிகள் 1:8; 2:14 (பைபிள்).

3 ஹுமாயூன், அக்பர் சக்கரவர்த்தியின் தகப்பனார் ஆவார். முதலில் இஸ்லாமியப் பற்றினால் அக்பர் இந்துக்களை துன்புறுத்தினார், எனக்கு அறிவு வளர வளர நான் வெட்கத்தில் மூழ்கிவிட்டேன், என்று அவர் பின்னர் கூறினார். எல்லா மதக் கோயில்களிலும் அதிசயங்கள் நிகழ்வதுண்டு. அவர் பகவத் கீதையை பாரசீகத்தில் மொழிபெயர்க்க ஏற்பாடு செய்தார். ரோமிலிருந்து அனேக கிறிஸ்துவப் பாதிரிமார்களைத் தன் சபைக்கு அழைத்தார். அக்பர் பிழையாக ஆனால் அன்புடன் பின்வரும் கூற்று கிறிஸ்துவினுடையதாகக் குறித்திருக்கிறார். (அது அக்பருடைய புதிய நகரான ஃபதேபூர் சிக்ரியின் வெற்றி வளைவில் பொறிக்கப்பட்டிருக்கிறது): இயேசு, மேரியின் மகன் (அவருக்கு சாந்தி உண்டாகட்டும்) கூறினார்: உலகம் ஒரு பாலம், அதைக் கடந்து செல், ஆனால் அதன் மேல் வீடு கட்டாதே.

4 ஒரு ஜெர்மானிய மல்லன் (1925-ல் மரணம்), உலகத்தின் வலிமையான மனிதன் எனப் பெயர் பெற்றவன்.

5 பார்க்க பக்கங்கள் 361, 610 அடிக்குறிப்பு.

6 காஷ்மீரத்தின் தலைநகரான ஸ்ரீநகர் கி.மு. மூன்றாவது நூற்றாண்டில் அசோக சக்கரவர்த்தியால் ஸ்தாபிக்கப்பட்டது. அவர் அங்கு 500 புத்த விஹாரங்களைக் கட்டினார். ஆயிரம் வருடங்களுக்குப் பிறகு சீன யாத்திரிகர் யுவாங் சுவாங் அங்கு விஜயம் செய்தபொழுது அதில் நூறு விஹாரங்கள் அப்படியே இருந்தன. இன்னொரு சீன யாத்திரிகர் ஃபாஹியான் (ஐந்தாவது நூற்றாண்டு) பாடலிபுத்திரத்தில் (தற்கால பாட்னா) அசோகரது மிக விஸ்தாரமான மாளிகையின் சிதிலங்களைப் பார்வையிட்டுக் கூறுகிறார்: அதனுடைய நம்ப முடியாத கட்டிட நுணுக்க அழகையும், அலங்காரச் சிற்ப வேலைப்பாடுகளையும் நோக்கும் பொழுது இது சாதாரண மனிதனின் கைகளாலான காரியமாயிருக்க முடியாது என்று தோன்றுகிறது.

## அத்தியாயம் 22

# ஒரு கற்சிலையின் இதயம்

"ஒரு விசுவாசமுள்ள இந்து மனைவியான நான் என் கணவரைப் பற்றிப் புகார் செய்ய விரும்பவில்லை. ஆனால் அவர் தன் லௌகீகப் போக்கிலிருந்து மாற வேண்டுமென நான் ஏங்குகிறேன். என் தியான அறையிலுள்ள மகான்களின் படங்களைப் பற்றிக் கேலி செய்வதில் அவர் மகிழ்ச்சி அடைகிறார். என்னருமைத் தம்பியே, நீ அவருக்கு உதவமுடியும் என எனக்கு ஆழ்ந்த நம்பிக்கை உண்டு. நீ செய்வாயா?"

என் மூத்த சகோதரி ரோமா என்னைக் கெஞ்சியவாறு நோக்கினாள். கிரீஷ் வித்யாரத்னா சந்திலுள்ள அவளுடைய கல்கத்தா வீட்டிற்கு நான் சிறிது நேரம் சென்றிருந்தேன். அவள் ஓர் ஆழ்ந்த ஆன்மீக விளைவை எனது இளமைப் பருவத்து வாழ்க்கையில் ஏற்படுத்தி இருந்ததனாலும் குடும்ப வட்டாரத்தில் தாயாரின் மரணத்தினால் ஏற்பட்ட வெறுமையை அன்பான முறையில் நிரப்புவதற்கு முயன்றதாலும் அவளுடைய முறையீடு என்னைத் தொட்டது.

"அன்பான அக்கா, என்னால் முடிந்ததை நான் அவசியம் செய்வேன்." சாதாரணமாக எப்போதும் சாந்தமாகவும் உற்சாகமாகவும் தோன்றும் அவளது முகபாவம் வழக்கத்திற்கு மாறாகக் கவலையைத்

தெளிவாகக் காட்டியதால் அவளை உற்சாகப்படுத்தும் ஆவலில் நான் புன்சிரிப்புடனேயே இதைக் கூறினேன்.

ரோமாவும் நானும் சிறிது நேரம் மௌனமாக எங்களுக்கு வழிகாட்டுதல் வேண்டி பிரார்த்தனை செய்தோம். ஒரு வருடம் முன்பாக என் சகோதரி அவளுக்குக் கிரியா யோக முறையை உபதேசிக்கும்படி என்னை வேண்டினாள். அதில் அவள் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் அடைந்து கொண்டிருந்தாள்.

என்னை ஓர் உள்ளுணர்வு பற்றியது. "நான் நாளைக்கு தக்ஷிணேஸ்வரம் காளி கோயிலுக்குச் செல்லப் போகிறேன். தயவு செய்து என்னுடன் வா. உன் கணவரையும் நம்முடன் வரும்படி இசையச் செய். அந்தத் தெய்வீகமான சூழ்நிலையில் அன்னை பராசக்தி, அவர் இதயத்தைத் தொடுவாள். ஆனால் நாம் அவரை அழைத்துச் செல்லும் நோக்கத்தை அவரிடம் தெரிவிக்காதே," என்றேன் நான்.

என் சகோதரி நம்பிக்கையுடன் ஒப்புக் கொண்டாள். மறுநாள் அதிகாலையில் ரோமாவும் அவளுடைய கணவரும் பிரயாணத்திற்குத் தயாராயிருப்பதைக் கண்டு நான் மகிழ்ச்சி அடைந்தேன். எங்கள் குதிரைவண்டி அப்பர் சர்குலர் ரோடில் கடகடத்து தக்ஷிணேஸ்வரத்தை நோக்கிச் சென்று கொண்டு இருந்த பொழுது என் அத்தான் சதீஷ் சந்திரபோஸ், குருமார்களின் தகுதியைக் கேலி செய்து மகிழ்ந்து கொண்டு இருந்தார். ரோமா மௌனமாக அழுது கொண்டு இருந்ததை நான் கண்டேன்.

"அக்கா, உற்சாகமாயிரு!" நான் ரகசியமாகக் கூறினேன். "உன் கணவருடைய கேலிப் பேச்சுக்களை நாம் மதிக்கிறோம் என்ற திருப்தியை அவருக்குக் கொடுக்காதே."

"முகுந்தா, ஒரு தகுதியும் இல்லாத மோசடிக்காரர்களை நீ எப்படித்தான் மதிக்கிறாயோ? ஒரு சாதுவின் தோற்றமே அருவருப்பாக இருக்கிறதே! ஒன்று அவர் ஓர் எலும்புக்கூடு போல ஒல்லியாக இருக்கிறார் அல்லது ஒரு யானையைப் போல் புனிதமில்லாத அளவு பருமனாக இருக்கிறார்!" என்று சதீஷ் சொல்லிக் கொண்டிருந்தார்.

நான் குலுங்கக் குலுங்கச் சிரித்தேன். என்னுடைய இந்தச் செய்கை சதீஷை கோப மூட்டியது. ஒரு சிடுசிடுப்பான மௌனத்தில் ஆழ்ந்தார். எங்கள் வண்டி தக்ஷிணேஸ்வரம் ஆலய எல்லைக்குள் நுழைந்த பொழுது அவர் கிண்டலாகச் சிரித்தார்.

"இந்தப் பயணம் என்னைத் திருத்துவதற்காகப் போடப்பட்ட திட்டம் போலும்?"

நான் பதில் கூறாமல் திரும்பி விலகியதும் அவர் என் கையைப் பிடித்தார். இளந்துறவி அவர்களே, நமது மதிய உணவிற்குக் கோவில் அதிகாரிகளிடம் சொல்லித் தகுந்த ஏற்பாடு செய்து வைக்க மறந்து விடாதீர்கள், என்றார் அவர். கோயில் புரோகிதர்களிடம் சதீஷ் நேரிடையாகப் பேச்சு வைத்துக் கொள்ள விரும்பவில்லை.

"நான் இப்பொழுது தியானம் செய்யப் போகிறேன்.

உங்கள் மதிய சாப்பாட்டைப் பற்றிக் கவலைப் படாதீர்கள். அதை தெய்வீக அன்னை கவனித்துக் கொள்வாள்." நான் சுருக்கென்று பதில் கூறினேன்.

"எந்த ஒரு விஷயமும் தெய்வீக அன்னை எனக்காக செய்வாளென நான் நம்பவில்லை. ஆனால் என் சாப்பாட்டிற்கு நீதான் பொறுப்பு." சதீஷின் குரல் பயமுறுத்துவதாக இருந்தது.

காளியின் (இயற்கை அன்னை என்ற நிலையில் கடவுள்) பெரிய கோயிலின் முன்னால் இருக்கும் முற்றத்தை நோக்கி நான் தனியாகச் சென்றேன். ஒரு தூணின் அருகில் நிழல் படர்ந்த இடமாகப் பார்த்து பத்மாசனமிட்டு அமர்ந்தேன். அப்பொழுது காலை மணி ஏழுதான் என்றாலும் வெகு சீக்கிரத்தில் காலை வெயில் தாங்க முடியாததாகிவிடும்.

நான் இறை உணர்வில் மூழ்கியதும் உலகம் மறைந்தது. காளி மாதாவிடத்தில் என் மனம் ஒன்றியது. தக்ஷிணேஸ்வரத்தின் இதே கோயிலில் அவள் சிலை, மிகப் பெரிய மகான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரால் விசேஷ பக்தியுடன் ஆராதிக்கப்பட்ட ஒன்று. கதறிக் கூப்பிட்ட அவருடைய குரலுக்கு அந்தக் கற்சிலையாள் அடிக்கடி உயிருள்ள ஜீவனாக வந்து அவருடன் உரையாடி இருக்கிறாள்.

நான் பிரார்த்தித்தேன், கல்லாகத் தோன்றும் மௌனத் தாயே, உன் பிரிய பக்தன் ராமகிருஷ்ணரின் பிரார்த்தனைக்கு செவிமடுத்து நீ ஜீவனுள்ளவளாக ஆனாய்; அழுது புலம்பும் உன்னுடைய இப்பிள்ளையின்

ஏக்கத்தை நீ ஏன் செவிமடுக்க மறுக்கிறாய்?

என் பேரார்வம் ஒரு தெய்வீக அமைதியுடன் எல்லையற்று விரிந்தது. இருப்பினும், ஐந்து மணிநேரம் ஆனபின்னும் நான் என் உள் மனத்துள் உருவகப்படுத்திக் கொண்ட அம்பாளிடமிருந்து எந்த பதிலும் இல்லாததால் எனக்குக் கொஞ்சம் மனத்தளர்வு ஏற்பட்டது. சில சமயம் பிரார்த்தனைகள் நிறைவேறுவதில் தாமதமாவது கடவுளின் சோதனையால்தான். ஆனால் உறுதியான பக்தனுக்கு அவன் பிரியமாகக் கொள்கிற எந்த வடிவிலும் அவர், கடைசியாகத் தோன்றுகிறார். இறைப்பற்றுள்ள ஒரு கிறிஸ்துவன் இயேசுவைக் காண்பான்; ஓர் இந்து, கிருஷ்ணனை அல்லது அன்னை காளியைக் காண்பான், அல்லது அவன் அருவ வழிபாடு செய்பவனாயின் விரியும் ஒளியைக் காண்பான்.

நான் விருப்பமே இல்லாமல் கண்களைத் திறந்தேன். மதிய நேரத்தில் மூடும் வழக்கப்படி ஒரு புரோகிதர் கோயில் கதவுகளை மூடிக் கொண்டிருந்தார். நான் முன் வாயிலில் தனிமையிலிருந்த என் இடத்தை விட்டு எழுந்து முற்றத்தில் இறங்கினேன். உச்சி வெயிலில் அதன் கருங்கல் தரை தகித்துக் கொண்டிருந்தது. என் வெறும் பாதங்கள் கொப்பளித்து வேதனையைத் தந்தன.

"தாயே பராசக்தி," நான் மௌனமாக முறையிட்டேன், "எனக்கு நீ தரிசனம் தரவில்லை, இப்போது நீ இக்கோயிலில் மூடிய கதவுகளுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டுவிட்டாய். நான் என் அத்தானுக்காக உன்னிடம் இன்று ஒரு விசேஷ பிரார்த்தனை செய்ய வேண்டும்

என்றிருந்தேன்."

நான் மனத்திற்குள் செய்து கொண்ட விண்ணப்பம் உடனே ஏற்றுக் கொள்ளப்பட்டது. முதலில் ஓர் ஆனந்தமான குளிர்ந்த அலை என் முதுகிலும் கால்களடியிலும் இறங்கி எல்லா அசௌகரியத்தையும் நீக்கியது. பிறகு நான் அதிசயிக்கும்படி அக்கோயில் மிக விரிந்து பரந்தது. அதன் பெரிய கதவு மெல்லத் திறந்தவண்ணம் காளி அன்னையின் உருவத்தைக் காட்டியது. கொஞ்சம் கொஞ்சமாக அந்தச் சிலை உயிர்த் தோற்றம் கொண்டு புன்சிரிப்புச் சிரித்தவாறு என்னை வாழ்த்துவது போன்று தலையசைத்தது; வர்ணிக்க முடியாத ஆனந்தத்தில் என் உடலெல்லாம் புல்லரிக்கச் செய்தது. ஒரு மாய பீச்சாங்குழலால் இழுக்கப்பட்டது போல் என் சுவாசக் கோசங்களிலிருந்து மூச்சு வெளியே இழுக்கப்பட்டது; என் உடல் அசைவற்றிருந்த போதிலும் உணர்ச்சி இல்லாமல் இல்லை.

பிறகு என் உணர்வு ஒரு பரவச நிலையில் விரியத் தொடங்கியது. என் இடப் பக்கத்தில் கங்கை நதியில் பல மைல்கள் வரை என்னால் தெளிவாகக் காண முடிந்தது. கோயிலுக்கு அப்பாலும் தக்ஷிணேஸ்வரத்தின் சுற்றுப்புறப் பிரதேசங்கள் முழுவதையும் காணமுடிந்தது. எல்லாக் கட்டிடங்களின் சுவர்களும் ஊடுருவித் தெரியும்படி மின்னின; அவைகளின் மூலமாக ஜனங்கள் வெகு தொலைவில் இங்குமங்குமாக நடப்பதைக் காணமுடிந்தது.

நான் மூச்சற்றிருந்தாலும், என் உடல் அதிசயமான

முறையில் அமைதியுற்றிருந்தாலும், நான் என் கைகால்களை நன்கு அசைக்க முடிந்தது. பல நிமிடங்களுக்குக் கண்களை மூடித் திறந்து பரிசோதனை செய்து பார்த்தேன்; இரு நிலைகளிலும் என்னால் தக்ஷிணேஸ்வரத்தின் பரந்த காட்சி முழுவதையும் தெளிவாகக் காணமுடிந்தது.

ஞானப் பார்வை எக்ஸ்ரேவைப் போல் எல்லாப் பொருட்களையும் ஊடுருவ வல்லது. ஞானக் கண், சுற்றளவே இல்லாதவாறு எங்கும் மையமாகவே விளங்குகிறது. அம்முற்றத்தின் வெயிலில் நின்று கொண்டிருந்த போது, நீர்க்குமிழி போல் நிலையில்லாத, உண்மையில் கனவென்ற உலகத்தில் மூழ்கி, மனிதன் வாழ்க்கையை வீணடிக்கும் கடவுளின் தறுதலைப் பிள்ளையாக இருப்பதைத் தவிர்த்த மாத்திரத்தில், அவன் ஆதி அந்தம் இல்லாத ஆதிக்கத்தின் பரம்பரை உரிமையை மறுபடியும் பெறுகிறான் என்பதை நான் புதிதாக உணர்ந்தேன். குறுகிய மனிதத் தன்மையால் கட்டுப்படுத்தப்பட்ட மனிதன், தப்பிக்க வேண்டுமென்பது அவசியமெனின், எங்கும் நிறைந் தவனின் தப்பியோடுதலுடன் வேறு எந்தத் தப்பியோடலையாவது ஒப்பிட முடியுமா?

தக்ஷிணேஸ்வரத்தில் எனக்கு ஏற்பட்ட தெய்வீக அனுபவத்தில் விசேஷமாகப் பெரிதான அளவில் இருந்தவை கோயிலும் அன்னையின் உருவமுமே. மற்றவை அதனதன் இயல்பான பரிமாணங்களிலேயே தோன்றின, என்றாலும் ஒவ்வொன்றும் வெண்மை, நீலம்

மற்றும் வானவில்லின் நிறங்களாலான மென்மையான ஒளி வட்டத்திற்குள் ஒளிர்ந்தன. என் உடல் வானவெளியால் உருவாக்கப்பட்டது போல் மிதப்பதற்கு தயாராய் இருந்தது. என்னைச் சுற்றியுள்ள ஸ்தூலமான சூழ்நிலையை முற்றும் உணர்ந்தவாறு நான் சுற்றிலும் பார்த்துக் கொண்டு அப்பரவச நிலையின் தொடர்பை விடாமல் சில அடிகள் நடந்தேன்.

அக்கோயிலின் சுவர்களுக்குப் பின்னால் ஒரு புனிதமான வில்வமர முட்கிளைகளுக்கு அடியில் திடீரென என் அத்தானைக் கண்டேன். நான் முயற்சி செய்யாமலேயே வெகுசுலபமாக அவருடைய எண்ணங்களின் போக்கைத் தெளிவாக உணர முடிந்தது. தக்ஷிணேஸ்வரத்தின் தெய்வீகச் சூழ்நிலையில் அவரது மனம் கொஞ்சம் உயர்ந்திருந்தாலும் இன்னும் என்னைப் பற்றித் தவறாகவே எண்ணியவாறிருந்தது. நான் பராசக்தியின் திவ்ய ரூபத்தை நோக்கி நேராகத் திரும்பினேன்.

"அன்னை பராசக்தி," நான் துதிக்கலானேன். "என் அக்காவின் கணவரை ஆன்மீக வழியில் திருப்ப மாட்டாயா?"

இவ்வளவு நேரம் மௌனமாக இருந்த அந்த திவ்ய உருவம் கடைசியில் பேசியது. "உன் விருப்பம் நிறைவேற்றப்படும்."

நான் மகிழ்ச்சியுடன் சதீஷை நோக்கினேன். ஏதோ ஒரு திவ்ய சக்தி செயல்படுவது உள் மனத்திற்குத் தோன்றியது போல் தரையில் உட்கார்ந்திருந்த அவர்

ஆத்திரத்துடன் எழுந்தார். நான் அவர் கோயிலுக்குப் பின்னால் ஓடி வருவதைப் பார்த்தேன். அவர் தன் முட்டியைக் குலுக்கியவாறு என்னை நோக்கி வந்தார்.

எல்லாவற்றையும் தழுவிய அக்காட்சி மறைந்தது. நான் பராசக்தியின் திவ்ய ரூபத்தைக் காண முடியவில்லை; கோயில் அதன் ஊடுருவும் தன்மையை இழந்து, அதன் சாதாரணப் பரிமாணங்களை மீண்டும் பெற்றது. மறுபடியும் என் உடல் அக்கடுமையான வெயிலில் வதங்கியது. நான் முன் வாசலில் நிழலிற்குக் குதித்தோடினேன். சதீஷும் கோபத்துடன் என்னைத் தொடர்ந்தார். நான் என் கடிகாரத்தை நோக்கினேன். மணி ஒன்றாகியிருந்தது. அந்தத் தெய்வீகக் காட்சி ஒரு மணி நேரம் நீடித்திருந்தது.

"முட்டாள் பயலே," என் அத்தான் கத்தினார், "கால்களைக் குறுக்காகவும் கண்களைக் கோணலாகவும் வைத்துக்கொண்டு அங்கு நீ மணிக்கணக்கில் உட்கார்ந்து கொண்டிருந்தாய். நான் உன்னைக் கவனித்துக் கொண்டு முன்னும் பின்னுமாக அலைந்து கொண்டிருந்தேன். நம் சாப்பாடு எங்கே? கோயிலும் இப்போது மூடியாகி விட்டது. நம்மைப் பற்றிக் கோயில் அதிகாரிகளிடம் நீ சொல்லி வைக்கத் தவறி விட்டாய். நம் மதிய சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்ய மிகவும் நேரமாகி விட்டது!"

பராசக்தியின் முன்னிலையில் நானடைந்த பரவச நிலை இன்னும் என்னுள் நீடித்திருந்தது. நான் "அன்னை பராசக்தி நமக்கு உணவளிப்பாள்! " எனக் கூறினேன்.

"முதலும் கடைசியுமாகச் சொல்லுகிறேன்," சதீஷ் சத்தம் போட்டார். "முன்னேற்பாடு எதுவுமில்லாமல் உன் அன்னை பராசக்தி நமக்கு இங்கு உணவளிக்கிறாளா என்று நான் பார்க்கிறேன்!"

அவர் சொல்லி முடிக்கக்கூட இல்லை. கோயில் புரோகிதர் ஒருவர் முற்றத்தைக் கடந்து எங்களுடன் சேர்ந்து கொண்டார்.

"மகனே," அவர் என்னை நோக்கிக் கூறினார். "நீ தியானத்தில் இருக்கும்பொழுது உன் முகத்தில் திவ்ய தேஜஸைக் கவனித்தேன். காலையில் உங்கள் குழு வந்ததையும் கண்டேன். உங்களுக்கு வேண்டிய அளவு மதிய உணவைத் தனியாக எடுத்து வைக்க வேண்டுமென்று எனக்கு விருப்பம் ஏற்பட்டது. முன்பே கோரிக்கை செய்யாதவர்களுக்கு ஆகாரம் அளிப்பது கோயிலின் சட்டத்திற்கு எதிரானது. ஆனால் உன் விஷயத்தில் நான் அதைத் தளர்த்தி விட்டேன்."

நான் அவருக்கு நன்றி கூறிவிட்டு நேராக சதீஷின் கண்களை நோக்கினேன். அவர் உணர்ச்சி கொந்தளிக்கத் தம் பார்வையை மௌனமான வருத்தத்துடன் தாழ்த்திக் கொண்டார். எங்களுக்குப் பிரமாதமான விருந்து, பருவமில்லாத காலத்திய மாம்பழங்கள் உட்பட பரிமாறப்பட்ட பொழுது என் அத்தானுக்கு பசி மிகக் குறைவாக இருந்தது என்பதை நான் கவனித்தேன். அவர் எண்ணமென்ற கடலில் மூழ்கிக் குழப்பம் அடைந்திருந்தார்.

நாங்கள் கல்கத்தாவிற்குத் திரும்பும் பயணத்தில்

சதீஷ் மென்மையான பாவத்துடன் அவ்வப்பொழுது என்னைக் கெஞ்சிய பார்வையுடன் பார்த்தார். ஆனால் சதீஷுடைய சவாலுக்கு விடை அளிக்கும் விதத்தில் புரோகிதர் எங்களைச் சாப்பிட அழைத்த மறுகணத்திலிருந்து அவர் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

அடுத்த பிற்பகல் நான் என் சகோதரி வீட்டிற்குச் சென்றேன். அவள் பிரியத்துடன் என்னை வரவேற்றாள்.

"அருமைத் தம்பி," அவள் ஆனந்தக் கண்ணீருடன் கூறினாள், "என்ன அற்புதம்! நேற்று மாலை என் கணவர் என் முன் வெளிப்படையாகவே அழுதார்."

"'அன்புள்ள தேவி,[1] உன் சகோதரனின் இந்த சீர்திருத்தத் திட்டம் ஒரு பெரிய மாறுதலை செய்தது குறித்து நான் சொல்லொணா மகிழ்ச்சி அடைகிறேன். நான் உனக்குச் செய்த அநியாயங்களுக்கெல்லாம் பிராயச்சித்தம் செய்யப் போகிறேன். இன்றிரவிலிருந்து நம் பெரிய படுக்கை அறையை பிரார்த்தனை செய்ய மட்டுமே உபயோகிப்போம். உன் சிறிய தியான அறை நம் படுக்கையறையாக மாற்றப்படும். உன் சகோதரனைக் கேலி செய்தேனே என்று நான் உண்மையாகவே வருத்தப்படுகிறேன். நான் வெட்கக்கேடான முறையில் நடந்து கொண்டதற்காக, நான் ஆன்மீக வழியில் முன்னேறும் வரையில் முகுந்தனிடம் பேசாமலிருந்து என்னைத் தண்டித்துக் கொள்ளப் போகிறேன். இப்போதிலிருந்து தீவிரமாக தெய்வீக அன்னையை நாடுவேன். என்றாவது நான் அவளை நிச்சயம் கண்டே

தீரவேண்டும்!'" என்றார்.

பல வருடங்களுக்குப் பிறகு (1936 ல்) நான் டில்லியில் சதீஷைக் காணச் சென்றிருந்தேன். அவர் ஆத்ம சாதனையில் வெகு தூரம் முன்னேறி அன்னை பராசக்தியின் தரிசனத்தின் அருளும் பெற்றிருந்ததைக் கண்டு நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன். நான் அவருடன் தங்கியிருந்த பொழுது ஒவ்வொரு இரவின் பெரும் பாகத்தை அவர் ரகசியமாக ஆழ்ந்த தியானத்தில் கழிப்பதைக் கண்டேன். ஆனாலும் அவர் மிகவும் நோய்வாய்ப்பட்டிருந்தார். மேலும் பகலில் காரியாலயத்தில் வேலையிலும் ஈடுபட்டிருந்தார்.

என் அத்தானுடைய வாழ்நாள் இனி அதிகமில்லை என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது. ரோமா என் மனத்தைப் புரிந்து கொண்டு விட்டாள்.

"அருமைத் தம்பி, நான் ஆரோக்கியமாக இருக்கிறேன். என் கணவர், உடல் நலமில்லாமல் இருக்கிறார். ஆனாலும் ஓர் இந்துப் பத்தினியைப் போன்று நான்தான் முதலில் இறப்பேன்.[2] இதை நீ தெரிந்துகொள், அதற்கு அதிக காலம் ஆகாது," என்றாள்.

அவளுடைய தீயநிமித்தச் சொற்களைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். எனினும் அதன் கடும் உண்மை எனக்குப் புரிந்தே இருந்தது. அவளுடைய முன்னறிவிப்பின்படியே பதினெட்டு மாதங்கள் கழித்து என் சகோதரி இறந்த பொழுது நான் அமெரிக்காவில் இருந்தேன். என் கடைசித் தம்பி விஷ்ணு பிறகு எனக்கு விவரங்களைக் கூறினான்.

"ரோமாவின் மரணத்தின் போது அவளும் சதீஷும் கல்கத்தாவில் இருந்தார்கள்," விஷ்ணு கூறினான். "அன்று காலை அவள் மணப்பெண்ணைப் போல் பிரமாதமாக உடை அணிந்திருந்தாள்.

'என்ன இன்று விசேஷ அலங்காரம்?' சதீஷ் விசாரித்தார்.

"'உலகில் இன்றுதான் நான் உங்களுக்குக் கடைசியாக சேவை செய்யும் நாள்,' ரோமா பதிலளித்தாள். சிறிது நேரம் கழித்து அவளுக்கு மாரடைப்பு ஏற்பட்டது அவளுடைய மகன் அவசரமாக மருத்துவ உதவிக்காகப் புறப்பட்ட பொழுது அவள் கூறினாள்: மகனே, என்னை விட்டுப் போகாதே. அதனால் ஒன்றும் பிரயோஜனமில்லை. டாக்டர் வருவதற்குள் நான் போய்விட்டிருப்பேன். பத்து நிமிடங்களுக்குப் பிறகு பக்தியுடன் தன் கணவரின் பாதங்களைப் பற்றியவாறு ரோமா முழு நினைவுடன், மகிழ்ச்சியாக தன் உயிரை எந்த உபாதையும் இல்லாமல் விட்டாள்.

"தன் மனைவியின் மரணத்திற்குப் பிறகு சதீஷ் மிகவும் தனிமையடைந்து விட்டார்," விஷ்ணு தொடர்ந்தான். "ஒரு நாள் நானும் அவருமாக, சிரித்துக் கொண்டிருக்கும் ரோமாவின் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தோம்.

"'நீ ஏன் சிரிக்கிறாய்?' சதீஷ் திடீரென்று அவர் மனைவி அங்கிருப்பது போன்று கூவினார். 'எனக்கு முன் போவதற்கு ஏற்பாடு செய்து கொண்டதில் நீ சாமர்த்தியமாக இருந்தாய் என நீ நினைக்கிறாய். நீ

என்னிடமிருந்து வெகு நாள் தனித்திருக்க முடியாதென்பதை நிரூபிக்கிறேன்; சீக்கிரமே நான் உன்னுடன் சேர்ந்துக் கொள்வேன்.'

"இந்தச் சமயம் சதீஷ் உடல்நிலை முழுவதும் தேறி அவர் நல்ல ஆரோக்கியத்துடன் இருந்தார். ஆயினும் அந்த ஃபோட்டோவின் முன்பு அவருடைய அதிசயமான குறிப்புரைக்குப் பின், சீக்கிரமே வெளிப்படையான காரணம் இன்றியே அவர் மரணமடைந்தார்."

இவ்வாறு தீர்க்கதரிசனமாக, எனது அன்பிற்குரிய சகோதரி ரோமாவும், சாதாரண உலகப்பற்றுள்ள மனிதனாக இருந்து தக்ஷிணேஸ்வரத்தில் மௌனமான யோகியாக உருமாற்றம் செய்யப் பெற்ற அவளது கணவர் சதீஷும் உயிர் துறந்தனர்.

---

1 இறைவி: ஒளிர்பவள், சமஸ்கிருத வினை மூலம் திவ்ஒளிர்.

2 ஓர் இந்து மனைவி தன் கணவனுக்கு விசுவாசத்துடன் சேவை செய்ததற்கு நிரூபணமாக அவனுக்கு முன்பே, அதாவது கட்டுக்கழுத்தியாக (சுமங்கலி) இறந்தால் அது தன் ஆன்மீக முன்னேற்றத்தின் அறிகுறி என நம்புகிறாள்.

## அத்தியாயம் 23

# நான் பல்கலைக்கழகப் பட்டம் பெறுகிறேன்

"தத்துவ சாஸ்திரத்தில் உன் பாடப் புத்தகப் பயிற்சிகளை நீ அலட்சியம் செய்கிறாய். நீ தேர்வுகளில் தேறுவதற்கு உழைப்பற்ற உள்ளுணர்வை நம்பி இருக்கிறாய் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் நீ உன்னை மேலும் முறையான கல்விப் பயிற்சியில் ஈடுபடுத்திக் கொள்ளாவிடில் நான் உன்னை இந்தத் தேர்வில் தேறவிடப் போவதில்லை."

செராம்பூர் கல்லூரிப் பேராசிரியர் டி.ஸி.கோஷால் எனக்குக் கடுமையாக உபதேசித்துக் கொண்டிருந்தார். அவருடைய கடைசி வகுப்பறை எழுத்துத் தேர்வில் தேறாவிட்டால் இறுதித் தேர்வுகளை எழுத நான் தகுதி அற்றவனாகி விடுவேன். இவை, செராம்பூர் கல்லூரியைத் தன்னுடன் இணைந்த கிளைக்கல்லூரிகளில் ஒன்றாகக் கருதும், கல்கத்தா பல்கலைக்கழகத்தால் இயற்றப்பட்ட சட்டதிட்டங்களாகும். இந்தியப் பல்கலைக்கழகங்களில் A.B. என்னும் பட்டப்படிப்பில் தேறாவிட்டால் அந்த மாணவன் மறுபடியும் எல்லாப் பாடங்களிலும் அடுத்த ஆண்டு தேர்வு எழுத வேண்டும்.

செராம்பூர் கல்லூரியில் எல்லா ஆசிரியர்களும் என்னை அன்பாகவே நடத்தினார்கள் எனினும், அதில்

ஒரு சிறு கேலி இல்லாமலில்லை. முகுந்தன் கொஞ்சம் அளவுக்கதிகமாகவே இறை போதையில் இருக்கிறான். இம்மாதிரி என்னைக் கணக்கிட்ட பிறகு அவர்கள் வகுப்பறையில் கேள்விகளுக்கு பதில் கூற முயற்சிக்கும் தர்மசங்கடத்தில் என்னை ஆழ்த்துவதில்லை. A.B. தேர்வு எழுதுபவர்களின் பட்டியலில் இருந்து என்னை நீக்கிவிட அவர்கள் இறுதி எழுத்துத் தேர்வுகளையே நம்பி இருந்தனர். என்னைப் பற்றிய என் சக மாணவர்களின் தீர்ப்பு, அவர்கள் என்னை பைத்தியக்காரத் துறவி என்று கேலிப் பெயரிட்டு அழைத்ததில் வெளிப்பட்டது.

தத்துவ சாஸ்திரத்தில் என்னைத் தேறவிடுவதில்லை என்ற என் பேராசிரியர் கோஷாலின் பயமுறுத்தலை அர்த்தமற்றதாக்க நான் ஒரு சாமர்த்தியமான வழிமுறையை மேற்கொண்டேன். கடைசித் தேர்வு முடிவுகள் பகிரங்கமாக அறிவிக்கப்படுவதற்கு முன்னால் நான் என் சக மாணவன் ஒருவனைப் பேராசிரியரின் அறைக்குள் என்னுடன் வரும்படி அழைத்தேன்.

"என்னுடன் வா, எனக்கு ஒரு சாட்சி வேண்டும், என்றேன் அவனிடம். பேராசிரியரை நான் தந்திரமாக வெற்றி கொள்ளாவிட்டால் எனக்கு ஏமாற்றமாயிருக்கும்."

என் தேர்வுத்தாட்களுக்கு அவர் என்ன மதிப்பெண் கொடுத்திருக்கிறார் என்று அவரைக் கேட்ட பொழுது கோஷால் தலையை ஆட்டினார்.

"தேறியவர்களின் பட்டியலில் நீ இல்லை, என்றார் வெற்றிக் குரலில். அவர் மேஜை மீது குவிந்திருந்த அடுக்கில் தேடினார். உன் விடைத்தாட்கள் இங்கு

இல்லவே இல்லையே; பரீட்சைக்கு வராததி னால் எப்படியும் நீ தேறாதவன் தானே?"

நான் உள்ளூர சிரித்துக் கொண்டேன். ஐயா, நான் வந்திருந்தேனே. விடைத்தாள் கட்டுகளை கொஞ்சம் நானே பார்க்கட்டுமா?

அந்தப் பேராசிரியர் திகைத்துவிட்டு, அனுமதி அளித்தார். நான் சீக்கிரமே என் விடைத்தாளைக் கண்டுபிடித்தேன். நான் அதில் என் வருகைப் பதிவேடு எண்ணைத் தவிர வேறு எந்த அடையாளமும் குறிப்பிடாமல் முன்னெச்சரிக்கையாக தவிர்த்து விட்டிருந்தேன். என் பெயர் என்கிற சிகப்புக் கொடி யால் எச்சரிக்கபடாததால், பாட புத்தகங்களிலிருந்த மேற்கோள்களுடன் அலங்காரமாக எழுதப்படாதிருந்த போதிலும் ஆசிரியர் என் விடைகளுக்கு அதிக மதிப்பெண்களே அளித்திருந்தார்.[1]

என் தந்திரத்தைப் புரிந்து கொண்ட அவர் இப்பொழுது கர்ஜித்தார். வெறும் குருட்டு அதிர்ஷ்டம்! எப்படியும் நீ நிச்சயமாக A.B. இறுதித் தேர்வில் தேறப் போவதில்லை, என்றார் நம்பிக்கையுடன். மற்ற பாடங்களின் தேர்வுகளுக்கு என் பிரிய நண்பனும் சித்தப்பா சாரதாவின் மகனுமான பிரபாஸ் சந்திர கோஷிடம் கொஞ்சம் கற்றுக் கொண்டேன். நான் முடிந்த அளவு மிகக் குறைந்த பட்ச தேர்ச்சி மதிப்பெண்களுடன்கஷ்டப்பட்டு திண்டாடியவாறுதான்எனது இறுதித் தேர்வில் எல்லா பாடங்களிலும் தேறினேன்.



பிரபாஸ் சந்திர கோஷ் மற்றும் பரமஹம்ஸ யோகானந்தர், கல்கத்தா, டிசம்பர் 1919. ஸ்ரீ யோகானந்தருடைய ஒன்றுவிட்ட சகோதரர் மற்றும் வாழ்நாள் நண்பர் மற்றும் சீடரான ஸ்ரீ கோஷ், அவர் காலமான 1975 வரை யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியாவின் உபதலைவராக இருந்தார்.

இப்பொழுது, நான்கு வருடக் கல்லூரிப் படிப்பிற்குப் பிறகு நான் A.B. தேர்வு எழுதத் தகுதியுடையவனானேன். இருப்பினும் நான் அந்த சலுகையை உபயோகப்படுத்த முடியும் என்பதை எதிர்பார்க்கவில்லை. A.B. பட்டத்திற்கு கல்கத்தா பல்கலைக்கழகத்தின் கடினமான கேள்வித்

தாள்களுடன் ஒப்பிடுகையில் செராம்பூர் கல்லூரியின் கடைசித் தேர்வுகள் குழந்தையின் விளையாட்டிற்கு ஈடானவை. ஸ்ரீ யுக்தேஸ்வரிடம் நான் அனேகமாகத் தினமும் போய்க் கொண்டிருந்ததினால் கல்லூரிக் கூடங்களில் நுழைவதற்கு எனக்கு சிறிது நேரமே இருந்தது. அங்கு எனது வராமையை விட என் வருகையைக் கண்டே என் சக மாணவர்கள் ஆச்சரிய கூக்குரலிடுவார்கள்.

அனேகமாக என் தினசரி வழக்கமானது, நான் காலை ஒன்பதரை மணி சுமாருக்கு சைக்கிளில் கிளம்புவதுடன் ஆரம்பமாகும். ஒரு கையில் குருவுக்குக் காணிக்கையாக பந்தி மாணவர் தோட்டத்திலிருந்த சில மலர்களை எடுத்துச் செல்வேன். என்னைப் பிரியத்துடன் வரவேற்று குருதேவர் மதிய உணவிற்கு என்னை அழைப்பார். நானும் உடனே அன்று கல்லூரிக்குப் போகும் எண்ணத்தையே சந்தோஷத்துடன் ஒதுக்கி விட்டு, ஆர்வத்துடன் மறு பேச்சின்றி ஒப்புக் கொள்வேன். மணிக்கணக்கில் ஸ்ரீ யுக்தேஸ்வரின் அறிவுசெறிந்த ஒப்புவமையற்ற சொற்பொழிவைக் கேட்பதிலோ அல்லது ஆசிரமக் கடமைகளில் உதவுவதிலோ நேரத்தைக் கழித்துவிட்டு, பாதி ராத்திரியில் அரை மனத்துடன் பந்திக்குத் திரும்புவேன். எப்பொழுதாவது இரவு முழுவதும் மகிழ்ச்சியுடன் அவருடன் பொழுது விடிவது கூடத் தெரியாமல் பேசிக் கொண்டிருந்ததும் உண்டு.

ஓர் இரவு சுமார் பதினோரு மணிக்கு பந்தி இல்லத்திற்குத் திரும்ப வேண்டி நான் காலணி அணிந்து

கொண்டிருந்த பொழுது குருதேவர் என்னை ஆழ்ந்த கவனத்தோடு விசாரித்தார்.

"உன் A.B. பரீட்சைகள் எப்பொழுது தொடங்குகின்றன?"

"ஐந்து நாட்களுக்குப் பிறகு, ஐயா."

"நீ அதற்குத் தயாராய் இருக்கிறாயென்று நம்புகிறேன்."

ஒரு காலணியை கையில் தூக்கியவாறு நான் கலவரத்துடன் ஸ்தம்பித்து விட்டேன். "ஐயா," நான் ஆட்சேபித்தேன். "நான் கல்லூரிப் பேராசிரியர்களுடன் இருந்ததை விட உங்களுடன்தான் என் நாட்களைக் கழித்தேனென்பது உங்களுக்கே தெரியும். அந்தக் கடினமான தேர்வுகளை எழுதுவதாக எப்படி நான் பாசாங்கு செய்ய முடியும்?"

ஸ்ரீ யுக்தேஸ்வரின் கண்கள் என் கண்களை ஊடுருவி நோக்கின. "நீ எழுதத்தான் வேண்டும்." அவர் குரலில் மிகுந்த கண்டிப்பு தொனித்தது. உன் தகப்பனாரும் மற்ற உறவினர்களும் நீ ஆசிரமத்திலேயே இருந்ததினால் இம்மாதிரி ஏற்பட்டதெனக் குறை கூறுவதற்கு நாம் காரணம் கொடுக்கக் கூடாது. எப்படியும் நீ பரீட்சைகளுக்கு ஆஜராவாய் என எனக்கு வாக்குறுதி கொடு. உன்னால் முடிந்த வரையில் அவைகளுக்கு நன்றாகப் பதிலளி."

கட்டுப்படுத்த முடியாதபடி என் முகத்தில் கண்ணீர் வழிந்தோடியது. எனக்கு அவரது உத்தரவு நியாயமில்லாததாகவும் அவரது அக்கறை,

சொல்லப்போனால், காலங்கடந்ததாகவும் தோன்றியது.

"நீங்கள் விரும்பினால் நான் எழுதுகிறேன், நான் விசும்பலுடன் கூறினேன். ஆனால் சரியானபடி பரீட்சைக்குத் தயார் செய்து கொள்வதற்கு நேரமில்லை. நான் எனக்குள்ளேயே முணுமுணுத்துக் கொண்டேன். கேட்கப்படும் வினாக்களுக்கு விடையாக நான் தங்கள் உபதேசங்களைத்தான் தாட்களில் நிரப்புவேன்!"

அடுத்த நாள் எனது வழக்கமான நேரத்தில் ஆசிரமத் திற்குச்சென்று மலர்ச்செண்டை வருத்தம் தோய்ந்த மனத்துடன் ஸ்ரீ யுக்தேஸ்வரிடம் அளித்தேன். என் துக்கம் நிறைந்த முகத்தைக் கண்டு அவர் சிரித்தார்.

"முகுந்தா, அந்த ஆண்டவன் உன்னை எப்பொழுதாவது கைவிட்டிருக்கிறானா? பரீட்சையிலோ அல்லது வேறு எங்காவதோ?"

"இல்லை ஐயா," நான் உற்சாகமாகப் பதிலளித்தேன். நன்றி கலந்த நினைவுகள் வெள்ளம் போல நினைவுக்கு வந்தன.

"நீ கல்லூரி வெற்றிகளை நாடாமல் இருப்பது உன் சோம்பேறித்தனத்தினால் அல்லவே; கடவுளை அடைவதில் உள்ள ஒரு தகிக்கும் ஆர்வம் தானே அதற்குக் காரணம்," என்றார் என் குருதேவர் இதமாக. சற்று மௌனத்திற்குப் பிறகு, முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள்; அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக் கூட கொடுக்கப்படும்,[2] என்று மேற்கோளாகக் கூறினார்.

ஆயிரமாவது தடவையாக என் குருதேவரின்

முன்னால் என் பாரங்கள் விலக்கப்பட்டதாக நான் உணர்ந்தேன். குறித்த நேரத்திற்கு முன்பாகவே எங்கள் மதிய உணவை உட்கொண்ட பிறகு அவர் என்னை பந்திக்குத் திரும்பச் சொன்னார்.

"உன் நண்பன் ரமேஷ் சந்திர தத் இன்னமும் பந்தியில் தானே வசிக்கிறான்?"

"ஆம், ஐயா."

"அவனுடன் தொடர்பு கொள்; உன் பரீட்சைகளில் உதவ வேண்டுமென்ற விருப்பத்தைக் கடவுள் அவனுக்கு அளிப்பார்."

"நல்லது ஐயா, ஆனால் ரமேஷ் மிகத் தீவிரமாக படித்துக் கொண்டிருப்பானே. எங்கள் வகுப்பில் அவன்தான் ஹானர்ஸ் மாணவன். மற்றவர்களை விட அவனுக்குப் பாடங்கள் அதிகமாயிற்றே."

குருதேவர் என் ஆட்சேபணைகளை ஒதுக்கித் தள்ளி விட்டார். உனக்கு உதவ ரமேஷுக்கு நேரம் கிடைக்கும். இப்பொழுது நீ போய்வா, என்றார்.

நான் பந்திக்கு சைக்கிளில் திரும்பினேன். மாணவர் விடுதியின் வளாகத்தில் நான் சந்தித்த முதல் நபர் ரமேஷ்தான். என்னவோ அவனுக்கு அலுவல்கள் இல்லாமல் நேரம் இருப்பது போன்று, நான் தயக்கத்துடன் கூறிய கோரிக்கையை அவன் ஏற்றுக் கொண்டு எனக்கு உதவ ஒப்புக் கொண்டான்.

"நிச்சயமாக! நான் அவசியம் உனக்கு உதவுகிறேன்," என்றான்.

பல மணி நேரங்களை அன்றும் அடுத்த சில

நாட்களிலும் எனது வெவ்வேறு பாடங்களைக் கற்பிப்பதில் செலவழித்தான்.

"ஆங்கில இலக்கியத்தில் அனேகக் கேள்விகள் சைல்ட் ஹெரால்ட் பயணம் செய்த வழியைப் பற்றியதாக இருக்குமென என் மனத்தில் படுகிறது. நாம் உடனே ஒரு தேசப்படப் புத்தகத்தைப் பார்க்க வேண்டும், " என்றான் என்னிடம்.

நான் உடனே என் சித்தப்பா சாரதாவின் வீட்டிற்கு விரைந்து, ஒரு தேசப்படப் புத்தகத்தை இரவலாக வாங்கி வந்தேன். பைரனுடைய விசித்திரமான கற்பனைப் பயணி சென்றவிடம் எல்லாவற்றையும் ரமேஷ் எனக்கு ஐரோப்பிய தேசப்படத்தில் குறித்துக் கொடுத்தான்.

சில வகுப்பு மாணவர்கள் பாடம் சொல்லிக் கொடுக்கப் படுவதை வேடிக்கைப் பார்க்கக் கூடினார்கள். பாடம் முடிந்த பிறகு அவர்களில் ஒருவன், ரமேஷ் உனக்குத் தவறாகச் சொல்லிக் கொடுக்கிறான். வழக்கமாக ஐம்பது சதவீதம் மட்டுமே படித்த பாடங்களிலிருந்து வரும். மற்றவை ஆசிரியர்களின் வாழ்க்கையைப் பற்றியதாக இருக்கும், என்றான்.

நான் ஆங்கில இலக்கியப் பரீட்சையில் உட்கார்ந்ததும் என் பார்வை முதன் முதலாகக் கேள்விகளை நோக்கியவுடன் என் கண்கள் தாமாகவே நன்றிக் கண்ணீரைப் பெருக்கி என் விடைத்தாட்களை நனைத்தன. வகுப்பறையில் இருந்த அதிகாரி என் மேஜையருகில் வந்து கனிவாக விசாரித்தார்.

"என் குரு, ரமேஷ் எனக்கு உதவுவானென முன்பே

அறிவித்திருந்தார், நான் விளக்கினேன். பாருங்கள், ரமேஷ் எனக்கு உத்தேசித்துக் கூறிய அதே வினாக்கள்தாம் இந்த பரீட்சைத் தாளிலும் உள்ளன! நான் தொடர்ந்தேன். என் அதிர்ஷ்டவசமாக இந்த வருடம் ஆங்கில நூலாசிரியர்களைப் பற்றிய வினாக்கள் மிகக் குறைவாகவே உள்ளன. என்னைப் பொறுத்த வரையில் அவர்களது வாழ்க்கை ஆழ்ந்த மர்மத்தில் தான் மூழ்கி இருக்கிறது!"

நான் திரும்பியபொழுது என் உணவு விடுதி ஒரே அமர்க்களமாக இருந்தது. ரமேஷிடம் பாடம் கேட்டதற்கு என்னைக் கேலி செய்த மாணவர்கள் இப்பொழுது என் காது செவிடுபடும்படி என்னைப் பாராட்டினார்கள். பரீட்சைகளின் அந்த வாரம் முழுவதையும் முடிந்த நேரமெல்லாம் நான் ரமேஷுடனேயே கழித்தேன். பேராசிரியர்களால் கேட்கப்படக் கூடிய கேள்விகள் எவையாக இருக்கலாம் என்று அவன் கருதியதை முறைப்படுத்திக் கொடுத்தான். ஒவ்வொரு நாளும் ரமேஷின் கேள்விகள் அப்படியே அதே வார்த்தைகளில் இடம் பெறலாயின.

அதிசயம் போன்று ஏதோ நிகழ்கிறது; அதனால் மறதி நிறைந்த அந்தப் பைத்தியகாரத் துறவி பரீட்சையில் தேறுவதற்கு வாய்ப்புள்ளது போலிருக்கிறது என்ற செய்தி கல்லூரியில் எங்கும் பரவிற்று. நான் இந்த விஷயத்தை ஒளிக்க எந்தவித முயற்சியும் செய்யவில்லை. கேள்விகள் கல்கத்தா பல்கலைக்கழகத்தால் ஏற்பாடு செய்யப்படுவதால்

உள்ளூர்ப் பேராசிரியர்களால் அக்கேள்விகளை மாற்றியமைக்க முடியாது.

ஒரு நாள் காலை ஆங்கில இலக்கிய பரீட்சையைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்த பொழுது நான் ஒரு பெரிய தவறு செய்துவிட்டதை உணர்ந்தேன். சில கேள்விகள் இரு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தனஏ அல்லது பி மற்றும் சி அல்லது டி என்று. ஒவ்வொரு பாகத்திலும் ஒரு கேள்விக்கு மட்டும் விடையளிப்பதற்குப் பதிலாக நான் முதல் பிரிவில் இரண்டு கேள்விகளுக்கும் விடையளித்து விட்டு இரண்டாவது பிரிவை அஜாக்கிரதையால் எழுதாமல் விட்டுவிட்டேன். எனக்கு அதிகப்படியாக அந்த விடைத்தாளில் 33 மதிப்பெண்களே கிடைக்கக்கூடும். அதாவது தேர்வு பெறுவதற்கு வேண்டிய 36 மதிப்பெண்களுக்கு மூன்று குறைவு.

நான் குருதேவரிடம் ஓடி என் வேதனைகளைக் கொட்டினேன்.

"ஐயா, நான் மன்னிக்க முடியாத அசட்டுத்தனமான தவறு ஒன்றைச் செய்து விட்டேன். ரமேஷின் மூலமாகக் கிடைத்த தெய்வீக ஆசிகளுக்கு நான் அருகதை அற்றவன்; முழுவதும் தகுதியற்றவன்."

"சந்தோஷமாக இரு, முகுந்தா." ஸ்ரீ யுக்தேஸ்வரின் குரல் லேசாகவும் கவலையற்றதாகவும் இருந்தது. அவர் நீல ஆகாயத்தை நோக்கி சுட்டிக்காட்டினார். "நீ பட்டம் பெறுவதில் தவறுவதை விட சூரிய சந்திரர்கள் இடம் மாறுவதற்கு சாத்தியக் கூறு அதிகமாக உள்ளது!"

நான் ஆசிரமத்தை விட்டகலும்பொழுது என் மனம் மிகுந்த அமைதி அடைந்திருந்தது. எனினும் கணக்கின்படி நான் தேறுவது என்பது புரிந்து கொள்ள முடியாததாயிருந்தது. நான் ஓரிரு முறை பயத்துடன் ஆகாயத்தை நோக்கினேன். பகலவன் அவனுடைய வழக்கமான பாதையில் பாதுகாப்பாக இருந்தான்.

நான் பந்தியை அடைந்ததும் வகுப்பு மாணவன் ஒருவன் கூறிக் கொண்டிருந்ததைச் செவிமடுத்தேன். ஆங்கில இலக்கியத்தில் தேறுவதற்கு வேண்டிய மதிப்பெண்களை முதன் முதலாக இவ்வருடம் குறைத்திருக்கிறார்கள் என்பதை நான் இப்பொழுதுதான் கேள்விப் பட்டேன்.

நான் அந்தப் பையனின் அறையில் நுழைந்த வேகம் அவனைத் திடுக்கிட வைத்தது. நான் ஆவலுடன் அவனை விசாரித்தேன்.

"நீள்முடித் துறவியே! அவன் சிரித்தவாறு கூறினான். திடீரென்று படிப்பு விஷயத்தில் ஏன் இவ்வளவு அக்கறை? கடைசி நேரத்தில் அழுது என்ன புண்ணியம்? ஆனால் தேற வேண்டிய மதிப்பெண்கள் 33 ஆகக் குறைக்கப்பட்டிருப்பது உண்மையே."

நான் ஆனந்தமாகத் துள்ளிக் குதித்தபடியே என் அறையை அடைந்து மண்டியிட்டவாறு என் பரமபிதாவின் கணக்குத் தவறாத பரிபூரணத்தைப் புகழ்ந்தேன்.

ஒவ்வொரு நாளும் ஒரு தெய்வீகத் தன்மையானது ரமேஷ் மூலமாக எனக்கு வழிகாட்டுவதை நான்

தெளிவாக உணர்ந்து சிலிர்ப்படைந்தேன். வங்காள மொழித் தேர்வு தொடர்பாக ஒரு குறிப்பிடத்தக்க சம்பவம் நடந்தது. ஒரு நாள் காலை அப்பாடத்தை எனக்குக் கற்றுக் கொடுக்காமல் இருந்த ரமேஷ், நான் தேர்வு எழுத விடுதியிலிருந்து கிளம்பி பரீட்சை கூடத்திற்குச் சென்று கொண்டிருந்த சமயம் என்னைக் கூப்பிட்டான்.

"ரமேஷ் உன்னைக் கூவி அழைக்கின்றான். திரும்பாதே; நமக்கு பரீட்சைக்கு நேரமாகிவிடும்," என் கூட இருந்த மாணவன் பொறுமையற்றவனாகக் கூறினான்.

நான் அவனுடைய புத்திமதியைக் கேட்காமல் விடுதிக்குத் திரும்ப ஓடினேன்.

"சாதாரணமாக வங்காள பரீட்சையில் நம் வங்காளப் பையன்கள் சுலபமாகத் தேறிவிடுவார்கள். ஆனால் இந்த வருடம் படிக்க வேண்டிய நூல்களைப் பற்றிய கேள்விகளைத் தொடுத்து மாணவர்களை வதை செய்ய பேராசிரியர்கள் திட்டமிட்டு இருக்கிறார் கள் என்று இப்போதுதான் என்ன த்தில் பட்டது," என்றவாறு அவன் பத்தொன்பதாவது நூற்றாண்டின் ஒரு பெயர் பெற்ற வங்காள வள்ளலான வித்யாசாகர் என்பவரின் வாழ்க்கையிலிருந்து எனக்கு இரு கதைகளின் சாராம்சத்தைக் கூறினான்.

நான் அவனுக்கு நன்றி கூறிவிட்டு விரைவாக சைக்கிளில் தேர்வுக் கூடத்தை அடைந்தேன். அங்கு வங்காள வினாத்தாள் இரு பாகங்களாகப்

பிரிக்கப்பட்டிருந்ததைக் கண்டேன். முதல் கேள்வி வித்யாசாகரின் தரும சிந்தனையைப் பற்றி இரு உதாரணங்கள் கொடு[3] என்பதே. நான் அப்பொழுதுதான் பெற்றிருந்த அறிவாற்றலை அப்படியே விடைத்தாளுக்கு மாற்றும் பொழுது, ரமேஷின் கடைசி நேர அழைப்பிற்கு இணங்கியதற்கு சில நன்றி மொழிகளை எனக் குள்ளேயே ரகசியமாகக் கூறிக் கொண்டேன். வித்யாசாகரின் கொடைகளைப் பற்றி நான் அறிந்திராவிடில் (அவற்றில் இப்போது எனக்குக் கிடைத்த ஒன்றையும் சேர்த்து) நான் வங்காள மொழித் தேர்வில் வெற்றி பெற்றிருக்க முடியாது.

அதே தாளின் இரண்டாவது குறிப்பு "உன்னை மிகவும் ஊக்கப்படுத்திய மனிதரின் வாழ்க்கையைப் பற்றி வங்காள மொழியில் ஒரு கட்டுரை எழுது" என்பதாகும். அன்புள்ள வாசகரே, நான் அந்தக் கட்டுரைக்கு யாரைத் தேர்ந்தெடுத்தேன் என்று உங்களுக்கு அறிவிக்க வேண்டிய அவசியமே இல்லை. நான் பக்கம் பக்கமாக என் குருவைப் புகழ்ந்து எழுதிக் கொண்டிருந்த பொழுது, நான் உங்கள் உபதேசங்களைத்தான் தாட்களில் நிரப்புவேன்! என்று எனக்குள்ளேயே முணுமுணுத்தபடி நான் முன்பே கூறிக் கொண்ட வாக்கியம் நிஜமானதை நினைத்து முறுவலித்துக் கொண்டேன்.

தத்துவ சாஸ்திரத்தில் நான் ரமேஷின் உதவியை நாட விரும்பவில்லை. ஸ்ரீ யுக்தேஸ்வரிடத்தில் வெகு நாள் இருந்து பழகியதில் நான் பாடப் புத்தகங்களின் விளக்கங்களை சௌகரியமாக ஒதுக்கிவிட்டேன். நான்

தத்துவ சாஸ்திரத்தில் எல்லாவற்றையும் விட அதிக மதிப்பெண்கள் பெற்று இருந்தேன். மற்ற பாடங்களில் நான் தேர்ச்சிக்குரிய குறைந்தபட்ச மதிப்பெண்களே பெற்றேன்.

சுயநலமற்ற என் நண்பன் ரமேஷ் தன் தேர்வுகளில் அதிக மதிப்பெண்களை பெற்று உயர்வாகத் தேறினான் என்பதைக் குறிப்பிடுவதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி.

நான் பட்டம் பெற்றதில் என் தந்தை மனங்கொள்ளா மகிழ்ச்சியடைந்தார். முகுந்தா, நீ தேர்வு பெறுவாய் என்று நான் நினைக்கவே இல்லை, என்று அவர் ஒப்புக்கொண்டார். நீ உன் குருவுடனேயே அதிக நேரம் கழித்து வந்தாயே, என்றார் அவர். என் தந்தை கூறாமலிருந்த கண்டனத்தை என் குருதேவர் உண்மையில் சரியாகவே உணர்ந்திருந்தார்.

என் பெயருக்குப் பின் A.B. என்ற எழுத்துக்கள் என்றாவது சேருவதைக் காண்பேனா என்பதில் வருடக்கணக்காக எனக்குச் சந்தேகமாகவே இருந்தது. எனக்குப் புரியாத ஏதோ காரணங்களுக்காக எனக்குக் கிடைத்த தெய்வீகப் பரிசு அது என்பதை உணராமல் நான் அதை உபயோகித்தது அபூர்வமே. கல்லூரியில் படித்தவர்கள் பரீட்சைக்காக நெட்டுருப் போட்டுப் பெற்ற அறிவு, பட்டம் வாங்கிய பிறகு தங்களிடம் நிலைத்து இருப்பது மிகக் குறைவே என்று எப்பொழுதாவது அவர்கள் கூறக் கேட்டிருக்கிறேன். அம்மாதிரி அவர்களே ஒப்புக்கொள்வது, சந்தேகமில்லாமல் மிகக் குறைந்த புத்தக அறிவை உடைய எனக்கு ஓரளவு

ஆறுதலளிக்கிறது.

1915 ஆம் வருடம் ஜூன் மாதம் நான் கல்கத்தா பல்கலைக் கழகத்தில் என் பட்டத்தைப் பெற்ற அன்று, என் குருவின் திருவடிகளில் முழந்தாளிட்டு, அடிபணிந்து அவருடைய ஜீவனிலிருந்து[4] எனக்குள் பாய்ந்து கொண்டிருக்கும் எல்லா ஆசிகளுக்கும் நன்றி கூறினேன்.

"எழுந்திரு, முகுந்தா, என்று அவர் மகிழ்ச்சியுடன் கூறினார். சூரிய சந்திரர்களை இடம் மாற்றி அமைப்பதை விட உன்னைப் பட்டதாரி ஆக்குவது இறைவனுக்குக் கொஞ்சம் சௌகரியமாக இருந்திருக்க வேண்டும்; அவ்வளவு தான்!"

---

1 எனக்கும் பேராசிரியர் கோஷாலுக்குமிடையே இருந்த சுமுகமற்ற உறவு அவருடைய எந்தத் தவறினாலும் அல்ல என்பதை நான் ஒப்புக்கொள்வதுதான் நியாயம். நான் வகுப்பிற்கே செல்லாமலிருந்ததுதான் அதற்குக் காரணம்.

பரந்த தத்துவ அறிவை உடைய அவர் ஒரு சிறந்த பேச்சாளர். பிற்காலத்தில் நாங்கள் ஒருவரையொருவர் உளமாரப் புரிந்து கொண்டோம்.

2 மத்தேயு 6:33 (பைபிள்).

3 நான் அந்தக் கேள்வியின் சரியான சொற்களை மறந்துவிட்டேன். ஆனால் ரமேஷ் எனக்கு அப்பொழுதுதான் கூறிய வித்யாசாகரைப் பற்றிய கதைகள் என்பது ஞாபகம் இருக்கிறது.

பண்டிதர் ஈசுவர சந்திரர் அவருடைய ஆழ்ந்த புலமையால் வங்காளத்தில் வித்யா சாகர் (கல்விக் கடல்) என்ற சிறப்புப் பெயரால் பரவலாக அழைக்கப்பட்டார்.

4 சம்பவங்களின் நடைமுறைகளையும் மற்றவர்களின் மனத்தையும் வசப்படுத்தும் சக்தியானது ஒரு விபூதி (யோக சக்தி) என்று பதஞ்சலி யோக சூத்திரங்களில் III:24 கூறப்பட்டுள்ளது. அது சர்வ பூத தயை யினால் ஏற்படுவது என்று அந்த சூத்திரம் விளக்குகிறது. (பதஞ்சலியின் யோக முறைகள்) (Vol. 17, Oriental Series Harvard Univ..) மற்றும் தாஸ்குப்தாவின் யோக தத்துவம் (trubner's London) ஆகிய இரண்டும் சூத்திரங்களைப் பற்றிய பொருள் செறிந்த புத்தகங்கள் ஆகும்).

எல்லா சமய நூல்களும் இறைவன் மனிதனை சர்வ வல்லமை பொருந்திய தன் பிம்பமாகவே படைத்துள்ளான் என்று பறைசாற்றுகின்றன. உலகத்தைக் கட்டுப்படுத்துவது இயற்கைக்கு அப்பாற்பட்டதாகத் தோன்றினாலும், அந்த சக்தி உண்மையில், தன் தெய்வீக மூலத்தின் சரியான நினைவை எவன் அடைகிறானோ அவனுக்கு உள்ளார்ந்தும் இயல்பாகவும் அமைகிறது. ஸ்ரீ யுக்தேஸ்வரைப் போன்ற இறையுணர்வை அடைந்த மனிதர்கள் அகங்காரத்தையும் அதிலிருந்து தோன்றும் சொந்த

இச்சைகளையும் துறந்தவர்கள். உண்மையான ஆசாரியர்களின் செய்கைகள் சிரமமே இல்லாமல் சுலபமாக ஒழுங்குடன் அதாவது இயல்பான நேர்மையுடன் (ரீதா) ஒன்றி இருக்கும். எமர்ஸன், எல்லா மகான்களும் நேர்மையுடையவர்களாக அல்ல, நேர்மையே ஆகிறார்கள்; சிருஷ்டியின் முடிவின் நோக்கமும் நிறைவேற்றப்படுகிறது. இறைவனும் மிக மகிழ்ச்சி அடைகிறான், என்று கூறியிருக்கிறார்.

இறை உணர்வை அடைந்துவிட்ட எந்த மனிதனும் அதிசயங்களைச் செய்து காட்ட முடியும். ஏனெனில், கிறிஸ்துவைப் போல் படைப்பின் சூட்சும்மான விதிகளை அவன் புரிந்து கொள்கிறான்; ஆனால் எல்லா மகான்களும் அற்புத சக்திகளைச் செய்து காட்ட விரும்புவதில்லை. (பார்க்க பக்கம் 345 அடிக்குறிப்பு) ஒவ்வொரு மகானும் தன் தனிப்பட்ட முறையில் இறைவனின் சொரூபத்தை பிரதிபலிக்கிறார். இரு மணல் துகள்கள் கூட ஒன்று போல் காணப்படாத இவ்வுலகின் அடிப்படை ஆதாரமே தனித் தன்மையைக் காண்பிப்பதுதான்.

இறையொளி பெற்ற மகான்களைப் பற்றி மாறாத வகையில் சட்டங்களை வரையறுக்க முடியாது. சிலர் விந்தைகளை செய்து காட்டுவார்கள், சிலர் அப்படிச் செய்ய மாட்டார்கள்; சிலர் செயலற்று இருப்பார்கள், ஒரு சிலர் (புராதன பாரதத்தின் ஜனக மகாராஜனைப் போலவும் அவிலாவின் புனித தெரஸாவைப் போன்றும்) மிகப் பெரிய செயல்களில் ஈடுபடுவார்கள்; சிலர் போதிப்பார்கள், பிரயாணம் செய்வார்கள், சீடர்களை ஏற்றுக் கொள்வார்கள். மற்றவர்கள் தங்கள் வாழ்வை மௌனமாகவும் ஒரு நிழலைப் போன்றும் யாரையும் பாதிக்காமலேயே கழித்து விடுவார்கள். ஒவ்வொரு மகானுக்கும் வெவ்வேறு லிபியைக் காண்பிக்கும் கர்மா (பழைய வினைகள்) வின் ரகசிய சுவடியை லௌகீக விமரிசகர்கள் யாரும் படித்தறிய முடியாது.

## அத்தியாயம் 24

# நான் ஸ்வாமி பரம்பரையில் சன்னியாசி ஆகிறேன்

"குருதேவா, வங்காளநாக்பூர் ரயில்வேயில் நான் ஓர் உயர் பதவியை ஏற்க வேண்டுமென என் தகப்பனார் ஆவலுடன் இருக்கிறார். ஆனால் நான் அதைத் தீர்மானமாக மறுத்து விட்டேன். நான் நம்பிக்கையுடன் தொடர்ந்தேன்: ஐயா, எனக்கு ஸ்வாமி பரம்பரையில் சன்னியாசம் தந்தருள மாட்டீர்களா? நான் என் குருவைக் கெஞ்சியபடி நோக்கினேன். கடந்த சில வருடங்களாகவே என் தீர்மானத்தின் ஆழத்தைப் பரிசோதிப்பதற்காக வேண்டி அவர் இந்தக் கோரிக்கையை மறுத்தே வந்திருக்கிறார். எனினும் இன்று அவர் கருணையுடன் புன்னகைத்தார்.

"மிகவும் நல்லது, நாளை நான் உனக்கு சன்னியாச தீட்சை அளிக்கிறேன். அவர் அமைதியாகத் தொடர்ந்தார், நீ சன்னியாசியாக வேண்டும் என்ற விருப்பத்தில் உறுதியாக நிற்பது பற்றி எனக்கு மகிழ்ச்சி. லாஹிரி மகாசயர் அடிக்கடி கூறுவார்: நீ உன் வாழ்க்கையின் வசந்த காலமெனும் வாலிபப் பருவத்தில் கடவுளை அழைக்காவிடில், குளிர் காலமெனும் முதுமைப் பருவத்தில் அவர் வர மாட்டார்.'"

"அன்பான குருதேவா, வணக்கத்திற்குரிய தங்களைப் போலவே ஸ்வாமி பரம்பரையில் ஒருவனாக ஆக

வேண்டுமென்ற என் வேட்கையை என்னால் என்றுமே விட முடிந்ததில்லை," அளவு கடந்த அன்புடன் நான் அவரை நோக்கிப் புன்னகை புரிந்தேன்.

"விவாகமில்லாதவன் கர்த்தருக்கு எப்படிப் பிரியமாக இருக்கலாமென்று, கர்த்தருக்குரியவைகளுக்காகக் கவலைப் படுகிறான். விவாகம் பண்ணினவன் தன் மனைவிக்கு எப்படிப் பிரியமாக இருக்கலாமென்று, உலகத்திற்கு உரியவைகளுக்காகக் கவலைப்படுகிறான்."[1] சில ஆன்மீக வழிமுறைகளை மேற்கொண்டு விட்டுப் பிறகு மணம் புரிந்துகொண்ட என்னுடைய பல நண்பர்களின் வாழ்க்கையை நான் அலசிப் பார்த்திருக்கிறேன். உலகப் பொறுப்புக்களென்னும் கடலில் தள்ளப்பட்டு ஆழ்ந்து தியானம் செய்ய வேண்டுமென்ற தங்களது தீர்மானங்களை மறந்து விட்டிருந்தார்கள்.

என் வாழ்வில் கடவுளுக்கு இரண்டாவது இடம்[2] அளிப்பது என்பது என்னைப் பொறுத்தவரையில் நினைக்கவே முடியாதது. அவர்தான் இந்தப் பேரண்டத்தின் ஒரே உரிமையாளர். மனிதனின் ஒவ்வொரு பிறவியிலும் அவன் மீது அருட்கொடைகளை மௌனமாகப் பொழிபவர். அவைகளுக்குப் பதிலாக மனிதன் கடவுளுக்குக் கொடுக்கக் கூடிய பரிசு ஒன்றே உண்டுஅதுதான் அவனது அன்பு. அதைக் கொடுப்பதற்கும் கொடுக்காமலிருப்பதற்கும் அவனுக்கு அதிகாரமளிக்கப்பட்டு உள்ளது.

எண்ணிலடங்கா விதத்தில் சிரமம் எடுத்துக் கொண்டு தன் தோற்றத்தை சிருஷ்டியின் அணுக்களில் மர்மமாகவே வைத்திருப்பதற்கு, இறைவனுக்கு ஒரே காரணம்தான் இருக்க முடியும். அது ஓர் உணர்ச்சி பூர்வமான ஆசை: மனிதன் அவன் சொந்த விருப்பத்தினால் மட்டுமே தன்னைத்தேட வேண்டும் என்ற அவா. வெல்வெட் கையுறை போன்ற வினயமான வழியை உபயோகித்து இறைவன் இரும்பைப் போன்ற தன் சர்வ சக்திக் கரங்களை மறைத்தல்லவா விட்டான்!

மறுநாள் நான் என் வாழ்வில் என்றும் நினைவில் வைத்துக் கொள்ளும் நாட்களில் ஒன்றாகும். சூரியன் பளீரென்று ஒளி வீசிக் கொண்டிருந்தான். அன்று வியாழக்கிழமை என்று எனக்கு ஞாபகம் இருக்கிறது. ஜுலை 1915ல் நான் கல்லூரியிலிருந்து பட்டம் பெற்று சில வாரங்கள் கழிந்திருந்தன. செராம்பூர் ஆசிரமத்தின் உள்ளிருந்த பால்கனியில் குருதேவர் ஒரு புது வெள்ளைப் பட்டுத்துணியை சன்னியாசிகளுக்கே உரிய காவி வண்ணத்தில் நனைத்தார். அந்தத் துணி உலர்ந்த பின்னர் அதை ஒரு துறவியின் உடையாக என் உடலைச் சுற்றி என் குரு அணிவித்தார்.

"ஒரு நாள் நீ மேலைநாடுகளுக்குப் போவாய். அங்கே பட்டுத்துணியை அதிகம் விரும்புவார்கள். வழக்கமான பருத்தித் துணிக்குப் பதிலாக நான் இதை உனக்கு ஓர் அடையாளமாகத் தேர்ந்தெடுத்திருக்கிறேன்."

இந்தியாவில் சன்னியாசிகள் ஏழ்மையைக் குறிக்கோளாகத் தழுவுவதால் பட்டுத்துணி அணிந்த

சன்னியாசி ஓர் அபூர்வக்காட்சியே. இருப்பினும் பல யோகிகள் சில சூட்சுமமான சரீர மின் ஓட்டங்களைத் தக்க வைத்துக் கொள்ளும் சக்தி, பருத்தித் துணிகளை விட பட்டு உடைகளுக்கு அதிகம் என்பதால் அவற்றை அணிவதுண்டு.

"நான் சடங்குகளை வெறுப்பவன், ஸ்ரீ யுக்தேஸ்வர் குறிப்பிட்டார். நான் உன்னை வித்வத் (சடங்கற்ற முறை) முறையில் ஸ்வாமி ஆக்குகிறேன்."

விவிதிசா அல்லது விரிவான முறையில் சன்னியாசம் வாங்கிக் கொள்வதற்கு வேள்வித் தீ எழுப்பி ஈமச் சடங்குகள் அடையாளமாகச் செய்யப்படும். அந்தச் சீடனின் பூத உடல் இறந்து ஞானத் தீயினால் பொசுக்கப்படுவதாகக் கருதப்படுகிறது. பிறகு புதிதாகப் பிறந்த ஸ்வாமி இந்த ஆத்மா பிரம்மம் அல்லது தத்வமஸி அல்லது ஸோஹம்[3] போன்ற ஒரு மந்திரத்தைப் பெறுகிறார். ஆனால் ஸ்ரீ யுக்தேஸ்வர் எளிமையை விரும்புவராதலால் வழக்கமான சடங்குகளை எல்லாம் தள்ளிவிட்டு ஒரு புதுப் பெயரை மட்டும் என்னைத் தேர்ந்தெடுக்கச் சொன்னார்.

"நீயே அதைத் தேர்ந்தெடுக்கும் சலுகையை உனக்கு அளிக்கிறேன், " என்றார் புன்னகைத்தபடி.

ஒரு கணம் யோசித்த பிறகு யோகானந்தா[4] என்று நான் பதிலளித்தேன். அப்பெயர் இறைவனுடன் ஐக்கியமாவதன் (யோகம்) மூலம் அடையும் ஆனந்தம் என்று பொருள்படும்.

"அப்படியே ஆகட்டும். முகுந்த லால் கோஷ் என்ற

உனது குடும்பப் பெயர் மறைந்து இனி நீ ஸ்வாமி பரம்பரையில் கிரி பிரிவைச் சேர்ந்த யோகானந்தா என்றே அழைக்கப்படுவாய்."

நான் ஸ்ரீ யுக்தேஸ்வருக்கு முன்னால் மண்டியிட்டு வணங்கியதும் முதல் தடவையாக என் புதுப் பெயரை அவர் உச்சரித்த பொழுது என் இதயத்துள் நன்றி பெருக்கெடுத்தது. முகுந்தா என்னும் சிறுவன் ஒரு நாள் துறவி யோகானந்தாவாக மாறவேண்டும் என்று எவ்வளவு பிரியத்துடனும் அயராமலும் அவர் உழைத்திருக்கிறார்! நான் மகிழ்ச்சியுடன் ஆதிசங்கரரின்[5] நீண்ட சமஸ்கிருத தோத்திரத்திலிருந்து சில அடிகளைப் பாடினேன்.

மனமல்ல, அறிவல்ல, அகங்காரமும் உணர்வுமல்ல; வானல்ல,
வையமல்ல, நான் உலோகக் கனியுமல்ல.
நானே அவன், நானே அவன், நன்னருள்
பெற்ற ஆத்மாவே நான்!
பிறப்புமில்லை, இறப்புமில்லை, சாதிகுலமேதுமில்லை;
அம்மையுமில்லை, அப்பனுமெனக்கில்லை.
நானே அவன், நானே அவன், நன்னருள்
பெற்ற ஆத்மாவே நான்!
சிறகடிக்கும் சிந்தனையும் கடந்தே
சீருருவம் அற்ற அருவமேயான்.
அனைத்துயிரின் அங்கமெலாம் ஊடுருவி யான் நிற்பேன்;
பந்தமெனும் பயமேதும் எனக்கிங்கில்லை;
நான் சுதந்திரன், என்றுமே நான் சுதந்திரன்
நானே அவன், நானே அவன்,
நன்னருள் பெற்ற ஆத்மாவே நான்.

ஒவ்வொரு ஸ்வாமியும் புராதன காலத்திலிருந்தே பாரதத்தில் மதிக்கப்பட்டு வரும் ஒரு துறவு முறையைச் சேர்ந்தவராவர். தற்போது நிலவும் முறை பல நூற்றாண்டுகளுக்கு முன் சங்கராசாரியாரால் மாற்றி அமைக்கப்பட்டது. அப்பொழுதிலிருந்தே அது இடையறாமல் வணங்கத்தக்க ஆசான்களால்

நிர்வகிக்கப்பட்டு (அவர்கள் ஒவ்வொருவரும் முறைப்படி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரியார் என்றே அழைக்கப் படுகிறார்கள்) வருகிறது. பல சன்னியாசிகள், கிட்டத்தட்ட பத்து லட்சம் பேர் ஸ்வாமி பரம்பரையில் துறவறம் மேற் கொண்டுள்ளார்கள். துறவறத்தில் நுழைவதற்கு தகுதியாக ஏற்கனவே ஸ்வாமி ஆகி இருந்தவர்களிடமிருந்தே தீட்சை பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற நியதி உண்டு. இம்மாதிரி எல்லாத் துறவிகளும் தங்களுடைய ஆன்மீகப் பரம்பரைக்குப் பொதுவான குருவாக ஆதி (முதல்) சங்கராசாரியாரையே கொள்கிறார்கள். அவர்கள் ஏழ்மை (உடைமைகளில் பற்றின்மை), தூய்மை (பிரமசரியம்), தலைவர் அல்லது ஆன்மீக அதிகாரத்திற்குக் கீழ்ப்படிதல் போன்ற விரதங்களை எடுத்துக் கொள்கிறார்கள். அனேக விதங்களில் கத்தோலிக்கக் கிறிஸ்துவ துறவு முறை, மிகப் புராதன ஸ்வாமி பரம்பரை விதிமுறைகளை ஒத்திருக்கிறது.

தன்னுடைய புதிய பெயருடன் ஒரு ஸ்வாமி, ஸ்வாமி பரம்பரையின் தசநாமிகள் என்ற பத்து உப பிரிவுகளில் ஒன்றுடனான முறையான தொடர்பைக் காட்டும் வகையில் ஒரு சொல்லை சேர்த்துக் கொள்வார். இந்த தசநாமிகள் அல்லது பத்துப் பட்டப் பெயர்களில் ஒன்று கிரி (மலை) யாகும். ஸ்ரீ யுக்தேஸ்வர் கிரி, அவரைத் தொடர்ந்து நானும் அந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள். மற்றப் பிரிவுகளில் சாகரம் (கடல்), பாரதி (பூமி), பூரி (நிலப்பரப்பு), சரஸ்வதி (இயற்கையின்

ஞானம்), தீர்த்தா (யாத்திரை ஸ்தலம்) மற்றும் ஆரண்யா (காடு) ஆகியவை அடங்கும்.

ஒரு ஸ்வாமியின் துறவறப் பெயர் சாதாரணமாக ஆனந்தா (பரமானந்தம்) என்பதில் முடிவது ஒரு குறிப்பிட்ட பாதை, நிலை அல்லது தெய்வீக குணம்அன்பு, அறிவு, பிரித்தறியும் விவேகம், பக்தி, சேவை, யோகம்இவை ஏதேனும் ஒன்றின் மூலமாக முக்தி அடைய அவரது விருப்பத்தைக் குறிக்கும். அவரது பட்டப் பெயர் இயற்கையுடனான இசைவைக் குறிக்கும்.

மனித குலத்திற்கு சுயநலமற்ற சேவை செய்தல் மற்றும் சொந்த பந்தங்களையும் ஆசைகளையும் துறத்தல் ஆகிய குறிக்கோளானது பாரதத்திலும் அல்லது சில சமயங்களில் வெளிநாடுகளிலும் அனேக துறவிகளை பரோபகாரச் செயல்களிலும், கல்வி முதலிய தொண்டுகளிலும் தீவிரமாக ஈடுபடச் செய்கிறது. சாதி, மதம், வகுப்பு, நிறம், பால் மற்றும் இனம் ஆகியவற்றைப் பற்றிய அனைத்துத் தவறான எண்ணங்களையும் விலக்கி விட்டு ஒரு துறவி மனித சகோதரத்துவத்தின் கொள்கைகளைப் பின்பற்றுகிறார். பரமாத்மாவுடன் முற்றிலும் ஒன்றுவதே அவரது குறிக்கோள். அவனே நான் என்ற எண்ணத்தை தூங்கும் போதும், விழித்திருக்கும் போதும் மனத்தில் நன்கு பதிய வைத்துக் கொண்டு மனநிறைவமைதியுடன் அவர் இந்த உலகத்தில் நடமாடுகிறார், ஆனால் உலகத்தைச் சார்ந்து அன்று. இவ்வாறுதான் அவர் ஸ்வாமிஸ்வ அல்லது தன்

ஆத்மாவுடன் ஒன்றிவிடுவதை நாடுபவர் என்ற அவருடைய பட்டத்திற்கு அருகதை உள்ளவராக முடியும்.



பரமஹம்ஸ யோகானந்தரின் குடும்ப வீடு கர்பார் ரோடு, கல்கத்தா

ஸ்ரீ யுக்தேஸ்வர், ஸ்வாமி மற்றும் யோகி என்ற இரண்டுமாவார். ஸ்வாமி என்பவர் ஒரு துறவு வழிமுறையைக் கைக்கொண்டு முறைப்படி சன்னியாசி

ஆனவர். ஸ்வாமியான ஒருவர் எப்பொழுதும் யோகியாக இருந்தாக வேண்டும் என்பதில்லை. தெய்வீக ஞானம் அடைய யோக முறைகளை விஞ்ஞான ரீதியாக ஒரு நெறிமுறையுடன் அனுசரிப்பவர் யாராக இருந்தாலும் அவர் யோகியாகிறார். அவர் திருமணமானவராகவோ அல்லது ஆகாதவராகவோ இருக்கலாம்; உலக பொறுப்புக்கள் உள்ளவராகவோ அல்லது சம்பிரதாய சமயத் தொடர்பு உள்ளவராகவோ இருக்கலாம்.

ஸ்வாமி என்பவர் வறண்ட பகுத்தறிவின் வழியையே கடைப்பிடித்துத் தீவிர துறவுமுறையை அனுசரிப்பவராகவும் இருக்கலாம். ஆனால் ஒரு யோகி தன்னைத் தானே திட்டவட்டமான, படிப்படியான செயல்முறையில் ஈடுபடுத்துவதன் மூலம் உடலும் மனமும் ஒழுங்கு படுத்தப்படுகின்றன; ஆன்மாவும் படிப்படியாக விடுதலை அடைகிறது. உணர்ச்சி பூர்வமாகவோ அல்லது நம்பிக்கையினாலோ எதையும் நிச்சயமாக எடுத்துக் கொள்ளாமல் ஒரு யோகி, புராதன ரிஷிகளால் முதலில் திட்டமிடப்பட்டு பின்னர் முழுவதுமாக பரீட்சிக்கப்பட்ட பயிற்சி முறைகளைப் பயில்கிறார். பாரதத்தில் ஒவ்வொரு காலத்திலும் யோகம், கிறிஸ்துவைப் போன்ற முக்தி பெற்ற உண்மையான யோகிகளை உண்டாக்கி இருக்கிறது.

மற்ற எந்த விஞ்ஞானத்தையும் போல் யோகப் பயிற்சியும் எல்லாக் காலங்களிலும் எல்லா தேசங்களிலும் உள்ள மக்களால் பயன்படுத்தப்படலாம். சில அறியாத எழுத்தாளர்களால் மேற்கத்தியர்களுக்கு

யோக முறை ஆபத்தானது அல்லது ஏற்றதில்லை என்று சொல்லப்படும் கருத்து முற்றிலும் பொய்யானது. இக்கருத்து உண்மையிலேயே யோக முறையை நாடும் ஆர்வமுள்ள அனேக மாணவர்களை அதன் எண்ணிறைந்த நலன்களை அடைவதில் இருந்து தடுத்து நிறுத்தி இருப்பது வருந்தத்தக்கது.

இயற்கையாக மனத்தில் அலைபாயும் எண்ணச் சுழல்களை கட்டுப்படுத்தும் ஒரு முறைதான் யோகம். இவ்வெண்ணச் சுழல்கள் வித்தியாசமில்லாமல் எல்லா நாடுகளிலும் உள்ள எல்லா மனிதர்களும் தங்களின் உண்மையான சொரூபத்தைக் காண முடியாதபடி தடுத்து விடுகின்றன. சூரியனின் குணப்படுத்தும் ஒளியைப் போலவே யோக முறையும், கீழை நாடுகள் மற்றும் மேற்கத்திய நாடுகளிலுள்ள மனிதர்கள் யாவருக்கும் பொருந்தி அவர்களை உயர்வடையச் செய்ய வல்லது. அனேக மனிதர்களின் எண்ணங்கள் நிலையில்லாது அலைமோதியபடிதான் இருக்கும். எனவே யோகம் என்ற, மனத்தைக் கட்டுப்படுத்தும் விஞ்ஞானத்தின் தேவை இன்றியமையாதது என்பது தெளிவாகிறது.

புராதன ரிஷி பதஞ்சலி[6] யோகத்தை உணர்வில், மாறிமாறித் தோன்றும் எண்ண அலைகளை சமனப்படுத்துவது என்று வரையறுத்திருக்கிறார்.[7] அவரது சிறிய, தலை சிறந்த நூலான யோக சூத்திரங்கள் இந்து தத்துவ ஞான சாஸ்திரத்தின் ஆறு முறைகளில் ஒன்றாகும். மேற்கத்திய தத்துவ சாஸ்திரங்களுக்கு மாறுபட்ட விதத்தில் இந்து சமயத்தின் ஆறு

முறைகளுமே[8] தத்துவார்த்தமாக மட்டுமின்றி அனுபவ பூர்வமாகவும் போதனைகளைக் கொண்டுள்ளன. மனத்தில் உதிக்கக் கூடிய ஒவ்வொரு உயிர்த் தத்துவ ஆராய்ச்சியையும் அலசி ஆராய்ந்த பின்னர், துயரங்களை நிரந்தரமாகத் துடைத்து காலவரையற்ற ஆனந்தத்தைப் பெற, இந்து சமயம் ஆறு திட்டவட்டமான வழிமுறைகளை வகுத்திருக்கிறது.

இந்த ஆறு முறைகளிலும் நேரடியாக மெய்யுணர்வை அடைவதற்கு யோக சூத்திரங்களே மிகப் பயன்தரக் கூடிய வழிகளைக் கொண்டுள்ளன எனப் பிற்காலத்தில் தோன்றிய உபநிஷதங்கள் பறைசாற்றுகின்றன. பலனளிக்காத யூகத்தின் பாதையை என்றென்றும் விட்டு விலகி யோகத்தின் நடைமுறை உபாயங்கள் மூலம் மனிதன் மெய்யான சாரத்தை தன் அனுபவத்தில் உணர்ந்து கொள்கிறான்.

பதஞ்சலியின் யோக முறை எட்டு அங்கங்களைக் கொண்ட ஒரு வழிமுறையாகும்.[9] முதல் படிகள் (1) யமம்–ஒழுக்கக் கோட்பாடு மற்றும் (2) நியமம்–சமய அனுஷ்டானங்கள் அல்லது நியமங்கள். யமம் என்பதில் அஹிம்சை, சத்தியம், திருடாமை, பிரமசரியம், பிறர் பொருளுக்கு ஆசைப்படாதிருத்தல் ஆகியவை அடங்கியுள்ளன. நியமக்கட்டளைகளாவனஉடலும் மனமும் பரிசுத்தமாயிருத்தல், எல்லாச் சூழ்நிலைகளிலும் மனநிறைவு, தன்னொழுக்கம், சுய சிந்தனை (ஆழ்ந்து நினைத்தல்) மற்றும் இறை பக்தியும் குரு பக்தியும்.

அடுத்த படிகள் (3) ஆசனம் (சரியான சரீரநிலை)முதுகுத்தண்டு சீரான முறையில் நிமிர்ந்திருக்க உடல் தியானத்திற்கென அசைவின்றி வசதியான முறையில் இருத்தல்; (4) பிராணாயாமம் (பிராணத்தை அதாவது சூட்சுமமான உயிரோட்டங்களைக் கட்டுப்படுத்துவது); மற்றும் (5) பிரத்யாஹாரம் (பொறிகளைப் புறப் பொருட்களிலிருந்து உள்ளிழுத்தல்).

கடைசிப் படிகள்தாம் யோக மார்க்கத்தின் முக்கியமான அம்சங்கள்: (6) தாரணை (ஒருநிலைப்படுத்துதல்)மனத்தை ஒரே எண்ணத்தில் ஒருமுனைப்படுத்துவது; (7) தியானம் மற்றும் (8) சமாதி (தன்னை மறந்த துரியநிலை). யோகத்தின் இந்த எட்டங்க மார்க்கமானது கைவல்யம் (பரிபூரணநிலை) என்ற குறிக்கோளை அடைய வழிகாட்டுகிறது. அப்பொழுது யோகியானவன் அறிவுக்கு அப்பாலான சத்தியத்தை உணர்கிறான்.

"யார் பெரியவர், யோகியா அல்லது ஸ்வாமியா?" என்று ஒருவர் கேட்கலாம். கடவுளுடன் ஒன்றிவிடும் பொழுது பல மார்க்கங்களிலுள்ள வித்தியாசங்கள் மறைந்து விடுகின்றன. ஆயினும் பகவத் கீதை யோக முறைகளே எல்லாவற்றையும் தம்முள் கொண்டன என்று சுட்டிக் காட்டுகிறது. அதன் உத்திகள், சன்னியாச வாழ்க்கையில் நாட்டம் கொண்டவர் போன்ற சில குறிப்பிட்ட வகையினருக்கும் சுபாவத்தினருக்கும் மட்டுமே உரியன அல்ல; யோகத்திற்கு சம்பிரதாயமான தொடர்பு தேவையில்லை. ஏனெனில் யோக விஞ்ஞான

முறை பொதுவான தேவையைப் பூர்த்தி செய்வதால், இயற்கையாகவே யாவருக்கும் ஏற்புடையதாக உள்ளது.

ஓர் உண்மையான யோகி கடமை உணர்வுடன் இந்த உலகில் வாழலாம். அங்கு அவன் தண்ணீரில் வெண்ணெயைப் போன்று இருக்கிறான்; நீரில் எளிதில் கலந்துவிடும் கடையப்படாத பாலை ஒத்த நியதியற்ற மனிதர்களைப் போன்றன்று. அகங்கார இச்சைகளில் மன ஈடுபாடின்றி, தான் இறைவனின் ஓர் உகந்த கருவி என நினைத்து வாழ்க்கையில் தன் பங்கைச் செய்தால், உலகப் பொறுப்புக்களை நிறைவேற்றுவதானது மனிதனைக் கடவுளிடமிருந்து பிரிக்க வேண்டிய அவசியமில்லை.

இன்று அனேக மகான்கள் அமெரிக்காவிலோ, ஐரோப்பாவிலோ, அல்லது இந்து அல்லாத ஸ்தாபனங்களிலோ யோகி மற்றும் ஸ்வாமி என்ற சொற்களைக் கூடக் கேட்டு அறிந்திராதவர்கள், உண்மையில் அப்பதங்களுக்கு இலக்கணமாகத் திகழ்கின்றனர். மனித குலத்திற்கு பற்றற்ற முறையில் ஆற்றும் தொண்டினாலோ அல்லது எண்ணங்களையும் இச்சைகளையும், அடக்கி ஆள்வதின் மூலமோ அல்லது இறைவனிடம் கொண்ட ஒருமுனைப்பட்ட அன்பினாலோ அல்லது மனத்தை ஒருமுகப்படுத்தும் பெருந்திறமையினாலோ அவர்கள் யாவரும் ஒரு விதத்தில் யோகிகளே. அவர்கள் தன்னடக்கம் என்னும் யோகத்தின் குறிக்கோளைக் கொண்டவர்கள். ஒருவருடைய மனத்தையும் வாழ்கையையும் வேண்டிய

வழியில் செலுத்தக்கூடிய திறனை அதிகமாக அளிக்கவல்ல திட்டவட்டமான யோக விஞ்ஞானம், அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டால் அவர்கள் இன்னும் உயர்ந்த நிலைகளை எட்டமுடியும்.

சில மேல்நாட்டு எழுத்தாளர்களால் யோகம் மேம்போக்கான முறையில் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் அதன் விமர்சகர்கள் ஒருபொழுதும் அதை அனுசரித்துப் பார்த்தவர்களில்லை. யோகத்தைப் பற்றி நன்கு ஆராய்ந்து கூறப்பட்ட புகழாரங்களில் ஸ்விட்சர்லாந்தைச் சேர்ந்த புகழ்பெற்ற உளவியல் அறிஞர் டாக்டர் சி.ஜி.யுங் என்பவரால் கூறப்பட்ட கருத்து குறிப்பிடத் தக்கது.

"ஒரு சமயச் செயல்முறை, விஞ்ஞான பூர்வமானது எனக் கூறப்பட்டால் அதற்கு மேலை நாடுகளில் நிச்சயமாக உடனே வரவேற்புக் கிடைக்கும். யோகம் இந்த எதிர்பார்ப்பைப் பூர்த்தி செய்கிறது." டாக்டர் யுங்[10] எழுதுகிறார். நவீனமானது என்பதால் ஏற்படும் வசீகரத்தையும், புரிந்ததும் புரியாததுமாயிருக்கும் தன்மையினால் உண்டாகும் ஒருவித கவர்ச்சியையும் தவிர யோகத்தை அனுசரிப்போர்களின் எண்ணிக்கை அதிகமாவதற்கு நல்ல காரணங்கள் உள்ளன. அது கட்டுப்படுத்தக் கூடிய அனுபவ சாத்தியத்தை அளிக்கிறது. அதனால் உண்மையை நாடும் விஞ்ஞான வேட்கையை திருப்தி செய்கிறது. இதைத் தவிர விரிவானதும் ஆழமானதுமான தன்மையினாலும், அதன் போற்றுதற்குரிய தொன்மையினாலும், வாழ்க்கையின்

ஒவ்வொரு கட்டத்தையும் தன்னுள் கொண்டுள்ள அதன் கோட்பாடு மற்றும் செயல் முறையினாலும் அது கனவில்கூட எண்ண முடியாத சாத்தியங்களை உறுதி அளிக்கின்றது.

"சமயம் அல்லது தத்துவரீதியான ஒவ்வொரு பயிற்சியும் மன ஒழுக்கம் என்பதேயாகும்; அதாவது மனத்தைச் சுத்தப்படுத்தும் ஒரு வழிமுறை. யோக[11]த்தின் பலதரப்பட்ட வெறும் சரீர செயல்முறைகள் கூட உளவியல் ரீதியாக உடலைச் சுத்தப்படுத்தும் முறைதான்–அது சாதாரண உடற் பயிற்சிகளை விடவும் சுவாசப் பயிற்சிகளை விடவும் மேலானது; விஞ்ஞான ரீதியிலும் இயக்க ரீதியிலும் மட்டுமல்லாமல் தத்துவ ரீதியாகவும் உள்ளது; உடலின் உறுப்புக்களுக்குப் பயிற்சி அளிக்கும் பொழுது அது அவைகளை ஆத்மா முழுவதுடனும் ஒன்றிவிடச் செய்கிறது. இது, உதாரணமாக, பிராணாயாமப் பயிற்சிகளில் பிராணன் என்பது சுவாசம் மற்றும் எங்கும் வியாபித்துள்ள பேரண்ட சலனத்திறன் சக்தி இரண்டுமேயாகும் என்பதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது...

"யோக பயிற்சி...யோகத்தின் அடிப்படையான கருத்துக்களைப் புரிந்து கொள்ளாவிடில் பலனளிக்காது. ஓர் அசாதாரண முழுமையான வழியில் அது சரீர மற்றும் ஆத்ம சம்பந்தமானவற்றை இணைக்கிறது.

"கீழை நாடுகளில் இவ்விதமான கருத்துக்களும் பயிற்சிகளும் நன்கு முன்னேற்றமடைந்திருக்கின்றன.

அங்கு பல ஆயிரம் ஆண்டுகளாகத் தடைபடாது இயங்கி வரும் ஒரு சம்பிரதாயம் தேவையான ஆன்மீக அடிப்படைகளைப் படைத்துள்ளது. நான் முழுமனத்துடன் நம்பிய வரையில் யோகம் என்பது, மனத்தையும் உடலையும் பூரணமாகவும் பொருத்தமாகவும் கேள்விக்கிடமின்றி ஒன்றிணைக்கும் ஒரு முறை. இந்த ஐக்கியத்தினால் ஏற்படும் மனோதத்துவ நிலையில் சாதாரண உணர்ச்சிகளைக் கடந்த உள்ளுணர்வுகள் சாத்தியமாகின்றன."

வெளியே இயற்கையை அடக்கி ஆள்வதைப் போல் தன்னை அடக்கி ஆளும் உள்ளார்ந்த விஞ்ஞானமும் அவசியமே என்பதை மேலைநாடுகள் புரிந்து கொள்ளும் நாள் நெருங்கிக் கொண்டிருக்கிறது. பொருள் என்பது உண்மையில் ஒருமுனைப்பட்ட சக்தியே என்று மறுபேச்சின்றி விஞ்ஞான பூர்வமாக நிரூபிக்கப்பட்ட உண்மையினால் இந்த அணுசகாப்தம், மனிதர்களின் மனம் அமைதியடைவதையும் விரிவடைவதையும் காணவே செய்யும். கற்களிலும் உலோகங்களிலும் உள்ள சக்தியை விட எவ்வளவோ அதிகமாக, மனித மனத்தினுள் அடைப்பட்டிருக்கும் சக்தியை அவன் வெளிக் கொண்டு வரமுடியும்; கொண்டு வந்தே ஆகவேண்டும். இல்லாவிடில் புதிதாக அவிழ்த்து விடப்பட்டிருக்கும் லோகாயதமான அணு அரக்கன், இதயமற்ற முறையில் உலகத்தின் அழிவில் ஈடுபடுவான். அணுகுண்டுகளைப் பற்றி மனிதனுக்கு ஏற்பட்டிருக்கும் இந்தப் பயத்தினால் யோக

விஞ்ஞானத்தி[12]ல் அவனுக்கு அனுபவபூர்வமான ஈடுபாடு அதிகமாவது ஒரு மறைமுகமான லாபமாகும்உண்மையில் அதுவே வெடி குண்டு துளைக்காத புகலிடம்.



ஸ்ரீ சங்கராசாரியார், YSS/SRF தலைமையகத்தில்

பூரியின் ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரியார் பாரதி கிருஷ்ண தீர்த்தர் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்ன், சர்வதேசத் தலை மையகத்தில், லாஸ் ஏஞ்ஜிலீஸ், 1958. சங்கராசாரியாரின் மூன்றுமாத அமெரிக்க விஜயம், ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்பால் ஏற்பாடு செய்யப்பட்டது.

1 I கொரிந்தியர் 7:32-33 (பைபிள்).

2 கடவுளுக்கு எவனொருவன் இரண்டாவது இடத்தைத் தருகிறானோ அவன் அவருக்கு இடமே தருவதில்லை.ரஸ்கின்.

3 பதவுரையின்படி, இந்த ஆத்மா பிரம்மமே. பரப்பிரம்மமானது, படைக்கப்படாத தானது, முழுமையாக நிபந்தனையற்றதாகும். (நேதி, நேதி, இதல்ல, அதல்ல). ஆனால் வேதாந்தத்தில் அடிக்கடி சத்–சித்– ஆனந்தம் அதாவது மெய்ம்மைஞானம்ஆனந்தம் என்று குறிப்பிடப்படுகிறது.

4 சன்னியாசிகளிடையே யோகானந்தா என்பது மிகச் சாதாரணமாகக் காணப்படும் பெயராகும்.

5 சங்கரர் சாதாரணமாக, சங்கராசாரியார் என்று அழைக்கப்படுகிறார். ஆசாரியர் என்றால் மத சம்பந்தமான ஆசிரியர் என்று பொருள். கல்விமான்களிடையே பொதுவாக நடைபெறும் வாதங்களில் முக்கியமானது சங்கரருடைய காலம் பற்றியதாகும். ஒரு சில ஆதாரங்கள் அந்த ஈடுஇணையற்ற அத்வைதி, கி.மு. ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் எனக் குறிப்பிடுகின்றன. ஆனந்தகிரி என்ற முனிவர் அவரது காலம் கி.மு. 44–12 என்று கூறுகிறார். மேல்நாட்டுச் சரித்திர நிபுணர்கள் சங்கரரின் காலம் கி.பி. எட்டாவது அல்லது ஒன்பதாவது நூற்றாண்டின் தொடக்கம் எனக் கூறுகிறார்கள். பல சகாப்தங்களும் அவரை உரிமை கொண்டாடுகின்றன.

பூரியிலுள்ள புராதனமான கோவர்த்தன மடத்தின் காலஞ்சென்ற ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரியாரான பூஜ்ய ஸ்ரீ பாரதி கிருஷ்ண தீர்த்தர் 1958-ல் மூன்று மாதங்கள் அமெரிக்காவிற்கு விஜயம் செய்தார். சங்கராசாரியார் எவரும் மேல்நாட்டிற்கு விஜயம் செய்வது அதுவே முதல் தடவையாகும். வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த அவருடைய பயணம், பரமஹம்ஸ யோகானந்தரின் ஸ்தாபனங்களான ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் மற்றும் யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா இவைகளால் ஏற்பாடு செய்யப்பட்டது. ஜகத்குரு அமெரிக்காவில் முன்னணியில் உள்ள பல்கலைக்கழகங்களில் உரையாற்றியதுடன் பிரபலமான வரலாற்று நிபுணரான டாக்டர். ஆர்னால்ட் டாயின்பியுடன் உலக சமாதானத்தைப் பற்றிய கலந்துரையாடலிலும் பங்கேற்றார்.

1959ல் பூரி சங்கராசாரியார், சங்கத்தின் தலைவியான ஸ்ரீ ஸ்ரீ தயா மாதாவின் அழைப்பை ஏற்று யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா/ ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப் ஆகியவற்றின் குருமார்களின் பிரதிநிதியாக இரு யோகதா சத்சங்க துறவிகளுக்கு சன்னியாச தீட்சை அளிக்க ஒப்புக்கொண்டார். அவர் அந்த சடங்கைப் பூரியில் யோகதா சத்சங்க ஆசிரமத்திலுள்ள ஸ்ரீ யுக்தேஸ்வரின் கோயிலில் நிறைவேற்றினார். (பிரசுரதாரரின் குறிப்பு)

6 பதஞ்சலியின் காலம், கி.மு. இரண்டாவது நூற்றாண்டு எனப் பல அறிஞர்கள் கூறிய போதிலும் சரியாகத் தெரியவில்லை. ரிஷிகள் அனேக விஷயங்களைப் பற்றி மிக்க உள்ளார்ந்த அறிவுடன் இயற்றியிருக்கும் ஆராய்ச்சி நூல்களைப் பழையன என்று அவற்றை ஒதுக்கிவிடக் கூடிய ஆற்றல் காலத்திற்கு இல்லை. ஆயினும் பின்னால் வந்த வரலாற்று ஆசிரியர்களின் திகைப்பிற்கு ஏதுவாக அம்முனிவர்கள் தங்கள் இலக்கிய நூல்களில் தங்களின் காலத்தையோ அல்லது தங்களுக்குரிய முத்திரையையோ இணைப்பதற்கு எந்த முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. தங்களுடைய வாழ்வின் மிகக் குறுகிய காலம், முடிவில்லா மகாஜீவனின் ஒளிக்கீற்றுகளாக வெறும் தற்காலிக முக்கியத்துவம் வாய்ந்தது என்று அவர்களுக்குத் தெரிந்திருந்தது; சத்தியம் அனாதியானது, வியாபார முத்திரைக்கு அப்பாற்பட்டது, எவருக்கும்

தனிப்பட்ட சொத்தாக சொந்தமானதில்லை என்பதும் அவர்களுக்குப் புரிந்திருந்தது.

7 சித்த விருத்தி நிரோதம் (யோக சூத்திரங்கள் I:2) என்பது, மனமூலப் பொருளில் ஏற்படும் மாறுபாடுகளின் நிறுத்தம் என்றும் மொழிபெயர்க்கப்படலாம். சித்தம் என்பது நினைத்தலின் தத்துவத்தைக் குறிக்கும் விசாலமான ஒரு சொல்லாகும். பிராண உயிர்ச்சக்திகள், மனஸ் (மனம் அல்லது புலனறிவு) அகங்காரம் (நான் என்பது), புத்தி (உள்ளுரும் அறிவுத் திறன்) ஆகியன சித்தத்தினுள் அடங்கும். விருத்தி (சுழல் என்று பொருள்படும்) என்பது மனிதமனத்தில் இடையறாமல் எழும்பி அடங்கும் எண்ண அலைகளையும் உணர்ச்சிகளையும் குறிக்கும். நிரோதம் என்பது சமனப்படுத்துதல், நிறுத்துதல், அடக்குதல் என்று பொருள்படும்.

8 வேதங்களில் கூறியிருக்கும் ஆறு ஆசார முறைகள் ஸாங்கியம், யோகம், வேதாந்தம், மீமாம்ஸம், நியாயம், வைசேஷிகம் என்பவையாகும்.

9 புத்த மதத்தின் உன்னத எட்டுவழி மார்க்கம் என்பதிலிருந்து இவை வேறுபட்டவை. மனித நடத்தைக்கு வழிகாட்டியான அம்மார்க்கம் பின்வருமாறு:

(1) சரியான குறிக்கோள்கள் (2) சரியான எண்ணம் (3) சரியான பேச்சு (4) சரியான செயல் (5) பிழைப்புக்கான சரியான வழி (6) சரியான முயற்சி (7) சரியான ஞாபகம் (தன்னைப் பற்றி) மற்றும் (8) சரியான அனுபூதி (சமாதி).

10 டாக்டர் யுங், 1937ல் இந்திய விஞ்ஞான மகாசபையில் (Indian Science Congress) பங்கேற்றார். அவர் கல்கத்தா பல்கலைக்கழகத்திலிருந்து கௌரவப்பட்டம் ஒன்றைப் பெற்றார்.

11 தேக ஆரோக்கியத்திற்கும் நீண்ட ஆயுளுக்கும் ஏற்ற உடலின் பலவித நிலைகளையும் (ஆசனங்கள்) உத்திகளையும் கொண்ட ஹதயோகம் என்னும் ஒரு விசேஷமான பிரிவைப்பற்றி டாக்டர் யுங் இங்கு குறிப்பிடுகிறார். ஹதயோகம், உபயோகமானதும் உடல் சம்பந்தமாக பல ஆச்சரியகரமான விளைவுகளை அளிப்பதுமாகும். ஆனால் ஆன்மீக விடுதலையை நோக்கமாகக் கொண்ட யோகிகள் இந்த யோக மார்க்கத்தை அவ்வளவாகப் பயன்படுத்துவதில்லை.

12 யோகம் என்பதைப் பற்றி சரியாக விவரம் தெரியாதவர்கள், அது ஹதயோகம் என்பதாகவே நினைக்கிறார்கள்; மேலும் யோகம் என்பது ஏதோ மந்திர வித்தை, அதிசயமான திறன்களை அடைவதற்கு செய்யப்படும் இருண்ட மர்மமான சடங்குகள் நிறைந்ததென்று எண்ணுகிறார்கள். ஆனால் அறிஞர்கள் யோகம் என்று கூறும்பொழுது, அவர்கள் யோக சூத்திரங்கள் (பதஞ்சலியின் சூத்திரங்கள் என்றும் கூறப்படும்): இராஜ யோகத்தில் விவரிக்கப்பட்டுள்ள முறையையே குறிப்பிடுகிறார்கள். இந்த நூலில் மிக உயர்ந்த தத்துவக் கருத்துக்கள் அடங்கியுள்ளதால்தான், பரம ஞானியான சதாசிவேந்திரர் (பார்க்க பக்கம் 581 அடிக்குறிப்பு.) உள்பட, பாரதத்தின் மிகப் புகழ்பெற்ற தத்துவ மேதைகளில் பலரும் இதற்கு விளக்க உரைகள் எழுதத் தூண்டப்பட்டனர்.

மற்ற ஐந்து ஆசார (வேதங்களை ஆதாரமாகக் கொண்டவை) தத்துவ முறைகளைப் போலவே யோக சூத்திரங்களும், அறத் தூய்மை என்னும் மாயா ஜாலத்தை (யமம் மற்றும் நியமத்தின் பத்து கட்டளைகள்) சரியான தத்துவ ஆராய்ச்சிக்கு தவிர்க்க முடியாத ஆரம்ப அத்தியாவசியம் என்று கருதுகிறது. மனிதனின் சொந்த நடவடிக்கைளைக் கட்டுப்படுத்தும் இந்த கோரிக்கைகள், மேலை நாடுகளில் அவ்வளவாக வலியுறுத்தப்படவில்லை. ஆனால் இவை பாரதத்தின் ஆறு விதிமுறைகளுக்கும் ஒரு நிரந்தரமான சக்தியை அளித்துள்ளன. இந்தப் பிரபஞ்சத்தை நிலைநிறுத்தும் அண்ட

கோசத்தின் விதிமுறைகள் (ரீதா) தனி மனிதனின் விதியை நிர்ணயிக்கும் ஒழுக்க நெறிகளிலிருந்து வேறுபட்டதல்ல. அனைத்திற்கும் பொதுவான ஒழுக்க நெறிகளை அனுசரிப்பதற்கு விரும்பாத மனிதன், சத்தியத்தைத் தேடுவதில் தீவிர தீர்மானம் உடையவனில்லை.

யோக சூத்திரங்களின் மூன்றாவது பாகம் பலவித அதிசயமான யோக சக்திகளை (விபூதிகள், சித்திகள்) பற்றிக் குறிப்பிடுகிறது. உண்மையான ஞானம் என்பது என்றும் சக்தியேயாகும். யோக மார்க்கமானது நான்கு நிலைகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றும் தனித்தனியான விபூதி–வெளிப்பாடுகளைப் பெற்றுள்ளன. ஏதாவதொரு அபூர்வ சக்தியை அடைந்ததும் அந்த யோகி நான்கு நிலைகளில் ஒன்றின் சோதனைகளில் தாம் வெற்றிகரமாகக் கடந்து விட்டதை உணருகிறார். சில அபூர்வ சக்திகள் சித்தரிப்பது யோக முறையின் விஞ்ஞானபூர்வமான அமைப்பிற்கு அத்தாட்சியாகும். அதில் ஆன்மீக முன்னேற்றத்தைப் பற்றி ஏமாற்றும் யூகங்களுக்கு அறவே இடமில்லை; நிரூபணம் தேவை!

பதஞ்சலி, ஆத்மாவுடன் ஒன்றுபடுவதுதான் பக்தனின் ஒரே குறிக்கோளாக இருக்கவேண்டும் எனவும், விபூதிகள் கைவரப் பெறுதல் அல்லவென்றும், அவை தெய்வீகப் பாதையில் தற்செயலாகத் தென்படும் வெறும் மலர்கள் போன்றவை என்றும் எச்சரிக்கிறார். முடிவற்று வழங்குபவராகிய அந்த இறைவனைத்தான் தேட வேண்டுமேயொழிய அவனுடைய அபூர்வமான பரிசுகளை அல்ல. குறைந்ததான சித்திகள் கைவரப் பெற்றதும் திருப்தி அடைபவனுக்கு இறைவன் தன்னைக் காண்பித்துக்கொள்வதில்லை. ஆதலால் முயற்சி செய்யும் யோகி தன் அபூர்வ சக்திகளை பயன்படுத்தாமலிருக்க வேண்டும் என ஜாக்கிரதையாக இருக்கிறான். இல்லாவிடில் இவை பொய்யான கர்வத்தை உண்டாக்கி முடிவான கைவல்ய நிலையை அடைவதிலிருந்து அவனை திசை திருப்பிவிடும்.

யோகியானவன் தன் முடிவற்ற குறிக்கோளை அடைந்தவுடன் தன்னுடைய விருப்பப்படி விபூதிகளைப் பயன்படுத்தவோ அல்லது அவற்றைப் பயன்படுத்துவதை தவிர்க்கவோ செய்கிறான். பின்னர் அவனுடைய செயல்களெல்லாம், அதிசயமானவையோ அல்லது சாதாரணமானவையோ, கர்மவினையின் தொடர்பின்றி நிறைவேற்றப்படுகிறது. எங்கு நான் என்னும் அகந்தையான காந்தம் இன்னும் உள்ளதோ அங்குதான் கர்மவினை என்னும் இரும்புத்துகள்கள் ஈர்க்கப்படும்.

அத்தியாயம் 25

# அண்ணன் அனந்தாவும் தங்கை நளினியும்

அனந்தா உயிரோடு இருப்பதற்கில்லை. இப்பிறவிக்கான அவனுடைய வினைக்கணக்கு தீர்ந்துவிட்டது.

இந்தத் தீர்மானமான சொற்கள் ஒரு நாள் காலையில் ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்திருந்த பொழுது என் உள்ளுணர்வில் எழுந்தன. நான் சன்னியாசம் வாங்கிக் கொண்ட சில நாட்களுக்குள் என் அண்ணன் அனந்தாவின் விருந்தாளியாக என் பிறந்த ஊரான கோரக்பூருக்கு நான் சென்றிருந்தேன். திடீரென்று ஏற்பட்ட ஒரு நோய் அவனைப் படுக்கையில் தள்ளியது. நான் பிரியமுடன் அவனுக்குப் பணிவிடை செய்தேன்.

தீவிரமாக உள் மனத்தில் தோன்றிய இந்தப் பிரகடனம் என்னைத் துக்கத்திலாழ்த்தியது. நான் எதுவும் செய்ய முடியாமல் என் கண் முன்னாலேயே என் சகோதரன் அகற்றப்படுவதைப் பார்க்க மட்டுமே நான் கோரக்பூரில் அதிக நாள் இருப்பது, என்னால் தாங்க முடியாது என்று உணர்ந்தேன். என் உறவினர்கள் இந்நிலையை புரிந்து கொள்ளாது தொடுத்த கண்டனத்திற்கு மத்தியில் நான் உடனே கிடைத்த முதல் கப்பலில் இந்தியாவை விட்டுக் கிளம்பினேன். அது பர்மா, சீனக் கடல் வழியாக ஜப்பானைச்

சென்றடைந்தது. நான் கோபேயில் இறங்கிச் சில நாட்களே அங்கு தங்கினேன். என் மனம் மிகப் பாரமாயிருந்ததினால் நான் எங்கும் சுற்றிப் பார்க்கச் செல்லவில்லை.

இந்தியாவிற்குத் திரும்பும் பொழுது கப்பல் ஷாங்காயை அடைந்தது. அங்கு கப்பல் மருத்துவர், டாக்டர் மிஸ்ரா அனேக வினோதமான பொருட்கள் நிறைந்த கடைகளுக்கு என்னை அழைத்துச் சென்றார். அங்கு நான் ஸ்ரீ யுக்தேஸ்வருக்கும் என் குடும்பத்தாருக்கும் நண்பர்களுக்கும் அனேக பரிசுப் பொருட்களை வாங்கினேன். அனந்தாவிற்கு நான் மூங்கிலில் செதுக்கப்பட்ட பெரிய பொருள் ஒன்றை பரிசாக வாங்கினேன். அந்தச் சீனக் கடைக்காரர் அதை என்னிடம் கொடுத்த அதே சமயம் நான் இதை இறந்துவிட்ட என் அன்பான அண்ணனுக்காக வாங்கியிருக்கிறேன்! என்று அழுது கொண்டே கீழே விழவிட்டேன்.

அவனுடைய ஆத்மா அப்பொழுதுதான் அண்ட வெளியில் விடுவிக்கப்பட்டது என்பது எனக்குத் தெளிவாக புலப்பட்டுவிட்டது. அந்த ஞாபகார்த்தப் பொருள் அபசகுனமாக கீழே விழுந்ததில் கூர்மையாக விரிசல் கண்டது. தேம்பல்களுக்கிடையே நான் அந்த மூங்கில்மேல் இப்போது மறைந்து விட்ட என் பிரிய அனந்தாவுக்கு, என்று எழுதினேன்.

என்னுடன் துணையாக வந்த டாக்டர் என்னை ஓர் ஏளனமான புன்முறுவலுடன் நோக்கினார்.

உன் கண்ணீரை வீணாக்காதே. அவன் நிச்சயமாக இறந்து விட்டான் என்று தெரிவதற்கு முன்னால் அழுவானேன்? என்று குறிப்பிட்டார்.

எங்கள் கப்பல் கல்கத்தாவைச் சென்றடைந்த பொழுது மறுபடியும் டாக்டர் மிஸ்ரா என்னுடன் வந்தார். என் கடைசித் தம்பி விஷ்ணு என்னை வரவேற்கத் துறைமுகத்தில் காத்திருந்தான்.

அவன் எதுவும் கூறுவதற்கு முன்னாலேயே, அனந்தா உயிரைவிட்டு விட்டானென்பது எனக்குத் தெரியும். எப்பொழுது இறந்தானென்று எனக்கும் இந்த டாக்டருக்கும் தயவு செய்து சொல், என்றேன்.

விஷ்ணு தேதியைக் குறிப்பிட்டான். நான் ஷாங்காயில் ஞாபகார்த்தப் பொருட்கள் வாங்கிய அதே நாள் தான்!

இங்கே பார்! டாக்டர் மிஸ்ரா ஆச்சரியத்துடன் கூவினார். இந்த விஷயம் எங்காவது பரவிவிடப் போகிறது! பேராசிரியர்கள் உள் மனங்களின் உரையாடல் என்ற தலைப்பில் மருத்துவப் படிப்பில் இன்னுமொரு வருடம் சேர்த்து விடுவார்கள். ஏற்கனவே அது மிக நீண்டிருக்கிறது! எங்கள் வீட்டைச் சென்றடைந்ததும் என் தந்தை என்னை ஆரத் தழுவினார். நீ வந்துவிட்டாய், அவர் இதமாகக் கூறினார். இரு பெரிய கண்ணீர்த் துளிகள் அவர் கண்களிலிருந்து உதிர்ந்தன. சாதாரணமாக எதையும் வெளிக் காட்டிக் கொள்ளாத அவர் இந்த மாதிரி என்றும் என்னிடம் பாசத்தின் வெளி அடையாளங்களைக் காண்பித்ததில்லை. வெளியில்

அழுத்தமாகத் தோன்றும் தந்தை, உள்ளே தாயைப் போன்றதொரு இளகிய மனம் படைத்தவர். குடும்ப விஷயங்கள் அனைத்திலும் அவர் தாய், தந்தை என்ற இரட்டைப் பாத்திரங்களின் பாகத்தை ஏற்றிருந்தார்.

அனந்தா இறந்த பிறகு சீக்கிரமே என் தங்கை நளினி சாவின் பிடியிலிருந்து கடவுள் அருளால் பிழைத்தெழுந்தாள். அக்கதையைக் கூறுவதற்கு முன் எங்கள் சிறு வயதின் சில கட்டங்களைப் பற்றிக் கூறுகிறேன்.

குழந்தைப் பருவத்தில் எனக்கும் நளினிக்கும் இருந்த உறவு முழுதும் சந்தோஷமானதாக இருந்ததில்லை. நான் மிக ஒல்லியாக இருந்தேன். அவள் என்னைவிட ஒல்லியாக இருந்தாள். நான் உணர்ந்தறியாத ஒரு காரணத்தினால்ஆனால் உளநோய் வல்லுநர்கள் எளிதில் புரிந்து கொள்வர்என் சகோதரியின் தோற்றத்தைப் பற்றி நான் அடிக்கடி பரிகாசம் செய்வேன். அதற்கேற்றாற்போல் அவளுடைய சுருக்கென்ற பதில்களும் இளமைப் பருவத்திற்குரிய வெகுளித்தன பாணியில் கடுமையாக இருந்தன. சில சமயங்களில் எங்கள் அன்னை குறுக்கிட்டு, பெரியவன் என்பதனால் எனக்குச் செவிட்டில் சிறு அறையும் கொடுத்து, சிறு பிள்ளைத்தன சண்டையைத் தற்காலிகமாக முடித்து வைப்பார்.

அவள் பள்ளிக்கூடப் படிப்பை முடித்ததும் கல்கத்தாவைச் சேர்ந்த டாக்டர் பஞ்சனன் போஸ் என்னும் விரும்பத்தக்க குணமுடைய ஓர் இளம் மருத்துவருடன் அவளுக்குத் திருமணம் நிச்சயமாயிற்று.

மிக ஆடம்பரத்துடன் குறித்த நாளில் திருமணச் சடங்குகளும் நடந்தேறின. எங்கள் கல்கத்தா வீட்டில் திருமண இரவன்று சந்தோஷம் நிறைந்த உறவினர்களின் பெரிய கூட்டத்தில் நான் கலந்து கொண்டேன். நளினி தன்னருகில் இருக்க, தங்க ஜரிகை இழையிட்ட பெரிய தலையணை ஒன்றின் மேல், மாப்பிள்ளை சாய்ந்திருந்தார். ஓர் ஆடம்பரமான ஊதா நிறப் பட்டுப் புடவையால், அடடா, நளினியின் மெலிந்த உடலை முழுவதுமாக மறைக்க முடியவில்லை. நான் என் புதிய மைத்துனரின் தலையணையின் பின்னால் இருந்து கொண்டு அவரை நோக்கி சினேக பாவத்துடன் சிரித்தேன். திருமணச் சடங்கு நடந்த அன்று வரை அவர் நளினியைப் பார்த்ததில்லை, அப்போதுதான் கல்யாண லாட்டரியில் முடிவாக அவருக்குக் கிடைத்தது என்ன என்பது அவருக்குத் தெரிந்தது.

என் அனுதாபத்தைப் புரிந்து கொண்டதும் டாக்டர் போஸ் நளினியைச் சாடையாகச் சுட்டிக் காட்டி என் காதில் கிசுகிசுத்தார், இது என்ன? சொல்.

ஏன், டாக்டர், இது உங்கள் பரிசோதனைக்கான ஓர் எலும்புக்கூடு! என்றேன் பதிலுக்கு.

டாக்டர் போஸ் காலக்கிரமத்தில் எங்கள் குடும்பத்தில் பிரியத்துடன் ஒன்றிவிட்டார். யாருக்கு என்ன சுகவீனம் ஏற்பட்டாலும் அவரிடம்தான் போவோம். நானும் அவரும் சீக்கிரமே நெருங்கிய நண்பர்களானோம். நாங்கள் அடிக்கடி நளினியை இலக்காக வைத்து விளையாட்டாகப் பேசிச் சிரித்துக் கொண்டிருப்போம்.

என் மைத்துனர் ஒரு நாள் என்னிடம் குறிப்பிட்டார். இது ஒரு மருத்துவ அதிசயம். நான் ஒல்லியான உன் சகோதரியிடம் மீன் எண்ணெய் என்ன, வெண்ணெய் என்ன, மால்ட் என்ன, தேன் என்ன, மீன், மாமிசம், முட்டை, மற்ற டானிக்குகள் என்ன, எல்லாவற்யும் முயன்று பார்த்து விட்டேன். ஆயினும் அவள் ஓர் அங்குலத்தில் நூற்றில் ஒரு பங்கு கூடப் பருக்கவில்லை.

சில நாட்கள் கழித்து நான் போஸ் இல்லத்திற்குச் சென்றேன். அங்கு எனக்குச் சில நிமிடங்களே வேலை இருந்தது. நான், நளினி என்னைப் பார்க்கவில்லை என்று நினைத்துக் கிளம்பிக் கொண்டிருந்தேன். நான் முன்வாசலுக்கு வந்ததும் அவளுடைய பிரியமான, ஆனால் கண்டிப்பு மிக்க குரலைக் கேட்டேன்.

அண்ணா, இங்கே வா. இந்தத் தடவை என்னிடமிருந்து நீ தப்ப முடியாது. நான் உன்னுடன் பேச வேண்டும்.

நான் அவள் அறையின் படிகளில் ஏறினேன். நான் ஆச்சரியப்படும்படி அவள் கண்ணீருடன் இருந்தாள்.

அவள், அன்புள்ள அண்ணா, நாம் பழைய சண்டைகளை மறந்து விடுவோம். இப்போது நீ ஆன்மீகப் பாதையில் திடமாகக் காலூன்றி நிற்பதைக் காண்கிறேன். எல்லா விதத்திலும் நான் உன்னைப் போலவே ஆக விரும்புகிறேன், என்றாள். அவள் நம்பிக்கையுடன் தொடர்ந்தாள், நீ இப்பொழுது பார்ப்பதற்கு ஆரோக்கியமாக இருக்கிறாய். நீ எனக்கு உதவி

செய்வாயா? என் கணவர் என்னருகிலேயே வருவதில்லை. இருந்தாலும் நான் அவரை மிகவும் நேசிக்கிறேன்! ஆனால் என் முக்கியமான விருப்பம் இறை வழியில் முன்னேறுவதுதான், நான் ஒல்லியாகவும் கவர்ச்சியாக இல்லாமல் இருக்க வேண்டியிருந்தாலும் சரிதான்.

அவளுடைய கோரிக்கை என் மனத்தை ஆழமாகத் தொட்டது. எங்கள் புதிய நட்பு நிலையாக வளரலாயிற்று. ஒரு நாள் அவள் தன்னை என் சிஷ்யையாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினாள்.

என்னை நீ எப்படி வேண்டுமானாலும் பயிற்சியில் ஈடுபடுத்து. டானிக்குகளை விட நான் கடவுளையே நம்புகிறேன். அவள் கைநிறைய மருந்துகளை அள்ளிக் கொண்டு வந்து அவைகளை ஜன்னலுக்கு வெளியே இருந்த சாக்கடையில் கொட்டினாள்.

அவளுடைய நம்பிக்கைக்கு ஒரு சோதனையாக நான் அவளுடைய ஆகாரத்திலிருந்து மீன், மாமிசம், முட்டை எல்லாவற்றையும் விலக்கிவிடக் கூறினேன். நளினி நான் கூறிய பல வித விதிகளைக் கடுமையாகப் பின்பற்றி அனேக சிரமங்களுக்கும் மத்தியில் சைவ உணவையே ஏற்கத் தொடங்கிய பல மாதங்களுக்குப் பிறகு, அவளைச் சந்தித்தேன்.

தங்கையே, நீ மனச்சாட்சியுடன் ஆன்மீகக் கட்டளைகளை அனுசரித்து வருகிறாய். உனக்குப் பலன் கிடைக்கும் காலம் நெருங்கிவிட்டது, நான் குறும்பாகச் சிரித்தேன். நீ எவ்வளவு பரும னாக விரும்புகிறாய்? நம்

சித்தி வருடக் கணக்காக தன் கால்களையே பார்க்க முடியாமல் இருக்கிறாளே, அது போலவா?

இல்லை, இல்லை! நான் உன்னளவு பருமனாக விரும்புகிறேன்.

நான் பயபக்தியுடன் பதிலளித்தேன். கடவுள் அருளால் நான் என்றும் உண்மையே பேசி வருவதைப் போலவே இப்பொழுதும் உண்மையே பேசுகிறேன்.[1] தெய்வீக ஆசீர்வாதத்தால் உன் உடல் இன்றிலிருந்து மாறுதலடையத் தொடங்கும். இன்னும் ஒரு மாதத்தில் அது நான் இருக்கும் அதே எடையை அடையும்.

என் இதயத்திலிருந்து எழுந்த இந்தச் சொற்கள் நிறைவேறின. முப்பது நாட்களில் நளினியின் எடை என் எடைக்குச் சமமாயிற்று. இந்தப் புது ஊட்டம் அவளுக்கு அழகைக் கொடுத்தது. அவள் கணவர் அவளிடம் ஆழ்ந்த அன்பு கொள்ளத் தொடங்கினார். மிகுந்த அபசகுனமாகத் தொடங்கிய அவர்களது மண வாழ்க்கை மிக ஆனந்தமாக மாறியது.

நான் ஜப்பானிலிருந்து திரும்பியதும், நான் அங்கு இல்லாதிருந்த சமயத்தில் நளினி டைஃபாய்டு ஜுரத்தினால் பீடிக்கப்பட்டிருந்ததை அறிந்தேன். அவள் வீட்டிற்கு விரைந்தேன். அவள் மிக மிக இளைத்துப் போயிருந்ததைக் கண்டு திகிலடைந்தேன். அவள் நினைவற்ற நிலையில் இருந்தாள்.

என் மைத்துனர் கூறினார்: அவள் மனம் நோயினால் பாதிக்கப்பட்டு நினைவிழக்கும்வரை சகோதரன் முகுந்தா இங்கிருந்திருந்தால் எனக்கு இந்த நிலை

ஏற்பட்டிருக்காது என்று கூறிக் கொண்டிருந்தாள். மேலும் அவர் கண்ணீருடன் தொடர்ந்தார். மற்ற மருத்துவர்களும் நானும் நம்பிக்கையை இழந்து விட்டோம். டைஃபாய்டு ஜுரத்தினால் பல நாட்கள் அவதிப்பட்ட பிறகு இப்பொழுது இரத்தக் கடுப்பும் சேர்ந்து கொண்டிருக்கிறது.

நான் என் பிரார்த்தனைகளினால் விண்ணையும் மண்ணையும் அசைக்க முயற்சித்தேன். ஓர் ஆங்கிலோஇந்திய நர்ஸை அமர்த்தினோம். அவளுடைய முழு ஒத்துழைப்பில் நான் என் சகோதரியை நோய் தீர்க்கும் பலவித யோக முறைகளில் ஈடுபடுத்தினேன். அவளுடைய இரத்தக் கடுப்பு மறைந்தது.

ஆனால் டாக்டர் போஸ் துக்கத்துடன் தலையசைத்தார். அவளிடம் சிந்துவதற்கு இனி இரத்தம் எதுவும் இல்லை.

அவள் குணமடைந்து விடுவாள், நான் திடமாகக் கூறினேன். இன்னும் ஏழு நாட்களில் அவளுடைய ஜுரம் நின்றுவிடும்.

ஒரு வாரம் சென்ற பிறகு நளினி கண்களைத் திறந்து என்னை அன்புடன் நோக்கி அடையாளம் தெரிந்து கொண்டதைக் கண்டு நான் மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். அன்றைய தினத்திலிருந்து அவள் வேகமாகக் குணமடையத் தொடங்கினாள். அவள் தன்னுடைய வழக்கமான எடையை அடைந்தும், அவளைக் கிட்டத்தட்டக் கொல்வதற்கிருந்த அவளுடைய வியாதியினால் ஏற்பட்ட வருந்தத்தக்க வடுவை அவள் சுமக்க வேண்டியிருந்தது: அவளுடைய கால்கள்

சுவாதீனமற்றுவிட்டன. இந்திய மற்றும் ஆங்கில மருத்துவ நிபுணர்கள் அவள் குணப்படுத்த முடியாத ஒரு நொண்டி என்று அறிவித்து விட்டனர்.

அவளுடைய உயிருக்காக நான் இடைவிடாமல் செய்த பிரார்த்தனைகளினால் நான் களைப்படைந்திருந்தேன். நான் ஸ்ரீ யுக்தேஸ்வருடைய உதவியைக் கோருவதற்கு செராம்பூருக்குச் சென்றேன். நான் நளினியின் நிலையைப் பற்றி அவரிடம் கூறியதும் அவர் கண்கள் மிகுந்த கருணையை வெளிப்படுத்தின.

உன் சகோதரியின் கால்கள் இன்னும் ஒரு மாத முடிவிற்குள் குணமாகிவிடும், அவர் தொடர்ந்தார். அவள் துளை இடப்படாத இரண்டு காரட் எடையுள்ள நல் முத்தைக் கட்டி தன் தோலில் படும்படி அணியட்டும்.

நான் மகிழ்ச்சி கலந்த நிம்மதியுடன் ஸ்ரீ யுக்தேஸ்வர் காலில் விழுந்து வணங்கினேன்.

ஐயா, நீங்கள் ஒரு மகான்; அவள் குணமாகி விடுவாள் என்ற உங்கள் வாக்கே போதும். ஆனால் நீங்கள் வற்புறுத்தினால் நான் உடனே அவளுக்கு ஒரு நல்முத்தை வாங்கி அளிக்கிறேன், என்றேன்.

என் குரு தலையை அசைத்தார். ஆம், அதைச் செய். அவர் என்றும் பார்த்திராத நளினியின் உடற் கூறுகளைப் பற்றியும் குண நலன்களைப் பற்றியும் சரியாகக் கூறத் தொடங்கினார்.

நான் விசாரித்தேன்: ஐயா, இது சோதிட ஆராய்ச்சியா? உங்களுக்கு அவள் பிறந்த நேரம், தேதி தெரியாதே.

ஸ்ரீ யுக்தேஸ்வர் முறுவலித்தார். இது இன்னும் ஆழ்ந்த சோதிடம். பஞ்சாங்கம் மற்றும் கடிகாரங்களின் சான்றுகளைச் சார்ந்ததன்று. ஒவ்வொரு மனிதனும் படைப்பவனின் அல்லது பேரண்ட மனிதனின் ஒரு பாகமே. அவனுக்குப் பூத உடலைத் தவிர தெய்வீக சரீரம் ஒன்றும் உண்டு. சாதாரண மானிடக் கண்கள் பூத உடலை மட்டுமே காண்கின்றன. ஆனால் ஞானக் கண் இன்னும் ஆழமாக ஊடுருவி, பிரபஞ்ச அமைப்பில் இயைந்த ஒவ்வொரு மனிதனின் முழு பாகத்தையும் அதே நேரத்தில் அவனது தனி பாகத்தையும் அறிய முடியும்.

நான் கல்கத்தாவிற்குத் திரும்பி நளினிக்கு ஒரு நல்முத்தை[2] வாங்கி அளித்தேன். ஒரு மாதத்திற்குப் பிறகு அவளுடைய சுவாதீனமற்ற கால்கள் முழுதும் குணமடைந்து விட்டன.

என் தங்கை தன் இதயங்கனிந்த நன்றியை என் குருதேவருக்கு அறிவிக்கும்படி கூறினாள். அவர் இந்தச் செய்தியை மௌனமாகச் செவிமடுத்தார். ஆனால் நான் அவரிடம் விடைபெற்றுக் கொள்ளும்பொழுது அவர் அர்த்தம் பொதிந்த குறிப்பு ஒன்றைக் கூறினார்.

பல மருத்துவர்கள் உன் சகோதரியிடம் அவளுக்குக் குழந்தை பிறக்க வாய்ப்பே இல்லை என்று கூறி இருக்கிறார்கள். இன்னும் சில வருடங்களில் அவளுக்கு இரண்டு பெண் குழந்தைகள் பிறக்கு மென்று உறுதி கூறு, என்றார்.

சில வருடங்கள் கழித்து நளினி மகிழ்ச்சி

அடையும்படி அவளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது; இன்னும் சில வருடங்களில் இன்னுமொரு மகள் பிறந்தாள்.



ஸ்ரீ ஸ்ரீ தயா மாதா இறை தோழமையில்
ஸ்ரீ தயா மாதா, முன்னாள் தலைவி, யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப்

இந்தியா/ஸெல்ஃப் ரியலைசேஷன் ஃபெலோஷிப் 1968ல் இந்தியாவிற்கு வருகை தந்த பொழுது, தியானத்தில் ஆழ்ந்திருக்கிறார். அவர் எழுதியுள்ளார், ஞபரமஹம்ஸ யோகானந்தர், அவருடைய வார்த்தைகள் மற்றும் தெய்வீக உதாரணத்தினால் மட்டுமின்றி, ஆனால் விஞ்ஞான ரீதியான வநந/நதஊ தியான முறைகளை எங்களுக்கு அளித்ததின் மூலமாகவும் எங்களை வழி நடத்தினார். மெய்ப் பொருளைப் பற்றி வெறுமனே படித்தறிவதால் மட்டும் ஆன்மாவின் தாகத்தை தணிக்க இயலாது. இறைவனானமெய்ப் பொருளின் ஊற்றிலிலிருந்து ஆழ்ந்து பருக வேண்டும். ஆத்மஞானம் என்பது இறைவனைப் பற்றிய நேரடி அனுபவம் மட்டுமே.டு அவருடைய பெயரான தயா மாதாகுறிப்பிடுவது போல், அவர் ஓர் உண்மையான "கருணைத் தாய்." அவருடைய வாழ்க்கையின் பொருள் இறைவனை நேசிப்பதும், அவனுடைய அன்பினை அனைவருடன் பகிர்ந்து கொள்வதும் ஆகும்.

---

1 இந்துமத நூல்கள், எவர் என்றும் உண்மையையே பேசுகிறார்களோ அவர்களுடைய சொற்கள் பலிதமாகக் கூடிய திறனை வளர்த்துக் கொள்கின்றனர் எனப் பறைசாற்றுகின்றன. அவர்கள் தங்கள் இதயத்திலிருந்து என்ன கட்டளைகளைப் பிறப்பிக்கிறார்களோ அவை யாவும் நிறைவேறுகின்றன. (யோக சூத்திரங்கள் II:36) உலகங்கள் சத்தியத்தின் அடிப்படையில் சிருஷ்டிக்கப் பட்டிருப்பதால் எல்லா மத நூல்களும் அதை ஓர் உயர்குணமெனப் போற்றுகின்றன. அதன் உதவியினால் எவரும் தன்னுடைய வாழ்க்கையை பரப்பிரம்மத்துடன் ஒன்றச் செய்யலாம் எனவும் பெருமைப் படுத்திக் கூறுகின்றன. மகாத்மா காந்தி அடிக்கடி சத்தியமே கடவுள் என்று கூறி வந்தார். அவர் வாழ்நாள் முழுவதும் எண்ணம், சொல், செயல் எல்லாவற்றிலும் பரிபூரண சத்தியத்தைக் கடைபிடிக்கப்பாடுபட்டார். சத்தியத்தின் (உண்மை) தத்துவம் காலங்காலமாக இந்து சமுதாயத்தில் வியாபித்து வந்துள்ளது. மார்க்கோ போலோ பிராமணர்கள் உலகத்தில் எதற்காகவும் பொய் கூறமாட்டார்கள் என்று நமக்குத் தெரிவிக்கிறார். இந்தியாவில் வில்லியம் ஸ்லீமன் என்ற ஆங்கில நீதிபதி ஒருவர் 1849-50ல் ஔத் வழியாகப் பிரயாணம் என்ற புத்தகத்தில் கூறுகிறார்: ஒரு பொய் கூறுவதில் ஒரு மனிதனின் சொத்து, சுதந்திரம் அல்லது உயிரே அடங்கியிருந்தும் அதைக் கூற மறுக்கும் நூற்றுக்கணக்கான வழக்குகள் என்னிடம் வந்துள்ளன.

2 நல்முத்துக்கள், மற்ற இரத்தினங்கள் மற்றும் உலோகங்கள், தாவரங்கள் ஆகியவற்றை நேராக மனித உடலைத் தொடும்படி அணியும்பொழுது உடலின் செல்களை அவற்றின் மின்காந்தம் பாதிக்கிறது. மனித உடலிலுள்ள கரி மற்றும் பலவித உலோகத் தனிமங்கள் தாவரங்கள், உலோகங்கள் மற்றும் இரத்தினங்களிலும் கூட உள்ளன. இந்தத் துறைகளில் ரிஷிகளின் கண்டுபிடிப்புகள் நிச்சயமாக என்றாவது உடற்கூறு இயல் வல்லுநர்களின் ஒப்புதலைப் பெற்று ஊர்ஜிதம் செய்யப்படும். மனிதனின் உணர்ச்சிமிக்க உடலும் அதன் மின் உயிரோட்டங்களும் இன்னும் கண்டுபிடிக்கப்படாத பல மர்மங்களின் மையமாக விளங்குகின்றன.

இரத்தினங்களிலும் உலோக வளையல்களிலும் உடலைக் குணப்படுத்தும் திறன் இருந்தாலும் ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வர் அவைகளைச் சிபாரிசு செய்வதற்கு வேறொரு காரணமும் இருந்தது. பெரிய மகான்கள் என்றும் தம்மை மிக உயர்ந்த குணப்படுத்துபவர்களாகக் காண்பித்துக் கொள்ள விரும்பமாட்டார்கள். கடவுள் மட்டுமே குணப்படுத்துபவர். ஆதலால் மகான்கள், தாங்கள் இறைவனிடம் வணங்கிப் பெற்ற திறன்களை அனேக விதங்களில் மறைத்தே செயல் படுத்துவார்கள். மனிதன் சாதாரணமாக

அவனுக்குப் புரியக் கூடிய ஸ்தூலப் பொருட்களையே நம்புகிறான். மனிதர்கள் வியாதியை குணப்படுத்துவதற்காக என் குருவை நாடி வரும்பொழுது அவர்களுடைய நம்பிக்கையை எழுப்புவதற்கும் அவர்களைத் தன்னிடமிருந்து திசை திருப்புவதற்கும், ஒரு வளையலையோ அல்லது இரத்தினத்தையோ அணியச் சொல்வது வழக்கம். அந்த வளையல்கள் அல்லது இரத்தினங்கள் அவைகளில் அடங்கியிருக்கும் இயற்கையான மின்காந்த குணப்படுத்தும் ஆற்றல்களுடன் குருதேவரின் மறைந்துள்ள ஆன்மீக ஆசியையும் பெற்றிருக்கும்.

## அத்தியாயம் 26

# கிரியா யோக விஞ்ஞானம்

இப்பக்கங்களில் அடிக்கடி குறிப்பிடப்பட்டுவரும் கிரியாயோக விஞ்ஞான முறை நவ பாரதத்தில் என் குருவின் குருவான லாஹிரி மகாசயரின் மூலமாக மிகவும் பிரபலமாயிற்று. கிரியா என்னும் சமஸ்கிருதச் சொல்லின் மூல வார்த்தையாகிய க்ரி என்பது செய்ய, செயல் செய்ய மற்றும் எதிர்ச்செயல் செய்ய என்று பொருள்படும். இயற்கை நியதியான காரண காரியங்கள் என்று பொருள்படும் கர்மா என்ற சொல்லிலும் அதே மூலம்தான் காணப்படுகிறது. ஆதலால் கிரியா யோகம் என்பது ஒரு குறிப்பிட்ட செயல் அல்லது சடங்கு (கிரியா) மூலம் பரப்பிரம்மத்துடன் இரண்டறக் கலத்தல் (யோகம்). இந்த உத்தியை விசுவாசத்துடன் பயிற்சி செய்யும் ஒரு யோகி படிப்படியாக கர்மவினை அல்லது நியதிப்படி தொடரும் காரண காரிய சமநிலைகளினாலான சங்கிலித் தொடரிலிருந்து விடுபடுகிறான்.

சில புராதன யோக விதிமுறைத் தடைகளினால் பொதுமக்களுக்காக எழுதப்படும் இப்புத்தகத்தில் கிரியா யோகத்தின் முழுவிளக்கத்தையும் நான் கொடுக்காமல் இருக்கலாம். அதன் சரியான செயல்முறை யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா[1]/ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்-ஆல் அங்கீகரிக்கப்பட்ட

ஒரு கிரியாவானிட (கிரியா யோகி)மிருந்தே கற்றுக்கொள்ளப்படவேண்டும். இங்கு ஒரு விரிவான குறிப்பு மட்டுமே போதுமானது.

கிரியா யோகம் என்பது மனித இரத்தத்திலுள்ள கரியத்தை அகற்றி, பிராண வாயுவின் மூலம் புத்துணர்ச்சி பெறச்செய்யும், மன-உடல் நூல் அடிப்படையிலான ஓர் எளியமுறையாகும். இந்த அதிகப்படியான பிராணவாயுவின் அணுக்கள் உயிரோட்டமாக உருமாற்றப்பட்டு மூளை மற்றும் முதுகுத்தண்டின் மையங்களையும் புத்துணர்ச்சி பெறச் செய்கின்றன. அசுத்த இரத்தம் பெருகுவதை நிறுத்துவதின்மூலம் யோகியானவன் திசுக்களின் அழிவைக் குறைக் கவோ தடுக்கவோ முடியும். நன்கு முன்னேறிய யோகி தன் செல்களைச் சக்தியாக மாற்றுகிறான். எலியா, இயேசு, கபீர் மற்றும் அனேக தீர்க்கதரிசிகள் கிரியா அல்லது அதைப்போன்றதொரு உத்தியில் தேர்ந்தவராயிருந்ததன் மூலம் நினைத்த மாத்திரத்தில் தங்கள் உடல்களை உருவாக்கவோ மற்றும் உருக்குலைக்கவோ செய்தார்கள்.

கிரியா ஒரு புராதன விஞ்ஞானம். லாஹிரி மகாசயர் அவருடைய மகா குருவான பாபாஜியிடமிருந்து அதைப் பெற்றார். பாபாஜி இருண்ட காலங்களில் இழக்கப்பட்டிருந்த இந்த யோக முறையை மறுபடியும் கண்டுபிடித்து தெளிவுபடுத்தினார். அவர் இம்முறைக்கு எளிதாகக் கிரியா யோகம் என்று மறுபெயர் கொடுத்தார்.

பாபாஜி லாஹிரி மகாசயரிடம் கூறினார்: நான் இந்த

பத்தொன்பதாவது நுற்றாண்டில் உன் மூலமாக இவ்வுலகிற்கு அளிக்கும் கிரியா யோகம், கிருஷ்ணர் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் அர்ஜுனனுக்கு அளித்த அதே விஞ்ஞான முறையின் புனருத்தாரணமாகும். பிறகு அது பதஞ்சலிக்கும், கிறிஸ்துவிற்கும், புனித யோவான், புனித பவுல் மற்றும் வேறு சீடர்களுக்கும் தெரிந்திருந்தது.

பகவத் கீதையில் பகவான் கிருஷ்ணர் இரண்டு இடங்களில் கிரியா யோகத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். ஒரு பத்தி கூறுகிறது: உட்சுவாசத்தை வெளிச்சுவாசத்திற்களித்து வெளிச்சுவாசத்தை உட்சுவாசத்திற்களித்து யோகி இரு சுவாசங்களையும் சமனப்படுத்துகிறான்; இவ்வாறு அவன் இதயத்திலிருந்து பிராணனை விடுவித்து உயிரோட்டத்தைத் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவருகிறான்.[2] இந்த விளக்கம் என்னவெனில்: சுவாச கோசங்கள் மற்றும் இதயத்தின் இயக்கங்களை அமைதிப்படுத்துவதன் மூலம் உடலுக்கு அதிகப்படியான பிராணனை (உயிரோட்டத்தை)க் கொடுத்து உடலின் தேய்வை அந்த யோகி தடை செய்கிறான். அபான வாயுவை (கழிவு இயக்கம்) கட்டுப்படுத்துவதன் மூலம் உடலின் வளர்ச்சியினால் ஏற்படும் மாறுபாடுகளையும் தடை படுத்துகிறான். இம்மாதிரி அழிவையும் வளர்ச்சியையும் சமனப்படுத்தி அந்த யோகி உயிரோட்டத்தையே கட்டுப்படுத்தக் கற்கிறான்.

கீதையின் இன்னொரு பத்தி கூறுகிறது: தன்

பார்வையை இரு புருவங்களுக்கிடையில் நிலைநிறுத்தி, நாசித்துவாரங்கள் மற்றும் சுவாசகோசங்கள் வழியாகப் பாயும் பிராண, அபான ஓட்டங்களை சமனப்படுத்தி, ஐம்பொறிகளைச் சார்ந்த மனத்தையும் புத்தியையும் கட்டுப்படுத்தி, ஆசை அச்சம், சினம் இவற்றை அறவே விட்டு பேரின்பத்தை நாடி, வெளித்தோற்றங்களிலிருந்து தன்னை உள்ளிழுக்கவல்ல தியானத்தில் நிபுணனானவன் (முனி) சாசுவதமான முக்தனாகிறான்.[3]

என்றும் அழிக்கமுடியாத இந்த யோகத்தை முன்னொரு அவதாரத்தில் ஞான ஒளி பெற்றவரான புராதன காலத்திய விவஸ்வத் என்பவருக்கு தானே அறிவித்து, அதை அவர் தலைசிறந்த நீதி சாஸ்திர விற்பன்னராகிய[4] மனுவிற்கு அருளினார் என்று கிருஷ்ணர் மேலும் கூறுகிறார்.[5] மனுவும் அவருக்குப் பின் இந்தியாவில் சூரிய வீரர் வம்சத்தை ஸ்தாபித்த இஷ்வாகுவிற்கு உபதேசித்தார். இப்படிப் பரம்பரையாக வந்த இந்த ராஜயோகத்தை ரிஷிகள் கலியுக[6] ஆரம்பம் வரை காத்துவந்தார்கள். பிறகு புரோகிதர்கள் ரகசியமாக வைத்திருந்ததாலும் மனிதனின் அசிரத்தையாலும் காலக்கிரமத்தில் இந்தப் புனித ஞானம் அடைய முடியாததாகிவிட்டது.

யோகத்தை விளக்கியவர்களில் முதன்மையானவரான புராதன ரிஷி பதஞ்சலியால் கிரியா யோகம் இரண்டு இடங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவர் எழுதியதாவது: கிரியா யோகத்தில் உடலொழுக்கம், மன வடக்கம் மற்றும்

ஓங்காரத் தியானம்[7] ஆகியவை அடங்கியுள்ளன. பதஞ்சலி, தியானத்தில் உள்ளபடி கேட்கப்படும் பிரபஞ்ச ஒலியான ஓங்கார நாதமே இறைவன் என்கிறார்.[8] ஓம் என்பது படைக்கும் சொல், பிரபஞ்ச இயந்திரத்தின் சுழலோசை மற்றும் தெய்வீக முன்னிலையின் சாட்சி[9] ஆகும். யோக மார்க்கத்தில் தொடக்க நிலையில் இருப்பவர்கூட விரைவில் ஓங்காரத்தின் அற்புதமான நாதத்தைக் கேட்கலாம். இந்த ஆனந்தமான ஆத்மானுபவத்தால் ஏற்படும் உற்சாகத்தின் மூலம் அவனுக்குத் தான் வானுலக பிரதேசங்களுடன் தொடர்பு கொண்டிருப்பதில் நம்பிக்கை ஏற்படுகிறது.

பதஞ்சலி இரண்டாவது முறை கிரியா உத்தியை அல்லது உயிர்சக்தி கட்டுப்பாட்டை இம்மாதிரி வர்ணிக்கிறார்: உட்சுவாச மற்றும் வெளிச் சுவாச போக்கைத் தனித்தனியே பிரித்து அதனால் பெறக்கூடிய பிராணாயாமத்தின் மூலம் முக்தியைப் பெறமுடியும்.[10]

புனித பவுல் அவர்களுக்கு கிரியா யோகம் அல்லது அதைப்போன்றதொரு உத்தி தெரிந்திருந்தது. அதன் மூலம் அவர் புலன்களில் உயிரோட்டங்களைப் பொருத்தி விடவோ அல்லது விடுவிக்கவோ முடிந்தது. ஆதலால்தான் அவரால் கூற முடிந்தது: நான் அனுதினமும் சாகிறேன்; அதை நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினால் நம்மைக் குறித்து, நான் பாராட்டுகிற மேன்மையைக் கொண்டு சத்தியமாய்ச் சொல்லுகிறேன்.[11] உடலின் எல்லா உயிர்ச்சக்தியையும் (பொதுவாக இச்சக்தி வெளியே மட்டும்

செலுத்தப்படுவதால் புலன் உலகிற்கு நியாயமான தோற்றத்தை ஏற்படுத்துகிறது) உள்ளுக்குள்ளே மையம் கொள்ளச்செய்யும் ஒரு வழிமுறை மூலம் புனித பவுல் தினமும் ஒரு மெய்யான யோக ஐக்கியத்தை கிறிஸ்து உணர்வின் பரம ஆனந்தத்துடன் அனுபவித்தார். அந்த ஆனந்தமான உணர்வு நிலையில், தான் புலன் உணர்வு மயக்கங்களாலான மாயா உலகத்திலிருந்து விடுதலை பெற்று இறந்து இருப்பதை உணர்ந்து இருந்தார்.

இறைவனுடன் தோழமை கொள்ளும் ஆரம்ப நிலைகளில் (சவிகல்ப சமாதி) ஒரு பக்தனுடைய உணர்வு நிலை பரமாத்மாவில் ஒன்றுபடுகிறது. அவனது உயிர்ச்சக்தி உடலில் இருந்து உள்ளிழுக்கப்படுவதால் அவன் உடல் இறந்ததுபோல் அல்லது அசையாமலும் விறைப்பானதாகவும் தோற்றமளிக்கிறது. உயிர்த்துடிப்பு நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் தன் உடலின் நிலையை அந்த யோகி முழுவதும் உணர்ந்தே இருப்பான். ஆனால் அவன் இன்னும் உயர்ந்த ஆன்மீக நிலைகளுக்கு முன்னேறும்பொழுது (நிர்விகல்ப சமாதி) அவன் சாதாரண விழிப்பு உணர்வில் மிகுந்த சிரமமான உலகக் கடமைகளில் ஈடுபட்டிருக்கும் பொழுதுகூட உடல் உறுதிப்பாடின்றி கடவுளுடன் தொடர்பு கொள்கிறான்.[12]

கிரியா யோகம் மனிதனின் பரிணாம வளர்ச்சியைத் துரிதப்படுத்தும் ஒரு கருவி, ஸ்ரீ யுக்தேஸ்வர் தன் மாணவர்களுக்கு விளக்கினார். புராதன கால ரிஷிகள் பேரண்ட உணர்வு நிலையின் ரகசியம், சுவாசத்தைக் கட்டுப்படுத்துவதுடன் நெருக்கமாக இணைக்ககப்

பட்டிருக்கிறது என்பதைக் கண்டறிந்தனர். இது உலக அறிவின் கருவூலத்திற்கு பாரதத்தின் ஒப்பற்றதும் சிரஞ்சீவித் தன்மையுடையதுமான பங்கு ஆகும். பொதுவாக இதயத்தின் செயலைப் பராமரிப்பதற்காக கிரகிக்கப்படும் உயிர்ச் சக்தியானது, மூச்சின் இடையறாத தேவைகளை ஒரு வழிமுறையினால் சாந்தப்படுத்தியும் நிறுத்தி வைத்தும், இன்னும் உயர்ந்த நிலைகளில் இயங்குவதற்காக விடுவிக்கப்பட வேண்டும்.

கிரியா யோகி தன் உயிர்ச் சக்தியை மனத்தினால் மேலும் கீழும், முதுகுத்தண்டிலுள்ள ஆறு சக்கரங்களையும் சுற்றி (ஆக்ஞா, விசுத்தா, அனாஹதம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டானம், மூலாதாரம்) இயங்க வைக்கிறான். அவைகள் விசுவ புருஷனின் அடையாளமான ராசி மண்டலத்தின் பன்னிரண்டு ராசிகளுடன் பொருந்துபவையாம். உணர்ச்சிமிக்க முதுகுத்தண்டைச்சுற்றி அரை நிமிடம் சுழலும் சக்தியானது மனிதனின் பரிணாம வளர்ச்சியில் சூட்சுமமான முன்னேற்றத்தைக் கொடுக்கிறது. அந்த அரை நிமிட கிரியா இயற்கையான ஆத்ம முன்னேற்றத்தில் ஒரு வருடத்திற்குச் சமமாகும்.

மனிதனின் சூட்சும அமைப்பானது (astral system) யாதுமறிந்த ஞானக்கண்ணான சூரியனைச்சூற்றி வரும் ஆறு உட்கோள் நிலைகளுடன் (துருவ முறையில் பன்னிரண்டு) பௌதீக சூரியனுடனும், பன்னிரண்டு ராசிகளுடனும் தொடர்பு கொண்டதாகும். இப்படி எல்லா மனிதர்களும் தனக்குள்ளே இயங்கும் உலகத்தினாலும்

வெளி உலகத்தினாலும் பாதிக்கப்படுகிறார்கள். புராதன ரிஷிகள், மனிதனுடைய பூவுலக மற்றும் விண்ணுலகச் சூழ்நிலையானது ஒரு தொகுதியான பன்னிரண்டு வருடச் சுழற்சிகளில் இயற்கையான பாதையில் அவனை முன்னேறச் செய்கிறது எனக் கண்டு பிடித்தார்கள். சமய நூல்கள், மனிதன் பேரண்ட உணர்வு அடையவும் அவனுடைய மனித மூளை முழுமை அடைவதற்கும் இயல்பான வியாதி இல்லாத பத்து லட்ச வருட பரிணாம வளர்ச்சி தேவைப்படுகிறது எனப் பறை சாற்றுகின்றன.

ஒரு நாளில் 8½ மணிநேரத்தில் பயிலப்படும் ஆயிரம் கிரியைகள் ஒரு யோகிக்கு ஆயிரம் வருடங்களில் ஏற்படும் இயற்கையான பரிணாம வளர்ச்சியின் பலனைக் கொடுக்கின்றன. 3,65,000 வருடங்களில் ஏற்படும் பரிணாம வளர்ச்சி ஒரே வருடத்தில் கிடைக்கிறது. மூன்றே வருடங்களில் ஒரு கிரியா யோகி அறிவுடன் கூடிய தன் முயற்சியால் பத்து லட்சம் வருடங்களில் இயற்கை கொடுக்கக்கூடிய பரிணாம வளர்ச்சியை அடைகிறான். இந்தக் கிரியாவின் குறுக்கு வழி மிக்க ஆழ்ந்த முறையில் முன்னேற்றமடைந்த யோகிகளால் மட்டுமே செயல்படுத்த முடியும். ஒரு குருவின் வழிகாட்டுதலுடன் அம்மாதிரியான யோகிகள் மிகத் தீவிரமான பயிற்சியால் ஏற்படும் சக்தியைத் தாங்குவதற்குத் தங்கள் உடலையும் மூளையையும் மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தி இருப்பார்கள்.

தொடக்க நிலையிலிருக்கும் கிரியா யோகி,

அவனுடைய யோகப்பயிற்சியை பதினான்கிலிருந்து இருபத்தி நான்கு தடவைகள் மட்டுமே தினந்தோறும் இரு முறைகள் செய்கிறான். அனேக யோகிகள் ஆறு, பன்னிரண்டு, இருபத்தி நான்கு, அல்லது நாற்பத்தி எட்டு வருடங்களில் முக்தியடைகிறார்கள், முழு ஞானத்தை அடைவதற்கு முன்னால் இறந்துவிடும் ஒரு யோகி, தன்னுடைய கடந்த கால கிரியையின் முயற்சியினால் விளையும் நல்ல கர்ம பலனை தன்னுடன் எடுத்துச் செல்கிறான். அவனுடைய புது வாழ்க்கையில் அவன் இயற்கையாகவே அவனுடைய எல்லையற்ற இலட்சியத்தை நோக்கிச் செலுத்தப்படுகிறான்.

சாதாரண மனிதனுடைய உடல் ஓர் ஐம்பது வாட் விளக்கைப் போன்றது. அதனால், அதிகப்படியான கிரியா பயிற்சியினால் உற்பத்தி செய்யப்படும் ஆயிரம் கோடி வாட் சக்தியை தாங்க முடியாது. கிரியாவின் இந்த எளிய மற்றும் குறையில்லாத பயிற்சிகள், படிப்படியாகவும், முறையாகவும் அதிகரிக்கப்படும்போது மனிதனின் உடல் சூட்சுமமாக நாளுக்கு நாள் மாறுகிறது. இறுதியில் பரமாத்மாவின் முதல் ஸ்தூல செயல் வெளிப்பாடான பேரண்ட சக்தியின் வரையற்ற ஆற்றலை வெளிப்படுத்தும் தகுதி உடையதாகிறது.

கிரியா யோகமானது, தவறாக வழிகாட்டப்பட்ட சில அதி உற்சாகிகளால் கற்றுக் கொடுக்கப்படும் விஞ்ஞான முறைக்கு ஒவ்வாத சுவாசப் பயிற்சிகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. சுவாச கோசங்களில் பலவந்தமாக மூச்சை நிறுத்தி வைப்பது இயற்கைக்கு

மாறுபட்டது என்பதுடன் நிச்சயமாகத் துன்பகரமானதுமாகும். ஆனால் கிரியா பயிற்சி முதலிலிருந்தே அமைதி அளிப்பதுடன் முதுகுத்தண்டில் இதமான உணர்வுகளுடன் கூடிய புத்துணர்ச்சியையும் அளிக்கிறது.

புராதன யோக உத்தி சுவாசத்தை மனோசக்தியாக மாற்றுகிறது. ஆன்மீகத் துறையில் முன்னேற்றமடைந்த ஒருவன் சுவாசத்தை ஒரு மன-தத்துவமாகவும், மனத்தின் செயலாகவும், கனவு சுவாசமாகவும் அறிந்துணர முடியும்.

மனிதனின் சுவாசத்தின் வேகத்திற்கும் அவனுடைய உணர்வு நிலைகளின் மாறுதல்களுக்கும் உள்ள விகிதாச்சார தொடர்பிற்கு அனேக உதாரணங்கள் காட்ட முடியும். ஒரு மனிதனின் கவனம் முழுவதும் ஆழ்ந்திருக்கும் பொழுது உதாரணமாக, நெருக்கமான தொடர்புடைய அறிவுப்பூர்வமான விவாதத்தை ஆழ்ந்து கவனித்தலின்போதும் அல்லது சில நுட்பமான அல்லது கடினமான உடற்சாகசச் செயலில் ஈடுபட முயலும்போதும், தானாகவே மிகவும் மெதுவாகச் சுவாசிக்கிறான். கவனத்தின் நிலைத்த தன்மை மெதுவான சுவாசத்தைச் சார்ந்திருக்கிறது. அச்சம், காமம், சினம் ஆகிய தீங்கு விளைவிக்கக்கூடிய உணர்ச்சி நிலைகள் வேகமான, ஒழுங்கற்ற சுவாசங்களைத் தவிர்க்க முடியாமல் விளைவிக்கின்றன. மனிதன் ஒரு நிமிடத்திற்குச் சராசரியாக 18 முறைகள் சுவாசிக்கிறான். மாறாக அமைதியற்ற குரங்கு

நிமிடத்திற்கு 32 முறைகள் சுவாசிக்கின்றது. யானை, ஆமை, பாம்பு மற்றும் நீண்ட காலம் உயிர் வாழும் உயிரினங்களின் சுவாச வேகம் மனிதனை விடக் குறைவானது. உதாரணமாக முன்னூறு வருட வயதை அடையும் ஒரு ராட்சஸ ஆமை நிமிடத்திற்கு 4 முறைகள் மட்டுமே சுவாசிக்கிறது.

ஆழ்ந்த உறக்கத்தினால் ஏற்படும் புத்துணர்ச்சியின் விளைவுகள் மனிதனுக்குத் தன் உடலையும் சுவாசத்தையும் பற்றிய தற்காலிக உணர்வற்ற நிலையினால்தான் உண்டாகிறது. தூங்கும் மனிதன் ஒரு யோகியாகிறான். ஒவ்வோர் இரவும் அவன் தன்னை அறியாமலேயே தன் சரீர அடையாளத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு, மூளையின் முக்கியமான பாகத்திலும் முதுகுத்தண்டின் ஆறு உப சக்கர சக்தி மையங்களிலுமுள்ள நலம் தரும் மின்னோட்டங்களுடன் தன் உயிர்ச்சக்தியை சங்கமிக்கச் செய்யும் யோகச் சடங்கை செய்தவனாகிறான். இவ்வாறாக தூங்குகிறவன் தனக்குத் தெரியாமலேயே எல்லா உயிர்களையும் காக்கும் பேரண்ட சக்தியால் புத்துணர்ச்சி அளிக்கப்படுகிறான்.

தன்னிச்சை உடைய யோகி, தூங்குகிறவன் மந்த நடையில் உணர்வின்றி செயல்படுவது போலல்லாமல், ஓர் எளிய, இயற்கையான முறையை உணர்ந்து செய்கிறான். கிரியா யோகி அவனுடைய உத்தியைப் பயன்படுத்தி தன் எல்லா உடல் செல்களிலும் அழிவில்லாத ஒளியைக்கொடுத்து நிரப்பி அவைகளை

ஆன்மீக காந்த சக்தியைப் பெற்ற நிலையில் வைக்கிறான். அவன் விஞ்ஞான முறையில் சுவாசத்தை அவசியமில்லாததாகச் செய்கிறான். மற்றும் அவன் உறக்கம், உணர்வின்மை, அல்லது மரணம் ஆகிய எதிர்மறையான நிலைகளுக்குச் (அவனது பயிற்சி செய்யும் நேரங்களில்) செல்வதில்லை.

மாயை அல்லது இயற்கையின் நியதிக்கு உட்பட்டுள்ள மனிதர்களிடம் உயிர்ச் சக்தி வெளியுலகத்தை நாடியே ஓடுகிறது. அவ்வோட்டங்கள் புலன்களால் தவறாகப் பயன்படுத்தப்பட்டு வீணாக்கப்படுகின்றன. கிரியா யோகப் பயிற்சி இவ்வோட்டத்தை திசை திருப்புகிறது. உயிர்ச்சக்தியானது, உட்பெருவெளிக்கு மனத் தினால் வழிகாட்டப்பட்டு முதுகுத்தண்டின் நுட்பமான சக்திகளுடன் ஒருங்கிணைக்கப்படுகிறது. இவ்விதமான வலுவூட்டப்பட்ட உயிர்ச்சக்தியினால் யோகியின் உடல் மற்றும் மூளையின் செல்களும் ஆன்மீக அமுதத்தால் புத்துணர்ச்சி பெறுகின்றன.

தகுந்த உணவு, சூரிய ஒளி மற்றும் பொருத்தமான எண்ணங்கள் மூலமாக, இயற்கை மற்றும் அவளுடைய தெய்வீக திட்டத்தால் மட்டுமே வழி நடத்தப்படும் மனிதர்கள் சாதாரணமாகப் பத்து லட்சம் வருடங்களில் ஆத்ம-அனுபூதியை அடைகிறார்கள். மூளையின் அமைப்பில் ஒரு சிறு பண்பு மாற்றம் ஏற்படுவதற்குக் கூட பன்னிரண்டு வருட சாதாரண ஆரோக்கிய வாழ்க்கை தேவைப்படுகிறது. மனிதனின் மூளையிருப்பு

தேவையான அளவு தூய்மை அடைந்து பேரண்ட உணர்வை வெளிப்படுத்தும் தகுதி பெற பத்து லட்சம் சூரிய மீட்சிகள் வேண்டும் என வலியுறுத்தப்படுகிறது. இருந்தபோதிலும் ஆன்மீக விஞ்ஞானத்தைப் பயன்படுத்தி ஒரு கிரியா யோகி இயற்கையின் விதிகளை நீண்ட காலம் கவனமாகப் பின்பற்ற வேண்டிய அவசியத்தில் இருந்து தன்னைத்தானே விடுவித்துக் கொள்கிறான்.

ஆன்மாவை உடலுடன் இணைக்கும் மூச்சின் இழையை அவிழ்ப்பதின் மூலம், கிரியா ஆயுளை நீட்டிக்கவும், உணர்வை எல்லையற்று விரிவுபடுத்துவதற்கும் பயன்படுகிறது. இந்த யோக உத்தி மனத்திற்கும், விஷயங்களில் சிக்குண்ட புலன்களுக்குமிடையே ஏற்படும் பலப்பரீட்சையை வெற்றிகொண்டு பக்தனுக்கு முடிவற்ற பேரின்பத்தைத் திரும்பவும் உரிமையாக்குகிறது. பிறகு அவன் தன் உண்மையான நிலை சரீரக் கூட்டினாலோ அல்லது சுவாசத்தினாலோ கட்டுப்படுத்தப்படவில்லை என அறிகிறான். இயற்கையின் அடிப்படை கட்டாயமான காற்றிற்கு, அழியும் மனிதன் அடிமைப்பட்டுள்ளதன் சின்னமே சுவாசம் தான்.

கிரியா யோகி உடலையும் மனத்தையும் ஆளும் வல்லமை உடையவனாகி, இறுதிப்பகைவனான[13] மரணத்தையும் முடிவில் வெற்றி கொள்கிறான்.

ஆதலால் மனிதர்களை உண்ணும் மரணத்தை நீ உண்டு விடு;
மரணம் மடிந்த பின்னே மடிவது என்பது இங்கில்லை.[14]

உள்மன நோக்கு அல்லது மௌனத்தில்

அமர்ந்திருத்தல் என்பது உயிர்ச் சக்தியின் மூலம் ஒருசேர இணைக்கப்பட்ட மனத்தையும் புலன்களையும் பலவந்தமாகப் பிரிக்க முயற்சிக்கின்ற, அறிவியலுக்குப் பொருந்தாத ஒரு வழியாகும். ஆழ்ந்து சிந்தனை செய்யும் மனம், தன் தெய்வீக நிலைக்குத் திரும்ப முயற்சி செய்யும்பொழுது உயிரோட்டங்களினால் இடைவிடாமல் புலன்களை நோக்கி இழுக்கப்படுகிறது. மனத்தை உயிர்ச்சக்தியின் மூலம் நேரடியாக அடக்குவதால், கிரியாவானது பரம்பொருளை அடைவதற்கான மிக எளிதான மிக்க ஆற்றல் வாய்ந்த மற்றும் அறிவியலுக்குகந்த பெருவழியுமாகும். இறைவனை அடைவதற்கான சாத்திர பாதை மாட்டுவண்டி போன்று மந்தமானது, நிச்சயமற்றது. இதற்கு மாறாக கிரியா யோகத்தை ஆகாய விமான வழி என்றே சரியாகக் கூறலாம்.

யோக விஞ்ஞானம் மனத்தை ஒருமுகப்படுத்தும் அனைத்து விதங்களிலிருந்தும் மற்றும் தியான முறைகளிலிருந்தும் பெறக்கூடிய அனுபவ அறிவை அடிப்படையாகக் கொண்டது. யோகமுறை, சாதகனை அவன் விருப்பப்படி ஒளி, ஓசை, நாற்றம், சுவை, ஊறு என ஐம்புலன்களாகிய தொலைபேசிகளுக்குச் செல்லும் உயிரோட்டத்தை இயக்கவோ நிறுத்தவோ திறன் படைத்தவனாக்குகிறது. புலன்களை துண்டித்துவிடும் இந்த ஆற்றலைப் பெற்று யோகியானவன், தன் மனத்தை வேண்டும்பொழுது தெய்வீக ஆதிக்கத்துடன் ஒன்றச் செய்வதையோ அல்லது உலக விஷயங்களில்

செலுத்துவதையோ எளிது என்று உணர்கிறான். அதன்பின் அவன் தன் விருப்பத்திற்கு மாறாக உயிர்ச்சக்தியினால், முரட்டுத்தனமான உணர்ச்சிகளும் அமைதியற்ற எண்ணங்களும் கூடிய சாதாரண உலகிற்குத் திரும்பிக் கொண்டு வரப்படுவதில்லை.

முன்னேற்றமடைந்த ஒரு கிரியா யோகியின் வாழ்க்கை அவனுடைய கடந்த கால வினைகளின் பலன்களினால் பாதிக்கப்படுவதில்லை; ஆனால் அவனுடைய ஆத்மாவின் வழிகாட்டுதலால் மட்டுமே இயக்கப்படுகிறது. இவ்விதமாக சாதகன் சாதாரண வாழ்க்கையின் அகங்கார நல்வினை, தீவினைகளால் ஏற்படும் மந்தமான பரிணாம வளர்ச்சியை-பருந்தின் இதயம் கொண்டவர்களுக்குப் பெருஞ்சுமையாகவும் நத்தை வேகமாகவும் தோன்றுவதை-தவிர்க்கிறான்.

உயர்ந்த முறையான ஆன்மீக வாழ்வு யோகியை விடுதலை அடையச்செய்கிறது. தன் அகங்காரச் சிறையிலிருந்து விடுபட்டு அவன் எங்கும் நிறைந்த பிரம்மத்தின் எல்லையற்ற காற்றை நுகர்கிறான். அதனுடன் ஒப்பிடும்பொழுது இயல்பான வாழ்க்கையின் அடிமை நிலை தாழ்வுபடுத்தும் கதியில் அமைந்துள்ளது. மனிதன் தன் வாழ்வை வெறும் பரிணாம நியதிக்கு உட்படுத்திக்கொண்டால் அவன் தீவிர முன்னேற்றமடைய இயற்கையிடமிருந்து எந்தச் சலுகையையும் வலிந்து பெற முடியாது. அவனுடைய மனத்தையும் உடலையும் இயக்கும் விதிகளுக்கு விரோதமாகத் தவறு செய்யாமல் வாழ்ந்தாலும்கூட

இறுதியான விடுதலையை அடைய அவனுக்கு மாறுவேஷங்களுடைய பல பிறவிகளாலான பத்து லட்சம் வருடங்கள் தேவைப்படுகிறது.

ஓர் ஆயிரமாயிரம் வருடங்களை வெறுப்புடன் நோக்குபவர்களுக்கு ஆன்மத் தனித்தன்மையை வேண்டி, உடல் மற்றும் உள்ளத்துடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்ளாமல் இருக்கும் ஒரு யோகியின் தூர தரிசன முறைகள் பரிந்துரைக்கப்படுகின்றன. இந்தக் காலக் கணக்கு ஆன்மாவுடன் – ஏன், இயற்கையுடனும்கூட இணக்கமில்லாமல் வாழும் சாதாரண மனிதனுக்கு இன்னும் அதிகரிக்கும்; தவிரவும் செயற்கையான சிக்கல்களில் ஈடுபட்டு அவனுடைய எண்ணங்களாலும், உடலாலும் இயற்கையின் இனிமையான நல்லுணர்வு நிலையை மீறுகிறான். அப்படிப்பட்டவனுக்கு விடுதலைபெற இருபது லட்சம் ஆண்டுகள் கூட போதுமானதல்ல.

சாதாரண மனிதன் தன் உடல் ஒரு ராஜ்யம் என்றோ, அந்த ராஜ்யம் தன் கபாலமாகிய அரியணையில் வீற்றிருந்து, முதுகுத்தண்டிலுள்ள ஆறு சக்கரங்கள் அல்லது உணர்வு மையங்கள் என்ற பிரதிநிதிகளின் மூலமாக ஆத்மா என்ற சக்கரவர்த்தியால் ஆளப்படுகிறது என்றோ அனேகமாக அல்லது ஒருபொழுதும் உணர்வதில்லை. இந்தத் தெய்வீக ஆட்சி கீழ்படிதலுள்ள குடிமக்களின் கூட்டத்தின் மீது பரவியுள்ளது. அவையாவன: இருபத்தி ஏழாயிரம் நூறுகோடி (27,000 பில்லியன்) செல்கள், (தானே இயங்குவதுபோல்

தோன்றினாலும் நிச்சயமான அறிவை இயற்பண்பாகப் பெற்று அதன் மூலம் அவை உடல் வளர்ச்சி, மாற்றம், தேய்வு ஆகிய எல்லா கடமைகளையும் ஆற்றுபவை) அடித்தளத்தில் உதிக்கும் ஐந்துகோடி எண்ணங்கள், உணர்ச்சிகள் மற்றும் மனிதனின் சராசரி வயதான அறுபது வருடங்களில் மனித உணர்வில் மாறுபாடான நிலைகளில் ஏற்படும் மாற்றங்கள்.

இந்த ஆன்ம சக்கரவர்த்திக்கு எதிராக மனித சரீரத்தில் அல்லது மனத்தில் ஏற்படும் வெளிப்படையான புரட்சி, நோய் அல்லது விபரீத எண்ணத்தின் உருவத்தில் வெளிப்படுமாயின் அது எளிய குடிமக்களின் விசுவாசமற்ற தன்மையினாலல்ல; மனிதனுக்கு ஆன்மாவுடன் கூடவே மறுபடியும் மாற்ற முடியாதபடி அளிக்கப்பட்ட தனித்தன்மையை அல்லது சுதந்திரத்தைக் கடந்த காலத்திலோ அல்லது நிகழ்காலத்திலோ தவறாகப் பயன்படுத்தியதன் விளைவேயாகும்.

தன்னை ஓர் அற்பமான அகங்காரத்துடன் ஐக்கியப்படுத்திக்கொண்டு மனிதன், தானே நினைப்பதாகவும், தீர்மானிப்பதாகவும், உணர்வதாகவும், உணவைச் செரிப்பதாகவும், தன்னைத்தானே உயிருடன் வைத்துக் கொணடிருப்பதாகவும் நினைத்துக் கொள்கிறான். தன்னுடைய சாதாரண வாழ்வில், தான் கடந்தகால கர்மவினைகளாலும், இயற்கை அல்லது சூழ்நிலையாலும் ஆட்டுவிக்கப்படும் ஒரு கைப்பொம்மை மட்டுமே அன்றி வேறல்ல என்பதை சிந்தித்து (ஓரளவு சிந்தனை செய்தாலும் கூட போதும்) ஒருபோதும் ஒப்புக்

கொள்வது இல்லை. ஒவ்வொரு மனிதனுடைய அறிவுபூர்வமான எதிர்ச்செயல்கள், உணர்ச்சிகள், மன நிலைகள் மற்றும் பழக்கங்கள் கடந்தகாலக் காரணங்களின் வெறும் விளைவுகளே. இக்காரணங்கள் இப்பிறவியிலோ அல்லது முற்பிறவியிலோ விளைவிக்கப்பட்டவையே. இருந்தபோதிலும் இம்மாதிரியான பாதிப்புகளுக்கும் மேலே அவனது அரச ஆன்மா மிக உயர்ந்த நிலையில் உள்ளது. கிரியா யோகி நிலையற்ற உண்மைகளையும், விடுதலைகளையும், உதறித்தள்ளி எல்லா மாயையையும் கடந்து தடைகளற்று தன்னுள் நிலைபெறுகிறான். உலக சமய நூல்கள் மனிதன் சீர்கேடு அடையும் உடல் அல்ல; ஆனால் என்றும் வாழும் ஆன்மா எனப் பறைசாற்றுகின்றன; அவன், சமய நூல்களின் கூற்று நிரூபிக்கப்படுவதற்கு கிரியா யோகத்தில் ஒரு வழியைக் காண்கிறான்.

சங்கரர் அவருடைய புகழ்பெற்ற சதகத்தில் (சதஸ்லோகி) வெளிப்படைச்சடங்கு அஞ்ஞானத்தை அழிக்க முடியாது. ஏனெனில் அவைகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை அல்ல, என எழுதியுள்ளார். அனுபூதி ஞானமே அறியாமையை நீக்கும்... ஞானம் என்பது ஆராய்ச்சி இல்லாமல் வேறு வழியில் தோன்ற முடியாது. நான் யார்? இப்பிரபஞ்சம் எப்படித் தோன்றியது? அதை உண்டாக்கியவர் யார்? அதனுடைய பௌதீகக் காரணம் யாது? இவ்விதமான விசாரணைதான் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தக் கேள்விகளுக்கெல்லாம்

புத்தியிடம் பதில் இல்லை. ஆதலால் ரிஷிகள் ஆத்ம விசாரணைக்காக யோக முறையை உருவாக்கினர்.

உண்மையான யோகியொருவன் தன் எண்ணங்கள், இச்சைகள், உணர்ச்சிகள், யாவற்றையும் உடல் ஆசைகளுடன் தவறாக ஒன்றுபடுவதிலிருந்து தடுத்து, தன் மனத்தை முதுகுத்தண்டின் ஆலயங்களிலுள்ள உயர் உணர்வு சக்திகளுடன் பிணைத்து கடவுள் வழிவகுத்தபடி இவ்வுலகில் வாழ்கிறான்; அவன் கடந்த காலத்தின் தூண்டுதல்களினாலோ அல்லது மனிதனின் மடமையினால் உண்டாகும் புது ஆவல்களினாலோ உந்தப்படுவதில்லை. அவனுடைய தலையாய விருப்பம் பூர்த்தியாகி அவன் இறுதியான புகலிடமாம் வற்றாத ஆனந்தமய பிரம்மத்தில் பத்திரமாக இருக்கிறான்.

யோகத்தின் நிச்சயமானதும் முறையானதுமான திறனைப்பற்றிக் குறிப்பிடும்போது கிருஷ்ணர், தொழில் நுட்ப வல்லுநரான யோகியை இவ்வாறு புகழ்கிறார், யோகி என்பவன் உடலைக் கட்டுப்படுத்தும் தவசிகளைவிட மேலானவன், ஞான மார்க்கத்தை அல்லது கர்ம மார்க்கத்தை பின்பற்றுபவர்களை விடவும் கூட மேலானவன்; ஓ சீடன் அர்ஜுனா, நீ யோகியாவாய்![15]

கிரியா யோகம் கீதையில் அடிக்கடி புகழப்பட்டிருக்கும் உண்மையான வேள்வியாகும். யோகியானவன் தன் மனித இச்சைகளை, ஒப்புவமையற்ற இறைவனுக்கு அர்ப்பணித்த அத்வைத வேள்வித் தீயில் இடுகிறான். இது எல்லா கடந்தகால

மற்றும் நிகழ்கால இச்சைகளையும் இறையன்புத் தீயினால் எரிக்கும் ஓர் உண்மையான யோக வேள்விச் சடங்கு ஆகும். முடிவான இந்தத் தீ, எல்லா மனித மதிமயக்கங்களையும் பலியாக ஏற்றுக்கொண்டு, மனிதனைக் களங்கத்திலிருந்து தூய்மைப்படுத்துகிறது. அவனுடைய உருவகமான எலும்புகளிலிருந்து இச்சையெனும் எல்லாச் சதையும் நீக்கப்பட்டு, கர்மவினை எனும் எலும்புக்கூடு, நோய் தடையாகிய ஞானம் என்கிற சூரியனால் வெளுக்கப்பட்டு மனிதனின் முன்பும் படைத்தவனின் முன்பும் தீங்கற்றவனாகிக் கடைசியில் அவன் புனிதனாகிறான்.



சமாதியில் ஆழ்ந்திருக்கும் மேலை நாட்டவர்ராஜரிஷி ஜனகானந்தர் (ஜேம்ஸ் ஜே.லின்)

கிரியா யோகத்தை ஐந்து வருடங்கள் தினசரி பயிற்சி செய்த பின்னர், 1937 ஜனவரியில் கலிலி◌ஃபோர்னியா, என்ஸினிடஸ்ல் உள்ள ஒரு தனிப்பட்ட கடற்கரையில், திரு.லிலின் சமாதி (உயர் உணர்வு நிலை) யில் தெய்வீக தரிசனத்தைப் பெற்றார்: எல்லையற்ற இறைவனை தன்னுள் உறையும் பேரொளியாகக் கண்டார்.

யோகானந்தர் கூறினார்: ஖திரு.லின்னுடைய சரிசம நிலையான வாழ்க்கை அனைத்து மக்களுக்கும் எழுச்சியூட்ட உதவும்.டு உலக வாழ்க்கையின் கடமைகளை மனச்சாட்சியுடன் நிறைவேற்றிக் கொண்டு, திரு.லி லின் இறைவன் மீதான ஆழ்ந்த தியானத்திற்காக, தினசரி நேரத்தை ஒதுக்கவும் செய்தார். இந்த வெற்றிகரமான தொழிலதிபர், உள்ளொளி பெற்ற கிரியா யோகியாக மாறினார்.

பரமஹம்ஸர் அடிக்கடி அவரை அன்புடன் ஖லின் முனிவர்டு என்று குறிப்பிட்டார். மேலும் 1951-ல் அவருக்கு ராஜரிஷி ஜனகானந்தர் என்ற சன்னியாசப் பெயரையும் சூட்டினார். (தொன்மையான பாரதத்தின் ஆன்மீகப் புகழ்பெற்ற ஜனக மகாராஜாவின் நினைவாக) ராஜ ரிஷி என்னும் பட்டம்

ஞுஅரச ரிஷி,டு ராஜ (அரச) + ரிஷி (முனிவர்) அதாவது "மிக உயர்ந்த முனிவர்" எனப் பொருள்படும்.

1 பரமஹம்ஸ யோகானந்தர், தனக்குப்பின் தன் சங்கத்திற்குத் (யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ஃப் இந்தியா/ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்) தலைவராக ஆன்மீகத் தலைமை ஏற்பவர்களுக்கு-தகுதி வாய்ந்த மாணவர்களுக்கு கிரியா யோகத்தை போதிக்கவும், தீட்சை அளிக்கவும் அல்லது அதற்கென யோகதா சத்சங்க சொஸைடி ஸ்வாமி ஒருவரை நியமிக்கவும் அதிகாரம் வழங்கினார். மேலும் யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ஃப் இந்தியாவி-லிருந்து கிடைக்கப்பெறும் யோகதா சத்சங்க பாடங்கள் (Yogoda Satsanga Lessons) மூலம் இக்கிரியா யோக விஞ்ஞானத்தை இடைவிடாது தொடர்ந்து பரப்பவும் வழிகோலினார். (பார்க்க பக்கம் 735) (பிரசுரதாரரின் குறிப்பு)

2 பகவத் கீதை IV:29

3 பகவத் கீதை V:27-28 (சுவாசத்தின் இயல் ஆய்வு பற்றிய மேலும் விளக்கங்களுக்கு பார்க்க பக்கங்கள் 719, 722-723)

4 சரித்திர காலத்திற்கு முன்பே மானவ தர்ம சாஸ்திரங்கள் அல்லது மனுநீதியை இயற்றியவர். ஆகமமாக ஸ்தாபிக்கப்பட்டுள்ள இப்பொது விதிகள் இந்தியாவில் இன்றுவரை நடப்பில் இருந்து வருகின்றன.

5 பகவத் கீதை IV:12

6 இந்து மதக் கோட்பாட்டின்படி இந்த லோகாயதமான யுகங்களின் தொடக்கம் கி.மு. 3102 ஆகும். அந்த வருடம் தான், பூமத்திய ரேகை சுழற்சியில் இறங்குமுகமான கடைசி துவாபரயுகத்தின் தொடக்கமும் மற்றும் பேரண்ட சுழற்சியில் கலியுகத்தின் ஆரம்பமும் ஆகும். (பார்க்க பக்கங்கள் 256, 257 அடிக்குறிப்பு.) மனித இன வரலாறு ஆராய்ச்சியாளர்களில் பெரும்பாலோர் 10,000 வருடங்களுக்கு முன்பு மனித வர்க்கம் காட்டுமிராண்டித்தனமான கற்கால வாழ்க்கையில் காலத்தைக் கழித்ததாக நம்பி, லெமூரியா, அட்லாண்டிஸ், பாரதம், சீனா, ஜப்பான், எகிப்து, மெக்சிகோ மற்றும் பல நாடுகளில் பரவியிருந்த மிகப் பழமையான நாகரீகங்களின் பரம்பரை வழக்கங்களை வெறும் கட்டுக்கதைக் களென ஒட்டுமொத்தமாகத் தள்ளி விடுகிறார்கள்.

7 யோக சூத்திரங்கள் II:1 பதஞ்சலி, கிரியா யோகம் என்ற சொற்களை உபயோகிப்பதில் பாபாஜியால் பின்னர் உபதேசிக்கப்பட்ட உத்தியையோ அல்லது கிட்டத்தட்ட அதே போன்ற ஒன்றையோ குறிப்பிடுகிறார். பதஞ்சலி, உயிரோட்டத்தைக் கட்டுப்பாட்டில் கொண்டுவர ஒரு நிச்சயமான உத்தியை பற்றிக் கூறுகிறார் என்பது அவரது யோக சூத்திரங்களில் II:49 நிரூபிக்கப்பட்டுள்ளது. (இதே பக்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது).

8 யோக சூத்திரங்கள் I:27.

9 உண்மையும் சத்தியமுமுள்ள சாட்சியும் தேவனுடைய சிருஷ்டிக்கு ஆதியுமாயிருக்கிற ஆமென் சொல்லுகிறதாவது.வெளிப்படுத்தின விசேஷம் 3:14(பைபிள்). ஆதியில் ஜீவ வார்த்தை இருந்தது, மற்றும் ஜீவ வார்த்தை பிதாவினிடத்தில் இருந்தது மற்றும் ஜீவ வார்த்தை நித்திய தேவனாயிற்று...எல்லாம் அவனாலேயே செய்யப்பட்டது. (வார்த்தை அல்லது ஓம்); செய்யப்பட்ட எதிலும் அவனில்லாமல் செய்யப்படவில்லை. - யோவான் 1:1-3 (பைபிள்). வேதங்களின் ஓங்காரம் திபெத்தியர்களின் ஹூம் என்ற புனிதச்சொல்லாகவும். முஸ்லிம்களின் ஆமின் ஆகவும், எகிப்தியர், கிரேக்கர், ரோமானியர், யூதர், கிறிஸ்துவர்களின் ஆமென் என்ற சொல்லாகவும் ஆயிற்று. ஹீப்ரு மொழியில் அதன் பொருள் உறுதியான,

நம்பிக்கையான எனப்படும்.

10 யோக சூத்திரங்கள் II:49.

11 ஐ கொரிந்தியர் 15:31 (பைபிள்). எப்பொழுதும் பொதுவாகக் குறிப்பிடுவது போல் உங்களைக் குறித்து என்றல்லாமல், நம்மைக் குறித்து என்பதுதான் சரியான மொழி பெயர்ப்பாகும். புனித பவுல், கிறிஸ்து உணர்வின் எங்கும் நிறைந்துள்ள தன்மையைக் குறிப்பிடுகிறார்.

12 விகல்பம் என்கிற சமஸ்கிருத சொல் பேதம், ஒரே தன்மையற்ற என்று பொருள்படும் சவிகல்பம் என்பது பேதங்களுடன் கூடிய சமாதி நிலையாகும். நிர்விகல்பம் என்பது பேதமற்ற ஒரு நிலையாகும். அதாவது சவிகல்ப சமாதியில் சாதகன் இன்னும் கடவுளிடமிருந்து சிறிது வேறுபட்ட உணர்ச்சி நிலையிலேயே இருக்கிறான்; நிர்விகல்ப சமாதி நிலையிலோ அவன் தன் தனித்தன்மையை பரம்பொருளாகவே முழுவதும் உணர்கிறான்.

13 பரிகசிக்கப்படும் கடைசிச் சத்துரு மரணம்- ஐ கொரிந்திரியர் 15:26 (பைபிள்). இறந்தபிறகு சீர்கேடு அடையாத பரமஹம்ஸ யோகானந்தருடைய சரீரம் (பார்க்க பக்கம் 731) அவரை முழு பக்குவமடைந்த கிரியா யோகி என நிரூபித்தது. இருந்த போதிலும் எல்லாப் பெரிய மகான்களும் இறந்த பிறகு சீர்கேடு அடையாத உடலை வெளிப்படுத்துவதில்லை. (பார்க்க பக்கம் 458 அடிக்குறிப்பு.) அம்மாதிரியான அற்புதங்கள் ஏதோ ஒரு சிறப்பான நோக்கம் கொண்டே நடைபெறுவதாக இந்து சாஸ்திரங்கள் கூறுகின்றன. பரமஹம்ஸருடைய விஷயத்தில், அச் சிறப்பான நோக்கம் சந்தேகமின்றி மேலை நாட்டவர்களுக்கு யோக மார்க்கத்தின் மகிமையில் நம்பிக்கை ஊட்டுவதற்கேயாகும். யோகானந்தர் மேலை நாட்டிற்கு சேவை செய்ய பாபாஜி மற்றும் ஸ்ரீ யுக்தேஸ்வர் அவர்களினால் கட்டளை இடப்பட்டார். பரமஹம்ஸர் தன் வாழ்விலும் சாவிலும் அந்த நம்பிக்கையை நிறைவேற்றினார்(பிரசுதாரரின் குறிப்பு)

14 ஷேக்ஸ்பியர்: ஸானட்:146.

15 பகவத் கீதை VI:46.

நவீன விஞ்ஞானம் சுவாசமின்மையால் உடலிலும் மனதிலும் விளையும் அசாதாரணமான குணப்படுத்தும் மற்றும் புத்துணர்ச்சி ஊட்டும் தன்மைகளைக் கண்டுபிடிக்கத் தொடங்கியுள்ளது. நியூ யார்க்கிலுள்ள ஃபிஸிஷியன்ஸ் அண்ட் ஸர்ஜன்ஸ் (The College of Physicians and Surgeons) கல்லூரியில் இருக்கும் டாக்டர் ஆல்வின் எல்.பராச் என்பவர் சுவாச கோச உறுப்பிற்கு ஓய்வு அளித்து அதன் மூலம் எலும்புருக்கி நோயால் வருந்திய அநேக நோயாளிகளைக் குணப்படுத்தும் ஒரு சிகிச்சை முறையைத் தொடங்கியுள்ளார். அழுத்தத்தை சமனப்படுத்தும் அறையை பயன்படுத்துவதால் நோய் வாய்ப்பட்டவன் சுவாசத்தை நிறுத்தமுடிகிறது. பிப்ரவரி 1, 1947 நியூ யார்க் டைம்ஸ் டாக்டர் பராச் கூறுவதைப் பின்வருமாறு எடுத்துக் காட்டுகிறது: மைய நரம்பு மண்டலத்தின் மூச்சை நிறுத்துவதால் ஏற்படும் விளைவு கவனத்தை மிகவும் கவரக்கூடியது. கை, கால் பகுதிகளில் இயங்கும் தசைகளின் இயக்கத்திற்கு வேண்டிய தூண்டுதல் வெகுவாக குறைக்கப்படுகிறது. நோயாளி அவ்வறையில் கைகளை அசைக்காமலோ அல்லது நிலையை மாற்றாமலோ பல மணி நேரம் படுத்திருக்க முடியும். வழக்கமாக ஒரு நாளைக்கு இரண்டு பெட்டி சிகரெட்டுக்கள் புகை பிடிப்பவர்களுக்கு கூடத் தானாகவே சுவாசம் நிற்கும்போது புகை பிடிக்கும் இச்சை மறைந்து போகிறது. வேறு பொழுதுபோக்கு எதையும் நாடாமல், இதன் மூலமே நோயாளி ஓய்வு பெறுகிறான் என்பதற்கு பல சான்றுகள் உள்ளன. 1951ல் டாக்டர் பராச் அந்த சிகிச்சை முறையின் மதிப்பை எல்லோருக்கும் வலியுறுத்தினார்: இந்த

முறையானது சுவாச கோசத்திற்கு ஓய்வு அளிப்பது மட்டுமல்லாமல் முழு உடலுக்கும் ஓய்வளிக்கிறது; மனத்திற்கும் இது ஓய்வளிப்பதுபோல் தோன்றுகிறது. உதாரணமாக இதயத்தின் வேலை மூன்றில் ஒரு பங்கு குறைகிறது. நோயாளிகள் கவலைப்படுவதை நிறுத்துகிறார்கள். யாருக்கும் அலுப்பு தட்டுவதில்லை.

இவ்வுண்மைகளிலிருந்து ஓய்வற்ற செயல்களில் ஈடுபடுவதற்கான மன அல்லது சரீரத்தூண்டுதலின்றி யோகிகளால் மணிக்கணக்காக எப்படி ஒரே இடத்தில் உட்கார முடிகிறது என்பதை ஒருவன் புரிந்து கொள்ளத் தொடங்குகிறான். அம்மாதிரியான அசைவற்ற மௌனத்திலிருந்துதான் ஆத்மா, கடவுளை திரும்ப அடையும் வழியை அறிய முடிகிறது. சாதாரண மனிதனுக்கு சுவாசமின்மையால் சில பயன்களை பெறுவதற்காக அழுத்தத்தைச் சமனப்படுத்தும் அறையிலிருக்க வேண்டிய அவசியமிருந்தாலும், யோகிக்கு மனத்திலும் உடலிலும் அவ்வெகுமதியைப் பெறுவதற்கும் தன் ஆத்மாவை உணர்வதற்கும் கிரியா யோக உத்தியைத் தவிர வேறொன்றும் தேவையில்லை.

## அத்தியாயம் 27

# ராஞ்சியில் ஒரு யோக பாடசாலையை நிறுவுதல்

ஸ்தாபன வேலைகளை நீ ஏன் வெறுக்கிறாய்?

குருதேவரின் கேள்வி எனக்குக் கொஞ்சம் அதிர்ச்சி அளித்தது. அச்சமயம் ஸ்தாபனங்கள் என்பவை பெருங் குளவிகளின் கூடு என்பது என்னுடைய சொந்த அபிப்பிராயமாயிருந்தது உண்மையே.

அது ஒரு நன்றி கிட்டாத வேலை ஐயா, நான் பதிலளித்தேன். தலைவன் எது செய்தாலும் சரி, செய்யா விட்டாலும் சரி, அவன் விமர்சனத்திற்கு ஆளாகவே செய்கிறான்.

தெய்வீகமென்ற பால்திரட்டு (சன்னா) அனைத்தும் உனக்கு மட்டுமே வேண்டுமென்கிறாயா? என் குருவின் சுருக்கென்ற பதிலில் கண்டிப்பான பார்வையும் கலந்திருந்தது. தாராள மனமுடைய ஆசாரியர்களின் பரம்பரை, தங்கள் அறிவை மனமுவந்து மற்றவர்களுக்கு அளித்திராவிடில் நீயோ அல்லது மற்றவர்களோ யோக முறையினால் கடவுளுடன் தொடர்பு கொண்டிருக்க முடியுமா? அவர் தொடர்ந்தார். இறைவன் தேன், ஸ்தாபனங்கள் தேன் கூடுகளாகும். இரண்டுமே தேவைதான். உயிரற்ற எந்த உருவமும் உபயோகமற்றதே. ஆனால் ஆன்மீகத் தேன் நிரம்பிய சுறுசுறுப்பாக இயங்கும் கூடுகளை நீ ஏன் ஆரம்பிக்கக்

கூடாது?

அவருடைய அறிவுரை என்னை ஆழமாகப் பாதித்தது. நான் வெளிப்படையாக எந்தப் பதிலும் கூறாத போதிலும் என் இதயத்தில் அசைக்க முடியாத ஒரு தீர்மானம் எழுந்தது; என் குருவின் திருவடிகளில் நான் அறிந்த, அசைக்க முடியாத உண்மைகளை என் சக்திக்குட்பட்ட வரை என் கூட இருப்பவர்களுடன் பகிர்ந்து கொள்வேன். இறைவா, உன் அன்பு என் பக்தியெனும் சரணாலயத்தில் என்றும் ஒளி வீசட்டும், உன் அன்பை எல்லோருடைய இதயங்களிலும் எழுப்ப வல்லவன் ஆவேனாக, என்று பிரார்த்தித்தேன்.

முன்னொரு சமயம் நான் சன்னியாசம் ஏற்பதற்கு முன் ஸ்ரீ யுக்தேஸ்வர் சற்றும் எதிர்பாராத ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார்.

வயதான காலத்தில் ஒரு மனைவியின் துணையில்லாத குறையை நீ எவ்வளவு உணர்வாய்! ஓர் இல்லறத்தான், தன் மனைவி, மக்களைக் காப்பதற்கு ஓர் உபயோகமான தொழிலில் ஈடுபட்டிருப்பதினால் கடவுளின் பார்வையில் ஒரு திருப்திகரமான பாகத்தை ஏற்கிறான் என்பதை நீ ஒப்புக் கொள்கிறாய் இல்லையா? என்றார்.

ஐயா, நான் திகிலுடன் மறுத்தேன். இந்த வாழ்க்கையில் என் ஒரே விருப்பம் பிரபஞ்ச அன்பனை அடைவதுதான் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?

குருதேவர் மகிழ்ச்சியுடன் நகைத்ததிலிருந்து அவர் அந்த வார்த்தைகளை என்னைச் சோதிக்கவே சொன்னார்

என்பதை அறிந்தேன்.

அவர் மெதுவாகக் கூறினார். ஞாபகம் இருக்கட்டும். எவனொருவன் வழக்கமான குடும்பக் கடமைகளை நிராகரிக்கிறானோ அவன் இன்னும் மிகப் பெரிய குடும்பத்தின் ஏதாவது பொறுப்பை ஏற்றுத்தான் தன் செய்கையின் நியாயத்தை நிரூபிக்க முடியும்.

சிறுவர்களுக்கான சரியான கல்வி முறையைப் பற்றிய குறிக்கோள் என்றுமே என் இதயத்திற்கு மிகவும் உகந்ததாகும். உடலையும் புத்தியையும் முன்னேறச் செய்வது மட்டுமே நோக்கமாகக் கொண்ட சாதாரண கல்வி முறையின் வறட்சியான பலனை நான் கண்கூடாகக் கண்டிருக்கிறேன். நீதி மற்றும் ஆன்மீக நெறிமுறைகளை உணராமல் எவரும் ஆனந்தத்தை அடைய முடியாது; அந்த நெறிமுறைகள் பாடத்திட்டத்தில் இன்னும் சேர்க்கப்படாமலே இருந்தன. நான் சிறுவர்களை முழு நிறைவுள்ள மனிதனாக ஆக்கும் ஒரு பள்ளிக்கூடத்தை நிறுவத் தீர்மானம் செய்து கொண்டேன். அந்த நோக்கில் என் முதல் படி வங்காளத்தில் ஒரு சிறு கிராமமான திஹிகா என்ற இடத்தில் ஏழு குழந்தைகளுடன் தொடங்கப்பட்டது.

ஒரு வருடத்திற்குப் பின்னர் 1918ல் காஸிம்பஜார் மகாராஜா ஸர். மணீந்த்ர சந்திர நந்தியின் தாராள மனப்பான்மையினால் வேகமாக வளர்ந்து வந்த என் குழுவை ராஞ்சிக்கு மாற்ற முடிந்தது. பீகாரிலுள்ள இந்த நகரம் கல்கத்தாவிலிருந்து சுமார் இருநூறு மைல்கள் தூரத்திலுள்ளது. இந்தியாவில் நல்ல ஆரோக்கியத்திற்கு

வேண்டிய சீதோஷ்ண நிலையை அருளப் பெற்ற நகரங்களில் இதுவும் ஒன்றாகும். ராஞ்சியிலுள்ள காஸிம்பஜார் அரண்மனை, யோகதா சத்சங்க பிரமசரிய வி த் யா ல யா [1]என நான் பெயரிட்ட புதுப்பள்ளிக் கூடத்தின் பிரதான கட்டிடமாயிற்று.

ஆரம்ப மற்றும் உயர்நிலைப் பள்ளிக்கூட வகுப்புக் களுக்கான பாடத்திட்டத்தை நானே முறைப்படுத்தினேன். அதில் விவசாயம், தொழில், வியாபாரம் மற்றும் மற்ற கல்வி சம்பந்தமான பாடங்கள் அடங்கி இருந்தன. புராதன முனிவர்களுடைய கல்வியின் குறிக்கோள்களைப் பின்பற்றி (அவர்களுடைய வனாந்திர ஆசிரமங்களே இந்திய இளைஞர்களின் உலகியல் மற்றும் இறையியல் கல்வி ஆகிய இரண்டிற்கும் புராதனக் கல்வி மையங்களாகத் திகழ்ந்தன.) வகுப்பு போதனைகள் பெரும்பாலும் திறந்த வெளியில் கொடுக்கப்படும்படி ஏற்பாடு செய்திருந்தேன்.

ராஞ்சி மாணவர்களுக்கு யோக முறை தியானமும், 1916ல் நான் கண்டுபிடித்த யோகதா என்ற விதிமுறைகளின்படி ஓர் ஒப்பற்ற ஆரோக்கிய மற்றும் உடல் வளர்ச்சி முறையும் கற்பிக்கப்படுகிறது.

மனிதனின் உடல் ஒரு மின்சார பாட்டரி போன்றது என்பதை நான் அறிந்து கொண்டதும், அவ்வுடலுக்கு நேரடி கர்த்தாவான மனித இச்சாசக்தி மூலம் மறுபடியும் சக்தியூட்ட முடியும் என்று நான் முடிவு செய்தேன். இச்சையின்றி எந்த ஒரு காரியமும் செயல்பட முடியாதாகையால், தன் வலிமையைப் புதுப்பிக்க

மனிதன் கருவிகளின் சுமையோ அல்லது இயந்திரகதியான தேகாப்பியாசங்களின் துணையோ இன்றி, அந்த முக்கிய செயல்திறன் கொண்ட இச்சா சக்தியை தனக்குத் தானே பயன்படுத்திக் கொள்ளலாம். எளிய யோகதா உத்திகளின் மூலம் ஒருவர், வரையறையற்ற அளவு கிடைக்கும் பிரபஞ்ச சக்தியிலிருந்து தன்னுடைய உயிர்ச் சக்தியை (முகுளத்தில் மையம் கொண்டிருப்பது) உணர்வுடனும், உடனுக்குடனும் திரும்ப சக்தி ஊட்டலாம்.

ராஞ்சியில் கல்வி கற்ற சிறுவர்கள் யோகதா பயிற்சிகளை மிக நல்ல முறையில் ஏற்றார்கள். அவர்களால் கடினமான ஆசனங்களில் (உடலின் நிலைகள்) பரிபூரண சமநிலையில் அமருவதிலும் உயிர்ச்சக்தியை உடலின் ஒரு பாகத்திலிருந்து மற்றொரு பாகத்திற்கு மாற்றுவதிலும் அசாதாரணத் திறனை அடைய முடிந்தது. அவர்கள், பல சக்திவாய்ந்த வயது வந்த மனிதர்கள் கூட செய்யமுடியாத, வலிமையும் சகிப்புத் தன்மையும் வாய்ந்த வித்தைகளைச் செய்தார்கள்.

என் கடைசித் தம்பி விஷ்ணு சரண் கோஷ்,[2] ராஞ்சி பள்ளிக்கூடத்தில் சேர்ந்தான். பிறகு அவன் ஒரு புகழ் பெற்ற தேகாப்பியாச நிபுணனானான். அவனும் அவனுடைய மாணவன் ஒருவனும் 1938-39ல் மேலை நாடுகளில் பிரயாணம் செய்து தேக பலம் மற்றும் தசைகளை அடக்கி ஆள்வது பற்றிய கண்காட்சிகளை நடத்தினர். நியூ யார்க்கிலுள்ள கொலம்பியா

பல்கலைக்கழகம் மற்றும் அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் உள்ள பல பல்கலைக் கழகங்களிலுள்ள பேராசிரியர்கள், உடலின் மீது மனத்திற்கு உள்ள சக்தியைப் பற்றிய நிரூபணங்களைக் கண்டு பேராச்சரியம் அடைந்தனர்.

ராஞ்சியில் முதல் வருட முடிவில், பள்ளியில் சேர்வதற்கான விண்ணப்பங்கள் இரண்டாயிரத்தை எட்டின. ஆனால் அப்பொழுது, அங்கேயே தங்கிப் படிக்கும் நிலையமாக அது செயல்பட்டு வந்ததால் அந்தப் பள்ளிக்கூடத்தில் நூறு பேருக்கு மட்டுமே இடமிருந்தது. சீக்கிரமே பகல் நேர மாணவர்களுக்கு வேண்டிய போதனா முறையும் சேர்க்கப்பட்டது.

அந்த வித்யாலயத்தில் நான் சிறு குழந்தைகளுக்குத் தாய் -தந்தையின் பொறுப்பை ஏற்க வேண்டியிருந்தது. மற்றும் ஸ்தாபன சம்பந்தமான அனேக பிரச்சனைகளையும் சமாளிக்க வேண்டி இருந்தது. நான் அடிக்கடி கிறிஸ்துவின் சொற்களை நினைவுபடுத்திக் கொள்வேன்: என்னிமித்தமாகவும், சுவிசேஷத்தினிமித்தமாகவும் வீட்டையாவது, சகோதரரையாவது, சகோதரிகளையாவது, தகப்பனையாவது, தாயையாவது, மனைவியையாவது, பிள்ளைகளையாவது, நிலங்களையாவது விட்டவன் எவனும், இப்பொழுது இம்மையிலே, நிலங்களையாவது விட்டவன் எவனும், இப்பொழுது இம்மையிலே, துன்பங்களோடே கூட நூறத்தனையாக வீடுகளையும், சகோதரரையும், சகோதரிகளையும், தாய்களையும்,

பிள்ளைகளையும், நிலங்களையும், மறுமையிலே நித்திய ஜீவனையும் அடைவான்.[3]

ஸ்ரீ யுக்தேஸ்வர் இச்சொற்களுக்குப் பின்வருமாறு விளக்கம் கொடுத்திருந்தார். வழக்கமான வாழ்க்கை அனுபவங்களான திருமணம், குடும்பத்தைப் பராமரித்தல் போன்றவைகளை எந்த பக்தன், பெரிய பொறுப்புக்களை ஏற்பதற்காகத் துறக்கிறானோ – பொதுவாக சமூக நலத்திற்காக (இப்பொழுது இம்மையிலேயே, துன்பங்களோடே கூட நூறத்தனையாக வீடுகளையும், சகோதரரையும்) – அவனது செயலைத் தவறாகப் புரிந்து கொள்ளும் உலகத்தினால் அடிக்கடி ஏற்படும் தொல்லைகளுடனேயே அவன் செயல் புரிகிறான். ஆனால் இவ்வாறு பெரிய அளவில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளும் பொழுது அது சுயநலத்தை வெல்லுவதற்கு உதவுவதுடன் அவனுக்குத் தெய்வீக வெகுமதியையும் பெற்றுத் தருகிறது.

ஒரு நாள் என் தந்தை என்னை ஆசீர்வதிப்பதற்காக ராஞ்சி வந்திருந்தார். அவரது வருகை, வங்காள – நாக்பூர் ரயில்வேயில் அவர் அளித்த வேலையை நான் ஒப்புக் கொள்ளவில்லை என்ற மனத்தாபத்தினால் வெகு நாளாகத் தள்ளிப் போடப்பட்டு இருந்தது.

மகனே! அவர் கூறினார். நான் இப்பொழுது நீ தேர்ந்தெடுத்துள்ள வாழ்க்கை முறையை ஒப்புக் கொண்டு விட்டேன். சந்தோஷமும் ஆர்வமும் கொண்ட இக்குழந்தைகளுடன் உன்னைக் காணும் பொழுது எனக்கு ஆனந்தம் உண்டாகிறது. உயிரில்லாத ரயில்வே

அட்டவணையில் எண்களுக்கு மத்தியில் இருப்பதை விட நீ இங்குதான் பொருத்தமாக இருக்கிறாய். என்னைப் பிடித்து இழுத்துக் கொண்டிருந்த குழந்தைகளின் கூட்டத்தைக் காட்டி, எனக்கு எட்டுக் குழந்தைகள் மட்டுமே இருந்தன. ஆனால் நான் உன் நிலையை உணர முடிகிறது! என்றார் கண்களைச் சிமிட்டியவாறு.

எங்களுக்குக் கிடைத்த இருபது ஏக்கர் செழிப்பு நிலத்தில் மாணவர்களும், ஆசிரியர்களும் மற்றும் நானும் தினசரி வகுப்புகளான தோட்ட வேலையிலும் திறந்தவெளி வேலையிலும் சந்தோஷத்தை அனுபவித்தோம். அனேக செல்லப் பிராணிகளையும் வளர்த்தோம். அவற்றில் மான்குட்டி ஒன்று குழந்தைகளால் மிகவும் நேசிக்கப்பட்டது. என் அறையில் அதை உறங்கவிடும் அளவிற்கு நான் அந்த மான்குட்டியை நேசித்தேன். வைகறை வெளிச்சத்தில் அச்சிறு பிராணி காலைக் கொஞ்சலுக்காக என் படுக்கை அருகே மெதுவாக வந்து நிற்கும்.

ஒரு நாள் ஏதோ வேலையாக ராஞ்சி பட்டணத்திற்குச் செல்ல வேண்டியிருந்ததினால் நான் அந்த மானுக்கு வழக்கத்தை விடச் சீக்கிரமாக ஆகாரமளித்தேன். நான் திரும்பி வரும்வரை அதற்கு எந்த ஆகாரமும் கொடுக்க வேண்டாமென்று சிறுவர்களிடம் சொல்லியிருந்தேன். ஒரு சிறுவன் கீழ்ப்படியாமல் அதற்கு மிக அதிகமாக பாலைப் புகட்டி விட்டான். நான் மாலையில் திரும்பிய பொழுது வருந்தத்தக்க செய்தி என்னை வரவேற்றது. அந்த

மான்குட்டிக்கு ஆகாரம் அதிகமாகக் கொடுத்துவிட்டபடியால் அது கிட்டத்தட்ட இறக்கும் தருவாயில் இருக்கிறது.

நான் கண்ணீருடன் உயிரின்றி காணப்பட்ட அம்மான் குட்டியை என் மடியில் கிடத்திக் கொண்டேன். அதன் உயிரைக் காப்பாற்றும்படி இரங்கத்தக்க முறையில் கடவுளை வேண்டினேன். பல மணி நேரங்களுக்குப் பிறகு அச்சிறிய ஜீவன் அதன் கண்களைத் திறந்து எழுந்து நின்றது; பலவீனத்துடன் நடந்தது. முழுப் பள்ளிக்கூடமும் மகிழ்ச்சியில் கும்மாளமிட்டது.

ஆனால் அன்றிரவு எனக்கு, நான் என்றுமே மறக்க முடியாதபடியான ஓர் ஆழ்ந்த படிப்பினை கிடைத்தது. நான் இரவு இரண்டு மணிவரை அக்குட்டியுடன் இருந்த பிறகு தூங்கி விட்டேன். அந்த மான் கனவில் தோன்றி என்னுடன் பேசியது.

நீங்கள் என்னைப் பிடித்து வைத்துக் கொண்டு இருக்கிறீர்கள். தயவுசெய்து என்னைப் போக விடுங்கள்; என்னைப் போக விடுங்கள்! என்றது.

சரி. நான் கனவில் பதிலளித்தேன்.

நான் உடனே எழுந்து விட்டேன். சிறுவர்களே, மான்குட்டி செத்துக் கொண்டிருக்கிறது! என்று கூவினேன். குழந்தைகள் என்னை நோக்கி ஓடி வந்தார்கள். நான் மான்குட்டியைப் படுக்க வைத்திருந்த மூலையை நோக்கி ஓடினேன். அது எழுந்திருக்க ஒரு கடைசி முயற்சி செய்து என்னை நோக்கித் தடுமாறி வந்த பிறகு என் காலடியிலேயே விழுந்து உயிர்

துறந்தது.

மொத்தக் கர்மவினை, மிருகங்களின் விதியை வழிகாட்டி, ஒழுங்குபடுத்துகிறது. அதன்படி அந்த மானின் வாழ்வு முடிந்து விட்டது. மேலும் அது உயர்ந்த நிலைக்கு முன்னேறத் தயாராயிருந்தது. ஆனால் குறைகளுடன் கூடிய பிராணியின் உடற்கூட்டில் அது விடுதலைக்குத் தவித்துக் கொண்டிருக்கும் பொழுது என் ஆழ்ந்த பற்றினாலும் (பின்னால் அது சுயநலமென்று நான் உணர்ந்தேன்), மற்றும் என் தீவிர பிரார்த்தனைகளினாலும் அதைப் பிடித்து வைக்க என்னால் முடிந்தது. அந்த மானின் ஆத்மா என் கனவில் அதனுடைய கோரிக்கையை விடுத்தது. ஏனெனில் என் அன்பான அனுமதியின்றி அது போக விரும்பவில்லை அல்லது போக முடியவில்லை. நான் ஒப்புக் கொண்ட உடனேயே அது புறப்பட்டு விட்டது.

என் துக்கமெல்லாம் மறைந்தது. இறைவன் தன் குழந்தைகள், உலகிலுள்ள எல்லாவற்றையும் தன்னுடைய ஒரு பாகமாக ஏற்று அன்பு செலுத்த வேண்டுமெனவும், மரணம்தான் எல்லாவற்றிற்கும் முடிவு என்று மாயையாக உணரக்கூடாது எனவும் விரும்புகிறார், என்று புதிதாக உணர்ந்தேன். அஞ்ஞான மனிதன், மரணத்தை, தன் மனத்திற்கினிய நண்பர்களை என்றுமே மறைத்துவிடுவது போல் தோன்றுகின்ற தாண்ட முடியாத பெரும் சுவராகவே காண்கிறான். ஆனால் பற்றற்ற மனிதன் மற்றவர்களைக் கடவுளின் உருவமாகவே நினைத்து அன்பு செலுத்துவதுடன்

மரணத்தின்போது அவனுக்குப் பிரியமானவர்கள் இறைவனிடம் ஒரு சிறு இடைவெளி நேரத்திற்கு ஆனந்தமாக லயித்திருக்கவே திரும்பிச் சென்றிருக்கின்றனர் என உணர்ந்து கொள்கிறான்.

ராஞ்சி பள்ளிக்கூடம் சிறியதாக எளிய முறையில் தொடங்கி ஒரு பெரிய ஸ்தாபனமாக வளர்ந்து இன்று பீகாரிலும் வங்காளத்திலும் பெயர் பெற்று விளங்குகிறது. பள்ளிக் கூடத்தின் பல பிரிவுகள், ரிஷிகளின் குறிக்கோளின்படி நடக்கும் கல்விமுறையைக் கண்டு மகிழ்பவர்கள் தாமாகவே முன்வந்து கொடுக்கும் நன்கொடைகளின் ஆதரவினால் நடத்தப்படுகின்றன. மித்னபூரிலும், லக்கன்பூரிலும் கிளைப் பள்ளிகள் ஸ்தாபிக்கப் பெற்றுச் சிறப்பாக நடந்து வருகின்றன.

ராஞ்சி தலைமையகம் அவ்விடத்திலுள்ள ஏழைகளுக்காக மருத்துப் பிரிவு ஒன்றை பராமரித்து வருகிறது. அங்கு மருந்துகளும் மருத்துவர்களின் சேவையும் இலவசமாக வழங்கப்படுகின்றன. வித்யாலயம், விளையாட்டுப் போட்டிகளிலும் சிறந்து விளங்குகிறது. கல்வித்துறையிலும் பல ராஞ்சி மாணவர்கள் பிற்காலத்தில் பல்கலைக்கழகப் படிப்பில் சிறந்து விளங்கினர்.

கடந்த முப்பது வருடங்களில் ராஞ்சி பள்ளிக்கூடத்திற்கு கீழை நாடுகளிலிருந்தும் மேலை நாடுகளிலில் இருந்தும் சிறப்பு வாய்ந்த பலரும் வருகை தந்து கௌரவித்து இருக்கிறார்கள். 1918ல் காசியைச் சேர்ந்த ஸ்வாமி பிரணவானந்தர் ஈருடல் கொண்ட

மகான், ராஞ்சிக்கு வந்து சில நாட்கள் தங்கினார். அந்தப் பெரிய மகான் மரங்களடியில் அழகான சூழ்நிலையில் நடக்கும் வகுப்புகளைக் கண்டும் மாலை வேளைகளில் சிறுவர்கள் பல மணி நேரம் அசையாமல் யோக தியானத்தில் மூழ்கியிருப்பதைக் கண்டும் மிகவும் மனநெகிழ்ச்சி கொண்டார்.

அவர் கூறினார், என் இதயம் ஆனந்தம் அடைகிறது. சிறுவர்களுக்குச் சரியான முறையில் பயிற்சி அளிக்க வேண்டுமென்ற லாஹிரி மகாசயருடைய லட்சியங்கள் இந்த ஸ்தாபனத்தில் நிறைவேற்றப்படுகின்றன. என் குருதேவரின் ஆசிகள் அதற்குக் கிடைக்கட்டும்.

என் பக்கத்தில் அமர்ந்திருந்த ஒரு சிறுவன் அந்தப் பெரிய யோகியிடம் ஒரு கேள்வி கேட்கத் துணிந்தான்.

ஐயா, நான் ஒரு சன்னியாசியாக ஆவேனா? என் வாழ்க்கை கடவுளுக்கே அர்ப்பணிக்கப்படுமா?

ஸ்வாமி பிரணவானந்தர் மென்மையாகப் புன்னகை புரிந்தாலும் அவர் கண்கள் வருங்காலத்தை ஊடுருவின.

குழந்தாய், அவர் பதிலளித்தார். நீ பெரியவனான பிறகு உனக்காக ஓர் அழகான மணப்பெண் காத்திருக்கிறாள். (பின்னால் அச்சிறுவன் பல வருடங்கள் சன்னியாசத்தை ஏற்கத் திட்டமிட்டு கடைசியில் மணம்புரிந்து கொண்டான்.) ஸ்வாமி பிரணவானந்தர் ராஞ்சிக்கு வருகை தந்த கொஞ்ச நாட்களுக்குப் பின் அவர் தற்காலிகமாகத் தங்கியிருந்த கல்கத்தா வீட்டிற்கு நான் என் தந்தையுடன் சென்றேன். வெகு காலத்திற்கு முன்பு பிரணவானந்தர், நான் உன்னை உன் தந்தையுடன்

பிறகு பார்க்கிறேன், எனக் கூறிய முன்னறிவிப்பு உடனே என் நினைவிற்கு வந்தது.

என் தந்தை ஸ்வாமியின் அறைக்குள் நுழைந்ததும் அந்த மகாயோகி தன் ஆசனத்திலிருந்து எழுந்து என் தந்தையை அன்பு கலந்த மரியாதையுடன் அணைத்தார்.

அவர் கூறினார், பகவதி, உனக்காக நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உன் மகன் மிக வேகமாக முடிவற்றவனை நோக்கி முன்னேறிச் செல்வதை நீ பார்க்கவில்லையா? என் தகப்பனார் முன்னிலையில் அவர் கூறும் புகழ்ச்சியைக் கேட்டு நான் நாணமுற்றேன். அவர் மேலும் தொடர்ந்தார். அருளாளரான நம் குரு அடிக்கடி சொல்லியதை நினைத்துப் பார்: பனத் பனத் பன் ஜாய்.[4] ஆதலால் இடைவிடாது கிரியா யோகத்தில் ஈடுபட்டு இறைவனின் வாயிலை சீக்கிரத்தில் அடைவாய்.

வாரணாசியில் என்னுடைய வியப்பூட்டும் முதல் சந்திப்பின் போது மிகுந்த திடகாத்திரத்துடனும் நன்றாகவும் விளங்கிய பிரணவானந்தரின் உடல், இப்பொழுது வயது முதிர்ச்சியின் அடையாளங்களைக் காட்டியது. ஆனாலும் அவரது அமரும் நிலை இன்னும் போற்றத்தக்கவாறு நிமிர்ந்தே இருந்தது.

ஸ்வாமிஜி, நான் அவர் கண்களை நேருக்கு நேர் நோக்கியவாறு கேட்டேன். எனக்குத்தயவு செய்து கூறுங்கள். வயதின் முதிர்ச்சியை நீங்கள் உணரவில்லையா? உடல் தளர்ச்சியுறும்பொழுது, நீங்கள் கடவுளை உணரும் தன்மைக்கு ஏதாவது குந்தகம்

ஏற்படுகிறதா?

அவர் தெய்வீகப் புன்னகை பூத்தார். என் அன்பன் எப்பொழுதையும் விட இப்பொழுது என்னிடம் அதிகமாகவே இருக்கிறான். அவருடைய முழுமையான திட நம்பிக்கை என் மனம், ஆத்மா இரண்டையும் ஒருங்கே ஆக்ரமித்தது. அவர் தொடர்ந்தார். நான் இன்னும் இரண்டு ஓய்வூதியங்களை அனுபவித்து வருகிறேன் – ஒன்று, இங்கிருக்கும் பகவதியிடமிருந்து, இன்னொன்று மேலிருந்து. தன் விரலை மேல் நோக்கிச் சுட்டிக்காட்டிய அந்த மகான் சற்று நேரம் பேரானந்தத்தில் ஆழ்ந்து விட்டார். அவர் முகத்தில் ஒரு தெய்வீக ஒளி வீசியது. என் கேள்விக்கு விடை மிகத் தாராளமாகவே கிடைத்துவிட்டது!

பிரணவானந்தருடைய அறையில் பலவித செடிகளையும் விதைப் பைகளையும் கண்ட நான் அவைகளின் உபயோகத்தைக் கேட்டேன்.

நான் வாரணாசியிலிருந்து நிரந்தரமாகக் கிளம்பி விட்டேன். இப்பொழுது இமயமலைச் சாரலை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறேன். நான் அங்கு என் சீடர்களுக்காக ஓர் ஆசிரமம் நிறுவப் போகிறேன். இவை கீரை மற்றும் சில காய்கறிகளை விளைவிக்கும் விதைகள். என் அன்புக்குரியவர்கள் எளிய முறையில் வாழ்ந்து, தங்கள் நேரத்தை ஆனந்தமாகக் கடவுளிடம் ஒன்றுபட்டுக் கழிப்பார்கள். வேறு எதுவுமே தேவையில்லை, என்று கூறினார்.

தந்தை தன் சகோதர சீடரை நோக்கி அவர்

எப்பொழுது கல்கத்தாவிற்குத் திரும்புவாரெனக் கேட்டார்.

இனிமேல் எப்பொழுதுமே இல்லை, அந்த மகான் பதிலளித்தார். இந்த வருடத்தில்தான் நான் என் மனத்திற்குகந்த வாரணாசியை ஒரேயடியாக விட்டுவிட்டு என் உடற்கூட்டை எறிந்து விடுவதற்காக இமாலயத்திற்கு செல்வேனென்று லாஹிரி மகாசயர் கூறியுள்ளார்.

அவருடைய சொற்களைக் கேட்டதும் என் கண்களில் நீர் நிறைந்தது. ஆனால் அந்த ஸ்வாமி அமைதியாகப் புன்னகைத்தப்படி இருந்தார். அவர் தோற்றம், அன்னை பராசக்தியின் மடியில் பத்திரமாக அமர்ந்திருக்கும் ஒரு சிறு தெய்வக் குழந்தையை ஞாபகப்படுத்துவதாக இருந்தது. வயதின் பாரம் ஒரு மகாயோகியினுடைய, உயர்ந்த ஆத்ம சக்தியின் முழு உடைமையின் மீது தீய விளைவை விளைவிப்பதில்லை. அவர் தன் விருப்பப்படி தன் உடலைப் புதுப்பித்துக் கொள்ள முடியும். இருந்தாலும் சில சமயங்களில் தன் வயதின் முதிர்ச்சியைத் தடுக்க அவர் சிரத்தை எடுத்துக் கொள்வதில்லை. ஆனால் மிஞ்சியுள்ள கர்மவினைப் பயனை அனுபவிப்பதற்கான புதுப்பிறவியின் அவசியத்தை நீக்க, அவருடைய தற்போதைய உடலை, காலத்தை சேமிக்கும் ஒரு கருவியாக்கி இந்த ஸ்தூல தளத்திலயே அவருடைய கர்மவினைப் பயனைச் செலவழிக்க விடுகிறார்.

பல மாதங்கள் கழித்து நான் பழைய நண்பன் சனந்தனை சந்தித்தேன். அவன் பிரணவானந்தரின்

நெருங்கிய சீடர்களில் ஒருவன்.

என் பூஜ்ய குரு போய்விட்டார், விம்மல்களுக்கிடையே அவன் கூறினான், அவர் ரிஷிகேசத்திற்கருகில் ஓர் ஆசிரமத்தை ஸ்தாபித்து எங்களுக்கு அன்பான பயிற்சி அளித்தார். அவரது வழிகாட்டுதலினால் நாங்கள் கொஞ்சம் நிலைப்பட்டு ஆன்மீகத்தில் வேகமாக முன்னேறத் தொடங்கியதும் ரிஷிகேசத்திலிருந்து ஒரு பெரிய கூட்டத்திற்கு உணவு அளிக்க விரும்புவதாக ஒருநாள் கூறினார். நான் எதற்காக இவ்வளவு பெரிய கூட்டம் என வினவினேன்.

இது என் கடைசி உற்சவத் திருவிழா, என்றார். அவர் கூறிய வார்த்தையின் முழு அர்த்தத்தை நான் உணரவில்லை.

பிரணவானந்தர் ஏராளமாக உணவு தயாரிப்பதில் உதவினார். நாங்கள் கிட்டத்தட்ட இரண்டாயிரம் விருந்தாளிகளுக்கு உணவளித்தோம். விருந்து முடிந்தபிறகு அவர் ஓர் உயர்ந்த மேடையில் அமர்ந்து பரமாத்மாவைப் பற்றி ஒரு பரவசமளிக்கும் சொற்பொழிவாற்றினார். முடிவில் ஆயிரக்கணக்கானவர் முன்னிலையில் அருகில் அமர்ந்திருந்த என் பக்கம் திரும்பி ஓர் அசாதாரண ஆற்றலுடன் பேசினார்.

சனந்தன், தயாராக இரு. நான் இந்தக் கூட்டை உதைத்தெறியப் போகிறேன்.[5]

ஒரு திக்பிரமையான மௌனத்திற்குப் பிறகு நான் இரைந்து கூவினேன். குருதேவா, அப்படிச் செய்யாதீர்கள். தயவுசெய்து, தயவுசெய்து, அப்படிச் செய்யாதீர்கள்! என்

சொற்களைக் கேட்டு ஆச்சரியமடைந்த கூட்டம் மௌனமாக இருந்தது. பிரணவானந்தர் என்னை நோக்கிப் புன்னகைத்தார். ஆனால் அவர் கண்கள் ஏற்கனவே சாசுவதத்தை நோக்கிக் கொண்டிருந்தன.

சுயநலக்காரனாக இராதே, என்றார் அவர், எனக்காக வருத்தமும் பட வேண்டாம். நான் வெகு காலமாக உங்களுக்கெல்லாம் மனமுவந்து சேவை செய்திருக்கிறேன். இப்பொழுது மகிழ்ந்து எனக்கு வெற்றி உண்டாக வாழ்த்துங்கள். நான் என் பிரபஞ்ச அன்பனை சந்திக்கச் செல்கிறேன். தாழ்ந்த குரலில் அவர் தொடர்ந்தார். நான் சீக்கிரமே மறுபடி பிறப்பேன். எல்லையற்ற பரமானந்தத்தைக் கொஞ்ச காலம் அனுபவித்த பிறகு பூமிக்குத் திரும்பி வந்து பாபாஜி[6]யுடன் சேர்ந்து கொள்வேன். என் ஆன்மா எங்கு, எந்தப் புது சரீரத்தினுள் இருக்கிறது, என்பதை நீ சீக்கிரத்தில் அறிவாய்.

அவர் மறுபடி கூவினார், சனந்தன், நான் இரண்டாவது கிரியா யோகத்தின்[7] மூலமாக என் உடலை உகுக்கிறேன்.

எங்களுக்கு முன்னே கடலெனக் குழுமியிருக்கும் முகங்களை நோக்கி ஆசி அளித்தார். அவருடைய பார்வையை உள்முகமாக ஞானக்கண்ணை நோக்கிச் செலுத்தியவாறு அவர் அசைவற்றவரானார். அதிர்ச்சியடைந்த கூட்டம் அவர் ஒரு சமாதி நிலையில் தியானித்திருப்பதாக நினைத்துக் கொண்டிருந்த பொழுது அவரது ஆத்மா இந்த மாமிசக் கூட்டை விட்டுப் பரந்த

பிரபஞ்ச வெளியில் கலந்து விட்டது. சீடர்கள் பத்மாசனத்தில் அமர்ந்திருந்த அவரது உடலைத் தொட்ட பொழுது அது உயிருள்ள உடலாயில்லை. ஒரு விறைத்த கூடு மட்டுமே இருந்தது. அதனுள்ளே குடியிருந்தவர் அழியாத அக்கரைக்குப் பறந்து விட்டிருந்தார்.

சனந்தன் அவருடைய செய்தியைக் கூறி முடித்ததும், நான் நினைத்தேன்: அருள்பெற்ற அந்த ஈருடல் கொணட மகான் தன் மரணத்திலும் வாழ்வைப் போலவே வியப்புத் தருகிற வகையில் இறந்திருக்கிறார்!

பிரணவானந்தர் எங்கு பிறக்கப் போகிறாரென்று கேட்டேன்.

அந்த விஷயத்தை நான் ஒரு புனிதமான ரகசியமாகக் காத்து வருகிறேன். நான் யாருக்கும் அதைக் கூறலாகாது. நீ வேறு ஏதாவது முறையில் ஒருக்கால் கண்டுபிடிக்கலாம், என்று சனந்தன் பதிலளித்தான்.

பல வருடங்கள் கழித்து நான் ஸ்வாமி கேசவானந்தரிடமிருந்து[8] பிரணவானந்தர், புது உடலில் பிறந்த சில வருடங்களுக்குப் பிறகு இமயத்திலுள்ள பத்ரிநாராயணுக்குச் சென்று மகா பாபாஜியைச் சுற்றியிருக்கும் யோகிகளின் குழுவில் சேர்ந்து கொண்டதாக அறிந்தேன்



ராஞ்சி, யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியாவின் நிர்வாகக் கட்டிடம்.

1 வித்யாலயம்-பள்ளிக்கூடம், இங்கு பிரமசரியம் எனக் குறிப்பிடப்பட்டிருப்பது வேத முறைப்படி மானிட வாழ்க்கைக்கான நான்கு நிலைகளில் ஒன்றாகும். அந்நிலைகள்: (1) பிரம்சரிய விரதத்தைக் கடைப்பிடிக்கும் மாணவன் (பிரமசாரி); (2) உலகப் பொறுப்புக்களுடன் கூடிய இல்லறத்தான் (கிரஹஸ்தர்கள்); (3) ஏகாந்தவாசி (வனப்பிரஸ்தன்); (4) எல்லா உலக பந்தங்களினின்றும் விடுபட்டுக் கானகத்தில் வாழ்பவர் அல்லது சஞ்சரிப்பவர் (சன்னியாசி). வாழ்க்கையில் இந்த லட்சியமுறை தற்காலப் பாரதத்தில் முழுவதும் அனுசரிக்கப்படாவிட்டாலும் இன்றும் இந்த முறை, சிரத்தையோடு அனுசரிப்பவர்களைப் பெற்றிருக்கிறது. இந்த நான்கு நிலைகளும் வாழ்நாள் முழுவதும் ஒரு குருவின் வழிகாட்டுதலின் கீழ் சிரத்தையுடன் பின்பற்றப்படுகிறது.

யோகதா சத்சங்க பள்ளிக்கூடத்தைப் பற்றிய இன்னும் சில விவரம் 40வது அத்தியாயத்தில் தரப்பட்டிருக்கிறது.

2 1970 ஆம் ஆண்டு ஜுலை 9ஆம் தேதி, விஷ்ணு சரண் கோஷ் கல்கத்தாவில் இயற்கை எய்தினார். (பிரசுரதாரரின் குறிப்பு)

3 மாற்கு 10:29-30. (பைபிள்).

4 லாஹிரி மகாசயரின் விருப்பமான குறிப்பு. அவர் இதனால் சீடர்கள் தியானத்தில் விடாமுயற்சியைக் கடைப்பிடிக்க வேண்டுமென ஊக்கமூட்டுவது வழக்கம். பொருள்: செய்து, செய்து, ஒரு நாள் செய்யப்பட்டு விடும். தடையின்றி மொழிபெயர்க்கப்படும் பொழுது முயன்று கொண்டே, முயன்று கொண்டே, ஒரு நாள் தெய்வத்தைக் கண்டே விடலாம் எனப் பொருள்படும்.

5 அதாவது உடலை விட்டுவிடுதல்.

6 லாஹிரி மகாசயரின் குரு, இன்றும் வாழ்ந்து கொண்டிருப்பவர். (33வது

அத்தியாயத்தைப் பார்க்கவும்)

7 யோகதா சத்சங்க மார்க்கத்தின் உயர்நிலை கிரியா யோக தீட்சை பெற்றவர்களுக்கு, பிரணவானந்தரால் பயன்படுத்தப்பட்ட உண்மையான உத்தி, மூன்றாவது கிரியா யோக தீட்சை என்பது தெரியும். லாஹிரி மகாசயர், பிரணவானந்தருக்கு வழங்கியபோது அது, அவர் யோகாவதாராரிடமிருந்து பெற்ற இரண்டாவது கிரியா ஆகும். இதில் வல்லவரான பக்தருக்கு, எந்த நேரத்திலும் உணர்வுடன் உடலை விட்டு விடவும், திரும்பி வருவதற்கும் இக்கிரியா உதவுகிறது. முன்னேறிய யோகிகள் இந்தக் கிரியா உத்தியை இறுதியான இறக்கும் தறுவாயில் பயன்படுத்துகின்றனர். அத்தருணம் அவர்களுக்கு நிச்சயமாக முன்கூட்டியே தெரியும்.

உயர்ந்த யோகிகள், மோட்சத்தின் கதவாகிய உயிர் நட்சத்திரமான ஞானக்கண் வழியாக உள்ளேயும் வெளியேயும் செல்கிறார்கள். கிறிஸ்து கூறினார்: நானே வாசல்: என் வழியாய் ஒருவன் உட்பிரவேசித்தால், அவன் ரட்சிக்கப்படுவான், அவன் உள்ளும் புறம்பும் சென்று, மேய்ச்சலைக் கண்டடைவான். திருடன் (மாயை அல்லது பொய்த் தோற்றம்) திருடவும், கொல்லவும், அழிக்கவும் வருகிறானேயன்றி வேறொன்றுக்கும் வரான்; நானோ (தெய்வீக உணர்வு) அவைகளுக்கு ஜீவன் உண்டாயிருக்கவும், அது பரிபூரணப்படவும் வந்தேன் (யோவான் 10:9-10). (பைபிள்).

8 கேசவானந்தருடன் எனது சந்திப்பு 597-601ம் பக்கங்களில் விளக்கப்பட்டிருக்கிறது.

## அத்தியாயம் 28

# காசியின் மறுபிறப்பும் அதைக் கண்டறிதலும்

தயவு செய்து தண்ணீருக்குள் இறங்காதீர்கள். நாம் நம் வாளிகளினால் மொண்டு குளிப்போம்.

அருகிலுள்ள குன்றுக்கு நானும் ராஞ்சிப் பள்ளிக்கூடத்தின் இளம் மாணவர்களும் எட்டு மைல் நடைப் பயணமாகச் செல்லும் பொழுது அவர்களை நோக்கி நான் மேற்கண்டவாறு கூறினேன். எங்களுக்கு முன்னே இருந்த குளம் கவர்ச்சியாகத் தோன்றினாலும் என் மனத்தில் அதன் மீது ஏதோ ஓர் அருவருப்பு ஏற்பட்டது. சிறுவர்களில் பெரும்பாலோர் தங்கள் வாளிகளால் தண்ணீரை மொள்ளத் தொடங்கினாலும் சிலர் மட்டும் குளிர்ந்த தண்ணீரின் சபலத்தில் மயங்கி விட்டார்கள். அவர்கள் தண்ணீரில் இறங்கியதுதான் தாமதம். பெரிய நீர்ப் பாம்புகள் அவர்களைச் சுற்றிக் கொண்டு விட்டன. தண்ணீரை வாரி இறைத்துக் கொண்டு என்ன கூச்சல்! குளத்தை விட்டு வெளியே வருவதில் என்ன வேடிக்கையான அவசரம்!

நாங்கள் செல்ல வேண்டிய இடத்தை அடைந்த பிறகு எங்கள் கட்டுச் சாதத்தை உண்டு மகிழ்ந்தோம். ஒரு மரத்தடியில் சிறுவர்கள் சூழ்ந்திருக்க நான் மத்தியில் அமர்ந்தேன். என்னைப் பரவச நிலையில் கண்டதும் அவர்கள் கேள்விகள் கேட்கத்

தொடங்கினார்கள்.

தயவு செய்து கூறுங்கள் ஐயா, ஓர் இளைஞன் கேட்டான். நான் துறவு மார்க்கத்தில் என்றுமே உங்களுடன் தங்கியிருப்பேனா? இல்லை,

இல்லை, நீ பலவந்தமாக உன் வீட்டிற்கு அழைத்துச் செல்லப்படுவாய். பிறகு மணம் புரிந்து கொள்வாய், என்று பதிலளித்தேன்.

அவன் அதை நம்பாமல் தீவிரமாக மறுத்தான். நான் இறந்தால்தான், என்னை வீட்டிற்கு எடுத்துச் செல்ல முடியும். (ஆனால் சில மாதங்களுக்குப் பிறகு அவன் பெற்றோர்கள் அவன் கண்ணீருடன் எவ்வளவு மன்றாடியும் கேளாமல் அவனை அழைத்துப் போக வந்தனர். சில வருடங்களுக்குப் பிறகு அவன் திருமணமும் புரிந்து கொண்டான்.)

அனேக கேள்விகளுக்குப் பதிலளித்த பின் காசி என்னும் சிறுவன் ஒருவன் என்னிடம் கேட்டான். அவனுக்குப் பன்னிரண்டு வயது இருக்கும்; எல்லோராலும் நேசிக்கப்பட்ட புத்திசாலியான மாணவன்.

ஐயா, என் விதி என்னவாகும்? என்று அவன் கேட்டான்.

நீ சீக்கிரமே இறந்து விடுவாய். ஒரு தடுக்க முடியாத சக்தி அச்சொற்களை என் வாயிலிருந்து வரவழைத்ததாகத் தோன்றியது.

என்னிடமிருந்து வெளிப்பட்ட இச்சொற்கள் என்னையும் மற்ற ஒவ்வொருவரையும் அதிர்ச்சியும் வருத்தமும் அடையச் செய்தன. ஒரு பயங்கரமான

குழந்தையைப் போல் என்னை நானே மௌனமாக நொந்து கொண்டு மேலும் எந்தக் கேள்விக்கும் பதிலளிக்க மறுத்து விட்டேன்.

பள்ளிக்கூடத்திற்குத் திரும்பியதும் காசி என் அறைக்கு வந்தான்.

நான் இறந்து விட்டால், நான் மறுபிறவி எடுத்தவுடன் என்னைக் கண்டு பிடித்து நீங்கள் மறுபடியும் என்னை இறைவழியில் கொண்டு வருவீர்களா? என்று விசும்பல்களுக்கிடையே கேட்டான்.

இந்தக் கடினமான, அறிவுக்கெட்டாத பொறுப்பை மறுக்க வேண்டிய கட்டாயத்தை உணர்ந்தேன். ஆனால் வாரக் கணக்கில் என்னை அவன் விடாமல் பிடிவாதமாகத் துளைத்துக் கொண்டே இருந்தான். இறுதியில் அவன் பலவீனமடைந்து இனி தாங்காது என்ற நிலைக்கு வந்ததைக் கண்டதும் நான் அவனை சமாதானம் செய்தேன்.

ஆகட்டும், எந்தை இறைவன் உதவினால் நான் உன்னைக் கண்டு பிடிக்க முயல்வேன், என்று அவனுக்கு உறுதி கூறினேன்.

கோடை விடுமுறையில் நான் ஒரு சிறு பயணம் மேற்கொண் டேன். காசியை என்னுடன் அழைத்துப் போக முடியாத வருத்தத் தினால் நான் செல்வதற்கு முன் அவனை என் அறைக்கு அழைத்து யார் என்ன சொன்னாலும் பள்ளிக்கூடத்தின் தெய்வீகச் சூழ்நிலையை விட்டு எங்கும் போக வேண்டாமென கவனமாக அறிவுறுத்தினேன். அவன் வீட்டிற்குப் போகாமல்

இருந்தால் அவனுக்கு வரவிருக்கும் ஆபத்தைத் தடுக்கலாமென்று ஏதோ ஒரு வகையில் எனக்குத் தோன்றியது.

நான் கிளம்பியதுமே காசியின் தகப்பனார் ராஞ்சிக்கு வந்தார். அவருடைய மகனின் தீர்மானத்தை முறியடிக்க அவர் பதினைந்து நாட்கள் முயன்றார். அவன் நான்கு நாட்கள் மட்டுமே கல்கத்தாவிற்கு வந்து தன் தாயாரைப் பார்த்துவிட்டு உடனே திரும்பி விடலாமென விளக்கினார். காசி பிடிவாதமாக மறுக்கவே அவர் கடைசியில் போலீஸின் உதவியுடன் அவனை இழுத்துப் போவதாகக் கூறினார். இந்தப் பயமுறுத்தல் காசியைக் கலக்கமடையச் செய்தது. பள்ளிக்கூடத்திற்கு எந்தக் கெட்ட பெயராவது வந்துவிட தான் காரணமாவதை அவன் விரும்பவில்லை. அவனுக்குப் போவதைத் தவிர வேறு வழியே தென்படவில்லை.

சில நாட்களுக்குப் பிறகு நான் ராஞ்சிக்குத் திரும்பினேன். காசி எப்படி அங்கிருந்து கிளப்பப்பட்டான் என்பதை அறிந்ததும் நான் கல்கத்தாவிற்கு உடனே ரயில் ஏறினேன். அங்கு நான் ஒரு குதிரை வண்டியை அமர்த்திக் கொண்டேன். அவ்வண்டி ஹௌரா பாலம் வழியாகக் கங்கையைக் கடக்கும் பொழுது ஆச்சரியப்படத்தக்க வகையில் நான் பார்த்த முதல் மனிதர்கள், இழவுத்துயர்க்குரிய உடைகளில் காணப்பட்ட காசியின் தகப்பனாரும் மற்ற உறவினர்களும்தான். வண்டிக்காரனை உடனே நிறுத்தச் சொல்லிக் கூவியபடி, நான் வண்டியில் இருந்து குதித்து, அந்த துரதிருஷ்ட

தகப்பனாரை நோக்கி முறைத்தேன்.

ஐயா, கொலைகாரரே. நான் கொஞ்சம் நியாயமற்ற முறையில் கூவினேன். நீங்கள் என் பையனைக் கொன்று விட்டீர்கள்!

அந்தத் தந்தை காசியை பலவந்தமாகக் கல்கத்தாவிற்கு அழைத்து வந்ததில் தன் தவற்றை ஏற்கனவே உணர்ந்து இருந்தார். அவன் அங்கு தங்கியிருந்த சில நாட்களில் ஏதோ அசுத்த உணவை உட்கொண்டு காலரா நோயால் பீடிக்கப்பட்டு இறந்து விட்டான்.

காசியிடம் எனக்கிருந்த அன்பும், மரணத்திற்குப் பிறகு அவனைக் கண்டுபிடிப்பதாகக் கூறிய வாக்குறுதியும் என்னை இரவும் பகலும் ஓயாது வாட்டின. நான் எங்கு சென்றாலும் அவன் முகம் என் கண் முன்னே நிழலாடியது. வெகு காலத்திற்கு முன்பு நான் என் இழந்த தாயாரைத் தேடியது போல் அவனை வெகு தீவிரமாக முனைந்து தேடலானேன்.

கடவுள் எனக்குப் பகுத்தறியும் திறனைக் கொடுத்திருக்கும் காரணத்தால் நான் அதை உபயோகப்படுத்த வேண்டுமெனவும், என் சக்தியை முடிந்தவரை பயன்படுத்தி சிறுவனின் சூட்சும இருப்பிடத்தை அறிந்து கொள்ள உதவும் நுட்பமான விதிகளைக் கண்டுபிடிக்க வேண்டுமெனவும் உணர்ந்தேன். நிறைவேறாத ஆசைகளின் அதிர்வுகளுடன் அவன் ஓர் ஒளிப்பிழம்பாக, லட்சக்கணக்கான ஒளிரும் ஆத்மாக்களின் மத்தியில் சூட்சும பிரதேசங்களில்

எங்கோ மிதந்து கொண்டிருப்பதை நான் உணர்ந்தேன். ஒளி அதிர்வலைகளாக இருக்கும் அனேக ஆத்மாக்களின் நடுவில் அவனுடன் எப்படி நான் தொடர்பு கொள்வது?

ஒரு ரகசியமான யோக முறையை உபயோகித்து நான் புருவங்களுக்கு[1] இடையில் உள்ளே இருக்கும் புள்ளியாகிய ஞானக்கண் என்னும் ஒலிபெருக்கி மூலமாக என் அன்பைக் காசியின் ஆத்மாவிற்கு ஒலிபரப்பினேன். காசி சீக்கிரமே இம்மண்ணுலகிற்குத் திரும்பி வருவான் என்றும், நான் விடாப்பிடியாக என் அழைப்பை ஒலிபரப்பிக் கொண்டே இருந்தால் அவன் ஆத்மாவிடமிருந்து பதில் கிடைக்கும் என்றும் நான் உள்ளுணர்வில் உணர்ந்தேன். காசியிடமிருந்து எனக்கு வரும் சிறு தூண்டுதல் கூட என் கை விரல்கள், கைகள், மற்றும் முதுகுத்தண்டில் உள்ள நரம்புகளில் உணரப்படும் என்று எனக்குத் தெரியும்.

உயர்த்திய என் கைகளை உணர்கருவிகளாகக் (antennae) கொண்டு என்னை நானே அடிக்கடி சுற்றினேன். ஏற்கனவே கருவாக மறுபிறப்பு அடைந்திருக்கிறான் என நான் நம்பியதால், அக்கரு இருக்குமிடத்தின் திசையைக் கண்டுபிடிக்க நான் இவ்வாறு முயற்சி செய்தேன். ஒருமுனைபடுத்தப்பட்ட என் இதய வானொலிக்கு அவனிடமிருந்த பதில் கிடைக்கும் என்று நான் நம்பினேன்.

காசியின் மறைவிற்குப் பின்னர் கிட்டத்தட்ட ஆறு மாதங்கள் வரை நான் தளராத ஆர்வத்துடன் விடாப்பிடியாக அந்த யோக முறையைக் கடைப்பிடித்து

வந்தேன். ஒரு நாள் காலை கல்கத்தாவில் கூட்டம் மிகுந்த பௌபஜார் பகுதியில் சில நண்பர்களுடன் நடந்து போய்க் கொண்டிருக்கையில் நான் என் கையை வழக்கம் போல் உயர்த்தினேன். முதன் முறையாக எனக்குப் பதில் கிடைத்தது. என் விரல்களிலும், உள்ளங் கைகளிலும் ஊடுருவும் மின் தூண்டுதல்களை உணர்ந்ததும் என் மனம் களிப்பில் துள்ளியது. இந்த உணர்வோட்டங்கள் என் உள்ளுணர்வின் ஆழ்ந்த இடுக்கிலிருந்து எல்லாவற்றையும் மீறிய ஓர் எண்ணமாகத் தாமே மொழிபெயர்த்துக் கொண்டன: நான்தான் காசி. நான்தான் காசி; என்னிடம் வாருங்கள்!

என் இதய வானொலியில் நான் என் மனத்தை ஒரு முனைப்படுத்திய போது இவ்வெண்ணம் கிட்டத்தட்ட கேட்கக் கூடிய ஒலியாகவே மாறியது. காசிக்கே[2] உரிய சிறிது கரகரப்பான தாழ்ந்த குரலில் அவனுடைய அழைப்புக்களை திரும்பத்திரும்ப நான் கேட்டேன். நான் என் கூட வந்தவர்களில் ஒருவரான பிரகாஷ் தாஸ் என்பவரின் கையைப் பிடித்துக் கொண்டு ஆனந்தமாக அவரை நோக்கிச் சிரித்தேன்.

நான் காசியின் இருப்பிடத்தைக் கண்டுபிடித்து விட்டேனென்று தோன்றுகிறது!

நான் சுற்றி சுற்றித் திரும்ப ஆரம்பித்தேன். அது என் நண்பர்களுக்கும் அங்கு போவோர் வருவோருக்கும் அடக்க முடியாத வேடிக்கையாக அமைந்தது. அம்மின் அதிர்வுத் தூண்டுதல்கள் நான் அருகிலுள்ள நாகவளைவுச் சந்து என்று பொருத்தமாகப்

பெயரிடப்பட்ட சந்தை நோக்கித் திரும்பும் பொழுது மட்டுமே என் விரல்கள் வழியாகச் சிலிர்ப்பை ஏற்படுத்தின. அச்சூட்சும ஓட்டங்கள் நான் வேறு திசைகளில் திரும்பிய பொழுது மறைந்துவிட்டன.

ஆகா! நான் கூவினேன். காசியின் ஆத்மா இச்சந்தில் வசிக்கும் யாராவதொரு தாயின் கருவினுள் வசித்துக் கொண்டிருக்க வேண்டும்.

என் நண்பர்களும் நானும் அந்நாகவளைவுச் சந்தின் அருகே நெருங்கினோம்; தூக்கிய என் கைகளில் தோன்றிய அதிர்வுகள் பலத்தன; நன்கு புலப்பட்டன. ஏதோவொரு காந்த சக்தியால் ஈர்க்கப்பட்டது போன்று நான் சந்தின் வலப்பக்கமாக இழுக்கப்பட்டேன். ஒரு குறிப்பிட்ட வீட்டின் வாயிலை அடைந்ததும் நான் அங்கேயே சலனமற்றுவிட்டதைக் கண்டு நான் பெருவியப் பெய்தினேன். என் மூச்சை அடக்கியவாறு மனவெழுச்சி மிக்கவனாக அவ்வீட்டுக் கதவைத் தட்டினேன். என்னுடைய விசித்திரமான நெடுங்காலத் தேடுதல் வெற்றியுடன் முடிந்ததென உணர்ந்தேன். அக்கதவு ஒரு வேலைக்காரியால் திறக்கப்பட்டது. அவள் எஜமானர் வீட்டில் இருப்பதாகக் கூறினாள். அவர் இரண்டாவது மாடியிலிருந்து படிகளில் இறங்கி வந்து ஒரு கேள்விக் குறியுடன் என்னை நோக்கி முறுவலித்தார். ஒரே சமயத்தில் தகுந்ததாகவும் தகாததாகவும் தோன்றிய என் கேள்வியை எந்தவிதமாகக் கேட்பதென்று எனக்குப் புரியவில்லை.

ஐயா, தயவுசெய்து சொல்லுங்கள், தாங்களும் தங்கள்

மனைவியாரும் ஆறு மாதமாக ஒரு குழந்தையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறீர்களா?[3]

ஆம், அது சரிதான். நான் சம்பிரதாய முறைப்படியான காவியுடை உடுத்திய ஒரு சன்னியாசி என்பதைக் கண்ட அவர் மரியாதையுடன் தொடர்ந்தார். என் விவகாரங்கள் தங்களுக்கு எப்படித் தெரியும் என்பதைத் தயவுசெய்து கூற வேண்டுகிறேன்.

காசியைப் பற்றியும் அவனுக்கு நான் கொடுத்த வாக்குறுதியைப் பற்றியும் கேட்டவுடன் திகைப்புற்ற அவர் என் கதையை நம்பினார்.

உங்களுக்குச் சிவப்பான ஓர் ஆண் குழந்தை பிறக்கும், நான் அவரிடம் கூறினேன். அகன்ற முகத்துடன் நெற்றியின் உச்சியில் ஒரு மச்சத்துடன் அவன் இருப்பான். அவன் இயல்பாகவே குறிப்பிடத்தக்க வகையில் தெய்வீக நாட்டமுடையவனாக இருப்பான். பிறக்க இருக்கும் குழந்தை காசியின் இச்சுபாவங்களைக் கொண்டிருக்கும் என எனக்கு நிச்சயமாகத் தோன்றியது.

பின்பு நான் அக்குழந்தையைச் சென்று பார்த்தேன். அவனுடைய பெற்றோர்கள் அவனுடைய பழைய பெயரான காசி என்பதையே அவனுக்கு வைத்திருந்தார்கள். சிறு குழந்தைப் பருவத்திலேயே அவன் தோற்றத்தில் என் அன்பான ராஞ்சி மாணவனையே உரித்து வைத்தாற் போலிருந்தான். அக்குழந்தை என்னைப் பார்த்த மாத்திரத்திலேயே என்னிடம் வாஞ்சையைக் காண்பித்தது. பழைய கவர்ச்சி இரு மடங்குத் தீவிரத்துடன் விழித்துக் கொண்டது.

பல வருடங்கள் கழித்து நான் அமெரிக்காவில் இருந்த பொழுது அந்த இளைஞன் எனக்குக் கடிதம் எழுதியிருந்தான். அதில் துறவு மார்க்கத்தை ஏற்பதில் அவனுக்கிருந்த ஆழ்ந்த ஆர்வத்தை வெளியிட்டிருந்தான். நான் அவனை இமயத்தில் இருக்கும் ஒரு மகானிடம் செல்லுமாறு பணித்தேன். அவர் மறுபிறப்பெய்திய காசியைத் தன் சீடனாக ஏற்றுக் கொண்டார்.



காசி
ராஞ்சி பள்ளிக்கூட மாணவன்

1 இரு புருவங்களின் இடையிலுள்ள மையத்திலிருந்து வெளிப்படுத்தப்படும் இச்சாசக்தி எண்ணத்தை ஒலிபரப்பும் கருவியாகும். மனிதனின் பாவனை அல்லது உணர்ச்சியின் ஆற்றலானது, இதயத்தில் அமைதியாக ஒருமுனைப்படுத்தப்படும் பொழுது அதனை மன-வானொலியாகச் செயல்படச் செய்து அருகிலிருந்தும் வெகு தூரத்திலிருந்தும் மற்றவர்களின் செய்திகளை அது பெறுமாறுச் செய்கிறது. உள்மனத் தொடர்பில் ஒரு மனிதனின் மனத்துள் எழும் மிகநுட்பமான எண்ண அதிர்வுகள் சூட்சும வெளியிலும் ஸ்தூல வெளியிலும் பரப்பப்படுகின்றன. அவை, மின்

அலைகளை ஏற்படுத்தி பிற்பாடு தமக்குத் தாமே மற்றொருவர் மனத்தினுள் எண்ண அலைகளாக உருமாறுகின்றன.

2 ஒவ்வொரு ஆத்மாவும் பரிசுத்தமான நிலையில் சர்வ வியாபியே. காசியின் ஆத்மா, காசி என்ற சிறுவனின் சுபாவங்கள் எல்லாவற்றையும் நினைவில் வைத்துக் கொண்டிருந்ததினால் நான் அடையாளம் கண்டுக்கொள்வதைத் தூண்டும் பொருட்டு அவனுடைய கரகரத்த குரலைப் போன்றே பேசியது.

3 அனேக மனிதர்கள் இறந்தபிறகு சூட்சுமலோகத்தில் 500 அல்லது 1000 வருடங்கள் வரை கூட இருப்பது உண்டு. இரண்டு பிறவிகளுக்கிடையில் உள்ள காலத்தைப் பற்றிய வரையறை ஏதும் கிடையாது. (43-வது அத்தியாயம் பார்க்கவும்) ஒரு மனிதனின் ஸ்தூல சரீர அல்லது சூட்சும சரீர காலக்கெடு அவனுடைய கர்மபலனை வைத்து முன்பே தீர்மானிக்கப்படுகிறது. மரணமும், உண்மையில் நித்திரையும் - சிறு மரணம் - உடலின் தேவையே. அவை அஞ்ஞானத்தில் உழலும் மனிதனுக்கு இந்திரிய வலையிலிருந்து தற்காலிகமாக விடுதலை அளிக்கின்றன. மனிதனின் அடிப்படை இயல்பு ஆத்மாவானதால் அவன் நித்திரையிலும் மரணத்திலும் அவனுடைய சரீரமற்ற தன்மையைப் பற்றிய சில புத்துயிரூட்டும் நினைவுகளைப் பெறுகிறான்.

இந்து தர்ம சாஸ்திரங்களில் சமனப்படுத்தும் கர்மவிதியானது வினையும் எதிர்வினையும், காரணமும் காரியமும், விளைப்பதும் அறுப்பதும் என்னும் வகையில் விவரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு மனிதனும் இயற்கையான அறவழியில் (ரீதா) செல்லும் பொழுது அவனுடைய எண்ணங்களாலும், செயல்களாலும் அவனுடைய விதியை அவனே நிர்ணயிப்பவனாகிறான். ஒரு வட்டம் மாற்ற முடியாதபடி தன்னிலேயே முழுமையாவதுபோல் அவன் எவ்வித பேரண்ட சக்திகளைத் தனக்குத்தானே விவேகத்துடனோ அல்லது விவேகமின்றியோ செயல்படுத்தியுள்ளானோ, அவை தொடங்கிய இடமான அவனிடமே திரும்பி வந்து சேர வேண்டும். "உலகம் ஒரு கணிதச் சமன்பாடு போலத் தோன்றுகிறது. ஒருவர் அதை எப்படித் திருப்பினாலும் தன்னைத் தானே சமநிலைப்படுத்திக் கொள்கிறது. மௌனமாகவும் உறுதியாகவும் ஒவ்வொரு ரகசியமும் வெளியாகவே செய்கிறது. ஒவ்வொரு தவறும் சரிசெய்யப்படுகிறது."-எமர்ஸன், "compensation". வாழ்க்கையின் எல்லா ஏற்றத் தாழ்வுகளுக்கும் பின்னால் நீதியின் சட்டமாக இருப்பது கர்மவினையேதான் என்று புரிந்து கொள்வதானது, மனிதமனம் கடவுளிடமோ அல்லது மனிதனிடமோ சினந்து கொள்வதிலிருந்து விடுதலையடைய உதவுகிறது. (பார்க்க பக்கம் 263 அடிக்குறிப்பு)

## அத்தியாயம் 29

# ரவீந்திரநாத் தாகூரும் நானும் எங்களது பள்ளிகளை ஒப்பிடுகிறோம்

ரவீந்திரநாத் தாகூர் எங்களுக்கு சுயவெளிப்பாட்டின் இயல்பான முறையாக, பறவைகளைப் போன்று சிரமமே இல்லாமல் பாடக் கற்பித்தார்.

எனது ராஞ்சிப் பள்ளிக்கூடத்தில் படிக்கும் அறிவுக் கூர்மையான பதினான்கு வயது சிறுவன் போலாநாத் என்பவனது இன்னிசைப் பெருக்கை நான் ஒரு நாள் காலைப் புகழ்ந்த பொழுது அந்த விளக்கத்தைக் கூறினான். தூண்டுதல் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, அந்தச் சிறுவன் இசையருவியைப் பொழிவான். போல்பூரில் உள்ள புகழ்பெற்ற கல்வி நிலையமான சாந்திநிகேதனின் (அமைதியின் இல்லம்) முன்னாள் மாணவன் அவன்.

சிறு வயதிலிருந்தே ரவீந்திரநாத்தின் கீதங்களை நான் பாடுவதுண்டு, நான் என் தோழனிடம் கூறினேன். வங்காளிகள் அனைவரும், எழுத்தறிவில்லாத பாமரன்கூட அவருடைய உயர்ந்த கவிதைகளில் ஆனந்தம் அடைகிறார்கள்.

போலாவும் நானும் தாகூரின் பாடல்களிலிருந்து சில அடிகளைச் சேர்ந்து பாடினோம். தாகூர் ஆயிரக்கணக்கான, இந்தியப் பாடல்களுக்கு இசை

அமைத்திருக்கிறார். அவைகளில் சில அவருடைய சொந்தப் படைப்புகள்; மற்றும் சில பழமையான பாடல்கள்.

எங்கள் சங்கீதம் முடிந்த பிறகு நான் கூறினேன்: நான் ரவீந்திரநாத் தாகூரை, இலக்கியத்திற்கான நோபல் பரிசை அவர் பெற்ற பிறகு சந்தித்தேன். அவர் தன் இலக்கியத்தைக் கண்டித்தவர்களை மேல்பூச்சு இல்லாமல் தைரியத்துடன் தள்ளிக்கழித்த முறையை நான் மெச்சினேன். அதுதான் என்னை அவரைச் சந்திக்கத் தூண்டியது, நான் உள்ளூர நகைத்தபடி பேசினேன்.

போலாவிற்கு சுவாரஸ்யம் தட்டியது. அவன் இக்கதையைக் கேட்க விரும்பினான்.

பண்டிதர்கள், வங்காளக் கவிதையுலகில் ஒரு புது நடையைப் புகுத்தியதற்காக தாகூரைக் கடுமையாகத் தாக்கினார்கள், நான் தொடங்கினேன். அவர் சாதாரண நடையையும், இலக்கிய நடையையும் ஒருங்கிணைத்து பண்டிதர்களுக்குப் பிரியமான எல்லா இலக்கியச் சட்ட திட்டங்களையும் புறக்கணித்தார். அவருடைய பாடல்கள் ஒப்புக்கொள்ளப்பட்ட விதிமுறைகளுக்கு உட்படாமல் ஆழ்ந்த தத்துவக் கருத்துக்களை உணர்ச்சிக்குகந்த முறையில் வெளியிட்டன.

செல்வாக்குப் படைத்த விமர்சகர் ஒருவர் ரவீந்திர நாத்தை அவர் தன் கூவல்களை அச்சிட்டு ஒரு ரூபாய்க்கு விற்கும் புறாக் கவிஞர், என்று வெறுப்புடன் வருணித்திருந்தார். ஆனால் தாகூரின் எதிர்த்தாக்குதல்

கைவசத்திலேயே இருந்தது; அவர் இயற்றிய கீதாஞ்சலியை (பாடல் வடிவ அஞ்சலி) அவரே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டதும் மேற்கத்திய இலக்கிய உலகம் முழுவதும் புகழ் மாலைகளைத் தாகூரின் பாதங்களில் சமர்ப்பித்தது. ரயில் வண்டி நிறைய பண்டிதர்கள், ஒரு சமயம் அவரைக் கடுமையாக விமர்சித்தவர்கள் உட்பட, தங்களுடைய பாராட்டுகளைத் தெரிவிப்பதற்கு சாந்தி நிகேதனுக்குச் சென்றார்கள்.

ரவீந்திரநாத் தனது விருந்தாளிகளை வெகுநேரம் வேண்டுமென்றே காக்க வைத்துப் பிறகே சந்தித்தார். அவர்களுடைய பாராட்டுதல்களை விருப்பு வெறுப்பற்ற மௌனத்துடன் செவிமடுத்தார். இறுதியில் விமர்சனம் என்ற அவர்களுடைய வழக்கமான ஆயுதத்தை அவர்களின் மீதே திருப்பினார்.

கனவான்களே, அவர் கூறினார், தாங்கள் இங்கு என் மீது பொழியும் மணம் கமழும் பாராட்டுகள் தங்கள் கடந்தகால இகழ்ச்சிகளின் துர்நாற்றத்துடன் அசம்பாவிதமாகக் கலந்தே காணப்படுகின்றன. என்னுடைய நோபல் பரிசுக்கும் உங்களுடைய திடீர் கூர்மையான ரசனையின் திறனுக்கும் ஏதாவது தொடர்பு இருக்கிறதா? வங்காளக் கோயிலில் முதன்முதலாக என் தாழ்மையான இலக்கிய மலர்களை அர்ப்பணித்த போது உங்களை மனவருத்தமடையச் செய்த அதே புலவன்தான் நான் இப்பொழுதும்.

தாகூர் கூறிய தைரியமான கண்டனத்தின்

விவரத்தைச் செய்தித்தாள்கள் பிரசுரித்திருந்தன. முகத்துதியால் மயக்கமுறாத ஒரு மனிதனின் வெளிப்படையான சொற்கள் என்னைக் கவர்ந்தன, நான் தொடர்ந்தேன். நான் கல்கத்தாவில் ரவீந்திரநாத் தாகூருக்கு, எளிய முறையில் வங்காள வேட்டி அணிந்திருந்த அவருடைய காரியதரிசி, ஸி.எ.ஃப். ஆண்ட்ரூஸ்[1] என்பவரால் அறிமுகப்படுத்தப்பட்டேன். அவர் தாகூரை அன்புடன் குருதேவர் எனக் குறிப்பிட்டார்.

ரவீந்திரநாத் என்னை மிக அன்புடன் வரவேற்று உபசரித்தார். அவரிடமிருந்து வசீகரம், பண்பு, பெருந்தன்மை ஆகியவை ஒளிர்ந்தன. அவருடைய இலக்கியப் பின்னணியைப் பற்றிய என் கேள்விக்குப் பதிலளிக்கையில், அவர் முக்கியமாக நமது மத சம்பந்தமான இதிகாசங்களினாலும் பதினான்காம் நூற்றாண்டில் பிரபலக் கவிஞராயிருந்த வித்யாபதியின் நூல்களினாலும் கவரப்பட்டதாகக் கூறினார்.

இந்த ஞாபகங்களால் ஊக்குவிக்கப்பட்டு நான் தாகூரின் சொற்களாலமைந்த ஒரு பழைய வங்காள கீதத்தை நின் அன்பெனும் விளக்கை ஒளிபெறச் செய்வாயாக ("Light the Lamp of Thy Love,") என்னும் பாடலைப் பாடத் தொடங்கினேன். போலாவும் நானும் மகிழ்ச்சியுடன் வித்யாலயத்தின் மைதானத்தில் பாடியவாறு உலவினோம்.

நான் ராஞ்சி வித்யாலயத்தை நிறுவிய சுமார் இரண்டு வருடங்களுக்குப் பிறகு எனக்குத் தாகூரிடமிருந்து எங்கள் கல்விக் குறிக்கோள்களைப் பற்றிக் கலந்து பேச சாந்தி நிகேதனுக்கு வரும்படி அழைப்பு வந்தது. நான் மகிழ்ச்சியுடன் சென்றேன். நான் அங்கு சென்றடைந்த பொழுது அந்தக் கவிஞர் அவருடைய படிப்பறையில் அமர்ந்திருந்தார். எங்கள் முதல் சந்திப்பில் நான் நினைத்தது போலவே அப்பொழுதும், அவர் எந்த ஓவியனும் விரும்பக்கூடிய, மனத்தில் பதியத்தக்க சிறப்பான ஆண்மையின் ஒரு முன்மாதிரியாகவே திகழ்ந்தார். அவரது முகம் அழகாகச் செதுக்கப்பட்டு கம்பீரமான உயர்குல மாண்புடன் கூடிய தோற்றத்துடன் நீண்ட முடியும், தவழ்ந்த தாடியும் கொண்டு விளங்கியது. கருணை பொழியும் பெருவிழிகள்; தெய்வீகப் புன்னகை; மற்றும் உண்மையிலேயே மயக்குகின்ற புல்லாங்குழலைப் போன்ற குரல். உயரமான, திடகாத்திர, சீரிய உருவத்தில் கிட்டத்தட்ட அவர் பெண்ணின் மென்மையையும், குழந்தையின் இயல்பான ஆனந்தத்தையும் ஒருங்கே கொண்டிருந்தார். ஒரு கவிஞனுக்கே உரிய லட்சிய எண்ணங்கள் இந்த மென்மையானப் பாடகருள் மிகத் தகுதியாகப் பொருந்தியுள்ளது போல் வேறு எந்த உருவத்திற்கும் பொருந்தாது.

நானும் தாகூரும் சீக்கிரமே வழக்கமான முறையிலிருந்து மாறுபட்ட நோக்கில் ஸ்தாபிக்கப்பட்ட எங்கள் பள்ளிக்கூடங்களை ஒப்பிடும் ஆராய்ச்சியில்

ஆழ்ந்தோம். அதில் நாங்கள் அனேக ஒற்றுமைகளைக் கண்டோம்திறந்த வெளியில் கல்வி புகட்டுதல், எளிமை, ஒரு குழந்தையின் படைப்பாற்றலுக்கு வேண்டிய ஏராளமான வாய்ப்புக்கள் முதலியன. இருந்தாலும் ரவீந்திரநாத் இலக்கியம் மற்றும் கவிதையைப் பயில்வதற்கும், நான் ஏற்கனவே போலா மூலம் அறிந்திருந்த இசை மற்றும் பாடல் மூலமான சுயவெளிப்பாட்டிற்கும் மிகுந்த முக்கியத்துவம் கொடுத்திருந்தார். சாந்தி நிகேதன் குழந்தைகளுக்கு மௌனத்திற்கு நேரம் ஒதுக்கப் பட்டிருந்தது. ஆனால் விசேஷமான யோகப் பயிற்சி தரப்படவில்லை.

ராஞ்சியில் அனைத்து மாணவர்களுக்கும் போதிக்கப்படும் சக்தியூட்டும் யோகதா உடற்பயிற்சிகள் மற்றும் மனத்தை ஒருமுனைப்படுத்தும் யோக உத்திகள் பற்றிய என் விளக்கத்தை அந்தக் கவிஞர் பாராட்டும் விதத்தில் கவனத்துடன் கேட்டார்.

தாகூர் தன் சிறு வயதில் கல்வி கற்பதில் ஏற்பட்ட பிரச்சனைகளைக் கூறினார். சிரித்துக்கொண்டே அவர் நான் ஐந்தாவது படிவத்திற்குப் பின் பள்ளிக் கூடத்தை விட்டு ஓடிவிட்டேன், என்றார். அவருடைய மென்மையான உள்ளார்ந்த கவிதை உணர்ச்சிகள் பள்ளிக்கூட அறையின் சாரமற்ற, ஒழுங்குமுறை கொண்ட சூழ்நிலையில் எவ்வாறு அவமானப்படுத்தப்பட்டிருக்கும் என்பதை என்னால் உடனடியாக உணர முடிந்தது.

அதனால்தான் நான் சாந்தி நிகேதனை நிழலடர்ந்த

மரங்களின் அடியிலும் வானத்தின் வனப்பின் கீழேயும் துவக்கினேன். அவர் அவ்வழகிய தோட்டத்தில் படித்துக் கொண்டிருந்த ஒரு குழுவை நோக்கி ஆர்வத்துடன் சுட்டிக் காட்டினார். ஒரு குழந்தை மலர்கள் மற்றும் பாடும் பறவைகள் நடுவில் தன் இயற்கையான சூழ்நிலையில் உள்ளது. அங்குதான் அக்குழந்தை தன்னிடம் மறைந்துள்ள செல்வமான, தனக்கே உரிய திறமையைச் சுலபமாக வெளிக்கொணர முடியும். உண்மையான கல்வி என்பது வெளி ஆதாரங்களிலிருந்து புகுத்துவதோ அல்லது திணிப்பதோ அல்ல. மனிதனின் உள்ளுக்குள்ளே குவிக்கப்பட்டிருக்கும் எல்லையற்ற ஞானத்தை வெளிக்கொணர உதவுவதுதான் அது.[2]

நான் ஒப்புக்கொண்டு கூறினேன்: சாதாரண பள்ளிக் கூடங்களில், புள்ளி விவரங்கள் மற்றும் வரிசையான சம்பவங்கள் அடங்கிய சகாப்தங்களுக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றன. இதனால் இளவயதினர் இலட்சிய பண்பு மற்றும் தலைவர்களைப் போற்றும் சுபாவம் அற்றவர்களாக ஆக்கப்படுகின்றனர்.

சாந்தி நிகேதனைத் தொடங்குவதற்கு ஊக்கமளித்த தன் தந்தை தேவேந்திரநாத்தைப் பற்றி அக்கவிஞர் அன்புடன் பேசினார்.

தந்தை, அவர் ஏற்கனவே ஒரு விருந்தினர் இல்லமும் கோயிலும் கட்டியிருந்த இச்செழிப்பான நிலத்தை எனக்குப் பரிசளித்தார். நான் 1901-ஆம் ஆண்டில் பத்துச் சிறுவர்களுடன் மட்டுமே என் கல்விமுறைப் பரிசோதனையை இங்கு தொடங்கினேன்.

நோபல் பரிசுடன் வந்த எண்ணாயிரம் பவுண்டுகள் எல்லாம் பள்ளிக்கூடத்தை நிர்வகிப்பதில் செலவாயிற்று, என்று ரவீந்திரநாத் என்னிடம் கூறினார்.

மூத்த தாகூரான தேவேந்திரநாத், மகரிஷி என்ற பெயரில் பரவலாகப் பிரபலமடைந்திருந்த குறிப்பிடத்தக்க மனிதர் என்பதை அவருடைய சுயசரிதத்திலிருந்தே ஒருவர் கண்டு கொள்ளலாம். அவருடைய இளமைப் பருவத்தில் இரண்டு வருடங்கள் இமயமலைச் சாரலில் தியானம் செய்வதில் கழிந்திருந்தன. அதேபோல் அவருடைய தந்தை துவாரகநாத் தாகூரும், பொது மக்களுக்கு தர்மம் செய்யும் அவருடைய வள்ளல் தன்மையினால் வங்காளம் முழுவதும் புகழ் பெற்றிருந்தார். புகழ்பெற்ற இவ்வம்சாவளியில் மேதைகள் நிரம்பிய ஒரு குடும்பமே உருவாயிற்று. ரவீந்திரநாத் தாகூர் மட்டுமல்ல, அவருடைய எல்லா உறவினர்களும் தங்கள் படைப்பாற்றல் மூலமாகத் தங்களைத் தனிப்படுத்திக் காட்டும் திறமையைப் பெற்றிருந்தனர். அவருடைய மருமகன்களான ககனேந்திரா, அவனிந்திரா இருவரும் இந்தியாவின் தலைசிறந்த கலைஞர்களில் [3]முன்னணியில் இருப்பவர்கள், ரவீந்திரநாத்தின் சகோதரரான த்விஜேந்திரா, பறவைகளாலும் வன விலங்குகளாலும் கூட விரும்பப்படும் ஓர் ஆழ்ந்து நோக்கும் தத்துவஞானி.

விருந்தினர் இல்லத்தில் இரவு தங்கும்படி ரவீந்திரநாத் என்னை அழைத்தார். மாலையில் அந்தக்

கவிஞரும் அவருடைய குழுவும் முற்றத்தில் அளித்த நாடகக் காட்சியின் அழகில் நான் மிகவும் மகிழ்ச்சியுற்றேன். காலம் பின்னோக்கி விரிந்தது: என் கண் முன்னே இருந்த காட்சி புராதனகால ஆசிரமம் போன்ற ஒன்றாகும். அந்த ஆனந்தமான பாடகனும் அவனைச் சுற்றிய பக்தர்கள் அனைவரும் இறை அன்பெனும் ஒளிச்சூழலில் பரிமளித்தார்கள். தாகூர் நட்பின் ஒவ்வொரு இணைப்பையும் இசைவெனும் இழைகளினால் பின்னினார். அவர் வலிந்து கூறாமல், தடுக்கமுடியாத ஒரு காந்த சக்தியால் இதயத்தைக் கொள்ளை கொண்டார். ஆண்டவனின் பூஞ்சோலையில் அபூர்வமாக மலர்ந்த கவிதை மலர்கள் இயற்கை மணம் பரப்பி மற்றவர்களைத் தன்வசம் இழுக்கவே செய்தன!

ரவீந்திரநாத் தன் இனிமையான குரலில், தான் புதிதாக இயற்றியிருந்த சில அருமையான கவிதைகளை எங்களுக்கு வாசித்துக் காட்டினார். அவருடைய அனேக கவிதைகளும் நாடகங்களும் அவருடைய மாணவர்களை மகிழ்விப்பதற்காகவே சாந்தி நிகேதனில் இயற்றப்பட்டன. அனேகமாக ஒவ்வொரு பத்தியிலும் இறைவனை, அவனுடைய புனித நாமத்தைக் கூறாமலேயே குறிப்பிடுகின்ற கலைத்திறனில் அவருடைய வரிகளின் அழகு அடங்கியிருப்பதாக எனக்குத் தோன்றியது. இசையின் பேரின்பத்தில் நான் என்னையே மறந்து, என் இறைவனான உன்னை நண்பனென அழைக்கிறேனே, என்று எழுதியிருந்தார்.

மறுநாள் மதிய உணவிற்குப் பிறகு நான் அந்தக்

கவிஞரிடம் பிரியா விடை பெற்றேன். அவருடைய சிறு பள்ளிக்கூடம் இப்பொழுது சர்வதேச பல்கலைக்கழகமாக, விஸ்வ–பாரதி[4] என்ற பெயரில் வளர்ந்து அங்கே பல நாடுகளிலிருந்தும் வருகின்ற மாணவர்கள் ஓர் ஆதரிசச் சூழ்நிலையைக் காண்பது எனக்கு மெத்த மகிழ்ச்சியை அளிக்கிறது.

எங்கே மனம் அச்சமென்பதறியாதோ,
தலை நிமிர்ந்து உள்ளதோ;
எங்கே அறிவு சுதந்திரமாக உலவுமோ;
எங்கே உலகு சுருங்கிய தேசச் சுவர்களினால்
துண்டங்களாகப் பிளவுபடாதோ;
எங்கே சொற்கள் உள்ளாழ்ந்த
உண்மையிலூறிப் பொங்குமோ;
எங்கே என்றும் தளராத முயற்சிகளின் கரங்கள்மு
முநிலையை நாடுமோ;
எங்கே அறிவின் தெளிந்த நீரோடை செத்த
பழக்கமெனும் வறண்ட பாலைவழி பாயாதோ;
எங்கே மனம் என்றும் விரியும் எண்ணத்திலும் செயலிலும்
நீ காட்டிய வழியில் முன் நடக்குமோ;
அந்த விடுதலை சொர்க்கத்தில் எந்தையே
என் நாடு விழிக்கட்டும்![5]

ரவீந்திரநாத் தாகூர்.

---

1 மகாத்மா காந்தியின் நெருங்கிய நண்பரும், ஆங்கில எழுத்தாளரும் பத்திரிகையாளருமாவார்.

2 ஆத்மா அடிக்கடி பிறந்து, அல்லது, இந்துக்கள் கூறுவது போல், ஆயிரக்கணக்கான பிறப்புக்களின் மூலம் வாழ்வின் மார்க்கத்தில் பயணித்து... அவள் அடையாத ஞானம்

ஏதுமில்லை; அவள் முன்பு அறிந்திருந்ததை... அவள் ஞாபகப்படுத்திக் கொள்ள முடிவதில் அதிசயம் ஒன்றுமில்லை... ஏனெனில் ஆராய்வும் கற்றுக் கொள்ளலும் எல்லா பழைய நினைவுகள் தாம்.எமர்ஸன், Representative Men.

3 ரவீந்திரநாத்தும் அவரது அறுபது வயதிற்குப்பின் ஓவியக்கலையில் ஆழ்ந்து ஈடுபட்டார். அவரது படைப்புகள் சில வருடங்களுக்கு முன்னர் ஐரோப்பியத் தலைநகரங்களிலும், நியூ யார்க்கிலும் கண்காட்சிகளில் இடம் பெற்றிருந்தன.

4 இந்த அன்பிற்குரிய கவிஞர் 1941ல் மறைந்துவிட்டாலும், அவரது விஸ்வபாரதி இன்னும் வளர்ந்து வருகிறது. ஜனவரி 1950-ல், சாந்தி நிகதேனிலிருந்து அறுபத்தி ஐந்து ஆசிரியர்களும் மாணவர்களும் ராஞ்சியிலிருக்கும் யோகதா சத்சங்கப் பள்ளிக்கு பத்து நாட்கள் விஜயம் செய்தனர்.

5 கீதாஞ்சலி (மாக்மில்லன் கம்பெனி) புகழ்பெற்ற அறிஞர் ஸர்.எஸ். ராதாகிருஷ்ணன் எழுதிய ரவீந்திரநாத் தாகூரின் தத்துவம் (The Philosophy of

Rabindranath Tagore) என்ற புத்தகத்தில் அக்கவியைப் பற்றிய ஆழ்ந்த ஆராய்ச்சியைக் காணலாம் (மாக்மில்லன் கம்பெனி).

## அத்தியாயம் 30

# அதிசயங்களின் விதி

சிறந்த நாவலாசிரியரான லியோ டால்ஸ்டாய்[1] மூன்று துறவிகள் (The Three Hermits) என்ற ஓர் அழகான கிராமியக் கதை எழுதியுள்ளார். அவருடைய நண்பரான நிகோலஸ் ரோரிக் என்பவர் அதைப் பின்வருமாறு சுருக்கி உரைத்துள்ளார்.

ஒரு தீவில் வயதான மூன்று துறவிகள் வசித்து வந்தார்கள். அவர்கள் மிக எளிமையானவர்களாக இருந்ததால், அவர்களுடைய ஒரே பிரார்த்தனையும் நாங்கள் மூவர், நீயும் மூன்றேஎங்கள் மீது கருணை காட்டுவாய்! என்பதாகவே இருந்தது. அவர்களுடைய கபடமற்ற இப்பிரார்த்தனையின் போது பேரதிசயங்கள் நடந்தன.

உள்ளூர் பிஷப்[2] அவர்களைப் பற்றியும் அவர்களுடைய ஒப்புக்கொள்ள முடியாத பிரார்த்தனையைப் பற்றியும் கேள்வியுற்றார். அவர்களைப் பார்த்து அவர்களுக்கு முறைப்படியான பிரார்த்தனை செய்யக் கற்றுக் கொடுக்கத் தீர்மானித்தார். அவர் அத்தீவை அடைந்து அத்துறவியர்களிடம். ஆண்டவனிடம் அவர்களுடைய முறையீடு பெருமைக்குகந்த முறையில் செலுத்தப்படவில்லை எனக்கூறி, வழக்கமான அனேக பிரார்த்தனைகளை அவர்களுக்குக் கற்றுக் கொடுத்தார். பிறகு அந்த பிஷப்

ஒரு படகில் திரும்பினார். அவர் ஒரு பிரகாசமான ஒளி, படகைத் தொடர்வதைக் கண்டார். அது அருகில் வந்ததும் அம்மூன்று துறவிகளும் பிணைத்த கைகளுடன் படகை முந்தும் நோக்கத்துடன் அலைகளின் மேல் ஓடி வருவதைக் கண்டார்.

நீங்கள் கற்பித்த பிரார்த்தனைகளை நாங்கள் மறந்து விட்டோம், அவர்கள் அந்த பிஷப்பை நெருங்கியதும் கூவினார்கள். உங்களை மறுபடியும் அவைகளைச் சொல்லும்படி கேட்பதற்காக ஓடோடி வருகிறோம். திகைப்படைந்த அந்த பிஷப் தலையை அசைத்தார்.

அன்பர்களே, உங்களுடைய பழைய பிரார்த்தனையே தொடரட்டும்! என்று பணிவுடன் கூறினார்.

அம்மூன்று துறவிகளும் எப்படி நீர் மேல் நடந்தனர்?

கிறிஸ்து சிலுவையில் அறையப் பெற்ற தன் உடலை எப்படி மறுபடியும் உயிர்ப்பித்தார்? லாஹிரி மகாசயரும் ஸ்ரீ யுக்தேஸ்வரும் அவர்களுடைய அதிசயங்களை எப்படி நிகழ்த்தினார்கள்? அணு யுகத்தின் வருகையினால் உலக மனத்தின் எல்லை திடீரென்று விரிவடைந்து விட்டாலும் நவீன விஞ்ஞானத்தில், இவைகளுக்கு, இன்னும் விடை இல்லை. மனிதனுடைய அகராதியில் அசாத்தியம் என்ற சொல்லின் முக்கியத்துவம் குறைந்து வருகிறது.

இப்பூத உலகு சார்பியல், இருமை என்ற கோட்பாடுகளி னாலான மாயையின் அடிப்படைத் தத்துவத்திற்கு உட்பட்டு, இயங்குவதாக வேத நூல்கள் பறைசாற்றுகின்றன. இறைவன், ஒன்றேயான ஜீவன்,

முழுமையான ஏகமானவன்; ஒரு படைப்பின் வெளிப்பாடுகள் வெவ்வேறாகவும் பல விதமாகவும் தோன்றுவதற்கு அவன் போலியானதும் உண்மை அல்லாததுமாகிய ஒரு திரையை அணிகிறான். அந்த பொய்த் தோற்ற இருமைத் திரைதான் மாயை.[3] நவீன காலத்தின் பல தலையாய விஞ்ஞான கண்டுபிடிப்புகள் புராதன ரிஷிகளின் இந்த எளிய கூற்றை உறுதிப்படுத்துகின்றன.

நியூட்டனின் இயக்க விதி மாயையின் ஒரு விதியேதான். ஒவ்வொரு செயலுக்கும் அதற்குச் சமமான ஓர் எதிர்ச்செயல் எப்பொழுதும் உண்டு; ஏதாவது இரண்டு பொருட்களுக்கிடையே நிகழும் பரஸ்பர எதிர்ச்செயல்கள் எப்பொழுதும் சமமாகவும் எதிர்த் திசையிலும் செயல்படுகின்றன. இவ்வாறு செயலும் எதிர்ச்செயலும் முற்றிலும் சமமானவை. ஒரு தனி விசை இருப்பது சாத்தியமில்லை. ஒரு சோடி விசைகள் சமமானதும் எதிரானதுமாக இருக்க வேண்டும், எப்பொழுதும் இருக்கிறது.

அடிப்படையான இயற்கைச் செயல்கள் யாவும் அவைகளின் பிறப்பிடம் மாயையே என வெளிப்படுத்துகின்றன. உதாரணமாக மின்சாரமானது, விலக்குதல் மற்றும் ஈர்த்தலின் ஒரு நிகழ்ச்சியே; அதன் எலக்ட்ரான்களும் புரோட்டான்களும் மின்சார எதிர்மாறானவை. மற்றோர் உதாரணம்: பொருளின் அணு அல்லது முடிவான துகள், இப்பூமியைப் போன்றே நேர் துருவம் மற்றும் எதிர் துருவம் கொண்ட ஒரு

காந்தம்தான். இம்முழு உலகத் தோற்றமும் இரு துருவங்களின் மாற்ற முடியாத ஆதிக்கத்திற்கு உட்பட்டதுதான்; இயற்பியல், வேதியியல் மற்றும் வேறு எந்த விஞ்ஞானமும் இயற்கையாகவே அமைந்த எதிர்மாறான அல்லது முரணான தத்துவங்களிலிருந்து விடுபட்டதாக எப்பொழுதுமே காணப்படவில்லை.

அதனால், இயற்பியல் விஞ்ஞானம், படைப்பின் மூல கட்டிணைப்புப் பொருளும் அமைப்புமான மாயையை மீறி விதிகளை உருவாக்க இயலாது. இயற்கையே மாயை; ஆதலால் இயற்கை விஞ்ஞானம், மாயையின் தப்ப முடியாத தனித் தன்மையைச் சார்ந்தே செல்ல வேண்டும். தன்னுடைய சொந்த ஆதிக்கத்திற்குள் அவள் நிரத்தரமானவள் மற்றும் என்றும் குறைவில்லாதவள்; வருங்கால விஞ்ஞானிகள் அவளுடைய கணக்கற்ற பலவிதமான தன்மைகளை ஒவ்வொன்றாக ஆராய்வதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாது. இவ்வாறு விஞ்ஞானம் முடிவை அடையவே முடியாதபடி ஓயாத இயக்கத்திலுள்ளது; ஏற்கனவே பேரண்டத்தில் நடந்து செயல்பட்டு வரும் பிரபஞ்ச விதிகளைக் கண்டுபிடிக்க உண்மையிலேயே தகுதியானது. ஆனால் சட்டங்களை இயற்றுபவனையோ அல்லது தனித்தியக்குபவனையோ கண்டறியத் திறமையற்றது. புவிஈர்ப்பு மற்றும் மின்சாரத்தின் கம்பீரமான வெளிப்பாடுகள் அறியப்பட்டுள்ளன. ஆனால் புவிஈர்ப்பு அல்லது மின்சாரம் என்றால் என்ன என்பதை மனிதன் அறிய மாட்டான்.[4]

மனித குலத்திற்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மகான்கள் கொடுத்திருக்கும் பணி, மாயையை வெல்வதுதான். படைப்பின் இருமையைக் கடந்து படைப்பவனின் ஒருமையை உணருவதுதான் மனிதனின் மிக உயர்ந்த லட்சியமாகக் கருதப்படுகிறது. பிரபஞ்சத்தின் பொய்த் தோற்றத்தைப் பற்றியிருப்பவர்கள் அதன் முக்கிய இரு துருவ விதி, அதாவது பொங்குதலும் அடங்குதலும், ஏற்றமும் இறக்கமும், இரவும் பகலும், இன்பமும் துன்பமும், நன்மையும் தீமையும், பிறப்பும் இறப்பும் ஆகியவற்றை ஒப்புக் கொண்டே ஆக வேண்டும். மனிதன் சில ஆயிரம் மனிதப் பிறவிகள் எடுத்த பிறகு இந்த சுழற்சி முறை ஒரு வித வேதனை தரும் மாறுதலின்மையைத் தோற்றுவிக்கிறது; பின்னர், அவன் மாயையின் கட்டுக்களைக் கடந்து செல்வது பற்றி நம்பிக்கையுடன் நோக்கத் தொடங்குகிறான்.

மாயையின் திரையை விலக்குவதென்பது படைப்பின் ரகசியத்தை அறிவதாகும். இவ்விதமாக அண்டசராசரத்தின் திரையை அகற்றுபவன்தான் உண்மையான அத்வைதி. மற்ற அனைவரும் புறச்சமய உருவ வழிபாடு உடையவர்கள். மனிதன் இயற்கையின் இருமைத் தோற்றங்களில் சிக்கியிருக்கும்வரை இரு முகமுடைய மாயைதான் அவனுக்கு இறைவி; அவன் ஒன்றேயாகிய மெய்ப்பொருளை அறிய முடியாது.

உலக பொய்த் தோற்றமாம் மாயை, மனிதர்களிடம் அவித்யை என உருவெடுக்கிறது. அவித்யை: இல்லை-

அறிவு, அறியாமை, அல்லது மதிமயக்கம் எனப் பொருள்படும். மாயை அல்லது அவித்யையை புத்தியின் திட நம்பிக்கையினாலோ அல்லது பகுப்பாராய்ச்சியினாலோ ஒருக்காலும் அழிக்க முடியாது. அதை உள்முக நிலையான நிர்விகல்ப சமாதியை எய்துவதனாலேயே அழிக்க முடியும். பழைய ஏற்பாட்டின் (Old Testament) தீர்க்கதரிசிகளும் எல்லா தேசங்கள் மற்றும் காலங்களைச் சார்ந்த ஞானிகளும் அந்த உணர்வு நிலையிலிருந்தே பேசியுள்ளார்கள்.

எசேக்கியல் கூறியுள்ளார்:[5] பின்பு அவர் என்னைக் கீழ்த்திசைக்கு எதிர் வாசலாகிய வாசலுக்கு அழைத்துக் கொண்டு போனார். இதோ, இஸ்ரவேலின் தேவனுடைய மகிமை கீழ்த்திசையிலிருந்து வந்தது; அவருடைய சத்தம் பெரு வெள்ளத்தின் இரைச்சலைப் போல இருந்தது; அவருடைய மகிமையினால் பூமி பிரகாசித்தது. பெரு வெள்ளத்தின் தெய்வீக ஒலியாகிய வார்த்தை அல்லது ஓங்காரத்தை–ஒளியின் அதிர்வலைகளாலான படைப்பின் ஒரே உண்மையை–செவிமடுத்தவாறு நெற்றியிலுள்ள ஞானக் கண்ணின் (கிழக்கு) மூலமாக யோகி தன் உணர்வு நிலையை சர்வ வியாபகத்திற்குக் கொண்டு செல்கிறான்.

பேரண்டத்தின் கோடிக்கணக்கான மர்மங்களிடையே ஒளி என்பது மிக்க அதிசயமானதாகும். தான் கடத்தப்படுவதற்கு காற்றோ அல்லது வேறு பொருளின் ஊடகமோ தேவைப்படும் ஒலி அலைகளைப் போலல்லாமல், ஒளி அலைகள் அண்ட

கோளங்களுக்கிடையே நிலவும் சூன்யத்தினூடே சுதந்திரமாகப் பாய்கின்றன. அலைவரிசைக் கோட்பாட்டின்படி ஒளி அலைகள் பரவுவதற்கேற்றவாறு, கிரகங்களுக்கிடையே ஈதர் என்னும் ஆகாயவெளி ஊடகமாக நிலவுவதாக உத்தேசித்துக் கூறப்படுகிறது. ஐன்ஸ்டைனின் கொள்கைக்கேற்ப அண்ட வெளியின் வடிவ இயல் பண்புகளின்படி இந்த ஈதர் தத்துவம் தேவையற்றதென நிராகரித்து விடலாம். எந்த வகை கற்பிதக் கொள்கையின்படி பார்த்தாலும் ஒளி மிக சூட்சுமமானதாகவும், எந்த இயற்கைப் பொருளையும் சார்ந்திராமல், சுதந்திரமானதாகவும் உள்ளது.

ஐன்ஸ்டைனுடைய பிரமாண்டமான கருத்துக்களில் ஒளியின் வேகம்தான்வினாடிக்கு 1,86,300 மைல்கள் – சார்பியல் கோட்பாட்டை (Theory of Relativity) முழுவதுமாக ஆக்ரமித்துக் கொண்டுள்ளது. வரம்பிற்குட்பட்ட மனித மனத்தைப் பொறுத்தவரை சலனத்திலுள்ள பிரபஞ்சத்தில் ஒளியின் வேகம் மட்டுமே நிரந்தரமானது என்று அவர் கணிதத்தின் மூலம் நிரூபிக்கிறார். இடம், காலம் பற்றிய மனித அளவுகோல்கள் எல்லாம் ஒரே தனி முதலான ஒளியின் வேகத்தைச் சார்ந்துள்ளன. இந்நாள் வரை கற்பனையாக நினைத்ததுபோல் இடமும் காலமும் நிரந்தரமானவை அல்ல; ஆனால் அவைகள் சார்பு உடையவை மற்றும் வரையறைக்கு உட்பட்டவை. ஒளியின் வேகம் என்ற அளவுகோலே அவற்றின் நிபந்தனைக்கு உட்பட்ட அளவீடுகளின் ஆதாரம்.

இடம், அளவுகூறுகளைச் சார்ந்தது என்பதால்

காலமும் இப்பொழுது அதற்குரிய சுயரூபத்திற்குக் கொண்டு வரப்பட்டு விட்டது; தெளிவற்ற நிலையின் எளிய சாரம். தன் பேனாவின் சில சமன்பாட்டுக் கோடுகளின் மூலம் ஒளி ஒன்றைத் தவிர இதுவரை நிரந்தரம் என நினைக்கப்பட்ட எல்லாவற்றையும் ஐன்ஸ்டைன் பிரபஞ்சத்திலிருந்து நீக்கி விட்டார்.

பின்பு ஏற்பட்ட முன்னேற்றமாகிய அவருடைய ஒருங்கிணைக்கப்பட்ட பரப்பு சித்தாந்தத்தில் (Unified Field Theory) அந்த மகா விஞ்ஞானி, ஒரே கணித சூத்திரத்தில் புவிஈர்ப்பு மற்றும் மின்காந்த விதிகளுக்கு வடிவமைக்க முயன்றார். பிரபஞ்ச அமைப்பை ஒரே ஒரு விதியினுடைய பல மாறுபாடுகளாகச் சுருக்கி ஐன்ஸ்டைன், யுகங்களைத் தாண்டி, படைப்பின் தத்துவம் ஒரே நிலையற்ற மாயையே[6] எனப் பறைசாற்றிய புராதனகால ரிஷிகளை நெருங்கி விட்டார்.

இச்சகாப்தத்தின் முக்கிய சித்தாந்தமான சார்பியல் கோட்பாட்டின் வாயிலாக முடிவான அணுவை ஆராய்வதற்கு தகுந்த கணித சாத்தியங்கள் உருவாகி உள்ளன. இப்பொழுது மகா விஞ்ஞானிகள் அணு என்பது பொருள் அல்ல, ஆனால் சக்தியே; அதுமட்டுமல்ல அந்த அணு சக்தி அடிப்படையில் மனமூலப் பொருளே என்று துணிவுடன் வலியுறுத்துகின்றனர்.

ஸர் ஆர்தர் ஸ்டான்லி எடிங்டன் என்பவர் தன்னுடைய பூத உலகின் இயல்பு[7] (The Nature of the physical world) என்ற புத்தகத்தில், இயற்பியல் விஞ்ஞானம், ஒரு நிழலுலகுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது எனத்

தெள்ளத் தெளிய உணர்ந்து இருப்பது மிக்க குறிப்பிடத்தக்க முன்னேற்றங்களிலொன்று, என எழுதுகிறார். இயற்பியல் உலகில் நாம் பழக்கமான வாழ்க்கையெனும் நாடகத்தில் நிழலுருவப்படக் காட்சியைக் காண்கிறோம். நிழலாகிய என் முழங்கை, நிழலாகிய மேஜையின் மேல் இருக்கிறது. அதேபோல, நிழலாகிய மை நிழலாகிய காகிதத்தின் மேல் பாய்கிறது. இவையெல்லாம் அடையாளச் சின்னமானவையே; இயற்பியல் விஞ்ஞானியும் அதை ஒரு சின்னமாகவே விட்டுவிடுகிறான். பிறகு ரசவாதியான மனது அந்த சின்னங்களை மாறுபடுத்துகிறது... பக்குவமற்ற வகையில் முடிவைக் கூறவேண்டுமெனில் உலகத்தின் மூலப்பொருள், மனமூலப்பொருளே.

சமீபத்தில் உருவாக்கப்பட்ட ஒரு மின்னணு உருப்பெருக்கியின் மூலம் அணுக்கள் ஒளிமயமானவை என்பதும் இயற்கையின் தப்பமுடியாத இருமைத் தத்துவமும் நிச்சயமான முறையில் நிரூபிக்கப்பட்டு விட்டன. 1937ல் நடந்த விஞ்ஞான முன்னேற்றத்திற்கான அமெரிக்க சபையின் ஒரு கூட்டத்தில் மின்னணு உருப்பெருக்கியை இயக்கிக் காட்டியதைப் பற்றி நியூ யார்க் டைம்ஸ் என்ற பத்திரிகை பின்வரும் அறிக்கையை வெளியிட்டது:

> டங்ஸ்டனின் படிக அமைப்பு, எக்ஸ்ரேக்கள் மூலமாக மறைமுகமாகவே இந்நாள் வரை அறியப்பட்டு வந்தது. ஆனால், ஒளியுமிழ் திரையில் அதன் அமைப்பு மிகத் தெளிவாக வெளியாயிற்று. அதன் ஒன்பது அணுக்களும் ஒவ்வொரு மூலையில் ஓர் அணுவும் மத்தியில் ஓர் அணுவுமாக அமைந்த கன சதுர சட்டவெளியில் தமக்குரிய சரியான இடங்களில் தோன்றின. டங்ஸ்டன் அணுக்கள் படிக சட்டத்தில் வடிவியல் கணித (Geometry) முறைப்படி அமைக்கப்பட்ட ஒளி புள்ளிகளாக

ஒளியுமிழ் திரையில் தோற்றமளித்தன. இந்த கன சதுர ஒளிப்படிகத்திற்கு எதிராக மோதும் காற்றின் மூலக்கூறுகள், நீரின் அலையசைவில் மின்னும் சூரிய ஒளிப்புள்ளிகளைப் போல் நடனமாடும் ஒளிப் புள்ளிகளாகக் காணப்பட்டன...
மின்னணு உருப்பெருக்கியின் தத்துவம் முதன் முதலில் 1927ல் நியூ யார்க், பெல் டெலிஃபோன் ஆய்வகங்களைச் சேர்ந்த டாக்டர்கள் க்ளின்டன் ஜே. டேவிஸன் மற்றும் லெஸ்டர் எச். ஜெர்மர் என்பவர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. அவர்கள் மின்னணு, ஒரு துகள் மற்றும் அலையின்[8] குணங்களைப் பெற்ற இரட்டைப் பண்புடையது எனக் கண்டார்கள். அலைத் தன்மை மின்னணுவிற்கு ஒளியின் சிறப்புப் பண்பைக் கொடுத்தது. எனவே ஒரு ஆடியின் மூலம் ஒளிக் கதிர்களை ஒரு முனைப்படுத்துவது போல் மின் அணுக்களை ஒருமுனைப்படுத்தும் வழிகள் ஆராயப்பட்டன.
மின்னணுவின் ஜெகில்ஹைட் பண்பை, அதாவது... பௌதீக இயற்கையின் முழுப்பரப்பும் இரட்டைப் பண்புடையதாக இருப்பதைக் கண்டுபிடித்ததற்காக டாக்டர் டேவிஸன் இயற்பியலில் நோபல் பரிசு பெற்றார்.

ஸர் ஜேம்ஸ் ஜீன்ஸ் அவருடைய மர்மப் பிரபஞ்சம்[9] (The Mysterious Universe) என்ற நூலில் குறிப்பிடுகிறார், அறிவின் நீரூற்று இயந்திர தன்மையல்லாத ஓர் உண்மையை நோக்கி சென்று கொண்டிருக்கிறது. பிரபஞ்சம் ஒரு பெரிய இயந்திரம் போலல்லாமல் ஒரு பெரிய எண்ணம் போல் தோற்றமளிக்கத் தொடங்கியுள்ளது.

இவ்வாறு இருபதாவது நூற்றாண்டின் விஞ்ஞானம் புராதன வேதங்களின் ஒரு பக்கத்தைப் போல் ஒலிக்கிறது,

அப்படியானால், அப்படித்தான் இருக்க வேண்டுமானால், பூதவுலகே இல்லை என்னும் தத்துவ உண்மையை மனிதன் விஞ்ஞானத்திலிருந்தே அறிந்து கொள்ளட்டும்; அதன் ஊடும் பாவும் மாயையே; பொய்த் தோற்றமே. பகுப்பாராய்ச்சியின் போது உண்மை எனத் தோன்றும் அதன் கானல் நீர்களெல்லாம் மறைந்துவிடும். உறுதியானதென்று நம்பிய மண்ணுலகின்

ஆதாரமெல்லாம் ஒவ்வொன்றாக அவனடியில் நிலைகுலையும் போது, மனிதன், என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம்[10] என்ற தெய்வக் கட்டளையை மீறி உருவ வழிபாட்டில் நம்பிக்கை கொண்டிருப்பதை மங்கலாகக் காண்கிறான்.

ஐன்ஸ்டைன் தன்னுடைய புகழ்பெற்ற சமன்பாட்டில் பொருண்மை மற்றும் ஆற்றல் இவைகளைச் சமன்படுத்துகையில் பொருளின் எந்தவொரு துகளின் ஆற்றலும், ஒளியின் வேகத்தின் வர்க்க எண்ணால் பெருக்கப்பட்ட பொருண்மை அல்லது எடைக்கு ஒப்பாகிறது என நிரூபித்து உள்ளார். பொருளின் துகள்களை அழிப்பதாலேயே அணு சக்திகள் வெளிப்படுகின்றன. பொருளின் இறப்பே அணுயுகத்தின் பிறப்பு.

ஒளியின் வேகம் ஓர் கணிதத் திட்ட அளவு அல்லது மாறிலி என்பது, அது வினாடிக்கு 1,86,300 மைல்கள் எனும் தனி மதிப்புடையது என்பதால் அல்ல; ஆனால் எந்தவொரு பொருளின் பொருண்மை அதன் வேகத்துடன் அதிகரிக்கிறதோ அது ஒளியின் வேகத்தை அடையவே முடியாது என்பதால்தான். மற்றொரு விதமாகக் கூறினால் எந்தப் பொருளின் பொருண்மை எல்லையற்றதோ அப்பொருளே ஒளியின் வேகத்தைப் பெற முடியும்.

இந்தக் கருத்துதான் நம்மை அதிசயங்களின் விதிக்கு அழைத்துச் செல்கிறது.

தங்கள் உடலையும் மற்றப் பொருட்களையும்

உருவாக்கவும் அல்லது உருவழிக்கவும், ஒளியின் வேகத்தில் செல்லவும், மற்றும் படைக்கும் திறன் உள்ள ஒளிக் கதிர்களைக் கொண்டு எந்த உருவத்தையும் ஒரு கணத்தில் வெளிக்கொணரவும் திறன் பெற்ற மகான்கள் இந்த விதிமுறை நிபந்தனையை நிறைவேற்றி இருக்கிறார்கள். அதாவது அவர்களின் பொருண்மை எல்லையற்றது.

பூரணத்துவம் அடைந்த ஒரு யோகியின் உணர்வு நிலை குறுகிய உடலுடன் ஒன்றாமல் எளிதாக பிரபஞ்சத்தின் அமைப்புடன் ஒன்றிவிடுகிறது. ஈர்ப்பு சக்திநியூட்டனின் விசையானாலும் சரி அல்லது ஐன்ஸ்டைனின் அசைவற்ற நிலையின் வெளிப்பாடானாலும் சரிஎடைப் பண்பை வெளிப்படுத்துமாறு ஒரு மகானைக் கட்டாயப்படுத்தும் வலிமை அற்றதாகிறது. எடைப் பண்பானது எல்லாப் பொருள்களிலும் விசேஷமாக அமைந்துள்ள ஈர்ப்பு நிலை. தன்னை எங்கும் நிறைந்த ஆத்மாவாகவே அறிந்தவன் காலம், இடம் இவைகளைப் பற்றிய உடலின் கட்டுப்பாடுகளுக்கு என்றுமே ஆட்பட மாட்டான். தளைப்படுத்தும் வளையங்களெல்லாம், நானே அவன் என்ற கரைப்பானில் கரைந்து விடுகின்றன.

வெளிச்சம் உண்டாகக்கடவது! வெளிச்சம் உண்டாயிற்று.[11] இந்த அண்டத்தின் படைப்பில் இறைவனின் முதல் கட்டளை படைப்பிற்கு அத்தியாவசியமான ஒளியைக் கொணர்ந்தது. இந்தச் சடப்பொருளல்லாத சாதனத்தின் கதிர் கற்றைகளால்

எல்லா தெய்வீகத் தோற்றங்களும் நிகழ்கின்றன. ஒவ்வொரு யுகத்திலும் பக்தர்கள் கடவுளை ஒளியாகவும் தீச்சுடராகவும் தோன்றுவதாக உறுதி கூறுகிறார்கள். புனித யோவான் நமக்குச் சொல்லுகிறார். அவருடைய கண்கள் அக்கினி ஜீவாலையைப் போலிருந்தது... அவருடைய முகம் வல்லமையாய்ப் பிரகாசிக்கிற சூரியனைப் போலிருந்தது.[12]

எந்த யோகி முழுமையான தியானத்தின் மூலம் தன் உணர்வைப் படைத்தவனுடன் ஒன்றச் செய்கிறானோ அவன் இப்பிரபஞ்சத்தின் சாரத்தையே ஒளி (உயிர்ச்சக்தியின் அதிர்வலைகள்) யாக உணர்கிறான். அவனுக்கு நீரை உண்டாக்கும் ஒளிக் கதிர்களுக்கும் நிலத்தை உண்டாக்கும் ஒளிக் கதிர்களுக்கும் இடையே எந்த வித்தியாசமுமில்லை. பொருளின் உணர்விலிருந்தும், இடத்தின் முப்பரிமாணங்களிலிருந்தும், நாலாவது பரிமாணமாகிய காலத்திலிருந்தும் விடுபட்டவனாய் ஒரு மகான் தனது ஒளிமயமான உடலை மிகச் சுலபமாக நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகியவற்றின் ஒளிக் கதிர்கள் ஊடாகவும் அல்லது மேலாகவும் செலுத்த வல்லவனாகிறான்.

ஆகையினால் உன் கண் ஒன்றேயாகில் உன் சரீரம் முழுதும் ஒளிமயமாகும்.[13] முக்தியளிக்கும் திறனுடைய ஞானக் கண்ணின் மீது நீண்ட காலம் ஒருமுகப்படுத்தப்பட்ட தியானம் யோகியை, பொருள் மற்றும் அதனுடைய ஈர்ப்பு சக்தியினால் ஏற்படும் எடை

ஆகியவற்றைப் பற்றிய எல்லா மாயத் தோற்றங்களையும் அழிக்க வல்லவனாக்குகிறது. அவன் பிரபஞ்சத்தைக் கடவுள் படைத்தவாறே காண்கிறான்அடிப்படையில் மாறுபாடில்லாத ஒளி வெள்ளமாகவே.

ஹார்வார்டு டாக்டர் எல்.டி. ட்ரோலான்ட் கூறுவதாவது: சாதாரண நுண்பதிவுப்பட செதுக்கல்களின் ('halftone engravings) சித்தாந்தத்தின் அடிப்படையில்தான் ஒளி உருவங்களும் உண்டாக்கப்படுகின்றன. அதாவது அவைகள் கண்ணில் பதிவாகாத அளவிற்குச் சிறு புள்ளிகளாலும் கோடுகளாலுமே உண்டாக்கப்பட்டுள்ளன.... நம் விழித்திரையின் நுண்ணுணர்வானது எவ்வளவு சக்தி வாய்ந்ததெனில் சரியான விதத்தில் பாயும் சிறு ஒளி கூட பார்வை உணர்ச்சியை உண்டாக்க முடியும்.

படைப்பின் சாரமே ஒளிதான் என்பதை உணர்ந்து கொண்ட எந்த மனிதனாலும் அதிசயங்களின் விதிமுறையைச் செயல்படுத்த முடியும். ஒளியின் அதிசயத்தைப் பற்றிய தன் தெய்வீக அறிவைப் பயன்படுத்தி எங்கும் நிறைந்த ஒளி அணுக்களை நினைத்த மாத்திரத்தில் தெரியக்கூடிய உருவங்களாக வெளிப்படுத்தும் திறனை ஒரு மகான் பெற்றிருக்கிறார். வெளிப்படுத்தப்படும் உருவம் (எதுவாக வேண்டுமானாலும்ஒரு மரமாகவோ, மருந்தாகவோ அல்லது ஒரு மனித உடலாகவோ இருக்கலாம்) அந்த யோகியின் விருப்பத்தையும் அவருடைய இச்சா சக்தியையும் உருவகக் கற்பனைச் சக்தியையும்

பொறுத்திருக்கிறது.

இரவு நேரத்தில் மனிதன் தன்னை தினமும் சுற்றி வளைத்துக் கொண்டிருக்கும் பொய்யான அகங்காரத்தின் வரையறைகளிலிருந்து விடுபட்டு ஒரு கனவு நிலை உணர்வினை எய்துகிறான். உறக்கத்தில் அவன் மனத்தின் சர்வ வல்லமையின் காட்சியை மீண்டும் மீண்டும் காண்கிறான். ஆகா! கனவில் வெகு நாட்களுக்கு முன் இறந்த தன் நண்பர்கள் தோன்றுகின்றனர்; எங்கோ தொலைவில் உள்ள கண்டங்கள் மற்றும் தன் குழந்தைப் பருவத்தின் உயிர்ப்பிக்கப்பட்ட காட்சிகள் தோன்றுகின்றன.

அந்த சுதந்திரமானதும் நிபந்தனையற்றதுமான உணர்வு நிலை, எல்லா மனிதர்களும் அவர்களுடைய சில கனவுகளில் சுருக்கமாக அனுபவிக்கும் உணர்வுதான் கடவுளுடன் ஒன்றிய ஒரு யோகியின் நிரந்தரமான மன நிலையாகும். எந்த சுயநலக் குறிக்கோளும் அற்று, படைப்பவன் அருளிய படைப்புத்திறனை பயன்படுத்தி ஒரு யோகி, ஒரு பக்தனின் உண்மையான பிரார்த்தனையை திருப்தி செய்ய வேண்டி பிரபஞ்சத்தின் ஒளி அணுக்களை மாற்றி அமைக்கிறான்.

பின்பு தேவன் நமது சாயலாகவும் நமது ரூபத்தின் படியேயும் மனுஷனை உண்டாக்குவோமாக; அவர்கள் சமுத்திரத்தின் மச்சங்களையும், ஆகாயத்துப் பறவைகளையும், மிருக ஜீவன்களையும், பூமியனைத்தையும், பூமியின் மேல் ஊரும் சகலப் பிராணிகளையும் ஆளக் கடவர்கள் என்றார்.[14]

அந்த நோக்கத்துடன்தான் மனிதனும் படைப்பும் உண்டாக்கப்பட்டன: பிரபஞ்சத்தின் மீது தனக்குள்ள அதிகாரத்தை உணர்ந்து கொண்டு அவன் மாயையின் தலைவனாக உயர வேண்டும்.

1915-ல் நான் சன்னியாசம் வாங்கிக் கொண்ட கொஞ்ச காலத்திற்குப் பின் ஓர் அதிசயமான காட்சியைக் கண்டேன். அதன் மூலம் மனித உணர்வின் சார்புத்தன்மையை நான் புரிந்து கொண்டேன். மாயையின் வேதனையான இருமைகளுக்குப் பின் ஒருமைப்படுத்தும் நிரந்தர ஒளியினை தெளிவாகக் கண்டேன். ஒரு நாள் காலை என் தந்தையின் கர்பார் சாலை வீட்டின் மேல் மாடியிலுள்ள எனது சிறு அறையில் அமர்ந்து இருக்கையில் என் முன் அத்தோற்றம் எழுந்தது. ஐரோப்பாவில் முதலாவது உலக யுத்தம் மாதக் கணக்காக தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. மிகப் பெரும் உயிர்ச் சேதத்தைக் குறித்து நான் வருத்தத்துடன் சிந்தித்தபடி இருந்தேன்.

நான் தியானத்தில் ஆழ்ந்து என் கண்களை மூடியவுடன் என் உணர்வு திடீரென ஒரு சண்டைக் கப்பலின் தலைவனின் உடலுக்கு மாற்றப்பட்டது. கரையிலிருக்கும் பீரங்கிப் படைகளுடன் கப்பலின் பீரங்கிகள் மோதும் பொழுது ஏற்பட்ட துப்பாக்கி வெடிச் சத்தம் வானைத் துளைத்தது. ஒரு பெரிய வெடிகுண்டு வெடி மருந்துக்கிடங்கில் வீழ்ந்து என் கப்பலைப் பிளந்தது. அவ்வெடி வீச்சில் உயிர் தப்பிய சில மாலுமிகளுடன் நான் நீரில் குதித்தேன்.

இதயம் படபடக்க நான் பத்திரமாகக் கரையை அடைந்தேன். ஆனால் ஐயோ, குறிதவறிய ஒரு குண்டு வேகமாக வந்து என் மார்பைத் தாக்கியது. நான் முனகியவாறு கீழே விழுந்தேன். என் முழு உடலும் செயலற்று விட்டது. இருந்தாலும் ஒரு கால் மட்டும் செயலிழந்திருப்பதை எவ்வாறு ஒருவனால் உணர இயலுமோ அவ்வாறே என் உடல் முழுதும் செயலற்றுப் போனதை என்னால் உணர முடிந்தது.

கடைசியில் சாவின் மர்மமான காலடிகள் என்னைத் தொடர்ந்து வந்து பிடித்து விட்டன, என்று நினைத்தேன். ஓர் இறுதிப் பெருமூச்சுடன் நான் பிரக்ஞையற்ற நிலையில் அமிழத் தொடங்கியது தான் தாமதம். ஆகா! என்னை என் கர்பார் சாலை அறையில் பத்மாசனத்தில் அமர்ந்திருக்கக் கண்டேன்.

என்னால் திரும்ப அடையப்பட்ட மார்பில் குண்டு துளை இல்லாத உடலை நான் மகிழ்ச்சியுடன் தட்டிக் கொடுத்து கிள்ளிப் பார்த்தபோது கண்ணீர் அருவியாகப் பொழிந்தது. நான் உயிருடன் இருப்பதை எனக்கே நிச்சயப்படுத்திக் கொள்ளும் பொருட்டு உள்மூச்சு, வெளிமூச்சுக்களை இழுத்து விட்டவாறு இப்படியும் அப்படியுமாக அசைந்தேன். அந்தச் சுய பாராட்டுதல்களுக்கு இடையில் மறுபடியும் என் பிரக்ஞை ரத்தக்கறை படர்ந்த கடற்கரையில் இறந்து கிடந்த கப்பல் தலைவனின் உடலுக்கு மாற்றப்பட்டது. என் மனத்தில் ஒரே குழப்பம்!

இறைவா, நான் உயிருடன் இருக்கிறேனா அல்லது

இறந்து விட்டேனா? என வேண்டினேன்.

கண்ணைக் கூச வைக்கும் ஓர் ஒளிப்பிழம்பு தொடு வானம் முழுவதையும் நிரப்பிற்று. ஒரு மென்மையாகக் குமுறும் அதிர்வலை சொற்களாக உருவெடுத்தன.

வாழ்விற்கும் சாவிற்கும் ஒளியுடன் என்ன சம்பந்தம்? நான் உன்னை என் ஒளியின் பிரதிபிம்பமாகவே படைத்துள்ளேன். சார்புத் தன்மைகளான பிறப்பும் இறப்பும் பிரபஞ்சக் கனவுலகிற்கே உரியன. கனவற்ற உன் இருப்பைக் காண்பாய். எழு, என் குழந்தாய், எழு!

மனிதனின் விழிப்புணர்ச்சியின் படிகளாக, இறைவன் விஞ்ஞானிகளைச் சரியான சமயத்தில் சரியான இடத்தில், தன் படைப்பின் ரகசியங்களைக் கண்டுபிடிக்கத் தூண்டுகிறார். பல நவீன கண்டுபிடிப்புகள், மனிதன், பிரபஞ்சத்தை ஒரே சக்தியின்தெய்வீக அறிவினால் வழிநடத்தப்படும் ஒளியின் பலப்பல காட்சிகளாகப் புரிந்து கொள்ள உதவுகின்றன. திரைப்படம், வானொலி, தொலைக்காட்சி, ராடார், புகைப்பட மின்கலம், அணு சக்திகளின் திகைக்க வைக்கும் மின்சாரக் கண் ஆகிய எல்லா அற்புதங்களுமே ஒளியின் மின்காந்தத்தன்மையை ஆதாரமாகக் கொண்டவை.

திரைப்படக் கலை, எந்த அதிசயத்தையும் காட்டும் திறன் பெற்றது. மனத்தில் பதியும்படி காணும் காட்சியின் நோக்கிலிருந்து எந்த அதிசயமும் புகைப்படத் தந்திரங்களுக்கு அப்பாற்பட்டது இல்லை. ஒரு மனிதனை

சாதாரண ஸ்தூல உருவத்திலிருந்து ஒரு தெளிவான சூட்சும உடலாக வெளிப்படுவதைக் காணலாம். அவன் நீரில் நடக்கலாம்; இறந்தவரை உயிர்ப்பிக்கலாம். முன்னேற்றங்களின் இயற்கை நியதியை திசைதிருப்பலாம்; இடம் மற்றும் காலத்தில் பேரழிவை ஏற்படுத்தலாம். புகைப்பட வல்லுநர் புகைப்பட பிம்பங்களைத் தன் விருப்பப்படி இணைத்து, ஓர் உண்மையான மகான் நிஜ ஒளிக் கதிர்களின் மூலம் ஏற்படுத்துவது போலவே கண்கூடான அதிசயங்களைத் தோற்றுவிக்கலாம்.

சலனத் திரைப்படங்கள் அவைகளின் உயிருள்ளவை போன்ற பிம்பங்களின் மூலம் படைப்பைப் பற்றிய பல உண்மைகளை விளக்குகின்றன. இப்பேரண்டத்தை இயக்குபவன் தன் சொந்த நாடகங்களை எழுதி நூற்றாண்டுகளுக்கான நாடகக் காட்சிக்கு மாபெரும் நடிகர்களை வரவழைத்துள்ளான். நிரந்தரம் எனும் இருள் அறையிலிருந்து அடுத்தடுத்துத் தொடரும் காலத் தொடர்களான படச்சுருள்களின் வழியே தன் ஒளிக்கற்றைகளை செலுத்துகிறான். இடம் என்னும் திரையில் படங்கள் வெளிப்படுகின்றன.

ஒளி, நிழல் சேர்க்கைகளினால் ஆன திரைப்பட பிம்பங்கள் உண்மை எனத் தோன்றுவது போல, இவ்வுலகத்தின் பல காட்சிகளும் உண்மை எனத் தோன்றுகின்றன. கணக்கற்ற ஜீவன்களுடன் கூடிய கிரக கோளங்களெல்லாம் பேரண்ட சலனத் திரைப்படத்தின் உருவங்கள் அன்றி வேறல்ல: முடிவற்ற படைக்கும்

ஒளிக்கற்றையால் மனித உணர்வு என்ற திரையில் உருவாக்கப்பட்ட நிலையில்லாத காட்சிகள், ஐம்புலன்களுக்கு தற்காலிகமாக உண்மை எனத் தோன்றுகின்றன.

திரைப்படம் காண்பவர்கள், திரையிடப்படும் எல்லா பிம்பங்களும் ஓர் உருவமில்லாத ஒளிக்கற்றையாகிய சாதனத்தின் மூலமே தோன்றுகின்றன என்பதை மேலே பார்த்தால் அறிய முடியும். வண்ண வண்ணமான இவ்வுலக நாடகம் அதே போல பேரண்ட மூலத்தினின்று வெளிப்படும் ஒரே வெள்ளொளியிலிருந்தே தோன்றுகிறது. கற்பனைக்கு எட்டாத திறமையுடன் இறைவன் அவனது இக்கோளரங்கில் தன் குழந்தைகளையே நடிகர்களாகவும் காண்பவர்களாகவும் அமர்த்தி, அவர்களுக்கு பிரமாண்டமானதொரு பொழுதுபோக்கைத் திரையிட்டுக் காட்டுகிறான்.

ஒரு நாள் ஐரோப்பிய யுத்தகள படச் செய்திச் சுருளைப் பார்க்க வேண்டி நான் ஒரு திரையரங்கத்துள் நுழைந்தேன். மேலை நாடுகளில் முதலாவது உலக யுத்தம் இன்னும் நடந்து கொண்டிருந்தது. நான் புண்பட்ட இதயத்துடன் அரங்கத்தை விட்டு வெளியேறும் அளவிற்கு அச்செய்திச்சுருள் அந்தப் படுகொலையைத் தத்ரூபமாகக் காட்டியது.

“இறைவா,” நான் வேண்டினேன்,” நீ ஏன் இவ்விதத் துன்பத்தை அனுமதிக்கிறாய்?

என்னை பெரு வியப்பில் ஆழ்த்தும்படி, உண்மையான ஐரோப்பிய யுத்தகளங்களின் காட்சி

வடிவில் உடனடியாக விடை கிடைத்தது. அக்காட்சிகள் இறந்தவர்களாலும், இறந்து கொண்டிருப்பவர்களாலும் நிரப்பப்பட்டு செய்திச்சுருளில் காண்பித்ததைவிட பன்மடங்கு கொடூரமாக இருந்நது.

கூர்ந்து கவனி! ஒரு மென்குரல் என் உள்மனத்திற்கு கூறியது. ஃபிரான்ஸ் நாட்டில் இப்பொழுது நடக்கும் இக்காட்சிகள், ஒளி, நிழல் வண்ண வேடிக்கை அன்றி வேறில்லை. அவைகள் பேரண்டத்தின் சலனத்திரைப்படம்; இப்பொழுது நீ அரங்கில் கண்ட செய்திச்சுருள் எவ்வளவு மெய்யானதோ அல்லது பொய்யுமானதோ அதே போன்றது இதுவும்நாடகத்தினுள் ஒரு நாடகம்.

என் இதயம் இன்னும் ஆறுதலடையவில்லை. அத்தெய்வீகக் குரல் தொடர்ந்தது. படைப்பு என்பது ஒளியும் நிழலும் ஆகிய இரண்டும்தான். இல்லாவிடில் எந்தப் படமும் சாத்தியம் இல்லை. மாயையின் இருமைகளான நன்மையும் தீமையும் ஒன்றின் மீது மற்றது மாறி மாறி வெற்றி கொள்ளும் இவ்வுலகில் ஆனந்தம் நிலையானதெனில், மனிதன் வேறு எதை விரும்புவான்? துன்பம் இல்லாவிடில், தன் அழிவில்லா வீட்டைத் துறந்தது குறித்து நினைவுகூர விழைய மாட்டான். துன்பமே நினைவுகூர உதவும் தூண்டுகோல். தப்புவதற்கு வழி ஞானத்தின் மூலமே ஏற்படுகிறது. மரணம் என்னும் பேரிடர் உண்மையல்ல. அதைக் கண்டு நடுங்குபவர்கள், மேடையில் தன் மீது சுடப்பட்ட வெற்றுத் தோட்டாக்களைக் கண்டு நடுங்கி இறக்கும்

அறிவற்ற நடிகனைப் போன்றவர்கள். என் மக்கள் ஒளியின் குழந்தைகள்; அவர்கள் நிரந்தரமாக மயக்கத்தில் உறங்கமாட்டார்கள்.

நான் மாயையைப் பற்றி சமய நூல்களில் படித்திருந்தாலும், அவை, நான் நேரடியாகக் கண்ட தோற்றங்களிலிருந்தும் அவற்றுடன் இணைந்த ஆறுதலான சொற்களிலிருந்தும் கிடைத்த ஆழ்ந்த உள் நோக்கைக் கொடுக்கவில்லை. ஒருவன் படைப்பு என்பது ஒரு பெரிய சலனத் திரைப்படமே என்பதை முடிவாக நம்பும் பொழுது அவனது மதிப்பீடுகள் வெகுவாக மாறுதலடைகின்றன. அவனுடைய உண்மை வடிவம் அச்சலனத்திரைப் படத்தில் அடங்காமல் அதைத் தாண்டி உள்ளது என்பதை அறிகிறான்.

இந்த அத்தியாயத்தை எழுதி முடித்த பிறகு நான் என் படுக்கையில் பத்மாசனத்தில் அமர்ந்தேன். என் அறை[15] மறைப்புக் கொண்ட இரு விளக்குகளால் மந்தமான ஒளியூட்டப் பட்டிருந்தது. நான் மேலே பார்த்த பொழுது, அறையின் உட்கூரை, ரேடியத்தைப் போன்ற பிரகாசத்துடன் துள்ளிக் கொண்டும் மின்னிக் கொண்டும் உள்ள கடுகுநிற சிறுசிறு ஒளிப்புள்ளிகளால் நிரம்பியிருப்பதைக் கண்டேன். கணக்கற்ற நீண்ட குச்சி போன்ற ஒளிக்கதிர்கள் மழை நீர்ப் போர்வை போன்று மொத்தமாகச் சேர்ந்து ஒரு தெள்ளிய கணை என ஒன்றாகி என் மீது மௌனமாகப் பொழிந்தன.

உடனேயே என் உடல் அதன் எடையை இழந்து ஒரு சூட்சும நயத்துடன் உருமாற்றமடைந்தது. எடையில்லா

என் உடல் இடப் பக்கமும் வலப்பக்கமும் மெதுவாக மாறி மாறி அசைந்தவாறு படுக்கையைத் தொடாமல் மிதப்பதாக உணர்ந்தேன். நான் அறையைச் சுற்றி நோக்கினேன். மரச் சாமான்களும் சுவர்களும் வழக்கம் போல் இருக்கும் போது உட்கூரையே மறையுமளவிற்கு அச்சிறு ஒளிச்சிதறல்களின் கூட்டம் பெருகிவிட்டது. நான் ஒரே வியப்பில் ஆழ்ந்தேன்.

இதுதான் பேரண்டச் சலனத் திரைப்படத்தின் இயக்கு முறை. ஒரு குரல் ஒளியினுள்ளிருந்து பேசுவது போல் கேட்டது. அதன் ஒளிக்கற்றையை வெள்ளைத் திரையாகிய உன் படுக்கை விரிப்புகளின் மேல் வீழ்த்தி அது உன் உடலின் படத்தை உண்டாக்குகிறது, பார், உன் உருவம் ஒளியைத் தவிர வேறில்லை!

நான் என் கைகளை நோக்கி அவற்றை முன்னும் பின்னுமாக அசைத்தேன். எனினும் அவற்றின் கனத்தை உணர முடியவில்லை. ஒரு பரமானந்தம் என்னை ஆட்கொண்டது. பேரண்டத்தின் ஒளித் தம்பம் என் உடலாக மலர்ந்தது; அது திரையரங்கின் ஒளிஎறிவுக் கருவி அறையிலிருந்து ஆறாய்ப் பெருகி திரையில் படங்களை வெளிப்பட வைக்கும் ஒளிக் கற்றைகளின் ஒரு தெய்வீக மறு உற்பத்தி போன்று தோன்றியது.

மந்தமான ஒளியுடன் கூடிய என் சொந்த படுக்கை அறையின் திரை அரங்கத்தில் நீண்ட நேரம் நான் என் உடலின் இந்தச் சலனப்படத்தை அனுபவித்தேன். நான் அனேகத் தெய்வீகக் காட்சிகளைக் கண்டிருந்தாலும் அவற்றுள் எதுவும் இது போன்று வினோதமானது

இல்லை. திட சரீரத்தின் மாயத் தோற்றம் முற்றிலும் மறைந்ததும் எல்லாப் பொருட்களின் சாரமும் ஒளியே என்னும் ஞானம் என்னுள் ஆழ்ந்து பதிந்தது. நான் துடிக்கும் உயிரணுக்களின் ஓட்டத்தை நோக்கி மன்றாடினேன்.

தெய்வீக ஒளியே, அக்கினி ரதத்தில் எலியா பரலோகத்திற்கு இழுக்கப்பட்டதைப் போல[16] தயவு செய்து, என் தாழ்மையான உடலின் படத்தை உனக்குள்ளேயே இழுத்துக்கொள்.

இப் பிரார்த்தனை திடுக்கிடும் வண்ணம் இருந்திருக்க வேண்டும்; ஏனெனில் ஒளிக்கற்றை மறைந்து விட்டது. என் உடல் அதன் இயற்கையான கனத்தை அடைந்து, படுக்கையில் அமிழ்ந்தது. கண்ணைக் கூசும் உட்கூரை ஒளிகளின் சூழல் மங்கி மறைந்தது. இவ்வுலகை விட்டு நான் போக வேண்டிய தருணம் இன்னும் வரவில்லை போலும்.

மேலும், நான் தத்துவார்த்தமாக எண்ணிக் கொண்டேன், எலியா என் ஊகத்தைக் கண்டு அதிருப்தி அடைந்திருக்கக் கூடும்!

---

1 டால்ஸ்டாயின் பல லட்சியங்கள் மகாத்மா காந்தியினதுடன் ஒத்து இருந்தன. அவர்கள் இருவரும் அஹிம்சை என்ற பொருள் குறித்து கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருந்தார்கள். டால்ஸ்டாய், கிறிஸ்துவின் தீமையை (தீமையால்) எதிர்க்காதே (மத்தேயு 5:39-பைபிள்) என்பதை முக்கிய போதனையாகக் கருதினார். தீமை, நியாயமாகப் பலனளிக்கும் எதிரிடையான நன்மை அல்லது அன்பினால் மட்டுமே எதிர்க்கப்பட வேண்டும்.

2 இக்கதைக்கு வெளிப்படையான ஆதாரம் இருக்கிறது. ஒரு பதிப்பாசிரியர் குறிப்பு, த்வினா என்ற நதியின் முகத்துவாரத்தில் ஒரு பிஷப் ஆர்க்கேஞ்சலிலிருந்து ஸ்லோவெட்ஸ்கி மடாலயத்திற்குப் படகில் வரும் போது மூன்று துறவிகளைச் சந்தித்தார் என்று கூறுகிறது.

3 பார்க்க பக்கங்கள் 59 அடிக்குறிப்பு, 62 அடிக்குறிப்பு.

4 மார்க்கோனி என்ற புகழ்பெற்ற கண்டுபிடிப்பாளர் முடிவான விஷயங்களைப் பற்றிய விஞ்ஞானத்தின் பற்றாக்குறையை பின்வருமாறு ஒப்புக் கொள்கிறார்: வாழ்க்கை என்னும் புதிரை விஞ்ஞானத்தால் விடுவிக்க முடியாது என்பது திண்ணம். இந்தச் செய்தி நம்பிக்கை இல்லாவிட்டால் உண்மையிலேயே பயங்கரமானதாகும். மனிதனின் எண்ணத்திற்கு முன்னால் இதுவரை வைக்கப்பட்ட நிலையான புதிர்களில் தலையாயது வாழ்க்கை என்ற புதிரே.

5 எசேக்கியல் 43:12 (பைபிள்).

6 ஐன்ஸ்டைன், மின்காந்தம் மற்றும் புவிஈர்ப்பு விதிகளின் இடையேயுள்ள இணைப்பை ஒரு கணித சூத்திரத்தின் மூலம் (ஒருங்கிணைக்கப்பட்ட பரப்பு சித்தாந்தம்-The Unified Field Theory) வெளிக்காட்ட முடியும் என உறுதியாக நம்பி இருந்தார். இப்புத்தகம் எழுதப்பட்ட பொழுது ஐன்ஸ்டைன் அச்சித்தாந்தத்தைப் பற்றி ஆராய்ந்து கொண்டிருந்தார். அவ்வாராய்ச்சியை முடிக்கும் வரை அவர் உயிர் வாழவில்லையெனினும் பெரும்பாலான இயற்பியல் விஞ்ஞானிகள், ஐன்ஸ்டைனுடைய உறுதியான நம்பிக்கையை ஒத்துக் கொள்கின்றனர்அதாவது இப்படிப்பட்ட இணைப்பு கண்டுபிடிக்கப்படும் என்று. (பிரசுரதாரரின் குறிப்பு)

7 மாக்மில்லன் கம்பெனி.

8 அதாவது பொருளும் சக்தியுமாகிய இரண்டும்.

9 கேம்பிரிட்ஜ் யூனிவர்ஸிடி பிரஸ்.

10 யாத்திராகமம் 20:3 (பைபிள்).

11 ஆதியாகமம் 1:3 (பைபிள்).

12 வெளிப்படுத்தின விசேஷம் 1:1416 (பைபிள்).

13 மத்தேயு 6:22 (பைபிள்).

14 ஆதியாகமம் 1:26 (பைபிள்).

15 கலி்ஃபோர்னியாவில் என்ஸினிடஸிலுள்ள ஸெல்்ஃப்ரியலைசேஷன் ்ஃபெலோஷிப் ஆசிரமத்தில் (பிரசுரதாரரின் குறிப்பு).

16 II இராஜாக்கள் 2:11 (பைபிள்).

ஓர் அதிசயம் என்பது சாதாரணமாக ஒரு விளைவு அல்லது சம்பவம், ஒரு விதிக்கும் உட்படாமல் அல்லது விதிக்கு அப்பாற்பட்டதாக ஏற்படுவது என்று கருதப்படுகிறது. ஆனால் மிகச் சரியான முறையில் இணக்கமாகச் செயல்படும் பிரபஞ்சத்தில் எல்லா சம்பவங்களும் விதிப்படி செயல்படுகின்றன; விதிப்படி விளக்கக் கூடியதாகவும் உள்ளன. ஒரு மகானின் அற்புத சக்திகள் என அழைக்கப்படுபவை, அவருடைய உணர்வின் உள் பிரபஞ்சத்தில் செயல்படும் சூட்சும விதிகளை அவர் மிகச் சரியாகப் புரிந்து கொண்டிருப்பதனால், இயல்பாகத் தொடர்ந்து உடன் வருபவையாகும்.

தத்துவார்த்த ரீதியில் எல்லாமே ஓர் அதிசயந்தானே தவிர எதையுமே உண்மையாக ஓர் அதிசயம் என்று கூறலாகாது. நாம் ஒவ்வொருவரும் மிகச் சிக்கலான முறையில் அமைந்துள்ள சரீரத்திற்குள் அடைக்கப்பட்டிருக்கிறோம். மேலும் நட்சத்திரங்களின் மத்தியில் ஆகாயத்தில் சுழலும் உலகத்தில் சுழன்றபடி இருக்கிறோம். இதைவிட மிகச் சாதாரணமானதுதான் எது? அல்லது மிக அதிசயமானதுதான் எது?

கிறிஸ்து மற்றும் லாஹிரி மகாசயரைப் போன்ற மகான்கள் அனேக அற்புதங்களை வழக்கமாக நிகழ்த்துவர். அம்மாதிரியான மகான்கள் மனித குலத்திற்கு மகத்தானதும் கடினமானதுமான ஆன்மீகப் பணி ஆற்ற வேண்டி

உள்ளது. துன்பத்திலாழ்ந்து இருப்பவர்களுக்கு அதிசயமாக உதவி செய்வது, அம்மாதிரி பணிகளில் ஒன்றுதான் எனத் தோன்றுகிறது. (பார்க்க பக்கம் 333 அடிக்குறிப்பு.) மனிதனுக்கு ஏற்படும் தீராத பிரச்சனைகளைத் தீர்க்கவும், தீராத வியாதிகளை குணப்படுத்தவும் தெய்வத் திருவிளையாடல் தேவைப்படுகிறது. கிறிஸ்துவிடம் கபர்ன்யம் என்ற இடத்தில் சாகும் தறுவாயிலிருக்கும் தன் மகனைக் குணப்படுத்தும்படி ஓர் உயர் குடிமகன் கேட்ட பொழுது இயேசு, வறண்ட நகைச்சுவையுடன், நீங்கள் அடையாளங்களையும் அற்புதங்களையும் காணாவிட்டால் விசுவாசிக்க மாட்டீர்கள், என்றார். ஆனாலும் கூடவே கூறினார்: நீ போகலாம். உன் குமாரன் பிழைத்திருக்கிறான்.யோவான் 4:46-54 (பைபிள்).

இந்த அத்தியாயத்தில் நான் மாயையின்வெளி உலகங்களின் அடிப்படையாக உள்ள பொய்த் தோற்றத்தின் மந்திர சக்தி-வேதாந்த விளக்கத்தைக் கூறியிருக்கிறேன். அணுப் பொருள் என்பதில் உண்மையல்லாத ஒரு மந்திர சக்தி பரவியிருப்பதை மேற்கத்திய விஞ்ஞானம் ஏற்கனவே கண்டுபிடித்துள்ளது. இருந்த போதிலும், இயற்கை மட்டுமல்லாமல் மனிதனும் கூட (அவனுடைய நிலையற்ற தன்மையில்) மாயைக்கு-சார்பியல் தத்துவம், வேறுபாடு, இருமை, தலைகீழ் மாற்றம் மற்றும் எதிர்மறையான நிலைகளுக்கு உட்படுகிறான்.

மாயையைப் பற்றிய உண்மை ரிஷிகளால் மட்டுமே அறிந்து கொள்ளப்பட்டிருந்தது என்று கற்பனை செய்யக் கூடாது. பழைய ஏற்பாட்டின் தீர்க்கதரிசிகள், மாயையை, சைத்தான் என அழைத்தார்கள். (ஹீப்ரு மொழியில் அதன் அர்த்தம் பகைவன்). கிரேக்க சாசனம், சைத்தான் என்பதற்குச் சரியாக, டையபாலஸ் அல்லது பிசாசு என்ற சொல்லை உபயோகப்படுத்துகிறது. சைத்தான் அல்லது மாயை என்பது உருவமற்ற ஒரே உண்மையை மறைக்க வேண்டிப் பற்பல உருவங்களைப் பெருக்க வைக்கும் பிரபஞ்சத்தின் மந்திரவாதியாகும். இறைவனின் திட்டத்திலும் திருவிளையாடலிலும் (லீலை), மாயை அல்லது சைத்தானின் ஒரே வேலை என்னவெனில் மனிதனை ஆத்மார்த்தத்திலிருந்து லௌகீக விஷயங்களுக்கும், உண்மையிலிருந்து பொய்மைக்கும் திசைதிருப்புவதுதான்.

கிறிஸ்து, மாயையை ஒரு பிசாசு, கொலையாளி மற்றும் பொய்யன் என்று சித்திரம் போல வர்ணிக்கிறார். பிசாசு.... ஆதிமுதற் கொண்டு மனுஷ கொலை பாதகனாயிருக்கிறான்; சத்தியம், அவனிடத்திலில்லாத படியால் அவன் சத்தியத்திலே நிலைநிற்கவில்லை. அவன் பொய்யனும் பொய்க்கும் பிதாவுமாயிருக்கிற படியால் அவன் பொய் பேசும் பொழுது தன் சொந்தத்தில் எடுத்துப் பேசுகிறான்.-யோவான் 8:44 (பைபிள்).

பிசாசானவன் ஆதிமுதல் பாவஞ்செய்கிறான். பிசாசினுடைய கிரியைகளை அழிக்கும் படிக்கே தேவனுடைய குமாரன் வெளிப்பட்டான் ஐ யோவான் 3:8 (பைபிள்). மனிதனின் சொந்த இருப்பிலேயே வெளிப்படும் கிறிஸ்து உணர்வானது, சுலபமாகப் பொய்த் தோற்றங்களை அதாவது, பிசாசின் கிரியைகளை அழித்து விடுகிறது.

மாயையானது ஆதிமுதற் கொண்டே இருந்து வந்துள்ளது. ஏனெனில் அது வெளி உலகங்களின் அமைப்பிலேயே இயற்கையாக அமைந்துள்ளதாகும். இவைகள் தெய்வீகமான நிரந்தரத்தன்மைக்கு மாறுபாடான வகையில் என்றுமே நிலையில்லாமல் மாறுதல் அடைந்து கொண்டே இருப்பவையாகும்.

அத்தியாயம் 31

# புனித அன்னையாருடன் பேட்டி

பூஜிக்கத்தக்க அன்னையே, தீர்க்கதரிசியான தங்கள் கணவர் பெருமானால் நான் சிறு வயதில் தீட்சை அளிக்கப் பெற்றேன். அவர் என் பெற்றோர்களுக்கும் என் சொந்த குருவான ஸ்ரீ யுக்தேஸ்வருக்கும் குரு ஆவார். ஆதலால் புனிதமான தங்களுடைய வாழ்க்கையின் சில சம்பவங்களைக் கேட்டறியும் பேற்றை எனக்கு அளிப்பீர்களா?

லாஹிரி மகாசயரின் வாழ்க்கைத் துணைவியான ஸ்ரீமதி காசிமணியிடம் நான் கேட்டேன். காசியில் ஒரு குறுகிய காலத்திற்குத் தங்க நேரிட்டபொழுது நான் அந்த வணக்கத்திற்குரிய மாதுசிரோமணியைச் சந்திக்க வேண்டுமென்ற என் வெகுநாளைய ஆவலை நிறைவேற்றிக் கொண்டேன்.

காசியின் கருடேஸ்வர் மொஹல்லா பகுதியிலிருந்த லாஹிரி குடும்பத்தினருடைய வீட்டில் அவர் என்னை அன்புடன் வரவேற்றார். வயதாகிவிட்டிருந்த போதிலும் தாமரை போன்று மலர்ந்து ஆன்மீக மணத்தைப் பரப்பியவாறு இருந்தார். அவர் நடுத்தரமான உடல்வாகும், சிவந்த நிறமும், மெல்லிய கழுத்தும், பிரகாசமான கண்களும் கொண்டிருந்தார்.

மகனே, இங்கு உனக்கு நல்வரவு. மேல் மாடிக்கு வா.

காசிமணி சிறிது காலத்திற்கு தன் கணவருடன்

வசித்த ஒரு மிகச் சிறிய அறைக்கு என்னை அழைத்துச் சென்றார். அந்த இணையற்ற மகான், அருள்கூர்ந்து மண வாழ்க்கையெனும் மனித நாடகத்தை நடத்திய அந்தக் கோயிலைப் பார்ப்பதில் நான் பெருமையடைந்தேன். அந்தக் கனிவுள்ள பெண்மணி தன் பக்கத்தில் தலையணையுடன் இருந்த ஓர் ஆசனத்தை எனக்குச் சுட்டிக் காட்டினார்.

நான் என் கணவரின் தெய்வீகத் தன்மையைப் புரிந்து கொள்வதற்குப் பல வருடங்களுக்கு முன்பு, என்று அவர் தொடங்கினார். ஒரு நாள் இரவு இதே அறையில் நான் தத்ரூபமான கனவொன்று கண்டேன். மிகப் பிரகாசமான தேவதூதர்கள் கற்பனை செய்ய முடியாத அளவு அழகுடன் எனக்கு மேலே மிதந்தனர். அக்காட்சி மிக நிஜமானதாக இருந்ததினால் நான் உடனே எழுந்து விட்டேன்; அதிசயிக்கத்தக்க விதமாக, அந்த அறை பிரகாசமான ஒளியால் சூழப்பட்டிருந்தது.

என் கணவர் பத்மாசனத்தில் அறையின் மத்தியில் தேவதூதர்களால் சூழப்பட்டவராக, அந்தரத்தில் மிதந்து கொண்டிருந்தார். அந்தத் தூதர்கள் மிகுந்த வணக்கத்துடன் அவரைக் கை கூப்பித் தொழுதவாறு இருந்தனர்.

அளவுகடந்த பிரமிப்புடன் நான் இன்னமும் கனவு கண்டு கொண்டிருப்பதாகவே நம்பினேன்.

பெண்ணே, லாஹிரி மகாசயர் கூறினார் நீ கனவு காணவில்லை. இனி என்றென்றைக்கும் உனது உறக்கத்தை விட்டொழி. அவர் மெதுவாகக் கீழே

தரையில் இறங்கியதும் நான் அவரது பாதங்களில் விழுந்து வணங்கினேன்.

குருதேவா, நான் அழுதேன், நான் திரும்பத் திரும்ப உங்கள் முன்பு வணங்குகிறேன். உங்களை என் கணவராக நினைத் ததற்காக என்னை மன்னிப்பீர்களா? தெய்வீக விழிப்புப் பெற்ற ஒருவரின் பக்கத்தில் இருந்தும் நான் அஞ்ஞான உறக்கத்திலிருந்ததை நினைத்து வெட்கத்தால் சாகிறேன். இந்த இரவிலிருந்து, நீங்கள் என் கணவரில்லை; ஆனால் என் குரு. இந்த அற்பமான அடியாளைத் தங்கள் சிஷ்யையாக ஏற்றுக் கொள்வீர்களா?[1]

குரு என்னை மிருதுவாகத் தொட்டார். புனித ஆத்மாவே, எழுந்திரு. நீ ஏற்றுக் கொள்ளப்பட்டாய். அவர் அந்தத் தேவதூதர்களைச் சுட்டிக் காட்டினார். தயவுசெய்து இப்புனித மகான்களையெல்லாம் ஒவ்வொருவராக வணங்கு.

நான் அவர்கள் எல்லாரையும் பயபக்தியுடன் மண்டியிட்டு வணங்கிய பிறகு அந்தத் தேவதூத குரல்கள், புராதன வேத கோஷத்தைப் போல் ஒருசேர ஒலித்தன.

தெய்வீக புருஷனின் மனைவியே, நீ அருள் பெற்றவளாகிறாய். நாங்கள் உன்னை வணங்குகிறோம். அவர்கள் என் பாதங்களில் பணிந்தார்கள். அந்தோ! அவர்களுடைய கண்கூசுகிற ஒளி உருவங்கள் மறைந்தன. அறை இருண்டது.

என் குரு கிரியா யோக தீட்சை பெறும்படி என்னிடம்

கூறினார்.

நிச்சயமாக, நான் பதிலளித்தேன். இந்த அருளை என் வாழ்வில் முன்னமேயே அடையாமல் இருந்ததைப் பற்றி நான் வருந்துகிறேன், என்றேன்.

காலம் பக்குவப்பட்டு வரவில்லை. லாஹிரி மகாசயர் சமாதானமாகப் புன்னகைத்தார். உன் கர்ம வினையின் பெரும்பாகம் தீருவதற்காக நான் மௌனமாக உனக்கு உதவி வந்தேன். இப்பொழுது நீ விருப்பத்துடனும் தயாராகவும் உள்ளாய்.

அவர் என் நெற்றியைத் தொட்டார். ஏராளமாகச் சுழலும் ஒளி வட்டங்கள் தோன்றின. அப்பிரகாசம் படிப்படியாக, பொன்னிற வளையத்துடனும், நடுவில் ஒரு வெண்ணிற ஐந்துமுக நட்சத்திரத்துடனும் கூடிய பலநிறம் காட்டும் நீல ஞானக்கண்ணாக உருவெடுத்தது.

அந்த நட்சத்திரத்தின் மூலம் உன் உணர்வை எல்லையில்லாப் பரவெளியின் இராஜ்யத்தினுள் ஊடுருவிச் செலுத்து. என் குருவின் குரல் வெகுதூரத்திலிருந்து வரும் மிருதுவான சங்கீதம் போல புதிய ஸ்வரத்துடன் ஒலித்தது.

என் ஆத்மாவின் கடற்கரையில் காட்சி மேல் காட்சியெனும் சமுத்திர அலையடித்தது. அந்த அற்புதக் கோளங்கள் கடைசியில் உருகி பேரானந்தக் கடலாகப் பரிணமித்தது. என்றும் பொங்கும் அருட் பரவச நிலையில் நான் என்னை இழந்தேன். பல மணி நேரங்களுக்குப் பிறகு நான் இந்த உலகின் நினைவைத் திரும்ப அடைந்ததும் என் குரு எனக்குக் கிரியா யோக

முறையைக் கற்பித்தார்.

அன்றைய இரவிலிருந்து லாஹிரி மகாசயர் என் அறையில் மறுபடியும் உறங்கவே இல்லை. ஏன், அதற்குப் பிறகு அவர் தூங்கியதே இல்லை. அவர் கீழேயுள்ள முன் அறையில் இரவும் பகலும் தன் சிஷ்யர்களுடனேயே இருந்து வந்தார்.

அந்தச் சிறப்பு வாய்ந்த மாது மௌனமானார். அந்தத் தெய்வீக யோகியுடன் அவரது தனித்தன்மை பொருந்திய தொடர்பை உணர்ந்து முடிவாக நான் அவரைப் பற்றிய இன்னும் சில பழைய நினைவுகளைப் பற்றிக் கேட்கத் துணிந்தேன்.

மகனே, நீ பேராசைப் படுகிறாய். இருந்தாலும் உனக்கு இன்னொரு கதை சொல்லுகிறேன். அவர் சங்கோசத்துடன் புன்னகைத்தார். என் குருகணவருக்கு எதிராக நான் செய்த பாவம் ஒன்றை நான் ஒப்புக் கொள்கிறேன். எனக்கு உபதேசம் ஆன சில மாதங்களுக்குப் பிறகு நான் ஆதரவற்று அலட்சியம் செய்யப்படுவதாக உணரத் தொடங்கினேன். ஒரு நாள் காலை ஏதோ சாமானை எடுப்பதற்காக லாஹிரி மகாசயர் இச்சிறிய அறைக்குள் நுழைந்தார்; நான் அவசரமாக அவரைத் தொடர்ந்தேன். மாயையால் தாக்கப்பட்டு அவர் புண்படும் விதத்தில் நான் பேசினேன்.

நீங்கள் உங்கள் நேரம் முழுவதையும் சீடர்களுடன் கழிக்கிறீர்கள். உங்கள் மனைவி, மக்களுக்காக நீங்கள் ஆற்ற வேண்டிய பொறுப்பு என்ன ஆயிற்று? குடும்பத்திற்காக அதிகப் பொருள் ஈட்டுவதில் நீங்கள்

அக்கறை எடுத்துக் கொள்ளாததைக் கண்டு நான் வேதனைப்படுகிறேன்.

குருதேவர் ஒருகணம் என்னை உற்று நோக்கினார். பிறகு அந்தோ! அவர் மறைந்துவிட்டார். அச்சமும் திகிலும் அடைந்த நான் அவ்வறையின் ஒவ்வொரு பாகத்திலிருந்தும் எதிரொலிக்கும் ஒரு குரலைக் கேட்டேன்.

இதெல்லாம் ஒன்றுமேயில்லை, உனக்குப் புரியவில்லையா? என்னைப் போல் ஒன்றுமேயில்லாதது உனக்கு எப்படிச் செல்வத்தை ஈட்டிக் கொடுக்க முடியும்?

குருஜி, நான் கதறினேன். நான் லட்சக்கணக்கான தடவை உங்களிடம் மன்னிப்புக் கோருகிறேன்!

என் பாவக் கண்களால் தங்களைப் பார்க்க முடியவில்லையே; தயவுசெய்து தங்களின் புனிதமான உருவத்தில் தோன்றுங்கள்.

நான் இங்கே இருக்கிறேன். இந்தப் பதில் எனக்கு மேலிருந்து வந்தது. நான் மேலே பார்த்த பொழுது குருதேவர் காற்றில் உருப்பெற்று அவரது சிரம் மேல்தளத்தைத் தொட்டுக் கொண்டிருப்பதைக் கண்டேன். அவருடைய கண்கள் பார்வையைக் குருடாக்கும்படியான தீப்பிழம்புகளாயிருந்தன. அவர் அமைதியாகக் கீழே இறங்கியதும் எனக்குள் ஏற்பட்ட பயத்துடன் நான் விம்மியபடியே அவர் காலடியில் விழுந்தேன்.

பெண்ணே அவர் கூறினார். அருட்செல்வத்தைத் தேடு, அற்பமான மதிமயக்கும் பொருட்செல்வத்தை அல்ல. நீ உன்னுள்ளே இருக்கும் செல்வத்தைப் பெற்று

விட்டால், வெளியிலிருந்து வர வேண்டியது எப்பொழுதும் தயாராகக் கிடைக்கும். அவர் தொடர்ந்தார், என் ஆன்மீகப் புத்திரர்களில் ஒருவன் உனக்கு வேண்டியதை ஏற்பாடு செய்வான்.

என் குருவின் வார்த்தைகள் இயற்கையாகவே பலித்தன; ஒரு சீடன் எங்கள் குடும்பத்திற்கு ஒரு பெரிய தொகையை விட்டுச் சென்றான்.

நான் அவருடைய அற்புதமான அனுபவங்களை என்னுடன் பகிர்ந்து கொண்டதற்காகக் காசிமணி[2] அவர்களுக்கு நன்றி கூறினேன். மறுநாள் நான் அவர் வீட்டிற்குத் திரும்பி, அவரது புதல்வர்களான தின் கௌரி மற்றும் துகௌரி லாஹிரியுடன் பல மணி நேரம் தத்துவார்த்தமாகக் கலந்து உரையாடி மகிழ்ந்தேன். இந்தியாவின் மகாயோகியினுடைய இவ்விரண்டு சத்புத்திரர்களும் அவருடைய உயர் லட்சிய அடிச் சுவடுகளையே நெருங்கிப் பின்பற்றி வந்தனர். அவ்விருவரும் அழகாகவும், உயர்ந்து ஆஜானுபாகுவாகவும், அடர்ந்த தாடியுடனும், மென்மையான குரலுடனும் நடத்தையில் பழமையான பண்பாட்டு வசீகரத்துடனும் இருந்தனர்.

லாஹிரி மகாசயருடைய பெண் சிஷ்யை அவரது மனைவியார் ஒருவர் மட்டுந்தான் என்றில்லை; என் தாய் உட்பட நூற்றுக் கணக்கானவர்கள் இருந்தனர். ஒரு முறை ஒரு சிஷ்யை, குருவிடம் அவரது புகைப்படம் ஒன்று வேண்டுமென்று கேட்டார். அவர் தன் படம் ஒன்றைக் கொடுத்தவாறு கூறினார். இதை நீ ஒரு

ரட்சையாகக் கருதினால் அது அப்படியே ஆகும். இல்லாவிடில் அது வெறும் படம்தான்.

சில நாட்கள் சென்ற பிறகு இந்தப் பெண்ணும் லாஹிரி மகாசயரின் மருமகளும், குருவின் படம் பின்னால் மாட்டப்பட்டிருந்த ஒரு மேசையின் அருகில் அமர்ந்து பகவத் கீதை படித்துக் கொண்டிருக்க நேர்ந்தது. ஒரு மின்னலுடன் கூடிய புயல் ஆங்காரத்துடன் வீசத் தொடங்கியது.

லாஹிரி மகாசயரே, எங்களைக் காப்பாற்றுங்கள்! அப்பெண்மணிகள் படத்தின் முன்னால் வணங்கினார்கள். மின்னல் மேசையின் மீதிருந்த புத்தகத்தைத் தாக்கியது. ஆனால் அவ்விரு பக்தைகளுக்கும் எந்தத் தீங்கும் நேரவில்லை.

பொசுக்கும் அந்த உஷ்ணத்தைத் தவிர்ப்பதற்காக என்னைச் சுற்றி ஒரு பனிப்படலம் சூழ்ந்ததுபோல் நான் உணர்ந்தேன், என்று அச்சிஷ்யை கூறினார்.

அபயா என்னும் சிஷ்யை சம்பந்தப்பட்ட இரு அற்புதங்களை லாஹிரி மகாசயர் நிகழ்த்தினார். ஒரு நாள் அவளும், கல்கத்தாவில் வக்கீலாகப் பணியாற்றும் அவளுடைய கணவரும் குருவைத் தரிசிக்க வேண்டிக் காசிக்குப் புறப்பட்டனர். வழியில் போக்குவரத்து அதிகமாக இருந்ததினால் அவர்கள் வண்டி சற்றுத் தாமதமாக வந்தது. அவர்கள் கல்கத்தாவிலுள்ள ஹௌரா பிரதான ரயில் நிலையத்தை அடைந்த பொழுது, காசி ரயில் புறப்படுவதற்காக ஒலிப்பதைக் கேட்க மட்டுமே முடிந்தது.

அபயா, டிக்கட் அலுவலகத்தின் அருகில் மௌனமாக நின்றாள்.

லாஹிரி மகாசயரே, அந்த ரயிலை நிறுத்துமாறு நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன்! உங்களைப் பார்ப்பதற்காகும் இன்னொரு நாள் தாமதத்தின் வேதனையை என்னால் சகித்துக் கொள்ள முடியாது, என அவள் மௌனமாகப் பிரார்த்தனை செய்தாள். புறப்படத் தொடங்கிய வண்டியின் சக்கரங்கள் தொடர்ந்து வேகமாகச் சுழன்ற போதிலும் முன்னேறிச் செல்லவில்லை. வண்டியின் டிரைவரும் பிரயாணிகளும் இந்த அற்புதத்தைக் காண பிளாட் ஃபாரத்தில் இறங்கினார்கள். ஓர் ஆங்கில ரயில் வண்டிக்காவலர் அபயாவையும் அவர் கணவரையும் அணுகினார். வழக்கத்திற்கு மாறாக, அக்காப்பாளர் தன் சேவையை முன்வந்து அளித்தார். பாபு, அவர் கூறினார், என்னிடம் பணத்தைக் கொடுங்கள். நீங்கள் வண்டியில் ஏறுவதற்குள் நான் உங்கள் பயணச் சீட்டை வாங்கிக் கொண்டு வருகிறேன்.

அத்தம்பதிகள் ரயிலில் அமர்ந்து பயணச் சீட்டுகளைப் பெற்றுக் கொண்டதும் ரயில் மெதுவாக முன்னே நகரத் தொடங்கியது. வண்டி எப்படிக் கிளம்பிற்று என்பதோ முதலில் எப்படி நின்றது என்பதோ தெரியாமல், டிரைவரும் மற்ற பிரயாணிகளும் திகிலுடன் அவரவர் இடங்களில் தொற்றிக் கொண்டனர்.

காசியில் லாஹிரி மகாசயரின் வீட்டை அடைந்ததும் அபயா மௌனமாகக் குருவின் முன் வீழ்ந்து

வணங்கினாள். மேலும் அவரது பாதங்களைத் தொட முயன்றாள்.

உன்னை அமைதிப்படுத்திக்கொள், அபயா. அவர் குறிப்பிட்டார். என்னைத் தொந்தரவு செய்வதில்தான் உனக்கு எத்தனை விருப்பம்! நீ அடுத்த வண்டியில் இங்கு வந்திருக்க முடியாதா, என்ன!

அபயா மறக்க முடியாத இன்னொரு சந்தர்ப்பத்தில் லாஹிரி மகாசயரிடம் சென்றாள். இம்முறை அவரை ரயில் வண்டியுடன் குறுக்கிட வேண்டவில்லை. ஆனால் குழந்தைப் பேற்றுக்காக வேண்டினாள்.

என் ஒன்பதாவது குழந்தை உயிருடன் வாழ வேண்டுமென என்னை ஆசிர்வதியுங்கள், என்று அவள் கூறினாள். எனக்கு எட்டுக் குழந்தைகள் பிறந்தன; எல்லாமே பிறந்ததும் சீக்கிரமே இறந்துவிட்டன.

அக்குரு அனுதாபத்துடன் புன்னகைத்தார். பிறக்கப் போகிற உன்னுடைய குழந்தை பிழைத்திருக்கும், நான் சொல்வதை தயவுசெய்து கவனித்துக் கேட்டு அதன்படி நட. அக்குழந்தை, ஒரு பெண், இரவில் பிறக்கும். விடியும் வரையில் எண்ணெய் விளக்கு எரியும்படி பார்த்துக் கொள். தூங்கிப் போய் விளக்கை அணைய விட்டு விடாதே.

எல்லாமறிந்த குருவின் சொற்படியே அபயாவிற்கு இரவில் ஒரு பெண் குழந்தை பிறந்தது. தாய், செவிலியிடம் விளக்கில் நிறைய எண்ணெய் வார்த்து வைக்கும்படி கூறினாள். இரு பெண்களும் மிக்க கவனத்துடன் அதிகாலை நேரம்வரை விழித்திருந்தனர்.

ஆனால் கடைசியில் உறக்கத்தில் ஆழ்ந்து விட்டனர். விளக்கிலிருந்த எண்ணெய் கிட்டத்தட்ட தீர்ந்துவிட்டது; விளக்குச் சுடர் மங்கலாகப் படபடத்தது. படுக்கையறைக் கதவின் தாழ்ப்பாள் விலகி வேகமான ஒரு சத்தத்துடன் கதவு திறந்தது. அவர்களது ஆச்சரியமிக்கக் கண்கள் அங்கு லாஹிரி மகாசயரின் உருவத்தைக் கண்டன.

அபயா, அதோ பார். விளக்கு அனேகமாக அணைந்து விட்டது! அவர் விளக்கைச் சுட்டிக் காட்டியதும் செவிலி அதை மறுபடியும் நிரப்ப அவசரமாகச் சென்றாள். அது திரும்பவும் பிரகாசமாக எரியத் தொடங்கியதும் அக்குருதேவர் மறைந்து விட்டார். கதவு மூடிக் கொண்டது; கண்களுக்கு யாரும் புலப்படாமலே தாழ்ப்பாள் போடப்பட்டது.

அபயாவின் ஒன்பதாவது குழந்தை பிழைத்தது; நான் 1935ல் விசாரித்த பொழுது அவள் இன்னும் உயிருடன் இருந்தாள்.

லாஹிரி மகாசயரின் சிஷ்யர்களில் ஒருவரான மதிப்பிற்கு உரிய காளிகுமார் ராய் என்பவர் அவரது வாழ்க்கையில் குருதேவருடன் நிகழ்ந்த அனேக அற்புதமான சம்பவங்களைப் பற்றி என்னிடம் கூறினார்.

நான் அடிக்கடி அவருடைய காசி வீட்டில் தொடர்ந்து வாரக் கணக்கில் விருந்தாளியாக இருந்திருக்கிறேன். ராய் என்னிடம் கூறினார். தண்டி ஸ்வாமிகள்[3] எனப்படும் பல மகான்கள் அமைதியான இரவு நேரங்களில், குருவின் காலடிகளின் அருகில் அமர்வதற்கென அங்கு வருவதை நான் கண்டிருக்கிறேன். சில சமயங்களில்

அவர்கள் தியானத்தைப் பற்றியும் மற்ற தத்துவார்த்த விஷயங்களைப் பற்றிய கலந்துரையாடலிலும் ஈடுபடுவார்கள். விடியற்காலையில் அந்த உன்னத விருந்தாளிகள் கிளம்பி விடுவார்கள். நான் அங்கு இருந்தபொழுது லாஹிரி மகாசயர் ஒரு முறையாவது உறங்குவதற்கென படுத்ததைப் பார்த்ததில்லை.

நான் அக்குருவுடன் தொடர்பு கொள்ளத் தொடங்கிய ஆரம்ப நாட்களில் என் எஜமானரின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியிருந்தது,ராய் தொடர்ந்தார். அவர் உலக விஷயங்களில் மூழ்கி இருந்தவர்.

என்னிடம் வேலை செய்பவர்களில் மத வெறியர்கள் வேண்டாம்,என்று அவர் கடிந்து கொள்வார். எப்பொழுதாவது போலி அறிஞரான உன் குருவை நான் சந்தித்தால் அவர் நன்கு நினைவில் வைத்திருக்கும்படி சில வார்த்தைகள் சொல்லப்போகிறேன்.

இந்த மிரட்டல் என் தினசரி நிகழ்ச்சிகளை பாதிக்கவில்லை. நான் கிட்டத்தட்ட ஒவ்வொரு மாலையும் என் குருவின் முன்னிலையிலேயே கழித்தேன். ஒரு நாள் இரவு என் எஜமானர் என்னைத் தொடர்ந்து வந்து வீட்டின் முன் அறையில் முரட்டுத்தனமாக நுழைந்தார். அவர் முன்பு வாக்களித்திருந்தபடியான கண்டனங்களைக் கூற வந்திருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. அந்த மனிதர் உட்கார்ந்த உடனேயே லாஹிரி மகாசயர், சுமார் பன்னிரெண்டு சிஷ்யர்கள் கொண்ட குழுவை நோக்கிப் பேசினார்.

நீங்கள் எல்லோரும் ஒரு படம் பார்க்க விரும்புகிறீர்களா?

நாங்கள் தலையசைத்ததும் அவர் எங்களிடம் அறையை இருட்டாக்கும்படி கூறினார். எல்லோரும் ஒருவர் பின் ஒருவராக வட்டமாக அமர்ந்து உங்கள் முன்னாமலிருப்பவரின் கண்களை உங்கள் கைகளினால் மூடுங்கள், என்று கூறினார்.

என் எஜமானரும் எல்லோரையும் போலவே ஆனால் விருப்பமின்றி, குருதேவரின் ஆணைகளைப் பின்பற்றுவதைக் கண்டு நான் வியப்படையவில்லை. சில நிமிடங்களில் லாஹிரி மகாசயர் எங்களை நோக்கி நாங்கள் என்ன பார்க்கிறோம் எனக் கேட்டார்.

ஐயா,நான் பதிலளித்தேன், ஓர் அழகிய பெண் தோன்றுகிறாள். அவள் சிவப்புக் கரையிட்ட புடவை அணிந்து யானைக்காது செடிக்கருகில் நின்று கொண்டிருக்கிறாள். மற்ற எல்லாச் சீடர்களும் அதையே கூறினார்கள். குருதேவர் என் எஜமானரிடம் திரும்பி வினவினார். உனக்கு, அந்தப் பெண்ணை அடையாளம் தெரிகிறதா?

ஆம். அந்த மனிதர் உண்மையாகவே தன் சுபாவத்திற்குப் புதியதான உணர்ச்சிகளுடன் தத்தளித்துக் கொண்டிருந்தார். எனக்கு நல்ல மனைவி இருந்த போதிலும் நான் முட்டாள்தனமாக அவளுக்காக என் பணத்தைச் செலவழித்துக் கொண்டிருக்கிறேன். இங்கு நான் வரக் காரணமாயிருந்த நோக்கத்தை நினைத்து நான் வெட்கமடைகிறேன். தாங்கள் என்னை மன்னித்து

தங்கள் சீடனாக என்னை ஏற்றுக் கொள்வீர்களா?

நீ ஆறு மாதங்களுக்கு நல்ல ஒழுக்கமான வாழ்க்கை நடத்தினால் நான் உன்னை ஏற்றுக் கொள்வேன். குரு தொடர்ந்தார். இல்லாவிடில் நான் உனக்கு தீட்சை கொடுக்க வேண்டியிருக்காது.

மூன்று மாதங்களுக்கு என் எஜமானர் சபலத்திலிருந்து விலகியிருந்தார். பிறகு அவர் அந்தப் பெண்ணுடன் தன் பழைய தொடர்பைத் திரும்பவும் தொடர்ந்தார். இரண்டு மாதங்களுக்குப் பிறகு அவர் இறந்துவிட்டார். இவ்வாறாக அம்மனிதருக்கு தீட்சை கிடைக்க வாய்ப்பில்லை என்பதைப் பற்றிய என் குருவின் மறைமுகமான தீர்க்க தரிசனத்தை நான் அறிந்து கொண்டேன்

லாஹரி மகாசயருக்கு த்ரைலங்க ஸ்வாமி என்ற புகழ்பெற்ற ஒரு நண்பர் உண்டு. அவர் முந்நூறு வயதிற்கு மேலானவர் எனப் பெயர் பெற்றவர். அந்த இரு யோகிகளும் அடிக்கடி ஒன்றாக தியானத்தில் அமர்வது உண்டு. த்ரைலங்கருடைய திகைக்க வைக்கும் அற்புதங்கள் பற்றிய எந்தக் கதையிலும் உண்மையின் சாத்தியத்தை மறுக்கும் இந்துக்கள் வெகு சிலரே என்னும் அளவிற்கு அவருடைய கீர்த்தி பரவியிருந்தது. கிறிஸ்து இவ்வுலகிற்குத் திரும்பி வந்து அவருடைய அற்புத சக்திகளைக் காண்பித்த வண்ணம் நியூ யார்க் நகர வீதிகளில் நடந்தால், எவ்வளவு பய பக்தி உண்டாகுமோ, அவ்வாறே பல வருடங்களுக்கு முன்னால் காசியின் ஜனசந்தடியுள்ள வீதிகளில்

த்ரைலங்க ஸ்வாமி நடந்து செல்லும் பொழுது ஏற்பட்டது. காலத்தின் தேய்வுகளுக்கு எதிராக இந்தியாவை ஒன்று சேர்த்த சித்தர்களில் (பரிபூரணமடைந்தவர்கள்) அவரும் ஒருவர்.

அனேக சமயங்களில் இந்த ஸ்வாமி மிகப் பயங்கரமான விஷத்தைக் குடித்தும் கூட எந்தக் கெடுதியும் அவருக்கு ஏற்பட்டதில்லை. ஆயிரக்கணக்கான மக்கள்இன்னும் உயிருடன் இருக்கும் சில பேர் உட்படத்ரைலங்கர் கங்கையில் மிதப்பதைக் கண்டிருக்கிறார்கள். நாட்கணக்கில் அவர் நீரின் மேல் அமர்ந்திருப்பார் அல்லது அலைகளின் கீழேயே நீண்ட காலத்திற்கு மறைந்திருப்பார். மணிகர்ணிகா படித்துறையில் உஷ்ணத்தினால் கொதிக்கும் கற்பலகைகளின் மீது இந்த ஸ்வாமியின் அசைவற்ற உடம்பு, இரக்கமற்ற இந்திய வெயிலுக்கு தன்னை முழுவதுமாக வெளிப்படுத்திக் கொண்டு அமர்ந்திருப்பது ஒரு சாதாரணமான காட்சியாகும்.

இம்மாதிரியான அற்புத செயல்களினால் த்ரைலங்கர் மனிதர்களுக்கு மனித வாழ்க்கை பிராண வாயுவையோ அல்லது சில கட்டுப்பாடுகள் மற்றும் முன்னெச்சரிக்கைகளையோ சார்ந்து இருக்க வேண்டிய அவசியமில்லை என்று உணர்த்த விரும்பினார். அப்பெரிய மகான் நீருக்கடியில் இருந்தாரோ அல்லது மேலே இருந்தாரோ, அவரது உடல் பயங்கர சூரியக் கதிர்களுக்குச் சவால் விடுத்ததோ இல்லையோ, அவர் இறையுணர்வில் வாழ்ந்தார் என்பதை நிரூபித்துக்

காட்டினார். மரணம் அவரைத் தொட முடியவில்லை.

அந்த யோகி ஆத்மார்த்த விஷயங்களில் மட்டுமல்ல, உடலாலும் பெரியவர். அவருடைய எடை முந்நூறு பவுண்டை விட அதிகமாயிருந்தது; அவருடைய வாழ்வின் ஒவ்வோர் ஆண்டிற்கும் ஒரு பவுண்டு! அவர் மிக அபூர்வமாகவே உணவு உட்கொண்டதால் இப்புதிர் அதிகமாயிற்று. ஒரு மகான், தான் விரும்பினால், வழக்கமான ஆரோக்கிய விதிகளை சுலபமாகப் புறக்கணித்து விடுகிறார். அதன் சிறப்புக் காரணம் பெரும்பாலும் அவருக்கு மட்டுமே தெரிந்த ஒரு சூட்சுமமாகும்.

இந்தப் பிரபஞ்ச மாயையின் கனவிலிருந்து விழித்தெழுந் தவர்களும், இந்த உலகம் இறைவனின் ஓர் எண்ணம் மட்டுமே என உணர்ந்து விட்டவர்களுமாகிய உயர்ந்த மகான்கள், தங்கள் உடலானது ஆட்டுவிக்கப் படக்கூடிய சுருக்கப்பட்ட அல்லது உறைந்த சக்தியேயாகும் என்பதைத் தெரிந்து கொண்டு அதைத் தங்கள் விருப்பப்படி செயல்படுத்த முடியும். இயற்பியல் விஞ்ஞானிகள் பொருள் என்பது உறைந்துள்ள சக்தியே தவிர வேறில்லை என்பதை இப்பொழுது உணர்ந்துள்ளார்கள்; ஆனால் உள்ளொளி பெற்ற மகான்கள் பொருளைக் கட்டுப்படுத்தும் துறையில் கோட்பாட்டிலிருந்து அனுபவ பூர்வமாக வெற்றி பெற்று விட்டிருக் கிறார்கள்.

த்ரைலங்கர் எப்பொழுதும் நிர்வாணமாகவே தான் இருந்தார். இதனால் மிகத் தொந்தரவுக்குள்ளான காசி

போலீஸார் அவரை, திணறடிக்கும்படியான தொல்லை கொடுக்கும் ஒரு குழந்தையாகவே கருதினார்கள். அந்த இயற்கையான ஸ்வாமி ஆதி நாளில் ஏடன் தோட்டத்தில் இருந்த ஆதாமைப் போல் தன் நிர்வாணத் தோற்றத்தைப் பற்றிய உணர்வே இல்லாமலிருந்தார். இருந்தாலும் போலீஸாருக்கு அதைப் பற்றிய உணர்வு நிறையவே இருந்ததினால் முறைமை அற்று ஸ்வாமியை சிறையில் அடைத்தனர். எல்லோருக்கும் ஒரே தர்மசங்கடம் ஆகிவிட்டது. சீக்கிரமே அவருடைய பூதாகாரமான உடல் வழக்கமான நிர்வாணக் கோலத்துடன் சிறையின் கூரையின்மேல் முழுமையாகக் காணப்பட்டது. அவருடைய அறை மிகுந்த பத்திரமாகப் பூட்டியது பூட்டிய படியே இருக்க அவர் தப்பிச் சென்ற முறை பற்றிய குறிப்பு யாருக்கும் புலப்படவில்லை.

மிக்க தவிப்படைந்த சட்ட அதிகாரிகள் மீண்டும் ஒரு முறை தங்கள் கடமையை நிறைவேற்றினர். இந்தத் தடவை ஸ்வாமியின் அறை வாயிலில் ஒரு காவலாள் நிறுத்தி வைக்கப்பட்டான். மறுபடியும் அதிகாரம் உரிமைக்கு முன்னர் பணிந்தது. அம்மகான் சீக்கிரமே கூரைமேல் கவலையின்றி நடை பயில்வதைக் கண்டார்கள்.

நீதி தேவதை தன் கண்களைக் கட்டிக்கொண்டு இருக்கிறாள். த்ரைலங்கர் விஷயத்தில் தோற்றுப் போன போலீஸார் அவளுடைய உதாரணத்தையே பின்பற்றத் தீர்மானித்தனர்.

அந்த மகாயோகி வழக்கமாக மௌனத்தையே

கடைப்பிடித்து வந்தார்.[4] வட்டமான முகமும் பீப்பாயைப் போன்ற பெரிய வயிறும் இருந்த போதிலும் த்ரைலங்கர் எப்பொழுதாவது மட்டுமே உணவு உட்கொள்வார். பல வாரங்கள் உண்ணாமலிருந்து பிறகு, அவர் குடம் குடமாக பக்தர்கள் கொடுக்கும் கெட்டித் தயிரைக் குடித்துத் தன் விரதத்தை முடிப்பது வழக்கம். ஒரு தடவை நாத்திகன் ஒருவன், இவர் ஒரு போலி என்பதை வெளிப்படுத்த வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான். ஒரு பெரிய வாளி நிறைய, சுவர்களுக்கு வெள்ளையடிக்கும் சுண்ணாம்புக் கலவையைக் கொண்டு வந்து அந்த ஸ்வாமியின் முன்னே வைத்தான்.

குருதேவா, அந்த நாத்திகன் போலி மரியாதையுடன் கூறினான். நான் தங்களுக்காகக் கொஞ்சம் கெட்டித் தயிர் கொண்டு வந்திருக்கிறேன். தயவு செய்து பருக வேண்டும், என்றான்.

த்ரைலங்கர் கொஞ்சமும் தயங்காமல் ஒரு சொட்டுக் கூட விடாமல் படிக்கணக்கில் அந்த எரியும் சுண்ணாம்புக் கலலையைக் குடித்தார். சில நிமிடங்களில் அப்பாவத்தைச் செய்தவன் தரையில் விழுந்து வேதனை தாளாமல் புரண்டான்.

காப்பாற்றுங்கள், ஸ்வாமி, காப்பாற்றுங்கள்! அவன் கதறினான். நான் நெருப்பில் வேகிறேன்! என் பொல்லாத பரீட்சையை மன்னித்தருளுங்கள்!

அந்தப் பெரிய யோகி தன் வழக்கமான மௌனத்தைக் கலைத்தார். அவர் கூறினார். பிறரை அவமதிப்பவனே! நீ எனக்கு விஷத்தைக்

கொடுத்தபொழுது என் உயிர் உன்னுயிருடனே ஒன்றி இருக்கிறது என்பதை நீ உணர்ந்தாயில்லை. கடவுள், படைப்பின் ஒவ்வொரு அணுவிலும் இருப்பதுபோல் என் வயிற்றிலும் உள்ளான் என்பதை நான் அறிந்திருக்கவில்லையானால் இச்சுண்ணாம்பு என்னைக் கொன்றிருக்கும். இப்பொழுது நீ தன் வினைத் தன்னைச் சுடும் என்பதின் தெய்வீக விதியை உணர்ந்து கொண்டதனால் மறுபடியும் யாரிடமும் விஷமம் செய்யாதே.

அந்தப்பாவி, த்ரைலங்கரின் சொற்களினால் குணமடைந்து மெதுவாக அங்கிருந்து நழுவினான்.

வேதனை திருப்பி அனுப்பப்பட்டது அம்மகானின் விருப்பத்தினால் உண்டானதல்ல.[5] ஆனால் தொலைதூரம் ஊசலாடுகின்ற படைப்பினுடைய கோளத்தைத் தாங்கி நிற்கும் நியாயவிதியின் செயல்முறையால் உண்டானதாகும். த்ரைலங்கரைப் போன்று இறை உணர்வை அடைந்த மனிதர்களுக்கு இத்தெய்வீக நியதி உடனுக்குடன் செயல்படும். அவர்கள் நாசம் செய்யும் அகங்காரத்தின் சுழல்களையெல்லாம் நிரந்தரமாக அகற்றிவிட்டார்கள்.

தானாகவே சரிப்படுத்திக் கொள்ளும் நியாயத்தின் மீது வைக்கும் நம்பிக்கையானது (த்ரைலங்க ஸ்வாமியைக் கொல்லவிருந்தவனுக்குக் கைமேல் பலன் கிடைத்தது போன்று பெரும்பாலும் எதிர்பாராத வகையில் நியாயம் பெறப்படும்) மனித அநியாயங்களைக் கண்டு நாம் அவசரமாகக் கோபம்

கொள்வதைத் தணிக்கும். பழிவாங்குதல் எனக்குரியது; நானே பதிற்செய்வேன், என்று கர்த்தர் சொல்லுகிறார்.[6] மனிதனுடைய எளியவழிகளுக்கு அவசியம் என்ன? இந்தப் பிரபஞ்சம் தானாகவே பழிவாங்குதலுக்கு வழிவகுத்துவிடும்.

மந்த புத்தியுடையவர்கள் தெய்வ நீதியின் சாத்தியக்கூறு, அன்பு, எல்லாமறிந்த தன்மை, சீரஞ்சீவித் தன்மை ஆகியவற்றை சாத்திரங்களின் வெற்றுக் கற்பனைகள் என இகழ்கிறார்கள். நுண்ணுணர்வற்ற இக்கருத்துடைய மனிதர்கள் இப்பிரபஞ்சத்தின் பெருங்காட்சிகளைக் கண்டு பயபக்தி கொள்ளாமல் தங்களுடய வாழ்க்கையில் இணக்கமற்ற சம்பவங்களை ஏற்படுத்தி கடைசியில் அவற்றால் ஞானத்தைத் தேடுவதற்கு நிர்பந்தப்படுத்தப்படுகிறார்கள்.

இயேசு ஜெருசலத்திற்குள் வெற்றிகரமாக நுழைந்த நிகழ்ச்சியின் பொழுது தெய்வீக நியதியின் சர்வ வல்லமையைப் பற்றிக் குறிப்பிட்டார். அவருடைய சீடர்களும் திரளான கூட்டமும் ஆனந்தத்தினால் கூச்சலிட்டு, பரலோகத்திலே சமாதானமும் உன்னதத்திலே மகிமையும் உண்டாவதாக, என்ற பொழுது சில யூத பூசாரிகள் அந்தக் காட்சியை அநாகரிகமெனக் குறை கூறினர். போதகரே, அவர்கள் ஆட்சேபித்தார்கள், உம்முடைய சீடர்களை அதட்டும்.

ஆனால், இயேசு, தன் சீடர்களைப் பேசாமலிருக்கச் செய்தால், கற்கள் உடனே கூவத் தொடங்கிவிடும்.[7] என்று பதிலளித்தார்.

அந்த யூத பூசாரிகளை இவ்வாறு கண்டிக்கும்பொழுது இயேசு சுட்டிக்காட்டுவதாவது: தெய்வ நியதி என்பது வெறும் அலங்காரக் கற்பனையன்று, மேலும் அமைதியான மனிதன், அவனுடைய நாவே வேருடன் துண்டிக்கப்பட்டாலும் பேசும் திறமை அடைவான், படைப்பு என்னும் அஸ்திவாரப் பாறையினால் அவனுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்; அதுதான் பிரபஞ்ச நியதியுமாகும்.

இயேசு கூறினார், அமைதியான மனிதர்களின் வாயை மூடவா பார்க்கிறீர்கள்? கடவுளின் குரலைக் கூட நெரித்துவிட நினைப்பீர்கள் போலும்; அவர் புகழையும் யாதுமாகி நிற்கும் தன்மையையும் கற்கள் கூடக் கவிபாடுகின்றன. பரலோகத்தின் அமைதியைப் புகழ்ந்து மனிதர்கள் ஒன்று சேர்ந்து கொண்டாடக் கூடாதென்றா நீங்கள் சொல்லுகிறீர்கள்? இப்புவியில் போர் நிகழும்பொழுதுதான் அவர்கள் திரளாக ஒன்றுகூடி அவர்களுடைய ஒருமைத் தன்மையை வெளிப்படுத்த வேண்டும் என்று அறிவுரை கூறுவீர்கள் போலும்? அப்படியானால் ஓ யூத பூசாரிகளே, உலகத்தின் அஸ்திவாரத்தையே கவிழ்க்க உங்களுடைய ஏற்பாடுகளை தயார் செய்து கொள்ளுங்கள்; ஏனெனில் பண்புள்ள மனிதர்கள் மற்றும் கற்கள் அல்லது மண், நீர், நெருப்பு மற்றும் வாயு ஆகியன எல்லாம் உங்களுக்கு எதிராகப் படைப்பில் உள்ள தெய்வீக இணக்கத்திற்கு சாட்சியம் கூற எழும்.

கிறிஸ்துவைப் போன்றதொரு யோகியாகிய

த்ரைலங்கரின் அருள் பார்வை ஒரு தடவை என் தாய்மாமாவின் மீது பட்டது. ஒரு நாள் காலை மாமா அந்த மகானைக் காசியிலுள்ள ஒரு படித்துறையில் பக்தர்கள் கூட்டத்தின் நடுவில் கண்டார். அவர் கும்பலினூடே நுழைந்து த்ரைலங்கரின் அருகே சென்று அவர் திருவடிகளைப் பணிவுடன் தொட்டுவிட்டார். மாமா, தனக்கு வேதனை தந்து கொண்டிருந்த ஒரு நாட்பட்ட வியாதியிலிருந்து அக்கணமே விடுபட்டதைக் கண்டு பிரமித்து விட்டார்.[8]

அந்த மகாயோகியின் சிஷ்யர்களுள் உயிருடன் இருக்கும் ஒரே சிஷ்யை சங்கரி மாயி ஜியு[9] என்னும் பெண்மணி ஆவார். த்ரைலங்கருடைய ஒரு சிஷ்யரின் மகளான அவர், அவருடைய சிறு குழந்தைப் பருவத்திலிருந்தே ஸ்வாமியிடம் பயிற்சி பெற்றார். அவர் நாற்பது ஆண்டுகள் பத்ரிநாத், கேதார்நாத், அமர்நாத் மற்றும் பசுபதிநாத் ஆகிய இடங்களின் அருகிலுள்ள தனிமையான இமாலயக் குகைகளில் வசித்து இருக்கிறார். 1826 ல் பிறந்த அந்த பிரமசாரிணி (பெண்துறவி) தற்பொழுது நூறு வயதைக் கடந்தவர். இருந்தபோதிலும் தோற்றத்தில் வயதானவராகத் தெரியாமல் தன்னுடைய கருமையான கூந்தலையும் ஒளிவீசும் பற்களையும் மற்றும் வியப்படைய வைக்கும் சக்தியையும் தக்க வைத்துக் கொண்டிருக்கிறார். அவர் குறித்த காலங்களில் நடக்கும் மேளாக்கள் அல்லது சமய சம்பந்தமான உற்சவங்களுக்கு விஜயம் செய்வதற்காக சில வருடங்களுக்கு ஒரு முறை தன் தனிமையிலிருந்து

வெளிவருவார்.

இந்தப் பெண்துறவி அடிக்கடி லாஹிரி மகாசயரிடம் செல்வதுண்டு. ஒரு நாள் அவர் கல்கத்தாவிற்கருகிலுள்ள பாரக்பூர் பகுதியில் லாஹிரி மகாசயரின் பக்கத்தில் அமர்ந்திருக்கும் பொழுது அவருடைய மகா குருவான பாபாஜி அறையினுள் அமைதியாக நுழைந்து அவர்கள் இருவருடனும் உரையாடினார் என்று அவர் கூறினார். மரணமற்ற அம்மகான், அப்பொழுது தான் நதியில் ஒரு முழுக்குப் போட்டு வந்தது போல ஓர் ஈரத் துணியை அணிந்திருந்தார், என்று அம்மாது நினைவு கூர்ந்தார். அவர் தெய்வீக அறிவுரை சிலவற்றை எனக்கு அளித்தருளினார்.

த்ரைலங்கர், காசியில் ஒரு குறிப்பிட்ட சமயம், லாஹிரி மகாசயரை எல்லாருக்கும் மத்தியில் கௌரவிப் பதற்கென தன் வழக்கமான மௌனத்தைக் கைவிட்டார். த்ரைலங்கரின் சிஷ்யர்களுள் ஒருவர் ஆட்சேபித்தார்.

ஐயா, ஒரு ஸ்வாமியும் துறவியுமான தாங்கள் ஏன் ஓர் இல்லறத்தாருக்கு இவ்வளவு மரியாதை கொடுக்கிறீர்கள்? என்று கேட்டார்.

என் மகனே, த்ரைலங்கர் பதிலளித்தார். லாஹிரி மகாசயர் ஒரு தெய்வீகப் பூனைக்குட்டியைப் போல, அப்பராசக்தி எங்கு அவரை வைக்கிறாளோ அங்கு அவர் இருப்பார். லோகாயதமான மனிதனாக தன் பாகத்தை கடமை உணர்வோடு செய்து கொண்டே, அவர் முழுமையான ஆத்மஞானம் பெற்றுவிட்டார். நான் அதை அடைவதற்கு எல்லாவற்றையும், ஏன் என்

# கோவணத்துணியைக் கூட துறக்க வேண்டியிருந்தது!



சங்கரி மாயி ஜியு, த்ரைலங்க ஸ்வாமியின் உயிருடனிருக்கும் ஒரே சிஷ்யை, 1938, ஹரித்துவார் கும்பமேளாவில். அப்பொழுது அந்த யோகினி 112 வயதாகி இருந்தார். (பார்க்க பக்கம் 433)

1 அவன் கடவுளுக்காக மட்டுமே, அவள் அவனுள்ளிருக்கும் கடவுளுக்காகவே. மில்டன்

2 வணக்கத்திற்குரிய இவ்வம்மையார், காசியில், மார்ச் 25, 1930ல் இயற்கை எய்தினார்.

3 ஒரு குறிப்பிட்ட சன்னியாசப் பரம்பரையைச் சார்ந்த அவர்கள், சம்பிரதாயமாகக் கையில் ஒரு தண்டம் (மூங்கில் தடி) வைத்திருப்பார்கள். அது பிரம்ம தண்டத்தின் (பிரம்மாவின் தண்டம்) அடையாளமாகும். அது மனிதனின் முதுகுத் தண்டைக் குறிக்கும். அதன் ஏழு ஆதார மையங்களை விழிப்படையச் செய்தலே எல்லையற்ற பரவெளிக்குச் செல்லும் உண்மையான பாதையாகும்.

4 அவர் ஆன்மீக மௌனத்தைக் கடைப்பிடித்த ஒரு முனியாவார். சமஸ்கிருதத்தின் முனியை ஒத்துள்ள கிரேக்க மோனஸ்-தனியாக, ஒன்று, (ம்ர்ய்ர்ள்) என்னும் சொல்லிலிருந்துதான் ஆங்கிலச் சொற்களான ம்ர்ய்ந், ம்ர்ய்ண்ள்ம் ஆகியவை வந்துள்ளன.

5 II இராஜாக்கள் 2:19-24. (பைபிள்). எலிசா தண்ணீரைக் குணப்படுத்தும் அற்புதத்தை ஜெரிக்கோவில் செய்த பிறகு பிள்ளைகளின் குழு ஒன்று அவரைக் கேலி செய்தது. உடனே காட்டிலிருந்து இரண்டு பெண் கரடிகள் புறப்பட்டு வந்து அவர்களில்

நாற்பத்திரண்டு பிள்ளைகளைப் பீறிப்போட்டன.

6 ரோமர் 12:19 (பைபிள்).

7 லூக்கேயு 19:37-40 (பைபிள்).

8 த்ரைலங்கர் மற்றும் பெரிய மகான்களின் வாழ்க்கை இயேசுவின் வார்த்தைகளை நினைவூட்டுகிறது: மேலும், விசுவாசிக்கிறவர்களைத் தொடரும் அடையாளங்களாவன: என் நாமத்தினாலே (கிறிஸ்து உணர்வு) பிசாசுகளைத் துரத்துவார்கள்; புதிய பாஷைகளைப் பேசுவார்கள்; சர்ப்பங்களை எடுப்பார்கள்; சாவுக்கேதுவான யாதொன்றைக் குடித்தாலும் அது அவர்களைச் சேதப்படுத்தாது; வியாதியஸ்தர் மேல் கைகளை வைப்பார்கள், அப்பொழுது அவர்கள் சொஸ்தமாவார்கள். மாற்கு 16:17-18 (பைபிள்).

9 வங்காளியில் மரியாதையைக் குறிக்கும் ஜி சொல்லின் பின் சேர்க்கை.

அத்தியாயம் 32

# இறந்த ராமன் உயிர் பெறுகிறான்

இப்பொழுது லாசரு என்ற ஒருவன் வியாதிப்பட்டிருந்தான்.... இயேசு அதைக் கேட்ட பொழுது, இந்த வியாதி மரணத்துக்கு ஏதுவாயிராமல் தேவனுடைய மகிமை விளங்குவதற்கு ஏதுவாகியிருக்கிறது; தேவனுடையை குமாரனும் அதனால் மகிமைப்படுவார்.[1] என்றார்.

செராம்பூர் ஆசிரமத்திலுள்ள மாடிமுகப்பில் சூரிய வெளிச்சம் நிரம்பிய ஒரு காலைப் பொழுதில் ஸ்ரீ யுக்தேஸ்வர் கிறிஸ்துவ திருமறைகளை விளக்கிக் கொண்டிருந்தார். குருதேவரின் சீடர்களில் சிலருடன் நான் என் ராஞ்சி மாணவர்களின் சிறு குழுவுடன் அங்கிருந்தேன்.

இந்தப் பத்தியில் இயேசு தன்னை இறைவனின் மகன் என்று கூறிக் கொள்கிறார். அவர் இறைவனுடன் முழுமையாக ஒன்றியிருந்தாலும் இங்கு அவர் தன்னைப் பற்றிக் கூறாமல் ஓர் ஆழமான உட்கருத்தைக் குறிப்பிடுகிறார், என் குருதேவர் விளக்கினார். இறைவனின் புதல்வன் என்பது கிறிஸ்து அல்லது மனிதனின் தெய்வீக உணர்வேயாகும். இறந்துபடும் எந்த மனிதனும் இறைவனைப் பெருமைப்படுத்த முடியாது. அவன் தன்னைப் படைத்தவனுக்கு கொடுக்கக் கூடிய

ஒரே கௌரவம் அவனை விடாமல் தேடுவதுதான். தான் அறியாத அருவமான ஒரு பொருளை மனிதன் பெருமைப்படுத்த முடியாது. மகான்களின் சிரத்தைச் சூழ்ந்துள்ள ஜோதி அல்லது ஒளி வட்டம், இறைவனிடத்தில் அவர்களுக்குள்ள இறையன்பு செலுத்தக் கூடிய சக்தியைக் குறிக்கும் அடையாளச் சின்னமாகும்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் லாசரு உயிர்ப்பிக்கப் பெற்ற அதியற்புதமான கதையை மேலும் தொடர்ந்து படித்தார். அதன் முடிவில் குருதேவர், அப்புனிதப் புத்தகம் திறந்தபடி அவரது மடிமேல் இருக்க, ஒரு நீண்ட மௌனத்திலாழ்ந்தார்.

நான் கூட அம்மாதிரியான ஓர் அற்புதத்தைக் காணும் பாக்கியம் பெற்றிருந்தேன். என் குருதேவர் கடைசியில் ஒரு பவித்ரமான உணர்வுடன் கூறினார். லாஹிரி மகாசயர் என் நண்பர்களில் ஒருவனை மரணத்திலிருந்து திரும்பவும் உயிர்ப்பித்தார்.

என் பக்கத்திலிருந்த சிறுவர்கள் மிகுந்த ஆர்வத்துடன் புன்னகை செய்தார்கள். தத்துவம் மட்டுமின்றி குறிப்பாக ஸ்ரீ யுக்தேஸ்வர் அவருடைய குருவுடன் அவருக்கு ஏற்பட்ட ஆச்சரியமான அனுபவங்கள் பற்றிக் கூறும் எந்தக் கதையையும் நான் சந்தோஷமாக அனுபவிக்கும் அளவிற்கு என்னுள்ளும் கூடச் சிறுவனின் தன்மை இருந்தது.

என் நண்பன் ராமனும் நானும் இணைபிரியாதவர்களாக இருந்தோம். குருதேவர்

தொடங்கினார். அவன் மிக சங்கோசமுள்ளவனாகவும் தனிமையை நாடுபவனாகவும் இருந்ததால் அவன் எங்கள் குரு லாஹிரி மகாசயரிடம் செல்ல, பகல் நேரச் சீடர்களின் கும்பல் இல்லாத நடுநிசிக்கும் விடியற்காலைக்கும் இடையில் உள்ள நேரங்களை மட்டுமே தேர்ந்தெடுத்தான். நான் ராமனுடைய மிக நெருங்கிய நண்பன் என்பதால் அவன் தன்னுடைய பல ஆன்மீக அனுபவங்களை என்னிடம் நம்பிக் கூறுவான். அவனுடைய சீரிய துணையினால் எனக்கு ஊக்கம் ஏற்பட்டதைக் கண்டேன். என் குருவின் முகம் பழைய நினைவுகளில் கனிந்தது.

ராமன் திடீரென்று கடும் சோதனைக்குட்படுத்தப்பட்டான், ஸ்ரீ யுக்தேஸ்வர் தொடர்ந்தார். அவன் ஆசியக் காலராவினால் பீடிக்கப்பட்டான். கடுமையாக நோய்வாய்ப்படும் நேரங்களில் மருத்துவர்களை அழைப்பதை எங்கள் குருதேவர் என்றுமே தடை செய்ததில்லை. ஆகையால் இரு சிறப்பு மருத்துவர்கள் அழைக்கப்பட்டனர். நோயால் அவதிப்படுபவனுக்குச் சிகிச்சை செய்யும் அவசரத்தின் மத்தியிலும் நான் லாஹிரி மகாசயரிடம் உதவி வேண்டி ஆழ்ந்த பிரார்த்தனை செய்தவாறிருந்தேன். நான் அவருடைய வீட்டிற்கு ஓடி அவரிடம் விம்மலுடன் விஷயத்தைக் கூறினேன்.

மருத்துவர்கள் ராமனைப் பார்த்து வருகிறார்கள். அவன் குணமாகி விடுவான். என் குரு களிப்புடன் முறுவலித்தார்.

நான் நிம்மதியுடன் என் நண்பனின் படுக்கையருகில் சென்றபொழுது அவன் இறக்கும் தருவாயில் இருப்பதையே கண்டேன்.

அவனால் ஒன்று அல்லது இரண்டு மணி நேரங்களுக்கு மேல் தாக்குப் பிடிக்க முடியாது. அந்த மருத்துவர்களில் ஒருவர் என்னிடம் மனமொடிந்த சாடையில் கூறினார். நான் மறுபடியும் லாஹிரி மகாசயரிடம் ஓடினேன்.

மருத்துவர்கள் மனச்சாட்சிக்கு உட்பட்டவர்கள். ராமன் குணமாகிவிடுவானென்று எனக்கு நிச்சயமாகத் தெரியும். குருதேவர் மகிழ்ச்சியுடன் என்னைத் திருப்பி அனுப்பிவிட்டார்.

ராமனின் வீட்டில் இரு மருத்துவர்களும் சென்று விட்டிருந்ததை நான் கண்டேன். ஒருவர் எனக்காக ஒரு குறிப்பு விட்டுச் சென்றிருந்தார்: நாங்கள் எங்களால் இயன்றதைச் செய்து விட்டோம். ஆனால் இவன் விஷயத்தில் நம்பிக்கை இல்லை.

என் நண்பன் உண்மையிலேயே இறக்கும் மனிதனின் நிலையில் இருந்தான். லாஹிரி மகாசயரின் சொற்கள் எப்படிப் பலிக்காமலிருக்க முடியும் என்பது எனக்குப் புரியவில்லை. இருந்தாலும் ராமனின் உயிர் வேகமாக நழுவிக் கொண்டிருக்கும் காட்சியானது இப்பொழுது எல்லாம் முடிந்துவிட்டது என்ற எண்ணத்தையே என் மனத்தில் ஏற்படுத்தியது. இம்மாதிரியாக நம்பிக்கையும் சந்தேகமும் என்ற மாறி மாறி வரும் அலைகளினால் தடுமாற்றத்துடனே என்னால் முடிந்தவரையில் என்

நண்பனுக்குச் சிகிச்சை செய்தேன். அவன் பேசுவதற்காக எழுந்தான்.

யுக்தேஸ்வர், குருதேவரிடம் ஓடிச் சென்று நான் இறந்து விட்டதைக் கூறு. ஈமச் சடங்குகளுக்கு முன்னால் என் உடலை ஆசீர்வதிக்கும்படி குருதேவரிடம் சொல். இச்சொற்களுடன் அவன் பெருமுச்சு வாங்கியவாறு பூத உடலை விட்டான்.[2]

நான் ஒரு மணி நேரம் வரை அவன் படுக்கையருகில் அழுதவாறிருந்தேன். என்றுமே அமைதியை நாடும் அவன் இப்பொழுது மரணத்தின் நிரந்தர அமைதியை அடைந்து விட்டிருந்தான். இன்னொரு சீடன் உள்ளே வந்தான்; நான் திரும்பி வரும்வரை அவனை வீட்டிலிருக்கும் படி கூறினேன். அரை மயக்கத்துடன் நான் குருதேவரிடம் சோர்வுற்றுத் திரும்பினேன்.

இப்பொழுது ராமன் எப்படி இருக்கிறான்.? லாஹிரி மகாசயரின் முகம் புன்னகையில் மலர்ந்திருந்தது.

ஐயா அவன் எப்படி இருக்கிறான் என்பதை நீங்கள் சீக்கிரமே பார்க்கப் போகிறீர்கள், நான் உணர்ச்சிவசப்பட்டு உளறினேன். இன்னும் சில மணிநேரங்களில் நீங்கள் அவன் உடலை, அது சுடுகாட்டிற்குக் கொண்டு செல்லப்படுவதற்கு முன் காண்பீர்கள். நான் மனமுடைந்து வெளிப்படையாகப் புலம்பலானேன்.

யுக்தேஸ்வர், உன்னைக் கட்டுப்படுத்திக்கொள். அமைதியாக அமர்ந்து தியானம் செய். என் குருதேவர் சமாதியில் ஆழ்ந்து விட்டார். அப்பகற் பொழுதும் இரவும்

இடையறாத மௌனத்தில் கழிந்தது. நான் என்னுள் சமாதானம் அடைவதற்கு முடியாமல் திணறிக் கொண்டு இருந்தேன்.

விடியற்காலையில் லாஹிரி மகாசயர் ஆறுதல் கூறும் வகையில் என்னை நோக்கினார். நீ இன்னும் அமைதியற்று இருக்கிறாய் என்பதை நான் காண்கிறேன். ஏதாவது மருந்து வடிவத்தில் ராமனுக்கு நான் கண்கூடான உதவி செய்ய வேண்டுமென்று நீ எதிர்பார்ப்பதாக நேற்றே ஏன் நீ விளக்கமாகக் கூறவில்லை? குருதேவர் கிண்ண வடிவ விளக்கிலிருந்த சுத்திகரிக்கப் பெறாத விளக்கெண்ணெயைச் சுட்டிக் காட்டினார். அந்த விளக்கிலிருந்து கொஞ்சம் எண்ணெயை ஒரு சிறு புட்டியில் நிரப்பிக் கொள்; ராமனுடைய வாயில் ஏழு சொட்டுகள் ஊற்று.

ஐயா, நான் மறுத்துக் கூறினேன். அவன் நேற்று மதியமே இறந்து விட்டான். இந்த எண்ணெயினால் இப்பொழுது என்ன பிரயோசனம்?

பரவாயில்லை. நான் சொல்வது போல செய். என் குருதேவரின் ஆனந்தமான மனநிலையை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. நான் இன்னமும் என் இழப்பின் தணிக்க முடியாத வேதனையில் தத்தளித்துக் கொண்டு இருந்தேன். கொஞ்சம் எண்ணெயை ஊற்றி எடுத்துக் கொண்டு நான் ராமனின் வீட்டை நோக்கிச் சென்றேன்.

சாவின் பிடியில் சிக்கி என் நண்பனின் உடல் விறைத்துக் கிடந்ததைக் கண்டேன். அவனுடைய

கோரமான நிலையை நான் பொருட்படுத்தாமல் என் வலது ஆள்காட்டி விரலால் அவன் உதடுகளைத் திறந்து, என் இடது கையாலும் அப்புட்டியின் மூடியின் உதவியாலும் இறுகிப்போயிருந்த அவன் பற்களின் மேல் சொட்டுச் சொட்டாக அந்த எண்ணெயை விட்டேன். ஏழாவது சொட்டு அவனது உறைந்த உதடுகளைத் தொட்டதுதான் தாமதம். ராமனுக்கு உக்கிரமாகத் தூக்கிப்போட்டது. அவன் ஆச்சரியத்துடன் எழுந்து உட்கார்ந்தபோது தலையிலிருந்து கால்வரை அவன் தசைகளெல்லாம் அதிர்ந்தன.

நான் லாஹிரி மகாசயரை ஓர் ஒளிப் பிழம்பில் கண்டேன்! அவன் கூவினான். அவர் சூரியனைப் போன்று பிரகாசத்துடன் இருந்தார். எழுந்திரு, உன் தூக்கத்தை விட்டொழி, என்று அவர் எனக்கு உத்தரவிட்டார். யுக்தேஸ்வருடன் என்னைக் காண வா என்றார்.

ராமன் எழுந்து தானாகவே உடை அணிந்து கொண்டதையும் அந்த உயிரைக் குடிக்கும் வியாதிக்குப் பின்னரும் எங்களுடைய குருவின் வீட்டிற்கு நடந்து வருமளவிற்குத் திடகாத்திரமா யிருந்ததையும் கண்டு என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை. அங்கு அவன் நன்றியால் நனைந்த கண்களுடன் லாஹிரி மகாசயரின் முன்னால் விழுந்து வணங்கினான்.

குருதேவரும் ஆனந்தக் களிப்பில் திளைத்தார். அவர் கண்கள் என்னைப் பார்த்து விஷமமாகச் சிமிட்டின.

யுக்தேஸ்வர், அவர் கூறினார், நிச்சயமாக இனி நீ எப்பொழுதும் கையில் ஒரு புட்டி விளக்கெண்ணெயை

உன்னுடன் எடுத்துச் செல்லத் தவறமாட்டாய். நீ ஒரு பிணத்தைப் பார்க்கும் போதெல்லாம் வெறுமனே இந்த எண்ணெயைக் கொடு. ஏன், இந்த ஏழு சொட்டு விளக்கு எண்ணெய் எமனுடைய அதிகாரத்தையே நிச்சயமாகக் கெடுத்துவிடும் போலிருக்கிறதே!

குருதேவா, நீங்கள் என்னைக் கேலி செய்கிறீர்கள். எனக்குப் புரியவில்லை; தயவு செய்து என் தவற்றின் தன்மையை எனக்குச் சுட்டிக் காட்டுங்கள்.

ராமன் சுகமடைந்து விடுவான் என்று நான் உனக்கு இரு தடவை கூறினேன்; இருந்தாலும் உன்னால் என்னை முழுமையாக நம்ப முடியவில்லை, லாஹிரி மகாசயர் விளக்கினார். மருத்துவர்கள் அவனை குணப்படுத்திவிட முடியும் என்ற அர்த்தத்தில் நான் கூறவில்லை. அவர்கள் அங்கு இருக்கிறார்கள் என்று தான் நான் குறிப்பிட்டேன். மருத்துவர்களுடன் குறுக்கிட நான் விரும்பவில்லை; அவர்களும் வாழ்ந்தாக வேண்டும். மகிழ்ச்சி நிறைந்த குரலில் அவர் தொடர்ந்தார். அந்த சர்வ வல்லமையுள்ள பரமாத்மாவினால் மருத்துவர் இருந்தாலும் அல்லது இல்லா விட்டாலும் எவரையும் குணப்படுத்த முடியும் என்பதை எப்பொழுதும் அறிந்து கொள்.

என் தவறு எனக்குப் புரிகிறது. நான் வருத்தத்துடன் ஒப்புக் கொண்டேன். உங்களுடைய எளிய வாக்கானது இப்பிரபஞ்சம் முழுவதையுமே கட்டுப்படுத்துகிறது என்று நான் இப்பொழுது தெரிந்து கொண்டேன்.

ஸ்ரீ யுக்ஸேஸ்வர் இந்த மலைப்பூட்டும் கதையைக் கூறி

முடித்தவுடன் ராஞ்சி சிறுவர்களில் ஒருவன் ஒரு கேள்வி கேட்கத் துணிந்தான். ஒரு குழந்தையால்தான் அவ்வாறான கேள்வி கேட்கப்படும் என்பதை நன்றாகப் புரிந்து கொள்ள முடிந்தது.

ஐயா, அவன் கேட்டான். உங்கள் குரு ஏன் விளக்கெண்ணெயைக் கொடுத்து அனுப்பினார்? குழந்தாய், எண்ணெயைக் கொடுத்ததில் விசேஷ அர்த்தம் எதுவுமில்லை. நான் ஏதாவது காணப்படும்படியான பொருளை எதிர்பார்த்ததனால் லாஹிரி மகாசயர் அருகிலிருந்த எண்ணெயை எனக்குள் பெருமளவில் நம்பிக்கையை எழுப்ப ஒரு வெளிப்படையான சின்னமாகத் தேர்ந்தெடுத்தார். நான் முழுவதுமாக நம்பாததால் குருதேவர் ராமனை இறக்க அனுமதித்தார். ஆனால், அவன் பிழைத்துக் கொள்வானென தெய்வாம்சம் பொருந்திய குரு கூறி இருந்ததனால் குணமடைதல் கட்டாயம் நடைபெற்றே ஆக வேண்டுமென்பது அவருக்குத் தெரிந்திருந்தது. அதற்காக அவர், ராமனை, முடிவான வியாதியாகிய மரணத்திலிருந்தே குணப்படுத்த வேண்டியிருந்தது.!

ஸ்ரீ யுக்தேஸ்வர் அச்சிறு குழுவை விடை கொடுத்து அனுப்பிவிட்டு அவர் காலடியிலிருந்த ஒரு கம்பளி ஆசனத்தை எனக்குச் சுட்டிக் காட்டினார்.

யோகானந்தா, அவர் வழக்கமில்லாத ஒரு தீவிரத்துடன் கூறினார். நீ பிறந்ததிலிருந்தே லாஹிரி மகாசயரின் நேரிடையான சீடர்களினால் சூழப்பட்டிருந்திருக்கிறாய். அப்பெரிய மகான் அவருடைய

உயர்ந்த வாழ்வை பாதி தனிமையிலேயே கழித்திருக்கிறார். மேலும், அவர் தன்னைப் பின்பற்றியவர்கள், அவருடைய உபதேசங்களை வைத்து யாதொரு ஸ்தாபனத்தையும் அமைக்க அனுமதிப்பதை உறுதியாய் மறுத்திருக்கிறார். ஆனாலும் அவர் முக்கியமான முன்னறிவிப்பு ஒன்றைச் செய்தார்.

நான் மறைந்த ஐம்பது வருடங்களுக்குப் பின்னர், அவர் கூறினார், மேலை நாடுகளில், யோகத்தில் தோன்றும் ஆழ்ந்த ஆர்வம் காரணமாக என் வாழ்க்கை வரலாறு எழுதப்படும். யோகத்தின் செய்தி உலக முழுவதும் சூழும். அது மனிதனுடைய சகோதரத்துவத்தை நிலைநிறுத்த உதவும்; மனிதகுலம் நேரடியாக உணர்ந்தறியும் ஒரே பிதா என்பதின் அடிப்படையில் ஏற்படும் ஒற்றுமையே அது.

என் மகனே யோகானந்தா, ஸ்ரீ யுக்தேஸ்வர் தொடர்ந்தார், நீ அந்தச் செய்தியைப் பரப்புவதிலும் அப்புனித வாழ்க்கையை எழுதுவதிலும் உன் பங்கைச் செய்யவேண்டும்.

1895 ல் லாஹிரி மகாசயர் மறைந்து ஐம்பது வருடங்கள், 1945 ல் முடிந்தபொழுது இப்புத்தகம் முடிவுற்றது. 1945 ஆவது வருடம் புது யுகத்தையும் கூட– புரட்சிகரமான அணுசக்தி யுகத்தை வரவேற்ற யதேச்சையான சம்பவத்தைக் கண்டு என்னால் திகைக்காமலிருக்க முடியவில்லை. எல்லாச் சிந்தனையாளர்களின் மனமும் என்றுமில்லாத வகையில் சமாதானம், சகோதரத்துவம் ஆகிய

அவசரமான பிரச்சனைகளை நோக்கித் திரும்புகிறது; இல்லாவிடில், மூர்க்கச்சக்தியின் இடையறாத உபயோகமானது பிரச்சனைகளுடன் சேர்த்து எல்லா மனிதர்களையுமே அழித்து விடும்.

மனித குலத்தின் ஆக்கப் பணிகள் காலத்தினாலோ அல்லது குண்டு வீச்சினாலோ சுவடே இன்றி மறைந்தாலும் பகலவன் தன் பாதையினின்றும் விலகுவதில்லை; விண் மீன்களும் மாற்றம் எதுவுமில்லாத தங்கள் காவலைத் தொடரும். பிரபஞ்சத்தின் விதிமுறையை நிறுத்தவோ அல்லது மாற்றவோ முடியாது. மேலும் மனிதன் தன்னை அதனுடன் இணக்கமாக ஈடுபடுத்திக் கொள்வதுதான் நல்லது. பிரபஞ்சம் வலிமைக்கு விரோதமாக இருக்கும் பொழுது, சூரியன் ஆகாயத்தில் யுத்தத்தை புரியாமல் சரியான சமயத்தில் அஸ்தமித்து, ஓய்வுபெற்று விண்மீன்களுக்கு அவைகளின் சிறு ஆட்சிக்காக விட்டுக் கொடுக்கும் பொழுது, நம் கவசமணிந்த முட்டியைக் காட்டி என்ன பிரயோசனம்? அதனால் ஏதாவது அமைதிகிட்டுமா? நல்லெண்ணம்தான் இப்பேரண்டத்தைப் பிணைத்து வைத்திருக்கிறதேயொழிய கொடூரம் இல்லை; அமைதியுள்ள மனித குலம்தான் வெற்றியின் அளவற்ற பலன்களை, ரத்தம் சிந்திய மண்ணில் பயிரிடப்பட்ட எந்தப் பொருளையும் விட அதிக இனிமையான ருசியுடையதாகக் கண்டறியும்.

பலனளிக்கக் கூடிய சர்வதேசச் சங்கம் என்பது, மனித இதயங்களின் இயல்பான பெயரில்லாத

சங்கமமேயாகும். இவ்வுலகின் துன்பங்களைத் துடைப்பதற்கு வேண்டிய பரந்த இரக்கமும் பகுத்துணர்கின்ற ஆழ்ந்த நோக்கும் மனித வேற்றுமைகளை வெறும் அறிவுப்பூர்வமாக எண்ணிப்பார்ப்பதால் ஏற்படாது; ஆனால் மனிதனின் ஆழ்ந்த ஐக்கிய ஞானத்திலிருந்துகடவுளிடம் கொண்ட உறவினால் ஏற்படும். உலகின் உயர்ந்த லட்சியமாகிய சகோதரத்துவத்தின் மூலம் அமைதிஎன்பதன் நிறைவேற்றத்தை நோக்கி யோகம், (இறைவனுடன் தனிப்பட்ட முறையில் தொடர்பு கொள்ளச் செய்யும் விஞ்ஞானம்) காலக்கிரமத்தில் எல்லா நாடுகளிலுமுள்ள எல்லா மனிதர்களிடத்தும் பரவட்டும்.

பாரதம் மற்ற எந்த நாட்டையும் விட மிகப் பழமையான நாகரிகத்தைப் பெற்றிருந்தாலும், இன்றுவரை அவள் பிழைத்துள்ள வித்தையானது தற்செயலான விபத்தினால் ஏற்பட்டதல்ல, ஆனால் ஒவ்வொரு தலைமுறையிலும் தன் சிறந்த ஞானிகளின் மூலம் என் றென்றும் அழிவற்ற மெய்ப் பொருட்களுக்குப் பாரதம் அர்ப்பணித்த பக்தியின் விளைவே என்பதை சில சரித்தர வல்லுநர்கள் கவனித்திருக்கின்றனர். யுகயுகாந்திரமாக மாறுதலில்லாமல் தொடர்ந்துவந்து, (வெற்று அறிஞர்கள் எவ்வளவு காலமாக என்பதை உண்மையாக நமக்குக் கூறமுடியுமா?) காலத்தின் சவாலுக்கு எந்த தேசத்தையும் விட பாரதம் மிகத் தகுந்த முறையில் பதிலளித்து வந்திருக்கிறது.

கடவுளிடம் ஆபிரகாமின் கோரிக்கை[3] என்னும் பைபிள் கதையில், சோதோம் என்னும் நகரத்தில் பத்து நீதிமான்கள் காணப்பட்டால் அந்நகரம் காப்பாற்றப்பட வேண்டும் என்றபொழுது, பத்து நீதிமான்கள் நிமித்தம் நான் அந்நகரத்தை அழிக்க மாட்டேன், என்ற தெய்வீக பதில், பாரதம் மறக்கப்படுவதிலிருந்து தப்பித்து நிற்கும் தன்மையில் ஒரு புது அர்த்தத்தைப் பெறுகிறது. ஒரு சமயத்தில் பாரதத்தின் சமகாலத்தவைகளாயிருந்த, மிகுந்த பலமும் போர்க்கலையில் மிகுந்த திறமும் கொண்டிருந்த பெரிய சாம்ராஜ்யங்களான எகிப்து, பாபிலோனியா, கிரேக்கம் மற்றும் ரோம் ஆகிய பேரரசுகளெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டன.

இறைவனுடைய பதில், ஒரு நாடு அதன் லோகாயதமான சாதனைகளினால் வாழவில்லை; உயர்ந்த மனித மாணிக்கங்களினால்தான் என்பதைத் தெளிவாகத் தெரிவிக்கிறது.

அரைப்பாகம் முடிவதற்குள்ளேயே இருமுறை குருதியில் குளித்துவிட்ட இந்த இருபதாவது நூற்றாண்டில் அத்தெய்வீகச் சொற்கள் திரும்பவும் கேட்கப்படட்டும். லஞ்சத்தால் விலைக்கு வாங்க முடியாத அந்த நீதிபதியின் கண்களுக்கு உயர்ந்தவர்கள் என்று தோன்றும் பத்து மனிதர்களைப் பிறப்பிக்கக் கூடிய எந்த நாடும் அழிவைக் காணாது.

இம்மாதிரியான தூண்டுதல்களுக்கு செவிமடுத்து, காலத்தின் ஆயிரக்கணக்கான தந்திரங்களுக்கு எதிராக

பாரதம், தான் விவேகமற்றதில்லை என்பதை நிரூபித்துக் காட்டியுள்ளது. ஒவ்வொரு நூற்றாண்டிலும் தன்னை உணர்ந்த மகான்கள் பாரத மண்ணைப் பவித்திரமாக்கி இருக்கிறார்கள். நவீன கால கிறிஸ்துவைப் போன்ற மகான்களாகிய லாஹிரி மகாசயர், ஸ்ரீ யுக்தேஸ்வர் ஆகியோர், மனிதனின் மகிழ்ச்சிக்கும் ஒரு நாட்டின் நீண்ட ஆயுளுக்கும் ஈசனை உணரும் விஞ்ஞானமாகிய யோகத்தின் அறிவு மிக அவசியமானது என்பதைப் பறைசாற்றத் தோன்றுகின்றனர்.

லாஹிரி மகாசயரின் வாழ்க்கையைப் பற்றியும், யாவருக்கும் பொதுவான அவருடைய கோட்பாடுகளைப் பற்றியும் மிகக் குறைவான விவரங்கள் தாம் அச்சில்[4] வெளியாகி உள்ளன. முப்பது வருடங்களாக பாரதம், அமெரிக்கா, ஐரோப்பா ஆகிய நாடுகளில், முக்தி அளிக்கும் அவருடைய யோக உபதேசத்தில் ஆழ்ந்த, உண்மையான ஆர்வம் உள்ளதைக் கண்டிருக்கிறேன். அவர் முன்பே கூறியபடி எழுத்தில் அம்மகானின் வாழ்க்கைச் சரித்திரம் இப்போது மேலை நாடுகளில் அவசியமாகிறது. ஏனெனில் அங்கு தலைசிறந்த நவீனகால யோகியரின் வாழ்க்கையைப் பற்றி மிகக் குறைவாகவே அறிந்துள்ளனர்.

லாஹிரி மகாசயர் புராதனமான வம்சாவளியைக் கொண்ட பக்தி சிரத்தையுடன் கூடிய ஓர் அந்தணர் குடும்பத்தில் 1828 ஆம் வருடம் செப்டம்பர் மாதம் முப்பதாம் தேதி பிறந்தார். வங்காளத்தில் கிருஷ்ணா நகருக்கு அருகிலிருக்கும் நதியா ஜில்லாவிலுள்ள குர்ணி

என்ற கிராமம் தான் அவர் பிறந்த இடமாகும். அவர் கண்ணியம் வாய்ந்த கௌர் மோகன் லாஹிரியின் இரண்டாவது மனைவியான (அவரது முதல் மனைவி மூன்று புத்திரர்களைப் பெற்றெடுத்த பிறகு ஒரு யாத்திரையின் போது இறந்து விட்டார்) ஸ்ரீமதி முக்தகாஷி என்பவரின் ஒரே மகனாவார். அவர் குழந்தையாயிருந்த பொழுதே அவரது தாயார் காலமாகி விட்டார். அவர் யோகிகளுக்கெல்லாம் அரசன் என்று சாத்திரங்களில் பெயரளிக்கப்பட்டிருக்கும் சிவபிரானின் தீவிர பக்தை என்று வெளிப்படும் உண்மை ஒன்றைத் தவிர அவரைப் பற்றி வேறு எதுவும் தெரியவில்லை.

சியாமா சரண் லாஹிரி என்ற முழுப் பெயர் கொண்ட அந்தப் பாலகன் தன் பால்ய காலத்தைக் குர்ணி கிராமத்திலுள்ள தன் மூதாதையர்களின் வீட்டில் கழித்தான். மூன்று அல்லது நான்கு வயதாயிருக்கும் பொழுதே அவன் தன் தலையைத் தவிர உடல் முழுவதையும் மணலின் அடியில் மறைத்து ஒரு குறிப்பிட்ட யோகாசனத்தில் அமர்ந்தவாறு அடிக்கடி காணப்பட்டான்.

1833 ஆம் வருடம் குளிர்காலத்தில் ஜலங்கி ஆறு தன் போக்கை மாற்றிக் கொண்டு கங்கையின் ஆழங்களில் மறைந்த பொழுது அதன் அருகிலிருந்த லாஹிரி குடும்பச் சொத்து அழிக்கப்பட்டுவிட்டது. லாஹிரி குடும்பத்தினரால் நிறுவப்பட்ட சிவன் கோவில்களில் ஒன்றும் அவர்களுடைய குடும்ப வீட்டுடன் நதியில் மூழ்கிவிட்டது. ஒரு பக்தர்

சிவபெருமானின் கற்சிலையைச் சுழன்றோடும் நதியிலிருந்து காப்பாற்றி, இப்பொழுது குர்ணி சிவமனை என்று பிரசித்தி பெற்றிருக்கும் புதிய கோவிலில் வைத்தார்.

கௌர் மோகன் லாஹிரியும் அவர் குடும்பமும் குர்ணியை விட்டுக் காசிவாசிகள் ஆனார்கள். அங்கு உடனேயே தந்தையார் ஒரு சிவன் கோவிலைக் கட்டுவித்தார். அவர் தனது குடும்பத்தை வேத நியதியின்படி நடத்தி, செய்ய வேண்டிய பூஜை முறைகளையும் தான தருமங்களையும் சாத்திரங்கள் ஓதுதலையும் தவறாது பின்பற்றி வந்தார். நியாயமானவரும் திறந்த மனதுடையவருமான அவர் நவீன எண்ணப் போக்குகளின் அனுகூலங்களை அலட்சியம் செய்யவில்லை.

சிறுவனான லாஹிரி, காசி கல்விக் குழுக்களில் இந்தியும், உருதுவும் பயின்றான்; ஜய் நாராயண் கோஷால் என்பவர் நடத்திய ஒரு பள்ளிக்கூடத்தில் சேர்ந்து சமஸ்கிருதம், வங்காளி, ஃபிரஞ்சு மற்றும் ஆங்கிலம் முதலிய மொழிகளைக் கற்றான். வேதங்களை ஆழ்ந்து கற்றுணர்வதில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு, அந்த இளம் யோகி, நாகபட்டர் என்னும் பெயர் கொண்ட மகாராஷ்டிரப் பண்டிதர் உட்பட கற்றுணர்ந்த அந்தணர்களின் சாத்திரச் சர்ச்சைகளை ஆவலுடன் கேட்டு வந்தான்.

சியாமா சரண், அன்பும் சாந்தமும் தைரியமும் உள்ளவனாகி அவனுடைய தோழர்கள் எல்லோராலும்

விரும்பப்பட்ட இளைஞனாகத் திகழ்ந்தான். சரியான ஆகிருதி, ஆரோக்கியம் மற்றும் வலிமையான தேகத்துடன் நீச்சல் மற்றும் உடல் திறமையைக் கொண்ட பல சாகசப் பயிற்சிகளில் சிறந்து விளங்கினான்.

1846ல் சியாமா சரண் லாஹிரி, ஸ்ரீ தேவ நாராயண் ஸன்யால் என்பவரின் மகளான ஸ்ரீமதி காசிமணியுடன் திருமணம் செய்விக்கப்பட்டார். ஒரு பாரதீய குடும்பப்பெண்ணுக்கு எடுத்துக் காட்டாகக் காசிமணி, தன் வீட்டைப் பராமரிப்பது, இல்லறத்தாரின் கடமையாகிய விருந்தினர்களுக்கு சேவை செய்வது, மற்றும் ஏழைகளுக்கு உதவுவது ஆகிய கடமைகளைச் செவ்வனே மகிழ்ச்சியுடன் செய்து வந்தார். புண்ணிய சீலர்களான தின்கௌரி, துகௌரி என்ற இரு புத்திரர்களும், இரு புத்திரிகளும் இத்தம்பதியினருக்குப் பிறந்தனர். 1851ல் தன் இருபத்து மூன்றாவது வயதில் அவர் ஆங்கில அரசாங்கத்தில் இராணுவப் பொறியியல் இலாகாவில் கணக்கராக வேலைக்கு அமர்ந்தார். அவருடைய பணிக்காலத்தில் அவர் பல பதவி உயர்வுகளைப் பெற்றார். இப்படி அவர் கடவுளின் அருளுக்குப் பாத்திரமான மகானாக மட்டும் இல்லாமல், இவ்வுலகத்தின் சிறிய மானிட நாடகத்திலும் ஓர் அலுவலகப் பணியாளர் என்ற தன் எளிமையான பாத்திரத்தை ஏற்று வெற்றியுடனேயே செய்து முடித்தார்.

பல்வேறு சமயங்களில் பொறியியல் இலாகா, லாஹிரி மகாசயரை காசிபூர், மிர்ஜாபூர், நைனிதால்,

தானாபூர், காசி ஆகிய இடங்களிலிருந்த அதனுடைய அலுவலகங்களுக்கு மாற்றியது. அவருடைய தந்தையின் மரணத்திற்குப் பிறகு அந்த இளைஞன் அவர்களுடைய முழுக் குடும்பத்திற்கும் பொறுப்பேற்றுக் கொண்டான். காசியில் ஒரு தனித்த குடியிருப்பான கருடேஸ்வர் மொஹல்லா பகுதியில் அவர்களுக்காக ஒரு வீட்டை வாங்கினார்.

அவருடைய முப்பத்து மூன்றாவது வயதில், தான் இப்பூமியில் வந்துதித்த நோக்கம் நிறைவேறி விட்டதை லாஹிரி மகாசயர்[5] உணர்ந்தார். இமயச் சாரலில் ராணிகேத்துக்கு அருகில் அவர் தன் பூஜ்ய குருவாகிய பாபாஜியை சந்தித்து அவரால் கிரியா யோக தீட்சை அருளப்பெற்றார்.

இந்த மங்களகரமான சம்பவம் லாஹிரி மகாசயருக்கு மட்டும் ஏற்படவில்லை; அது, மொத்த மனித குலத்திற்கே ஓர் அதிர்ஷ்ட வேளையாகும். தொலைந்து போயிருந்த அல்லது நெடுங்காலமாக மறைந்து போயிருந்த மிக உயர்ந்த யோகக் கலை மறுபடியும் வெளிச்சத்திற்குக் கொண்டு வரப்பட்டது.

புராணக் கதையில் இப்பூவுலகில் வறட்சியால் தவித்த பக்தனானப் பகீதரனுக்கு வானுலகத்திலிருந்து இறங்கி தெய்வீக அருளாகப் பொழிந்த கங்கையைப்[6] போல், 1861ல் தெய்வீக நதியாகிய கிரியா யோகம் இமயத்தின் ரகசியக் காப்புகளிலிருந்து மனிதர்களின் கறையுற்ற வசிப்பிடங்களுக்குப் பாயத் தொடங்கியது.



துவாரஹாட்-க்கு அருகில் இமயமலை அடிவாரக் குன்றுகளில் யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா ஆசிரமம் மற்றும் ஏகாந்த மையம். அருகிலிருக்கும் மலைகளில் மகாவதார பாபாஜி சிறிது காலம் தங்கியிருந்த குகை உள்ளது. இங்கு 1861-ல் அவர் லாஹிரி மகாசயருக்கு கிரியா யோகத்தை வழங்கியதன் மூலம், இழக்கப்பட்டுவிட்டிருந்த புராதன ஆன்மீக விஞ்ஞானத்தை நவீன உலகிற்காக புத்துயிரூட்டினார் (பார்க்க அத்தியாயம் 34).



ஸ்ரீ ஸ்ரீ லாஹிரி மகாசயர்

"நான் ஆன்மா. கண்ணுக்குப் புலனாகாமல் எங்கும் வியாபித் துள்ளதை உன் கேமிரா பிரதிபலிலிக்க முடியுமா?டு பலமுறை வெற்றி கிட்டாமல் படங்கள் எடுத்து அவற்றில் லாஹிரி மகாசயரின் உருவம் பதிவாகா மலிலிருந்த

பிறகு, இறுதியாக யோகாவதாரர் தன் ஸுசரீரக் கோயிலைடு போட்டோ எடுப் பதற்கு அனுமதித்தார். ஸுஅம் மகான்

---

1 யோவான் 11:1-4 (பைபிள்).

2 காலராவினால் பீடிக்கப்பட்டவன் பெரும்பாலும் இறக்கும் தருவாய் வரை அறிவுடனும், முழு உணர்வுடனும் இருக்கிறான்.

3 ஆதியாகமம் 18:23-32 (பைபிள்).

4 1941ல் வங்காளியில் ஸ்ரீ ஸ்ரீ சியாமா சரண் லாஹிரி மகாசயர் என்ற தலைப்பில் ஸ்வாமி சத்யானந்தரால் எழுதப்பட்ட ஒரு சிறு சரிதை பதிப்பு வெளிவந்தது. அதன் பக்கங்களிலிருந்து சில பாகங்களை எடுத்து லாஹிரி மகாசயரைப் பற்றிய இப்பகுதிக்கு மொழி பெயர்த்துள்ளேன்.

5 மகாசயர் என்னும் சமயத் தொடர்பான சமஸ்கிருத பட்டப்பெயர், விசாலமனதுடையவர் எனப் பொருள்படும்.

6 இந்துக்களின் மிகப் புனித நதியான அன்னை கங்கையின் நீரானது இமயத்தின் நிரந்தரமான பனிக்கட்டிகள் மற்றும் மௌனங்களின் மத்தியிலிருக்கும் ஒரு பனிக்குகையிலிருந்து உற்பத்தியாகிறது. எத்தனையோ நூற்றாண்டுகளாக ஆயிரக்கணக்கான மகான்கள் கங்கையின் அருகிலேயே இருந்து ஆனந்தமடைந்து, அதன் கரையோரங்களிலே ஓர் அருளொளியை அவர்கள் விட்டுச் சென்றுள்ளர்கள். (பார்க்க பக்கம் 297 அடிக்குறிப்பு.)

கங்கை நதியின் ஓர் அசாதாரணமான, ஒரு வேளை, தனித்தன்மையான குணம் அதன் மாசுபடாத தன்மைதான். மாற்றம் எதுவுமில்லாத அதன் தூய்மையில் பாக்டீரியா வசிப்பதில்லை. பல லட்சக்கணக்கான இந்துக்கள் அதன் நீரைக் குளிப்பதற்கும் குடிப்பதற்கும் எவ்விதத் தீங்கும் இன்றி உபயோகப்படுத்தி வருகிறார்கள். இந்த உண்மை, நவீன விஞ்ஞானிகளை வியப்பிலாழ்த்துகிறது. அவர்களில் ஒருவரான டாக்டர் ஜான் ஹாவர்டு நார்தராப், 1946ல் இரசாயனத்தில் நோபல் பரிசு பெற்றவர்களில் ஒருவர், சமீபத்தில் கூறியதாவது; கங்கை நதி மிக அசுத்தமாக்கப்பட்டிருக்கிறது என்பதை நாம் அறிவோம். இருந்த போதிலும் இந்தியர்கள் அதிலிருந்து குடிக்கிறார்கள், அதில் நீந்துகிறார்கள், அதனால் அவர்கள் தெரியும்படியான எந்த பாதிப்பும் அடையவில்லையே! அவர் நம்பிக்கையுடன் தொடர்ந்தார்; ஒருகால் பாக்டீரியோஃபேஜ் (பாக்டீரியாவை அழிக்கும் வைரஸ்) இந்த நதியைப் பரிசுத்தமாக்கிவிடுகிறது போலும்.

வேதங்கள், இயற்கையின் காட்சிகள் யாவற்றையும் உயர்வாகவே எண்ண வைக்கின்றன. அஸிஸியின் புனித ஃபிரான்சிஸ், இவ்வளவு உபயோகமுள்ளதாகவும், எளியதாகவும், தூய்மையாகவும், விலைமதிப்பற்றதாகவும் உள்ள நம் சகோதரியான நீரை அருளிய இறைவனுக்கு மங்களமுண்டாகட்டும், என்று கூறியதை பக்தி சிரத்தையுள்ள ஓர் இந்து நன்கு புரிந்து கொள்வான்.

அத்தியாயம் 33

# நவ பாரதத்தின் மகாவதார பாபாஜி

பத்ரிநாராயணுக்கருகில் வடக்கு இமயமலையின் செங்குத்தானப் பாறைகள் லாஹிரி மகாசயரின் குருவான பாபாஜி வாழும் பேற்றை இன்னும் பெற்றிருக்கின்றன. தனிமையில் வாழும் அந்த மகான் தன் ஸ்தூல ரூபத்தைப் பல நூற்றாண்டுகளாக, ஒருக்கால் பல்லாயிரம் ஆண்டுகளாகவோ வைத்துக் கொண்டிருக்கிறார். மரணமற்ற பாபாஜி ஓர் அவதாரமாவார். இந்த சமஸ்கிருதச் சொல் இறங்கிவருதல் எனப் பொருள்படும் அதன் மூலச் சொற்கள் அவ, கீழே த்ரி, செல்லுதல். இந்து சமய நூல்களில் அவதாரம் எனில் தெய்வம் தேகத்தைத் தாங்கி இறங்கிவருதல் என்பதாம்.

பாபாஜியின் ஆன்மீக நிலை மனிதனின் அறிவிற்கு அப்பாற்பட்டது, ஸ்ரீ யுக்தேஸ்வர் எனக்கு விளக்கினார். மனிதனின் குறுகிய பார்வை எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட நட்சத்திரமாகிய அவரை ஊடுருவி பார்க்க முடியாது. அந்த அவதாரம் அடைந்துள்ள நிலையை ஒருவன் ஊகிக்க முயல்வது கூட வீண்தான். அது கற்பனைக்கு அப்பாற்பட்டது.

உபநிஷதங்கள் ஆன்மீக முன்னேற்றத்தின் ஒவ்வொரு நிலையையும் நுட்பமாகப் பிரித்து

வகைப்படுத்தி இருக்கின்றன. ஒரு சித்தர் (பூரணத்துவம் அடைந்தவர்) என்பவர் ஜீவன் முக்தர் (வாழும் பொழுதே முக்தியடைந்தவர்) என்ற நிலையிலிருந்து பராமுக்தர் (‘தலையாய முக்திமரணத்தின் மீது முழு ஆதிக்கம்) நிலைக்கு முன்னேறியவர். இந்த இரண்டாவது நிலையிலுள்ளவர் மாயையின் வலையிலிருந்தும் அதனுடைய பிறவிச் சுழற்சியிலிருந்தும் முழுவதுமாக தப்பி விட்டவராவார். ஆதலால் பராமுக்தர் அரிதாகவே ஸ்தூல தேகத்திற்குத் திரும்புகிறார். ஒருவேளை அப்படித் திரும்பினால் பூவுலகிற்கு வானுலக அருளின் சாதனமாக தெய்வீக நியமனம் பெற்ற ஓர் அவதாரமாகிறார். ஓர் அவதார புருஷர் உலக நடப்பிற்கு உட்பட்டவரல்லர். ஒளி பிம்பமாகத் தோன்றும் அவரது பரிசுத்தமான தேகம் இயற்கைக்கு எவ்வகையிலும் கடன்படுவதிலிருந்து விடுதலை பெற்றுள்ளது.

சாதாரணப் பார்வை ஓர் அவதாரத்தின் உருவத்தில் எவ்வித அசாதாரணத் தன்மையையும் காண்பதில்லை, ஆனால் சில வேளைகளில், அதன் நிழலும் விழுவதில்லை. தரை மீது எந்த அடிச்சுவட்டையும் ஏற்படுத்துவதில்லை. இவைகள் இருளிலிருந்தும் உலகத்தளையிலிருந்தும் உள் விடுதலையைப் பெற்றதற்கான வெளி அடையாள நிரூபணங்களாகும். பிறப்பு, இறப்பு ஆகிய சார்புகளின் பின்னே உள்ள உண்மையை அவரைப் போன்ற இறைமனிதன் மட்டுமே அறிகிறார்.

மிகத் தவறாக உணர்ந்து கொள்ளப்பட்ட உமர்

கய்யாம், ரூபையாத் என்ற அவருடைய அமரகாவியத்தில் இந்த முக்தியடைந்த மனிதனைப் பற்றிப் பாடுகிறார்;

ஆ, என்றும் குன்றுதலறியா என் பேரின்ப நிலா,
நின்று தோன்றித் திரும்பத் தோன்றி நிற்கும் தேவ நிலா
என்றும் இனித் தோன்றித் தேடித் தேடித் திரியும் வெண்ணிலா
எந்தனை இந்த நந்தவனத்தில் வீணே![1]

என்றும் குன்றுதலறியா என் பேரின்ப நிலா இறைவனேயாகும். அவன் என்றுமுள்ள வடமீன், என்றும் காலமயக்கம் இல்லாதவன். நின்று தோன்றித் திரும்பத் தோன்றி நிற்கும் தேவ நிலா என்பது குறித்த காலத்தில் திரும்ப நிகழ்தல் என்னும் விதிக்கு கட்டுண்ட வெளிப் பிரபஞ்சமே. அப்பாரசீக மகான் ஆத்மஅனுபூதியின் மூலம் இப்பூவுலகிற்கு இயற்கையின் நந்தவனம் அல்லது மாயைக்கு கட்டாயம் திரும்பி வருதலிலிருந்து தன்னை என்றென்றும் விடுவித்துக் கொண்டு விட்டார். என்றும் இனித்தோன்றித் தேடித் தேடித் திரியும் வெண்ணிலா எந்தனைவீணே! முழுமையாக விடுப்பட்ட ஒன்றை வியப்புற்ற பிரபஞ்சமே தேடி ஏமாறியது!

கிறிஸ்து தனது சுதந்திரத்தை வேறு விதமாக வெளியிடுகிறார். எழுத்தன் ஒருவன் வந்து, போதகரே, நீர் எங்கே போனாலும் உம்மைப் பின்பற்றி வருவேன் என்றான். அதற்கு இயேசு, நரிகளுக்குக் குழிகளும் ஆகாயத்துப் பறவைகளுக்குக் கூடுகளும் உண்டு, மனுஷகுமாரனுக்கோ தலை சாய்க்க இடமில்லை என்றார்.![2]

எங்கும் நிறையும் தன்மையினால் பரவெளியில்

உலவும் கிறிஸ்துவை எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளில் அன்றி வேறு எங்கு பின் தொடர முடியும்?

கிருஷ்ணன், ராமன், புத்தர், பதஞ்சலி ஆகியோர் பாரதத்தின் தொன்மையான அவதாரங்கள். தென்னிந்திய அவதாரமான அகத்தியரைப் பற்றி மிகுந்த அளவில் தமிழில் கவிதை இலக்கியம் உருவாகி உள்ளது. அவர் கிறிஸ்துவ சகாப்தத்திற்கு முன்னும் பின்னுமாகிய நூற்றாண்டுகளில் அனேக அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார். மேலும் இன்றுவரை அவர் ஸ்தூல உருவத்துடன் இருந்து வருவதாகப் புகழப்படுகிறார்.

பாரதத்தில் பாபாஜியின் நோக்கம், தீர்க்கதரிசிகளுக்கு அவர்களுடைய சிறப்புக் காரியங்களை நடத்த உதவுவதாகும். எனவே அவர் சமயநூல்களில் வகைப்படுத்தியுள்ள மகாவதாரம் என்ற பிரிவிற்குப் பொருந்தியவராகிறார். சன்னியாச பரம்பரையைத் திருத்தியமைத்த ஆதிசங்கரருக்கும்[3] புகழ்பெற்ற மத்திய கால மகானான கபீருக்கும் பாபாஜி யோக தீட்சையை அளித்ததாகக் கூறியுள்ளார். நமக்குத் தெரிந்த வரையில், கிரியா கலையை மறுமலர்ச்சி பெறச் செய்த லாஹிரி மகாசயர், பாபாஜியின் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முக்கிய சீடராவார்.

பாபாஜி கிறிஸ்துவுடன் என்றும் தொடர்புள்ளவர்; அவர்களிருவரும் சேர்ந்து மீட்பளிக்கும் எண்ண அதிர்வுகளை அனுப்பிய வண்ணம் உள்ளனர். மேலும் இந்த யுகத்திற்கான முக்தியளிக்கும் ஆன்மீக

யுக்தியையும் திட்டமிட்டுள்ளார்கள். பூரண அனுபூதி பெற்ற இவ்விரு குருமார்களின்உடலுடன் ஒருவரும், உடலின்றி ஒருவரும்பணியானது, யுத்தங்கள், இனத் துவேஷம், மத உட்பிரிவுகள், எறிந்தவனையே திரும்பத் தாக்கும் (ஆர்ர்ம்ங்ழ்ஹய்ஞ்) லோகாயதத் தீமைகள் ஆகியவற்றைத் தவிர்ப்பதற்காக உலக நாடுகளை ஊக்குவித்தலாகும். பாபாஜி நவீன காலத்தின் போக்கை, முக்கியமாக மேலை நாகரிகத்தின் செல்வாக்கையும் சிக்கல்களையும் நன்கு அறிந்தவர். மேலும் ஆத்ம விடுதலைக்கான யோகத்தை மேலை மற்றும் கீழை நாடுகளில் சமமாகப் பரப்ப வேண்டிய அவசியத்தை உணர்கிறார்.

வரலாற்று ஏடுகளில் பாபாஜியை பற்றிய குறிப்புகள் எதுவும் இல்லையே என்பது நம்மை ஆச்சரியப்பட வைக்க வேண்டியதில்லை. அந்த மகான் எந்த நூற்றாண்டிலும் வெளிப்படையாகத் தென்பட்டதில்லை; அவருடைய சகாப்தங்களுக்கேற்ற திட்டங்களில் தவறாகக் கணிக்கப்படும் விளம்பர வெளிச்சங்களுக்கு இடமில்லை. தனித்த ஆனால் மௌன சக்தியான படைப்பவனைப் போலவே பாபாஜி எளிய மறைவிலேயே செயல்படுகிறார்.

கிறிஸ்து மற்றும் கிருஷ்ணனைப் போன்ற பெரிய தீர்க்கதரிசிகள் ஒரு திட்டவட்டமான, பிரமிக்கத்தக்க குறிக்கோளுக்காக இப்பூவுலகிற்கு வருகிறார்கள்; அது நிறைவேறியவுடனே புறப்பட்டும் விடுகிறார்கள். பாபாஜியைப் போன்ற மற்ற அவதாரங்கள், ஏதாவதொரு

ஒப்பற்ற வரலாற்று நிகழ்ச்சியை விட பல நூற்றாண்டுகளாக மனிதனின் மெதுவான பரிணாம வளர்ச்சியில் அதிகமாக அக்கறை காட்டும் வேலையை மேற்கொள்ளுகிறார்கள். அம்மாதிரியான மகான்கள் மக்களின் ஸ்தூல பார்வையிலிருந்து எப்பொழுதும் தங்களை திரையிட்டுக் கொண்டுள்ளனர். மேலும் நினைத்த மாத்திரத்தில் மறைந்து விடும் திறன் பெற்றுள்ளார்கள். இக்காரணங்களினாலும், அவர்கள் பொதுவாக தங்களைப் பற்றி மௌனத்தைக் கடைபிடிக்கும் படி தங்கள் சீடர்களுக்கு உத்தரவிடுவதாலும் ஆன்மீகச் சிகரமாக விளங்கும் பலர் உலகிற்குத் தெரியாமலேயே இருந்து விடுகிறார்கள். நான் இந்தப் பக்கங்களில் பாபாஜியின் வாழ்க்கையைப் பற்றிய வெறும் ஒரு குறிப்பு–மக்களுக்குத் தெரிவிப்பதற்கு ஏற்றது மற்றும் உபயோகமானது என்று அவர் நினைத்த மிகச் சில உண்மைகளை மட்டுமே இங்கு கொடுக்கிறேன்.

ஒரு வரலாற்று நிபுணருக்குப் பிரியமானவைகளான, பாபாஜியின் குடும்பம், பிறந்த இடம் இவைகளை அறுதியிட்டுக் கூறும் எந்த விவரங்களும் கண்டுபிடிக்கப்படவில்லை. பொதுவாக அவர் பேச்சு இந்தியில் இருக்கிறது. ஆனால் அவர் எம்மொழியிலும் சுலபமாக உரையாடுகிறார். பாபாஜி (வணக்கத்திற்குரிய தந்தை) என்ற எளிய பெயரையே அவர் ஏற்றுள்ளார்; லாஹிரி மகாசயரின் சீடர்களால் அவருக்கு அளிக்கப்பட்ட மரியாதையைக் குறிக்கும் பட்டங்கள்:

மகாமுனி பாபாஜி மகராஜ் (உயர்ந்த பேரானந்தப் பெருமான்), மகாயோகி (உயர்ந்த யோகி) மற்றும் த்ரயம்பக் பாபா அல்லது சிவ பாபா (சிவ அவதாரங்களின் பட்டங்கள்) முதலியன. முழுமையாக விடுதலை அடைந்து விட்ட ஒரு மகானின் பரம்பரைப் பெயரைப் பற்றி நமக்குத் தெரியாவிட்டால்தான் என்ன?

பாபாஜியின் பெயரை பக்தியுடன் யார் எப்பொழுது உச்சரித்தாலும் அந்த பக்தன் அக்கணமே அவருடைய ஆன்மீக ஆசியை ஈர்க்கிறான், என்று லாஹிரி மகாசயர் கூறியுள்ளார்.

சிரஞ்சீவித் தன்மை பெற்ற இந்த குரு, அவரது உடலில் வயதைக் குறிக்கும் அடையாளங்களைப் பெறவில்லை. அவர் இருபத்தைந்து வயதிற்கு மேற்படாத இளைஞராகவே தோற்றமளிக்கிறார். சிவந்த நிறமும் நடுத்தர உயரமும் பருமனுமுள்ள பாபாஜியின் எழிலும் வலுவும் கொண்ட தேகம், காணக்கூடிய பிரகாசத்தை வீசுகிறது. அவருடைய கண்கள் கருமையும் சாந்தமும் கருணையும் கொண்டுள்ளன; நீளமான, ஒளிரும் கேசம் தாமிர நிறத்திலுள்ளது. சில சமயங்களில் அவருடைய முகம் லாஹிரி மகாசயருடையதை மிகவும் ஒத்திருக்கிறது. லாஹிரி மகாசயர் தன் வயதான காலத்தில், இளவயதுத் தோற்றத்துடனிருக்கும் பாபாஜியின் தகப்பனார் என்று கூறப்படுமளவிற்கு சில சமயங்களில் இவ்வுருவ ஒற்றுமை மிக ஆச்சரியகரமாக இருந்தது.

மகானாகிய எனது சமஸ்கிருத ஆசிரியர் ஸ்வாமி

கேவலானந்தர் இமாலயத்தில் பாபாஜி[4] யுடன் சில காலம் கழித்திருக்கிறார்.

இணையற்ற அந்த மகான் தன் குழுவுடன் மலைகளில் இடம் விட்டு இடமாகச் சென்று கொண்டிருப்பார், என்று ஸ்வாமி கேவலானந்தர் என்னிடம் கூறினார். அவருடைய சிறு குழு, மிக அதிக முன்னேற்றமடைந்த இரண்டு அமெரிக்க சீடர்களைக் கொண்டுள்ளது. சில காலம் ஓரிடத்தில் தங்கியிருந்த பிறகு சொல்வாராம்: டேரா டண்டா உடாவோ (நம் கூடாரத்தையும் தண்டத்தையும் எடுத்துக் கொள்ளலாம்). அவர் "டண்டா"வை (மூங்கில் தண்டம்) எடுத்துச்செல்வார். அவரது சொற்கள் தன் குழுவுடன் அக்கணமே வேறு இடத்திற்குச் செல்வதற்கான ஒரு குறிப்பு ஆகும். அவர் எப்பொழுதுமே இம்முறையிலான சூட்சுமப் பயணத்தை மேற்கொள்ளுவார் என்பதில்லை. சில சமயங்களில் அவர் கால் நடையாகவே சிகரம் சிகரமாகச் செல்வதுண்டு.

பாபாஜி தான் விரும்பும் பொழுது மட்டுமே மற்றவர்கள் அவரைக் காண்பதோ அல்லது அடையாளம் கண்டுகொள்வதோ சாத்தியம். அவர் தன் வெவ்வேறு பக்தர்களுக்கு சிறு மாறுதல்களுடன் அனேக உருவங்களில் சில சமயங்களில் தாடி, மீசையுடன் சில சமயங்களில் அவை இல்லாமலும் தரிசனம் தந்திருப்பதாக அறிகிறோம். சிதைவு அடைய முடியாத அவரது உடலிற்கு உணவு ஏதும் அவசியமில்லை. ஆதலால் அவர் அரிதாகவே உண்கிறார். சமுதாய

வழக்கத்திற்கேற்ப அவரிடம் வரும் சீடர்களிடமிருந்து எப்பொழுதாவது பழங்களையும், பாலும் நெய்யும் கலந்து சமைத்த அன்னத்தையும் ஏற்றுக் கொள்வதுண்டு.

பாபாஜியின் வாழ்க்கையில் நடந்த இரு அற்புதமான சம்பவங்களைப் பற்றி நான் அறிவேன், கேவலானந்தர் தொடர்ந்தார். ஒரு புனித வேதச் சடங்கிற்காக ஓர் இரவு அவருடைய சீடர்கள் சுடர் விட்டெரியும் பெருந்தீ உள்ள அக்னி குண்டத்தைச் சுற்றி உட்கார்ந்திருந்தனர். குருவானவர் திடீரென்று ஒரு பெரிய கொள்ளிக் கட்டையை எடுத்து அக்னிக்கருகில் அமர்ந்திருந்த ஒரு சீடனின் வெறும் தோளில் லேசாகத் தட்டினார்.

ஐயா, எவ்வளவு கொடூரம்! அங்கிருந்த லாஹிரி மகாசயர் இந்த ஆட்சேபணையை வெளியிட்டார்.

அவனுடைய முந்தைய கர்ம வினைப்படி உன் கண் எதிரிலேயே அவன் எரிந்து சாம்பலாகிப் போவதை நீ பார்க்க வேண்டுமா?

இந்த வார்த்தைகளுடன் பாபாஜி தன் குணப்படுத்தும் கரத்தை உருக்குலைந்திருந்த தன் சீடனின் தோளின் மேல் வைத்தார். வேதனை நிறைந்த மரணத்திலிருந்து உன்னை நான் இன்றிரவு விடுவித்து விட்டேன். இந்நெருப்பினால் உனக்கு நேர்ந்த சிறு துன்பத்தின் மூலமாக கர்மவினையின் விதியானது திருப்திப் படுத்தப்பட்டுவிட்டது.

இன்னொரு சமயத்தில் பாபாஜியின் புனிதமான குழுவில் அன்னியன் ஒருவனின் வரவினால் இடையூறு விளைந்தது. குருவின் கூடாரத்திற்கருகே ஏறுவதற்கரிய

ஒரு பாறையின் விளிம்பின் மீது வியக்கத்தக்கத் திறனுடன் அவன் ஏறிவந்து விட்டான்.

ஐயா, தாங்கள் தான் மகா பாபாஜியாக இருக்க வேண்டும், அம்மனிதனின் முகம் விண்டுரைக்க இயலாத ஒரு பயபக்தியுடன் ஒளிர்ந்தது. செல்வதற்கரிய இச்செங்குத்து மலைப் பாறைகளில் மாதக் கணக்கில் இடைவிடாமல் தங்களைத் தேடிக் கொண்டிருக்கிறேன். தயை செய்து என்னைத் தங்கள் சீடனாக்கிக் கொள்ள மன்றாடுகிறேன்.

மகா குரு பதிலொன்றும் கூறாமலிருக்கவே அம்மனிதன் விளிம்பின் கீழே பாறைகளால் ஓரம் கட்டப்பட்ட பெரிய பிளவைச் சுட்டிக் காட்டினான். நீங்கள் என்னை ஏற்றுக் கொள்ளாவிடில் நான் இந்த மலையிலிருந்து குதித்து விடுவேன். கடவுளை அடைய உங்கள் வழிகாட்டுதலை நான் பெறாவிடில் இனி வாழ்ந்து பயனில்லை.

அப்படியானால் குதி, உன் தற்போதைய வளர்ச்சி நிலையில் நான் உன்னை ஏற்க முடியாது, பாபாஜி எவ்வித உணர்ச்சியும் இல்லாமல் கூறினார்.

அம்மனிதன் உடனேயே அந்தச் செங்குத்தான பாறையைத் தாண்டிக் குதித்து விட்டான். அதிர்ச்சியுற்ற தன் சீடர்களிடம் அந்த அன்னியனின் உடலைக் கொண்டு வரும்படி பாபாஜி கட்டளையிட்டார். அவர்கள் உருக்குலைந்திருந்த அவ்வுடலுடன் திரும்பியவுடன் குருதேவர் தன் கையை இறந்துவிட்ட அம்மனிதனின் மீது வைத்தார். ஆ! அவன் தன் கண்களைத் திறந்து சர்வ

வல்லமை பெற்ற குருவின் முன்னர் தாழ்மையுடன் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினான்.

நீ இப்பொழுது என் சீடனாகத் தயாராக உள்ளாய். உயிர்ப்பிக்கப்பட்ட அந்த சீடனை நோக்கி பாபாஜி அன்பாக முகம் மலர்ந்தார். நீ மிக்க தீரத்துடன் கடுமையான பரீட்சையில்[5] தேறிவிட்டாய். மரணம் உன்னை மறுபடி தீண்டாது; அழிவற்ற எங்கள் குழுவில் இப்பொழுது நீயும் ஒருவன். பிறகு அவர் புறப்படுதலைக் குறிக்கும் வழக்கமான வார்த்தைகளைக் கூறினார், டேரா டண்டா உடாவோ; அக்குழு முழுவதும் அம்மலையிலிருந்து மறைந்து விட்டது.

ஓர் அவதார புருஷர் எங்கும் நிறைந்த பரம்பொருளிலேயே திளைப்பதால் அவருக்கு எந்தத் தொலைவும் அசாத்தியமானதல்ல. எனவே பல நூற்றாண்டுகளாக பாபாஜி தம் ஸ்தூல உடலைத் தாங்கி இருப்பதற்கு ஒரே ஒரு காரணம் தான் உள் நோக்கமாக இருக்கிறது: மனித வர்க்கத்திற்கு அதன் சொந்த சாத்தியக் கூறுகளை ஒரு வலுவான உதாரணத்தினால் எடுத்துக் காண்பிக்கும் விருப்பமாகும். மனிதன் தெய்வீகத்தைத் தேக வடிவில் ஒரு கணநேரமாவது தரிசிக்க அருளப்படாவிட்டால், அவன் மாயையின் பொய்த் தோற்றத்திலேயே உழன்று கொண்டு மரணத்தை வெல்ல இயலாதவன் ஆகிவிடுவான்.

இயேசுவிற்கு முதலிலிருந்தே தன் வாழ்க்கைச் சம்பவங்களின் நிகழ்வு நிரல் தெரிந்தே இருந்தது. அவர் தம் வாழ்க்கையில் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் ஏற்றது

அவருக்காக அல்ல; எந்த கர்ம வினையின் கட்டாயத்தினாலும் அல்ல. ஆனால் சிந்தனையுள்ள மனிதர்களை மேம்படுத்த வேண்டும் என்பதற்காகவேதான். விவிலிய போதனையாளர் நால்வர்மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் பின்னால் வரும் தலைமுறைகளுக்காகவே விவரிக்க முடியாத அந்த நாடகத்தை ஏட்டில் பதித்தார்கள்.

பாபாஜிக்கும்கூட இறந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் ஆகிய சார்புகள் கிடையா. ஆரம்பத்திலிருந்தே அவருடைய வாழ்வின் கட்டங்களையும் அவர் அறிந்திருந்தார். மக்களின் வரையறைக்குட்பட்ட அறிவிற்கேற்றபடி தன்னை அமைத்துக் கொண்டு, ஒன்று அல்லது பல சாட்சிகளின் முன்னிலையில் அவர் தம் தெய்வீக வாழ்வின் பல அங்கங்களை நிகழ்த்தி இருக்கிறார். அந்த முறையில்தான், சரீரத்தின் அழிவற்ற தன்மையின் சாத்தியத்தைத் தான் வெளிப்படையாகத் தெரிவிக்க வேண்டிய தருணம் வந்துவிட்டதாக பாபாஜி கருதியபொழுது லாஹிரி மகாசயரின் சீடர் ஒருவர் அங்கு இருந்தார். உண்மையைத் தேடும் மற்ற இதயங்களை ஊக்குவிக்கவேண்டி, கடைசியாக இது தெரிந்து கொள்ளப்படும் என்று இந்த வாக்குறுதியை அவர் ராம் கோபால் மஜும்தாருக்கு முன்னால் கூறியருளினார். மகான்கள் இயற்கையாகத் தோன்றும் சம்பவங்களின் தொடரில் ஈடுபடுவதும், பேசுவதும் மக்களின் நலனைக் கருதியேதான். கிறிஸ்து கூறியது

போல: பிதாவே... நீர் எப்பொழுதும் எனக்குச் செவி கொடுக்கிறீர் என்று நான் அறிந்திருக்கிறேன்: ஆனாலும் நீர் என்னை அனுப்பினதைச் சூழ்ந்து நிற்கும் ஜனங்கள் விசுவாசிக்கும்படியாக அவர்கள் நிமித்தம் இதைச் சொன்னேன் என்றார்.[6]

தூக்கமற்ற யோகி[7] யான ராம் கோபாலிடம் நான் ரன்பாஜ்பூரில் விஜயம் செய்திருந்த பொழுது, பாபாஜியுடன் அவருக்கு ஏற்பட்ட முதல் சந்திப்பைப் பற்றிய அற்புதமான கதையை விவரித்தார்.

நான் சில சமயங்களில் தனிமையான என் குகையை விட்டு காசியிலுள்ள லாஹிரி மகாசயரின் திருவடிகளில் அமர்வதற்காகச் செல்வதுண்டு, ராம் கோபால் கூறினார். ஒரு நள்ளிரவு நான் சீடர்கள் குழுவில் மௌனமாகத் தியானித்துக் கொண்டிருந்த பொழுது குருதேவர் வியப்பான வேண்டுகோள் ஒன்றை விடுத்தார்.

ராம் கோபால், உடனே தசாஸ்வமேத படித்துறைக்குச் செல், என்றார் அவர்.

நான் அந்தத் தனிமையான இடத்தை விரைவில் சென்றடைந்தேன். நிலவின் ஒளியும் விண்மீன்களின் பிரகாசமும் சேர்ந்து இரவு பளிச்சென்று இருந்தது. நான் சற்று நேரம்வரை மௌனமாகப் பொறுமையுடன் அமர்ந்திருந்த பிறகு என் காலடிக்கு அருகேயிருந்த ஒரு பெரிய கற்பாறை மீது என் கவனம் ஈர்க்கப்பட்டது. பூமிக்கு அடியிலுள்ள ஒரு குகை தெரியும்படியாக அப்பாறை மெதுவாக மேலெழும்பியது. புரிந்து கொள்ளமுடியாத ஏதோ ஒரு வகையினால், அப்பாறை

அந்தரத்தில் நிலையாக நின்றபொழுது பேரழகு வாய்ந்த ஓர் இளம் பெண்ணின் போர்த்திய உருவம் அக்குகைக் குள்ளிருந்து வெளியாகி காற்றில் உயரே எழும்பியது. ஒரு மென்மையான ஒளிவட்டம் தன்னைச் சூழ அம்மாது மெதுவாகக் கீழே இறங்கி என் முன் ஆழ்ந்த பரவச நிலையில் அசைவற்று நின்றார். பிறகு அவர் மெல்ல அசைந்தார். மேலும் இனிமையாகப் பேசலானார்.

நான் மாதாஜி,[8] பாபாஜியின் சகோதரி, நான் அவரையும் லாஹிரி மகாசயரையும் ஒரு மிக முக்கியமான விஷயத்தைப் பற்றி விவாதிக்க வேண்டி இன்றிரவு என் குகைக்கு வரும்படி கேட்டுக் கொண்டிருக்கிறேன், என்றார்.

கங்கை நதி மீது ஒரு தெளிவற்ற ஒளி வேகமாக மிதக்கலாயிற்று; அந்த விசித்திர ஒளி இருண்ட நீரில் பிரதிபலிக்கப்பட்டது. அவ்வொளி அருகில் நெருங்கி வந்து, குருடாக்கும் ஒரு பிரகாசத்துடன் மாதாஜியின் பக்கத்தில் தோன்றிய அக்கணமே லாஹிரி மகாசயரின் உருவமாக மாறியது. அவர் வினயத்துடன் அந்த யோகினியின் அடிபணிந்தார்.

நான் என் திக்பிரமையிலிருந்து விடுபடுவதற்கு முன்னே ஆகாயத்தில் ஒரு மாய ஒளி வட்டமாகத்திரண்டு வருவதைக் கண்டு நான் மேலும் வியப்பிலாழ்ந்தேன். அத்தீச்சுடர் சுழல் வேகமாக இறங்கி எங்கள் குழுவை நெருங்கி தன்னை ஓர் எழில் பெற்ற வாலிப தேகத்தினுள் உருமாற்றிக் கொண்டது. அவர்தான் பாபாஜி என்பதை நான் உடனே புரிந்து கொண்டேன்.

அவர் லாஹிரி மகாசயரைவிட வயதில் மிகக் குறைந்தவராக இருந்தாலும், தன் சீடரைப் போலவே காணப்பட்டார். மேலும் நீண்ட ஒளிபொருந்திய கேசம் கொண்டிருந்தார்.

லாஹிரி மகாசயர், மாதாஜி, நான் ஆகிய எல்லோரும் அந்த மகாகுருவின் பாதங்களில் விழுந்து வணங்கினோம். நான் அவரது தெய்வீக உடலைத் தீண்டியபொழுது கட்புலனாகாத பேரின்பமய மகிமையின் உணர்வு என் உடலின் ஒவ்வோர் இழையையும் புல்லரிக்கச் செய்தது.

அருள் பெற்ற சகோதரியே, நான் என் உருவத்தைத் துறந்து எல்லையற்ற சாகரத்தில் மூழ்கிவிட உத்தேசித்துள்ளேன், என்றார் பாபாஜி.

அன்பார்ந்த குருதேவா, நான் ஏற்கனவே தங்கள் திட்டத்தைக் கண்டு கொண்டேன். நான் இன்றிரவு அதைப் பற்றி உங்களிடம் பேச விழைகிறேன். தாங்கள் தேகத்தை எதற்காக விடவேண்டும்? மகிமை பொருந்திய மாதாஜி அவரை வேண்டியவாறு நோக்கினார்.

என்னுடைய ஆத்ம சாகரத்தில் நான் கண்ணுக்குப் புலப்படும் அல்லது புலப்படாத அலையாயிருப்பதனால் வேறுபாடு யாது?

மாதாஜி விந்தையான சாதுர்யத்துடன் பதிலளித்தார். மரணமற்ற குருவே, அதில் எந்தவித வேறுபாடும் இல்லையெனில் தயவு செய்து தங்கள் உருவத்தை என்றுமே துறக்க வேண்டாம்.[9]

அப்படியே ஆகட்டும், என்றார் பாபாஜி கம்பீரமாக.

நான் என் ஸ்தூல உடலை இனி என்றுமே விட மாட்டேன். இவ்வுலகில் குறைந்த பட்சம் ஒரு சிலருக்காவது அது காணப்படுமாறு இருக்கும். இறைவன் உன் வாய் மூலமாக அவனது விருப்பத்தைத் தெரிவித்துள்ளான்.

நான் மிகுந்த பயபக்தியுடன் இவ்வுயர்ந்த மகான்களின் உரையாடலைச் செவிமடுத்துக் கொண்டிருந்தபொழுது அந்த மகாகுரு கருணை நிரம்பிய பார்வையுடன் என்னிடம் திரும்பினார்.

ராம் கோபால், பயப்படாதே, அவர் கூறினார். இந்த அழியா வாக்குறுதிக் காட்சியில் நீ ஒரு சாட்சியாகும் அருளைப் பெற்றிருக்கிறாய்.

அவருடைய இனிய குரலின் நாதம் மெல்ல அடங்கும் போதே அவருடைய திருவுருவமும் லாஹிரி மகாசயருடையதும் மெல்ல மேலெழும்பி கங்கையின் மேலாகப் பின்னோக்கிச் சென்றன. அவ்விரவின் ஆகாய வெளியில் அவர்கள் மறையும் பொழுது கண்ணைக் கூசச் செய்யும் ஓர் ஒளி வட்டம் அவர்கள் உடலைச் சூழ்ந்திருந்தது. மாதாஜியின் திருவுருவம் குகையை நோக்கி மிதந்து இறங்கியது. ஏதோ கண்ணுக்குத் தெரியாத கைகளினால் இயங்குவது போன்று அந்தப் பாறை அக்குகையின் மேல் மூடிக் கொண்டது.

அளவற்ற ஊக்கமடைந்து, நான் லாஹிரி மகாசயரின் இருப்பிடத்திற்குத் திரும்பினேன். நான் அந்த வைகறை வேளையில் அவர் முன் வணங்கும்பொழுது என் குரு என்னை நோக்கி ஒரு பொருள் பொதிந்த புன்னகை

செய்தார்.

ராம் கோபால், நான் உனக்காக மிக்க மகிழ்ச்சியடைகிறேன். நீ அடிக்கடி என்னிடம் சொல்லியபடி பாபாஜி, மாதாஜி இருவரையும் சந்திக்க வேண்டுமென்ற உன் விருப்பம் கடைசியில் மிக வியக்கத்தக்க வகையில் நிறைவேறியது.

நான் நடு இரவில் அவ்விடம் விட்டுக் கிளம்பியதிலிருந்து லாஹிரி மகாசயர் தன் மேடையிலிருந்து அசையவேயில்லை என்று என் சக சீடர்கள் எனக்கு அறிவித்தார்கள்.

ஒரு சீடர் என்னிடம், நீ தசாஸ்வமேத படித்துறைக்குச் சென்றபிறகு அவர் அழிவற்ற நிலை பற்றி ஓர் அரிய பிரசங்கம் செய்தார், என்று என்னிடம் கூறினார். முற்றுமுணர்ந்த ஒரு மனிதன் ஒரே சமயத்தில் வெவ்வேறு இடங்களில் இரண்டோ அல்லது அதற்கு மேற்பட்ட தேகங்களிலோ தோன்ற முடியும் எனச் சாத்திர செய்யுட்களில் கூறப்பட்டிருக்கும் உண்மையை முதன் முதலாக முழுவதுமாக உணர்ந்து கொண்டேன்.

பின்னர் லாஹிரி மகாசயர் இந்த மண்ணுலகம் சம்பந்தப்பட்ட மறைந்துள்ள தெய்வீகத் திட்டங்களின் இயல் கடந்த பல கருத்துக்களை விளக்கிக் கூறினார். இந்தக் குறிப்பிட்ட உலக காலச் சுழற்சி முடியும்வரை பாபாஜி தனது உடலுடன் இருக்க வேண்டுமென இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். யுகங்கள் வரும், யுகங்கள் போகும்இருப்பினும் இந்த மரணமற்ற

மகான்[10] நூற்றாண்டுகளின் நாடகத்தைப் பார்த்துக் கொண்டு இந்த மண்ணுலக மேடையில் இருப்பார், என்று ராம் கோபால் கூறி முடித்தார்.



1 எட்வர்ட் ஃபிட்ஸ்ஜெரல்டின் ஆங்கில மொழிபெயர்ப்பிலிருந்து

2 மத்தேயு 8:19-20 (பைபிள்).

3 சரித்திர பூர்வமாகத் தெரிந்தபடி கோவிந்த ஜதியைக் குருவாகக் கொண்ட சங்கரர், பாபாஜியிடமிருந்து வாரணாசியில் கிரியா யோகத்தில் தீட்சைப் பெற்றார். பாபாஜி இந்த மகா அத்வைதியுடன் தன் சந்திப்பைப் பற்றிய கதையை லாஹிரி மகாசயருக்கும், ஸ்வாமி கேவலானந்தருக்கும் விவரிக்கும் பொழுது அனேக அற்புதமான விஷயங்களைக் கூறினார்.

4 பாபாஜி (வணக்கத்திற்குரிய தந்தை) என்பது ஒரு பொதுவான பட்டம்; இந்தியாவில் பிரசித்தி பெற்ற அனேக ஆசார்யர்கள் பாபாஜி என்றே அழைக்கப்படுகிறார்கள். இருந்தாலும் அவர்களில் யாரும் லாஹிரி மகாசயரின் குருவான பாபாஜி இல்லை. அந்த மகாவதாரம் இருக்கும் விஷயமே பொதுமக்களுக்கு முதன் முதலாக 1946ல் தான் ஒரு யோகியின் சுயசரிதத்தில் வெளிப்படுத்தப்பட்டது.

5 இப்பரீட்சை கீழ்ப்படிதலைப் பற்றியது. ஆத்ம ஒளிபெற்ற குருதேவர் குதி என்று கூறியவுடன் அம்மனிதன் கீழ்படிந்தான். அவன் தயங்கி இருந்தால், பாபாஜியின் வழிகாட்டுதலின்றி அவன் வாழ்க்கை அர்த்தமற்றது என்ற அவனுடைய உறுதியை பொய்ப்பித்திருப்பான். அவன் தயங்கி இருந்தால், தன் குருவிடம் முழு நம்பிக்கை இல்லை என்பதை வெளிப்படுத்தியிருப்பான். ஆகையால் வன்மையானதாகவும் அசாதாரணமானதாகவும் இருந்தாலும் இப்பரீட்சை அந்தச் சூழ்நிலைக்கு உகந்த ஒன்றேயாகும்.

6 யோவான் 11:41-42 (பைபிள்).

7 தாரகேஷ்வர் கோயிலுக்கு முன்னால் நான் சிரம் தாழ்த்தி வணங்கவில்லை என்பதைக் கண்டு கொண்ட எங்கும் நிறைந்த யோகி (அத்தியாயம் 13).

8 புனிதத் தாய். மாதாஜியும் பல நூற்றாண்டுகளாக வாழ்ந்து வந்திருக்கிறார். அவரும் கிட்டத்தட்ட தன் சகோதரரைப் போலவே ஆத்ம-ஞானத்தில் மிக முன்னேறியுள்ளார். தசாஸ்வமேத படித்துறைக்கருகில் பூமிக்கடியிலுள்ள ஒரு ரகசியக் குகையில் அவர் பேரானந்தத்தில் திளைத்தவாறு இருக்கிறார்.

9 இந்தச் சம்பவம் தேலீஸின் ஒரு கூற்றை ஞாபகப்படுத்துகிறது. அப்பெரிய கிரேக்க தத்துவஞானி பிறப்பிற்கும் இறப்பிற்கும் வித்தியாசம் இல்லை எனப் போதித்தார்.

பின் ஏன் நீங்கள் இறக்கவில்லை? ஒரு விமரிசகன் கேட்டான்.

ஏனெனில் அதனால் எந்த வித்தியாசமும் இல்லையே என்றுதான், தேலீஸ் பதிலளித்தார்.

10 ஒருவன் என் வார்த்தையைக் கைக் கொண்டால் (கிறிஸ்து உணர்வில் இடையறாது இருந்தால்) அவன் என்றென்றைக்கும் மரணத்தைக் காண்பதில்லை. (யோவான் 8:51, பைபிள்).

இச்சொற்களில் இயேசு ஸ்தூல உடலில் அழிவற்ற வாழ்க்கையைக் குறிப்பிடவில்லைமாற்றமின்றி அடைப்பட்டிருத்தலை ஒருவன் பாவிக்குக் கூட வழங்கமாட்டான் எனில் மகான்களுக்கு வழங்குவானா? கிறிஸ்து குறிப்பிடும் ஒளி பெற்ற மனிதன், மரணத்திற்கொப்பான தன் நினைவிழந்த அஞ்ஞானத்திலிருந்து சாசுவத வாழ்க்கைக்கு விழித்தவனாவான். (பார்க்கவும் அத்தியாயம் 43)

மனிதனுடைய இயற்கையான சுபாவம் எங்கும் நிறைந்த உருவமற்ற ஆன்மாவே. கட்டாயத்தால் அல்லது கர்மவினையாலான தேகமானது, அவித்யா அதாவது அஞ்ஞானத்தின் பலனேயாகும். இந்து சமய நூல்கள் கூறுவது யாதெனில் பிறப்பும்,

இறப்பும் மாயையின் வெளிப்பாடுகளாகும். அதாவது பிரபஞ்சத்தின் பொய்த் தோற்றமேயாகும். காலம், இடம் ஆகிய சார்புலகிலேதான் பிறப்பு, இறப்பு ஆகியவைகளுக்குப் பொருளுண்டு.

பாபாஜி ஸ்தூல உடலிற்கோ அல்லது இந்த கிரகத்திற்கோ கட்டுப்பட்டவரல்ல. ஆனாலும் இறைவனின் விருப்பப்படி உலகிற்காக ஒரு சிறப்புக் காரியத்தை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார்.

ஸ்வாமி பிரணவானந்தரைப் போன்ற (பார்க்க பக்கம் 383) மகான்கள் புதிய தேகங்களில் இவ்வுலகிற்குத் திரும்பி வருதல், அவர்களுக்கு மட்டுமே நன்கு புரிந்த காரணங்களால்தான். அவர்கள் இவ்வுலகில் பிறப்பது கடுமையான கர்மவினைகளின் கட்டுப்பாட்டிற்குட்பட்டதல்ல. அம்மாதிரி தானே திரும்பி வருதல், வ்யுத்தானம் அல்லது மாயையின் பிடியிலிருந்து விடுபட்ட பிறகு உலக வாழ்க்கைக்குத் திரும்புதல் என்று

கூறப்படுகிறது.

அவர் இறந்து போகிற விதம் அதிசயமாகவோ அல்லது சாதாரணமாகவோ எப்படி இருந்தாலும் சரி, முழுவதுமாகக் கடவுளை உணர்ந்த ஒரு மகான் தன் உடலை உயிர்ப்பிக்கவும் இவ்வுலகத்தில் வசிப்பவர்களுக்கு முன்னர் அவ்வுடலில் தோன்றவும் முடியும். கணக்கிட முடியாத சூரிய மண்டலங்களைப் படைத்த கடவுளுடன் ஒன்றியவரின் சக்திக்கு, ஸ்தூல உடலின் அணுக்களை உருவாக்குதல் ஒன்றும் பிரமாதமான காரியமில்லை.

கிறிஸ்து, நான், என் ஜீவனை மறுபடியும் அடைந்து கொள்ளும்படிக்கு அதைக் கொடுக்கிறேன், என்று முழங்கினார். ஒருவனும் அதை என்னிடத்திலிருந்து எடுத்துக் கொள்ளமாட்டான்; நானே அதைக் கொடுக்கிறேன், அதை கொடுக்கவும் எனக்கு அதிகாரம் உண்டு, அதை மறுபடியும் எடுத்துக் கொள்ளவும் எனக்கு அதிகாரம் உண்டு. யோவான் 10:17-18 (பைபிள்).

அத்தியாயம் 34

# இமயத்தில் ஓர் அரண்மனையைத் தோற்றுவித்தல்

பாபாஜிக்கும் லாஹிரி மகாசயருக்குமிடையே ஏற்பட்ட முதல் சந்திப்பு மிக அற்புதமான கதை. மேலும் அம்மரணமற்ற குருவைப் பற்றி விவரமான கருத்தைத் தெரிவிக்கும் சிலவற்றில் ஒன்றாகும்.

இச்சொற்கள் ஸ்வாமி கேவலானந்தரின் ஓர் ஆச்சரியமான கதைக்கு முன்னுரையாகும். முதல் தடவையாக அவர் அக்கதையைக் கூறியபொழுது நான் மெய்யாகவே பிரமிப்பில் ஆழ்ந்தேன். நான் பல்வேறு சந்தர்ப்பங்களில் அக்கதையைத் திரும்பக் கூறும்படி கனிவு மிகுந்த என் சமஸ்கிருத ஆசிரியரிடம் நயந்து பேசி ஒப்புக் கொள்ளச் செய்திருக்கிறேன். பிறகு அதே கதை, கிட்டத்தட்ட அதே சொற்களுடன் ஸ்ரீ யுக்தேஸ்வரால் எனக்குக் கூறப்பட்டது. லாஹிரி மகாசயரின் இந்த இரண்டு சீடர்களும் பிரமிப்பூட்டும் அந்தக் கதையை நேரடியாகத் தங்கள் குருவின் மூலமாகக் கேட்டு அறிந்திருக்கிறார்கள்.

பாபாஜியுடன் என் முதல் சந்திப்பு என் முப்பத்து மூன்றாவது வயதில் நிகழ்ந்தது, லாஹிரி மகாசயர் கூறினார். 1861 ஆம் வருட இலையுதிர் காலத்தில் நான் தானாப்பூரில் அரசாங்க ராணுவப் பொறியியல்

இலாகாவில் கணக்கராகப் பதவியில் இருந்தேன். ஒரு நாள் காலை அலுவலக மேலாளர் என்னை அழைத்தார்.

லாஹிரி,அவர் கூறினார், நமது தலைமை அலுவலகத் திலிருந்து ஒரு தந்தி இப்பொழுதுதான் வந்தது. ராணி கேத்திற்கு, அங்கு தற்போது நிறுவப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு ராணுவ முகாமிற்கு[1] நீ மாற்றப்பட வேண்டுமாம்.

ஒரு வேலைக்காரனுடன் நான் அந்த 500மைல் பிரயாணத்தை மேற்கொண்டேன். குதிரை மீதும் குதிரை வண்டியிலும் பிரயாணம் செய்து முப்பது நாட்களில் நாங்கள் இமயத்தின் சாரலில் உள்ள ராணிகேத்[2] தை அடைந்தோம்.

என் அலுவலகக் கடமைகள் பொறுப்பு நிறைந்ததாக இல்லை; அந்த அற்புதமான மலைக் குன்றுகளில் திரிந்து பல மணி நேரங்கள் கழிக்க என்னால் முடிந்தது. மிகப் பெரிய மகான்கள் இங்கு வசித்து இந்த இடத்தை ஆசீர்வதிக்கிறார்கள் என்ற வதந்தி எனக்கு எட்டியிருந்தது. எனக்கு அவர்களைக் காணவேண்டுமென்ற பேரவா உண்டாயிற்று. ஒரு நாள் முற்பகல் நான் அங்கு சுற்றித் திரிந்து கொண்டு இருக்கையில் வெகுதூரத்திலிருந்து ஒரு குரல் என் பெயரைக் கூவி அழைப்பதைக் கேட்டு திகைப்படைந்தேன். நான் துரோண்கிரி மலையின் மீது சுறுசுறுப்பாக ஏறுவதைத் தொடர்ந்தேன். அக்காட்டுப் பிரதேசத்தில் இருள் சூழும் முன்னால் திரும்ப வழிச்சுவட்டைக் கண்டுபிடித்து இறங்க முடியாதோ

என்ற எண்ணத்தினால் சிறிது அமைதியற்ற நிலை எனக்கு ஏற்பட்டது.

முடிவில் நான், நாலா பக்கங்களிலும் குகைகளிருந்த ஒரு சிறு சமவெளியை அடைந்தேன். பாறை விளிம்புகளில் ஒன்றின் மேல் இளைஞர் ஒருவர் புன்னகை தவழும் முகத்துடன் என்னைக் கையை நீட்டி வரவேற்றவாறு நின்று கொண்டிருந்தார். அவரது தாமிர நிறக் கேசத்தைத் தவிர அவர் குறிப்பிடத்தக்க விதத்தில் என்னைப் போன்றிருந்ததை நான் வியப்புடன் கண்டேன்.

லாஹிரி,[3] நீ வந்துவிட்டாய்! அந்த மகான் பிரியத்துடன் என்னை நோக்கி இந்தியில் கூறினார். இங்கே குகையில் இளைப்பாறு. நான்தான் உன்னை அழைத்தேன்.

நான் ஒரு சிறிய சுத்தமான குகையினுள் நுழைந்தேன். அங்கு பல கம்பளிகளும் சில கமண்டலங்களும் (நீர்ப் பாத்திரங்கள்) காணப்பட்டன.

லாஹிரி, உனக்கு அந்த ஆசனம் நினைவிலிருக்கிறதா? ஒரு மூலையில் மடித்து வைக்கப்பட்டிருந்த ஒரு கம்பளத்தை அந்த யோகி சுட்டிக் காட்டினார்.

இல்லை ஐயா, என் விசித்திரமான சாகஸச்செயலினால் ஒரு மாதிரியாக பிரமிப்படைந்த நிலையில் நான் தொடர்ந்தேன், நான் இருட்டுவதற்கு முன்னால் கிளம்ப வேண்டும். எனக்குக் காலையில் அலுவலகத்தில் வேலையிருக்கிறது.

அந்த மர்மமான மகான் ஆங்கிலத்தில் பதிலளித்தார்.

அந்த அலுவலகம் உனக்காகக் கொண்டுவரப்பட்டது. நீ அலுவலகத்திற்காக இல்லை.

இந்த வனப்பிரதேச சன்னியாசி ஆங்கிலம் பேசுவது மட்டும் அல்லாமல் கிறிஸ்துவின்[4] வாக்கியங்களின் கருத்துரையையும் கூறுவதைக் கேட்டு நான் ஊமையானேன்.

என் தந்தி பலனையளித்திருப்பதை நான் பார்க்கிறேன். அந்த யோகியின் சொற்கள் எனக்குப் புரியவில்லை. நான் அதன் பொருளைக் கேட்டேன்.

உன்னை இத்தனிமையான பிரதேசத்திற்கு வரவழைத்த தந்தியைப் பற்றிக் குறிப்பிடுகிறேன். நீ ராணி கேத்திற்கு மாற்றப்பட வேண்டுமென்பதை நான்தான் உன் மேலதிகாரியின் மனத்தில் மௌனமாக யோசனை கூறினேன். ஒருவர் மனித குலத்துடன் தன் ஐக்கியத்தை உணரும் பொழுது எல்லா மனங்களும் ஒலிபரப்பு நிலையங்களாகி, அவற்றின் மூலம் அவர் விருப்பப்படி செயல்பட முடியும். அவர் தொடர்ந்தார், லாஹிரி, இந்தக் குகை உனக்கு உண்மையில் பரிச்சயமானதாகத் தோன்றவில்லையா?

நான் ஒரு குழப்பமான மௌனத்தைக் கடைபிடித்த பொழுது அந்த மகான் என்னருகில் வந்து என் நெற்றியில் மிருதுவாகத் தட்டினார். அவருடைய காந்த ஸ்பரிசத்தினால் என் மூளையில் ஓர் அற்புத ஓட்டம் பெருக்கெடுத்து என் முற்பிறவியின் இனிமையான நினைவு ஊற்றை வெளிப்படுத்தியது.

எனக்கு நினைவிருக்கிறது! என் குரல் ஆனந்த

விசும்பல்களினால் பாதி அடைத்துக் கொண்டது. நீங்கள் எப்பொழுதும் எனக்குச் சொந்தமான என் குரு பாபாஜி! கடந்த கால காட்சிகள் என் மனத்தில் தத்ரூபமாக எழுகிறது; இங்கே இந்தக் குகையில் என் முன் பிறவியில் பல வருடங்களைக் கழித்துள்ளேன்! விவரிக்க முடியாத நினைவுகள் என்னுள் பொங்க நான் கண்ணீருடன் என் குருவின் பாதங்களைத் தழுவினேன்.

நான், முப்பது வருடங்களுக்கு மேலாக நீ திரும்புவதற்காகக் காத்திருந்தேன். பாபாஜியின் குரல் தெய்வீக அன்புடன் ஒலித்தது.

நீ மரணத்தைத் தாண்டிய வாழ்க்கையின் கொந்தளிக்கும் அலைகளில் நழுவி மறைந்து போய்விட்டாய். உன் கர்மவினையின் மந்திரக்கோல் உன்னைத் தொட்டதும் நீ போய்விட்டாய்! நீ என்னைக் காணவில்லையாயினும் நான் என்றும் உன்னைக் காணாமலில்லை! மகிமையான தேவ தூதர்கள் மிதந்து வரும் ஒளிப்பிழம்பான சூட்சுமக் கடலின் மீதாக நான் உன்னைத் தொடர்ந்தபடியே இருந்தேன். இருள், புயல், எழுச்சி, ஒளி போன்ற எல்லா நிலைகளிலும் எப்படி ஒரு தாய்ப்பறவை தன் குஞ்சுகளைக் காவல் புரியுமோ அதே போன்று நான் உன்னைத் தொடர்ந்தபடி இருந்தேன். நீ, உன் மனிதப் பருவத்தின் கரு வாழ்க்கையை முடித்து சிசுவாக வெளிவந்த பொழுதும் என் கண் உன் மீதே இருந்தது. நீ உன் குழந்தைப் பருவத்தில் உனது சிறு உருவத்தைப் பத்மாசனத் தில் குர்ணி மணலின் கீழ் மறைத்துக் கொண்டு அமர்ந்த பொழுது நான் அருவமாக

அவ்விடமிருந்தேன். பொறுமையுடன் மாதம் மாதமாக, வருடம் வருடமாக உன்னைக் கண்காணித்துக் கொண்டு இந்த நிறைவான நாளுக்காகக் காத்திருந்தேன். இப்பொழுது நீ என்னுடன் இருக்கிறாய்! நீ பழைய நாட்களில் விரும்பி வசித்த குகை இதோ; நான் உனக்காக அதை எப்பொழுதும் சுத்தமாகவும் தயாராகவும் வைத்திருக்கிறேன். இதோ நீ தினமும் அமர்ந்து உன் பரந்த இதயத்தை இறைவனுடன் நிறைத்த புனிதமான ஆசனக் கம்பளம். இதோ நீ என்னால் தயாரிக்கப்பட்ட அமுதத்தை அடிக்கடி அருந்திய கிண்ணம். ஒரு நாள் இதே கிண்ணத்திலிருந்து நீ மறுபடியும் பருகக் கூடும் என்று இந்தப் பித்தளைக் கிண்ணத்தைத் தேய்த்துப் பளபளவென்று எப்படி வைத்திருக்கிறேன் பார். எனக்கு உரியவனே, உனக்கு இப்பொழுது புரிகிறதா?

என் குருதேவா, நான் என்ன சொல்ல? நான் உடைந்த குரலில் மெதுவாகக் கூறினேன். இம்மாதிரியான அழிவற்ற அன்பை ஒருவன் எங்கு கேள்விப்பட்டிருக்கக் கூடும்? பிறப்பிலும் இறப்பிலும் என் முடிவற்ற பொக்கிஷமான என் குருதேவரை நான் பரவசத்துடன் நோக்கியவாறு இருந்தேன்.

லாஹிரி, நீ புனிதமாக்கப்பட வேண்டும். இந்தக் கிண்ணத் திலுள்ள எண்ணெயைக் குடித்துவிட்டு ஆற்றின் அருகில் படுத்துக்கொள். பாபாஜியின் அனுபவ பூர்வமான விவேகம் எப்பொழுதும் முன்னணியில் நிற்கும் என்பதை உடனடியாக ஒரு பழைய புன்சிரிப்புடன் நான்

நினைத்துப் பார்த்தேன்.

நான் அவர் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தேன். பனிக்கட்டி போன்ற குளிர்ச்சியான இமாலய இரவு கவியத்தொடங்கிய பொழுதும் ஒரு கதகதப்பானதும் இதமானதுமான ஒளிப்பிரகாசம் என்னுள் படரலாயிற்று. நான் அதிசயித்தேன். என்னவென்று தெரியாத அந்த எண்ணெயினுள் பிரபஞ்ச உஷ்ணம் அடங்கியிருக்கிறதோ?

இருளில் கடுமையான ஊதல் காற்று ஒரு பயங்கரமான சவாலாக வீறிட்டு என்னைச் சுற்றிச் சுழன்றடித்தது. கோகாஷ் நதியின் சில்லென்ற சிறு அலைகள் பாறையாலான கரையின் மீது நீண்டு படுத்திருந்த என் உடலை அவ்வப்பொழுது தொட்டுச் சென்றன. வெகு சமீபத்தில் புலிகளின் உறுமல் கேட்டது. ஆனால் என் மனம் பயமற்றிருந்தது; என்னுள் புதிதாக உண்டாகியிருந்த ஒளிபெற்ற சக்தி, தகர்க்க முடியாத ஒரு பாதுகாப்பை நிச்சயமாக உணர்த்திற்று. பல மணி நேரங்கள் வேகமாக நகர்ந்தன; வேறொரு பிறவியின் மங்கிய நினைவுகள், தற்சமயம் என் தெய்வீகக் குருவுடன் மறுபடி இணைந்ததான அற்புதக் கோலத்துடன் கோர்வையாக இழையலாயின.

என் தனிமையான நினைவுகளை நெருங்கி வந்த காலடிச்சத்தம் கலைத்தது. இருளில் ஒரு மனிதனின் கரம் மிருதுவாக நான் எழுந்திருக்க உதவியதுடன் சில உலர்ந்த ஆடைகளையும் கொடுத்தது.

வா சகோதரனே, என் தோழர் கூறினார். குருதேவர்

உனக்காகக் காத்திருக்கிறார். அவர் காட்டின் வழியே என்னை இட்டுச் சென்றார். பாதையில் ஒரு திருப்பத்தை நாங்கள் அடைந்தவுடன் தூரத்தில் இருந்த நிலையான வெளிச்சத்தினால் இரவின் இருட்டு ஒளியூட்டப்பட்டது.

அது சூரியோதயமாக இருக்குமோ? நான் விசாரித்தேன். முழு இரவும் அதற்குள் நிச்சயம் கழிந்திருக்காதே?

இது நடு இரவு நேரம். என் வழிகாட்டி மிருதுவாக நகைத்தார். அந்த ஒளி, ஒப்புயர்வற்ற பாபாஜியால் உருவாக்கப்பட்ட ஒரு தங்க மாளிகையின் ஒளிர்தலாகும். மங்கிய கடந்த காலத்தில் நீ ஒரு தடவை ஓர் அரண்மனையின் அழகை அனுபவிக்க வேண்டுமென்ற விருப்பத்தை வெளியிட்டாய். நமது குருதேவர் உனது அந்த விருப்பத்தை திருப்தி செய்து உன்னுடைய கடைசிக் கர்மவினையின் பந்தத்திலிருந்து உன்னை விடுவிக்கப் போகிறார்.[5] அவர் தொடர்ந்தார். அந்தக் கண்ணைப் பறிக்கும் மாளிகைதான் இன்று உனக்குக் கிரியா யோக உபதேசம் செய்யும் இடமாகப் போகிறது. உன் எல்லா சகோதரர்களும் உன் அஞ்ஞான வாசத்தின் முடிவைக் கொண்டாடும் ஆனந்தத்தில் உன்னை வரவேற்க இங்கு கூடியிருக்கிறார்கள், அங்கே பார்!

எங்கள் முன்னால் கண் கூசச் செய்யும் தங்கத்தாலான ஒரு பெரிய மாளிகை நின்றிருந்தது. கணக்கற்ற நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டு, விசாலமான பூந்தோட்டங்களுக்கு மத்தியில்,

அமைதியான நீர்நிலைகளில் பிரதிபலித்த அம்மாளிகை, ஒப்புவமையற்ற பேரழகுக் காட்சியாகும்! கோபுர அலங்கார வளைவுகள் மிக நுண்ணிய வேலைப் பாடுகளுடன் உயர்ந்த வைரம், நீலம், மரகதம் ஆகிய கற்களினால் இழைக்கப் பெற்றிருந்தன. தேவதூதரையொத்த முகத்தோற்றத்துடன் கூடிய மனிதர்கள் மாணிக்கக் கற்களினால் சிவந்து ஒளிவீசும் நுழைவாயில்களில் நிறுத்தப்பட்டிருந்தனர்.

நான் எனக்குத் துணையாக வந்தவரைத் தொடந்து ஒரு விசாலமான வரவேற்பு அறையை அடைந்தேன். ரோஜாக்களின் மணமும் தூபங்களின் சுகந்தமும் காற்றில் மிதந்து வந்தன; மங்கலான விளக்குகள் பலவித வண்ண ஒளியைத் தோற்றுவித்தன. சிறு குழுக்களில், சிலர் சிவந்தும் சிலர் கறுத்தும் இருந்த பக்தர்கள் மெதுவாக கீதமிசைத்தவாறு அல்லது தியான நிலையில் மௌனமாக அமர்ந்து உள்ளூறும் சாந்தியில் திளைத்தவராகக் காணப்பட்டனர். அச்சூழ்நிலையில் அலைமோதும் ஓர் ஆனந்தம் வியாபித்திருந்தது.

உன் கண்களுக்கு விருந்து படை; கலைவண்ணம் நிறைந்த இந்த அரண்மனையின் அழகை நன்றாய் அனுபவி. ஏனெனில் இவை உன்னை கௌரவிப்பதற்காகவே படைக்கப் பட்டுள்ளவை, என்று என் வழிகாட்டி குறிப்பிட்டதும், நான் ஆச்சரியத்தினால் வியந்தது கண்டு அனுதாபத்துடன் புன்னகைத்தார்.

சகோதரரே, இம்மாளிகையின் அழகு மனித மனத்தின் கற்பனை எல்லைகளுக்கு அப்பாற்பட்டதாகும்.

இது தோன்றியதின் மர்மத்தை தயவு செய்து எனக்கு விளக்கிக் கூறுங்கள், என்றேன் நான்.

உனக்கு சந்தோஷமாக விளக்குகிறேன். என் தோழரின் கருமையான கண்கள் விவேகத்துடன் பளிச்சிட்டன. இது உருவாக்கப்பட்டிருப்பது பற்றி விளக்க முடியாதது ஒன்றுமில்லை. இந்த முழுப்பிரபஞ்சமும் இறைவனுடைய எண்ணத்தின் வெளிப்பாடுதானே. அண்ட வெளியில் மிதக்கும் ஒரு களிமண் உருண்டையான இவ்வுலகம் இறைவனின் கனவுதான். மனிதன் தன் கனவு உணர்வு நிலையில் பொருட்களைப் படைத்து உயிரூட்டுவதைப் போலவே, இறைவன் எல்லாப் பொருட்களையும் தன் மனத்திலிருந்துதான் உண்டாக்குகிறான்.

கடவுள் இவ்வுலகத்தை முதன் முதலில் ஓர் எண்ணமாகத்தான் உருவாக்கினார்; அவர் அதைத் துரிதப்படுத்தினார்; அணு சக்தியும் பின்னர் பொருளும் தோன்றின. அவர் புவியின் அணுக்களை ஒன்றுக்கொன்று தொடர்புறச் செய்து ஒரு திடமான கோளமாக்கினார். அதனுடைய எல்லா மூலக் கூறுகளும் ஆண்டவனுடைய சங்கற்பத்தால் ஒன்றாகப் பிணைக்கப்பட்டுள்ளன. அவர் தன் சங்கற்பத்தைத் திரும்ப எடுத்துக்கொள்ளும்பொழுது பூமியின் சகல அணுக்களும் சக்தியாக மாறிவிடும். அணுசக்தி திரும்ப அது உற்பத்தியான இடமாகிய உணர்வு நிலைக்கே சென்று விடும். உலகம் என்ற எண்ணமே அதன் புறத்தன்மையிலிருந்து மறைந்து விடும்.

கனவுப் பொருளானது, காண்பவரின் அடிமனத்தின் எண்ணத்தினால் உருவாக்கப்படுகிறது. இணைக்கப்பட்டுள்ள அவ்வெண்ணம் விழிப்பு நிலையில் விலக்கப்படும் பொழுது கனவும் அதன் மூலப் பொருட்களும் கரைந்து விடுகின்றன. ஒரு மனிதன் கண்ணை மூடிக்கொண்டு ஒரு கனவுப் படைப்பை நிறுவுகிறான். விழித்ததும் எந்த முயற்சியும் இல்லாமல் அதைக் கலைத்துவிடுகிறான். அவன் இறைவனுடைய மூலமாதிரித் திட்டத்தைத்தான் கடைப்பிடிக்கிறான். அது போலவே அவன் பிரபஞ்ச உணர்வில் விழிப்படைந்தவுடன் எந்த சிரமமும் இல்லாமல் பிரபஞ்சக்கனவு உலகத்தின் பொய்த் தோற்றத்தைக் கலைத்து விடுகிறான்.

எல்லையில்லாத எல்லாம் – செய்யவல்ல இச்சா சக்தியுடன் இசைந்து பாபாஜியினால், மூல அணுக்களை, அவைகள் தாமே இணைந்து எந்த உருவத்தில் வேண்டுமானாலும் உருக் கொள்ளுமாறு ஏவ முடிகிறது. இந்த பூமி எந்த அர்த்தத்தில் உண்மையோ அந்த விதத்திலேயே, கண நேரத்தில் உருவாக்கபட்ட இந்த மாளிகையும் உண்மையே. இறைவனின் எண்ணம் எப்படி உலகை சிருஷ்டித்துப் பின் அவருடைய இச்சா சக்தி அதைக் காப்பாற்றியும் வருகிறதோ அதே போல பாபாஜி இவ்வழகிய மாளிகையை தன் மனத்திலிருந்து படைத்து தன் இச்சா சக்தியினால் அதன் அணுக்களை ஒரு சேர வைத்திருக்கிறார். அவர் தொடர்ந்தார், இந்தக் கட்டிடம் தன் காரியத்தை ஆற்றிய பிறகு, பாபாஜி அதன்

உருவைக் கலைத்து விடுவார்.

நான் திக்பிரமையுடன் மௌனமாக நின்றபொழுது என் வழிகாட்டி கையை வீசி சைகை செய்தார். நவரத்தினங்களினால் அற்புதமாக இழைக்கப்பட்ட இந்த ஜொலிக்கும் மாளிகை மனித முயற்சியினால் கட்டப்படவில்லை. அதிலுள்ள பொன்னும் மணிகளும் சுரங்கங்களிலிருந்து சிரமத்துடன் தோண்டப்படவில்லை. அது மனிதனுக்கு நிலையான ஒரு சவாலாக, திடமாக உயர்ந்து நிற்கிறது.[6] எவனொருவன் தன்னை இறைவனின் மகனாக அறிந்து கொள்கிறானோ–பாபாஜி உணர்ந்திருப்பதைப் போல, அவன் தன்னுள் மறைந்திருக்கும் எல்லையற்ற சக்தியினால் எந்தக் குறிக்கோளையும் அடைய முடியும். ஒரு சாதாரண கல், மறைவாக அபாரமான அணுச் சக்திகளைப் பெற்றிருக்கிறது.[7] அதே போல் மிகக் கீழ்நிலையி லுள்ள மனிதன்கூட தெய்வீக சக்தியின் இருப்பிடம் ஆகிறான்.

அந்த முனிவர் அருகிலுள்ள மேஜையிலிருந்து ஒரு வசீகரமான பூச்சாடியைக் கையில் எடுத்தார்; அதன் கைப்பிடி வைரங்களினால் ஜொலித்துக் கொண்டிருந்தது. நம் மேன்மையான குருதேவர் பிரபஞ்சத்தின் பல்லாயிரக் கணக்கான சுதந்திரமான கிரணங்களைக் கெட்டியாக்கி இம்மாளிகையைப் படைத்திருக்கிறார், அவர் தொடர்ந்தார். இந்தப் பூச்சாடியையும் அதன் வைரங்களையும் தொட்டுப்பார். இந்திரிய அனுபவத்தில் எல்லா சோதனைகளையும் அவை வென்று விடும்.

நான் அப்பூச்சாடியைச் சோதித்தேன். அதிலிருந்த

நவரத்தினங்கள் ஓர் அரசனின் பொக்கிஷத்திற்குகந்தவை. மின்னிக் கொண்டிருந்த தங்கத்தாலாகிய அறையின் கனமான சுவர்களைக் கையால் தடவிப் பார்த்தேன். என் மனத்தில் ஆழ்ந்த திருப்தி படர்ந்தது. கடந்த பிறவிகளில் உண்டாகி உள்மனத்தில் மறைந்திருந்த ஒரு விருப்பம், இப்பொழுது ஒரே சமயத்தில் நிறைவேறி அழிந்து விட்டதாகத் தோன்றியது.



இமயத்திலுள்ள பாபாஜியின் குகை

ராணிகேத்திற்கு அருகிலிலிருக்கும் இக்குகையில் தான் தனித்திருக்கும் மகான் பாபாஜியை லாஹிரி மகாசயர் சந்தித்து, அவரால் கிரியா யோக விஞ்ஞானத்தில் உபதேசம் செய்யப் பெற்றார். லாஹிரி மகாசயரின் பேரன், ஆனந்த மோகன் லாஹிரியும் (வெள்ளை உடையில்), மற்றும் மூன்று பக்தர்களும் இப்புனித இடத்திற்குச் செல்கின்றனர்.

என் கம்பீரமான தோழர் என்னை அலங்கரிக்கப்பட்ட

வளைவுகள் மற்றும் தாழ்வாரங்கள் வழியாக ஒரு சக்கரவர்த்தியின் அரண்மனையைப் போன்று உயர்ந்த முறையில் பொருட்கள் அமைக்கப்பட்டிருந்த அறைகள் பலவற்றினுள் என்னை அழைத்துச் சென்றார். நாங்கள் ஒரு பிரமாண்டமான மண்டபத்தினுள்ளே நுழைந்தோம். அதன் நடுவில் கண்கூசும் பல வண்ணங்களை வாரி இறைக்கும் நவரத்தினங்கள் இழைத்த ஒரு தங்க சிம்மாசனம் இருந்தது. அங்கு, பத்மாசனத்தில் மகா பாபாஜி அமர்ந்திருந்தார். நான், பளபளக்கும் அந்தத் தரையின் மீது, அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினேன்.

லாஹிரி, நீ இன்னும் தங்க அரண்மனைக்கான உன் கனவு ஆசைகளில் திளைத்துக் கொண்டிருக்கிறாயா? என் குருவின் கண்கள் அவர் படைத்த நீல மணிகளைப் போலவே மின்னிக் கொண்டிருந்தன. விழித்துக் கொள்! உன் பூவுலக விருப்பங்கள் எல்லாமே நிரந்தரமாகத் தணிந்துவிடப் போகின்றன. அவர் மறை பொருளுள்ள சில ஆசீர்வாதச் சொற்களை உச்சரித்தார். என் மகனே எழுந்திரு, கிரியா யோகத்தின் மூலம் இறைவனின் சாம்ராஜ்யத்தை அடைய உன்னுடைய தீட்சையைப் பெற்றுக்கொள்.

பாபாஜி தன் கையை நீட்டினார்; பழங்களாலும் மலர்களாலும் சூழப்பட்ட ஒரு ஹோம (வேள்வி) குண்டம் தோன்றியது. இந்தக் கொழுந்து விட்டெரியும் பீடத்திற்கு முன்னால் விடுதலை தரும் யோக உத்தியாகிய கிரியா தீட்சையைப் பெற்றேன்.

விடியற்காலையில் சடங்குகள் முடிவு பெற்றன. என் பரவசமான நிலையில் எனக்கு நித்திரையின் அவசியம் இருக்கவில்லை. பொக்கிஷங்களாலும் மிக நேர்த்தியான வேலைப்பாடுடைய கலைப்பொருட்களாலும் நிறைந்திருந்த அம்மாளிகையின் அறைகளைச் சுற்றி நான் திரிந்தேன், தோட்டங்களுக்கும் சென்றேன். அருகிலேயே நேற்று நான் கண்ட குகைகளையும் வறண்ட மலைப்பாறைகளின் விளிம்புகளையும் கண்டேன். ஆனால் அப்பொழுது அவை ஒரு பெரிய மாளிகைக்கும் மலர்த் தோட்டங்களுக்கும் அருகே இருக்கவில்லை.

இமயத்தின் குளிர்ச்சியான சூரிய ஒளியில் நம்ப முடியாதபடி பிரகாசித்துக் கொண்டிருந்த மாளிகைக்குள் திரும்பச் சென்று நான் என் குருவை நாடினேன். அவர் பல அமைதியான சீடர்களால் சூழப்பட்டு இன்னும் அந்த அரியணையிலேயே அமர்ந்திருந்தார்.

லாஹிரி, உனக்கு நல்ல பசி. பாபாஜி தொடர்ந்தார், உன் கண்களை மூடிக்கொள்.

நான் மறுபடி கண்ணைத் திறந்ததும் மனத்தை மயக்கும் அந்த மாளிகையும் அதன் தோட்டங்களும் மறைந்து விட்டிருந்தன. என் சொந்த உடலும், பாபாஜி மற்றும் அவருடைய சீடர்களின் உருவங்களும் மாளிகை மறைந்த அதே இடத்தில், வெயில் படர்ந்த அந்தக் குகை வாயில்களிலிருந்து அதிக தூரமில்லாத வெறும் தரையில் அமர்ந்திருந்தன. இம்மாளிகை கலைத்து விடப்படும். அதனுள் பிடித்து வைக்கப்பட்டிருந்த

அணுக்குவியல்கள் எங்கிருந்து கிளம்பினவோ அந்த எண்ண சாராம்சத்திற்குள் விடுவிக்கப் பட்டுவிடும் என்று எனது வழிகாட்டி குறிப்பிட்டதை நான் நினைவுபடுத்திக் கொண்டேன். அதிர்ச்சியடைந்த போதிலும் நான் குருவை நம்பிக்கையுடன் நோக்கினேன். அற்புதங்கள் நிறைந்த அந்த நாளில் அடுத்தபடி எதை எதிர்பார்ப்பதென்றே எனக்குத் தெரியவில்லை.

அந்த மாளிகை எதற்காகப் படைக்கப்பட்டதோ அந்த நோக்கம் நிறைவேறிவிட்டது, பாபாஜி விளக்கினார். அவர் தரையிலிருந்து ஒரு மண் பாண்டத்தை எடுத்தார். அதற்குள் உன் கையை விட்டு உனக்கு விருப்பமான உணவை எடுத்துக்கொள், என்றார்.

நான் அந்த அகன்ற வெறும் கலயத்தைத் தொட்டேன்; நெய்யாலான சூடான பூரிகளும், கறிவகையும், இனிப்புப் பண்டங்களும் தோன்றின. நான் சாப்பிடச் சாப்பிட அப்பண்டம் எப்பொழுதும் நிரம்பியே இருந்ததைக் கண்டேன். சாப்பிட்டு முடிந்ததும் நான் தண்ணீருக்காக சுற்றி நோக்கினேன். என் குரு எனக்கு முன்னாலிருக்கும் கலயத்தைச் சுட்டிக் காட்டினார். உணவு மறைந்து அதன் இடத்தில் நீர் நிறைந்திருந்தது.

இறைவனின் ராஜ்யமானது உலக வாழ்க்கைக்குரிய தேவைகளின் பூர்த்திகளையும் உள்ளடக்கி இருக்கிறது என்பதை ஒரு சில மானிடரே அறிவார்கள், பாபாஜி குறிப்பிட்டார். தெய்வீக ஆட்சி பூமியைச் சார்ந்துள்ளவற்றிற்கும் பரவியுள்ளது. ஆனால் பின்னால் கூறப்பட்டது பொய்த் தோற்றத் தன்மையானதால்

உண்மையின் சாரம் அதனிடமில்லை.

அன்புடைய குருதேவோ, நேற்றிரவு தாங்கள் எனக்காக மண்ணுலகு, விண்ணுலகு ஆகிய இரண்டிலும் உள்ள அழகின் இணைப்பைத் தோன்றச் செய்தருளினீர்கள்! நான் மறைந்த மாளிகையின் நினைவுகளில் புன்னகைத்தேன்; உண்மையில் எந்த எளிய யோகியும் இதுவரை இதைவிட அதிகமாகக் கவர்ச்சியூட்டும் ஆடம்பரமான சூழ்நிலையில், மகோன்னதமான ஆத்மாவின் புதிர்களை அறியும் தீட்சை பெற்றிருக்கமாட்டார்! நான் மன அமைதியுடன் அப்பொழுது இருந்த முற்றிலும் மாறுபட்ட காட்சியை நோக்கினேன். உலர்ந்த கட்டாந்தரை, வானமாகிய கூரை, ஆதிகாலத்திய இருப்பிடங்களைத் தரும் குகைகள் எல்லாமே சுற்றியிருந்த ஒளி நிறைந்த முனிவர்களுக்கு ஓர் அழகான இயற்கைப் பின்னணியாகத் தோன்றியது.

அன்று மதியம் நான், என் முற்பிறவி அனுபவங்களின் தொடர்புகளால் புனிதமாக்கப்பட்டு, என் கம்பளிமேல் அமர்ந்திருந்தேன். என் தெய்வீகக் குருதேவர் அருகில் வந்து தன் கையை என் தலைமேல் செலுத்தினார். நான் நிர்விகல்ப சமாதியை அடைந்து இடைவிடாமல் ஏழு நாட்களுக்கு அந்தப் பரமானந்தத்தில் திளைத்திருந்தேன். ஆத்மஞானத்தின் ஒவ்வொரு நிலையையும் படிப்படியாகக் கடந்து, நான் மரணமற்ற பரவெளியை ஊடுருவினேன். மாயையின் எல்லாக் கட்டுப்பாடுகளும் விடுபட்டொழிந்தன. என் ஆத்மா பரமாத்மாவின் பீடத்தில் முழுமையாக நிலைபெற்றது.

எட்டாவது நாள் நான் குருவின் பாதங்களில் வீழ்ந்து என்னை என்றுமே அவரருகில், இந்த புனித வனப் பிராந்தியத்தில் வைத்துக் கொள்ளுமாறு மன்றாடினேன்.

என் மகனே, என்னைத் தழுவியவாறு கூறினார், மக்களின் பார்வைக்கு முன்னால் இந்தப் பிறவியில் உன் பங்கு செயல்படுத்தப்பட்டே ஆக வேண்டும். பல பிறவிகளின் தனிமைத் தியானத்தினால் பிறக்கும் முன்பே ஆசீர்வதிக்கப் பட்டிருக்கும் நீ, இப்பொழுது உலக மனிதர்களுடன் கலந்து செயல்பட வேண்டும்.

ஏற்கனவே நீ திருமணமானவனாகி, ஒரு சிறு குடும்பமும் தொழில் பொறுப்பும் உண்டாகும் வரை இம்முறை நீ என்னை சந்திக்காமலிருந்ததில் ஓர் ஆழ்ந்த நோக்கம் உள்ளடங்கியுள்ளது. இமயமலையில் உள்ள எங்கள் மறைவான குழுவில் ஒருவனாக நீ சேரும் உன் எண்ணங்களைத் தள்ளிவைக்க வேண்டும். ஒப்பற்ற ஒரு லட்சிய இல்லற யோகிக்கு எடுத்துக்காட்டாக, நகர மக்கள் கூட்டத்திற்கிடையே உன் வாழ்க்கை அடங்கியிருக்கிறது.

உலக வாழ்க்கையில் தடுமாற்றமடைந்த அனேக ஆண், பெண்களின் கதறல்கள் மகான்களின் காதில் விழாமல் போகவில்லை. ஊக்கத்துடன் நாடும் எண்ணற்றோருக்கு கிரியா யோகத்தின் மூலமாக ஆத்ம சாந்தியை அளிப்பதற்கு நீ தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறாய். குடும்ப பந்தங்களாலும் பாரமான லோகாயதக் கடமைகளாலும் சுமைப்பட்டிருக்கும் லட்சக்கணக்கானவர்கள், அவர்களைப் போன்ற

இல்லறத்தானான உன்னிடத்திலிருந்து புது தைரியத்தைப் பெறுவார்கள். மிக உயர்ந்த யோக சாதனைகள் இல்லறத் தானுக்கு தடை செய்யப்படவில்லை என்பதை நீ அவர்களுக்குப் புரிய வைத்து வழிகாட்ட வேண்டும். உலகத்திலேயே இருந்துக் கொண்டும் கூட யோகியானவன், சொந்த நோக்கம் அல்லது பற்று இன்றி தன் பொறுப்புக்களை விசுவாசத்துடன் செயல்படுத்தும்பொழுது அவன் ஞான ஒளியை அடையும் நிச்சயமான பாதையில் நடப்பவனாகிறான்.

நீ இவ்வுலகத்தை விட்டுப் போகவேண்டுமென எந்த அவசியமும் கட்டாயப்படுத்தவில்லை. ஏனெனில் நீ உள்ளுக்குள்ளே கர்மவினையின் ஒவ்வொரு தளையையும் அறுத்தெறிந்துவிட்டாய். இவ்வுலகத்தைச் சார்ந்தவனாக இல்லாவிடினும் நீ அதில் இருந்தேயாக வேண்டும். நீ இவ்வுலகில் உன் குடும்பம், தொழில், சமூகம் மற்றும் ஆன்மீகக் கடமைகள் மனச்சாட்சியுடன் நிறைவேற்றுவதற்காக இன்னும் அனேக வருடங்கள் உள்ளன. உலகப் பற்றுள்ள மனிதர்களின் வறண்ட இதயங்களில் தெய்வீக நம்பிக்கையின் புத்துணர்ச்சி ஊடுருவும். உன்னுடைய சமநிலையான வாழ்க்கையிலிருந்து அவர்கள், விடுதலை என்பது வெளித் துறவுகளை விட உட்துறவைச் சார்ந்து இருக்கிறது என்பதை உணர்ந்து கொள்வார்கள்.

உயர்ந்த இமயத்தின் தனிமையில் நான் என் குருவின் சொற்களைச் செவிமடுக்கும் பொழுது என்

குடும்பம், அலுவலகம், இந்த உலகம் எல்லாம் எங்கோ தொலைதூரத்தில் இருப்பதான ஒரு தோற்றம்! ஆயினும் அவருடைய சொற்களில் பிடிவாதமான உண்மை ஒலித்தது; ஆசீர்வதிக்கப் பட்ட இந்த அமைதியின் புகலிடத்தை விட்டுச் செல்ல நான் பணிவுடன் ஒப்புக்கொண்டேன். இந்த யோகக் கலையை குரு சிஷ்யனுக்குக் கற்றுக் கொடுக்கும் பொழுது கடைப்பிடிக்க வேண்டிய கடினமான புராதன விதிகளை பாபாஜி எனக்குப் போதித்தார்.

கிரியாதிறவுகோலைத் தகுதியான சீடர்களுக்கு மட்டும் உபதேசம் செய், பாபாஜி கூறினார். எவனொருவன் இறைவனை நாடுவதில் எல்லாவற்றையும் துறப்பதாக சபதம் எடுத்துக் கொள்கிறானோ அவனே தியானம் என்ற விஞ்ஞானத்தின் மூலமாக வாழ்க்கையின் இறுதியான புதிர்களை அவிழ்க்கத் தகுதியுடையவன்.

தேவ குருவே, இழந்திருந்த கிரியா கலையை உயிர்ப்பித்ததன் மூலம் மனித குலத்திற்கு ஏற்கனவே ஆதரவு அளித்துள்ள தாங்கள், சீடர்களுக்கான கடுமையான தேவைகளைத் தளர்த்தி அதன் நன்மையை இன்னும் அதிகரிக்கச் செய்யலாகாதா? நான் பாபாஜியை வேண்டுதலுடன் நோக்கினேன். உண்மையாக நாடும் யாவர்க்கும், அவர்கள் தொடக்கத்தில் உள்ளார்ந்த முழுமையான உட்துறவு நிலைக்கு உறுதியளிக்க முடியாவிடினும், கிரியாவைக் கொடுக்க எனக்கு அனுமதி அளிக்கும்படி நான் வேண்டுகிறேன். உலகத்தில்

மும்முனைத் துன்பங்களினால்[8] தொடரப்பட்டு வேதனைப் படும் ஆடவரும் பெண்டிரும் விசேஷமாக ஊக்கமளிக்கப்பட வேண்டியவர்கள். அவர்களுக்கு கிரியா உபதேசம் அளிக்கப்படாமல் நிறுத்தி வைக்கப்பட்டால் அவர்கள் என்றுமே விடுதலைக்கான மார்க்கத்தை நாடமாட்டார்கள்.

அப்படியே ஆகட்டும். உன் மூலம் இறைவனின் விருப்பமே வெளியிடப்பட்டது. உன்னிடம் பணிவுடன் உதவியை நாடுவோர் யாவருக்கும் கிரியாவை அளி. கருணைமிக்க அந்தக் குரு கூறினார்.[9]

சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு பாபாஜி தொடர்ந்தார். உன் சிஷ்யர்கள் ஒவ்வொருவருக்கும் பகவத் கீதையில்[10] கூறப்பட்ட இந்த மகத்தான வாக்குறுதியை திரும்பவும் எடுத்துக் கூறு: ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத்! ளஇந்த தர்மத்தின் (அறநெறிச் சடங்கு அல்லது நற்செயல்) சிறிதளவு பயிற்சிகூட பெரும் பயத்திலிருந்து (மஹதோ பயாத்) மாபெரும் துன்பங்களை இயல்பாகவே உடைய திரும்பத் திரும்ப உண்டாகும் பிறப்பு, இறப்பு என்ற சூழல்களிலிருந்துஉன்னைக் காக்கும்.ன

மறுநாள் காலை விடைபெறும்போது ஆசியைப் பெறுவதற்காக நான் என் குருவின் பாதங்களில் பணிந்து நிற்கும்பொழுது அவரைப் பிரிவதில் எனக்கிருக்கும் ஆழ்ந்த தயக்கத்தை அவர் உணர்ந்தார்.

என் அன்பான குழந்தாய், நமக்குள் பிரிவென்பது இல்லை! அவர் மிகுந்த பாசத்துடன் என் தோளைத்

தொட்டார். நீ எங்கிருந்தாலும் சரி, எப்பொழுது என்னை அழைத்தாலும் சரி, நான் அக்கணமே உன்னுடன் இருப்பேன்.

அவருடைய அற்புதமான வாக்குறுதியினால் ஆறுதல் அடைந்தும் புதிதாக அடைந்த இறை ஞானத்தங்கம் என்ற செல்வத்துடனும் நான் மலையிலிருந்து இறங்கினேன். நான் இமயமலைக் காடுகளில் தொலைந்து விட்டதாகப் பத்து நாட்களாக நினைத்துக் கொண்டிருந்த சக ஊழியர்களால் நான் வரவேற்கபட்டேன். தலைமை அலுவலகத்திலிருந்து சீக்கிரமே ஒரு கடிதம் வந்தது.

லாஹிரி தானாபூர் அலுவலகத்திற்குத் திரும்ப வேண்டும், என்று அதில் கண்டிருந்தது. ராணிகேத்திற்கு அவருடைய மாற்றல் தவறுதலால் ஏற்பட்டது. ராணிகேத்தில் பணியை ஏற்றுக் கொள்ள வேறு ஒருவர் அனுப்பப்பட்டிருக்க வேண்டும்.

என்னை இந்தியாவின் இந்த வெகு தூர இடத்திற்குக் கொண்டு சேர்த்த சம்பவங்களில் மறைந்துள்ள குறுக்கீடுகளை எண்ணி எனக்குள் நகைத்துக் கொண்டேன்.

தானாபூருக்குத் திரும்புவதற்கு முன்னால் நான் மொராதாபாதில் ஒரு வங்காளக் குடும்பத்துடன் சில தினங்கள் கழித்தேன். ஆறு நண்பர்கள் அடங்கிய குழு என்னை வரவேற்க அங்குக் கூடியிருந்தது. நான் ஆன்மீக விஷயங்களுக்குப் பேச்சைத் திருப்பியபொழுது எனக்கு விருந்தளித்தவர் வருத்தத்துடன் குறிப்பிட்டார்.

ஓ, இந்நாட்களில் பாரதம் மகான்கள் இன்றி வறுமை ஆகிவிட்டது.

பாபு, நான் உணர்ச்சியுடன் மறுத்தேன், இன்னமும் இந்நாட்டில் உயர்ந்த மகான்கள் இருக்கவே செய்கிறார்கள்.

ஏதோ ஓர் உணர்ச்சி வேக மனநிலையினால் நான் தூண்டப்பட்டு, இமயத்தில் எனக்கு ஏற்பட்ட அற்புதமான அனுபவங்களை விவரித்தேன். அச்சிறு குழு மிகப் பணிவுடன் தன் அவநம்பிக்கையைத் தெரிவித்தது.

லாஹிரி, ஒருவர் ஆறுதலாகக் கூறினார், அந்த அடர்த்தி குறைந்த மலைக் காற்றில் உன் மனம் சோர்வு அடைந்துவிட்டது. நீ கூறியது ஏதோ ஒரு பகற்கனவுதான்.

உண்மையின் உற்சாகத்தினால் உந்தப்பட்டு நான் சரிவர யோசனை செய்யாமல் கூறினேன், நான் அழைத்தால் என் குரு இந்த வீட்டிலேயே தோன்றுவார்.

ஒவ்வொரு கண்ணிலும் உற்சாகம் ஒளிர்ந்தது. அம்மாதிரியான ஓர் அதிசயத்தை அக்குழு காண விரும்பியதில் ஆச்சரியம் இல்லை. அரை மனத்துடன் இரண்டு புதுக்கம்பளங்களும் அமைதியான அறையும் கேட்டேன்.

ஆகாய வெளியிலிருந்து குருதேவர் தோன்றுவார், என்றேன் நான். அமைதியாக வெளியில் இருங்கள். நான் சீக்கிரமே உங்களை அழைக்கிறேன்.

நான் வினயத்துடன் என் குருவை அழைத்தபடி தியானத்தில் ஆழ்ந்தேன். இருட்டான அந்த அறையில்

மங்கலான இதந்தரும் ஒளி பரவியது. அதிலிருந்து ஒளி மயமான பாபாஜியின் உருவம் வெளிப்பட்டது.

லாஹிரி, இந்த அற்ப விஷயத்திற்காகவா நீ என்னை அழைக்கிறாய்? குருதேவரின் பார்வைக் கடுமையாயிருந்தது. சத்தியம், உண்மையாகவே தேடுபவர்களுக்கு உரியது; வெறும் ஆவலுடையவர்களுக்கல்ல. கண்ணால் பார்க்கும் பொழுது நம்புவது சுலபம். ஆன்மாவை ஆழ்ந்து தேட அவசிய மில்லை. இந்திரியங்களைக் கடந்த உண்மையானது, இயல்பான லோகாயத அவநம்பிக்கையை யார் வெல்கிறார்களோ அவர்களால் தகுதியுடன் கண்டு பிடிக்கப்படுகிறது. அவர் தீவிரமாகக் கூறினார், என்னைப் போக விடு!

நான் பிரார்த்தித்தபடியே அவர் காலடியில் வீழ்ந்தேன். தெய்வீக குருவே, என் பெரிய தவற்றை நான் உணர்கிறேன்; நான் தாழ்மையுடன் மன்னிப்பும் கேட்கிறேன். ஆன்மீக விஷயங்களில் குருடாயிருந்த இவர்கள் மனத்தில் நம்பிக்கையை ஊட்டுவதற்காகவே நான் தங்களை அழைக்கத் துணிந்தேன். தாங்கள் மிகுந்த பெருந்தன்மையுடன் என் அழைப்புக்கிணங்கி இங்கு வந்திருப்பதால் தயவு செய்து, என் நண்பர்களுக்கு அருளாசி வழங்காமல் செல்லாதீர்கள். அவர்கள் நம்பிக்கை இல்லாதவர்கள்தாம். இருந்தாலும் என் விசித்திரமான கூற்றைக் குறைந்தபட்சம் சோதித்துப் பார்க்க விருப்பமுடையவர்களாக இருந்தார்களல்லவா?

மிக நல்லது. நான் கொஞ்ச நேரம் தங்குகிறேன். உன்

நண்பர்களுக்கு முன்னால் உன் சொற்கள் அவமதிக்கப்படுவதை நான் விரும்பவில்லை. பாபாஜியின் முகம் கனிவாகியது. ஆனால் அவர் மிருதுவாகத் தொடர்ந்தார். இனிமேல், என் மகனே, உனக்கு எப்பொழுது தேவையோ அப்பொழுதுதான் நான் வருவேன்; நீ கூப்பிடும் பொழுதெல்லாம் இல்லை, என்றார்.[11]

நான் கதவைத் திறந்தபொழுது அந்தச் சிறிய குழுவில் இறுக்கமான மௌனம் ஆட்சி புரிந்தது. தங்கள் புலன்களையே நம்பாததுபோல் அக்கம்பள ஆசனத்தில் அமர்ந்திருந்த ஒளிமயமான உருவத்தைக் கண்கொட்டாமல் அவர்கள் பார்த்தனர்.

இது எங்களை மொத்தமாக வசப்படுத்தியதாகும்! ஒருவர் ஆர்ப்பாட்டத்துடன் நகைத்தார். நாங்கள் அறியாமல் இந்த அறைக்குள் யாரும் நுழைந்திருக்கவே முடியாது!

பாபாஜி ஒரு புன்சிரிப்புடன் முன் வந்து ஒவ்வொருவரையும் தன் கதகதப்பான, திடமான உடல் தசைகளைத் தொட்டுப் பார்க்குமாறு சைகை செய்தார். அவர்கள் சந்தேகமெல்லாம் நீங்கியது. என் நண்பர்கள் பயபக்தியுடன் வருந்தியவாறு தாங்களாகவே அவர் காலடியில் வீழ்ந்து வணங்கினார்கள்.

ஹல்வா தயாராகட்டும். பாபாஜி இந்த வேண்டுகோளை விடுத்தது, அந்தக் குழுவிற்கு அவருடைய உடலின் உண்மையை மேலும் நிலைநாட்டுவதற்காகவே என்பதை நான் அறிவேன்.

ஹல்வா தயாராகிக் கொண்டிருந்தபொழுது பாபாஜி சுமுகமாக உரையாடிக் கொண்டிருந்தார். இந்த சந்தேகிக்கும் தாமஸ்கள் (Thomases) புனித பவுல் களாக (St. Pauls) உருமாற்றம் பெற்றது விந்தையே. நாங்கள் எல்லோரும் உண்ட பிறகு பாபாஜி எங்கள் ஒவ்வொருவருக்கும் ஆசி கூறினார். திடீரென்று ஒரு மின்னல் தோன்றியது; பாபாஜியின் உடல் மின் அணுக்களின் மூலப்பொருட்கள் அக்கணமே ரசாயன மாற்றமடைந்து பரவும் ஆவி ஒளியாகியதை நாங்கள் கண்கூடாகக் கண்டோம். கடவுளுடன் இசைந்த குருதேவரின் இச்சா சக்தி அவருடைய உடலாக ஒன்று சேர்ந்திருந்த அண்ட வெளி அணுக்களின் பிடியைத் தளர்த்தியது; உடனே கோடிக்கணக்கான நுண் உயிர்த்துகள் பொறிகள் அண்ட கோச களஞ்சியத்திற்குள் மறைந்தன.

மரணத்தை வென்றவரை நான் என் சொந்தக் கண்களாலேயே கண்டேன். அக்குழுவில் ஒருவரான மைத்ரா[12] மிகுந்த பயபக்தியுடன் உரைத்தார். அவர் முகம் சமீபத்தில் உண்டான விழிப்பின் ஆனந்தத்துடன் உருமாறியிருந்தது. ஒரு குழந்தை குமிழிகளுடன் விளையாடுவதுபோல் அந்தப் பரம குரு காலம், இடம் இவைகளுடன் விளையாடினார். விண்ணுலகு, மண்ணுலகு இவைகளின் திறவுகோலைக் கையில் வைத்திருக்கும் ஒருவரைக் கண்டு விட்டேன்.

நான் சீக்கிரமே தானாபூருக்குத் திரும்பினேன். பரமாத்மாவில் திடமாக நங்கூரம் ஊன்றிக் கொண்டு

நான் மறுபடியும் ஒரு இல்லறத்தானின் குடும்பம் மற்றும் தொழில் சார்ந்த பலவிதமான கடமைகளை ஏற்றேன், என்று லாஹிரி மகாசயர் கூறி முடித்தார்.

லாஹிரி மகாசயர், ஸ்வாமி கேவலானந்தருக்கும் ஸ்ரீ யுக்தேஸ்வருக்கும் பாபாஜியை இன்னொரு முறை சந்தித்த கதையையும் கூறி இருந்தார். அந்தப் பரமகுரு உனக்குத் தேவையிருக்கும் பொழுது நான் வருவேன் என்ற தன் வாக்குறுதியை நிறைவேற்றிய பல தடவைகளில் அதுவும் ஒன்றாகும்.

அது, அலகாபாத்தில் கும்பமேளா நடக்கும் காட்சியாகும். லாஹிரி மகாசயர் தன் சீடர்களிடம் விவரித்தார். என் அலுவலகக் கடமைகளிலிருந்து சிறு விடுமுறையின் பொழுது நான் அங்கு சென்றிருந்தேன். அந்தப் புனித விழாவில் பங்கெடுத்துக் கொள்ளும் பொருட்டு தொலை தூரத்திலிருந்து வந்திருந்த சாதுக்கள், சன்னியாசிகள் கூட்டத்தின் மத்தியில் நான் சுற்றிக் கொண்டிருந்த பொழுது, உடம்பெல்லாம் விபூதியைப் பூசிக் கொண்டு திருவோட்டை ஏந்தியிருக்கும் ஒரு துறவியைக் கண்டேன். மனத்திற்குள் துறவியின் பாங்கின்றி வெளிச் சின்னங்களை அணிந்த அவன் ஒரு பாசாங்குக்காரன் என்ற எண்ணம் என் மனத்தில் எழுந்தது.

நான் அந்தத் துறவியைக் கடந்ததுதான் தாமதம். என் திகைப்புற்ற கண் அங்கு பாபாஜியைக் கண்டது. அவர் சடைமுடி தரித்த ஓர் ஏகாந்தத் துறவியின் முன் மண்டியிட்டு வணங்கிக் கொண்டிருந்தார்.

குருஜி! நான் அவசரமாக அவரருகில் சென்றேன். ஐயா, தாங்கள் இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?

நான் இந்த சன்னியாசியின் பாதங்களைக் கழுவிக் கொண்டிருக்கிறேன். பிறகு அவரது சமையல் பாத்திரங்களைத் தேய்க்கப் போகிறேன். பாபாஜி ஒரு சிறு குழந்தையைப் போன்று என்னைப் பார்த்து முறுவலித்தார்; உயர்ந்தவரோ, தாழ்ந்தவரோ எல்லா மனித உடற் கோயில்களிலும் இறைவன் சமமாக வசிக்கிறார் என்பதை உணர்ந்து நான் யாரையும் கண்டனம் செய்யாமல் இருக்க வேண்டுமென்று எனக்கு அறிவிக்கிறார் என்பதை நான் அறிந்தேன்.

அந்த மகாகுரு தொடர்ந்தார், ஞானி மற்றும் அஞ்ஞானி சாதுக்களுக்குச் சேவை செய்வதின் மூலம் நான் குண நலன்களில் மிக உயர்ந்ததான, இறைவனுக்கு மற்ற எல்லாவற்றையும் விட பிரியமான பணிவு என்னும் பண்பைக் கற்றுக் கொள்கிறேன்.[13]

---

1 பிறகு ஒரு ராணுவ மருத்துவஆரோக்கிய நிலையமாயிற்று. 1861ல் ஆங்கில அரசாங்கம் இந்தியாவில் தந்தி முறையை ஏற்கனவே நிறுவி இருந்தது.

2 இமயத்தின் மிக உயர்ந்த சிகரங்களில் ஒன்றாகிய நந்தாதேவியின் (25, 661 அடிகள்) அடிவாரத்தில், அல்மோரா மாவட்டத்தில், ராணிகேத் என்னும் இடம் உள்ளது.

3 பாபாஜி, உண்மையில் லாஹிரி மகாசயரின் முற்பிறவியின் பெயராகிய கங்காதர் என்றே அழைத்தார். கங்காதர் (பதவுரையின்படி, கங்கையை, அதாவது கங்கை நதியைத் தாங்கி இருப்பவன் என்று பொருளாகும்), சிவபெருமானின் பெயர்களில் ஒன்றாகும். புராணக்கதைகளின்படி புனித நதியான கங்கை தேவலோகத்திலிருந்து இறங்கி வந்ததாகும். கங்கை நேரே பூமியில் இறங்கினால் அதன் வேகத்தின் சக்தியை இம்மண்ணுலகினால் தாங்க முடியாது என்று சிவபெருமான் கங்கையை தன் ஜடா முடியில் தாங்கி, அதிலிருந்து நலம் பயக்கும் வண்ணம் பாயவிட்டார். கங்காதர் என்பதன் தத்துவார்த்தம் முதுகுத் தண்டில் ஓடும் உயிரோட்டம் என்ற நதியை அடக்கும் திறன் படைத்தவன் என்பதாம்.

4 ஓய்வு நாள் மனிதனுக்காக உண்டாக்கப்பட்டதேயொழிய மனிதன் ஓய்வு நாளுக்காக உண்டாக்கப்படவில்லை. மாற்கு 2:27 (பைபிள்).

5 கர்மவினையின் விதிப்படி ஒவ்வொரு மனித ஆசையும் இறுதியில் நிறைவை அடைந்தாக வேண்டும். இம்மாதிரியாக ஆன்மீகத்தைச் சாராத ஆசையாகிய சங்கிலி மனிதனை மறுபிறவி என்னும் சக்கரத்துடன் பிணைத்துவிடுகிறது.

6 அதிசயம் என்பது என்ன? அது ஒரு கண்டனம், அது மனிதகுலத்தை நோக்கி செயற்படும் ஆட்சேபமற்ற கேலி. எட்வர்ட் யங், "இரவு எண்ணங்கள்." (Night Thoughts)

7 பொருளின் அணு அமைப்பின் கோட்பாடு, பாரதத்தின் வைசேஷிகம் மற்றும் நியாயம் ஆகிய ஆராய்ச்சி நூல்களில் விவரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு அணுவின் குழிக்குள்ளும் சூரிய கிரணங்களினூடே தோன்றும் சிறு தூசிகளைப் போன்று பலதரப்பட்ட பரந்த உலகங்கள் அடங்கியுள்ளன.யோகவசிஷ்டம்.

8 உடல், மனம் மற்றும் ஆன்மீகத் துன்பங்கள்: இவைகள் முறையே வியாதி, மனத்தைப் பற்றிய குறைபாடுகள் அல்லது சிக்கல்கள், மற்றும் ஆத்மாவைப் பற்றிய அஞ்ஞானம் மூலமாக வெளித் தோன்றுகின்றன.

9 முதலில் மகாவதார பாபாஜி மற்றவர்களுக்குக் கிரியா யோகத்தை உபதேசிக்கும்படி லாஹிரி மகாசயருக்கு மட்டுமே அனுமதி வழங்கினார். யோகாவதாரர் பிறகு அவருடைய சீடர்கள் சிலருக்குக் கூட கிரியாவை உபதேசிக்கும் அதிகாரம் வழங்குமாறு வேண்டினார். பாபாஜி இதை ஒப்புக்கொண்டு எதிர் காலத்தில் கிரியா போதனையானது, கிரியா பாதையில் முன்னேறியவர்களாலும், லாஹிரி மகாசயரால் அதிகாரம் அளிக்கப்பட்டவர்களாலும் அல்லது அவருடைய அதிகாரம் பெற்ற சீடர்களால் அமைக்கப்பட்ட வழிமுறைகளாலும் வழங்கப்பட வேண்டுமென்று விதித்தார். முறையாக அதிகாரம் பெற்ற கிரியா ஆசிரியர்களால் உபதேசம் செய்யப்பட்டு, அதில் உண்மையாகவும் நம்பிக்கையுடனும் உள்ள அனைத்து கிரியா யோகிகளின் ஆன்மீக நலனுக்கு பாபாஜி ஒவ்வொரு பிறவியிலும் தான் பொறுப்பு ஏற்றுக் கொள்வதாகக் கருணையுடன் வாக்களித்தார்.

யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா மற்றும் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்பின் கிரியா யோக உபதேசம் பெறுபவர்கள், ஓர் உறுதி மொழியை அதாவது கிரியா முறையை அவர்கள் மற்றவர்களுக்கு வெளிப்படுத்தமாட்டார்கள் என்று அவசியமாகக் கையெழுத்திட வேண்டியுள்ளது. இவ்வழியினால் எளிய ஆனால் மிகச் சரியான கிரியா முறை அதிகாரமற்ற ஆசிரியர்களினால் ஏற்படும் மாறுதல்களும் திரிபுகளுமின்றி காக்கப்பட்டு அதனுடைய மூலத் தூய்மையான வடிவிலேயே இருந்து வருகிறது.

சாதாரண மக்கள் கிரியா யோகத்தினால் நன்மையடைய வேண்டுமென்ப தற்காக, தவம் மற்றும் துறவுக்கான புராதனக் காலக் கட்டுப்பாடுகளை பாபாஜி நீக்கியிருந்தாலும், அவர் லாஹிரி மகாசயருக்கும் மற்றும் அவருடைய ஆன்மீக வம்சத்தின் சந்ததியினருக்கும் (YSS–SRF வம்ச குருமார்கள்) கூறியுள்ளது: உபதேசத்தை யார் நாடினாலும் அவருக்கு, கிரியா யோகப் பயிற்சிக்குத் தயாராகும்படியான ஒரு குறிப்பிட்டக் கால ஆரம்ப ஆன்மப் பயிற்சியை விதிக்க வேண்டும் என்பதாகும். கிரியா போன்ற அதிக முன்னேறிய ஒரு யுக்தியானது, ஒழுங்கீனமான ஆன்மீக வாழ்க்கையுடன் இணைய முடியாது. கிரியா யோகம், ஒரு தியான முறை என்பதைவிடவும் அதிகமானது; அது ஒரு வாழ்க்கை முறையுமாகும்.

மேலும் அதில் உபதேசம் பெறுபவர்களால் சில கட்டுப்பாடுகளும் ஆன்மீக ஒழுங்குமுறைகளும் ஒப்புக் கொள்ளப்பட்டே ஆக வேண்டும். யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியாவும் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்பும் மகாவதார் பாபாஜி, லாஹிரி மகாசயர், ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வர், பரமஹம்ஸ யோகானந்தர் வழிமுறையாக வந்த இந்த போதனைகளை மிகுந்த விசுவாசத்துடன் கடைபிடித்து வருகின்றன. YSS–SRF பாடங்களிலும் மற்றும் YSS–SRF அதிகாரம் பெற்ற பிரதிநிதிகளாலும் கற்பிக்கப்படும் ஹாங்ஸா மற்றும் ஓம் உத்திகள் கிரியா யோகத்திற்கு முன்னோடியாகவும், கிரியா யோக மார்க்கத்தின் அங்கமாகவும் இருக்கின்றன. உணர்வு நிலையை ஆத்ம ஞானத்திற்கு உயர்த்துவதற்கு இந்த உத்திகள் மிகவும் பலனுள்ளவையாகும், மேலும் இவை ஆன்மாவைத் தளையிலிருந்து விடுவிக்கும். (பிரசுரதாரரின் குறிப்பு)

10 அத்தியாயம் II:40

காசிக்கு அருகாமையிலுள்ள ஒரு பட்டணம்.

11 இறைவனை நோக்கிச் செல்லும் பாதையில் லாஹிரி மகாசயரைப் போன்ற ஒளிபெற்ற மகான்கள்கூட அதிக உற்சாகத்தினால் துன்புற்று ஒழுங்கிற்குக் கட்டுப்பட வேண்டியதாகிறது. பகவத் கீதையில் பல பகுதிகளில், பக்தர்களில் தலை சிறந்தவனாகிய அர்ஜுனனை தெய்வீகக் குருவாகிய கிருஷ்ணன் கண்டனம் செய்வதை நாம் காண்கிறோம்.

12 பின்னர், மைத்ரா மகாசயர் என்று அழைக்கப்பட்டு ஆத்மஞானத்தில் மிக முன்னேற்ற மடைந்தவரானார். நான் உயர்நிலைப்பள்ளி படிப்பை முடித்த சிறிது காலத்திலேயே மைத்ரா மகாசயரைச் சந்தித்தேன். காசியில் மகாமண்டல் ஆசிரமத்தில் நான் வசித்தபொழுது அவர் அங்கு விஜயம் செய்தார். அப்பொழுது அவர் மொராதாபாதில் ஒரு குழுவின் முன்னர் பாபாஜி தோன்றியதைப் பற்றி எனக்குக் கூறினார்: அந்த அற்புதத்தின் விளைவாக, மைத்ரா மகாசயர் விளக்கினார், நான் லாஹிரி மகாசயரின் ஆயுட்காலச் சீடனாக மாறிவிட்டேன்.

13 அவர் வானத்திலும் பூமியிலுமுள்ளவைகளைப் பார்க்கும்படி தம்மைத் தாழ்த்துகிறார்.சங்கீதம் 113:6 (பைபிள்). தன்னை உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான்; தன்னை தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான். மத்தேயு 23:12 (பைபிள்).

நான் அல்லது பொய்யான தான்ஜ பணியச் செய்வது ஒருவனது நிரந்தர மெய்த் தன்மையை அறிவதாகும்.

அத்தியாயம் 35

# லாஹிரி மகாசயரின் புனித வாழ்க்கை

இப்படி எல்லா நீதியையும் நிறைவேற்றுவது நமக்கு ஏற்றதாயிருக்கிறது.[1] யோவான் ஸ்நானனி (John the Baptist) டம் கூறிய இந்தச் சொற்களிலும், தனக்குத் தீட்சை அளிக்கும்படி யோவானைக் கேட்டுக் கொண்டதிலும் இயேசு தனது குருவின் தெய்வீக உரிமைகளை அங்கீகரிக்கிறார்.

கிழக்கத்திய கண்ணோட்டத்தில்[2] பைபிளைப் பக்தி சிரத்தையுடன் படித்ததிலிருந்தும் என் உள்ளுணர்வில் அறிந்ததிலிருந்தும் யோவான் ஸ்தானகன், முற்பிறவிகளில் கிறிஸ்துவின் குரு என்று எனக்கு உறுதியாயிற்று. பைபிளின் எண்ணற்ற பகுதிகள் யோவானும் இயேசுவும் அவரவர்களுடைய முற்பிறவிகளில் முறையே எலியா (Elijah)வும் அவருடைய சீடன் எலிசா (Elisha)வுமாக இருந்திருக்கிறார்கள் என்று குறிப்பாகக் கூறுகின்றன. (இந்தப் பெயர்களிலுள்ள எழுத்துக்கள் பழைய ஏற்பாட்டில் உள்ளவை. கிரேக்க மொழி பெயர்ப்பாளர்கள் இப்பெயர்களை இலியாஸ் (Elias) மற்றும் எலிஸியஸ் (Eliseus) என்று குறிப்பிட்டார்கள். புது ஏற்பாட்டில் இவைகள் இம்மாறிய வடிவத்தில் மறுபடி தோன்றுகின்றன).

பழைய ஏற்பாட்டின் இறுதிப்பாகம், எலியா மற்றும் எலிசாவின் மறுபிறப்பைப்பற்றி முன்கூட்டியே கூறப்பட்டிருக்கும் பகுதியாகும்: இதோ, கர்த்தருடைய பெரிதும், பயங்கரமுமான நாள் வருவதற்கு முன்னே நான் உங்களிடத்திற்கு எலியா தீர்க்கதரிசியை அனுப்புகிறேன்.[3] இவ்வாறு கர்த்தருடைய... முன்னே அனுப்பப்பட்ட யோவான் (எலியா), கிறிஸ்துவிற்குக் கட்டியக்காரனாக சேவை புரிய சிறிது காலம் முன்பே பிறந்தார். தந்தை சகரியாஸுக்கு முன் ஒரு தேவதூதன் தோன்றி அவருக்குப் பிறக்கும் மகன் யோவான், எலியா (இலியாஸ்) வைத் தவிர யாருமில்லை என்பதை உறுதிப் படுத்தினான்.

தேவதூதன் அவனை நோக்கி: சகரியாஸ், பயப்படாதே, உன் வேண்டுதல் கேட்கப்பட்டது; உன் மனைவியாகிய எலிஸபெத் உனக்கு ஒரு குமாரனைப் பெறுவாள், அவனுக்கு யோவான் என்று பெயரிடுவாயாக... அவன் இஸ்ரேல் சந்ததியாரில் அனேகரை அவர்கள் தேவனாகிய கர்த்தரிடத்திற்குத் திருப்புவான். பிதாக்களுடைய இருதயங்களைப் பிள்ளைகளிடத்திற்கும், கீழ்ப்படியாதவர்களை நீதிமான்களுடைய ஞானத்திற்கும் திருப்பி ஜனத்தைக் கர்த்தருக்கு ஆயத்தப் படுத்தும் படியாக,[4] அவன் எலியாவின் ஆவியும் பலமும் உடையவனாய் அவருக்கு முன்னே நடப்பான்[5] என்றான்.

இயேசு இரண்டு தடவை எலியா (இலியாஸ்) வை யோவான் என்று சந்தேகத்திற்கிடமின்றி

கண்டறிந்துள்ளார். இலியாஸ் ஏற்கனவே வந்தாகிவிட்டது. அவர்கள் அவரை அறியவில்லை... அவர் யோவான் ஞானஸ்நானனைக் குறித்துத் தங்களுக்குச் சொன்னார் என்று சீடர்கள் அப்பொழுது அறிந்து கொண்டார்கள்.[6] கிறிஸ்து மறுபடியும் கூறுகிறார்: நியாயப் பிரமாணமும் தீர்க்கதரிசிகள் யாவரும் யோவான் வரைக்கும் தீர்க்க தரிசனம் உரைத்ததுண்டு. நீங்கள் ஏற்றுக்கொள்ள மனதாயிருந்தால், வருகிறவனாகிய இலியாஸ் இவன்தான்.[7]

யோவான், தான் இலியாஸ் (எலியா) என்பதை மறுத்தபொழுது,[8] அவர் அபிப்பிராயம் என்னவெனில், தான் யோவான் என்ற பணிவான உருவில், பெயர்பெற்ற மகா குருவாகிய எலியாவின் வெளிப்புகழுடன் வரவில்லை என்பதாகும். அவர் தன் முந்தைய பிறவியால் தன் ஆன்மீகப் பொக்கிஷத்தையும் தன் புகழின் சால்வை யையும் தன் சீடர் எலிசாவிற்கு அளித்துவிட்டிருந்தார். எலிசாவும் கூறினார்: உம்மிடத்திலுள்ள ஆவியின் வரம் எனக்கு இரட்டிப்பாய்க் கிடைக்கும்படி வேண்டுகிறேன். அதற்கு அவர்: அரிதான காரியத்தைக் கேட்டாய். உன்னை விட்டு நான் எடுத்துக் கொள்ளப்படுகையில் என்னை நீ கண்டால் அது உனக்குக் கிடைக்கும்... பின்பு அவர் எலியாவின் மேலிருந்து கீழே விழுந்த சால்வையை எடுத்துக் கொண்டார்.[9]

அவர்களது பாகங்கள் தலைகீழாக மாறின. ஏனெனில் எலிசாஇயேசு தெய்வீகத்தில் பூரணமடைந்து விட்டதால்

எலியாயோவான் வெளித் தோற்றத்தில் குருவாக இருக்க வேண்டிய அவசியமில்லை.

கிறிஸ்து மலை[10] யின் மேல் உருமாற்றம் செய்யப்பட்ட பொழுது அவர் மோசஸுடன் கண்டது அவர் குரு இலியாஸையே ஆகும். சிலுவையின்மீது அவரது முடிவான நேரத்தில் இயேசு: ஏலீ, ஏலீ லாமா சபாக்தானி? (Eli, Eli lama sabachthani?) என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்; அதற்கு என் தேவனே, என் தேவனே, ஏன் என்னைக் கைவிட்டீர்? என்று அர்த்தம். அங்கே நின்றவர்களில் சிலர் அதைக் கேட்ட பொழுது, இவன் இலியாஸைக் கூப்பிடுகிறான் என்றார்கள்...இலியாஸ் இவனை இரட்சிக்க வருவானோ, பார்ப்போம் என்றார்கள்.[11]

யோவான்-இயேசு இவர்களிடையே நிலவிய கால வரையற்ற குருசிஷ்ய பந்தம் பாபாஜி லாஹிரி மகாசயரிடமும் நிலவியிருந்தது. மரணமற்ற அந்த குரு மிகுந்த கருணையுடன் தன் சீடனின் இரு வாழ்க்கைகளுக்கிடையில் இருந்த ஆழங்காண முடியாத சுழல்களுக்கிடையே நீந்தி, லாஹிரி மகாசயரின் குழந்தை மற்றும் மனிதப்பருவத்தில் அவரது அடுத்தடுத்த முயற்சிகளை வழிகாட்டியருளினார். என்றும் துண்டிக்கப்படாத அந்தத் தொடர்பை வெளிப்படையாக மீண்டும் உறுதிப்படுத்த அவருடைய சீடருக்கு முப்பத்து மூன்று வயது ஆகும் வரை தக்க தருணம் வந்ததாக பாபாஜி கருதவில்லை.

ராணிகேத்தில் ஏற்பட்ட சிறு சந்திப்புக்குப் பிறகு

தன்னலமற்ற அந்தக் குரு, தன் அன்புச் சீடனைத் தன்னருகில் வைத்துக் கொள்ளாமல் வெளி உலகத் தொண்டிற்காக அனுப்பிவைத்தார். என் மகனே, உனக்குத் தேவைப்படும் பொழுதெல்லாம் நான் வருவேன். எந்த மனித அன்பன், இம்மாதிரியான வாக்குறுதியின் எண்ணற்ற குறிப்புகளை நிறைவேற்ற முடியும்?

1861-ல் காசியின் எங்கோ ஒரு மூலையில், பொதுவாக சமூகத்திற்குத் தெரியாமலேயே ஒரு மகத்தான ஆத்மீக மறுமலர்ச்சி தொடங்கியது. மலர்களின் நறுமணத்தை எப்படி அடக்கிவிட முடியாதோ அதே போல் லாஹிரி மகாசயரும் ஒரு லட்சிய இல்லறத்தாராக அமைதியான முறையில் வசித்து வந்தபோதிலும் அவருடைய இயல்பான புகழை மறைக்க முடியவில்லை. பாரதத்தின் ஒவ்வொரு பாகத்திலிருந்தும் தேனீக்கள் போல் பக்தர்கள், முக்தியடைந்த மகானாகிய லாஹிரி மகாசயரிடம் தெய்வீக அமிர்தத்தை நாட ஆரம்பித்தார்கள்.

லாஹிரி மகாசயரை பரவச பாபு எனப் பிரியமாக அழைக்கும் அவருடைய அலுவலகத்தின் ஆங்கில மேலதிகாரி, அவரிடம் ஓர் அதிசயமான, மேம்பட்ட மாறுதலை முதலில் கண்டவர்களில் ஒருவர்.

ஐயா, நீங்கள் வருத்தமாகத் தென்படுகிறீர்கள். என்ன சங்கடம்? ஒரு நாள் காலை லாஹிரி மகாசயர் தன் எஜமானரை நோக்கி அனுதாபத்துடன் விசாரித்தார்.

இங்கிலாந்தில் என் மனைவி மிகவும் நோயுற்றிருக்கிறாள். அந்தக் கவலையினால் நான்

அலைக்கழிக்கப்படுகிறேன்.

நான் அவரைப்பற்றி உங்களுக்கு செய்தி கொண்டு வருகிறேன். லாஹிரி மகாசயர் அவ்வறையை விட்டுத் தனிமையான ஓர் இடத்தை நாடி சிறிது நேரம் அமர்ந்திருந்தார். அவர் திரும்பியதும் ஆறுதலுடன் முறுவலித்தார்.

உங்கள் மனைவி குணமடைந்து வருகிறார்; தற்சமயம் அவர் உங்களுக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறார். எல்லாமறிந்த அந்த யோகி அக்கடிதத்தின் சில பாகங்களைக் கூறினார்.

பரவச பாபு, நீர் சாதாரண மனிதரில்லை என்பது எனக்கு ஏற்கனவே தெரியும். ஆயினும் நீர் நினைத்த மாத்திரத்தில் காலம், இடம் இவற்றைக் கடக்க முடியும் என்பதை என்னால் நம்ப முடியவில்லையே!

வாக்குறுதி அளிக்கப்பட்ட அக்கடிதம் கடைசியில் வந்தது. மிகுந்த திகைப்பிலாழ்ந்த அந்த மேலதிகாரி அந்தக் கடிதத்தில் அவரது மனைவியின் குணமடைந்துவரும் நற்செய்தி மட்டுமின்றி, பல வாரங்களுக்கு முன்னர் அப்பெரிய மகான் கூறியிருந்த அதே சொற்றொடர்களும் இடம் பெற்றிருந்ததைக் கண்டார்.

சில மாதங்கள் கழித்து அவரது மனைவி இந்தியாவிற்கு வந்தாள். லாஹிரி மகாசயரைக் கண்டதும் அவரை பயபக்தியுடன் உற்று நோக்கினாள்.

ஐயா, ஒரு மகிமை பொருந்திய ஒளிவட்டத்தின் மத்தியில் நான் உங்கள் உருவத்தைப் பல மாதங்களுக்கு

முன் லண்டன் நகரில் நோய்வாய்ப்பட்டு இருந்தபொழுது என் படுக்கையருகில் கண்டேன். அக்கணமே நான் முழுமையாக குணப்படுத்தப்பட்டேன். பிறகு சீக்கிரமே நான் இந்தியாவிற்கு நீண்ட கடற்பயணத்தை மேற்கொள்ள முடிந்தது, என்று அவள் கூறினாள்.

அந்த தெய்வீக குரு ஒவ்வொரு நாளும் ஒன்று அல்லது இரண்டு பக்தர்களுக்குக் கிரியா யோகத்தை உபதேசித் தருளினார். இந்த ஆன்மீகக் கடமைகள், அவருடைய அலுவலகப் பொறுப்புகள் மற்றும் குடும்ப வாழ்க்கை இவைகளுடன் கூட, இப்பெரிய மகான் கல்வியில் உற்சாகமான ஆர்வம் கொண்டார். அவர் பல படிக்கும் குழுக்களை ஏற்படுத்தினார்; மேலும் காசியில் பெங்காலிடோலா என்ற பகுதியிலிருந்த ஒரு பெரிய உயர்நிலைப் பள்ளியின் வளர்ச்சியில் முக்கிய பங்கு வகித்தார். அவரது கீதை சம்மேளனம், (Gita Assembly) என்று அழைக்கப்பட்ட வாராந்திரக் கூட்டங்களில் அக் குரு ஆவலுடன் உண்மையைத் தேடும் பலருக்குச் சமயநூல்களை விளக்கிக் கூறினார்.

இம்மாதிரியான பலவித காரியங்களின் மூலம் லாஹிரி மகாசயர் ஒரு பொதுவான சவாலுக்குப் பதில் கூற முனைந்தார்: தன் தொழில் மற்றும் சமூகக் கடமைகளைச் செய்து முடித்த பிறகு பக்தி மயமான தியானத்திற்கு நேரம் எங்கே உள்ளது? இணக்கமான நடுவுநிலையில் செயல்பட்ட அப்பெரிய இல்லற குருவின் வாழ்க்கை ஆயிரக்கணக்கான ஆடவர், பெண்டிருக்கு மிக ஊக்கமளிப்பதாக அமைந்தது.

சாதாரண ஊதியம் மட்டுமே பெற்று, சிக்கனமாகவும், ஆடம்பரமில்லாமலும் எல்லோராலும் சுலபமாக அணுக முடிந்தவராயும் இருந்த அந்த மகான் இயல்பாகவும் மகிழ்ச்சியுடனும் ஒரு நியதியான உலக வாழ்க்கைப் பாதையில் சென்று கொண்டிருந்தார்.

பரம்பொருளில் திளைத்துக் கொண்டிருந்தாலும் லாஹிரி மகாசயர் எல்லா மனிதர்களிடமும் அவர்களுடைய வித்தியாசமான தகுதிகள் எவ்வாறாயினும், மரியாதை செலுத்தினார். அவருடைய பக்தர்கள் அவரை வணங்கும் பொழுது அவரும் திரும்ப அவர்களுக்குத் தலை வணங்குவார். குழந்தையைப் போன்ற பணிவுடன் அந்தக் குரு அடிக்கடி மற்றவர்களின் பாதங்களைத் தொடுவார். ஆனால், குருவை வணங்குவது கீழை நாட்டு புராதனமான வழக்கம்தான் என்றாலும்கூட, அவர்கள் அதே போன்ற மரியாதையைத் தனக்கு அளிக்க அனுமதிக்கமாட்டார்.

ஒவ்வொரு மதத்தைச் சேர்ந்தவருக்கும் கிரியா உபதேசக் கொடையை அளித்தது, லாஹிரி மகாசயரின் வாழ்க்கையில் தனிச் சிறப்புப்பெற்ற ஓர் அம்சமாகும். இந்துக்கள் மட்டுமின்றி முஸ்லிம்களும் கிறிஸ்துவர்களும் அவரது முன்னணி சிஷ்யர்களில் அடங்குவர். அத்வைதிகள், த்வைதிகள், வெவ்வேறு மதங்களைச் சார்ந்தவர்கள் அல்லது ஸ்தாபிக்கப்பட்ட எந்த மதத்தையும் சாராதவர்கள் போன்ற யாவரும் அந்தப் பொது குருவினால் எவ்வித வேறுபாடுமின்றி வரவேற்கப்பட்டு உபதேசிக்கப்பட்டனர். நன்கு

முன்னேற்றமடைந்த அவருடைய சீடர்களில் அப்துல் கஃபூர்கான் என்னும் முஸ்லிம் ஒருவராவார். லாஹிரி மகாசயர், உயர்ந்த சாதி அல்லது பிராமண குடும்பத்தைச் சேர்ந்தவராயினும் அவருடைய காலத்தில் நிலவியிருந்த கடுமையான ஜாதி மத மூடக் கோட்பாடுகளைத் தகர்த்தெறியும் முயற்சிகளை மிகுந்த தைரியத்துடன் மேற்கொண்டார். அம்மகானுடைய சர்வ வியாபகமான இறக்கைகளின் கீழ் வாழ்க்கையின் ஒவ்வொரு துறையில் இருந்தவர்களும் புகலிடம் பெற்றனர். இறைவனருள் பெற்ற எல்லா மகான்களையும் போலவே லாஹிரி மகாசயரும் சமூகத்தில் விலக்கப்பட்டவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள் யாவருக்கும் புது நம்பிக்கை அளித்தார்.

நீ யாருக்கும் சொந்தமில்லை. யாரும் உனக்குச் சொந்தமில்லை என்பதை நினைவில் கொள். இவ்வுலகத்திலுள்ள எல்லாவற்றையும் ஒரு நாள் திடீரென்று விட்டுவிட வேண்டுமென்பதை நினைத்துப்பார்ஆதலால் இறைவனிடம் இப்போதே அறிமுகப்படுத்திக்கொள், என்று அந்த மகாகுரு தன் சீடர்களுக்குக் கூறினார். தெய்வீக ஞானமென்னும் பலூனில் தினமும் சவாரி செய்து, வரப்போகின்ற மரணமென்னும் சூட்சும யாத்திரைக்கு உன்னைத் தயார் செய்துகொள். மாயையினால் நீ உன்னைச் சதையும் எலும்பும் கூடிய ஒரு கட்டான உடலாகக் காண்கிறாய். அது ஒரு துன்பக் கூடே தவிர வேறல்ல.[12] இடைவிடாது தியானம் செய். அதனால் நீ சீக்கிரமே உன்னை

எல்லாவிதமான துக்கத்திலிருந்தும் விடுபட்ட எல்லையற்ற சாரமாக உணர்வாய். உடலின் கைதியாக இருந்து கொண்டிருப்பதை நிறுத்து. கிரியா என்னும் ரகசியத் திறவுகோலின் மூலம் பரம்பொருளினுள் தப்பித்துக் கொள்ளக் கற்றுக்கொள்.

அம்மகான் தன் பல்வேறு சீடர்களையும், அவரவர்களுடைய மதத்தின் நல்ல பரம்பரைப் பண்பாடுகளை பின்பற்ற ஊக்குவித்தார். முக்திக்கு ஒரு நடைமுறை உபாயமாக, கிரியா யோகம் தன்னுள் எல்லாவற்றையும் அடக்கியுள்ள தன்மையை உறுதியாகக் கூறி லாஹிரி மகாசயர் தன் சீடர்களுக்கு சூழ்நிலையையும் வளர்ப்பு முறையையும் அனுசரித்து அவரவர்களுடைய வாழ்க்கையை நடத்த சுதந்திரம் அளித்திருந்தார்.

ஒரு முஸ்லிம் தினமும் ஐந்து தடவைகள் நமாஸ்[13] தொழுகை செய்ய வேண்டும். ஓர் இந்து தினமும் அனேக தடவைகள் தியானத்தில் அமர வேண்டும். ஒரு கிறிஸ்துவன் பைபிளை வாசிப்பதுடன் தினமும் பல தடவைகள் மண்டியிட்டுப் பிரார்த்தனைச் செய்ய வேண்டும், என்று அந்த மகான் சுட்டிக் காட்டியுள்ளார்.

அந்த குரு விவேகத்துடன் உணர்ந்து தன்னுடைய சீடர்களை அவரவருடைய இயற்கையான சுபாவத்திற்குத் தகுந்தபடி பக்தி, கர்ம (செயல்), ஞான (விவேகம்) அல்லது ராஜ (முழுமையான) யோகம் ஆகிய மார்க்கங்களில் வழி காட்டினார். சம்பிரதாய துறவு மார்க்கத்தை மேற்கொள்ள விரும்பும் பக்தர்களுக்கு

நிதானமாகவே அனுமதி அளிக்கும் அந்த மகான், முதலில் துறவு வாழ்க்கையிலுள்ள கடினமான நியமங்களைப் பற்றி நன்றாகச் சிந்திக்கச் சொல்லி எப்பொழுதும் எச்சரிக்கை செய்வார்.

அந்த மகாகுரு சமயநூல்களைப் பற்றிய தத்துவ வாதங்களைத் தவிர்க்கக் கற்பித்தார். புராதன வெளிப்பாடுகளை படிப்பது மட்டுமல்லாமல் அவைகளை நன்கு உணர்ந்து அறிவதில் தன்னை ஈடுபடுத்திக் கொள்பவனே உண்மையான விவேகி, என்பார் அவர். உன் எல்லா பிரச்சனைகளையும் தியானத்தின் மூலமே தீர்த்துக்கொள்.[14] பிரயோசனமற்ற உத்தேசங்களைத் தவிர்த்து, அதற்குப் பதிலாக கடவுளுடன் உண்மையான ஒன்றுதலை மேற்கொள்.

உன் மனத்திலிருந்து பிடிவாதமான சாத்திரக் குப்பைகளைக் களைந்தெறி. நேரடி அனுபவம் எனும் தெளிந்த அறிவைப் பெறு. உள் ஆற்றல் வாய்ந்த வழி காட்டுதலுக்கு உன்னைப் பொருத்தமாக்கிக் கொள். வாழ்வில் ஏற்படும் ஒவ்வொரு குழப்பத்திற்கும் தெய்வீகக் குரலிடம் விடை உண்டு. தொந்தரவுகளை தனக்குத் தானே வரவழைத்துக் கொள்வதில் மனிதனின் திறமை முடிவற்றதாகத் தோன்றினாலும், ஆதியந்தமற்ற ஆபத்சகாயனின் ஆதார ஆற்றல் ஒன்றும் குறைந்ததில்லை.

அக்குருவின் சர்வ வியாபகத் தன்மை, அவருடைய பகவத் கீதை விளக்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்த சிஷ்யர்களின் ஒரு குழு முன்னால் ஒரு நாள்

நிரூபிக்கப்பட்டது. அனைத்து அதிர்வலைப் படைப்புகளிலும் உள்ள கூடஸ்த சைதன்யம் அல்லது கிறிஸ்து உணர்வு என்பதைப் பற்றி பொருள் கூறி விளக்கிக் கொண்டிருந்த பொழுது, லாஹிரி மகாசயர் திடீரென்று மூச்சுத் திணறியவாறு அலறினார்:

ஜப்பான் கடற்கரையின் அருகாமையில் அனேக ஆன்மாக்களின் உடல்களுடன் நான் மூழ்கிக் கொண்டிருக்கிறேன்.

அடுத்த நாள் அவருடைய சீடர்கள், ஜப்பான் அருகில் முந்தினநாள் ஒரு கப்பல் மூழ்கி அதிலிருந்த அனேகரின் இறப்பைப் பற்றிய ஒரு பத்திரிகை தந்திச் செய்தியைப் படித்தனர்.

தொலைவில் வசித்து வந்த அனேக சீடர்களுக்கு அவருடைய சர்வ வியாபகம் தெரிந்திருந்தது. கிரியாவை பயில்பவர்களுடன் நான் என்றுமிருப்பேன், என்று அவர் தன்னருகில் இருக்கமுடியாத சீடர்களுக்கு ஆறுதலாகக் கூறுவார். என்றும் பெருகிவரும் உன் ஆன்மீக உணர்வுகளின் மூலமாக நான் உனக்குப் பிரபஞ்ச வீட்டிற்கு வழிகாட்டுவேன்.

அம்மகா குருவின் மிக உயர்ந்த சீடரான ஸ்ரீ பூபேந்திர நாத் ஸன்யால்[15] கூறியதாவது: 1892ல் அவர் இளைஞராக இருந்தபோது காசிக்குச் செல்ல முடியாததால் அந்த மகானிடம் ஆன்மீக உபதேசத்திற்காக பிரார்த்தனை செய்தார். லாஹிரி மகாசயர் பூபேந்திராவின் முன்னால் கனவில் தோன்றி அவருக்குத் தீட்சை அளித்தார். பின்னர் அந்த இளைஞன்

காசிக்குச் சென்று தனக்குத் தீட்சைக் கொடுக்க வேண்டுமென்று குருவை வேண்டினான். நான் ஏற்கனவே உனக்கு கனவில் தீட்சைக் கொடுத்து விட்டேனே, என்று லாஹிரி மகாசயர் பதிலளித்தார்.

ஒரு சீடன், தன் எந்த உலகக் கடமைகளையாவது புறக்கணிக்கும் பொழுது அவர் அவனை அன்புடன் திருத்தி நல்வழிக்குக் கொண்டுவருவார்.

ஒரு சீடனின் குறைகளைப் பகிரங்கமாக எடுத்துக் கூறவேண்டிய கட்டாயம் ஏற்படும்பொழுது கூட லாஹிரி மகாசயரின் சொற்கள் மிக சாந்தமாகவும் ஆறுதல் அளிக்கும் படியாகவுமே இருக்கும், என்று ஸ்ரீ யுக்தேஸ்வர் ஒரு முறை என்னிடம் கூறினார். அவர் வருத்த பாவத்துடன் தொடர்ந்தார். அவருடைய கூரிய சொற்களைக் கேட்டு எந்த சீடனும் ஓடிவிட்டதில்லை. இதைக் கேட்டு என்னால் சிரிக்காமலிருக்க முடியவில்லை. ஆனால் நான் என் குருவிடம், அவருடைய ஒவ்வொரு சொல்லும் கூர்மையானதோ அல்லது கூர்மையற்றதோ, என் காதிற்குச் சங்கீதமாக இருந்தது என்று உண்மையாக உறுதி அளித்தேன்.

லாஹிரி மகாசயர் மிகுந்த கவனத்துடன் கிரியாவைக் கிரமமாக நான்கு முன்னேற்ற உபதேச முறைகளாகப்[16] பிரித்தார். ஒரு பக்தன் முதல் படியில் தீர்மானமான ஆன்மீக முன்னேற்றம் கண்ட பிறகே மற்ற மூன்று உயர் முறைகளை அவர் உபதேசிப்பார். ஒரு நாள் ஒரு சீடன் தன் தகுதி சரியாகக் கணிக்கப்படவில்லை என்று தீர்மானித்து தன்

அதிருப்தியை வெளிப்படுத்தினான்.

குருதேவா, இப்பொழுது நான் நிச்சயமாக இரண்டாவது உபதேசத்திற்குத் தயாராக உள்ளேன், என்று அவன் கூறினான். இந்தச் சமயத்தில் ஒரு பணிவான சீடனான, பிருந்தா பகத்தை உள்ளே அனுமதிப்பதற்காகக் கதவு திறந்தது. அவன் காசியில் ஒரு தபால்காரன்.

பிருந்தா, இப்படி என்னருகில் உட்கார். அம்மகாகுரு அவனைப் பார்த்து அன்புடன் முறுவலித்தார். நீ இரண்டாவது கிரியாவிற்குத் தயாரா? சொல்.

அந்தச் சிறிய தபால்காரன் கெஞ்சியவாறு கை குவித்தான். குருதேவா, அவன் பணிவுடன் பேசினான், தயவுசெய்து உபதேசம் எதுவும் இனிமேல் வேண்டாம். உயர்ந்த உபதேசங்களை நான் எப்படி ஜீரணிக்க முடியும்? நான் இன்று உங்கள் ஆசீர்வாதத்தைக் கோரி வந்துள்ளேன். ஏனெனில் உங்கள் முதல் உபதேசமே என்னை, நான் கடிதங்களைப் பட்டுவாடா செய்ய முடியாத அளவிற்கு தெய்வீக போதையால் நிரப்பிவிட்டது.

ஏற்கனவே பிருந்தா ஆன்மீகக் கடலில் நீந்திக் கொண்டிருக் கிறான். லாஹிரி மகாசயரிடமிருந்து இவ்வாறான சொற்கள் வந்தவுடன் அந்த இன்னொரு சீடன் தன் தலையைத் தாழ்த்திக் கொண்டான்.

குருதேவரே, நான் என் கருவிகளில் குற்றம் கண்டு பிடித்துக் கொண்டிருக்கும் ஒரு மோசமான உழைப்பாளி, என்று அவன் கூறினான்.

தாழ்மையுள்ள அத்தபால்காரர் கல்வியறிவு

இல்லாதவர். பின்னால், அறிஞர்கள் கூடச் சில சமயங்களில் சாத்திர விஷயங்கள் சம்பந்தமாக அவரிடம் விளக்கங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளும் அளவிற்குக் கிரியாவின் மூலம் தன் உள்நோக்கை வளர்த்துக் கொண்டார். பாவமோ, படிப்பறிவோ இரண்டைப் பற்றியுமே ஒன்றுமறியாத சிறிய பிருந்தா பண்டிதர்கள் சமூகத்தில் புகழ் பெற்றவரானார்.

காசியிலிருந்த எண்ணற்ற சீடர்களைத் தவிர இந்தியாவின் தூரப் பகுதிகளிலிருந்தும் நூற்றுக் கணக்கானவர்கள் லாஹிரி மகாசயரிடம் வந்த வண்ணம் இருந்தனர். அவர், தானே பல சந்தர்ப்பங்களில் வங்காளத்திற்குச் சென்று தன் சம்பந்திகள் வீட்டிற்கு விஜயம் செய்வதுண்டு. இவ்வாறாக அவர் அங்கு இருந்ததனால் வங்காளம் அருளாசி பெற்று, சிறு கிரியா குழுக்கள் கொண்ட தேன்கூடாயிற்று. முக்கியமாக கிருஷ்ணாநகர், விஷ்ணுபூர் என்ற இரு மாவட்டங்களிலும் அனேக பக்தர்கள் இன்று வரை கண்களுக்குப் புலப்படாத ஆன்மீகத் தியான சக்தியைப் பாயவிட்டவாறு இருக்கிறார்கள்.

லாஹிரி மகாசயரிடமிருந்து கிரியா பெற்ற பல மகான்களில் குறிப்பிடும்படியானவர்களில் காசியின் மிகப் பிரசித்தி பெற்ற ஸ்வாமி பாஸ்கரானந்த சரஸ்வதி ஒருவர்; தேவ்கர் என்ற இடத்தைச் சேர்ந்த பாலானந்த பிரம்மசாரி என்ற உயர்நிலை அடைந்த துறவியும் ஒருவர். சிறிது காலம் லாஹிரி மகாசயர் காசியின் மகாராஜா ஈஸ்வரி நாராயண் சின்ஹா பகதூர்

அவர்களின் மகனுக்குத் தனிப்பட்ட ஆசிரியராகப் பணிபுரிந்தார். குருவின் ஆன்மீக ஆற்றலை உணர்ந்து மகாராஜாவும் அவருடைய மகனும் அவரிடம் கிரியா உபதேசத்தை நாடிப் பெற்றார்கள். அது போலவே அவரிடம் மகாராஜா ஜோதீந்திர மோகன் தாகுரும் உபதேசம் பெற்றார்.

லாஹிரி மகாசயரின், சீரும் செல்வாக்கும் பெற்ற சீடர்களில் பலர் கிரியா வட்டத்தை விளம்பரம் மூலம் பெரிதாக்க முயற்சித்தார்கள். ஆனால் குருதேவர் அதற்கு அனுமதி வழங்க மறுத்துவிட்டார். காசி ராஜாவின் அரண்மனை மருத்துவராக இருந்த ஒரு சீடர், குருதேவரின் பெயரை காசிபாபா (காசியின் மேன்மையான ஒருவர்)[17] என்று பரப்ப ஒரு திட்டமான முயற்சி எடுத்தார். அதற்கும் குருதேவர் அனுமதி கொடுக்கவில்லை.

கிரியா மலரின் நறுமணம் இயற்கையான முறையில் பரவட்டும், என்றார் அவர். கிரியாவின் விதைகள் ஆன்மீகச் செழிப்புள்ள இதயங்களின் மண்ணில் உறுதியாக வேரூன்றி விடும்.

அந்த உயர்ந்த மகான் பிரசங்க முறையை நவீன சாதனமாகிய ஸ்தாபனம் மூலமாகவோ அல்லது அச்சகம் மூலமாகவோ பின்பற்றவில்லையாயினும், அவருடைய செய்தியின் ஆற்றல் தங்கு தடையில்லாத வெள்ளமாகப் பெருகி, அதன் சக்தியாலேயே மனித மனங்களின் கரைகளை மூழ்கடித்து விடக்கூடிய வல்லமை பெற்றது என்பது அவருக்குத் தெரிந்தே

இருந்தது. மாற்றப்பட்ட மற்றும் புனிதமடைந்த பக்தர்களின் வாழ்க்கைகளே கிரியாவின் மரணமற்ற உயிராற்றலுக்கு எளிய உத்திரவாதங்களாகும்.

1886-ல், அவருடைய ராணிகேத் தீட்சைக்குப் பின் இருபத்தைந்து வருடங்கள் கழித்து, லாஹிரி மகாசயர் ஓய்வூதியம் பெற்று பதவியிலிருந்து ஓய்வு பெற்றார்.[18] பகலில் அவர் கிடைக்க கூடியவராக இருந்ததினால் அவரை நாடி வரும் சீடர்களின் எண்ணிக்கை அதிகரித்த வண்ணம் இருந்தது. அந்த மகாகுரு இப்பொழுதெல்லாம் அமைதியான பத்மாசன நிலையில் மௌனமாக அமர்ந்து அதிக காலத்தைக் கழிக்கலானார். அவர் சாதாரணமாக அவருடைய சிறிய அறையை விட்டு நடப்பதற்கோ, வீட்டின் மற்ற பாகங்களுக்கோ கூடச் செல்லுவதில்லை. அக்குருவைத் தரிசிக்க அமைதியான சீடர்களின் வருகை, அனேகமாக இடைவிடாது இருந்து கொண்டிருந்தது.

பார்ப்பவர்கள் எல்லாம் பெருவியப்பு அடையும் வண்ணம் லாஹிரி மகாசயரின் வழக்கமான சரீர இயக்கங்கள், மனித சக்திக்கு அப்பாற்பட்ட தன்மைகளானமூச்சற்ற நிலை, உறக்கமின்மை, நாடி மற்றும் இருதயத் துடிப்புநிறுத்தம், சாந்தமான கண்களின் இமைகள் மணிக்கணக்காக இமைக்காமை மேலும் ஆழ்ந்த அமைதியின் பிரகாசம் ஆகியவற்றை வெளிப்படுத்தின. வந்தவர் எவருமே ஓர் ஆன்மீக உயர்வை அனுபவிக்காமல் செல்லவில்லை; எல்லோரும் உண்மையான ஒரு தெய்வீக மனிதரின் மௌனமான அருளாசி தங்களுக்குக் கிடைத்திருப்பதாக உணர்ந்தனர்.

இப்பொழுது அம்மகான் தன் சீடனாகிய பஞ்சனன் பட்டாசார்யாவிற்கு கல்கத்தாவில் ஆர்ய சேவா நிலையம் (Arya mission Institution ) என்ற ஒரு யோக மையம் தொடங்குவதற்கு அனுமதி அளித்தார். அந்த மையம் சில யோக ரீதியான மூலிகை மருந்துகளை[19] வினியோகம் செய்ததுடன், முதன் முறையாக மலிவான விலையில் வங்காளியில் பகவத் கீதையை வெளியிட்டது. ஆர்ய சேவா கீதை இந்தியிலும் வங்காளியிலும் ஆயிரக்கணக்கான வீடுகளினுள் செல்லும் வழிகண்டது.

பண்டைக் கால வழக்கப்படி அம்மகான், பல்வேறு நோய்களைக் குணப்படுத்த மக்களுக்குப் பொதுவாக வேப்ப[20] எண்ணெயைக் கொடுத்து வந்தார். குரு ஒரு சீடரை அவ்வெண்ணெயைக் காய்ச்சி வடிகட்டும்படி கேட்டுக் கொண்டால், அந்தச் சீடர் அக்கடினமான வேலையைச் சுலபமாக செய்து முடித்து விடுவார். வேறு யாராவது முயன்றால் அவருக்கு விசித்திரமான இடைஞ்சல்கள் ஏற்படும்: எண்ணெயைக் காய்ச்சி வடிகட்டத் தேவையான முறைகளைக் கையாண்ட பிறகு அந்தத் திரவம் அனேகமாக முழுவதுமே ஆவியாகி விட்டிருப்பதைக் காண்பார்கள். உண்மையில் குருதேவருடைய நல் ஆசிதான் அதில் அவசியமாகச் சேர்க்க வேண்டிய பொருளாகும்.

லாஹிரி மகாசயரின் கையெழுத்தும் கையொப்பமும், வங்காள எழுத்தில் மேலே காட்டப்பட்டிருக்கிறது. இந்த வரிகள் ஒரு சீடனுக்கு எழுதிய கடிதத்தில் உள்ளன; அந்த மகாகுரு ஒரு சமஸ்கிருத சுலோகத்தைப் பின்வருமாறு விளக்குகிறார்: எவனொருவன் கண் இமைகள் சிமிட்டாத படியான அமைதி நிலையை அடைகிறானோ அவன் சாம்பவி முத்ரா[21] நிலையை அடைந்தவனாகிறான்.

(கையொப்பம், கீழே இடதுபக்கம்) ஸ்ரீ சியாமா சரண் தேவ சர்மன்.

மற்ற அனேக தீர்க்கதரிசிகளைப் போல லாஹிரி மகாசயர் தானே புத்தகம் எதுவும் எழுதவில்லை. ஆனால் அவருடைய அனேக சீடர்களுக்குச் சாத்திரங்களைப் பற்றிப் பலவித விளக்கங்கள் கூறியிருக்கிறார். எனது அன்பு நண்பர் ஸ்ரீ அனந்த மோகன் லாஹிரி, அம்மகானின் மறைந்த பேரன் பின்வருமாறு எழுதியுள்ளார்:

பகவத் கீதையும் மகாபாரத இதிகாசத்தின் மற்ற

பாகங்களும் அனேக முடிச்சுக் குறிப்புகளைப் (வியாஸ் கூடாஸ்) பெற்றுள்ளன. அவைகளைப் பற்றி எந்தக் கேள்வியையும் எழுப்பவில்லையாயின், நாம் ஏதோ விசித்திரமானதும், எளிதில் தவறாகப் புரிந்துக் கொள்ளக் கூடியதுமான புராணக் கதைகளை மட்டுமே காண்போம். இந்த முடிச்சுக் குறிப்புகள் விளக்கப்படாமல் விடப்பட்டால் பாரதம் ஆயிரக்கணக்கான வருடங்களாக ஆராய்ச்சி செய்து தேடி, மனித எல்லைக்கு மீறிய பொறுமையுடன் காப்பாற்றி வரும் அந்த விஞ்ஞானத்தை இழந்தவர்களாவோம்.[22]

சாத்திர உருவகப் புதிர்களால் மிக சாமர்த்தியமாக மறைக்கப்பட்ட சமய விஞ்ஞானத்தை, லாஹிரி மகாசயர் அந்த உருவகக் கதைகளிலிருந்து வெளிச்சத்திற்குக் கொண்டு வந்தார். வார்த்தைகளின் வித்தைகளில் சிக்கி, புரிந்து கொள்ள முடியாதபடியிருந்த வேத கால வழிபாட்டுச் சூத்திரங்கள், அம்மகானால் முழு விஞ்ஞான முக்கியத்துவத்துடன் நிரூபிக்கப்பட்டுள்ளன.

தீய ஆசைகளுக்கு எதிராக மனிதன் வழக்கமாக செயலற்றவ னாகிறான் என்பது நமக்குத் தெரியும்; ஆனால் கிரியா யோகத்தின் மூலமாக மேம்பட்ட, நிரந்தர பேரானந்தத்தைப் பற்றிய ஓர் உணர்வு அவனுள்ளே எழும்பொழுது, தீயவை சக்தியை இழந்துவிடுகின்றன. மேலும் மனிதன் அவற்றில் ஈடுபட எந்த நோக்கத்தையும் காண்பதில்லை. இங்கு, கீழ்த்தரமான தன்மை விட்டு விடப்படுதலும் மறுக்கப்படுதலும் பரமானந்த அனுபவம் ஏற்றுக்கொள்ளப்படுதலும் ஒரே

சமயத்தில் நடைபெறுகின்றன. இம்மாதிரியான ஒரு வழியல்லாமல் வெறும் எதிர்மறைகளைக் கொண்ட நீதி போதனைகள் நமக்கு உபயோகமில்லை.

எல்லா வெளி உலகக்காட்சிகளின் பின்னணியிலும் எல்லையற்ற சக்திப் பெருங்கடலே உள்ளது. உலகக் காரியங்களிலுள்ள நமது ஆர்வம் நம்முள்ளிருக்கும் ஆன்மீகப் பெருவியப்பைக் கொன்று விடுகிறது. நவீன விஞ்ஞானம், இயற்கையின் சக்திகளை எவ்வாறு உபயோகப்படுத்த வேண்டும் என்று கூறுவதால், எல்லாப் பெயர்கள், உருவங்கள் இவைகளின் பின்னே அடங்கியுள்ள பரமாத்மாவைப் புரிந்து கொள்வதில் நாம் தோல்வியுறுகிறோம். இயற்கையுடன் நமக்கு ஏற்பட்டுள்ள நெருங்கிய பரிச்சயம் அவளுடைய முடிவான ரகசியங்களை அறிவதில் அலட்சியத்தை ஏற்படுத்துகிறது; நமக்கு அவளுடன் உள்ள உறவு நடைமுறைத் தொழிலைப் போன்றதேயாகும். சொல்லப்போனால், நமது நோக்கங்கள் நிறைவேறுவதற்காக அவளை பலவந்தப்படுத்தும் வழிகளை கண்டுபிடித்து அவளை ஏளனம் செய்கிறோம்; இயற்கையின் மூலமே இன்னும் தெரியாமல் இருக்கும் பொழுது, நாம் அவளது சக்திகளை உபயோகப்படுத்திக் கொள்கிறோம். விஞ்ஞானத்தில் இயற்கையுடன் நமது உறவு, ஓர் ஆணவ மனிதனுடன் அவனுடைய வேலைக்காரனுக்குள்ள உறவைப்போன்றதாகும்; அல்லது தத்துவார்த்தமாகக் கூறப் போனால் இயற்கையின் நிலை, சாட்சிக் கூண்டில் நிற்கும் கைதியை

ஒத்ததாகிறது; நாம் அவளைக் குறுக்கு விசாரணை செய்கிறோம், சவால் விடுகிறோம், மறைந்துள்ள அவள் மதிப்பை அளவிட முடியாத மனித அளவுகோலால் அவளுடைய சான்றை நுட்பமாக எடைபோடுகிறோம்.

அதற்கு மாறாக ஆன்மா ஓர் உயர்ந்த சக்தியுடன் ஒன்று பட்டிருக்கும் பொழுது இயற்கை ஒரு வித சிரமமோ, சோர்வோ இன்றி மனிதனின் விருப்பத்திற்கு இயல்பாகவே கீழ்ப்படிகிறது. இயற்கையின் மீதான இந்த சுலபமான அதிகாரம், புரிந்துகொள்ள முடியாத லோகாயத மனிதனால் அற்புதம் என அழைக்கப்படுகிறது.

லாஹிரி மகாசயரின் வாழ்க்கை ஓர் உதாரணமாகத் திகழ்ந்து, யோகம் ஒரு மர்மமான பயிற்சி என்ற தவறான கருத்தை மாற்றியது. இயற்பியல் விஞ்ஞானம், நடைமுறை உண்மைகளைப் பற்றியதானாலும், ஒவ்வொரு மனிதனும் கிரியா யோகத்தின் மூலம் இயற்கையுடன் தனக்குள்ள சரியான உறவைப் பற்றி அறியவும் தினசரி நிகழ்ச்சியோ அல்லது மர்மமோஎல்லா நிகழ்ச்சிகளுக்கும் ஆன்மீக மதிப்பை உணரவும் ஒரு வழியைக் காணலாம்.[23] ஓர் ஆயிரம் வருடங்களுக்கு முன்னால் மர்மமாகத் தோன்றிய விஷயங்கள் இப்பொழுது அப்படியில்லை என்பதையும், இப்பொழுது மர்மமாகத் தோன்றும் விஷயங்கள் இன்னும் நூறு வருடங்கள் கழித்து புரிந்து கொள்ளக்கூடிய விஷயமாகிவிடும் என்பதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

கிரியா யோக விஞ்ஞானம் நிரந்தரமானது. அது கணிதத்தைப் போல் உண்மையானது; கூட்டல், கழித்தல்களின் எளிய விதிமுறைகளைப் போல் கிரியாவின் விதி என்றும் அழிக்கப்பட முடியாதது. கணிதத்தின் எல்லாப் புத்தகங்களையும் எரித்துவிடு; தர்க்க ரீதியாகச் செயல் படுபவன் அவ்வுண்மைகளை என்றும் மறுபடி கண்டு பிடித்துவிடுவான். யோகம் பற்றிய எல்லாப் புத்தகங்களையும் மறைத்துவிடு; அதனுடைய அடிப்படைத் தத்துவங்கள், தூய பக்தியும் அதனால் ஏற்படும் தூய அறிவையும் உடைய ஒரு யோகி எப்பொழுதெல்லாம் தோன்றுகிறாரோ அப்போது மறுபடியும் வெளிப்படவே செய்யும்.

எப்படி பாபாஜி அவதாரங்களில் தலைசிறந்த மகாவதாரமாக இருக்கிறாரோ, மேலும் ஸ்ரீ யுக்தேஸ்வர், ஞானாவதாரம் அல்லது ஞானத்தின் அவதாரம் என்று நியாயமாக அழைக்கப்படலாமோ அதுபோலவே லாஹிரி மகாசயர் யோகாவதாரம் அல்லது யோகத்தின் அவதாரமாவார்.[24]

தகுதி, அளவு என்ற இரு பிரமாண முறையிலும் இந்தப் பெரிய மகான் சமூகத்தின் ஆன்மீக மட்டத்தை உயர்த்தினார். அவருடைய நெருங்கிய சீடர்களைக் கிறிஸ்துவைப் போன்றதொரு உயரிய நிலைக்கு கொண்டு செல்லும் அவருடைய சக்தியிலும், மக்களின் மத்தியில் சத்தியத்தை பரவலாகப் பரப்புவதிலும் லாஹிரி மகாசயர் மனித குலத்தைக் காத்தவர்களுடைய வரிசையில் தரம் பெற்றவராகிறார்.

ஒரு தீர்க்கதரிசியாக அவருடைய விசேஷத் தன்மை என்ன வென்றால், ஒரு திட்டவட்டமான முறையாகிய கிரியாவை நடைமுறை வழியாக வலியுறுத்தி, முதன் முதலாக எல்லா மனிதர்களுக்கும் யோக சுதந்திரத்தின் கதவுகளைத் திறந்துவிட்டதாகும். அவருடைய சொந்த வாழ்வின் அற்புதங்களைத் தவிர இந்த யோகாவதாரர், சாதாரண மனிதனும் புரிந்துக் கொள்ளும்படியாக, பலனளிக்கும் எளிமையான விதத்தில் யோகத்தின் புராதன சிக்கல்களை குறைத்ததில் எல்லா அதிசயங்களின் உச்சத்தையும் நிச்சயமாக அடைந்துவிட்டார்.

அற்புதங்களைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது லாஹிரி மகாசயர் அடிக்கடி கூறுவது, சாதாரண மக்களுக்குத் தெரியாத சூட்சுமமான விதிகளின் செயல் முறைகளைப் பகிரங்கமாகச் சர்ச்சைகள் செய்வதும், நன்கு சிந்திக்காமல் அவைகளை வெளியிடுவதும் கூடாது. இந்தப் பக்கங்களில் நான் அவருடைய எச்சரிக்கைகளை மீறுவதுபோல் தோன்றினால், அதற்கு அவர் எனக்களித்த உள்ளார்ந்த அனுமதியே காரணம். இருந்தாலும் பாபாஜி, லாஹிரி மகாசயர், ஸ்ரீ யுக்தேஸ்வர் ஆகியோரது சரிதங்களை எழுதுகையில் சில அதிசயமான கதைகளை நீக்கிவிடுவது உசிதம் என்று நான் நினைத்தேன். புரிந்து கொள்ள முடியாத தத்துவத்தைப் பற்றிய விளக்கமான புத்தகத்தையும் உடன் எழுதாமல், நான் அவைகளை இங்கு சேர்த்திருக்க முடியாது.

ஓர் இல்லற யோகி என்ற முறையில் லாஹிரி

மகாசயர் இன்றைய உலகின் தேவைகளுக்கு ஏற்ப நடைமுறைச் செய்தியைக் கொண்டு வந்தார். பண்டைய பாரதத்தின் மிகச் சிறந்த பொருளாதார மற்றும் சமய நிலைகள் இனி கிட்டாதவை. ஆதலால் அந்த மகான், ஒரு யோகி, திருவோட்டை ஏந்திக் கொண்டு ஒரு துறவி போல் அலையும்படியான புராதன லட்சியத்தை ஊக்குவிக்கவில்லை. அதற்குப் பதிலாக ஒரு யோகி, அவருடைய வாழ்க்கைக்கு வேண்டியதை அவரே சம்பாதிப்பதின் பயன்களையும், ஏற்கனவே திண்டாடிக் கொண்டிருக்கும் சமூகத்திற்குப் பாரமாக இல்லாமல் இருப்பதையும், தன் வீட்டின் தனிமையில் யோகப் பயிற்சி செய்வதையும் அறிவுறுத்தினார். இந்த ஆலோசனைக்கு லாஹிரி மகாசயர் தன் வாழ்வின் உதாரணத்தின் மூலமே ஊக்குவிக்கும் வலுவூட்டினார். அவர் ஒரு நவீன தடைகளற்று செயல்படும் (streamlined) யோகிக்கு முன்மாதிரியாவார். அவருடைய வாழ்க்கை முறை. பாபாஜியினால் திட்டமிட்டபடி, உலகத்தின் எல்லா பாகங்களிலுமிருக்கும் ஆர்வமுள்ள யோகிகளுக்கு ஒரு வழிகாட்டியாக வேண்டுமென்ற நோக்கில் அமைந்ததாகும்.

புது மனிதர்களுக்குப் புது நம்பிக்கை! தெய்வத்துடன் ஐக்கியமாதல், தன்முயற்சியால் சாத்தியமாகும். மேலும் சமய சித்தாந்த நம்பிக்கைகளையோ அல்லது பிரபஞ்ச சர்வாதிகாரியின் மனம்போனபடியான இச்சையையோ சார்ந்ததல்ல, என்று அந்த யோகாவதாரர் அறை கூவினார்.

மனிதனின் தெய்வீகத் தன்மையை யார் நம்ப முடியாதவர்களாக இருக்கிறார்களோ அவர்கள், கிரியா திறவுகோலின் உபயோகத்தினால் கடைசியில் தங்களிடமே முழு தெய்வீகத்தை தரிசிப்பார்கள்.

ஸ்ரீ ஸ்ரீ லாஹிரி மகாசயரின் சீடர்

1 மத்தேயு 3:15 (பைபிள்).

2 பழைய மற்றும் புதிய ஏற்பாட்டை எழுதியவர்களால் மறுபிறவி கோட்பாடு புரிந்து கொள்ளப்பட்டும் ஒப்புக் கொள்ளப்பட்டும் இருந்தது என்று பைபிளின் அனேகப் பகுதிகள் தெரிவிக்கின்றன.

3 மல்கியா 4:5 (பைபிள்).

4 லூக்கா 1:317 (பைபிள்).

5 அவருக்கு முன்னே அதாவது இயேசுவிற்கு முன்னே

6 மத்தேயு 17:12-13 (பைபிள்).

7 மத்தேயு 11:13-14 (பைபிள்).

8 யோவான் 1:21 (பைபிள்).

9 II இராஜாக்கள் 2:9-14 (பைபிள்).

10 மத்தேயு 17:3 (பைபிள்).

11 மத்தேயு 27:46-49 (பைபிள்).

12 எத்தனை விதமான மரணங்கள் நம் உடல்களில் உள்ளன! மரணத்தைத் தவிர அங்கு வேறெதுவும் இல்லை. மார்டின் லூதர் "Table-Talk".

13 ஒரு முஸ்லிமின் முக்கியமான பிரார்த்தனை

14 உண்மையை தியானத்தில் தேடு, காளான் பூத்த புத்தகங்களிலல்ல. சந்திரனைக் காண ஆகாயத்தை நோக்கு, குட்டையிலல்ல. பாரசீகப் பழமொழி.

15 ஸ்ரீ ஸன்யால் 1962ல் இறந்தார் (பிரசுரதாரரின் குறிப்பு)

16 கிரியா யோகத்தில் பல பிரிவுகள் உள்ளன. லாஹிரி மகாசயர் அதிக நடைமுறை முக்கியத்துவம் பெற்றிருக்கும் நான்கு இன்றியமையாத படிகளைக் கண்டுணர்ந்தார்.

17 லாஹிரி மகாசயருக்கு அவருடைய சீடர்களால் அளிக்கப்பட்ட பட்டங்கள் யோகிவர் (யோகிகளில் பெரியவர்), யோகிராஜ் (யோகிகளின் அரசர்), முனிவர் (மகான்களில் பெரியவர்) என்பனவாகும். நான் யோகாவதாரம் (யோகத்தின் அவதாரம்) என்ற பெயரை சேர்த்தேன்.

18 அரசாங்கத்தின் ஓர் இலாகாவிலேயே அவர் மொத்தமாக முப்பத்தைந்து வருடங்கள் சேவை செய்திருக்கிறார்.

19 இந்து மருத்துவ ஆராய்ச்சி நூல்கள் ஆயுர்வேதம் என்றழைக்கப்படுகிறது. வேத காலத்திய மருத்துவர்கள் நுட்பமான அறுவை சிகிச்சைக் கருவிகளை உபயோகப்படுத்தி வந்தனர்; பிளாஸ்டிக் அறுவை சிகிச்சை முறைகளையக் கையாண்டனர்; விஷவாயுவின் விளைவுகளை எவ்வாறு முறியடிப்பது என்று தெரிந்திருந்தது. ஸிஸேரியன் பகுதிகள் மற்றும் மூளை அறுவை சிகிச்சைகளைப் புரிந்தனர். மருந்துகளின் வலிமையைக் கூட்டும் திறமை பெற்றிருந்தனர். கி.மு. 4வது நூற்றாண்டில் வாழ்ந்த ஹிப்போக்ரடீஸ் தன் மெடீரியா மெடிகா (Materia medica) என்னும் புத்தகத்திற்கான அனேக விஷயங்களை இந்து மூலத்திலிருந்து இரவல் வாங்கியிருக்கிறார்.

20 கிழக்கிந்திய வேப்பமரம். அதன் மருத்துவப்பயன் இப்பொழுது மேலை நாடுகளிலும் அங்கீகரிக்கப்பட்டுவிட்டது. அங்கே கசப்பான வேப்பம் பட்டை போஷாக்கைத் தரும் மருந்தாக உபயோகப்படுகிறது. விதைகள் மற்றும் பழத்தில் கிடைக்கும் எண்ணெய் குஷ்டரோகம் இன்னும் மற்ற வியாதிகளுக்குத் தரப்படுகிறது.

21 சாம்பவி முத்ரா என்றயுல் இ வங்கக் மத்றுஜில் உள்ள இடத்றுல் பயுர்வய நயுட்தல் என் பயுளயும். ஒ யயுளி, மன அமறுஜில் ஒ றிப்பிட்ட விலய அடம் பயு அவர இமகள் சிட்டயு. அவர் உள்லகத்றுல் லஜித்ழீவயுர்.

ஒரு முத்ரா (அடையாளம்) என்பது பொதுவாக விரல்கள் மற்றும் கைகளின் சம்பிரதாய சைகையாகும். அனேக முத்திரைகள் சில நரம்புகளைப் பாதிப்பதன் மூலம் சாந்த நிலையைத் தூண்டுகின்றன. பண்டைய இந்து ஆராய்ச்சி நூல்கள் நாடிகளை மிக நுட்பமாகப் பாகுபடுத்தியுள்ளன. (72,000 நாடிகளின் ஓட்டம் நம் உடலில் செயல்படுகிறது) மேலும் மனத்துடன் அவைகளின் சம்பந்தங்களையும் தெரிவிக்கின்றன. இவ்வாறு யோகத்திலும் வழிபாட்டிலும் உபயோகிக்கப்படும் முத்திரைகளுக்கு விஞ்ஞான பூர்வமாக ஆதாரம் உள்ளது. விக்கிரகங்களை விவரிக்கும் நூல்களிலும் சம்பிரதாய பாரத நடனங்களிலும் முத்திரைகளின் விவரமான மொழியே காணப்படுகிறது.

22 சமீப காலத்தில் புதைபொருள் ஆராய்ச்சி இடங்களான சிந்துநதி பள்ளத்தாக்கிலிருந்து தோண்டப்பட்ட கி.மு. மூவாயிரத்தைச் சேர்ந்த அனேக முத்திரைகள் (ள்ங்ஹப்ள்) தற்கால யோகமுறையில் உபயோகப்படுத்தப்படும் தியான நிலைகளில் அமர்ந்திருக்கும் உருவங்களைக் காண்பிக்கின்றன. மேலும் அந்தக் காலத்தில் கூட சில ஆரம்ப யோக முறைகள் தெரிந்தே இருந்தன என்பதை ஊகிக்க உத்திரவாதம் அளிக்கின்றன. இந்தியாவில் ஐயாயிரம் வருடங்களாக கற்றறிந்த முறைகளின் உதவியால் நியமமான அகச் சோதனை பயிற்சி செய்யப்பட்டு வருகிறது என்று காரணமின்றி நாங்கள் முடிவிற்கு வரவில்லை. அமெரிக்க கற்றறிந்த சமூகத்தினரின் சங்கம் ("Bulletin of the American Council of Learned Societies") வாஷிங்டன் டி.சி. வெளியிட்ட சஞ்சிகையில் பேராசிரியர் டபிள்யூ. நார்மன் ப்ரௌன்.

இருப்பினும் இந்து சாத்திரங்களின் அத்தாட்சிப்படி, யோக விஞ்ஞானம் இந்தியாவில் எத்தனையோ ஆயிரம் வருடங்களாக நடைமுறையில் இருந்து வருகிறது.

23 எவனொருவன் வியப்படையும் தன்மை இல்லாதவனோ, வழக்கமாக வியக்காமலும் (மற்றும் வழிபடாமலும்) இருக்கிறானோ அவன் அனேக ராஜ சங்கங்களின் தலைவனாக

இருந்தாலும்...எல்லா ஆராய்ச்சிக் கூடங்கள் மற்றும் வான சாஸ்திர நிலையங்களின் தொகுப்பாகவும், அவற்றின் முடிவுகளை தன் ஒரே தலைக்குள் வைத்துக் கொண்டிருந்தாலும், அவன் குருட்டுக் கண்களின் மேல் அணிந்த ஒரு மூக்குக் கண்ணாடியேயாவான், கார்லைல், ஸார்டர் ரிஸார்டஸ். Sartor Resartus.

24 ஸ்ரீ யுக்தேஸ்வர் தன் சீடர் பரமஹம்ஸ யோகானந்தரை தெய்வீக அன்பின் அவதாரமெனக் குறிப்பிட்டிருக்கிறார். பரமஹம்ஸரின் மறைவிற்குப் பிறகு அவரது முதன்மையான சீடரான ராஜரிஷி ஜனகானந்தர் (திரு. ஜேம்ஸ் ஜே. லின்) யோகானந்தருக்கு பிரேமாவதாரம் அல்லது பிரேமையின் அவதாரம் என்ற பட்டத்தைச் சூட்டினார். (பிரசுரதாரரின் குறிப்பு)

## அத்தியாயம் 36

# மேலை நாடுகளிடம் பாபாஜியின் அக்கறை

குருதேவா, நீங்கள் பாபாஜியை எப்பொழுதாவது சந்தித்திருக்கிறீர்களா?

செராம்பூரில் ஓர் அமைதியான வேனிற்கால இரவு; ஆசிரமத்தின் இரண்டாவது மாடிப் பால்கனியில், வெப்ப பிரதேசத்திற்குரிய பெரிய நட்சத்திரங்கள் எங்கள் தலைக்கு மேல் ஒளிர்ந்து கொண்டிருக்க நான் ஸ்ரீ யுக்தேஸ்வருக்கு அருகில் அமர்ந்திருந்தேன்.

ஆம். குருதேவர் என் நேரிடையான கேள்வியைக் கண்டு புன்னகைத்தார். அவர் கண்கள் பயபக்தியால் ஒளிர்ந்தன. மரணமற்ற அந்தக் குருவைத் தரிசிக்கும் பாக்கியம் எனக்கு மூன்று முறை கிடைத்திருக்கிறது. எங்கள் முதல் சந்திப்பு அலகாபாத் கும்பமேளாவில்[1] நிகழ்ந்தது.

கும்ப மேளாக்கள் என்பவை காலங் காலமாக பாரதத்தில் நடைபெற்று வரும் சமயத் திருவிழாக்களாகும். அவை ஆன்மீகக் குறிக்கோள்களை மக்களின் பார்வையில் தொடர்ந்து வைத்திருக்கின்றன. லட்சக்கணக்கான சிரத்தையுள்ள இந்துக்கள் பன்னிரண்டு வருடங்களுக்கொரு முறை, பல வித பிரிவுகளைச் சேர்ந்த ஆயிரக் கணக்கான சாதுக்கள், யோகிகள், ஸ்வாமிகள், மற்றும் துறவிகள் ஆகியோரைத் தரிசிக்கக்

கூடுவார்கள். இம் மகான்களில் பலர் மேளாவில் பங்கேற்கவும் மற்றும் அங்கு உலக மக்களுக்குத் தங்கள் அருளாசிகளை அளிப்பதற்கும் அல்லாது, வேறு எப்பொழுதும் தங்கள் தனிமையான இடங்களை விட்டு வெளியில் வராத துறவிகளாவார்கள்.

நான் பாபாஜியைச் சந்தித்த சமயத்தில் நான் ஒரு ஸ்வாமி இல்லை, ஸ்ரீ யுக்தேஸ்வர் தொடர்ந்தார். ஆனால் லாஹிரி மகாசயரிடமிருந்து கிரியா தீட்சையை ஏற்கனவே பெற்றிருந்தேன். அலகாபாத்தில் ஜனவரி 1894ல் நடக்க இருந்த மேளாவிற்குச் செல்ல அவர் என்னை ஊக்குவித்தார். அதுதான் கும்பாவைப் பற்றிய என் முதல் அனுபவம்; அங்கு நிறைந்திருந்த கூட்டத்தின் அளவையும் அமர்க்களத்தையும் கண்டு நான் சிறிது பிரமித்து விட்டேன். நான் சுற்றுமுற்றும் தேடியவாறு பார்த்தபொழுது, எந்த மகானுடைய ஒளி பொருந்திய முகமும் எனக்குத் தென்படவில்லை. கங்கைக் கரையிலுள்ள ஒரு பாலத்தைக் கடக்கும் பொழுது அறிமுகமான ஒருவர் திருவோட்டை நீட்டியவாறு அருகில் நிற்பதைப் பார்த்தேன்.

ஓ, இந்தத் திருவிழா, இரைச்சலும், பிச்சைக்காரர்களும் நிறைந்த பெருங்குழப்பமே தவிர வேறொன்றுமில்லை, நான் ஏமாற் றத்துடன் நினைத்தேன். மனித குலத்தின் நலனுக்காகப் பொறுமை யுடன் நடைமுறை அறிவின் எல்லையைப் பெருக்கி வரும் மேலை நாட்டு விஞ்ஞானிகள், சமயத்தை நிலை நாட்டுவதாகச் சொல்லிக் கொண்டு பிச்சையில்

மனத்தைச் செலுத்தும் இச்சோம்பேறிகளைவிட கடவுளுக்கு அதிகப் பிரியமானவர்களாக இருக்க மாட்டார்களா? சமூக சீர்திருத்தத்தைப் பற்றிய என் தகிக்கும் எண்ணங்கள், என் முன் வந்து நின்ற உயரமான ஒரு சன்னியாசியின் குரலினால் தடைபட்டன.

அவர், ஐயா, உங்களை ஒரு மகான் கூப்பிடுகிறார், என்றார்.

யார் அவர்?

நீங்களே வந்து பாருங்களேன்.

அவருடைய இந்தச் சுருக்கமான அறிவுரையைத் தயங்கியவாறு பின்பற்றி, நான் சீக்கிரமே பல கவர்ச்சியான சீடர்கள் கொண்ட ஒரு குழுவுடன் ஒரு மரத்தினருகில் அதன் கிளைகளின் நிழலில் அமர்ந்திருந்த அந்தக் குருவைக் கண்டேன். கருமையான கண்களுடன் பிரகாசமான அசாதாரண உருவத்தைக் கொண்ட அந்த மகான், நான் அங்கு சென்றதும் எழுந்து என்னைக் கட்டித் தழுவினார்.

வரவேண்டும், ஸ்வாமிஜி, என்றார் அன்புடன்.

ஐயா, நான் ஸ்வாமி இல்லை, என்றேன் அழுத்தமாக.

நான் யாருக்கு ஸ்வாமி என்ற பட்டத்தை அளிக்க தெய்வீக வழி காட்டப்படுகிறேனோ, அவர்கள் அதை நிராகரிப்பதில்லை. அம்மகான் எளிய முறையில் என்னிடம் கூறினாலும் அவருடைய சொற்களில், உண்மையின் ஆழ்ந்த திட நம்பிக்கை தொனித்தது.

அக்கணமே ஓர் ஆன்மீக அருளாசியின் அலையால் நான் சூழப்பட்டேன். நான் புராதன சன்னியாசிகளின் பரம்பரைக்குத்[2] திடீரென்று உயர்ந்ததைக் கண்டு புன்னகை புரிந்தவாறு எனக்கு இவ்வாறான மரியாதையைக் கொடுத்த, உண்மையிலேயே உயர்ந்தவரும், தேவனைப் போன்று மனித உருவத்திலுமிருந்த அவரது பாதங்களில் பணிந்தேன்.

பாபாஜிஅது உண்மையில் அவர்தான்மரத்தடியில் அவர் அருகில் இருந்த ஓர் ஆசனத்தில் என்னை அமர சைகை செய்தார். அவர் இளைஞராகவும் வலிமை பொருந்தியவராகவும் இருந்தார். மேலும் லாஹிரி மகாசயரைப் போலவே காணப்பட்டார். நான் பல தடவைகள் இந்த இரு மகான்களின் தோற்றத்தில் இருந்த அசாதாரணமான ஒற்றுமைகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தாலும் அவ்வுருவ ஒற்றுமை என் மனத்தில் சட்டென்று பதியவில்லை. பாபாஜியிடம், ஒருவர் மனத்தில் எந்த ஒரு குறிப்பிட்ட எண்ணமும் எழுவதைத் தடுக்கக் கூடிய ஒரு திறன் உண்டு. அவரை அடையாளம் கண்டு கொண்டதினால் நான் ஸ்தம்பித்துப் போகாமல் அவர் முன்னிலையில் முழுதும் இயல்பாக இருக்க வேண்டும் என்று அந்த மகான் விரும்பியது வெளிப்படையாகத் தெரிந்தது.

கும்ப மேளாவைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?

நான் மிகவும் ஏமாற்றமடைந்து விட்டேன், ஐயா, என்றவன் அவசரமாக, உங்களை சந்திக்கும் சமயம் வரை, என்று தொடர்ந்தேன். என்னவோ, மகான்களையும்

இந்த அமர்க்களத்தையும் சம்பந்தப்படுத்திப் பார்க்க முடியவில்லை.

குழந்தாய், அம்மகான் கூறினார், (பார்ப்பதற்கு அவரைப் போல் நான் இரு மடங்கு வயதுடையவனாக இருந்த போதிலும்) பலருடைய குற்றங்களுக்காக முழுவதையும் எடை போடாதே. மணலும் சர்க்கரையும் கலந்த கலவையைப் போன்று இப்புவியில் அனைத் தும் கலப்பான தன்மை உடையது. சர்க்கரையை மட்டும் எடுத்துக் கொண்டு மணலைத் தொடாமலே விட்டுவிடும் புத்திசாலியான எறும்பு போல இருக்க வேண்டும். இங்கு சாதுக்களில் பலர் இன்னும் மாயையில் உழன்றபடி இருந்தாலும், இந்த மேளா கடவுளை உணர்ந்த சில மகான்களால் ஆசீர்வதிக்கப்பட்டுள்ளது.

இந்த உன்னத மகானைச் சந்தித்த என் சொந்த அனுபவத்தை வைத்துக் கொண்டு அவர் கூறியதை நான் உடனே ஒப்புக் கொண்டேன்.

ஐயா, நான், மேலை நாடுகளில் உள்ள புகழ்பெற்ற விஞ்ஞானிகளைஉண்மையில் இங்கு கூடியிருக்கும் அனேகரை விடவும் அதிக புத்தி கூர்மையுள்ளவர்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். தொலைதூர ஐரோப்பா, அமெரிக்கா முதலிய இடங்களில் வாழ்ந்து வரும் பலவித மதப் பிரிவுகளைச்சேர்ந்த அவ்விஞ்ஞானிகள் இங்கு நடக்கும் தற்போதையது போன்ற மேளாக்களின் உண்மையான மதிப்பைப் பற்றி எதுவுமே அறியாதவர்கள். பாரதத்தின் மகான்களைச் சந்திப்பதினால் மிக்க நன்மை அடையக் கூடியவர்கள்

அவர்கள்தாம். அறிவின் சாதனைகளில் உயர்ந்தவர்களாக இருந்தாலும் அனேகர் நயமற்ற லௌகீகத்தில் ஊறித் திளைப்பவர்கள். மற்றவர்களோ விஞ்ஞானத் திலும் தத்துவத்திலும் புகழ்பெற்று, மதங்களின் அடிப்படை ஒற்றுமையை உணராதவர்கள். அவர்களுடைய சமயக் கோட்பாடுகள் கடக்க முடியாத தடைகளாக அவர்களை நம்மிடமிருந்து நிரந்தரமாகப் பிரித்துவிடக் கூடிய ஆபத்து உள்ளது.

நீ, மேலைநாடுகள் மற்றும் கீழை நாடுகள் ஆகிய இரண்டிலுமே அக்கறை செலுத்துவதைக் கண்டேன். பாபாஜியின் முகம் ஒப்புதலுடன் பிரகாசித்தது. எல்லா மனிதர்களுக்கும் இடமளிக்கக்கூடிய உன் பரந்த இதயத்தின் வேதனையை நான் உணர்ந்தேன். அதனால்தான் நான் உன்னை இங்கு அழைத்தேன்.

கீழை நாடுகளும் மேலை நாடுகளும் ஆன்மீகம், லௌகீகம் ஆகிய இரண்டும் இணைந்த பொன்னான நடுத்தரப் பாதையை நிறுவ வேண்டும், அவர் தொடர்ந்தார். பொருளாதார முன்னேற்றத்தில் பாரதம் மேற்கிலிருந்து கற்றுக் கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறது. அதற்குப் பதிலாக, பாரதம் எல்லோருக்கும் பொதுவான யோக விஞ்ஞான முறைகளைக் கற்பிக்க வேண்டும்; அதன் மூலம் மேற்கானது அதன் மத நம்பிக்கைகளின் அடிப்படைக்கு அசைக்க முடியாத யோக விஞ்ஞானத்தை ஆதாரமாகக் கொள்ள முடியும்.

ஸ்வாமிஜி, கீழை மற்றும் மேலை நாடுகளுக்கிடையே வரப்போகும் இணக்கமான

பரிமாற்றத்தில் நீங்கள் ஆற்ற வேண்டிய பங்கு உள்ளது. சில வருடங்களுக்குப் பிறகு நான் உங்களிடம் அனுப்பும் ஒரு சீடனுக்கு நீங்கள் மேலை நாடுகளில் யோகத்தைப் பரப்புவதற்குப் பயிற்சி அளிக்க வேண்டும். அங்கிருந்து ஆன்மீகத்தை நாடும் அனேக ஆத்மாக்களின் அதிர்வலைகள் வெள்ளம்போல் பெருகி என்னிடம் வருகின்றன. அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் எழுச்சி பெறக் காத்திருக்கும் உள்ளார்ந்த சக்தி வாய்ந்த மகான்களை நான் காண்கிறேன்.

அவருடைய கதையின் இந்த கட்டத்தில் ஸ்ரீ யுக்தேஸ்வர் தன் பார்வையை முழுமையாக என் மீது திருப்பினார்.

என் மகனே, பிரகாசமான நிலவொளியில் புன்னகை புரிந்தவாறு அவர் கூறினார். எத்தனையோ வருடங்களுக்கு முன்னால் பாபாஜி எனக்கு அனுப்புவதாக வாக்குறுதி அளித்த சீடன் நீதான்.

பாபாஜிதான், நான் ஸ்ரீ யுக்தேஸ்வரை அடைய வழி காட்டினார் என்றறிய எனக்கு மகிழ்ச்சியாயிருந்தது. எனினும் எங்கேயோ தொலைதூரத்தில் இருக்கும் மேலை நாடுகளில் என் அன்பான குருவிடமிருந்தும் ஆசிரமத்தின் எளிய அமைதியினின்றும் விலகி என்னை நினைத்துப் பார்க்க எனக்குக் கடினமாயிருந்தது.

பாபாஜி பிறகு பகவத் கீதையைப்பற்றி பேசினார். ஸ்ரீ யுக்தேஸ்வர் தொடர்ந்தார். நான் கீதையின் பல அத்தியாயங்களுக்கு விளக்க உரை எழுதியிருக்கும் விஷயத்தை அவர் அறிந்துள்ளார் என்பதை சில

புகழ்ச்சியான வார்த்தைகள் மூலம் அவர் குறிப்பிட்டது கண்டு எனக்கு ஒரே வியப்பு.

ஸ்வாமிஜி, என் வேண்டுகோளின்படி தயவு செய்து இன்னொரு காரியம் செய்யுங்கள், அந்த மகான் கூறினார். இந்து மற்றும் கிறிஸ்துவ மத நூல்களுக்கு இடையே உள்ள அடிப்படையான இணக்கம் பற்றி ஒரு சிறு புத்தகம் எழுதக் கூடாதா? இப்பொழுது அவற்றின் அடிப்படை ஒற்றுமை மனிதர்களுடைய பிரிவுகளின் பேதங்களினால் மங்கி விட்டது. இறைவனின் அருள் பெற்ற புதல்வர்கள் யாவரும் ஒரே விதமான உண்மைகளை எடுத்துக் கூறியிருக்கிறார்கள் என்பதை இணையான குறிப்புகளின் மூலம் எடுத்துக் காட்டுங்கள்.

மகராஜ், நான் தயக்கத்துடன் பதிலளித்தேன். எப்படிப்பட்ட கட்டளை! என்னால் அதை நிறைவேற்ற முடியுமா?

பாபாஜி மிருதுவாக நகைத்தார். என் மகனே, ஏன் சந்தேகப்படுகிறாய்? அவர் நம்பிக்கையூட்டியவாறு கூறினார். உண்மையில், இதெல்லாம் யாருடைய காரியம், எல்லாக் காரியங்களுக்கும் கர்த்தர் யார்? கடவுள் என்னை எதையெல்லாம் சொல்ல வைக்கிறாரோ, அதெல்லாம் உண்மையென நடந்தாக வேண்டும்.

நான் அந்த மகானின் அருளாசியினால் சக்தி பெற்று விட்டதாகக் கருதி அப்புத்தகத்தை எழுதுவதற்கு ஒப்புக் கொண்டேன். பிரியும் தருணம் வந்து விட்டதை உணர்ந்து நான் என் இலையாலான ஆசனத்திலிருந்து

எழுந்தேன்.

உனக்கு லாஹிரியைத் தெரியுமா? அக்குருதேவர் வினவினார். அவர் பெரிய மகானல்லவா? நம் சந்திப்பைப் பற்றி அவரிடம் கூறு. பிறகு லாஹிரி மகாசயருக்கு ஒரு செய்தியை என்னிடம் அளித்தார்.

நான் விடைபெற்றுக்கொள்ள பணிவாக வணங்கியதும் அம்மகான் அன்பாக முறுவலித்தார். நீ புத்தகம் எழுதி முடித்ததும் நான் உன்னிடம் வருகை புரிகிறேன், அவர் உறுதி கூறினார். நல்லது, தற்சமயம் போய் வா.

மறுநாள் நான் அலகாபாத்தை விட்டுக் கிளம்பி, காசிக்கு ரயிலேறினேன். என் குருதேவரின் இல்லத்தை அடைந்து கும்பமேளாவில் நான் கண்ட அற்புதமான மகானைப் பற்றிய முழுக் கதையையும் விளக்கினேன்.

ஓ, அவர் யாரென்று நீ அடையாளங்கண்டு கொள்ளவில்லையா? லாஹிரி மகாசயரின் கண்களில் சிரிப்பு நடனமாடியது. நீ அவரைக் கண்டு கொள்ளவில்லை என்பது எனக்குத் தெரிகிறது. ஏனெனில் அவரே உன்னைத் தடுத்து விட்டார். அவர்தான் என் இணையற்ற குருதேவர், தெய்வீக பாபாஜி!

பாபாஜி! நான் மலைப்புடன் திரும்பக் கூறினேன். யோகிகிறிஸ்து பாபாஜி! மறைந்தும் மறையாமலும் காக்கும் பாபாஜி! ஓ, மறுபடியும் கடந்த காலத்தைத் திரும்ப அடைந்து மேலும் ஒரு முறை அவருடைய முன்னிலையில் அவரது பாதத் தாமரைகளில் என் பக்தியைத் தெரிவித்துப் பணிய வேண்டும்

போலிருக்கிறதே!

கவலைப்பட வேண்டாம், அவர் தான் உன்னை மறுபடியும் பார்ப்பதாக வாக்குறுதி அளித்திருக்கிறாரே, லாஹிரி மகாசயர் ஆறுதலாகக் கூறினார்.

குருதேவா, அந்தத் தெய்வீக மகான் உங்களுக்கு ஒரு செய்தி சொல்லியனுப்பி இருக்கிறார். இந்த வாழ்க்கைக்கான சேமிப்பு சக்தி குறைவாக உள்ளது; அனேகமாக அது முடிந்து விட்டது என்று லாஹிரியிடம் சொல், என்றார்.

புதிர் போன்ற இச்சொற்களை நான் கூறியதும் லாஹிரி மகாசயரின் உடல் ஏதோ மின்னலினால் தாக்குண்டது போல் நடுங்கியது. ஒரே கணத்தில் அவரைச் சுற்றியுள்ள அனைத்துமே மௌனமாகிவிட்டது; அவருடைய சிரித்த முகம் அசாத்திய கடினமாகிவிட்டது. மங்கலான, அசைவற்ற மரச்சிலை அதனுடைய ஆசனத்தில் அமர்ந்திருந்தது போல, அவருடைய சரீரம் நிறமிழந்தது. நான் அதிர்ச்சியும் திகிலும் அடைந்தேன். இந்த ஆனந்தமான ஆத்மா, இவ்வளவு பயங்கர தீவிரத்தை வெளிப்படுத்தியதை என் வாழ்க்கையில் நான் என்றுமே கண்டதில்லை. அங்கு கூடியிருந்த மற்ற சீடர்களும் பயத்துடன் விழித்தார்கள்.

மௌனத்தில் மூன்று மணி நேரம் கழிந்தது. பிறகு லாஹிரி மகாசயர் அவருடைய சுபாவமான, மகிழ்ச்சியான தன்மையை அடைந்து ஒவ்வொரு சீடனுடனும் அன்புடன் பேசினார். ஒவ்வொருவரும் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். பாபாஜியின்

செய்தியானது, லாஹிரி மகாசயர் சீக்கிரமே தன் பூத உடலை விட்டு விடுவார் என்பதற்கான நிச்சயமான சங்கேதமாகும். இச்செய்தியை என் குருதேவர் புரிந்து கொண்டார் என்பதை அவரது மாற்றத்திலிருந்து நான் உணர்ந்து கொண்டேன். அவருடைய பயங்கர மௌனம், குருதேவர் அக்கணமே தன் உள்ளிருப்பைக் கட்டுப்படுத்தி, எஞ்சியிருந்த லௌகீக உலகின் கட்டுக்களை அறுத்து, பரமாத்மாவில் என்றும் ஜீவித்திருக்கும் பேதமற்ற நிலைக்குப் பறந்து விட்டார் என்பதை நிரூபித்தது. பாபாஜியின் இக்குறிப்பு, அவர் வழக்கப்படி கூறும், நான் உன்னுடன் என்றுமிருப்பேன் என்று பொருள்பட்டதாகத் தோன்றியது.

பாபாஜி, லாஹிரி மகாசயர் இருவருமே எல்லாம் அறிந்தவர்களானாலும், என் மூலமாகவோ அல்லது வேறு எந்த நடுவர் மூலமாகவோ அவர்கள் செய்தி பரிமாறிக் கொள்ள வேண்டிய அவசியம் எதுவுமில்லை, என்றாலும், அப்பெரிய மகான்கள் அடிக்கடி மனித நாடகத்தில் ஒரு பங்கேற்க உயர்நிலையிலிருந்து இறங்கி வருகிறார்கள். அவர்கள் சாதாரணமான முறையில் தூதுவர்கள் மூலம் சில சமயங்களில் தங்கள் தீர்க்க தரிசன செய்திகளை அனுப்புகிறார் கள். இதற்குக் காரணம், பின்னர் நிறைவேறும் அவர்களின் சொற்களைப் பற்றிய கதையை அறிய நேர்கின்ற ஒரு பரந்த மனித வட்டத்திற்கு அவை அதிக தெய்வ நம்பிக்கையை ஊட்டும் என்பதுதான்.

சீக்கிரமே நான் காசியை விட்டுப் புறப்பட்டு பாபாஜி

கேட்டுக் கொண்டபடி சாத்திரங்களைப் பற்றி எழுதும் பணியைச் செராம்பூரில் தொடங்கினேன். ஸ்ரீ யுக்தேஸ்வர் தொடர்ந்தார். நான் என்னுடைய பணியைத் தொடங்கியதுமே, என் மனத்தில், மரணமற்ற அந்தக் குருவிற்கு அர்ப்பணமாக ஒரு கவிதை இயற்ற வேண்டுமென ஊக்கமேற்பட்டது. நான் இதற்கு முன் சமஸ்கிருத மொழியில் கவிதை எழுத முயன்றதே இல்லையென்றாலும் என் பேனாவிலிருந்து இனிமையான வரிகள் எந்தச் சிரமமும் இல்லாமல் வெளிப்பட்டன.

அமைதியான இரவு நேரத்தில் பைபிளிலும் சனாதன தர்ம[3] சாத்திரங்களிலும் உள்ள ஒப்புமையைப் பற்றிய பணியில் ஈடுபட்டேன். அருள்பெற்ற மகானாகிய இயேசுவின் சொற்களை மேற்கோள் காட்டி அவருடைய போதனைகளும் வேதங்களின் உண்மைகளுடன் அடிப்படையில் ஒன்றாகவே இருப்பதைக் காண்பித்தேன். என் பரமகுருவின்[4] ஆசியினால் எனது புத்தகம் கைவல்ய தரிசனம்[5] (The Holy Science) மிகக் குறுகிய காலத்திலேயே நிறைவு பெற்றது.

என் இலக்கிய முயற்சிகளை முடித்த மறுநாள் காலை, குருதேவர் தொடர்ந்தார். கங்கையில் நீராட வேண்டி நான் ராய் காட்டிற்குச் சென்றேன். அந்தத் துறை வெறிச்சோடிக் கிடந்தது. சூரிய ஒளியின் அமைதியை அனுபவித்தவாறு சிறிதுநேரம் அசைவற்று நின்றேன். மின்னும் நீரில் நீராடிவிட்டு நான் வீட்டிற்குத் திரும்ப ஆயத்தமானேன். அந்த அமைதியில் கங்கையில்

நனைந்த என் ஆடைகளிலிருந்து நான் வைக்கும் ஒவ்வொரு அடியின் போது எழும் சரக், சரக் என்ற ஒலி மட்டுமே கேட்டது. நதிக் கரையின் பெரிய ஆலமரத்தைத் தாண்டியதும் ஏதோ ஒரு பலமான உத்வேகம் என்னைத் திரும்பிப் பார்க்கத் தூண்டியது. அங்கே, அந்த ஆலமர நிழலின் அடியில் மகான் பாபாஜி சில சீடர்கள் சுற்றியிருக்க அமர்ந்திருந்தார்.

நான் கனவு எதுவும் காணவில்லை என்பதை நிச்சயமாக்க, ஸ்வாமிஜி, வாழ்த்துக்கள்! பாபாஜியின் இனிமையான குரல் ஒலித்தது. நீ உன் புத்தகத்தை வெற்றிகரமாக எழுதி முடித்ததைக் காண்கிறேன். நான் உனக்கு அளித்த வாக்குறுதியின்படி உனக்கு நன்றி கூற வந்திருக்கிறேன்.

அதிவேகமாகத் துடிக்கும் இதயத்துடன் நான் நெடுஞ்சாண்கிடையாக அவரது பாதங்களில் விழுந்து வணங்கினேன். பரம குருவே, நான் இறைஞ்சி வேண்டினேன். இங்கு அருகிலிருக்கும் என் வீட்டிற்கு தாங்களும் தங்கள் சீடர்களும் வந்திருந்து கௌரவிக்கக் கூடாதா?

அந்த மகாகுரு முறுவலுடன் மறுத்தார். இல்லை, குழந்தாய், நாங்கள் மரங்களின் நிழலை விரும்பும் மக்கள்; இந்த இடம் மிகவும் சௌகரியமாகவே உள்ளது, என்றார்.

குருதேவா, தயவு செய்து சற்றுப் பொறுக்க வேண்டும், நான் அவரைக் கெஞ்சியவாறு நோக்கினேன். தங்களுக்குக் கொஞ்சம் இனிப்புப் பண்டங்கள் எடுத்துக்

கொண்டு உடனே திரும்புகிறேன்.[6]

சில நிமிடங்களில் நான் விசேஷ இனிப்புகளுடன் திரும்பி வந்தபொழுது, அந்த விசால மரத்தடியில் அத்தெய்வீகக் குழு இல்லை. நான் அப்படித்துறையைச் சுற்றி எல்லா இடங்களிலும் தேடினேன். ஆனால் என் மனத்திற்குள், அச்சிறு குழு ஆகாயவெளி இறக்கைகளைக் கொண்டு ஏற்கனவே பறந்து போய்விட்டதென எனக்குத் தெரிந்தது.

நான் மிகவும் மனம் புண்பட நேர்ந்தது. நான் மறுபடி பாபாஜியை சந்தித்தால் கூட நான் அவருடன் பேச அக்கறைக் காட்டப் போவதில்லை, நான் எனக்குள்ளே கூறிக் கொண்டேன். இப்படி என்னை விட்டுத் திடீரென்று புறப்பட்டது. இரக்கமற்ற செய்கை இல்லையா? அது அன்பினால் ஏற்பட்ட கோபமே தவிர வேறு ஒன்றுமில்லை. சில மாதங்களுக்குப் பிறகு நான் காசிக்கு சென்று லாஹிரி மகாசயரைக் கண்டேன். நான் அவருடைய கூடத்தை அடைந்ததும் அவர் என்னைப் புன்னகையுடன் வரவேற்றார்.

உள்ளே வா, யுக்தேஸ்வர், நீ இப்பொழுது என் அறை வாசலில் பாபாஜியைச் சந்தித்தாயா?

ஏன், இல்லையே, நான் ஆச்சரியத்துடன் பதிலளித்தேன்.

இங்கே வா லாஹிரி மகாசயர் என்னை நெற்றியில் மிருதுவாகத் தொட்டார். உடனே கதவருகில் அன்றலர்ந்த முழுத் தாமரை போன்ற பாபாஜியின் உருவத்தைக் கண்டேன்.

எனக்கு நான் முன்பு புண்பட்டது நினைவிற்கு வந்தது. நான் வணங்கவில்லை. லாஹிரி மகாசயர் என்னை ஆச்சரியத்துடன் நோக்கினார்.

அத்தெய்வீகக் குரு ஆழங்காண முடியாத தன் கண்களால் என்னை உற்று நோக்கிக் கொண்டிருந்தார். நீ என்னிடம் வருத்தமுற்றிருக்கிறாய்.

ஐயா, ஏன் இருக்கக்கூடாது? நீங்கள் உங்களது மாயக்குழுவுடன் காற்றிலிருந்து தோன்றினீர்கள்; அது போல் காற்றிலேயே நீங்கள் மறைந்தும் விட்டீர்கள், என்று நான் பதிலளித்தேன்.

நான் உன்னை வந்து பார்ப்பேன் என்று கூறினேனே தவிர எவ்வளவு நேரம் இருப்பேனென்று கூறவில்லையே, பாபாஜி மிருதுவாகச் சிரித்தார். நீ ஒரே படபடப்பாக இருந்தாய், நிச்சயமாகக் கூறுகிறேன். உன் பலமான பதட்டம் என்னைக் கிட்டத்தட்ட காற்றிலேயே கரையும்படி ஆக்கிவிட்டது.

புகழ்ச்சியற்ற இச்சமாதானத்தில் நான் அக்கணமே திருப்தி அடைந்தேன். நான் அவர் காலடியில் வணங்கினேன். அந்த மகாகுரு என் தோளில் அன்புடன் தட்டிக் கொடுத்தார்.

குழந்தாய், நீ இன்னும் அதிகமாக தியானம் செய்ய வேண்டும். உன் பார்வை இன்னும் குற்றமற்றதாகவில்லை. நான் சூரிய ஒளியின் பின்னால் மறைந்திருந்ததை உன்னால் பார்க்க முடியவில்லை. தெய்வீக வேணுகானத்தையொத்த குரலில் இச்சொற்களைப் பொழிந்து விட்டு கட்புலனாகாத

பிரகாசத்தினுள்ளே மறைந்துவிட்டார்.

நான் என் குருவைக் காண்பதற்கென்று காசிக்குச் சென்ற கடைசிப் பயணங்களில் அதுவும் ஒன்று. ஸ்ரீ யுக்தேஸ்வர் கூறிமுடித்தார். பாபாஜி கும்பமேளாவில் முன்னோடியாகக் கூறியதுபோல், லாஹிரி மகாசயரின் இல்லற அவதாரம் முடிவிற்கு வந்து கொண்டிருந்தது. 1895 வேனிற்காலத்தில் அவரது திடகாத்திரமான உடலின் முதுகில் ஒரு சிறு கட்டி தோன்றியது. அவர் அறுவைச் சிகிச்சைக்கு உடன்பட மறுத்துவிட்டார். அவர் தன் சீடர்கள் சிலரின் தீய கர்மவினைக்கு தன் சொந்த உடலால் பிராயச்சித்தம் செய்து கொண்டிருந்தார். கடைசியில் சில சீடர்கள் மிகவும் பிடிவாதம் செய்ததின் பேரில் குருதேவர் மறைமுகமாகப் பதிலளித்தார்.

இந்த உடல் போவதற்கு ஒரு காரணம் வேண்டும்; நீங்கள் எது செய்தாலும் நான் அதற்கு உடன்படுகிறேன்.

சிறிது நேரத்திற்குப் பிறகு தன்னிகரற்ற அந்த மகான் தன் பூதவுடலை காசியில் நீத்தார். அவரை நாடி அவருடைய சிறிய வரவேற்பறைக்கு நான் பிறகு செல்ல வேண்டியிருக்கவில்லை. என் வாழ்வின் ஒவ்வொரு நாளும் அவருடைய சர்வ வியாபகமான வழிகாட்டுதலின் அருளாசியைப் பெற்றிருப்பதை நான் காண்கிறேன்.

பல வருடங்களுக்குப் பிறகு, மிக முன்னேற்றம் அடைந்திருந்த சீடராகிய ஸ்வாமி கேசவானந்தர்[7] மூலமாக லாஹிரி மகாசயரின் மறைவைப் பற்றி பல ஆச்சரியமான விவரங்களைக் கேட்டறிந்தேன்.

கேசவானந்தர் என்னிடம், குருதேவர் தன் உடலைக் களைவதற்குச் சில தினங்களுக்கு முன்னால் ஹரித்துவாரில் நான் என் ஆசிரமத்தில் அமர்ந்திருந்த பொழுது, உருப்பெற்று அவர் என் முன் தோன்றினார்.

உடனே காசிக்கு வா, இச்சொற்களை கூறி லாஹிரி மகாசயர் மறைந்தார்.

நான் உடனே காசிக்கு ரயிலேறினேன். என் குருதேவரின் வீட்டில் பல சீடர்கள் கூடியிருப்பதைக் கண்டேன். அன்று[8] மணிக்கணக்கில் அவர் கீதை விளக்கம் கூறிக் கொண்டிருந்தார்; பிறகு அவர் மிகச் சாதாரணமாக எங்களுக்குக் கூறினார்.

நான் வீட்டிற்குப் போகிறேன்.

எங்கள் வேதனை நிறைந்த புலம்பல்கள் தடுக்க முடியாத அருவியைப் போல் பெருகியது.

ஆறுதலடையுங்கள்; நான் மறுபடி எழுவேன். இதைக் கூறிய பிறகு லாஹிரி மகாசயர் தன் ஆசனத்திலிருந்து எழுந்து மூன்று முறை தன்னைத் தானே சுற்றிக் கொண்டு, வடக்குத் திசையை நோக்கியவாறு பத்மாசனத்தில் அமர்ந்து ஆனந்தமாக மகா சமாதியை எய்தினார்.[9]

பக்தர்களுக்கு மிகவும் பிரியமான லாஹிரி மகாசயரின் அழகிய உடல், இல்லறத்தாருக்குச் செய்ய வேண்டிய பவித்ரமான சடங்குகளுடன் புனித கங்கை நதிக்கரையில் மணிகர்ணிகா படித்துறையில் தகனம் செய்யப்பட்டது. கேசவானந்தர் தொடர்ந்தார். மறுநாள் நான் இன்னும் காசியிலேயே இருந்த பொழுது காலை

பத்து மணிக்கு என் அறையை பிரகாசமான ஓர் ஒளி சூழ்ந்தது. ஓ! என் முன்னால் லாஹிரி மகாசயரின் ரத்தமும் சதையும் கொண்ட பூதவுடல் நின்றது. அதிக இளமையும் பிரகாசமும் கொண்டு தோன்றியதைத் தவிர அது அவருடைய பழைய உடலைப் போன்று அப்படியே இருந்தது. என் தெய்வீகக் குரு என்னிடம் பேசினார்.

கேசவானந்தா, இது நானேதான். எரிக்கப்பட்ட என் உடலின் சிதைந்த அணுக்களிலிருந்து மறுபடி அமைக்கப்பட்ட உருவத்தை தான் உயிர்ப்பித்திருக்கிறேன். இந்த உலகில் இல்லறத்தானாக நான் செய்ய வேண்டிய கடமைகள் முடிந்து விட்டன. ஆனால் நான் இந்த உலகை இன்னும் முழுதும் விட்டுவிடவில்லை. நான் இப்பொழுதிலிருந்து இமயத்தில் பாபாஜியுடன் சில காலம் கழிப்பேன்; பிரபஞ்சத்திலும் பாபாஜியுடன் இருப்பேன்.

பிறகு எனக்குச் சில ஆசிச் சொற்கள் கூறிவிட்டு மனித அறிவுக்கெட்டாத அந்த மகாகுரு மறைந்தார். அற்புதமானதொரு ஊக்கம் என் இதயத்தை நிறைத்தது. கிறிஸ்து, கபீர்[10] ஆகியவர்களின் ஸ்தூல மரணத்திற்குப் பிறகும் அவர்களுடைய சீடர்கள் தங்கள் ஜீவனுள்ள குருவைக் காணக் கொடுத்து வைத்தது போல் நானும் ஆன்மீகத்தில் உயர்த்தப்பட்டவன் ஆனேன்.

நான் ஹரித்துவாரிலுள்ள தனிமையான என் ஆசிரமத்திற்குத் திரும்பிய பொழுது, கேசவானந்தர் தொடர்ந்தார். என்னுடன் லாஹிரி மகாசயரின் புனிதமான அஸ்தியில் (சாம்பல்) ஒரு பகுதியை எடுத்து

வந்தேன். என் குரு தன் இட, காலக்கூட்டை விட்டுத் தப்பித்துச் சென்று விட்டாரென்பது எனக்குத் தெரியும். ஒரு சர்வ வியாபகப் பறவை விடுவிக்கப்பட்டது. இருந்தாலும் அவருடைய புனித அஸ்தியை கோயிலாக்கி வைத்திருப்பது எனக்குத் திருப்தியை அளித்தது.

திரும்ப உயிர்த்தெழுந்த குருவைக் காணும் பேறு பெற்றவர்களில் இன்னொரு சீடர், மகான் பஞ்சனன் பட்டாசார்யா[11] ஆவார். நான் கல்கத்தாவில் உள்ள அவர் வீட்டிற்கு விஜயம் செய்து அவர் லாஹிரி மகாசயருடன் கழித்த பல வருடங்களின் கதைகளை மிக்க மகிழ்ச்சியுடன் கேட்டிருக்கிறேன். கடைசியாக அவருடைய வாழ்க்கையிலேயே மிகவும் அற்புதமானதொரு சம்பவத்தைப் பற்றி அவர் என்னிடம் கூறினார்.

இங்கு கல்கத்தாவில் காலை பத்துமணிக்கு, அவரைத் தகனம் செய்த மறு நாள் லாஹிரி மகாசயர் என் முன்னால் உயிருடன் தோன்றினார், என்று பஞ்சனன் கூறினார்.

ஸ்வாமி பிரணவானந்தர் ஈருடல் கொண்ட மகான், கூட அவருடைய சொந்த தெய்வீக அனுபவத்தின் விவரங்களை என்னுடன் பகிர்ந்து கொண்டிருக்கிறார். ராஞ்சியில் அவர் என் பள்ளிக்கூடத்திற்கு வருகை தந்திருந்த பொழுது அவர் கூறினார்:

லாஹிரி மகாசயர் தன் உடலை நீத்துவிடுவதற்கு சில நாட்களுக்கு முன்பு உடனே காசிக்கு வரும்படி

எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். ஆனால் தவிர்க்க முடியாத காரணங்களால் தாமதமாகி என்னால் உடனே கிளம்ப முடியவில்லை. காலை பத்து மணிக்கு நான் காசிக்குப் புறப்படுவதற்காகத் தயார் செய்து கொண்டிருந்த பொழுது ஒளி பொருந்திய என் குருவின் உருவம் என் அறையில் திடீரென்று தோன்றியதைக் கண்டு நான் சொல்லொணா மகிழ்ச்சி அடைந்தேன்.

காசிக்குப் போக ஏன் அவசரப்படுகிறாய்? லாஹிரி மகாசயர் புன்முறுவலுடன் கூறினார். நீ அங்கு என்னை இனிக் காணமாட்டாய்.

அவருடைய சொற்களின் பொருள் எனக்குப் புலப்பட்டதும் நான் அவரை சொப்பன தரிசனத்தில்தான் காண்பதாக நம்பி, மனம் உடைந்து புலம்பலானேன்.

குருதேவர் சமாதானப்படுத்தியவாறு என்னை நெருங்கினார். இதோ பார், என்னைத் தொடு, என்றார். எப்பொழுதும் போல் நான் வாழ்ந்து கொண்டு தான் இருக்கிறேன். புலம்பாதே, நான் உன்னுடன் எப்போதும் இருக்கவில்லையா, என்ன?

சீரிய இம் மூன்று சீடர்களின் கூற்றிலிருந்து ஓர் அற்புதமான உண்மையின் கதை வெளிப்பட்டது. அவருடைய உடல் தழலுக்கு இரையான மறுதினம் காலை பத்து மணியளவில் திரும்ப உயிர்த்தெழுந்த அந்த குரு, உண்மையான ஆனால் உருவம் மாறுதலடைந்த உடலுடன் வெவ்வேறு நகரங்களிலிருந்த மூன்று சீடர்களுக்கு முன்னால் தோன்றியிருக்கிறார்.

ஆதலால் அழிவுக்குரிய இவ்வுடல்

அழியாமையையும் சாவுக்குரிய இவ்வுடல் சாகாமையையும் மேற்கொள்ளும் பொழுது, சாவு வெற்றியால் வீழ்த்தப்பட்டது என்று எழுதப்பட்டுள்ள இப்பழமொழி நிறைவேறும். ஓ சாவே, உன் விஷக் கொடுக்கு எங்கே? ஓ சவக் குழியே, உன் வெற்றி எங்கே?[12]

---

1 பார்க்க பக்கம் 590 அடிக்குறிப்பு

2 ஸ்ரீ யுக்தேஸ்வர் பின்னால் பீகார், புத்தகயாவிலிருந்த மஹந்த் (மடத்தின் தலைவர்) தால் முறைப்படி ஸ்வாமி பரம்பரைக்கு தீட்சை செய்விக்கப் பெற்றார்.

3 பதவுரையின்படி, நிரந்தர மதம், என்று பொருள்படும். இது வேத போதனைகள்

அனைத்திற்கும் கொடுக்கப்பட்ட பெயராகும். சனாதன தர்மம், இந்து மதம் என அழைக்கப்படலாயிற்று. ஏனெனில் மகா அலெக்ஸாண்டரின் கீழ் வடமேற்கு இந்தியாவைப் படையெடுத்த கிரேக்கர்கள், சிந்துநதி (Indus) தீரத்தில் வசித்த மக்களை இந்துக்கள் (Indoos), அல்லது ஹிந்துக்கள் (Hindus) எனக் குறிப்பிட்டார்கள்.

4 பரமகுரு என்பது ஒருவரின் குருவின் குருவைக் குறிக்கும். அவ்வாறு லாஹிரி மகாசயரின் குருவான பாபாஜி, ஸ்ரீ யுக்தேஸ்வருக்குப் பரம குரு ஆவார். கிரியா யோகத்தை உண்மையுடன் பயிற்சி செய்யும் YSS–SRF-ன் அங்கத்தினர்கள் அனைவரின் ஆன்மீக நலத்திற்கும் பொறுப்பேற்கும் இந்திய குரு பரம்பரையில் மகாவதார பாபாஜி மகா குரு ஆவார்.

5 பாரதத்தின் ஜார்கண்டில் ராஞ்சியிலுள்ள யோகதா சத்சங்க சொஸைடியினால் தற்போது வெளியிடப்பட்டுள்ளது.

6 குருவிற்கு உணவுவகை எதுவும் வழங்காதிருப்பது பாரதத்தில் மரியாதைக் குறைவாகக் கருதப்படுகிறது.

7 கேசவானந்தரின் ஆசிரமத்திற்கு நான் விஜயம் செய்ததைப் பற்றி 608-612 பக்கங்களில் விவரிக்கப்பட்டிருந்தது.

8 1895ல், செப்டம்பர் 26ம் தேதி லாஹிரி மகாசயர் தன் உடலை நீத்தார். இன்னும் சில

தினங்களிலே அவர் தன் 67வது பிறந்த நாளை அடைந்திருப்பார்.

9 உடலை மூன்று முறை சுற்றுதல், பிறகு வடக்கு நோக்கி அமர்தல் இவையெல்லாம், தன் ஸ்தூல உடலை இறுதி நேரம் எப்பொழுது தாக்கப் போகிறது என்பதை முன்கூட்டியே அறிந்த மகான்கள் செய்யும் வைதிகச் சடங்குகளாகும். கடைசி தியானத்தின் பொழுது, ஒரு மகான் பிரபஞ்சத்தின் ஓங்கார நாதத்துடன் இணைந்து விடுவது மகா சமாதி என்றழைக்கப்படும்.

10 கபீர் 16வது நூற்றாண்டில் வாழ்ந்த சிறந்த மகான். அவரைப் பின்பற்றும் ஏராளமானவர்களில் இந்துக்களும், முஸ்லிம்களும் அடங்குவர். கபீரின் மரணத்தின் போது அவரது மரணச் சடங்குகளை நடத்துவது விஷயமாக சீடர்களுக்குள் வாக்குவாதம் ஏற்பட்டது. சினமூட்டப்பட்ட குருதேவர், தன் இறுதி நித்திரையிலிருந்து எழுந்து தன் கட்டளையையிட்டார். என்னில்

எஞ்சியுள்ளதில் பாதி முஸ்லிம்களின் சடங்குகளின்படி புதைக்கப்படட்டும், மற்ற பாதி இந்து புனித சடங்குப்படி எரிக்கப்படட்டும். பிறகு அவர் மறைந்துவிட்டார். சீடர்கள் அவர் உடலை மூடியிருந்த போர்வையை நீக்கிய பொழுது அங்கு மலர்களின் அழகிய வரிசையைத் தவிர வேறு எதுவுமே இல்லை. இவைகளில் பாதி,மிகுந்த பயபக்தியுடன் முஸ்லிம்களால் மகர் என்ற இடத்தில் சமாதியில் புதைக்கப்பட்டது. இந்த இடம் இன்று வரை முஸ்லிம்களால் போற்றப்பட்டு வருகிறது. இன்னொரு பாதி இந்து சடங்குகளுடன் காசியில் தகனம் செய்யப்பட்டது. இவ்விடத்தில் கபீர் சௌரா என்ற கோயில் கட்டப்பட்டது. அது யாத்ரீகர்களை அதிக எண்ணிக்கையில் ஈர்க்கிறது.

கபீரை, அவருடைய இளவயதில் இரு சீடர்கள சென்றடைந்து தெய்வீக வழியை அடைவதற்கு வேண்டிய நுட்பமான அறிவு பூர்வ வழிகாட்டுதலை வழங்குமாறு வேண்டினர். குரு எளிய முறையில் பதிலளித்தார்:

பாதை தொலைவையே தோற்றுவிக்கிறது;

அவன் அருகிலே உள்ளானாகில்,

பாதையின் தேவையேன் உனக்கு?

நீரில் உள்ள மீன் தாகத்தில் தவித்தால்

புன் முறுவல்தான் என் முகத்திலே!

11 பார்க்க பக்கம் 493. பஞ்சனன், பீகார் மாகாணம் தேவ்கர் என்னுமிடத்தில் 17 ஏக்கர் நிலத்தில் எழுப்பியிருக்கும் சிவன் கோயில் ஒன்றில் லாஹிரி மகாசயரின் ஒரு வண்ணப் படத்தைப் பிரதிஷ்டை செய்துள்ளார். (பிரசுரதாரரின் குறிப்பு)

12 I கொரிந்தியர் 15:54-55 (பைபிள்). தேவன் மரித்தோரை எழுப்புகிறது நம்பப்படாத காரியமென்று நீங்கள் எண்ணுகிறதென்ன?அப்போஸ்தலருடைய நடபடிகள் 26:8 (பைபிள்).

## அத்தியாயம் 37

# நான் அமெரிக்கா செல்கிறேன்

அமெரிக்கா! நிச்சயமாக இந்த மக்கள் அமெரிக்கர்கள் தான்! என் உள்மனத் தோற்றத்தில் மேலை நாட்டு முகங்களின்[1] ஒரு பரந்த காட்சி தென்பட்டபொழுது இந்த எண்ணம்தான் தோன்றியது.

ராஞ்சி பாடசாலையின் சரக்கு அறையில் தூசி படிந்த சில பெட்டிகளின் பின்னால் அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்திருந்தேன்.[2] சிறுவர்களின் நடுவில், வேலை மிகுந்த அந்த வருடங்களில் தனிமையான ஓர் இடம் காண்பதுகூட மிகக் கடினம்.

அக்காட்சி தொடர்ந்தது. பெருந்தொகையான மக்கள் என்னை உற்று நோக்கியவாறு, நடிகரைப் போன்று மனமென்னும் மேடையில் தோன்றிச் சென்றவாறு இருந்தனர்.

சரக்கு அறையின் கதவு திறந்தது. வழக்கப்படியே இளஞ்சிறுவர்களில் ஒருவன் நான் ஒளிந்திருக்கும் இடத்தை கண்டுபிடித்து விட்டான்.

விமல், இங்கே வா, நான் மகிழ்ச்சியுடன் கூறினேன். உனக்கு ஒரு செய்தி சொல்லப் போகிறேன்; இறைவன் என்னை அமெரிக்காவிற்கு அழைக்கிறார்!

அமெரிக்காவிற்கா? என் சொற்களை அச்சிறுவன் எதிரொலித்த குரலின் விதம், நான் சந்திரனுக்கு என்று கூறிவிட்டது போலிருந்தது.

ஆம்! நான் கொலம்பஸைப் போன்று அமெரிக்காவைக் கண்டுபிடிக்கச் செல்கிறேன். அவர் இந்தியாவைக் கண்டுபிடித்ததாக நினைத்தார். நிச்சயமாக இவ்விரண்டு நாடுகளுக்கும் இடையில் ஏதோ ஒரு கர்மவினைத் தொடர்பு இருக்கிறது! விமல் வேகமாக ஓடிவிட்டான். சீக்கிரமே அந்த இரண்டு காலுடைய செய்தித் தாளினால் முழுப்பள்ளிக் கூடத்திற்கும் இச்செய்தி அறிவிக்கப்பட்டது.

நான் குழம்பியிருந்த ஆசிரியர் குழுவை அழைத்துப் பள்ளிக்கூடத்தின் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்தேன்.

நீங்கள் லாஹிரி மகாசயருடைய கல்வியின் யோகக் குறிக்கோளை எப்பொழுதும் முன்னிலையில் வைப்பீர்களென்பதை நான் அறிவேன், நான் கூறினேன். நான் அடிக்கடி உங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன். இறைவன் விரும்பினால் என்றாவது நான் திரும்பி வருவேன்.

நான் அச்சிறுவர்களையும் ராஞ்சியின் ஒளி நிறைந்த நிலங்களையும் கடைசி முறையாக நோக்கியபொழுது என் கண்களில் நீர் நிறைந்தது. என் வாழ்வில், குறிப்பிட்ட ஒரு காலகட்டம் முடிந்து விட்டதென்பதை நான் அறிந்தேன்; இனிமேல் நான் தூர தேசங்களில்தான் வசிப்பேன். அந்தக் காட்சியைக் கண்ட சில மணி நேரங்கள் கழித்து நான் கல்கத்தாவிற்கு ரயிலேறினேன். மறுநாள் நான் அமெரிக்காவில் உள்ள சர்வதேச சமய மிதவாதிகளின் மகாசபை(International Congress of Religious

Liberals)க்கு இந்தியாவிலிருந்து ஒரு பிரதிநிதியாகப் பங்கேற்பதற்கான அழைப்பைப் பெற்றேன். அது அந்த வருடம் அமெரிக்க ஏகத்துவ சங்க(Amerian Unitarian Association)த்தின் ஆதரவில் பாஸ்டன் நகரில் கூடுவதாக இருந்தது.

என் தலை சுற்றியது. நான் ஸ்ரீ யுக்தேஸ்வரை நாடி செராம்பூருக்குச் சென்றேன்.

குருஜி, அமெரிக்காவில் ஒரு சமயச் சபையில் சொற்பொழிவாற்ற நான் இப்பொழுதுதான் அழைக்கப்பட்டிருக்கிறேன். நான் போகட்டுமா?

உனக்கு எல்லாக் கதவுகளும் திறந்திருக்கின்றன, குருதேவர் சாதாரணமாகப் பதிலளித்தார். இப்பொழுது போனால்தான் உண்டு, இல்லாவிடில் எப்பொழுதுமில்லை.

ஆனால், ஐயா, நான் அச்சத்துடன் கூறினேன். பொதுக்கூட்டங்களில் சொற்பொழிவாற்றுவது பற்றி எனக்கு என்ன தெரியும்? நான் எப்பொழுதும் சொற்பொழிவாற்றியதில்லை, அதுவும் ஆங்கிலத்தில் இல்லவே இல்லை.

ஆங்கிலமோ, ஆங்கிலமில்லையோ, யோகத்தைப் பற்றிய உன் சொற்கள் மேலை நாடுகளில் கேட்கப்பட்டே தீரும்.

நான் சிரித்தேன். சரி, அன்புடைய குருதேவா, அமெரிக்கர்கள் வங்காள மொழி கற்றுக் கொள்வார்களென்று நான் நினைக்கவில்லை! ஆங்கில மொழியிலுள்ள தடைகளைக் கடக்க வேண்டி தயவு

செய்து எனக்கு ஆசி அளியுங்கள்.[3]



பரமஹம்ஸ யோகானந்தர் நினைவாலயம்
ராஞ்சி, வநந மடத்திலுள்ள நினைவாலயம், முந்தைய சரக்கு சேமிப்பு அறை இருந்த இடத்தில் அமைந்துள்ளது. இங்குதான் பரமஹம்ஸர், உலகம் முழுவதும் கிரியா யோக போதனைகளைப் பரப்புவதற்காக மேற்கிற்கு அவரை அழைத்த தன் தீர்க்கதரிசன மனக்காட்சியைக் கண்டார். இந்த சரித்திர பிரசித்திபெற்ற நிகழ்ச்சியின் எழுபத்தி-ஐந்தாவது வருடத்தைக் குறிக்கும் விதமாக கையினால் செதுக்கப்பட்ட வெள்ளை சலவைக்கல்லால் ஆன ஆலயம் 1995-ல் அர்ப்பணிக்கப்பட்டது.

நான் இச்செய்தியை என் தந்தையாரிடம் கூறியபொழுது அவருக்கு ஒரேடியாகத் தூக்கிவாரிப் போட்டது. அவருக்கு அமெரிக்கா நம்ப முடியாத தூரத்திலிருப்பதாகத் தோன்றியது; அவருக்கு இனி என்னைப் பார்க்கவே முடியாதோ என்ற பயமேற்பட்டது.

நீ எப்படிப் போக முடியும்? யார் உனக்கு நிதி உதவி செய்வார்கள்? என்றார் கடுமையாக. அவர் எனக்காக அன்புடன் என் படிப்பு, மேலும் என் முழு

வாழ்க்கைக்கான செலவுகளை ஏற்றிருக்கிறார். அவருடைய கேள்வி எனது திட்டத்தை தர்மசங்கடமாக நிறுத்திவிடும் என்று அவர் சந்தேகமின்றி நம்பினார்.

இறைவன் எப்படியும் எனக்கு நிதி அளிப்பார். நான் இந்தப் பதிலைக் கூறிய பொழுது வெகு நாட்களுக்கு முன்பு என் சகோதரன் அனந்தாவிடம் ஆக்ராவில் நான் அதே போன்று கூறியது என் நினைவிற்கு வந்தது. ஒளிவு மறைவு ஏதுமன்றி நான் தொடர்ந்தேன், ஏன் அப்பா, ஒருக்கால் கடவுள் உங்கள் மனத்தில் எனக்கு உதவும்படி எண்ணச் செய்யலாம்.

முடியாது, ஒருக்காலும் முடியாது! அவர் என்னை இரக்கத்துடன் நோக்கினார்.

ஆதலால், தந்தையார் மறுநாள் ஒரு பெரிய தொகைக்கு என்னிடம் ஒரு காசோலையைத் தந்தபொழுது நான் பிரமிப்பில் ஆழ்ந்தேன்.

நான் இந்தத் தொகையை உன் தந்தை என்ற முறையில் கொடுக்கவில்லை, லாஹிரி மகாசயரின் விசுவாசமுள்ள சீடன் என்ற முறையில்தான் கொடுக்கிறேன். தொலைதூரத்திலுள்ள அந்த மேலை நாட்டிற்குச் சென்று வா; கிரியா யோகத்தின் சாதி இன வேறுபாடற்ற உபதேசங்களை அங்கு பரப்புவாய், என்றார்.

வெகு சீக்கிரத்தில் தன் சொந்த விருப்பங்களை ஒதுக்கி வைக்க முடிந்த என் தந்தையாரின் சுயநலமற்ற தன்மையை நினைத்து நான் மிகவும் மனம் நெகிழ்ந்தேன். முந்தைய இரவு அவருக்கு, என் திட்டத்தின் உள்நோக்கம் வெளிநாட்டுப் பயணத்தின்

மேலுள்ள சாதாரண ஆசையினால் அல்ல என்ற சரியான உணர்வு வந்திருக்கிறது.

ஒருவேளை நாம் இந்தப் பிறவியில் மறுபடியும் சந்திக்க முடியாமல் போகலாம், என்றார் வருத்தத்துடன். தந்தைக்கு இந்தச் சமயத்தில் அறுபத்தேழு வயது ஆகியிருந்தது.

என் உள் மனத்தில் தோன்றிய திட நம்பிக்கை என்னைப் பதில் பேசத் தூண்டியது. நிச்சயமாக இறைவன் நம்மை இன்னொரு முறை ஒன்று சேர்ப்பார்.

நான் என் குருதேவரையும் தாய்நாட்டையும் விட்டு அறிமுகமில்லாத அமெரிக்காவின் கரைகளை நோக்கிச் செல்ல ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கும் பொழுது எனக்கு ஏற்பட்ட அச்சம் கொஞ்ச நஞ்சமல்ல. பல நூற்றாண்டுகளாக மகான்களின் ஒளிப் பிரவாகத்தில் ஆழ்ந்திருக்கும் பாரதத்தினின்று மிகவும் வேறுபட்ட ஒரு தேசமானலோகாயத மேலை நாட்டைப் பற்றி நான் கதைகள் பல கேள்விபட்டிருக்கிறேன்.

மேற்கத்திய சூழ்நிலையை எதிர்கொள்ள, இமயக் குளிரைத் தாங்குவதை விடத் திடமாக ஒரு கீழை நாட்டு ஆசிரியர் இருக்க வேண்டியிருக்கும், என்று நான் எண்ணினேன்.

ஒரு நாள் அதிகாலை நான் பிரார்த்தனை செய்யத் தொடங்கினேன். பிரார்த்தித்துக் கொண்டே இறந்தாலும் சரி, இறைவனின் குரலைக் கேட்கும் வரை தொடர்வது என்ற பிடிவாதமான தீர்மானத்துடன் இருந்தேன். நவீன பயனுள்ள செயல்வாத மயக்கத்தில் என்னையே நான்

இழக்க மாட்டேன் என்பதற்கான, ஆண்டவனின் அருளாசியையும் உறுதி மொழியையும் பெற விழைந்தேன். நான் அமெரிக்கா செல்லுவதற்கு என் மனம் தயாராகிவிட்டது. ஆனால் இறைவனின் அனுமதியாகிய ஆறுதல் மொழியைக் கேட்க வேண்டுமென்ற தீர்மானம் அதை விட அதிக வலிமையுடன் இருந்தது.

நான் என் விசும்பல்களை அடக்கியவாறு பிரார்த்தனை செய்து கொண்டே இருந்தேன். எந்தப் பதிலும் வரவில்லை. உச்சி வேளையில் நான் பிரார்த்தனையின் உச்சியை எட்டினேன். வேதனைகளின் அழுத்தத்தினால் என் தலையே சுழன்றது. நான் இன்னும் சற்று என் உளத்துயரின் ஆழத்தை அதிகப்படுத்தினால் என் மூளை சிதறிவிடும் எனத் தோன்றியது.

அந்தக் கணத்தில் கர்பார் வீதியிலிருந்த என் இல்லத்து கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. அவ்வழைப்புக்கிணங்கி கதவைத் திறந்த நான் ஓர் இளைஞரைத் துறவிக்குரிய குறைவான ஆடையில் கண்டேன். அவர் வீட்டிற்குள் நுழைந்தார்.

அவர் பாபாஜியாகத்தான் இருக்க வேண்டும்! என்று நான் நினைத்தேன்; திகைப்புற்றேன். ஏனெனில் என் முன்னாலிருந்த மனிதர் இளம் லாஹிரி மகாசயரின் அம்சங்களைக் கொண்டிருந்தார். அவர் என் எண்ணத்திற்குப் பதிலளித்தார். ஆம், நான் பாபாஜிதான் அவர் ஹிந்தியில் மிக இனிமையாகப் பேசினார். நம் விண்ணுலகத் தந்தை உன் பிரார்த்தனையைச்

செவியுற்றார். உன்னிடம் இதைக் கூறும்படி எனக்கு அவர் உத்தரவை இடுகிறார்; உன்னுடைய குருவின் கட்டளைப்படி நீ அமெரிக்கா செல்வாய், பயப்படாதே, நீ பாதுகாக்கப்படுவாய்.

சிலிர்ப்படைந்த சிறிய இடைவெளிக்குப் பிறகு, பாபாஜி மறுபடி என்னை நோக்கிக் கூறினார். மேலை நாடுகளில் கிரியா யோக முறைகளைப் பரப்ப நான் உன்னைத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறேன். வெகுகாலத்திற்கு முன் நான் உன் குரு யுக்தேஸ்வரைக் கும்பமேளாவில் சந்தித்தேன். அப்பொழுது நான் அவரிடம் பயிற்சி பெறுவதற்காக உன்னை அனுப்புவதாகக் கூறினேன்.

நான் அவருடைய முன்னிலையில் பயபக்தியினால் பேச்சற்று விட்டேன்; அவர்தான் என்னை ஸ்ரீ யுக்தேஸ்வரிடம் அனுப்பி வைத்தாரென்பதை அவர் வாயாலேயே அறிந்ததும் நான் மிக மனநெகிழ்ச்சி அடைந்தேன். மரணமற்ற அக்குருவின் முன் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினேன். அவர் அன்புடன் என்னைத் தூக்கி நிறுத்தினார். என் வாழ்க்கையைப் பற்றிய பல விஷயங்களைக் கூறிய பிறகு தனிப்பட்ட முறையில் சில புத்திமதிகள் சொல்லி, சில ரகசியமான முன்னறிவிப்புகளையும் கூறினார்.

கடவுளை அறிவதற்கு வேண்டிய விஞ்ஞான உத்தியான கிரியா யோகம், முடிவாக அவர் ஆழ்ந்த தீவிரத்துடன் பேசினார், கடைசியாக எல்லா நாடுகளிலும் பரவும், மேலும் மனிதனின் தனிப்பட்ட, எல்லை கடந்த

இறை ஞானத்தின் மூலமாக தேசங்களை இணக்கமாக்க உதவும்.

கம்பீர சக்தி கொண்ட பார்வையினால், அம்மகான் அவருடைய பிரபஞ்ச உணர்வின் கண நேர தரிசனத்தைக் கொடுத்து என்னை மின்னதிர்வடையச் செய்தார்.

ஆயிரம் சூரியர் வானில்
வெடித்துச் சிதறி புவியைச் சூழும்
கற்பனைக் கெட்டா ஒளி வெள்ளம்
அப்பரமனின் பேரொளிக்கு ஒப்பாகுமே![4]

சிறிது நேரத்தில் பாபாஜி கதவை நோக்கிச் செல்லத் தொடங்கினார். என்னைத் தொடர முயற்சி செய்யாதே. அவ்வாறு உன்னால் செய்ய முடியாது, என்றார்.

போய் விடாதீர்கள், பாபாஜி, தயவு செய்யுங்கள், நான் திரும்பக் கூவினேன். என்னையும் உங்களுடன் அழைத்துச் செல்லுங்கள்! அவர் பதிலளித்தார், இப்பொழுதல்ல, இன்னொரு சமயம்.

உணர்ச்சிவசப்பட்டு, நான் அவரது எச்சரிக்கைக்கு மதிப்பளிக்கவில்லை. நான் அவரைத் தொடர முயன்றதும் என் கால்கள் அசையாமல் தரையில் வேரூன்றியதைக் கண்டேன். கதவருகில் நின்று பாபாஜி கடைசி அன்புப் பார்வையைச் செலுத்தினார். ஆசி கூறும் விதத்தில் அவர் தன் கையை உயர்த்தினார். அவர் செல்லும் வரை என் கண்கள் ஏக்கத்துடனேயே அவர் மீது நிலைக்குத்தி நின்றன.

சில நிமிடங்களில் என் கால்கள் விடுபட்டன. என் பிரார்த்தனைக்குப் பதிலளித்ததற்கு மட்டும் அல்லாமல்

பாபாஜியுடன் சந்திப்பிற்கு எனக்கு அருள் புரிந்தமைக்கும் இறைவனுக்கு இடைவிடாமல் நன்றி கூறி ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்தேன். புராதனமான, என்றும் இளமையான அம்மகானின் ஸ்பரிசத்தினால் என் முழுசரீரம் புனிதமடைந்தது போல் தோன்றியது. இவரைக் காண வேண்டுமென்று எவ்வளவோ காலமாக நான் தீவிர வேட்கையுடன் இருந்தேன்.

இதுவரையில், நான் பாபாஜியைக் கண்ட இக்கதையை எவரிடமும் வெளியிட்டதில்லை. என் மனித அனுபவங்களில் அதைமிகப் புனிதமாகக் கருதி என் இதயத்திலேயே மறைத்து வைத்திருந்தேன். ஆனால் இந்தச் சுயசரிதத்தின் வாசகர்கள், நான் பாபாஜி அவர்களை என் சொந்தக் கண்களால் கண்டதைக் கூறினால், இந்த உலகத்தின் மீதான சிரத்தையுடன் தனித்திருக்கும் பாபாஜியைப் பற்றிய உண்மையை அதிகம் நம்புவார்கள் என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டது. இப்புத்தகத்திற்காக, நவீன இந்தியாவின் யோக புருஷரான பாபாஜியின் நிஜமான உருவத்தை வரைவதற்கு, ஒரு கலைஞனுக்கு நான் உதவி இருக்கிறேன்.

அமெரிக்காவிற்கு நான் கிளம்புவதற்கு முந்திய மாலை ஸ்ரீ யுக்தேஸ்வரின் புனித சன்னதியில் இருந்தேன். நீ இந்துக்கள் மத்தியில் பிறந்தவன் என்பதை மறந்து விடு. அமெரிக்கர்களின் பழக்க வழக்கங்கள் எல்லாவற்றையும் அப்படியே ஏற்றுக் கொள்ளாதே. இரு சாரர்களிடமுமுள்ள உத்தம குணத்தை எடுத்துக் கொள்,

என்று அவருடைய அறிவார்ந்த அமைதியான முறையில் கூறினார். கடவுளின் குழந்தையாகிய நீ, உண்மையான நீ யாகவே இரு. இந்தப் பூமியில் அனேக இனங்களாக சிதறிக் கிடக்கும் உன் எல்லாச் சகோதரர்களிடமும் உள்ள மேன்மையான குணநலன்களைத் தேடிக் கண்டுபிடித்து அவைகளை உன்னிடம் ஒன்றாக்கிக் கொள்.

பிறகு அவர் என்னை ஆசிர்வதித்தார். கடவுளைத் தேடி நம்பிக்கையுடன் உன்னை நாடி வருபவர்கள் யாவரும் உதவி பெறுவார்கள். நீ அவர்களை நோக்கும் பொழுது உன் கண்களிலிருந்து வீசும் ஆன்மீக ஒளி அவர்களது மூளையில் பிரவேசித்து அவர்களுடைய லௌகீகப் பழக்க வழக்கங்களை மாற்றி, அவர்களை அதிக இறையுணர்வு உடையவர்களாக்கும். புன்னகையுடன் அவர் மேலும் கூறினார், உண்மையான ஆன்மாக்களைக் கவரும் உன் பாக்கியம் மிக நன்றாகவே இருக்கிறது. நீ எங்கு சென்றாலும், அது ஒரு பொட்டல் காடாய் இருந்தாலும் கூட உனக்கு நண்பர்கள் கிடைப்பார்கள்.

ஸ்ரீ யுக்தேஸ்வரின் ஆசிகள் இரண்டுமே வெகுவாகப் பலித்தன. எனக்கு ஒரு நண்பர் கூட இல்லாத அமெரிக்காவிற்கு நான் தனியாக வந்தேன். ஆனால் அங்கு காலத்தைக் கடந்த ஆன்மீக போதனைகளைப் பெறத் தயாராக இருந்தவர்களை ஆயிரக் கணக்கில் கண்டேன்.

இந்தியாவிலிருந்து நான் 1920 ஆகஸ்ட் மாதத்தில்,

முதலாவது உலக யுத்தத்தின் முடிவிற்குப் பிறகு அமெரிக்காவிற்குக் கிளம்பிய பிரயாணிகள் கப்பலான, தி சிடி ஆ்ஃப் ஸ்பார்டாவில் பயணமானேன். எனக்கு பாஸ்போர்ட் கிடைப்பதிலுள்ள அனேக சிவப்பு நாடாத் தடங்கல்களெல்லாம், அதிசயம் என்றே கூறக்கூடிய வகையில் கடந்த பின்னரே என்னால் கப்பலில் இடம் பதிவு செய்ய முடிந்தது.

இரண்டு மாதப் பயணத்தில் என் சக பிரயாணி ஒருவர் நான் பாஸ்டன் மகாசபையில் பங்கு கொள்ளப் போகிற இந்தியப் பிரதிநிதி என்று தெரிந்து கொண்டார்.

ஸ்வாமி யோகானந்தா, பின்னால் நான் கேட்கப் போகும் அமெரிக்கர்களின் விசித்திரமான உச்சரிப்புகளில் முதன் முதலானது இதுஅவர் கூறினார். தயவு செய்து அடுத்த வியாழனன்று இரவு இந்தப் பிரயாணிகளுக்காக ஒரு சொற்பொழிவாற்ற முடியுமா? வாழ்வின் போராட்டமும் அதை எதிர்ப்பது எப்படி என்பதையும் பற்றிய சொற்பொழிவினால் நாங்கள் எல்லோரும் பயனடைவோம் என நினைக்கிறேன்.

ஐயோ! என் சொந்த வாழ்வின் போராட்டத்தையே சமாளித்தாக வேண்டியிருந்ததை அடுத்த புதன்கிழமை நான் தெரிந்து கொண்டேன். ஆங்கிலத்தில் என் எண்ணங்களைக் கோவையாகக் கூற நம்பிக்கையின்றி முயற்சி செய்து, இறுதியில் நான் எல்லாத் தயாரிப்புகளையும் கைவிட்டேன்; என் எண்ணங்கள், சேணத்தைக் கண்ணால் கண்டதும் துள்ளிக் குதிக்கும் முரட்டுக் குதிரைக் குட்டியைப் போல் ஆங்கில

இலக்கண விதிகளுக்கு உட்பட்டு ஒத்துழைக்க மறுத்தன. இருந்தாலும், என் குருதேவரின் பழைய வாக்குறுதிகளை முழுவதும் நம்பி நான் கப்பலின் பொது அறையில் வியாழனன்று என் சொற்பொழிவைக் கேட்க விழைந்து கூடியிருப்பவர்கள் முன் தோன்றினேன். என் வாயிலிருந்து எந்த சொல் திறமும் எழவில்லை. நான் அங்கு கூடியிருந்தவர்கள் முன்னால் பேச்சற்று நின்றேன். ஒரு பத்து நிமிட நேரம் பொறுமையின் சோதனைக்குப் பிறகு சபையோர் எல்லோருக்கும் என் சங்கடம் புரிந்து வாய்விட்டுச் சிரிக்கத் தொடங்கினர்.

அக்கணத்தில், நிலைமை எனக்கு வேடிக்கையாகத் தெரியவில்லை; கோபத்துடன் நான் குருதேவருக்கு மௌனப் பிரார்த்தனை ஒன்றை அனுப்பினேன்.

உன்னால் முடியும் பேசு! அவருடைய குரல் உடனேயே என் உணர்வுக்குள்ளே ஒலித்தது.

அக்கணமே என் எண்ணங்கள் ஆங்கில மொழியுடன் அழகான உறவு கொண்டன. நாற்பத்தைந்து நிமிடங்களுக்குப் பிறகும் சபையோர்கள் கவனித்துக் கேட்டுக் கொண்டு இருந்தனர். இந்தச் சொற்பொழிவு பிறகு அமெரிக்காவில் பலதரப்பட்ட குழுக்கள் முன்னர் பேசுவதற்கு எனக்குப் பல அழைப்புகளைப் பெற்றுத் தந்தது.

நான் என்ன பேசினேன் என்பதில் ஒரு சொல் கூட பின்னால் என் நினைவிற்கு வரவில்லை. பிறகு ஜாக்கிரதையாக விசாரித்ததில், பல பிரயாணிகளிடமிருந்து நான் அறிந்து கொண்டது: நீங்கள்

மிக்க ஊக்கமளிக்கும் ஒரு சொற்பொழிவைக் கிளர்ச்சி உண்டாக்கும் சரியான ஆங்கிலத்தில் அளித்தீர்கள். மகிழ்ச்சி அளிக்கக்கூடிய இந்தச் செய்தியைக் கேட்டதும் நான் பணிவுடன் என் குருதேவருக்கு, சமயத்தில் எனக்கு உதவிசெய்ததற்கு நன்றி செலுத்தி, அவர் இடம், காலம் ஆகிய தடைகளை இல்லாததாக்கி எப்பொழுதும் என்னுடன் இருப்பதைப் புதிதாக உணர்ந்தேன்.

மீதமிருந்த கடற்பிரயாண நாட்களில் எப்பொழுதாவது ஒரு முறை பாஸ்டன் மகாசபையில் நிகழ்த்தப் போகும் கடும் சோதனையான ஆங்கிலச் சொற்பொழிவைப் பற்றிய பயஉணர்வின் சில திடீர் தாக்குதல்களை அனுபவித்தேன்.

இறைவா, நான் தீவிரமாகப் பிரார்த்தனைச் செய்தேன், தயவு செய்து என் ஒரே ஊக்கம் நீயாகவே இருக்க அருள் செய்.



பரமஹம்ஸ யோகானந்தர்
1920ல் இந்தியா, கல்கத்தாவில் எடுக்கப்பட்ட பாஸ்போர்ட் புகைப்படம்

தி சிடி ஆஃப் ஸ்பார்டா, செப்டம்பர் மாதக் கடைசியில் பாஸ்டனை அடைந்தது. 1920 அக்டோபர் 6ந் தேதி நான் அமெரிக்காவில் மகா சபையின் முன்னர் என் கன்னி உரையை ஆற்றினேன். அது நன்கு ஏற்றுக்கொள்ளப்பட்டதை அறிந்து நான், நிம்மதிப்

பெருமூச்சு விட்டேன். அமெரிக்க ஏகத்துவ சங்கத்தின் (American Unitarian Association) பெருந்தன்மையான காரியதரிசி, மகாசபையின் நடவடிக்கைகளைப் பற்றி வெளியிட்ட செய்திக் குறிப்பில்[5] பின்வருமாறு விளக்கியிருந்தார்;

ஸ்வாமி யோகானந்தா, ராஞ்சி பிரமசரிய ஆசிரமத்தின் பிரதிநிதி, மகாசபைக்கு அவருடைய சங்கத்தின் சார்பில் வாழ்த்துக்களைத் தெரிவித்தார். சமய விஞ்ஞானம் என்ற பொருளில் தத்துவார்த்தத் தன்மை கொண்ட சொற்பொழிவை சரளமான ஆங்கிலத்தில் ஒரு சக்திவாய்ந்த விதத்திலாற்றினார். அது இன்னும் பரவலான வினியோகத்திற்காக துண்டு பிரசுரமாக வெளியிடப்பட்டிருக்கிறது. மதம் என்பது உலகம் முழுவதும் பொதுவானதும் ஒன்றானதுமாகும். நாம் சில குறிப்பிட்ட வழக்கங்களையும் சம்பிரதாயங்களையும் உலகிற்குப் பொதுவானதாக்க முடியாது. ஆனால் மதத்தின் பொதுவான தன்மையை உலகமயமாக்க முடியும். மேலும் அதைப் பின்பற்றி அதற்குக் கீழ்ப்படிய எல்லோரையும் ஒன்று போல கேட்டுக் கொள்ளலாம் என்று அவர் கூறுகிறார்.



அக்டோபர் 1920, பாஸ்டன், யுஎஸ்ஏவில் சர்வதேச சமய மிதவாதிகள் மகாசபையில் பங்கேற்ற சில பிரதிநிகளுடன் பரமஹம்ஸ யோகானந்தர். அமெ ரிக்காவில் இங்கு தான் யோகானந்தர் தன் முதல் பிரசங்கத்தை ஆற்றினார்.

தந்தையாரின் தாராளமான காசோலையின் உதவியினால் மகாசபை முடிந்த பிறகும் நான் அமெரிக்காவில் தங்க முடிந்தது. பாஸ்டனில் எளிய சூழ்நிலையில் மூன்று சந்தோஷமான வருடங்கள் கழிந்தன. நான் பொதுச் சொற்பொழிவுகள் ஆற்றினேன். வகுப்புகள் நடத்தினேன். ஆன்மாவின் கீதங்கள் (Songs of the Soul) என்ற கவிதைகளடங்கிய ஒரு புத்தகத்தை நியூ யார்க் மாநகரக் கல்லூரியின் தலைவரான டாக்டர் ஃபிரெட்ரிக் பி.ராபின்ஸனின்[6] முன்னுரையுடன் எழுதினேன்.

1924ல் அமெரிக்கக் கண்டத்தின் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டு பல பெரிய நகரங்களில்

ஆயிரக்கணக்கான மக்களின் முன்னர் உரையாற்றினேன். அழகிய அலாஸ்காவில் ஓய்வெடுக்க எண்ணி சியாட்டிலிலிருந்து புறப்பட்டேன்.

1925ஆம் வருடக் கடைசியில் பரந்த மனமுடைய மாணவர்களால் கலிஃபோர்னியா, லாஸ் ஏஞ்ஜிலீஸ், மௌண்ட் வாஷிங்டன் எஸ்டேட்ஸ் என்ற பகுதியில் அமெரிக்கத் தலைமை அலுவலகத்தை நிறுவினேன். அந்தக் கட்டிடம் காஷ்மீரத்தில் பல வருடங்களுக்கு முன் எனக்குத் தோன்றிய காட்சியில் நான் கண்ட ஒன்றாகும். நான் சீக்கிரமாகவே ஸ்ரீ யுக்தேஸ்வருக்கு இந்தத் தொலை தூர அமெரிக்கக் காரியங்களைப் பற்றிய படங்களை அனுப்பினேன். அவர் வங்காளியில் ஒரு தபால் கார்டில் பதில் எழுதியிருந்தார். அதை நான் இங்கே மொழி பெயர்க்கிறேன்.

11, ஆகஸ்ட் 1926.
என் இதயக் குழந்தாய், ஓ யோகானந்தா!

உன் பள்ளிக்கூடம் மற்றும் அதன் மாணவர்களின் படங்களைக் கண்டு என் வாழ்வில் எவ்வளவு ஆனந்தம் உண்டாகியது என்பதை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. பல்வேறு நகரங்களில் உன் யோக மாணவர்களைக் கண்டு நான் ஆனந்தத்தில் உருகியே போகிறேன்.

உனது கீத உறுதிகள், குணப்படுத்தும் அதிர்வலைகள், தெய்வீக சுகமளிக்கும் பிரார்த்தனைகள் ஆகிய முறைகளைப் பற்றிக் கேட்டு என் மனதார உனக்கு நன்றி சொல்லாமலிருக்க முடியவில்லை.
வாயிலையும், சுழன்று மேலேறும் மலைப்பாதையையும், மௌண்ட் வாஷிங்டன் கீழே பரவிக் கிடக்கும் இயற்கைக் காட்சிகளையும் கண்டு அவைகளை என் கண்களாலேயே பார்க்க வேண்டுமென்று அடங்கா ஆவல் உண்டாகிறது.

இங்கு எல்லாம் நல்லபடியாக நடந்து வருகிறது. கடவுள் அருளால் நீ என்றும் ஆனந்தத்திலிருப்பாயாக.
ஸ்ரீ யுக்தேஸ்வர் கிரி

வருடங்கள் ஓடின. நான் என் புது தேசத்தின் ஒவ்வொரு பாகத் திலும் உரையாற்றினேன்.

நூற்றுக்கணக்கான சங்கங்கள், கல்லூரிகள், தேவாலயங்கள், மற்றும் ஒவ்வொரு பிரிவினரின் குழுக்களிலும் நான் சொற்பொழிவாற்றினேன். 1920-1930 ஆகிய பத்து வருடங்களில் என் யோக வகுப்புகளுக்கு ஆயிரக்கணக்கில் அமெரிக்கர்கள் வந்த வண்ணமிருந்தனர். பிரார்த்தனைகள் மற்றும் ஆன்ம எண்ணங்கள் கொண்ட நிரந்தரத்திலிருந்து வரும் ரகசியங்கள் (Whispers from eternity)[7] என்னும் புதிய புத்தகத்தை, பிரபல பாடகியாகிய அமிலிதா கலிகுர்ஸியின் முகவுரையுடன் அவர்கள் அனைவருக்கும் அர்ப்பணித்தேன்.

சில சமயங்களில் (வழக்கமாக, மாத முதலில் ஸெல்ஃப் ரியலைசேஷன் பெஃலோஷிப்பின் தலைமை அலுவலகமான மௌண்ட் வாஷிங்டன் மையத்தின் பராமரிப்பிற்காக பில்கள் வந்த வண்ணமிருக்கும் பொழுது) நான் இந்தியாவின் எளிமையான அமைதியை ஏக்கத்துடன் நினைப்பேன். ஆனால் தினமும் மேற்கு மற்றும் கிழக்கு நாடுகளுக்கிடையே புரிந்து கொள்ளும் தன்மை விரிவடைந்து வருவதை நான் கண்டேன்; என் ஆன்மா ஆனந்தம் அடைந்தது.

ஜார்ஜ் வாஷிங்டன், அவருடைய தேசத்தின் தந்தை, அனேக சமயங்களில், தான் தெய்வீகமாக வழிகாட்டப்படுவதாக உணர்ந்தார். அவர் (அவருடைய விடைபெறும் உரையில்) அமெரிக்காவிற்கு ஆன்மீக எழுச்சி ஊட்டும் கீழ்க்கண்ட சொற்களைக் கூறினார்.

என்றும் உன்னதமான நியாயத்தினாலும் தயாள

குணத்தினாலும் வழிகாட்டப்படும் மக்களைக் கொண்ட சுதந்திரமான ஞானம் பெற்ற ஒரு மகோன்னத நாடு, சீக்கிரமாகவே மனித குலத்திற்கு, பெருந்தன்மையான அதி நவீன உதாரணத்தைக் கொடுப்பது அதற்கு ஏற்றதாகும். இந்த நிலையான வழியைக் கடைப்பிடிப்பதன் மூலம் தற்காலிகமான சௌகரியங்களை விட்டுவிட வேண்டி இருந்தாலும் நாளடைவில் அவ்வழியின் பலன்கள் அமோகமாக பரிசைத் தரும் என்பதில் யாருக்காவது சந்தேகம் ஏற்பட முடியுமா? கடவுள் ஒரு நாட்டின் நிரந்தரமான சந்தோஷத்தை அதனுடைய அறவழியுடன் சம்பந்தப் படுத்தாமலிருக்க முடியுமா?

வால்ட் விட்மனின் அமெரிக்காவிற்குத் துதிப்பாடல்
(உன் சமமான சந்ததிகளுடன் தாயே நீ என்ற கவிதையிலிருந்து)
நீ உன் வருங்காலத்தில்,
நீ உன் உன்னத அறிவு பெற்ற ஆண்,பெண் வம்சத்தோடு- நீ தெற்கு, வடக்கு, மேற்கு, கிழக்கில் உள்ள
உன் அறநெறி, ஆன்மீக மல்லர்களுடன்.
நீ உன் அருட்செல்வம், நாகரிகம் இவற்றில் (அதுவரை உன் கர்வமான பொருட் செல்வ நாகரிகம் வீணேதான்),
நீ உன் அனைத்தையும் வழங்கும், அனைத்தையும் அரவணைக்கும் பிரார்த்தனையில் – நீ வெறும் ஒரு பைபிளில், இரட்சகரில் இல்லை,
உன்னைக் காப்பவர்கள் எண்ணற்றோர், உன்னுள்ளேயே மறைந்து, யாருக்கும் சமமானவராய், யாரையும் போல் தெய்வீகமாய்...
இவையே! இவையாவும் உன்னிடம் (நிச்சயம் தோன்றும்) இன்று நான் முன்னுரைப்பேன்.



யோகானந்தர், 1924ல் தேச நெடுகிலும் மேற் கொண்ட சொற்பொழிவு சுற்றுப் பயணத்தின் போது அலாஸ்காவிற்கு செல்லும் வழியில் கப்பலில் தனது அறையில்.



யோகானந்தர் மேடையில் வகுப்பு நடத்துகிறார், டென்வர், கொலராடோ, யுஎஸ்ஏ, 1924



யோகானந்தர் ஃபில்ஹார்மோனிக் அரங்கத்தில் சொற்பொழிவு ஆற்றுகிறார், லாஸ் ஏஞ்ஜிலீஸ், கலிஃபோர்னியா, 1925



ஸ்ரீ யோகானந்தர் 1925ல் விசால மனம் படைத்த மாணவர்களின் உதவியினால், மௌண்ட் வாஷிங்டன் எஸ்டேட்ஸை வாங்கினார். இந்த நடவடிக்கை முற்றுப் பெறுவதற்கு முன்னரே, அவருடைய சொஸைடியின் உலக தலைமையகமாக விரைவிலேயே ஆகப் போகின்ற அந்த இடத்தில், அவருடைய முதல் கூட்டமான ஈஸ்டர் சூரியோதய நிகழ்ச்சியைக் கூட்டினார்.



பரமஹம்ஸ யோகானந்தர், 1927, பிப்ரவரி 22ல் வர்ஜினியா, மௌண்ட் வெர்னான்ல் உள்ள ஜார்ஜ் வாஷிங்டனின் சமாதியில் மலர்களை இடுகிறார்.



ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர் மற்றும் திரு. ஜான் பால்ஃபர், வெள்ளை மாளிகையில், வாஷிங்டன் டி.சி. 1927 ல், இங்கு ஜனாதிபதி கூலிலிட்ஜ் யோகானந்தரை வரவேற்றார்.



ஸ்ரீ யோகானந்தர் மெக்ஸிகோ நகரத்திற்கு 1929-ல் வருகை தந்த பொழுது அவருக்கு விருந்தோம்பல் அளித்த மெக்ஸிகோவின் ஜனாதிபதி மாட்சிமை பொருந்திய எமிலிலியோ போர்டஸ் கில்.



பரமஹம்ஸர், 1929ல் மெக்ஸிகோவில் உள்ள ஸோகிமில்கோ ஏரியில் படகில் தியானித்துக் கொண்டிருத்தல்.

1 அவற்றில் அனேக முகங்களை நான் மேலை நாட்டில் பார்த்த உடனே அடையாளம்; கண்டு கொண்டேன்.

2 1995ல், ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர் அமெரிக்காவிற்குச்சென்ற 75வது ஆண்டு நிறைவைக் குறிக்கும் வண்ணம், ராஞ்சியில் பரமஹம்ஸருக்குக் காட்சி கிட்டிய பழைய சரக்கு அறை இருந்த இடத்தில் ஓர் அழகிய

ஸ்ம்ரிதி மந்திர் (நினைவுக்கோயில்) அர்ப்பணிக்கப்பட்டது. (பிரசுரதாரரின் குறிப்பு)

3 ஸ்ரீ யுக்தேஸ்வரும் நானும் சாதாரணமாக வங்காளியில் தான் பேசுவோம்.

4 பகவத் கீதை XI:12 (ஆர்னால்டின் மொழி பெயர்ப்பிலிருந்து)

5 ஆன்மாவின் புது யாத்திரைகள் (New Pilgrimages of the Spirit). (பாஸ்டன்: பீகன்பிரஸ், 1921).

6 ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்ஆல் வெளியிடப்பட்டது. டாக்டர் மற்றும் திருமதி. ராபின்ஸன், 1939ல் இந்தியாவிற்கு வருகை புரிந்தனர். ஒரு யோகதா சத்சங்கக் கூட்டத்தில் அவர்கள் விருந்தினர்களாகக் கௌரவிக்கப்பட்டனர்.

7 யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியாவினால் வெளியிடப்பட்டது.

அத்தியாயம் 38

# லூதர் பர்பாங்க் – ரோஜாக்களின் மத்தியில் ஒரு மகான்

தாவர இனவிருத்தி மேம்பாட்டின் ரகசியம் விஞ்ஞான அறிவைத் தவிர, அன்புதான். கலிஃபோர்னியாவில் உள்ள ஸான்டா ரோஸா என்னுமிடத்திலுள்ள லூதர் பர்பாங்க்கின் தோட்டத்தில் அவருடன் நான் உலவிக் கொண்டிருக்கையில் அவர் அறிவு செறிந்த இச்சொற்களை உதிர்த்தார். நாங்கள் உண்பதற்குரிய கள்ளிச் செடிகளின் பாத்தி ஒன்றின் அருகில் நின்றோம்.

நான் முட்களற்ற கள்ளிச்செடிகளை வளர்ப்பதில் பரிசோதனைகள் செய்து கொண்டிருக்கையில், அவர் தொடர்ந்தார், அன்பின் அதிர்வலையைப் பரப்புவதற்காக நான் அடிக்கடி செடிகளுடன் பேசுவது வழக்கம். நீங்கள் பயப்படுவதற்கு ஒன்றுமேயில்லை. உங்கள் தற்காப்பு முட்கள் உங்களுக்கு தேவை இல்லை. நான் உங்களைப் பாதுகாப்பேன், என்று அவைகளிடம் கூறுவேன். காலக் கிரமத்தில் பாலைவனத்தில் வளரும் அந்த உபயோகமான செடி முட்களற்ற வகையாக வெளிப்படத் தொடங்கியது.

நான் இந்த அதிசயத்தைக் கேட்டு மகிழ்ந்தேன். அன்புள்ள லூதரே, மௌண்ட் வாஷிங்டனிலுள்ள என்

தோட்டத்தில் நடுவதற்கு சில கள்ளி இலைகளை தயவு செய்து தாருங்கள்.

பக்கத்தில் நின்றிருந்த ஒரு வேலையாள் சில இலைகளைப் பறிக்கத் தொடங்கினான். பர்பாங்க் அவனைத் தடுத்தார்.

ஸ்வாமிக்காக அவைகளை நானே பறிக்கிறேன். அவர் எனக்கு கொடுத்த மூன்று இலைகளை பின்னர் நான் நட்டு, அவைகள் மிகப் பெரிய தோட்டமாக வளர்வதைக் கண்டு ஆனந்தமடைந்தேன்.

அந்தச் சிறந்த தோட்டக்கலை நிபுணர், இப்பொழுது அவர் பெயரிலேயே பிரசித்தி அடைந்துள்ள பெரிய உருளைக் கிழங்கை உருவாக்கியதுதான் அவருடைய முதல் குறிப்பிட்ட வெற்றியாகும் என்று என்னிடம் கூறினார். ஒரு மேதைக்கே உரித்தான அயராத உழைப்புடன் அவர் மேலும் நூற்றுக் கணக்கான ஒட்டுமுறைத் தாவரங்களை அபிவிருத்தி செய்து உலகிற்கு அளித்த வண்ணமிருந்தார். அவருடைய புது பர்பாங்க் வகைகள் தக்காளி, சோளம், பூசணி வகை, செர்ரி, ப்ளம்,தேனினிமை பழவகை, இலந்தைப் பழ வகை, கசகசா, அல்லி, ரோஜா முதலியனவாகும்.

லூதர், புகழ் பெற்ற ஓர் அக்ரோட்டு மரத்தருகில் என்னை அழைத்துச் சென்ற போது, நான் என் புகைப்படக் கருவியை அதை நோக்கிக் குவித்தேன். இயற்கைப் பரிணாமத்தின் காலத்தைக் குறைத்து, வளர்ச்சியை விரைவு படுத்த முடியும் என்பதை அம்மரத்தின் மூலம் அவர் நிரூபித்திருக்கிறார்.

பதினாறு வருடங்களுக்குள்ளேயே இந்த அக்ரோட்டு மரம் மிக அதிக கொட்டைகளை அளிக்கும் நிலையை அடைந்தது. உதவியற்ற இயற்கைக்கு அது போன்ற இரு மடங்கு காலம் தேவைப்பட்டிருக்கும், என்று அவர் கூறினார்.

பர்பாங்க்கின் சிறிய சுவீகாரப் பெண் அவளுடைய நாயுடன் குதித்து விளையாடியபடி தோட்டத்திற்குள் நுழைந்தாள்.

இவள் என்னுடைய மனிதத் தாவரம், லூதர் அன்புடன் அவளை நோக்கிக் கையை ஆட்டியவாறு கூறினார். நான் மனித குலத்தை இப்பொழுது ஒரு பெரிய தாவரமாக, அதனுடைய முழு நிறைவிற்கு அன்பும், சிறந்த திறந்த வெளியின் இயல்பான ஆசிகளும், புத்திசாலித்தனமான சேர்க்கையும், தேர்ந்தெடுத்தலும் மட்டுமே தேவைப்படுவதாகக் காண்கிறேன். நான் என் சொந்த வாழ்நாள் காலத்திற்குள்ளேயே தாவர பரிணாமத்தில் அதிசயிக்கத்தக்க வளர்ச்சியைக் கண்டு இருப்பதால் மனித இனத்திற்கு எளிய, விவேகமான வாழ்க்கையின் நியமங்கள் போதிக்கப்பட்டவுடன் ஏற்படும் ஆரோக்கியமான ஆனந்தமய உலகத்தை நம்பிக்கையுடன் எதிர்பார்க்கிறேன். நாம் இயற்கையிடமும், இயற்கையின் கடவுளிடமும் திரும்பிச் செல்ல வேண்டும்.

லூதர், என் ராஞ்சி பள்ளிக் கூடத்தில் நீங்கள் அதனுடைய திறந்த வெளி வகுப்புகளையும் ஆனந்தமும்

எளிமையும் கொண்ட சூழ்நிலையையும் கண்டால் மகிழ்ந்து போவீர்கள்.

என் சொற்கள் பர்பாங்க்கின் இதயத்திற்கு மிகவும் பிடித்தமானதொரு இழையைகுழந்தைகளின் கல்வி முறைதொட்டுவிட்டன. அவர் என்னை நோக்கி அவருடைய ஆழ்ந்த, சாந்தமான கண்களில் ஆர்வம் ததும்ப கேள்விக் கணைகளைத் தொடுத்தார்.

கடைசியில் அவர், ஸ்வாமிஜி, வரப்போகும் யுகத்திற்கு ஒரே நம்பிக்கை உங்களுடையதைப் போன்ற பள்ளிக் கூடங்கள்தான். இயற்கையிலிருந்து துண்டிக்கப்பட்டு, மனிதனின் தனித்தன்மையை அடக்கித் திணறச் செய்யும் நம் காலத்திய கல்வி முறைகளை நான் எதிர்க்கிறேன். நான் நடைமுறைக்குகந்த உங்கள் கல்விக் கொள்கைகளை மனமார ஒப்புக் கொள்கிறேன், என்றார்.

நான், இனிய சுபாவமுடைய அம்முனிவரிடமிருந்து விடைபெறும் பொழுது அவர் ஒரு சிறு புத்தகத்தில் தன் கையெழுத்தையிட்டு அதை எனக்குப் பரிசளித்தார்.[1]

மனித தாவரத்தைப் பயிற்றுவித்தல் (The Training of the Human Plant)[2] என்பது பற்றிய எனது புத்தகம் இது, என்றார் அவர். நவீன பயிற்றுவிக்கும் முறைகள்அச்சமற்ற பரிசோதனைகள் தேவைப்படுகின்றன. சில சமயங்களில் மிகத் தைரியமான முயற்சிகள் மலர்களிலும் பழவகைகளிலும் பிரமாதமான பலனைத் தருவதில் வெற்றியடைந்திருக்கின்றன. அது போலவே குழந்தைகளுக்கான கல்வி சம்பந்தமான புதுமைகளும்

இன்னும் அதிகமான எண்ணிக்கையில் அதிக தைரியம் உள்ளவையாக ஆக வேண்டும்.

நான் அன்று இரவு அவருடைய சிறு புத்தகத்தைத் தீவிர ஆர்வத்துடன் படித்தேன். அவர் மனக்கண்ணால் மனித இனத்திற்கு ஓர் அமோகமான வருங்காலத்தை எதிர்நோக்கி, எழுதியிருந்தார்: இவ்வுலகத்தின் மிகப் பிடிவாதமான, மாற்றுவதற்கு மிகவும் கடினமான உயிருள்ள பொருள் எதுவெனில், அது நிச்சயமான சில பழக்கங்களில் ஒரு தடவை நிலைத்து விட்ட தாவரம் தான்.... இத்தாவரம் தன் தனித் தன்மையைக் காலங் காலமாகக் காத்து வருகிறது என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்; ஒரு வேளை இப்பரந்த கால இடைவெளிகளில் அதிக மாற்றமுறாமல் இருக்கும் பல யுகாந்திரங்களுக்கு முந்தைய கற்களிலேயே அதன் மூலங்கள் இருக்க நேரிடலாம். இத்தனை காலங்களாகத் திரும்பத் திரும்ப நிகழ்ந்தவற்றால் தாவரமானது இணையற்ற பிடிப்புடன் ஓர் இச்சாசக்தி (நீங்கள் அதை அவ்வாறு கூற விரும்பினால்) உடையதாக ஆகியிருக்காதென்றா கருதுகிறீர்கள்? உண்மையில் சில பனை போன்ற தாவர வகைகள் எந்த மனித சக்தியும் இதுவரை அவைகளை மாற்ற முடியாத வகையில் உறுதியுடன் இருக்கின்றன. ஒரு தாவரத்தின் உறுதியை விட மனிதனின் உறுதி பலவீனமானதே. ஆனால் இந்த முழுச்செடியின் வாழ்நாள் முழுவதுமான பிடிவாதம் அதனுடன் இன்னொரு உயிரை சாதாரணமாக இணைக்கும் பொழுது எப்படித்தான் தளர்ந்து விடுகிறது

பாருங்கள்: ஒட்டுதல் மூலமாக அதன் உயிரில் சக்தி வாய்ந்த முழு மாறுதலை ஏற்படுத்த முடிகிறதல்லவா? எனவே அம்மாறுதல் ஏற்படுகையில் பொறுமையான மேற்பார்வையுடன் தேர்ந்தெடுத்து இந்த மாறிய தலைமுறைகளில் பொருத்தி விட்டால் அந்தப் புதுச் செடி பழைய வகைக்கு என்றுமே திரும்பாமல், அதன் பிடிவாதமான இச்சாசக்தி தளர்த்தப்பட்டு, கடைசியில் மாற்றப்பட்டு புதுவழியில் செல்லத் தொடங்குகிறது.



 லூதர் பர்பாங்க் மற்றும் யோகானந்தர், ஸான்டா ரோஸா, கலிலி.ஃபோர்னியா, 1924

மேலும் இது, அதிக உணர்ச்சி வசப்படக்கூடியதும் சுலபத்தில் வளைக்கக் கூடியதுமான ஒரு குழந்தையைப்

போன்ற இயல்பை உடைய பொருளைப் பற்றியதெனில் பிரச்சனை மிகவும் சுலபமாகிவிடுகிறது.

இச்சிறந்த அமெரிக்கரின் காந்த சக்தியால் கவரப்பட்டு நான் திரும்பத் திரும்ப அவரிடம் சென்றேன். ஒரு நாள் காலை தபால்காரர் பர்பாங்க்கின் படிப்பறையில் கிட்டத்தட்ட ஓர் ஆயிரம் கடிதங்களை வைத்த அதே சமயத்தில் நான் அங்கு சென்றிருந்தேன். உலகின் பல பாகங்களிலிருந்தும் தோட்டக் கலை நிபுணர்கள் அவருக்கு எழுதியிருந்தார்கள்.

ஸ்வாமிஜி, உங்களது வருகைதான் தோட்டத்திற்குள் நுழைவதற்கு எனக்குத் தேவையான சாக்காகும், என்றார் லூதர் மகிழ்ச்சியுடன். அவர் பல பிரயாணக் கோப்புகள் நிறைந்த பெரிய மேசை இழுப்பறை ஒன்றைத் திறந்தார்.

பாருங்கள், அவர் கூறினார். நான் இப்படித்தான் பிரயாணம் செய்கிறேன். என் செடிகள் மற்றும் கடிதத் தொடர்புகளால் பிணைக்கப்பட்டு இருப்பதனால் அவ்வப்பொழுது இப்படங்களைப் பார்த்து வெளிநாடுகளைக் காண வேண்டும் என்ற என் ஆவலை நான் திருப்தி செய்து கொள்கிறேன்.

என் கார் அவர் வீட்டு வாயிலின் முன்னர் நின்றிருந்தது; லூதரும் நானும் அவருடைய சொந்த வகைகளான ஸாண்டா ரோஸா, பீச்ப்ளோ மற்றும் பர்பாங்க் ரோஜாக்கள் ஆகியவற்றுடன் பளிச்சென்று தோட்டங்களிருந்த அச்சிறு நகரத்தின் தெருக்களின் வழியே காரை ஓட்டிச் சென்றோம்.

அச்சிறந்த விஞ்ஞானி, என்னுடைய ஆரம்பகால

விஜயங்களில் ஒரு சமயம் கிரியா தீட்சை பெற்றுக் கொண்டார். அவர், ஸ்வாமிஜி, நான் அப்பயிற்சியைச் சிரத்தையுடன் செய்து வருகிறேன், என்றார். யோக முறையின் பல்வேறு தன்மைகளைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்த பல கேள்விகளை என்னிடம் கேட்ட பிறகு லூதர் மெதுவாக குறிப்பிட்டார்.

மேலை நாடுகள் இன்னும் ஆராயவே தொடங்காத நிலையில் உண்மையிலேயே கீழை நாடுகள் அறிவின் மிகப் பெரிய பெட்டகங்களைப் பெற்று விளங்குகின்றன.[3]

இயற்கையுடனிருந்த நெருங்கிய தொடர்பானது, அவள் மிக அக்கறையுடன் பாதுகாத்து வந்திருக்கும் பல ரகசியங்களைப் பர்பாங்கிற்குத் திறந்து காட்டியதால், அவரிடம் எல்லையற்ற ஆன்மீக பயபக்தியை உண்டாக்கி இருந்தது.

சில சமயங்களில் நான் எல்லையற்ற சக்திக்கு மிக அருகிலிருப்பதாக உணர்கிறேன், என்று கொஞ்சம் சங்கோசத்துடன் என்னிடம் கூறினார். அவருடைய உணர்ச்சி பூர்வமான, அழகாகச் செதுக்கப்பட்ட முகம் அவரது நினைவுகளினால் ஒளிபெற்றது. அச்சமயங்களில் என்னைச் சுற்றியுள்ள மனிதர்களின் வியாதியையும் பல நோயுற்ற தாவரங்களையும் என்னால் குணப்படுத்த முடிகிறது.

ஒரு விசுவாசமான கிறிஸ்துவரான தன் தாயாரைப் பற்றி அவர் என்னிடம் கூறினார். அவளது மரணத்திற்குப் பிறகு நான் அவள் தோற்றங்களைக் காணும் பேறு பெற்றிருக்கிறேன். அவள் என்னிடம் பேசியிருக்கிறாள்,

என்றார் லூதர்.

நாங்கள் விருப்பமற்று அவர் வீட்டையும் அங்கு காத்திருக்கும் ஆயிரம் கடிதங்களையும் நோக்கி திரும்பி சென்றோம்

லூதர், நான் குறிப்பிட்டேன், நான் அடுத்த மாதம், கிழக்கும் மேற்கும் தந்தருளிய உண்மைகளை எடுத்துரைக்க ஒரு சஞ்சிகையைத் தொடங்கப் போகிறேன். தயவு செய்து அதற்கு ஒரு நல்ல பெயரைத் தீர்மானிக்க எனக்கு உதவுங்கள், என்றேன்.

நாங்கள் சற்று நேரம் பல தலைப்புகளைப் பற்றிப் பேசினோம். கடைசியில் ஈஸ்ட் – வெஸ்ட்[4] என்ற பெயரை ஒப்புக் கொண்டோம். பிறகு நாங்கள் அவருடைய படிப்பறையில் மீண்டும் நுழைந்த பொழுது, பர்பாங்க் என்னிடம் அவர் எழுதிய விஞ்ஞானமும் நாகரிகமும் என்ற கட்டுரையைக் கொடுத்தார்.

இது ஈஸ்ட் – வெஸ்ட் சஞ்சிகையில் முதல் பதிப்பில் வெளிவரும், என்றேன் நான் நன்றியுடன்.

எங்கள் நட்பு ஆழ்ந்து வளர்ந்த பொழுது நான் பர்பாங்க்கை என்னுடைய அமெரிக்க மகான்,என்று அழைக்கலானேன். யாரிடத்தில் வஞ்சனை ஏதுமே இல்லையோ அம்மனிதனைப் பாருங்கள்,[5] என்று நான் விவரித்தேன். அவர் இதயம் ஆழங்காண முடியாதபடி அடக்கம், பொறுமை, தியாகம் ஆகியவற்றுடன் வெகுகாலமாக அறிமுகமாகி இருந்தது. ரோஜாக்களின் மத்தியில் அவரது சிறு இல்லம் நெறி வழுவாத எளிமை கொண்டதாயிருந்தது. அவர் ஆடம்பரத்தின் தகுதி

இன்மையையும், குறைந்த உடமைகளில் உள்ள மகிழ்ச்சியையும் நன்கு உணர்ந்தவர். அவர் தான் விஞ்ஞானத்தில் பெற்ற புகழை அடக்கத்துடன் ஏற்றுக் கொண்டதைக் காணும் பொழுது பழுக்கும் கனிகளின் பாரத்தினால் கீழே வளையும் மரங்கள் எனக்குத் திரும்பத் திரும்ப ஞாபகத்திற்கு வரும். கனியற்ற மலட்டு மரம் தான் வீண் பெருமையில் தன் தலையை உயர நிமிர்த்தும்.

1926-ல் என் அன்பான நண்பர் காலமான பொழுது நான் நியூ யார்க்கிலிருந்தேன். நான் கண்ணீருடன், ஓ, அவரை இன்னும் ஒரு தடவை காணவேண்டி நான் இங்கிருந்து ஸான்டா ரோஸாவிற்கு மகிழ்ச்சியுடன் வழிநெடுக கால்நடையாகவே செல்வேனே, என்று எண்ணினேன். காரியதரிசிகளிடமிருந்தும், காண வருபவர்களிடமிருந்தும் நான் விலகி, கதவைத் தாளிட்டுக் கொண்டு அடுத்த இருபத்திநான்கு மணி நேரத்தை நான் தனிமையில் கழித்தேன்.

அடுத்த நாள், நான் லூதரின் பெரிய படத்தின் முன்னால் வேத முறையிலான ஞாபகார்த்த சடங்குகளைச் செய்தேன். இந்து சடங்கு முறைகளுக்கேற்ற ஆடைகளணிந்த எனது அமெரிக்க மாணவர்கள் குழு ஒன்று, மலர்கள், நீர், அக்னிசரீர பஞ்ச பூதங்கள் மற்றும் அவை முடிவற்ற மூலத்திற்கு திரும்புதலின் அடையாளங்கள்முதலிய வற்றாலான அர்ப்பணத்தைச் செலுத்தும் போது புராதான மந்திரங்களை ஓதியது.

**லூதர் பர்பாங்க்**
ஸான்டா ரோஸா, கலிஃபோர்னியா
யு.எஸ்.ஏ.

டிசம்பர் 22, 1924

நான் ஸ்வாமி யோகானந்தரின் யோகதா முறையைப் பரிசீலித்தேன். எனது கருத்தில், அது மனிதனின் உடல், மனம் மற்றும் ஆன்மீகத் தன்மைகளுக்குப் பயிற்சி அளிப்பதற்கும் இணக்கமாக்குவதற்கும் தலைசிறந்த லட்சிய முறையாகும். ஸ்வாமியின் குறிக்கோள் எப்படி வாழ்வது என்பதைக் கற்பிக்கும் பள்ளிக்கூடங்களை உலகமெங்கும் நிறுவ வேண்டும் என்பதே. அங்கே கல்வியானது அறிவை வளர்ப்பதோடு மட்டும் நின்றுவிடாமல் உடல், இச்சாசக்தி மற்றும் உணர்ச்சிகளுக்கும் பயிற்சி அளிக்கும்.

யோகதா முறையின் சரீர, மன, ஆன்மீக மலர்ச்சியின் மூலமாக, எளிய விஞ்ஞான முறையிலான மனங்குவிதல் மற்றும் தியானத்தினால் வாழ்வின் பல சிக்கலான பிரச்சனைகளைத் தீர்க்கலாம். மேலும் அமைதியையும் நல்லெண்ணத்தையும் உலகில் பரவச் செய்யலாம். ஸ்வாமியின் எண்ணப்படி சரியான கல்விமுறை என்பது எல்லா மர்மங்களிலிருந்தும், நடைமுறைக்கு ஒத்து வராதவைகளிலிருந்தும் விடுபட்ட சாதாரண பொது அறிவுதான். அப்படி இல்லாவிடில் அதற்கு என் ஒப்புதல் இருந்திருக்காது.

வாழும் கலையைப் பயிற்றுவிக்கும் சர்வதேச பள்ளிக்கூடங்களுக்காக வேண்டுகோள் விடுக்கும் ஸ்வாமியுடன் நானும் உள்ளன்புடன் இணைந்து கொள்ள இந்த வாய்ப்புக் கிடைத்ததற்காக மகிழ்கிறேன். அவை நிறுவப்பட்டால், எனக்குப் பரிச்சயமான எதையும் போன்று இதுவும் பொற்காலத்தை அருகில் அழைத்து வரக்கூடும்.

Luther Burbank

பர்பாங்க்கின் உடல், ஸான்டா ரோஸாவில் அவர் பல வருடங்களுக்கு முன் நட்ட ஒரு லெபனான் தேவதாரு மரத்தடியின் கீழ் புதைக்கப்பட்டிருந்தாலும் எனக்கு என்னவோ அவரது ஆன்மா வழியோரத்தில் மலரும் ஒவ்வொரு விரிந்த மலரிலும் கோவில் கொண்டு இருப்பதாகத்தான் தோன்றுகிறது. இயற்கை அன்னையின் விசாலமான ஆன்மாவில் தன்னைக் கொஞ்ச காலத்திற்கு உள்ளடக்கி, அவளது இளங்காலைகளில் நடைபயின்று அவளுடைய காற்றில் ரகசியம் பேசுவது லூதர் இல்லையா, என்ன?

இப்பொழுது அவருடைய பெயர் சாதாரணமான பேச்சில் ஒரு மரபு முறையாகவே ஆகிவிட்டது. பர்பாங்க் என்னும் சொல்லிற்கு செயப்படுபொருள் குன்றாவினைச் சொல் என்று பட்டியலிட்டு வெப்ஸ்டரின் புதிய சர்வதேச அகராதி (Webster's New International Dictionary) பின்வருமாறு அதை விளக்குகிறது: (ஒரு செடியை) இனக்கலப்பு செய் அல்லது ஒட்டு. எனவே, உருவகமாக, இச்சொல் நல்ல தன்மைகளைத் தேர்ந்தெடுத்து, தீயவற்றை விலக்கி, அல்லது நல்ல தன்மைகளைச் சேர்த்து விருத்தி செய்வது (எதையும், ஒரு செயல் முறையாகவோ அல்லது ஸ்தாபனமாகவோ) என்பதைக் குறிக்கும்.

பிரியமான பர்பாங்க்கே, அந்த விளக்கத்தைப் படித்த பிறகு நான் கூவினேன். உங்கள் பெயரே இப்பொழுது நற்குணத்திற்கு மறுபெயராகி விட்டதே!

---

1 பர்பாங்க் தன் கையெழுத்திட்ட அவர் படம் ஒன்றையும் கூட எனக்குக் கொடுத்தார். லிங்கனின் படத்தை ஓர் இந்து வியாபாரி பொக்கிஷமாகக்

கருதியது போல் நானும் அந்தப் படத்தை ஒரு பொக்கிஷமாகவே கருதுகிறேன். உள் நாட்டுச் சண்டை நடந்த வருடங்களில் அமெரிக்காவிலிருந்த இந்து ஒருவர், லிங்கனை மிகவும் பாராட்டிய எண்ணத்தினால், அந்த மகா விடுதலை வீரரின் படம் ஒன்று கிடைக்கும் வரை இந்தியாவிற்குத் திரும்பி வர சம்மதிக்கவில்லை. பிடிவாதமாக லிங்கன் வீட்டின் வாசற்படியிலேயே காத்துக் கிடந்ததைக் கண்டு ஆச்சரியமடைந்த ஜனாதிபதி, டேனியல் ஹண்டிங்டன் என்னும் பிரபல நியூ யார்க் கலைஞரைப் படமெழுத அமர்த்த அவருக்கு அனுமதி கொடுக்கும் வரை நகர மறுத்தார். அந்தப் படம் தயாரானதும் அவர் அதைப் பெருமையுடன் கல்கத்தாவிற்கு எடுத்துச் சென்றார்.

2 நியூ யார்க்: செஞ்சுரி கம்பெனி., 1922.

3 பிரபல ஆங்கில உயிரியல் நிபுணரும் UNESCOவின் இயக்குநருமான டாக்டர் ஜூலியன் ஹக்ஸ்லி சமீபத்தில் மேற்கத்திய விஞ்ஞானிகள், சமாதி நிலையை அடைவதற்கும் மூச்சைக் கட்டுப்படுத்துவதற்கும் கீழை நாடுகளின் உத்தியைக் கற்றுக்கொள்ள வேண்டும் எனக் குறிப்பிட்டார். என்ன நிகழ்கின்றது? அது எப்படி சாத்தியமாகிறது? என்றார். லண்டனிலிருந்து 1948, ஆகஸ்ட் 21ல் அசோசியேட்ட் பிரஸ் இதழ் இவ்வாறு வெளியிட்டது: டாக்டர் ஹக்ஸ்லி, மன நலத்திற்கான புதிய உலகக் கூட்டமைப்பிற்கு, (New World Federation for Mental Health) அது கீழைநாடுகளின் ஆன்மீக அறிவை அறிந்து கொள்வது நல்லது எனக் கூறினார். இந்த அறிவை விஞ்ஞான முறைப்படி ஆராய்ச்சி செய்ய முடியுமானால், உங்கள் துறையில் மிகப்பெரிய முன்னேற்றமடைய முடியும் என நான் நினைக்கிறேன், என்று அவர் மனநல நிபுணர்களுக்கு அறிவுறுத்தினார்.

4 1948ம் ஆண்டில் ஸெல்ஃப்ரியலைசேஷன் (ஆத்மஞானம்) எனப் பெயர் மாற்றப்பட்டது.

5 யோவான் 1:47 (பைபிள்).

அத்தியாயம் 39

# தெரஸே நொய்மன், அருட் காயங்களைத் தாங்கும் கத்தோலிக்க அன்னை

இந்தியாவிற்குத் திரும்பவும். நான் உனக்காகப் பதினைந்து வருடங்கள் பொறுமையாகக் காத்திருந்து விட்டேன். நான் சீக்கிரத்தில் தேகத்தை விட்டு நீங்கி ஒளிமயமான இருப்பிடத்திற்குச் சென்று விடுவேன். யோகானந்தா, வந்து சேரவும்!

என்னுடைய மௌண்ட் வாஷிங்டன் தலைமையகத்தில் நான் தியானத்தில் அமர்ந்திருந்த பொழுது ஸ்ரீ யுக்தேஸ்வரின் குரல் திடுக்கிடும்படியாக என் உள் மனத்தில் ஒலித்தது. கண்மூடித் திறப்பதற்குள் பதினாயிரம் மைல்கள் கடந்து அவருடைய செய்தி ஒரு மின்னல் வெட்டுப்போல் என் நிலையைத் துளைத்தது.

பதினைந்து வருடங்கள்! ஆம், இப்பொழுது 1935 என்பதை நான் உணர்ந்தேன்; என் குருவின் உபதேசங்களை அமெரிக்காவில் பரப்புவதில் நான் பதினைந்து வருடங்களைக் கழித்திருக்கிறேன். இப்பொழுது அவர் என்னைத் திரும்ப அழைக்கிறார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு நான் என் அனுபவத்தை என் அருமை நண்பர் திரு. ஜேம்ஸ் ஜே.லின் என்பவரிடம் விவரித்தேன். அவருடைய ஆன்மீக முன்னேற்றம் தினசரி கிரியா பயிற்சியினால் மிகக்

குறிப்பிடும்படியாக இருந்தது. அதனால் நான் அவரை அடிக்கடி லின் முனிவர் என்று அழைத்தேன். அவரிடமும் மற்ற அனேக மேலை நாட்டவர்களிடமும், புராதன யோக மார்க்கத்தின் மூலமாக உண்மையான ஆத்ம ஞானமடைந்த முனிவர்களை மேலை நாடுகள் கூடத் தோற்றுவிக்கும் என்ற பாபாஜியின் தீர்க்கத் தரிசனம் நிறைவேறியிருப்பதை நான் மகிழ்ச்சியுடன் காண்கிறேன்.

திரு. லின் என் பிரயாணத்திற்காக தாராள மனத்துடன் நன்கொடை தருவதாக வற்புறுத்திக் கூறினார். இவ்வாறு நிதிப் பிரச்சனை தீர்ந்ததும் நான் ஐரோப்பா வழியாக இந்தியாவிற்குக் கப்பலில் செல்ல ஏற்பாடுகள் செய்தேன். 1935 மார்ச் மாதத்தில் ஸெல்ஃப்ரியலைசேஷன் பெஃலோஷிப்பை கலிஃபோர்னியா மாகாணத்தின் சட்டங்களின்படி சமய சார்பற்ற, லாபம் கருதாத ஒரு கழகமாக எப்பொழுதும் நிலைத்திருக்கும் விதத்தில் சாஸனப் படுத்தினேன். ஸெல்ஃப்ரியலைசேஷன் பெஃலோஷிப்பிற்கு, நான் எழுதிய அனைத்துப் புத்தகங்களின் உரிமைகள் உட்பட என் எல்லா சொத்துக்களையும் நன்கொடையாக்கினேன். மற்ற அனேக சமய மற்றும் கல்வி சம்பந்தமான நிறுவனங்களைப் போலவே ஸெல்ஃப்ரியலைசேஷன் பெஃலோஷிப்பும் அங்கத்தினர்கள் மற்றும் பொது மக்களின் நன்கொடைகளையும் அறக்கட்டளைகளையும் ஆதாரமாகக் கொண்டுள்ளது.

நான் திரும்பி வருவேன், நான் என் மாணவர்களிடம்

கூறினேன், அமெரிக்காவை நான் என்றும் மறக்கமாட்டேன்.

லாஸ் ஏஞ்ஜலீஸில் அன்பான நண்பர்கள் எனக்கு விடை கொடுக்க அளித்த விருந்தின் பொழுது அவர்கள் முகங்களை அதிக நேரம் நோக்கியவாறிருந்தேன். மேலும், இறைவனே, நீயே யாவற்றையும் அளிப்பவன் என்று எவர் நினைவில் வைத்துக் கொள்கிறாரோ அவருக்கு மனிதர்களிடையே இனிய நட்பிற்கு என்றுமே பஞ்சமில்லை, என்று நன்றியுடன் நினைத்துக் கொண்டேன்.

1935ஆம் வருடம் ஜுன் 9ந்தேதி நான் யூரோபா என்ற கப்பலில் நியூ யார்க்கிலிருந்து பயணமானேன். என்னுடன் இரு மாணவர்கள்என் காரியதரிசி திரு. சி.ரிச்சர்ட் ரைட் மற்றும் சின்சினாடியிலிருந்து செல்வி எட்டி ப்ளெட்ஷ் என்ற மூதாட்டியும் வந்தார்கள். கடந்த பரபரப்பான வாரங்ககளுக்குப் பிறகு வரவேற்கத் தகுந்த ஒரு மாறுதலான, கடலின் அமைதி நிறைந்த தினங்களை நாங்கள் ரசித்து அனுபவித்தோம். எங்களுடைய ஓய்வுகாலம் மிகக் குறுகியதாகவே இருந்தது; நவீன கப்பல்களின் வேகம் சில வருந்தத்தக்க அம்சங்களைக் கொண்டுள்ளதாகவே இருக்கிறது.

ஆர்வம் நிறைந்த வேறெந்த சுற்றுலா பயணிகள் குழுவைப் போலவே நாங்கள் மிகப் பெரியதும் பழமையானதுமான லண்டன் மாநகரைச் சுற்றி வந்தோம். நாங்கள் அங்கு சென்றடைந்த மறுநாள் காக்ஸ்டன் ஹால் என்னுமிடத்தில் ஒரு பெரிய

கூட்டத்தில் பேசுவதற்கு நான் அழைக்கப்பட்டேன். அங்கு நான் ஸர் ஃபிரான்சிஸ் யங்ஹஸ்பன்ட் என்பவரால் லண்டன் மக்களுக்கு அறிமுகப்படுத்தப்பட்டேன்.

எங்கள் குழு ஸ்காட்லாந்தில் ஸர் ஹாரி லாடர் என்பவரின் விருந்தாளிகளாக அவருடைய பண்ணைத் தோட்டத்தில் ஓர் ஆனந்தமான நாளைக் கழித்தது. ஒரு சில நாட்களுக்குப் பின்னர் எங்கள் சிறு குழு இங்கிலிஷ் கால்வாயைக் கடந்து ஐரோப்பாக் கண்டத்தை அடைந்தது; ஏனெனில் நான் பவேரியாவிற்கு யாத்திரை செய்யவிருந்தேன். கானர்ஸ்ருத் என்னுமிடத்தைச் சேர்ந்த பெயர் பெற்ற கத்தோலிக்க மறை ஞானியான தெரஸே நொய்மனைச் சந்திக்க எனக்கு வாய்த்த ஒரே சந்தர்ப்பம் இது மட்டும்தான் என்று எனக்குத் தோன்றியது.

பல வருடங்களுக்கு முன்னால் நான் தெரஸேவைப் பற்றி அதிசயமான விவரத்தைப் படித்திருந்தேன். அந்தக் கட்டுரையில் கொடுக்கப்பட்டிருந்த செய்தி பின்வருமாறு.

1. 1898-ல் புனித வெள்ளியன்று பிறந்த தெரஸே தனது இருபதாம் வயதில் ஒரு விபத்தில் காயமுற்றார். அதில் பார்வை இழந்து செயலிழந்தவராகவும் ஆனார்.

2. அவர் 1923-ல் லிஸியூவின் தி லிட்டில் ஃப்ளவர் என்னும் புனித தெரஸேவிற்குச் செய்த பிரார்த்தனைகளின் மூலம் அதிசயமான விதத்தில் அவர் பார்வையைத் திரும்பப் பெற்றார். பின்னால் தெரஸே நொய்மனின் கைகளும் கால்களும் உடனடியாகக் குணமடைந்தன.

3. 1923 முதல் தெரஸே ஆகாரம், பானம் இவைகளை முழுமையாக விட்டொழிந்தார். பிரசாதமாக அளிக்கப்பட்ட ஒரு மெல்லிய ரொட்டித் துண்டைத் தவிர அவர் எதையும் உண்பதில்லை.

4. தழும்புகளாகிய கிறிஸ்துவின் புனித காயங்கள் 1926ல் தெரஸேவின் தலை, மார்பு, கைகள், பாதங்கள் முதலிய இடங்களில் தோன்றலாயின. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும்[1] அவர் கிறிஸ்துவின் தீவிர உணர்ச்சிகளை அனுபவிக்கிறார். அவருடைய சொந்த உடலில் கிறிஸ்துவின் வரலாறு படைத்த வேதனைகள் அனைத்தையும் அனுபவிக்கிறார்.

5. சாதாரணமாக அவர் வசித்து வந்த கிராமத்தின் எளிய ஜெர்மானிய மொழி மட்டுமே தெரிந்திருந்தாலும் வெள்ளிக்கிழமைகளில் அவருக்கு ஏற்படும் சமாதி நிலைகளில் தெரஸே கூறும் சொற்றொடர்கள், புராதன அராமிக் மொழி என்று பண்டிதர்கள் அடையாளம் கண்டுள்ளனர். அவருடைய புனித தரிசனத்தின் பொருத்தமான நேரங்களில் அவர் ஹீப்ரு அல்லது கிரேக்க மொழியைப் பேசுவார்.

6. மத குருமார்களின் அனுமதியுடன் தெரஸே பல தடவைகள் விஞ்ஞான ரீதியாக தீவிர கண்காணிப்பிற்கு உள்ளாக்கப்பட்டார். ஜெர்மானிய செய்தித்தாளின் பதிப்பாசிரியரான டாக்டர் ஃபிரிட்ஸ் கெர்லிக் என்பவர் அந்தக் கத்தோலிக்க மோசடியை அம்பலப்படுத்துவதற்காக கானர்ஸ்ரூத் சென்று மனம் மாறி பக்தி சிரத்தையுடன் தெரஸேவின் வாழ்க்கை

வரலாற்றை எழுதுவதில் முடிவுற்றார்.

எப்பொழுதும்போல் கீழை நாட்டிலோ அல்லது மேலை நாட்டிலோ ஒரு மகானைக் காண்பதென்றால் எனக்கு மிகுந்த ஆவல். எங்கள் சிறு குழு ஜுலை 16ந் தேதி கானர்ஸ்ரூத் என்னும் விந்தையான கிராமத்திற்குள் நுழைந்ததும் நான் மிக்க மகிழ்ச்சியடைந்தேன். பவேரிய குடியானவர்கள், நாங்கள் அமெரிக்காவிலிருந்து எங்களுடன் கொண்டு வந்திருந்த ஃபோர்டு மோட்டார் வண்டியின் மீதும் அதனுடைய கலப்படக் குழுவின்ஓர் அமெரிக்க இளைஞன், ஒரு வயது முதிர்ந்த பெண்மணி மற்றும் நீள்முடியை தன் கோட்டுக் கழுத்துப் பட்டைக்குக் கீழே மடித்துவிட்டுக் கொண்டுள்ள மாநிறமான கீழை நாட்டவர் ஒருவர்மீதும் மிகுந்த ஆர்வம் காட்டினார்கள்.

சுத்தமாகவும், கச்சிதமாகவும், பழமையான கிணற்றங்கரையில் பூத்திருந்த ஜெரேனிய மலர்களுடன் காணப்பட்ட தெரஸேவின் சிறு குடில், அடடா! நிசப்தமாக மூடப்பட்டிருந்தது. அக்கம் பக்கத்திலிருந்தவர்களாலும் ஏன், அவ்வழியாக சென்ற அக்கிராம தபால்காரராலும் கூட எங்களுக்கு எந்த விவரத்தையும் தர முடியவில்லை. மழை பெய்யத் தொடங்கியது, என்னுடன் வந்தவர்கள் திரும்பி விடலாமென்று கூறினார்கள்.

முடியாது, நான் பிடிவாதமாகக் கூறினேன். தெரஸேவைக் காண்பதற்கு ஏதாவது துப்புக் கிடைக்கும் வரை நான் இங்குதான் இருப்பேன்.

இரண்டு மணி நேரத்திற்குப் பிறகும் அந்த உற்சாகமற்ற மழையில் எங்கள் வண்டியிலேயே அமர்ந்திருந்தோம். இறைவா, நான் முறையிட்டபடி பெருமூச்செறிந்தேன். அவர் இங்கிருந்து மறைந்து விட்டிருந்தால் எதற்காக நீ எனக்கு இங்கு வழிகாட்டினாய்?

ஆங்கிலம் பேசும் ஒருவர் எங்கள் அருகில் வந்து நின்று மரியாதையுடன் அவருடைய உதவியை அளித்தார்.

எனக்கு தெரஸே எங்கிருக்கிறாரென்று நிச்சயமாகத் தெரியாது. ஆனால் அவர் இங்கிருந்து எண்பது மைல் தொலைவிலுள்ள ஐக்ஸ்டாட் பல்கலைக்கழகத்தில் அன்னிய மொழிகள் ஆசிரியராக இருக்கும் பேராசிரியர் ஃபிரான்ஸ் வுட்ஸ் என்பவர் வீட்டிற்கு அடிக்கடி வருகை புரிகிறார், என்றார்.

அடுத்த நாள் காலை நாங்கள் அமைதியான பட்டினமாகிய ஐக்ஸ்டாட்டிற்கு மோட்டாரில் சென்றோம். டாக்டர் வுட்ஸ் எங்களை அவருடைய இல்லத்தில் அன்புடன் வரவேற்று தெரஸே அங்குதான் இருப்பதாகத் தெரிவித்தார். அவர் தெரஸேவிற்கு வந்திருப்பவர்களைப் பற்றிய செய்தியைச் சொல்லி அனுப்பினார். உடனே அவருடைய பதிலுடன் ஆள் திரும்பினான்:

பிஷப் என்னை அவருடைய அனுமதி இன்றி யாரையும் பார்க்க வேண்டாமெனக் கூறியிருந்தாலும் நான் பாரதத்திலிருந்து வந்திருக்கும் இறையுணர்வு கொண்ட மனிதரை வரவேற்க சித்தமாக உள்ளேன்.

இச்சொற்களால் மனம் நெகிழ்ந்த நான், டாக்டர் வுட்ஸைத் தொடர்ந்து மாடியிலுள்ள தங்கும் அறைக்குச் சென்றேன். உடனேயே தெரஸே அமைதியும் ஆனந்தமும் நிறைந்த ஒரு சூழ்நிலையை ஒளிரச் செய்தபடியே நுழைந்தார். அவர் ஒரு கறுப்பு வண்ணக் கவுனும் மிகத் தூய்மையான வெண்ணிறத் தலைத் துணியும் அணிந்திருந்தார். இந்தச் சமயத்தில் அவர் வயது முப்பத்தேழு ஆக இருந்தாலும் உண்மையில் ஒரு குழந்தையைப் போன்ற புத்துணர்ச்சியும் வசீகரமும் நிறைந்து மிக இளமையுடன் காணப்பட்டார். ஆரோக்கியத்துடனும் நன்கமைந்த உருவத்துடனும் ரோஜா நிறக் கன்னங்களுடனும் மகிழ்ச்சி நிறைந்தவராக உள்ள இந்த புனிதவதிதான் உண்ணாமலிருப்பவர்!

தெரஸே மிக மிருதுவான கை குலுக்கலுடன் என்னை வர வேற்றார். நாங்கள் இருவருமே ஒருவரையொருவர் இறைவனின் அன்பராக உணர்ந்து மௌனத் தொடர்பு கொண்டு மகிழ்ந்தோம்.

டாக்டர் வுட்ஸ் மிக அன்புடன் மொழி பெயர்ப்பாளராக இருக்க முன்வந்தார். நாங்கள் அமர்ந்ததும் தெரஸே என்னை கபடமற்ற ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருப்பதை நான் கவனித்தேன். பவேரியாவில் இந்துக்களைப் பார்ப்பது உண்மையிலேயே அபூர்வம்தான்.

நீங்கள் எதுவுமே உண்பதில்லையா? நான் பதிலை அவர் வாயாலேயே கேட்க விரும்பினேன்.

இல்லை. ஒவ்வொரு காலையிலும் ஆறு மணிக்கு

பிரசாதமான ஒரு ரொட்டித் துண்டைத் தவிர.[2]

அப்பிரசாதம் எவ்வளவு பெரியது? அது காகிதத்தைப் போல் மெல்லியதாக ஒரு சிறு நாணயத்தின் அளவில் இருக்கும், அவர் தொடர்ந்தார். நான் அதைப் புனித காரணங்களுக்காக ஏற்கிறேன்.

அது ஆண்டவனுக்குப் படைக்கப்படாததாயிருந்தால் என்னால் அதை விழுங்க முடியாது.

நிச்சயமாக நீங்கள் பன்னிரண்டு முழு வருடங்களாக அதனால் மட்டும் உயிர் வாழ்ந்திருக்க முடியாது.

நான் இறைவனின் ஒளியால் வாழ்கிறேன்.

அவருடைய பதில் ஐன்ஸ்டைனுடையது போன்ற எவ்வளவு எளிமையானது!

ஆகாயம், சூரியன், காற்று இவற்றிலிருந்து உங்கள் உடலுக்கு சக்தி பாய்வதை நீங்கள் அறிந்திருப்பதைக் காண்கிறேன்.

ஒரு புன்னகை அவர் முகத்தில் உடனே பூத்தது. நான் எப்படி வாழ்கிறேன்; என்பதை நீங்கள் புரிந்து கொண்டது பற்றி எனக்கு மெத்த மகிழ்ச்சி.

உங்களுடைய புனித வாழ்க்கை கிறிஸ்துவினால் கூறப்பட்ட மனிதன் அப்பத்தினாலே மாத்திரமல்ல, தேவனுடைய வாயிலிருந்து புறப்படுகிற ஒவ்வொரு வார்த்தையினாலும் பிழைப்பா[3]ன்என்ற உண்மையின் தினசரி நிரூபணமாகும்.

என் விளக்கத்தைக் கேட்டு அவர் மறுபடி தன் மகிழ்ச்சியைக் காட்டினார். அது உண்மையில் அப்படித்தான், நான் இப்புவியில் இப்பொழுது வாழ்ந்து

வருவதற்கான காரணங்களில் ஒன்று, மனிதன் கடவுளின் கண்ணுக்குத் தெரியாத ஒளியினால் வாழ முடியும், உணவினால் மட்டும்தான் என்பதில்லை என்ற உண்மையை நிரூபிப்பதற்காக ஆகும்.

உணவில்லாமல் எப்படி வாழமுடியும் என்பதை மற்றவர்களுக்கு கற்பிக்க உங்களால் முடியுமா?

அவர் சற்று அதிர்ச்சி அடைந்தவர் போல் தோன்றினார். நான் அவ்வாறு செய்ய முடியாது; இறைவன் அதை விரும்பவில்லை.

என் பார்வை அவரது வலிமையான அழகான கரங்களின் மீது விழுந்த பொழுது தெரஸே தன் ஒவ்வொரு புறங்கையிலும் சதுர வடிவில் புதிதாக ஆறிய காயங்களைக் காண்பித்தார். ஒவ்வொரு உள்ளங்கையிலும் கொஞ்சம் சிறிய பிறை வடிவில் இருந்த புதிதாக ஆறிய காயங்களையும் சுட்டிக் காட்டினார். ஒவ்வொரு காயமும் கையைத் துளைத்துச் சென்றிருந்தது. அக்காட்சி, கீழை நாடுகளில் இன்னும் உபயோகத்திலுள்ள பெரிய சதுரமான பிறை வடிவ முனையுடன் கூடிய இரும்பு ஆணிகளை மிகத் தெளிவாக என் நினைவிற்குக் கொண்டு வந்தன. மேலை நாடுகளில் அம்மாதிரி ஆணிகளைப் பார்த்ததாக எனக்கு நினைவில்லை.

அந்தப் புனிதவதி அவருடைய வாராந்திரப் பரவச சமாதி நிலைகளைப் பற்றி கொஞ்சம் கூறினார். எதுவும் செய்ய இயலாத பார்வையாளரைப் போன்று நான் கிறிஸ்துவின் வேதனை அவ்வளவையும் காண்கிறேன்.

ஒவ்வொரு வாரமும் வியாழக்கிழமை நடுநிசியிலிருந்து வெள்ளிக்கிழமை மதியம் ஒருமணி வரை அவருடைய காயங்கள் திறந்து ரத்தம் பெருகுகிறது. அவருடைய சாதாரண எடையான 121 பவுண்டில் பத்து பவுண்டுகள் குறைந்து விடுகின்றன. கிறிஸ்துவினிடம் உண்டாகிய அனுதாப அன்பினால் அதீத துன்பப்பட்டாலும் அவர் மிகுந்த மிகழ்ச்சியுடன் தன் இறைவனின் இந்த வாராந்திர தரிசனத்தை எதிர்நோக்குகிறார்.

அப்புனிதவதியின் விசித்திர வாழ்க்கையானது, புதிய ஏற்பாட்டில் குறிப்பிட்டுள்ளவாறு இயேசுவின் வாழ்க்கையும் சிலுவையில் அறையப்பட்டதும், வரலாற்று உண்மை வாய்ந்தது என எல்லாக் கிறிஸ்துவர்களுக்கும் மீண்டும் உறுதிப்படுத்தவும், அந்தக் கலிலீய குருவிற்கும் அவருடைய பக்தர்களுக்குமுள்ள என்றென்றும் ஜீவித்திருக்கும் பந்தத்தை வியக்கும் வகையில் எடுத்துக்காட்டவும் இறைவனால் உத்தேசிக்கப்பட்டது என்பதை உடனே புரிந்து கொண்டேன்.

பேராசிரியர் வுட்ஸ் அப்புனிதவதியாருடன் தனக்கு ஏற்பட்ட சில அனுபவங்களை எடுத்துக் கூறினார்.

நாங்கள் ஒரு குழுவாக, தெரஸே உட்பட, அடிக்கடி நாட்கணக்கில் ஜெர்மனியில் சுற்றுலா செல்வது வழக்கம், அவர் என்னிடம் கூறினார். ஒரு குறிப்பிடத்தக்க வித்தியாசம்தெரஸே எதுவும் உண்ணாமல் இருப்பார்; மற்ற எல்லோரும் ஒரு நாளைக்கு மூன்று வேளைகள் சாப்பிடுவோம், அவர்

களைப்பு என்பதே இல்லாமல் புத்தம் புது ரோஜா மலரைப் போல் எப்போழுதும் புத்தணர்ச்சியுடனிருப்பார். நாங்களோ பசியுடன் சாப்பிடுவதற்கு வழியில் விடுதிகள் கிடைக்குமா என்று அலையும் பொழுது, தெரஸே மகிழ்ச்சியுடன் சிரித்தபடி இருப்பார்.

அப்பேராசிரியர் உடற்கூறு பற்றிய சில சுவாரஸ்யமான விஷயங்களையும் கூறினார். தெரஸே எதுவும் உண்பதில்லை ஆதலால் அவர் வயிறு சுருங்கிவிட்டது. அவருக்கு கழிவுப் பொருட்கள் ஏதுமில்லை. ஆனாலும் வியர்வை நாளங்கள் வேலை செய்கின்றன்; அவருடைய தோல் என்றும் மிருதுவாகவும் உறுதியாகவும் இருக்கிறது.

அவரைப் பிரியும் தருணத்தில், நான் அவருடைய பரவச சமாதி நிலையின் பொழுது உடனிருக்க விரும்புவதைத் தெரிவித்தேன்.

ஆம், அடுத்த வெள்ளிக்கிழமை தயவு செய்து கானர்ஸ்ரூத்திற்கு வாருங்கள், என்று அவர் கருணையுடன் கூறினார். பிஷப் உங்களுக்கு அனுமதிச் சீட்டு அளிப்பார். நீங்கள் ஐக்ஸ்டாட்டிற்கு என்னைத் தேடி வந்து கண்டது பற்றி எனக்கு மிக்க மகிழ்ச்சி.

தெரஸே மிருதுவாகப் பல தடவை கை குலுக்கினார். எங்கள் குழுவுடன் வாசல்வரை வந்தார். திரு. ரைட் வண்டியிலுள்ள ரேடியோவை முடுக்கிவிட்டார். அந்த அம்மையார் ஆர்வத்துடன் உள்ளூர நகைத்துக் கொண்டு அதைப் பரிசீலனை செய்தார். வெளியில் இள வயதினர்களின் கூட்டம் மிக அதிகமாகிவிட்டபடியால்

தெரஸே வீட்டினுள்ளே திரும்பிவிட்டார். அவர் எங்களை ஒரு ஜன்னல் வழியாக உற்றுப் பார்த்து ஒரு குழந்தையைப் போல் கையசைப்பதை நாங்கள் கண்டோம்.

கனிவாகவும் சினேக பாவத்துடனுமிருந்த அவருடைய இரு சகோதரர்களுடன் அடுத்த நாள் பேசியதிலிருந்து அந்தப் புனிதவதி இரவு நேரங்களில் ஓரிரண்டு மணி நேரம் தான் தூங்குகிறார் என்றறிந்தோம். அவர் உடலில் அனேக காயங்கள் இருந்தாலும் அவர் மிக சுறுசுறுப்பாகவும் முழு ஆற்றலுடனும் இயங்குகிறார். பறவைகளிடம் அவருக்கு மிக்க பிரியம். ஒரு மீன்காட்சி சாலை வைத்து மீன்களை கவனித்துக் கொள்கிறார். மற்றும் தன் தோட்டத்தில் அடிக்கடி வேலை செய்கிறார். அவருடைய கடிதப் போக்குவரத்து ஏராளம். கத்தோலிக்க பக்தர்கள் பிரார்த்தனைகள் வேண்டியும் குணப்படுத்தும் அருளாசியை வேண்டியும் எழுதுகிறார்கள். அவரைத் தேடிவந்த அனேகர் கடுமையான நோயிலிருந்து அவரால் குணப்படுத்தப்பட்டிருக்கிறார்கள்.

இருபத்திமூன்று வயதுள்ள அவருடைய சகோதரன், ஃபர்டினான்ட், தெரஸேவிற்கு பிரார்த்தனை மூலமாக மற்றவர்களுடைய நோயைத் தன் உடலில் ஏற்றுக் கொண்டுவிடும் திறன் உண்டென்று கூறினார். தன்னுடைய மாதா கோயிலைச் சார்ந்த ஓர் இளைஞர் துறவறம் ஏற்றுக் கொள்ள தயார் செய்து கொண்டிருந்தபொழுது, அவன் தொண்டையில் இருந்த

நோயைத் தன் தொண்டைக்கு மாற்றப்பட அப்புனிதவதி வேண்டிக் கொண்ட அந்த சமயத்திலிருந்துதான் அவர் சாப்பிடுவதை நிறுத்தி விட்டார்.

வியாழனன்று பிற்பகலில் எங்கள் குழு பிஷப்பின் வீட்டிற்குச் சென்றது. அவர், தொங்கிக் கொண்டிருந்த என் குழல் கற்றைகளைச் சற்று வியப்புடன் நோக்கினார். தேவையான அனுமதிச்சீட்டை அவர் உடனடியாக எழுதி வழங்கினார். அதற்குக் கட்டணம் எதுவும் கொடுக்க வேண்டியிருக்கவில்லை; கடந்த வருடங்களில் ஒவவொரு வெள்ளிக்கிழமையும் சாதாரண சுற்றுலாப் பயணிகள் ஆயிரக்கணக்கில் கானர்ஸ்ரூத்தில் கூடிவிடுவர்; அந்தக் கூட்டத்திலிருந்து தெரஸேவைப் பாதுகாப்பதற்காகத்தான் சர்ச் அந்த விதியை ஏற்பாடு செய்திருந்தது.

நாங்கள் வெள்ளியன்று காலை சுமார் ஒன்பதரை மணிக்கு அக்கிராமத்தைச் சென்றடைந்தோம். தெரஸேவின் சிறு குடிலின் மேல் பாகத்தில் ஒரு பகுதியில் அவருக்குத் தாராளமாக வெளிச்சம் கிடைக்க வேண்டி, கண்ணாடிக் கூரையிட்டிருந்ததைக் கவனித்தேன். நாங்கள், அக்கதவுகள் முன் போல் மூடியிராமல் வரவேற்கும் முறையில் திறந்தே இருந்ததைக் கண்டு மகிழ்ச்சியடைந்தோம். கிட்டத்தட்ட இருபது பார்வையாளர்கள் வரிசையில் நாங்கள் சேர்ந்து கொண்டோம். ஒவ்வொருவரும் அனுமதிச் சீட்டு பெற்றிருந்தனர். பலர் இந்த தெய்வீகப் பரவச சமாதி நிலையைக் காண்பதற்கு வெகு தூரங்களிலிருந்து

வந்திருந்தனர்.

நான் தெரஸேவைக் காண விரும்புவது ஆன்மீகக் காரணங்களுக்காகவே அன்றி ஏதோ ஒரு வெறும் ஆவலைத் திருப்தி செய்து கொள்வதற்காக அல்ல என்ப அவர் உள்ளுணர்வினால் புரிந்து கொண்டதன் மூலம் பேராசிரியரின் வீட்டில் என் முதல் பரிட்சையில் அவர் தேறிவிட்டார்.

என் இரண்டாவது பரீட்சைக்கேற்ப நான் மேலே இருந்த அவருடைய அறைக்குச் செல்லுமுன்னர் அவருடன் தொலை எண்ணத் தொடர்பு மற்றும் காட்சித் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதற்காக ஒரு யோக சமாதிப் பரவச நிலையில் என்னை இருத்திக் கொண்டேன். தரிசிக்க வந்தவர்கள் நிரம்பியிருந்த அவருடைய அறையில் நுழைந்தேன்; அவர் படுக்கையின் மீதிருந்த ஒரு வெள்ளை விரிப்பின் மேல் படுத்திருந்தார் திரு.ரைட் என் அருகில் பின்னால் நின்றிருக்க நான் நுழைவாயிலுக்குச் சற்று உள்ளேயே வினோதமாகவும் மிகப் பயங்கரமாகவுமிருந்த அந்தக் காட்சியைக் கண்டு திகைத்து நின்று விட்டேன்.

தெரஸேவின் கீழ் இமைகளிலிருந்து மெல்லியதாகவும் தொடர்ந்தும் ஓர் அங்குல அகல ஒட்டமாக இரத்தம் கசிந்து கொண்டிருந்தது. அவர் பார்வை மேல் நோக்கி முன் நெற்றியின் நடுவில் ஞானக் கண்ணை நோக்கியிருந்தது. அவர் தலையில் சுற்றியிருந்த துணி, முட்கிரீடத்தினால் ஏற்பட்ட காயங்களிலிருந்து வடிந்த குருதியில் தோய்ந்திருந்தது.

அவருடைய வெண்மையான உடுப்பு, அவர் மார்புக்கு மேல் பக்கவாட்டிலிருந்த காயத்திலிருந்துகிறிஸ்துவின் உடலானது, வெகு காலத்திற்கு முன், கடைசி அவமதிப்பாக ஒரு படைவீரனின் வேல் பாய்ந்து வேதனைப் பட்ட அந்த இடத்திலிருந்துபெருகிய இரத்தத்தினால் அனேக இடங்களில் சிவப்பு கறைப்பட்டுக் கிடந்தது.

தெரஸேவின் கைகள் ஒரு தாய் கெஞ்சுவதைப் போல் நீண்டிருந்தன. அவர் முகத்தில், துன்புறும் வேதனையின் சாயலும் தெய்வீக பாவனையும் ஒருங்கே தெரிந்தன. அவர் சற்று மெலிந்து, உள் மற்றும் வெளித் தோற்றத்தில் பல விதங்களில் சூட்சுமமாக மாறுபட்டுத் தோன்றினார். அவர் முணுமுணுப்பாக ஏதோ ஓர் அன்னிய மொழியில், அவருடைய ஞானப் பார்வைக்குத் தென்படுபவர்களுடன் சிறிது நடுங்கிய உதடுகளுடன் பேசியவாறு இருந்தார்.

நான் அவருடன் மானசீகத் தொடர்பு கொண்டிருந்ததால் அவர் தரிசித்த காட்சிகளை நான் காணத் தொடங்கினேன். அவர் மக்கட்திரளின் எக்காளத்திற்கு நடுவில் இயேசு தன் சிலுவைக் கட்டைகளைச் சுமந்து சென்று கொண்டிருப்பதைக் கண்டார்.[4] அவர் திடீரென்று கவலையுடன் தன் தலையைத் தூக்கினார்; பிரபு அந்தக் கொடுமையான பாரம் தாங்காமல் கிழே விழுந்திருந்தார். அத்தரிசனம் மறைந்து விட்டது. அந்தக் கழிவிரக்கத்தினால் ஏற்பட்ட அசதியில் தெரஸே தலையணையில் திடீரென்று

விழுந்தார்.

இக்கணத்தில் நான் என் பின்னால் தொப்பென்ற ஒரு பெரிய சத்தத்தைக் கேட்டேன். என் தலையை ஒரு கணம் திருப்பிப் பார்த்தபொழுது இரு மனிதர்கள் நீண்டு கிடந்த ஒரு உடலை தூக்கிச் செல்வதைக் கண்டேன். நான் ஆழ்ந்த உயர் உணர்வு நிலையிலிருந்து வெளிவந்து கொண்டு இருந்ததால் விழுந்தவரை உடனடியாக அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. பெருகும் ரத்தப் பெருக்கில் சவம் போல் வெளுத்திருந்த, ஆனால் இப்போது மிக்க அமைதியுடன் புனிதத்தையும் தெய்வீக ஒளியையும் ஒருங்கே வீசிக் கொண்டிருந்த தெரஸேவின் முகத்தின் மீது நான் மறுபடியும் என் பார்வையை நிலைநிறுத்தினேன். பின்னர் எனக்குப் பின்னாலிருந்த திரு. ரைட்டை நான் பார்த்தபொழுது அவர் தன் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு நின்றிருந்தார். அதனின்று ரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

டிக், கீழே விழுந்தவர் நீதானா? நான் கவலையுடன் கேட்டேன்.

ஆம், அந்த பயங்கரமான காட்சியைக் கண்டு நான் மயங்கி விழுந்து விட்டேன்.

அது சரி, நான் சமாதானமாக உரைத்தேன். திரும்பி வந்து அந்தக் காட்சியை மறுபடி காண்பதால் நீ தைரியசாலிதான்.

பொறுமையுடன் வரிசையாகக் காத்திருந்த யாத்ரீகர்களை நினைவில் கொண்டு நானும்

திரு.ரைட்டும் மௌனமாக தெரஸேவிடம் விடைபெற்றுக் கொண்டு அவருடைய தெய்வீக சன்னிதியை விட்டகன்றோம்.[5]

மறுநாள் எங்கள் சிறு குழு தெற்கு நோக்கி மோட்டாரில் சென்றது. நல்ல வேளையாக நாங்கள் ரயிலை நம்பி இராமல் எங்கள் விருப்பப்படி கிராமப்புறங்களில் எங்கு வேண்டுமானாலும் எங்கள் ஃபோர்டு காரை நிறுத்திப் புறப்பட முடிந்ததற்குகு நன்றி செலுத்தினோம். எங்கள் பிரயாணத்தில் ஜெர்மனி, ஹாலண்ட், ஃபிரான்ஸ், சுவிஸ் ஆல்ப்ஸ் முதலிய இடங்களின் வழியாகச் சென்ற போது ஒவ்வொரு நிமிடத்தையும் நாங்கள் நன்கு அனுபவித்தோம். இத்தாலியில், அடக்கத்தின் தூதுவனாக விளங்கிய மகான் ஃபிரான்சிஸ் அவர்களுக்கு எங்கள் வணக்கத்தைச் செலுத்துவதற்காக அஸிஸி என்ற இடத்திற்கு ஒரு சிறப்பு பயணம் மேற்கொண்டோம். எங்கள் ஐரோப்பிய பயணம் கிரேக்க நாட்டில் முடிவடைந்தது. அங்கு நாங்கள் ஏதென்ஸ் நகரக் கோயில்களையும் கருணையுள்ளம் படைத்த சாக்ரடீஸ்[6] தன் மரண விஷத்தை அருந்திய சிறையையும் கண்டோம். புராதன கிரேக்கர்கள் தங்கள் கற்பனைகளை வெண்கற்களில் கலைத்திறனுடன் எங்கும் வடித்து வைத்திருப்பதைக் காண்பவர் வியந்து பாராட்டுவர்.

நாங்கள் வெயில் நிறைந்த மத்திய தரைக் கடலைக் கப்பலில் கடந்து பாலஸ்தீனத்தில் இறங்கினோம். தினந்தோறும் அப்புனித நாட்டை சுற்றிப் பார்த்த பிறகு

எனக்கு யாத்திரையின் மகத்துவம் முன்னெப்பொழுதையும் விட நன்கு புரிந்தது. உணர்ச்சி மிகுந்த இதயத்திற்கு பாலஸ்தீனத்தில் எங்கும் நிறைந்துள்ள கிறிஸ்துவின் ஆத்மா புலப்படும். நான் பயபக்தியுடன் அவர் பக்கத்தில் பெத்லஹெம், கெத்செமனி, கல்வாரி, புனித ஆலிவ் சிகரம் மற்றும் ஜோர்டான் நதியோரம், கலிலீ கடலோரம் ஆகிய இடங்களில் நடந்தேன்.

எங்கள் சிறு குழு கிறிஸ்து பிறந்த தொழுவம், ஜோஸஃபினுடைய தச்சுப் பட்டறை, லாசரஸின் கல்லறை, மார்த்தா மற்றும் மேரியின் வீடு, கடைசி விருந்து நடந்த கூடம் ஆகிய இடங்களுக்குச் சென்றது. பழமை விரிந்தது; நான் ஒவ்வொரு காட்சியாக, பல யுகங்களுக்காகவென கிறிஸ்து ஒரு தடவை நடத்திய தெய்வீக நாடகத்தைக் கண்டேன்.

நவீன கெய்ரோவையும் புராதன பிரமிடுகளையும் கொண்ட எகிப்து தேசத்திற்குச் சென்றோம். பிறகு நீண்ட செங்கடலிலும் பரந்த அரபிக் கடலிலும் கப்பற் பிரயாணம்; பிறகு ஆகா, பாரதம்!



தெரஸே நொய்மன், சி. ஆர். ரைட் மற்றும் பரமஹம்ஸ யோகானந்தர், ஐக்ஸ்டாட், பவேரியா, 1935.

1 போர் நடந்த வருடங்களிலிருந்து தெரஸே அந்தத் தீவிர உணர்ச்சிகளை ஒவ்வொரு வெள்ளிக்கிழமையிலும் அனுபவிப்பதில்லை. வருடத்தில் சில முக்கியமான புனித நாட்களில் மட்டும்தான் அனுபவிக்கிறார். அவர் வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய புத்தகங்கள்: தெரஸே நொய்மன், எ ஸ்டிக்மாடிஸ்ட் ஆ்ஃப் அவர் டே (Therese Neumann: A Stigmatist of Our Day) மற்றும் ஃபர்தர் க்ரானிக்ல்ஸ் ஆ்ஃப் தெரஸே நொய்மன் (Further Chronicles of Therese Neumann) இரண்டும் ஃப்ரெட்ரிக் ரிட்டர் வான் லாமா என்பவரால் எழுதப்பட்டவை மற்றும் தி ஸ்டோரி ஆ்ஃப் தெரஸே நொய்மன், எழுதியவர் ஏ.பி.ஸ்கிம்பர்க் (1947); இவை அனைத்தும் ப்ருஸ் பப்ளிகேஷன்ஸ் கம்பெனி, மில்வாகீ, விஸ்கான்சின் வெளியீடுகள்; மற்றும் ஜோஹான்ஸ் ஸ்டெய்னர் என்பவரால் எழுதப்பட்டு ஆல்பா ஹவுஸ், ஸ்டேடன் ஐலன்ட், நியூ யார்க் U.S.A ஸ்தாபனத்தினரால் வெளியிடப்பட்ட தெரஸே நொய்மன் என்ற புத்தகம்.

2 கிறிஸ்துவிற்கு படைக்கப்பட்ட மெல்லிய ரொட்டித்துண்டு

3 மத்தேயு 4:4 (பைபிள்). மனித உடல் என்னும் பாட்டரியானது வெறும் ஆகாரத்தினால்
மட்டுமேயன்றி பிரபஞ்ச அதிர்வலை சக்தியினால் (வார்த்தை அல்லது ஓம்) காக்கப்படுகிறது. கண்ணுக்குப் புலப்படாத அந்த சக்தி உடலுக்குள் முகுளம் என்னும் வாயில் வழியாகப் பாய்கிறது. இந்த ஆறாவது மையம் கழுத்தின் பின்புறம் முதுகெலும்பின் ஐந்து சக்கரங்களின் (உயிர்ச் சக்திக் கதிர்களை வீசிக் கொண்டிருக்கும் மையம் என்பதன் சமஸ்கிருதச் சொல்) மேல் அமைக்கப்பட்டுள்ளது.

உடலுக்குத் தேவையான பிரபஞ்ச உயிர்ச்சக்தி (ஓம்) நுழையும் பிரதான வாயிலான முகுளம், துருவத்தன்மையின் மூலம் கிறிஸ்து உணர்வு மையத்துடன் (கூடஸ்த) புருவங்களுக்கு மத்தியிலுள்ள ஞானக் கண்ணில் நேரடியாக இணைக்கப்பட்டுள்ளது. அந்த ஞானக் கண் மனிதனின் இச்சா சக்தியின் இருப்பிடமாகும். பிரபஞ்ச சக்தி பிறகு மூளையிலுள்ள ஏழாவது மையத்தில் எல்லையற்ற சக்திகளின் தேக்கம் போன்று சேமித்து வைக்கப்படுகிறது. (ஆயிரம் இதழ்கள் கொண்ட ஒளிமயமான தாமரை என்று வேதங்களில் கூறப்பட்டுள்ளது). ஓம் என்பதை பரிசுத்த ஆவி அல்லது அனைத்துப் படைப்பையும் தெய்வீகமாகத் தாங்கியுள்ள, கண்களுக்குப் புலப்படாத உயிர்ச்சக்தி என்று பைபிள் குறிப்பிடுகிறது. உங்கள் சரீரமானது நீங்கள் தேவனாலே பெற்றும் உங்களில் தங்கியும் இருக்கிற பரிசுத்த ஆவியினுடைய ஆலயமாயிருக்கிறதென்றும், நீங்கள் உங்களுடையவர்களல்லவென்றும் அறிவீர்களா? /கொரிந்தியர் 6:19 (பைபிள்).

4 நான் அங்கு செல்வதற்கு சில மணிநேரங்கள் முன்னதாகவே தெரஸே, கிறிஸ்துவின் வாழ்க்கையின் கடைசி நாட்களைப் பற்றிய அனேக தரிசனங்களைக் கண்டுவிட்டிருந்தார். அவருடைய பரவச சமாதிநிலை சாதாரணமாக, கடைசி விருந்தைத் தொடர்ந்த சம்பவங்களின் காட்சிகளுடன் ஆரம்பமாகி, சிலுவையில் இயேசுவின் மரணத்துடன் அல்லது எப்பொழுதாவது அவரைக் கல்லறையில் அடக்கமாக்குவதுடன் முடிவடைகிறது.

5 ஜெர்மனியிலிருந்து ஐ.என்.எஸ் செய்தித் தொகுப்பு மார்ச் 26, 1948 குறிப்பிடுவது: ஒரு ஜெர்மானியக் குடியானவப் பெண் இந்தப் புனித வெள்ளியன்று தன் கட்டிலில் படுத்திருந்தாள்; கிறிஸ்துவின் உடல் சிலுவையில் ஆணிகளினால் அறையப்பட்டு, முள் நிறைந்த கிரீடத்தை அணிந்து ரத்தம் பெருகிய இடங்களில் அதாவது அவளது தலை, கைகள், தோள்கள் முதலிய இடங்களில் ரத்தக் குறிகள் காணப்பட்டன. ஆயிரக்கணக்கான அமெரிக்கர்களும், ஜெர்மானியர்களும் மிகுந்த பக்தி கலந்த மரியாதையுடன் தெரஸே நொய்மனுடைய குடிலின் படுக்கையருகே வரிசையாக சென்றனர்.

அப்பெரும் புனிதவதி கானர்ஸ்ரூத்தில் 1962 செப்டம்பர் 18ல் காலமானார். (பிரசுரதாரரின் குறிப்பு)

6 யூஸிபியஸ் என்னும் நூலில் ஒரு பத்தி, சாக்ரடீஸிற்கும் ஓர் இந்து முனிவருக்கும் இடையில் நிகழ்ந்த ஆர்வத்தைத் தூண்டும் ஒரு சந்திப்பை விவரிக்கிறது. அந்தப் பத்தியில் கூறியிருப்பதாவது: அரிஸ்டோக்ஸெனஸ் என்னும் சங்கீத வித்வான் இந்தியர்களைப் பற்றி கீழ்க்கண்ட கதையைக் கூறுகிறார். இவர்களில் ஒருவர் சாக்ரடீஸை ஏதென்ஸில் சந்தித்து அவருடைய தத்துவத்தின் நோக்கம் என்ன என்று கேட்டார். மனித வர்க்கத்தைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி, என்று சாக்ரடீஸ் பதிலளித்தார். இதைக் கேட்டதும் அந்த இந்தியன் வாய்விட்டுப் பெரிதாக சிரித்தான். தெய்வத்தைப் பற்றி எதுவும் அறியாத ஒரு மனிதன் எவ்வாறு மனித வர்க்கத்தைப் பற்றி ஆராய முடியும்? எனக் கூறினான்.

மேற்கத்திய தத்துவங்களில் பிரதிபலிக்கும் கிரேக்கக் கொள்கை: மனிதனே, உன்னை அறிந்து கொள், என்பதாம். ஓர் இந்து கூறுவது: மனிதனே, உன் ஆத்மாவை அறிந்து கொள், டெய்காட்டினுடைய கொள்கை: நான் நினைக்கிறேன், அதனால் நான் உள்ளேன், என்பது தத்துவ ரீதியாகச் சரியில்லை. காரண காரியங்களின் பகுத்தறிவு மனிதனின் முடிவான நிலையைத் தெளிவாக்க முடியாது. மனித மனம் அது கவனித்தறியும் வியப்புக்குரிய உலகத்தைப் போன்றே நிரந்தர மாறுதலடைந்தபடிதான் இருக்கிறது. மேலும் அது முடிவான நிலைகளைக் கொடுக்க இயலாது.

அறிவுபூர்வமான திருப்தி, உன்னதமான லட்சியமாகாது. கடவுளை நாடுபவர்தான் உண்மையான வித்யாவை, மாற்ற முடியாத உண்மையை நேசிப்பவராவார். மற்றவை எல்லாம் அவித்யாவே, ஒப்பீட்டடிப்படையில் அமைந்த அறிவே.

## அத்தியாயம் 40

# நான் பாரதம் திரும்புகிறேன்

நான் நன்றியுடன் பாரதத்தின் புனிதக் காற்றை சுவாசித்துக் கொண்டிருந்தேன். 1935 ஆம் வருடம் ஆகஸ்ட் 22ந் தேதி ராஜ்புதனா என்ற பெயர் கொண்ட எங்கள் கப்பல் மும்பையின் பெரிய துறைமுகத்தை வந்தடைந்தது. நான் கப்பலிலிருந்து இறங்கிய முதல் நாளே, வரப்போகும் வருடம் இடைவிடாது வேலையில் ஈடுபட வேண்டிய காலமாயிருக்கும் என்பதனை முன்னறிவிக்கும் நாளாக அமைந்தது. நண்பர்கள் மலர் மாலைகளுடன் எங்களை வரவேற்க துறைமுகத்தில் கூடியிருந்தனர். சீக்கிரமே தாஜ்மஹால் ஹோட்டலில் உள்ள எங்கள் அறையில் நிருபர்கள் மற்றும் புகைப்படக்காரர்களின் பல குழுக்களை நாங்கள் சந்தித்தோம்.

மும்பை எனக்குப் புதிய நகரம். மேலை நாட்டின் அனேக புதுமையான வசதிகளுடன் உற்சாகமான நவீன நகரமாக அதைக் கண்டேன். பனைமர வரிசைகள் கொண்ட விசாலமான முக்கிய சாலைகள்; ஆவலைத் தூண்டுவதில் புராதன கோயில்களுடன் போட்டியிடும் அற்புதமான அரசாங்கக் கட்டிடங்கள்; இருந்தபோதிலும் நாங்கள் ஊர் சுற்றிப் பார்க்க மிகக் குறைந்த நேரம் செலவிட்டோம். நான் பொறுமையற்றவனாக என் குருதேவரையும் எனக்குப் பிரியமான மற்றவர்களையும்

பார்க்க மிகுந்த ஆவலாயிருந்தேன். ஃபோர்ட் மோட்டார் காரை, சாமான்களை ஏற்றிச் செல்லும் வண்டியில் ஏற்றிவிட்டு எங்கள் குழு கிழக்காக கல்கத்தா நோக்கி ரயிலில் விரைந்தது.[1]

ஹௌரா ரயில் நிலையத்தில் வண்டி நின்றதும் எங்களை வரவேற்கக் கூடி நின்ற கூட்டம் மிக அதிகமாக இருந்ததினால் நாங்கள் சற்று நேரம் ரயிலிலிருந்து இறங்கவே முடியவில்லை. காஸிம் பஜாரின் இளைய மகாராஜாவும், என் சகோதரன் விஷ்ணுவும் வரவேற்புக் குழுவிற்குத் தலைமை தாங்கியிருந்தனர்; எங்களுக்கு அளிக்கப்பட்ட மிகப்பெரிய மனமார்ந்த வரவேற்பை நான் எதிர்பார்க்கவில்லை.

வரிசை வரிசையாகக் கார்களும் மோட்டார் சைகிள்களும் முன்னே செல்ல, மத்தளம், சங்கு ஆகியவற்றின் மகிழ்ச்சிகரமான ஆரவாரத்திற்கிடையே செல்வி ப்ளெட்ஷ், திரு.ரைட், நான் எல்லாருமே தலை முதல் கால்வரை மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டு என் தந்தையின் வீட்டிற்குக் காரில் மெதுவாகச் சென்றோம்.

வயதான என் தந்தை ஏதோ நான் மரணத்திலிருந்து மீண்டு வந்தது போல் என்னைத் தழுவிக் கொண்டார். ஆனந்தத்தில் மனம் நிறைந்து பேச்சிழந்து வெகுநேரம் நாங்கள் ஒருவரையொருவர் பார்த்தபடி இருந்தோம். சகோதர சகோதரிகள், மாமன்மார்கள், அத்தைமார்கள், ஒன்றுவிட்ட சகோதர சகோதரிகள், மாணவர்கள், என் வெகு நாளைய நண்பர்கள் எல்லோரும் என்னைச் சுற்றி

நின்றனர். எங்கள் மத்தியில் ஒருவர் கண்ணாவது கலங்காமலில்லை. தற்போது நினைவுப் பெட்டகத்திற்குள் சென்றுவிட்ட அந்த அன்புமயமான மறு இணைப்புக் காட்சி, மறக்கமுடியாதபடி என் இதயத்தில் தெளிவாக நிலைத்து நிரந்தரமாகிவிட்டது. ஸ்ரீ யுக்தேஸ்வருடன் என் சந்திப்பைப் பற்றிக் கூற வேண்டுமெனிலோ எனக்கு வார்த்தைகளே வரவில்லை; என் காரியதரிசியின் பின்வரும் விளக்கமே போதுமானது.

இன்று, மிக உயர்ந்த எதிர்பார்ப்புகளுடன், நான் யோகானந்தஜியை கல்கத்தாவிலிருந்து செராம்பூருக்குக் காரில் ஓட்டிச் சென்றேன், திரு.ரைட் தன் பயணக் குறிப்புப் புத்தகத்தில் குறித்திருந்தார்.

நாங்கள் விசித்திரமான பல கடைகளைத் தாண்டிச் சென்றோம். அவைகளில் யோகானந்தஜி தன் கல்லூரி நாட்களில் விரும்பி உணவு உட்கொண்ட ஓர் இடமும் இருந்தது. கடைசியில் இருபக்கமும் சுவருடன் கூடிய ஒரு குறுகிய சந்தை அடைந்தோம். இடது பக்கமாக ஒரு திடீர் திருப்பம், எங்கள் முன்னால் செங்கல்லால் ஆன இரண்டு மாடிகள் கொண்டு மேல்மாடியில் கிராதியிட்ட பால்கனியுடன் குருதேவரின் ஆசிரமம் தென்பட்டது. அமைதியான ஏகாந்தம் எங்கும் நிறைந்திருந்தது போலத் தோன்றியது.

நான் ஆழ்ந்த பணிவுடன் யோகானந்தஜியின் பின்னால் ஆசிரமச் சுவர்களுக்கு உட்புறமாக இருந்த முற்றத்தில் நடந்தேன். எங்கள் இதயங்கள் படபடவென்று

துடிக்க, சந்தேகமின்றி சத்தியத்தைத் தேடும் எண்ணற்ற மனிதர்களின் பாதங்கள் பட்ட பழைய சிமெண்டுப் படிகளில் ஏறிச் சென்றோம். நாங்கள் செல்லச் செல்ல எங்கள் மனவெழுச்சி கூடிக் கொண்டே சென்றது. மாடிப்படிகளின் உச்சியில் எங்கள் முன்னே அந்த மகான், ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வர்ஜி ஒரு மகரிஷிக்கே உரிய உன்னத தோற்றத்தில் அமைதியாக நின்று கொண்டிருந்தவாறு வெளிப்பட்டார்.

அவருடைய தெய்வீக சன்னிதியில் இருப்பதற்கான அருளாசியை உணர்ந்த பொழுது என் இதயம் துடித்து விரிந்தது. யோகானந்தஜி முழுந்தாளிட்டுத் தலைவணங்கி தன் ஆத்மாவின் நன்றியையும் வணக்கத்தையும் உணர்த்திய போது ஆர்வத்துடன் கூடிய என் பார்வையைக் கண்ணீர் மறைத்தது; அவர் தன் கைகளால் குருவின் பாதங்களைத் தொட்டு மிகுந்த மரியாதை கலந்த வணக்கத்துடன் அவைகளைத் தன் நெற்றியில் தரித்தார். அவர் எழுந்ததும் ஸ்ரீ யுக்தேஸ்வர் அவரை தழுவிக் கொண்டார்.

தொடக்கத்தில் சொற்கள் எதுவுமே இல்லை; ஆனால் ஆத்மாவின் மௌன மொழியில் ஆழ்ந்த உணர்ச்சி வெளிப்படுத்தப்பட்டது. பிரிந்தவர் கூடிய இதமான உணர்வால் உந்தப்பட்டு அவர்களுடைய கண்கள் எப்படித்தான் மின்னின! மிருதுவான அலையதிர்வு அந்த அமைதியான கூடம் முழுவதும் பரவிச் சூழ்ந்தது. சூரியன் எதிர்பாரா வண்ணம் எழில் பிரகாசத்தைச் சேர்க்க மேகத் திரைகளினின்றும் நழுவி வெளிப்பட்டான்.

அந்த குருதேவரின் முன்னே நானும் வெளிப்படுத்தப்படாத என் அன்பையும் நன்றியையும் தெரிவிக்கும் வகையில் முழந்தாளிட்டு வணங்கினேன். காலத்தினாலும் கடமையினாலும் உரம் பெற்ற அந்தத் திருவடிகளை வணங்கி அவருடைய அருளாசியைப் பெற்றேன். நான் எழுந்து நின்று இரு அழகிய கண்களை நோக்கினேன். அவை அகக்காட்சியில் ஆழ்ந்திருந்தாலும், ஆனந்தத்துடன் பிரகாசித்துக் கொண்டிருந்தன.

நாங்கள் அவருடைய அமரும் அறைக்குள் நுழைந்தோம். அவ்வறையின் முழுப்பக்கமும், நாங்கள் வெளியிலிருந்து கண்ட பால்கனியை நோக்கியவாறு திறந்திருந்தது. அம்மகான் ஒரு பழைய சிறு சாய்வு மேஜையின்மேல் சாய்ந்தபடி சிமெண்டுத் தரையின் மீது, உறையிடப்பட்ட மெத்தையில் அமர்ந்தார். யோகானந்தஜியும் நானும் குருதேவரின் காலடிகளுக்கு அருகில் சௌகரியமாக, சாய்ந்து அமருவதற்கென வைக்கப்பட்டிருந்த காவி வண்ணத் தலையணைகளுடன் கூடிய கோரைப் பாயில் அமர்ந்தோம்.

நான் அந்த இரு ஸ்வாமிகளின் வங்காள உரையாடலின் கருத்தைப் புரிந்த கொள்ள பயனின்றி முயற்சி செய்தேன் (அவர்களிருவரும் ஒன்றாக இருக்கும் பொழுது ஆங்கிலத்தில் பேசுவதில்லை எனத் தெரிந்து கொண்டேன். இருந்தாலும், ஸ்வாமிஜி மகராஜ், அந்த மகாகுரு இப்படித்தான் மற்றவர்களால் அழைக்கப்படுகிறார், நன்றாக ஆங்கிலம் பேச வல்லவராக இருந்தது மட்டுமல்லாமல் அடிக்கடி

பேசவும் செய்கிறார்). ஆனால் நான் அந்த மகானுடைய புனிதத் தன்மையை, இதயத்தை நெகிழச் செய்யும் புன்னகையிலும் மின்னும் கண்களிலும் சுலபமாகக் கண்டேன். அவரது வேடிக்கையான அல்லது விஷயம் செறிந்த வார்த்தைகளிலிருந்து மிகச் சீக்கிரத்திலேயே நான் கண்டுகொண்டதுஅவரது பேச்சில் இருந்த தீர்மானமான உறுதியாகும்கடவுளைத் தான் தெரிந்திருப்பதனால், தனக்குத் தெரியும் என்பதை தெரிந்திருக்கும் ஒரு மகானுக்குரிய அடையாளமாகும் இது. அம்மகானின் அபார ஞானம், குறிக்கோளின் உறுதி, தீர்மானம் ஆகியவை ஒவ்வொரு விதத்திலும் தெளிவாக தெரிந்தது.

அவர் எளிய முறையில் உடை அணிந்திருந்தார். அவரது வேட்டியும், சட்டையும் ஒரு முறை காவி வண்ணச் சாயம் ஏற்றப்பட்டிருந்தாலும் இப்பொழுது மங்கலான ஆரஞ்சு நிறமாக வெளுத்திருந்தது. அடிக்கடி அவரை பயபக்தியுடன் கவனித்துப் பார்த்தபொழுது அவருடைய தேகம் ஒரு விளையாட்டு வீரனுடையதுபோல் விசாலமானதாகவும், துறவினால் ஏற்பட்ட பல சோதனைகள் மற்றும் தியாகங்களால் கடினமாக்கப் பட்டதாகவும் இருந்ததைக் கவனித்தேன். அவரது பாவனை கம்பீரமாக இருந்தது. அவர் கௌரவமான நடையும் நிமிர்ந்த தோற்றமும் கொண்டு செயல்பட்டார். அவருடைய களிப்புடன் கூடிய ஆரவாரமான சிரிப்பு, அவரது நெஞ்சின் ஆழத்திலிருந்து வெளிப்பட்டு அதனால் அவரது உடல் முழுவதையும்

குலுங்கச் செய்யும்.

அவருடைய கண்டிப்பான முகம், தெய்வீக சக்தியை கருத்தைக் கவரும் வகையில் வெளிப்படுத்தியது. அவருடைய முடி நடுவில் வகிடு எடுக்கப்பட்டு நெற்றியைச் சுற்றிலும் வெண்மையாகவும் சில இடங்களில் வெண் பொன்னைப் போலவும் கரு வெள்ளியைப் போன்றும் அவரது தோள்களில் சுருள் சுருளாகத் தொங்கியது. அவரது தாடியும் மீசையும் மிகச் சொற்பமாக அல்லது அடர்த்தியற்று இருந்தாலும் அவரது முகத்தோற்றத்திற்கு அழகூட்டியதுபோல் தோன்றியது. சுவர்க்கத்தைத் தேடுவது போன்று அவரது நெற்றி சரிந்திருந்தது. அவருடைய கருமையான கண்களை கட்புலனாகாத ஒரு நீல ஒளி வட்டம் சூழ்ந்திருந்தது. அவருடைய சற்றுப் பெரிய அழகு மிகுதியற்ற மூக்கை, அவர் சும்மா இருக்கும் நேரங்களில் குழந்தையைப்போல தன் விரல்களினால் சுண்டிக்கொண்டோ அல்லது திருகிக்கொண்டோ தனக்குத் தானே வேடிக்கை செய்தபடி இருப்பார். ஓய்வு நேரத்தில் அவரது வாய் இறுக்கமாக இருந்தாலும் மென்மையை நுட்பமாகக் காட்டியது.



ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வரும் ஸ்ரீ யோகானந்தரும், கல்கத்தா, 1935

இங்குமங்கும் பார்த்தபொழுது அந்த ஓரளவு சேதமடைந்திருந்த அறையானது அதன் சொந்தக்காரருக்கு லௌகீக வசதிகளிடம் உள்ள பற்றற்ற தன்மையை உணர்த்தியதை நான் கவனித்தேன். அந்த நீண்ட அறையின் வெள்ளைச் சுவர்கள் காலப்போக்கில் வெளுத்துக் கொண்டிருந்த நீலப்பூச்சின் கீற்றுக்களைக் கொண்டிருந்தன. அவ்வறையின் ஓர் ஓரத்தில் லாஹிரி மகாசயரின் அரிதான படம் எளிய மாலையினால் பக்தியுடன் அலங்கரிக்கப்பட்டு தொங்கிக்கொண்டிருந்தது. யோகானந்தர் பாஸ்டன் நகருக்கு வந்த பொழுது, சமயங்களின் மகாசபைக்கு வந்திருந்த மற்ற பிரதிநிதிகளுடன் சேர்ந்து நின்று எடுத்த அவருடைய பழைய புகைப்படம் ஒன்றும் இருந்தது.

நான் அங்கு பழையதும் புதியதும் ஒரே சமயத்தில் விசித்திரமாக ஒத்திருந்த விதத்தைக் கண்டேன். ஒரு பெரிய மெழுகுவர்த்திக் கண்ணாடி சரவிளக்கு நீண்ட காலம் உபயோகப்படுத்தப்படாததால் ஒட்டடைப் படிந்து கிடந்தது; சுவரில் பிரகாசமான புத்தம்புதிய காலண்டர் தென்பட்டது; அந்த அறை சாந்தியும் ஆனந்தமும் நிறைந்த மணத்தைப் பரப்பியது.

பால்கனியைத் தாண்டி தென்னை மரங்கள் மௌனமாகக் காவல் புரிவது போல் உயர்ந்து இருந்தன.

அம்மகான் வெறுமனே கையைத் தட்டினால் போதும்; அது முடிவதற்குள் யாராவது ஒரு சிறு சீடன் உடனே வருவதைக் காணலாம். அவர்களில் ஒருவன், பிரஃபுல்லா[2] எனும் பெயர் கொண்ட ஒல்லியான

சிறுவன், நீண்ட கருமையான தலைமுடியும், மின்னும் கருமையான கண்களும் கொண்டவன். அவனது தெய்வீகப் புன்னகையில் அவனது வாயின் ஓரங்கள் உயரும்பொழுது, அந்தி வேளையில் விண்மீன்களும் பிறைநிலவும் திடீரென்று தோன்றுவது போல அவன் கண்கள் மின்னும்.

ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வருக்கு தான் வளர்த்து அனுப்பிய சீடன் திரும்பி வந்ததில் மட்டில்லா மகிழ்ச்சி என்பது வெளிப்படை (மற்றும் சீடனின் சீடனான என்னைப் பற்றி அறியவும் அவருக்கு ஏதோவொரு ஆவல்). இருந்தாலும் அப்பெரிய மகானின் இயல்பில் ஞானத்தின் மேலாதிக்கம் பெற்ற தன்மை, அவருடைய உணர்ச்சிகளை வெளிப்படையாகக் கூறுவதைத் தடுத்தது.

யோகானந்தஜி, சம்பிரதாய வழக்கப்படி தன் குருவிடம் திரும்பிவரும் சீடன் என்ற முறையில் அவருக்கு சில பரிசுகளை அளித்தார். பிறகு நாங்கள் எளிய முறையில், ஆனால் நன்கு சமைக்கப்பட்ட காய்கறிகளும் அரிசியும் கலந்த உணவைச் சாப்பிட அமர்ந்தோம். இந்தியப் பழக்க வழக்கங்கள் பலவற்றைஉதாரணமாகக் கையால் சாப்பிடுவதுநான் பின்பற்றுவது கண்டு ஸ்ரீ யுக்தேஸ்வர்ஜி மகிழ்ந்தார்.

பல மணிநேர வங்காளச் சொற்றொடர்களின் பிரயோகம், மகிழ்வுடனான புன்னகை பரிமாறல், ஆனந்தமயமான பார்வைகள் இவைகளுக்குப் பிறகு, அவரது திருவடிகளில் வணங்கி ப்ரணாம்[3] செய்து பிரியாவிடை பெற்றோம். அந்தத் தெய்வீகச் சந்திப்பின்

என்றும் நிலைத்திருக்கும் நினைவுடன் கல்கத்தாவிற்குப் புறப்பட்டோம். நான் அம்மகானைப் பற்றி எனக்கு வெளிப்படையாகத் தோன்றியதை முக்கியமாக எழுதினாலும், அவருடைய ஆன்மீக உன்னதத்தைப் பற்றி நான் எப்பொழுதும் அறிந்திருந்தேன். அவருடைய சக்தியை நான் உணர்ந்தேன், மேலும் அந்த உணர்வை நான் என்றும், எனக்குக் கிடைத்த தெய்வீக அருளாசியாகப் போற்றிப் பாதுகாப்பேன்.

அமெரிக்கா, ஐரோப்பா, பாலஸ்தீனம் ஆகிய நாடுகளிலிருந்து நான் ஸ்ரீ யுக்தேஸ்வருக்கு அனேகப் பரிசுகளைக் கொண்டு வந்திருந்தேன். அவர் அவைகளைப் புன்னகையுடன், ஆனால் எதுவும் குறிப்பிட்டுச் சொல்லாமல் பெற்றுக்கொண்டார். என் சொந்த உபயோகத்திற்காக நான் ஜெர்மனியில் குடை, பிரம்பு இவைகள் இரண்டும் சேர்ந்ததாக இருந்த ஒன்று வாங்கினேன். இந்தியாவில் அந்தப் பிரம்பை குருதேவருக்குக் கொடுப்பதென்று தீர்மானித்தேன்.

இந்தப் பரிசை நான் உண்மையிலேயே விரும்புகின்றேன்! என் குருதேவர் வழக்கமில்லாதபடி விமர்சனம் செய்தபோது, அவரது கண்கள் அன்புடன் புரிந்து கொண்டவாறு என் மீது திரும்பின. எல்லாப் பரிசுகளிலேயும் அந்தப் பிரம்பை மட்டும் வந்தவர்களிடம் தனியாக எடுத்துக் காண்பித்தார்.

குருதேவா, இந்த அமரும் அறைக்குப் புது விரிப்பு ஒன்று வாங்குவதற்குத் தயவு செய்து எனக்கு அனுமதி கொடுங்கள். ஸ்ரீ யுக்தேஸ்வரின் புலித்தோல் ஆசனம்

ஒரு கிழிந்த கம்பளிமேல் போடப்பட்டிருப்பதைக் கண்டேன்.

உனக்கு மகிழ்ச்சி அளிக்குமென்றால் அப்படியே செய்யேன். குருவின் பதிலில் உற்சாகமில்லை. இதோ பார் என் புலித்தோல் ஆசனம் நன்றாகவும் சுத்தமாகவும் இருக்கிறது; என் சொந்த சிறிய ராஜாங்கத்தில் நானே ராஜா. இதற்கப்பாலுள்ள பரந்த உலகானது, வெளி விஷயங்களில் மட்டும்தான் ஈடுபாடு கொண்டுள்ளது.

அவர் இச்சொற்களை உதிர்க்கும் பொழுது வருடங்கள் பின்னோக்கி உருண்டோடியதை நான் உணர்ந்தேன். மறுபடியும் நான் குருவின் கண்டிப்பு என்ற தீயில் தினசரி புனிதமடையும் சிறு சீடனானேன்!



யோகானந்தர் (நடுவில் அமர்ந்திருப்பவர்) ஸ்ரீ யுக்தேஸ்வருடன்(வலது பக்கம் நிற்பவர்), செராம்பூர் ஆசிரமம், 1935.

நான் செராம்பூரிலிருந்தும் கல்கத்தாவிலிருந்தும் என்னை விடுவித்துக் கொள்ள முடிந்தவுடன் திரு.ரைட்டுடன் ராஞ்சிக்குப் பயணமானேன். அங்கே எவ்விதமான வரவேற்பு, எவ்வளவு உணர்ச்சிபூர்வமான கரகோஷம்! நான் அங்கு பதினைந்து ஆண்டுகள் இல்லாதபொழுது சுயநலமில்லாது உழைத்து பள்ளிக்கூடத்தின் மரியாதையையும் கௌரவத்தையும்

கட்டிக் காத்துவந்த ஆசிரியர்களை அணைக்கும்பொழுது என் கண்களில் கண்ணீர் திரண்டது. விடுதியில் தங்கிப் படித்துவரும் மாணவர்கள் மற்றும் வெளியிலிருந்து வந்து படிக்கும் மாணவர்களின் ஒளிவீசும் முகங்களையும் மகிழ்ச்சியான புன்னகையையும் கண்டேன். அவை அவர்களுடைய யோகப் பயிற்சிகள், கருத்துள்ள கல்வி முறை இவைகளின் தரத்திற்குப் போதுமான சான்றாயிருந்தன.

இருந்தாலும் ராஞ்சி ஸ்தாபனத்தின் நிதி நிலைமை தீவிரமான பற்றாக் குறையினால் தவித்துக் கொண்டிருந்தது. பழைய மகாராஜாவான ஸ்ரீ மணீந்த்ர சந்திர நந்திபல முறைகள் மிகப் பெரிய தொகைகளைத் தாராளமாக அன்பளிப்பாக வழங்கியவர்இப்பொழுது இறந்து விட்டிருந்தார். அவரது காஸிம் பஜார் மாளிகைதான் பள்ளிக் கூடத்தின் மையக் கட்டிடமாக மாற்றி அமைக்கப்பட்டிருந்தது. பள்ளிக் கூடத்தின் அனேக இலவச தரும காரியங்கள் பொது மக்களின் தேவையான ஆதரவு இன்றி மிகவும் நசிந்திருந்தன.

நான் அமெரிக்காவில், அதன் நடைமுறை அறிவையும், தடைகளை நீக்குவதற்கான அதன் அஞ்சாத உணர்வையும் கற்றுக் கொள்ளாமல் அங்கு வருடங்களைக் கழிக்கவில்லை. ஒரு வாரம் நான் ராஞ்சியில் தங்கி அதன் கடுமையான பிரச்சனைகளுடன் போராடினேன். பிறகு நடந்தவைகல்கத்தாவில் முக்கியமான தலைவர்கள் மற்றும் கல்விமான்களுடன் பேட்டிகாணல், காஸிம் பஜார் இளைய மகாராஜாவுடன்

நீண்ட நேரப் பேச்சு வார்த்தை, நிதி உதவி செய்யுமாறு என் தந்தைக்கு ஒரு வேண்டுகோள் ஆகியவை. பிறகென்ன? ஆட்டத்திலிருந்த ராஞ்சி பள்ளிக்கூடத்தின் அஸ்திவாரம் சரிப்படத் தொடங்கியது. என் அமெரிக்க மாணவர்களிடமிருந்தும் தக்க தருணத்தில் அனேக நன்கொடைகள் வந்து சேர்ந்தன.

நான் இந்தியாவிற்கு வந்த சில மாதங்களுக்குள்ளேயே ராஞ்சி பள்ளிக்கூடம் சட்டப்படி இணைக்கப்பட்டதைக் காணும் மகிழ்ச்சி எனக்குக் கிட்டியது. நிரந்தர நிதி பெற்ற யோகக் கல்வி மையம் ஒன்று நிறுவப்படவேண்டுமென்ற என் வாழ்நாள் கனவு நிறைவேறியது. அந்த அவாதான் என்னை 1917ல் ஏழு சிறுவர்களைக் கொண்ட ஒரு குழுவுடன் கூடிய எளிய தொடக்கத்திற்கு வழிகாட்டியது.

யோகதா சத்சங்க பிரமசரிய வித்யாலயம் என்ற இந்தப் பள்ளிக்கூடம், ஆரம்பப்பள்ளி மற்றும் உயர்நிலைப் பள்ளிப் பாடங்களை திறந்தவெளி வகுப்புகளில் நடத்தி வருகிறது. விடுதியில் வசிக்கும் மாணவர்களும், வெளியில் இருந்து வரும் மாணவர்களும் ஏதாவதொரு தொழிற் பயிற்சியையும் கூடவே கற்கின்றனர்.

சிறுவர்கள் தங்களுக்குள்ளேயே சுயேச்சையான குழுக்களை அமைத்து அவர்களுடைய அனேக செயல்களை முறைப்படுத்திக் கொள்கிறார்கள். கல்வி பயிற்றுவிப்பவர் என்ற முறையில் என் வாழ்க்கைப் பணியின் வெகு ஆரம்பத்திலேயே நான் தெரிந்துக்

கொண்டது என்னவெனில், விஷமத்தனமாக ஓர் ஆசிரியரை வெல்லுவதில் மகிழ்ச்சியுறும் மாணவர்கள், தங்கள் சக மாணவர்களால் நிறுவப்பட்ட ஒழுக்க விதிகளை சந்தோஷத்துடன் ஏற்றுக் கொள்கிறார்கள் என்பதுதான். என்றுமே ஒரு முன்மாதிரியான மாணவனாக இல்லாத நான், சிறுபிள்ளைத்தனமான குறும்புகளையும் பிரச்சனைகளையும் உடனடி அனுதாபத்துடன் அணுக முடிந்தது.

விளையாட்டுகளும் பந்தயங்களும் உற்சாகப்படுத்தப் படுகின்றன; ஹாக்கி, கால்பந்து பயிற்சிகளால் மைதானம் எதிரொலிக்கிறது. ராஞ்சி மாணவர்கள் அடிக்கடி போட்டிகளில் கோப்பைகள் வெல்கின்றனர். சிறுவர்களுக்கு யோகதா முறைப்படி தசைகளை இச்சாசக்தியின் மூலம் சக்தியூட்டும் விதம் கற்பிக்கப்படுகிறது; இது உடலின் எந்த உறுப்பிற்கும் உயிர்ச் சக்தியை மனத்தின் உத்தரவுப்படி அளிப்பதாகும். அவர்கள் ஆசனங்கள் செய்வதுடன் கத்தி, சிலம்ப விளையாட்டுகளையும் கற்றுக்கொள்கின்றனர். முதலுதவியில் பயிற்சி பெற்ற ராஞ்சி மாணவர்கள் வெள்ளம், பஞ்சம் ஆகிய சோதனையான சமயங்களில் தங்கள் பிராந்திய மக்களுக்கு மெச்சத்தக்க சேவைகள் செய்துள்ளனர். சிறுவர்கள் தோட்ட வேலை செய்து அவர்களுக்குத் தேவையான காய்கறிகளையும் பயிர் செய்கின்றனர்.

ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் இப்பிராந்தியத்தைச் சேர்ந்த கோல், சந்தால், முண்டா ஆகிய பழங்குடி

மக்களுக்கு பாடங்கள் ஹிந்தியில் கற்பிக்கப்படுகின்றன. சிறுமியர்களுக்கு மட்டுமான வகுப்புகள் அருகிலுள்ள கிராமங்களில் நடத்தப்பட்டு வருகின்றன.

ராஞ்சியின் தனிச் சிறப்பு கிரியா யோக உபதேசமாகும். சிறுவர்கள் தங்கள் ஆன்மீகப் பயிற்சிகளை தினமும் செய்து வருவதுடன் கீதை பாராயணமும் செய்கிறார்கள். எளிமையின் மகத்துவம், சுயநலத் தியாகம், கௌரவம், சத்தியம் இவைகள் போதனை மற்றும் உதாரணம் மூலம் கற்பிக்கப்படுகின்றன. தீமை, துன்பத்தைத் தரக்கூடிய ஒன்று என்பதாக அவர்களுக்குச் சுட்டிக்காட்டப்படுகின்றது. நன்மை என்பது உண்மையான ஆனந்தத்தைத் தரும் செயல்களாகும். தீமையை விஷங்கலந்த தேனுடன் ஒப்பிடலாம். அது சபலத்தைத் தூண்டுகிறது; ஆனால் மரணத்தைச் சுமந்து நிற்கிறது.

உடல் மற்றும் மன அமைதியின்மையைத் தடுப்பதற்கு ஒருமுனைப்படுத்தும் உத்திகள் ஆச்சரியப்படத்தக்க வகையில் பலனளித்திருக்கின்றன. ராஞ்சியில் சுமார் ஒன்பது அல்லது பத்து வயதுடைய ஒரு சிறிய உருவம் மனத்தைத் தொடக்கூடிய வகையில் ஒரு மணி நேரம் அல்லது அதற்கு மேலாக ஆடாமல், அசையாமல் கண்களிரண்டும் இமையாமல் ஞானக் கண்ணை நோக்கிக் குவிந்திருக்க, தியானத்திலாழ்ந்திருப்பதைக் காண்பது புதுமையல்ல.

அங்குள்ள பழத்தோட்டத்தில் ஒரு சிவன் கோயில் உள்ளது. அங்கு புனித குருவாகிய லாஹிரி மகாசயரின்

சிலை ஒன்று இருக்கிறது. தினசரி பிரார்த்தனைகளும் சாத்திர வகுப்புகளும் தோட்டத்தில் மாமரங்களின் கீழே நடத்தப்படும்.

ராஞ்சி எஸ்டேட்டில் நிறுவப்பட்டுள்ள யோகதா சத்சங்க சேவாசிரமம் (சேவை இல்லம்) இந்தியாவின் பல்லாயிரக்கணக்கான ஏழைகளுக்கு இலவச அறுவை சிகிச்சையும் மருத்துவ உதவியும் அளிக்கிறது.

ராஞ்சி கடல் மட்டத்திற்கு 2,000 அடிகள் மேலுள்ளதால் சீதோஷ்ண நிலை மிதமாகவும் ஒரே சீராகவும் இருக்கும். இருபது ஏக்கர் நிலத்தில் இருக்கும் இந்தப் பழத்தோட்டம் இந்தியாவிலுள்ள மிக உயர்ந்த தனியார் தோட்டங்களில் ஒன்றாகும். இதில் மா, பேரீச்சை, கொய்யா, லிச்சி, பலா முதலிய ஐநூறு பழ மரங்கள் உள்ளன.

ராஞ்சி புத்தகாலயம், அனேக சஞ்சிகைகளையும் ஆங்கிலம், வங்காளி மொழிகளில், கீழை மற்றும் மேலை நாடுகளிலிருந்தும் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்ட ஆயிரம் புத்தகங்களையும் பெற்றுள்ளது. அங்கு உலக சமய நூல்களின் தொகுப்புகள் உள்ளன. விலையுயர்ந்த கற்கள் மற்றும் தொல் பொருளியல், புவியியல் மேலும் மானுடவியலைச் சார்ந்த காட்சிப் பொருட்கள் நன்கு வகைப்படுத்தப்பட்டு பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. ஓர் அருங்காட்சியகம் அங்கு உள்ளது. அக்காட்சிப் பொருட்கள், இறைவன் படைத்த பல வகையுள்ள இப்புவியின் மீது நான் சுற்றி வந்ததற்கான, ஏராளமான வெற்றிப் பரிசுகளாகும்.[4]

ராஞ்சியிலுள்ளதைப் போன்ற தங்கும் வசதி மற்றும் யோக முறைகளுடன் உயர்நிலைப் பள்ளிக் கிளைகள் திறக்கப்பட்டு இப்பொழுது நன்கு வளர்ந்து வருகின்றன. இவைகள் மேற்கு வங்காளத்தில் புரூலியா மாவட்டத்தில் லகன்பூரில் உள்ள சிறுவர்களுக்கான யோகதா சத்சங்க வித்யா பீடமும் (பள்ளிக்கூடம்), மித்னாபூர் மாவட்டத்தில் இஸ்மாலிசாக்கிலிருக்கும் யோகதா பள்ளிக் கூடமும் ஆசிரமும் ஆகும்.[5]

தக்ஷிணேஸ்வரத்தில் கங்கையை நோக்கியவாறு அமைந்த மிகக் கம்பீரமான ஒரு யோகதா மடம் 1939ல் அர்ப்பணிக்கப்பட்டது. கல்கத்தாவிலிருந்து சில மைல்கள் வடக்கேயுள்ள அந்த ஆசிரமம் நகரவாசிகளுக்கு அமைதியின் புகலிடமாக விளங்குகிறது.

இந்தியாவின் பல பாகங்களிலுமுள்ள யோகதா சத்சங்க சொஸைடி, அதன் பள்ளிக்கூடங்கள், மையங்கள் மற்றும் ஆசிரமங்களுக்கு தக்ஷிணேஸ்வரத்திலுள்ள மடம்தான் இந்தியத் தலைமையலுவலகம். யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ஃப் இந்தியாவானது, அமெரிக்க ஐக்கிய நாட்டின் கலி்ஃபோர்னியா, லாஸ் ஏஞ்ஜிலீஸ் நகரத்திலுள்ள சர்வதேசத் தலைமையகமான ஸெல்்ஃப்-ரியலைசேஷன் ்ஃபெலோஷிப் உடன் சட்டப்படி இணைக்கப் பெற்றுள்ளது. யோகதா சத்சங்க[6] அலுவல்களில், இந்தியா முழுவதுமுள்ள மாணவர்களுக்கான யோகதா பாடங்களை மாதத்திற்கு ஒரு முறை அஞ்சல் வழி அனுப்புவதும் அடங்கும். இப்பாடங்கள் யோகதா சத்சங்கத்தின் சக்தியூட்டல்,

மனதை ஒருமுனைப்படுத்தல் மற்றும் தியான முறைகள் ஆகியவற்றை விவரமாக விளக்குகின்றன. அவைகளை விசுவாசத்துடன் பயிற்சி செய்வது உயர்ந்த கிரியா யோக உபதேசத்திற்கு அவசியமான அஸ்திவாரமாகிறது. தொடர்ந்து வரும் பாடங்களில் தகுதி பெற்ற மாணவர்களுக்கு கிரியா யோக உபதேசம் அளிக்கப்படுகிறது.

யோகதாவினுடைய கல்வி, சமய மற்றும் மனிதநேயப் பணிகளுக்கென பல ஆசிரியர்கள் மற்றும் தொண்டர்களுடைய சேவையும் அர்ப்பணிப்பும் தேவைப்படுகின்றன. நான் அவர்களுடைய பெயர்களை இங்குப் பட்டியலிடவில்லை. ஏனெனில் அவர்கள் அதிக எண்ணிக்கையிலுள்ளனர். ஆனால் அவர்கள் ஒவ்வொருவருக்கும் என் இதயத்தில் ஒரு பிரகாசமான தனி இடம் உண்டு.

திரு.ரைட், ராஞ்சி சிறுவர்கள் அனேகருடன் சிநேகம் கொண்டார். எளிய வேட்டி அணிந்து அவர்கள் மத்தியில் சிறிது காலம் வசித்தார். மும்பை, ராஞ்சி, கல்கத்தா, செராம்பூர் ஆகிய எல்லா இடங்களுக்கும் என் காரியதரிசி சென்றார். தெளிவாக விவரித்து எழுதும் வரம் பெற்றிருந்த அவர் தன்னுடைய துணிகரச் செயல்களையெல்லாம் ஒரு பிரயாணக் குறிப்பேட்டில் எழுதுவது வழக்கம். ஒரு மாலை வேளை நான் அவரை ஒரு கேள்வி கேட்டேன்.

டிக், இந்தியாவைப் பற்றி உன் அபிப்பிராயம் என்ன?

சாந்தம், என்றார் அவர் யோசித்தவாறே. இந்த

இனத்தைச் சூழ்ந்துள்ள மகத்துவமே சாந்தம்தான்.



பகவான் கிருஷ்ணனுடைய பிறப்பு மற்றும் குழந்தைப் பருவத்துடன் தொடர்புடைய புண்ணிய நகரமான மதுராவில், 1935, யமுனை நதியில் ஸ்ரீ யோகானந்தரின் படகு சவாரி. அமர்ந்திருப்பவர் (நடுவிலிலிருந்து வலப்பக்கம்) அனந்த லால் கோஷ் (ஸ்ரீ யோகானந்தருடைய மூத்த சகோதரர்)ன் மகள்; சனந்த லால் கோஷ் (ஸ்ரீ யோகானந்தருடைய இளைய சகோதரர்); மற்றும் சி. ரிச்சர்ட் ரைட்.



பரமஹம்ஸ யோகானந்தர் 1935, டிசம்பர் 13, இந்தியா, தாமோதர் என்ற இடத்திற்குஅருகிலிலிருந்த திஹிகாவில் 1917ல் நிறுவப்பட்ட சிறுவர்களுக்கான அவரது முதல் பள்ளி அமைந்த இடத்திற்கு வருகை புரிந்தபோது எடுக்கப்பட்ட புகைப்படம். ஏகாந்தத்திற்கென ஒரு சமயத்தில் அவருக்கு விருப்பமான இடமாக விளங்கிய, இடிபாடு களுடைய கோபுர வாயிலிலில் அவர் தியானித்துக் கொண்டிருக்கிறார்.



1936, ஜூலை 17, ராஞ்சியில் யோகானந்தர் (நடுவில்) மற்றும் அவரது காரியதரிசி சி.ரிச்சர்ட் ரைட் (வலது, அமர்ந்திருப்பவர்). ஸ்ரீ யோகானந்தருடைய பழங்குடி இன சிறுமிகளுக்கான பள்ளியைச் சேர்ந்த ஆசிரியர்கள் மற்றும் மாணவர்களால் அவர்கள் சூழப்பட்டுள்ளனர்.



ஸ்ரீ யோகானந்தர், யோகதா சத்சங்க சொஸைடி சிறுவர் களுக்கான பள்ளியின் ஆசிரியர்கள் மற்றும் மாணவர்களுடன் 1936, ராஞ்சி. யோகானந்தரால் நிறுவப்பட்ட இப்பள்ளி வங்காளம், திஹிகாவிலிலிருந்து இவ்விடத்திற்கு காசிம்பஜார் மகாராஜாவின் ஆதரவினால் மாற்றப்பட்டது



யோகதா சத்சங்க மடம், தக்ஷிணேஸ்வரத்தில் கங்கைக் கரையின் மீது, யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியாவின் பதிவு செய்யப்பட்ட அலுவலகம்.

1 நாங்கள் எங்கள் பயணத்தை மத்திய பிராந்தியங்களில், கண்டத்தின் குறுக்கே பாதி வழியில், வார்தாவில் மகாத்மா காந்தியைக் காண்பதற்காக நிறுத்தினோம். அந்நாட்களைப் பற்றிய விவரங்கள் 44வது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

2 பிரஃபுல்லா என்ற சிறுவன்தான் ஒரு நாகப்பாம்பு வந்தபொழுது குருதேவருடன் இருந்தவன் (பார்க்க பக்கம் 168).

3 பதவுரையின்படி, முழு வணக்கம், சமஸ்கிருத மூல பதம் ணாம்வ-ணங்கு அல்லது நமஸ்கரி; பர - என்ற முற்சேர்க்கைக்கு முழுவதும் என்று பொருள்.

4 பரமஹம்ஸ யோகானந்தரால் திரட்டி வைக்கப்பட்ட இதே போன்ற காட்சிப் பொருள்களுடன் கூடிய ஓர் அருங்காட்சியகம் மேல் நாட்டில் கலிஃபோர்னியாவில் பஸிஃபிக் பாலிஸேட்ஸ் என்னுமிடத்திலிருக்கும் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் ஏரிக்கோயிலில் அமைக்கப்பட்டுள்ளது. (பிரசுரதாரரின் குறிப்பு)

5 இதனைத் தொடர்ந்து ஆடவர், பெண்டிருக்கான அனேக யோகதா கல்வி ஸ்தாபனங்கள், இந்தியாவில் பல பாகங்களிலும் நிறுவப்பட்டு தற்பொழுது நடைபெற்று வருகின்றன. இந்த ஸ்தாபனங்கள் பாலர்பள்ளி முதல் கல்லூரி நிலை வரையுள்ளன. (பிரசுரதாரரின் குறிப்பு)

6 யோகதா என்ற சொல் யோகம், ஐக்கியம், இணக்கம், சமநிலை; மற்றும் தாஎது அளிக்கிறதோ அதுஎன்பவற்றிலிருந்து பெறப்பட்டது. சத்சங்கம் என்ற

பதம் சத் சத்தியம்; சங்கம்தோழமை ஆகியவற்றால் ஆனது.

பேரண்ட மூலத்திலிருந்து மனித உடலுக்கு சக்தியூட்டும் நியமங்களை பரமஹம்ஸ யோகானந்தர் 1916ல் கண்டுபிடித்த பொழுது அவரால் யோகதா என்ற சொல் உருவாக்கப்பட்டது. (பார்க்க பக்கங்கள் 373, 374).

ஸ்ரீ யுக்தேஸ்வர் தமது ஆசிரம ஸ்தாபனத்தை சத்சங்கம் (சத்தியத்துடன் தோழமை) என்றழைத்தார். அவருடைய சீடரான பரமஹம்ஸர் அப்பெயரையே தக்க வைத்துக் கொள்ள இயல்பாகவே விழைந்தார்.

யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா நிரந்தரமாக நிலைத்திருக்கும் வண்ணம் திட்டமிடப்பட்ட லாபம் கருதாத ஒரு ஸ்தாபனம். அந்தப் பெயரின் கீழ் யோகானந்தஜி இந்தியாவிலுள்ள அவரது பணிகளையும் ஸ்தாபனங்களையும் இணைத்தார். அவை தற்போது மேற்கு வங்காளம், தக்ஷிணேஸ்வரத்திலுள்ள யோகதா மடத்தில் இயக்குநர்கள் கொண்ட ஒரு குழுவால் திறமையாக நிர்வகிக்கப்பட்டு வருகிறது. இந்தியாவின் பல பாகங்களிலும் பல யோகதா சத்சங்க சொஸைடி தியான மையங்கள் நன்கு விருத்தியடைந்து வருகின்றன.

மேலை நாட்டில் யோகானந்தஜி தன் சொஸைடிக்கு Self-Realization Fellowship (ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்) என ஆங்கிலத்தில் பெயரிட்டு அங்கு, தான் ஆற்றிய பணியை அதனுடன் இணைத்தார். யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியாவிற்கும் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்பிற்கும், ஸ்ரீ ஸ்ரீ தயா மாதா அவர்கள், 1955 முதல் தலைவராக இருந்து வருகிறார்கள். (பிரசுரதாரரின் குறிப்பு)

## அத்தியாயம் 41

# தென்னிந்தியாவில் ஒரு காவியக் காட்சி

டிக், நீ தான் அந்தக் கோயிலில் நுழைந்த முதல் மேல்நாட்டவன். அனேகர் வீணாக முயன்றனர்.

என் சொற்களைக் கேட்ட திரு. ரைட் திடுக்கிட்டு பிறகு மகிழ்ச்சி அடைந்தார். தென்னிந்தியாவில் மைசூரை நோக்கியவாறு குன்றில் அமைந்துள்ள அழகிய சாமுண்டி கோயிலை விட்டு அப்பொழுதுதான் வெளியேறி இருந்தோம். அங்கு நாங்கள் மைசூர் அரச குடும்பத்தின் குலதெய்வமாகிய தேவி சாமுண்டியின் பொன், வெள்ளிப் பீடங்களின் முன்னால் வணங்கிவிட்டு வந்திருந்தோம்.

அந்த ஒப்பற்றச் சலுகை எனக்குக் கிடைத்ததற்கு ஞாபகார்த்தமாக இருக்கட்டும், திரு. ரைட் ரோஜா இதழ்கள் சிலவற்றை ஜாக்கிரதையாகப் பொட்டலம் கட்டியவாறே கூறினார், அர்ச்சகரால் பன்னீர் தெளித்து ஆசீர்வதிக்கப்பட்ட இந்த இதழ்களை நான் எப்பொழுதும் பத்திரமாக வைத்துக் கொள்வேன்.

என் தோழரும் நானும்[1] 1935 நவம்பர் மாதத்தை மைசூர் அரசாங்கத்தின் விருந்தினர்களாகக் கழித்துக் கொண்டிருந்தோம். மகாராஜாவின்[2] சந்ததியான மேன்மை பொருந்திய யுவராஜா ஸர். காந்தீரவ நரஸிம்ஹராஜ வாடியார் அவர்கள் தெளிவு பெற்று

முன்னேற்றம் அடைந்துவரும் தமது ராஜ்யத்திற்கு விஜயம் செய்யுமாறு என் காரியதரிசிக்கும் எனக்கும் அழைப்பு விடுத்திருந்தார்.

கடந்த இரண்டு வாரங்களில் நான் மைசூர் நகரத்திலுள்ள ஆயிரக்கணக்கான மக்களுக்கும் மாணவர்களுக்கும் டவுன் ஹால், மகாராஜா கல்லூரி, பல்கலைக் கழக மருத்துவக் கல்லூரி ஆகிய இடங்களில் உரையாற்றினேன். மற்றும் பெங்களூரில் மூன்று பெருங்கூட்டங்களில்நேஷனல் உயர்நிலைப்பள்ளி, இண்டர்மீடியட் கல்லூரி, செட்டி டவுன் ஹால் ஆகிய இடங்களில் சொற்பொழிவு ஆற்றினேன். இவற்றில் மூவாயிரம் பேர்கள் கூடியிருந்தார்கள்.

ஆர்வமுடன் கேட்ட மக்கள் நான் அமெரிக்காவைப் பற்றி அழகாக சித்தரித்ததை ரசித்தார்களா என்பது எனக்குத் தெரியாது; ஆனால் கிழக்கு மற்றும் மேற்கிலுள்ள நல்ல அம்சங்களைப் பரிமாற்றம் செய்து கொள்வதால் விளையக் கூடிய பரஸ்பர நன்மைகளைப் பற்றி நான் குறிப்பிடும் பொழுதெல்லாம் கைதட்டல் மிகப் பலமாகவே இருந்தது.

திரு. ரைட்டும் நானும் இப்பொழுது வெப்பப் பிரதேசத்தின் அமைதியை அனுபவித்தவாறு ஓய்வெடுத்தோம். மைசூரைப் பற்றிய அவரது கருத்துக்களை அவர் தன் நாட்குறிப்பேட்டில் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டிருக்கிறார்.

பரவசத்துடன் கூடிய அனேக கணங்கள், வானவெளியில் பரந்து விரிந்திருக்கும் ஆண்டவனின்

வண்ணத்திரை எப்பொழுதும் மாறிய வண்ணம் இருப்பதை முற்றிலும் தன்னை மறந்து லயித்துக் காண்பதில் கழிந்தன. ஏனெனில் புத்துணர்ச்சியுடன் கூடிய ஜீவ களையோடு திகழும் வண்ணங்களை, அவனுடைய கைவண்ணம் மட்டுந்தான் விளைவிக்க முடியும். மனிதன் அவைகளை வெறும் வண்ணத்துகள்களால் அதைப்போலவே செய்ய முயலும் பொழுது வண்ணங்களின் இளமை பறிபோய்விடுகிறது. ஏனெனில் இறைவன் இன்னும் எளிய, பலனளிக்கக்கூடிய சாதனத்தைக் கையாளுகிறான்அது எண்ணெயோ வண்ணத்துகள்களோ அல்லாமல் வெறும் ஒளிக்கற்றைகளே ஆகும். அவன் ஓரிடத்தில் ஒளியை வாரித் தெளிக்கிறான், அது சிவப்பு நிறத்தை பிரதிபலிக்கிறது; திரும்பவும் தூரிகையைத் தீட்டுகிறான், அவ்வண்ணம் ஆரஞ்சு நிறமாகவும் பிறகு பொன்மயமாகவும் படிப்படியாக மாறுகிறது; பின்னர் துளைப்பது போன்றதொரு வேகத்தில் அவன் மேகங்களை ஊதா நிறக்கீற்றால் குத்தும் பொழுது காயத்திலிருந்து ஒழுகும் சிறு சுருள்கள் அல்லது சிவந்த ஓரங்கள் தென்படுகின்றன; இவ்வாறாக அவன் தொடர்ந்து இரவும் காலையும் ஒன்றுபோல, என்றும் மாறிய வண்ணம், என்றும் புதுமையாக, என்றும் புதியதாக விளையாடுகிறான்; நகல்கள் இல்லை; எந்த உருவமோ, வண்ணமோ ஒன்று போல் இருப்பதில்லை. இந்தியாவில் இரவிலிருந்து பகல் தோன்றும் பொழுதும் அல்லது பகல் இரவாகும் பொழுதும் ஏற்படும்

மாற்றத்தின் அழகு வேறு எங்கும் ஒப்பிடமுடியாதது; அடிக்கடி ஆகாயமானது, கடவுள் தன்னிடமுள்ள பெட்டியிலிருக்கும் அனைத்து வண்ணங் களையும் அள்ளி வீசி ஒரு பெரிய வண்ணக் கலவையையே விண்ணில் ஏற்படுத்தி விட்டாரோ என எண்ணும்படித் தோற்றமளிக்கும்.

மைசூர் நகரத்திலிருந்து பன்னிரண்டு மைல் தொலைவிலுள்ள மிகப்பெரிய கிருஷ்ணராஜ சாகர் அணைக்கட்டை[3] மாலை ஒளி அழகில் பார்வையிடச் சென்றதை நான் அவசியம் கூற வேண்டும். யோகானந்தரும் நானும் ஒரு சிறு பஸ்ஸில், எங்களுடன் வண்டியைக் கிளப்ப அல்லது பாட்டரிக்கு மாற்றாக இருந்த ஒரு சிறு பையனுடன் மிருதுவான மண்சாலையில் புறப்பட்டோம். அஸ்தமித்துக் கொண்டிருந்த சூரியன் தொடுவானத்தில் அதிகமாகப் பழுத்துவிட்ட தக்காளியைப் போன்று வண்ணத்தை அள்ளி வீசிக் கொண்டிருந்தான்.

வழி நெடுகப் பரவியிருந்த என்றும் காணப்படும் சதுர வடிவான நெல்வயல்களைக் கடந்து உயர்ந்த தென்னை மரங்களுக்கிடையே இருந்த சுகமான ஆலமரத் தோப்புகள் வழியாக எங்கள் பயணம் சென்றது. எங்குமே செடி, கொடிகள் நிறைந்து கிட்டத்தட்ட ஒரு வனத்தைப் போல் அடர்த்தியாக இருந்தது. குன்றின் உச்சியைச் சென்றடைந்ததும் நாங்கள் ஒரு பெரிய செயற்கை ஏரி, விண்மீன்களையும் தென்னை மற்றும் இதர மர வரிசைகளையும் பிரதிபலித்தபடி இருந்ததைக்

கண்டோம். அதன் நாலா பக்கங்களிலும் படிப்படியாக அமைந்த அழகான தோட்டங்களும் வரிசை வரிசையான மின்விளக்குகளும் காணப்பட்டன.

அணைக்கட்டின் விளிம்புக்குக் கீழே நாங்கள் கண்ணைக் கூசச் செய்யும் ஒரு காட்சியைக் கண்டோம். வண்ண வண்ணமான ஒளிக்கற்றைகள் உஷ்ண நீருற்று போன்ற ஊற்றுக்களின் மீது தெரித்து அனேக வண்ணக்கலவைகளாக விழுவது போன்றிருந்தனஅமர்க்களமான நீல, சிவப்பு, பச்சை மற்றும் மஞ்சள் நீர்வீழ்ச்சிகள்; கம்பீரமான கல்யானைகளினின்று வழியும் நீர்த்தாரை. இந்த அணைக்கட்டு (இதன் ஒளியூட்டப்பட்ட நீரூற்றுக்கள் 1933ல் சிகாகோ நகரத்தில் நடந்த உலக விழாவில் இருந்தவற்றை நினைவூட்டின) எளிய மக்களும் நெல் வயலும் நிறைந்த இந்தப் புராதன மண்ணில் மிக நவீனமாகத் தனித்து நிற்கிறது. இந்தியர்கள் எங்களுக்குத் தந்த அன்பான வரவேற்பைக் கண்டு யோகானந்தஜியை அமெரிக்காவிற்குத் திரும்ப அழைத்துச் செல்வது என் சக்திக்கு அப்பாற்பட்ட ஒன்றாகும் என நான் பயந்தேன்.

இன்னொரு அரிய சலுகைஎன் முதன் முதலான யானைச் சவாரி. நேற்று யுவராஜா, அவருடைய பிரமாண்டமான மிருகமாகிய யானைகளில் ஒன்றின்மேல் ஒரு சவாரியை அனுபவிப்பதற்காக அவருடைய வசந்த மாளிகைக்கு எங்களை அழைத்திருந்தார். பட்டு மெத்தையுடன் பெட்டி போன்று உயரத்திலிருந்த அம்பாரி மீது ஏறுவதற்கென

அமைக்கப்பட்டிருந்த ஏணி மேல் நான் ஏறினேன். அதன் பிறகு உருண்டு, புரண்டு, மேலெழும்பி, அசைந்து, பள்ளத்தில் சென்றுகவலைப்படுவதற்கோ கூக்குரலிடுவதற்கோ கூடத் தோன்றாத ஓர் அதி உற்சாகம், ஆனாலும் அருமை உயிரைக் கையில் பிடித்துக் கொண்டுதான்!'

தென்னிந்தியா, வரலாறு மற்றும் தொல்பொருள் கலைப் பெருமை நிறைந்தது. அது மாறாத, ஆனால் விவரித்துக் கூற முடியாத வசீகரத்தை உடையது. மைசூருக்கு வடக்கில் சக்தி வாய்ந்த கோதாவரி நதி குறுக்கே பிளந்து கொண்டு செல்லும் இயற்கையெழில் நிறைந்த பீடபூமியான ஹைதராபாத் உள்ளது; மற்றும் அகன்ற, செழிப்பான சமவெளிகள், அழகான நீலகிரி அல்லது நீலமலை, சுண்ணாம்புக் கல்லோ அல்லது கருங்கல்லோ கொண்ட வறண்ட மலைகளுடனான இதர பகுதிகள். ஹைதராபாத்தின் வரலாறு நீண்ட சுவாரஸ்யமான ஒரு சரித்திரமாகும். அது ஆந்திர மன்னர்களின் கீழ் மூவாயிரம் வருடங்களுக்கு முன் தொடங்கி, கி.பி. 1294 வரை இந்து வம்சத்தின் கீழ் தொடர்ந்த பிறகு அந்தப் பிரதேசம் முஸ்லிம் வம்ச அரசர்களின் கீழ் வந்தது.

இந்தியா முழுவதிலுமுள்ள கட்டிடக்கலை, சிற்பக்கலை மற்றும் சித்திரக்கலையின் மிகப் பிரமிக்க வைப்பதான காட்சியை ஹைதராபாத்திற்கு அருகிலுள்ள பழமையான குடைவரைக் குகைகளான[4] எல்லோரா மற்றும் அஜந்தாவில் காணலாம். ஒரே பாறையில்

செதுக்கப்பட்ட மிகப் பெரிய கோயிலான எல்லோராவிலுள்ள கைலாஷ், மைகலேன்ஜலோவின் பிரமாண்ட தராதரத்தில் செதுக்கப்பட்ட தெய்வங்கள், மனிதர்கள் மற்றும் மிருகங்களின் உருவங்களைப் பெற்றுள்ளது. அஜந்தாவிலுள்ள இருபத்தைந்து விஹாரங்கள், ஐந்து கோயில்கள் எல்லாமே கல்லிலே செதுக்கப்பட்டு வியப்பூட்டும் மேல்தளம் மற்றும் சுவர் ஓவியங்களுடன் தூண்களினால் தாங்கப்பட்டுள்ளன. இத்தூண்களில் சிற்பிகளும் கலைஞர்களும் தங்கள் கலைவண்ணத்தை அழியா அமர காவியங்களாக ஆக்கி வைத்திருக்கின்றனர்.

ஹைதராபாத் நகரம், உஸ்மானியா பல்கலைக் கழகம் மற்றும் பதினாயிரம் இஸ்லாமியர் தொழுகைக்காக கூடும் மலைக்க வைக்கும் மசூதியான மெக்கா மஸ்ஜித் ஆகியவற்றால் பெருமை பெற்றிருக்கிறது.

மைசூர் ராஜ்யம், கடல் மட்டத்திற்கு மேல் மூவாயிரம் அடி உயரத்தில், அடர்த்தியான உஷ்ணக் காடுகள் நிறைந்து உள்ளது; இக்காடுகள் காட்டு யானைகள், காட்டெருமைகள், கரடிகள், சிறுத்தைகள் மற்றும் புலிகளின் உறைவிடமாகும். இரு முக்கியமான நகரங்களான பெங்களூரும் மைசூரும் அனேக அழகான மலர்ச் சோலைகளுடனும் பொதுத் தோட்டங் களுடனும் சுத்தமாகவும் கவர்ச்சியாகவும் உள்ளன.

பதினொன்றாவது நூற்றாண்டிலிருந்து பதினைந்தாவது நூற்றாண்டு வரை மைசூரை ஆண்டு

வந்த இந்து மன்னர்களின் ஆதரவில் இந்துக் கட்டிடக்கலையும் சிற்பக்கலையும் மகோன்னத நிலையை அடைந்திருந்தன. பதினொன்றாவது நூற்றாண்டின் தலைசிறந்த படைப்பான பேலூரிலுள்ள கோயில் அரசன் விஷ்ணுவர்த்தனின் ஆட்சி காலத்தில் முடிக்கப்பட்டது. அது உலகத்திலேயே மிக மிக நுட்பமான வேலைப்பாடுகளுக்கும் செழிப்பான கற்பனைச் சித்திரங்களுக்கும் ஒப்புமையற்றதாக விளங்குகிறது.

மைசூர் ராஜ்யத்தின் வட பகுதியில் கிடைத்துள்ள கல்வெட்டுக்கள் கி.மு. மூன்றாவது நூற்றாண்டைச் சார்ந்தவை ஆகும். அவை அரசர் அசோகரைப்[5] பற்றிய நினைவை மலர வைக்கின்றன. அவருடைய பரந்த சாம்ராஜ்யம் பாரதம், ஆஃப்கானிஸ்தானம் மற்றும் பலுசிஸ்தானம் ஆகியவற்றை உள்ளடக்கியிருந்தது. அனேக பிராந்திய மொழிகளில் செதுக்கப்பட்ட அசோகரின் கல் சொற்பொழிவுகள் அவரது நாளில் வெகுவாகப் பரவியிருந்த எழுத்தறிவிற்குச் சாட்சியாக நிற்கிறது. பதிமூன்றாவது கல்வெட்டு, போர்களைக் கண்டனம் செய்கிறது: தர்மத்தினால் கிடைக்கும் வெற்றியைத் தவிர மற்ற எதையும் உண்மையான வெற்றியென்றெண்ணாதே. பத்தாவது கல்வெட்டு, ஓர் அரசனுடைய உண்மையான புகழ் அவனது குடிமக்கள் நீதிநெறி வளர்ச்சி அடைவதற்கு அவன் எவ்வளவு தூரம் உதவுகிறான் என்பதைப் பொறுத்து இருக்கிறது, என்று பறைசாற்றுகிறது. பதினொன்றாவது கல்வெட்டு, உண்மையான பரிசு வெறும் பொருட்கள் அல்ல, ஆனால்

நன்மைஅதாவது சத்தியத்தைப் பரப்புவதேயாகும் என்று விளக்குகிறது. ஆறாவது கல்வெட்டில் அந்த அன்பான சக்கரவர்த்தி அவரது மக்களை பொது விஷயங்களைப் பற்றி இரவு அல்லது பகலில் எந்த நேரத்தில், வேண்டுமானாலும் தன்னுடன் கலந்தாலோசிக்கும்படி அழைக்கிறார். அத்துடன் தன் அரச கடமைகளை உண்மையுடன் நிறைவேற்றுவதன் மூலம் தன்னைச் சார்ந்தவர்களிடம் தான் பட்டிருக்கும் கடனிலிருந்து விடுபடுவதாகவும், கூறுகிறார்.

அசோகர் வெல்வதற்கரிய சந்திரகுப்த மௌரியரின் பேரானாவார். சந்திரகுப்தர், மகா அலெக்ஸாண்டர் நிறுவிய படைப்பகுதிகளை அழித்ததுமல்லாமல் கி.மு. 305-ல் படையெடுத்த ஸெலூக்கஸின் மாஸிடோனிய சேனைகளையும் முறியடித்தவர். பிறகு தன் பாடலிபுத்திர[6] ராஜ சபையில் கிரேக்க தூதர் மெகஸ்தனிஸை வரவேற்றார். மெகஸ்தனிஸ், மகிழ்ச்சியும் ஊக்கமும் நிறைந்த அவர் காலத்திய பாரதத்தைப் பற்றிய விளக்கங்களை நமக்கு விட்டுச் சென்றிருக்கிறார்.

கி.மு. 298-ல் வெற்றிவீரரான சந்திரகுப்தர் பாரதத்தில் ஆட்சி செலுத்தும் பொறுப்பை தன் மகனிடம் ஒப்படைத்தார். தென்னிந்தியாவை நோக்கிப் பயணம் செய்து தன் இறுதிக் காலத்தின் பன்னிரண்டு வருடங்களை ஒரு சல்லிக்காசுமற்ற சன்னியாசியாக, சிரவண பெலகோளாவில் ஒரு மலைக் குகையில் ஆத்ம ஞானத்தை நாடி தவம் புரிந்தார். இப்பொழுது அது

மைசூரிலுள்ள ஒரு கோயிலாகும். அந்தப் பிரதேசம், கி.பி. 983-ல் ஜைனர்களால் கோமதேஸ்வரர் என்ற முனிவரை கௌரவிக்க பிரமாண்டமான பாறையில் செதுக்கப்பட்ட உலகிலேயே மிகப் பெரிய ஒற்றைக் கல்லால் ஆன சிலையைக் கொண்டுள்ள பெருமையைப் பெற்றுள்ளது.

அலெக்ஸாண்டரின் படையெடுப்புடன் சேர்ந்து வந்த அல்லது அவரைத் தொடர்ந்து வந்த கிரேக்க வரலாற்று நிபுணர்கள் சுவாரஸ்யமான விவரங்களை நுட்பமாகப் பதித்திருக்கிறார்கள். ஏரியன், டயோடோரஸ், ப்ளூடார்க் மற்றும் பூகோள ஆசிரியரான ஸ்ட்ராபோ ஆகியோரது விவரிப்புகள், பண்டைய பாரதத்தைப் பற்றி தெளிவு படுத்துவதற்காக டாக்டர் ஜே. டபிள்யூ. மக்ரிண்டல்[7] என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. அலெக்ஸாண்டரின் வெற்றி பெறாத படையெடுப்பின் மிகவும் பாராட்டக்கூடிய அம்சம் என்னவெனில், இந்து தத்துவக் கோட்பாடுகளிலும், அவ்வப்பொழுது அவர் நேருக்கு நேர் சந்தித்த யோகிகளிடத்தும் முனிவர்களிடத்தும் அவர் காட்டிய ஆழ்ந்த ஈடுபாடு ஆகும். மேலும் அவர்களுடைய சமூகத்தை அவர் ஆர்வத்துடன் நாடினார். அந்த மேற்கத்திய மாவீரர் வட இந்தியாவிலுள்ள தக்ஷசீலத்தை அடைந்ததும் ஓனஸிக்ரிடாஸ் (டயோஜெனீஸின் ஹெலனிக் வழிமுறையில் வந்த ஒரு சீடர்) என்பவரை தக்ஷசீலத்தில் பெயர் பெற்ற சன்னியாசியான தண்டமிஸ்ஸை அழைத்து வர அனுப்பினார்.

தண்டமிஸ்ஸை அவரது வன ஆசிரமத்தில் நாடிச் சென்றவுடன் ஓனஸிக்ரிடாஸ், பிராமணர்களின் குருவே, உமக்கு மங்களமுண்டாகட்டும்! பெருமைவாய்ந்த ஸ்யூஸ் தேவனின் மகனும் எல்லா மனிதர்களின் சக்கரவர்த்தியுமான அலெக்ஸாண்டர் உங்களை அவரிடம் அழைக்கிறார். நீங்கள் இணங்கினால் உங்களுக்கு உயர்ந்த பரிசுகளை வெகுமதியாக வழங்குவார்; நீங்கள் மறுத்தால் அவர் உங்களை தலையைத் துண்டித்து விடுவார், என்றார்.

ஏறக்குறைய பலவந்தமான இந்த அழைப்பை அமைதியுடன் கேட்ட அந்த யோகி தான் படுத்திருந்த இலைப் படுக்கையிலிருந்து தன் தலையைக் கூட நிமிர்த்தவில்லை.

அலெக்ஸாண்டர் யாருயை மகனோ அந்த ஸ்யூஸிற்கு நானும் கூட ஒரு மகன்தான். அலெக்ஸாண்டருடையது எதுவும் எனக்குத் தேவையில்லை. என்னிடம் எது உள்ளதோ அதைக் கொண்டு நான் திருப்தியுடன் உள்ளேன். ஆனால் அவரோ தன் ஆட்களுடன் கடலின் மீதும் நிலத்தின் மீதும் எவ்வித லாபமுமின்றி அலைவதுடன் அவரது அலைச்சல் எப்பொழுதுமே ஒரு முடிவுக்கும் வரவில்லை.

அலெக்ஸாண்டரிடம் நீ சென்று, முழு முதல் அரசனான அக்கடவுள் அகந்தையுடனான தவறுக்கு அதிபதியல்ல, ஆனால் ஒளி, அமைதி, உயிர், நீர், மனித உடல் மற்றும் ஆத்மாக்கள் அனைத்தையும் படைப்பவர்;

தீய வியாதிக்கு எவ்வகையிலும் ஆளாகாதவாறு, மரணம் மனிதர்களை விடுவிக்கும் பொழுது அவர்கள் அனைவரையும் அவர் ஏற்றுக் கொள்கிறார். கொலையை வெறுத்து, எந்தப் போரையும் தூண்டாதவராகிய அவர் மட்டுமே நான் வணங்கும் இறைவன் என்று கூறு.

அலெக்ஸாண்டர் கடவுளல்ல, அவரும் சாவைத் தழுவ வேண்டியவரே, அமைதியான வெறுப்புடன் அம்முனிவர் மேலும் தொடர்ந்தார். தன் உள்ளுக்குள் உள்ள பிரபஞ்ச ராஜ்யத்தின் அரியணையில் இன்னும் அமராமலிருக்கும் அவர், உலகிற்கு எப்படித் தலைவனாக முடியும்? அவர் இன்னும் கீழுலகிற்குச் சென்று வாழ்ந்ததுமில்லை, இப்புவியின் பரந்த பிரதேசங்களின் மீது செல்லும் பகலவனின் பாதையும் கூட அவருக்குத் தெரியவும் தெரியாது. அனேக நாடுகள் இவரது பெயரைக் கேட்டதுகூட இல்லை!

இன்று வரை அவர் காதுகளைத் தாக்காத, உண்மை யிலேயே மிகக் கடுமையான இந்தக் கண்டனங்களை உலகத்தின் சக்கரவர்த்தியிடம் கூறுமாறு சொல்லிய பின்னரும் அம்முனிவர் மேலும் கேலியுடன் தொடர்ந்தார், தற்சமயம் அலெக்ஸாண்டரிடம் உள்ள ராஜ்யங்கள் அவருடைய ஆசைக்கு ஏற்றாற்போல் தாராளமாகப் போதவில்லையெனில், கங்கை நதியைக் கடந்து செல்லட்டும்; அங்கு அவருக்குத் தன் படைகள் முழுவதையும் தாங்குவதற்கு வேண்டிய விசாலமான தேசம் கிடைக்கும்.[8]

அலெக்ஸாண்டர் அளிப்பதாக உறுதி கூறும்

வெகுமானங்கள் எனக்கு உபயோகமற்றவை, தண்டமிஸ் தொடர்ந்தார். நான் உண்மையில் தகுதியுள்ளவை என்று மதிக்கும் பொருட்கள் எனக்குப் புகலிடம் அளிக்கும் மரங்கள், எனக்கு தினசரி உணவளிக்கும் மலரும்தாவரங்கள் மற்றும் என் தாகத்தைத் தணிக்கும் நீர், இவைகள்தாம். கவலையுற்ற எண்ணத்துடன் திரட்டப்பட்ட சொத்துக்கள், அதைச் சேர்த்தவர்களுக்கு' அழிவிற்கான வழக்கமான காரணமாகி, துயரத்தையும் வெறுப்பையும் மட்டுமே அளிக்கும். ஞானமில்லாத எல்லோருக்கும் ஏற்படும் தொல்லை இதுதான்.

என்னைப் பொறுத்த வரையில், நான் காட்டு இலைகளின் மேல் படுக்கிறேன், மேலும் பாதுகாப்பதற்கென எதுவுமே இன்றி கண்களை மூடி நிம்மதியான உறக்கத்தில் ஆழ்கிறேன்; அவ்வாறின்றி என்னிடம் விலை மதிப்புள்ள பொருட்கள் ஏதாவது இருந்தால் அந்தப் பாரம் என் தூக்கத்தைத் துரத்திவிடும். ஒரு தாய், பாலைத் தந்து தன் குழந்தையைக் காப்பதுபோல் இப்புவி எனக்கு வேண்டியதை எல்லாம் அளிக்கிறது. லௌகீகக் கவலை என்னும் தடையின்றி எனக்குப் பிடித்த வண்ணம் எங்கு வேண்டுமானாலும் நான் செல்கிறேன்.

அலெக்ஸாண்டர் என் தலையை துண்டித்தாலும் கூட என் ஆத்மாவை அவரால் அழிக்க முடியாது. என் தலை மௌனமாகி, என் உடல், கிழிந்த ஆடையைப் போன்று மண்ணில்எங்கிருந்து அவற்றின் ஆக்கக் கூறுகள் எடுக்கப்பட்டனவோ அங்கேவிழுந்து கிடக்கும்.

நான் ஆத்மாவாகி இறைவனிடம் சென்று விடுவேன். அவன் நம் எல்லோருக்கும் ஓர் உடலை அளித்து, நம்மை இம்மண்ணில் பிறக்கச் செய்து, நாம் இங்கே கீழே இருக்கும்பொழுது அவனுடைய நெறிமுறைகளுக்குக் கீழ்ப்படிந்து வாழ்ந்து நிரூபிக்கிறோமா என்று பார்க்கிறான்; நாம் இங்கிருந்து விடுபடும் பொழுது நம் வாழ்க்கையைப் பற்றிய கணக்கையும் அவன் விசாரிக்கிறான். எல்லாத் தவறுகளுக்கும் அவனே நீதிபதியாகிறான்; நசுக்கப்பட்டவர்களின் ஓலம் நசுக்குபவர்களின் தண்டனைக்கு உத்தரவாகிறது.

அலெக்ஸாண்டர் செல்வத்தை வேண்டுபவர்களையும் மரணத்தைக் கண்டு அஞ்சுபவர்களையும் மிரட்டலுடன் பயமுறுத்தட்டும். பிராமணர்களுக்கு எதிராக அவனுடைய ஆயுதங்கள் சக்தி அற்றவை; நாங்கள் பொன்னையும் விரும்புவதில்லை, மரணத்தைக் கண்டு அஞ்சுவதுமில்லை. ஆதலால் நீ சென்று அலெக்ஸாண்டரிடம் இதைக் கூறு: தண்டமிஸிற்கு உன்னுடையது எவ்வகையிலுமே தேவையில்லாததால் அவர் உம்மிடம் வரமாட்டார்; மேலும் தண்டமிஸிடமிருந்து உனக்கு ஏதாவது தேவைப்பட்டால் நீ வா அவரிடம்.

ஒனஸிக்ரிடாஸ் அவர் கூறிய செய்தியை அப்படியே அலெக்ஸாண்டரிடம் தெரிவித்தார்; அவர், இதை மிக்க கவனத்துடன் கேட்டதும், தண்டமிஸ்ஸைக் காண வேண்டுமென்ற ஆவல் முன்னெப்பொழுதையும்விட மிக

அதிகமாயிற்று. தண்டமிஸ், முதியவராயும் நிர்வாணமாயும் இருந்தாலும் கூட, பல தேசங்களையும் வெற்றி கொண்ட அலெக்ஸாண்டர், அவரை மட்டுந்தான், தனக்கு ஒரே எதிரியாகவும், தன்னைவிட ஈடு இணையற்றவராகவும் கண்டார்.

தத்துவ ரீதியான கேள்விகளுக்கு ஆழ்ந்த ஞானத்துடன் பதிலளிக்கக் கூடிய திறமைக்குப் பெயர் பெற்ற பல பிராமணத் தவசிகளை அலெக்ஸாண்டர், தக்ஷசீலத்திற்கு வரவழைத்தார். ப்ளூடார்க் அந்தச் சொற்போரின் விவரங்களை அளித்திருக்கிறார். அலெக்ஸாண்டரே எல்லாக் கேள்விகளையும் தயார் செய்தார்:

இறந்தவை அதிகமா, உயிருடனிருப்பவை அதிகமா?

உயிருள்ளவைதான், ஏனெனில் இறந்தவை இல்லவே இல்லையே.

எது மிகப் பெரிய மிருகங்களை பிறப்பிக்கிறது, கடலா அல்லது பூமியா?

பூமிதான், ஏனெனில் கடல் பூமியின் ஒரு பாகந்தான்.

மிருகங்களில் புத்திகூர்மை மிக்கது எது?

மனிதன் இதுவரை தெரிந்து கொள்ளாத மிருகம். (ஏனெனில் மனிதன் தனக்குத் தெரியாததைக் கண்டு அஞ்சுகிறான்.)

எது முதலில் இருந்தது, பகலா, இரவா?

முதலில் பகல்தான், ஒரு நாள் முன்னர் இருந்த காரணத்தினால்.

இந்தப் பதில் அலெக்ஸாண்டரை ஆச்சரியப்பட

வைத்தது. அப்பிராமணர் தொடர்ந்தார். இசைக்கேடான கேள்விகளுக்கு இசைக்கேடான பதில்கள்தான் தேவையாகும்.

ஒரு மனிதன் தன்னை எப்படி எல்லோரும் நேசிக்கும்படி செய்ய முடியும்?

எப்பொழுது ஒரு மனிதன் அபார சக்திவாய்ந்தவனாக இருந்தும் தன்னைக் கண்டு யாரும் பயப்படாதவாறு செய்கிறானோ அவனைத்தான் அனைவரும் நேசிக்கிறார்கள்.

எப்படி ஒரு மனிதன் தெய்வமாகலாம்?[9]

ஒரு மனிதனால் செய்ய முடியாததைச் செய்யும் பொழுது.

எது சக்தி வாய்ந்தது, வாழ்வா, சாவா?

வாழ்வுதான். ஏனெனில் அதில்தான் அனேக தீமைகள் உண்டு.

அலெக்ஸாண்டர் ஓர் உண்மையான யோகியைத் தன் ஆசாரியராக இந்தியாவிலிருந்து அழைத்துப் போவதில் வெற்றி அடைந்தார். இவர்தான் கல்யாணா (ஸ்வாமி ஸ்ஃபைன்ஸ்), கிரேக்கர்களால் காலனாஸ் என்றழைக்கப்பட்டவர். அந்த முனிவர் அலெக்ஸாண்டருடன் பாரசீகத்திற்குச் சென்றார். ஒரு குறிப்பிட்ட நாளில் பாரசீகத்தில் ஸூஸா என்னும் நகரில் மாஸிடோனியாவின் அனைத்துப் படைகளின் முன்னிலையில் சிதையில் தன் வயதான உடலை நீத்தார். அவர் மரணத்தைப் பற்றியோ வலியைப் பற்றியோ அஞ்சவில்லை என்பதைக் கண்ட அந்தப்

படைவீரர்களின் ஆச்சரியத்தைப் பற்றி சரித்திர ஆசிரியர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். தீக்கொழுந்துகளால் எரிக்கப்பட்ட பொழுது அவர் ஒரு முறை கூட தன் நிலையிலிருந்து அசையவேயில்லை. தன் தகனத்திற்குச் செல்வதற்கு முன்னால் காலனாஸ் தனக்கு மிக நெருங்கிய அனேகத் தோழர்களைக் கட்டித் தழுவி விடை பெற்றார். ஆனால் அலெக்ஸாண்டரிடம் விடை பெறாமல் அந்த இந்து முனிவர், நான் பின்னர் உன்னை பாபிலோனில் சந்திக்கிறேன், என்று மாத்திரமே குறிப்பிட்டார்.

அலெக்ஸாண்டர் பாரசீகத்தை விட்டுச் சென்ற அடுத்த வருடம் பாபிலோனில் மரணமடைந்தார். அந்த இந்தியக் குருவின் முன்னறிவிப்பானது அவர் அலெக்ஸாண்டருடன் வாழ்விலும் சாவிலும் உடனிருப்பதை அவரது வழக்கப்படி கூறிய முறையாகும்.

கிரேக்க வரலாற்று ஆசிரியர்கள் நமக்கு பாரத சமுதாயத்தைப் பற்றித் தெளிவானதும் ஊக்கமளிப்பதாகவும் உள்ள பல தகவல்களை விட்டுச் சென்றிருக்கிறார்கள். இந்துச் சட்டம் மக்களைக் காக்கிறது என்றும், எந்தச் சூழ்நிலையிலும் அவர்களில் யாரும் அடிமையாக இருக்கக் கூடாது; ஆனால் தாங்கள் சுதந்திரத்தை அனுபவிக்கும் பொழுது, அனைவருக்கும் அதை அனுபவிக்க சம உரிமை உண்டென்பதை மதிக்க வேண்டும், என்றும் உத்தரவிடுவதாகவும் ஏரியன் நமக்குக் கூறுகிறார்.[10]

இந்தியர்கள் அதிக வட்டிக்குக் கடன் கொடுப்பது இல்லை, எப்படிக் கடன் வாங்குவது என்பதும் தெரியாது. அநியாயத்தைச் செய்வதும் அதைப் பொறுத்துக் கொள்வதும் இந்தியர்களின் வழக்கமான நடைமுறைக்கு விரோதமானது; ஆதலால் அவர்கள் ஒப்பந்தம் செய்து கொள்வதுமில்லை, எதையும் ஈடுவைக்க அவசியமுமில்லை, என்று இன்னொரு நூல் கூறுகிறது. வியாதியைக் குணப்படுத்துவது எளிய இயற்கையான முறையில் செய்யப்பட்டு வந்தது என்றும் கூறப்பட்டிருக்கிறது. மருந்துகளை உபயோகப்படுத்துவதற்குப் பதிலாக ஆகார முறைகளை ஒழுங்குபடுத்தியே நோய்கள் குணப்படுத்தப்படுகின்றன. மிக உயர்வாக மதிக்கப்பட்ட சிகிச்சை முறைகள் களிம்புகளும், கட்டுகளு (ல்ப்ஹறள்ற்ங்ழ்)மாகும். மற்றவைகள் எல்லாம் மிக அதிக அளவில் கேடு விளைவிப்பவையாகக் கருதப்படுகின்றன. போரில் ஈடுபடுவது க்ஷத்திரியர்கள் அல்லது வீர மரபைச் சேர்ந்தவர்களுக்கு மட்டுமே கட்டுப்படுத்தப்பட்டது. எந்த சத்துருவும் ஒரு குடியானவன் தன் நிலத்தில் வேலை செய்து கொண்டிருந்தால், அவனுக்கு எவ்விதத் துன்பமும் விளைவிப்பதில்லை; ஏனெனில் இப்பிரிவினைச் சார்ந்த மக்கள் சமூகத்திற்கு நலம் விளைவிப்பவர்களாகக் கருதப்பட்டு, எல்லாவிதமான தீங்குகளிலிருந்தும் பாதுகாக்கப்படுகிறார்கள். இவ்வாறாக நிலம் அழிக்கப்படாமல் அதிக விளைச்சலை உற்பத்தி செய்து, அங்கு வசிப்பவர்கள் வாழ்க்கையை

அனுபவிக்கத் தேவையானவற்றை அளிக்கிறது.

மைசூரில் எங்கும் தென்படும் ஆலயங்கள் தென்னிந்தியாவின் பல சிறந்த முனிவர்களை நிரந்தரமாக நினைவுபடுத்தியபடி நிற்கின்றன. இவர்களில் ஒருவரான தாயுமானவர் நமக்கெல்லாம் சவால் விடக்கூடிய பின்வரும் கவிதையை விட்டுச் சென்றிருக்கிறார்:

கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாம் ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்
கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலினிரதம் வைத்து ஐந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாமல் உலகத்து உலாவலாம்
விண்ணவரை ஏவல் கொளலாம்
சந்ததமும் இளமையோடிருக்கலாம்
சலம் மேல் நடக்கலாம் கனல்மேலிருக்கலாம்
சிந்தையை அடக்கியே சும்மா விருக்கின்ற திறமரிது.

இந்தியாவின் தென்கோடியில் ரம்மியமாகவும் செழிப்பாகவும் உள்ள திருவாங்கூர் சமஸ்தானத்தில் போக்குவரத்து, ஆறுகள் மற்றும் கால்வாய்கள் மூலமாக நடைபெறுகிறது. ஒவ்வொரு வருடமும் அதன் மகாராஜா, போர்களினாலும் வெகு காலத்திற்கு முன்னர் திருவாங்கூரை அடுத்துள்ள அனேக சிறு ராஜ்யங்களைத் தங்களுடைய நாட்டுடன் சேர்த்துக் கொண்டதினாலும் ஏற்பட்ட பாவங்களுக்காகக் கழுவாய் செய்வதைத் தன் வம்சத்தின் கடமையாக ஏற்றுக் கொள்கிறார். மகாராஜா வருடத்தில் ஐம்பத்தாறு நாட்கள் வேத மந்திரங்களையும் பாராயணங்களையும் கேட்பதற்கு தினமும் மூன்று தடவைகள் கோயிலுக்குச் செல்கிறார்; இந்தப் பிராயசித்த சடங்கு, கோயிலில் லக்ஷதீபம் ஏற்றப்படுவதுடன்

முடிவடைகிறது. அப்பொழுது லட்ச தீபங்களுடன் கோயில் ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிக்கும்.

மெட்ராஸ் மாகாணம், இந்தியாவின் தென்கிழக்கில் இருக்கிறது. அதில் கடலால் சூழப்பட்ட சமமான, விசாலமான மெட்ராஸ் நகரமும், கிறிஸ்து சகாப்தத்தின் தொடக்கத்தில் பல்லவ வம்சத்தினர் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த பொன் நகரமான காஞ்சீபுரமும் உள்ளன. தற்காலத்திய மெட்ராஸ் மாகாணத்தில் மகாத்மா காந்தியின் அஹிம்சை தத்துவங்கள் மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ளன; தனித்தன்மை கொண்ட வெண்ணிற காந்தி குல்லாய் எங்கும் தென்படுகிறது, பொதுவாகத் தென்னிந்தியாவில் மகாத்மா. தீண்டாமையை ஒழிக்கும் பல முக்கிய கோயில் சீர்திருத்தங்களையும் சாதிஅமைப்பு சீர்திருத்தங்களையும் செயல்படுத்தியிருக்கிறார்.

மகா சட்ட விற்பன்னரான மனுவினால் உண்டாக்கப்பட்ட சாதி அமைப்பின் தொடக்கமானது பாராட்டத்தக்கதாகும். மனிதர்கள் அவரவர் இயல்பான பரிணாமத்தின்படி நான்கு பெரும் பிரிவுகளாகப் பேதங் கொண்டுள்ளதை அவர் தெளிவாகக் கண்டார்: சமூகத்திற்கு சேவையைத் தங்கள் உடல் உழைப்பு மூலமாக அளிக்கக் கூடியவர்கள் (சூத்திரர்கள்); பொதுவாக அறிவாற்றல், திறமை, விவசாயம், வியாபாரம், வர்த்தகம், தொழில் இவைகள் மூலமாக சேவை புரிபவர்கள் (வைசியர்கள்); நிர்வாகம், செயல்படுத்துதல் மற்றும் பாதுகாக்கும் திறமை

உடையவர்கள்ஆளுபவர்களும், வீரர்களும் (க்ஷத்ரியர்கள்); சிந்திக்கும் இயல்புடையவர்களும் ஆன்மீகத்தில் ஈடுபாடுடையவர்களும், ஈடுபாட்டை உண்டு பண்ணுபவர்களும் (பிராமணர்கள்); பிறப்போ, சமயச்சடங்குகளோ, கல்வியோ அல்லது பரம்பரையோ ஒருவனை இருபிறப்பாளன் (அதாவது, பிராமணன்) என்று தீர்மானமாகக் கூறமுடியாது; அவனுடைய குணமும் நடத்தையும் மட்டும் தான் அதைத் தீர்மானிக்க முடியும், என்று மகாபாரதம் பறைசாற்றுகிறது. சமூகம்,[11] அதன் அங்கத்தினர்கள் பெற்றிருக்கும் ஞானம், ஒழுக்கம், வயது, உறவுமுறை அல்லது இறுதியாகச் செல்வம், இவற்றிற்கு ஏற்றவாறு அவர்களுக்கு மரியாதை செலுத்த வேண்டுமென்று மனு அறிவுறுத்தியுள்ளார். வேத காலத்து பாரதத்தில் செல்வம் சேமித்து வைக்கப்பட்டாலும் அல்லது தரும காரியங்களுக்கு உபயோகப்படுத்தப்படவில்லை என்றாலும் அது என்றுமே வெறுக்கப்பட்டது. சமூகத்தில் கஞ்சத்தனமான பெருஞ் செல்வந்தர்களுக்கு மிகத் தாழ்ந்த அந்தஸ்தே கிடைத்து வந்தது.

பல நூற்றாண்டுகளாக சாதி அமைப்பு இறுகிப் பின்னர் அது பரம்பரையுடன் பிணைக்கப்பட்ட பொழுது அபாயகரமான தீமைகள் விளைந்தன. 1947-லிருந்து சுயாட்சியை நிறுவிய இந்தியா மிக மெதுவாக ஆனால் நிச்சயமாக, சாதியைப் பற்றிய புராதன மதிப்பைபிறப்பினால் அல்லாமல் இயல்பான தகுதியை மட்டுமே அடிப்படையாகக் கொண்டதை திரும்பவும்

நிலை நாட்டுவதில் முன்னேற்றம் அடைந்து வருகிறது. இம்மண்ணிலுள்ள ஒவ்வொரு நாடும் அதற்கென்ற சொந்த, தனிப்பட்ட துன்பம்தரும் கர்மபலனை அனுபவித்து அதைக் கௌரவமாகத் துடைத்து எறிய வேண்டியுள்ளது. இந்தியா, தன் பல திறங்கள் கொண்ட, அசைக்க முடியாத சக்தியைக் கொண்டு சாதியைச் சீர்திருத்தும் கடமையில் நிகரானது என நிரூபித்துக் கொண்டிருக்கிறது.

தென்னிந்தியா மிக கவர்ச்சிகரமாக இருந்ததைக் கண்டு திரு. ரைட்டும் நானும் எங்கள் பயணத்தை நீட்டிக்க விரும்பினோம். ஆயினும் என்றென்றும் கொடுமைக்குப் பெயர் போன காலம், எங்களுக்கு எந்த மரியாதையான நீட்சியையும் வழங்கவில்லை. நான் சீக்கிரத்திலேயே கல்கத்தா பல்கலைக் கழகத்தில் பாரத தத்துவ மகாசபையின் இறுதிக் கூட்டத்தில் உரையாற்ற வேண்டியிருந்தது. மைசூர் விஜயத்தின் முடிவில் நான், பாரத விஞ்ஞான கழகத் (Indian Academy of Science)தின் தலைவரான ஸர்.சி.வி. ராமனுடன் பேசி மகிழ்வுற்றேன். இந்த மேதாவியான இந்து இயற்பியல் விஞ்ஞானி 1930-ல் ராமன் விளைவுக்கு நோபல் பரிசு வழங்கப் பெற்றார். இது ஒளிச்சிதறல் பற்றிய அவருடைய முக்கியமான கண்டுபிடிப்பாகும்.

மெட்ராஸிலுள்ள மாணவர்கள் மற்றும் நண்பர்கள் கொண்ட கூட்டத்திடமிருந்து பிரியா விடை பெற்றுக் கொண்டு திரு. ரைட்டும் நானும் எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம். வழியில், பதினெட்டாவது நூற்றாண்டில்

அற்புதங்கள் நிறைந்த வாழ்க்கை நடத்திய சதாசிவ பிரம்மத்துடைய[12] புனித ஞாபகார்த்தமாக விளங்கும் சிறு கோயிலின் முன் நின்றோம். நெரூரில், புதுக்கோட்டை அரசர் சதாசிவருக்காக நிர்மாணித்த ஒரு பெரிய கோயில், யாத்திரை ஸ்தலமாக விளங்கி, அனேக தெய்வீக சிகிச்சைகளை அருளிய சாட்சியாக உள்ளது. 1750ல், அரசாண்ட இளவரசருக்காக சதாசிவர் எழுதிய தர்ம நீதிகளை, வழிவழியாக வந்த புதுக்கோட்டை அரசர்கள் புனிதமெனப் போற்றி வந்துள்ளனர்.

அன்பே உருவானவரும் முழு உள்ளொளி பெற்ற மகானுமாகிய சதாசிவரைப் பற்றிய பல விந்தைமிகு கதைகள் தென்னிந்திய கிராம மக்களிடையே இன்னும் வழக்கத்தில் உள்ளன. காவிரி நதிக் கரையில் ஒரு நாள் சமாதியில் ஆழ்ந்திருக்கும் பொழுது சதாசிவர் திடீர் வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போகப்பட்டதைக் கண்டார்கள். பல வாரங்களுக்குப் பிறகு அவர் கோயம்புத்தூர் மாவட்டத்தில் கொடுமுடி கிராமத்தில் ஒரு மண்மேட்டுக்கு அடியில் ஆழமாகப் புதைக்கப்பட்டிருந்ததைக் கண்டார்கள். கிராமத்தார்களின் மண்வெட்டி அவர் உடலில் பட்டதும், அம்மகான் எழுந்து சுறுசுறுப்பாக நடந்து சென்றார்.

ஒரு தடவை, வயோதிக வேதாந்த பண்டிதர் ஒருவரைத் தர்க்க வாதத்தில் சதாசிவர் தோற்கடித்ததற்காக அவரது குரு, அவரைக் கண்டித்த பின்னர் அவர் முனி (பேசாத மகான்) ஆனார். இளைஞனே எப்பொழுதுதான் நீ நாவைக் கட்டியாளக்

கற்றுக் கொள்ளப் போகிறாய்? என்று அவரது குரு குறிப்பிட்டார்.

தங்கள் ஆசியுடன், இக்கணம் முதலேதான்.

தஹ்ரவித்யா பிரகாசிகாவின் ஆசிரியரும் உத்தர கீதைக்கு ஓர் ஆழ்ந்த விளக்கவுரை எழுதியவருமான ஸ்வாமிஸ்ரீ பரமசிவேந்திர ஸரஸ்வதி அவர்கள் சதாசிவரின் குரு ஆவார். ஒரு தடவை உலகப்பற்றுள்ள மனிதர்கள் சிலர், சதாசிவர் தெய்வீகப் பரவசத்தில் மரபு ஒழுங்கின்றி தெருக்களில் அடிக்கடி ஆடிக்கொண்டு செல்வதாக அவருடைய ஞானகுருவிடம் சென்று முறையிட்டனர். ஐயா, சதாசிவர் ஒரு பைத்தியத்தைவிட மேம்பட்டவராகத் தோன்றவில்லை, என்று அவர்கள் தீர்மானமாகக் கூறினார்கள்.

ஆனால் பரமசிவேந்திரர் ஆனந்தமாக முறுவலித்தார். அப்படியா, அவர் கூறினார், அம்மாதிரியான பைத்தியம் மற்றவர்களுக்கும் பிடித்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

சதாசிவருடைய வாழ்க்கை, தடுத்தாட்கொள்ளும் கரங்களின் அதிசயமான, அழகான திருவிளையாடல்கள் நிறைந்துள்ளது. இவ்வுலகில் அநியாயங்களாகத் தோன்றுபவை அனேகம் உள்ளன; ஆனால் இறைவனின் அன்பர்கள் அவனுடைய உடனடியான நியாயத்தை எண்ணற்ற சம்பவங்களுடன் நிரூபிக்க முடியும். ஒரு நாளிரவு, சதாசிவர் சமாதியிலாழ்ந்து ஒரு பெரிய பணக்காரரின் தானியக் கிடங்கினருகே நின்றார். அப்பொழுது அங்கு காவல் காத்துக் கொண்டிருந்த

மூன்று வேலையாட்கள் அவரைத் திருடனென நினைத்து அடிக்க கழிகளை ஓங்கினார்கள். என்ன ஆச்சரியம்! தூக்கிய அவர்களது கைகள் அசைவற்றுவிட்டன. அப்படியே சிலைகளைப் போல் கையைத் தூக்கியபடியே அம்மூவரும் விசித்திரமான காட்சியாக, அதிகாலையில் சதாசிவர் அங்கிருந்து செல்லுமட்டும் நின்று கொண்டிருந்தார்கள்.

இன்னொரு சமயம், விறகு சுமந்து சென்று கொண்டிருந்த வேலையாட்களின் மேஸ்திரி அம்மகானை முரட்டுத்தனமாக விறகுக் கட்டை தூக்கும்படி கட்டாயப்படுத்தினான். அந்த மௌன முனிவரும் பணிவுடன் சுமையைத் தலையில் சுமந்தவாறு, கொண்டு சேர்க்க வேண்டிய இடத்திற்குச் சென்று, அங்கு கிடந்த எல்லா விறகுக் கட்டுக்களுக்கும் மேலே அவர் சுமையை இறக்கி வைத்தார். அக்கணமே அங்கு இருந்த விறகுக்கட்டைகளின் குவியல் தீப்பிடித்து எரிந்தது.

சதாசிவர், த்ரைலங்க ஸ்வாமியைப் போல் ஆடை எதுவும் அணிவதில்லை. ஒரு நாள் காலை அந்த நிர்வாண யோகி ஏதோ ஞாபகத்தில் ஒரு முஸ்லிம் சேனாதிபதியின் கூடாரத்துள் நுழைந்து விட்டார். இரு பெண்கள் பயந்து கூச்சலிட்டனர். அந்த சேனாதிபதி சதாசிவரின் மேல் தன் பயங்கரமான வாளைப் பாய்ச்சினான். அதனால் அவர் கை துண்டுபட்டு விழுந்தது. அந்த மகான் எந்தக் கவலையும் இன்றிச் செல்லத் தொடங்கினார். ஆச்சரியம் கலந்த திகிலும்

வருத்தமும் அடைந்த அந்த முஸ்லிம், தரையிலிருந்து அந்தக் கையை எடுத்துக் கொண்டு அவரைத் தொடர்ந்தான். அந்த யோகி, துண்டுபட்டு ரத்தம் ஒழுகிக் கொண்டிருந்த அடிப் பாகத்துடன் தன் கையை அமைதியாகச் சொருகினார். அந்தச் சேனைத் தலைவன் தனக்கு ஆன்மீக உபதேசம் ஏதாவது கூறுமாறு வேண்டிய பொழுது, சதாசிவர் தன் விரலால் மணல் மீது பின்வருமாறு எழுதினார்.

உனக்கு எது வேண்டுமோ அதைச் செய்யாதே, அதன் பிறகு உனக்கு விருப்பப்பட்டதை நீ செய்யலாம்.

அந்த முஸ்லிம் ஒரு புனிதமான மனோநிலைக்கு உயர்த்தப்பட்டான். அந்த முரண்பாடான புத்திமதி, அகங்காரத்தை அடக்குவதன் மூலம் ஆத்ம விடுதலைக்கான ஒரு வழிகாட்டி என்பதை அவன் உணர்ந்து கொண்டான். அந்தச் சில சொற்களின் ஆன்மீகத் தாக்கம் அந்த வீரனை ஒரு தகுதியான சீடனாக்கக் கூடிய அளவிற்கு இருந்தது. அவனுடைய பழைய கூட்டாளிகள் அதன் பிறகு அவனைப் பற்றி அறியவே இல்லை.

ஒரு தடவை, கிராமத்துக் குழந்தைகள், 150 மைல்களுக்கு அப்பாலுள்ள மதுரையில் நடக்கும் ஒரு திருவிழாவைக் காணும் விருப்பத்தை சதாசிவரின் முன்னிலையில் தெரிவித்தனர். அந்த யோகி அக்குழந்தைகளைத் தன் உடலைத் தொடும்படி சைகை காட்டினார். ஆகா! அக்கணமே அக்கூட்டம் முழுதும் மதுரைக்குக் கொண்டு செல்லப்பட்டது. அக்குழந்தைகள்

மகிழ்ச்சியுடன் ஆயிரக்கணக்கான யாத்திரீகர்களின் மத்தியில் உலவினார்கள். சில மணி நேரங்களில் அவருடைய பாதுகாப்பிலிருந்த அக்குழந்தை களை, அவரது எளிய முறையிலான போக்குவரத்து மூலம் வீட்டில் சேர்ப்பித்தார். வியப்படைந்த பெற்றோர்கள் மதுரை உற்சவத்தில் விக்கிரகங்களின் ஊர்வலம் பற்றிய தத்ரூபமான கதைகளைக் கேட்டனர். மேலும் குழந்தைகள், மதுரை இனிப்புகள் நிறைந்த பைகளை வைத்துக் கொண்டிருப்பதையும் அவர்கள் கவனித்தனர்.

நம்பிக்கையற்ற ஓர் இளைஞன் அம்மகானையும் அந்தக் கதையையும் கேலி செய்தான். அடுத்த திருவிழா ஸ்ரீரங்கத்தில் நடந்தபொழுது அந்தச் சிறுவன் சதாசிவரை அணுகினான்.

குருவே, அவன் கிண்டலுடன் கூறினான், நீங்கள் மற்ற குழந்தைகளை மதுரைக்கு அழைத்துச் சென்றதைப் போல் என்னையும் ஏன் ஸ்ரீரங்கத்திற்கு அழைத்துச் செல்லக் கூடாது? சததசிவர் ஒப்புக் கொண்டார்; உடனடியாக அச்சிறுவன் இந்த தூரத்து நகரின் கும்பலிடையே தான் இருப்பதைக் கண்டான். ஆனால் அந்தோ! அந்த இளைஞன் திரும்பி வரவேண்டுமென்று நினைத்த பொழுது அந்த மகான் எங்கே? களைப்படைந்த அந்தச் சிறுவன் பிறகு சாதாரண முறையான கால்நடையாகத் தான் வீட்டிற்கு வந்தான்.

தென்னிந்தியாவை விட்டுக் கிளம்பும் முன்னால் ஸ்ரீ ரமண மகரிஷியை சந்திப்பதற்கு திரு. ரைட்டும் நானும் திருவண்ணாமலைக்கு அருகிலுள்ள புனிதமான

குன்றாகிய அருணாசலத்திற்கு யாத்திரை சென்றோம். அவரது ஆசிரமத்தில் அம்முனிவர் எங்களை அன்புடன் வரவேற்று அங்கு பக்கத்திலிருந்த ஈஸ்ட் – வெஸ்ட் (கிழக்கு–மேற்கு) சஞ்சிகைகளின் ஒரு கட்டைக் காண்பித்தார். நாங்கள் அவருடனும் அவரது சீடர்களுடனும் அங்கே தங்கியிருந்த நேரத்தில், அவருடைய கருணை பொருந்திய முகம், தெய்வீக அன்பையும் ஞானத்தையும் பொழிய, அனேகமாக அவர் மௌனமாகவே இருந்தார்.

அல்லலுறும் மனித சமுதாயம், அது மறந்துவிட்ட பூர்ணத்துவ நிலையைத் திரும்ப அடைய ஸ்ரீ ரமணர் உபதேசிக்கும் வழி: ஒருவன் எப்பொழுதும் தனக்குத்தானே நான் யார்? என்று விசாரிக்க வேண்டும். அது உண்மையிலேயே உன்னத விசாரணையாகும். மற்ற எல்லா எண்ணங்களையும் தீவிரத்துடன் ஒதுக்கித் தள்ளிவிட்டு பக்தன் சீக்கிரமே தன் உண்மையான ஆத்மாவை அறிவதில் ஆழமாகச் செல்லுவதைக் காண்கிறான். வெவ்வேறு வழியில் இழுக்கும் மற்ற குழப்பமான எண்ணங்கள் ஓய்ந்து விடுகின்றன. ஞான ஒளி பெற்ற அந்தத் தென்னிந்திய ரிஷி எழுதியிருக்கிறார்:

> இருமையும் மும்மையும் எதையோ சார்ந்தே உள்ளன,
> சார்பின்றி அவை தோன்றுவதில்லை;
> அச்சார்பைத் தேடின் அவை தளர்ந்துவிழும்.
> அதுவே சத்தியம், அதைக் காண்பவன் மயங்குவதில்லை.



ரமண மகரிஷியும் ஸ்ரீ யோகானந்தரும், ஸ்ரீ ரமண ஆசிரமம், திருவண்ணாமலை



ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வரும் பரமஹம்ஸ யோகானந்தரும் சமய ஊர்வலத்தில், கல்கத்தா, 1935

1 செல்வி. ப்ளெட்ஷ் கல்கத்தாவில் என் உறவினர்களுடன் தங்கிவிட்டார்.

2 நான்காம் ஸ்ரீ கிருஷ்ண ராஜேந்திர வாடியார் யுவராஜாவின் மூத்த சகோதரர்.

3 அந்த நீர்ப்பாசன அணைக்கட்டு 1930ல் பட்டு, சோப்பு மற்றும் சந்தனத்தைலம் ஆகியவற்றிற்குப் புகழ் வாய்ந்த மைசூர் நகரத்தின் அருகிலுள்ள நிலங்களுக்கு உதவ கட்டப்பட்டது.

4 1950ல் எல்லைகளை மாற்றி அமைத்ததிலிருந்து, தற்பொழுது இக்குகைகள் மகாராஷ்டிரா மாநிலத்தில் அமைந்துள்ளன. (பிரசுரதாரரின் குறிப்பு)

5 அசோக சக்கரவர்த்தி இந்தியாவின் பல பாகங்களில் 84,000 ஸ்தூபிகளை (சமயச் சின்னங்கள்) கட்டுவித்தார். அவற்றுள் பதினான்கு கல்வெட்டுக்களும் பத்து கல்தூண்களும் எஞ்சியுள்ளன. ஒவ்வொரு தூணும் பொறியியல், கட்டிடக்கலை மற்றும் சிற்பக்கலை ஆகியவற்றின் வெற்றியாகும். அவர் அனேக நீர்த்தேக்கங்கள், அணைக்கட்டுகள், பாசன வசதிக்கான மதகுகள்; பிரயாணிகளுக்கான ஓய்வுச் சத்திரங்களுடன் கூடிய நெடுஞ்சாலைகள் மற்றும் நிழல் தரும் மரங்கள் கொண்ட சாலைகள்; மருத்துவத் தேவைகளுக்காக தாவரத் தோட்டங்கள்; மற்றும் மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் வேண்டிய மருத்துவமனைகள் ஆகியவற்றை நிர்மாணிக்க ஏற்பாடு செய்தார்.

6 பாடலிபுத்திர நகரம் (தற்காலத்திய பாட்னா) மிக சுவாரஸ்யமான வரலாற்றை உடையது. கி.மு. ஆறாவது நூற்றாண்டில் அது எந்த முக்கியத்துவமும் இல்லாமல் வெறும் கோட்டையாக மட்டும் இருந்தபொழுது பகவான் புத்தர் இந்தப் பிரதேசத்திற்கு
விஜயம் செய்தார். அவர் இந்த தீர்க்க தரிசனத்தைக் கூறினார்: ஆரியர்கள் இருக்கும்வரை, வியாபாரிகள் பிரயாணம் செய்யும் வரை அவர்களுக்குப் பாடலிபுத்திரம் மிக முக்கியமான நகரமாகவும் எல்லாவிதப் பொருட்களும் பரஸ்பர பரிமாறல்கள் நடக்கும் ஒரு மையமாகவும் விளங்கும். (மகாபரிநிர்வாண சூத்திரம்). இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பிறகு பாடலிபுத்திரம் சந்திரகுப்த மௌரியரின் மகா சாம்ராஜ்யத்திற்குத் தலைநகராயிற்று. அவருடைய பேரரான அசோகர், அந்த மாநகரத்திற்கு மேலும் செழிப்பையும் பெருமையையும் கூட்டினார்.

7 புராதன பாரதம் (Ancient India) என்பது பற்றிய ஆறு புத்தகங்கள் (கல்கத்தா: சக்ரவர்த்தி, சட்டர்ஜி அண்ட் கோ, 15. காலேஜ் சதுக்கம்; 1879, மறுவெளியீடு 1927).

8 அலெக்ஸாண்டரோ அல்லது அவர் தளபதிகள் யாராவதோ கங்கை நதியைக் கடக்கவே இல்லை. வடமேற்குப் பகுதிகளில் உறுதியான எதிர்ப்பைக் கண்டதும் மாஸிடோனியச் சேனை மேலே செல்ல மறுத்துப் புரட்சி செய்தது. அலெக்ஸாண்டர் பாரதத்தை விட்டுக் கிளம்ப கட்டாயப்படுத்தப்பட்டார். அவர் பாரசீகத்தில் மேலும் வெற்றிகளை நாடிச் சென்றார்.

9 இந்தக் கேள்வியிலிருந்து ஸ்யூஸின் மகன் தான் ஏற்கனவே பூர்ணத்துவம் அடைந்து விட்டதைப் பற்றி சிற்சில சமயம் சந்தேகம் கொண்டிருந்தார் என்று நம்மால் ஊகிக்க முடிகிறது.

10 இந்தியாவில் அடிமைத்தனம் இல்லாதது, ஹெலனிக் சமுதாய அமைப்பில் இருந்து முற்றிலும் மாறுபட்ட ஓர் அம்சமாதலால் அனைத்து கிரேக்க ஆராய்ச்சியாளர்களும் அது பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.
பேராசிரியர் வினய் குமார் சர்க்கார், படைக்கும் பாரதம் (Creative India) என்ற நூலில் பொருளாதாரம், அரசியல், இலக்கியம், கலை மற்றும் சமூக

தத்துவம் ஆகியவற்றில் பாரதத்தின் புராதன மற்றும் நவீன சாதனைகளைப் பற்றியும், விசேஷத் தகுதிகளைக் குறித்தும் விரிவாக எழுதியுள்ளார் (லாகூர்: மோதிலால் பனாரஸிதாஸ், பிரசுரகர்த்தர்கள், 1937, 714 பக்கங்கள்).

சிபாரிசு செய்யப்படக்கூடிய மற்றொரு புத்தகம் காலங்களின் வழியே இந்தியப் பண்பாடு (Indian Culture Through the Ages), எஸ்.வி. வெங்கடேஸ்வரா என்பவரால் எழுதப்பட்டது. (நியூ யார்க், லாங்மன்ஸ், கிரீன் அண்ட் கோ).

11 ஜனவரி 1935, ஈஸ்ட் – வெஸ்ட் (கிழக்குமேற்கு) இதழில் தாரா மாதா எழுதுகிறார்: இந்த நான்கு வருணங்களில் ஏதாவதொன்றில் சேர்க்கப்படுவது ஆரம்ப காலத்தில் ஒருவனின் பிறப்பினால் அல்லாமல், அவனுடைய இயல்பான திறமைகளுக்கேற்ப அவன் வாழ்வில் செய்து முடிக்க எந்தக் குறிக்கோளை ஏற்கிறானென்பதைப் பொறுத்திருந்தது. இந்தக் குறிக்கோள் (1) காமம்இச்சை, புலன்களின் வழியே செல்லும் வாழ்க்கை (சூத்திர நிலை),

(2) அர்த்தம்ஆதாயம், பொருளீட்டுதல், ஆனால் இச்சைகளை அடக்குதல் (வைசிய நிலை), (3) தர்மம்தன்னொழுக்கம், பொறுப்பும் சரியான செயலும் கொண்ட வாழ்க்கை (க்ஷத்திரிய நிலை), (4) மோக்ஷம்முக்தி நிலை, ஆன்மீகமும், தர்ம நெறிகளை உபதேசிப்பதையும் கொண்ட வாழ்க்கை (பிராமண நிலை), இந்த நான்கு வருணத்தாரும் மனித குலத்திற்கு முறையே 1. உடல், 2. மனம், 3. இச்சா சக்தி, 4. ஆன்ம பலம் மூலம் சேவை

செய்கிறார்கள்.

இந்த நான்கு நிலைகளும், நிரந்தரக் குணங்கள் அல்லது இயற்கையின் தன்மைகளான தாமஸம், ராஜஸம், சத்துவம் ஆகியவற்றுடன் தொடர்புடையவையாகும். அதாவது தடை, செயல், விரிவு; அல்லது பொருள், சக்தி, அறிவு என்பதாம். இந்நான்கு இயல்பான வருணங்களும் அவரவர்களுடைய குணங்களால் குறிக்கப்படுகின்றன. அக்குணங்களானவை 1. தாமஸம் (அறிவீனம்), 2, தாமஸ-ராஜஸம் (அறிவீனமும் செயலும் கலந்தது), 3, ராஜஸசத்துவம் (சரியான செயலும் ஞானமும் கலந்தது), 4, சத்துவம் (ஞானம்), இம்மாதிரியாக இயற்கை ஒவ்வொரு மனிதனுள்ளும் மிகைப்பட்டுத் தோன்றும் ஒன்று அல்லது இரு குணங்கள் சேர்ந்த தன்மையினால் அவனை, அவனது வருணத்துடன் அடையாளமிட்டிருக்கிறது. உண்மையில் எல்லா மனிதர்களிடமும் மூன்று குணங்களும் வெவ்வேறு விகிதத்தில் கலந்து இருக்கவே செய்கின்றன. குருவானவர் ஒரு மனிதனின் பரிணாம நிலைப்படி அவன் எந்த வருணத்தைச் சேர்ந்தவன் என்பதைச் சரியாக தீர்மானிக்க முடியும்.

ஒரு குறிப்பிட்ட அளவிற்கு, எல்லா இனங்களும் நாடுகளும் கோட்பாடு ரீதியாக இல்லாவிடினும் செயல் முறையில் சாதியின் அம்சங்களை அனுசரிக்கவே செய்கின்றன. எங்கு மிக அதிக உரிமை அல்லது சுதந்திரம் எனப்படுவது உள்ளதோ, குறிப்பாக இயல்பான சாதிகளில் அதிக வித்தியாசமுள்ளவர்களிடையே கலப்புமணம் நிகழும் பொழுது, அந்த இனம் குறையத் தொடங்கி பின்னர் அழிந்தே போய்விடுகிறது. புராண ஸம்ஹிதை, இம்மாதிரியான சேர்க்கையினால் உண்டாகிய குழந்தைகளை மலட்டுத் தன்மை கொண்ட கலப்பினங்களுடன், அதாவது தன் சொந்த இனத்தை விருத்தி செய்ய இயலாத கோவேறு கழுதையைப் போன்றவைகளுடன் ஒப்பிடுகிறது. செயற்கை

இனங்கள் முடிவில் நிர்மூலமாக்கப்பட்டு விடுகின்றன. வரலாறு, கணக்கற்ற பெரிய

இனங்கள் உயிருடனுள்ள ஓர் அடையாளம் கூட இன்றி பூண்டோடு அழிக்கப்பட்டதற்கு

எண்ணிறைந்த சான்றுகளை அளிக்கிறது. இந்தியாவின் நான்கு வருண அமைப்பு முறையானது, அதனுடைய ஆழ்ந்த சிந்தனையாளர்களால் மதிக்கப் படுகிறது. மேலும் அம்முறை, அதன் உரிமைகளுக்கு எதிரான தடையாக இருந்து, இனத்தின் தூய்மையைப் பாதுகாத்து, யுக யுகாந்திர மாறுபாடுகளிலிருந்து அதை பத்திரமாகக் கொண்டு வந்துள்ளது. அதே சமயம், மற்ற அனேக புராதன இனங்கள் முழுவதுமாக மறைந்துவிட்டுள்ளன.

12 அவருடைய முறையான பட்டம் ஸ்வாமி ஸ்ரீ சதாசிவேந்திர சரஸ்வதி என்பதாகும். அந்தப் பெயரில் அவர் புத்தகங்கள் (பிரம்ம சூத்திரங்கள் மற்றும் பதஞ்சலியின் யோக சூத்திரங்களின் விரிவுரை) எழுதியிருக்கிறார்.

சிருங்கேரி மடத்தின் சங்கராசாரியரான பூஜ்ய ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதி, சதாசிவத்தின் பேரில் ஓர் அருமையான கவிதை எழுதியுள்ளார்.

அத்தியாயம் 42

# என் குருவுடன் கழித்த கடைசி நாட்கள்

குருஜி, இன்று காலை உங்களைத் தனியாகக் காண்பதில் மிக்க மகிழ்ச்சி. நான் நறுமணம் வீசும் பழங்கள் மற்றும் ரோஜா மலர்களின் பாரத்தை சுமந்து கொண்டு செராம்பூர் ஆசிரமத்திற்கு அப்பொழுதுதான் வந்து சேர்ந்திருந்தேன். ஸ்ரீ யுக்தேஸ்வர் என்னை அடக்கத்துடன் நோக்கினார்.

உனது கேள்வி என்ன? குருதேவர் தப்புவதற்கு வழி தேடுவது போல் அறையில் அங்குமிங்கும் நோக்கினார்.

குருஜி, நான் தங்களிடம் ஓர் உயர்நிலைப் பள்ளி இளைஞனாக வந்தேன்; இப்பொழுது நான் ஒரு வளர்ந்த மனிதன். ஏதோ ஒன்றிரண்டு நரை கூடத் தென்படுகிறது. தாங்கள் என்னைச் சந்தித்த அந்த நேரத்திலிருந்து இதுவரை மௌனமான அன்பை என் மீது பொழிந்திருந்தும், முதலில் சந்தித்த அந்த தினத்தன்று மட்டும்தான், ஒரே ஒரு தடவை தாங்கள், நான் உன்னை நேசிக்கிறேன் என்று கூறினீர்கள். நான் அவரைக் கெஞ்சியவாறு நோக்கினேன்.

குருதேவர் தன் பார்வையைத் தாழ்த்தினார். யோகானந்தா, சொல்லற்ற இதயத்தில் செவ்வனே பாதுகாக்கப் பட்டுவரும் இதமான எண்ணங்களை நான் வறண்ட சொற்றொடர்களில் வெளிப்படுத்த

வேண்டுமென்கிறாயா?

குருஜி, நீங்கள் என்னை நேசிக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும், ஆனால் என் செவிகள் அச்சொற்களை உங்கள் வாயால் கேட்க வேண்டுமென்று துடிக்கின்றன.

உன் விருப்பப்படியே ஆகட்டும். என் இல்லற வாழ்வில் நான் யோகமுறையைப் பயிற்றுவிக்க ஒரு மகனுக்காக அடிக்கடி ஏங்கியதுண்டு. ஆனால் நீ என் வாழ்வில் வந்ததும் நான் திருப்தி அடைந்துவிட்டேன்; உன்னில் நான் என் மகனைக் கண்டேன். இரு தெளிந்த கண்ணீர்த் துளிகள் ஸ்ரீ யுக்தேஸ்வரது கண்களில் துளிர்த்தன. யோகானந்தா, நான் உன்னை என்றுமே நேசிக்கிறேன்.

உங்கள் பதிலே சுவர்க்கத்திற்கு எனக்கு அனுமதிச் சீட்டாகும். அவரது சொற்களினால் என் மனத்தின் பாரம் இறங்கி நிரந்தரமாகக் கரைந்தது. அவர் உணர்ச்சி வசப்படாதவர் என்பதும் தன்னிறைவு பெற்றவர் என்பதும் எனக்குத் தெரியும். இருந்தாலும் அவரது மௌனத்தைக் கண்டு நான் அதிசயித்திருக்கிறேன். சில சமயங்களில் நான் அவரை முழுவதும் திருப்தி செய்வதில் வெற்றி அடையவில்லையோ என்று கூடப் பயந்திருக்கிறேன். அவரது சுபாவம் என்றும் முழுதும் புரிந்து கொள்ள முடியாதபடி விசித்திரமான ஒன்று; அவர் வெளி உலகத்தின் மதிப்பீட்டை என்றோ கடந்து விட்டதனால் ஆழங்காண முடியாத, சலனமற்ற சுபாவத்தைக் கொண்டவர்.

சில தினங்களுக்குப் பிறகு நான் கல்கத்தா ஆல்பர்ட் கூடத்தில் பெருந்திரளான மக்கள் கூட்டத்தில் பேசினேன். ஸ்ரீ யுக்தேஸ்வர், சந்தோஷ் மகாராஜாவுடனும் கல்கத்தா மேயருடனும் மேடையில் அமர ஒப்புக் கொண்டார். அவர் என்னிடம் ஒன்றும் கூறவில்லை. ஆனால் நான் பேசும் பொழுது அவரை அடிக்கடி நோக்கியதில் அவர் மகிழ்ச்சி அடைந்தாரெனத் தோன்றியது.

பிறகு செராம்பூர் கல்லூரியில் பழைய மாணவர் கூட்டத்தில் பேச வேண்டி வந்தது. நான் என் பழைய வகுப்புத் தோழர்களை நோக்கிய போதும், அவர்கள் தங்கள் சொந்த பைத்தியக்காரத் துறவியை நோக்கியபோதும், சங்கோசமின்றி ஆனந்தக் கண்ணீர் பெருகியது. நல்ல நாவன்மை படைத்தவரான என் தத்துவப் பேராசிரியர் டாக்டர். கோஷால், என்னை வரவேற்க முன்வந்தார்; எங்கள் பழைய மனஸ்தாபங்களெல்லாம் காலம் என்ற ரசவாதியால் கரைக்கப்பட்டுவிட்டது.

செராம்பூர் ஆசிரமத்தில் டிசம்பர் மாதக் கடைசியில் மகர சங்கிராந்தி உற்சவம் ஒன்று கொண்டாடப்பட்டது. வழக்கம் போல ஸ்ரீ யுக்தேஸ்வரின் சீடர்கள் அருகிலிருந்தும் தூரத்திலிருந்தும் வந்து குழுமி இருந்தனர். பக்தி சங்கீர்த்தனங்கள், கிருஸ்டோதாவின் தேன்இனிமைக் குரலில் தனிப்பாடல்கள், இளஞ்சீடர்கள் பரிமாறிய விருந்து, ஆசிரமத்தின் திறந்தவெளி முற்றத்தில் விண்மீன்களின் கீழ் கூட்டம் நிறைந்த சபையில் குருதேவரின் ஆழ்ந்த உணர்ச்சிகரமான சமய

உரைநினைவுகள், நினைவுகள்! கடந்த கால ஆண்டுகளின் இனிய விழாக்கள்! இருந்தாலும், இன்றிரவு ஒரு புதிய அம்சம்:

யோகானந்தா, தயவு செய்து இந்தக் கூட்டத்தில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்து. வழக்கமே இல்லாத இந்தப் புதிய கோரிக்கையை விடுவிக்கும்பொழுது குருதேவரது கண்கள் மின்னின; கப்பல் மேல் தளத்தில் எனது முதல் ஆங்கில உரைக்கு முன்னர் நான் திண்டாடியதை நினைக்கிறாரோ? நான் அந்தக் கதையை என் சகோதர சீடர்களின் கூட்டத்தில் கூறி எங்கள் குருவிற்கு மனதார வணக்கம் செலுத்தி உரையை முடித்தேன்.

அவரது தவறாத துணை, கப்பல் மேல்தளத்தில் மட்டுமின்றி விருந்தோம்பலில் சிறந்த விசாலமான அமெரிக்க நாட்டில் அந்தப் பதினைந்து வருடங்களாகத் தினந்தோறும் எனக்குக் கிடைத்து வந்திருக்கிறது, என்று கூறி முடித்தேன்.

விருந்தினர்கள் சென்ற பிறகு ஸ்ரீ யுக்தேஸ்வர் என்னைத் தன் படுக்கையறைக்கு (இது போன்ற ஓர் உற்சவத்திற்குப் பிறகு ஒரே ஒரு தடவை)அவரது படுக்கையில் படுத்துறங்க நான் அனுமதிக்கப்பட்ட அந்த அறைக்கு அழைத்தார். இன்றிரவு அவரது காலடியில் அரைவட்டமாகச் சீடர்கள் இருக்க அவர் மௌனமாக அமர்ந்திருந்தார்.

யோகானந்தா, நீ இப்பொழுது கல்கத்தாவிற்குக் கிளம்புகிறாயா? தயவு செய்து நாளை இங்கு திரும்பி

வா. உன்னிடம் சில விஷயங்கள் கூற வேண்டும்.

மறுநாள் பிற்பகல் சில எளிய சொற்களால் ஆசி கூறி சன்னியாச ஆசிரமத்தில் இன்னும் உயர்ந்த பட்டமாகிய பரமஹம்ஸர்[1] என்ற பட்டத்தை எனக்கு அளித்தார். நான் அவரை முழந்தாளிட்டு வணங்கியபோது, இது உன் முந்தைய பட்டமாகிய ஸ்வாமி என்பதற்கு மேம்பட்டது, என்றார் அவர். நான் என் மேல் நாட்டு மாணவர்கள் பரமஹம்ஸஜி என்பதை உச்சரிக்கப்படப்போகும் பாட்டை நினைத்து உள்ளுக்குள் சிரித்துக் கொண்டேன்.[2]

பூமியில் என் வேலை இப்பொழுது முடிந்துவிட்டது; நீ தொடர வேண்டும். குருதேவர் அமைதியாகப் பேசினார். அவரது கண்கள் சாந்தமாகவும் கருணையுடனும் இருந்தன. என் இதயம் பயத்தில் துடித்துக் கொண்டிருந்தது.

பூரியில் உள்ள நமது ஆசிரமத்தின் பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்கு யாரையாவது அனுப்பு, ஸ்ரீ யுக்தேஸ்வர் தொடர்ந்தார். நான் எல்லாவற்றையும் உன் பொறுப்பில் விட்டுச் செல்கிறேன். நீ உன் வாழ்க்கை மற்றும் ஸ்தாபன படகை வெற்றிகரமாகச் செலுத்தி, தெய்வீகக் கரைக்கு அழைத்துச் செல்வாய்.

நான் கண்ணீருடன் அவரது பாதங்களைத் தழுவினேன்; அவர் எழுந்து என்னை அன்புடன் ஆசீர்வதித்தார்.

மறுநாள், ராஞ்சியிலிருந்து ஸ்வாமி சேவானந்தர் என்ற பக்தரை அழைத்து, அவரைப் பூரியிலுள்ள

ஆசிரமத்தின் பணிகளை மேற்கொள்ளும்படி அனுப்பி வைத்தேன். பிறகு என் குரு அவரது சொத்துக்களைப் பற்றி சட்டப்படி செய்ய வேண்டிய விவரங்களை என்னிடம் கலந்து பேசினார்; அவர் காலத்திற்குப் பிறகு அவரது இரு ஆசிரமங்களையும் மற்ற சொத்துக்களையும் அவரது உறவினர்கள் கைப்பற்றிக் கொள்ளக் கூடிய எந்த வழக்கும் இல்லாமலிருக்க வேண்டுமே என்று அவர் கவலை கொண்டிருந்தார். அவர் எல்லாவற்றையும் தரும காரியங்களுக்கு மட்டுமே உபயோகப்படுத்தும்படி பத்திரம் எழுதி ஏற்பாடு செய்துவிட விரும்பினார்.

குருதேவர் கித்தர்பூருக்குச் செல்வதற்கு எல்லா ஏற்பாடுகளும் சமீபத்தில் செய்யப்பட்டன. ஆனால் அவர் செல்லவில்லை, என் சகோதர சீடர் அமூலயாபாபு, ஒரு நாள் மதியம் இதை என்னிடம் குறிப்பிட்டார். எனக்கு மனத்தில் முன்னுணர்வு நடுக்கம் ஒன்று ஏற்பட்டது. நான் வலியுறுத்திக் கேட்ட கேள்விகளுக்கு, நான் கித்தர்பூருக்கு இனி போக மாட்டேன், என்று ஸ்ரீ யுக்தேஸ்வர் பதிலளித்தார். ஒரு வினாடி, குருதேவர் ஒரு பயந்த குழந்தையைப் போல் நடுங்கினார்.

(உடற்கூட்டின் மேல் இயல்பாகவே[3] ஏற்படும் பற்று, பெரிய மகான்களிடையே கூடக் கொஞ்சம் இருக்கத்தான் செய்கிறது, என்று பதஞ்சலி எழுதியுள்ளார். குருதேவர், மரணத்தைப் பற்றிய சில உரைகளில் வெகு நாட்கள் அடை பட்டிருந்த ஒரு பறவை தான் பழக்கப்பட்டிருந்த கூண்டை விட்டுக் கிளம்ப, கதவு திறந்த பிறகு கூட, சிறிது தயங்குவது போல், என்று வழக்கமாகக்

கூறியிருக்கிறார்.)

குருஜி, நான் விசும்பலுடன் மன்றாடினேன். அப்படிச் சொல்லாதீர்கள். அம்மாதிரியான சொற்களை என்னிடம் என்றுமே கூற வேண்டாம்!

ஸ்ரீ யுக்தேஸ்வரின் முகம் அமைதி நிறைந்த புன்னகையுடன் தளர்ந்தது. அவர் தனது எண்பத்தி ஒன்றாவது பிறந்த தினத்தை எட்டிக் கொண்டிருந்த போதிலும், அவர் நன்றாகவும் பலமாகவும் இருந்தார்.

வாயால் பேசா விட்டாலும், நுட்பமாக உணர்ந்த என் குருவின் அன்பென்னும் சூரிய ஒளியில் நாளுக்கு நாள் திளைத்து சிக்கிரத்தில் நிகழவிருக்கும் தன் மரணத்தைப் பற்றி அவர் காட்டிய குறிப்புக்களை எல்லாம் நான் என் மனத்திலிருந்து அகற்றினேன்.

ஐயா, அலகாபாத்தில் இம்மாதம் கும்பமேளா தொடங்குகிறது. நான் வங்காளப் பஞ்சாங்கத்தில் மேளா தேதிகளை குருதேவரிடம் காட்டினேன்.[4]

நீ உண்மையாக அங்கு செல்ல விரும்புகிறாயா?

நான் அவரை விட்டுப் பிரிவதில் அவருக்கிருந்த தயக்கத்தை உணராமல் நான் தொடர்ந்தேன். ஒரு தடவை பாபாஜியின் புனித தரிசனத்தை நீங்கள் அலகாபாத் கும்பாவில் கண்டீர்கள். ஒரு வேளை நான் இந்தத் தடவை அவரைப் பார்க்கக் கொடுத்து வைத்திருக்கலாம்.

நீ அங்கு அவரைக் காண்பாயென்று எனக்குத் தோன்றவில்லை. பிறகு என் திட்டங்களைத் தடுக்க விரும்பாமல் என் குரு மௌனமானார்.

நான் மறுநாள் ஒரு சிறு குழுவுடன் அலகாபாத்திற்குப் புறப்பட்டபோது குருதேவர் அமைதியாக வழக்கம் போல் என்னை ஆசீர்வதித்தார். ஸ்ரீ யுக்தேஸ்வரின் நடவடிக்கையில் இருந்து மறைமுகமாக உணர்த்தப்பட்டவைகளின் பொருளை நான் உணராமலேயே இருந்து விட்டேன். ஏனெனில் இறைவன் என்னைக் குருதேவரின் மரணத்தை நான் செயலற்று கட்டாயமாகக் காண வேண்டிய அனுபவத்தில் இருந்து தடுக்க எண்ணங் கொண்டார் போலும். என் வாழ்க்கையில் எப்பொழுதும், எனக்கு மிகவும் பிரியமானவர்களின் மரணத்தின் போது நான் அந்தக் காட்சியிலிருந்து வெகு தூரம் விலகி இருக்கும்படி இறைவன் கருணையுடன் அருளி இருக்கிறான்.[5]

1936 ஜனவரி 23ந் தேதி எங்கள் குழு கும்பமேளாவை அடைந்தது. கிட்டத்தட்ட இருபது லட்சத்திற்கும் மேற்பட்ட மக்களின் கூட்டம் கண் கொள்ளாக் காட்சியாகவும் திணற அடிக்கும்படியாகவும் இருந்தது. தெய்வீக வீடுபேற்றைத் தேடுவதற்காக உலகக் கட்டுக்களைத் துறந்த சன்னியாசிகள் மற்றும் சாதுக்கள் ஆகியோரிடத்திலும், பரமாத்மாவின் பெரு மதிப்பின் மீதும் ஓர் ஏழைக் குடியானவன் கூட உள்ளார்ந்த பயபக்தி வைத்துள்ளான்; இதுவே இந்திய மக்களின் வினோதமான தனிச் சிறப்பாகும். ஏமாற்றுபவர்களும் கபட வேடதாரிகளும் உண்மையில் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் இந்தியா, தங்கள் மேன்மையான

ஆசிகளால் நாட்டை ஒளிரச் செய்யும் ஒரு சில மகான்களுக்காக எல்லோரையுமே மதிக்கிறது. இந்தப் பெருங்காட்சியைக் கண்டு கொண்டிருந்த மேல்நாட்டவர்க்கு, இந்நாட்டின் நாடித் துடிப்பை உணரவும், இந்தியா எவ்வளவு தூரம் ஆன்மீகத்தில் ஊறி, காலத்தின் கொடுமைகளைத் தாங்கக்கூடிய, அடக்கவியலாத திறனை அடைந்துள்ளது என்பதை அறியவும் இது ஒரு சிறப்பான வாய்ப்பு.

முதல் நாளை எங்கள் குழு எல்லாவற்றையும் வெறுமனே பார்ப்பதிலேயே கழித்தது. ஆயிரக்கணக்கான யாத்திரீகர்கள் தங்கள் பாபங்களைக் கழிப்பதற்கு புனித கங்கையில் நீராடினார்கள்; பிராமண புரோகிதர்கள் வழிபாட்டுக்குரிய பவித்ரச் சடங்குகளைச் செய்தார்கள்; மௌன சன்னியாசிகளின் பாதங்களில் பக்தியுடன் காணிக்கைகள் வழங்கப்பட்டன; வரிசையாக யானைகள், அலங்கரிக்கப்பட்ட குதிரைகள், மெதுவாகச் செல்லும் ராஜபுதனத்து ஒட்டகங்கள் ஆகியவை ஒன்றன்பின் ஒன்றாகச் சென்றன. இதைத் தொடர்ந்து நிர்வாண சாதுக்கள் தங்கள் பொன், வெள்ளிச் செங்கோல்களை அல்லது பட்டுப் போன்ற வினோதமான வெல்வெட் கொடிகளை அசைத்தவாறு சென்ற சமய அணிவகுப்பும் நடைபெற்றது.

கோவணம் மட்டும் அணிந்திருந்த துறவிகள் சிறு குழுக்களாக மௌனமாக அமர்ந்திருந்தனர். அவர்கள் உடல் முழுவதும் சாம்பலைப் பூசியிருந்தனர். அது அவர்களைக் குளிரிலிருந்தும் வெயிலிலிருந்தும்

பாதுகாக்கிறது. அவர்களது நெற்றியிலிட்டிருந்த ஒற்றைச் சந்தனப் பொட்டு ஆன்மீகக் கண்ணைத் தெளிவாகக் குறித்துக் காட்டியது. தலையை மொட்டையடித்துக் கொண்டு காவியுடையணிந்த ஆயிரக்கணக்கான சாமியார்கள், கையில் தங்கள் மூங்கில் தண்டத்துடனும் பிச்சைப் பாத்திரமான திருவோட்டுடனும் காணப்பட்டனர். அவர்கள் நடந்து சென்ற போதும் அல்லது சீடர்களுடன் ஆன்மீக சர்ச்சையில் ஈடுபட்டிருந்த போதும் அவர்களது முகங்கள் துறவின் அமைதியில் ஒளிர்ந்தன.



ஸ்வாமி கிருஷ்ணானந்தர், 1936 அலகாபாத் கும்பமேளாவில், ஓர் ஆழ்ந்த, கவர்ச்சிகரமான உறுமலிலில் ஓம் என்று கூறும் அவருடைய பழக்கப்படுத்தப்பட்ட சைவப் பெண் சிங்கத்துடன் (பார்க்க பக்கம் 594)

அங்குமிங்குமாக மரத்தடிகளில் எரிந்து கொண்டிருக்கும் ஏராளமான கட்டைகளைச் சுற்றிலும், தங்கள் தலை உச்சி மீது சடாமுடி தரித்து கண்ணைக் கவரும் விதத்தில் சாதுக்கள்[6] அமர்ந்திருந்தனர். சிலர் பல அடிகள் நீண்டிருந்த தங்கள் தாடிகளைச் சுற்றி முடிந்திருந்தனர். அவர்கள் அமைதியாக தியானத்தில் அமர்ந்திருந்தனர், அல்லது அவ்வழியாகச் சென்ற கூட்டத்தினருக்கு கைகளை நீட்டி ஆசி கூறியவாறிருந்தனர்பிச்சைக்காரர்கள், யானை மீதமர்ந்து சென்ற மகாராஜாக்கள், தங்கள் வளைகளும் கொலுசுகளும் கிண்கிணிக்க பலவித வண்ணங்களில் புடவைகளை அணிந்த மாதர்கள், கைகளை விசித்திரமாக உயர்த்தியபடியே நகரும் பக்கிரிகள், தியானத்திற்குரிய கையூன்றிகளைத் தாங்கிய பிரமசாரிகள், ஆழ்ந்த அமைதியில் தங்களின் உள்ளார்ந்த ஆனந்தத்தை மறைத்த வண்ணம் பணிவுடன் செல்லும் எளிய சாதுக்கள். இத்தனை சந்தடிகளையும் மீறி கோயில் மணிகளின் இடைவிடாத அழைப்பைக் கேட்டோம்.

எங்கள் இரண்டாவது மேளா நாளன்று எனது தோழர்களும் நானும் பல ஆசிரமங்கள், தற்காலிக குடிசைகள் ஆகியவற்றிற்குள் நுழைந்து, அங்கிருந்த மகான்களுக்கு வணக்கம் செலுத்தினோம். ஸ்வாமி மரபில் கிரி பிரிவின் தலைவராக இருந்தநெருப்பென ஒளிரும் கண்களுடன் மெலிந்திருந்த ஒரு துறவியின் ஆசியைப் பெற்றோம். பிறகு நாங்கள், ஒன்பது

வருடங்களாக மௌனவிரதத்தைக் கடைபிடித்து பழங்களை மட்டுமே ஆகாரமாக உண்டுவரும் ஒரு குருவின் ஆசிரமத்தை அடைந்தோம். அங்கு ஆசிரமக் கூடத்தின் மேடையின் அமர்ந்திருந்த பிரக்ஞா சக்ஷு[7] என்ற பார்வை இழந்த ஒரு சாதுவைச் சந்தித்தோம். அனைத்து சாஸ்திரங்களிலும் ஆழ்ந்த புலமை பெற்ற பிரக்ஞா சக்ஷு, எல்லா பிரிவினராலும் மிக மரியாதையுடன் வணங்கப் பெற்றவர்.

வேதாந்தத்தைப் பற்றி நான் இந்தியில் ஒரு சிறு பிரசங்கம் செய்த பிறகு, நாங்கள் அந்த அமைதியான ஆசிரமத்தை விட்டுக் கிளம்பி அருகிலிருந்த கிருஷ்ணானந்தர் என்ற ஸ்வாமியை வணங்குவதற்குச் சென்றோம். அவர் ரோஜாக் கன்னங்களும் கவர்ச்சியூட்டும் தோள்களுடனும் கூடிய ஓர் அழகான சன்னியாசி. அவரருகில் நன்கு பழகிய ஒரு பெண் சிங்கம் படுத்திருந்தது. அந்தச் சன்னியாசியின் ஆன்மீகக் கவர்ச்சிக்கு அடிபணிந்துஅவருடைய பலமான உடல் வலிமையைக் கண்டல்ல என்பது நிச்சயம்!அக்காட்டு மிருகம் பாலன்னம் மட்டும் உண்டு எல்லா மாமிசத்தையும் உண்ண மறுத்தது. அந்த ஸ்வாமி, பழுப்பு மஞ்சள் நிற முடி நிறைந்த அம்மிருகத்திற்கு ஓர் ஆழ்ந்த கவர்ச்சிகரமான உறுமல் மூலம் "ஓம்" என்று கூறக் கற்றுக் கொடுத்திருந்தார் – ஒரு பூனை பக்தை!

அடுத்து எதிர்ப்பட்ட நன்கு கற்றவரான ஓர் இளவயதுடைய சாதுவுடன் சந்திப்பு, திரு. ரைட்டின் பிரபல பிரயாண குறிப்பேட்டில் நன்றாக

விவரிக்கப்பட்டுள்ளது.

நாங்கள் எங்கள் ஃபோர்ட் வண்டியில், குறுகிய, வளைந்த சந்துக்களின் வழியேயும் கும்பல்களுக்கிடையேயும் பாம்பைப் போல் ஊர்ந்து, தாழ்மட்டம் கொண்ட கங்கையின் குறுக்கே, கிரீச்சிடும் மிதவைப் பாலத்தின் மீது சென்றோம். கங்கைக் கரையில் யோகானந்தர், எனக்குச் சுட்டிக்காட்டிய பாபாஜியும் ஸ்ரீ யுக்தேஸ்வரும் சந்தித்த இடத்தையும் கடந்தோம். சற்று நேரத்திற்குப் பிறகு வண்டியிலிருந்து இறங்கி, சாதுக்களின் கூட்டத்திலிருந்து எழும் கனத்த புகை மண்டலத்தின் நடுவே, வழுக்கும் மணலில் கொஞ்ச தூரத்தில் கும்பலாக இருந்த மிக எளிமையான வைக்கோல் வேய்ந்த மண் குடிசைகளை நோக்கி நடந்தோம். நாங்கள், குறிப்பிடத்தக்க தல்லாத தற்காலிகமாக அமைக்கப்பட்டிருந்த இக்குடிசைகளில் கதவின்றி சிறிய வாயிலுடன் கூடிய ஒரு குடிசையின் முன் நின்றோம். அது, அபூர்வ அறிவுத்திறனுக்குப் பெயர் பெற்ற கர பாத்ரி என்ற சுற்றித்திரியும் ஓர் இளம் சாதுவின் இருப்பிடமாகும். அங்கு வைக்கோல் கட்டின் மேல் சப்பணமிட்டு, அவருடைய ஒரே உடையும், மற்றும் ஒரே சொத்துமான ஒரு காவியுடையைத் தோள்களின் மேலாகப் போர்த்திக் கொண்டு அவர் அமர்ந்திருந்த்தார்.

நாங்கள் நான்கு கால்களினாலும் தவழ்ந்து இக்குடிசையின் உள்ளே சென்று, ஞான ஒளிபெற்ற அந்த ஆன்மாவின் காலடிகளில் வணங்கிய பொழுது

உண்மையில், தெய்வீகம் நிறைந்த ஒரு முகம் எங்களை நோக்கிப் புன்னகை செய்தது; நுழைவாயிலில் இருந்த மினுக்கும் ஓர் மண்ணெண்ணெய் லாந்தர் விளக்கு, கூரை வேயப்பட்ட சுவர்களின் மீது விசித்திரமாக ஆடும் நிழல்களை தோற்றுவித்தது. அவருடைய முகம், முக்கியமாக அவருடைய கண்களும் அழகான பற்களும் ஒளிர்ந்து பளபளத்தன. என்னால் அவருடைய இந்தியைப் புரிந்து கொள்ள முடியா விட்டாலும் அவருடைய முக பாவங்கள் மிகத் தெளிவாக இருந்தன. அவர் மிகுந்த உற்சாகத்துடனும் அன்புடனும் ஆன்மீக ஒளியுடனும் இருந்தார். அவருடைய பெருமையைப் பற்றி யாரும் சந்தேகிக்க முடியாது.

இந்த லௌகீக உலகத்தில் எந்தப் பற்றும் இல்லாதவரின் ஆனந்தமான வாழ்க்கையை நினைத்துப் பார்: உடைகளைப் பற்றிய பிரச்சனையிலிருந்து விடுதலை; உணவைப் பற்றிய ஆசைகளிலிருந்தும் விடுதலை, பிச்சை எடுப்பதில்லை, ஒரு நாள் விட்டு ஒரு நாள் தவிர சமைத்த உணவைத் தொடுவதில்லை, கையில் திருவோடு ஏந்துவதில்லை; எல்லா பணச் சிக்கல்களிலிருந்தும் விடுதலை, கையால் பணத்தைத் தொடுவதில்லை, பொருள்களை என்றும் பத்திரப்படுத்துவதில்லை, கடவுளையே எப்போதும் நம்பியிருப்பது, போக்குவரத்துப் பற்றி கவலை இல்லை, வண்டிகளில் எப்போதும் சவாரி செய்வதில்லை, ஆனால் புனித நதிகளின் கரைகளில் எப்பொழுதும் நடந்த வண்ணம் இருப்பது; பற்றுதலின் எந்த வளர்ச்சியையும்

தவிர்க்க வேண்டி ஒரு வாரத்திற்கு மேல் எங்கும் தங்காமலிருப்பது.

எவ்வளவு அடக்கமான ஆத்மா! அவர், வேதங்களில் மிக்க புலமை பெற்றவர். மேலும் காசி பல்கலைக் கழக எம்.ஏ. பட்டமும் சாஸ்திரி (சாஸ்திரங்களில் நிபுணர்) பட்டமும் பெற்றவர். அவர் திருவடிகளில் அமர்ந்ததும் என்னை ஒரு தெய்வீக உணர்வு ஊடுருவியது; இவை எல்லாம் உண்மையான, புராதன இந்தியாவைக் காண வேண்டுமென்ற என் ஆவலுக்கு ஒரு விடையாகத் தோன்றியது. ஏனெனில் ஆன்மீகத்தில் கரைகண்ட மகான்கள் உள்ள இந்நாட்டின் உண்மையான பிரதிநிதி அவர்.

நான் கர பாத்ரியின் சுற்றித்திரியும் வாழ்க்கையைப் பற்றி விசாரித்தேன். தாங்கள் குளிர் காலத்திற்காக எந்த அதிக உடையும் வைத்துக் கொள்வதில்லையா?

இல்லை, இதுவே போதும்.

தாங்கள் புத்தகங்கள் எதுவும் எடுத்துச் செல்கிறீர்களா?

இல்லை, நான் சொல்வதைக் கேட்க விரும்புகிறவர் களுக்கு என் ஞாபகத்திலிருந்து போதிக்கிறேன்.

நீங்கள் வேறு என்ன செய்கிறீர்கள்?

கங்கைக் கரையில் திரிவேன்.

இந்த அமைதியான சொற்களைக் கேட்டவுடன் இவருடைய வாழ்க்கையின் எளிமையை வேண்டி ஏக்கம் என்னை ஆட்கொண்டது. எனக்கு அமெரிக்காவும் என் தோள்களின் மீதிருந்த மற்ற எல்லா பொறுப்புகளும்

நினைவிற்கு வந்தன.

இல்லை, யோகானந்தா, ஒரு வினாடி நான் வருத்தத்துடன் நினைத்தேன். இப் பிறவியில் கங்கைக் கரையில் திரியும் வாழ்க்கை உனக்கில்லை.

அவருடைய ஆன்மீக அனுபவங்களில் சிலவற்றை என்னிடம் அந்த சாது கூறிய பின்னர், நான் அவரிடம் திடீரென்று ஒரு கேள்வி கேட்டேன்.

நீங்கள் இந்த விவரங்களை சாத்திரப் புலமையிலிருந்து கூறுகிறீர்களா அல்லது உள்ளார்ந்த அனுபவத்திலிருந்தா?

பாதி புத்தகங்களிலிருந்து படித்தவை, மறு பாதி அனுபவத்திலிருந்து, என்று நேரடியான புன்னகையுடன் கூறினார்.

நாங்கள் சிறிது நேரம் தியான நிலை மௌனத்தில் மகிழ்ச்சியாக அமர்ந்திருந்தோம். நாங்கள் அவருடைய புனித முன்னிலையிலிருந்து வந்த பிறகு நான் திரு. ரைட்டிடம், பொன்மய வைக்கோல் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் அரசன் அவர், என்றேன்.

நாங்கள் அன்றிரவு மேளா மைதானத்தில் வானத்து விண்மீன்களின் கீழ், குச்சிகளினால் தைக்கப்பட்ட தையல் இலைகளில் உண்டு எங்கள் இரவு உணவை முடித்துக் கொண்டோம். இந்தியாவில் பாத்திரம் தேய்ப்பது முடிந்த அளவு குறைக்கப்பட்டு இருக்கிறது!

மேலும் இரண்டு தினங்களை, கவர்ந்திழுத்த கும்ப மேளாவில் கழித்தோம்; பிறகு வடமேற்குத் திசையில் யமுனைக் கரை ஓரமாக ஆக்ராவை நோக்கிச்

சென்றோம். மீண்டும் ஒரு முறை நான் தாஜ்மஹாலை நோக்கியவாறு நின்றேன்; என் நினைவில் ஜிதேந்திரா என் பக்கத்தில் நின்று அந்தச் சலவைக் கல் கனவில் வியப்படைந்து இருந்தான். பிறகு ஸ்வாமி கேசவானந்தர் இருக்குமிடமான பிருந்தாவன் ஆசிரமத்தை நோக்கிச் சென்றோம்.

நான் கேசவானந்தரை நாடிச் சென்ற நோக்கம் இந்தப் புத்தகத்துடன் தொடர்புடையதாகும். லாஹிரி மகாசயரின் வாழ்க்கை வரலாற்றை எழுதும்படி ஸ்ரீ யுக்தேஸ்வர் என்னைப் பணித்ததை நான் மறக்கவில்லை. நான் இந்தியாவில் தங்கி இருக்கையில் அந்த யோகாவதாரரின் நேரடிச் சீடர்கள் மற்றும் உறவினர்களைத் தொடர்பு கொள்ள, ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் பயன்படுத்திக் கொண்டேன். அவர்களுடைய உரையாடல்களை விரிவான குறிப்புக்களாகப் பதித்துக் கொண்டு சம்பவங்களையும் தேதிகளையும் ஒப்பிட்டுப் பார்த்தேன்; மேலும் போட்டோக்களையும், பழைய கடிதங்களையும், பத்திரங்களையும் சேகரித்தேன். லாஹிரி மகாசயர் தொடர்பான என் கைப்பை பெருகத் தொடங்கியது; என் முன்னே சிரமமான நூலாசிரியனின் வேலை இருப்பதைக் கலக்கத்துடன் உணர்ந்தேன். ஒரு பெரிய மகாகுருவானவரின் வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதுவதற்கு வேண்டிய தகுதியை எனக்கு அருளுமாறு பிரார்த்தித்துக் கொண்டேன். அவருடைய அனேக சீடர்கள், தங்கள் குருவைப் பற்றிய விவரங்களை

எழுத்தில் வடிக்கும் பொழுது அவரைப் பற்றி ஏதும் குறைவாகவோ அல்லது வித்தியாசமாகவோ விவரிக்கப்பட்டு விடலாமெனப் பயந்தார்கள்.

பஞ்சனன் பட்டாசார்யா ஒரு தடவை என்னிடம், ஒரு தெய்வீக அவதாரத்தின் வாழ்க்கையை, வறண்ட சொற்களால் உள்ளபடி எப்படி வெளிக்கொண்டுவர முடியும்? என்று குறிப்பிட்டார்.

அவரது மற்ற நெருங்கிய சீடர்களும் அதே போன்று, யோகாவதாரரை தங்களது இருதயங்களில், சிரஞ்சீவியான குருவாக மறைத்து வைத்திருந்தால் போதுமென திருப்தி அடைந்திருந்தனர். இருந்தாலும் லாஹிரி மகாசயர், தன் வாழ்க்கைச் சரித்திரத்தைப் பற்றி முன்னோடியாகக் கூறியதை நினைவில் வைத்துக் கொண்டு நான் அவருடைய வெளி வாழ்க்கையைப் பற்றிய உண்மைகளைப் பெறுவதிலும் அவற்றை உறுதிப் படுத்துவதிலும் எந்த முயற்சியையும் கைவிடவில்லை.

ஸ்வாமி கேசவானந்தர் பிருந்தாவனத்திலுள்ள அவரது காத்யாயனி பீட ஆசிரமத்தில் எங்களை அன்புடன் வரவேற்றார். அது ஓர் அழகிய நந்தவனத்தின் நடுவில் மிகப் பெரிய கருந்தூண்களுடன் கவர்ச்சி மிக்கத் தோற்றங்கொண்டு விளங்கிய ஒரு செங்கல் கட்டிடம். அவர் உடனேயே எங்களை லாஹிரி மகாசயரின் பெரியதாக்கப்பட்டிருந்த படத்தால் அழகூட்டப்பட்டிருந்த அறைக்கு அழைத்துச் சென்றார். அந்த ஸ்வாமி தொண்ணூறு வயதை எட்டிக் கொண்டிருந்த போதிலும் அவரது சதைப் பிடிப்பான உடல், வலிமையையும்

ஆரோக்கியத்தையும் வெளிப்படுத்தியது. நீண்ட முடியுடனும், பனியைப் போன்ற வெளுத்த தாடியுடனும் கண்கள் ஆனந்தத்தில் பளிச்சிட, அவர் மெய்யாகவே ஒரு குரு சிரேஷ்டரின் உருவமாகத் தோற்றமளித்தார். இந்தியாவின் மகான்களைப் பற்றி எழுதப் போகும் என் புத்தகத்தில் அவரது பெயரை நான் குறிப்பிட விரும்புவதாகத் தெரிவித்தேன்.



ஸ்வாமி கேசவானந்தர் (90 வயதான லாகிரி மகாசயரின் சீடர்), யோகானந்தர் மற்றும் சி.ரிச்சர்ட் ரைட். கேசவானந்த ருடைய ஆசிரமத்தில், பிருந்தாவன், 1936.

தயவு செய்து தங்கள் ஆரம்ப வாழ்க்கையைப் பற்றி எனக் குக் கூற வேண்டும், நான் புன்னகையுடன் கெஞ்சினேன். பெரிய யோகிகள் சாதாரணமாக அதிகம் பேசுவதில்லை.

கேசவானந்தர் அடக்க பாவமான சைகை புரிந்தார். வெளியில் சொல்லும்படியாக எதுவும் இல்லையே. அனுபவ ரீதியில் என் வாழ்வின் பெரும்பாகம், இமயச் சாரல்களில் அமைதியான ஒரு குகையிலிருந்து இன்னொரு குகைக்குக் கால்நடையாகச் சென்று, ஏகாந்தமான இடங்களில் கழிந்தது எனலாம். கொஞ்ச காலம் ஹரித்துவாருக்கு அருகில் நாலா புறமும் உயர்ந்த மரங்களாலான சோலையால் சூழப்பட்ட இடத்தில் ஓர் ஆசிரமம் அமைத்திருந்தேன். அது, நாகப் பாம்புகளின் அதிகமான நடமாட்டத்தினால், பயணிகள் அதிகம் வருகை தராமல், அமைதியான இடமாக இருந்தது. கேசவானந்தர் சிரித்துக் கொண்டார். பின்னர் கங்கை நதியின் வெள்ளம் ஒன்று ஆசிரமத்தையும் பாம்புகளையும் சேர்ந்தாற் போல் அடித்துக் கொண்டு போய் விட்டது. பிறகு என் சீடர்கள் இந்த பிருந்தாவன் ஆசிரமத்தை அமைக்க உதவினார்கள்.

எங்களுடன் வந்த ஒருவர் இமாலயப் புலிகளிடமிருந்து அவர் தன்னை எப்படிப் பாதுகாத்துக் கொண்டாரென்பதை விசாரித்தார்.

கேசவானந்தர் தலையை அசைத்தார். அந்த உயர்ந்த ஆன்மீகச் சிகரங்களில் காட்டு மிருகங்கள் யோகிகளைத் துன்புறுத்துவதில்லை. ஒரு தடவை நான் காட்டில் ஒரு புலியை நேருக்கு நேர் சந்தித்தேன். என் திடீர் கூச்சலில் அம்மிருகம் கற்சிலையைப் போன்று ஆடாமல் அசையாமல் நின்று விட்டது. மறுபடி அந்த ஸ்வாமி பழைய நினைவுகளை நினைத்துச் சிரித்துக் கொண்டார்[8].

எப்பொழுதாவது நான் என் தனிமையை விட்டு விட்டு காசியில் உள்ள என் குருவைச் சந்திக்கச் செல்வேன். இமாலய வனாந்தரங்களில் என்னுடைய இடைவிடாத பிரயாணங்களைப் பற்றி அவர் என்னைக் கேலி செய்வது வழக்கம்.

அவர் ஒரு தடவை என்னிடம், உன் பாதத்தில் சுற்றித் திரியும் வேட்கையின் குறி இருக்கிறது. நல்ல வேளையாக நீ சுற்றித் திரிவதற்கேற்ப புனித இமயம் விசாலமாக இருக்கிறதே என்று மகிழ்ச்சியுறுகிறேன், என்றார்.

லாஹிரி மகாசயர் உயிருடன் இருந்தபொழுதும் மறைந்த பிறகும் பல தடவைகள் என் முன் சரீரத்துடன் தோன்றி இருக்கிறார். அவருக்கு இமயத்தின் எந்த உயரமும் எட்ட முடியாத ஒன்றல்ல! என கேசவானந்தர் தொடர்ந்தார்.

இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு எங்களைச் சாப்பாட்டு அறைக்கு அழைத்துச் சென்றார். நான் மௌனமான கலக்கத்துடன் பெருமூச்செறிந்தேன். இன்னொரு பதினைந்து விதங்கள் கொண்ட சாப்பாடு! இந்திய உபசாரத்தில் ஒரு வருடத்திற்குள்ளேயே நான் ஐம்பது பவுண்டுகள் எடை கூடி இருந்தேன்! இருந்தாலும் என்னைக் கௌரவிப்பதற்காக ஏற்பாடு செய்யப்படும் முடிவற்ற விருந்துகளில், அக்கறையுடன் தயார் செய்யப்படும் எந்த உணவு வகையையும் மறுப்பது மிக நாகரிகமற்றதாகக் கருதப்பட்டிருக்கும். இந்தியாவில் (அந்தோ! வேறெங்குமே இல்லையே) நன்றாகக்

கொழுத்த சாமியார் கண்ணுக்கு விருந்தாகக் கருதப்படுகிறார்.

இரவு சாப்பாட்டிற்குப் பிறகு கேசவானந்தர் என்னை ஒரு தனிமையான மூலைக்கு அழைத்துச் சென்றார்.

உன் வரவு, எதிர்பாராத ஒன்றில்லை, என்றார் அவர். உனக்கு ஒரு செய்தி வைத்திருக்கிறேன்.

எனக்கு ஒரே ஆச்சரியம். ஏனெனில் கேசவானந்தரைச் சந்திக்கப் போகும் திட்டத்தைப் பற்றி யாருக்கும் தெரியாது.

சென்ற வருடம் பத்ரிநாராயணுக்கருகில் வட இமயப் பிரதேசத்தில் அலைந்து கொண்டிருந்த பொழுது நான் வழி தவறி விட்டேன், அந்த ஸ்வாமி தொடர்ந்தார். ஒரு விசாலமான குகை தங்குவதற்குத் தென்பட்டது. அதன் கட்டாந் தரையிலுள்ள ஒரு குழியில் தீயின் தணல் கனன்று கொண்டிருந்தது; ஆனாலும் அது காலியாகவே இருந்தது. தனியான அந்தக் குகையில் வசிப்பவரைப் பற்றி அதிசயித்த வாறு நான் அந்தக் கணப்பின் அருகில் அமர்ந்தேன். சூரிய ஒளி படர்ந்த அந்தக் குகையின் வாயிலில் என் பார்வை பதிந்திருந்தது.

கேசவானந்தா, நீ இங்கு வந்ததைப் பற்றி எனக்கு மகிழ்ச்சி. இச்சொற்கள் என் பின்னாலிருந்து வந்தன. நான் திரும்பினேன், திடுக்கிட்டேன், மேலும் பாபாஜியைக் கண்டு கண் கூசப் பெற்றேன்! அந்த மகாகுரு அக்குகைக்குள்ளிருந்து தோன்றியருளினார். பல வருடங்களுக்குப் பிறகு அவரைக் கண்டதில் மனங்கொளா மகிழ்ச்சியடைந்து அவரது புனிதத்

திருவடிகளில் விழுந்து வணங்கினேன்.

நான்தான் உன்னை இங்கு அழைத்தேன், பாபாஜி தொடர்ந்தார். அதனால்தான் நீ வழி தவறி என் தற்காலிக இருப்பிடமான இக்குகைக்கு அழைத்து வரப்பட்டாய். நமது கடைசி சந்திப்பிற்குப் பின்னர் வெகு காலமாகிவிட்டது. மற்றுமொருமுறை உன்னை வரவேற்பதில் நான் மகிழ்ச்சியுறுகிறேன்.

மரணமற்ற அந்தக் குருதேவர் ஆன்மீகத்தில் உதவும் வகையில் சில சொற்களைக் கூறி என்னை ஆசீர்வதித்தார். பிறகு தொடர்ந்து நான் யோகானந்தாவிற்கு ஒரு செய்தி கூறுகிறேன். அவன் இந்தியாவிற்குத் திரும்பிய பிறகு உன்னைக் காண வருவான். அவனுடைய குரு மற்றும் லாஹிரியின் சீடர்களுள் உயிருடன் இருப்பவர்கள் தொடர்பான பல விஷயங்கள் யோகானந்தாவை முழுமையாக வேலையில் ஆழ்த்தியிருக்கும். அப்பொழுது அவனிடம், இந்த தடவை அவன் ஆவலுடன் எதிர்பார்த்தபடி நான் அவனைக் காணப் போவதில்லை; ஆனால் நான் அவனை இன்னொரு சமயத்தில் சந்திக்கிறேன் என்று கூறவும்.

கேசவானந்தரின் வாயிலிருந்து பாபாஜியின் இந்த ஆறுதலான வாக்குறுதியைக் கேட்டதும் என் மனம் நெகிழ்ந்தது. என் இதயத்தில் இருந்த ஒரு வேதனை மறைந்தது. ஸ்ரீ யுக்தேஸ்வர் குறிப்பாகக் கூறியது போல் கும்பமேளாவில் பாபாஜி தோன்றவில்லையே என்று நான் மேலும் கவலைப் படவில்லை.

ஆசிரமத்தின் விருந்தினர்களாக ஓர் இரவு தங்கிவிட்டு மறுநாள் மதியம் நாங்கள் கல்கத்தாவிற்குக் கிளம்பினோம். யமுனை நதியின் ஒரு பாலத்தைக் கடக்கையில் பிருந்தாவனத்தின் தொடுவானக் காட்சிசூரியன் ஆகாயத்தில் தீ மூட்டினாற் போலும், எரிமலையின் வண்ண உலை போலும் இருந்த அதியற்புதமான காட்சி, எங்களுக்குக் கீழே யமுனை நதியின் அமைதியான நீரில் பிரதிபலித்ததைக் கண்டு மகிழ்ந்தோம்.

யமுனை நதிக்கரை, குழந்தை ஸ்ரீ கிருஷ்ணனின் நினைவுகளால் புனிதமடைந்துள்ளது. இங்கு அவன் தன் கள்ளமற்ற இனிய லீலை (விளையாட்டு)களால் கோபிகைகளுடன் விளையாடி, தெய்வ அவதாரத்திற்கும் அவன் அடியவர்களுக்கும் இடையே என்றும் நிலவும் பேரன்பின் பெருமையை உலகுக்கு உணர்த்தி யிருக்கிறான். பகவான் கிருஷ்ணனின் அவதார வாழ்க்கையைப் பல மேல்நாட்டு விமரிசகர்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். சாஸ்திர உருவகக் கதைகள் சாதாரண புத்தியைக் குழப்பமடையச் செய்கின்றன. ஒரு மொழி பெயர்ப்பாளரின் வேடிக்கையான தவறு இந்த விஷயத்தைத் தெளிவுபடுத்தும். இந்தக் கதை, மத்திய காலத்தைச் சேர்ந்த சக்கிலியத் தொழில் செய்து வந்த மிக்க மேம்பாடு அடைந்த திருத்தொண்டரான ரவிதாஸ் என்பவரைப் பற்றியது. அவர் எல்லா மனிதர்களிடமும் மறைந்து கிடக்கும் ஆன்மீக ஒளியைப் பற்றி அவருக்கே

உரித்தான தொழில் முறையில் எளிய சொற்களில் பாடுகிறார்.

> விசாலமான நீலக் கோளத்தின் கீழ்
> மறை தோலுடுத்தி வாழும் இறை.

ரவிதாஸரின் செய்யுளுக்கு, ஒரு மேல்நாட்டவரின் பாமரத்தனமான விளக்கத்தைக் கேட்டால், சிரிப்பை மறைப்பதற்கு ஒருவர் ஒரு பக்கமாகத் திரும்பிக் கொள்ள வேண்டும்.

> பிறகு அவர் ஒரு குடிசையைக் கட்டி, அதனுள் தோலினால் அவர் செய்த ஒரு பிரதிமையை வைத்து, அதை வழிபடத் தொடங்கினார்.

ரவிதாஸ், மகா கபீரின் சகோதர சீடர். ரவிதாஸின் மேன்மையான சீடர்களில் சித்தூர் ராணியும் ஒருவர். அவர் தன் குருவிற்கு மரியாதை செலுத்தும் பொருட்டு ஒரு பெரிய விருந்து வைத்தார். அதற்கு அனேக பிராமணர்களை அழைத்திருந்தார். ஆனால் அவர்கள் கீழ்சாதியரான ஒரு சக்கிலியனுடன் சேர்ந்து உணவு உட்கொள்ள மறுத்துவிட்டனர். அவர்கள் கௌரவமாகத் தள்ளி உட்கார்ந்து தங்கள் மாசுபடா உணவை உண்ணத் தொடங்குகையில் ஐயோ! இதென்ன?ஒவ்வொரு பிராமணரின் பக்கத்திலும் ரவிதாஸின் உருவம் தென்பட்டது. இப்பெருங்காட்சி சித்தூரில் மிகப்பெரிய ஆன்மீக மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தது.

சில தினங்களில் எங்கள் சிறு குழு கல்கத்தாவை அடைந்தது. ஸ்ரீ யுக்தேஸ்வரைக் காண மிக ஆவலுடன் இருந்த நான், அவர் செராம்பூரை விட்டுவிட்டு முந்நூறு மைல்கள் தெற்கிலுள்ள பூரியில் தற்போது இருப்பதைக் கேட்டு ஏமாற்ற மடைந்தேன்.

பூரி ஆசிரமத்திற்கு உடனே வரவும், இந்தத் தந்தி மார்ச் 8ந் தேதி, கல்கத்தாவிலுள்ள குருதேவரின் சீடர்களில் ஒருவரான அதுல் சந்திர ராய் சௌத்ரிக்கு, சகோதர சீடர் ஒருவரால் அனுப்பப்பட்டிருந்தது. அந்தச் செய்தியின் விஷயம் என் காதுகளை எட்டியது; அதன் பொருளை உணர்ந்து வேதனையடைந்த நான், என் குருதேவரின் உயிரைப் பிழைக்க விடுமாறு மண்டியிட்டு கடவுளிடம் மன்றாடினேன். நான் என் தந்தையின் வீட்டிலிருந்து ரயிலுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த பொழுது என்னுள்ளே ஒரு தெய்வீகக் குரல் எழுந்தது.

இன்றிரவு பூரிக்குச் செல்ல வேண்டாம். உன் பிரார்த்தனை நிறைவேற்றப்படாது.

இறைவா, நான் துக்கத்தில் துடித்துப் பேசினேன். பூரியில் என்னுடன் மல்லுக்கு நிற்க உனக்கு விருப்பமில்லை போலும். அங்கு குருதேவரின் உயிருக்காக இடைவிடாத என் பிரார்த்தனைகளை நீ மறுத்துவிடத்தான் வேண்டுமா? அப்படியெனில், அவர் இன்னும் மேலான கடமைகளை நிறைவேற்ற உனது கட்டளைப்படி செல்லத்தான் வேண்டுமா? என் உள் மனத்தின் ஆணைக்கிணங்க நான் அன்றிரவு பூரிக்குப் புறப்படவில்லை. மறுநாள் மாலை நான் ரயிலுக்குப் புறப்பட்டேன்; போகும் வழியில் ஏழு மணிக்கு ஒரு பெரிய சூட்சும மேகம் திடீரென்று ஆகாயத்தை மறைத்தது.[9] பிறகு ரயில் வண்டி பூரியை நோக்கி கர்ஜித்துச் செல்லுகையில் ஸ்ரீ யுக்தேஸ்வரின் உருவம் என் முன் தோன்றியது. அவர், மிகத் தீவிரமான முகத்

தோற்றத்துடன் ஒவ்வொரு பக்கத்திலும் ஒளியுடன் அமர்ந்திருந்தார்.

எல்லாம் முடிந்து விட்டதா? நான் கெஞ்சியவாறு கைகளைத் தூக்கினேன்.

அவர் தலையை அசைத்தார், பிறகு மெதுவாக மறைந்தார்.

நான் மறுநாள் காலை பூரி ரயில் நிலைய பிளாட்ஃபா ரத்தில் நம்பிக்கைக்கு மாறாக நம்பிக்கொண்டு நின்ற பொழுது அறிமுகமில்லாத ஒரு மனிதர் என்னை அணுகினார்.

உங்கள் குருதேவர் போய்விட்டாரென்பதைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டீர்களா? பிறகு ஒரு வார்த்தை கூட கூறாமல் அவர் என்னை விட்டகன்றார். அவர் யாரென்பதையும் என்னை அங்கு காணமுடியுமென்று அவருக்கு எப்படித் தெரியும் என்பதையும் நான் அறியவே முடியவில்லை.

திடுக்கிட்டு, நான் பிளாட்ஃபாரத்தின் சுவரில் சாய்ந்து கொண்டேன். என் குருதேவர் அந்த துக்ககரமான செய்தியை எனக்குப் பல வழிகளில் தெரிவிக்க முயன்றிருக்கிறாரென்று உணர்ந்தேன். பொங்கும் என் ஆன்மா அடங்காமல் குமுறி ஒரு எரிமலையைப் போன்றிருந்தது. நான் பூரி ஆசிரமத்தை அடைகின்ற சமயத்தில் விழுந்து விடும் நிலையிலிருந்தேன். உள் மனம் இதமாக திரும்பத் திரும்ப, உன்னைத் திடப்படுத்திக் கொள். அமைதியடை, என்று கூறியது.

நான் குருதேவரின் உடல் வைக்கப்பட்டிருந்த ஆசிரம

அறையை அடைந்தேன். அவரது உடல் நம்பமுடியாத உயிர்க்களையுடன்ஆரோக்கியமும் அழகும் சேர்ந்த காட்சியாக, பத்மாசனத்தில் அமர்ந்திருந்தது. குருதேவர் இறப்பதற்குக் கொஞ்ச காலம் முன்பு, அவர் ஜூரத்தினால் லேசாக நலக்குறைவுற்றிருந்தார். ஆனால் அவர் பரம் பொருளுடன் ஒன்றுவதற்கு முதல் நாள் அவரது உடல்நிலை முழுதும் சரியாகி விட்டது. எத்தனை தடவை நான் அவர் அன்பு உருவத்தைக் கண்டாலும் என்னால் அதில் உயிர் இல்லை என்று நம்ப முடியவில்லை. அவர் மேனி வழவழப்பாகவும் மிருதுவாகவும் இருந்தது; அவரது முகத்தில் தெய்வீக அமைதி குடிகொண்டிருந்தது. அவர் தெய்வீக அழைப்பின் நேரம் வந்தவுடன் தன் உடலை உணர்வுடனேயே நீத்திருக்கிறார்.

வங்காள சிங்கம் போய்விட்டது! நான் கலக்கத்தில் கதறினேன்.

நான் மார்ச் 10ந் தேதி செய்யவேண்டிய உத்தர கிரியைகளைச் சரிவரச் செய்தேன். சன்னியாசிகளுக்குரிய பழமையான சடங்குகளுடன் ஸ்ரீ யுக்தேஸ்வர் அவரது பூரி ஆசிரமத்தின் தோட்டத்தில் புதைக்கப்பட்டார்.[10] பின்னர் அவரது சீடர்கள் அருகிலிருந்தும் தூரத்திலிருந்தும் சமராத்திரி (வசந்தகால விஷு) தினத்தில் அவருடைய ஞாபகார்த்த சடங்கில் பங்கெடுத்து தங்கள் மரியாதையைச் செலுத்த வந்திருந்தனர். கல்கத்தாவின் முதன்மையான செய்தித்தாளான அமிர்த பஜார் பத்ரிகா, அவரது

போட்டோவுடன் பின்வரும் செய்திக் குறிப்பைப் பிரசுரித்திருந்தது.

> 81 வயதான ஸ்ரீமத் ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வர் கிரி மகராஜ் அவர்களது மரண பண்டாரா (திவசச் சடங்கு) மார்ச் 21ல் பூரியில் நடந்தது. இந்தச் சடங்குகளுக்கு அனேக சீடர்கள் பூரிக்கு வந்திருந்தனர்.
>
> பகவத் கீதைக்கு விளக்கவுரை எழுதிய மிகச் சிறப்பானவர்களில் ஒருவரான ஸ்வாமி மகராஜ் அவர்கள், காசியின் யோகிராஜ் ஸ்ரீ சியாமா சரண் லாஹிரி மகாசயருடைய முக்கிய சீடராவார். ஸ்வாமி மகராஜ் இந்தியாவில் பல யோகதா சத்சங்க (ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்) மையங்களை நிறுவியவராவார். மேலும் அவருடைய முக்கிய சீடரான ஸ்வாமி யோகானந்தருக்கு மேலை நாடுகளில் யோக இயக்கத்தைப் பரப்புவதற்கு மிகுந்த ஊக்கமளித்தவர். ஸ்ரீ யுக்தேஸ்வரின் தீர்க்கத் தரிசனத்திறனும் ஆழ்ந்த ஞானமும்தான் ஸ்வாமி யோகானந் தருக்கு கடல் கடந்து சென்று அமெரிக்காவில் இந்திய மகாத்மாக்களின் உபதேசத்தைப் பரப்புவதற்கு வேண்டிய ஆதார சக்தியாயிருந்தது.
>
> பகவத் கீதை மற்றும் இதர ஆன்மீக நூல்கள் பற்றிய ஸ்ரீ யுக்தேஸ்வரின் உரைகள், கிழக்கு, மேற்கு நாடுகளின் தத்துவத்தில் அவருக்கிருந்த ஞானத்தை பறைசாற்றுகின்றன. மேலும் மேல்திசை, கீழ்த்திசை நாடுகள் ஆகிய இரண்டிற்கும் இடையிலுள்ள ஒற்றுமையை தெளிவுபடத் தெரிவிப்பதாக அமைந்துள்ளன. அனைத்து சமயங்களின் ஒற்றுமையில் அவர் நம்பிக்கை வைத்திருந்ததால் ஸ்ரீ யுக்தேஸ்வர் மகராஜ் பல்வேறு பிரிவுகளையும் சமயங்களையும் சார்ந்த தலைவர்களின் ஒத்துழைப்புடன் சாது சபாவை (சாதுக்களின் சங்கம்) நிறுவினார். இதன் நோக்கம் சமய உண்மைகளை விஞ்ஞான ரீதியில் புகட்டுவதாகும். அவர் மரணத்தறுவாயில் தன் வாரிசான ஸ்வாமி யோகானந்தரை சாது சபாவின் தலைவராக நியமித்தார்.
>
> பாரதத்திற்கு அந்த மகானின் மறைவு, ஒரு பெரிய இழப்பாகும். அவருடன் நெருங்கிப் பழகும் பேறு பெற்றவர்கள், பாரதத்தின் பண்பையும் சாதனையையுமே உருவாகக் கொண்டிருந்த அவருடைய உண்மையான இயல்பை உள்ளபடி உணர்ந்து கொள்வார்களாக.

நான் கல்கத்தாவிற்குத் திரும்பினேன். செராம்பூர் ஆசிரமத்திற்கு அதன் புனிதமான நினைவுகளுடன் நான் செல்வதில் என் மீதே எனக்கு நம்பிக்கை இல்லாததனால், ஸ்ரீ யுக்தேஸ்வரின் பால சீடனான பிரஃபுல்லாவை அழைத்து அவனை ராஞ்சி பாடசாலையில் சேர்க்க ஏற்பாடு செய்தேன்.

நீங்கள் அலகாபாத் மேளாவிற்குச் சென்ற தினம்

காலை, பிரஃபுல்லா என்னிடம் கூறினான், குருதேவர் சாய்வு மேசையின் மீது விழுந்தார்.

யோகானந்தா சென்று விட்டான்! அவர் அழுதார். யோகானந்தா சென்று விட்டான்! அவர் புதிராகக் கூறினார், நான் வேறு விதமாக அவனுக்குக் கூறியாக வேண்டும். பிறகு மணிக்கணக்கில் மௌனமாக உட்கார்ந்திருந்தார்.

என்னுடைய நாட்கள் பிரசங்கங்களிலும், வகுப்புகள் நடத்துவதிலும், நேர்முகச் சந்திப்புகளிலும், பழைய நண்பர்களுடன் மறுபடி சேர்வதிலும் கழிந்து கொண்டிருந்தன. ஒரு மேலார்ந்த புன்னகைக்கும் இடைவிடாத வேலை நிறைந்த வாழ்க்கைக்கும் அடியில் என் உள்ளார்ந்த ஆனந்தத்தில்பல வருடங்களாக என் எல்லா எண்ணங்களிலும் படர்ந்து நின்ற அந்த ஆனந்தத்தில்ஒரு கருமைக் கறை படிந்து களங்கமடையச் செய்தது.

அந்தத் தெய்வீக முனிவர் எங்கே சென்றார்? வேதனை நிறைந்த என் ஆத்மாவின் ஆழத்திலிருந்து நான் மௌனமாக அழுதேன்.

எந்த பதிலும் கிடைக்கவில்லை.

என் மனம், குருதேவர் தன் பிரபஞ்ச அன்பனுடன் இரண்டறக் கலந்ததே மிக நல்லது, என்று எனக்கு உறுதிப் படுத்தியது. சிரஞ்சீவித்துவம் பெற்ற பரவெளியில் அவர் நிரந்தரமாக ஒளிர்ந்து கொண்டிருக்கிறார்.

திரும்பவும் நீ என்றுமே அவரை பழைய செராம்பூர்

ஆசிரமத்தில் காணமுடியாதே, என் இதயம் புலம்பியது. இனி என்றுமே உன் நண்பர்களை அவரிடம் அழைத்து வரவும் முடியாது; அதோ பார், இந்தியாவின் ஞானாவதாரம் அமர்ந்திருப்பதை! என்று பெருமையாகக் கூறவும் முடியாது.

திரு. ரைட் ஜூன் மாத ஆரம்பத்தில் எங்கள் குழு மும்பையிலிருந்து மேலை நாட்டிற்குக் கப்பலேறிச் செல்ல ஏற்பாடு செய்தார். கல்கத்தாவில் மே மாதத்தில் இரு வாரங்கள், பிரிவு உபசாரக் கூட்டங்களும் பிரசங்கங்களுமாக முடிந்த பிறகு நான், செல்வி ப்ளெட்ஷ், திரு. ரைட் ஆகியோர், ஃபோர்ட் வண்டியில் மும்பைக்குப் பயணமானோம். நாங்கள் அங்கு சென்ற பிறகு கப்பல் அதிகாரிகள், ஃபோர்ட் காருக்கு கப்பலில் இடமில்லாததனால் எங்கள் பிரயாணத்தை ரத்து செய்யும்படி கூறினார்கள். அந்த வண்டி, ஐரோப்பாவிற்குச் சென்றதும் எங்களுக்கு மீண்டும் வேண்டியிருக்கும்.

போனால் போகிறது போ, நான் திரு. ரைட்டிடம் துக்கத்துடன் கூறினேன். நான் மறுபடியும் பூரிக்குச் செல்ல விரும்புகிறேன், நான் மௌனமாகக் கூறிக் கொண்டேன். என் கண்ணீர் மறுபடியும் என் குருதேவரின் சமாதியைக் கழுவட்டும்.



டிசம்பர் 1935ல் ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வரால் கொண்டாடப்பட்ட கடைசி சங்கிராந்தி உற்சவம். செராம்பூர் ஆசிரம முற்றத்தில் மேஜைக்கருகில் யோகானந்தர் தன் உயர்ந்த குரு (நடுவில்) விற்குப் பக்கத்தில் அமர்ந்திருக்கிறார்.



ஸ்ரீ யோகானந்தர் (நடுவில், கருநிற அங்கி) 1935, கல்கத்தாவில் அவருடைய தந்தையார் இல்லத்தில் நடத்திய யோகதா போதனைகள் வகுப்பிற்கு வந்திருந்த கிரியா யோக மாணவர்களுடன். அதிக எண்ணிக்கையில் மாணவர்கள் வந்ததால், யோகானந்தரின் இளைய சகோதரரும் புகழ்பெற்ற தேகாப்பியாச நிபுணருமான விஷ்ணுகோஷ், அருகில் நடத்தி வந்த திறந்தவெளி உடற்பயிற்சி பள்ளியில் வகுப்பு நடத்தப்பட்டது.



ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வரின் சமாதிக் கோயில், பூரி

1 பதவுரை: பரம-மிக உயர்ந்தது; ஹம்ஸஅன்னம். புராணத்தின்படி வெண்மையான அன்னம் படைப்புக் கடவுளான பிரம்மாவிற்கு வாகனம் அல்லது ஊர்தியாக குறிப்பிடப்படுகிறது. அந்தத் தெய்வீக ஹம்ஸம், பாலும் நீரும் கலந்த கலவையிலிருந்து பாலை மட்டும் பிரித்து அருந்தும் திறனுடையது என்று கூறப்படுவதால், ஆன்மீக வேறுபாடு கண்டறிவதன் சின்னமாக விளங்குகிறது.

அஹ-ம்ஸ அல்லது ஹம்ஸ (உச்சரிப்பு ஹாங்ஸா) என்பதன் பதவுரை நான் அவனே என்பதாம். இந்தப் பெரும் சக்திபடைத்த சமஸ்கிருத அசை உச்சரிப்புகள், உள்ளே செல்லும் மூச்சுடனும் வெளியே செல்லும் மூச்சுடனும் அதிர்வலைத் தொடர்பு கொண்டுள்ளன. இவ்வாறாக மனிதன் அவனுடைய ஒவ்வொரு மூச்சுடனும் அவனையறியாமலேயே நான் அவனே என்னும் உண்மையை உறுதி செய்கிறான்.

2 அவர்கள் என்னை ஸர் என அழைப்பதின் மூலம் சிரமத்தைப் பொதுவாக தவிர்த்துக் கொள்கிறார்கள்.

3 அதாவது எத்தனையோ காலங்காலமான வேர்களிலிருந்து எழுகின்ற பழைய மரண அனுபவங்கள். இந்தப் பகுதி பதஞ்சலி யோக சூத்திரங்களில் காணப்படுகிறது II:9

4 பழமையான மகாபாரதத்தில், மதச் சார்பான மேளாக்கள் குறிப்பிடப்

பட்டிருக்கின்றன. சீன யாத்திரீகர் யுவான் சுவாங் கி.பி. 644ல் அலகாபாத்தில் நடந்த பெரிய கும்பமேளாவைப் பற்றிய விவரங்களைக் குறிப்பிட்டிருக்கிறார். கும்பமேளா ஒவ்வொரு மூன்றாவது ஆண்டும் முறையாக ஹரித்துவார், அலகாபாத், நாஸிக், உஜ்ஜயினி ஆகிய நகரங்களில் நடைபெறும். இப்படி ஹரித்துவாருக்கு அடுத்தச் சுற்று வரும் பொழுது பன்னிரண்டு ஆண்டுகள் கொண்ட ஒரு சுற்று முடிவுறும். ஒவ்வொரு நகரமும் அதன் கும்பம் முடிந்து ஆறு வருடங்களுக்குப் பிறகு அர்த (அரை) கும்பத்தை நடத்தும். இவ்வாறாக, கும்பமும், அர்த கும்பமும் வெவ்வேறு நகரங்களில் மூன்று வருடங்களுக்கு ஒரு முறை நடைபெறும்.

யுவான் சுவாங், வட இந்தியாவின் அரசரான ஹர்ஷ சக்கரவர்த்தி, கும்பமேளா சமயத்தில் அரச பொக்கிஷத்தில் ஐந்து ஆண்டுகளில் சேர்ந்த அத்தனை செல்வத்தையும் சன்னியாசிகளுக்கும் யாத்திரீகர்களுக்கும் தானம் செய்து விடுவாரென நமக்குக் கூறுகிறார். யுவான் சுவாங் சீனாவிற்குத் திரும்பிச் செல்லும் பொழுது ஹர்ஷர் பிரிவுபசாரமாகக் கொடுத்த பொன்னையும் மணியையும் நிராகரித்துவிட்டு, அதனைவிட அதிக மதிப்புள்ளதென்று 657 மத சம்பந்தமான கையெழுத்துப் பிரதிகளை எடுத்துச் சென்றார்.

5 என் அன்னை, மூத்த சகோதரர் அனந்தா, மூத்த சகோதரி ரோமா, குருதேவர், தந்தை இன்னும் அனேக அன்புக்குரியவர்களின் மரணங்களின் போது நான் அருகில் இல்லை. (தந்தை கல்கத்தாவில் 1942 ல் தனது எண்பத்தொன்பதாவது வயதில் காலமானார்.)

6 லட்சக்கணக்கான இந்திய சாதுக்கள், இந்தியாவின் ஏழு பெரிய பிரிவுகளுக்குப் பிரதிநிதியான ஏழு தலைவர்களடங்கிய ஒரு செயற்குழுவினால் கட்டுப்படுத்தப்படுகிறார்கள். ஸ்ரீ ஸ்ரீ ஜயேந்திர பூரி தற்போதைய தலைவர் அல்லது மகாமண்டலேஸ்வரர். இந்த தெய்வீக மனிதர் மிகவும் தன்னுள்ளடங்கியவர். தம் பேச்சை வெகுவாக மூன்றே சொற்களில்உண்மை, அன்பு, உழைப்புஅடக்கிவிடுபவர். போதுமான பிரசங்கம்!

7 தன் ஞானக் கண்ணால் காண்பவர் என்ற பொருள்படும் ஒரு பட்டம். (ஊனக் கண் இல்லாதவர்)

8 ஒரு புலியை ஏமாற்ற அனேக முறைகள் உள்ளன எனத் தெரிகிறது. ஓர் ஆஸ்திரேலிய ஆய்வுப் பயணி, ஃபிரான்சிஸ் பர்ட்ல்ஸ் என்பவர் இந்திய வனாந்திரங்கள் பலதரப்பட்டனவாகவும், அழகாகவும், பாதுகாப்பானதாகவும் காணப்படுகின்றன என்று குறிப்பிட்டிருக்கிறார். அவரைக் காக்கும் தாயத்து வெறும் ஒட்டுக் காகிதங்கள் தான். ஒவ்வொரு இரவும் நான் தங்குமிடத்தைச் சுற்றிலும் இக்காகிதங்களை விரிந்து விடுவேன். எனக்கு எந்தத் தொந்தரவும் ஏற்பட்டதில்லை, என்கிறார். அதன் காரணம் மனோதத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. புலி மிகக் கௌரவ உணர்வைக் கொண்ட மிருகம். அது அலைந்து திரிந்து, அந்தக் காகிதங்களின் அருகில் வருகிற மட்டும் மனிதனுக்கு சவால் விடுகிறது. பிறகு மெதுவாக நழுவிப் போய்விடுகிறது. கௌரவமான புலி எதுவும் அந்தப் பிசுக்குக் காகிதத்தில் உட்கார்ந்த பிறகு மனிதனை எதிர்க்கத் துணியாது! என அவர் விளக்குகிறார்.

9 ஸ்ரீ யுக்தேஸ்வர் இதே சமயத்தில் மாலை 7.00 மணிக்கு மார்ச் 9ம் தேதி 1936ல் மகாசமாதி அடைந்தார்.

10 இந்துக்களின் வழக்கமான ஈமச் சடங்குகளின்படி இல்லறத்தார்களின் உடல்கள் எரிக்கப்பட வேண்டும். சன்னியாசிகளும் மற்ற பிரிவைச் சேர்ந்த துறவிகளும் எரிக்கப்படுவதில்லை; புதைக்கப்படுகின்றனர். (எப்பொழுதாவது

இதற்கு விதிவிலக்குகள் உண்டு). சன்னியாசம் ஏற்கும் பொழுது அவர்களின் உடல்கள் ஞானத்தீயில் எரிக்கப்பட்டுவிடுவதாக ஐதிகம்.

## அத்தியாயம் 43

# ஸ்ரீ யுக்தேஸ்வர் மீண்டும் உயிர்த்தெழுகிறார்

பகவான் கிருஷ்ணா! நான் மும்பை ரீஜெண்ட் ஹோட்டல் அறையில் அமர்ந்திருந்தபொழுது ஓர் ஒளிப் பிழம்பினூடே அந்த அவதாரத்தின் அழகு உருவம் தோன்றியது. நான் என் மூன்றாவது மாடி அறையின் நீண்ட திறந்த ஜன்னல் வழியே பார்த்துக் கொண்டிருந்த பொழுது, அவ்வீதியின் எதிரேயிருந்த ஓர் உயரமான கட்டிடத்தின் மேல் கூரையில் வர்ணிக்க முடியாத அக்காட்சி என்முன் திடீரென்று தோன்றியது.

அத்தெய்வீக உருவம் புன்சிரிப்புடன் தலையை அசைத்து என்னை நோக்கி வாழ்த்து கூறும் வகையில் கையை அசைத்தது. பகவான் கிருஷ்ணருடைய செய்தி என்ன என்பது எனக்குப் புரியவில்லை. அவர் ஆசீர்வதிக்கும் முறையில் சைகை செய்து மறைந்தார். ஆச்சரியமாக ஓர் உன்னத நிலைக்கு உயர்த்தப்பட்ட நான் ஏதோ ஓர் ஆன்மீக சம்பவம் நடப்பதற்கு இது முன்னோடியாக இருக்கலாமென்று உணர்ந்தேன்.

என் மேல் நாட்டுப் பிரயாணம் தற்காலிகமாக ரத்து செய்யப்பட்டிருந்தது. கல்கத்தாவிற்கும், பூரிக்கும் திரும்பும் முன் மும்பையில் அனேக பொதுக் கூட்டங்ளில் நான் பேசுவதற்கு ஏற்பாடாகியிருந்தது.

1936 ஜூன் 19ந் தேதி மதியம் மூன்று மணியளவில்

பகவான் ஸ்ரீ கிருஷ்ணரின் காட்சிக்கு ஒரு வாரத்திற்குப் பிறகு மும்பை ஹோட்டலில் என் கட்டிலில் அமர்ந்து நான் தியானம் செய்து கொண்டிருந்தபொழுது ஒரு பேரின்பமய ஒளியினால் என்னுடைய தியானத்திலிருந்து எழுப்பப்பட்டேன். என் திறந்த வியப்படைந்த கண்களுக்கு முன்னால் சூரிய ஒளியானது ஒரு தெய்வீக சோபையாக உருமாறி, அந்த முழு அறையே விசித்திர உலகமாக மாறியிருந்தது.

ஸ்ரீ யுக்தேஸ்வரின் ரத்தமும் சதையும் கூடிய உருவம் என் முன் தோன்றியதும் பேரானந்த அலைகள் என்னைச் சூழ்ந்து கொண்டன.

குருதேவர் முகத்தில் மனத்தை மயக்கும் தெய்வீகப் புன்னகை படர என் மகனே! என்று மென்மையாக அழைத்தார்.

என் வாழ்விலேயே முதல் தடவையாக நான் அவர் காலில் விழுந்து வணங்காமல் உடனே ஓடிச்சென்று அதீத ஆவலுடன் அவரை என் கைகளினால் ஆரத்தழுவி அப்படியே கட்டிக் கொண்டுவிட்டேன். மிக அபூர்வமான நேரம்! இப்பொழுது என் மீது பொழியப்படும் பரமானந்தத்துடன் ஒப்பிடும்பொழுது, சென்ற மாதங்களில் நான் அடைந்த வேதனை பெயரளவிற்கு மட்டுமே எனத் தோன்றியது.

என் குருதேவா, என் இதயத்தின் அன்பே, என்னை ஏன் விட்டுச் சென்றீர்கள்? ஆனந்த மிகுதியினால் என்னால் சரிவரத் தொடர்ந்து பேச முடியவில்லை. நீங்கள் ஏன் என்னை கும்பமேளாவிற்குச் செல்ல

அனுமதித்தீர்கள், உங்களை விட்டுச் சென்றதற்காக என்னையே நான் எவ்வளவு நொந்து கொண்டேன் தெரியுமா! நான் முதன் முதலில் பாபாஜியைச் சந்தித்த யாத்திரை தலத்தைப் பார்க்க விழைந்த உன் ஆவலை நான் கெடுக்க விரும்பவில்லை. நான் சிறிது காலம்தான் உன்னை விட்டகன்றிருந்தேன்; இப்பொழுது நான் உன்னுடன் இல்லையா, என்ன?

ஆனால் இது நீங்கள்தானா? தெய்வச் சிங்கமான அதே குருதேவரா? நான் பூரியின் கொடிய மணலில் புதைத்த அதே போன்ற சரீரத்தையா தாங்கள் தாங்கி இருக்கிறீர்கள்?

ஆம், என் குழந்தாய், நான் அதுவேதான். இது ரத்தமும் சதையும் கொண்ட உடல்தான். நான் இதைக் கட்புலனாகாததாக உணர்ந்தாலும் உன் பார்வையில் இது ஸ்தூல உடல்தான். உன் கனவுலகில் பூரியின் கனவு-மணலில் எந்தப் பேரண்ட-கனவு ஸ்தூல உடலை நீ புதைத்தாயோ, அதைப் போலவே முழுதும் புதிய சரீரத்தை பேரண்ட அணுக்களிலிருந்து நான் படைத்தேன். உண்மையில் நான் திரும்ப உயிர்த்தெழுந்திருக்கிறேன்இம்மண்ணில் அல்ல, ஆனால் சூட்சும ஒளி உலகத்தில், என் உயர்ந்த தரங்களைத் தாங்க, மண்ணுலகத்தவரை விட அங்கு வசிப்பவர்கள் இன்னும் அதிகத் திறமை பெற்றவர்களாக இருக்கிறார்கள். அங்கு நீயும் உன் உன்னத அன்பர்களும் என்றாவது ஒரு நாள் என்னுடன் இருப்பதற்கு வருவீர்கள்.

மரணமற்ற குருவே, இன்னும் சொல்லுங்கள்! குருதேவர் ஒரு துடிப்பும் மகிழ்ச்சியும் நிறைந்த சிரிப்பை உதிர்த்தார். அன்பிற்குரியவனே, தயவு செய்து உன் பிடியைக் கொஞ்சம் தளர்த்த மாட்டாயா? என்றார் அவர்.

கொஞ்சம்தான்! நான் ஓர் உடும்புப் பிடியாக அவரைப் பிடித்துக் கொண்டிருந்தேன். முன்பு, அவரது உடலுக்கே உரித்தாயிருந்த அதே இலேசான, மணம் பொருந்திய இயற்கையான வாசனையை நான் உணர முடிந்தது. அந்த மகிமை பொருந்திய நேரத்தைப் பற்றி நான் நினைவு கூறும் சமயங்களில் என் கைகளின் உட்பக்கங்களிலும் உள்ளங்கைகளிலும் அவருடைய தெய்வீக சரீரத்தினுடைய மயிர்க் கூச்செறியும்படியான ஸ்பரிசம் இன்னமும் உள்ளதை உணர்கிறேன்.

மனிதர்கள் தங்களுடைய ஸ்தூல கர்ம வினைகளை அனுபவிக்க அவர்களுக்கு உதவுவதற்காக மகான்கள் மண்ணிற்கு அனுப்பப்படுகிறார்கள். அதுபோல் நான் ஒரு சூட்சும லோகத்தில் உள்ளவர்களுக்கு ஒரு காப்பாளன் போன்று உதவ இறைவனால் அனுப்பப்பட்டிருக்கிறேன், ஸ்ரீ யுக்தேஸ்வர் விளக்கினார். அது ஹிரண்ய லோகம் அல்லது ஒளிமயமான சூட்சும கிரகம் எனப்படும். நான் அங்கு முன்னேறியவர்களுக்கு, அவர்கள் சூட்சும கர்மவினை களிலிருந்து விடுபட்டு அதனால் சூட்சும உலக மறுபிறப்புக்களிலிருந்து முக்தியடைவதற்கு உதவி செய்து கொண்டிருக்கிறேன். ஹிரண்ய லோகத்தில் வசிப்பவர்கள் ஆன்மீகத்தில் மிகவும் வளர்ச்சி பெற்றவர்களாவர்; அவர்கள் அனைவருமே பூமியில்

மரண காலத்தில் தங்கள் ஸ்தூல உடல்களை உணர்வுடனேயே விட்டுவிட்டவர்கள்; தியானத் தினால் உண்டாகும் இச்சக்தியை அவர்கள் தங்கள் கடைசி பிறவி யில் கைவரப் பெற்றவராவர். தங்களுடைய முந்தைய மண்ணுல வாழ்க்கையின் போது சவிகல்ப சமாதி[1] மற்றும் நிர்விகல்ப சமாதி நிலைகளை அனுபவித்திரா விட்டால் யாருமே ஹிரண்ய லோகத்தை அடைய முடியாது.

ஹிரண்ய லோகத்தில் வசிப்பவர்கள் ஏற்கனவே சாதாரண சூட்சும பிரதேசங்களைஅதுதான் அனேகமாக பூமியில் உள்ளவர்கள் இறந்த பின் செல்லவேண்டிய இடம்கடந்துவிட்டவர்கள்; சூட்சும உலகில் தங்கள் கடந்த கால செயல்களுடன் சம்பந்தப்பட்ட வினைகளின் விதைகள் பலவற்றை அங்கே அழித்து விட்டவர்கள். நன்கு முன்னேறிய பக்தர்களால்தான் சூட்சுமப் பிரதேசங்களில் இவ்வாறான மீட்புப் பணியைப் பலனளிக்கக்கூடிய வகையில் செய்ய முடியும்.[2] பிறகு அனைத்து சூட்சும கர்ம வினைகளில் இருந்தும் முழுவதுமாக தங்கள் ஆத்மாக்கள் விடுதலை பெறுவதற்காக வேண்டி, இந்தச் சாதகர்கள் புதிய சூட்சும உடலில் பிறப்பெய்தி ஹிரண்ய லோகம் எனப்படும் சூரிய லோகம் அல்லது சுவர்க்கத்திற்கு பேரண்ட விதிமுறைப்படி ஈர்க்கப்படுகிறார்கள். இங்குதான் நான் அவர்களுக்கு உதவுவதற்காக இருக்கிறேன். மிக மேம்பட்ட காரண லோகத்திலிருந்து வந்திருக்கும் கிட்டத்தட்ட முழுமை பெற்றவர்களும் கூட ஹிரண்ய

லோகத்தில் இருக்கின்றார்கள்.

என் மனம் இப்போது குருவினுடைய மனத்துடன் முழுமையாக ஒன்றி இயங்கியதால் அவர்தன் கருத்துக்களைப் பாதி பேச்சின் மூலமும் பாதி எண்ணப் பரிமாறல் மூலமும் உணர வைத்தார். இவ்வாறாக நான் அவருடைய கருத்துப் பதிவுகளை வேகமாகக் கிரகித்துக் கொண்டிருந்தேன்.

நீ சாத்திரங்களில் படித்திருக்கிறாய், குருதேவர் தொடர்ந்தார். கடவுள், மனித ஆத்மாவைப் படிப்படியாக மூன்று சரீரங்களுக்குள்ளே அடைத்திருக்கிறார்எண்ணம் அல்லது காரண சரீரம்; சூட்சும சரீரம், அதாவது மனிதனின் மனம் மற்றும் உணர்ச்சி இயல்புகளின் இருப்பிடம்; மற்றும் சாதாரண ஸ்தூல சரீரம். பூமியில் மனிதன் தன் புலன்களினால் உணரும் திறனைப் பெற்றிருக்கிறான். சூட்சும சரீர வாசி உணர்வு, பாவனைகள் மற்றும் உயிரணுத் துகள்களால்[3] (lifetrons) ஆன உடல், இவைகளைக் கொண்டு செயல்படுகிறான். காரணசரீரத்தை உடையவர்கள் எண்ணங்களின் பரமானந்தமான வெளியில் வாழ்கிறார்கள். என் வேலை, காரண உலகத்தில் பிரவேசிப்பதற்கு முயல்கின்ற சூட்சும சரீர அன்பர்களுடனானதாகும்.

பூஜ்ய குருவே, சூட்சும பிரபஞ்சத்தைப் பற்றி எனக்கு தயவு செய்து மேலும் கூறுங்கள். ஸ்ரீ யுக்தேஸ்வர் கேட்டுக் கொண்டதற்கிணங்க நான் என் பிடியைக் கொஞ்சம் தளர்த்தியிருந்தாலும் என் கைகள் இன்னும் அவரைச் சுற்றியே இருந்தன. நிதிகள் எல்லாவற்றையும்

விட பெரிய நிதியான என் குருதேவர் என்னிடம் வருவதற்காக மரணத்தைப் பரிகசித்துவிட்டு வந்திருக்கிறார்!

அனேக சூட்சும கிரகங்கள், சூட்சும வாசிகளால் நிரம்பியுள்ளன, குருதேவர் தொடங்கினார். அங்கு வசிப்பவர்கள் ஒரு கிரகத்திலிருந்து இன்னொரு கிரகத்திற்குச் செல்ல மின்சாரத்தைவிடவும் கதிரியக்கச் சக்தியை விடவும் வேகமாகச் செல்லும் சூட்சும விமானங்கள் அல்லது ஒளிப்பிழம்புகளை உபயோகிக்கிறார்கள்.

சூட்சும உலகம், பல்வேறு சூட்சும ஒளி மற்றும் வண்ண அதிர்வுகளால் உண்டாக்கப்பட்டதாகும். சூட்சுமப் பிரபஞ்சம் ஸ்தூலப் பிரபஞ்சத்தை விட பல நூறு மடங்குகள் பெரிதாகும். ஒளியாலான மிகப் பெரிய பலூன் போன்ற சூட்சும வெளிக்குக் கீழே இந்த முழு ஸ்தூல படைப்பும் ஒரு சிறு கெட்டியான கூடையைப் போன்று தொங்கிக் கொண்டு உள்ளது. எவ்வாறு பல ஸ்தூல சூரியர்கள், நட்சத்திரங்கள் வானவெளியில் வலம் வருகின்றனவோ அவ்வாறே எண்ணிறைந்த சூட்சும லோக சூரிய மண்டலங்களும் நட்சத்திர மண்டலங்களும் உண்டு. அவற்றின் கிரகங்கள் இப்புவி மண்டலத்தினுடைய சூரிய சந்திரர்களை விடப் பன்மடங்கு அழகுள்ள சூட்சும லோக சூரிய சந்திரர்களைக் கொண்டுள்ளன. சூட்சும லோகத்து விண்மீன்கள் வட விண்ணொளி (aurora borealis) யை ஒத்திருக்கும். சூட்சும சூரிய விண்ணொளியானது

மிதமான ஒளிக்கதிர்கள் கொண்ட சந்திர விண்ணொளியை விட மிகப் பிரகாசமானதாகும். சூட்சும லோகத்தின் இரவும் பகலும் இம்மண்ணுலகத்தினுடையதை விடவும் நீண்டவை.

சூட்சும லோகமானது எல்லையில்லாத அழகுடன் சுத்தமாகவும் புனிதமாகவும் ஒழுங்குடனும் இருக்கும். அங்கு உயிரற்ற கிரகங்களோ வறண்ட நிலங்களோ இல்லை. மண்ணுலகக் களங்கங்களான களைச்செடிகள், பாக்டீரியா, பூச்சிபுழுக்கள், பாம்புகள் முதலியவை கிடையா. பலதரப்பட்ட சீதோஷ்ண நிலைகளும் பருவங்களும் கொண்ட மண்ணுலகம் போலன்றி சூட்சும கிரங்கள் என்றும் முடிவற்ற வசந்தத்தைப் போன்றே ஒரே சீரான சீதோஷ்ணத்தைக் கொண்டிருக்கும்; எப்பொழுதாவது ஒளிரும் வெண்பனியும் பல்வண்ண ஒளியுடன் கூடிய மழையுடனும் இருக்கும். சூட்சும கிரகங்களில் பல் வண்ண ஏரிகளும் பிரகாசமான கடல்களும் வானவில் நதிகளும் அதிகமாகக் காணப்படும்.

சாதாரண சூட்சுமலோகம், அனேகமாக வெகு சமீபத்தில் மண்ணுலகத்திலிருந்து வந்திருக்கும் லட்சக்கணக்கான சூட்சும வாசிகளால் நிரம்பியிருக்கும். அதிசூட்சுமமான ஹிரண்யலோக சுவர்க்கத்தில் இவ்வாறில்லை. அதுமட்டுமன்றி பல விதமான தேவதைகள், கடற்கன்னிகள், மீன்கள், மிருகங்கள், குட்டிச் சாத்தான்கள், கூளிகள், சிறு தெய்வங்கள் மற்றும் ஆவிகள் ஆகியவை வெவ்வேறு சூட்சும கிரகங்களில்

அவரவர்கள் கர்மவினை தகுதிகளுக்கேற்றபடி நிரம்பியுள்ளன. நல்ல மற்றும் தீய ஆவிகளுக்காக பல விதமான கோள மாளிகைகள் அல்லது அதிர்வலைப் பிரதேசங்கள் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. நல்ல ஆவிகள் சுதந்திரமாக நடமாடமுடியும். ஆனால் தீய ஆவிகள் நிர்ணயிக்கப்பட்ட பிரதேசங்களில் மட்டுமே உலவலாம். மண்ணுலகில் மனிதர்கள் நிலப் பரப்பிலும், பூச்சி புழுக்கள் பூமிக்கடியிலும், மீனினங் கள் நீரிலும், பறவைகள் ஆகாயத்திலும் வாழ்வது போல சூட்சும லோகத்தின் ஜீவன்களுக்கும் அவரவர்களுக்குத் தக்கபடியான அதிர்வலைப் பகுதிகள் விதிக்கப்பட்டுள்ளன.

மற்ற உலகங்களிலிருந்து வெளியேற்றப்பட்டுக் கீழே தள்ளப்பட்ட இருண்ட தேவதைகளுக்குள், உயிர்ச்சக்தி குண்டுகள் அல்லது மாந்திரீக[4] எண்ண அலைக்கிரணங்கள் மூலம் சச்சரவும் போரும் நடைபெறுவதுண்டு. இந்த ஒதுக்கப்பட்டவர்கள் தீய, இருள் நிறைந்த கீழான சூட்சும உலகங்களில் வசித்து அவரவர்களுடைய தீய கர்ம வினைகளை அனுபவிப்பார்கள்.

இந்த இருண்ட சூட்சுமச் சிறைக்கு மேலே இருக்கும் விசாலமான வெளியில் உள்ள அனைத்தும் மிக அழகாகவும் பிரகாசமாகவும் உள்ளன. சூட்சுமப் பேரண்டமானது தெய்வ சங்கல்பத்திற்கும் பூரணத்துவ திட்டத்திற்கும் இணங்க, மண்ணுலகத்தை விட மிக இயல்பாக ஒன்றி செயல்படுகிறது. ஒவ்வொரு சூட்சுமப்

பொருளும் தோன்றுவதற்கு இறைவனின் விருப்பமே முதற் காரணம். எனினும் அங்குள்ள சூட்சும வாசிகளின் விருப்ப-அழைப்பும் அதில் பங்கு வகிக்கிறது. இறைவனால் ஏற்கனவே படைக்கப்பட்ட எந்தப் பொருளினுடைய சௌந்தர்யத்தையும் உருவத்தையும் மாற்றவோ அல்லது அதிகரிக்கச் செய்யவோ வேண்டிய திறனை அவர்கள் பெற்றிருக்கின்றனர். அவன் தன் சூட்சும உலகக் குழந்தைகளுக்கு சூட்சும உலகத்தை, நினைத்தவுடன் இன்னும் சிறந்ததாகச் செய்வதற்கோ அல்லது மாற்றுவதற்கோ வேண்டிய சுதந்திரத்தையும் உரிமையையும் அளித்திருக்கிறான். மண்ணுலகத்தில் ஒரு திடப் பொருள் திரவமாகவோ அல்லது மற்ற ரூபத்திற்கோ மாற்றப் படுவது இயற்கையாகவோ அல்லது ரசாயன ரீதியிலோதான் சாத்தியமாகும். ஆனால் சூட்சும திடப்பொருள்கள் சூட்சுமதிரவப் பொருள்களாகவோ, வாயுப் பொருள்களாகவோ அல்லது சக்தியாகவோ மாற்றப்படுவது அங்கு வாழ்பவர்களின் இச்சையால் மட்டுமே உடனுக்குடனேயே சாத்தியமாகும்.

மண்ணுலகமானது, நீரிலும் நிலத்திலும் ஆகாயத்திலும் நடைபெறும் யுத்தம், கொலை முதலியவைகளால் இருண்டுள்ளது, என் குருதேவர் தொடர்ந்தார். ஆனால் சூட்சும லோகங்கள் மகிழ்ச்சியான ஒற்றுமையுடனும் சமத்துவத்துடனும் உள்ளன. சூட்சுமவாசிகள் விருப்பப்படி தங்கள் உருவங்களை உண்டாக்கிக் கொள்ளவோ அல்லது அழித்துக் கொள்ளவோ முடியும். மலர்களும், மீனினங்களும்,

மிருகங்களும் தங்களைச் சில காலத்திற்கு சூட்சும மனிதர்களாக மாற்றிக் கொள்ள முடியும். எல்லா சூட்சும வாசிகளும் எந்த உருவம் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளவும் ஒருவருடனொருவர் சுலபமாகத் தொடர்பு கொள்ளவும் சுதந்திரம் உண்டு. திட்டவட்டமான குறிப்பிட்ட, எந்த இயற்கை விதியும் அவர்களைக் கட்டுப்படுத்துவதில்லை. உதாரணமாக எந்த ஒரு சூட்சும லோக மரத்தையும், ஒரு சூட்சும மாம்பழத்தையோ அல்லது விருப்பமான வேறு பழத்தையோ தருமாறு அல்லது மலரையோ அல்லது வேறு எந்தப் பொருளையோ கொடுக்குமாறு கேட்டுப்பெற முடியும். சில கர்மவினைக் கட்டுப்பாடுகள் இருந்த போதிலும், பல வகையான உருவங்களை விரும்புவதில் பாகுபாடுகள் கிடையாது. இறைவனின் படைப்பொளி எல்லாவற்றிலும் நிறைந்துள்ளது.

யாரும் பெண்ணுக்குப் பிறப்பதில்லை; சூட்சும வாசிகளால் அவர்ளுடைய பிரபஞ்ச இச்சையின் மூலமாக விசேஷமாக வடிவமைக்கப்பட்ட, சூட்சுமமாக சுருக்கப்பட்ட உருவங்களில் குழந்தைகள் உருவாக்கப்படுகிறார்கள். சமீபத்தில் உடலை நீத்த மனிதன், அதே போன்ற மனோபாவத்தையும் ஆன்மீக இயல்பையும் கொண்ட ஒரு சூட்சும குடும்பத்திற்கு அழைப்பின் மூலம் ஈர்க்கப்படுகிறான்.

ஒரு சூட்சும உடலை வெயிலோ, குளிரோ, மற்ற இயற்கை நிபந்தனைகளோ பாதிப்பதில்லை. உடற் கூற்றில் ஒரு சூட்சும மூளைப்பாகம் அல்லது ஆயிரம்

இதழ்களுடைய ஒளித் தாமரையும் சுஷும்னா அல்லது சூட்சும மூளை-முதுகுத்தண்டு அச்சிலுள்ள ஆறு எழுச்சி பெற்ற மையங்களும் அடங்கியுள்ளன. இதயமானது சூட்சும மூளையிலிருந்து ஒளியையும் பிரபஞ்ச சக்தியையும் பெற்று, அவைகளை சூட்சும நரம்புகளுக்கும் உடல் செல்கள் அல்லது உயிரணுத் துகள்களுக்கும் வினியோகிக்கின்றது. சூட்சுமவாசிகள் உயிரணுத்துகள் சக்தி மூலமும் புனித மந்திர அதிர்வலைகள் மூலமும் தங்கள் உருவத்தில் மாறுதல்களைச் செய்து கொள்ள முடியும்.

பெரும்பாலானவர்களில் சூட்சும சரீரம் கடைசியாக இருந்த ஸ்தூல உடலைப் போன்ற அச்சாக இருக்கிறது. ஒரு சூட்சும மனிதனின் முகமும் உருவமும் அவன் மண்ணுலகில் வசித்த பூர்வ ஜன்மத்தில் அவன் இளைஞனாக இருந்தபொழுது இருந்ததை ஒத்திருக்கும். எப்பொழுதாவது ஒருவர் என்னைப் போல் தன் முதுமைக் காலத்திய தோற்றத்தை தேர்ந்தெடுத்துக் கொள்வதும் உண்டு. குருதேவர் இளமைத் துடிப்பை வெளிப்படுத்தியவராய் ஆனந்தமாக சிரித்தார்.

முப்பரிமாணங்களைக் கொண்ட ஐம்புலன்களால் அறியப்படும் விஸ்தாரமான ஸ்தூல உலகத்தைப் போலல்லாமல், சூட்சும உலகங்கள் எல்லாமறிந்த ஆறாவது புலனான உள்ளுணர்வுக்குப் புலப்படுகின்றன, ஸ்ரீ யுக்தேஸ்வர் தொடர்ந்தார். உள்ளுணர்வு ஒன்றை மட்டும் கொண்டு எல்லா சூட்சும வாசிகளும் பார்ப்பது, கேட்பது, நுகர்வது, ருசிப்பது, தொடுவது

முதலியவைகளை உணர்கிறார்கள். அவர்களுக்கு மூன்று கண்கள் உண்டு. அவைகளில் இரண்டு பாதி மூடியிருக்கும். மூன்றாவதும் முக்கியமானதுமான சூட்சுமக் கண் நெற்றியில் செங்குத்தாகத் திறந்திருக்கும். சூட்சும வாசிகளுக்கு வெளிப் புலன்களான காதுகள், கண்கள், மூக்கு, நாக்கு, தோல் எல்லாமிருந்தாலும் அவர்கள், உடலின் எந்தப் பாகத்தின் மூலமும் உணர்வதற்கு உள்ளுணர்வையே உபயோகிக்கின்றனர்; அவர்கள் காது, மூக்கு அல்லது சருமம் ஆகிய எதன் மூலம் வேண்டுமானாலும் பார்க்க முடியும்; அவர்கள் கண்களினாலோ அல்லது நாக்கினாலோ கேட்க முடியும். காதுகளினாலோ அல்லது சருமத்தினாலோ ருசிக்க முடியும். இத்யாதி.[5]

மனிதனின் ஸ்தூல உடல் கணக்கற்ற ஆபத்துகளுக்கு உள்ளாகி எளிதில் துன்புறுத்தப்படுகிறது; அல்லது காயப் படுத்தப்பட்டு முடமாக்கப்படுகிறது. ஆகாய சூட்சும சரீரம் எப்பொழுதாவது கொஞ்சம் வெட்டுப்படவோ அல்லது காயப்படவோ கூடும். ஆயினும் உடனுக்குடன் வெறும் இச்சையினால் மட்டுமே குணமாக்கப்பட்டுவிடும்.

குருதேவா எல்லா சூட்சும மனிதர்களும் அழகாக இருப்பார்களா?

அழகு என்பது சூட்சும லோகத்தில் ஆன்மீகத்தின் தரத்தை வைத்துத்தான் அறியப்படுகிறது. அவர்களுடைய வெளித் தோற்றத்தை வைத்தல்ல, ஸ்ரீ யுக்தேஸ்வர் பதிலளித்தார். ஆனால் சூட்சும மனிதர்கள் முக

அமைப்பிற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதில்லை. இருந்தாலும் அவரவர்கள் விருப்பப்படி சூட்சுமமாகவே ஏற்படுத்திக் கொண்ட புதிய வண்ண உடல்களை தரித்துக் கொள்ளக் கூடிய உரிமை உண்டு. எப்படி இவ்வுலகத்தவர்கள் மிகப் பெரிய விழாக்களுக்காக புத்தாடைகளுடன் அலங்கரித்துக் கொள்கிறார் களோ அப்படியே சூட்சும லோக வாசிகள், விசேஷ அமைப்புள்ள உருவங்களில் தங்களை அலங்கரித்துக் கொள்வதற்குச் சந்தர்ப்பங்கள் வாய்க்கின்றன.

ஹிரண்ய லோகத்தைப் போன்ற உயர்ந்த சூட்சும லோகங்களில் எப்பொழுது ஒரு ஜீவன் ஆன்மீக சாதனைகளினால் சூட்சும உலகத்திலிருந்து முக்தி அடைந்து அதனால் உயர்ந்த காரண உலகமான சுவர்க்கத்தை அடையத் தயாராகும் சமயத்தில் மிக ஆனந்தமான சூட்சும கொண்டாட்டங்கள் நடைபெறுகின்றன. அம்மாதிரியான சமயங்களில் காணவியலாத பரமபிதாவும் அவருள் ஐக்கியமான மகான்களும் அவர்களுக்குப் பிடித்தமான சூட்சும உடல்களில் உருவெடுத்து விழாவில் கலந்து கொள்கிறார்கள். தன் அன்புக்குரிய பக்தனை மகிழ்விக்க வேண்டி இறைவன், எந்த விரும்பிய உருவத்தையும் எடுத்துக் கொள்கிறான். அந்தப் பக்தன் பக்தியுடன் இறைவனைத் தொழுதிருந்தால் அவன் கடவுளைத் தெய்வத் தாயாகக் காண்கிறான். இயேசுவிற்கு இறைவனின் பிதா தன்மை, மற்ற கருத்துக்களை விட மிக்க ஏற்புடையதாக இருந்தது. படைப்பவன் தன்

ஒவ்வொரு படைப்பிற்கும் அருளியுள்ள தனித்தன்மை என்னவெனில் கற்பனைக்கு எட்டக்கூடியவை, எட்டாதவை எல்லாவற்றையும் இறைவனின் சகல கலா வல்லமையிடம் கோருவதுதான்! என் குருவும் நானும் சேர்ந்து மகிழ்ச்சியுடன் சிரித்தோம்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் அவருடைய இனிமையான புல்லாங் குழலைப் போன்ற குரலில் தொடர்ந்தார். சூட்சும உலகத்தில், மற்ற பிறவிகளில் நண்பர்களாக இருந்தவர்கள் ஒருவரை யொருவர் சுலபமாகக் கண்டு கொள்கிறார்கள். சிரஞ்சீவித் தன்மை கொண்ட நட்பை நினைத்து அவர்கள் மகிழ்வதுடன், பூவுலக வாழ்க்கையில் ஏமாற்றமான துன்பப் பிரிவுகளின் போது அடிக்கடி சந்தேகிக்கப்பட்ட அன்பின் அழிவற்ற தன்மையை அறிந்து கொள்கிறார்கள்.

சூட்சும உலகத்து வாசிகளின் உள்ளுணர்வு, திரையைத் துளைத்து பூவுலக மனிதர்களின் நடவடிக்கைகளைக் காண்கிறது. ஆனால் மனிதனின் ஆறாவது புலன் ஓரளவு முன்னேற்றம் அடைந்திராவிட்டால் சூட்சும உலகத்தை அவன் பார்க்க முடியாது. ஆயிரக்கணக்கான இப்பூவுலக மனிதர்கள் ஒரு சூட்சும உலகத்தையோ அல்லது ஒரு சூட்சும வாசியையோ ஒரு கணப்பொழுது காட்சியாகக் கண்டதுண்டு.[6]

ஹிரண்ய லோகத்தில் உள்ள ஆன்மீகத்தில் மிக முன்னேறியவர்கள் அவ்வுலகத்தின் நீண்ட பகலிலும் இரவிலும் பெரும்பாலும் ஆனந்தத்தில் விழித்திருந்து,

தவறிழைத்துள்ள பல மண்ணுலக ஆத்மாக்களை மீட்கவும், பிரபஞ்ச அரசாங்கத்தின் சிக்கலான பிரச்சனைகளைத் தீர்க்கவும் வேண்டிய உதவிகளைச் செய்கிறார்கள். ஹிரண்ய லோக வாசிகள் நித்திரை செய்யும் பொழுது, எப்பொழுதாவது கனவுபோன்ற சூட்சுமக் காட்சிகளைப் பெறுவதுண்டு. அவர்களுடைய மனங்கள் பொதுவாக மிக உயர்ந்த உணர்வு நிலையாகிய நிர்விகல்ப ஆனந்தத்தில் தன்வயப்பட்டிருக்கும்.

சூட்சும உலகங்களின் அனைத்துப் பகுதிகளிலும் வசிப்பவர்கள் மன வேதனைக்கு உள்ளாகுபவர்களாகத்தான் இன்னும் இருக் கிறார்கள். ஹிரண்ய லோகம் போன்ற கிரகங்களில் உயர்ந்த நிலையில் உள்ளவர்களின் உணர்ச்சி மிக்க மனங்கள் தங்கள் நடத்தையிலோ அல்லது உண்மையை அறிந்துகொள்வதிலோ ஏதாவது தவறு ஏற்பட்டால் மிகுந்த மனவேதனையை அடைகின்றன. முன்னேறிய இந்த ஆன்மாக்கள் தங்கள் ஒவ்வொரு செயலையும் எண்ணத்தையும் முழுமையான தெய்வீக சட்டத்துடன் இணக்கமாக செயல்பட வேண்டுமென்று பெரும் முயற்சிகளைச் செய்த வண்ணம் உள்ளார்கள்.

சூட்சும உலகவாசிகளிடையே செய்தித் தொடர்பு முழுவதும் சூட்சும மனோதிருஷ்டி மூலமும் மற்றும் சூட்சுமத் தொலைக்காட்சி மூலமுமே நடைபெறுகிறது. பேசும் வார்த்தைகள் மற்றும் எழுதும் சொற்களைத் தவறாகப் புரிந்து கொண்டு விடுவதனால் மண்ணுலகில் வசிப்பவர்கள் பொறுத்துக் கொள்ள வேண்டிய எந்தக்

குழப்பமும் அங்கு இல்லை. எவ்வாறு சினிமாத்திரையில், வரிசையான ஒளிப்படங்கள் மூலம் மனிதர்கள் நடமாடிச் செயல்கள் புரிவதுபோல் தோன்றினாலும் உண்மையில் மூச்சு விடுவதில்லையோ, அவ்வாறே சூட்சும உலகத்து வாசிகள் அறிவுப்பூர்வமாக வழிகாட்டப்பட்டு ஒளி உருவங்களாக இணைந்து செயல்படுகிறார்கள். அவர்களுக்கு உயிர் கொடுக்க பிராணவாயு தேவையில்லை. மனிதன் திட, திரவ, வாயுப் பொருள்கள் மற்றும் காற்றிலுள்ள உயிர்ச்சக்தி ஆகியவற்றை ஆதாரமாகச் சார்ந்து இருக்கிறான்; ஆனால் சூட்சும வாசிகள் முக்கியமாகப் பிரபஞ்ச ஒளியினால் நிலைத்திருக்கிறார்கள்.

என் குருதேவா, சூட்சும வாசிகள் ஏதாவது சாப்பிடுவது உண்டா? அவர் கூறிய அதிசயமான விளக்கங்களை யெல்லாம் என் மனம், இதயம், ஆத்மா ஆகிய அத்தனை சக்திகளும் ஏற்றுக் கொள்கிறவாறு கேட்டுக் கொண்டிருந்தேன். உயர் உணர்வினால் உணரப்பட்ட உண்மை மெய்யானதும் மாறுபாடற்றதுமாகும். ஆனால் நிலையற்ற புலன் அனுபவங்களும் கருத்துக்களும் மிக தற்காலிகமானதும் சமயத்திற்குத் தகுந்தாற்போல் மாறுபடுவதுமான உண்மைகளுக்கு மேல் எதுவுமில்லை. மேலும் அவைகளின் ஞாபகங்கள் சீக்கிரத்திலேயே முழுவதுமாக மங்கிவிடுகிறது. நான் எந்தச் சமயத்திலும் என் மனத்தை உயர்நிலைக்கு மாற்றிக் கொண்டு அந்தத் தெய்வீக அனுபவத்தை எல்லாம் மறுபடியும் உணர்ந்து கொள்ளும்

வகையில் என்னுள் குருதேவரின் சொற்கள் பசுமரத்தாணி போல் பதிந்து விட்டன.

ஒளி சிந்தும் கிரணங்களைப் போன்ற காய்கறிகள் சூட்சும மண்ணில் ஏராளமாக உள்ளன, அவர் பதிலளித்தார். சூட்சும வாசிகள் காய்கறிகளை உண்கிறார்கள், அங்குள்ள அழகிய ஒளி ஊற்றுக்களிலும் சூட்சும ஓடைகளிலும் நதிகளிலும் பாய்ந்தோடும் அமிர்தத்தைப் பருகிறார்கள். எவ்வாறு மண்ணுலகில் மறைந்துள்ள மனிதர்களின் பிம்பங்கள், வானவெளியிலிருந்து ஈர்க்கப்பட்டு தொலைக்காட்சிப் பெட்டியில் காட்சியாகப் பெறப்பட்டு பிறகு அதேபோல் வானவெளிக்கு மறுபடியும் திருப்பப்படுகிறதோ அவ்வாறே கடவுளால் படைக்கப்பட்ட காணப்படாத சூட்சும லோக காய்கறிகள் மற்றும் தாவரங்களின் சாயல்கள் வானவெளியில் மிதந்து கொண்டிருக்கின்றன; அவை சூட்சும உலகத்தில் வசிப்பவர்களின் இச்சையினால் உருக்கொள்கின்றன. அது போலவே சூட்சும உலக மக்களின் அதீத கற்பனைகளினால் நறுமணம் மிக்க நந்தவனங்கள் தோற்றுவிக்கப்பட்டு பிறகு வானவெளியில் காணமுடியாதவாறு திரும்பி விடுவதும் உண்டு. ஹிரண்ய லோகம் போன்ற வானுலகங்களில் வாழ்பவர்கள் உணவின் தேவையிலிருந்து அனேகமாக விடுபட்டு விட்டபோதிலும் அதற்கும் மேலே உள்ள காரண உலகில் நிபந்தனையற்று வாழும் ஏறக்குறைய முழு விடுதலையடைந்த ஆன்மாக்களின் உணவு பேரானந்த

அமிர்தம் மட்டுமே தவிர வேறில்லை.

மண்ணுலகத்திலிருந்து விடுதலைபெற்ற சூட்சுமவாசி பல பிறவிகளில் மண்ணுலகில் அடைந்த கணக்கற்ற உறவினர்கள் தந்தைகள், தாய்கள், மனைவிகள், கணவன்கள், மற்றும் நண்பர்கள் ஆகியோரை சூட்சுமப் பிரதேசங்களின் பல்வேறு பகுதிகளில் அவர்கள் அவ்வப்பொழுது தோன்றும் போது சந்திக்கிறான்.[7] ஆதலால் அவன் யாரை விசேஷமாக நேசிப்பது என்பது புரியாமல் திண்டாடுகிறான்; இப்படி அவன் எல்லாரையும் இறைவனின் குழந்தைகளாகவும் அவனுடைய தனிப்பட்ட உருவங்களாகவும் பாவித்து தெய்வீகமான மற்றும் சமமான அன்பு செலுத்தக் கற்றுக் கொள்கிறான். நம்முடைய அன்புக்குரியவர்களின் வெளி உருவம், (கிட்டத்தட்ட அவர்களுடைய சென்ற பிறவியில் ஏற்பட்ட புதுக்குணங்களுக்கேற்ப) மாறியிருந்தாலும் ஒரு சூட்சும வாசி தவறிழைக்காத தன் உள்ளுணர்வை, மற்ற உலகங்களில் வாழ்ந்த பொழுது தனக்குப் பிரியமாக இருந்தவர்களைக் கண்டறியவும் அவர்களுடைய புதிய சூட்சும இல்லத்திற்கு வரவேற்கவும் பயன்படுத்துகிறான். ஏனெனில் படைப்பில் ஒவ்வொரு அணுவும் அழிக்க முடியாத தனித்தன்மையைப் [8]பெற்றுள்ளது. எனவே ஒரு சூட்சும நண்பன் அவன் எந்த உருவில் இருந்தாலும் அறிந்து கொள்ளப்படுகிறான். இது இவ்வுலகில் ஒரு நடிகன் எந்த வேடத்தில் இருந்தாலும் கூர்ந்து கவனித்தால் அவனைப் புரிந்து கொள்ள முடிவதைப் போன்றே.

சூட்சும உலகத்தில் ஆயுட்காலம் மண்ணுலகில் இருப்பதைவிட மிக அதிகம். சாதாரணமாக முன்னேறிய சூட்சுமவாசியின் சராசரி ஆயுட்காலம் மண்ணுலகக் கால அளவுகளின்படி ஐநூறு வருடங்களிலிருந்து ஆயிரம் வருடங்கள் வரை ஆகும். சில ரெட்வுட் மரங்கள் மற்ற மரங்களைவிட பல்லாயிரம் ஆண்டுகள் அதிகம் வாழ்வதைப் போல அல்லது மனிதர்கள் அனேகர் அறுபது வயதைத் தாண்டும் முன்னரே மரணமெய்தினாலும் பல யோகிகள் அனேக நூற்றாண்டுகள் வாழ்வதைப்போல், சில சூட்சும வாசிகள் சூட்சும உலக வாழ்க்கையின் வழக்கமான காலத்தைவிட நீண்ட காலம் வாழ்கிறார்கள். சூட்சும உலகத்திற்கு வருபவர்கள் அவரவரது ஸ்தூல கர்மவினைகளின் நிறைக்கேற்ப நீண்ட காலமோ அல்லது குறுகிய காலமோ அங்கு வசிக்கிறார்கள். இக்கர்மவினைகள் அவர்களை மண்ணுலகிற்கு ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஈர்க்கின்றன.

சூட்சும வாசி, அவனுடைய ஒளிமயமான சரீரத்தைத் துறக்க வேண்டிய சமயத்தில் மரணத்துடன் வேதனையோடு போராட வேண்டிய தேவையில்லை. இருந்தாலும் இவர்களில் அனேகர் சூட்சும சரீரத்தைத் துறந்துவிட்டு இன்னும் அதிசூட்சுமமான காரண சரீரத்தை அடைய வேண்டும் என்ற நினைவில் கொஞ்சம் கலவரமடைகிறார் கள். சூட்சும உலகம், விருப்பமில்லாத மரணம், வியாதி மற்றும் முதுமை இல்லாதது. இம்மூன்று பயங்களும் மண்ணுலகின்

சாபக்கேடுகள்; இங்கு உயிர்வாழ்வதற்கு வேண்டிய இடைவிடாத உதவியைக் காற்று, உணவு, உறக்கம் ஆகியவற்றிலிருந்து பெறும் பலவீனமான ஸ்தூல உடலுடன் மனிதன், அனேகமாக தன் உணர்வு நிலை முழுவதையுமே ஒன்றிவிடச் செய்து விடுகிறான்.

ஸ்தூல உடலின் மரணம் மூச்சு மறைந்து விடுவதாலும், தசை செல்களின் சேர்க்கை பிரிந்து விடுவதினாலும் ஏற்படுகிறது. சூட்சும உலக மரணமானது, சூட்சும வாசிகளின் வாழ்வை உருவாக்கும் உயிரணுத் துகள்கள் (இவை சக்தியின் அலகுகளின் வெளிப்பாடு) சிதறுவதால் ஏற்படுகிறது. ஸ்தூல உடலின் மரணத்தறுவாயில் ஒரு ஜீவன் மாமிச சரீரத்தின் உணர்வை இழந்து சூட்சும உலகத்தில் தன் சூட்சும சரீரத்தைப் பற்றி உணரத் தொடங்குகிறான். இவ்வாறாக காலக்கிரமத்தில் சூட்சும சரீரத்தினுடைய பிறப்பு, இறப்பு என்னும் உணர்விலிருந்து ஸ்தூல உடலின் பிறப்பு, இறப்பு இவைகளைப் பற்றி அறியத் தொடங்குகிறான். இந்த சூட்சும, ஸ்தூல சரீரக் கூடுகளின் பிறப்பு, இறப்புச் சுழற்சியில் அகப்பட்டுத் திரும்பத் திரும்ப உழல்வதுதான் எல்லா அஞ்ஞானிகளுடைய தப்பிக்க முடியாத விதியாகிறது. சுவர்க்கம், நரகம் இவைகளைப் பற்றி சாத்திரங்கள் கூறியிருக்கும் விளக்கவுரைகள், மனிதனின் உள்மனத்தையும் கடந்து ஆழத்தில் பதிந்துள்ள நீண்டு தொடர்ந்து வரும் சுகம் தரும் சூட்சும உலக அனுபவங்களையும், ஏமாற்றம் தரும் மண்ணுலக அனுபவங்களையும் பற்றிய நினைவுகளை சில

சமயங்களில் தூண்டுகின்றன.

அன்புள்ள குருதேவா, நான் வேண்டிக் கொண்டேன். நீங்கள் தயவு செய்து, மண்ணுலகம், சூட்சும உலகம் மற்றும் காரண உலகம் இவைகளில் உண்டாகும் மறுபிறப்பிற்கு இடையிலுள்ள வித்தியாசம் என்ன என்பதை இன்னும் கொஞ்சம் விளக்கமாக விவரிப்பீர்களா?

என் குரு விளக்கினார். மனிதன், தனிப்பட்ட ஆத்மா என்ற முறையில் காரண சரீரத்தைத்தான் மூலமாக உடையவன். அந்த சரீரமானது இறைவனது படைப்பிற்குத் தேவையான முப்பத்தைந்து எண்ணங்களின் சேர்க்கை ஆகும். பின்னர் இந்த அடிப்படை அல்லது காரண எண்ண சக்திகளிலிருந்தே இறைவன் பத்தொன்பது மூலப் பொருட் களாலான சூட்சும சரீரத்தையும், பதினாறு மூலப்பொருட் களாலான ஸ்தூல உடலையும் உருவாக்கினான்,

சூட்சும சரீரத்தின் பத்தொன்பது மூலப்பொருட்கள் மனோ மயமானதும், உணர்ச்சிமயமானதும் உயிரணுத்துகள்களால் ஆனதுமாகும். அந்த பத்தொன்பது சேர்க்கைப் பொருட்களாவன: அறிவு; அகங்காரம்; பாவனை உணர்ச்சி; மனம் (புலனறிவு); ஐந்து ஞானேந்திரியங்கள், அதாவது காணல், கேட்டல், நுகருதல், ருசித்தல், தொடுதல் ஆகிய புலன்களை ஒத்த சூட்சுமப் பகுதிகள்; ஐந்து கர்மேந்திரியங்கள், அதாவது இன அபிவிருத்தி, கழிவு வெளியேற்றம், பேச்சு, நடை, கைத்திறமை ஆகியவற்றை செயல்படுத்தும் திறன்

களை ஒத்த எண்ணப்பகுதிகள்: செயலாற்றும் திறன் பெற்ற ஐந்து உபகரணங்களான பிராணன்கள், அதாவது திடப்படுத்துவதற்கும், கிரகிப்பதற்கும், வெளியேற்றுவதற்கும், வளர்சிதை மாற்றத்திற்கும், சுற்றோட்டத்திற்குமான சரீர செயல்களுக்கு வேண்டியவை. பதினாறு ரசாயன ஸ்தூல பொருட்களாலான ஸ்தூல உடல் மடிந்துவிட்டாலும், இந்த பத்தொன்பது மூலப் பொருட்களடங்கிய சூட்சும சரீரம் மடிவதில்லை.

இறைவன் பலவிதமான எண்ணங்களைத் தனக்கு உள்ளேயே நினைத்து அவைகளைக் கனவுகளாக வெளிப் படுத்தினான். பேரண்ட கனவுக்கன்னி இவ்விதமாக கால தேச நிமித்தமென்ற தன் எல்லா முடிவற்ற மாபெரும் ஆபரணங்களால் தன்னை அலங்கரித்துக் கொண்டு வெளிப் பட்டாள்.

காரண சரீரத்தின் முப்பத்தைந்து எண்ண வகைகளில் இறைவன் அவற்றையொத்த, மனிதனுடைய பத்தொன்பது சூட்சும மற்றும் பதினாறு ஸ்தூல மூலப் பொருட்களின் எல்லா சிக்கலான சேர்க்கைகளையும் மிகவும் விரிவாக்கினான். முதலில் சூட்சுமமான அதிர்வலைகளையும் பிறகு ஸ்தூலமானவற்றையும் சுருக்கி அவன் மனிதனின் சூட்சும சரீரத்தையும் கடைசியில் அவனுடைய ஸ்தூல உடலையும் படைத்தான். கால தேச நிமித்தத்தின் விதிமுறைப்படி, ஆதி எளிமை பிறகு குழப்பமடையச் செய்யும் வகையில் கணக்கற்ற வையாயிற்று; காரண பிரபஞ்சமும் காரண

சரீரமும் சூட்சும பிரபஞ்சம் மற்றும் சூட்சும சரீரம் ஆகியவற்றிலிருந்து மாறுபட்டவையாகின்றன; அதுபோலவே ஸ்தூல பிரபஞ்சமும் ஸ்தூல சரீரமும் படைப்பின் மற்ற வகைகளிலிருந்து குணங்களில் மாறுபட்டவையாகும்.

இந்த சதைப் பிண்டமான சரீரம், படைப்பவனின் குறிப்பிட்ட, பொருளின் தன்மையைச் சார்ந்த கனவுகளால் படைக்கப்படுகிறது. மண்ணுலகத்தில் என்றுமே இருமைவியாதியும் ஆரோக்கியமும், சுகமும் துக்கமும், லாபமும் நஷ்டமும்என இருக்கிறது. முப்பரிமாணம் கொண்ட பொருள்களிடத்தில் மனிதன் ஒரு வரம்பையும் தடையையும் காண்கிறான். உயிர் வாழ வேண்டுமென்ற மனிதனின் விருப்பம் வியாதியினாலும் மற்ற காரணங்களினாலும் பலமாகத் தாக்கப்படும் பொழுது மரணம் சம்பவிக்கிறது. கனமான மேல் சட்டையான உடல், தற்காலிகமாக உகுக்கப்படுகிறது. இருந்தபோதிலும் ஆன்மாவானது, சூட்சும, காரண சரீரங்களால் உறையிடப்பட்டு வாழ்கிறது.[9] மூன்று வித சரீரங்களையும் ஒன்றுபடச் சேர்த்து ஒட்ட வைக்கும் சக்தி ஆசைதான். பூர்த்தி செய்யப்படாத இச்சைகளின் சக்தியே மனிதனின் அடிமைத்தனத்திற் கெல்லாம் ஆணிவேராகிறது.

ஸ்தூல உடலின் ஆசைகள் அகங்காரத்திலும் புலனின் பங்களிலும் வேரூன்றி இருக்கின்றன. சூட்சும உலகத்தவரின் பற்றுக்களுடனும் அல்லது காரண உலகத்தவரின் எண்ணங் களுடனும் தொடர்புள்ள

ஆசையின் வலிமையை விட புலன் அனுபவங்களின் பலவந்தம் அல்லது சபலம் மிகச் சக்தி வாய்ந்தவை.

சூட்சும இச்சைகள் அதிர்வலைகளின் மூலம் மகிழ்ச்சி பெறுவதில் அடங்கியிருக்கிறது. சூட்சும உலகத்தவர் கோளங்களின் விண்வெளி சங்கீதத்தை ரசிப்பதுடன், மாறிக் கொண்டேயிருக்கும் ஒளியின் முடிவற்ற வெளிப்பாடுகளாகத் தோன்றும் எல்லா படைப்பினுடைய காட்சியைக் கண்டும் மயங்குகின்றனர். சூட்சும வாசிகள் ஒளியை முகரவும் ருசிக்கவும் தொடவும் இயலும். இவ்வாறாக ஒரு சூட்சும வாசியின் சூட்சும ஆசைகளானது, எல்லா பொருட்களையும் அனுபவங்களையும் ஒளியின் வடிவங்களாகவோ, அல்லது வடிவம் பெற்ற எண்ணங்கள் அல்லது கனவுகளாகவோ மாற்றக் கூடிய அவனது திறனுடன் தொடர்புடையவை ஆகும்.

காரண இச்சைகள், உணர்ந்த மாத்திரத்திலேயே திருப்தி அடைந்து விடுகின்றன. அனேகமாக முக்தி அடைந்துவிட்டு காரண சரீரத்தில் மட்டும் அடைபட்டு இருப்பவர்கள் முழு உலகத்தையும் இறைவனின் கனவு எண்ணங்கள் நனவாகி இருப்பதாகக் காண்கிறார் கள்; நினைத்த மாத்திரத்திலேயே அவர்கள் எதையும், அனைத் தையும் உருவாக்க முடியும். ஆதலால் காரண வாசிகள் மண்ணுலக மாந்தர்களின் புலனின்பங்களையும் சூட்சும உலகத்தவரின் இன்பங்களையும் கீழ்த்தரமானவை என்றும் ஆத்மாவின் நுட்பமான உணர்வுகளைத் திணற அடிப்பவை என்றும் நினைக்கிறார்கள். காரண வாசிகள்

தங்கள் விருப்பங்களை உடனுக்குடன் எண்ண வடிவில் உருவாக்கித் தீர்த்துக் கொண்டு விடுகிறார்கள்.[10] காரண சரீரத்தின் மெல்லிய திரையால் மட்டுமே மூடப்பட்டிருப்பதாக தங்களைக் காண்பவர்கள், படைப்பவன் செய்வது போலவே பிரபஞ்சங்களை உருவாக்க முடியும். ஏனெனில் அனைத்துப் படைப்புகளும் பிரபஞ்சக் கனவு-இழைகள் மூலமே உருவாக்கப்பட்டுள்ளன. மெல்லிய காரண சரீரத்தை மட்டுமே கொண்ட ஆத்மா, மிக அதிகமாக படைப்பாற்றலைக் கொண்டுள்ளது.

ஆத்மா, இயல்பாகவே கண்ணுக்குத் தெரியாத காரணத்தால், அதனுடைய சரீரம் அல்லது சரீரங்களால் மட்டுமே அறியப்பட முடியும். சரீரம் இருப்பதே, நிறைவேறாத ஆசைகளால்தான் அதன் இருப்பு சாத்தியமாகிறது என்பதைக் குறிக்கிறது.[11]

மனிதனின் ஆத்மா ஒன்று, இரண்டு அல்லது மூன்று சரீரப் பெட்டிகளில் அஞ்ஞானம், ஆசைகள் என்ற மூடிகளால் கெட்டியாக மூடப்பட்டிருக்கும் வரையில், அவன் பிரம்மம் என்ற கடலுடன் ஒன்ற முடியாது. ஸ்தூல உடல் என்னும் கொள்கலம், மரணமென்னும் சுத்தியால் அடிபட்டு அழிந்த பிறகு சூட்சும சரீரம், காரண சரீரம் என்ற இரண்டு கூடுகளும் ஆத்மா, எங்கும் நிறைந்துள்ள பரமாத்மாவுடன் உணர்வு பூர்வமாக ஒன்றுவதற்கு இன்னும் தடைகளாக நிற்கின்றன. ஞானத்தால் ஆசைகளற்ற தன்மையை அடைந்தவுடன், அதன் சக்தி, மற்ற இரண்டு கூடுகளையும் சிதைத்து

விடுகிறது. கடைசியில் அந்த நுண்ணிய மனித ஆத்மா சுதந்திரமாக வெளிப்படுகிறது; அது எல்லையற்ற பிரம்மத்துடன் இரண்டறக் கலக்கிறது.

நான் என் தெய்வீக குருவை மிக உயர்ந்ததும் மர்மமானதுமான காரண உலகத்தைப் பற்றி இன்னும் விளக்கிக் கூறுமாறு கேட்டேன்.

காரண உலகம் விவரித்துக் கூற முடியாத அளவிற்கு நுட்பமானது, அவர் பதிலளித்தார். அதைப் புரிந்து கொள்வதற்கு ஒருவன் மனத்தை ஒருமைப்படுத்தும் பேராற்றல் பெற்றவனாயிருக்க வேண்டும்; மண்ணுலகப் பிரபஞ்சத்தையும் சூட்சுமப் பிரபஞ்சத்தையும் அவற்றின் முழுப் பரப்புடன்கெட்டியான கூடையுடன் கூடிய ஒளிரும் பலூன்போலத் தோன்றும் வெறும் எண்ணங்களே என அவன் கண்ணை மூடியபடியே காண வல்லவனாய் இருத்தல் வேண்டும். இம்மாதிரி அமானுஷ்ய மன ஒருமைப்பாட்டுடன் ஒருவன் அவ்விரண்டு பிரபஞ்சங்களையும் அவற்றின் எல்லாச் சிக்கல்களுடன் வெறும் எண்ணங்களாக மாற்றியோ அல்லது தீர்மானித்தோ காண்பதற்குரிய திறனை அடைந்து விட்டால் அவன் பிறகு காரண உலகத்தை அடைந்து, மனம் மற்றும் பொருள் ஆகிய இரண்டினுடைய சேர்க்கையின் எல்லைக் கோட்டில் நிற்பவனாகிறான். அங்கு ஒருவன் படைக்கப்பட்ட எல்லாப் பொருட்களையும்திடப் பொருட்கள், திரவங்கள், மனிதர்கள், மிருகங்கள், தாவரங்கள், நுண்ணுயிர்கள் எல்லாவற்றையும்உணர்வின் உருவங்களாக, எப்படி

ஒருவன் கண்ணை மூடிக் கொண்டு தன் சரீரத்தை தன் கண்ணால் பார்க்காமலிருக்கும் பொழுது தான் எண்ணமாக மட்டுமே இருப்பதை உணர்கிறானோ அப்படி உணர்கிறான்.

ஒரு மனிதன் தன் கற்பனையில் என்னவெல்லாம் செய்ய முடியுமோ அவைகள் எல்லாவற்றையும் ஒரு காரணவாசி உண்மையிலேயே செய்ய முடியும். மிகப் பிரமாதமான கற்பனாசக்தி படைத்த மனித அறிவானது மனத்தாலேயே, ஓர் எண்ணத்திலிருந்து அதற்கு எதிர் மாறான எண்ணத்தின் மறு கோடிக்குச் செல்லவும், ஒரு கிரகத்திலிருந்து இன்னொரு கிரகத்திற்கு மனத்தினால் தாவவும், நிரந்தரத்தின் பள்ளத்திற்குள் முடிவின்றி உருண்டு விழவும், நட்சத்திர விதானத்தில் ஏவுகணை போன்று உயரச் செல்லவும், பால் வீதி எனப்படும் வான ஒளித் தடங்களிலும் நட்சத்திர மண்டலத்திலும் ஊடுருவும் ஓர் ஒளி (நீடொளி) யைப் போல் பிரகாசிக்கவும் இயலும். ஆனால் காரண உலகத்தில் இருப்பவர்களுக்கு சுதந்திரம் இன்னும் அதிகமாக இருப்பதால், அவர்கள் எந்த முயற்சியும் இன்றி அவர்களின் எண்ணங்களை ஸ்தூல தடைகள், சூட்சுமத் தடைகள் அல்லது கர்மவினைக் கட்டுப்பாடுகள் எதுவுமின்றி உடனுக்குடனேயே உருவகப்படுத்தி நிறைவேற்றிக் கொள்ள முடியும்.

மண்ணுலகம் முக்கியமாக மின்னணுக்களினாலோ அல்லது சூட்சும உலகம் அடிப்படையில் உயிரணுத்துகள்களாலோ படைக்கப்படவில்லைஎன்றும்

இரண்டும் உண்மையில் கடவுள்எண்ணத்தின் மிக நுண்ணிய துகள்களினால் படைக்கப்பட்டு, மாயையினால் வெட்டப்பட்டு பல பகுதிகளாக பிரிக்கப்பட்டுள்ளது என்றும், கால தேச நிமித்தம் நடுவில் புகுந்து படைத்தவனையும் படைப்பையும் வேறுபடுத்துகிறது என்பதையும் காரணவாசிகள் உணர்கிறார்கள்.

காரண உலகில் ஆன்மாக்கள் ஒருவரையொருவர் பிரம்மானந் தத்தின் தனித்தனிப் புள்ளிகளாக அறிகிறார்கள்; அவர்களுடைய எண்ணப் பொருட்கள் மட்டும்தான் அவர்களைச் சூழ்ந்துள்ளன. காரண உலகத்தவர்கள் தங்கள் சரீரங்களுக்கும் எண்ணங்களுக்கும் இடையில் உள்ள வேற்றுமை வெறும் கருத்துக்கள் மட்டுமே என்பதை அறிந்துள்ளார்கள். எப்படி ஒரு மனிதன் கண்ணை மூடிக்கொண்டு ஒரு பிரகாசமான வெள்ளொளியையோ அல்லது ஒரு மந்தமான நீலத் தண்ணொளியையோ கற்பனை செய்து பார்க்க முடிகிறதோ அப்படி காரண உலகத்தவர் எண்ணத்தின் மூலமே பார்க்கவும், கேட்கவும், முகரவும், ருசிக்கவும், தொடவும் முடியும்; பிரபஞ்ச மனோ சக்தியின் மூலம் அவர்களால் எதையும் படைக்கவும் அழிக்கவும் முடியும்.

காரண உலகத்தில் இறப்பும் மறு பிறப்புமாகிய இரண்டுமே எண்ண அளவில் நிகழ்கின்றன. காரண சரீரத்தை உடையவர்களுக்கு என்றுமே புதிய ஞானாமிர்தம் தான் ஆகாரமாகும். அவர்கள் அமைதியெனும் ஊற்றுக்களிலிருந்தே பருகுகிறார்கள்.

உணர்தல் என்ற வழித்தடமற்ற மண்ணிலேயே அலைபவர்களாயும், ஆனந்தம் என்ற எல்லையற்ற பெருங் கடலில் நீந்துபவர்களாயும் உள்ளனர். ஆகா! அவர்களது பிரகாசமானஎண்ண சரீ ரங்கள், பிரம்மத்தினால் படைக்கப்பட்ட கோடிக்கணக்கான கோள்களையும், புத்தம்புதிய உலகங்களாகிய குமிழிகளையும், ஞான விண்மீன்களையும், ஆதியந்தமில்லாத வானத்தின் இதயத்தை ஊடுருவி நிற்கும் பொன்னொளிக் குழுக்களின் வண்ணக் கனவுகளையும் ஒரே எட்டில் எப்படித்தான் துளைத்துச் செல்கின்றன!

அனேக ஜீவன்கள் ஆயிரக்கணக்கான வருடங்கள் காரண உலகத்திலேயே தங்குகின்றன. ஆழ்ந்த பரவச நிலைகளினால் விடுதலையடைந்த ஆத்மா, பின்னர் சிறிய காரண சரீ ரத்திலிருந்து விடுபட்டு காரண உலகத்தின் பெருவெளியை தரித்துக் கொள்கிறது. வெவ்வேறான எல்லா எண்ணச் சுழல்கள், தனிப்பட்ட திறனலைகள், அன்பு, இச்சை, ஆனந்தம், அமைதி, உள்ளுணர்வு, சாந்த சுபாவம், தன்னடக்கம், மனங்குவிதல் ஆகிய எல்லாமே என்றும் ஆனந் தமய பரமானந்தக் கடலில் உருகி விடுகின்றன. அதன் பிறகு அந்த ஆத்மா, தனிப்பட்ட உணர்வு அலை என்ற முறையில் அதனுடைய ஆனந்தத்தை அனுபவிக்க வேண்டிய அவசியமில்லை. அதனுடைய நிரந்தர சிரிப்பு, சிலிர்ப்புகள், துடிப்புகள் ஆகிய எல்லா அலைகளுடனும் அது ஒரே பிரபஞ்சக் கடலில் ஐக்கியம் ஆகிவிடுகிறது.

ஓர் ஆத்மா அதனுடைய மூன்று சரீரக்கூடுகளிலிருந்து வெளியேறும் பொழுது அது கால தேச நிமித்தங்களில் இருந்தும் நிரந்தரமாக விடுபட்டுவிடுகிறது. மேலும் விவரிக்க முடியாத என்றும் சிரஞ்சீவி ஆகிவிடுகிறது.[12] தன் சிறகுகளில் விண்மீன்களும், வெண்ணிலாக்களும், சூரியர்களும் பதிந்திருக்கும் சர்வவியாபக வண்ணத்துப் பூச்சியைப் பார்! பிரம்மமாக விரிந்துவிட்ட ஆத்மா ஒளியற்ற ஒளியும், இருளற்ற இருளும், எண்ணமற்ற எண்ணமும் ஆகிய பிரதேசத்தில் கடவுளின் கனவாகிய பிரபஞ்ச சிருஷ்டியின் ஆனந்த வெள்ளத்தில் திளைத்து ஏகாந்தமாக உள்ளது.

ஒரு முக்தியடைந்த ஆத்மா! நான் ஆச்சரியத்துடன் கூவினேன்.

ஓர் ஆத்மா கடைசியில் மூன்று ஜாடிகளான சரீர மாயைகளை விட்டு வெளிவரும்பொழுது, குருதேவர் தொடர்ந்தார், அது தன் தனித் தன்மையை இழக்காமலேயே எல்லையற்ற பரமாத்மாவுடன் ஒன்றி விடுகிறது. இயேசுவாகப் பிறப்பதற்கு முன்னமேயே கிறிஸ்து இத்தகைய இறுதி சுதந்திரத்தை அடைந்து விட்டிருந்தார். அவருடைய மண்ணுலக வாழ்வின் மூன்று தினங்களில் மரணம், உயிர்த்தெழுதல், ஆகிய அனுபவங்களினால் குறிப்பாக உணர்த்தப்பட்ட அவருடைய கடந்த காலத்திய மூன்று நிலைகளில் அவர் பிரம்மத்தில் முழுவதுமாக எழுவதற்கு வேண்டிய திறனைப் பெற்று விட்டிருந்தார்.

பக்குவமடையாத மனிதன் மூன்று சரீர பந்தங்களில் இருந்து விடுபடுவதற்கு மண்ணுலக, சூட்சும உலக மற்றும் காரண உலகங்களில் எண்ணற்ற பிறவிகளை அடைய வேண்டியுள்ளது. எந்த ஓர் ஆசாரியர் இந்த முடிவான சுதந்திரத்தை அடைந்து விட்டாரோ அவர் ஒரு தீர்க்கதரிசியாகச் செயல்பட்டு மற்ற ஜீவன்களை இறைவனிடம் சேர்ப்பிக்க வேண்டி திரும்பவும் மண்ணுலகத்திற்கு வருவதைத் தேர்ந்தெடுக்கலாம். அல்லது என்னைப் போல் சூட்சுமப் பிரபஞ்சத்தில் வசிப்பதைத் தேர்ந்தெடுக்கலாம். அங்கு ஓர் இரட்சகர் அங்கே வசிப்பவர்களின் கர்ம வினைகளின் பாரத்தில் சிலவற்றைத் தான் ஏற்றுக்கொண்டு[13] சூட்சும உலகத்தில் அவர்களுடைய மறுபிறப்புக்களின் சுழற்சியை முடித்து அவர்களை நிரந்தரமாகக் காரண உலகிற்கு அனுப்புவதற்கு உதவுகிறார். அல்லது ஒரு விடுதலையடைந்த ஆத்மா காரண உலகில் பிரவேசித்து அங்குள்ளவர்களின் காரண சரீர வாழ்நாட்களைக் குறைத்து அவர்கள் முடிவான விடுதலை அடைய உதவலாம்.

உயிர்த்தெழுந்த குருதேவா, ஆன்மாக்களை இந்த மூவுலகங்களுக்கும் திரும்பவும் வரும் படியாக பலவந்தப் படுத்தும் கர்ம வினைகளைப் பற்றி இன்னும் கொஞ்சம் அறிய விரும்புகிறேன். எல்லாமறிந்த என் குருதேவரின் சொற்களை என்றும் கேட்டுக் கொண்டே இருக்கலாம் போல் எனக்குத் தோன்றியது. அவருடைய மண்ணுலக வாழ்வில் என்றுமே அவருடைய

ஞானாம்ருதத்தை ஒரே சமயத்தில் இவ்வளவு பருக முடிந்ததில்லை. இப்பொழுது முதன் முறையாக பிறப்பு, இறப்பு என்ற சதுரங்கத்தில் உள்ள புதிரான இடைவெளிகளைப் பற்றித் தெளிவான, நிச்சயமான உள் நோக்கை பெற்றுக் கொண்டிருந்தேன்.

சிலிர்க்கவைக்கும் அவருடைய குரலில் குருதேவர் தெளிவுபடக் கூறினார். சூட்சும உலகங்களில் நீடித்த வாழ்வு பெறும் முன்னர் மனிதன் மண்ணுலக கர்மவினைகளை அல்லது இச்சைகளை முழுவதும் தீர்த்துவிட்டிருக்க வேண்டும். சூட்சும உலகத்தில் இருவிதமான ஜீவர்கள் வசிக்கிறார்கள். எவர்களுக்கு இன்னும் மண்ணுலகக் கர்மவினைகளைத் தீர்க்க வேண்டி இருக்கிறதோ, அவர் கள் தங்களுடைய வினைக் கடன்களைத் தீர்க்க ஸ்தூல சரீரத்தை மறுபடியும் அடைய வேண்டி இருப்பதால் ஸ்தூல மரணத்திற்குப் பிறகு அவர்களை சூட்சும உலக நிலைத்த வாசிகளென்று சொல்லாமல் தற்காலிகமாக வந்து போகிறவர்கள் என்ற வகுப்பில் சேர்க்க முடியும்.

மண்ணுலகக் கர்மவினைகளைத் தொலைக்காத ஜீவர்கள் சூட்சும உலக மரணத்தின் பின் உயர்ந்த பேரண்ட எண்ணமயமான காரண உலகத்திற்குச் செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. ஆனால் திரும்பத் திரும்ப அவர்கள் பதினாறு மூலப் பொருட்களாலான தனது ஸ்தூல உடலையும், பத்தொன்பது சூட்சும மூலப் பொருட்களாலான சூட்சும சரீரத்தையும் மாறி மாறி உணர்ந்த வண்ணம், ஸ்தூல மற்றும் சூட்சும

உலகங்களுக்குச் சென்றுவந்து கொண்டிருப்பார்கள். ஆனால் ஸ்தூல உடலின் மரணத்திற்குப் பிறகு ஒவ்வொரு தடவையும் பக்குவமடையாத மனிதன் மண்ணுலத்திலிருந்து சூட்சும உலகத்திற்கு வந்தும் கூட சூட்சும உலகத்தின் அழகை அனுபவிக்காமல் பெரும்பாலான காலம் மரண நித்திரையின் ஆழ்ந்த மயக்கத்திலேயே இருந்துவிடுவான். சூட்சும உலகத்தில் களைப்பாறிய பிறகு அம்மாதிரியான ஒரு மனிதன் மேலும் படிப்பினைகளை அறிய வேண்டி மறுபடியும் மண்ணுலகத்திற்குத் திரும்புகிறான். திரும்பத்திரும்ப ஏற்படும் பயணங்களினால் சூட்சும உலகங்களின் நுட்பமான இயல்புக்கு தன்னை படிப்படியாக பழக்கப் படுத்திக் கொள்கிறான்.

மற்றொரு விதத்தில் மண்ணுலக இச்சைகளிலிருந்து நிரந்தரமாக விடுதலை பெற்றுவிட்டவர்கள்தாம் சாதாரணமாக அல்லது வெகு காலம் சூட்சும உலகத்தில் வசிப்பவர்கள்ஆவார்கள். அவர்கள் மண்ணுலக ஸ்தூல அதிர்வலைகளுக்கு இனித் திரும்ப வேண்டிய அவசியமில்லை. இம்மாதிரியான ஜீவன்கள் சூட்சும மற்றும் காரண கர்மவினைகளை மட்டும்தான் தீர்க்க வேண்டும். சூட்சும சரீரத்தின் மரணத்தினால் இவர்கள் மிக நுண்மையானதும் மிக நுட்பமானதுமான காரண உலகத்திற்குச் செல்கிறார்கள். பிரபஞ்ச விதிமுறையின்படி ஒரு குறிப்பிட்ட காலவறையறை கடந்த பிறகு இந்த முன்னேறிய ஜீவர்கள் ஹிரண்யலோகம் அல்லது அதைப் போன்ற உயர்ந்த

சூட்சும உலகத்திற்குத் திரும்பி, அவர்களுடைய தீர்க்கப்படாத சூட்சும கர்ம வினைகளைத் தீர்ப்பதற்காக ஒரு புது சூட்சும சரீரத்தில் பிறக்கிறார்கள்.

ஸ்ரீ யுக்தேஸ்வர் தொடர்ந்து கூறினார், என் மகனே நான் தெய்வக் கட்டளையால் மண்ணுலகத்திலிருந்து சூட்சும உலகத்திற்கு வரும் சூட்சும ஜீவன்களை விட, முக்கியமாக, காரண உலகத்திலிருந்து சூட்சும உலகத்தில் திரும்பவும் மறு பிறவி எடுக்கும் ஜீவன்களுக்கு இரட்சகனாக திரும்ப உயிர்த் தெழுப்பிக்கப்பட்டுள்ளேன் என்பதை இப்பொழுது நீ முழுவதுமாய் புரிந்து கொண்டிருப்பாய். மண்ணுலகிலிருந்து வருபவர்கள் ஸ்தூல கர்ம வினைகளின் அடிச்சுவடுகளை இன்னும் தக்க வைத்துக் கொண்டிருந்தால் ஹிரண்ய லோகம் போன்ற மிக உயர்ந்த சூட்சும உலகங்களை எட்ட முடியாது.

மண்ணுலக மாந்தர்களில் அனேகர் எப்படி தியானத்தின் மூலம் கிடைக்கும் ஞான திருஷ்டியை உபயோகித்து சூட்சும வாழ்வின் மேன்மையான ஆனந்தத்தையும் லாபங்களையும் அறியாமல் மரணத்திற்குப் பிறகு, குறுகிய, முழுமையற்ற மண்ணுலகச் சிற்றின்பங்களுக்கே திரும்ப விரும்புகிறார்களோ அப்படியே அனேக சூட்சும ஜீவன்களும், சாதாரண முறையில் அவர்கள் சூட்சும உடல்கள் சிதைக்கப்படும் பொழுது காரண உலகத்திலுள்ள உயர்ந்த நிலையான பிரம்மானந்தத்தை உணரத் தவறியவர்களாய் ஸ்தூலமானதும்

பகட்டானதுமான சூட்சும இன்பங்களிலேயே எண்ணத்தைத் திரும்பவும் செலுத்தி சூட்சும சுவர்க்கத்திற்குத் திரும்பி வர விழைகிறார்கள். படைப்பவனிடமிருந்து மிக மெல்லிய பிரிவினால் பிரிக்கப்பட்டிருக்கும் காரண எண்ணஉலகத்தில், சூட்சும மரணத்திற்குப்பிறகு நிலைத்து தங்குவதற்கு முன்னர் அவர்கள் கனத்த சூட்சும கர்மவினைகளைத் தீர்த்தாக வேண்டும்.

ஒரு ஜீவனுக்கு சூட்சும உலகத்தில் தோன்றும் கண்ணுக்கு அழகான இன்பங்களை இன்னும் அனுபவிக்கும் இச்சைகள் அழிந்து, மறுபடி அங்கேயே திரும்பும் சபலம் அகலும்பொழுதுதான் அவன் காரண உலகத்தில் தங்கி இருக்க முடியும். அங்கு எல்லா காரண கர்ம வினைகளை அல்லது பழைய இச்சைகளின் விதைகளை அறவே அறுத்தெறியும் பணியை நிறைவேற்றிவிட்டு, சிறைப்பட்டிருந்த ஆத்மா அஞ்ஞானமாகிய மூன்று அடைப்பான்களில் கடைசியை தள்ளிவிட்டு, முடிவான காரண சரீர ஜாடியிலிருந்து வெளிப்பட்டு எல்லையற்ற பரம் பொருளுடன் கலக்கிறது.

இப்பொழுது நீ புரிந்து கொண்டாயா? குருதேவரின் புன்னகையில்தான் என்ன வசீகரம்!

ஆம் தங்கள் அருளினால், ஆனந்தத்தினாலும் நன்றியி னாலும் எனக்கு நா எழவில்லை.

எந்தக் கவிதையிலிருந்தும் அல்லது கதையிலிருந்தும் இம்மாதிரியான ஊக்குவிக்கும் ஞானத்தை நான் என்றுமே கேட்டதில்லை. இந்து சமய

நூல்கள் காரண, சூட்சும உலகங்களைப் பற்றியும் மனிதனுடைய மூன்றுவித சரீரங்களைப் பற்றியும் குறிப்பிட்டாலும் உயிர்த்தெழுந்த என் குருதேவரின் இதமான ஊர்ஜிதத்திற்கு முன் அவையெல்லாம் எங்கோ தொலை தூரத்திலிருக்கும் அர்த்தமில்லாத பக்கங்கள் தாமே! எதனுடைய எல்லையிலிருந்து எந்தப் பயணியும் திரும்பி வருவதில்லையோ அந்தக் கண்டுபிடிக்கப்படாத தேசம் ஒன்று கூட உண்மையிலேயே அவருக்கு இல்லை![14]

ஒன்றுக்கொன்று ஊடுருவி நிற்கும் மனிதனின் மூன்று சரீரங்களும் அவனுடைய முக்குண இயல்புகளில் பல விதங்களில் வெளியாகின்றன, என்னுடைய குருதேவர் தொடர்ந்து கூறினார். மண்ணுலகில் மனிதன் விழிப்பு நிலையில் இருக்கும் பொழுது அவனுடைய மூன்று சாதனங்களைப் பற்றியும் அனேகமாக உணர்ந்தே இருக்கிறான். அவன் புலனின்ப எண்ணத்துடன் ருசிக்கும் பொழுதோ, முகரும் பொழுதோ, தொடும் பொழுதோ, கேட்கும் பொழுதோ, பார்க்கும்பொழுதோ அவன் முக்கியமாக அவனுடைய ஸ்தூல உடலினால் செயல்படுகிறான். கற்பனை செய்யும் பொழுதோ, தீர்மானிக்கும் பொழுதோ அவன் முக்கியமாக சூட்சும சரீரத்தினால் செயல்படுகிறான். அவனுடைய காரண சரீரம், அவன் எண்ணும் பொழுதோ அல்லது ஆத்மசோதனையின் பொழுதோ அல்லது தியானத்திலோ வெளிப்படுகிறது; மேதாவிகளுடைய பிரபஞ்ச எண்ணங்கள் வழக்கமாகக் காரண சரீரத்துடன்

தொடர்பு கொள்ளும் மனிதனுக்கே உண்டாகின்றன. இவ்விதத்தில் ஒரு மனிதனை லோகாயதமான மனிதன், சக்திவாய்ந்த மனிதன், அல்லது விவேகமுள்ள மனிதன், என்று பரந்தவாறு தரம் பிரிக்கலாம்.

தினந்தோறும் ஒரு மனிதன் கிட்டத்தட்ட பதினாறு மணிநேரம் தன் ஸ்தூல சாதனமான உடலுடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்கிறான். பிறகு நித்திரை செய்கிறான்; அவன் கனவு கண்டால், அவன் தன் சூட்சும சரீரத்தில் லயிக்கிறான், எந்தச் சிரமமும் இன்றி சூட்சும வாசிகளைப் போலவே நினைத்ததை சிருஷ்டி செய்கிறான். மனிதனுடைய நித்திரை ஆழ்ந்ததாயும் கனவற்றதாயும் இருந்தால், அவன் தன் உணர்வை, அல்லது நான்என்னும் உணர்வை, பல மணி நேரங்களுக்கு காரண சரீரத்திற்கு மாற்ற முடிகிறது; அம்மாதிரியான நித்திரை புத்துணர்ச்சி தரக்கூடியது. கனவு காண்பவன் தன் சூட்சும சரீரத்துடன்தான் தொடர்பு கொள்கிறான், காரண சரீரத்துடன் அல்ல; அவனது நித்திரை முழுமையாகப் புத்துணர்ச்சி அளிக்காது.

ஸ்ரீ யுக்தேஸ்வர் அருமையான விளக்கங்களைப் பற்றி பேசப் பேச நான் அவரை அன்புடன் கவனித்துக் கொண்டிருந்தேன்.

தேவ குருவே, நான் கூறினேன். தங்கள் சரீரம் நான் பூரி ஆசிரமத்தில் அழுது கொண்டே கடைசியாகப் பார்த்த பொழுது எப்படி இருந்ததோ அப்படியே இருக்கிறது.

ஆமாம், என் புது உடல் பழைய உடலின் முழுமையான நகல்தான். எப்பொழுது வேண்டுமானாலும்

இதை நான் என் விருப் பப்படி உருவாக்கவோ சிதைத்துவிடவோ முடியும். நான் மண்ணுலகில் அப்படிச் செய்ததைக் காட்டிலும் இங்கே அடிக்கடி செய்யலாம். சீக்கிரமாக சிதைத்து விடுவதன் மூலம் இப்பொழுது நான் உடனுக்குடன் அதிவேக ஒளிவாகனத்தில் ஒரு கிரகத்திலிருந்து இன்னொரு கிரகத்திற்கோ அல்லது உண்மையில் சூட்சும உலகத்திலிருந்து காரண உலகிற்கோ அல்லது மண்ணுலகிற்கோ செல்கிறேன். என் தெய்வீக குரு முறுவலித்தார். நீ இந்நாட்களில் வேகமாகப் பிரயாணம் செய்து கொண்டிருந்தாலும் உன்னை மும்பையில் கண்டு பிடிப்பதில் எனக்கு எந்த சிரமமும் ஏற்படவில்லை!

ஓ, குருதேவா, உங்கள் மரணத்தைப்பற்றி நான் மிகவும் துக்கப்பட்டேன்!

நான் எங்கு மரணமடைந்தேன்? இது முரணாகத் தெரியவில்லையா? ஸ்ரீ யுக்தேஸ்வரின் கண்கள் அன்புடனும் வேடிக்கையுடனும் மின்னின.

நீ மண்ணுலகில் வெறும் கனவுதான் கண்டு கொண் டிருந்தாய்; அந்தப் பூமியில் என் கனவு உடலைக் கண்டாய், அவர் தொடர்ந்தார். பிறகு அந்த கனவுப் பிரதியைப் புதைத்தாய். இப்பொழுது என்னுடைய நுட்பமான தசையுடன் கூடய உடல்நீ பார்க்கும் இவ்வுடல், இப்பொழுதுகூட என்னை விடாமல் இறுகக் கட்டிப் பிடித்திருப்பது!கடவுளின் இன்னொரு நுட்பமான கனவுகிரகத்தில் உயிர்த்தெழுந்துள்ளதாகும். என்றாவது இந்த நுட்பமான கனவு சரீரம், நுட்பமான கனவு கிரகம்

எல்லாம் மறைந்து விடும். அவைகள் கூட என்றும் நிரந்தரமில்லை. இறுதியான எழுச்சியின் ஸ்பரிசம் படும்பொழுது எல்லாக் கனவுக் குமிழிகளும் முடிவாக உடைந்துபடும். என் மகனே, யோகானந்தா, கனவுகளையும் நிஜத்தையும் பிரித்து அறிந்துகொள்!

வேதாந்த[15] உயிர்த்தெழல் எனும் இக்கருத்து என்னை ஆச்சரியத்திலாழ்த்தியது. நான் பூரியில் உயிரற்ற அவரது சரீரத்தைக் கண்டு இரக்கம் கொண்டதை நினைத்து வெட்கப் பட்டேன். என் குரு தன் சொந்த வாழ்க்கையையும், பூமியில் வாழ்ந்ததையும், அவர் தற்போது உயிர்த்தெழுந்து இருப்பதையும் பிரபஞ்சக் கனவில், கால இடத் தொடர்பு கொண்ட தெய்வீக எண்ணங்கள் தவிர வேறெதுவுமில்லை என்பதை உணர்ந்து, என்றும் முழுவதுமாக இறை உணர்வில் விழித்து இருந்திருக்கிறார் என்பதை நான் கடைசியில் புரிந்து கொண்டேன்.

யோகானந்தா, நான் இப்பொழுது என் வாழ்வு, சாவு, உயிர்த்தெழுதல் எல்லாவற்றயும் பற்றிய உண்மைகளை உனக்குக் கூறிவிட்டேன். எனக்காகத் துக்கப்படாதே; அதற்குப் பதிலாக இறை- கனவாகிய மனிதர்களின் மண்ணுலகிலிருந்து இன்னொரு இறை-கனவாகிய சூட்சும உடல்களைக் கொண்ட ஆன்மாக்களின் உலகத்தில் நான் உயிர்த்தெழுந்தது பற்றிய கதையை எல்லா இடங்களிலும் பறை சாற்று! துக்கத்தினால் மனம் வெதும்பி, மரணபயம் கொண்டு உலகக் கனவு காண்பவர்களின் இதயத்தில் புது நம்பிக்கை ஊட்டப்படும்.

அப்படியே செய்கிறேன் குருதேவா! அவர் திரும்ப உயிர்தெழுந்ததனால் எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்தை நான் எவ்வளவு விருப்பத்துடன் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்வேன்!

மண்ணுலகில் என் தகுதிகள் அனேக மனிதர்களின் இயல்புகளுக்குப் பொருந்தாத வகையில் மிக உயர்ந்ததாக இருந்துவிட்டன. நான் அடிக்கடி உன்னை வேண்டிய அளவுக்கு மேல் கடிந்து இருக்கிறேன். நான் வைத்த பரீட்சையில் நீ தேறிவிட்டாய்; உன் அன்பானது கண்டிப்பு என்ற மேகங்கள் எல்லாவற்றையும் துருவிக் கொண்டு ஒளி வீசியது. அவர் இதமாகத் தொடர்ந்தார். நான் இன்று இதையும் கூட சொல்ல வந்துள்ளேன்; மறுபடி எப்பொழுதும் நான் உன்னைக் கண்டனம் என்றும் கடும் பார்வையால் தாக்க மாட்டேன். இனி என்றுமே நான்உன்னைக் கடிந்து கொள்ள மாட்டேன்.

என் மகாகுருவின் கண்டிப்புக்களை நான் எவ்வளவு இழந்துவிட்டேன்! அந்த ஒவ்வொரு கண்டிப்பும் என்னைக் காப்பாற்றும் தேவ தூதனாகவே இருந்தது.

அன்பு நிறைந்த குருவே! என்னை லட்சம் தடவை வேண்டு மானாலும் கண்டியுங்கள்இப்பொழுதே என்னை திட்டுங்கள்!

இனி மேல் நான் உன்னை கண்டிக்கவே மாட்டேன். அவருடைய தெய்வீகக் குரல் தீவிரமாயிருந்தது. இருந்தாலும் ஓர் உள்ளார்ந்த நகைப்புடன் கூடியிருந்தது. நமது இரண்டு உருவங்களும் கடவுளின் மாயைகனவில் வெவ்வேறாகத் தோன்றும் வரையில் நீயும் நானும்

ஒன்றாகச் சேர்ந்து சிரிக்கலாம். இறுதியில் பிரபஞ்ச அன்பனுடன் நாம் ஒன்றாக ஐக்கியமாகிவிடுவோம்; நம் சிரிப்பு அவனுடைய சிரிப்பாகும். நாம் ஒன்றாகச் சேர்ந்திசைக்கும் ஆனந்த கீதம் கடவுள் சுருதி சேர்த்த ஆன்மாக்களுக்கு முடிவற்ற காலம் முழுவதும் ஒலிபரப்பாகட்டும்!

ஸ்ரீ யுக்தேஸ்வர் பிறகு இங்கு நான் வெளிப்படுத்த முடியாத சில விஷயங்களைப் பற்றி விளக்கினார். மும்பை ஹோட்டல் அறையில் என்னுடன் கழித்த அந்த இரண்டு மணி நேரங்களில் அவர் என்னுடைய ஒவ்வொரு கேள்விக்கும் விடை அளித்து விட்டார். உலக நடப்புக்களைப் பற்றி அவர் 1936-ம் வருட ஜூன் மாத அந்த நாளில் கூறிய அனேக முன்னறிவிப்புக்கள் ஏற்கனவே நடைபெற்றுவிட்டன.

அன்பனே, நான் இப்பொழுது உன்னை விட்டுச் செல்கிறேன்! இந்தச் சொற்களைக் கேட்ட பொழுது குருதேவர், சுற்றி வளைத்துக் கொண்டிருந்த என் கைகளிலிருந்து உருகி மறைவதை நான் உணர்ந்தேன்.

என் குழந்தாய், அவர் குரலின் அதிர்வு என் அந்தராத்ம வெளியை ஊடுருவியபடி ஒலித்தது. எப்பொழுதெல்லாம் நீ நிர்விகல்ப சமாதியை அடைந்து என்னை அழைக்கிறாயோ அப்பொழுதெல்லாம் நான் இன்று போலவே இரத்தமும் சதையும் கொண்ட உருவமுடன் உன்னிடம் வருவேன்.

இந்தத் தெய்வீக வாக்குறுதியுடன் ஸ்ரீ யுக்தேஸ்வர் என் பார்வையிலிருந்து மறைந்தார். மேக முழக்கம்

போன்றதொரு நாத ஒலி திரும்பத் திரும்ப ஒலித்தது: எல்லோருக்கும் சொல்வாய்! நிர்விகல்ப சமாதி மூலம், உன் மண்ணுலகம் இறைவனின் கனவே என்று அறிபவர் யாராயிருந்தாலும் சூட்சுமக் கனவுலகமான ஹிரண்ய லோகத்திற்கு வர இயலும். அங்கு வந்து, உயிர்த்தெழுந்த என்னை நான் மண்ணுலகத்தில் தரித்திருந்ததைப் போன்ற உடலுடன் காணலாம். யோகானந்தா, எல்லோருக்கும் சொல்வாய்!

பிரிவினால் ஏற்பட்ட துக்கம் மறைந்து விட்டது. அவருடைய மறைவினால் ஏற்பட்டிருந்த இரக்கமும் துக்கமும் என் அமைதியைக் குலைத்த திருடராயிருந்த நிலைமாறி அவை இப்பொழுது அவமானமடைந்து ஓடிவிட்டன. ஆன்மாவின் புதிராகத் திறக்கப்பட்ட எண்ணற்ற சிறு துவாரங்கள் மூலம் பேரானந்தம் இடைவிடாது ஊற்று போல் பெருகிய வண்ணமிருந்தது. காலங்காலமாக சரிவர உபயோகிக்கப்படாமல் தடை பட்டிருந்த அவை இப்பொழுது பரவச வெள்ளத்தினால் உந்தப்பட்டு புனிதத்தில் விரிவடைந்தன. என் முந்தைய பிறவிகள் ஒரு சலனப்படம் போல் வரிசையாக என் அகக்கண் முன் தோன்றின. என் குருதேவரின் தெய்வீக வருகையி னால் என்னைச் சுற்றி உண்டாகியிருந்த பிரபஞ்ச ஒளியினால் கடந்த கால நல்லதும் கெட்டதுமான கர்மவினைகள் கரைந்து ஒழிந்தன.

ஆர்வமற்ற இந்தத் தலைமுறையினரை நான் கூறும் இச்செய்திகள் மேலும் திகைப்படையச் செய்யும் என்றாலும் என் சுய சரிதத்தின் இந்த அத்தியாயத்தில்

நான் என் குருதேவரின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து இந்த மகிழ்ச்சிகரமான செய்திகளைப் பரப்பியுள்ளேன். நீசம் மனிதனுக்கு நன்கு தெரிந்த விஷயம்; நிராசை அவனுக்குப் புதிதல்ல; ஆனாலும் இந்த விபரீத குணங்கள் மனிதனின் உண்மையான அம்சங்களல்ல. அவன் என்று விரும்புகி றானோ அன்றே அவன் விடுதலைக்கான பாதையில் செல்லத் தொடங்கி விடுகிறான். வெற்றி கொள்ள முடியாத ஆத்மாவைப் பற்றிய கவனம் இன்றி நீ மண்ணுக்குச் சமானம் என்று அவனுக்கு உபதேசித்தவர்களின் நம்பிக்கை இழக்கச் செய்யும் சோர்வு மனப்பாங்கையே அவன் வெகு காலமாக உற்றுக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டான்.

உயிர்த்தெழுந்த குருவைக் காணும் பேறு கிட்டியவன் நான் மட்டுமே அல்ல.

குருதேவரின் பூரி ஆசிரமத்திற்கு அருகிலுள்ள வீட்டில் வசித்து வந்த வயதான ஒரு மாதுஅவரை மா (அம்மா) என்று அன்புடன் அழைப்பார்கள்குருதேவரின் சீடர்களில் ஒருவராவார். குருதேவர் அவருடைய காலை நடைப் பயிற்சிகளின் போது அடிக்கடி அங்கு நின்று அவருடன் பேசிவிட்டுப் போவதுண்டு. 1936ம் வருடம் மார்ச் மாதம் 16ந் தேதி மாலை அம்மா ஆசிரமத்திற்கு வந்து அவருடைய குருதேவரைக் காண விரும்பினார்.

இதென்ன, குருதேவர் மரணமடைந்து ஒருவார காலம் ஆகிறதே! என்ற ஸ்வாமி சேவானந்தர்இப்பொழுது பூரி ஆசிரமத்தின் பொறுப்பை விகிப்பவர்அவரை வருத்தத்துடன் நோக்கினார்.

அம்மா ஒரு புன்முறுவலுடன் அப்படி இருக்கவே முடியாது! என்று மறுத்தார்.

இல்லை. சேவானந்தர் அவருக்கு இறுதி அடக்கத்தின் விவரங்களையெல்லாம் கூறி, வாருங்கள் அம்மா, நான் தங்களை முன் தோட்டத்திலிருக்கும் அவருடைய சமாதிக்கு அழைத்துச் செல்கிறேன், என்றார்.

அம்மா தலையை அசைத்தார். அவருக்கு சமாதி கிடையாது. இன்று காலை பத்து மணிக்கு அவர் வழக்கமாக நடந்து செல்லுகையில் என் வாயிலின் முன் நின்றார்! வெளியே பிரகாசமான வெளிச்சத்தில் நான் அவருடன் பல நிமிடங்கள் பேசிக் கொண்டிருந்தேன்.

இன்று மாலை ஆசிரமத்திற்கு வா, என்று கூறினார்.

நான் இங்கு வந்திருக்கிறேன்! இந்த வயதான நரைத்த தலைக்குத்தான் எப்படிப்பட்ட அருளாசிகள்! மரணமற்ற குரு இன்று காலை என்னிடம் இவ்வுலக நிலையைக் கடந்த உடலுடன் வந்ததை நான் தெரிந்து கொள்ள வேண்டுமென்று நினைத்தார் போலும்!

திகைப்படைந்த சேவானந்தர் அவர் முன் மண்டியிட்டார்.

அம்மா, அவர் கூறினார், என் மனத்திலிருந்து எவ்வளவு பெரிய துக்க பாரத்தைத் தாங்கள் விலக்கிவிட்டீர்கள்! அவர் உயிர்த்தெழுந்து விட்டார்!

---

1 பார்க்க பக்கம் 360. சவிகல்ப சமாதியில் ஒரு பக்தன் பிரம்மத்துடன் தான் ஒன்றிவிட்டதை அறிந்தாலும் அவன் தன் பேரண்ட உணர்வை, அசைவில்லாத ஒரு பரவச நிலையில் தவிர வேறு சமயங்களில் தக்க வைத்துக் கொள்ள முடிவதில்லை. இடைவிடாத தியானத் தினால் அவன் நிர்விகல்ப சமாதி என்னும் உயர்ந்த நிலையை அடைந்து அதில் கடவுள் உணர்வை இழக்காமல்உலகத்தில் சுதந்திரமாக நடமாடும் நிலையை அடைகிறான்.

நிர்விகல்ப சமாதியில் யோகி தன் லௌகீக அல்லது உலகக் கர்ம வினைகளின் கடைசித் தடயங்களைக் கூடத் தீர்த்து விடுகிறான். இருந்தாலும் அவனுக்கு இன்னும் தீர்க்கவேண்டிய சூட்சும மற்றும் காரண கர்ம வினைகள் மீதி இருக்கலாம். ஆதலால் அதிக அதிர்வலைகள் கொண்ட உலகங்களில் சூட்சும மற்றும் காரண சரீரங்களை எடுக்கிறான்.

2 அனேகர் சூட்சும உலகங்களிலுள்ள அழகை அனுபவித்து கடினமான ஆன்மீக முயற்சியில் ஈடுபடுவதற்குத் தேவையிருப்பதாக நினைப்பதில்லை.

3 ஸ்ரீ யுக்தேஸ்வர் இந்த இடத்தில் பிராணன் என்ற சொல்லை பயன்படுத்தினார்; நான் அதை உயிரணுத்துகள்கள் என்று மொழிபெயர்த்துள்ளேன். இந்து சாத்திரங்கள் அணு மற்றும் பரம அணு (அணுவையும் கடந்த மின்னணுத்துகள் சக்திகள்) வை மட்டுமல்லாமல் பிராணன், அதாவது படைக்கும் திறன் வாய்ந்த உயிரணுத்துகள் சக்திகளையும் குறிப்பிடுகின்றன. அணுக்களும் மின்னணுத் துகள்களும் குருட்டுச் சக்திகள்; பிராணன் என்பது உள்ளார்ந்த அறிவை உடையது. உதாரணமாக விந்துவிலும் முட்டையிலும் உள்ள பிராண உயிரணுத்துகள்கள் கர்ப்பத்தில் கர்ம வினைக்கேற்ப கருவின் வளர்ச்சிக்கு வழிகாட்டுகிறது.

4 மந்திரம் என்பதன் பண்புச்சொல், ஒருமுனைப்பட்ட எண்ணத் துப்பாக்கியிலிருந்து வெளிப்படும் உச்சரிப்பு ஒலி-விதை, புராணங்கள் (புராதன சாத்திரங்கள் அல்லது விளக்கங்கள்) தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையே நடந்த இந்த மாந்திரீக யுத்தங்களை வருணிக்கின்றன. ஒரு தடவை ஓர் அசுரன், தேவன் ஒருவனை மிகச் சக்திவாய்ந்த ஒரு மந்திரத்தினால் கொல்ல முயற்சித்தான். ஆனால் தவறான உச்சரிப்பினால் அந்த எண்ண வெடிகுண்டு திரும்பித் தாக்கி அந்த அசுரனையே கொன்றுவிட்டது.

5 அம்மாதிரியான திறனுக்கு உதாரணங்கள் மண்ணுலகில் கூட இல்லாமலில்லை, ஹெலன் கெல்லரையும் இன்னும் மற்ற அபூர்வப் பிறவிகளையும் குறிப்பிடலாம்.

6 மண்ணுலகில் தூய மனதுடைய குழந்தைகள் சில சமயம் தேவதைகளின் அழகிய சூட்சும உருவங்களை காண முடிவதுண்டு. சில போதை மருந்துகள் அல்லது போதை தரும் மதுவின் மூலம் (இவைகளை உபயோகிப்பது எல்லா சாத்திரங்களிலும் தடை செய்யப்பட்டிருக்கிறது) ஒரு மனிதன் அவனுடைய உணர்வை மிகவும் சிதைப்பதால் சூட்சும நகரங்களில் வாழும் கோரமான உருவங்களைக் காண்கிறான்.

7 ஒரு முறை பகவான் புத்தரிடம், ஒரு மனிதன் ஏன் எல்லாரையும் சமமாக நேசிக்க வேண்டுமென்ற கேள்வி கேட்கப்பட்டது. அந்த உயர்ந்த ஆசாரியார், ஏனெனில் ஒவ்வொரு மனிதனுக்கும் எண்ணற்ற, பலவிதமான பிறவிகளில் ஒவ்வொரு உயிரும் (ஒருதடவை இல்லாவிட்டால் இன்னொரு தடவையில்) அவனுக்கு பிரியமானதாயிருந்திருக்கிறது, என்று விளக்கினார்.

8 படைக்கப்பட்ட எல்லா உயிர்களிலும், அணுவிலிருந்து மனிதன் வரையில் ஊடுருவி நிற்கும் எட்டு வித மூலப் பொருட்கள்:மண், நீர், நெருப்பு, காற்று, வானம், பொறிகளைச் சார்ந்த மனம், புத்தி, அகங்காரம் என்பதாகும். (ஒப்பிடுக. பகவத் கீதை: VII:4)

9 உடல் என்பது ஆன்மாவை, ஸ்தூல உருவத்திலோ அல்லது சூட்சும உருவத்திலோ மூடும் போர்வை. இம்மூன்று சரீரங்களும் சுவர்க்கப் பறவைக்குக் கூடுகளாகும்.

10 லாஹிரி மகாசயருக்கு ஏதோ ஒரு கடந்த பிறவியில் ஏற்பட்டிருந்த

அரண்மனை வாழ்வை விரும்பிய ஓர் ஆழ்மன இச்சையை நீக்குவதற்காக பாபாஜி உதவியது போல்; அத்தியாயம் 34-ல் விவரித்துள்ளது போல.

11 அவர் மேலும் அவர்களுக்குக் கூறினார், பிணம் எங்கேயோ அங்கு கழுகுகள் வந்து கூடும். லூக்கா 17:37 (பைபிள்). எங்கெல்லாம் ஆத்மாவானது ஸ்தூல, சூட்சும, காரண உடல்களினால் மூடப்பட்டிருக்கிறதோ அங்கேதான் இச்சைகளாகிய கழுகுகள் ஒன்று கூடும். அவைகள் மனிதனின் புலன்களின் பலவீனத்தை இரையாகக் கொண்டோ அல்லது சூட்சும, காரண சரீரங்களின் பற்றை உபயோகித்தோ ஆத்மாவைக் கைதியாகவே வைத்திருக்க முயல்கின்றன.

12 ஜெயங் கொள்ளுகிறவனெவனோ, அவனை நான் என் தேவனுடைய ஆலயத்தில் தூணாக்குவேண், அதினின்று அவன் ஒருக்காலும் நீங்குவதில்லை; (அதாவது மறுபடியும் பிறவி எய்துவதில்லை)... நான் ஜெயங்கொண்டு என் பிதாவினுடைய சிங்காசனத்திலே அவரோடே கூட உட்கார்ந்தது போல, ஜெயங்கொள்ளுகிறவனெவனோ அவனும் என்னுடைய சிங்காசனத்தில் என்னோடே கூட உட்காரும்படிக்கு அருள்செய்வேன். வெளிப்படுத்தின விசேஷம் 3:12, 21 (பைபிள்).

13 ஸ்ரீ யுக்தேஸ்வர் குறிப்பிடுவது என்னவெனில் அவர் எப்படி மண்ணுலகப் பிறவியில்
சில சமயங்களில் சீடர்களின் கர்மவினைகளைக் குறைப்பதற்கு அவர்களுடைய வியாதிகளின் பளுவை ஏற்றுக் கொண்டாரோ அதைப் போலவே சூட்சும உலகத்தில் இரட்சகர் என்ற அவரது நியமனம், ஹிரண்ய லோக வாசிகளின் சூட்சும கர்மவினைகளை ஏற்று இன்னும் உயர்ந்த காரண உலகம் செல்வதற்குரிய அவர்களுடைய பரிணாம வளர்ச்சியைத் துரிதப்படுத்துவதற்கு உதவியது.

14 ஹாம்லெட் (அங்கம் III, காட்சி I).

15 வாழ்வும் சாவும் எண்ணங்களின் கால இடத் தொடர்புகள் மட்டுமே. வேதாந்தம், இறைவன் மட்டுமே உண்மை என்பதைச் சுட்டிக் காட்டுகிறது; எல்லாப் படைப்புகளும் அல்லது தனித்தனியான உயிர்களும் மாயை அல்லது பிரமைதான். இந்த ஏக தத்துவ வியாக்கியானம் ஆதி சங்கரரின் உபநிஷத பாஷ்யங்களில் முதலிடத்தைப் பெற்றிருக்கிறது.

அத்தியாயம் 44

# வார்தாவில் மகாத்மா காந்தியுடன்

வார்தாவுக்கு நல்வரவு! மகாத்மா காந்தியின் காரியதரிசியான மகாதேவ தேசாய், செல்வி ப்ளெட்ஷ் மற்றும் திரு.ரைட் அவர்களையும் என்னையும் மேற்கண்ட அன்பான சொற்களுடனும் கதர் (கையால் நெய்த பருத்தித்துணி) மாலை களுடனும் வரவேற்றார். எங்கள் சிறு குழு ஆகஸ்ட் மாதம் ஓர் அதிகாலையில் வார்தா ரயில் நிலையத்தில், வண்டியின் புழுதியிலிருந்தும் உஷ்ணத்திலிருந்தும் விடுபட்ட மகிழ்ச்சியுடன் அப்பொழுதுதான் வந்திறங்கி இருந்தது. எங்கள் சாமான்களை ஒரு மாட்டு வண்டியில் ஏற்றி விட்டு நாங்கள், தேசாய் மற்றும் அவருடைய இரு துணைவர்களான பாபா சாகேப் தேஷ்முக், டாக்டர் பிங்களே இவர்களுடன் திறந்த மோட்டார் வண்டியில் ஏறினோம். கிராமத்து மண் பாதையில் சிறிது தூரம் பிரயாணம் செய்து நாங்கள் இந்தியாவின் அரசியல் முனிவருடைய ஆசிரமமான மகன்வாடிக்கு வந்து சேர்ந்தோம்.

திரு.தேசாய் எங்களை உடனே எழுதும் அறைக்கு இட்டுச் சென்றார். அங்கே காந்திஜி சப்பணமிட்டு அமர்ந்திருந்தார். ஒரு கையில் பேனாவும் இன்னொரு கையில் ஒரு காகிதத் துண்டுடனும் முகத்தில்

எவரையும் வெல்லும் இதய பூர்வமான புன்னகையுடனும் காணப்பட்டார்.

நல்வரவு! என்று அவர் இந்தியில் அவசரமாக எழுதினார். அன்று திங்கட்கிழமை; அவருடைய வாராந்திர மௌன தினம்.

இதுதான் எங்களுடைய முதல் சந்திப்பு என்றபோதிலும் நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் மிக அன்புடன் நோக்கி முறுவலித்துக் கொண்டோம். 1925ல் மகாத்மா காந்தி ராஞ்சி பள்ளிக்கூடத்திற்கு விஜயம் செய்து அதனுடைய விருந்தினர் புத்தகத்தில் பெருந்தன்மையுடன் புகழ்ந்து எழுதியிருக்கிறார்.

100 பவுண்டே எடையுள்ள சிறு உருவத்தையுடைய அந்த மகான் உடல், மன, ஆன்மீக ஆரோக்கிய ஒளியுடன் விளங்கினார். அவருடைய மிருதுவான பழுப்பு நிறக் கண்கள் கூரிய அறிவு, நேர்மை, விவேகம் இவைகளுடன் ஒளிவீசின. இந்த அரசியல் வல்லுநர் ஆயிரக்கணக்கான சட்ட, சமூக மற்றும் அரசியல் சச்சரவுகளுக்கு ஈடுகொடுத்து வெற்றிகரமாக வெளிவந்திருக் கிறார். இந்தியாவின் கோடிக் கணக்கான கல்வியறிவற்றவர்களின் இதயத்தில் காந்திஜி ஒரு நிரந்தரமான இடம் பிடித்துக் கொண்ட மாதிரி உலகத்தில் வேறு எந்தத் தலைவரும் தன் மக்கள் மனத்தில் இடம் பெற்றதில்லை. அவர்கள் சுயமாகவே அளித்த புகழாரம்தான் அவருடைய பிரபலமான பட்டம்மகாத்மா, மிக உயர்ந்த ஆத்மா. கேலிப் படங்களில் பரவலாகச் சித்தரிக்கப்படும் கோவணத் துணியை, அவர்களின்

காரணமாகவே அணிகிறார்; அவருடைய ஆடை, அதைவிட அதிகமாக வாங்க முடியாத தாழ்த்தப்பட்ட மக்களிடம் அவருக்குள்ள ஐக்கியத்தின் அடையாளமாகும்.

ஆசிரமவாசிகள் அனைவரும் உங்கள் அழைப்புக்குக் காத்திருக்கிறார்கள்; தயவு செய்து எந்தச் சேவை வேண்டுமானாலும் அவர்களைக் கேட்கலாம். அவருக்கே உரித்தான பண்புடன் மகாத்மா, அவசரமாக எழுதப்பட்ட இந்தக் குறிப்பை என்னிடம் கொடுத்தார். தேசாய் எங்களை எழுதும் அறையிலிருந்து விருந்தினர் இல்லத்திற்கு அழைத்துச் சென்றார்.

எங்கள் வழிகாட்டி எங்களைப் பழத்தோட்டங்களும் பூக்கள் மலர்ந்த வயல்களும் நிறைந்த வழியாக, ஓடுகளினால் வேயப்பட்ட கூரையும் பின்னால் தட்டி கொண்ட ஜன்னல்களையுமுடைய ஒரு கட்டிடத்திற்கு அழைத்துச்சென்றார். முன் பகுதியில் இருபத்தைந்து அடிகள் குறுக்களவுள்ள ஒரு கிணறு உபயோகத்தில் இருந்தது. அதன் தண்ணீர் கால்நடைகளுக்கு என்று திரு. தேசாய் கூறினார். அருகில் சிமெண்டினாலான ஒரு சுழலும் சக்கரம், அரிசி புடைப்பதற்காக இருந்தது. எங்களுடைய ஒவ்வொரு சிறிய படுக்கை அறையிலும் காணப்பட்ட கயிற்றினால் பின்னப்பட்ட ஒரே ஒரு கட்டில் இதைவிட வசதிகள் குறைக்கப்பட முடியாது என்பதை நிரூபித்தது. சுண்ணாம்பு அடிக்கப்பட்ட சமையலறையில் ஒரு மூலையில் ஒரு தண்ணீர்க் குழாயும் இன்னொரு பக்கத்தில் சமைப்பதற்கு ஓர்

அடுப்பும் பெருமையுடன் வெளிப்பட்டன. எளிய இயற்கையான ஒலிகள்காக்கை, குருவிகளின் கூவல், கால் நடைகளின் கத்தல், கல்லைச் செதுக்கும் சிற்றுளிகளின் சத்தம் இவைகள் எங்கள் காதுகளை எட்டின.

திரு.ரைட்டின் பயண நாட்குறிப்பேட்டைக் கண்டதும், தேசாய் அதைத் திறந்து, ஒரு பக்கத்தில் மகாத்மாவை திடமாகப் பின்பற்றுபவர் (சத்தியாகிரகி)கள் அனைவராலும் மேற்கொள்ளப்பட்டிருக்கும் சத்தியாகிரக[1] சபதங்களின் பட்டியலை அதில் எழுதினார்:

> அஹிம்சை; சத்தியம்; திருடாமை; பிரமசரியம்; எதையும் சொந்தமாக வைத்துக் கொள்ளாமை; உடல் உழைப்பு; நாவின்ருசியை அடக்குதல்; அச்சமின்மை; எல்லா மதங்களிடமும் சம மரியாதை; சுதேசி (நம் நாட்டில் உற்பத்தியானவைகளை உபயோகித்தல்); தீண்டாமையிலிருந்து விடுதலை. இந்தப் பதினொன்றும் சபதங்களாக மிகப் பணிவான பாவத்துடன் அனுசரிக்கப்பட வேண்டும்.

(மறுநாள் காந்திஜி அவர்களே இப்பக்கத்தில் தேதியைக் கூடக் குறிப்பிட்டுஆகஸ்ட் 27, 1935கையெழுத்திட்டார்.)

நாங்கள் வந்து சேர்ந்து இரண்டு மணி நேரம் கழிந்த பிறகு என் கூட வந்தவர்களையும், என்னையும் மதிய உணவிற்கு அழைத்தார்கள். மகாத்மா ஏற்கனவே ஆசிரமத்தின் வெளிமுற்றத் தாழ்வாரத்தில் அவருடைய படிக்கும் அறைக்கு எதிராக அமர்ந்திருந்தார். கிட்டத்தட்ட இருபத்தைந்து சத்தியாகிரகிகள் பித்தளைத் தட்டு, கிண்ணங்களுக்கு முன்னால் வெறுங்காலுடன் அமர்ந்திருந்தார்கள். எல்லோரும் சேர்ந்து கூட்டுப் பிரார்த்தனை செய்தார்கள். பிறகு பெரிய பித்தளைப்

பாத்திரங்களிலிருந்து நெய் தடவிய சப்பாத்தி (கோதுமை மாவிலிருந்து தயாரிக்கப்பட்ட ரொட்டி) தால்ஸரி (நறுக்கி வேகவைத்த காய்கறிகள்) மற்றும் எலுமிச்சைத் தொக்கு (Jam) ஆகியவை பரிமாறப்பட்டன.

மகாத்மா சப்பாத்தி, வேகவைத்த பீட்ரூட், சில பச்சைக் காய்கறிகள், ஆரஞ்சு பழங்கள் ஆகியவற்றைச் சாப்பிட்டார். அவருடைய தட்டின் பக்கத்தில் பிரசித்தமான ரத்த சுத்தியான கசப்பான வேப்பிலை உருண்டை வைக்கப்பட்டிருந்தது. அவர் அதில் ஒரு பகுதியை தேக்கரண்டியால் பிரித்தெடுத்து என் தட்டில் வைத்தார். சிறு வயதில் என் தாயார் வெறுக்கத்தக்க இம்மருந்தைப் பலவந்தப்படுத்தி விழுங்க வைத்ததை ஞாபகப் படுத்திக் கொண்டே அதைத் தண்ணீருடன் விழுங்கினேன். ஆனால் காந்திஜி எந்த வெறுப்பும் இல்லாமல் அந்த வேப்பிலை விழுதை கொஞ்சம் கொஞ்சமாக சாப்பிட்டார்.

இந்தச் சிறு சம்பவத்தில், தன் விருப்பப்படி புலன்களிலிருந்து மனத்தைப் பிரித்துக் கொள்ளக் கூடிய மகாத்மாவின் திறனை நான் குறிப்பிட்டுக் கவனித்தேன். சில வருடங்களுக்கு முன் அவருக்கு நடந்த பிரசித்தமான குடல் வால் அகற்றும் அறுவை சிகிச்சையை நினைத்துப் பார்த்தேன். மயக்க மருந்து ஏற்க மறுத்து அந்த ஞானி அறுவை சிகிச்சையின் முழுநேரமும் தன் சீடர்களுடன் மகிழ்ச்சியாகப் பேசிக் கொண்டிருந்தார்; அவருடைய அமைதியான புன்சிரிப்பு அவர் வலியை உணராததை வெளிப்படுத்தியது.

அன்று மதியம் அவருடைய குறிப்பிடத்தக்க சிஷ்யையான மீரா பஹறன்[2] எனத் தற்போது அழைக்கப்படும் செல்வி மாடலின் ஸ்லேட், என்னும் பெண்மணியைச் சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவர் ஓர் ஆங்கில கடற்படை தளபதியின் மகள். அவர் தன் தினசரி அலுவல்களைப் பற்றி சுத்தமான இந்தியில் எனக்கு எடுத்துக் கூறிய பொழுது அவருடைய திடமான, அமைதியான முகம் உற்சாகத்தினால் பளிச்சிடுவதைக் கண்டேன்.

கிராம நிர்மாண வேலை நன்கு பலனளிக்கிறது! நாங்கள் சிலர் சேர்ந்து தினமும் காலை ஐந்து மணிக்குப் பக்கத்திலிருக்கும் கிராம மக்களுக்குச் சேவை செய்யவும் அவர்களுக்கு எளிமையான சுகாதரத்தைப் பற்றிப் போதிக்கவும் செல்கிறோம். நாங்கள் குறிப்பாக அவர்களுடைய கழிவறைகளையும் ஓலைக் கூரை வேய்ந்த மண்குடிசைகளையும் சுத்தம் செய்கிறோம். கிராமத்தவர்கள் கல்வி அறிவு இல்லாதவர்கள்; உதாரணத்தின் மூலம் அல்லாமல் அவர்களுக்குப் போதிக்க முடியாது! அவர் மகிழ்ச்சியுடன் சிரித்தார்.

மிக உயர்ந்த குடும்பத்தில் பிறந்த இந்த ஆங்கிலப் பெண்மணியை வியப்புடன் பார்த்தேன்அவருடைய உண்மையான கிறிஸ்துவப் பணிவுதான், சாதாரணமாகத் தீண்டத்தகாதவர்களால் மட்டுமே செய்யப்படும் தோட்டி வேலைகளை செய்யக் கூடியவராக் குகிறது.

அவர் கூறினார், நான் 1925ல் இந்தியாவிற்கு வந்தேன். இந்த மண்ணில் நான் என் சொந்த வீட்டிற்குத்

திரும்பி வந்துவிட்டதாக உணர்கிறேன். இப்பொழுது நான் என் பழைய வாழ்விற்கும் பழைய அபிலாசைகளுக்கும் என்றும் திரும்ப மாட்டேன்.

நாங்கள் சிறிது நேரம் அமெரிக்காவைப் பற்றிப் பேசினோம். இந்தியாவிற்கு வரும் அனேக அமெரிக்கர்கள்[3] ஆன்மீக விஷ யங்களில் காட்டும் ஆழமான ஈடுபாட்டைக் கண்டு நான் எப்பொழும் மகிழ்ச்சியும் வியப்பும் அடைகிறேன், என்றார் அவர்.

மீரா பஹன் சீக்கிரமே சர்க்காவில் நூல் நூற்கத் தொடங்கினார். மகாத்மாவின் முயற்சிகளினால் தற்போது இந்தியாவின் கிராமங்களில் சர்க்கா சர்வ வியாபியாகக் காணப்படுகிறது.

காந்திஜி, குடிசைத் தொழில்களை புதுப்பிக்க ஊக்குவிப்பதற்கு பொருளாதார மற்றும் கலாச்சார காரணங்கள் உண்டு. ஆனால் அவர் குருட்டுத்தனமான எல்லா நவீன முன்னேற்றங்களையும் எதிர்க்கவில்லை. இயந்திர சாதனங்கள், ரயில்வண்டிகள், மோட்டார் வாகனங்கள், தந்தி முறை எல்லாமே அவருடைய மிகப்பெரிய சொந்த வாழ்க்கையில் பெரும் பங்கை வகித்துள்ளன! நடைமுறை விவரங்கள் மற்றும் அரசியல் உலகத்தின் கடுமையான உண்மை நிலை ஆகியவற்றுடன் தினமும் போராடி, சிறையிலும் வெளியிலுமாக செய்த ஐம்பது வருடப் பொதுச்சேவை, அவருடைய சம நிலை, திறந்த மனம், சீரிய மனோநிலை, மனிதர்களுடைய விந்தையான இயல்புகளை நகைச்சுவையுடன் காணுதல் ஆகிய

பண்புகளை அதிகரிக்கவே செய்துள்ளன.



வார்தாவில் மகாத்மா காந்தியின் ஆசிரமம்.
காந்திஜி (வலது) அப்பொழுதுதான் எழுதிய (அது ஒரு திங்கட்கிழமை, மகாத்மாஜி மௌனத்தை அனுசரிக்கும் தினம்) ஒரு குறிப்பை, யோகானந்தர் படித்துக் கொண்டிருக்கிறார். மறுநாள் ஆகஸ்ட் 27, 1935, யோகானந்தர் காந்திஜிக்கு கிரியா யோகத்தில் தீட்சை அருளினார்.

நாங்கள் மூவரும் பாபா சாகேப் தேஷ்முக்கின் விருந்தினர் களாக ஆறு மணிக்கு இரவு உணவைச் சுவைத்தோம். மாலை ஏழு மணி பிரார்த்தனைக்கு மகன்வாடி ஆசிரமத்திற்குத் திரும்பி, மேல் தளத்தின் மீது ஏறி, காந்தியைச் சுற்றி அரைவட்டக்குழுவாக முப்பது சத்தியாகிரகிகள் அமர்ந்திருந்த இடத்தை அடைந்தோம். அவர் ஒரு கோரைப் பாயில் அமர்ந்திருந்தார். அவரெதிரே ஒரு பழைய பாக்கெட்

கடிகாரம் நிமிர்த்தி வைக்கப்பட்டிருந்தது. மறைந்து கொண்டிருந்த சூரியன் அருகிலிருந்த ஆலமரங்கள் மற்றும் பனை மரங்களின் மேல் தன் கடைசிக் கிரணங்களை வீசிக் கொண்டிருந்தான்; பூச்சிகள் மற்றும் இரவின் ரீங்காரமும் ஒலிக்கத் தொடங்கிவிட்டது. சூழ்நிலை அமைதிமயமாய் இருந்தது; நான் பரவசமடைந்தேன்.

தேசாய், ஒரு பவித்ரமான பாடலை முதலில் பாட, குழுவினர் திரும்பிப் பாடினார்கள்; பிறகு கீதை ஓதுதல். மகாத்மா, இறுதிப் பிரார்த்தனையை என்னைச் செய்ய சொல்லி சைகை செய்தார். அனைவரின் எண்ணங்களுக்குள்ளும் விழைவுகளுக்குள்ளும் எவ்வளவு தெய்வீக ஒற்றுமை! என்றென்றைக்குமான ஒரு நினைவு: இளம் மாலை விண்மீன் களுக்குக் கீழே வார்தா மேல்தளத் தியானம்.

காந்தி சரியாக எட்டு மணிக்குக் குறித்த காலத்தில் தன் மௌனத்தை முடித்துக் கொண்டார். அவருடைய வாழ்க்கையில் செய்ய வேண்டிய மகத்தான வேலைகளை முன்னிட்டு அவர் காலத்தை நுட்பமாகப் பங்கிட வேண்டியுள்ளது.

வரவேண்டும், ஸ்வாமிஜி! இம்முறை மகாத்மாவின் வரவேற்பு காகிதத்தின் மூலமாக இல்லை. நாங்கள் இப்பொழுதுதான் மேல்தளத்திலிருந்து அவருடைய எழுதும் அறைக்கு இறங்கி இருந்தோம். அவ்வறை சதுர பாய்கள் (நாற்காலிகள் இல்லை), புத்தகங்களுடன் கூடிய ஒரு தாழ்வான மேஜை, காகிதத் தாள்கள், சில சாதாரண

பேனாக்கள் (ஃபவுண்டன் பேனா இல்லை) ஆகியவற்றுடன் எளிமையாக அமைக்கப்பட்டிருந்தது. விவரிக்க ஒன்றுமற்ற ஒரு கடிகாரம் ஒரு மூலையில் ஓடிக் கொண்டிருந்துது. அமைதியும் பக்தியும் கொண்டதொரு சூழல் எங்கும் நிறைந்திருந்தது. காந்தி, அவருக்கே உரித்தான வசீகரிக்கும், அனேகமாகப் பற்களற்ற, ஒரு பொக்கை வாய்ச் சிரிப்பை உதிர்த்தார்.

பல வருடங்களுக்கு முன்னால், அவர் விளக்கினார், நான் வாரத்தில் ஒரு நாள் மௌனம் அனுசரிப்பதை, என் கடிதப் போக்குவரத்தைக் கவனிக்க நேரம் கிடைக்கச் செய்யும் ஒரு சாதனமாகக் கைக்கொள்ள ஆரம்பித்தேன். ஆனால் இப்பொழுதோ இந்த இருபத்துநான்கு மணி நேரமும் ஓர் அத்தியாவசியமான ஆன்மீகத் தேவையாகிவிட்டது. ஒரு குறிப்பிட்ட காலந்தோறும் மௌனம் என்னும் நியதி சித்திரவதையாகாது. ஆனால் ஓர் அருளாசியாகும்.

நான் முழு மனத்துடன் ஒப்புக் கொண்டேன்.[4] மகாத்மா, அமெரிக்காவையும் ஐரோப்பாவையும் பற்றி என்னை விசாரித்தார். நாங்கள் பாரதத்தையும் உலக நிலவரத்தையும் பற்றிப் பேசினோம்.

திரு.தேசாய் அறையில் நுழைந்ததும் காந்தி, மகாதேவ், தயவுசெய்து நாளை இரவு நகர மண்டபத்தில் ஸ்வாமிஜியின் யோகம் பற்றிய சொற்பொழிவிற்கு ஏற்பாடு செய்யுங்கள், என்றார்.

நான் மகாத்மாவிற்கு இரவு வணக்கம் கூறி புறப்பட்ட பொழுது, அவர் மிகுந்த பரிவுடன் ஒரு வகைத்

தாவர எண்ணெய் (ஸ்ரீண்ற்ழ்ர்ய்ங்ப்ப்ஹ ர்ண்ப்) நிரம்பிய குப்பியை என்னிடம் கொடுத்தார்.

வார்தா கொசுக்களுக்கு அஹிம்சை[5] யைப் பற்றி எதுமே தெரியாது, ஸ்வாமிஜி! என்று நகைப்புடன் கூறினார்.

மறுநாள் காலை சீக்கிரமே நாங்கள் வெல்லமும் பாலும் சேர்ந்த கோதுமைக் கஞ்சியை காலை உணவாக உண்டோம். காலை பத்தரை மணிக்குக் காந்தியுடனும் மற்றும் இதர சத்தியாகிரகிகளுடனும் மதிய உணவு உட்கொள்ள நாங்கள் முன்முற்றத்திற்கு அழைக்கப்பட்டோம். இன்று உணவு வகையில் கைக்குத்தல் அரிசிச் சோறும், புதிய காய்கறி வகைகளும், ஏலக்காயும் இருந்தன.

நடுப்பகலில் நான் ஆசிரம வெளிகளைச் சுற்றி நடந்தேன். மேய்ச்சல் நிலங்களில் சில பசுக்கள் தொந்தரவின்றி மேய்ந்த வண்ணம் இருந்தன. பசுக்களின் பாதுகாப்பில் காந்திக்குப் பேரார்வம் உண்டு.

பசுவானது மனித நிலைக்குக் கீழ்ப்பட்ட எல்லா ஜீவராசிகளையும் குறிப்பதாக நான் கருதுகிறேன். இது மனிதனின் இரக்கத்தை அவனுடைய இனத்திற்கும் அப்பாற்பட்ட எல்லா உயிர்களிடத்தும் பரவச் செய்கிறது, மகாத்மா விளக்கியுள்ளார். மனிதன் பசுவின் மூலமாக உயிர் வாழும் எல்லாவற்றினிடமும் தன் ஐக்கியத்தை உணர அறிவுறுத்தப்பட்டிருக்கிறான். எதனால் நம் புராதன முனிவர்கள் பசுவைத் தெய்வீகமானதெனத் தேர்ந் தெடுத்தனர் என்பது எனக்குத் தெளிவாகப்

புரிகிறது. பாரதத்தில் பசு மிக நல்ல உவமையாகும்; அவள் அள்ளிக் கொடுப்பவளாக இருந்தாள். அவள் பாலை மட்டும் கொடுத்ததல்லாமல் விவசாயத்தையும் சாத்தியமாக்கினாள். அவள் காருண்யத்தின் கவிதையாகிறாள்; அந்த சாதுவான மிருகத்தினிடத்தில் இரக்கத்தை அறிந்து கொள்ளலாம். மனித குலத்தில் லட்சக் கணக்கானவர்களுக்கு அவள் இரண்டாவது தாய் ஆகிறாள். பசுவைக் காப்பதென்பது இறைவன் படைத்த வாயில்லா ஜீவன்களனைத்தையும் காப்பதாகும். படைப்பில் கீழ் நிலையிலுள்ளவற்றின் கோரிக்கை, அவைகளுக்கு வாயில்லை என்பதினாலேயே இன்னும் அதிக வலுவுறுகிறது.[6]

ஆசார சீல இந்துவிற்குச் சில தினசரிச் சடங்குகள் விதிக்கப்பட்டுள்ளன. அவைகளில் ஒன்று பூத யக்ஞம், அதாவது மிருகங்களுக்கு உணவளித்தல். இந்தச் சடங்கு, படைப்பில் குறைந்த பரிணாம வளர்ச்சி பெற்றவைகளிடம் மனிதனுக்குள்ள கடமையை உணர்ந்து கொண்டதற்கான அடையாளமாகும். அவைகள் சுபாவமாகவே தேக அடையாளத்தால் (மனிதனையும் அல்லல் படுத்தும் மயக்கங்கள்) பிணைக்கப்பட்டுள்ளன. இவைகளிலிருந்து விடுவித்துக் கொள்ளக் கூடிய மனித இனத்திற்கே சிறப்பான பகுத்தறிவுப் பண்பு பிராணிகளுக்கு இல்லை.

ஆதலால் பூத யக்ஞம் பலவீனமானவைகளைக் காக்க ஆர்வமுள்ள நிலையை மனிதனிடம் வலிமை பெறச் செய்கிறது. அதேபோன்று மனிதன் கண்ணுக்குத்

தெரியாத எண்ணற்ற உயர்ந்த ஜீவர்களின் பரிவினால் நன்மை அடைகிறான். பூமி, கடல், ஆகாயம் இவைகளில் புத்துயிர் அளிக்கும் ஏராளமான இயற்கைப் பரிசுகளுக்கும் மனித இனம் கடமைப்பட்டுள்ளது. இயற்கையில் மிருகங்கள், மனிதன் மற்றும் சூட்சும தேவதைகள் ஆகியோர் ஒருவருக்கொருவர் தொடர்பு கொள்ள முடியாதபடி பரிணாம வளர்ச்சியின் தடை இருந்தாலும், மௌனமான அன்பெனும் தினசரி யக்ஞங் (சடங்கு)களால் இத்தடை வெல்லப்படுகிறது.

பித்ரு யக்ஞமும், நிரு யக்ஞமும் பிற இரண்டு தினசரி யக்ஞங்களாகும். பித்ரு யக்ஞம் என்பது முன்னோர்களுக்கு அளிக்கும் வேள்வி. அவர்களின் ஞானத் திரட்டு, இன்று மனித குலத்திற்கு ஒளியூட்டுகிறது. இவ்வேள்வி மனிதன், தான் கடந்த காலத்திற்குப் பட்டிருக்கும் கடனை ஒப்புக் கொள்வதன் ஓர் அடையாளமாகும். நிரு யக்ஞம் என்பது வேற்று மனிதர்களுக்கு அல்லது ஏழைகளுக்கு அன்னம் அளித்தலாகும்: இது மனிதனின் நிகழ்கால பொறுப்புகள், சம காலத்தவர்களுக்கு அவன் ஆற்ற வேண்டிய கடமைகள் ஆகியவற்றின் அடையாளமாகும்.

பிற்பகலில் நான் ஆற்ற வேண்டிய நிரு யக்ஞத்தை, சிறுமிகளுக்காக ஏற்படுத்தப்பட்ட காந்திஜியின் ஆசிரமத்திற்கு விஜயம் செய்து நிறைவேற்றினேன். பத்து நிமிடக் கார் பிரயாணத்தில் திரு.ரைட்டும் என்னுடன் வந்தார். வண்ண வண்ணப் புடவைகள் அணிந்த சின்னஞ் சிறிய மலரை யொத்த முகங்கள்! நான் திறந்த

வெளியில் அங்கு இந்தியில் ஆற்றிய சிறு சொற்பொழிவின் முடிவில் திடீரென்று வானம் திறந்து மழை கொட்டத் தொடங்கியது. நானும் திரு.ரைட்டும் சிரித்த படியே வண்டியில் ஏறி, வெள்ளித்தகடுகள் போன்று பொழியும் மழையின் மத்தியில் மகன்வாடிக்கு வேகமாகத் திரும்பினோம். வெப்ப மண்டலத்தின் மழை பொழிவில்தான் என்ன தீவிரம்! சிதறல்!

விருந்தினர் இல்லத்திற்கு மறுபடியும் திரும்பியதும், எங்கும் நிலவியிருந்த முழு எளிமையும் சுய தியாகதின் அடையாளங்களும் என்னை மீண்டும் திகைக்க வைத்தன. உடைமையின்மை என்ற காந்தியின் சபதம் அவரது மணவாழ்க்கையின் ஆரம்பத்திலேயே தொடங்கிவிட்டது எனலாம். வருடம் ரூ.60,000க்கு மேலேயே வருமானம் வந்து கொண்டிருந்த விரிவான வக்கீல் தொழிலைத் துறந்துவிட்டு மகாத்மா, தன் சொத்துக்களையெல்லாம் ஏழைகளுக்குப் பகிர்ந்தளித்தார்.

துறவைப் பற்றி சாதாரணமாக முழுதும் புரிந்து கொள்ளாதவர்களை ஸ்ரீ யுக்தேஸ்வர் மென்மையாகப் பரிகாசம் செய்வதுண்டு.

பிச்சைக்காரன் செல்வத்தைத் துறக்க முடியாது. ஒரு மனிதன், என் வியாபாரம் நசிந்து விட்டது; என் மனைவி என்னை விட்டுப் போய்விட்டாள்; நான் எல்லாவற்றையும் துறந்து விட்டு ஓர் ஆசிரமத்தில் சேரப் போகிறேன், என்று புலம்பினால் அவன் எந்த தியாகத்தைச் செய்ததாகக் குறிப்பிடுகிறான்? பணத்தையோ அன்பையோ அவன் துறக்கவில்லை.

அவை இவனைத் துறந்து விட்டன! என்பார் குருதேவர்.

ஆனால் காந்தியைப் போன்ற மகான்கள் வெளிப் படையான சொத்துக்களின் தியாகம் மட்டுமின்றி இன்னும் கடினமானதான சுயநல விருப்பம், சொந்த குறிக்கோள் ஆகியவற்றைக் கூடத் துறந்து விட்டு, தம் உள்ளார்ந்த நிலையையே மொத்த மனித இன ஓட்டத்துடன் ஒன்ற வைத்து விட்டார்கள்.

மகாத்மாவின் மனைவி கஸ்தூரிபாய் குறிப்பிடத்தக்கவர். மகாத்மா, அவருக்கும், அவர்களுடைய குழந்தைகளின் உபயோகத்திற்கும் தன் சொத்தில் ஒரு பாகம் கூட வைக்கத் தவறியபோது அவர் எந்த மறுப்பும் கூறவில்லை. சிறு வயதிலேயே திருமணம் செய்து வைக்கப்பட்ட அவர்கள், நான்கு பிள்ளைகள் பிறந்த பிறகு[7] பிரமசரிய விரதத்தை மேற்கொண்டார்கள். அவர்களது வாழ்க்கையெனும் தீவிரமான நாடகத்தில் ஓர் அமைதியான கதாநாயகியாக இருந்து கஸ்தூரிபாய், தன் கணவரைப் பின்பற்றி சிறைக்குச் சென்றும், அவருடைய மூன்று வார உண்ணாவிரதங்களில் பங்கு கொண்டும், அவருடைய முடிவற்ற பொறுப்புக்களில் தன் பங்கை முழுதுமாக ஏற்றிருக்கிறார். அவர் காந்தியைப் பின்வருமாறு புகழ்ந்து கூறியிருக்கிறார்:

> உங்கள் வாழ்நாள் முழுதும் துணைவியாகவும் உதவியாளராகவும் இருக்கும் பேற்றை அடைந்த நான் உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன். உலகத்திலேயே மிகப் பரிபூரணமான திருமணத்திற்காக, உடலுறவின்றி பிரமசரிய (சுய கட்டுப்பாடு)த்தை அடிப்படையாகக் கொண்டதற்காக தங்களுக்கு நன்றி. பாரதத்திற்கான தங்களுடைய வாழ்நாள் தொண்டில் தாங்கள் என்னைத் தங்களுக்குச் சமமாகக் கருதியதற்கு நன்றி. சிறு பையன், தன் குழந்தைப் பருவ விளையாட்டுப்

பொருள்களிடம் அலுப்படைவதைப் போல் தங்கள் மனைவி, குழந்தைகளிடமும் அலுப்படைந்து, சூதாட்டம், குதிரைப்பந்தயம், மது, மாது, ஆடல், பாடல் போன்றவற்றில் தங்கள் நேரத்தைக் கழிக்கும் கணவர்களில் ஒருவராக அல்லாமல் இருப்பதற்கு தங்களுக்கு நன்றி. மற்றவர்களின் உழைப்பில், ஏமாற்றி பொருள் சேர்த்துப் பணக்காரராகும் கணவர்களில் நீங்கள் ஒருவராக இல்லாமலிருப்பதற்கு நான் எவ்வளவு நன்றியுள்ளவளாக இருக்கிறேன்.

நீங்கள் லஞ்சத்திற்கு முன் கடவுளையும் நாட்டையும் வைத்ததற்கும், கடவுளிடம் முழுமையான பரிபூரண நம்பிக்கையும், உங்களுடைய திடமான எண்ணத்தில் துணிவும் உங்களுக்கு உண்டு என்பதினாலும் நான் எவ்வளவோ நன்றியுள்ளவளாக இருக்கிறேன். கடவுளையும் தன் நாட்டையும் என் முன்னர் வைத்த கணவருக்கு நான் எவ்வளவோ நன்றியுள்ளவளாக இருக்கிறேன். நீங்கள், நம் வாழ்க்கை முறையில் ஏராளத்திலிருந்து எளிமைக்கு ஏற்படுத்திய மாற்றத்திற்கு நான் முணு முணுத்துக் கொண்டு எதிர்ப்புக் காட்டிய பொழுது, என்னையும் என் இளம் பருவத்துக் குற்றங் குறைகளையும் சகித்துக் கொண்டதற்கு தங்களுக்கு நன்றி.

நான் உங்கள் பெற்றோர்களுடைய வீட்டில் சிறு குழந்தையாக வந்தேன்; உங்கள் தாயார் மிகச் சிறந்த, நல்ல பெண்மணி; அவர் தைரியமும் துணிவும் கொண்ட மனைவியாக இருப்பதெப்படி என்றும், தனது மகனின் (என் வருங்கால கணவரின்) அன்பையும் கௌரவத்தையும் பாதுகாப்பதெப்படி என்பதையும் எனக்குப் போதித்து, பயிற்சி அளித்தார். வருடங்கள் ஓடின; நீங்கள் இந்தியாவின் மிகவும் அன்பார்ந்த தலைவராகிவிட்டீர்கள். மற்ற நாடுகளில் அடிக்கடி நடப்பதுபோல, கணவன் வெற்றியின் ஏணிப்படிகளில் ஏறியதும் மனைவி தனித்து விடப்படுவதால் அவளைச் சூழ்ந்து கொள்ளும் பயம் எதுவும் எனக்கில்லை. மரணம் நம்மைக் கணவன் மனைவியாகவே காணும் என்று எனக்குத் தெரியும்.

எல்லோராலும் போற்றப்பட்ட மகாத்மாவால் லட்சக்கணக்கில் வசூல் செய்ய முடிந்த பொழுது, அப்பொது நிதிக்கு கஸ்தூரிபாய் வருடக் கணக்காகப் பொருளாளராகப் பணியாற்றினார். காந்திஜியின் கூட்டத்திற்கு ஏதாவது நகையணிந்து செல்லும் மனைவிகளைப் பற்றிய அவரவர் கணவர்களுக்கு ஏற்படும் அச்சத்தைக் குறித்து இந்திய வீடுகளில் அனேக வேடிக்கையான கதைகள் சொல்லப் படுகின்றன; மகாத்மாவின் சொக்கவைக்கும் வாக்கில் தாழ்த்தப்பட்டவர்களுக்காக அவர் வாதிடும் பொழுது தங்கக் காப்புகளும் வைர மாலைகளும் செல்வச்

சீமாட்டிகளின் கைகளிலும் கழுத்துக்களிலுமிருந்து நேராக உதவி நிதிக் கூடைகளில் மயங்கி விழுந்துவிடுமாம்!

ஒரு நாள் பொருளாளரான கஸ்தூரிபாய் நான்கு ரூபாய் செலவு செய்ததற்குக் கணக்குக் கொடுக்க முடியவில்லை. காந்திஜி மனமிரங்காமல் முறைப்படி கணக்குத் தணிக்கையை வெளியிட்டு தன் மனைவியின் அந்த நான்கு ரூபாய் தவற்றைச் சுட்டிக் காட்டினார்.

நான் அடிக்கடி இந்தக் கதையை என் அமெரிக்க மாணவர்களுக்கு முன்னால் கூறியிருக்கிறேன். ஒரு நாள் மாலை சொற்பொழிவுக் கூடத்தில் ஒரு பெண்மணி இதைக் கேட்டு ஒரு கோபப் பெருமூச்சு விட்டார்.

மகாத்மாவோ அல்லது மகாத்மா இல்லையோ, அவர் இரைந்தார். அவர் என் கணவராயிருந்திருந்தால் இம்மாதிரி என்னைப் பகிரங்கமாய் அனாவசியமாக அவமானப் படுத்தியதற்கு சும்மாவா விட்டிருப்பேன், கண் சிவந்து போகும்படி செய்திருக்க மாட்டேனா!

எங்களிடையே அமெரிக்க மனைவிகள், இந்திய மனைவி கள் என்ற விஷயத்தைப் பற்றி ஒரு சுமுகமான நகைச்சுவை விவாதம் நடந்த பிறகு நான் இதைப் பற்றி முழுமையான விளக்கம் கூறினேன்.

திருமதி. காந்தி, மகாத்மாவை தன் கணவராக நினைக்காமல் தன் சிறிய தவறுகளுக்குக் கூடத் தன்னைத் திருத்திச் சரியான பாதையில் செலுத்துவதற்கு அதிகாரமுடைய குருவாகவே நினைத் தார். நான் சுட்டிக் காட்டினேன். கஸ்தூரிபாயைப்

பகிரங்கமாகக் கண்டித்த கொஞ்ச காலத்திற்குப் பிறகு காந்திஜிக்கு அரசியல் காரணத்திற்காக சிறை தண்டனை விதிக்கப்பட்டது. அவர் மிக அமைதியுடன் தன் மனைவியிடம் விடைபெறும் பொழுது, அவர் காந்திஜியின் கால்களில் விழுந்து வணங்கி, குருவே, நான் உங்களை எப்பொழுதாவது வருத்தப் படுத்தி இருந்தால் தயவு செய்து என்னை மன்னிக்கவும், என்றார் அடக்கத்துடன்.

அதிசயத்திலும் அதிசயமாக தன் மனைவியையே நிலை தவறாத சிஷ்யையாகச் செய்த அந்த மகானுடன் முன் ஏற்பாடு செய்து கொண்டு, வார்தாவில் அவருடைய எழுதும் அறைக்கு அன்று மாலை மூன்று மணிக்குச் சென்றேன். காந்திஜீ அவருடைய மறக்க முடியாத புன்னகையுடன் நிமிர்ந்து நோக்கினார்.

மகாத்மாஜி நான் மெத்தையில்லாத பாயின் மேல் அவரருகில் அமர்ந்தவாறு கூறினேன், தயவுசெய்து அஹிம்சை என்பதைப்பற்றி உங்கள் விளக்கம் என்ன என்பதை கூறுங்கள்.

உயிர்வாழும் எந்த ஜீவனுக்கும் மனத்தாலும் செய்கையாலும் தீங்கு செய்வதைத் தவிர்ப்பது.

அழகான கொள்கை! ஆனால் உலகம் எப்பொழுதும் வினவும்: ஒரு குழந்தையைக் காப்பதற்கோ அல்லது தன்னைக் காத்துக் கொள்ளவோ ஒரு நல்ல பாம்பைக் கொல்லக் கூடாதா?

என்னுடைய முக்கியமான சபதங்களான அச்சமற்று இருப்பது, கொல்லாமை ஆகிய இவ்விரண்டிற்கும் பங்கம்

வராமல் என்னால் பாம்பைக் கொல்ல முடியாது. அதற்குப் பதிலாக நான் மனத்திற்குள் அன்பின் அதிர்வலைகளினால் பாம்பை அமைதியாக்க முயல்வேன். நான் சூழ்நிலைகளுக்குத் தகுந்தாற்போல் என் தரத்தைத் தாழ்த்திக் கொள்ள முடியாது. கவரும் வகையில் ஒளிவுமறைவின்றி அவர் தொடர்ந்தார். நான் ஒரு நல்ல பாம்பைப் பார்க்க நேர்ந்தால் இந்த உரையாடலை இவ்வளவு அமைதியாகத் தொடர முடியாது என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

ஆகார விதிமுறைகளைப் பற்றிய பல சமீபகால மேற்கத்திய புத்தகங்கள் அவரது மேசை மேல் கிடந்தன. நான் அவற்றைப் பற்றிக் குறிப்பிட்டேன்.

ஆம், மற்ற எல்லா இடங்களையும் போல் சத்தியாகிரக இயக்கத்திலும் ஆகார விதிமுறைகள் மிக முக்கியமானவை, என்று சிரித்தபடி கூறினார். நான் சத்தியாகிரகிகளுக்கு முழுமையான தன்னடக்கத்தைப் பரிந்துரைப்பதால் பிரமசாரிகளுக்குரிய மிகச் சரியான உணவு முறையைத் தெரிந்து கொள்ள எப்பொழுதும் முயற்சி செய்து வருகிறேன். இனப்பெருக்கத் தூண்டுதலை அடக்குவதற்கு முன்னால் ஒருவன் சுவையை வெல்ல வேண்டும். அரைப் பட்டினியோ அல்லது சரிவிகிதமற்ற உணவு முறைகளோ இதற்கு விடையாகாது. உணவுக்காக மனத்தில் தோன்றும் பேராசையை வென்ற பிறகு ஒரு சத்தியாகிரகி தேவையான எல்லா வைட்டமின்கள், தாதுப் பொருட்கள், கலோரிகள் மற்றும் இவை போன்றவை நிரம்பியுள்ள

விவேகமான சைவ உணவு முறையைத் தொடர்ந்து கடைப் பிடிக்க வேண்டும். ஆகாரத்தைப் பற்றிய உள்ளறிவு மற்றும் புற அறிவினால் சத்தியாகிரகி யினுடைய விந்து, உடல் முழுவதற்கும் கிடைக்கும் ஜீவாதார சக்தியாக சுலபமாக மாறுகிறது.

மகாத்மாவும் நானும் மாமிச உணவிற்குப் பதிலாக நல்ல மாற்று உணவைப் பற்றி எங்களுக்குத் தெரிந்த கருத்துக்களை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டோம். அவகாடோ (பேரிக்காய் போன்ற ஓர் அமெரிக்கப் பழ வகை) மிகவும் பிரமாதமானது, நான் கூறினேன். என் கலிஃபோர்னியா நிலையத்தருகில் அவகாடோ தோப்புகள் நிறைய உள்ளன.

காந்திஜியின் முகம் ஆர்வத்துடன் பளிச்சிட்டது. அவை வார்தாவில் வளருமோ என்று யோசிக்கிறேன். சத்தியாகிரகிகள் புது உணவை மெச்சுவார்கள்.

நான் லாஸ் ஏஞ்ஜிலீஸிலிருந்து சில அவகாடோ செடிகளை வார்தாவிற்கு நிச்சயம் அனுப்பி வைக்கிறேன். நான் தொடர்ந்தேன். முட்டைகள் புரதச்சத்து மிகுந்த உணவு. சத்தியாகிரகிகளுக்கு அவை விலக்கப்பட்டு இருக்கின்றனவா?

கருவுறாத முட்டைகள் தள்ளுபடியல்ல. மகாத்மா பழைய ஞாபகத்தில் சிரித்தார். வருடக்கணக்கில் நான் அவற்றின் உபயோகத்தை ஒப்புக் கொள்ளவில்லை. இப்பொழுது கூட நான் தனிப்பட்ட முறையில் அவற்றை உண்பதில்லை. என் மருமகள் ஊட்டக் குறைவினால் பாதிக்கப்பட்டு மரணத்தருவாயில் இருந்தாள்;

அவளுடைய மருத்துவர் அவளுக்கு முட்டைகள் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தினார். நான் ஒப்புக்கொள்ளவில்லை. முட்டைகளுக்கு மாற்றாக வேறு ஏதாவது கொடுக்கும்படி அறிவுறுத்தினேன்.

காந்திஜி, கருவுறாத முட்டைகளில் உயிர் விந்தணு இல்லை; ஆதலால் கொல்வது என்பது இதில் இல்லை, என்று டாக்டர் கூறினார்.

பிறகு நான் மனமுவந்து என் மருமகளுக்கு முட்டைகள் உண்ண அனுமதி அளித்தேன். அவள் சீக்கிரமே ஆரோக்கியம் அடைந்தாள்.

அதற்கு முதல் நாளிரவு, காந்திஜி லாஹிரி மகாசயரின் கிரியா யோக உபதேசத்தைப் பெற்றுக் கொள்வதற்கு தன் விருப்பத்தைத் தெரிவித்தார். மகாத்மாவின் திறந்த மனமும் அறிவார்வமும் என் இதயத்தைத் தொட்டன. தெய்வீகத்தை நாடுவதில் அவர் குழந்தையைப் போன்று இருந்தார். இயேசு குழந்தைகளிடத்தில் கண்டு, ...இது போன்றதுதான் சுவர்க்கத்தின் ராஜ்யம், எனப் புகழ்ந்த தூய்மையான ஏற்புத்திறத்தை வெளிப்படுத்தினார்.

நான் வாக்குறுதி அளித்திருந்த போதனையின் நேரம் வந்தது; அனேக சத்தியாகிரகிகள் இப்பொழுது அறையில் நுழைந்தார்கள் திரு.தேசாய், டாக்டர்.பிங்களே மற்றும் கிரியா உத்தியை விரும்பிய மற்ற சிலர்.

முதலில் நான் அந்தச் சிறிய வகுப்பிற்கு யோகதா உடற்பயிற்சிகளைப் போதித்தேன். உடல் இருபது பாகங்களாக பிரிக்கப்பட்டுள்ளதாக நினைத்துப் பார்க்க

வேண்டும்; இச்சாசக்தி ஒவ்வொரு பாகத்திற்கும் முறையாக சக்தியைச் செலுத்துகிறது. சீக்கிரமே என் முன்னால் ஒவ்வொருவரும் ஒரு மனித மோட்டரைப் போன்ற துடிப்புடன் இயங்கினார்கள். எந்நேரமும் நம் பார்வையில் முழுவதும் தெரியும் படியாகத் திறந்திருக்கும் காந்திஜியின் உடலில் இருபது பாகங்களிலும் அலையலையான இயக்கத்தைக் காண்பது சுலபமாக இருந்தது அவர் மிக மெலிந்திருப்பினும் காண்பதற்கு நன்றாக இராமலில்லை. அவருடைய சருமம் மிருதுவாகவும் சுருக்கமின்றியும் இருந்தது.[8]

பிறகு அந்தக் குழுவிற்கு முக்தியளிக்கும் யோக முறையான கிரியா யோகத்தை உபதேசம் செய்தேன்.

மகாத்மா, உலகத்தின் எல்லா சமயங்களையும் பற்றிப் பயபக்தியுடன் படித்திருக்கிறார். ஜைனர்களின் சமய நூல்கள், பைபிளின் புதிய ஏற்பாடு, டால்ஸ்டாயின் சமூக நூல்கள்[9] ஆகியவை காந்தியின் அஹிம்சைக் கொள்கைகளுக்கு முக்கியமான மூன்று மூலங்களாகும். அவர் தன் மதக் கொள்கையை பின் வருமாறு குறிப்பிடுகிறார்:

> நான் பைபிள், குரான், ஜெந்த் அவெஸ்தா[10] ஆகியனவெல்லாம் வேதங்களைப் போலவே தெய்வீகத் தூண்டுதலால் உண்டானவை என்று நம்புகிறேன். குரு மரபில் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆனால் இக்காலத்தில் லட்சக் கணக்கான மக்கள் குரு இல்லாமலேதான் சமாளிக்க வேண்டும். ஏனெனில் பரிபூரணத் தூய்மையும், முழுமையான ஞானமும் கொண்ட குரு கிடைப்பது அரிது. ஆனால் தன் மதக் கோட்பாட்டுண்மைகளை அறிந்து கொள்வது குறித்து யாரும் வருந்த வேண்டியதில்லை. ஒவ்வொரு சிறந்த மதத்தையும் போல இந்த மதத்தின் அடிப்படைத் தத்துவங்களும் மாற்ற முடியாதவைகளாகவும் சுலபமாகப் புரிந்து கொள்ளக் கூடியவைகளாகவும் உள்ளன.
>
> நான் ஒவ்வொரு இந்துவையும் போல கடவுளிடத்திலும், அவன் ஒன்றே என்பதிலும், மறுபிறப்பு, முக்தி... ஆகியவைகளிலும்

நம்பிக்கை வைத்துள்ளேன். நான், என் மனைவியைப் பற்றிய என் உணர்வுகளை விவரிப்பதைவிட அதிகமாக இந்து மதத்தைப் பற்றி விவரிக்க முடியாது. உலகத்தில் எந்தப் பெண்ணும் என்னை, அவளைவிட அதிகமாகச் செயல்பட வைக்க முடியாது. அவளிடம் தவறுகளே இல்லை என்பதில்லை; எனக்குத் தெரிவதைவிட இன்னும் அனேகத் தவறுகள் அவளிடம் இருக்கலாமென்று நிச்சயமாகச் சொல்வேன். ஆனால் அழிக்க முடியாத ஒரு பந்தத்தின் உணர்வு அங்கே இருக்கிறது. அது போலத்தான் இந்து மதத்திற்காகவும், இந்து மதத்தைப் பற்றியும், அதன் குறைகள், வரையறைகளுடன் சேர்த்து அந்தப் பிணைப்பை உணர்கிறேன். கீதையின் இசையைப் போன்றோ அல்லது துளசிதாசரின் ராமாயணத்தைப் போன்றோ வேறு எதுவும் எனக்கு மனமகிழ்ச்சியைக் கொடுக்க முடியாது. நான் எனது கடைசி மூச்சை விடுவதாக எண்ணிப் பார்த்துக் கொண்ட பொழுது கீதைதான் எனக்கு அமைதி அளித்தது.

இந்துமதம் என்பது தனிப்பட்ட ஒரு மதமல்ல. அதில் உலகத்தின் எல்லா ஞானிகளையும் வழிபடுவதற்கு வகை செய்யப்பட்டிருக்கிறது.[11] இந்துமதம், அதன் சாதாரணப் பதப் பிரயோகப் பொருளின்படி கொள்கையைப் பரப்பும் மதமல்ல. சந்தேகமில்லாமல் அது அனேக பிரிவினர்களை தன் அரவணைப்பிற்குள் கொண்டுள்ளது. ஆனால் இந்த அரவணைப்பு கண்ணுக்குத் தென்படாத பரிணாம வளர்ச்சியின் தன்மையாக இருக்கிறது. இந்துமதம் ஒவ்வொருவரையும் அவரவரது நம்பிக்கை அல்லது தர்மத்தின்[12] படி, ஆண்டவனை வழிபடுமாறு சொல்கிறது. எனவேதான் இம்மதம் எல்லா மதங்களுடனும் சேர்ந்து அமைதியாக வாழ்கிறது.

கிறிஸ்துவைப் பற்றி காந்தி எழுதியிருக்கிறார்: இப்பொழுது அவர் இங்கு மக்களுக்கு மத்தியில் உயிருடன் இருந்திருந்தால் ஒருக்கால் அவரது பெயரைக் கூட கேட்டிராத பலருடைய வாழ்விற்கு ஆசி அருளுவார் என்பது நிச்சயம்... என் பிதாவின் சித்தத்தின்படி செய்கிறவனேயல்லாமல்... என்னை நோக்கி கர்த்தாவே, கர்த்தாவே என்று சொல்லுகிறவனில்லை[13] என்று எழுதியிருப்பது போல. இயேசு தன் சொந்த வாழ்க்கையெனும் பாடத்தில் மனித இனத்திற்கு மிக மிக உயர்ந்ததொரு நோக்கத்தையும், நாம் எல்லோரும் விரும்ப வேண்டிய ஒரே குறிக்கோளையும் கொடுத்திருக்கிறார். அவர் கிறிஸ்துவ

மதத்திற்கு மட்டுமே சொந்தமில்லை; முழு உலகத்திற்கும், எல்லா நாடுகளுக்கும், எல்லா இனத்தவர்களுக்கும் சொந்தமாவார்.

வார்தாவில் நான் தங்கியிருந்த கடைசி மாலையன்று நகர மண்டபத்தில் திரு.தேசாயினால் ஏற்பாடு செய்யப் பட்டிருந்த கூட்டத்தில் பேசினேன். எள் விழ இடமில்லாமல் ஜன்னல் களிலெல்லாம் கூடக் கூட்டம் நிரம்பி சுமார் 400 பேர், யோகம் என்பது பற்றிய சொற்பொழிவைக் கேட்கக் கூடி இருந்தனர். நான் முதலில் இந்தியிலும் பிறகு ஆங்கிலத்திலும் பேசினேன். பிறகு எங்கள் குழு அமைதியிலும் கடிதங்களிலும் ஆழ்ந்திருந்த காந்திஜியைப் பார்த்து இரவு வணக்கம் கூற சரியான நேரத்தில் ஆசிரமத்திற்குத் திரும்பியது.

நான் காலை ஐந்து மணிக்கு எழுந்திருந்தபொழுது இன்னும் இருள் பிரிந்திருக்கவில்லை. கிராமத்து வாழ்க்கை ஏற்கனவே இயங்க ஆரம்பித்துவிட்டது; முதலில் ஆசிரம வாயிலருகில் ஒரு மாட்டு வண்டி, பிறகு தன் தலையில் சுமக்க முடியாத பாரத்துடன் ஒரு குடியானவன். காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு காந்தியிடம் வணங்கி விடைபெறச் சென்றோம். இம் முனிவர் தன் காலை பிரார்த்தனைக் காக நான்கு மணிக்கு எழுந்திருக்கிறார்.

மகாத்மாஜி, விடைபெறுகிறேன்! நான் அவரது பாதங்களைத் தொட மண்டியிட்டேன். பாரதம் உங்கள் கையில் பத்திரமாயிருக்கிறது.

வார்தா கிராமிய அனுபவத்திற்குப் பிறகு வருடங்கள்

உருண்டோடின; நிலம், நீர் ஆகாயம் எல்லாம் உலகப் போரில் இருண்டு விட்டன. பல பெரிய தலைவர்களின் மத்தியில் காந்தி தனியாக, யுத்த பலத்திற்குப் பதிலாக நடைமுறை அஹிம்சையை எடுத்துக்கூறினார். கஷ்டங்களை நீக்குவதற்கும் அநியாயங்களைப் போக்குவதற்கும் மகாத்மா அஹிம்சாவழிகளைக் கடைப் பிடித்திருக்கிறார். அவை திரும்பத் திரும்ப எவ்வளவு பலனளிப்பவை என்பதை நிரூபித்திருக்கின்றன. அவர் தன்னுடைய சித்தாந்தத்தைப் பின் வருமாறு விளக்குகிறார்:

> அழிவிற்கு மத்தியில் வாழ்வும் கட்டாயமாக இருந்து கொண்டிருப்பதை நான் காண்கிறேன். ஆதலால் அழிவிற்கும் மேலாக உயர்ந்ததொரு நெறி இருக்கத்தான் வேண்டும். அப்படிப்பட்ட நெறியின் கீழ் மட்டுமே நல்ல ஒழுங்கான சமூகம் அர்த்தமுள்ளதாகவும், வாழ்வதற்குகந்ததாகவும் இருக்க முடியும்.
>
> அதுதான் வாழ்க்கை நெறி என்றால் தினசரி வாழ்வில் நாம் அதைக் கடைப்பிடித்து நடக்க வேண்டும். எங்கு போர் நிகழ்ந்தாலும், எந்த இடத்தில் நமக்கு எதிரிகள் தென்பட்டாலும் அவர்களை அன்பினால் வெல்ல வேண்டும். நான் என் சொந்த வாழ்வில், நிச்சயமான அன்பு நெறி எனக்கு விடையளித்தது போல், அழிவு நெறி என்றுமே செயல்பட்டதில்லை என்பதைக் கண்டிருக்கிறேன்.
>
> இந்தியாவில் எங்களுக்கு இந்நெறியின் செயல்பாடு நிதரிசனமாக மிக விரிவாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. நான் இந்தியாவிலுள்ள 36,00,00,000 மக்களிடையேயும் அஹிம்சை முறை ஊடுருவியுள்ளது என்று சொல்லிக் கொள்ளவில்லை. ஆனால் அது மற்ற எந்த சித்தாந்தத்தையும் விட நம்பமுடியாத அளவில் மிகக் குறைந்த காலத்தில் மிக் ஆழமாக ஊடுருவியுள்ளது என்று உரிமையுடன் கூறுவேன்.
>
> அஹிம்சை மனோநிலையை அடைவதற்கு மிகவும் கடுமையான பயிற்சி தேவையாயுள்ளது. ஒரு ராணுவ வீரனின் வாழ்க்கையைப் போன்று அது ஒரு நியமத்துடன் கூடிய வாழ்க்கையாகும். மனம், தேகம், வாக்கு ஆகிய மூன்றும் சரியாக இணைந்து செயல்படும் பொழுதுதான் முழுப் பக்குவநிலையை அடைய முடியும். சத்தியம் மற்றும் அஹிம்சை நெறியை நம் வாழ்க்கை நெறியாகக் கடைப்பிடிப்பது என்று தீர்மானித்து செயல்படத் தொடங்கினால் ஒவ்வொரு பிரச்சனையும் தானாகவே விடுபடத் தொடங்கிவிடும்.

உலக அரசியலின் பயங்கரமான சம்பவங்கள், ஆன்மீக நோக்கின்றி மக்கள் நாசமடைகிறார்களென்ற

உண்மையை இரக்கமின்றி சுட்டிக்காட்டுகின்றன. மதத்தினால் இல்லை என்றால், விஞ்ஞானம் தான் மக்களிடையே பாதுகாப்பற்ற தன்மையைப் பற்றியும் எல்லா ஸ்தூலப் பொருட்களின் நிலையற்ற தன்மையைப் பற்றியும் ஒரு தெளிவற்ற உணர்வை எழுப்பியுள்ளது. மனிதன் இப்பொழுது தன் மூலம் அல்லது தொடக்கமாகிய அவனுள்ளிருக்கும் ஆன்மாவிடமல்லாது வேறு எங்கே செல்வான்?

வரலாற்றை ஆராய்ந்தால் மனிதனுடைய பிரச்சனைகள் மிருகபல உபயோகத்தினால் தீர்ந்ததில்லை என்று நியாயமாகக் கூறிவிடலாம். உலகத்தை உறைய வைக்கும் முதலாவது உலகப் போரினுடைய பயங்கர கர்மவினையின் மொத்தச் சேர்க்கைதான் இரண்டாவது உலகப் போராக வெடித்தது. தற்போதுள்ள அப்பூதாகாரமான குருதிவெறிக் கர்மவினையை இதமான சகோதரத்துவத்தின் மூலமே தணிக்க முடியும். இல்லாவிடில் அதுவே மூன்றாவது உலகப்போராக விளையலாம். இருபதாவது நூற்றாண்டின் புனிதமற்ற மும்மை! மனிதர்களுடைய சச்சரவுகளைத் தீர்த்து வைக்க மனித விவேகத்திற்குப் பதிலாக காட்டு மிராண்டித்தனத்தை பயன் படுத்தினால் உலகம் மீண்டும் காடாக மாறும். வாழ்வில் சகோதரர்களாக இல்லையெனில் பயங்கரமான சாவில்தான் சகோதரர்களாக வேண்டும். அணுசக்தியின் வெளிப்பாட்டை மனிதன் அறிவதற்கு இறைவன் அன்புடன் அனுமதியளித்தது இம்மாதிரியான

இழிவிற்காக அல்ல.

போரும் தீச்செயல்களும் என்றும் நன்மையளிக்காது. வெடி மருந்துகளுக்காகச் செலவிட்டு ஒன்றுமில்லாமல் புகைந்து போன கோடிக்கணக்கான பணம், வியாதியும் ஏழ்மையும் அறவே அற்ற ஒரு புது உலகத்தையே படைக்கப் போதுமானதாய் இருந்திருக்கும். பயம், குழப்பம், பெரும் தொற்றுநோய்கள், மரணத்தின் களியாட்டம் ஆகியன கொண்ட பூமியன்றி அமைதியும், செழுமையும், பரந்த ஞானமும் கொண்ட ஒரே, விரிந்த நாட்டைப் படைத்திருக்கலாம்.

காந்தியின் அஹிம்சைக் குரல் மனிதனுடைய உயர்ந்த உணர்வைத் தொடுகிறது. நாடுகள் எல்லாம் இனி மரணத்துடன் சொந்தம் கொள்ளாமல் வாழ்வுடன் இணையட்டும்; அழிவுடனல்ல, ஆக்கத்துடன் இணையட்டும்; வெறுப்புடனல்ல, அன்பின் அதிசய விளைவுகளுடன் இணையட்டும்.

எந்த விதமான தீங்கையும் ஒருவன் மன்னித்துவிட வேண்டும், என்கிறது மகாபாரதம். மனிதனுடைய மன்னிக்கும் குணத்தினால்தான் இனத்தின் தொடர்ச்சி சாத்தியமாகிறது என்று கூறப்பட்டுள்ளது. மன்னித்தல் புனிதமானது; மன்னித்தலினால்தான் இந்த அண்ட சராசரம் ஒருங்கிணைப்பட்டுள்ளது. மன்னித்தல் சக்திவாய்ந்தவர்களின் சக்தியாகும்; மன்னித்தல் தியாகமாகும்; மன்னித்தல் மனத்தின் அமைதி நிலையாகும். மன்னித்தலும் கனிவும் தன்னை அடக்கியவர்களின் குணாதிசயங்களாகும். அவை நிரந்தர

நற்பண்பைக் குறிக்கின்றன.

மன்னித்தல் மற்றும் அன்பு நெறிகளின் இயற்கையான வளர்ச்சியே அஹிம்சையாகிறது. நியாயமான போரில் உயிர் நஷ்டம் அவசியமாகிவிட்டால், காந்தி அறிவிக்கிறார், இயேசுவைப் போல் ஒருவன் தன் இரத்தத்தை சிந்தத் தயாராக இருக்க வேண்டுமேயொழிய, மற்றவர்களுடையதை அல்ல. காலக்கிரமத்தில் உலகத்தில் இரத்தம் சிந்துதல் குறைந்து விடும்.

ஆயுதம் தாங்குவதை விடத் தங்களை இரக்கமின்றிக் கொல்வதை அனுமதிப்பதே மேல் என்று வெறுப்பை அன்பினா லும், ஹிம்சையை அஹிம்சையினாலும் தாங்கிக் கொண்ட இந்திய சத்தியாகிரகிகளைப் பற்றி என்றாவது ஒரு நாள் காவியங்கள் எழுதப்பட்டே தீரும். சில வரலாற்றுப் பிரசித்தி பெற்ற சம்பவங்களின் முடிவு என்னவெனில், எதிரிகள் தங்கள் துப்பாக்கிகளை வீசியெறிந்து விட்டு, தங்கள் உயிர்களை விட தங்கள் எதிரிகளின் உயிர்களுக்கு மதிப்புக் கொடுக்கும் மனிதர்களைக் கண்டு, வெட்கமுற்று அடியோடு நிலைகுலைந்து ஓடினர் என்பதே.

ரத்தத்தைச் சிந்தி என் நாட்டிற்குச் சுதந்திரம் பெறுவதைவிட பல யுகங்கள் ஆனாலும் சரி, நான் காத்திருப்பேன், என்கிறார் காந்தி. பைபிள் நம்மை எச்சரிக்கிறது: பட்டயத்தை எடுக்கிற யாவரும் பட்டயத்தால் மடிந்து போவார்கள்.[14] மகாத்மா எழுதுகிறார்:

நான் என்னை ஒரு தேசியவாதி என்று கூறிக் கொள்கிறேன். ஆனால் என் தேசியம் பிரபஞ்சத்தைப் போன்று பரந்ததாகும். அது தன் வீச்சில் உலகத்தின் எல்லா நாடுகளையும் அடக்கியுள்ளது.[15] என் தேசியம் முழு உலகத்தின் நன்மையையும் உள்ளடக்கியது. என் பாரதம் மற்ற நாடுகளை எரித்த சாம்பலிலிருந்து எழுவதை நான் விரும்பவில்லை. பாரதம் ஒரேயொரு மனிதனைக் கூட சுயநலத்திற்காகப் பயன்படுத்துவதை நான் விரும்பவில்லை. மற்ற நாடுகளையும் கூட தன் சக்தியினால் வலிமை பெறச் செய்ய வேண்டி பாரதம் சக்தி வாய்ந்ததாக இருக்கவேண்டுமென நான் விரும்புகிறேன். இன்று ஐரோப்பாவில் ஒரு நாடு கூட அவ்வாறில்லை: அவை மற்ற நாடுகளுக்கு வலிமை அளிக்கவில்லை.

ஜனாதிபதி வில்ஸன் தன் அழகிய பதினான்கு குறிப்புகளைப் பற்றிக் கூறினார். ஆனால் அவர், எல்லாவற்றிற்கும் பிறகு இந்த முயற்சி சமாதானத்தை நிலை நாட்ட உதவவில்லையானால், இருக்கவே இருக்கின்றன, உதவிக்கு நம் யுத்த தளவாடங்கள், என்றார். நான் அந்த நிலையைத் தலை கீழாக மாற்ற விரும்புகிறேன். நான் கூறுவது: நம் தளவாடங்கள் ஏற்கனவே தோற்று விட்டன. நாம் இப்பொழுது புதிதாக ஏதாவது வழியைத் தேடுவோம்: நாம் சத்தியமாகிய கடவுளையும் அன்பின் சக்தியையும் முயல்வோம். நமக்கு அது கிடைத்து விட்டால் வேறு எதுவும் வேண்டியிருக்காது.

மகாத்மாவினுடைய பயிற்சியினால் ஆயிரக்கணக்கான உண்மையான சத்தியாகிரகிகள் (இந்த அத்தியாயத்தின் முதல் பாகத்தில் குறிப்பிடப்பட்ட பதினோரு கடுமையான விரதங்களை மேற்கொண்டவர்கள்) இச்செய்தியைப் பரப்புகிறார்கள்; மிகப் பொறுமையுடன் அஹிம்சையினால் உண்டாகும் ஆன்மீகப் பலன்களையும் அதனால் இறுதியில் கிட்டும் லௌகீக லாபங்களையும் பற்றி இந்திய மக்களுக்கு எடுத்துக் கூறிப் புரிய வைத்தல் மூலமும்; அஹிம்சையின் ஆயுதங்களான அநியாயத்துடன் ஒத்துழையாமை, அவமானம், சிறைவாசம், ஏன் மரணத்தைக் கூட ஆயுதம் தொடாமல் ஏற்றுக் கொள்ளச் சம்மதித்தல் ஆகியவற்றைத் தன் மக்கள் ஏற்கச் செய்தல் மூலமும்; சத்தியாகிரகிகளின் வீர உயிர் தியாகத்தின் எண்ணற்ற உதாரணங்களால் உலக நாடுகளின்

அனுதாபத்தைச் சம்பாதிப்பதன் மூலமும் காந்திஜி நடை முறையில் செயல்படக்கூடிய அஹிம்சையின் தன்மையையும் போரில்லாமல் சச்சரவுகளைத் தீர்த்து வைப்பதில் அதன் உன்னத சக்தியையும் அதிசயமாக உலக அரங்கில் எடுத்துக் காண்பித்திருக்கிறார்.

இதுவரை ஒரு நாட்டின் மற்ற எந்தத் தலைவரும் துப்பாக்கிக் குண்டுகளின் மூலமாக மட்டுமே அடைந்துள்ளதற்கும் மேலாகவே அதிக எண்ணிக்கையில் அரசியல் சலுகைகளை காந்தி, தன் நாட்டிற்கு ஏற்கனவே அஹிம்சை மூலமாக வென்றிருக்கிறார். அஹிம்சை வழிகள், எல்லாக் குற்றங்களையும் தீமைகளையும் ஒழிக்க அதிசயமான முறையில் அரசியல் அரங்கில் மட்டுமல்லாமல், மிக நுட்பமான சிக்கலானதுமான இந்திய சமூகச் சீர்திருத்தத் துறையிலும் பயன்படுத்தப்பட்டுள்ளன. காந்தியும் அவரைப் பின் பற்றுபவர்களும் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே வெகு காலமாக இருந்து வந்த பல சண்டைகளை அகற்றி இருக்கிறார்கள்; லட்சக் கணக்கான முஸ்லிம்கள் காந்தியைத் தங்கள் தலைவராகக் காண்கிறார்கள். தீண்டத் தகாதவர்கள் அவரைத் தங்களுக்காகப் போராடும் பயமற்ற, வெற்றி வீரனாகக் காண்கிறார்கள். எனக்கு மறுபிறப்பு இருக்குமேயானால் நான் பறையர்களின் மத்தியில் ஒரு பறையனாகப் பிறக்கவே விரும்புகிறேன். ஏனெனில் அவர்களுக்கு அந்த நிலையில் நான் இன்னும் அதிக பலனளிக்கக்கூடிய சேவை செய்ய முடியும், என்று

காந்தி எழுதியிருக்கிறார்.

மகாத்மா உண்மையில் ஒரு மகா ஆத்மா தான். ஆனால் அந்தப் பட்டத்தை வழங்குமளவிற்குத் தெளிவான அறிவைப் பெற்றிருந்தது லட்சக்கணக்கான எழுத்தறிவு இல்லாத மக்கள்தான். கனிவான இந்தத் தீர்க்கதரிசி அவரது சொந்த நாட்டிலேயே கௌரவிக்கப்பட்டிருக் கிறார். மிகத் தாழ்மையான குடியானவன் காந்திஜியின் உயர்ந்த சவாலை ஏற்குமளவிற்கு உயர்ந்திருக்கிறான். மகாத்மா, மனிதனின் உள்ளார்ந்த உயர் குணத்தில் முழுமையான நம்பிக்கை வைத்துள்ளார். தவிர்க்க முடியாத தோல்விகள் அவரை என்றும் குழப்பியதில்லை. எதிராளி இருபது தடவைகள் பொய் கூறி இருந்தாலும் ஒரு சத்தியாகிரகி இருபத்தியோராவது தடவையும் அவனை நம்புவதற்குத் தயாராக இருப்பான். ஏனெனில் மனிதனுடைய இயல்பில் அசைக்க முடியாத நம்பிக்கைதான் சத்தியாகிரகத்தின் சாரமாகும்.[16]

மகாத்மாஜி, நீங்கள் ஒரு தனிப்பிறவி. உலகம் உங்களைப் போல் நடக்க வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்க்கக் கூடாது. ஒரு விமரிசகர் ஒரு தடவை இம்மாதிரி கருத்துத் தெரிவித்தார்.

நாம், நம் உடலை இன்னும் நன்றாக வைத்துக் கொள்ள முடியும், ஆனால் ஆத்மாவில் மறைந்திருக்கும் சக்திகளை வெளிக் கொண்டு வர முடியாது என நினைத்து நம்மையே நாம் ஏமாற்றிக் கொள்வது மிக வினோதமான விஷயம், என்று காந்திஜி

பதிலளித்தார்.எனக்கு அம்மாதிரி ஏதாவது தனிச்சக்தி இருக்கிறதென்றால் நானும் எல்லோரையும் போல பலவீனமான மனிதன்தான்; எப்பொழுதும் அசாதாரணமாக என்னைப் பற்றி எதுவும் இருந்ததுமில்லை, இப்பொழுதும் கிடையாது எனக் காண்பிப்பதற்கு நான் முயன்று கொண்டிருக்கிறேன். நானும் மற்ற எந்த ஒரு சாதாரண மனிதனைப் போலவே தவறிழைக்கக் கூடிய ஓர் எளிய பிறவிதான். இருந்தாலும் என்னுடைய தவறுகளை ஒப்புக்கொள்ளவும் என் பாதையைத் திருத்திக் கொள்ளவும் போதுமான அளவு தன்னடக்கம் என்னிடம் உள்ளது என்பதை ஒப்புக் கொள்கிறேன். எனக்கு கடவுளிடத்திலும் அவனுடைய கருணையிலும் அசைக்க முடியாத நம்பிக்கை இருப்பதுடன் சத்தியம், அன்பு இவைகளிடத்தில் தணியாத ஆர்வம் உண்டு என்பதையும் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் ஒவ்வொருவரிடத்திலும் மறைந்திருப்பது அவைதான் அல்லவா? அவர் தொடர்ந்தார்: நாம் கண்ணால் காணும் இவ்வுலகில் புதியவற்றைக் கண்டு பிடிக்கலாம், உண்டு பண்ணலாம் என்றால் ஆன்மீக விஷயங்களில் திவாலாகி விட்டோம் என பறை சாற்ற வேண்டுமா என்ன? விதி விலக்குகளை அதிகமாக்கி அவற்றை விதியாக ஆக்கிவிடுவது அசாத்தியமானதா, என்ன? மனிதன், மனிதனாகத்தான் இருக்க வேண்டுமென்றால், அவன் எப்பொழுதும் முதலில் மிருகமாக இருந்து பின்னால்தான் மனிதனாக ஆக வேண்டுமா?[17]

வில்லியம் பென், அவருடைய 17வது நூற்றாண்டு காலத்திய பென்ஸில்வேனியா குடியிருப்பை வெற்றிகரமான அஹிம்சையின் சோதனையாக நிறுவியதை அமெரிக்கர்கள் பெருமையுடன் நினைத் துப் பார்க்கலாம். அங்கு கோட்டைகள் இல்லை, சிப்பாய்கள் இல்லை, சேனை இல்லை, தளவாடங்கள் கூட இல்லை. காட்டுமிராண்டித்தனமான எல்லைச் சண்டைகளும் படுகொலைகளும் சிவப்பு இந்தியர்களுக்கும் புதிதாகக் குடியேறிவர்களுக்கும் இடையே நடந்து கொண்டிருந்த பொழுது பென்ஸில்வேனியா க்வேக்கர்கள் மட்டும் களங்கப்படாமல் இருந்தனர். மற்றவர்கள் கொல்லப் பட்டார்கள்; மற்றவர்கள் சின்னா பின்னமாக்கப்பட்டார்கள்; ஆனால் அவர்கள் பத்திரமாயிருந்தனர். ஒரு க்வேக்கர் பெண்மணி கூட தாக்கப்படவில்லை; ஒரு க்வேக்கர் குழந்தை கூட கொல்லப்படவில்லை, ஒரு க்வேக்கர் மனிதன் கூட துன்பப்படுத்தப்படவில்லை. இறுதியில் மாநில அரசாங்கத்தைக் கொடுத்துவிடும்படி க்வேக்கர்கள் நிர்பந்திக்கப்பட்ட போது, போர் தொடங்கியது. சில பென்ஸில்வேனியர்கள் கொல்லப்பட்டார்கள். ஆனால் மூன்றே க்வேக்கர்கள்தான் கொல்லப்பட்டார்கள். அந்த மூன்று பேரும் அஹிம்சையின் நம்பிக்கையிழந்து தங்களைக் காத்துக் கொள்ள ஆயுதங்களைக் கையில் எடுத்தவர்கள் ஆவர்.

முதலாவது உலக மகா யுத்தத்தில் பலாத்காரத்தைக் கடைப்பிடித்த நிலை அமைதியை நிலவச் செய்யத் தவறிவிட்டது, ஃபிராங்க்ளின் டி. ரூஸ்வெல்ட் சுட்டிக்

காட்டினார். வெற்றி, தோல்வி இரண்டுமே ஒரே மாதிரியான மலடுதான். உலகம் அந்தப் பாடத்தைக் கற்றுக் கொண்டிருக்க வேண்டும்.

பலாத்கார ஆயுதங்கள் அதிகரிக்க அதிகரிக்க, மனித குலத்திற்கு துன்பமும் அதிகரிக்கும், என லாவோசு (கஹர்ற்க்ஷ்ன்) உபதேசித்தார். பலவந்தத்தின் வெற்றி, துக்கத்தின் கொண்டாட்டத்தில் முடியும்.

நான் உலக சமாதானத்திற்குக் குறைவான வேறு எதற்காகவும் போரிடவில்லை, காந்தி உறுதியாகக் கூறினார். இந்திய இயக்கம் பலாத்காரமற்ற சத்தியாகிரக அடிப்படையில் வெற்றிக்கு அழைத்துச் செல்லப்படுமானால் அது தேச பக்தி என்பதற்கு ஒரு புதிய அர்த்தத்தைக் கொடுக்கும். மேலும், மிகவும் அடக்கத்துடன் நான் கூறலாமெனில், வாழ்க்கைக்கே அது ஒரு புது விளக்கமாகும்.

மேலை நாடுகள் காந்தியின் இயக்கத்தை, நடை முறைக்கு ஒவ்வாத கனவு காண்பவருடைய இயக்கம் என்று நீக்கி விடுவதற்கு முன்பு கலிலீயின் ஆசாரியார் சத்தியாகிரகம் என்றால் என்ன என்று கூறும் விளக்கத்தைப் பற்றி முதலில் சிந்திக்கட்டும்:

கண்ணிற்குக் கண், பல்லிற்குப் பல் என்று உரைக்கப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்; நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; தீமையோடு (தீமைகொண்டு) எதிர்த்து நிற்க வேண்டாம்: ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறு கன்னத்தை யும் திருப்பிக்கொடு.[18]

இந்தியில் மகாத்மா காந்தியின் கையெழுத்து

மகாத்மா காந்தி ராஞ்சி யோகதா சத்சங்க பிரமசரிய வித்யாலயத்திற்கு விஜயம் செய்தார். அவர் மிகப் பெருந்தன்மையுடன் விருந்தாளிகளின் புத்தகத்தில் மேற்கண்ட வரிகளை எழுதினார்: அவர் கூறியிருப்பது:

இந்த நிறுவனம் என் மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டது. இந்தப் பள்ளிக்கூடம் சர்க்காவின் உபயோகத்தை மேலும் ஊக்குவிக்குமென்ற மிகுந்த நம்பிக்கை எனக்குண்டு.

செப்டம்பர் 17, 1925 (கையொப்பம்) மோஹன்தாஸ் காந்தி.

பிரபஞ்சத்தின் அழகான துல்லிய காலக்கெடுவின்படி, காந்தியின் சகாப்தம், இரண்டு உலகப் போர்களால் ஏற்கனவே சீரழிக்கப்பட்டுப் பாழடைந்த நூற்றாண்டில் நீடித்துள்ளது. அவரது வாழ்க்கையெனும் கற்சுவரில் ஒரு தெய்வீக கையெழுத்து காணப்படுகிறது: சகோதரர்களுக்குள் மேன் மேலும் இரத்தம் சிந்துவதற்கு எதிராக ஓர் எச்சரிக்கை.

## மகாத்மா காந்தி – ஞாபகார்த்தம்

அவர் உண்மையான அர்த்தத்தில் தேசத்தின் தந்தையாவார். அவரை ஒரு பைத்தியக்காரன் கொலை செய்துவிட்டான். ஒளிவிளக்கு அணைந்து விட்டதால் கோடிக்கோடியான மக்கள் துக்கம் அனுசரிக்கிறார்கள்... இந்த நாட்டில் ஒளி வீசிய அந்த விளக்கு சாதாரண விளக்கல்ல. ஓர் ஆயிரம் வருடங்களுக்கு இந்த நாட்டில் அவ்வொளியைக் காண முடியும், உலகமும் அதைக் காணும். இந்தியாவின் பிரதம மந்திரியாயிருந்த ஜவஹர்லால் நேரு, புது டில்லியில் 1948 ஜனவரி 30 ஆம் நாள் காந்தி படுகொலை செய்யப்பட்ட சற்று நேரத்திற்குப் பிறகு இவ்வாறு கூறினார்.

ஐந்து மாதங்களுக்கு முன்னர்தான் பாரதம் அமைதியுடன் தன் தேசிய சுதந்திரத்தை அடைந்திருந்தது. 78 வயதான காந்தியின் காரியம் முடிந்துவிட்டது. தன் நேரம் நெருங்கி விட்டதென்பதை அவர் உணர்ந்திருந்தார். அந்த துக்ககரமான சம்பவம் நடந்த அன்று காலை அவர் தம் சகோதரனின் பேர்த்தியிடம் கூறினார், ஆபா, எல்லா முக்கியமான காகிதங்களையும் கொண்டு வா, நான் இன்று பதில் எழுதியாக வேண்டும். நாளை இல்லாமலே

போகலாம். காந்தி தன்னுடைய எழுத்துக்களில் எண்ணற்ற பகுதிகளில் கூட தனது இறுதி காலத்தைப் பற்றிய குறிப்புகள் கொடுத்திருக்கிறார்.

உண்ணாவிரதங்களினால் மெலிந்திருந்த அவருடைய பலவீனமான உடலில் மூன்று குண்டுகள் பட்டு இறந்து கொண்டிருந்த மகாத்மா, மெதுவாகத் தரையில் சாய்ந்த பொழுது அவர் தன் கைகளை பாரம்பரிய இந்து முறையில் வாழ்த்துக் கூறுவது போல் உயர்த்தி மௌனமாகத் தன் மன்னிப்பை அருளினார். தன்னுடைய வாழ்க்கையின் எல்லா வழிகளிலும் ஒரு கபடமற்ற கலைஞராகத் திகழ்ந்த காந்தி, தன் மரணத் தறுவாயில் ஒரு மகோன்னதக் கலைஞராகிவிட்டார். அவருடைய சுயநலமற்ற வாழ்க்கையின் எல்லா தியாகங்களும் கனிவான அந்தக் கடைசி சைகையை சாத்தியமாக்கின.

மகாத்மாவைப் பற்றி எழுதிய புகழுரையில் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன், வரும் தலைமுறையினர், ரத்தமும் சதையும் கூடிய அவரைப் போன்றதொரு மனிதர் உலகில் நடமாடினார் என்பதை நம்புவது அரிதாகும், எனக் குறிப்பிட்டார். ரோம் நகரத்தின் வாடிகனிலிருந்து வந்த செய்தி கூறியது: இந்தப் படுகொலை இங்கு மிகுந்த துயரத்தை உண்டாக்கியுள்ளது. கிறிஸ்துவ நற்குணங்களின் தூதராக காந்திக்கு நாங்கள் அஞ்சலி செலுத்துகிறோம்.

ஒரு குறிப்பிட்ட அறநெறியை நிறைவேற்றுவதற்காக மண்ணுலகில் பிறவியெடுக்கும் மகான்களின் வாழ்க்கை முழுவதும் குறிப்பாக உணர்த்தும் அறிகுறிகள் மலிந்து கிடக்கும். இந்திய ஒற்றுமைக்காக திடீரென்று நிகழ்ந்த அவரது மரணம், ஒவ்வொரு கண்டத்திலும் ஒற்றுமை இன்மையினால் உருக்குலைந்துள்ள உலகத்திற்கு அவர் விடுத்த செய்தியை முக்கியத்துவம் பெறச் செய்துவிட்டது. தீர்க்க தரிசன சொற்களில் அவர் விடுத்த அந்தச் செய்தி:

அஹிம்சை மக்களுக்கு மத்தியில் வந்துவிட்டது; அது நிலைத்து நிற்கும். அதுவே உலக அமைதிக்கு முன்னோடியாகும்.

---

1 இந்த சமஸ்கிருதப் பதத்திற்கு சரியான மொழிபெயர்ப்பு சத்தியத்தை நிலைநிறுத்துதல் என்பதாகும். சத்தியாகிரகம் என்பது காந்திஜியினால் நடத்தப்பட்ட ஒரு பிரசித்தி பெற்ற அஹிம்சை இயக்கமாகும்.

2 அவர் மகாத்மாவினால் எழுதப்பட்ட பல கடிதங்களைப் பிரசுரித்திருக்கிறார். அவை, அவருக்குத் தன் குருவினால் அளிக்கப்பட்ட சுய ஒழுக்கப் பயிற்சியை தெரிவிக்கின்றன. (ஒரு சீடருக்கு காந்தியின் கடிதங்கள்; (Gandhi's Letters to a Disciple) ஹார்பர் அண்ட் பிரதர்ஸ், நியூ யார்க், 1950)

பின்னால் எழுதிய புத்தகத்தில் ஆன்மாவின் யாத்திரை (The Spirit's Pilgrimage) கவர்டு- மக்கன், நியூ யார்க், 1960) செல்வி ஸ்லேட் அவர்கள் வார்தாவிற்குக் காந்தியிடம் வருகை புரிந்த அனேக மனிதர்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். அவர் எழுதியுள்ளது:

இவ்வளவு நாட்கள் கழித்து அவர்களால் பலரை என்னால் நினைவிற்குக் கொண்டுவர முடியவில்லை. ஆனால் இருவர் என் மனத்தில் தெளிவாக இருக்கிறார்கள். ஒருவர், ஹாலித் எடிப் ஹனும் என்ற துருக்கியின் பிரசித்தி பெற்ற பெண் எழுத்தாளர்;

மற்றொருவர் ஸ்வாமி யோகானந்தா, அமெரிக்க ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்- பை நிறுவியவர். (பிரசுரதாரரின் குறிப்பு)

3 செல்வி ஸ்லேட் எனக்கு இன்னொரு புகழ்பெற்ற மேற்கத்திய

பெண்மணியை ஞாபகப்படுத்தினார். அவர் செல்வி மார்க்ரெட் வுட்ரோ வில்ஸன், அமெரிக்காவின் பிரசித்திபெற்ற ஜனாதிபதியின் மூத்த மகள். நான் நியூ யார்க்கில் சந்தித்தேன்; அவர் இந்தியாவின் மீது அதீதமான அக்கறை கொண்டிருந்தார். பின்னால் அவர் பாண்டிச்சேரிக்குச் சென்று அவருடைய வாழ்நாட்களில் கடைசி ஐந்து ஆண்டுகளை, உள்ளொளி பெற்ற மகானாகிய அரவிந்த கோஷின் திருவடிகளில், ஒழுக்கப் பாதையைக் கடைப்பிடித்து ஆனந்தமாகக் கழித்தார்.

4 அமெரிக்காவில் பல வருடங்கள், காணவருபவர்களும் காரியதரிசிகளும் மிகவும் சிரமப்படும்படியாக நான் மௌன வேளைகளைக் கடைபிடித்து வந்தேன்.

5 தீங்கற்றத் தன்மை: அஹிம்சை, காந்தியினுடைய கொள்கையின் அஸ்திவாரக் கல்.அஹிம்சையை மூலதர்மமாகக் போற்றுபவர்களான ஜைனர்களால் அவர் பெரிதும் கவரப்பட்டார். இந்துமதத்தின் ஒரு பிரிவான ஜைனம் கி.மு.ஆறாவது நூற்றாண்டில், புத்தர் காலத்தியவரான மகாவீரரால் விஸ்தாரமாகப் பரப்பப்பட்டது. மகாவீரர் (உயர்ந்த வீரர்) அவருடைய வீர மகனான காந்தியை காலங்களைக் கடந்து காணட்டும்!

6 காந்தி ஆயிரக்கணக்கான விஷயங்களைப் பற்றி அழகாக எழுதியிருக்கிறார். பிரார்த்தனையைப் பற்றி அவர் கூறுவதாவது: கடவுளின் துணையின்றி நாம் ஆதரவற்றவர்களாவோம் என்று அது நமக்கு நாமே நினைவுறுத்துதலாகும். இறைவனின் அருளாசி இல்லையெனில் மிகச் சிறந்த மனித முயற்சியும் பலனளிக்காது என்று உறுதியாகத் தெரிந்துக் கொள்ளாவிடினும், பிரார்த்தனை இல்லாவிடினும் எந்த உழைப்பும் முழுமையாகாது. பிரார்த்தனை அடக்கத்திற்கு ஓர் அழைப்பு. அது சுய தூய்மைக்கும், உள்நோக்கிய தேடுதலுக்கும் அழைப்பாகும்.

7 காந்தி தன் வாழ்க்கையை எனது சத்தியசோதனையின் கதை யில் அப்பட்டமாக ஒளிவு மறைவில்லாமல் சித்தரித்திருக்கிறார். (அகமதாபாத்: நவஜீவன் அச்சகம்1927-28, இரண்டு தொகுப்புகளில்) இ.ஊ. ஆண்ட்ரூஸ் மகாத்மா காந்தி, அவருடைய சொந்தக் கதை என்ற புத்தகத்தில் இந்த சுயசரிதத்தை சுருக்கி தொகுத்திருக்கிறார். இதற்கு ஜான் ஹேன்ஸ் ஹோம்ஸ் முகவுரை எழுதியிருக்கிறார். (நியூ யார்க் : மாக்மில்லன் கோ., 1930)

பெரிய மனிதர்களின் பெயர்களும் சுவையான சம்பவங்களும் நிறைந்து காணப்படும் அனேக சுயசரிதைகள், உள் மன ஆய்வு அல்லது வளர்ச்சியில் எந்த நிலையைப் பற்றியும் அனேகமாக முழுமையான மௌனத்தையே சாதிக்கின்றன. ஒருவர் அவைகளைப் படிக்கும் பொழுது, ஒரு வித அதிருப்தியே நிலவுகிறது. அவைகளை கீழே வைக்கும்பொழுது இந்த மனிதருக்கு பல பெரிய மனிதர்களைத் தெரிந்திருக்கிறது. ஆனால் தன்னைப் பற்றி எதுவுமே தெரியவில்லை என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. காந்திஜியின் சயசரிதையைப் பற்றி இத்தகைய மாறுபட்ட கருத்து ஏற்படவே முடியாது. சத்தியத்தின் மீது கொண்ட பாரபட்சமற்ற பற்றினால் அவர் தன் குற்றங்குறைகளையும் மறைமுகமான சம்பவங்களையும் வெளிப்படுத்துகிறார்; இது எந்தக் கால வரலாற்றிலும் அபூர்வமானதாகும்.

8 காந்தி, குறுகியதும் நீண்டதுமாகிய அனேக உண்ணாவிரதங்கள் இருந்திருக்கிறார். அவர், விதிவிலக்காக மிக நல்ல ஆரோக்கியத்தைப் பெற்றுள்ளார். அவரது புத்தகங்களான உணவும் உணவு சீர்திருத்தங்களும், இயற்கை சிகிச்சை, ஆரோக்கியத்திற்கான திறவுகோல் ஆகியவை நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ், அகமதாபாத், இந்தியா என்ற இடத்தில் கிடைக்கும்.

9 தோரோ, ரஸ்கின், மாஜினி என்ற மற்ற மூன்று மேல்நாட்டு

எழுத்தாளர்களின் சமூகக் கொள்கைகளைக் காந்தி சிரத்தையுடன் படித்துள்ளார்.

10 பாரசீக நாட்டிற்கு கிட்டத்தட்ட கி.மு.1000ல் ஜொராஸ்டர் அவர்களால் வழங்கப்பட்ட புனித நூல்.

11 உலக மதங்களில் இந்து மதத்தின் ஒரு விசேஷமான அம்சம் என்னவெனில் அது ஒரேயொரு உயர்ந்த ஸ்தாபகரால் தொடங்கப்படாமல், தனியொரு மனிதரைச் சாராத வேத சாத்திரங்களிலிருந்து தோன்றியுள்ளது. இதனால் இந்து மதம் தன்னுள் எல்லாக் காலத்திய, எல்லா தேசத்திய மகான்களையும் அடக்கி, அவர்களை வணங்கி வழிபட வகை செய்கிறது. மனிதனுடைய ஒவ்வொரு செயலையும் தெய்வீக நியதியுடன் ஒத்துப்போக வழிவகை செய்யும் முயற்சியில், வேத நூல்கள் பக்தி வழி பயிற்சிகளை மட்டுமின்றி எல்லா முக்கியமான சமூகப் பழக்க வழக்கங்களையும் முறைப்படுத்துகிறது.

12 அறம் என்பதன் விரிந்த பொருளை உள்ளடக்கிய ஒரு சமஸ்கிருதச் சொல்; நீதிக்கு உடன்படுதல் அல்லது சுபாவமான நேர்மை; எந்த ஒரு சமயத்திலும் தன்னுடைய சூழ்நிலைக்குத் தகுந்தபடி கடமை உணர்வுடன் செயல்படுதல். சாத்திரங்கள், தர்மம் என்ற சொல்லிற்கு, இயல்பாக எல்லோரும் அனுசரிக்க வேண்டிய விதிகள்; இவற்றைக் கடைப்பிடிப்பதனால் மனிதன் கீழ் நிலைப்படுவதிலிருந்தும் துயரத்திலிருந்தும் தன்னைக் காத்துக் கொள்ள முடியும், என்று விளக்கம் தருகின்றன.

13 மத்தேயு 7 : 21 (பைபிள்).

14 மத்தேயு 26:52 (பைபிள்). பைபிளில் மனிதனுடைய மறுபிறப்பை வலியுறுத்தும் அனேக இடங்களில் இதுவும் ஒன்று. (பார்க்க பக்கங்கள் 263-264 அடிக்குறிப்பு) கர்மவினையின் நியாயத்தைப் புரிந்து கொள்வதில்தான் வாழ்வின் அனேக சிக்கல்களுக்கு விளக்கம் கிடைக்கிறது.

15 ஒரு மனிதன் தன் நாட்டை நேசிக்கிறான் என்பதில் பெருமை கொள்ள வேண்டாம்: அவன் தன் இனத்தை நேசிக்கிறானென்பதில் பெருமை கொள்ளட்டும்.பாரசீகப் பழமொழி.

16 அப்பொழுது, பேதுரு அவரிடத்தில் வந்து: ஆண்டவரே, என் சகோதரன் எனக்கு விரோதமாய்க் குற்றஞ் செய்து வந்தால், நான் எத்தனை தரம் மன்னிக்க வேண்டும்? ஏழுதர மட்டுமோ? என்று கேட்டான். அதற்கு இயேசு ஏழுதர மாத்திரம் அல்ல, ஏழெழுபதுதரமட்டும் என்று உனக்குச் சொல்லுகிறேன்.மத்தேயு 18:21-22. (பைபிள்). உடன்பட முடியாத இந்த அறிவுரையை புரிந்து கொள்வதற்காக நான் ஆழ்ந்து பிரார்த்தனை செய்தேன். இறைவா, நான் ஆட்சேபித்தேன், அது சாத்தியமா? தெய்வீகக் குரல் கடைசியாக எனக்குப் பதிலளிக்கையில் அது என்னைப் பணிய வைக்கும் ஒரு பேரொளியைக் கொண்டு வந்தது:

எத்தனை தடவைகள், ஓ மனிதனே, தினமும் உங்கள் ஒவ்வொருவரையும் நான் மன்னிக்கிறேன்?

17 சார்ல்ஸ் பி.ஸ்டெயின்மெட்ஸ் என்னும் தலைசிறந்த மின்பொறியியல் நிபுணரை, திரு.ரோஜர் டபிள்யூ. பாப்சன் என்பவர், அடுத்த ஐம்பது வருடங்களில் எந்தத் துறையிலான ஆராய்ச்சி மிகச் சிறந்த முன்னேற்றத்தைக் காணும்? என்று வினவினார். ஸ்டெயின்மெட்ஸ் பதிலளித்தார்: ஆன்மீக விஷயங்களில் மிகச் சிறந்த கண்டுபிடிப்புகள் நிகழும் என நினைக்கிறேன். இந்த சக்திதான் மனிதனுடைய வளர்ச்சியில் மிகப்பெரிய சக்தியாக இயங்குகிறது என்று சரித்திரம் தெளிவாகப் புகட்டுகிறது. அப்படியிருந்தும் நம்மிடம் லௌகீக சக்திகள் இருப்பதால் நாம்

இந்த ஆன்மீக சக்தியைப் பற்றித் தீவிரமாக ஆராயாமல் அதனுடன் வெறுமனே விளையாடிக் கொண்டிருக்கிறோம். லௌகீகப் பொருட்கள் மட்டுமே மனிதனுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்காதென்றும், மனிதனை ஆக்க சக்தியும் பலமும் உடையவனாக ஆக்குவதற்கு இவை மட்டும் போதாதெனவும் மக்கள் எப்பொழுதாவது உணர்வார்கள். அப்பொழுது உலக விஞ்ஞானிகள் தங்களுடைய ஆய்வுச் சாலைகளில் கடவுளைப் பற்றியும், பிரார்த்தனையைப் பற்றியும் ஆன்மீகச் சக்திகளைப் பற்றியும் ஆராய்ச்சியை மேற்கொள்ளுவார்கள்; இதுவரை ஆராய்ந்திருப்பது மிகமிக சொற்பமானது. இந்த நாள் வரும்பொழுது உலகம், சென்ற நான்கு தலைமுறைகளில் காணாத அதிக முன்னேற்றத்தை ஒரே தலைமுறையில் காணும்.

18 மத்தேயு 5:38-39 (பைபிள்).

## அத்தியாயம் 45

# வங்காளத்தின் ஆனந்த மயீ அன்னை

ஐயா, தயவு செய்து நிர்மலா தேவியைத் தரிசனம் செய்யாமல் இநதியாவை விட்டுச் செல்லாதீர்கள். அவருடைய புனிதத்தன்மை தீவிரமானது. அவர் ஆனந்த மயீ மா (ஆனந்த மயமான அன்னை) என்று நாடு முழுவதும் புகழ் பெற்றவர். என் மருமகள் அமியா போஸ் என்னை ஆர்வத்துடன் நோக்கினாள்.

நிச்சயமாக! அந்தப் பெண் மகானைக் காண எனக்கு மிக்க ஆவல். நான் தொடர்ந்தேன், அவர் இறை அனுபூதியில் மிகவும் உயர்ந்த நிலையில் இருப்பதைப் பற்றி படித்து இருக்கிறேன். ஈஸ்ட்–வெஸ்ட் (கிழக்குமேற்கு) சஞ்சிகையில் பல வருடங்களுக்கு முன் அவரைப் பற்றிய சிறு கட்டுரை ஒன்று வெளியாகியிருந்தது.

நான் அவரைச் சந்தித்திருக்கிறேன், அமியா தொடர்ந்தாள். அவர் சமீபத்தில் என் சொந்த ஊராகிய ஜாம்ஷெட்பூர் என்னும் சிறு நகரத்திற்கு விஜயம் செய்தார். ஒரு சீடரின் வேண்டுகோளுக்கு இணங்கி ஆனந்த மயீ மா, இறக்கும் தருவாயிலிருந்த ஒருவர் வீட்டிற்குச் சென்றார். அவர் அம்மனிதருடைய படுக்கையருகில் நின்றார்; அன்னையின் கை அவருடைய நெற்றியைத் தொட்டவுடனேயே அவரது

மரண வேதனை நின்றது. வியாதி உடனே மறைந்தது; அம்மனிதர் தான் குணமடைந்ததைக் கண்டு மகிழ்ச்சியான வியப்படைந்தார்.

சில நாட்கள் கழித்து அந்த ஆனந்தம் நிறைந்த அன்னை பவானிபூர் பகுதியிலுள்ள ஒரு சீடருடைய வீட்டில் தங்கியிருக்கிறார் என அறிந்தேன். திரு. ரைட்டும் நானும் என் தந்தையின் கல்கத்தா வீட்டிலிருந்து உடனே கிளம்பினோம். எங்கள் ஃபோர்ட் வண்டி பவானிபூர் வீட்டை நெருங்கியதும் என் தோழரும் நானும் வழக்கமில்லாத ஒரு தெருக் காட்சியைக் கண்டோம்.

ஆனந்த மயீ அன்னை ஒரு திறந்த மோட்டார் வண்டியில் நின்று கொண்டு, கிட்டத்தட்ட நூறுபேர்களுக்கு மேல் கூட்டமாக இருந்த சீடர்களுக்கு ஆசி வழங்கியவாறு இருந்தார். அவர் புறப்படும் தருவாயிலிருந்தார். திரு.ரைட் ஃபோர்ட் வண்டியைச் சிறிது தூரத்தில் நிறுத்திவிட்டு என்னுடன் கால்நடையாக அந்த அமைதியான கூட்டத்தை நோக்கி வந்தார். அந்தப் பெண் மகான் நாங்களிருந்த திசையில் நோக்கினார்; அவர் காரிலிருந்து இறங்கி எங்களை நோக்கி நடந்து வந்தார்.

தந்தையே நீங்கள் வந்துவிட்டீர்களா! ஆர்வம் மிகுந்த இந்தச் சொற்களுடன் (வங்காளியில்) அவர் தன் கரங்களால் என் கழுத்தைக் கட்டிக் கொண்டு தன் சிரத்தை என் தோளின் மீது சாய்த்துக் கொண்டார். சற்று முன்புதான், எனக்கு இந்த மகானைப் பற்றி ஏதும்

தெரியாது என்று நான் கூறியதைக் கேட்டிருந்த திரு. ரைட்டிற்கு இந்த அசாதாரணமான வரவேற்பு மிக்க குதூகலம் அளிப்பதாயிருந்தது. அந்த நூறு சிஷ்யர்களின் கண்களும் ஆச்சரியத்துடன் இந்த அன்புக் காட்சியைக் கண்டு அதில் நிலைத்தன.

அந்த மகான் ஓர் உயர்ந்த சமாதி நிலையில் இருப்பதை நான் உடனே கண்டு கொண்டேன். வெளி ஆடையான உடலால் தான் ஒரு பெண் என்பதை மறந்து தான் என்றும் மாறாத ஆத்மாவென்பதை அவர் தெரிந்து கொண்டிருந்தார்; அந்த நிலையிலிருந்து அவர் இறைவனின் இன்னொரு பக்தனை ஆனந்தத்துடன் வரவேற்றார். அவர் என் கையைப் பிடித்துத் தன் மோட்டார் வண்டிக்கு அழைத்துச் சென்றார்.

ஆனந்தமயீ அன்னையே, நான் உங்கள் பயணத்தைத் தாமதிக்கச் செய்கிறேனே! என நான் மறுத்தேன்.

தந்தையே, நான் இப்பிறப்பில் உங்களை முதன் முதலாக எத்தனையோ யுகங்களுக்குப் பிறகு சந்திக்கிறேன்![1] அவர் கூறினார். தயவு செய்து உடனே கிளம்பாதீர்கள்.

காரின் பின்பக்க ஆசனத்தில் நாங்கள் ஒன்றாக அமர்ந்தோம். ஆனந்த மயமான அந்த அன்னை சீக்கிரமே அசைவற்ற ஆனந்த நிலையில் ஆழ்ந்தார். அவருடைய அழகிய கண்கள் பாதி திறந்த நிலையில் விண்ணுலகத்தை நோக்கியவாறு அருகிலும்தூரத்திலுமாக உள்ளுக்குள் இருக்கும் சுவர்க்கத்தில் லயித்து நிலைத்தன. சீடர்கள்

மென்மையாக, தெய்வத்தாய்க்கு ஜயமுண்டாகட்டும்! என்று முழங்கினார்கள்.

நான் இந்தியாவில் இறைவனை அறிந்த அனேக மகான்களைக் கண்டிருக்கிறேன். ஆனால் இம்மாதிரியான உயர்நிலையை அடைந்த எந்தப் பெண் மகானையும் இதற்குமுன் கண்டதில்லை. அவருடைய கனிந்தமுகம் எல்லையில்லா ஆனந்தத்தில் திளைத்திருந்தது. அதுதான் அவருக்கு ஆனந்தம் நிறைந்த அன்னை என்ற பெயரை அளித்திருந்தது. அவருடைய முக்காடிடப்படாத தலையின் பின்புறம் நீண்ட சுருள் முடிக்கற்றைகள் தளர்ச்சியாக விடப்பட்டிருந்தன. சந்தனத் தினாலான ஒரு சிவப்புப் பொட்டு, அவருள் என்றும் திறந்திருந்த ஞானக் கண்ணுக்கு அடையாளமாக அவரது நெற்றியில் ஒளிர்ந்தது. சிறிய முகம், சிறிய கைகள், சிறிய பாதங்கள்அவருடைய மிகப்பெரிய ஆன்மீகத்திற்கு நேர்மாறாக இருந்தன.

ஆனந்த மயீ அன்னை சமாதியில் திளைத்திருந்த பொழுது நான் அருகிலிருந்த ஒரு பெண் சிஷ்யையிடம் சில கேள்விகளைக் கேட்டேன்.

ஆனந்தம் நிறைந்த அன்னை பாரதத்தில் மிக விரிவான பயணங்களை மேற்கொள்கிறார்; அனேக இடங்களில் அவருக்கு நூற்றுக்கணக்கான சீடர்கள் உண்டு, என்று அந்த சிஷ்யைக் கூறினார். அவருடைய தைரியமான முயற்சிகள் விரும்பத்தக்க பல சமூகச் சீர்திருத்தங்களைக் கொண்டு வந்துள்ளன. அவர் பிராமணராயிருந்தாலும், ஜாதி வித்தியாசம்

பார்ப்பதில்லை. அவருடைய வசதிகளைக் கவனிக்க எங்களில் ஒரு குழுவினர் எப்பொழுதுமே அவருடன் செல்வோம். நாங்கள் அவருக்குத் தாயாக இருக்க வேண்டியுள்ளது; அவர் தன் உடலைப் பற்றிக் கவலைப்படுவது இல்லை. அவருக்கு யாரும் ஆகாரம் கொடுக்கவில்லை என்றால் அவர் சாப்பிடவும் மாட்டார், அல்லது அதைப்பற்றி எதையும் விசாரிக்கவும் மாட்டார். அவர் இந்த உலகிலிருந்து மறைந்து விடுவதைத் தடுப்பதற்காக சீடர்களாகிய நாங்கள் எங்கள் கைகளினால் அவருக்கு உணவு ஊட்டுகிறோம். பல நாட்கள் தொடர்ச்சியாக அவர் அனேகமாக மூச்சுக்கூட விடாமல், கண்களை இமைக்காமல் அடிக்கடி தெய்வீக சமாதியில் இருந்துவிடுவதுண்டு. அவருடைய முக்கியமான சீடர்களில் அவருடைய கணவர் போலாநாத்தும் ஒருவர். அவர், அனேக வருடங்களுக்கு முன்பு, அவர்களுக்குத் திருமணமான உடனே மௌனவிரதம் மேற்கொண்டுவிட்டார்.

அந்த சிஷ்யை அங்கு அகன்ற தோள்களும், நேர்த்தியான முகச் சாயலும் கொண்ட நீண்ட முடியும் அடர்ந்த தாடியும் பெற்றிருந்த ஒருவரைச் சுட்டிக் காட்டினார். அவர் கூட்டத்தின் மத்தியில் அமைதியாகக் கூப்பிய கைகளுடன் சிஷ்ய பாவனையில் பணிவுடன் நின்றிருந்தார்.

எல்லையற்ற பரம்பொருளில் மூழ்கியதனால் ஆனந்தமயீ அன்னை புத்துணர்ச்சி பெற்று இப்பொழுது அவருடைய நினைவை இந்த லௌகீக உலகத்தின் மீது

குவியச் செய்தார்.

தந்தையே, தாங்கள் எங்கு தங்கியிருக்கிறீர்கள் என்று தயவு செய்து சொல்லுங்களேன். அவருடைய குரல் தெளிவாகவும் இனிமையாகவும் இருந்தது.



ஸ்ரீ ஸ்ரீ ஆனந்த மயீ அன்னை மற்றும் அவரது கணவர் போலாநாத்துடன் யோகானந்தர், கல்கத்தா, 1935

தற்சமயம் கல்கத்தாவிலோ அல்லது ராஞ்சியிலோ இருக்கிறேன்; ஆனால் சீக்கிரமே அமெரிக்காவிற்குத் திரும்பி விடுவேன்.

அமெரிக்காவா?

ஆம். ஓர் இந்திய பெண் மகானை அங்குள்ள ஆன்மீக சாதகர்கள் உண்மையுடன் போற்றுவார்கள். நீங்கள் வர விரும்புகிறீர்களா?

தந்தையார் என்னை அழைத்துச் சென்றால் நான் வருகிறேன்.

அவருடைய இந்தப் பதில் அவருக்கு அருகிலிருந்த சீடர்களுக்குத் திகிலை உண்டாக்கியது.

எங்களில் இருபது அல்லது அதற்கும் மேற்பட்டவர்கள் ஆனந்த மயீ அன்னையுடன் எப்பொழுதும் பயணம் செய்கிறோம். அதில் ஒருவர் என்னிடம் உறுதியாகக் கூறினார். அவரில்லாமல் நாங்கள் உயிர்வாழ முடியாது. அவர் எங்கெல்லாம் செல்கிறாரோ, நாங்களும் சென்றாக வேண்டும்.

நடைமுறைக்கு ஒத்துவராத அம்சத்தைக் கொண்டிருந்த, தானாகவே விரிவடைந்த அத்திட்டத்தை நான் தயக்கத்துடன் கைவிட்டேன்.

தங்கள் பக்தர்களுடன் ராஞ்சிக்காவது வருகை தாருங்கள், நான் அம்மகானிடம் விடைபெறும் பொழுது கூறினேன். தாங்களே ஒரு தெய்வீகக் குழந்தையாதலால் என் பள்ளிக்கூடத்தில் உள்ள சிறுவர்களை உங்களுக்கு மிகவும் பிடிக்கும்.

தந்தையார் எப்பொழுது என்னை அழைத்துக்

சென்றாலும் நான் சந்தோஷமாக வருவேன்.

அதற்குப் பிறகு சீக்கிரத்திலேயே ராஞ்சி வித்யாலயம் அப்பெண் மகான் வாக்களித்த வருகைக்காக விழாக் கோலம் பூண்டிருந்தது. சிறுவர்கள் எந்த விழாவானாலும் ஆவலுடன் எதிர்பார்ப்பார்கள்பாடம் கிடையாது, மணிக்கணக்காக சங்கீதம், போதாதற்கு எல்லாவற்றிற்கும் மேலாக விருந்து வேறு.

வெற்றி! ஆனந்த மயீ அன்னைக்கு வெற்றி! அந்தப் பெண் மகானின் கூட்டம் பள்ளியின் வெளிவாயிலில் நுழைந்ததும், இந்தக் குதூகல வரவேற்பு ஆர்வமிக்க பல சிறுவர்களிடமிருந்து திரும்பத் திரும்ப ஒலித்தது. மஞ்சள் நிற சாமந்தி மலர்களின் பொழிவு, தாளங்களின் ஒலி, சங்கொலி முழக்கம், மிருதங்க வாத்தியம் இவைகளுடன் வரவேற்பு. எங்கும் எடுத்துச் செல்லக் கூடிய சுவர்க்கத்தைத் தன் இதயத்திலேயே தாங்கியவாறு அந்தப் பேரானந்தத்தாய் வித்யாலயத்தின் சூரிய ஒளி நிறைந்த மைதானத்தில் புன்னகையுடன் உலாவினார்.

இங்கு மிக அழகாக இருக்கிறதே, என்று ஆனந்த மயீ அன்னை, நான் அவரை அங்குள்ள பிராதன கட்டிடத்திற்கு அழைத்துச் செல்லும் பொழுது கருணையுடன் உரைத்தார். ஒரு குழந்தையின் சிரிப்புடன் என்னருகில் அமர்ந்தார். அன்பான நண்பர்களில் மிகவும் நெருக்கமான ஒருவராக அவர் நம்மை உணரச் செய்கிறார், ஆயினும் அவர் நம்மிடமிருந்து விலகி இருப்பதான ஒரு தூரம் அவரைச் சுற்றி எப்பொழுதும்

பரவியுள்ளதுளங்கும் நிறைந்த பரம்பொருளின் முரண்பாடான ஒரு தனிமை!

எனக்கு உங்கள் வாழ்க்கையைப் பற்றி ஏதாவது கூறுங்களேன்.

தந்தை அதைப் பற்றியெல்லாம் அறிவார். திரும்பக் கூறுவானேன்?

ஒரு சிறு பிறவியின் நிஜ வரலாறு கவனிக்க வேண்டிய ஒன்றல்ல என்று அவர் தெளிவாக உணர்ந்திருக்க வேண்டும்.

நான் சிரித்து மறுபடியும் என் வேண்டுகோளைத் திரும்பக் கூறினேன்.

தந்தையே, சொல்வதற்கு ஒன்றுமில்லை. அவர் தன் அழகான கைகளை இல்லை என்ற முறையில் விரித்தவாறு சைகை செய்தார். என் உணர்வு என்றுமே இந்த நிரந்தரமல்லாத உடலுடன் ஒன்றியதில்லை. நான்[2] இவ்வுலகிற்கு வருமுன்பே, தந்தையே நான் அதுவாகவே இருந்தேன். சிறு பெண்ணாக இருந்தபோதும், நான் அதுவாகவே இருந்தேன். நான் வயதான பெண்ணாக வளர்ந்தேன். அப்பொழுதும் நான் அதுவாகவே இருந்தேன். நான் எந்தக் குடும்பத்தில் பிறந்தேனோ அவர்கள் இந்த உடலுக்கு மணமுடிக்க ஏற்பாடுகள் செய்த பொழுதும் நான் அதுவாகவே இருந்தேன். மேலும் தந்தையே, தங்கள் முன்னால் இப்பொழுதும் நான் அதுவாகவே இருக்கிறேன். இனி எப்பொழுதுமே, இம் முடிவற்ற அரங்கத்தில் படைப்பின் நடனம் என்னைச் சுற்றி மாறியபடி இருந்தாலும் நான் அதுவாகவேதான்

இருப்பேன்.

ஆனந்த மயீ அன்னை ஓர் ஆழ்ந்த சமாதி நிலையில் மூழ்கினார். அவர் உருவம் சிலையைப் போன்று அசைவற்று இருந்தது; அவர் தன்னை என்றும் அழைத்தவண்ணமிருக்கும் ராஜ்யத்திற்குப் பறந்து விட்டிருந்தார். கரிய குட்டைகளைப் போன்ற அவருடைய விழிகள் உயிரற்ற கண்ணாடி போல் தோன்றின. அம்மாதிரியான பாவனை மகான்கள் தங்கள் ஸ்தூல உடலிலிருந்து உணர்வை அகற்றிவிடும் பொழுது அடிக்கடி ஏற்படுவதுண்டு. அச்சமயம் அவ்வுடல் உயிரற்ற ஒரு களிமண் உருவத்தை ஒத்திருக்கும். ஆனந்தமான சமாதி நிலையில் நாங்கள் ஒன்றாக ஒரு மணி நேரம் அமர்ந்திருந்தோம். அவர் ஒரு மகிழ்ச்சியான சிறு சிரிப்புடன் இவ்வுலகிற்குத் திரும்பினார்.

ஆனந்த மயீ அன்னையே, நான் கூறினேன், தயவு செய்து என்னுடன் தோட்டத்திற்கு வாருங்கள். திரு.ரைட் சில படங்கள் எடுப்பார்.

அவசியம், தந்தையே. தங்கள் சித்தமே என் எண்ணமும். பல புகைப்படங்கள் எடுக்க அவர் தோன்றிய பொழுது அவருடைய பிரகாசமான கண்கள் மாறாத தெய்வீக ஒளியைத் தக்க வைத்திருந்தன.

விருந்து நேரம்! ஆனந்த மயீ அன்னை தன் கம்பளி ஆசனத்தில் அமர, அவர் பக்கத்தில் ஒரு சிஷ்யை அவருக்கு உணவு ஊட்டுவதற்குத் தயாரானாள். ஒரு குழந்தையைப் போல அப்பெண் மகான், தன் சிஷ்யை வாயில் கொடுத்த உணவைக் கீழ்ப்படிந்து விழுங்கினார்.

அந்த ஆனந்தமயீ அன்னை காய்கறிகளுக்கும் இனிப்புப் பண்டங்களுக்கும் எந்த வித்தியாசமும் கண்டு கொள்ளவில்லை என்பது வெளிப் படையாகத் தெரிந்தது!

மாலை நேரம் வந்ததும் அம்மகான் தன் குழுவினருடன் ரோஜா இதழ்கள் பொழிதலுக்கு மத்தியில் விடை பெற்ற பொழுது சிறு குழந்தைகளுக்குத் தன் கைகளைத் தூக்கி ஆசி கூறினார். அவர்களுடைய முகங்கள், ஆனந்த மயீ அன்னை மிகச் சுலபமாக மலரச் செய்துவிட்ட அன்பில் ஒளிர்ந்தன!

உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு மனத்தோடும், உன் முழு பலத்தோடும் அன்பு கூருவாயாக, என கிறிஸ்து பறைசாற்றியுள்ளார்; இதுதான் முதல் கட்டளை.[3]

ஒவ்வொரு கீழ்த்தரமான பந்தத்தையும் உதறிவிட்டு ஆனந்த மயீ அன்னை தன் முழுப் பற்றையும் இறைவனிடம் அர்ப்பணித்துவிட்டார். பண்டிதர்களின் கூறு போட்டுப் பார்க்கும் பகுத்தறிவால் அல்லாமல், விசுவாசம் என்ற ஒரே நிச்சயமான நியாயத்தினால் மட்டுமே குழந்தையைப் போன்ற இம் மகான் மனித வாழ்க்கையின் ஒரே பிரச்சனையைஇறைவனிடம் ஐக்கியத்தை ஏற்படுத்திக் கொள்ளுதலைத் தீர்த்துவிட்டார்.

மனிதன் லட்சக் கணக்கான பல விஷயங்களில் தற்போது சிக்கிக் கொண்டுவிட்டு இந்த எளிமையை மறந்துவிட்டான். ஒருமையுடன் படைப்பவனிடம் அன்பு செலுத்துவதை மறுத்துவிட்டு, நாடுகள், பரோபகாரமான

வெளிக் கோயில்களின் சம்பிரதாய சடங்குகளில் அக்கறை செலுத்துவதான பாவனையில் தங்கள் நம்பிக்கைத் துரோகத்தை மறைக்க முயல்கின்றன. இம்மாதிரியான மனித நேயச் சேவைகள் மேன்மையானதுதான். ஏனெனில் சில கணங்களுக்காவது அவை மனிதனின் கவனத்தை அவனிடத்திலிருந்து திசை திருப்புகின்றன. ஆனால் அவை அவனை, கிறிஸ்து முதல் கட்டளை என்று குறிப்பிட்ட வாழ்க்கையின் முக்கியமான பொறுப்பிலிருந்து விடுவிக்காது. கடவுளிடம் அன்பு என்ற உய்விக்கும் கடமை, மனிதனுடைய நலம் நாடும் ஒருவரேயான அந்த இறைவன் இலவசமாக அருளிய அவனுடைய தொடக்க மூச்சுக் காற்றுடனேயே துவங்கி விடுகிறது.[4]

அவருடைய ராஞ்சி பள்ளிக்கூட விஜயத்திற்குப் பிறகு ஒருமுறை எனக்கு ஆனந்த மயீ அன்னையைக் காண சந்தர்ப்பம் கிடைத்தது. சில மாதங்களுக்குப் பிறகு அவர் ஒரு குழுவினருடன் செரம்பூர் ரயில் நிலைய பிளாட்ஃபாரத்தில் ரயிலுக்காகக் காத்திருந்தார்.

தந்தையே, நான் இமாலயத்திற்குச் செல்கிறேன். கருணையுள்ள சில மனிதர்கள் டேராடூனில் எங்களுக்கு ஓர் ஆசிரமம் அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள், என்று அவர் என்னிடம் கூறினார்.

அவர் ரயிலேறியபொழுது, நான் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தேன்கூட்டத்தின் மத்தியிலோ, ரயில் வண்டியிலோ, விருந்தின் பொழுதோ அல்லது மௌனமாக அமர்ந்திருக்கும் பொழுதோ அவர் கண்கள்

கடவுளை விட்டகன்றதே இல்லை என்பதைப் பார்த்து நான் வியப்படைந்தேன்.

என்னுள் இன்னும் அவருடைய குரலையும் அளவில்லா இனிமையின் எதிரொலியையும் கேட்கிறேன்:

பாருங்கள், இன்றும், என்றும் எல்லையற்ற பரம் பொருளுடன் ஒன்றி நான் எப்பொழுதும் அதுவாகவேதான் உள்ளேன்.



பரமஹம்ஸ யோகானந்தரும் அவருடைய குழுவும் ஆக்ராவின் "சலவைக்கல் கனவு" தாஜ்மஹாலை பார்வையிடுதல், 1936.

1 அனந்தமயீ மா கிழக்கு வங்காளத்தில் உள்ள திரிபுரா மாவட்டத்தில் கேவ்ரா கிராமத்தில் 1896ல் பிறந்தார்.

2 ஆனந்தமயீ அன்னை தன்னை நான் என்று குறிப்பிடுவதில்லை; அவர் பணிவான முறையில் சுற்றி வளைத்து இந்த உடல் அல்லது இச்சிறிய பெண் அல்லது உங்கள் மகள் என்றுதான் கூறுகிறார். அவர் யாரையும் தன்

சிஷ்யர் என்றும் கூறிக்கொள்வதில்லை. அவர் மெய்ஞ்ஞானத்துடன் உலக அன்னை பராசக்தியின் தெய்வீக அன்பை எல்லா மனிதர்கள் மீதும் சமமாகப் பொழிகிறார்.

3 மாற்கு 12 : 30 (பைபிள்).

4 அனேகர் ஒரு புதிய, இன்னும் மேன்மையான உலகத்தைப் படைக்க உத்வேகம் கொண்டுள்ளனர். அம்மாதிரி விஷயங்களில் உங்கள் எண்ணங்களைச் சிதற விடுவதைவிட, எதனைப்பற்றிய தியானத்தினால் முழுமையான சாந்தி கிடைக்கும் என்ற நம்பிக்கை உங்களுக்கு உள்ளதோ அதன் மீது நீங்கள் மனத்தைச் செலுத்தி தியானியுங்கள். கடவுளையோ சத்தியத்தையோ தேடுபவனாக ஆவது மனிதனின் கடமையாகும். ஆனந்த மயீ அன்னை.

அத்தியாயம் 46

# என்றும் உணவு உட்கொள்ளாத யோகினி

ஐயா, இன்று காலை நாம் எங்கு போகிறோம்? திரு.ரைட், ஃபோர்ட் வண்டியை ஓட்டிக்கொண்டிருந்தார். அவர் தனது கண்களை சாலையை விட்டு விலக்கி என்னை நோக்கி ஒரு கேள்விக் குறியுடன் சிமிட்டினார். ஒவ்வொரு நாளும் வங்காளத்தின் எந்தப் பகுதியைப் பற்றி அவர் அறியப் போகிறாரென்பது அவருக்குத் தெரிந்திருக்கவில்லை.

இறைவன் விரும்பினால், நான் சிரத்தையுடன் பதிலளித்தேன், நாம் இந்த உலகத்தின் எட்டாவது அதிசயத்தைவெறும் காற்றை மட்டுமே உண்டு உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு புனிதவதியைக் காண்பதற்குச் சென்று கொண்டிருக்கிறோம்.

திரும்பவும் அதிசயங்கள்தெரஸே நொய்மனிற்குப் பிறகு. ஆனாலும் திரு.ரைட் ஆர்வமுடன் சிரிக்கவே செய்தார்; அவர் வண்டியின் வேகத்தை இன்னும் அதிகமாக்கினார். அவருடைய பயணக் குறிப்பேட்டிற்கு இன்னும் விசித்திரமான தகவல்கள்! சாதாரணமான சுற்றுலாப் பயணியின் குறிப்பேடு அல்ல அது!

ராஞ்சி வித்யாலயத்தை விட்டு அப்பொழுதுதான் கிளம்பியிருந்தோம்; நாங்கள் சூரியோதயத்திற்கு முன்பே எழுந்துவிட்டோம். என்னையும் என் செயலரையும் தவிர

மூன்று வங்காள நண்பர்களும் அந்தக் குழுவில் இருந்தனர். காலை வேளையின் இயற்கையான புத்துணர்ச்சிதரும் சுகமான காற்றை அனுபவித்தவாறே சென்றோம். எங்கள் ஓட்டுநர் அதிகாலை வேளையில் செல்லும் குடியானவர்கள் மற்றும் வளைந்த முதுகுடன்கூடிய எருதுகள் பூட்டப்பட்டு, மெதுவாக இழுத்துச் செல்லப்பட்டுக் கொண்டிருந்த இருசக்கர கட்டை வண்டிகளினூடே ஹாரனை அடித்து சாலையில் தன் உரிமையை நிலைநாட்டியவாறு ஜாக்கிரதையாகக் காரைச் செலுத்தினார்.

ஐயா, அந்த உண்ணாவிரத யோகினியைப் பற்றி நாங்கள் இன்னும் கொஞ்சம் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்.

அவருடைய பெயர் கிரி பாலா, நான் என் தோழர்களிடம் அறிவித்தேன். நான் பல வருடங்களுக்கு முன் ஸ்திதி லால் நந்தி என்ற ஒரு வித்வானிடமிருந்து அவரைப் பற்றி அறிந்து கொண்டேன். அவர் என் தம்பி விஷ்ணுவிற்குக் கல்வி கற்பிக்க எங்களுடைய கர்பார் ரோடு வீட்டிற்கு அடிக்கடி வருவது வழக்கம்.

எனக்குக் கிரி பாலாவை நன்றாகத் தெரியும், ஸ்திதி பாபு என்னிடம் கூறினார். சாப்பிடாமலே உயிர் வாழ்வதற்கான ஒரு யோக முறையை அவர் கையாளுகிறார். இச்சாபூருக்கு[1] அருகிலுள்ள நவாப் கஞ்சில் நான் அவருடைய நெருங்கிய அண்டை வீட்டுக்காரனாக இருந்தேன். நான் அவரை நெருங்கி கவனிக்கலானேன்; அவர் உணவோ பானமோ

உட்கொண்டதற்கான எந்த அத்தாட்சியும் எனக்குத் தென்படவில்லை. கடைசியில் என் ஆர்வம் பர்த்வான் மகாராஜாவை[2] அணுகி அவர் இதைப்பற்றி ஓர் ஆய்வு நடத்த வேண்டுமெனக் கேட்குமளவிற்கு அதிகரித்து விட்டது. இக்கதையைக் கேட்டு மிக்க ஆச்சரியமடைந்த அவர் அம்மாதரசியைத் தன் அரண்மனைக்கு அழைத்தார். அவர் அந்தச் சோதனைக்கு ஒப்புக் கொண்டு அவருடைய வீட்டின் ஒரு சிறிய பகுதியில் பூட்டப்பட்டு இரு மாதங்கள் வசித்தார். பின்னர் இருபது நாட்கள் அரண்மனைக்கு வருகை புரிந்தார்; பிறகு மூன்றாவது தடவையாக பதினைந்து நாட்களுக்கான சோதனை. இந்த மூன்று கடினமான சோதனைகளும் எவ்வித சந்தேகத்திற்கும் இடம் வைக்கா மால் அம்மாதரசியின் உணவு உண்ணாத நிலையை அவருக்கு நம்ப வைத்தது என்று மகாராஜாவே என்னிடம் கூறினார்.

ஸ்திதி பாபுவின் இந்தக் கதை என் மனத்துள் கிட்டத்தட்ட இருபத்தைந்து வருடங்களுக்கும் மேலாக நிலைத்திருந்தது, நான் கூறி முடித்தேன். நான் அமெரிக்காவில் இருந்தபோது சில சமயங்களில், அந்த யோகினியைக் காண்பதற்கு முன்னால் கால வெள்ளம் அவரை விழுங்கி விடுமோ என்று பயந்ததுண்டு. இப்பொழுது அவருக்கு அதிக வயதாகி இருக்கவேண்டும். எனக்கு அவர் எங்கே இருக்கிறார் என்றோ அல்லது உயிருடன் இருக்கிறாரா என்பதே தெரியாது. ஆனால் இன்னும் சில மணி நேரங்களில் நாம் புருலியாவை அடைந்து விடுவோம்; அவருடைய சகோதரருக்கு அங்கு

ஒரு வீடு இருக்கிறது.

சுமார் பத்தரை மணி அளவில் சிறு குழுவினராகிய நாங்கள் புருலியாவில் வழக்கறிஞராக இருக்கும் அவருடைய சகோதரர் லம்போதர் தே யுடன் பேசிக் கொண்டிருந்தோம்.

ஆம், என் சகோதரி உயிருடன் இருக்கிறார். அவர் சில சமயம் என்னுடன் இங்கு தங்குவதுண்டு. ஆனால் தற்சமயம் அவர் பியூர் கிராமத்திலுள்ள எங்கள் குடும்ப வீட்டில் இருக்கிறார். லம்போதர் பாபு சந்தேகத்துடன் எங்கள் ஃபோர்ட் வண்டியைப் பார்த்தார். ஸ்வாமிஜி, இதுவரை எந்த மோட்டார் வண்டியும் பியூர் வரையிலான உள்நாட்டுப் பகுதிகளில் ஊடுருவிச் சென்றதாக எனக்குத் தெரியவில்லை. எனக்கு என்னவோ நீங்கள் எல்லோரும் பேசாமல் ஒரு மாட்டு வண்டியின் குலுக்கல்களை சகித்துக் கொண்டு செல்வது நல்லதாகும், என்றார்.

ஒரே குரலில் நாங்கள் டெட்ராய்ட் டின் கௌரவமாகக் கருதப்படும் காரினிடம் எங்களுக்குள்ள விசுவாசத்தைத் தெரிவித்துக் கொண்டோம்.

இந்த ஃபோர்ட் வண்டி அமெரிக்காவிலிருந்து வருகிறது. வங்காளத்தின் இதயத்துடன் அது பரிச்சயம் செய்து கொள்ளும் வாய்ப்பைக் கெடுப்பது அவமானம்! என்று அவ்வழக்கறிஞரிடம் கூறினேன்.

கணேசர்[3] உங்களுடன் செல்வாராக! லம்போதர் பாபு சிரித்தபடி கூறினார். மேலும் பவ்யமாக, நீங்கள் அங்கு எப்படியாவது செல்ல முடிந்தால் கிரிபாலா உங்களைக்

காண்பதில் மகிழ்ச்சி அடைவாரென்பது திண்ணம். அவர் கிட்டத்தட்ட எழுபதை நெருங்கிக் கொண்டிருக்கிறார். ஆனாலும் நல்ல ஆரோக்கியத்துடன்தான் இருக்கிறார், எனத் தொடர்ந்தார்.

ஐயா, தயவு செய்து கூறுங்கள், அவர் எதுவும் உண்பதில்லை என்பது முழுதும் உண்மையா? மனத்தின் ஜன்னல்கள் என்று கூறப்படும் அவருடைய கண்களை நான் நேருக்கு நேராகப் பார்த்தேன்.

அது உண்மைதான். அவரது பார்வை வெளிப்படை யாகவும் கண்ணியமாகவும் இருந்தது. ஐம்பது வருடங்களுக்கு மேலாக அவர் ஒரு கவளம் கூட உண்டதை நான் கண்டதில்லை. என் சகோதரி ஏதாவது உணவு உட்கொண்டால் நான் ஆச்சரியப்படுவதை விட அதிகமாக, இவ்வுலகம் திடீரென்று அழிந்து விட நேர்ந்தால் கூட ஆச்சரியப்பட மாட்டேன்.

பிரபஞ்சத்தில் நேரப் போகாத இந்த இரு சம்பவங்களையும் நினைத்து நாங்கள் உள்ளூரச் சிரித்தோம்.

கிரி பாலா தன் யோகப் பயிற்சிகளுக்காக என்றுமே அணுக முடியாத தனிமையை நாடியதில்லை, லம்போதர் பாபு தொடர்ந்தார். அவர் தன் வாழ்க்கை முழுவதையும் தன் உறவினர் களும் நண்பர்களும் சூழ்ந்தபடியேதான் கழித்திருக்கிறார். கிரி பாலாவின் விசித்திரமான நிலைக்கு அவர்கள் எல்லோருமே இப்பொழுது நன்கு பழக்கப்பட்டு விட்டார்கள். கிரி பாலா திடீரென்று ஏதாவது சாப்பிடுவதாகத் தீர்மானம் செய்தால்

அதில் ஒருவர் கூடத் திகைப்படையாமல் இருக்க மாட்டார்கள்! என் சகோதரி ஓர் இந்து விதவை என்ற முறையில் அதிகம் வெளிவருவதில்லை, என்றாலும் புருலியாவிலும் பியூரிலும் உள்ள எங்கள் சிறு வட்டாரத்தில் அவர் உண்மையிலேயே ஒரு தனிப்பிறவி என்பது எல்லோருக்கும் தெரியும்.

அந்தச் சகோதரரின் பேச்சில் உண்மை வெளிப்படையாகத் தெரிந்தது. எங்கள் சிறு குழு அவருக்கு அன்புடன் நன்றி கூறிவிட்டு பியூரை நோக்கிப் பயணமாயிற்று. நாங்கள் தெருவிலிருந்த ஒரு கடையில் பூரியும் கறியும் வாங்கிச் சாப்பிட வண்டியை நிறுத்தினோம். திரு.ரைட் எளிய இந்து முறையில் கையால் சாப்பிடும் விதமானது [4]வேடிக்கை பார்க்க வந்த சிறுவர்களின் கூட்டத்தை ஈர்த்தது. நல்ல பசி எங்களை நன்கு சாப்பிட வைத்தது. அன்றைய பிற்பகலில் பெரும்பாடு படப்போகிறோம் என்பது அப்போது எங்களுக்குத் தெரியாது.

எங்கள் வழி வங்காளத்தின் பர்த்வான் பகுதியினுள் வெயிலில் காய்ந்து கொண்டிருந்த நெல் வயல்கள் வழியாகக் கிழக்கு நோக்கிச் சென்றது. சாலையின் இரு மருங்கிலும் பசுமை நிறைந்து கிடந்தது; குடை போன்று விரிந்திருந்த பெரிய மரக்கிளைகளிலிருந்து மைனாக்களும் கோட்டுக் கழுத்துடைய வானம்பாடிகளும் கூவிய பாட்டொலி காற்றில் மிதந்து வந்த வண்ணமிருந்தது. அவ்வப்போது சென்ற மாட்டு வண்டியினுடைய அச்சின் கிறீச் சப்தமும், இரும்பு

பூணிட்ட மரச்சக்கரங்களின் கடகடவென்ற சப்தமும், மோட்டார் வண்டியின் டயர் சக்கரங்கள், நகரங்களின் ஆடம்பரமான தார் ரோடின் மேல் ஏற்படுத்திய ஸ்விஷ் சப்தத்திற்கு நேர்மாறான ஒலி வேறுபாட்டை தெளிவாகக் காட்டியது.

டிக், நிறுத்து! என் திடீர் வேண்டுகோள் ஃபோர்ட் வண்டியை ஒரு குலுக்கலுடன் தடுத்து நிறுத்தியது. பழுத்துக் குலுங்கும் அந்த மாமரம் கூவி அழைப்பதைப் பார்!

நாங்கள் ஐவரும் சிறு குழந்தைகளைப் போன்று மாம்பழங்கள் இறைந்து கிடந்த இடத்தை நோக்கி ஓடினோம்; அந்த மரம் இரக்கத்துடன் பழுத்த பழங்களையெல்லாம் உதிர்த்துவிட்டிருந்தது.

எத்தனையோ மாம்பழங்கள் கண்காணாமல் கிடப்பதற்காகவும், நான் விளக்கத் தொடங்கினேன், தங்கள் இனிமையைக் கட்டாந்தரையில் வீணாக்குவதற்காகவும் பிறக்கின்றன.

ஸ்வாமிஜி, இதைப் போன்று அமெரிக்காவில் இல்லை, அப்படித்தானே? என்னுடைய வங்காள மாணவர்களில் ஒருவனான சைலேஷ் மஜும்தார் சிரித்தபடி வினவினான்.

இல்லை, மாம்பழங்களும் மனத்திருப்தியும் நிறைந்தவாறு நான் ஒப்புக்கொண்டேன். மேல் நாட்டில் இந்தப் பழம் இல்லாதது எனக்கு எவ்வளவு குறை தெரியுமா! மாம்பழங்கள் இல்லாத ஓர் இந்துவின் சுவர்க்கத்தை நினைத்துப் பார்க்கவே முடியாது!

நான் ஒரு கல்லை வீசி மேல்கிளையில் இருந்து ஓர் அழகான பழத்தை வீழ்த்தினேன்.

உஷ்ணப் பிரதேசத்தின் வெயிலால் கதகதப்பாக இருந்த அமிர்தம் போன்ற பழத்தைச் சுவைத்தவாறே நான் வினவினேன். டிக், எல்லா புகைப்படக் கருவிகளும் வண்டியில் இருக்கின்றனவா?

ஆம், ஐயா, சாமான் வைக்கும் இடத்தில் உள்ளன.

கிரி பாலா உண்மையான ஒரு மகானாக இருந்ததால் நான் அவரைப் பற்றி மேல் நாட்டில் எழுத விரும்புகிறேன். இது போன்ற எழுச்சியூட்டும் சக்திகள் பெற்ற ஓர் இந்து யோகினியானவர் இம்மாம்பழங்கள் பலவற்றைப் போல், யாரும் அறியாமல் வாழ்ந்து மடியக் கூடாது.

நான் அரைமணி நேரத்திற்கும் மேலாகவே சோலைகள் அடர்ந்த அமைதியான அந்த வனாந்திரத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தேன்.

ஐயா, திரு.ரைட் குறிப்பிட்டார், நாம் சூரிய அஸ்தமனத் திற்கு முன்பாகவே கிரி பாலா அம்மையாரை அடைந்தாக வேண்டும். அப்பொழுதுதான் புகைப்படம் எடுப்பதற்கேற்ற போதுமான வெளிச்சம் கிடைக்கும். அவர் சிரித்துக்கொண்டே தொடர்ந்தார், மேல் நாட்டவர்கள் எளிதில் நம்ப மாட்டார்கள். படம் எதுவுமில்லாமல் அவர்கள் அந்த அம்மையாரைப் பற்றி நம்புவார்கள் என்று நாம் எதிர்பார்க்க முடியாது.

இச்சிறு அறிவுரை ஆட்சேபிக்க முடியாத ஒன்று. நான் என் சபலத்திற்கு மறுப்புக் கூறிவிட்டு திரும்ப

வண்டியில் ஏறினேன்.

நீ சொல்வது சரிதான், டிக், விரைந்து சென்ற வண்டியில் நான் பெருமூச்சு விட்டபடி கூறினேன். மேல் நாட்டவர்களின் யதார்த்தவாதக் கொள்கைப் பீடத்தில் நான் என் மாம்பழ சுவர்க்கத்தைத் தியாகம் செய்கிறேன். புகைப் படங்கள் நமக்கு அவசியம் வேண்டும்!

பாதை வரவர மோசமாயிற்று: வழி நெடுக மேடு பள்ளங்கள், கெட்டியாக்கப்பட்ட களிமண் பாளங்கள்முதுமையின் பரிதாபமான பலவீனங்கள். எங்கள் குழு அவ்வப்பொழுது கீழே இறங்கியது; திரு.ரைட் சுலபமாக வண்டியைச் செலுத்துவதற்கு நாங்கள் நால்வரும் பின்னாலிருந்து வண்டியைத் தள்ளினோம்.

லம்போதர் பாபு சொல்லியது உண்மைதான், சைலேஷ் அங்கீகரித்தான். கார் நம்மைச் சுமக்கவில்லை. நாம்தான் காரைச் சுமக்கிறோம்!

ஏறுவதும் இறங்குவதுமாகச் சென்று கொண்டிருந்த எங்கள் சோர்வான வண்டிப் பிரயாணத்தை அடிக்கடி ஏதாவதொரு கிராமத்தின் தோற்றம் மகிழும்படியாகச் செய்தது. ஒவ்வொன்றும் விந்தையான எளிமை நிரம்பிய காட்சியாகவே இருந்தது.

எங்கள் பாதை பனைமரத் தோப்புகளினூடே, வனாந்திர நிழல்களிடையே அமைந்திருந்த புராதன, மாசு படாத கிராமங்கள் வழியே வளைந்தும் நெளிந்தும் சென்றது, திரு.ரைட் தம் பயணக் குறிப்பில் மே 5, 1936 தேதியில் எழுதியுள்ளார். கூரை வேய்ந்த, நெருக்கமாக

அமைந்த இந்த மண் குடிசைத் தொகுதிகளில் வாயிற் கதவுகள் ஏதாவதொரு தெய்வத்தின் பெயரால் அலங்கரிக்கப்பட்டு மிக வசீகரமாகத் தோன்றுகின்றன; பல சிறு குழந்தைகள் நிர்வாணமாக கள்ளம் கபடம் இன்றி விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது, அவர்கள் கிராமத்தின் வழியாக மாடுகள் இல்லாமலேயே மிக வேகமாக ஓடும் இந்தப் பெரிய கருத்த வண்டியைக் கண்டதும் உற்றுப் பார்க்கின்றனர் அல்லது தலைகால் தெரியாமல் ஓடுகின்றனர். பெண்கள் மறைவிலிருந்து வெறுமனே எட்டிப் பார்க்கின்றனர். ஆண்கள் சாலையோர மரங்களின் அடியில் சோம்பலுடன் சாவகாசமாகச் சாய்ந்து கொண்டு அமர்ந்திருக்கிறார்கள். அவர்களுடைய அசட்டையினூடே ஆர்வமும் தென்படுகிறது. ஓரிடத்தில் எல்லாக் கிராமத்தவர்களும் அங்குள்ள பெரிய குளத்தில் சந்தோஷமாகக் குளித்துக் கொண்டிருந்தனர். (தங்கள் உடைகளுடனேயே குளித்துப் பிறகு உலர்ந்த உடைகளை தங்கள் உடல் மேல் போர்த்துக் கொண்டு ஈர உடைகளைக் களைகிறார்கள்). பெண்கள் பெரிய பித்தளைக் குடங்களில் வீட்டிற்குத் தண்ணீர் கொண்டு செல்கிறார்கள்.

அந்தப் பாதை எங்களை மேடு, வரப்புகளின் மீது உல்லாசமாக விரட்டி அழைத்துச் சென்றது; நாங்கள் துள்ளிப் பாய்ந்தும் ஆடி, அசைந்தும், சிறு சிறு நீரோடைகளில் நனைந்தும், முழுதும் செப்பனிடப்படாத வாய்க்கால்களைச் சுற்றி வளைந்தும், உலர்ந்த மணற்பாங்கான ஆற்றுப் படுகையில் சறுக்கியும் சென்று

கடைசியாக மாலை ஐந்து மணி சுமாருக்கு எங்கள் இறுதிக் கட்டமான பியூரின் அருகில் நெருங்கினோம். அந்தச் சிறு கிராமம், பங்கூரா மாவட்டத்தின் உட்பகுதியில் அடர்ந்த காடுகளின் பாதுகாப்பில் மறைவாக அமைந்துள்ளது. மழைக் காலத்தில் வாய்க்கால்களெல்லாம் நிரம்பி வழிய, பாம்பு போன்ற பாதைகள் சேறாகிய விஷத்தை உமிழும் போது பயணிகளால் இக்கிராமத்தை அடைய முடியாதபடியாகிவிடும் எனக் கேள்விப்பட்டோம்.

ஏகாந்தமான வயலில் இருந்த ஒரு கோயிலில் பிரார்த்தனைச் செய்துவிட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தவர்களை, எங்களுக்கு வழிகாட்ட முடியுமா எனக் கேட்கப் போக, அரைகுறையாக உடையணிந்த ஒரு டஜன் சிறுவர்கள் எங்களை கிரி பாலாவினிடம் கொண்டு செல்லும் ஆவலுடன் எங்களைச் சூழ்ந்து கொண்டு காரின் பக்கங்களில் தொற்றி ஏறிக்கொண்டார்கள்.

அந்தப் பாதை ஈச்சமரத் தோப்பால் சூழப்பட்ட ஒரு சில மண் குடிசைகளை நோக்கிச் சென்றது. ஆனால் நாங்கள் அத்தோப்பை அடைவதற்கு முன்னால் ஃபோர்ட் வண்டி ஓர் அபாயகரமான கோணத்தில் ஒருகணம் சாய்ந்து மேலெழும்பிக் கீழே விழுந்தது. அந்தக் குறுகலான பாதை, மரங்கள், குட்டைகள் இவைகளைச் சுற்றியும் மேடும், பள்ளமும், குண்டும், குழியுமாக இருந்த வழியினூடேயும் சென்றது. வண்டி ஒரு சிறு புதரின் மேல் சென்று ஒரு மேட்டின் மேல்

நின்றுவிட்டது. பெரிய பெரிய மண்கட்டிகளை அகற்றி வண்டியைச் செலுத்த வேண்டி வந்தது; நாங்கள் மிக எச்சரிகையுடனும் மெதுவாகவும் முன்னேறினோம்; திடீரென்று வண்டிப் பாதையின் நடுவில் ஒரு புதர்க்குவியல் தோன்றி பாதையைத் தடுத்தது. அதனால் நாங்கள் ஒரு செங்குத்தான விளிம்பைச் சுற்றி வளைத்துக் கொண்டும் ஓர் உலர்ந்த குட்டையைக் கடந்தும் செல்ல வேண்டியிருந்தது. இந்த மீட்புப் பணியில் மண்ணைக் கொத்தியும் வெட்டியும் நீக்கியும் செல்ல வேண்டிய அவசியமாயிற்று. மீண்டும் மீண்டும் பாதை கடப்பதற்கரியதாகி வந்தது; ஆனால் யாத்திரையோ சென்றே ஆகவேண்டும்; நூற்றுக்கணக்கான குழந்தைகளும் பெற்றோர்களும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க, ஆதரவாக இருந்த சிறுவர்கள் மண்வெட்டிகளைக் கொண்டுவந்து தடைகளைத் தகர்த்தனர். (கணேசரின் ஆசிகள்!)

சீக்கிரத்திலேயே நாங்கள் நெடுங்காலமாக ஏற்பட்டிருந்த வண்டிச் சக்கரங்களின் இரட்டைத் தடத்தின் வழியே மெதுவாகச் சென்று கொண்டிருந்தோம். பெண்கள் தங்கள் குடிசைகளின் கதவுகள் வழியாக அகன்ற கண்களுடன் எங்களை வேடிக்கை பார்த்தனர். ஆண்கள் பக்கங்களிலும் பின்னாலுமாக வந்து கொண்டிருக்க, குழந்தைகள் ஊர்வலத்தைப் பெரிதாக்கி உடன் ஓடிவந்து கொண்டிருந்தனர். எங்கள் வண்டிதான் இப்பாதையில் செல்லும் முதல் மோட்டார் வண்டி போலும்; இங்கு

மாட்டு வண்டி ஒன்றியம் தான் சர்வ சக்தி பெற்றிருக்க வேண்டும்! அங்கு நாங்கள் ஏற்படுத்திய பரபரப்புதான் எவ்வளவு! ஓர் அமெரிக்கரை ஓட்டுநராகக் கொண்ட குழு, உறுமும் ஒரு மோட்டார் வண்டியில் நேரே அவர்களுடைய கிராமப்புற அரணுக்குள்ளே முதன் முதலாகச் செல்வது, பழமை வாய்ந்த தனிமை மீதும் புனிதத்தின் மீதும் ஏற்படுத்திய படையெடுப்பாகும்!

ஒரு குறுகிய சந்தில் நின்ற பொழுது நாங்கள் கிரி பாலாவின் முன்னோர்களின் வீட்டிலிருந்து ஒரு நூறு அடிகளுக்குள்ளேயே இருப்பதைக் கண்டோம். நீண்ட கடினமான பாதையுடன் போராடி முடிவாகக் கரடுமுரடான வழியையும் கடந்து வந்து சேர்ந்தபொழுது நாங்கள் மனநிறைவின் சிலிர்ப்பை உணர்ந்தோம். நாங்கள் செங்கற்களாலும் சுண்ணாம்பினாலும் கட்டப்பட்ட ஒரு பெரிய இரண்டு மாடி கட்டிடத்தை அடைந்தோம். அதைச் சூழ்ந்திருந்த சிறு குடிசைகளின் நடுவில் அது கம்பீரமாக நின்றது; அந்த வீட்டைப் பழுது பார்த்துக் கொண்டிருப்பது, அவ்வீட்டைச் சுற்றிலும் உஷ்ண நாடுகளுக்கே உரித்தான மூங்கில்களால் சாரம் கட்டியிருப்பதிலிருந்து தெரிந்தது.

தீவிர எதிர்பார்ப்புகளுடனும் ஆனந்தத்தை அடக்கிக் கொண்டும் நாங்கள் இறைவனின் பசியின்மை என்ற ஸ்பரிசத்தினால் அருளப்பெற்ற ஒருவருடைய வீட்டு வாசலில் திறந்த கதவுகளின் முன்னே நின்றோம். கிராமத்தவர்கள் தொடர்ந்து எங்களைப் பார்த்து ஆச்சரியத்தினால் வாய்பிளந்த வண்ணம் நின்றனர்;

சிறியவர்களும் பெரியவர்களும், உடையணிந்தவர்களும் அணியாதவர்களும், சற்றே ஒதுங்கிய படியும் அதே சமயத்தில் தெரிந்து கொள்ளும் ஆவலுடனுமிருந்த பெண்களும் மற்றும் ஆண்களும் சிறுவர்களும் சங்கோசமின்றி எங்களை நெருங்கி வந்து என்றும் நடைபெற்றிராத இக்காட்சியைக் கண்டவாறிருந்தனர்.

சீக்கிரமே குள்ளமான ஓர் உருவம் வாசற்படியருகில் தென்பட்டதுகிரி பாலா! அவர் மங்கிய ஒரு பொன்னிறப் பட்டுத் துணியை வரிந்து கட்டியிருந்தார்; இந்தியர்களுக்கே உரித்தான பாணியில், அவருடைய சுதேசி உடையின் மேல் முக்காட்டின் கீழாக அடக்கத்துடனும் தயக்கத்துடனும் எங்களை உற்றுப் பார்த்தபடி முன்னே வந்தார். அவருடைய தலைமுக்காட்டின் மறைவிலிருந்து அவரது கண்கள் அக்கினிப் பிழம்பைப் போல் ஒளிர்ந்தன. இவ்வுலக ஆசாபாசக் கறையிலிருந்து விடுபட்டு அருளும் ஆத்மஞானமும் ததும்பிய ஒரு முகத்தால் நாங்கள் வசீகரிக்கப்பட்டோம்.



கிரி பாலா
உணவு உட்கொள்ளாத யோகினி

அவர் பணிவுடன் முன்வந்து எங்களை பல படங்கள்[5] (நிலை மற்றும் சலனப்படங்கள்) எடுக்க மௌனமாக அனுமதித்தார். நாங்கள் புகைப்படம் எடுப்பதற்கு வேண்டிய நிலைகளுக்கான உத்திகளை சரிப்படுத்தியதையும், ஒளி ஏற்பாடுகளையும் பொறுமையுடனும் சங்கோசத்துடனும் ஏற்றுக்

கொண்டார். இறுதியாக நாங்கள், இவ்வுலகத்தில் கிட்டத்தட்ட ஐம்பது வருடங்களுக்கும் மேலாக உணவோ பானமோ ஏற்காமல் வாழ்ந்திருக்கும் ஒரே பெண்மணியை வருங்கால சந்ததிகளுக்காக அனேக புகைப்படங்களில் பதிவு செய்தோம். (தெரஸே நொய்மன் கூட 1923 லிருந்து உபவாசம் இருந்து வருகிறார்). அவர் எங்கள் முன் தளர்ந்த உடைகளில் தனது கீழ்நோக்கிய பார்வை கொண்ட முகத்தையும் தன் கைகளையும் தன் சிறு பாதங்களையும் தவிர தன் தேகத்தின் எப்பகுதியும் தெரியாதவாறு முழுதுமாகவே மறைத்துக் கொண்டு நின்றபொழுது அவர் தாய்மை உணர்வின் உருவெனத் திகழ்ந்தார். அபூர்வமான அமைதியையும் கள்ளமற்ற சமநிலையையும் கொண்ட ஒரு முகம்ஒரு குழந்தையினது போன்று அகன்று துடிக்கும் உதடுகள், பெண்ணுக்குரிய மூக்கு, பளபளக்கும் குறுகிய கண்கள், ஆர்வம் மிக்க சிரிப்பு.

கிரி பாலாவைப் பற்றிய திரு.ரைட்டின் அபிப்பிராயங்களை நானும் பகிர்ந்து கொள்கிறேன்; மென்மையாக ஒளிர்ந்த அவருடைய ஆடையைப் போன்று ஆன்மீகம் அவரைச் சுற்றி சூழ்ந்திருந்தது. ஓர் இல்லறத்தவர், சன்னியாசியை வணங்கும் வழக்கப்படி அவர் என் முன்னர் விழுந்து வணங்கினார். அவருடைய எளிய கவர்ச்சியும் அமைதியான புன்சிரிப்பும் தேன் போன்ற பிரசங்கத்தை விட அதிக இனிமையான வரவேற்பை எங்களுக்கு அளித்தன; எங்களுடைய புழுதி நிறைந்த பிரயாணம், அதனால் ஏற்பட்ட சிரமம் எல்லாம்

மறந்தே போய்விட்டது.

அச்சிறு யோகினி திண்ணையில் சப்பணமிட்டு அமர்ந்தார். அவருடைய வயதின் அடையாளங்கள் தென் பட்டாலும் அவர் நலிந்திருக்கவில்லை; அவருடைய மாநிற மேனி தெளிவாகவும் ஆரோக்கியமாகவும் தென்பட்டது.

அம்மையே, நான் வங்காளியில் கூறினேன். கிட்டத்தட்ட இருபத்தைந்து வருடங்களுக்கு மேலாக நான் இந்த யாத்திரையைப் பற்றி ஆவலாக நினைத்துக் கொண்டிருந்தேன்! நான் தங்கள் புனித வாழ்க்கையைப் பற்றி ஸ்திதி லால் நந்தி பாபு மூலமாகக் கேள்விப்பட்டேன்.

அவர் புரிந்துகொண்டதற்கு அடையாளமாகத் தலையை அசைத்து, ஆமாம், நவாப் கஞ்சில் என்னுடைய அடுத்த வீட்டுக்காரராக இருந்த நல்ல மனிதர், என்று கூறினார்.

அவ்வருடங்களில் நான் கடல் கடந்து சென்று விட்டேன். ஆனால் எப்பொழுதாவது உங்களைப் பார்க்க வேண்டுமென்ற என் திட்டத்தை நான் என்றுமே மறந்ததில்லை. நீங்கள் இங்கு யாருக்கும் தெரியாமல் நடத்திக் கொண்டிருக்கும் உன்னத நாடகமானது, தெய்வீக உள் உணவைப் பற்றி பல காலமாக மறந்து விட்டிருக்கும் இந்த உலகின் முன்னர் வெளிச்சம் போட்டுக் காட்டப்படவேண்டும்.

அந்த யோகினி ஒரு நிமிடம் தன் கண்களை உயர்த்தி அமைதியான ஆர்வத்துடன் புன்னகைத்தார்.

பாபாவிற்கு (மதிப்பிற்குறிய தந்தை) நன்கு தெரியும், அவர் பணிவுடன் பதிலளித்தார்.

அவர் தவறாகப் புரிந்து கொள்ளாததில் நான் மகிழ்ச்சி அடைந்தேன்; யோகிகளும், யோகினிகளும் விளம்பரப் படுத்தப்படுவதை எவ்வாறு ஏற்றுக் கொள்வார்கள் என்பதை ஒருவர் ஒரு போதும் அறிய முடியாது. பொதுவாக அவர்கள் விளம்பரத்தை வெறுத்து, ஆழ்ந்த ஆத்ம ஆராய்ச்சியை மௌனமாகத் தொடரவே விரும்புகிறார்கள். சரியான சமயம் வந்ததும், ஞானத்தைத் தேடுபவர்களின் நலனுக்காக அவர்கள் தங்கள் வாழ்க்கையை வெளிப்படுத்துவதற்கு அந்தராத்மாவின் அனுமதி கிடைக்கிறது.

அம்மா, நான் தொடர்ந்தேன், அப்படியெனில் உங்களை அனேகக் கேள்விகள் கேட்டுத் தொந்தரவு செய்வதற்கு என்னை மன்னிக்க வேண்டும். உங்களுக்கு விருப்பமான கேள்விகளுக்கு மட்டும் பதிலளியுங்கள்; உங்கள் மௌனத்தையும் கூட நான் புரிந்து கொள்வேன்.

கருணையுடன் கூடிய சைகையாக அவர் தன் கைகளை விரித்தார். எனக்கு பதிலளிக்க மிக்க மகிழ்ச்சியே. ஆனால் என்னைப் போன்ற ஒரு சாதாரணமானவள் திருப்திகரமான பதில்களைக் கூற முடியுமா என்றுதான் பார்க்கிறேன், என்றார்.

ஓ, இல்லவே இல்லை, நீங்கள் சாதாரணமானவரில்லை! நான் உண்மையாக மறுத்தேன். நீங்கள் ஓர் உயர்ந்த ஆத்மா.

நான் எல்லோருக்கும் பணிவான சேவகி. அவர்

விசித்திரமாகத் தொடர்ந்தார். நான் சமைத்து, எல்லோருக்கும் உணவு அளிப்பதை விரும்புகிறேன்.

உணவே உட்கொள்ளாத யோகினிக்கு ஓர் அதிசயமான பொழுதுபோக்கு! என்று நான் நினைத்தேன்.

எனக்கு உங்கள் வாயால் சொல்லுங்கள், அம்மாநீங்கள் ஆகாரமே இல்லாமல் வாழ்கிறீர்களா?

அது உண்மைதான். அவர் சில வினாடிகளுக்கு மௌனமாக இருந்தார்; அவருடைய அடுத்த குறிப்பு, அவர் சிரமப்பட்டு மனக்கணக்கு போட்டுக் கொண்டிருந்ததைக் காட்டியது. பன்னிரண்டு ஆண்டுகளும் நான்கு மாதங்களும் ஆன வயதிலிருந்து என் தற்கால வயதான அறுபத்தெட்டு வரைக்கும் கிட்டத்தட்ட ஐம்பத்தாறு வருடங்களுக்கு மேற்பட்ட காலம் நான் ஆகாரம் உண்டதோ அல்லது பானம் அருந்தியதோ இல்லை.

சாப்பிட வேண்டுமென்று எப்பொழுதுமே சபலம் தோன்றியதில்லையா?

சாப்பிட வேண்டுமென்ற விருப்பம் தோன்றினால் சாப்பிட்டுத்தான் ஆகவேண்டும். அவர், இந்த வெளிப் படையான உண்மையை எளிய முறையில் ஆனால் கௌரவமாகக் கூறினார். ஒவ்வொரு நாளும் மூன்று வேளை உணவைச் சுற்றியே வட்டமிடும் இவ்வுலகிற்கு நன்கு தெரிந்த உண்மை! ஆனாலும் நீங்கள் எதையோ சாப்பிடத்தான் செய்கிறீர்கள்! என் குரலில் ஒரு மறுப்புத் தொனி ஒலித்தது.

நிச்சயமாக! அவர் வெகு சீக்கிரம் புரிந்து கொண்டு

புன்முறுவலித்தார்.

உங்கள் ஆகாரம், காற்று மற்றும் சூரிய ஒளி இவைகளின் [6]சூட்சுமமான சக்தியினின்றும் மேலும் முகுளத்தின் மூலம் உங்கள் உடலுக்கு சக்தியூட்டும் பிரபஞ்ச சக்தியினின்றும் கிடைக்கிறதல்லவா?

பாபாவுக்குத் தெரிந்தேயிருக்கிறது. மறுபடியும் அவர் ஒப்புக்கொண்டார்; அவரது தன்மை சாந்தமாகவும் மென்மையாகவும் இருந்தது.

அம்மா, தயவு செய்து எனக்கு உங்கள் ஆரம்பகால வாழ்க்கையைப் பற்றிக் கூறுங்கள். அது இந்தியாவில் உள்ள அனைவருக்கும் மற்றும் கடல் கடந்த நாடுகளில் உள்ள நம் சகோதர, சகோதரிகளுக்கும் கூட மிகுந்த ஆர்வத்தைக் கொடுக்கக் கூடியதாகும்.

கிரி பாலா தன் வழக்கமான தயக்கத்தைத் தள்ளி வைத்துவிட்டு சாவகாசமாகப் பேசுவதற்குத் தயாரானார்.

அப்படியே ஆகட்டும். அவர் குரல் தாழ்ந்தும் உறுதி யாகவும் இருந்தது. நான் இந்த வனப் பிரதேசத்தில்தான் பிறந்தேன். என் குழந்தைப் பருவத்தில் நான், திருப்தி செய்யப்பட முடியாத பசியைக் கொண்டிருந்தேன் என்பது ஒன்றைத் தவிர வேறு குறிப்பிடத்தக்க அம்சம் எதுவுமில்லை.

எனக்கு சுமார் ஒன்பது வயதானபொழுது திருமணம் நிச்சயமாயிற்று.

என் தாயார் என்னை அடிக்கடி எச்சரித்து வந்தார். குழந்தாய், உன் பேராசையைக் கொஞ்சம் அடக்கப் பழகிக் கொள். நீ முன்பின் அறியாத மனிதர்களுடன்

உன் கணவரின் குடும்பத்தில் வாழ வேண்டி வரும்பொழுது நீ உன் நேர மெல்லாம் சாப்பிடுவதைத் தவிர வேறு எதையுமே செய்யாவிட்டால் அவர்கள் என்ன நினைப்பார்கள்?

அவர் எதிர் நோக்கிய அந்தப் பேராபத்து வரவே செய்தது. நான் நவாப் கஞ்சிலுள்ள என் கணவரின் உறவினருடன் சேர்ந்து வசிக்கத் தொடங்கிய பொழுது எனக்கு வயது பன்னிரண்டுதான். என் மாமியார் காலை, மதியம், மாலை என்று விடாமல் என் பெருந்தீனி வழக்கத்தைப் பற்றிக் குறை கூறி அவமானப்படுத்திய வண்ணமிருந்தார். இருந்தாலும் அவருடைய வசவுகள் மறைமுகமான ஆசிகளாகி விட்டன. அவை செயலற்றிருந்த என் ஆன்மீக சுபாவங்களைத் தூண்டிவிட்டன. ஒரு நாள் காலை அவரது கேலி இரக்கமற்றதாயிருந்தது.

உடனே மிக்க வேதனையடைந்து, நான் உயிரோடு இருக்கும் வரை உணவைத் தொடமாட்டேன் என்பதை சீக்கிரமே உங்களுக்கு நிரூபித்துக் காட்டுகிறேன், என்றேன்.

என் மாமியார் கேலியாகச் சிரித்தார். அப்படியா! அதிகமாகக் கொட்டிக் கொள்ளாமலே உன்னால் வாழமுடியாத பொழுது உணவே இல்லாமல் எப்படி இருப்பாய்?

இந்தக் குறிப்பிற்கு பதில் கொடுக்கவே முடிய வில்லை. இருந்தாலும் இரும்பையொத்த ஒரு கடினமான தீர்மானம் என் மனத்தில் உண்டாயிற்று.

தனியான ஓரிடத்தில் நான் என் இறைவனை நாடினேன்.

இறைவனே, உணவினால் அல்லாமல் உன் ஒளியினால் உயிர் வாழும் வழியை எனக்கு உபதேசிக்கக் கூடிய ஒரு குருவை அனுப்பு! என்று இடைவிடாமல் பிரார்த்தனைச் செய்தேன்.

ஒரு பேரானந்தம் என்னைச் சூழ்ந்தது. ஓர் அருள் சக்தியால் கட்டுண்டு கங்கைக் கரையிலுள்ள நவாப் கஞ்ச் படித்துறையை நோக்கிச் சென்றேன். வழியில் நான் என் கணவர் குடும்பத்தின் புரோகிதரைச் சந்தித்தேன்.

புரோகிதர் அவர்களே, நான் நம்பிக்கையுடன் கூறினேன். தயவு செய்து சாப்பிடாமல் எப்படி உயிர் வாழ்வதென்று கூறுங்களேன்.

அவர் எந்தப் பதிலும் கூறாமல் என்னை உற்று நோக்கினார். முடிவில் சமாதானப்படுத்தும் வகையில் குழந்தாய், இன்று மாலை கோயிலுக்கு வா; உனக்காக விசேஷ வைதீகச் சடங்கு ஒன்று செய்கிறேன், என்றார்.

நான் தேடிக் கொண்டிருந்தது பட்டும் படாததுமான இம்மாதிரியான பதில் இல்லை. நான் படித்துறையை நோக்கி என் நடையைத் தொடர்ந்தேன். காலைக் கதிரவன் தண்ணீரைத் துளைத்துக் கொண்டிருந்தான். ஏதோ ஒரு புனித உபதேசத்திற்குத் தயாராவது போன்று நான் கங்கையில் நீராடி என்னைப் புனிதமாக்கிக் கொண்டேன். நான் ஈரஉடையுடன் நதிக்கரையை விட்டுப் புறப்பட்டவுடன் பட்டப்பகலின் வெளிச்சத்தில் என் குரு என் முன்னே தோன்றினார்!

அன்புள்ள சிறுமியே, மிகுந்த அன்பும் தயையும் நிறைந்த குரலில் அவர் கூறினார். உன் அவசரமான பிரார்த்தனையை நிறைவேற்றுவதற்காக இறைவனால் இங்கே அனுப்பப்பட்ட உனது குரு நான். வழக்கமில்லாத இவ்விதமான பிரார்த்தனையின் தன்மை அவரை வெகுவாகத் தொட்டு விட்டது. இன்றிலிருந்து நீ சூட்சும ஒளியினால் வாழ்வாய்; உன் உடலணுக்கள் எல்லையற்ற மின்னோட்டத்தினால் புத்துணர்வு பெறும்.

கிரிபாலா மௌனமானார். நான் திரு.ரைட்டின் எழுது கோலையும் குறிப்பேட்டையும் எடுத்து அவருக்குத் தெரிவதற்காக சில குறிப்புகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தேன்.

அந்த யோகினி தன் கதையைத் தொடர்ந்தார். அவரது மென்மையான குரல் கேட்பதற்குக் கூட இயலாதவாறிருந்தது. படித்துறை காலியாக இருந்தது. ஆனால் என் குரு, நீராட வரும் எவரும் எங்களைத் தொந்தரவு செய்யாவண்ணம் எங்களைச் சுற்றி ஒரு காக்கும் ஒளி வட்டத்தை உண்டு பண்ணினார். மனிதர்களுடைய ஸ்தூல ஆகாரத்தையே சார்ந்து இருப்பதிலிருந்து உடலை விடுவிக்கும்படியான ஒரு கிரியா உத்தியை அவர் எனக்கு உபதேசித்தருளினார். அந்த உத்தியில் ஒரு மந்திரப் பிரயோகமும்[7] சாதாரண மனிதர் செய்ய முடியாத ஒரு கடினமான சுவாசப் பயிற்சியும் அடங்கியுள்ளது. மருந்தோ மாயமோ இல்லை; கிரியாவைத் தவிர எதுவும் இல்லை.

ஓர் அமெரிக்க பத்திரிகை நிருபர் போன்ற

முறையில், அவரறியாமலேயே எனக்குக் கற்பித்த செயல் முறையை அனுசரித்து, உலகத்திற்குப் பின்னால் உபயோகப் படலாமென நினைத்து நான் கிரி பாலாவிடம் அனேக விஷயங்களைப் பற்றிய கேள்விகள் கேட்டேன். அவர் கொஞ்சம் கொஞ்சமாகக் கூறியவைகளிலிருந்து தெரிந்த விபரங்கள் பின் வருமாறு:

எனக்குக் குழந்தைகள் பிறக்கவில்லை; பல வருடங்களுக்கு முன்பே நான் விதவையானேன். என் நித்திரை மிகச் சொற்பமானது. ஏனெனில் எனக்குத் தூங்குவதும் விழித்திருப்பதும் ஒன்றுதான். பகல் வேளைகளில் வீட்டு வேலைளைக் கவனித்துவிட்டு இரவில் தியானம் செய்கிறேன். பருவந்தோறும் ஏற்படும் கால நிலையின் மாறுதல்களை நான் மிகக் கொஞ்சமாகவே உணர்கிறேன். என்றும் நான் நோய்வாய்ப்பட்டதில்லை. எந்த வியாதியையும் அனுபவித்ததும் இல்லை. தற்செயலாக ஏதாவது காயம் ஏற்பட்டால் மிகச் சொற்பமான வலியே எனக்கு உண்டாகிறது. எனக்கு உடலின் கழிவுப் பொருட்கள் கிடையாது. என் இதயத் துடிப்பையும் சுவாசத்தையும் என்னால் கட்டுப்படுத்த முடியும். நான் அடிக்கடி என் குருவையும் மற்ற மகான்களையும் மனக் காட்சியில் காண்பதுண்டு.

அம்மா, நான் கேட்டேன். நீங்கள் ஏன் ஆகாரமில்லாமல் வாழக்கூடிய இம்முறையை மற்றவர்களுக்கு உபதேசிக்கக் கூடாது?

உலகில் பசியால் வாடும் கோடிக்கணக்கான

மக்களுக்கான என் பேரவா நிறைந்த நம்பிக்கைகள் சீக்கிரமே தகர்த்தெறியப்பட்டன.

இல்லை. அவர் தலையை அசைத்தார். நான் என் குருவால், இந்த ரகசியத்தை வெளியிடக்கூடாது என்று மிகக் கண்டிப்பாக உத்தரவிடப்பட்டிருக்கிறேன். இறைவனுடைய படைப்பின் நாடகத்தில் தலையிடுவதில் அவருக்கு விருப்பம் இல்லை. நான் அநேக மக்களுக்கு சாப்பிடாமலிருக்கக் கற்றுக் கொடுத்து விட்டால் விவசாயிகள் எனக்கு நன்றி சொல்ல மாட்டார்கள்! மணமும் சுவையும் மிகுந்த பழங்கள் புசிப்பார் யாருமின்றி உபயோகமற்றுத் தரையில் கிடக்கும். துன்பம், பசி, வியாதி இவையெல்லாம் நம் கர்ம வினையின் சாட்டைகளாகும். இவைதான் நம்மைக் கடைசியில் வாழ்வின் உண்மையான பொருளைத் தேடத் தூண்டுகின்றன.

அம்மா, நான் மெதுவாகக் கேட்டேன். உணவு உண்ணாமல் வாழ்வதற்கு உங்களை மட்டும் தனியாகத் தேர்ந்தெடுத்ததன் பயன் என்னவோ?

மனிதன் ஆத்மா என்பதை நிரூபிக்கத்தான். அவரது முகம் ஞானத்தால் ஒளிர்ந்தது. தெய்வீகத்தில் முன்னேறும் பொழுது அவன் உணவினால் அல்லாமல் நிரந்தர ஒளியினால் வாழ படிப்படியாகக் கற்றுக் கொள்ள முடியும் என்பதை நிரூபித்துக் காட்டுவதற்குத்தான்.[8]

அந்த யோகினி தீவிரமானதொரு தியான நிலையில் ஆழ்ந்தார். அவரது பார்வை உள் நோக்கி திருப்பப்பட்டது.

அவரது கண்களின் மென்மையான ஆழங்கள் உணர்ச்சி அற்றவைகளாயின. சுவாசமற்ற ஆனந்தமான நிலையை அடைவதற்கு முன்னோடியாக அவர் ஒரு வித பெருமூச் செறிந்தார். கொஞ்ச நேரம் அவர் கேள்வியற்றதொரு வெளியாகிய உள் ஆனந்தத்தின் சுவர்க்கத்திற்குப் பறந்து விட்டிருந்தார்.

உஷ்ணப் பிரதேச இருள் படர்ந்தது. ஒரு சிறு மண்ணெண்ணெய் விளக்கின் மினுக் மினுக்கென்ற ஒளி, நிழலில் மௌனமாக அமர்ந்திருந்த பல கிராமத்தவர்களின் மீது படர்ந்தது. அந்த மிருதுவான இரவில், தூரத்திலிருந்த குடிசைகளின் விளக்கு வெளிச்சமும் பாயும் மின்மினிப் பூச்சிகளும் பிரகாசமான இன்னதென்று அறியப்படாத அச்ச மூட்டும் தோற்றங்களை உண்டு பண்ணின. அது வேதனை தரும் பிரிவு நேரமாயிற்று; மெதுவான, களைப்பூட்டும் ஒரு பயணம் எங்களை எதிர்நோக்கியிருந்தது.

கிரி பாலா, நான் அந்த யோகினி கண்களைத் திறந்ததும் கூறினேன். தயவு செய்து எனக்கு உங்கள் அடையாளமாக ஏதாவது கொடுங்கள்உங்கள் புடவையின் ஒரு துண்டாக இருந்தாலும் சரி.

அவர் காசிப்பட்டின் ஒரு சிறிய துண்டுடன் சீக்கிரமே திரும்பினார். அதைக் கையில் வைத்து நீட்டியபடி திடீரென்று தரையில் விழுந்து வணங்கினார்.

அம்மா, நான் பக்தி கலந்த மரியாதையுடன் கூறினேன். அதைவிட என்னை உங்களது புனிதமான பாதங்களில் விழுந்து வணங்க அனுமதியுங்கள்!

1 வடக்கு வங்காளத்தில்

2 மகாராஜா ஸர் விஜய் சந்த் மஹ்தாப், தற்சமயம் காலமாகிவிட்டார். அவரது குடும்பத்தினரிடம் கிரி பாலாவைப் பற்றி அவர் செய்த மூன்று ஆய்வுளைப் பற்றிய குறிப்புகள் சந்தேகமின்றி உள்ளன.

3 விக்கினங்களை அகற்றுபவர், நல்லதிர்ஷ்டத்திற்கான கடவுள்.

4 ஸ்ரீ யுக்தேஸ்வர் வழக்கமாகக் கூறுவது: இறைவன், நமக்கு இச்சீரிய பூமியின் பலன்களை அளித்திருக்கிறார். நாம் உணவைக் காணவும், நுகரவும், சுவைக்கவும் விரும்புகிறோம்ஓர் இந்து அதைத் தொடவும் விரும்புகிறான்! சாப்பிடும் பொழுது மற்ற யாரும் இல்லாவிடில் அதைக் கேட்கவும்தான் விரும்புகிறான்!

5 திரு.ரைட் செராம்பூரில் ஸ்ரீ யுக்தேஸ்வரின் இறுதி குளிர்கால சங்கிராந்தி திருவிழாவில் அவருடைய சலனப் படங்கள் கூட எடுத்திருக்கிறார்.

6 நாம் எதை உண்கிறோமோ அது ஒளிக் கதிர்வீச்சுத்தான்; நம் ஆகாரம் சக்தியின் தொகுதிகள்தான். மெம்ஃபிஸில் 1933ம் வருடம் மே 17ந் தேதி க்ளீவ் லாண்டைச் சேர்ந்த டாக்டர் ஜார்ஜ்.டபிள்யூ.க்ரைல் என்பவர், மருத்துவர்கள் நிறைந்த ஒரு கூட்டத்தில் சொன்னார். அவர் பேச்சின் சில பகுதிகள் இவ்வாறு வெளியிடப்பட்டன:

உடலின் மின் சுற்றுக்கும் நரம்பு மண்டலத்திற்கும் தேவையான மின் ஓட்டத்தை விடுவிக்கும் இந்த அதி-முக்கியமான ஒளி வீச்சானது சூரியனின் கதிர்களால் உணவிற்கு அளிக்கப்படுகிறது. அணுக்கள் எல்லாம் சூரிய மண்டலங்களாகும் என்று டாக்டர் க்ரைல் கூறுகிறார். அனேக கம்பிச் சுருள்களைப் போன்று அணுக்கள் சூரிய ஒளிவீச்சு நிரப்பப்பட்ட ஊர்திகளாகும். இந்த சக்தி நிறைந்த கணக்கற்ற அணுக்கள் ஆகாரமாக உண்ணப்படுகின்றன. மனித உடலில் புகுந்தவுடன், விறைப்பான ஊர்திகளான இந்த அணுக்கள் உடலின் புரோட்டோபிளாசத்தில் விடுவிக்கப்படுகின்றன; இவ்வொளிவீச்சு புது ரசாயன சக்தியை, புதுமின்னோட்டத்தை ஏற்படுத்துகிறது. உங்கள் உடல் அம்மாதிரியான அணுக்களால் ஆக்கப்பட்டது. அவைதான் உங்கள் தசைகள், மூளைகள் மற்றும் கண்கள், காதுகள் போன்ற புலனுறுப்புக்களாகும், என்கிறார் டாக்டர்.க்ரைல்.

என்றாவது ஒருநாள் விஞ்ஞானிகள், மனிதன் நேரடியான சூரிய சக்தியினால் எப்படி வாழ முடியும் என்பதைக் கண்டுப் பிடிப்பார்கள். நாம் அறிந்த வரையில் இயற்கையில் தாவரங்களில் பச்சையம் ஒன்றுதான் சூரிய ஒளிப்பொறி யாக இயங்கக்கூடிய ஆற்றலை எவ்வாறோ பெற்றுள்ளது, என்று வில்லியம் எல். லாரென்ஸ் என்னும் விஞ்ஞானி நியூயார்க் டைம்ஸில் எழுதுகிறார். அது சூரிய ஒளியின் சக்தியைப் பிடித்துத் தாவரத்தில் சேமித்து வைக்கிறது. இது இல்லாமல் எந்த உயிரும் வாழமுடியாது. நாம் நம் வாழ்க்கைக்குத் தேவையான சக்தியை நாம் உண்ணும் தாவர உணவில் சேமிக்கப்பட்டிருக்கும் சூரிய சக்தியிலிருந்தோ அல்லது அத்தாவரங்களை உண்ணும் மிருகங்களின் மாமிசத்திலிருந்தோ பெறுகிறோம். நிலக்கரியிலிருந்தோ எண்ணெயிலிருந்தோ நாம் பெறுகின்ற சக்தி, கோடிக்கணக்கான வருடங்களுக்கு முன்பு தாவரங்களிலுள்ள பச்சையத்தினால் சேமித்து வைக்கப்பட்ட சூரிய சக்தியே ஆகும். பச்சையம் என்ற பிரதிநிதி மூலம் சூரியனால்தான் நாம் உயிர்வாழ்கிறோம்.

7 சக்தி அதிர்வலைகள் நிறைந்த உச்சரிப்பு. மந்திரம் என்ற சமஸ்கிருத சொல்லின் சரியான மொழிபெயர்ப்புஎண்ணத்தின் கருவி. அது படைப்பின் ஒரு குணத்தைக் காட்டுகின்ற சீரிய கேட்க முடியாத ஒலிகளைக் குறிக்கும்; ஒலியின் அசைகளாக அதை உச்சரிக்கும் பொழுது ஒரு மந்திரம் உலகிற்கே

பொதுவான குறியீட்டுச் சொல்லாக அமைகிறது. (வெப்ஸ்டரின் புதிய சர்வதேச அகராதி, 2வது பதிப்பு). ஒலியின் எல்லையற்ற சக்திகள் ஓம், வார்த்தை அல்லது பிரபஞ்ச இயக்கக் கருவியின் படைப்பொலியிலிருந்து பெறப்படுகின்றன.

8 கிரி பாலா அடைந்த ஆகாரமற்ற நிலை பதஞ்சலியின் யோக சூத்திரங்களில் ஐஐஐ:31ல் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு யோக சக்தியாகும். அவர் சூட்சும சக்திகள் பொருந்தியுள்ள முதுகுத் தண்டின் ஐந்தாவது மையமான விசுத்த சக்கரத்தைப் பாதிக்கும் ஒரு சுவாசப் பயிற்சியை மேற்கொள்ளுகிறார். தொண்டைக்கு எதிர்புறமாக உள்ள விசுத்த சக்கரம், உடல் செல்களின் அணுக்களுக்குள்ளே இருக்கும் இடங்களிலும் பரவியுள்ள ஐந்தாவது பூதமான ஆகாசம் அல்லது வெளியைக் கட்டுப்படுத்துகிறது. இச்சக்கரத்தில் மனத்தைக் குவிய வைப்பதானது, ஒரு பக்தனை ஆகாய சக்தியால் உயிர் வாழச் செய்கிறது.

தெரஸே நொய்மன் ஸ்தூல உணவாலும் வாழவில்லை; உண்ணாமலிருப்பதற்கு விஞ்ஞானம் சார்ந்த எந்த யோக முறையையும் கையாளவில்லை. சொந்த கர்மவினைகளின் சிக்கல்களில்தான் விளக்கம் ஒளிந்திருக்கிறது. ஒரு தெரஸே நொய்மன், ஒரு கிரிபாலா இவர்களுக்குப் பின்னே கடவுளுக்கே அர்ப்பணிக்கப்பட்ட எத்தனையோ பிறவிகள் அடங்கியுள்ளன. ஆனால் தங்களை வெளிப்படுத்திக் கொள்ளும் முறையில்தான் அவர்களிடையே வித்தியாசம் காணப்படுகிறது. உணவின்றி வாழ்ந்த கிறிஸ்துவப் புனிதர்கள்; (அவர்களும்கூட கிறிஸ்துவின் புனிதக்காயங்களை தாங்கியவர்கள்) ஸ்கீடம் என்ற இடத்தைச் சேர்ந்த புனித லிட்வினா, ரென்டைச் சேர்ந்த புனித எலிஸபெத், ஸியன்னாவைச் சேர்ந்த புனித காதரீன், டாமினிகா லாஸரி, ஃபாலிக்னோவின் புனித ஏஞ்ஜலா, 19வது நூற்றாண்டைச் சேர்ந்த லூயி லாடோ ஆகியோரைக் குறிப்பிடலாம், ஃப்லூ என்ற இடத்தைச் சேர்ந்த புனித நிகோலஸ் (ப்ரூடா க்ளாஸ், 15வது நூற்றாண்டில் வசித்த துறவி. ஐக்கியத்திற்காக வேண்டி இவர் விடுத்த உணர்ச்சி ததும்பிய அன்பான வேண்டுகோள்தான் ஸ்விட்சர்லாந்தின் கூட்டுறவைக் காப்பாற்றியது). இருபது வருடங்கள் உண்ணாமலேயே இருந்தவராவார்.

## அத்தியாயம் 47

# நான் மேலை நாட்டிற்குத் திரும்புகிறேன்

நான் இந்தியாவிலும் அமெரிக்காவிலும் அனேக யோகப் பாடங்களைப் போதித்திருக்கிறேன். ஆனாலும் ஓர் இந்து என்ற முறையில், ஆங்கில மாணவர்களுக்குப் பாடம் போதிப்பதில் நான் அசாதாரணமான மகிழ்ச்சியடைகிறேன் என்பதை நான் ஒப்புக் கொள்ளத்ததான் வேண்டும்.

என் லண்டன் வகுப்பு அங்கத்தினர்கள் ரசித்துச் சிரித்தார்கள். எங்கள் யோக அமைதியை எந்த அரசியல் குழப்பங்களும் பாதிக்கவில்லை.

இந்தியா இப்பொழுது புனிதமான ஒரு நினைவு மட்டுமே. இது 1936ம் வருடம் செப்டம்பர் மாதம். பதினாறு மாதங்களுக்கு முன், மறுபடியும் லண்டனுக்கு வந்து உரை நிகழ்த்துவதாக கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டி நான் இங்கிலாந்தில் இருந்தேன்.

யோகத்தின் அமரத்துவ உபதேசங்களுக்கு இங்கிலாந்தும் செவிசாய்க்கிறது. நான் தங்கியிருந்த க்ராஸ்வெனர் ஹவுஸ் என்ற இடத்தில் நிருபர்களும், செய்திச்சுருள் புகைப்பட நிபுணர்களும் மொய்த்திருந்தனர். செப்டம்பர் 29ந் தேதி, ஒயிட்ஃபீல்டு காங்க்ரிகேஷனல் சர்ச்சில் உலக மதங்கள் தோழமைக் குழுவின், பிரிட்டிஷ் தேசியக் கழகம் (The British National

council of world fellowship of Faith) ஏற்பாடு செய்திருந்த ஒரு கூட்டத்தில் நான் நட்புறவில் நம்பிக்கை, நாகரிகத்தை எப்படிக் காப்பாற்ற முடியும் என்ற கடினமான விஷயத்தைப் பற்றிச் சொற்பொழிவாற்றினேன். காக்ஸ்டன் ஹாலில் எட்டு மணிக்கு நான் ஆற்றிய சொற்பொழிவுகளின் போது கூட்டம் நிரம்பி வழிந்தது. இங்கு இடம் கிடைக்காதவர்கள் இரு இரவுகள் நான் ஒன்பதரை மணிக்கு வின்ட்ஸர் ஹவுஸ் ஹாலில் ஆற்றிய இரண்டாவது சொற்பொழிவுக்காகக் காத்திருந்தனர். அதைத் தொடர்ந்து வந்த வாரங்களில் யோக வகுப்புக்களுக்கு வருபவர்களின் கூட்டம் மிக மிக அதிகமாகி விட்டதால் திரு.ரைட் அவ்வகுப்புகளை வேறு இடத்திற்கு மாற்ற வேண்டியிருந்தது.

ஆன்மீக உறவில் ஆங்கிலேயர்களின் உறுதிப்பாடு, போற்றத்தக்க முறையில் வெளிப்படுகிறது. லண்டன் யோக மாணவர்கள், நான் அங்கிருந்து கிளம்பிய பிறகு, ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் மையம் ஒன்றைத் தாங்களாகவே விசுவாசத்துடன் முறையாக அமைத்துக் கொண்டனர். கடுமையான போர் நடந்த வருடங்களிலும் அங்கு வாரந்தோறும், தியானக் கூட்டங்களை நடத்தினர்.

இங்கிலாந்தில் இருந்த வாரங்கள் மறக்க முடியாதவை; லண்டனில் பல நாட்கள் சுற்றுலா சென்றது, அதன் பிறகு அழகிய கிராமப் புறங்களுக்குச் சென்றது. திரு.ரைட்டும் நானும் எங்கள் நம்பிக்கைக்குகந்த ஃபோர்டு வண்டியை, பிரிட்டிஷ்

சரித்திரத்தில் பெயர் பெற்ற பெரும் கவிஞர்களும் வீரர்களும் பிறந்த இடங்களையும் கல்லறைகளையும் சென்று பார்ப்பதற்கு உபயோகப்படுத்தினோம்.

எங்கள் சிறு குழு ப்ரேமன் என்ற கப்பலில் அக்டோபர் மாத இறுதியில் ஸவுத்ஆம்ப்டனிலிருந்து அமெரிக்காவிற்குப் பயணமாயிற்று. நியூ யார்க் துறைமுகத்தில் கம்பீரமான சுதந்திரதேவி சிலையின் காட்சியால் ஏற்பட்ட ஆனந்த உணர்ச்சி தொண்டையை அடைத்தது.

ஃபோர்டு வண்டி, புராதன தேசங்களில் செய்த கடினமான சஞ்சாரங்களினால் கொஞ்சம் தேய்வடைந்திருந்தாலும் இன்னும் வலிமையாகவே இருந்தது; அது, கண்டத்தின் குறுக்காகச் சென்று கலிஃபோர்னியாவை அடைய வேண்டிய நெடும் பயணத்தைத் தன் பாங்கிலேயே ஏற்றுக் கொண்டது. 1936ன் இறுதியில், இதோ! மௌண்ட் வாஷிங்டன் மையம்.

வருடக் கடைசி விடுமுறை தினங்கள், லாஸ் ஏஞ்ஜிலீஸ் மையத்தில் ஒவ்வொரு வருடமும் டிசம்பர் 24ந் தேதியன்று (ஆன்மீகக் கிறிஸ்துமஸ்) எட்டு மணிநேரம் கூட்டுத் தியானம் செய்து மறுநாள் ஒரு விருந்து (சமூகக் கிறிஸ்துமஸ்)[1] டன் கொண்டாடப்படுவது வழக்கம். இவ்வருடம், உலகம் சுற்றி வந்த மூன்று பயணிகளுக்கு நல்வரவு கொடுப்பதற்காகவேண்டி, வெகுதூரத்திலிருந்து வந்த அன்பான நண்பர்கள் மற்றும் மாணவர்களின்

வருகையினால் கொண்டாட்டங்கள் மிக விமரிசையாக அமைந்திருந்தன.

கிறிஸ்துமஸ் தின விருந்தில், பதினையாயிரம் மைல்கள் தூரத்திலிருந்து இந்த மகிழ்ச்சியான வேளைக்கென்றே கொண்டுவரப்பட்ட தின்பண்டங்கள் அடங்கி இருந்தன. காஷ்மீரத்திலிருந்து குச்சிக் காளான்கள், டப்பாவில் அடைத்த ரஸகுல்லா மற்றும் மாம்பழக் கூழ், பப்படம், ஐஸ்க்ரீமில் வாசனை சேர்ப்பதற்காக இந்தியாவில் மலரும் குங்குமப்பூவிலிருந்து எடுத்த ஒரு வகை எண்ணெய் முதலியனவாகும். அன்று மாலை ஜொலித்துக் கொண்டிருந்த ஒரு மிகப்பெரிய கிறிஸ்துமஸ் மரத்தைச் சுற்றிக் கும்பலாக நாங்கள் நின்று கொண்டிருந்தோம். பக்கத்திலிருந்த கணப்பில் வாசனை பொருந்திய சைப்ரஸ் கட்டைகள் எரிந்து கொண்டிருந்தன.

பரிசு-நேரம்! இப்புவியின் தொலைதூர மூலைகளிலிருந்து பாலஸ்தீனம், எகிப்து, பாரதம், இங்கிலாந்து, ஃபிரான்ஸ், இத்தாலியிலிருந்துபரிசுகள்! எவ்வளவு சிரமத்துடன் திரு.ரைட் ஒவ்வொரு வெளிநாட்டுச் சந்திப்பிலும், அமெரிக்காவிலுள்ள பிரியமுள்ள நண்பர்களுக்காகக் கொண்டு செல்லும் பொக்கிஷங்களை, திருட்டுக் கைகள் கவர்ந்துவிடக்கூடாதெனக் கவனமாகப் பெட்டிகளை எண்ணி வைத்திருந்தார்! புண்ணிய பூமியான பாலஸ்தீனத்திலிருந்து கலை வேலைப் பாடுடன் கூடிய புனித ஆலிவ் மரத்தாலான பெயர்ப் பலகைகள்,

பெல்ஜியம் மற்றும் ஹாலந்திலிருந்து நுட்பமான பின்னல் மற்றும் பூத்தையல் வேலைப்பாடுகள் நிறைந்த ஆடைகள், பாரசீகக் கம்பளங்கள், நேர்த்தியாக நெய்யப்பட்ட காஷ்மீர சால்வைகள், மைசூரிலிருந்து என்றும் மணம் வீசும் சந்தன மரத் தாம்பாளங்கள், மத்திய மாகாணங்களிலிருந்து சிவனுடைய நந்தியின் கண் எனப்படும் கற்கள், வெகு காலத்திற்கு முன்பிருந்த ராஜ வம்சத்தினரின் இந்திய நாணயங்கள், கல்லிழைத்த பூச்சாடிகள் மற்றும் கிண்ணங்கள், சிறு சிறு பொம்மைகள், சித்திர திரைச் சீலைகள், கோயிலுக்கான ஊதுபத்திகள் மற்றும் வாசனைப் பொருட்கள், அச்சு வேலை செய்யப்பட்ட சுதேசிப் பருத்தித் துணிகள், அரக்கு வேலைப் பாடமைந்த பொருட்கள், மைசூர் யானைத் தந்தத்தில் செதுக்கிய பொருட்கள், ஆர்வத்தைத் தூண்டும் நீண்ட விரல்கொண்ட பாரசீகக் காலணிகள், மிகப் புராதனமான ஒளியூட்டப்பெற்ற கைப்பிரதிகள், வெல்வெட்டுகள், ஜரிகை வேலைப் பாடமைந்த பட்டாடைகள், காந்திக் குல்லாய்கள், மண்பாண்டங்கள், தளவரிசைக் கற்கள், வேலைப்பாடு அமைந்த பித்தளைப் பொருட்கள், பிரார்த்தனையின் போது உபயோகிக்கும் கம்பளங்கள்மூன்று கண்டங்களிலிருந்தும் வந்த செல்வங்கள்!

மரத்தடியிலிருந்த மிகப்பெரிய குவியலிலிருந்து நேர்த்தியாகச் சுற்றி வைக்கப்பட்டிருந்த பொட்டலங்களை நான் ஒவ்வொன்றாக எடுத்து வினியோகித்தேன்.

சகோதரி ஞானமாதா! இனிமையான முகத்

தோற்றமும் ஆழ்ந்த ஞானமும் பெற்ற புனிதமான அமெரிக்க மாதுவிடம் நான் ஒரு நீண்ட பெட்டியை அளித்தேன். நான் அங்கு இல்லாத சமயத்தில் அவர் தான் மௌண்ட் வாஷிங்டன் மையத்தின் பொறுப்பை ஏற்றிருந்தார். மெல்லிய காகிதச் சுற்றிலிருந்து அவர் பொன்னிறமான ஒரு காசிப் பட்டுப்புடவையை எடுத்தார்.

நன்றி, ஐயா; இது பாரதத்தின் அற்புதத்தை என் கண் முன் கொண்டுவருகிறது.

திரு.டிகின்ஸன்! அடுத்த பொட்டலத்தில் நான் கல்கத்தா பஜார் ஒன்றில் வாங்கிய ஒரு பரிசு இருந்தது. திரு. டிகின்ஸனுக்கு இது பிடிக்கும், என்று நான் அப்பொழுது எண்ணினேன். திரு.டிகின்ஸன், 1925ஆம் ஆண்டு மௌண்ட் வாஷிங்டன் மையம் ஸ்தாபிக்கப்பட்டதிலிருந்து ஒவ்வொரு கிறிஸ்துமஸ் கொண்டாட்டத்திற்கும் விஜயம் செய்யும் ஓர் அன்பான சீடர்.

இந்தப் பதினோராவது வருடாந்திரக் கொண்டாட்டத்தில் அவர் அந்த நீண்ட பொட்டலத்தின் ரிப்பன்களைப் பிரித்தபடி என் முன் நின்றார்.

வெள்ளிக் கிண்ணம்! உணர்ச்சி பெருக்கில் தவித்தவாறு அவர் அந்த உயரமான, பருகப் பயன்படும் கிண்ணப் பரிசை உற்று நோக்கினார். அவர் ஒரு விதத் திகைப்புடன் சிறிது தூரத்தில் சென்று அமர்ந்தார். நான் ஸான்டாகிளாஸ் (கிறிஸ்துமஸ் பரிசு வழங்குபவர்) பாத்திரத்தை மறுபடி ஏற்பதற்கு முன்னால் அவரை நோக்கி அன்புடன் முறுவலித்தேன்.

அம்மகிழ்ச்சி நிறைந்த மாலை நேரம், அனைத்துப் பரிசுகளையும் அளிக்கும் ஆண்டவனுக்குச் செய்த பிரார்த்தனையுடன் முடிந்தது. பிறகு எல்லோருமாகச் சேர்ந்து கிறிஸ்துமஸ் கீதங்களைப் பாடினோம்.

பின்னர் சிறிது நேரம் கழித்து திரு.டிகின்ஸனும் நானும் ஒன்றாகச் சேர்ந்து பேசிக் கொண்டிருந்தோம்.

ஐயா, அவர் கூறினார், இந்த வெள்ளிக்கிண்ணத்திற்காக தயவு செய்து இப்பொழுது என்னை நன்றி கூறவிடுங்கள். கிறிஸ்துமஸ் இரவன்று எனக்கு வார்த்தைகளே அகப்படவில்லை.

நான் அந்தப் பரிசை உங்களுக்காகவே வாங்கி வந்தேன்.

நாற்பத்து மூன்று வருடங்களாக நான் அந்த வெள்ளிக் கிண்ணத்திற்காகக் காத்துக்கொண்டிருக்கிறேன்! நான் எனக்குள்ளேயே மறைத்து வைத்திருந்த அது, ஒரு நீண்ட கதை. திரு.டிகின்ஸன் என்னைச் சங்கோசத்துடன் நோக்கினார். அதன் தொடக்கம் சட்டென நிகழ்ந்தது: நான் நீரில் மூழ்கிக் கொண்டிருந்தேன். நெப்ராஸ்காவிலுள்ள ஒரு சிறு நகரத்தில் என் தமையன் என்னைப் பதினைந்து அடி ஆழமுள்ள குளத்தில் விளையாட்டாகத் தள்ளிவிட்டான். எனக்கு அப்பொழுது ஐந்து வயதுதான். இரண்டாவது தடவையாக நான் தண்ணீருக்கு அடியில் மூழ்க இருந்தபொழுது ஜொலிக்கும் பலவண்ண ஒளி ஒன்று எல்லா இடத்தையும் நிரப்பியவாறு தோன்றியது. அதன் மத்தியில் நம்பிக்கை அளிக்கும் புன்னகையுடனும் சாந்தமான கண்களுடனும் கூடிய ஒரு மனித உருவம்!

என் உடல் மூன்றாவது தடவையாக நீருக்குள் மூழ்கும்பொழுது என் சகோதரனின் தோழர்களுள் ஒருவன் ஒரு நீண்ட மெல்லிய அலரி மரத்தை வளைத்து மிகக் கீழாக அமிழ்த்தி, தவிக்கும் என் விரல்களால் வாகாக அதைப் பற்றிக் கொள்ள வழி கோலினான். பிறகு அந்தச் சிறுவர்கள் என்னைத் தூக்கிக் கரையில் போட்டு எனக்கு வேண்டிய முதலுதவி சிகிச்சை தந்தனர்.

பன்னிரண்டு வருடங்கள் கழித்து, பதினேழு வயது இளைஞனாக நான் சிகாகோவிற்கு என் அன்னையுடன் விஜயம் செய்தேன். அது 1893 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம். உலக சர்வ மத மகாசபைக் கூட்டம் (World Parliament of Religions) நடந்துக்கொண்டிருந்தது. அன்னையும் நானும் ஒரு முக்கியமான வீதியில் நடந்து கொண்டிருக்கையில் நான் மறுபடியும் சக்தி வாய்ந்த அந்த ஒளி வீச்சைக் கண்டேன். சில அடிகளுக்கு அப்பால், நான் பல வருடங்களுக்கு முன்னால் கண்ட காட்சியில் தோன்றிய அதே மனிதர், சாவகாசமாக நடந்து கொண்டிருப்பதைக் கண்டேன். அவர் ஒரு பெரிய அரங்கத்தை அடைந்து அதனுள் நுழைந்து மறைந்தார்.

அம்மா, நான் கூறினேன், நான் தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருந்த பொழுது தோன்றியவர் அந்த மனிதர்தான்!

நாங்கள் இருவரும் அவசரமாக அந்தக் கட்டிடத்தில் நுழைந்தோம்; அந்த மனிதர் பிரசங்கம் செய்யும் மேடையில் அமர்ந்திருந்தார். சீக்கிரமே, நாங்கள் அவர்தான் இந்தியாவிலிருந்து வந்திருக்கும் ஸ்வாமி

விவேகானந்தர் என்று[2] அறிந்தோம். ஆன்மாவைத் தூண்டக்கூடிய சொற்பொழிவை அவர் ஆற்றிய பிறகு அவரைச் சந்திக்க நான் முன்னே சென்றேன். அவர் என்னைப் பார்த்து, நாங்கள் ஏதோ பழைய நண்பர்கள் என்பது போன்று, கருணையுடன் புன்னகைத்தார். நான் மிகச் சிறியவனா யிருந்ததினால் என் உணர்ச்சிகளை எப்படி வெளிப்படுத்துவதென எனக்குத் தெரியவில்லை. ஆனால் என் மனத்துள் அவர் எனக்குக் குருவாக இருக்க முன்வருவாரோ என்ற எதிர்பார்ப்பு இருந்தது. அவர் என் எண்ணத்தை அறிந்து கொண்டார்.

இல்லை, என் மகனே, நான் உன் குரு அல்ல. விவேகானந்தர் தன்னுடைய அழகான, ஊடுருவும் கண்களால் என் கண்களை ஆழ்ந்து நோக்கினார். உன் குரு பின்னால் வருவார். அவர் உனக்கு வெள்ளிக் கிண்ணம் ஒன்றை அளிப்பார். சற்றுப் பொறுத்து அவர் புன்னகையுடன் தொடர்ந்தார், இப்பொழுது நீ தாங்கிக்கொள்ள முடிவதைவிட அதிகமான அருளாசிகளை அவர் உன் மீது பொழிவார்.

சில நாட்களில் நான் சிகாகோவை விட்டுப் புறப்பட்டேன், திரு. டிகின்ஸன் தொடர்ந்தார், பின்னர் அந்த மகா விவேகானந்தரை மறுபடியும் பார்க்கவேயில்லை. ஆனால் அவர் கூறிய ஒவ்வொரு சொல்லும் என் அடி மனத்தின் உள்ளே அப்படியே அழிக்க முடியாதவாறு பதிந்து விட்டது. வருடங்கள் கழிந்தன; எந்தக் குருவும் தோன்றவில்லை. 1925 ஆம் வருடம் ஓரிரவு இறைவன் என் குருவை அனுப்ப

வேண்டுமென்று ஆழ்ந்து பிரார்த்தித்தேன். ஒரு சில மணிநேரம் கழிந்த பிறகு மெல்லிய இன்னிசை ஒலிகளால் நான் நித்திரையிலிருந்து எழுப்பப் பட்டேன். விண்ணுலகத்தைச் சேர்ந்த ஒரு குழுவினர் புல்லாங்குழலுடனும் மற்ற வாத்தியங்களுடனும் என் முன் தோன்றினார்கள். வியக்கத்தக்க இன்னிசையால் காற்றை நிரப்பிய பின்னர் அந்தத் தேவர்கள் மெதுவாக மறைந்தனர்.

மறுநாள் மாலை இங்கு லாஸ்ஏஞ்ஜலீஸில் உங்கள் சொற்பொழிவுகளில் ஒன்றை முதன் முதலாகக் கேட்டேன். அப்பொழுது என் பிரார்த்தனை நிறைவேற்றப்பட்டதைத் தெரிந்துக் கொண்டேன்.

நாங்கள் மௌனமாக ஒருவரையொருவர் நோக்கிப் புன்னகை புரிந்துக் கொண்டோம்.

பதினோரு வருடங்களாக நான் தங்கள் கிரியா யோக சீடனாக இருந்து வருகிறேன், திரு. டிகின்ஸன் தொடர்ந்தார். எப்பொழுதாவது நான் அந்த வெள்ளிக் கிண்ணத்தைப் பற்றி யோசிப்பதுண்டு. அப்போது விவேகானந்தருடைய சொற்கள் உருவகமாகக் கூறப்பட்டவை என்று என்னை நானே சமாதானப்ப டுத்திக் கொள்வேன்.

ஆனால் கிறிஸ்துமஸ் இரவன்று இம்மரத்தினருகில் நீங்கள் அந்தச் சிறிய பெட்டியை என்னிடம் கொடுக்கும்பொழுது என் வாழ்க்கையில் மூன்றாவது தடவையாக நான் அதே ஒளிவீச்சைக் கண்டேன். அடுத்த நிமிடமே விவேகானந்தர் எனக்காக நாற்பத்தி மூன்று

வருடங்களுக்கு முன்பாகவே கண்ட என் குருவின் பரிசை உற்றுநோக்கிக் கொண்டு இருந்தேன்3 ஒரு வெள்ளிக் கிண்ணம்!



ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர், பாஸ்டன், 1922

1 1950லிருந்து டிசம்பர் 23ந் தேதி அன்று முழுநாள் தியானம் நடைபெற்று

வருகிறது. இவ்வாறு உலக முழுவதுமுள்ள யோகதா சத்சங்க/ ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்

அங்கத்தினர்கள் கிறிஸ்துமஸ் காலத்தில் தங்கள் இல்லங்களிலும் YSS/SRF மையங்களிலும் ஆழ்ந்த தியானத்திற்கும் பிரார்த்தனைக்கும் ஒரு தினத்தை ஒதுக்கி கிறிஸ்துமஸ் கொண்டாடுகின்றனர். பரமஹம்ஸ யோகானந்தரால் தொடங்கப்பட்ட இந்த வருடாந்திர நிகழ்ச்சி மூலம் பலர் சிறந்த ஆன்மீக உதவியையும் அருளாசியையும் அவர்கள் பெற்றதற்குச் சான்றளித்துள்ளனர்.

பரமஹம்ஸ யோகானந்தர் மௌண்ட் வாஷிங்டன் மையத்தில் (YSS/SRF - ன் உலகளாவிய பிரார்த்தனைக் குழுவின் மையம்) ஒரு பிரார்த்தனைக் குழுவை ஏற்படுத்தினார். அங்கு

தங்களுடைய குறிப்பிட்ட பிரச்சனையை தீர்க்கவோ அல்லது நீக்கிவிடவோ உதவிகோரும் அனைவருக்காகவும் தினந்தோறும் பிரார்த்தனைகள் செய்யப்படுகின்றன. (பிரசுரதாரரின் குறிப்பு)

2 கிறிஸ்துவைப் போன்றதொரு மகானான ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் முக்கிய சீடர்.

3 திரு. டிகின்ஸன் செப்டம்பர் 1893ல் ஸ்வாமி விவேகானந்தரைச் சந்தித்தார். அது பரமஹம்ஸ யோகானந்தர் பிறந்த வருடமாகும் (ஜனவரி 5ந் தேதி). யோகானந்தர் மறுபடி அவதாரம் எடுத்துள்ளார் என்பதையும் அவர் அமெரிக்காவிற்குச் சென்று இந்தியாவின் தத்துவத்தை உபதேசிப்பார் என்பதையும் விவேகானந்தர் அறிந்திருந்தார் என்பது தெளிவு.

1965ல் திரு. டிகின்ஸன், 89 வயதிலும் மிகச் சுறுசுறுப்பாகவும் ஆரோக்கியத்துடனும் இருந்து, லாஸ் ஏஞ்ஜிலீஸ், ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் தலைமையகத்தில் நடந்த ஒரு வைபவத்தில் யோகாசார்யா (யோக ஆசிரியர்) என்ற பட்டத்தைப் பெற்றார்.

அவர் அடிக்கடி பரமஹம்ஸர் அவர்களுடன் நீண்ட நேர தியானத்தில் ஈடுபட்டதுடன் ஒரு நாளைக்கு மூன்று தடவை கிரியா யோகம் செய்யத் தவறியதில்லை.

ஜூன் 30, 1967ல் அவர் மறைவதற்கு இரண்டு வருடங்களுக்கு முன்னால் யோகாசார்யா டிகின்ஸன் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் சன்னியாசிகளுக்கு ஓர் உரை நிகழ்த்தினார். அவர் பரமஹம்ஸர் அவர்களிடம் சொல்ல மறந்த ஒரு சுவாரஸ்யமான விஷயத்தை சன்னியாசிகளுக்குக் கூறினார். யோகாசார்யா டிகின்ஸன் கூறியது: நான் சிகாகோவில் பிரசங்க மேடைக்கு அருகில் விவேகானந்தருடன் பேசுவதற்குச் சென்ற பொழுது நான் அவருக்கு வந்தனம் தெரிவிப்பதற்கு முன்னரே அவர் கூறினார்:

இளைஞனே, நீ தண்ணீரை விட்டுவிலகி இருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். (பிரசுரதாரரின் குறிப்பு)

## அத்தியாயம் 48

# கலிஃபோர்னியாவிலுள்ள என்ஸினிடஸில்

ஐயா, உங்களுக்கு ஓர் ஆச்சரியம்! நீங்கள் இங்கில்லாமல் வெளிநாட்டிற்குச் சென்றிருந்த பொழுது நாங்கள் இந்த என்ஸினிடஸ் ஆசிரமத்தைக் கட்டச் செய்தோம். இது தங்களுக்கு நல்வரவுப் பரிசு! திரு.லின், சகோதரி ஞான மாதா, துர்கா மா இன்னும் சில பக்தர்கள் சிரித்த முகத்துடன் என்னை ஒரு வாயில் வழியாகவும் மர நிழல்களடர்ந்த வழியேயும் இட்டுச் சென்றனர்.

நீலக்கடலை நோக்கியவாறு ஒரு பெரிய வெண்ணிறக் கப்பலைப் போன்ற ஒரு கட்டிடம் எழும்பியிருப்பதை நான் கண்டேன். முதலில், பேச நாவே எழாமல் பிறகு ஆகா! ஓகோ! க்களுடன், கடைசியாக ஆனந்தத்தையும் நன்றியையும் தெரிவிக்கப் போதுமான வார்த்தைகள் இன்றி நான் அந்த ஆசிரமத்தைப் பரிசீலித்தேன்பதினாறு அசாதாரணமான பெரிய அறைகள், ஒவ்வொன்றும் அழகாக நிர்மாணிக்கப் பட்டவை.

கம்பீரமான மத்திய கூடம், மிகப்பெரிய கூரைவரை உயர்ந்த சன்னல்களுடன் புல்தரை, கடல், ஆகாயம் இவைகளை நோக்கியவாறு அமைக்கப் பட்டிருந்தது. இவை எல்லாம் இணைந்து மரகதம், பல நிறங்கள்

கொண்ட ரத்தினம், மற்றும் நீலக்கற்களின் சேர்ந்திசை நாதமாகியது. அக் கூடத்தில் காணப்படும் மிகப் பெரிய கணப்பின் மேல் கிறிஸ்து, பாபாஜி, லாஹிரி மகாசயர் மற்றும் ஸ்ரீ யுக்தேஸ்வர் இவர்களின் படங்கள் மாட்டப்பட்டிருந்தன; அவர்கள் அமைதியான இம்மேலை நாட்டு ஆசிரமத்திற்குத் தங்களது ஆசிகளை வழங்குவது போல் எனக்குத் தோன்றியது.

அக் கூடத்திற்கு நேர் கீழே, அக்கூடம் அமைந்த சரிவினுள்ளே கட்டப்பட்ட இரு தியான குகைள், எல்லையற்ற வானத்தையும் கடலையும் நோக்கிய வண்ணம் இருந்தன. மைதானத்தில், சூரியக் குளியலுக்கான மறைவான இடங்கள், அமைதியான மரத்தடிகளுக்கு இட்டுச் செல்லும் கற்கள் பதித்த பாதைகள், ரோஜாத் தோட்டங்கள், யூகலிப்டஸ் தோப்பு ஒன்று, ஒரு பழத்தோட்டம் முதலானவை காணப்பட்டன.

நல்லதும் வீரம் பொருந்தியதுமான மகான்களின் ஆத்மாக்கள் இங்கு வரட்டும். அவர்கள், மண்ணுலகளவு நிறைந்தும் விண்ணுலகளவு உயர்ந்தும் உள்ள அவர்களது ஆசி பொருந்திய பரிசுகளின் நலந்தரும் நற்குணங்களை அருளி நம்முடன் கைகோர்த்துச் செல்லட்டும் (என்ற ஜெந்த்-அவெஸ்தாவின் வசிக்கும் இடத்திற்கான ஒரு பிரார்த்தனை, ஆசிரமக் கதவுகளில் ஒன்றின்மேல் தொங்கவிடப்பட்டுள்ளது).

கலி஁ஃபோர்னியா, என்ஸினிடஸில் உள்ள அந்தப் பெரிய பண்ணையானது ஜனவரி, 1932ல் உபதேசம் பெற்றதிலிருந்து விசுவாசமாக இருந்து வரும் கிரியா

யோகி திரு.ஜேம்ஸ் ஜே.லின் அவர்கள் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்பிற்கு அளித்த அன்பளிப்பாகும். முடிவற்ற பொறுப்புகளை உடைய (எண்ணெய் சம்பந்தப்பட்ட பெரிய நிறுவனங்களின் தலைவராகவும், உலகத்திலேயே மிகப்பெரிய பரஸ்பர நெருப்பு காப்பீட்டுப் பரிமாற்றுதலின் (reciprocal fire-insurance exchange) தலைவராகவும், ஓர் அமெரிக்கத் தொழிலதிபராகவும் இருந்தாலும், திரு. லின், தினமும் நீண்ட ஆழ்ந்த கிரியா யோகத் தியானத்திற்கு நேரம் காண்கிறார். இவ்வாறு ஒரு சமநிலை பெற்ற வாழ்க்கை நடத்துவதினால் அவர் சமாதியில் அசைக்க முடியாத அமைதியை அடைந்துள்ளார்.



பரமஹம்ஸ யோகானந்தர் மற்றும் ஜேம்ஸ் ஜே.லிலின், பின்னர் ஸ்ரீ ராஜரிஷி ஜனகானந்தர். குருவும் சீடரும் 1933, லாஸ் ஏஞ்ஜலீஸ், SRF சர்வதேச தலைமையகத்தில் தியானம் செய்து கொண்டி ருக்கின்றனர். "சிலர் கூறுவர் ணுமேலை நாட்டவரால் தியானம் செய்ய இயலாது.து அது உண்மையல்ல," யோகானந்தர் கூறினார், "திரு. லின் முதன் முதலிலில் கிரியா தீட்சை பெற்றதிலிலிருந்து இதுவரை அவர் உள்முகமாக இறைவனுடன் தொடர்பு கொள்ளாமலிருந்ததை நான் கண்டதே இல்லை."

இந்தியாவிலும் ஐரோப்பாவிலும் நான் தங்கியிருந்த போது (ஜூன் 1935 லிருந்து அக்டோபர் 1936 வரை) திரு. லின்[1] என்ஸினிடஸில் ஆசிரமம் கட்டிவரும் விஷயம் எனக்கு எட்டாமலிருக்க, என்னுடன் கலி.ஃபோர்னியாவில் கடிதத் தொடர்பு வைத்திருந்தவர்களை அன்புடன் தடுத்துவிட்டார். ஆச்சரியம், ஆனந்தம்!

அமெரிக்காவில் என் தொடக்க வருடங்களில் ஒரு

சிறிய கடற்கரையோர ஆசிரமத்திற்காக இடம் வேண்டி கலிஃபோர்னியா கடற்கரையோரத்தில் தேடி அலைந்தேன். நான் ஒரு தகுதியான இடத்தைக் கண்டுபிடிக்கும் போதெல்லாம் ஏதாவதொரு தடை தவறாமல் ஏற்பட்டு எனக்கு இடையூறு அளித்தவாறிருந்தது. இப்பொழுது என்ஸினிடஸில் சூரிய ஒளி நிறைந்த அந்நிலப்பரப்பை நோக்கும் பொழுது, வெகு காலத்திற்கு முன்பு ஸ்ரீ யுக்தேஸ்வர் முன்னறிவிப்பாகக் கூறிய கடற்கரையருகில் ஓர் ஏகாந்தமான இடம் என்ற வாக்குப் பலித்ததைப் பணிவுடன் உணர்ந்தேன்.[2]

சில மாதங்கள் சென்ற பின்னர், 1937 ஈஸ்டர் பண்டிகையின் பொழுது, (பின்னால் நடை பெறப்போகும் அனேக ஈஸ்டர் சூரியோதயப் பிரார்த்தனைகளின் முன்னோடியாக), புது ஆசிரமத்தின் புல் வெளியில் இம் முதல் சூரியோதயப் பிரார்த்தனையை நான் தொடங்கினேன். புராதன மகான் (குழந்தை இயேசுவிற்கு கீழ்த்திசையிலிருந்து காணிக்கைகள் கொண்டு வந்தவர்) களைப் போல் பல நூற்றுக்கணக்கான மாணவர்கள் பக்தி கலந்த வியப்புடன் அத்தினசரி அதிசயத்தைக் கண்டவாறிருந்தனர்: அது கீழ்வானில் எழும் சூரியோதய நிகழ்ச்சி! அதன் பவித்ரமான புகழை ஒலித்தவாறு மேற்கே பசிஃபிக் சமுத்திரம்; தூரத்தே ஒரு சிறு வெண்ணிற ஓடம் மற்றும் வானில் தனியே பறக்கும் ஒற்றைக் கடற்பறவை. கிறிஸ்துவே நீவிர் உதித்து விட்டீர்! இளஞ்சூரியனுடன் மட்டுமின்றி பிரம்மத்தின்

முடிவற்ற விடியலில் உதயமாகி விட்டீர்.

அனேக மகிழ்ச்சிகரமான மாதங்கள் சென்றன. என்ஸினிடஸின் பரிபூரண அழகிய சூழ்நிலையில் நான் வெகு காலமாகத் திட்டமிட்டிருந்த காஸ்மிக் சான்ட்ஸ் (பிரபஞ்ச கீதங்கள்)[3] எழுதும் பணியைச் செய்து முடித்தேன். நான் அனேக இந்திய கீதங்களுக்கு ஆங்கில வார்த்தைகளும் மேற்கத்திய இசையில் ஸ்வர, தாள அமைப்புக்களும் கொடுத்தேன். அதில் அடங்கியவை: சங்கரருடைய கீதமான, பிறப்பில்லை, இறப்புமில்லை; சமஸ்கிருத மொழியிலுள்ள பிரம்மாவிற்குத் தோத்திரம், தாகூரின் யார் உளார் என் கோயிலில்? மற்றும் பல என் சொந்தத் தொகுப்புக்கள்: நான் என்றும் உன்னுடையவன், என் கனவிற்கப்பாற்பட்ட தேசத்தில், என் ஆத்ம அழைப்பை உனக்கு விடுக்கிறேன், வா, என் ஆத்ம கீதத்தைக் கேள், மற்றும் அமைதிக் கோயிலில் என்பவை யாகும்.

அப்பாடல் புத்தகத்தின் முன்னுரையில் கீழை நாடுகளின் கீதங்களுக்கு மேலை நாட்டவரின் பிரதிபலிப்பைப் பற்றிய என் நினைவில் நிற்கும் முதல் அனுபவத்தைக் குறித்துள்ளேன். அந்தச் சம்பவமானது 1926 ஏப்ரல் 18ம் நாள் நியூ யார்க்கிலுள்ள கார்னகி அரங்கத்தில் நடந்த பொதுச் சொற்பொழிவு நிகழ்ச்சி யாகும்.

ஏப்ரல் 17ஆம் நாள் திரு. ஆல்வின் ஹன்ஸிகர் என்ற ஒரு அமெரிக்க மாணவரிடம், நான் சபையினரை புராதன இந்து கீதமாகிய ஏ அழகிறைவா[4] (O God Beautiful)

என்ற பாடலைப் பாடும்படி கேட்கத் திட்டமிட்டிருக்கிறேன். என்று கூறினேன்.

திரு. ஹன்ஸிகர், கீழை நாட்டுப் பாடல்களை அமெரிக்கர்கள் சுலபமாகப் புரிந்து கொள்வது சிரமம் என்று மறுத்துக் கூறினார்.

இசையானது உலக மொழி, என நான் பதிலளித்தேன். இந்த உன்னதப் பாடலிலுள்ள ஆத்மாவின் அவாவை அமெரிக்கர்கள் உணரத் தவற மாட்டார்கள்.

மறுநாள் இரவு, ஏ அழகிறைவா என்ற பக்தி இசை மூவாயிரம் குரல்கள் மூலமாகக் கிட்டத்தட்ட ஒரு மணிநேரத்திற்கும் மேலாக வெளிப்பட்டது. அருமை நியூயார்க் மக்களே! சலிப்படைய வேண்டாம். உங்கள் இதயங்கள் எளிய ஆனந்த கீதத்தில் திளைத்து வானளாவின. அன்று மாலை இறைவனின் அருள் நாமத்தை அன்புடன் இசைத்த பக்தர்களிடையே தெய்வீகக் குணப்படுத்துதல் நிகழ்ந்தது.

1941ல் நான் பாஸ்டனில் உள்ள ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் (நதஊ) மையத்திற்கு விஜயம் செய்தேன். பாஸ்டன் மையத்தின் தலைவரான டாக்டர் எம். டபிள்யு. லூயிஸ் புன்முறுவலித்தபடி, ஐயா, நீங்கள் அமெரிக்காவிலிருந்த ஆரம்ப வருடங்களில், இந்நகரில் குளியலறை கூட இல்லாத ஒற்றை அறையில் தங்கியிருந்தீர்கள். பாஸ்டன் நகரானது சில ஆடம்பர வாழ்விடங்களைக் கொண்ட பெருமை பெற்றுள்ளது என்பதை நீங்கள்

தெரிந்து கொள்ள வேண்டுமென்பது என் அவா, என்றார்.

கலி்ஃபேர்னியாவில் செயல்கள் நிறைந்த வருடங்கள் ஆனந்தமாகக் கழிந்தன. ஸெல்்ஃப்ரியலைசேஷன் ்ஃபெலோஷிப்ன் குடியிருப்பு[5] ஒன்று 1937ல் என்ஸினிடஸில் நிறுவப்பட்டது. குடியிருப்பின் அனேக செயல்பாடுகள் ஸெல்்ஃப்ரியலைசேஷன் ்ஃபெலோஷிப்ன் கொள்கைகளுக்கு ஏற்ப சீடர்களுக்கு பல்முனை பயிற்சிகளை அளிக்கின்றன. என்ஸினிடஸ் மற்றும் லாஸ் ஏஞ்ஜிலீஸ் மையங்களில் வசிப்பவர்களின் உபயோகத்திற்காக பழங்களும் காய்கறிகளும் விளைவிக்கப்படுகின்றன.

சகல ஜனங்களையும் அவர் ஒரே ரத்தத்தினால் தோன்றப் பண்ணியிருக்கிறார்.[6] உலக சகோதரத்துவம் என்பது மிகப் பெரிய பதம், ஆனால் மனிதன் உலகத்தின் குடிமகன் என்ற முறையில் தன்னைக் கருதி, தன் அனுதாபங்களை விரிவுபடுத்த வேண்டும். எவன் ஒருவன், இது என் அமெரிக்கா, என் இந்தியா, என் ்ஃபிலிப்பைன்ஸ், என் ஐரோப்பா, என் ஆ்ஃப்ரிக்கா என்பது போன்ற முறையில் உண்மையாகப் புரிந்து கொள்கிறானோ அவனுக்குப் பலனுள்ளதும் ஆனந்தமானதுமான வாழ்க்கைக்கான வாய்ப்பிற்குக் குறைவேயில்லை.

ஸ்ரீ யுக்தேஸ்வர் இந்திய மண்ணைத் தவிர வேறு எங்குமே வசித்ததில்லையெனினும் அவர் இந்த சகோதரத்துவத்தின் உண்மையை அறிந்திருந்தார்.

உலகம் எனது தாயகம்.



பரமஹம்ஸர் மற்றும் ஃபே ரைட், தற்பொழுது ஸ்ரீ ஸ்ரீ தயா மாதா 1939ல் எஸ்.ஆர்.எ.ஃப், என்ஸினிடஸ் ஆசிரமத்தில். 1931ல் அவர் எஸ்.ஆர்.எ.ஃப் ஆசிரமத்தில் சேர்ந்த பின்னர், குருதேவர் அவரிடம் கூறினார் : "நீ என்னுடைய தூண்டு முட்டை. நீ வந்த உடன், இறைவனுடைய இன்னும் பல உண்மையான பக்தர்கள் இந்த மார்க்கத்திற்கு ஈர்க்கப்படுவார்கள் என நான் தெரிந்து கொண்டேன்." அவர் ஒருமுறை அன்புடன் குறிப்பிட்டார், ஜஎன்னுடைய ஃபே, அவள் எவ்வளவு நல்லது செய்யப் போகிறாள்! அவள் மூலமாக நான் செயல்பட முடியும் என எனக்குத் தெரியும். ஏனெனில் அவள் ஏற்புத்திறம் உடையவள்." (பார்க்க புகைப்படப் பகுதி- III பக்கம் 12)



ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்ன் ஆசிரமம், என்ஸினிடஸ், கலிஃபோர்னியா



பரமஹம்ஸ யோகானந்தர், பசிஃபிக் சமுத்திரத்தை நோக்கியவாறு இருக்கும் ஒரு செங்குத்தான மேட்டின் மீது அமைந்துள்ள எஸ்.ஆர்.எஃப், என்ஸினிடஸ் ஆசிரம நிலத்தில், 1940.

---

1 பரமஹம்ஸரின் மறைவிற்குப் பிறகு திரு. லின் (ராஜரிஷி ஜனகானந்தர்) ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் மற்றும் இந்திய யோகதா சத்சங்க

சமூகம் இவைகளின் தலைவராகப் பணியாற்றினார். தன் குருவைப் பற்றி, ஒரு மகானின் சகவாசம் எவ்வளவு தெய்வீகமானது! வாழ்க்கையில் எனக்கு கிடைத்த எல்லாவற்றிலும், பரமஹம்ஸர் என் மீது பொழிந்த ஆசிகளைத்தான் நான் பொக்கிஷமாக மதித்துப் போற்றுகிறேன், என்று திரு. லின் கூறியுள்ளார்.

திரு. லின் 1955ல் மகா சமாதி அடைந்தார். (பிரசுரதாரரின் குறிப்பு)

2 பார்க்க பக்கம் 182.

3 யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா-வால் வெளியிடப்பட்டது. பரமஹம்ஸ யோகானந்தர் பாடிய, காஸ்மிக் சான்ட்ஸ் பிரபஞ்ச கீதங்களில் பல பாடல்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவை யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா-வில் கிடைக்கும். (பிரசுரதாரரின் குறிப்பு)

4 குருநானக்கின் பாடலிலுள்ள சொற்கள் பின்வருமாறு:

ஏ அழகிறைவா, ஏ அழகிறைவா!

காட்டினிலே நீ பசுமை,

மலையினிலே நீ உயர்வு,

ஆற்றினிலே நீ சல சலப்பு,

கடலினிலே நீ மிக ஆழம்.

சேவகர்க்கு நீ சேவை,

அன்பர்க்கு நீ அன்பு,

வருந்துபவர்க்கு நீ ஆறுதல்,

யோகியர்க்கு நீ ஆனந்தம்.

ஏ அழகிறைவா, ஏ அழகிறைவா

உந்தன் அடிகளில், நான் வணங்குகிறேன்.

5 தற்சமயம் நன்கு முன்னேறிவரும் ஆசிரம மையமாகும். அதன் கட்டிடங்களில், தொடக்கத்திலிருந்த சன்னியாசிகளுக்கான ஆசிரமங்கள், உண்ணும் வசதிகள், அங்கத்தினர்களுக்கும், நண்பர்களுக்கும் வசீகரம் வாய்ந்த ஏகாந்தமாக இருப்பதற்கான இடங்கள் ஆகியன அடங்கியுள்ளன. நெடுஞ்சாலைப் பக்கமிருக்கும் விசாலமான மைதானத்தை நோக்கியபடி வரிசையாக நிற்கும் வெண்மையான தூண்களின் மேல் உலோகத்தினாலான பொன்னிற இதழ்களைக் கொண்ட தாமரை போன்ற மகுடம் அமைக்கப்பட்டுள்ளது. இந்தியக் கலையில் தாமரைப் பூவானது, மூளையிலுள்ள பிரபஞ்ச உணர்வு மையமான (ஸஹஸ்ராரம்) ஆயிரம் இதழ்களுடைய ஒளித்தாமரையைக் குறிக்கும் அடையாளமாகும்.

6 அப்போஸ்தலருடைய நடபடிகள் 17:26 (பைபிள்).

## அத்தியாயம் 49

# 1940-1951 ஆண்டுகள்

"நாங்கள் தியானத்தின் மதிப்பை உண்மையாகவே கற்றுக் கொண்டோம். மேலும் எங்கள் உள்ளார்ந்த அமைதியை எதுவும் குலைக்க முடியாது என்பதும் எங்களுக்குத் தெரியும். சென்ற சில வாரங்களில் நடந்த எங்கள் கூட்டங்களின் போது நாங்கள் ஆகாயத் தாக்குதல் எச்சரிக்கைகளையும் தாமதித்து வெடித்த வெடி குண்டுகளின் பலத்த சத்தத்தையும் கேட்டோம். ஆனாலும் எங்கள் மாணவர்கள் இன்னும் கூடுகிறார்கள். அருமையான சத்சங்க நிகழ்ச்சிகளை நாங்கள் முற்றிலும் அனுபவிக்கிறோம்."

இந்தத் தைரியமான செய்தி, லண்டன் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் மையத்தின் தலைவரால் எழுதிய கடிதத்தில் காணப்பட்டது. அமெரிக்கா இரண்டாவது உலகப் போரில் ஈடுபடுவதற்கு முன்னால், போரால் பாழ்படுத்தப்பட்ட இங்கிலாந்திலிருந்தும் ஐரோப்பாவிலிருந்தும் எனக்கு வந்த எத்தனையோ கடிதங்களில் இதுவும் ஒன்றாகும்.

"லண்டனில் 'தி விஸ்டம் ஆஃப் ஈஸ்ட் ரீஸ்,' என்ற பத்திரிகையின் பிரபல ஆசிரியரான டாக்டர் எல். கிரான்மர்பிங் 1942ல் பின்வருமாறு எனக்கு எழுதினார்:

நான் ஈஸ்ட் – வெஸ்ட்[1] படித்த பொழுது நாம் வெகு தூரம் பிரிந்து இருப்பதைப் போல் தோன்றுவதை, இரு

வெவ்வேறு உலகங்களில் வசிப்பது போல் தோன்றுவதை உணர்ந்தேன். முற்றுகையிடப்பட்டிருந்த ஒரு நகரத்தின் துறைமுகத்திற்கு தெய்வீக அமுத சுரபியின் ஆசிகளுடனும் ஆறுதலுடனும் ஒரு கப்பல் வந்தது போன்று அழகு, நியதி, அமைதி, சமாதானம் எல்லாம் லாஸ் ஏஞ்ஜலீஸிலிருந்து வருவதைக் கண்டேன்.

"ஒரு கனவில் காண்பது போல் உங்கள் பனந்தோப்பையும், மலைக் காட்சிகள், நீண்டு கிடக்கும் கடற்கரை ஆகியவற்றைக் கொண்ட என்ஸினிடஸ் ஆலயத்தையும் எல்லாவற்றையும் விட ஆத்மார்த்தத்தில் ஈடுபட்ட ஆண்களும் பெண்களும் கொண்ட ஒரு சமூகம், ஒற்றுமையுடன் ஒரு குழுவாக ஆக்கப் பணியில் முழுமையாக ஈடுபடுவதுடன் தியானத்திலும் ஆழ்ந்து செயல்படுவதைக் காண்கிறேன்.... காவல் கோபுரத்தின் மீது விடியலுக்காகக் காத்திருக்கும் ஒரு சாதாரண படைவீரன், எல்லாத் தோழர்களுக்கும் எழுதிய வாழ்த்துக்கள்."

கலிஃபோர்னியா, ஹாலிவுட்டில் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் தொண்டர்களால் சர்வ மத ஆலயம் (Church of All Religions) ஒன்று கட்டப்பட்டு 1942ல் அர்ப்பணம் செய்யப்பட்டது. ஓர் ஆண்டிற்குப் பிறகு மற்றொரு ஆலயம், கலிஃபோர்னியா, ஸான் டியோகோவில் நிறுவப்பட்டது; 1947ல் கலிஃபோர்னியா, லாங் பீச் என்ற இடத்தில் மற்றொன்று கட்டப்பட்டது.

1949-ல் உலகத்திலேயே மிக அழகிய பண்ணைகளில் ஒன்றான மலர்களின் அற்புத உலகம், லாஸ் ஏஞ்ஜலீஸின் பஸிஃபிக் பாலிஸேட்ஸ் பகுதியில் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்பிற்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அப்பண்ணை பத்து ஏக்கர் நிலப்பரப்பில் நாலா பக்கமும் பசுமையான குன்றுகளால் சூழப்பட்ட ஓர் இயற்கையான அரங்கம் ஆகும். மலை மகுடத்தில் பதித்த நீலக்கல்லைப் போன்று இயற்கையாகவே அமைந்த ஒரு பெரிய ஏரி, அந்தப் பண்ணைக்கு ஏரிக் கோயில் (Lake Shrine) என்ற பெயரை அளித்திருக்கிறது. அம்மைதானத்தில் ஒரு பழமையான டச்சுக் காற்று விசையாலை இல்ல (Windmill) த்தினுள் ஓர் அமைதியான கோயில் இருக்கிறது. கீழ்த்தளத்தில் அமைக்கப் பட்டிருந்த தோட்டத்தின் அருகில் ஒரு நீருருளை நிதான கதியில் இயங்கியவாறிருக்கிறது. சீனாவின் இரு சலவைக்கல் சிலைகள் ஒன்று பகவான் புத்தரின் சிலை, இன்னொன்று க்வான் யின் (பராசக்தியின் சீன உருவகம்) அவ்விடத்தை அலங்கரிக்கின்றன. ஒரு நீழ்வீழ்ச்சியின் மேலுள்ள குன்றின் மீது கிறிஸ்துவின் முழு உருவச் சிலையொன்று சாந்தமான முகத்துடனும் தளர்ந்து தொங்கும் அங்கிகளுடனும் இரவு நேரங்களில் சிறப்பாகப் பிரகாசிக்கும்படி அமைக்கப் பட்டிருக்கிறது.

1950ல், அமெரிக்காவில் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் தோன்றிய முப்பதாவது[2] ஆண்டு நிறைவு பெற்ற தருணத்தில் மகாத்மா காந்தி உலக சமாதான

நினைவுச் சின்னம் (Mahatma Gandhi World Peace Memorial) ஒன்று ஏரிக் கரையில் அர்ப்பணிக்கப்பட்டது. இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்ட மகாத்மாவின் அஸ்தியில் ஒரு பாகம், ஆயிரம்வருட புராதன கல்லறையில் வைத்து கோயில் கட்டப்பட்டது.

1951ல் ஹாலிவுட்டில் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப்பின் இந்திய மையம் (India Centre ) ஒன்று ஸ்தாபிக்கப்பட்டது. கலிஃபோர்னியாவின் லெஃப்டினென்ட் கவர்னர் திரு. குட்வின் ஜே. நைட் என்பவரும் இந்தியத் தூதரகத் தலைவரான (Consul General of India) திரு. எம். ஆர். அஹுஜாவும் என்னுடன் அர்ப்பணிக்கும் சடங்கில் கலந்து கொண்டனர். இவ்விடத்தில் 250 பேர்கள் அமரக்கூடிய இந்திய ஹால் என்னும் கலையரங்கம் ஒன்று உள்ளது.



பரமஹம்ஸ யோகானந்தர் 1950, ஆகஸ்ட் 20 ம் தேதி கலிலிஃபோர்னியா, பசிஃபிக் பாலிலிஸேஸ்ட்ஸ், ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் ஏரிக்கோயில் அர்ப்பணிக்கப்பட்ட சமயத்தில் எடுக்கப்பட்ட புகைப்படம்.

பல்வேறு மையங்களுக்குப் புதிதாக வருபவர்கள் அடிக்கடி, யோகம் என்பதற்கு மேலும் விளக்கம் வேண்டுமென்று விரும்புகிறார்கள். சில சமயங்களில் நான் கேள்விப்படும் வினா இதுதான்: "யோக முறை,

அச்சடித்த தாள்களின் மூலம் படித்துப் பலனறிய முடியாதது. ஆனால் ஒரு குருவின் அருகிலிருந்து அவரது வழிகாட்டுதலின் மூலமே அதனை அறிய முடியும் என்னும் சில ஸ்தாபனங்களின் கூற்று உண்மையானதா?"

இந்த அணுயுகத்தில் யோக முறை, யோகதா சத்சங்கப் பாடங்கள்[3] போன்ற போதனா முறை ஒன்றினால் கற்பிக்கப்பட வேண்டும். இல்லாவிட்டால் விடுதலை அளிக்கக்கூடிய அந்த விஞ்ஞானம் மறுபடியும் தேர்ந்தேடுக்கப்பட்ட ஒரு சிலருடன் கட்டுப் படுத்தப்பட்டுவிடும். உண்மையில் ஒவ்வொரு மாணவனும் தெய்வீக ஞானத்தில் ஊறிய ஒரு குருவைத் தன் பக்கத்தில் வைத்துக் கொள்ள முடியுமானால் அது விலை மதிக்க முடியாத வரம்தான். ஆனால் உலகம் "பாவிகளை" அதிகமாகவும் மகான்களைக் குறைவாகவும் கொண்டுள்ளது. உண்மையான யோகிகளால் எழுதப்பட்ட போதனைகள் மூலம் யோக முறைகளைத் தத்தம் வீடுகளிலிருந்தே கற்றுப் பயனடையாவிட்டால் வேறு எவ்வாறு ஏராளமான மக்கள் உதவி பெறுவார்கள்?

இதற்கு ஒரே ஒரு மாற்றுவழிதான் உண்டு. அதாவது சராசரி மனிதனைப் புறக்கணித்து விட்டு அவன் யோக அறிவை அறியாமல் இருக்கச் செய்து விடுவது. இந்தப் புது யுகத்தில் இறைவனின் திட்டம் அதுவல்ல. பாபாஜி எல்லா உண்மையான கிரியா யோகிகளுக்கும் அவர்களுடைய குறிக்கோளை அடையும் பாதையில்

பாதுகாத்து வழிகாட்டுவதாக வாக்களித்துள்ளார்.[4] எல்லோரும் இறைவனின் குழந்தைகள் என்ற தகுதியைத் திரும்பவும் ஸ்தாபிப்பதற்கு வேண்டிய சரியான முயற்சியை மேற்கொண்டு விட்டால், மனிதர்களுக்கு அமைதியும் நிறைவும் கொண்ட உலகம் காத்துக் கிடக்கிறது. ஆனால் அவ்வாறான உலகை வெளிப் படுத்துவதற்கு டஜன் கணக்கில் அல்ல, லட்சக்கணக்கில் கிரியா யோகிகள் தேவைப்படுகின்றனர்.

மேல்நாட்டில் ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் என்ற நிறுவனத்தை "ஆத்மத் தேனுக்கு ஒரு கூடு," நிறுவுவது என்பது ஸ்ரீ யுக்தேஸ்வராலும் மகாவதார பாபாஜியினாலும் எனக்கு இடப்பட்ட ஒரு கடமையாகும். அந்தப் புனிதமான பொறுப்பை நிறைவேற்றுவதில் சங்கடங்கள் இல்லாமலில்லை.

"பரமஹம்ஸஜி, உண்மையாகக் கூறுங்கள், இதில் ஏதாவது பலன் உண்டா?" இந்தச் சுருக்கமான கேள்வியை ஒரு நாள் மாலை ஸான் டியாகோ ஆலயத்தின் தலைவரான திரு. லாயிட் கென்னல் என்னிடம் கேட்டார். நான் அவர் கூறியதைப் பின்வருமாறு புரிந்து கொண்டேன். "நீங்கள் அமெரிக்காவில் சந்தோஷமாக இருக்கிறீர்களா? யோகத்தைப் பற்றித் தவறாகப் புரிந்து கொண்டவர்கள் அது பரவுவதைத் தடுக்க வேண்டுமென்ற ஆர்வமுடன் பொய் வதந்திகளைப் பரப்புகிறார்களே, அதற்கு என்ன செய்வது? நிறைவேறாத எண்ணங்கள், மனக்கிலேசங்கள், மையங்களை முன்னின்று நடத்திச் செல்ல முடியாத

தலைவர்கள், கற்பிக்க முடியாத மாணவர்கள் இவர்களை என்ன செய்வது?"

"இறைவன் யாரைச் சோதிக்கிறானோ அவன் அருள் பெற்றவன்!" என்று நான் பதிலளித்தேன். "எப்பொழுதாவது என் மீது சில பாரங்களைச் சுமத்துவதற்கு அவனுக்கு நினைவு வருகிறது." ஆனால் விசுவாசமுள்ள எல்லோரைப் பற்றியும், அமெரிக்காவின் இதயத்தை ஒளியூட்டும் அன்பு, பக்தி, புரிந்து கொள்ளும் தன்மை ஆகியவற்றைப் பற்றியும் நினைத்துப் பார்த்தேன். நான் நிதானமான அழுத்தத்துடன் தொடர்ந்தேன்: "ஆனால் என் விடை ஆம், ஆயிரம் தடவை ஆம் என்பது தான். நான் கனவில் கூட நினைத்தறியாத அளவிற்குப் பலன் கிடைத்திருக்கிறது. கிழக்கும் மேற்கும் ஒரே நிரந்தரமான ஆன்மீகப் பிணைப்பால் நெருங்கி வந்திருக்கின்றன என்பதைக் காண முடிகிறது."

மேலை நாடுகளின் மீது அதிக ஆர்வத்தைக் காட்டும் மகத்தான இந்திய மகான்கள் நவீன நிலைமைகளை நன்கு புரிந்து கொண்டு இருக்கிறார்கள். கீழை மற்றும் மேலை நாடுகளின் குறிப்பிடத்தக்க குணநலன்களை எல்லா நாடுகளும் நன்றாகத் தன்வயப்படுத்திக் கொண்டாலொழிய உலக நடவடிக்கைகள் முன்னேற்றமடையாது என்பது அவர்களுக்குத் தெரியும். உலகத்தின் ஒரு பாதிக்கு மறுபாதியின் மிகச் சிறந்த குணநலன்கள் தேவையாக உள்ளன.

உலகப் பயணத்தின் போது நான் மக்களின்

மிகுதியான துன்பத்தை வருத்தத்துடன் கவனித்தேன்:[5] கீழை நாடுகளில் துன்பம், முக்கியமாக லௌகீகமானதுதான். மேலை நாடுகளில் துக்கம், முக்கியமாக மனத்தளவிலோ அல்லது ஆன்மீக அளவிலோ காணப்பட்டது. எல்லா நாடுகளுமே, சமநிலையற்ற பண்பாட்டினால் ஏற்பட்ட தொல்லைகளின் விளைவுகளால் அவதியுறுகின்றன. இந்தியாவும் மற்ற கீழை நாடுகளும் அமெரிக்கா போன்ற மேலை நாடுகளின் லோகாயதத் திறனையும் அனுபவ பூர்வமாக விஷயங்களை அறிவதையும் பின்பற்றுவதன் மூலம் மிகவும் நன்மையடைய முடியும். அதே சமயம் மேலை நாடுகள் வாழ்க்கையின் ஆன்மீக அடிப்படையை ஆழமாக அறிந்து கொள்ள வேண்டும். முக்கியமாக மனிதன் தன் உணர்வோடு இறைவனுடன் ஒன்றுவதற்காக, இந்தியா புராதனமாக வளர்த்துள்ள விஞ்ஞான பூர்வமான முறைகளை அறிய வேண்டும்.



ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப் ஏரிக் கோயில் மற்றும் காந்தி உலக சமாதான நினைவுச்சின்னம்

கலிஃபோர்னியா, லாஸ் ஏஞ்ஜலீஸ், பசிஃபிக் பாலிஸேட்ஸ்-ல் அமைந்துள்ள பத்து ஏக்கர் ஏரிக் கோயில் 1950, ஆகஸ்ட் 20-அன்று பரமஹம்ஸ யோகானந்தரால் அர்ப்பணிக்கப்பட்டது. 1949-ல் மரம் வளர்த்தல் மற்றும் கட்டுமானப் பணிகளை மேற்பார்வையிடும் பொழுது பரமஹம்ஸர், முதல் புகைப்படத்தில் காட்டப்பட்டுள்ள படகு வீட்டில் சில சமயங்கள் தங்கினார். இரண்டாவது புகைப்படத்தில் நடுத் தூண்களுக்கு இடையே காணப்படுவது மகாத்மா காந்தியின் அஸ்தியின் ஒரு பகுதியை தன்னுள் புனிதமாகக் கொண்டுள்ள சிற்ப வேலைப்பாடுடைய கலசம். முதல் புகைப்படத்தில் ஏரியின் மறு கரையில் காற்றாலைக் கோயில் காணப்படுகிறது. பொதுமக்களும் அனுமதிக்கப்படுகின்ற ஸெல்ஃப்-ரியலைலேசஷன் ஃபெலோஷிப் வாராந்திர வழிபாடுகள், தியானங்கள், மற்றும் வகுப்புகள் ஏரிக் கோயிலில் நடைபெறுகின்றன.

முழுமையான நாகரிகம் என்ற லட்சியம் ஒரு கற்பனை அல்ல. பல யுகங்களாக இந்தியா ஆன்மீக ஒளி பெற்று இருந்ததுடன் மட்டுமல்லாமல் பொருள் வளத்திலும் பரவலாக நிறைவு பெற்றிருந்தது. சென்ற 200 ஆண்டுகளாக இருந்து வரும் ஏழ்மை, பாரதத்தின் நீண்ட வரலாற்றில் கடந்து போகக்கூடிய தற்காலிகமான ஒரு கர்மவினையேயாகும். உலகத்தில் ஒவ்வொரு

நூற்றாண்டிலும் சாதாரணமாகக் கூறப்பட்டு வந்த ஒரு பொது வழக்குச் சொல் "இந்தியாவின் வளங்கள்"[6] என்பதாகும். பெரும் வளம், அதாவது ஆன்மீகம் மற்றும் பொருள் வளம் ஆகிய இரண்டும் பிரபஞ்சத்தின் சட்டம் அல்லது இயற்கை நியதி எனப்படும் ரீதாவின் வெளிப்பாடாகும். தெய்வத்தினிடத்திலோ அல்லது அதன் சக்தி ரூபமான அபரிதமான இயற்கையிலோ பஞ்சம் என்பதில்லை.

எண்ணற்ற விதங்களில் ஆன்மீகத்தை வெளிப்படுத்தி லௌகீக விஷயங்கள் மீது ஆதிக்கம் செலுத்தப்படலாம் என்பதை முழுமையாகக் கற்றுணர்வதற்காக மனிதன் அடுத்தடுத்த பிறவிகளில் இக்குறிப்பிட்ட மண்ணுலகத்திற்கு ஈர்க்கப்படுகிறான் என்று இந்து மத நூல்கள் போதிக்கின்றன. கிழக்கும் மேற்கும் இந்த மகத்தான உண்மையை வெவ்வேறு விதங்களில் கற்றுக் கொள்கின்றன. மேலும் தாங்கள் கண்டு பிடித்ததை ஒருவருக்கொருவர் பகிர்ந்துக் கொள்ள வேண்டும். ஏழ்மை, வியாதி, ஆன்ம அஞ்ஞானம் போன்றவற்றிலிருந்து விடுதலை பெற்ற ஓர் உலக நாகரிகத்தை எய்த வேண்டி அவனுடைய மண்ணுலக மக்கள் சிரமத்துடன் முயல்வது இறைவனுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடியது என்பதில் எந்த ஐயமும் இல்லை. தன் இறை ஆதாரத்தை மனிதன் மறந்து விடுவதுதான் (தனக்குள்ள சுதந்திரமாகத் தீர்மானம் செய்யும் உரிமையைத் தவறாகப் பயன்படுத்துவதன் விளைவு)[7] எல்லாவிதமான

தொல்லைகளுக்கும் மூல காரணம்.



திரு. குட்வின் ஜே.நைட், லெஃப்டினன்ட் கவர்னர், கலிஃபோர்னியா (நடுவில்), யோகானந்தர் மற்றும் திரு. ஏ.பி. ரோஸ் அவர்களுடன், கீழே காண்பிக்கப்பட்டுள்ள கலிஃபோர்னியா, ஹாலிவுட், நதஊ ஆலயத்திற்கு அருகில் உள்ள ஸெல்ஃப்ரியலை சேஷன் ஃபெலோஷிப் இந்திய மையம், 1951, ஏப்ரல் 8ல் அர்ப்பணிக்கப்பட்ட சமயம்.

மனிதப்பண்பு நிறைந்த உருவமற்ற தன்மையான சமூகம் என்பதன் மீது சுமத்தப்படும் கேடுகளுக்கு உண்மையிலேயே ஒவ்வொரு மனிதனும் பொறுப்பாக்கப்பட வேண்டும்.[8] உடோபியா என்னும் லட்சிய கற்பனை சமுதாயம், ஒரு சமூக குணநலனாக மலர்வதற்கு முன்னால் தனி மனிதனின் இதயத்தில் மலர வேண்டும். உள்ளார்ந்த சீர்திருத்தங்கள் இயல்பாகவே வெளிப்படையான சீர்திருத்தங்களுக்கு

வழிநடத்திச் செல்லும். தன்னைத் தானே திருத்திக் கொண்ட ஒருவன் ஆயிரக்கணக்கானவர்களைத் திருந்தச் செய்வான்.

காலத்தின் சோதனையைத் தாங்கிய உலக சமய நூல்களின் சாரம் மனிதனை மேல் நோக்கியப் பயணத்தில் ஊக்குவிப்பது ஒன்றேயாகும். என் வாழ்வின் மிக மகிழ்ச்சியான காலங்களில் ஒன்று, ஸெல்ஃப்ரியலைசேஷன் (ஆத்ம ஞானம்) சஞ்சிகைக்காக, புதிய ஏற்பாட்டின் ஒரு பாகத்தை விளக்கிக் கூறியவாறு கழித்த காலமாகும். இருபது நூற்றாண்டுகளாக, கிறிஸ்துவின் பல சொற்கள் வருந்தத்தக்க முறையில் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டு வந்துள்ளன; அவருடைய சொற்களின் உண்மையான பொருளை உணர எனக்கு வழிகாட்டும்படி கிறிஸ்துவை வெகு தீவிரமாக வேண்டினேன்.

ஓர் இரவு நான் மௌனமான பிரார்த்தனையில் ஈடுபட்டிருந்த பொழுது என்ஸினிடஸ் ஆசிரமத்தில் என் அமரும் அறை பல்வண்ணநீல ஒளியால் நிரம்பியது. நான் புனித தெய்வமான இயேசுவின் பிரகாசமான உருவத்தைக் கண்டேன். அவர் கிட்டத்தட்ட இருபத்தைந்து வயது இளைஞனாக, அடர்த்தியற்ற தாடி, மீசையுடன் இருந்தார். அவரது நீண்ட கருமையான தலைமுடி நடுவில் பிரிக்கப்பட்டு தங்கமயமான ஒளிவட்டத்துடன் விளங்கியது.

அவரது கண்கள் நிரந்தரமான விந்தையாக இருந்தன; நான் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே அவை

முடிவில்லாமல் மாறிக் கொண்டிருந்தன. இக்கண்கள் வெளிப்படுத்திய ஒவ்வொரு தெய்வீக மாறுதலிலும் உணர்த்தப்பட்ட மெய்யறிவை நான் மானசீகமாகப் புரிந்து கொண்டேன். அவருடைய ஒளிமயமான பார்வையில் எண்ணற்ற உலகங்களைத் தாங்கிக் கொண்டிருக்கும் சக்தியை உணர்ந்தேன். அவருடைய வாயருகில் புனிதக் கிண்ணம் (ஏர்ப்ஹ் எழ்ஹண்ப்) ஒன்று தோன்றியது; அது என் உதட்டருகில் வந்து திரும்பவும் இயேசுவிடமே சென்றது. சில வினாடிகளுக்குப் பிறகு அவர் சில அழகான சொற்களை உதிர்த்தார். அச்சொற்களின் தன்மை மிகவும் தனிப்பட்ட முறையில் இருந்ததால் அவற்றை என் இதயத்தில் பதித்துக் கொண்டேன்.

1950லும் 1951லும், கலி ஃபோர்னியாவில் மொஹாவி பாலைவனத்தருகில் உள்ள ஓர் அமைதியான ஒதுக்கிடத்தில் நான் அதிக நேரத்தைக் கழித்தேன். அங்கு நான் பகவத் கீதையை மொழி பெயர்த்ததுடன், யோகத்தின் பலவித மார்க்கங்களைக் கூறும் ஒரு விரிவான விளக்கவுரை[9] எழுதினேன்.

யோகமுறை ஒன்றைப் பற்றி தெளிவாக இரண்டு இடங்களில் [10]குறிப்பிடுவதன் மூலம் (பகவத் கீதையில் கூறப்பட்டிருக்கும் ஒரே ஒரு யோக முறையானது, பாபாஜி எளிமையாக கிரியா யோகம் என்றழைக்கும் அதே முறைதான்) இந்தியாவின் மிகச் சிறந்த சமய நூலான கீதை, நடைமுறை மற்றும் நீதிநெறி போதனை அளித்துள்ளது. நமது கனவுலக மகா சமுத்திரத்தில், மனிதர்கள் மற்றும் எல்லா ஸ்தூல பொருள்களின்

உருவங்கள்ளன்னும் தனித்தனியான அலைகளின் உணர்வை ஏற்படுத்தும் சுவாசமானது, மாயையின் திட்டவட்டமான புயல் ஆகும். வெறும் தத்துவ ஞானமும் நீதி சாஸ்திரத்தின் அறிவும் மனிதனை அவனுடைய தனித்து இருப்பதான உணர்வெனும் துன்பமான கனவிலிருந்து எழுப்புவதற்கு போதுமானதாகாது என்று தான் பகவான் கிருஷ்ணன், இந்தப் புனித விஞ்ஞானத்தின் மூலம் யோகியானவன் தன் உடலை வசப்படுத்திக் கொள்வதுடன் அதனை அவன் விருப்பப்படி தூய சக்தியாக மாற்றவும் முடியும் என்பதைச் சுட்டிக் காட்டினார். அணுயுகத்தின் முன்னோடி களான நவீன விஞ்ஞானிகளுடைய சித்தாந்தங்களின் மூலமாக இந்த யோக சாகஸம் நிரூபிக்கப்பட முடியாததொன்றல்ல. எல்லா பொருட்களையும் சக்தியாகக் குறைக்க முடியும் என்பது நிரூபிக்கப்பட்டுவிட்டது.

பொதுவாக மனித இனத்தால் யோக விஞ்ஞானத்தை உபயோகத்தில் கொண்டுவர முடியும் என்பதால் இந்து சமய நூல்கள் அதைப் பற்றிப் புகழ்ச்சியாகப் பேசுகின்றன. முறையான யோகப் பயிற்சிகளைப் பயன்படுத்தாமல், இந்து அல்லாத ஞானிகளினால் எப்பொழுதாவது சுவாசத்தின் மர்மம் விடுவிக்கப்பட்டிருப்பது உண்மைதான்; அவர்கள் இறைவனிடத்தில் வைத்த பக்தியின் எல்லை மீறிய சக்திகளைப் பெற்றிருந்தனர். உண்மையில் அம்மாதிரியான கிறிஸ்துவர்கள், முஸ்லிம்கள், மற்ற

ஞானிகள் மூச்சும் சலனமுமற்ற நிலையில் (சவிகல்ப சமாதி)[11] காணப்பட்டு இருக்கிறார்கள். அந்நிலையை அடையாமல் எந்த மனிதனும் கடவுளை அறிவதின் முதல் படியை எட்ட முடியாது. (ஆயினும் ஒரு மகான் நிர்விகல்ப அல்லது மிக உயர்ந்த சமாதி நிலையை எட்டிவிட்டால் அவர் இறைவனிடத்தில் நிரந்தரமாக நிலைநாட்டப்பட்டு விடுகிறார்அவர் சுவாசத்தை நிறுத்தி இருந்தாலும் சரி, இல்லா விட்டாலும் சரி, சலனமற்று இருந்தாலும் சரி, செயல்புரிந்தாலும் சரி.)

17வது நூற்றாண்டு கிறிஸ்துவ ஞானி, சகோதரர் லாரென்ஸ் என்பவர், அவருக்கு முதன் முதலாக கடவுளின் சாட்சாத்காரம் கிடைத்தது, ஒரு மரத்தை நோக்கிய பொழுது என்று நமக்குக் கூறுகிறார். அனேகமாக எல்லா மனிதர்களுமே மரத்தைப் பார்த்திருக்கிறார்கள்; ஆனால் ஐயகோ! யாருமே மரத்தைப் படைத்தவனைக் காணவில்லை. கிழக்கோ அல்லது மேற்கோ, எல்லா சமய வழிகளிலும் சில ஏகாந்திகள், ஒரே மனதுடைய மகான்கள் மட்டும் பக்தியால் உண்டாகும் தடுக்க முடியாத சக்தியை எவ்வித முயற்சியும் இல்லாமல் அடைந்திருக்கிறார்கள். பெரும்பான்மையான மனிதர்களால் இச்சக்தியை அடைவதென்பது இயலாத காரியம்தான். இருந்தபோதிலும் சாதாரண மனிதன்[12] அதனால் மட்டுமே கடவுளுடன் தொடர்பு கொள்வதற்கான சாத்தியக் கூற்றிலிருந்து தடுக்கப்பட்டிருக்கிறான் என்று சொல்வதற்கில்லை. தன் ஆத்மாவை நினைவுபடுத்திக்

கொள்ள அவனுக்குத் தேவைப்படுவதுகிரியா யோகமுறை, நீதிக் கருத்துக்களைத் தினசரி அனுசரித்தல், இறைவா, நான் உன்னை அறிய ஏங்குகிறேன் என்று உண்மையாகக் கதறும் திறன்இவைகளைத் தவிர வேறு எதுவும் வேண்டியதில்லை.

தீவிர பக்தி உணர்வினால் கடவுளை அடைவதென்பது சாதாரண மனிதனுடைய உணர்ச்சி எல்லைக்கு அப்பாற்பட்டதாகும். எனவே தினசரி உபயோகப்படுத்தக் கூடிய விஞ்ஞான பூர்வமான யோக முறையின் மூலம் கடவுளை அடைவது உலக முழுவதற்கும் உகந்ததாகிறது.

அனேக தலைசிறந்த இந்திய ஜைன போதகர்கள், தீர்த்தங்காரர்கள்கரை கட்டுபவர்கள் என்றழைக்கப்படுகிறார்கள். ஏனெனில் அவர்கள் தடுமாறும் மனித இனத்திற்கு, புயல் வீசும் சம்சாரக் கடலை (கர்மவினைச் சுழலான திரும்பத் திரும்ப நிகழும் பிறப்புகளும் இறப்புகளும்) கடக்கும் வழியைக் காண்பிக்கிறார்கள். சம்சாரம் (பொருளின்படி, பாய்ந்து கொண்டிருப்பது, மாறிக் கொண்டே இருக்கும் காட்சி) மனிதனை மிகக் குறைந்த சிரமமுள்ள பாதையையே ஏற்கச் செய்கிறது. ஆகையால் உலகத்துக்குச் சிநேகிதனாயிருக்க விரும்புகிறவன் தேவனுக்குப் பகைவனாகிறான். [13]கடவுளின் நண்பனாக ஆவதற்கு மனிதன், அவனை, உலகமாயையின் மயக்கத்திற்கு எப்பொழுதும் எதிர்ப்பின்றி இணங்கத்தூண்டும் அவனது

சொந்த கர்மா அல்லது செயல்கள் ஆகிய பிசாசுகளை அல்லது தீயவைகளை வெற்றி கொள்ள வேண்டும். கர்ம வினையின் இரும்புச் சட்டத்தைப் பற்றிய அறிவு, ஆர்வமுடன் தேடுபவனை, அதனுடைய தளைகளிலிருந்து முடிவாக விடுபவதற்கான வழியைக் காண ஊக்குவிக்கிறது. மனிதர்கள் கர்ம வினைக்கு அடிமையாவதற்கு மாயைஇருள் சூழ்ந்த இருண்ட மனத்தின் ஆசைகள்தான் மூலகாரணம். ஆதலால் யோகியானவன் மனத்தைக் கட்டுப்படுத்துவதில் தான் ஈடுபடுகிறான்.[14] கர்ம அஞ்ஞானத்தின் பல திரைகள் நீக்கப்பட்டு மனிதன் தன்னை உள்ளபடி காண்கிறான்.

வாழ்வு, சாவு இவைகளின் மர்மத்திற்குத் தீர்வு காண்பதுதான் மனிதனின் மண்ணுலக வாழ்வின் ஒரே குறிக்கோளாகும். இந்த மர்மம் சுவாசத்துடன் நெருக்கமான தொடர்பு கொண்டுள்ளது. மூச்சற்றிருப்பது மரணமற்றிருப்பதாகும். இந்தியாவின் புராதன கால ரிஷிகள் இந்த உண்மையைப் புரிந்து கொண்டு சுவாசம்தான் ஒரே விடை என்பதை அறிந்து, சரியானதும் விவேகமானதுமான ஒரு மூச்சற்ற நிலையின் கலையைக் கண்டறிந்தனர்.

இந்தியா உலகத்திற்கு வேறு எந்தப் பரிசும் கொடுக்கா விட்டாலும் கிரியா யோகம் ஒன்றே போதுமான, ராஜாங்க வெகுமதியாகும்.

உடலுக்கும் ஆத்மாவிற்கும் சூட்சுமமான தொடர்பாக உதவ வேண்டும் என்பதற்காக இறைவன் சுவாசத்தைப் படைத்தானென்று ஹீப்ரு தீர்க்கதரிசிகள் நன்கு அறிந்து

இருந்தார்கள் என்பதை பைபிளில் அடங்கியுள்ள சில பாகங்கள் தெளிவுபடுத்துகின்றன. ஆதியாகமம் கூறுகிறது தேவனாகிய கர்த்தர் மனுஷனைப் பூமியின் மண்ணினாலே உருவாக்கி, ஜீவசுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார், மனுஷன் ஜீவாத்துமாவானான்.[15] மனித உடல் ரசாயன மற்றும் உலோகப் பொருட்களினால் உண்டாக்கப்பட்டிருக்கிறது. அதே பொருட்கள் பூமியின் மண்ணிலும் உள்ளன. தெளிவு பெறாத மனிதர்களில், ஆத்மாவினால் உயிரோட்ட சக்தியானது, சுவாசம் (சக்தியின் வாயுநிலை) என்ற கருவியின் மூலமாக உடலுக்கு மாற்றப்படா விட்டால், மனிதனின் வெறும் தசைப்பிண்டம் எந்த வேலையையும் செய்வதோ, சக்தி மற்றும் அசைவை வெளிப்படுத்துவதோ என்றுமே முடியாத காரியம். மனித உடலில் ஐந்து வித பிராணனாக அல்லது சூட்சுமமான உயிர் சக்தியாக செயல்படும் உயிரோட்டங்கள், எங்கும் நிறை ஆன்மாவினுடைய ஓம் அதிர்வலையின் வெளிப்பாடேயாகும்.

ஆன்ம மூலத்திலிருந்து மாமிச உயிரணுக்களில் ஒளிரும் மெய்ம்மையான தோற்றம் போன்ற உயிரின் பிரதிபலிப்பு தான் மனிதனுக்குத் தன் உடலின் மீதுள்ள பற்றின் ஒரே காரணம்; அவன் ஒரு களிமண் உருண்டைக்கு அக்கறையான மரியாதை செலுத்த மாட்டான் என்பது வெளிப்படை. ஒரு மனிதன் பொய்யாகத் தன் உடலை, தான் என்று காண்கிறான். ஏனெனில் ஆன்மாவிலிருந்து சுவாசத்தின் மூலமாக

உயிரோட்டங்கள் தசைகளில் மிக்க தீவிர சக்தியுடன் செலுத்தப்படுவதால் மனிதன் காரியத்தைக் காரணமாக தவறாகப் புரிந்து கொண்டு உருவத்தைப் பேணும் விதத்தில், தன் உடலுக்கு அதற்கென உயிரொன்று இருப்பதாக எண்ணுகிறான்.

உடலையும் சுவாசத்தையும் உணர்ந்திருப்பது, மனிதனின் விழிப்பு நிலையாகும். அவனது அடிமன உணர்வு நிலையானது, நித்திரையில் செயல்திறத்துடன் மனத்தோடு தொடர்பு கொண்டு, உடல் மற்றும் சுவாசத்தினின்றும் தற்காலிகமாகப் பிரிந்திருக்கிறது. தன் இருப்பு உடலையும் சுவாசத்தையும் சார்ந்திருக்கிறது என்ற மாயையிலிருந்து விடுபடுவது அவனது உயர் உணர்வு நிலையாகும்.[16] இறைவன் மூச்சின்றிதான் வாழ்கிறான்; அவனுடைய பிரதி பிம்பமாகிய ஆன்மா, மூச்சற்ற நிலையில் தான் முதன்முதலாகத் தன்னை உணர்கிறது.

ஆன்மாவிற்கும் உடலிற்கும் உள்ள சுவாசத் தொடர்பு பரிணாமக் கர்மவினையினால் துண்டிக்கப்படும்பொழுது மரணம் என்னும் திடீர் மாற்றம் நிகழ்கிறது. சரீரத்தின் செல்கள் தங்கள் இயற்கையான சக்தியற்ற தன்மைக்குத் திரும்புகின்றன. ஆனால் ஒரு கிரியா யோகிக்கு சுவாசத் தொடர்பு யோக விஞ்ஞான அறிவினால் அவர் விருப்பப்படி துண்டிக்கப்படுமேயொழிய, கர்மவினைத் தேவையின் முரட்டுத் தலையீட்டினாலல்ல. தன் உண்மையான அனுபவத்தினால் ஒரு யோகி தன் உடலற்ற இருப்பை ஏற்கனவே உணர்ந்தே இருக்கிறான்.

மேலும் மனிதன் தன் உடலின் மீது சார்ந்திருக்கு மாறு தவறுதலாக அறிவுறுத்தப்பட்டிருக்கிறான் என்று மரணம் அவனுக்கு ஜாடையாக சுட்டிக்காட்ட வேண்டிய அவசியம் இல்லை.

ஒவ்வொரு மனிதனும், ஒவ்வொரு பிறவியாக (அவனுடைய இயல்பான வேகத்தில், அது எவ்வளவுதான் ஏறுமாறாக இருந்தாலும்) தன்னுடைய இறைத் தன்மையின் இலக்கை நோக்கி முன்னேறவே செய்கிறான். மரணமானது, இந்த முன்னேற்றப் பாதையில் ஒரு தடையாக இராமல், அவனுடைய களங்கங்களை தூய்மைப்படுத்திக் கொள்ள சூட்சும உலகின் இதமான சூழ்நிலையைத் தந்து உதவுகிறது. உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக;... என் பிதாவின் வீட்டில் அனேக வாசஸ்தலங்கள் உண்டு.[17] இவ்வுலகை நிர்மாணிப்பதில் இறைவன் தனது முழு அறிவுத் திறனையும் செலவழித்துவிட்டான்; எனவே மறுவுலகத்தில் நமது கவனத்தை ஈர்ப்பதற்கு யாழிசையைத் தவிர அவனிடம் வேறொன்றும் இல்லை என்பதன்று.

மரணம் என்பது நம் இருப்பை அழிப்பதல்ல, வாழ்விலிருந்து இறுதியாகத் தப்பும் வழி அல்ல; மரணம், சிரஞ்சீவித் தன்மையை அடையும் வழியுமல்ல. எவனொருவன் இம்மண்ணுலகின் இன்பங்களில் தன் ஆன்மாவை இழந்தானோ, அவன் சூட்சும உலக நுண்மையான கவர்ச்சிகளுக்கு மத்தியில் அதைத் திரும்பக் கைப்பற்ற மாட்டான். அங்கு அவன்

அழகானவை மற்றும் நல்லவை (இவை இரண்டுமே ஒன்றுதான்)களை நுட்பமாக அறியவும் அவற்றிற்குத் தக்க எதிருணர்ச்சிகளை வெளிப்படுத்தவும் தன் சக்தியைப் பெருக்கிக் கொள்கிறான். இம்மண்ணுலகப் பட்டறையில் தான் போராடுகிற மனிதன், சம்மட்டியால் அடித்து அழிக்க முடியாத ஆன்மீக செம்பொன்னை உருவாக்க முடியும். பேராசையுடைய மரணம் ஒப்புக் கொள்ளும் ஒரே பரிசான இந்த, மிக்க சிரமத்துடன் பெற்ற தங்கமயமான பொக்கிஷத்தைக் கையில் வைத்து கொண்டுதான், ஒரு மனிதன் சரீரத்தின் பிறவிச் சுழலிலிருந்து முடிவான விடுதலை அடைகிறான்.

நான் பல வருடங்கள் என்ஸினிடஸிலும், லாஸ் ஏஞ்ஜலீஸிலும் பதஞ்சலியின் யோக சூத்திரங்களைப் பற்றியும் மற்ற ஆழ்ந்த இந்து தத்துவ நூல்களைப் பற்றியும் வகுப்புக்கள் நடத்தினேன்.



பரமஹம்ஸ யோகானந்தர், கலி.ஃபோர்னியா, என்ஸினிடஸ், எஸ்.ஆர்.எ.ஃப் ஆசிரமத்தில், ஜூலை 1950.



யோகானந்தர் இந்தியத் தூதுவரை வரவேற்கிறார்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் இந்தியத் தூதுவர், ஸ்ரீ பினய் ரஞ்ஜன் சென், யோகானந்தருடன் லாஸ் ஏஞ்ஜிலீஸ், ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் சர்வதேசத் தலைமையகத்தில், மார்ச் 4, 1952சுஇவ்வுயர்ந்த யோகி மறைவதற்கு மூன்று நாட்கள் முன்னர். மார்ச் 11, இறுதிச் சடங்கின் போது தூதுவர் சென் தன் புகழுரையில் கூறினார்: "நாம் ஐக்கிய நாடுகளில் இன்று பரமஹம்ஸ யோகானந்தரைப் போன்ற ஒரு மனிதரைப் பெற்றிருந்தால், அனேகமாக இந்த உலகம், இப்போது இருப்பதைக் காட்டிலும் நல்ல இடமாக இருக்கும். எனக்குத் தெரிந்தவரையில், இந்திய மற்றும் அமெரிக்க மக்களை ஒன்றிணைக்க அவரைவிட அதிகமாக எவரும் பணியாற்றியதில்லை; அதிகமாக எவரும் தன்னைத் தந்ததில்லை."



ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர் – "இறுதிப் புன்னகை"

அவருடைய மகாசமாதிக்கு ஒரு மணி நேரம் முன்பு எடுக்கப்பட்ட படம்; இந்தியத் தூதுவரான பினய் ஆர். சென் அவர்களை கௌரவிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட விருந்தில், மார்ச் 7, 1952 லாஸ் ஏஞ்ஜிலீஸ், கலிலி஀ஃபோர்னியா.

ஸ்ரீ யோகானந்தரின் லட்சக் கணக்கான நண்பர்கள், மாணவர்கள் மற்றும் சீடர்கள் ஆகிய ஒவ்வொருவருக்கும் விடைபெறும் ஆசிபோல் தோன்றும் ஓர் அன்பான புன்னகையை, புகைப்படக் கலைஞர் இங்கு படம்

பிடித்துள்ளார். கண்கள் ஏற்கனவே சாசுவதத்தை நோக்கிக் கொண்டிருந்தாலும் மனித நேயத்துடனும் புரிந்து கொள்ளும் சக்தியுடனும் நிறைந்து உள்ளன.

கடவுளின் இந்த ஒப்புவமையற்ற பக்தரின் மீது மரணம், அழிவின் சக்தியைச் செலுத்த முடியவில்லை; அவரது சரீரம் மாற்றமே இல்லாத ஓர் அதிசயமான நிலையை வெளிப்படுத்தியது. (பார்க்க பக்கம் 731)

ஒரு நாள் மாலை. வகுப்பு மாணவர் ஒருவர், கடவுள் ஏன் உடலையும் ஆன்மாவையும் ஒருங்கே இணைத்தார்? என்ற கேள்வியைக் கேட்டார். படைப்பு என்னும் பரிணாம வளர்ச்சி நாடகத்தை ஆரம்பத்தில் நடத்த விட்டதில் அவருடைய நோக்கம் என்னவாக இருக்க முடியும்? இம்மாதிரியான கேள்விகளை எண்ணற்ற பேர்கள் இதற்கு முன் கேட்டிருக்கிறார்கள். தத்துவ ஞானிகள் இக்கேள்விகளுக்கு முழு விடையளிக்க வீணே முயன்றிருக்கிறார்கள்.

"சில மர்மங்களை நிரந்தரத்தில் தேடுவதற்காக விட்டு விடவும், என்று ஸ்ரீ யுக்தேஸ்வர் புன்னகையுடன் கூறுவது வழக்கம். படைக்கப்படாத தனி முதலின்[18] நினைத்தறிய முடியாத நோக்கங்களை மனிதனுடைய, எல்லைக்குட்பட்ட பகுத்தறிவு சக்தி எப்படி புரிந்து கொள்ள முடியும்? ஆதி அந்தமற்ற, விளைவிக்கப்படாத, கடவுள் என்ற மர்மத்தின் முன்னால் சாதாரண உலகத்தின் காரணகாரியக் கொள்கையினால் பிணைக்கப்பட்ட மனிதப் பகுத்தறிவு குழம்புகிறது. இருந்த போதிலும், மனிதனின் அறிவு, படைப்பின் மர்மத்தை ஆழங்காண முடியாவிட்டாலும் ஒரு பக்தனுக்காக இறுதியில் ஒவ்வொரு மர்மமும் இறைவனாலேயே தீர்க்கப்படுகிறது."

உண்மையான ஞானத்திற்காக ஏங்குபவன் அவனுடைய தேடுதலை, தெய்வீகத் திட்டத்தின் சில எளிய அனா, ஆ வன்னாவில் பணிவுடன் தேர்ச்சி பெறத்

தொடங்குவதில் திருப்தி அடைகிறான். அவன் பக்குவமடைவதற்கு முன்னரே வாழ்க்கையைப் பற்றிய ஐன்ஸ்டைன் சித்தாந்தம் என்ற சரியான கணித வரைப்படம் வேண்டுமெனக் கோருவதில்லை.

"தேவனை ஒருவனும் ஒருக்காலுங் கண்டதில்லை, (எந்த மனிதனும் காலம் என்றதின் கீழ் மாயை யின் சார்புத் தன்மைகளில்[19] முடிவற்றதை அறிய முடியாது); பிதாவின் மடியிலிருக்கிற ஒரே பேறான குமாரனே (பிரதிபலிக்கப்பட்ட கிறிஸ்து உணர்வு அல்லது வெளிப்படையாகத் தோற்றுவிக்கப் பட்ட முழுமையான அறிவானது, ஓம் அதிர்வலையின் மூலம் இயல் கட்டமைப்புக்கள் எல்லாவற்றிற்கும் வழிகாட்டுகிறது; அந்த ஓம், ஒருமையின் பல்வேறு தன்மைகளை வெளிப்படுத்த வேண்டி, மடியிலிருந்து அல்லது படைக்கப்படாத தெய்வீக ஆழங்களிலிருந்து வெளிவந்துள்ளது) அவரை வெளிப்படுத்தினார்."[20] (உருப்படுத்தினார், அல்லது தோற்றுவித்தார்).

இயேசு விளக்கினார், மெய்யாகவே, "மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; பிதாவானவர் செய்யக் குமாரன் காண்கிறதெதுவோ, அதையேயன்றி, வேறொன்றையும் தாமாய்ச் செய்யமாட்டார்; அவர் எவைகளைச் செய்கிறாரோ, அவைகளைக் குமாரனும் அந்தப்படியே செய்கிறார்."[21]

இறைவனது மூன்றுவித இயல்புகள், அவர் இந்த வெளி உலகங்களில் தன்னைத்தானே நிரூபித்துக் காட்டுவதற்கேற்ப, இந்து புராணங்களில்

படைப்பவனாகிய பிரம்மா, காப்பவனாகிய விஷ்ணு அழிப்பவனும்புதுப்பிப்பவனுமாகிய சிவன் என்று குறிக்கப்பட்டிருக்கிறது. இந்த முத்தொழில்கள், அதிர்வலை படைப்புகளில் இடைவிடாமல் வெளிப்படுத்தப்படுகின்றன. முழு முதல் என்பது மனிதனுடைய சிந்தனைச் சக்திக்கு அப்பாற்பட்டது; அதனால் சிரத்தையுள்ள இந்துவானவன் அதை மும்மையின் பூஜிக்கத்தக்க உருவங்களில் தொழுகிறான்.[22]

உலகனைத்திற்கும் பொதுவான ஆக்கல்காத்தல் அழித்தல் என்ற கடவுளின் தன்மை, அவனுடைய இறுதி நிலை அல்ல. அது அவனுடைய முக்கியமான இயல்பு கூட அல்ல (ஏனெனில் பிரபஞ்ச படைப்பு என்பது அவனது லீலைதான். படைக்கும் விளையாட்டு). [23]அவனுடைய உள்ளார்ந்த தன்மை, மும்மையின் எல்லாப் புதிர்களையும் உணர்ந்தாலும் கூட அறிய முடியாதது; ஏனெனில் அவனுடைய வெளி இயல்பானது, ஒழுங்கிற்குட்பட்ட அணு இயக்கத்தில் தோன்றுகிறபடி அவனை வெளிப்படுத்துகிறது; ஆனால் அவனை (அவனது மெய்யான இயல்பை) தெரியப்படுத்துவதில்லை. இறைவனின் முடிவான இயல்பு குமாரன் பிதாவினிடத்திலே செல்லுகிறபோது தான்[24] அறியப்படுகிறது. விடுதலையடைந்த மனிதன் அதிர்வலைகள் அடங்கிய எல்லைகளைக் கடந்து அதிர்வலைகளற்ற பிரம்மத்தை அடைகிறான்.

இறுதியான ரகசியங்களை விண்டுரைக்கும்படி

வேண்டிய பொழுது எல்லா ஞானிகளும் மௌனத்தையே கடைப்பிடித்து வந்திருக்கிறார்கள். பிலாத்து, எது உண்மை? என்று கேட்ட பொழுது கிறிஸ்து பதிலளிக்கவில்லை.[25] இம்மாதிரி பெரிய ஆடம்பரமான கேள்விகள் பிலாத்தைப் போன்ற அறிவாளிகளிடமிருந்து வெளிப்படும்பொழுது அவை, அறியவேண்டுமென்று தகிக்கும் அவாவிலிருந்து தோன்றுவதில்லை. அம்மாதிரியான மனிதர்கள் ஆன்மீகத் தகுதிகளைப்[26] பற்றி எந்த நம்பிக்கையும் இல்லாமல் இருப்பதுதான் திறந்த மனத்தின் அடையாளம் என்று நினைத்து வெறும் அகந்தையுடன் பேசுபவர் ஆவர்.

"சத்தியத்தைக் குறித்துச் சாட்சி கொடுக்க நான் பிறந்தேன், இதற்காகவே இந்த உலகத்தில் வந்தேன்; சத்தியவான் எவனும் என் சத்தம் கேட்கிறான்," இந்தச் சில சொற்களில் கிறிஸ்து பல புத்தகங்களில் அடங்கும் ஞானத்தைக் கூறிவிட்டார். கடவுளின் ஒரு குழந்தை, தன் வாழ்வின் மூலமே "சாட்சி கொடுக்கிறது." அவர் உண்மையே உருவானவர்; அவர் அதற்கு விளக்கமும் கூறினால் அது தேவைக்கதிகமான தாராள மனத்தையே குறிக்கிறது.

சத்தியம் என்பது ஒரு சித்தாந்தமல்ல, தத்துவ ரீதியாக ஊகிக்கும் முறையுமல்ல, அறிவின் கூர்மையுமல்ல. சத்தியம் என்பது மெய்ப்பொருளுடன் மிகவும் சரியான தொடர்பு கொள்வதாகும். மனிதனுக்கு அவனுடைய உண்மையான இயல்பான தானே ஆன்மா என்பது பற்றிய அசைக்க முடியாத ஞானம்தான்

சத்தியம். இயேசு, அவருடைய ஒவ்வொரு செயல் மற்றும் ஒவ்வொரு சொல்லின் மூலமும் தன் இருப்பின் உண்மையைகடவுளிடமிருந்து தான் வந்தவர்என்பதைத் தான் அறிந்திருந்ததாக நிரூபித்தார். எங்கும் நிறைந்த கிறிஸ்து உணர்வில் முழுவதுமாகத் தன்னை உணர்ந்த அவரால் எளிய முறையில் முடிவாகக் கூற முடிந்தது என்னவெனில்; "சத்தியவான் எவனும் என் சத்தம் கேட்கிறான்."

புத்தர் கூட, இவ்வுலகியலைக் கடந்த ஆராய்வின் முடிவுகளைப் பற்றிய விளக்கத்தைக் கூற மறுத்துவிட்டு, மண்ணுலகில் மனிதனுக்குக் கிடைக்கும் சொற்ப காலத்தை நல்லொழுக்கத்தைப் பண்படுத்துவதில் நல்ல விதமாகச் செலவழிக்கலாமென வெறுமனே சுட்டிக்காட்டினார். சீன ஞானி லாவோசு சரியாகப் போதித்தார்: கண்டவர் விண்டதில்லை; விண்டவர் கண்டதில்லை. இறைவனின் இறுதியான புதிர்கள் சர்ச்சைக்குரிய விஷயமில்லை. அவருடைய ரகசிய சங்கேதத்தை விடுவிப்பது ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்கு எடுத்துரைக்க முடியாத ஒரு கலை; இங்கு இறைவன் மட்டுமே போதகராவார்.

"நீங்கள் அமர்ந்திருந்து, நானே தேவனென்று அறிந்து கொள்ளுங்கள்."[27] தான் எங்குமிருப்பதைப் பறை சாற்றாத இறைவனை, மாசற்ற மௌனங்களிலேயே கேட்க முடியும். படைக்கும் திறனுடைய ஓம் அதிர்வலைகளின் மூலம் உலகம் முழுவதும் அலைமோதும் நாதப் பிரம்மமானது. ஒரு பக்தனின் ஒன்றிய நிலையில்,

அர்த்தமுள்ள சொற்களாகத் தன்னைத் தானே உடனுக்குடன் மொழிபெயர்த்துக் கொள்கிறது.[28]

படைப்பின் தெய்வீக நோக்கம், மனிதன் தன் அறிவினால் அறிந்து கொள்ள முடியும் வரை வேதங்களில் விளக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மனிதனும் இறைவனால், ஓர் ஆன்மாவாகப் படைக்கப்பட்டு, அது தன்னுடைய தனி முதல் மூலத்தை அடைவதற்கு முன்னர் இறைவனின் ஏதாவதொரு விசேஷத் தன்மையைச் சிறப்பாக வெளிப்படுத்துவதாக ரிஷிகள் போதித்தனர். எல்லா மனிதர்களும் இம்மாதிரி இறைவனின் திவ்ய குணத்தில் ஏதாவதொன்றை இயற்பண்பாகப் பெற்றிருப்பதால் இறைவனுக்கு எல்லோரும் சமமாகப் பிரியமானவர்களே.

நாடுகளில் மூத்த சகோதரனான இந்தியாவினால் முயன்று பெறப்பட்ட ஞானம் அனைத்து மனித குலத்திற்கும் மரபுரிமையாகும். வேதங்களில் கூறப்பட்ட உண்மைகள், மற்ற எல்லா உண்மைகளையும் போல இறைவனுக்குச் சொந்தமானது; இந்தியாவிற்கு அல்ல. வேதங்களின் தெய்வீக ஞானத்தைக் கிரகித்துக் கொள்ளக் கூடிய கொள்கலமாகிய மனத்தைப் பெற்றிருந்த ரிஷிகள், மனித இனத்தின் அங்கத்தினர்களாக, மனித குலம் முழுமைக்கும் சேவை செய்ய வேண்டி, வேறு எங்கோ பிறக்காமல் இந்தப் பூமியில் பிறவி எடுத்தனர். சத்தியத்தின் சன்னிதானத்தில் தேச, இன வேறுபாடுகள் அர்த்தமற்றவை; இங்குள்ள ஒரே யோக்கியதாம்சம் ஆன்மீகத் தகுதியைப் பெறுவதுதான்.

இறைவன் அன்புமயமானவன்; படைப்பிற்கான அவனுடைய திட்டம், அன்பில் மட்டுமே வேரூன்றி இருக்க முடியும். இந்த எளிய உண்மை, அறிவாளிகளின் பகுத்தறிவை விட இதயத்திற்கு இதத்தை அளிக்கவில்லையா? மெய்ப்பொருளின் ஆழத்தை துளைத்தறிந்த முனிவர்கள் அனைவரும் கூறுவது: உலக முழுவதிற்கும் ஒரு தெய்வீகத் திட்டம் இருக்கிறது; அது மிக அழகானது, ஆனந்தமயமானது.

ஏசாயா என்ற தீர்க்கதரிசிக்கு கடவுள் தன் எண்ணங்களை இச்சொற்களில் வெளியிட்டார்:

> "அவ்வாறே நம் வாயினின்று புறப்படும் வார்த்தையும் (படைப்பாற்றல் கொண்ட ஓம்) இருக்கும்; அது பயன்தராமல் நம்மிடம் திரும்பாது; நாம் விரும்பியதை எல்லாம் செய்து முடிக்கும். எதற்காக நாம் அதை அனுப்பினோமோ அதை நிறைவேற்றும். நீங்கள் மகிழ்ச்சியோடு புறப்படுவீர்கள், சமாதானத்தில் நடத்திச் செல்லப் படுவீர்கள்; மலைகளும் குன்றுகளும் உங்கள் முன் புகழ்பாடும்; காட்டு மரங்கௌல்லாம் கைகொட்டி ஆர்ப்பரிக்கும்." (ஏசாயா 55:11–12 பைபிள்).

"நீங்கள் மகிழ்ச்சியோடு புறப்படுவீர்கள், சமாதானத்தில் நடத்திச் செல்லப்படுவீர்கள்." இன்னல்களால் இறுக்கப்படும் இருபதாவது நூற்றாண்டு மனிதர்கள் இந்த அற்புதமான வாக்குறுதியை ஆவலுடன் கேட்கிறார்கள். தன் தெய்வீக மரபுரிமையைத் திரும்பப் பெறுவதற்கு மன உறுதியுடன் முயற்சி செய்யும் ஒவ்வொரு பக்தனாலும் இதன் முழு உண்மையை உணர முடியும்.

கிரியா யோகத்தின் புனிதமான பங்கு, கீழை, மேலை நாடுகளில் இப்பொழுதுதான் தொடங்கியுள்ளது. மனித குல இன்னல்கள் அனைத்தையும் கடப்பதற்கென ஆத்ம ஞானத்திற்கு, தீர்மானமான, விஞ்ஞான பூர்வமான

முறை ஒன்றுள்ளது என்பதை எல்லா மனிதர்களும் அறியட்டும்!

இம்மண்ணுலகில் ஒளிரும் ரத்தினங்களைப் போல் பரவிக் கிடக்கும் ஆயிரக்கணக்கான கிரியா யோகிகளுக்கு என் அன்பான எண்ண அலைகளை அனுப்பும்பொழுது நான் அடிக்கடி நன்றியுடன் நினைப்பதுண்டு.

"இறைவா, நீ இந்த சன்னியாசிக்குப் பெரிய குடும்பத்தை அளித்திருக்கிறாய்!"

---

1 இச்சஞ்சிகை இப்போது, Self-Realization (ஆத்ம-ஞானம்) எனப் பெயரிடப்பட்டிருக்கிறது.

2 இந்த வருடாந்திரக் கொண்டாட்டத்தின் போது 1950 ஆகஸ்ட் 27ல் லாஸ்ஏஞ்ஜலீஸில் நான் ஒரு புனிதச் சடங்கு நடத்தி அச்சமயத்தில் 500 மாணவர்களுக்கு நான் கிரியா யோக உபதேசம் அளித்தேன்.

3 வீட்டிலிருந்தே படிக்கவல்ல இவ்விரிவான பாடத்தொகுப்பு, பரமஹம்ஸ யோகானந்தரால், கிரியாயோக விஞ்ஞானம் தியானம் மற்றும் ஆன்மீக வாழ்க்கையைப் பரப்புவதற்கென ஸ்தாபிக்கப்பட்ட ராஞ்சி, யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியாவில் கிடைக்கும். (பார்க்க பக்கம் 735.) (பிரசுரதாரரின் குறிப்பு).

4 பரமஹம்ஸ யோகானந்தர் கூட கிழக்கு, மேற்கு நாடுகளைச் சேர்ந்த தன் மாணவர்களிடம், இந்த வாழ்வுக்குப் பிறகு எல்லா கிரியாவான்களின் (யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா/ஸெல்ஃப்ரியலைசேஷன் ஃபெலோஷிப் அனுப்பும் பாடங்கள் மூலம் கிரியா தீட்சை பெற்றவர்கள்; பார்க்க பக்கம் 485 அடிக்குறிப்பு.) ஆன்மீக முன்னேற்றத்தையும் தான் தொடர்ந்து கவனித்து வருவாரெனக் கூறியுள்ளார். அவருடைய இந்தப் புனிதமான வாக்குறுதியின் உண்மை, அவருடைய மகாசமாதிக்குப் பிறகு அனேக கிரியா யோகிகள் அவரது எங்கும் நிறைந்திருக்கும் வழிகாட்டுதலை உணர்ந்து எழுதிய பல கடிதங்களின் மூலம் நிரூபிக்கப்பட்டு வருகிறது. (பிரசுரதாரரின் குறிப்பு).

5 "பொங்கி வரும் கடலைப் போன்று அக்குரல் என்னைச் சூழ்ந்துள்ளது:

'மற்றும் உன் உலகம் அப்படிச் சிதைந்து,
துகள் துகளாகச் சிதறியுள்ளதே?
அந்தோ, எல்லாப் பொருட்களும் உன்னை விட்டோடுகின்றனவே,
ஏனெனில் நீ என்னை விட்டோடு கின்றாயன்றோ!
நான் உன்னிடமிருந்து பறித்தனவெல்லாம் நான் எடுத்துக் கொண்டேனே தவிர, உன்னைக் கெடுப்பதற்கில்லை.
ஆனால் அவைகளைத் தேட நீ என்னிடமே வருவாயே என்றுதான்.
உன் குழந்தைத்தனமான தவறினால் நீ எதையெல்லாம்

தொலைத்ததாக நினைக்கிறாயோ, அவையாவும்
உனக்காக வீட்டில் சேர்த்து வைத்துள்ளேன்.
எழுந்திரு, என் கையைப் பிடித்துக் கொள், வா!'"

– ஃபிரான்சிஸ் தாம்ஸன், சுவர்க்கத்தின் வேட்டைநாய் (The Hound of Heaven)

6 வரலாற்று ஏடுகள் 18வது நூற்றாண்டு வரை இந்தியாவை உலகத்தின் செல்வச் செழிப்பான நாடு என்று எடுத்துக் கூறுகின்றன. சொல்லப் போனால் ஆதிகால ஆரியர்கள் ஆசியா அல்லது ஐரோப்பாவின் இதர பாகங்களிலிருந்து இந்தியாவின் மேல் படையெடுத்தார்கள் என்ற மேல்நாட்டு வரலாற்றின் கூற்றுக்கு இந்திய இலக்கியத்திலோ அல்லது சம்பிரதாயத்திலோ எந்தச் சான்றுமில்லை. கற்பனையான இந்தப் பயணத்தின் ஆரம்ப காலத்தை அறிஞர்கள் குறிப்பிட்டு நிர்ணயிக்க முடியாதது, புரிந்துக் கொள்ளக் கூடியதுதான். வேதத்தின் உட்சான்றுகள் இந்தியாவை, இந்துக்களின் காலங்காலமான இருப்பிடமெனச் சுட்டிக்காட்டுகின்றன என்பது ரிக் வேத காலத்து இந்தியா என்ற புத்தகத்திலிருந்து தெரிகிறது. இந்த அபூர்வ, படிப்பதற்கு மிகவும் இனிய புத்தகம், அவினாஷ் சந்திரதாஸ் என்பவரால் எழுதப்பட்டு கல்கத்தா பல்கலைக்கழகத்தால் 1921ல் பிரசுரிக்கப்பட்டதாகும். பேராசிரியர் தாஸ், இந்தியாவிலிருந்து மக்கள் ஐரோப்பா மற்றும் ஆசியாவின் அனேக பாகங்களுக்குக் குடிபெயர்ந்து சென்று ஆரிய மொழியையும் மரபையும் பரப்பினார்களென்று வலியுறுத்துகிறார். உதாரணமாக, லிதுவேனிய மொழி பலவிதங்களில் குறிப்பிடத்தக்க வகையில் சமஸ்கிருத மொழியை ஒத்திருக்கிறது. கான்ட் என்ற தத்துவ ஞானி சமஸ்கிருத மொழியைப் பற்றி எதுவும் அறியாதவர், லிதுவேனிய மொழியின் விஞ்ஞான பூர்வமான அமைப்பைக் கண்டு வியப்புற்றார். எல்லாப் புதிர்களையும், மொழி இலக்கணத்தில் மட்டுமல்லாது வரலாற்றுப் புதிர்களைக் கூட விடுவிக்கும் திறவுகோலை அது பெற்றிருக்கிறது, என்றார்.

பைபிள், இந்தியாவின் பெரும் வளங்களைப் பற்றிக் கூறுகையில் (ஐஐ நாளாகமம் 9:21,10) தர்ஷீஷ் கப்பல்கள் அரசன் சாலமனுக்கு தங்கம், வெள்ளி, தந்தம், குரங்குகள், மயில்கள் மற்றும் அகில் (சந்தனக்கட்டை) மரங்கள், விலை மதிப்புள்ள கற்கள் ஆகியவற்றை ஓஃபீரிலிருந்து ((மும்பை கடற்கரையிலுள்ள ஸொபாரா) கொண்டு வந்தன என்று குறிப்பிடுகிறது. கிரேக்க தூதரான மெகஸ்தனீஸ் (கி.மு. 4வது நூற்றாண்டு) இந்தியாவின் செல்வச் செழிப்பைப் பற்றி விரிவான சித்திரத்தை விட்டுச் சென்றிருக்கிறார். ரோமானியர்கள் வருடத்தில் ஐந்து கோடி ஸெஸ்டர்ஸ்கள் (5,000,000 டாலர்கள்) அப்பொழுது கடற்படையில் மிக்க பலமுள்ள நாடான இந்தியாவிலிருந்து பொருட்களை இறக்குமதி செய்வதில் செலவழித்ததாக, பிளைனி (கி.பி. முதல் நூற்றாண்டு) நமக்குக் கூறுகிறார்.

சீன யாத்திரீகர்கள் மிகச் செல்வச் செழிப்பான இந்திய நாகரிகத்தைப் பற்றியும் அதனுடைய பரவலான கல்வி முறை மற்றும் முதல் தரமான அரசாங்கத்தைப் பற்றியும் தெளிவாக வர்ணித்திருக்கிறார்கள். சீன மதகுருவான ஃபாஹியான் (5வது நூற்றாண்டு), இந்திய மக்கள் சந்தோஷமாகவும், உண்மையானவர்களாகவும், தனவந்தர்களாகவும் இருந்தார்களென்று நமக்குக் கூறுகிறார். மேலும் பார்க்கவும்: சாமுவேல் பியல் என்பவரின் மேற்கு உலகத்தின் புத்தமதக் குறிப்புகள் (Buddhist Records of the Western World)

(சீனர்களுக்கு இந்தியா மேற்கு உலகமாக இருந்திருக்கிறது!), ட்ரப்னர், லண்டன்; மற்றும் தாமஸ் வாட்டர்ஸின் இந்தியாவில் யுவான் சுவாங்கின் பயணங்கள் பற்றி, கி.பி. 629-45, On Yuan Chwang's Travels in India) ராயல்

ஏஷியாடிக் சொஸைடி.

கொலம்பஸ் 15வது நூற்றாண்டில் புது உலகைக் கண்டுபிடித்த பொழுது அவர் உண்மையில் இந்தியாவுடன் வியாபாரம் செய்வதற்கு இன்னும் ஒரு சிறிய பாதையைத் தேடிக் கொண்டிருந்தார். பல நூற்றாண்டுகளாக ஐரோப்பா, இந்தியாவின் ஏற்றுமதிப் பொருட்களைபட்டு, நேர்த்தியான துணிகள் (நெய்யப்பட்டக் காற்று, கண்ணுக்குத் தெரியாத மூடுபனி என்று அவர்கள் வர்ணிக்கும் அளவிற்கு நேர்த்தியாக இருந்தன), அச்சுப் பதித்த பருத்தித் துணிகள், சித்திரப் பூவேலை செய்யப்பட்ட பட்டுத்துணிவகை, கைவேலை செய்யப்பட்ட துணிகள், கம்பளங்கள், வெட்டுக் கருவிகள், கவசம், தந்தம் மற்றும் தந்த வேலைப்பாடமைந்த பொருட்கள், வாசனைத் திரவியங்கள், ஊதுபத்தி, சந்தனக் கட்டை, மண்பாண்டங்கள், மூலிகை மருந்து, நறுமணத் தைலங்கள், நீலம், அரிசி, மசாலாப் பொருட்கள், பவழம், பொன், வெள்ளி, முத்துக்கள், ரத்தினங்கள், பச்சைக் கற்கள், வைரங்கள்அடைவதற்கு ஆவலாயிருந்தது.

போர்த்துக்கீசிய மற்றும் இத்தாலிய வியாபாரிகள், நம்ப முடியாத செல்வங்களை விஜய நகர சாம்ராஜ்யம் (1336-1526) முழுவதிலும் கண்டதாக அதிசயத்துடன் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதன் தலைநகரத்தின் பெருமை பற்றி அராபியத் தூதுவரான ரஸாக் என்பவர் கண்ணால் கண்டும் காதுகளினால் கேட்டும் இராத அளவிற்கு, இம்மண்ணுலகில் அதற்கு ஈடான இடம் எதுவுமில்லை, என்று விவரித்துள்ளார்.

16வது நூற்றாண்டில் இந்தியா, தனது நீண்ட சரித்திரத்தில் முதன் முறையாக, இந்துவல்லாதவர் ஆட்சியின் கீழ் முழுவதுமாக வீழ்ந்தது. துருக்கரான பாபர் 1524ல் இந்த தேசத்தின் மேல் படையெடுத்து முஸ்லீம் அரசர்களின் வம்சத்தை ஸ்தாபித்தார். புராதனமான பூமியில் வந்து குடியேறியதும் புதுச் சக்கரவர்த்திகள் அதன் செல்வத்தைச் சூறையாடவில்லை. இருந்தாலும் உள்நாட்டுக் கலகங்களால் நலிவடைந்து, செல்வச் செழிப்புடனிருந்த இந்தியா 17வது நூற்றாண்டில் அனேக ஐரோப்பிய நாடுகளுக்கு இரையாயிற்று; இறுதியில் இங்கிலாந்து ஆளும் சக்தியாக உருவெடுத்தது. ஆகஸ்ட் 15ந் தேதி 1947ம் வருடம் இந்தியா அமைதியாகத் தன் விடுதலையை அடைந்தது.

அனேக இந்தியர்களுக்கு இருப்பது போல எனக்கும், இப்பொழுது சொல்லலாம் என்ற கதை ஒன்றிருக்கிறது. கல்லூரியில் படிக்கும் பொழுது எனக்கு அறிமுகமாயிருந்த சில இளைஞர்கள் என்னை அணுகி முதலாவது உலகப் போரின் சமயத்தில் என்னை ஒரு புரட்சி இயக்கத்தைத் தலைமைத் தாங்கி நடத்துமாறு தூண்டினார்கள். நான் பின்வரும் சொற்களுடன் அதை மறுத்தேன்: நம் ஆங்கிலேய சகோதரர்களைக் கொல்வதால் இந்தியாவிற்கு எந்த நன்மையையும் அளிக்க முடியாது. இந்தியாவிற்கு விடுதலை குண்டுகளின் மூலம் கிடைக்காது; ஆத்ம சக்தியின் மூலம்தான் கிடைக்கும். அவர்கள் எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்கும் ஆயுதம் தாங்கிய ஜெர்மன் கப்பல்கள் வங்காளத்தின் வைரத் துறைமுகத்தில் ஆங்கிலேயர்களால் மடக்கப்பட்டுவிடும் என்று நான் என் நண்பர்களை எச்சசரிக்கை செய்தேன். இருந்தாலும் அந்த இளைஞர்கள் தங்கள் திட்டத்தின்படியே செயல்பட்டார்கள். நான் முன்னுணர்ந்தது படியே அவர்களது திட்டங்கள் தவறாகத் திசை திருப்பப்பட்டன. சில வருடங்கள் கழித்து என் நண்பர்கள் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார்கள். அனேகர், வன்முறையில் அவர்களுக்கிருந்த நம்பிக்கையைக் கைவிட்டு, மகாத்மா காந்தியின் இலட்சிய அரசியல் இயக்கத்தில் சேர்ந்தனர். இறுதியில் இந்தியாவின் வெற்றியை, ஒரு போரில் அமைதியின் மூலம் வென்றதை அவர்கள் கண்டார்கள்.

இந்தியா, பாகிஸ்தான் என்ற வருந்தத்தக்க பிரிவினையும் அதைத் தொடர்ந்து நாட்டின் சிற்சில பாகங்களில் ஏற்பட்ட குறுகிய கால இடைக்காட்சியான ரத்தக்களரியும் பொருளாதாரக் காரணங்களினால் ஏற்பட்டனவே ஒழிய, முக்கியமாக மதவெறியால் இல்லை. (இச்சிறிய காரணம் பல சமயங்களில் பெரிதாக தவறுபடுத்திக் காட்டப்படுகிறது). எண்ணற்ற இந்துக்களும் முஸ்லிம்களும் இப்பொழுது போலவே கடந்த காலத்திலும் ஒற்றுமையாக வாழ்ந்து வந்திருக்கின்றனர். இரு சமயத்தைச் சேர்ந்தவர்களும் ஏராளமாக ஜாதி சமய மற்ற மகான் கபீரின் (1450-1518) சீடர்களாக ஆனார்கள். இன்று வரையில் அவரை லட்சக்கணக்காகப் பின்பற்றுபவர்களை (கபீர் பந்திகள்) அவர் பெற்றிருக்கிறார். அக்பர் சக்கரவர்த்தியின் முஸ்லிம் ஆட்சியின் பொழுது பாரதம் முழுதும் விரிவான சமய சுதந்திரம் இருந்து வந்தது. இன்றும் 95% எளிய மக்களிடையே தீவிர சமயபேதம் இல்லை. உண்மையான பாரதம், அமைதியற்ற பெரிய நகரங்களிலில்லை; ஆனால் எளிய நியாயமான பஞ்சயாத்துக்கள் (உட்குழுக்கள்) மூலம் தன்னாட்சி நடந்துவரும் இந்தியாவின் அமைதியான 7,00,000 கிராமங்களில்தான் காணப்படுகிறது; இப்பஞ்சாயத்துக்கள் காலங்காலமாக இருந்துவரும் ஒரு சிறப்பம்சமாகும். புதிதாக சுதந்திரமடைந்த இந்தியாவில் இன்று காணப்படும் பிரச்சனைகளுக்கு, இந்தியா என்றும் தோற்றுவிக்கத் தவறாத மகான்களால் காலப்போக்கில் அவசியம் தீர்வு காணப்படும்.

7 "சுதந்திரமாக நாங்கள் கடமை ஆற்றுகிறோம்.

ஏனெனில் நாங்கள் சுதந்திரமாக அன்பு செலுத்துகிறோம். எங்கள் விருப்பத்தின்படியே அன்பு செலுத்துவதும் செலுத்தாமலிருப்பதும்; இதில் தான் நாங்கள் நிலைப்பதும் வீழ்வதும் உள்ளது.

சிலர் வீழ்கிறார்கள், கீழ்படியாமல் வீழ்கிறார்கள்.
சுவர்க்கத்திலிருந்து ஆழ்ந்த நரகத்திற்கு, ஓ எத்துணை
பெரிய வீழ்ச்சி எத்துணை உயர்ந்த ஆனந்த
நிலையிலிருந்து எப்படிப்பட்ட துன்பப் பாதாளம்!"

– மில்டன், இழந்த சுவர்க்கம் (Paradise Lost).

8 தெய்வீக லீலை (விளையாட்டுத்தனமான வேடிக்கை) யின் எந்தத் திட்டத்தினால் உலகங்கள் படைக்கப் பட்டிருக்கின்றனவோ அது, படைப்பவனுக்கும் படைக்கப்படுபவனுக்கும் இடையே உள்ள பரஸ்பர பண்பாகும். மனிதன் கடவுளுக்கு அளிக்கக்கூடிய ஒரே பரிசு அன்பு ஒன்றுதான் – அவனுடைய எல்லையற்ற அருட்செல்வத்தை வெளிக் கொண்டுவர அது போதும். ஜனத்தாராகிய நீங்கள் எல்லாரும் என்னை வஞ்சித்தீர்கள். என் ஆலயத்தில் ஆகாரம் உண்டாயிருக்கும்படித் தசம பாகங்களையெல்லாம் பண்டக சாலையிலே கொண்டு வாருங்கள்; அப்பொழுது நான் வானத்தின் பலகணிகளைத் திறந்து இடங்கொள்ளாமற் போகுமட்டும் உங்கள் மேல் ஆசீர்வாதத்தை வருஷிக்க மாட்டேனோவென்று அதனால் என்னைச் சோதித்துப் பாருங்கள் என்று சேனைகளின் கர்த்தா சொல்லுகிறார்." – மல்கியா 3:9-10 (பைபிள்).

9 கடவுள் அர்ஜுனனுடன் உரையாடுகிறார் God Talks With Arjuna : The Bhagavad Gita-Royal Science of God-Realization யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியாவால் வெளியிடப்பட்டது. பகவத் கீதை இந்தியாவில் மிகவும் விரும்பப்படும் சமய நூல். அதில் பகவான் கிருஷ்ணன் (பரமாத்மாவைக் குறிக்கும்) தன் சீடன் அர்ஜுனனுக்கு ((முன்மாதிரி பக்தனின் ஜீவாத்மாவைக் குறிக்கும்) செய்த உபதேசம் அடங்கியுள்ளது: இதன் சொற்கள், ஆன்மீகத்திற்கு வழிகாட்டியாக, உண்மையைத் தேடும் எல்லோருக்கும், எக்காலத்திலும் பயன்படக்கூடியவை. இறை பக்தி, விவேகம், பற்றற்ற

தன்மையுடன் சரியான செயல்களைச் செய்தல் ஆகியவற்றின் மூலம் மனிதன் முக்தி அடையலாம் என்பதே பகவத் கீதையின் முக்கியக் கருத்தாகும்.

10 பகவத் கீதை IV:29 மற்றும் V:27-28.

11 26வது அத்தியாயத்தைப் பார்க்கவும். கிறிஸ்துவ ஞானிகளிடையே சவிகல்ப சமாதியில் ஆழ்ந்தவராகக் காணப்பட்டவர்களில் அவிலாவின் சன்னியாசினி தெரஸாவைக் கூறலாம். அவருடைய உடல் எந்த அளவிற்கு அசையாமல் ஸ்திரப்பட்டுவிடும் எனில், கன்னிமாடத்திலுள்ள ஆச்சரியமடைந்த சன்னியாசினிகளால் அவரது உடல் நிலையை மாற்றுவதோ அல்லது அவரை வெளி உணர்விற்கு எழுப்புவதோ முடியாததாகிவிடும்.

12 "சாதாரண மனிதன் எங்காவது, எப்பொழுதாவது ஆன்மீக முயற்சியைச் செய்துதானாக வேண்டும். லாவோசு (Lao-tzu) கூறுகிறார், ஆயிரம் மைல்கள் பிரயாணம் ஒரு காலடி வைப்பில்தான் தொடங்குகிறது. பகவான் புத்தர் கூறுவதை ஒப்பிடுக: யாரும் நல்லது பற்றி மனத்திற்குள், அது என்னருகில் வராது என லேசாக நினைத்துக் கொள்ள வேண்டாம். நீர்த்துளிகள் விழுவதன் மூலம் ஒரு பானை நிரம்புகிறது. விவேகமுள்ள மனிதன் நல்லதை கொஞ்சம் கொஞ்சமாகச் சேமித்தாலும் முழுமையாக நல்லதையுடையவனாகிறான்."

13 யாக்கோபு 4:4 (பைபிள்).

14 காற்றில்லா இடத் தீபத்தின்
அசையா நிலை போல்
ஆத்ம சாதக யோகியின் மனம்
அடங்கியே இருக்கும்.
யோக சாதனை விளைவால் சித்தம்
என்று அமைதி பெறுகிறதோ,
என்று மனம் ஆத்மாவில்
ஆத்மனை அறிந்து மகிழ்கிறதோ,
புலன்களுக்கெட்டா அதனை
என்று யோகி அறிவானோ,
எதில் நிலை பெற்று
அதனின்றும் அசையானோ,
எதனை அடைந்தபின்
அதனின் மிக்கது வேறில்லையோ,
எதனில் நிலையாயின்
துக்கமும் தன்னைத் தாக்காதோ
அதுவே யோகம்; தளரா உறுதியுடன்
தொடர்ந்து பயிலுக யோகம்!

– பகவத் கீதை VI:19-23

(பெரும்பாலும் ஆர்னால்டின் மொழிபெயர்ப்பிலிருந்து)

15 ஆதியாகமம் 2:7 (பைபிள்).

16 நீ உன் ரத்தக் குழாய்களில் கடலே ஓடும் வரை, சுவர்க்கம் என்ற ஆடையை உடுக்கும் வரை, விண்மீன்களால் கிரீடம் சூட்டப்படும் வரை,

உன்னை உலகின் ஒரே வாரிசாக உணரும் வரை, இதற்கும் மேலாக ஆகும் வரை உன்னால் உலகத்தை சரியாக அனுபவிக்க முடியாது; ஏனெனில் அதிலுள்ள மனிதர்கள் யாவரும் உன்னைப் போலவே தனி வாரிசாக ஆகிறார்கள்; லோபிகள் பொன்னில் எப்படி மகிழ்கிறார்களோ, அரசர்கள் செங்கோல்களில் எப்படி ஆனந்தப்படுகிறார்களோ... அப்படி நீயும் கடவுளைக் கண்டு, ஆடிப்பாடி ஆனந்தமடையும் வரை, கடவுளுடன் எல்லாக் காலங்களிலும் உன் நடை, பேச்சு இவைகளைப் போல் நன்கு பரிச்சயம் ஆகும்வரை, நிழலார்ந்த சூனியத்திலிருந்து உலகம் உண்டானதை உள்ளார்ந்து அறியும் வரை நீ உலகத்தைச் சரியாக அனுபவிக்க முடியாது.தாமஸ் டிராஹர்ன், நூற்றாண்டுகளான தியானங்கள். (Centuries of Meditations).

17 யோவான் 14:12 (பைபிள்).

18 என் நினைவுகள் உங்கள் நினைவுகள் அல்ல; உங்கள் வழிகள் என் வழிகளும் அல்லவென்று கர்த்தர் சொல்லுகிறார். பூமியைப் பார்க்கிலும் வானங்கள் எப்படி உயர்ந்திருக்கிறதோ, அப்படியே உங்கள் வழிகளைப் பார்க்கிலும் என் வழிகளும் உங்கள் நினைவுகளைப் பார்க்கிலும் என் நினைவுகளும் உயர்ந்திருக்கிறதுஏசாயா 55:59, (பைபிள்). தாந்தே, தெய்வீக சுபநாடக (பட்ங் ஈண்ஸ்ண்ய்ங் இர்ம்ங்க்ஹ்) த்தில் நிரூபிக்கிறார்:

அவன் ஒளியிலிருந்து மிக அதிக ஒளிபெற்ற அந்த
விண்ணுலகில்
நான் இருந்துள்ளேன்,
நான் கண்டுள்ளவற்றை,
திரும்பி வந்தவர் எடுத்துக் கூறும் திறனோ அறிவோ கிடையாது;
ஏனெனில் நாம் ஏங்கிய பொருள் நெருங்குகையில்
நம் அறிவு அதில் ஆழ்ந்து மூழ்கிவிட,
தான் வந்த பாதையை அது திரும்பத் தடம் காணமுடியாது.
ஆயின் அப்புனித ராஜ்யம் பற்றியன
எத்துணை எந்தன் நினைவுப் பொக்கிஷத்தில் உண்டோ
அதுவே எந்தன் பொருளாகும் இக்கவிதை முடியும்
வரையிலுமே.

19 பூமியின் நாட்சுழற்சி, ஒளியிலிருந்து இருளுக்கும், இருளிலிருந்து ஒளிக்கும் மாறி மாறி வருவதானது, படைப்பு, மாயையில் அல்லது எதிருக்கெதிரான நிலையில் ஈடுபடுவதை மனிதனுக்கு நினைவுறுத்திய வண்ணம் உள்ளது. (ஆதலால் ஒரு நாளின் மாறுகின்ற வேளை அல்லது சமநிலைப்படுத்தப்பட்ட வேளைகளான அதிகாலை அல்லது மாலை தியானத்திற்கு உகந்ததாகக் கருதப்படுகிறது). இருவித இழைகளைக் கொண்ட மாயை என்னும் திரையைக் கிழித்து யோகியானவன் எல்லாவற்றையும் கடந்த ஒருமையைக் காண்கிறான்.

20 யோவான் 1:18 (பைபிள்)

21 யோவான் 5:19 (பைபிள்).

22 மும்மை பற்றிய உண்மையிலிருந்து வேறு விதமாகச் சித்தரிக்கப்படும் கருத்து: சத், தத், ஓம்; அல்லது பிதா, குமாரன், பரிசுத்த ஆவி, பிரம்மாவிஷ்ணுசிவன் ஆகியவை இறைவனின் மூன்றுவித பாவங்களை, தத் அல்லது குமாரன் என்ற தன்மையில்அதிர்வலை படைப்பில் உள்ளார்ந்து நிற்கும் கிறிஸ்து உணர்வைக் குறிக்கிறது. சக்திகள் அல்லது

மும்மூர்த்திகளின் தேவிகள், ஓம் அல்லது பரிசுத்த ஆவியின் அடையாளங்களாகும்; இவை அதிர்வலையின் மூலம் பிரபஞ்சத்தையே தாங்கியுள்ள ஒரே மூல காரண சக்தியாகும். (பார்க்க பக்கம் 222 அடிக்குறிப்பு, 297 அடிக்குறிப்பு)

23 கர்த்தாவே... நீரே சகலத்தையும் சிருஷ்டித்தீர், உம்முடைய சித்தத்தினாலே அவைகள் உண்டாயிருக்கிறவைகளும், சிருஷ்டிக்கப்பட்டவைகளுமாயிருக்கிறது.

வெளிப்படுத்தின விசேஷம் 4:11 (பைபிள்).

24 யோவான் 14:12. (பைபிள்)

25 யோவான் 18:38. (பைபிள்).

26 "நற்குணத்தை நேசி; அவள் மட்டுமே சுதந்திரமானவள்;
சுவர்க்கத்தை விடவும் மேலானதை எட்ட
அவள் உனக்குப் போதிப்பாள்;
அல்லது நற்குணம் சற்று பலவீனப்பட்டால்
சுவர்க்கமே அவளிடம் குனிந்து வரும்.மில்டன். கோமஸ் (Comus)

27 யோவான் 18:37 (பைபிள்).

28 சங்கீதம் 46:10 (பைபிள்)யோக விஞ்ஞானத்தின் குறிக்கோள், உண்மையாக தேவனை அறிவதற்கு வேண்டிய உள் அசைவின்மையைப் பெறுதல்.

# பரமஹம்ஸ யோகானந்தர்: வாழ்விலும் சாவிலும் ஒரு யோகி

பரமஹம்ஸ யோகானந்தர், அமெரிக்கா (U.S.A.) வின் கலி:ஃபோர்னியாவிலுள்ள லாஸ் ஏஞ்ஜலீஸில் 1952 மார்ச் மாதம் 7ந் தேதி, இந்தியத் தூதரான மாண்புமிகு பினய் ஆர். சென் அவர்களைக் கௌரவிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட விருந்தில் கலந்து கொண்டு தம் சொற்பொழிவை முடித்த பின்னர், மகாசாமாதி (ஒரு யோகி முழு உணர்வுடன் கடைசியாக உடற் கூட்டிலிருந்து வெளியேறுதல்) அடைந்தார்.

இம்மாபெரும் உலக ஆசிரியர் வாழ்வில் மட்டுமின்றி சாவிலும் கூட யோக முறை (இறை-அனுபூதிக்கான விஞ்ஞான முறைகள்) யின் மதிப்பை நிரூபித்து விட்டார். அவர் மறைந்து சில வாரங்களுக்குப் பிறகும் அவரது திருமுகம் எந்த மாசுமறுவுமின்றித் தெய்வீகப் பொலிவுடன் திகழ்ந்தது.

லாஸ் ஏஞ்ஜலீஸில் அமைந்திருக்கும் வனப்புல்வெளி நினைவுப் பூங்காவிலுள்ள (Forest Lawn Memorial-Park) அமரர் அறை (இங்குதான் இம்மகானுடைய தேகம் தற்காலிகமாக வைக்கப்பட்டிருக்கிறது) யின் இயக்குநரான திரு. ஹாரி. டி. ரோவ், ஸெல்:ஃப்-ரியலைசேஷன் :ஃபெலோஷிப்-பிற்கு ஒரு பிரமாணக் கடிதம் அனுப்பினார். அதிலிருந்து எடுக்கப்பட்ட சில பகுதிகள் பின்வருமாறு :

பரமஹம்ஸ யோகானந்தரின் மரித்த தேகத்தில்

சிதைவினால் தென்படக்கூடிய எந்த அறிகுறியும் இல்லாமலிருப்பது எங்களது அனுபவத்தில் காணாத ஓர் அசாதாரண நிகழ்ச்சி.... இறந்து இருபது நாட்களாகியும் அவரது உடலில் எவ்விதமான பௌதீகச் சிதைவும் காணப்படவில்லை.... அவருடைய சருமத்தில் பூஞ்சையின் அறிகுறி எதுவும் தென்படவில்லை. உடல் திசுக்களில் கண்கூடான உலர்தல் எதுவும் ஏற்படவில்லை. ஓர் உடல் இங்ஙனம் பூரணப் பதன நிலையில் இருப்பது, எங்களுக்குத் தெரிந்த வரையில் இந்த அமரர் அறையின் சரித்திரக் குறிப்புக்களில் இதுவரை காணப்படாத ஈடு இணையற்ற ஒரு சம்பவமாகும்.... யோகானந்தரின் தேகத்தைப் பெறும்பொழுது அமரர் அறையின் பணியாளர்கள், பெட்டியின் கண்ணாடி மூடி வழியாக, வழக்கமாகத் தோன்றும் படிப்படியான தேகச் சிதைவின் அறிகுறிகளை எதிர்பார்த்தனர். கண்காணிப்பின் கீழிருந்த அந்த தேகத்தில், நாட்கள் செல்லச் செல்ல, காணக்கூடிய எந்த மாறுதலும் இல்லாமலிருந்ததைக் கண்டு எங்களது வியப்பு அதிகரித்தது. யோகானந்தரின் தேகம், தனிச்சிறப்பிற்குரிய ஒரு மாறுதலற்ற தன்மையைத் தெளிவாகக் காட்டியது....

எந்தச் சமயத்திலும் அவர் தேகத்திலிருந்து சிதைவின் நாற்றம் வீசவேயில்லை.... மார்ச் 27 ஆம் நாள் அவருடைய பெட்டியின்மீது வெண்கல மூடியைப் பொருத்துவதற்கு முன்னர், அவரது உடலின் தோற்றம் மார்ச் 7 ஆம் நாள் எப்படி இருந்ததோ அப்படியே

இருந்தது. அவர் இறந்த அன்றிரவு எப்படித் தோற்றமளித்தாரோ அவ்வாறே தூய்மையாகவும் சிதைவின் பாதிப்புகளுமின்றி மார்ச் 27 ஆம் நாளன்றும் காணப்பட்டார். மார்ச் 27 ஆம் நாள் அவர் உடல் எந்தச் சிதைவும் அடைந்திருந்ததாகக் கூற எவ்விதக் காரணமும் இல்லை. இக்காரணங்களினால் பரமஹம்ஸ யோகானந்தரின் விஷயமானது எங்கள் அனுபவத்தில் ஈடு இணையற்ற ஒன்று என்பதை மறுபடியும் அறிவிக்கிறோம்.




1977-ல் பரமஹம்ஸ யோகானந்தர் மகாசமாதி அடைந்த இருபத்தைந்தாவது ஆண்டு நிறைவன்று, இந்திய அரசு அவரைக் கௌரவிக்கும் வண்ணம் இந்த நினைவுத் தபால் தலையை வெளியிட்டது. தபால் தலையுடன் அரசு வெளியிட்ட விளக்கமான பிரசுரத்தின் ஒரு பகுதி :

"பரமஹம்ஸ யோகானந்தரின் வாழ்க்கையில் இறை அன்பு மற்றும் மனிதகுல சேவை ஆகிய குறிக்கோள் பரிபூரணமாக வெளிப்பட்டது.... தன் வாழ்க்கையின் பெரும்பகுதியை அவர் இந்தியாவிற்கு வெளியே கழித்தாலும் அவர் நம் மாபெரும் மகான்களின் மத்தியில் இடம் பெறுகிறார். அனைத்து மக்களையும் ஆன்ம யாத்திரை மார்க்கத்திற்கு ஈர்த்தவாறு அவருடைய திருப்பணி என்றும் குறைவின்றி ஒளிமயமாகத் தொடர்ந்து வளர்கிறது."

# பரமஹம்ஸ யோகானந்தருடைய கிரியா யோகப் போதனைகளைப் பற்றிய கூடுதலான உதவி சாதனங்கள்

யோகதா சத்சங்க சொஸைடி ஆ்ஃப் இந்தியா, இந்தியா மற்றும் நேபாளம் முழுவதும் உள்ள சாதகர்களுக்கு இலவசமாக உதவி புரிவதற்காக அர்ப்பணித்துக் கொண்டுள்ளது. எங்களுடைய பொதுச் சொற்பொழிவுகள், மற்றும் எங்கள் தியான மையங்களில் நடக்கும் வகுப்புகள், தியான மற்றும் மனவெழுச்சியூட்டும் வழிபாடுகள், எங்கள் தியான மையங்கள், கேந்திரங்கள் மற்றும் மண்டலிகளுக்கு அருகில் உள்ள இடங்களில் நடைபெறும் வார இறுதி ஏகாந்த ஆன்மீக பயிற்சிகள் மற்றும் இதர செயல்பாடுகளைப் பற்றிய தகவல்களுக்கு எங்களது இணையதளத்திற்கு அல்லது யோகதா சத்சங்க கிளை மடத்திற்கு வருகை புரிய உங்களை அழைக்கின்றோம்:

www.yssofindia.org

Yogada Satsanga Society of India

Paramahansa Yogananda Path

Ranchi 834001, Jharkhand

Tel (0651) 2460071, 2460074, 2461578

# Yogoda Satsanga Lessons

Personal guidance and instruction from Paramahansa Yogananda on the techniques of yoga meditation and principles of spiritual living

If you feel drawn to the spiritual truths described in Autobiography of a Yogi, we invite you to enroll in the Yogoda Satsanga Lessons.

Paramahansa Yogananda originated this home-study series to provide sincere seekers the opportunity to learn and practice the ancient yoga meditation techniques introduced in this book — including the science of Kriya Yoga. The Lessons also present his practical guidance for attaining balanced physical, mental, and spiritual well-being.

The Yogoda Satsanga Lessons are available at a nominal fee (to cover printing and postage costs). All students are freely given personal guidance in their practice by Yogoda Satsanga Society of India monks.

For more information…

Complete details about the Yogoda Satsanga Lessons are included in the free booklet Undreamed-of Possibilities. To receive a copy of this booklet and an application form, please visit our website or contact Yogoda Satsanga Sakha Math, Ranchi.”

# Other Books by Sri Sri Paramahansa Yogananda

Available at your local bookstores or from:

Yogoda Satsanga Society of India

Paramahansa Yogananda Path

Ranchi 834001, Jharkhand

yssbooks.org

**God Talks With Arjuna: The Bhagavad Gita** – A New Translation and Commentary

In this monumental two-volume work, Sri Sri Paramahansa Yogananda reveals the innermost essence of India's most renowned scripture. Exploring its psychological, spiritual, and metaphysical depths, he presents a sweeping chronicle of the soul's journey to enlightenment through the royal science of God-realization.

**Man's Eternal Quest**

Sri Sri Paramahansa Yogananda's Collected Talks and Essays present in-depth discussions of the vast range of inspiring and universal truths that have captivated millions in his Autobiography of a Yogi. Volume I explores little-known and seldom-understood aspects of meditation, life after death, the nature of creation, health and healing, the unlimited powers of the mind, and the eternal quest that finds fulfilment only in God.

**The Divine Romance**

Volume II of Sri Sri Paramahansa Yogananda's collected talks and essays. Among the wide-ranging selections: How to Cultivate Divine Love; Harmonizing Physical, Mental, and Spiritual Methods of Healing; A World Without Boundaries; Controlling Your Destiny; The Yoga Art of Overcoming Mortal Consciousness and Death; The Cosmic Lover; Finding the Joy in Life.

**Journey to Self-realization**

Volume III of the collected talks and essays presents Sri Sri Paramahansa Yogananda's unique combination of wisdom, compassion, down-to-earth guidance, and encouragement on dozens of fascinating

subjects, including: Quickening Human Evolution, How to Express Everlasting Youthfulness, and Realizing God in Your Daily Life.

**Where There Is Light:** Insight and Inspiration for Meeting Life's Challenges

A practical handbook that gives readers a reassuring sense of direction in times of uncertainty of crisis, as well as positive guidance in meeting the challenges of everyday life. Topics include: Strength in Times of Adversity; Creating Harmony in Marriage and Friendship; Antidotes for Stress, Worry, and Fear; Understanding Death; Cultivating Inner Peace.

**Whispers from Eternity**

A collection of Sri Sri Paramahansa Yogananda's prayers and divine experiences in the elevated states of meditation. Expressed in a majestic rhythm and poetic beauty, his words reveal the inexhaustible variety of God's nature, and the infinite sweetness with which He responds to those who seek Him.

**The Science of Religion**

Within every human being, Sri Sri Paramahansa Yogananda writes, there is one inescapable desire: to overcome suffering and attain a happiness that does not end. Explaining how it is possible to fulfil these longings, he examines the relative effectiveness of the different approaches to this goal.

**In the Sanctuary of the Soul:** A Guide to Effective Prayer

We may often wonder, "Are my prayers effective? Is God Listening?" Offering wisdom and insight selected from the writings of Sri Sri Paramahansa Yogananda, this inspirational book discusses ways by which we can deepen the power of our prayers and make them a daily source of love, strength, and guidance. A beautifully designed devotional guide that will inspire those of all faiths.

**Inner Peace:** How to Be Calmly Active and Actively Calm

A practical and inspiring guide, compiled from the talks and writings of Sri Sri Paramahansa Yogananda, that demonstrates how we can be "actively calm" by creating peace through meditation, and "calmly active"–centred in the stillness and joy of our own essential

nature while living a dynamic, fulfiling, and balanced life. Winner of the 2000 Benjamin Franklin Award–best book in the field of Metaphysics/Spirituality.

**How You Can Talk With God**

Paramahansaji helps us to see how close the Divine is to each one of us, and how we can make our prayers so powerful and persuasive that they will bring a tangible response.

**Metaphysical Meditations**

More than 300 spiritually uplifting meditations, prayers, and affirmations that can be used to develop greater health and vitality, creativity, self-confidence, and calmness; and to live more fully in a conscious awareness of the blissful presence of God.

**Scientific Healing Affirmations**

Sri Sri Paramahansa Yogananda presents here a profound explanation of the science of affirmation. He makes clear why affirmations work, and how to use the power of word and thought not only to bring about healing but to effect desired change in every area of life. Includes a wide variety of affirmations.

**Sayings of Paramahansa Yogananda**

A collection of sayings and wise counsel that conveys Sri Sri Paramahansa Yogananda's candid and loving responses to those who came to him for guidance. Recorded by a number of his close disciples, the anecdotes in this book give the reader an opportunity to share in their personal encounters with the great Guru.

**The Law of Success**

Explains dynamic principles for achieving one's goals in life, and outlines the universal laws that bring success and fulfilment–personal, professional, and spiritual.

## Audio Recordings of Sri Sri Paramahansa Yogananda

- **Self-Realization: The Inner and the Outer Path**
- **Awake in the Cosmic Dream**
- **Be a Smile Millionaire**
- **Beholding the One in All**
- **The Great Light of God**
- **Songs of My Heart**
- **One Life Versus Reincarnation**
- **To Make Heaven on Earth**
- **Songs of My Heart**
- **Be a Smile Millionaire**
- **Removing All Sorrow and Suffering**

# Other Publications from
# Yogoda Satsanga Society of India

**The Holy Science** by Sri Sri Swami Sri Yukteswar Giri

**Paramahansa Yogananda: In Memoriam** – Personal Accounts of the Master's final Days

**Only Love:** by Sri Sri Daya Mata

**Finding the Joy Within You:** Personal Counsel for God-Centred Living by Sri Sri Daya Mata

**Enter the Quiet Heart** by Sri Sri Daya Mata

**God Alone:** The Life and Letters of a Saint by Sri Gyanamata

**"Mejda":** The Family and the Early Life of Sri Sri Paramahansa Yogananda by Sri Sananda Lal Ghosh

**Spiritual Diary**

**Two Frogs in Trouble**

**Yogoda Satsanga**

## Free Introductory Booklet: *Undreamed-of Possibilities*

The scientific techniques of meditation taught by Sri Sri Paramahansa Yogananda, including Kriya Yoga–as well as his guidance on all aspects of balanced spiritual living–are taught in the Yogoda Satsanga Society Lessons. For further information, please write for the free introductory booklet, Undreamed-of Possibilities.

A complete catalogue describing all of the Yogoda Satsanga Society of India publications and audio/video recordings is available on request or by download from from online bookstore.

# குருதேவர்களின் பரம்பரை

மகாவதார பாபாஜி
யோகவதார் லாஹிரி மகாசயர்
ஞானவதார் சுவாமி ஸ்ரீ யுக்தேஸ்வர்
பிரேமவதார் பரமஹம்ஸ யோகானந்தர்

கிரியா யோகத்தை உண்மையுடன் பயிற்சி செய்யும் யோகதா சத்சங்க சொசைட்டி ஆ்ஃப் இந்தியா/செல்்ஃப்-ரியலைசேஷன் ்ஃபெல்லோஷிப்பின் அனைத்து உறுப்பினர்களின் ஆன்மீக நலன்களுக்குப் பொறுப்பேற்கும் இந்திய குருக்களின் பரம்பரையில் மகாவதார பாபாஜி ஒப்புயர்வற்ற குருதேவர் ஆவார். "தற்போதைய உலகச் சுழற்சி (world cycle) முடியும் வரை பூமியில் மனித உருவில் நான் தொடர்ந்து இருப்பேன்." என்று அவர் உறுதியளித்திருக்கின்றார். (அத்தியாயம் 33 மற்றும் 37-ஐப் பார்க்க)

1920-ல் மகாவதார பாபாஜி பரமஹம்ஸ யோகானந்தரிடம் கூறினார்: "மேலை நாடுகளில் கிரியா யோக போதனைகளைப் பரப்ப நான் உன்னைத்தான் தேர்ந்தெடுத்துள்ளேன்....இறை-அனுபூதியின் விஞ்ஞான உத்தி இறுதியில் எல்லா நாடுகளிலும் பரவும், மேலும் முடிவிலாத் தெய்வத்தந்தை பற்றிய மனிதனின் தனிமனித, எல்லை கடந்த ஞானத்தின் மூலம் நாடுகளை ஒருங்கிணைக்கத் துணைபுரியும்."

மகாவதார என்றால் "உயர்ந்த (கீர்த்திமிகு) அவதாரம்" அல்லது "தெய்வீக அவதாரம்" என்று பொருள்;

யோகவதார்-ன் பொருள் "யோகத்தின் அவதாரம்"; ஞானவதார்-ன் பொருள் "ஞானத்தின் அவதாரம்."

பிரேமவதார்-ன் பொருள் "அன்பின் அவதாரம்" – பரமஹம்ஸ யோகானந்தருக்கு அவரது சீடர், ராஜரிஷி ஜனகானந்தாவால் (ஜேம்ஸ் ஜே. லின்) 1953 ல் வழங்கிய ஒரு பட்டம்."

# யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா-வின் இலட்சியங்களும் குறிக்கோள்களும்

வகுத்தவர்

ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர், குருதேவர் மற்றும் ஸ்தாபகர்

ஸ்ரீ ஸ்ரீ மிருணாளினி மாதா, சங்க மாதா மற்றும் தலைவி

இறையனுபவத்தை நேரடியாகத் தனிப்பட்ட முறையில் அடைய உதவும் நிச்சயமான விஞ்ஞான முறைகள் பற்றிய அறிவை உலக நாடுகளிடையே பரப்புதல்.

சொந்த முயற்சியின் மூலம் பரிணாம வளர்ச்சி அடைந்து, மனிதனின் வரம்பிற்குட்பட்ட நிலையற்ற உணர்வை இறை உணர்வாக்குவதுதான் வாழ்க்கையின் நோக்கம் என்பதைப் போதிப்பது; இந்த நோக்கத்திற்காக, இறைத்தொடர்பு கொள்ள வைக்கும் யோகதா ஆலயங்களை நிறுவுவதுடன் மனிதர்களின் இல்லங்களிலும் இதயங்களிலும் இறைவனின் தனித்தனி ஆலயங்களை நிறுவ ஊக்கமளித்தல்.

பகவான் கிருஷ்ணரால் போதிக்கப்பட்ட ஆதி யோக முறைக்கும் இயேசு கிறிஸ்துவினால் போதிக்கப்பட்ட ஆதி கிறிஸ்துவ சமயத்திற்குமிடையே உள்ள முழுமையான இணக்கத்தையும் அடிப்படையான ஒருமையையும் வெளிப்படுத்துதல்; மற்றும் சத்தியத்தின்

இந்தக் கொள்கைகளே எல்லா உண்மையான சமயங்களுக்கும் பொதுவான விஞ்ஞான பூர்வமான அடிப்படை என்பதைக் காண்பித்தல்.

உண்மையான எல்லா சமய நம்பிக்கைகளும் முடிவில் இட்டுச் செல்லும் ஒரே தெய்வீகப் பெருவழியைச் சுட்டிக் காண்பித்தல்; இப்பெருவழி, நாள்தோறும் விஞ்ஞான பூர்வமாக பக்தியுணர்வுடன் இறைவனைத் தியானித்தலாகும்.

மனிதனை, அவனுடைய மூவகைத் துன்பங்களான உடல் நோய், மனக் கவலைகள், ஆன்மீக அறியாமை இவைகளிலிருந்து விடுவித்தல்.

எளிய வாழ்க்கை மற்றும் உயர்ந்த சிந்தனையை ஊக்குவித்தல்; அனைத்து மக்களிடையேயும் அவர்களது ஒற்றுமையின் நிரந்தர ஆதாரத்தைகடவுளுடன் உள்ள உறவைபோதிப்பதன் மூலம் சகோதரத்துவ உணர்வைப் பரப்புதல்.

உடலை விட உள்ளம் உயர்வானது, உள்ளத்தை விட ஆன்மா உயர்வானது என்பதை எடுத்துக் காட்டுதல்.

நன்மை மூலமாகத் தீமையையும், மகிழ்ச்சியின் மூலமாகத் துயரத்தையும், அன்பின் மூலமாகக் கொடுமையையும், ஞானத்தின் மூலமாக அஞ்ஞானத்தையும் வெல்லுதல்.

சமயம், விஞ்ஞானம் இரண்டையும் அவற்றின் அடிப்படைச் சித்தாந்தங்களின் ஒற்றுமையைப் புரிந்து கொள்வதன் மூலம் ஒன்றுபடுத்தல்.

மேலை நாடுகள் மற்றும் கீழை நாடுகளுக்கிடையே

கலாச்சாரம் மற்றும் ஆன்மீக அறிவை ஆதரித்தல், மேலும் அவைகளின் உத்தம தனித்தன்மை பொருந்திய குணங்களைப் பரிமாற்றம் செய்து கொள்ளுதல்

மனித இனத்தைத் தன்னுடைய பெரிய ஆன்மாவாகக் கருதி சேவை செய்தல்.

# அட்டவணை

"உங்கள் பார்வைக்கு, திரட்டாளர் பதிப்பிலிருந்து அட்டவணை கீழே சேர்க்கப்பட்டிருக்கின்றது. இந்த மின்னூல் பதிப்பின் பக்கவரிசை, திரட்டாளர் பதிப்பின் பக்கவரிசையுடன் இணை சேரவில்லை என்பதால், தயவு செய்து நீங்கள் விரும்பும் வார்த்தைகளைத் தேட உங்கள் மின்-படிப்பியில் (e-reader) உள்ள தேடல் செயல்பாட்டைப் பயன்படுத்துங்கள்."

## சொல்லகராதி

கிழக்கிந்திய மனிதர்களின் பெயர்கள், புத்தகத்தின் உரையில் கண்டுள்ளது போல், பெரும்பாலும், முதல் பெயரை முன்வைத்து அகர வரிசையில் பட்டியலிடப்பட்டுள்ளன; உதாரணமாக, பகவதி சரண் கோஷ், "ப"வின் கீழ் பட்டியலில் உள்ளது.

எனினும் மேற்கத்திய பெயர்கள், கடைசிப் பெயரை முன் வைத்து பட்டியலிடப்பட்டுள்ளன.

n: அடிக்குறிப்பு/f: குறிப்பிட்ட பக்கமும் அதைத் தொடர்ந்தும்

ந



ப

ய